ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

ஸ்ரீ வால்மீகி மகரிஷி

அருளிச்செய்த

# ஆநந்தராமாயணம்

இது

ஸம்ஸ்கிருத வித்வான்களின்

உதவியைக்கொண்டு

ஸம்ஸ்கிருதத்திலிருந்து

வரகவி - திரு. அ.

**சுப்ரமணிய பாரதியாரால்**

தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட

திருத்தமான மூன்றம் பதிப்பு

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு

புத்தகசாலை,

நெ. 4-34, நயினியப்ப நாயக்கன் வீதி,

பார்க் டவுன் (P. O.), சென்னை.

---


| | | | | |
|---|---|---|---|---|
| 1 பாரம் முதல்— | 20 | பாரம் வரையில் | } | சென்னை கோமளேசுவரன் பேட்டை சச்சிதாநந்தம் அச்சுக்கூடத்திலும், |
| 91 ,, | 137 | ,, | | |
| 21 ,, | 30 | ,, | } | ஸ்ரீ ஆதிமூலம் அச்சுக்கூடத்திலும் |
| 40 ,, | 50 | ,, | | |
| 80 ,, | 90 | ,, | | |

பதிப்பிக்கப்பெற்றன.

உ

# ஆனந்தராமாயணம்.

## முகவுரை.

---

"வேதமொகு நான்குமா றங்கமுநன் னியாய மீமாஞ்சை யொடுமிருதி பிராணமுமீ ரேழா, ஓதலுறும்" வித்தைகளுள் இராமாயணம் பாரதமென்னு மிதிகாச மிரண்டும் ஸ்மிருதியுள் (தர்மசாஸ்திரத்துள்) அடங்குவனவாம். தருமார்த்த காம மோட்சமென்னும் புருஷார்த்த நான்கனையும் போதிப்பதாயும், முன்னடந்த சரித்திரத்தைக் கூறுவதாயு மிருப்பது இதிகாசமாம். இவ்விரண்டிதிகாசமும் வேதார்த்தங்களை மிகு தெளிவாக விளக்கிக் கூறுகின்றமைபற்றி, வைதிகர் யாவராலும் பொன்னே போற் பொற்றப்பட்டு வருகின்றன. இராமாயணத்தி னாசிரியர் வான்மீகி முனிவரென்பதும், பாரதத்தி னாசிரியர் வியாச பகவானென்பதும் மிகு பிரசித்தமாம். நமது தேசத்தில் இராமாயணம் பாரதம் என்பவற்றின் கதைகளை யறியார்தார் மிகச்சிலரேயாவர். இராமாயணத்தையும் பாரதத்தையும் நம் தேசத்தார் மிகு விருப்பமாகப் படித்தோ கேட்டோ வருதலின், அவை சம்ஸ்கிருதத்தினின்றும் தமிழ் முதலிய பாஷைகளில் செய்யுள் வடிவமாகவும் வசன வடிவமாகவும் பண்டிதர் பலரால் பலதிறத்தனவாக மொழிபெயர்க்கப்பட்டுப் புஸ்தகவடிவமாக நம் தேசமுழுவதும் நிலவப்பெற்று வருகின்றன.

இராமாயணத்தையும் பாரதத்தையும் முறையே வான்மீகி முனிவரும் வியாச பகவானு மருளிச் செய்தனரென்பதனோடு நில்லாது வேறு முனிவரும் அருளிச்செய்தன ரென்பது அத்யாத்மராமாயணம், சைமினி பாரதம் என்றற்றொடக்கத்து நூல்களிருப்பதால் விளங்குகின்றது. இராமாயண பேதத்துள் ஆநந்த ராமாயணமென்பது மொன்றும். இது வான்மீகி முனிவர் பிரம

தேவாது அனுக்கிரகபலத்தால் நாரதமுனிவர் கூறியபடி அறமும் வீடும் தலைமையுடையனவாகவும், பொருளும் இன்பமும் தலைமை யில்லனவாகவும் தோன்றுமாறு இருபத்து நான்காயிரக் கிரந்த வடிவமாகச் செய்தருளியுள்ள இராமாயணத்திலும் சிறிது சிறிது வேறுபாடுடையதா யிருக்கின்றது. இவ் வேறுபாட்டிற்குக் காரணம் கற்பபேதமேயாம். இதுவும் வான்மீகி முனிவரால் அருளிச் செய்யப்பட்டதென்று சொல்லப்பட்டு வருகின்றமையின், இதனிடத்துக் காணப்படும் வேறு பாட்டிற்குக் காரணம் கற்ப பேதமேயா மென்றுட் கொண்டு இதனையும் பிரமாண புத்தியுடன் படித்து வருதல் வேண்டும். இராமாவதாரம் காலதேச நிமித்தங்கட் கேற்றவாறு எண்ணில்லாததாக நிகழ்ந்திருக்கின்றது; இன்னும் நிகழும் என்று நூல்கள் கூறுகின்றமையின், கதைகளுள் சிறிது சிறிது வேறுபாடு தோன்றுவது தவறுடையதாகாது. ஆநந்தராமாயணம் ஸாரகாண்டம் 11-வது சருக்கத்தில் "அப்படி சின்னபின்னமான (இராவணனது) அத்தலைகள் நூற்றொரு பாகங்களாகப் பிரிந்தன. சதமுக இராவணனுடைய தலைகளும் யுத்தகளத்தில் ஆயிரத்தொரு பிரிவுகளாக அறுபட்டன வென்பது கற்ப பேத மென்று சிலர் கூறுகின்றனர்" என்றிருப்பது கவனிக்கப்படுமாயின், கற்ப பேதத்தால் இராமசரித்திரம் சிற்சில வேறுபாடுடையதாக விருக்கின்றது; அவ்வேறு பாடு தவறுடையதன்றென இராமாயணமே அங்கீகரித்திருக்கின்றதென்பதை விளங்குவதாம். ஆநந்தராமாயணம் 9 காண்டமும், 109 சருக்கமுமுடையதாக விருக்கின்றது, இதனது கிரந்தத் தொகை 12252-ஆம். படிக்குந்தோறும், அல்லது கேட்குந்தோறும் அல்லது நினைக்குந்தோறும் ஆநந்தத்தை விளைவிக்குங் காரணத்தால் ஆநந்தராமாயணமென்று பெயர் பெற்றுள்ள விந்நூல் தமிழ் மக்களுக்கு முபயோகமாம் வண்ணம் சென்னை-திருவல்லிக்கேணி எ. வி. ஐயர். அண்டு கம்பெனி-புரொப்ரைட்டர் பிரஹ்மஸ்ரீ எ. வைத்தியநாத ஐயரவர்கள், இதனைத் தக்க சம்ஸ்கிருத பண்டிதர்களுதவியைக்கொண்டு தமிழிற் செவ்விய வசன நடையில் மொழி பெயர்த்துப் புஸ்தக வடிவமாக அச்சிட்டுப் பரவச்செய்திருக்கின்றார்; இஃது இவர்க்கு என்றும் நன்மையே பயப்பதாம்.

"பொன்னிறத்தோன் பொற்கண்ணன் கஞ்சன் பொரு திறல்சேர், தென்னிலங்கை மன்னன் சிசுபாலன்—மின்னுபுகழ், ஆயிரந்தோள் வீரருட னன்றுநீ கொன்றருளத், தாமிருந்து செய்தார் தவம்" என்று மூன்றுநாள் போரில் பீஷ்மாசாரியார் கண்ணபிரானை நோக்கிக் கூறினரென்று பெருந்தேவனார் பாரதம் கூறுமாறு பரந்தாமனைப் பகைத்தவர்கட்கும் நன்மையுண்டாமாயின், அவனிடத்துப் பேரன்புகொண்டு, அவனது மகத்துவத்தைக் கூறும் நூல்களுள் ஒன்றாகிய ஆநந்தராமாயணத்தைத் தக்க பண்டிதர்களைத் தேடிச் செவ்வையாக மொழிபெயர்த்து, சிறந்த தமிழ்ப் புலவரி னுதவியைக்கொண்டு அச்சிட்டு வெளியா கிய இவர்க்கு நன்மையுண்டாகாது போகுமோ? நன்மையென்று சொல்லப்படுவன வனைத்து முண்டாவனவாம்.

இந்த ஆநந்த ராமாயணத்தில் தத்துவ விஷயங்கள் பற்பல விடங்களில் மிகத்தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன; இராச்சிய காண்டம் 3-வது சருக்கத்தில் இராமாவதாரத்திற்கும், கிருஷ்ணாவதாரத்திற்கு முள்ள ஒற்றுமை வேற்றுமை மிகு வழகாகக் காட்டப்பட்டிருக்கின்றன. மேற்படி காண்டம் 20-வது சருக்கத்தில் இராமபிரான் "இந்த அவதாரமே எல்லாவற்றினும் மேலானது; உபாசிக்கின்றவர்க்குப் பிரியந்தரத்தக்கது; சேவிப்பவர்க்கு மங்களத்தைக் கொடுப்பது; இந்த அவதாரத்தில் அநேக நல்ல காரியங்களை செய்திருக்கின்றேன்; அவற்றைக் கேட்டாலும் பாவம் நீங்கும், புண்ணியம்வரும்; இந்த அவதாரத்தை ஜனங்கள் யாவரும் பஜனைசெய்து க்ஷேமமடையலாம்; இதில் யார் பத்தி வைக்கின்றனரோ அவரிடத்து எனக்கதிகப் பிரியமுண்டு" என்று முனிவரர், உறவினர் முதலாயினோர் கேட்பக் கூறினரென்றிருப்பதால், இராமாவதாரம் அவதாரங்களுள் மிகு சிலாக்கியமானதா மென்பது விளங்கும். இந்த அவதாரத்தைப்பற்றிக் கூறும் நூல் வேதம் போன்றதேயாம்.

"நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே, தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே, சென்மமு மரணமு மின்றித் தீருமே, இம்மையே யிராமவென் றெழுத்தி ரண்டினால்."

"இறுவ ரம்பி லிராமவென் றோரும்பர், நிறுவ ரென்பது நிச்சயம்" என்று கம்பராமாயணம் ராம நாமத்தின் மகிமையை விளக்குவதைக் கவனிப்பவர் இராமாயணத்தைப் புறக்கணித்துப் பேசுவதிலராவர். எண்ணில்லாத மகிமையுடைய ராமசரித்திரத் தைக்கூறும் நூல் யாதாயினும் அது படிக்கத்தக்கதேயாம்; கேட்கத்தக்கதேயாம்; சிந்திக்கத்தக்கதேயாம். இந்த ஆநந்த ராமாயணம் யாத்திரையின் பயன், இராமாயணத்தின் தத்வார்த் தம், உலகத்தோடொட்ட வொழுகல், அரசர்நீதி முதலியவற்றை விரித்து, தத்துவஞானத்தை யடையும்வகையைத் தக்கவாறு விளக்கி, தீயோர் கேடடைவது தவறாதென்பதை வற்புறுத்திக் கூறுதலின், இஃதொவ்வொருவரும் இன்றியமையாது படித் துணர்தற்குரியதாம். இதனைப் படித்துணர்பவர் வேதாந்த தத்துவங்களை யெளிதிலறிந் துய்தற்குரியவ ராவரென்பது சிதை யாத சித்தாந்தமாம்.

இந்த ஆநந்த ராமாயணத்திலுள்ள விஷயத்தி னருமை பெருமைகள் இப்புஸ்தகத்தி லமைத்துள்ள அட்டவணையைப் படித்தல் மாத்திரத்து விளங்குவனவாம்.

இராமபிரான் அரசாண்ட காலத்தில் வாசனையில்லாதமலரும் வாசனை யடைந்தது என்று இந்நூல் ஸாரகாண்டத்தில் கூறுவது ஆநந்தராமாயணத்தை யன்போடு படிப்பவர்க்கு எல்லா நன்மையு முண்டாவனவாமென்பதை விளக்குவதாக விருத்தலின், இதனை நம்மனோர் அன்புடன் படித்து நன்மை யுறுவாராக.

கோமளேசுவரன்பேட்டை,
சென்னை,
1—11—17.

கோ - வடிவேலு செட்டியார்,
"லோகோபகாரி"
பத்திராதிபர்-பத்திராசிரியர்.

# ஆனந்தராமாயண அட்டவணை.

---

## ஸார காண்டம்.

---

## யாத்திரா காண்டம்.



---

## யாக காண்டம்.

---

## விலாஸ காண்டம்.



---

## ஜன்ம காண்டம்.

---

## விவாஹ காண்டம்.



---

## ராஜ்ய காண்டம்.

---

## மனோகர காண்டம்.

---

## பூர்ண காண்டம்.

உ

ஸீதா லக்ஷ்மண பரத சத்துருக்ன ஹநுமத்ஸமேத
ஸ்ரீராமசந்திராய பரப்பிரஹ்மணேநம:

# ஆனந்தராமாயணம்.

## ஸாரகாண்டம்.

---

### விநாயகர் துதி.

ஆனந்த ராமா யணமின்ப மாந்தமிழிற்
றானந்த மாயோங்கத் தந்திமுகத்—தானந்த
மாதியிலா னென்னகமே யாலயமாக் கொண்டருள்வான்
றீதறவே யென்னாளுந் தேர்ந்து.

### ஸ்ரீராமர் துதி.

ஸீதாதேவியைத் தமது வாமபாகத்திலும், அநுமந்தரை ஸந்நிதானத்திலும், லக்ஷ்மணரைப் பின்புறத்திலும், பரத சத்துருக்னர்களைப் பக்கங்களிலும், சுக்கிரீவனை வடமேற்கு மூலையிலும், விபீஷணனை வடகிழக்கு மூலையிலும், யுவராஜனுகிய அங்கதனைத் தென்கிழக்கு மூலையிலும், ஜாம்பவனைத் தென்மேற்கு மூலையிலும் அரணுகக் கொண்டு, மத்தியில் எழுந்தருளியிராநின்ற நீலமேகவர்ணனுகிய ஸ்ரீராமபிரானை வணங்குவாம். 1

### முதற் சருக்கம்.

ஸ்ரீராமபிரானிடத்தில் அதிக பக்தியுள்ள பார்வதி தேவியார் கைலயங்கிரியில் எழுந்தருளியிருக்கும் சங்கரரை அன்போடு நமஸ்கரித்து, ''சம்புவே! எனக்கு அநேக புராணங்களைச்சொல்லியிருக்கிறீர்கள்; இப்பொழுது இரகு ராமருடைய ஜனனம் அவர் திருவிளையாடல் முதலியவைகளை யடியேனுக்குத் திருவாய்மலர்ந்

தருளும்; ஸ்ரீராமபிரானது திருவிளையாடல் எனக்கு அதிக அன்பைப் பெருக்குவது; ஆனந்தத்தைக் கொடுப்பது—என்று சொல்ல, சர்வலோக சரண்யனுகிய பரமசிவன் மனமுவந்து என் பிரிய நாயகியே! நீ கேட்டது மிகவும் நன்று; சர்வமங்களங்களையுந் தந்தருளும் ஸ்ரீராமசந்திரனது சரித்திரத்தை உனக்குவிவரித்துச் சொல்லுகிறேன் கேள்.

பரமசிவன் கூறுகிறுர்.

ஆதி நாராயணரிடத்தினின்றுபிர்மதேவரும்,பிர்மதேவரிடத்திருந்து மரீசியும், மரீசியிடத்தில் கசியபரும், கசியபரிடத்தில் சூரியனும், சூரியனிடத்தில் சிராத்த தேவரென்கிற வைவஸ்வத மனுவும், இவரிடத்தில் பிரதாபசாலியாகிய இட்சுவாகுவும், இட்சுவாகுவினிடத்தில் விருட்சி யென்பவரும், விருட்சியிடத்தில் புரஞ்சயரென்கிற ககுஸ்தரும், ககுஸ்தரிடத்தில் இந்திரவாகரும், இந்திரவாகரிடத்தில் விசுவாந்தியென்பவரும், விசுவாந்தியிடமிருந்து சந்திரரும், சந்திரனிடமிருந்து பிரதாபசாலியான யுவநாஸ்வரும், யுவநாஸ்வரிடமிருந்து சாபஸ்தரும், சாபஸ்தரிடமிருந்து பிரசித்தனுகிய பிரகதஸ்வனும், பிரகதஸ்வனிடமிருந்து குவலயாஸ்வரும், குவலயாஸ்வரிடமிருந்து திடாஸ்வரும், திடாஸ்வரிடமிருந்து அரியஸ்வரும் அரியஸ்வரிடமிருந்து நிகும்பரும், நிகும்பரிடமிருந்து மருகனுஸ்வரும், மருகனுஸ்வரிடமிருந்து கிருதாஸ்வரும், கிருதாஸ்வரிடமிருந்து சேனசித்தும், சேனசித்தனிடமிருந்து யுவநாஸ்வரும், யுவநாஸ்வரிடமிருந்து, மாந்தாதாவும், மாந்தாதாவிடமிருந்து புருகுத்ஸனும், புருகுத்ஸனிடமிருந்து திரஸ்யதஸ்யு என்கிற பெயர் பெற்ற அநாரண்ணியரும், அநாரண்ணியரிடமிருந்து அரியஸ்வரும் அரியஸ்வரிடமிருந்து அருணரும் அருணரிடமிருந்து திரிபந்தனரும், திரிபந்தனரிடமிருந்து திரிசங்கு வென்கிற சத்திய விரதரும், சத்தியவிரதரிடமிருந்து பிரதாபம் பெற்ற அரிச்சந்திரரும், அரிச்சந்திரிடமிருந்து லோகிதரும், லோகிதரிடமிருந்து அரிதரும், அரிதரிடமிருந்து சம்பரும், சம்பரிடமிருந்து சுதேவரும், சுதேவரிடமிருந்து விஜயரும். விஜயரிடமிருந்து பருகரும், பருகரிட

மிருந்து விருகரும், விருகரிடமிருந்து பாகுகரும், பாகுகரிட மிருந்து சகரரும், சகாரிடமிருந்து அசமஞ்சரும், அசமஞ்சரிட மிருந்து அம்சுமானும், அம்சுமானிடமிருந்து திலீபரும், திலீப ரிடமிருந்து பகீரதனும், பகீரதனிடமிருந்து சுருதனும், சுருத னிடமிருந்து நாபரும், நாபரிடமிருந்து சிந்துத்துவீபரும். சிந் துத்துவிபரிடமிருந்து ஆயுதாயு என்பவரும், அயுதாயுவிட மிரு ந்து ருதுபர்னரும், ருதுபர்னரிடமிருந்து கல்மாஷ பாதரென்கிற சுதாசரும், சுதாசரிடமிருந்து அஸ்மகரும், அஸ்மகரிட மிருந்து நாரீகவசரென்கிற மூலகரும், மூலகரிடமிருந்து தசரதரும், தச ரதரிடமிருந்து ஐடபிடரும். ஐடபிடரிடமிருந்து விஸ்வசகரும், விஸ்வசகரிடமிருந்து கட்வாங்கரும், கட்வாங்கரிடமிருந்து நீண் டகைகளையுடைய திலீபரும், திலீபரிடமிருந்து ரகுவும், ரகுவி னிடமிருந்து அஜரும், அஜரிடமிருந்து தசரதரும், தசரதரிட மிருந்து பரமேச்வரரான ஸ்ரீராமரும் பிறந்தார்கள்.

அந்த ராமருடைய கணக்கற்ற திருநாமங்களை முனிவர்கள் எப்பொழுதும் ஸ்மரித்துக்கொண்டு மகிழ்கின்றார்கள். இவ்விதம் விஷ்ணுமுதல் அறுபத்தொரு தலைமுறைக்கும், பின் அறுபத் தொரு தலைமுறைக்கும் நடுவில் விளங்கும் ஸ்ரீராமருடைய சரித் திரம் முழுவதும் உனக்குச் சுருக்கிச் சொல்லுகின்றேன். சரயு நதியின் கரையில் விளங்காநின்ற அயோத்தியாபுரி பட்டணத்தில் மூவுலகங்களிலும் கீர்த்தி பெற்றவரும், மகாபலிசாலியும், இட்சு வாகு வம்ச சிரேஷ்டரும், மகா சம்பத்துள்ளவருமான தசரத மகாராஜன் அரசு செலுத்திக் கொண்டு ஜம்புத்வீபம் முழுவதும் தமது ஆக்கினைக்குள்ளாகும்படி ரதகஜ துரகபதாதிகளுடன் நீதி யாக ராஜ்ய பரிபாலனஞ் செய்து வந்தார்.

அக்காலத்தில் அயோத்திக்கு அருகாமையில் கோசலதேசத் திலிருக்கும் கோசலமென்ற பட்டணத்தில் மகா புண்ணியம் பெற்ற கோசலராஜன், யௌவனமடைந்த கௌஸல்லியை என் கிற தனது கன்னிகைக்கு தசரத மகாராஜனை வரனாக வரிப்பதற் குத் தகுந்த முகூர்த்த நாள் நிச்சயஞ் செய்துகொண்டு தூதர்களை தசரதமகாராஜாவிடம் அனுப்பினான். தூதர்கள் அவரிடம்சென்று சங்கதி தெரிவித்து விவாகத்தை நிச்சயித்துக் கொண்டு திரும்பி

விட்டார்கள். இப்பொழுது தசரதர் மந்திரிமார்களுடனும், தமது பந்துக்களுடனும் சிநேகிதர்களுடனும், மாகதர், வந்திகள் முதலியவர்கள் துதிசெய்யவும், தாசிகள் பாடவும், இரத்தின தீபங்கள் பிரகாசிக்கவும், சேனைகள் காவல் செய்யவும்; சரயுநதியில் இராத்திரியில் ஓடம் ஏறி ஜலக்ரீடை செய்து கொண்டிருந்தார். இதே க்ஷணத்தில் லங்கேசுவரனான இராவணன் இலங்கையில் பிர்மதேவரை வரவழைத்து, அவரைப் பார்த்து எனக்கு யாரால் மரணம் சம்பவிக்குமென்பதை உண்மையாகச் சொல்லுமென்று வினவினன். அதைக்கேட்ட பிர்மதேவன் தசரத மகா ராஜனுக்கும் கௌஸல்லியைக்கும் ஆதிநாராயணர் இராமலக்ஷ்மண பரத சத்ருக்னர்களாக அவதரிப்பார். அவர்களுள் இராமனால் உனக்கு மரணமென்றும் வ இராவணா! இன்றைக்கு ஐந்தாவது நாளில் கோசலராஜன் வேதியர்களைக் கொண்டு, கௌசல்லியைக்கும் தசரத மகாராஜாவுக்கும் விவாகம் நடத்த நிச்சயித்திருக்கிறானென்றும் கூறி பிரம்மலோகம் சென்றார்.

அதைக் கேட்ட இராவணன் அப்பொழுதே புட்பக விமானமேறி, அநேக இராட்சதர்களுடன் அதிவேகமாக அயோத்திபா புரி சென்று, அங்கே ஜலக்ரீடை செய்யும் தசரதரைக் கண்டு அகோரமான யுத்தஞ்செய்து அவரை ஜயித்து அவ்வோடத்தை காலாலுதைத்துத் தள்ளி உடைத்து விட்டான். அக்காலையில் அவ்வோடத்திலிருந்த யாவரும் ஜலத்தில் விழுந்து முழுகி இறந்துபோக, தசரத மகாராஜனும் அவருடைய மந்திரி சுமந்திரனும் உடைந்த ஓடத்தின் ஒரு பலகையைப் பிடித்து அதின் மீதேறிக் கொண்டு, மெதுவாக சரயுநதியின் பிரவாகத்தின் வழியே கங்காநதிக்குப் போய் அவ்விடமிருந்து சமுத்திரஞ் சென்று ஈசுவர கடாட்சத்தால் அதன் மத்தியில் உயிரோடு பிழைத்திருந்தார்கள். இதற்குள் ராவணன் கோஸலராஜனிடம் சென்று அவனிடம் போர்செய்து ஜயித்து அவனுடைய குமாரத்தி கௌஸல்யை என்பவளை அபகரித்துக்கொண்டு ஆகாய மார்க்கமாய்ச் சந்தோஷத்துடன் லங்காபட்டணம் போகும் வழியில், அங்கே சமுத்திரத்தில் வசிக்கும் ஒரு திமிங்கிலத்தைக் கண்டு, தேவர்கள் நமக்குச் சத்துருக்களாகையால் மறைந்து வந்து எவ்விதமாவது

இப்பெண்ணைக்கொண்டுபோய்விடுவார்கள்; ஆகையால் இத்திமிங்கிலத்தினிடத்தில் நாம் கேட்டபோது கொடுக்கவேண்டுமென்று உத்தரவிட்டு, இப்பெண்ணைக் கொடுப்போமென்றெண்ணிப் பெண்ணை ஒரு பேழையிலடக்கஞ்செய்து அதனிடம் கொடுத்துத் தன்பட்டணம் சென்றான். அத்திமிங்கிலமும் அப்படியே தன்வாயில் கௌவிக்கொண்டு சுகமாக சமுத்திரத்தின் மத்தியில் சஞ்சரிக்கும்போது தன்னிடம் போர்செய்ய எதிர்த்துவரும் வேறொரு திமிங்கிலத்தைப் பார்த்து அதனோடு போர்செய்ய எண்ணி அப்பெட்டியை அருகிலிருக்கும் தீவில் வைத்துப் போர் புரிந்துகொண்டிருந்தது. இதன் மத்தியில் ஓடப் பலகையைத் தெப்பமாகக் கொண்டுவரும் தசரதமகாராஜாவும் மந்திரியும் அத்தீவுக்குவந்து, அப்பெட்டியைப் பார்த்து, அதைத் திறந்து அதனுள் இருப்பவள் கௌஸல்யை என்றுகண்டு ஆச்சரியமுற்று ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து, அப்பெண்ணைக் காந்தர்வவிவாகஞ் செய்து சந்தோஷமடைந்து, மூவருமாக அப்பெட்டியினுட் புகுந்து முன்போலவே மூடிக்கொண்டார்கள். பின், முன் நடந்த வரலாற்றை ஒருவர்க்கொருவர் தெரிவித்துக் கொண்டார்கள். இவர்கள் காந்தர்வ விவாகம் செய்துகொண்ட வேளை, முன் எற்படுத்திய முகூர்த்த வேளையாகவே இருந்தது. அத்திமிங்கிலம் போரில் ஜயமடைந்த பின் முன்போல் அப்பெட்டியை வாயிற் கௌவிக்கொண்டது. அப்பொழுது இராவணன் பிர்மதேவரை வரவழைத்து, சபையில் வைத்துக்கொண்டு "பிர்மதேவரே! நீர் சொன்ன வார்த்தை பொய்யாய் விட்டது. தசரதனைக் கொன்றுவிட்டேன். கௌஸல்வியையும் இரகசியமாக மறைத்து விட்டேன் என்று கூறினான். அதைக்கேட்ட பிர்மதேவன் நகைத்து இது புண்ணியதினம் என்று உரக்கத் தெளிவாகச் சொல்லவே இராவணன் பரபரப்புடன் நீர் என்ன கூறினீர்" என்று கேட்டான். அதற்குப் பிரமதேவர் எ தசக்ரீவனே! தசரதருக்கும் கௌஸலியைக்கும் முந்தியே விவாகம் நடந்தாய் விட்டதென்று கூறினார்.

இப்படிச் சொல்லக் கேட்டதும் இராவணன் பிர்மதேவனுடைய வார்த்தையைப் பொய்யாக்க கருதி, உடனே திமிங்கிலத்தினிடமிருந்து அப்பெட்டியைத் தூதர்கள் மூலமாக வரவழைத்து

பிர்மதேவன் முன்னிலையில் வைத்துத்திறந்தான். திறந்ததும் அத னுள் மூன்று பேரிருக்கக் கண்டு திடீரென்று பயந்து கோபங் கொண்டு, அவர்களை வெட்டி விடுவதற்குக் கையில் கத்தியை எடுத் தான். அதைப்பார்த்த பிர்மதேவன் அவசரமாக "ஏதாசனன! என்ன காரியம் செய்கிறாய்? இப்பொழுது சாகசஞ் செய்யாதே. ஒருபெண்ணை அடைத்து வைத்தபெட்டியில் இப்பொழுது மூவ ரிருக்கிறார்கள். இவர்கள் கோடிக்கணக்கான மனிதர்களாக ஏன் ஆகமாட்டார்கள். அவர்களுள் இராமனும் ஏன் உண்டாகமாட் டான். இப்பொழுதே ஏன் அவன் உன்னைக் கொல்லமாட்டான்? உனக்கு இருக்கும் ஆயுளையும் இப்பொழுதே ஏன் அழித்துக் கொள்ளுகின்றனை? வரப்போகிறதை பின்னே பார்த்துக் கொள் ளலாம். இப்பொழுது வேண்டாம் ஆகையால் இப்பெட்டியைத் தூதர்கள் மூலமாக சாகேதநகரத்துக்கு அனுப்பிவிட்டு நீ சுகமா யிரு: என்வார்த்தை ஒருகாலத்திலும் பொய்யாகாதென்று நிச் சயமா யறிந்துகொள். கரும கதியை அறியமுடியா தாகையால் நடக்கப்போவது கட்டாயமாய் நடந்தேதீரும்" என்று சொன்னர்.

அவ்வார்த்தைகளைக் கேட்ட தசானன், பயந்து அதை உண் மைஎன்றெண்ணி அப்பெட்டியைத் துரிதமாக சாகேத நகரத்துக் குக் கொண்டுபோகத் தூதர்களுக்கு உத்தரவுதந்து அனுப்பினன். அவர்கள் அப்பெட்டியை எடுத்துக்கொண்டு சாகேத நகரம்போய் அவ்விடத்தில் அதையெறிந்துவிட்டு, திரும்பிஇராவனனிடம்வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது அயோத்தியா நகரத்தில் வசிக்கும் மனிதர்கள், தசரத மகாராஜனைப்பார்த்து, சந்தோஷங் கொண் டார்கள். இதைக்கேட்ட கோஸலராஜனும் சந்தோஷங்கொண்டு, தன் பெண்ணைத் தசரத மகாராஜனுக்குக் கலியாணம்செய்து கொடு த்துத் தன் ராஜ்ஜியத்தையும் அவருக்கே தந்து பட்டாபிஷேக முஞ் செய்துமுடித்தான். அதுமுதல் சூரியவமிசத்தாருக்கு கோச லேந்திரரென்கிற பெயர்வந்தது. பிறகு தசரத மகாராஜன் மகதரா ஜன் குமாரத்தியாகிய சுபத்திரையையும், அதன் பிறகு கேகய ராஜன புத்திரியாகிய தாமரை மலர்போன்ற கண்களையுடைய கை கேயியையும் விவாகம் செய்துகொண்டு, பின் எழுநூறு பெண்

களைக் களத்திரங்களாகக் கொண்டு, அநேக போகங்களை யனுப வித்தும், அநேக தானங்களைச் செய்தும் சுகமாக அரசுபுரிந்தும் விருத்தாப்பிய தசையடைந்தும், சந்ததியில்லை யென்கிற ஒரு குறைவுடனிருந்தார்.

ஏ பார்வதி! நற்குலத்திலுதித்து அழகு, யௌவனம், பாக்கியம் இவைகள் வாய்க்கப்பெற்ற மனைவிமார்களுடன் சுகித்துக் கொண்டு அயோத்தியாபுரியைத்தசரதர் அரசுபுரிந்துவருங்காலத்தில், தேவர்களுக்கும், அசுரர்களுக்கும், இராஜ்ஜிய நிமித்தமாக அகோரமான யுத்தம் நடந்தது. அப்போது "உமக்கு ஜயமுண்டாவதில் சந்தேகமில்லை யென்ற" அசரீரிவாக்கொன்று தசரதனிருக்கு மிடத்தில் கேட்டது. இச்சமையத்தில் பவனென்பவன் அரசனிடம்வந்து வணங்கி, தாங்கள் யுத்தத்திற்குப்புறப்பட வேண்டு மென்று பிரார்த்திக்க, அரசன் உடனே கைகேயியோடு புறப்பட்டு யுத்தகளத்திற்குச் சென்று, யாவரும் பயப்பட அகோர யுத்தஞ்செய்தார். அப்போது ரதத்தின் அச்சு முறிந்து போயிற்று. அதை யுத்த ஆவேசத்தில் நின்ற தசரதர் கவனிக்கவில்லை. இதைக்கண்டு பக்கத்திலிருந்த கைகேயி தனது கணவன் போரில் ஜயமடையக் கருதி, தான் முன் ஒரு தவமுனிவரிடம் பெற்ற வரமகிமையால் தனது இடதுகையை முறிந்த அச்சுக்குப் பதிலாக உபயோகிக்கவே, தசரதர் அவ்வசுரர்களை வென்று ஜயமடைந்து சந்தோஷங்கொண்டு தமது மனைவியினது சாமர்த்தியத்திற்கு மெச்சி, ஏ கைகேயி! உனது சாமர்த்தியமே சாமர்த்தியம்! வெகு சந்தோஷமென்று சொல்லி உனக்கு இரண்டு வரம் தந்தேன்? கேள் என்று சொல்ல கைகேயி அவ்வரங்களைஎனக்குத் தேவையானபோதுவிவரமாய்க்கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுதுகொடுக்கவேண்டுகிறேன் என்றாள். தசரதர் அதற்குச்சம்மதித்து அயோத்திக்குத் திரும்பினர் என்று பரமசிவன் கூறினர். இதைக்கேட்ட பார்வதிதேவியார் ஏ நாதா! ஒரு ஸ்திரீயினுடைய கரத்துக்கு இரதத்தை அச்சாகத் தாங்கத்தக்க வல்லமை எவ்விதம் உண்டாயிற்று; காரணம் யாதென வினவினர். பரமசிவன் ஏ பிரிய நாயிகி! கைகேயி தனது வாலிபப் பருவத்தில்,

தவஞ்செய்துகொண்டிருந்த ஒரு முனிவர் முகத்தில் கரியை அரைத்துப் பூசினுள். அம்முனிவர் கோபங்கொண்டு, உலகத்தில் பிற்காலத்தில் உனக்கொரு அபவாதமுண்டாகி உன் முகம் யாரும் பார்க்க யோக்கியமில்லாமல் போகக் கடவதெனச் சபித்து அம் முனிவர் அவ்விடம் விட்டுப்புறப்பட்டார். அதைக்கண்ட கைகேயி பயபக்தியோடு முனிவர் முன்சென்று அவரிடம் ஒரு தடியைக் கொடுக்க, அதனல் முனிவர் சந்தோஷமடைந்து "உன்னுடை இடது கை வச்சிரம்போல் திடமாய் எக்காரியத்திலும் கெடாம லிருக்கக் கடவதென" ஒரு வரங் கொடுத்தார். அதைக்கொண்டே இப்பொழுது கைகேயி இவ்விதம் தனது நாயகனுக்கு உதவிபுரிந் தாளெனச் சொல்லிப் பரமசிவன் பின்னுங் கூறுகிறுர்.

ஒருநாள் இரவில் தசரத மகாராஜன் வேட்டைக்குச்சென்று அநேக மிருகங்களைக் கொன்று அங்கிருந்த ஒரு ஆற்றில் அணை கோலி விளையாடிக்கொண்டிருந்தார். அவ்விடத்திற் கருகில் காசிக் குப் போகுமார்க்கத்தில் வயது சென்றவர்களும் அந்தகர்களு மான தாய்தந்தையர்களை இரண்டு பெட்டிகளால் வைத்துதோளில் சுமந்துகொண்டு காசி யாத்திரை போய்க்கொண்டிருந்த சிர வணனென்ற வைசிய னெருவன், அங்கே வந்ததும் இருட்டின மையாலும் தாகத்திற்கு ஜலம் வேண்டுமென்று தாய்தந்தையர் கள் கேட்டமையாலும் அப்பெட்டிகளைக் கீழே இறக்கி வைத்து விட்டு அருகிலிருந்த குளத்திற்குச் சென்று ஜலத்தில் குடத்தைக் கவிழ்த்து ஜலமெடுத்தான். ஜலம் குடத்திற்குள் செல்லும்போது ஒருயானை ஜலம் குடிப்பதுபோல் சப்திக்கக்கேட்ட தசரதர், காட் டில் சஞ்சரிக்கும் யானையைக் கொல்லக்கூடாதென்ற நீதி தெரிந்தி ருந்தும், அச்சப்தம் யானையினுடையதென்று நினைத்து அவ்வைசி யன்மீது பாணத்தை யெறிந்து அவனுடைய மார்பைப்பிளக்க, வைசியன் ஆ! என்றுசப்தமிட்டு ஐயோ இவ்விதம் என்னையார் அடி த்ததென்று கதறியழுதான்; இதைக்கேட்ட தசரத மகாராஜன் திடுக்கிட்டுப் பயந்து, மனங்கலங்கி, சப்தத்தின் வழியே அவ்வை சிய னிருக்குமிடஞ் சென்று சீக்கிரமாக அவனை ஜலத்திலிருந்து கரையேற்றி, அவன்மூலமாக அவனுடைய வரலாறுமுழுவதையும்

அறிந்து, அவன் மார்பில் தைத்திருக்கும் பாணத்தைப்பிடுங்க, அதையறிந்த அவனுடைய தாய் தந்தையர், அரசனைக்கொண்டே காஷ்டத்தை அடுக்குவித்துப் "புத்திரசோபத்தால் நாங்கள் மடிவதுபோல நீயும் மடிவாய்" என்ற சாபத்தைக் கொடுத்து பிள்ளையுடன் அக்கினிப்பிரவேச மாயினர்.

பிறகு தசரதமகாராஜன் அயோத்தியாபுரி சென்று நடந்த விருத்தாந்தத்தை வசிஷ்ட முனிவருக்குத் தெரிவிக்க, முனிவர் அத்தோஷ சாந்திக்காக சரயு நதியின் கரையில் அசுவமேத யாகஞ் செய்வித்தார்.

ஒரு காலத்தில் தசரத மகாராஜன் தம்மிடம் வந்து வேண்டிய ரோம பாதனென்னும் அரசனுக்குத் தன் குமாரத்தி சாந்தை என்பவளைப் புத்திரியாகக் கொடுத்தார். அவர் அப்பெண்ணை யழைத்துக்கொண்டு தம் தேசஞ்சென்று வளர்த்துவரும் நாளில், மழையில்லாமற்போய் தேசத்தில் க்ஷாமமுண்டாயிற்று. அந்த க்ஷாம நிவர்த்திக்காக, விபண்டக முனிவருக்கும் ஒரு மானுக்கும் பிறந்த ரிசியசிருங்க முனிவரை யழைத்து வரும்படி தேவ மாதர்கள் சிலரை யனுப்பினன். அவர்கள் விபண்டக முனிவருடைய ஆசிரமஞ் சென்று ரிசியசிருங்க முனிவரைக்கண்டு, நாட்டியம் கீதம் வாத்தியம் ஆலிங்கனம் பூஜை முதலியவைகளைச் செய்து அவரை மயக்கித், தங்களோடு கூடப்பட்டணத்துக்குள் அழைத்து வந்தார்கள். வரும்பொழுதே அந்த முனிபுங்கவருடைய மகிமையால் மழை பொழிந்து. பின் தேசமும் செழிப்படைந்தது. அரசனுக்குப் புத்திர பாக்கிய முண்டாயிற்று. இந்த மகிமைகளைக் கண்டு அரசன் வியப்படைந்து முனிபுங்கவரின் தபோமகிமைக்குகந்து, தனது வளர்ப்புப் பெண்ணாகிய சாந்தையை விவாகம் செய்து கொடுத்தான்.

நெடு நாளாய்ப் புத்திரபாக்கிய மில்லாத தசரத மகாராஜனுக்கு இச்சம்பவம் ஞாபகம் வரவே, அந்த ரிசியசிருங்கமுனிவரைத் தமது பட்டணத்துக்கு வரவழைத்து, அவரைக்கண்டு இந்திராதி தேவர்கள் திருப்தியடைய ஒரு யாகஞ் செய்தார்.

அந்த யாகாக்நி குண்டத்தினின்றும் அக்கினி பகவான், பாயசக் குடத்துடன் ஆவிர்ப்பவித்து, அரசனுக்கு முன்பாக வந்து அதை அரசனிடங் கொடுத்து அந்தர்த்தான மாயினர். அதைத் தசரதர் மூன்று பத்தினி மார்களுக்கும் பாகித்தார். அப் பொழுது கைகேயி தன் மனத்தில் வேறெதையோ நினைத்துக் கொண்டு, அதில் ஒரு பாகத்தை யெடுத்து, அருகே யிருந்த அஞ்சனி என்கிற மலையின்மீதேறிந்தாள்.

அந்த மலையின் மீது, ஒரு காலத்தில் பிர்மதேவனுடைய சபையில் நடனஞ்செய்து அவராலே கழுகாகும்படி சபிக்கப்பட்ட, சுவர்ச்சலை என்னும் ஒரு பெண், கழுகு ரூபத்தோடிருந்தாள். அப் பெண்ணுடைய சாப நிவர்த்தி, கைகேயினுடைய கைப்பாயசத் தினுல் என்று பிர்மதேவரால் குறிக்கப் பட்டிருந்தமையால், பாய சம் தன்மேற் பட்டதும் அப்பெண் சாப விமோசனம் பெற்று ஸ்வர்க்கலோகம் போய்ச்சேர்ந்தாள்.

இதன் பிறகு கௌசலை, சுமித்திரை இவ்விருவரும் தங் கள் பங்கில் கைகேயிக்கும் கொஞ்சம் கொடுத்து, மூவருமாக அப்பாயஸத்தைக் குடித்து கர்ப்பம் அடைந்தார்கள். அப் பொழுது அவர்களுக்குள் தோன்றிய கர்ப்பக்குறியினுல் பிறக்கும் பிள்ளைகள் உத்தமமான குணங்களோடு விளங்குவார்களென ஜன ங்கள் அறியலானுர்கள்.

1-வது சருக்கம் முற்றிற்று.

## 2 - வது சருக்கம்.

---

### பரமசிவன் கூறுகிறார்.

அப்பொழுது இராவணனால் தொந்தரவடையும் தன்னுடைய ஜனங்களுக்காக பூமிதேவியானவள், பிர்மலோகஞ் சென்று பிர்ம தேவரிடம் பிரஜைகளுடைய வருத்தத்தைத் தெரிவித்தாள். அவர் விஷ்ணுவினிடம் போகவேண்டுமென்று கூற, பூமிதேவி பிர்மதேவ ரோடு விஷ்ணுவினிடஞ் சென்று தெரிவிக்க விஷ்ணு, "பயப்பட வேண்டாம், நான் பூலோகத்தில் அவதாரம் செய்கிறேன். தேவர் கள் வானரங்களாகப் பிறக்கட்டும். துந்துபி என்கிற அப்ஸர ஸ்திரீ யானவள், பூமிதேவியினுடைய கருத்து நிறைவேறுவதற்காக, இராமருடைய பட்டாபிஷேகத்தைத் தடுக்கும் மந்தரையாகப் பிறக் கட்டும். அவளே துவாபர யுகத்தின் கடைசியில் கம்ஸனுடைய வீட்டில் கூனியாகப் பிறப்பாள்" என்று கூறி பிர்மதேவரையும் பூமிதேவியையும் அனுப்பினார்.

பிறகு மகாவிஷ்ணுவானவர் தாம் பிர்மதேவருக்குக் கொடுத்த வாக்குப்படியே சித்திரை மாதத்தில், நவமிதிதியில், சூரியன் உச்சமான காலத்தில், சதுர்புஜத்துடன் பீதாம்பரதாரியாய், நீல மேக வர்ணராய், மிகுந்த அழகோடு கௌஸல்லியா தேவியின் பிரஸவ அறையில் அவள் முன்பாக ஆவிர்ப்பவித்தார். கௌஸல் லியா தேவியும் மகா விஷ்ணுவென்றறிந்து, பயபக்தி விசுவாசத் துடன் வணங்கி, "குழந்தை ரூபத்தைத் தரிக்கவேண்டும்" என்று அவரை வேண்ட, அப்பொழுதே பகவான் சுவர்ணாபரண காந்தி யால் பொன் வர்ணமேனியும் தாமரை போன்ற கண்களும், சந்தி ரன் போன்ற முகவிலாசமும், சூரியன்போன்ற காந்தியுமுடைய குழந்தை ரூபங்கொண்டு விளங்கினார். சுமித்திராதேவியின் முன் ஆதிசேஷன் குழந்தை ரூபமுடையவராய் அவதரித்தார். கைகேயின் முன்பு சங்கு சக்ரங்கள் இரண்டும் இரட்டைப் பிள்ளை களாக அவதரித்தன.

இந்த மங்களகரமான வேளையில் இவ்விதமாக நான்குகுழந்தைகளும் ஜனனமாயினர். இச்சமையத்தில் தேவதைகள் வாத்தியகோஷஞ் செய்து மலர்மாரி பொழிந்து மகிழ்ந்தார்கள். கௌஸல்யையின் குமாரனை மூத்தவனுடைய முகாரவிந்தம் தரிசிப்பவர்களுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியதாயிருந்தமையால், அவனுக்கு இராமனென்றும், சுமித்திரையின் குழந்தை மிகுந்த அழகாயிருந்தமையால் அக்குழந்தைக்கு இலட்சுமணனென்றும், கைகேயியின் குழந்தைகளில் மூத்தவன் இராஜ்ய பாரத்தை வகிக்கத் தக்கவனாக விளங்கினமையால் அவனுக்குப் பரதனென்றும், இளையவன் சத்துரு பயங்கரனாக விளங்கினமையால் அவனுக்குச் சத்துருக்னனென்றும், வஸிஷ்டமகாமுனிவரைக் கொண்டுதசரதர் தமது குழந்தைகளுக்குச் சாஸ்திரோக்தமாக நாமகரணஞ் செய்வித்தார்.

குழந்தைகள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வரும் நாளில் இலட்சுமணர் இராமருடனும், சத்ருக்னன் பரதனுடனும் சேர்ந்து விளையாடினார்கள். அப்பொழுது தசரதர் தமது குழந்தைகளின் மீது பிரியங்கொண்டு சுவர்ணாபரணங்களும் ரத்னாபரணங்களும் பூட்டி அவர்கள் விளையாடுவதைப் பார்த்து மகிழ்ந்தார். இவ்விதம் நடந்துவருங் காலத்தில், ஒரு நாள் தசரதர் போஜனஞ் செய்வதற் குட்கார்ந்த போது, இலையில் அன்னம் பரிமாறினதும், இராமன் ஓடிவந்து அந்த அன்னத்தில் ஒரு பிடி யெடுத்துக்கொண்டு வெளியே ஓடினான். அவனைப் பிடிப்பதற்காக தசரதர் சொற்படி கௌஸல்யை தொடர்ந்தோடினாள். ஸ்ரீராமன் யோகிகளுடைய மனதுக்கும் எட்டாத மகானானதால், அவள் கைக்கு அகப்படாமல் திரும்பித் தசரதரிடம் ஓடிவந்து, தன் கையிலிருக்கும் அன்னத்தைத் தசரதருக்கும் கௌஸல்யைக்கும் கொடுத்து ஸந்தோஷமுண்டாக்கினான். குழந்தைகளுக்கு இயற்கையான இவ்வித விளையாட்டுகளாலும், மழலைச் சொற்களாலும், ஒருவருடன் ஒருவர் செய்யும் விளையாட்டுச் சண்டைகளாலும் ஓடுவதாலும், ஒருவர்க்கொருவர் முத்தங்கொடுத்துக் கொள்வதாலும் குதிரை முதலிய வாகனங்களிலேறிச் சவாரி செய்வதாலும் தாய் தந்தையர்

களுக்கு ஸந்தோஷ முண்டாக்கிக்கொண்டு வந்தார்கள். ஒரு சமயத்தில் ஸிம்மாதனத்தின்மீதிருந்து அரசாளும் தசரத மகாராஜனுடைய சமீபத்தில் இக்குழந்தைகள் சென்று சபையில் அரசனுக்கு வணக்கஞ்செய்து, அச்சிம்மாதனத்தின் மீதேறி அரசனுடன் சமமாக உட்கார்ந்தார்கள். பிர்மதேஜஸை விரும்புகிற வேதியர்கள் ஐந்தாவது வயதிலும், புஜபலத்தை விரும்புகிற அரசர்கள் ஆறுவது வயதிலும் தனலாபத்தை விரும்புகிற வைசியர்கள் எட்டாவது வயதிலும் உபநயனஞ் செய்யலாமென்கிற சாஸ்திர விதிப்படி தசரத மகாராஜன், கர்ப்பகாலக் கணக்குப்பிரகாரம் ஆறுவது வயதும், ஜனனகால கணக்குப் பிரகாரம் ஐந்தாவது வயதும் நடக்கும் பொழுது இராம லட்சுமண பரத சத்ருக்னர்களுக்கு வஸிஷ்டர் முதலிய பெரியோர்களைக்கொண்டு உபநயனஞ் செய்வித்தார். பிறகு சுப முகூர்த்தத்தில் குருவைக்கொண்டு அவர்களுக்கு வேதாத்தியயனம் செய்வித்து, நான்கு வேதங்களுக்கும் அங்கங்களுடன் அர்த்த விசாரஞ் செய்வித்தார். இவ்விதம் பிர்மசரியம் முடிந்த பின் சேனைகளோடு, வஸிஷ்டமுனிவரையும் கூட்டி ஆறு மாத காலம் தீர்த்த யாத்திரை செய்துவரும்படி செய்வித்தார். அவர்கள் தீர்த்த யாத்திரை முடித்துக்கொண்டு தங்கள் பட்டணம் வந்து சேர்ந்து, அரசனிஷ்டப்படி நடந்து புத்திசாலிகளென்று பெயர் பெற்று, தாய்தந்தையர்களையும் பிரஜைகளையும் ஸந்தோஷப்படுத்தி வந்தார்கள்.

2-வது சருக்கம் முற்றிற்று.

225

## 3-வது சருக்கம்.

---

பரமசிவன் கூறுகிறார்.

இவ்விதம் இராமர் முதலிய நான்கு குழந்தைகளும் சுகமாக வாழ்ந்து வருங்காலத்தில், விசுவாமித்திர முனிவர் அயோத்தியா பட்டணம் வந்து தசரத மகாராஜனைப் பார்த்து அவரை ஆசீர்வதிக்க, அரசன் அவருக்குத்தக்க மரியாதைசெய்து, "தாங்கள் விஜயஞ்செய்த காரியத்தை எனக்கு அருளிச்செய்து என்னைக் கிருதார்த்தனுக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதன்மேல் விசுவாமித்திர முனிவர், "நாம் நடத்தும் யாகங்களை நிறைவேற்றும் பொருட்டு, தங்கள் குமாரர்களாகிய இராம லட்சுமணர்களை, நம்முடைய ஆசிரமத்தில் சில தினங்கள் வசிக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும்" என்று கூறியருளினர். அதைக்கேட்ட தசரத மகாராஜன் தம்முடைய பரமகுருவாகிய வஸிஷ்ட முனிவருடன் ஆலோசனை செய்து, அவர் சம்மதம்பெற்று, இரதத்தை வரவழைத்து, அதன்பேரில் விசுவாமித்திர முனிவருடன் இராம லட்சுமணர்களை ஏற்றி யனுப்பினர். அப்பொழுது விசுவாமித்திர முனிவர் மிகுந்த ஸந்தோஷத்துடன் இரதத்தை நடத்திக் கொண்டு போகையில், சாய்ங்காலமானதால் வழியிலுள்ள காமாசிரமத்தில் தங்கி, இராக்காலத்தைச் சுகமாக அவ்விடத்தில் கழித்துக் காலையி லெழுந்திருந்து, இராம லட்சுமணர்களுடன் ஸ்நானஞ்செய்து, நித்திய கருமானுஷ்டானம் முடிந்தபிறகு இராம லட்சுமணர்கள் மகிமைபடைவதற்காக மாகேச்வரி வித்தை, தநுர்வித்தை, சஸ்திரவித்தை, அஸ்திரவித்தை, லௌகிகவித்தை, இரதவித்தை, கஜவித்தை, அசுவவித்தை, கதாவித்தை மந்திரங்களை அழைப்பதும், விடுவதுமான மந்திரவித்தை, பசிதாகங்களை யடக்குகிற பலே அதிபலே யென்கிற வித்தை முதலிய சகல வித்தைகளையும் அவர்களுக்கு உபதேசித்து, பிறகு அவர்களைக் கொண்டு, வனத்தில் சஞ்சரிக்கும் முனிவர் முதலானவர்களை இம்சிக்கும் இராட்சதர்களை அழித்தும் வழிப்போக்கர்களை மிகுந்த தொந்தரவு செய்துவரும் தாடகை யென்கிற இராட்சஸியை ஒரு

பாணத்தினல் கொன்றும், காட்டில் வசிப்பவர்க ளெல்லோருக்கும் மிகுந்த சுகத்தை உண்டாக்கினர். இறந்த தாடகை யானவள், தன் நிஜரூபமாகிய அப்ஸரஸ்திரீயின் ரூபமடைந்து, "நான் ஒரு முனிவரைத் தொந்தரை செய்யுங்காலத்தில் அம்முனிவர், நீ இராட்சஸப் பிறப்பை யடைந்து, சுந்தனென்ற அசுரனை மணந்து, மாரீசன், சுபாகு என்கிற இரண்டு பிள்ளைகளைப் பெறக் கடவாய் என்று சபித்துப்பின், இராமபாணத்தால் கொல்லப்பட்டு நற்கதி பெறுவாய்" என்று அநுக்கிரகித்தமையால். "ஏ இராமா! உம்மால் நான் நற்கதியடைந்தேன்" என்று கூறி அவரை வணங்கி ஸ்வர்க்க லோகஞ் சென்றாள்.

பிறகு இராம லட்சுமணர் களுடன் விசுவாமித்திரர் தமது ஆசிரமத்தை யடைந்து யாகஞ்செய்யத் தொடங்கினர்; ஸ்ரீராம னும்ரணயக்கியஞ்செய்யத் தொடங்கி, யாகத்தைக்கெடுத்த இராட்ச ஸர்கள் யாவரையும், பாணங்களாலே சங்கரித்து மாரீச னென் பவனை ஒரு பாணத்தால் தூறுகாத வழிக்கு அப்பாலிருக்கும் சமுத்திரத்தில் ஆழ்த்திவிட்டு, மற்றொரு பாணத்தால் சுபா குவையுங்கொன்று முற்றுப் பெறச்செய்து தம்முடைய ரண யக் கியத்தை முடிக்காமல் நிருத்தினர்.

இவ்விடத்தில் மகா முனிவர்கள் கூட்டங்கூடிப்பல தேசவர்த்த மானங்களைப் பேசிக் கொண்டிருக்கு மிடையில், மிதிலாபட்டணத் தரசனுகிய ஜனகமகாராஜன் தமது குமாரத்திக்கு வரன் பெறு வதன் பொருட்டுச் சுயம்வரம் நாட்ட ஒரு நாள் நிச்சயித்திருக்கிறு னென்று பேசிக்கொண்டிருப்பதைக் கேட்ட விசுவாமித்திர முனி வர், இராம லட்சுமணர் களுடன் மிதிலைக்குப் போகப் புறப் பட்டார்.

போகும் வழியில் பெண்ணுருவங் கொண்ட ஒரு கற்சிலையை இராமனுக்குக்காண்பித்து அதன் வரலாற்றைக் கூறுகின்றார்.

பிர்மதேவன் பிரஜைகளைப் படைத்து வருகையில் அற்புத மான ஒரு பெண்ணுருவத்தைப் படைத்து அகலிகை யென்று பெயரிட்டு அவளுக்குத் தகுந்த புருஷனைத் தேட ஸ்வர்க்கலோ கஞ் சென்று, அங்கு யாவரையும் பார்த்துவிட்டுப் பூலோகத்

திற்கு வருவதாகத் திரும்புஞ்சமயத்தில், இந்திரன் முதலிய திக்குப்பாலகர்கள் அப்பெண்ணைத் தங்களுக்குக் கொடுத்தருள வேண்டுமென்று, வேண்ட அவர்களுக்குக் கொடுக்க மனமில்லாமல், பூலோகஞ் சென்று, கௌதம முனிவரைப்பார்த்து, இவர் தகுந்தவரென நிச்சயித்து அவருக்கு மனஞ் செய்து கொடுத்துத் தமது உலகஞ்சேர்ந்தார். பின் கௌதமர் அகலிகையுடன் கிருகஸ்தாசிரமம் பெற்று நித்திய கர்மம், யாகம், தபம் முதலியவைகளைச் சாஸ்திர விதிப்படி நடத்திக் கொண்டு வந்தார். ஸ்வர்க்க லோகாதிபதியாகிய தேவேந்திரன், பிரமதேவர், அப்பெண்ணைத் தனக்குக் கொடாமற் போனது முதல் அப்பெண்ணைத் தான் எவ்விதமாவது அனுபவிக்க வேண்டுமென்கிற ஆவல் கொண்டிருந்தான். அவன் தக்கசமயம் பார்த்திருந்து கௌதம முனிவருடைய ஆசிரமத்திற்குச் சென்று இராக்காலத்தில் அவருக்குத் தெரியாமல் அவரைப்போல வேடங் கொண்டு அகலிகையிடம் போய் அவளுடன் சுகித்து வெளியே வந்தான். அச்சங்கதியை ஞான திருஷ்டியாலறிந்த கௌதமர், மிகக் கோபங் கொண்டு தேவேந்திரனைப் பார்த்து நீ ஒரு லோகத்துக்கு அரசனுயிருந்து இப்படிப்பட்ட கெட்ட செய்கையைச் செய்தது நியாய மல்லவென்று சொல்லி, நீ ஒரு யோனிக்கு ஆசைப் பட்டதால் உன் தேகத்தில் ஆயிரம் யோனி உண்டாகக்கடவன வென்று சபித்தார். அச்சாபமேற்ற தேவேந்திரன் ஸ்வர்க்கலோகஞ் சென்று தனக்கு மந்திரியுங் குருவுமான பிரகஸ்பதி பகவானை வரவழைத்து அவருக்கு வந்தனம் முதலிய மரியாதைகள் செய்து நடந்த சங்கதியைத் தெரிவித்தான். பிரகஸ்பதி பகவான் மகா முனிவரிட்ட சாபம் மாறுதாகையால், வேறுவிதமாக மாற்ற வேண்டுமென்று கருதி, உன் தேகத்தில் தோன்றுவதெல்லாம் பார்ப்பவர்களுக்குக் கண்களாகவே தெரியக்கடவன'' என்று அநுக்கிரகஞ் செய்தார். அதுமுதல் அவன் ஸகஸ்ராக்ஷனென்கிற பெயரை யடைந்தான். அதுகௌதம முனிவர் தேவேந்திரனுக்குச் சாபங்கொடுத்த பிறகு, அகலிகையை நோக்கி 'நீ இது முதல் கற்சிலையாகக் கடவாய்' என்று சபிக்க, அகலிகை மனவருத்தமடைந்து, தெண்டனிட்டு '' மறுபடி, நான் தங்களுக்குப் பணிவிடை செய்யும் பாக்கியத்தை எப்பொழுது

அடைவே னென்று அருள வேண்டு மெனப் பிரார்த்திக்க, பின்னொரு காலத்தில் மகாவிஷ்ணுவானவர் இராமாவதாரஞ் செய்து இவ்விடம் வருவார். அப்பொழுது அவருடைய பாததூளி பட்டு நீ சுயரூபமடைவாய் ; பின் உன்னிஷ்டத்தைப் பூர்த்தி செய்து கொள்" என்று கௌதமர் கூறித் தவஞ் செய்ய மேரு மலைக்குச் சென்றார் என்று விசுவாமித்திரர் கூற இதைக் கேட்ட கருணாநிதியாகிய இராமச்சந்திரன் அக்கற்சிலையைத் தமது பாதத்தாலே பரிசித்து அவளுடைய பாவங்களை விலக்கவே, அகல்யை தன் அற்புதமான சுயரூப மடைந்து இராமச்சந்திரனை வணங்கி கௌதம முனிவரிடஞ் சென்றாள்.

[முன்னொரு கற்பத்தில் கௌதமர் அகல்யையை நீ ஓர் ஆறுகப் போகக் கடவாய்" என்று சாபமிட அவள் ஆறுகப் பிரவகித்து ஜனஸ்தானத்தின் வழியாகச் சமுத்திரஞ் செல்ல, அப்பொழுது ஸ்ரீராமன் அரணிய வாசத்துக்கு வந்து, அவற்றைக் கடக்க அவ்வாற்றில் பாதத்தை வைக்கும்போது அகல்யை சாபநிவர்த்தி யடைந்து தன் கணவராகிய கௌதம முனிவரிடம் சேர்ந்தாளென்று சில முனிவர்கள் சொல்லுகிறார்கள். இது ஒரு கற்பாந்தர பேதம்.]

பிறகு கந்தர்வர்களும், தேவர்களும் இராம லட்சுமணர்களின் மீது புட்பங்களை வருஷிக்கச் சந்தோஷத்துடன் கங்கைக் கரைக்கு வந்து அதைத்தாண்டி அக்கரை செல்வதற்காக ஓடக்காரனை அழைத்தார்கள். ஓடக்காரன் ஸ்ரீராமனைப் பார்த்து "லோகநாதா ! தங்களை ஓடத்தின் மீதேற்றி அக்கரைக்குக் கொண்டு போய்விட மிகுந்த பிரியமுள்ளவனா யிருக்கிறேன்; ஆயினும் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன். தங்கள் பாததூளிக்குக் கற்களைப் பெண்ணாக்குகிற சக்தி இருக்கிற தென்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகையால் தங்கள்பாதத்தைக் கங்கா ஜலத்தால் நன்றாய்ச் சுத்தஞ் செய்து, என்னுடைய கைகளால் தங்கள் பாதங்களைத் தூக்கி ஓடத்தில் வைக்கவிரும்புகிறேன். இப்போது எனக்கு ஒரு மனைவி யிருக்கிறாள். கல்லுக்கும் மரத்துக்கும் வித்தியாச மில்லையாகையால் தங்கள் பாததூளியால் நான் ஜீவனஞ் செய்வதற்காக வைத்திருக்கும் இவ்வோடமும் பெண்

ஞய்விட்டால் நான் என்னசெய்வேன்" என்று வணங்கிச் சொல்ல, அதைக்கேட்டு, மகிழ்ந்தார். பின் அவ்வோடக்காரன் கங்கா ஜலத்தால் ஸ்ரீராமருடைய பாதங்களைச் சுத்தஞ் செய்ய யாவரும் அவ்வோட மேறி அக்கரைச்சேர்ந்து மிதிலா பட்டணம் போயினர்.

அச்சமயத்தில் சுயம்வரத்திற்காகப் பலதேச மன்னர்களும் ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டிருந்தார்கள். இராவணன் தனக்குச் சொல்லாமலிருந்தும் கேள்விப்பட்டு மந்திரிகளோடும் சேனைகளுடனும் சுயம்வரத்திற்காகப் புஷ்ப விமானத்திலேறி மிதிலா பட்டணம் வந்து சேர்ந்தான். ஜனக மகாராஜன் தசரதரை வினயத்தோடு அழைத்தும், அவர் தம் குமாரர்கள் சமீபத்தில் இல்லாததாலுண்டான விரகதாபத்தால் சுயம்வரத்திற்கு வரவில்லை. அப்போது விசுவாமித்திர முனிவர் இராம லட்சுமணர்களுடனும் முனிவர்களுடனும் மெதுவாக மிதிலா நகரத்தினருகாமையிலிருக்கும் ஓர் உபவனத்துக்குட் பிரவேசித்தார். விசுவாமித்திர முனிவர் வரவை யறிந்த ஜனகமகாராஜன் அவரை அழைத்துவர மந்திரிகளுடன் புறப்படுஞ் சமயத்தில், அவ்விடத்திற்கு விசுவாமித்திர முனிவருடைய சீடர் ஒருவர் வந்தார். அவரை அரசன் வணங்கிச் செய்தி விசாரிக்க, அவர், அரசனது கைகளைப் பிடித்துக் கொண்டு இரகசியமான இடத்திற்குச்சென்று "அரசனே! தசரதமகாராஜருடைய பிள்ளைகளும் மகா வீரர்களுமாகிய இராம லட்சுமணர்களைச் சுயம்வரத்திற்காக அழைத்து வந்திருக்கிறோம். தங்களுடைய பிரதிக்ஞைப் பிரகாரம் சிவதநுசை ஸ்ரீராமனே முறித்து ஸீதாதேவியைக் கலியாணஞ் செய்து கொள்ளப் போகிறான். அவன் தம்பியாகிய லட்சுமணன் ஊர்மிளை யென்கிற குமாரத்தியைக் கலியாணஞ்செய்து கொள்ளப் போகின்றான். ஆகையால் இவர்களை, வரனை அழைக்கிற விதமாக நீர் உம்முடைய அரண்மனைக்கு அழைத்து வரவேண்டும்; வில்லை முறிக்கும் பரியந்தம் இச்சங்கதியை வெளியிடாமல் மனதில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும்; என் குருவாகிய விசுவாமித்திர முனிவர் இவற்றைத் தங்களுக்குத் தெரிவிக்கும் படி அனுப்பினரென்று கூறி, அவரிடம் அநுமதி பெற்றுத் தம்

முடைய குருவினிடஞ் சீக்கிரமாகச் சென்ருர். பிறகு ஜனக மகாராஜன் அதிக ஸந்தோஷங் கொண்டு மகா தோரணம் முதலிய வைகளாலே பட்டணத்தை அலங்கரிக்கச் செய்து, மந்திரிகள், சேனைகள் முதலியவர்க ளோடும், வந்திருக்கும் சில அரசர்களோடும் மனேகரமான பலவித வாத்தியங்க ளோடும், பட்ட ஸ்திரீகளுடனும், அவர்களுடன் வரும் சுமேதை முதலிய ஸ்திரீகளுடனும், பட்டத்து யானைகளை முன் நடத்திக் கொண்டு விசுவாமித்திர முனிவரிடஞ் சென்று, வணங்கி அவரைப் பூஜை செய்து, தாம் ஒன்று மறியாதவர் போல இராம இலட்சுமண ருடைய யோக க்ஷேமங்களை விசாரித்து, பீதாம்பரம், ஆபரணம் முதலிய வைகளால் அவர்களுக்கு மரியாதை செய்து, அவர்களை இரண்டு யானைகளின் மீதேற்றிக் கொண்டு சாமரம் முதலிய உப சாரங்களுடன் விசுவாமித்திர முனிவரையும் அழைத்துக் கொண்டு, தம் பட்டணத்து இராஜவீதியில் நடன மாதர்கள் நர்த் தனஞ் செய்யவும் வந்திமாகதர்கள் துதிக்கவும் பலவித வாத்திய கோஷங்கள் முழங்கவும் பாடகர்கள் பாடவும் ஊர்வலமாகச் சென் றனர். அவர்களைப் பார்ப்பதற்காக பட்டணத்து ஸ்திரீகள் தத்தம் வீட்டு மெத்தைகளின் மீதேறிப் பலகணிவழியாகநீலோற் பலம் போன்ற கண்களால் பார்த்து மகிழ்வடைந்து மலர் மாரி பொழிந்து இராமன் ஸீதாதேவிக்குத் தகுந்த வரனென்றும் ஊர் மிளைக்கு லட்சுமணன் தகுந்த வரனென்றும், ஒருவர்க் கொருவர் சொல்லிக் கொண்டு தெய்வ சங்கற்பத்தாலும், நம் பூர்வ புண்ணிய வசத்தாலும் இவர்களுக்கே விவாகம் நடந்து நாம் பார்க்க வேண் டும்; இவர்கள் உத்தம புருஷர்களா யிருக்கிருர்க ளென்றும் கூறி மகிழ்ந்தார்கள். இவ்வார்த்தைகளைக் கேட்ட இராம லட்சுமணர் கள் தலை நிமிர்ந்து, அவர்களைப் பார்த்து ஸந்தோஷப்படு வதைக் கூட வரும் அரசர்கள் கண்டு ஒரு கூட்டங் கூடி, இந்த ஜனக ராஜன் நமக்கு இவ்விதமான மரியாதை செய்ய வில்லை; இவர்க ளுக்கு மாத்திரம் இவ்வித மரியாதை செய்வதால், இவ்வரசன் ஸீதையை இராமனுக்குக் கொடுப்ப தென்றே நிச்சயித்துக் கபட மாக நம்மை யெல்லாம் வரவழைத்து இந்தச் சுயம்வரத்தில் அவ மதிக்க எண்ணங் கொண்டிருக் கிருனென்று ஒருவர்க் கொருவர்

பேசிக்கொண்டார்கள். இவ்வார்த்தைகளை இராமலட்சுமணர்கள், விசுவாமித்திர முனிவர், ஜனகமகாராஜன் இந்நால்வரும் கேட்டுக்கொண்டே சுயம்வர மண்டபத்தி னருகிற் சென்றனர். அங்கு இராம லட்சுமணர்களை யானைகளின் மீதிருந்து கீழே இறக்கி, விசுவாமித்திரர் முன்னேயும் அவர் பின்னே இராம லட்சுமணருமாக முனிவர்கள் நிறைந்திருக்கும் சாலைக்குச்சென்று அங்கே விசுவாமித்திரர் உட்கார, அவர் முன்னிலையில் இராம லட்சுமணர்களும் உட்கார்ந்தார்கள்.

ஏ பார்வதி! பின் ஜனகமகாராஜனும் உள்ளே சென்று "கனம் பொருந்திய அரசர்களே! என் கன்னிகையின் விவாகத்தின் பொருட்டு நான் பிரதிக்கினைசெய்து கொண்டபடி வில்லை வளைப்பதற்கு இது தகுந்த சமயமா யிருக்கிறது; முன் பரசுராமர் பரமசிவனிடத்தில் தநுர் வித்தை அப்பியாசஞ் செய்து, முடியுஞ் சமயத்தில், அவருக்குத் தநுர் வித்தை யினுண்டா யிருக்கும் அறிவைக் கண்டு, பரமசிவன் மகிழ்ந்து திரிபுரங்களைத் தகித்து ஜயமடைந்த இத்தநுசை அவருக்கு வெகுமதியாகக் கொடுத்தார். அவர் இவ்வில்லைக் கொண்டு இருபத்தொரு தடவை பூப்பிரதட்சிணஞ் செய்து க்ஷத்திரியர்கள் அனைவரையும்வென்று தமது தகப்பனைக் கொன்றதின் நிமித்தம் ஆயிரங் கைகளுடைய கார்த்திய வீரியனென்ற அரசனையுங் கொன்று, பிறகு ஒழிவடைந்து தபஞ் செய்ய விரும்பி, இந்த வில்லை முன்போலவே என் அரண்மனையில் வைத்துவிட்டுச் சென்று பின் என்னுடைய கன்னிகையாகிய ஸீதை விளையாடுந் தருணத்தில் அவள் இந்தத் தநுசையும் கையிலெடுத்து விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்த பரசுராமர் ஸீதை இலட்சுமியின் அவதாரமாக யிருக்க வேண்டுமென்று மனதில் கருதி, என்னை வரவழைத்து எவராலும் வளைக்க முடியாத இத்தநுசை வளைப்பவன் எவனோ அவனே ஸீதையை விவாகஞ் செய்ய உரியவன். ஸீதையின் கலியாணத்திற்கு ஒரு பரீட்சையாக இத்தநுசை வைத்துக் கொள்ளுமென்று எனக்குக் கொடுத்தார்" என்று தெரிவித்து, ஆயுதசாலையிலிருக்கும் அச்சிவதநுசை ஐந்நூறு எருதுகள் கட்டிய ஒரு பெரிய வண்டியில் ஏற்றிச் சபையின் நடுவில் வரவழைத்து வைத்து, சபையிலுள்ள மகா

வீரர்களாகிய அரசனை நோக்கி, "இத்தநுசை எவர்கள்வளைத்து நாணேற்றுகிறார்களோ அவர்களுக்கே ஸீதை மாலையிடுவாள்; சக்தியுள்ளவர்கள் நாணேற்றலாம்" என்று யாவரும் கேட்கச் சொன்னார்.

இதைக்கேட்ட அரசர்கள் யாவரும், மலைபோலத் தங்களுக்கு முன்பாக இருக்கும் தநுஸைப் பார்த்துத் தலைகுனிந்தார்கள். அவர்களிலே சிலர் அத்தநுஸின் சமீபத்திற் சென்று அதை எடுத்து நிறுத்துவதற்காகக் கைகளால் அசைத்துப் பார்த்து அசைக்க முடியாமல் நின்றுவிட்டார்கள். சிலர் தூக்கிப் பார்த்து நிறுத்த முடியாமல் நின்றுவிட்டார்கள். இவ்வில்லை எடுத்து நிறுத்துவதே கஷ்டமாயிருக்க, இதை நிறுத்தி நாணேற்றுவது மனதினாலும் எண்ணக் கூடாத காரியமாகுமென்று சிலர் பிரமித்து நின்றார்கள். அச்சமயத்தில் லங்காதிபதியாகிய இராவணேசுவரன் அரசர்கள் யாவரும் மயங்கி நிற்பதைக்கண்டு, கர்வத்துடன் வில்லின் அருகே சென்று, சிரித்துக்கொண்டு "ஏ ஜனகமகாராஜனே! என்னுடைய இருபது கைகள் தேவர்கள் முதலானவர்களைச் சண்டையில் தோற்கும்படி செய்து மூவுலகங்களையும் தம் சுவாதீனப் படுத்திக் கொண்டன; கைலாயமலையைத் தூக்கி விளையாடின, அக்கைகளுடைய திறமையை இவ்வரசர்கள் முன் துரும்புபோன்றிருக்கும் இத்தநுஸினிடம் நீர் பார்க்க விரும்புகிறீரே?" என்று கம்பீரமாய்ச் சொல்லிக்கொண்டே வில்லைத் தொட்டு அதைப் எடுப்பதற்காகத் தன்னிடது கைகளிலொன்றினால் அதை அசைத்துப் பார்த்து முடியாமல் பிறகு வலது கைகளிலொன்றினால் அசைத்துப் பார்த்தும் முடியாமல் ஆச்சரியமடைந்து இருகைகளாலசைத்துப் பார்த்தும் முடியாமல், ஒன்றன்பின் ஒன்றாக இருபது கைகளையுங் கொண்டு அசைத்து ஒரு முனையைப் பிடித்துத் தூக்கி நிறுத்திக்கொண்டு பத்தொன்பது கைகளால் வில்லைக்கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு பூமியில் இருக்கும் நாண்கயிற்றை எடுப்பதற்காகக் குனிந்து ஒரு கையால் கயிற்றை எடுக்கும்போது, அத்தநுஸு இவன் மீதிற்சாய, கயிற்றை எடுப்பதைவிட்டு அக்கையாலும் தநுஸைப் பிடித்து தள்ளினான். அது தள்ளப்படாமல் அவன்மீது சாயவே முதுகு பூமியிற்படும்படி விழுந்தான். அப்போது கிரீடங்கள் தலைகளை விட்டுவிலகின. வஸ்தி

ரங்கள் அவிழ்ந்தன. கண்கள் சுழன்றன. வாய்லிருந்து ஜலம் பெருகிற்று. இவ்விதம் இராவணன் படும் பிராணாவஸ்தையைப் பார்த்து அச்சபையிலுள்ள அரசர்கள் யாவரும் சிரித்தார்கள். இதைக்கண்ட அவன் மந்திரிகளும் இராட்சஸர்களும் இராவணேச்வரனிடம் வந்து அவனைச் சுற்றிக் கொண்டு அவனுடைய மார்பிலிருந்து அந்தநுனைக் கீழேதள்ளுவதற்காக அசைத்துப் பார்த்தனர்; முடியாமற் போயிற்று இராவணன் அரையில் அணிந்திருக்கும் பீதாம்பரங்கள் மலஜலங்களால் நனைந்து போயின. அச்சமையத்தில் ஜனகமகாராஜன் இராவணனுக்கு நேரிட்டிருக்கும் அவஸ்தையைப் பார்த்து "பூலோகத்தில் வீரர்கள் ஒருவருமில்லையா? இச்சபையில் அரசர்கள் இருப்பார்களானால் அவர்கள் இவ்வரசர்கள் பார்க்க இராவணனுக்குப் பிராண பிச்சைக் கொடுக்கட்டும்" என்று, யாவரும் கேட்க, உரக்கச் சொன்னான். அவ்வார்த்தைகள் பாணங்கள் போல இராம லட்சுமணர்களுடைய காதிற் படவே அவர்கள் கோபத்துடன் புருவந் துடிக்க விசுவாமித்திரமுனிவருடைய முகத்தைப் பார்த்தார்கள்.

அப்போது விசுவாமித்திர முனிவர் "ஏ இராகவா! இப்போது அச்சபையின் மத்தியில் இராவணனுடைய பிராணாவஸ்தையைப் பார்த்துக் கொண்டிருப்பது நீதியாகுமோ? எழுந்திருந்து அவனைப் பிழைக்கும்படி செய்து வில்லையும் நாணேற்று" என்று அனுமதிகொடுத்தார். அதைக்கேட்ட இராகவன் "அப்படியே செய்கிறேன்" என்றெழுந்திருந்து முனிவரை வணங்கிக் கழுத்திலணிந்து கொண்டிருக்கும் முத்தாரம் முதலியவைகளைக் கழற்றிவைத்து விட்டு இடுப்பிலுள்ள வஸ்திரத்தை இழுத்துக் கட்டிக்கொண்டு கிரீட முதலியவைகளைச் சரிவர வைத்துக்கொண்டு புறப்பட்டுச் சபையில் வந்தார். அதைப் பார்த்த சபையோர்கள் மனநடுங்கி இராமன் சிறுபிள்ளை நம்மால் நாணேற்ற முடியாத வில்லினிடம் சென்று அவன் என்ன செய்யப் போகிறானென்றும், இராவணனைப் பார்ப்பதற்காக, இராமன் வருகிறானென்றும், சிறு பிள்ளை யானதால் சிறு பிள்ளைத் தன்மையைக் காண்பிக்கிறானென்றும், ஆரம் முதலிய வைகளைக் கழற்றி வைத்ததின் கருத்தென்ன வென்றும், வில்லை எடுத்து

நாணேற்றும்படி விசுவாமித்திர முனிவர் இவனை அனுப்பிருரென்றும் இவனுடைய பலத்தைப் பார்ப்பதற்காகவே முனிவர் அனுப்பினுலும் இவ்வளவு பெரிதான இவ்வில்லினிடஞ் சென்று என்னசெயயப் போகிருனென்றும் பலவிதமாக ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். அப்போது ஜனகமகாராஜனும் இராமனைப் பார்த்துவிட்டு "மகா முனிவரே! இச்சபையில் இச்சிறுபிள்ளையை எதற்காக அனுப்பினீர்? இராவணேச்வரன் முதல் சபையிலுள்ள யாவரும் வில்லை அசைக்க முடியாமல் பலமிழந்து போனர்களே! அப்படிப்பட்ட வில்லை இந்தப் பையனுல் நாணேற்றமுடியுமா? தங்கள் சீடன் மூலமாக சொல்லியனுப்பிய சங்கதியெல்லாம் இத்தநுஸின் முன்பாகப் பொய்யாகிவிட்டன. மிருதுவான சரீரமுடைய இப்பையனுக்கும் எடுக்க முடியாத இவ்வில்லுக்கும் எவ்வளவோ வித்தியாச மிருக்கிறதே! ஒரு சாதக பட்சி தாகவெறிகொண்டால், சமுத்திரத்தை வற்றச்செய்யுமா?" என்று கூறினர்.

இங்கு இப்படியிருக்க, சுமேதை முதலிய அந்தப்புர ஸ்திரீகள் சுயம்வர மகோற்சவத்தைப் பார்ப்பதற்காக அரண்மனையின் மீதேறி அங்குள்ள பலகணிகளில் உட்கார்ந்து, மிருதுவாயும், சுவர்ணம் போன்ற காந்தியுமுடைய தாமரை போன்ற கண்கள், பூர்ணச் சந்திரன் போன்ற முகம், அழகான புஜம், சுவர்ண தண்டைக்கொலுசு இவைகளணிந்த காலின் அழகு, கிரீடகுண்டலங்களினுல் மகாசூரனெனக் காண்பிக்கும் சிரமம், அழகான முழங்கால், கண்டைக்கால், பாதங்கள், சங்கம்போல் மூன்று மடிப்புள்ள கழுத்து, மிருதுவான உதடு, அழகான மூக்கு, அழகிய சுருட்டைமயிர், இவைக ளமையப்பெற்றுச் சபையில் உட்கார்ந்திருந்த இராமனைப் பார்த்தார்கள்; அவர் முத்துமாலை, ரத்ன மாலை முதலிய மாலைகளையும் வஸ்திரங்களையும் களைந்துவைத்துவிட்டு இடுப்பில் பீதாம்பரத்தை இறுகக் கட்டிக்கொண்டு கோதண்டத்தைக் கீழே வைத்துவிட்டு, வில்லினருகிற்சென்று மோதிரங்கள் அணிந்த கைகளால் அவ்வில்லை எடுக்கப்போகும் சமயத்

திலும் பார்த்தார்கள்; "ஆடை ஆபரணாதிகளைக் களைந்திருக்கும் இப்போதும் சொல்லற்கரிய அழகுள்ளவரா யிருக்கும் அந்த இராமனே நமது ஸீதாதேவிக்கு மணவாளனாக வேண்டும்" என்று அந்த ஸ்திரீகள் நினைத்து, ஜகதீசனைப் பிரார்த்திப்பதற்காக, ஆகாசத்தைப்பார்க்க, அங்கு அவர்கள் கண்ணுக்கு பிரம விஷ்ணு ருத்திரர்களாகிய திரிமூர்த்திகளும் தோன்ற ஸ்ரீராமனை சாக்ஷாத் நாராயணனென்றறியாத அவர்கள், "ஏ விதே! ஏ ரமாகாந்த! ஏ சம்போ! நாங்கள் பல ஜன்மங்களிலும்செய்த விரதம் தானம் முதலியவைகளால் இராமன் வில்லை நாணேற்றுவதற்கு அதைத் தொடும்போது அவ்வில் பூமாலைபோல் மிருதுவாயிருக்க அநுக்கிரகித்தால், இராமனுக்கு ஸீதை மாலையிடுவாள். அதை எங்கள் கண்களால் கண்டு ஆனந்திப்போம். அவ்விருவரும் கலியாண மணமேடையில் இருக்கப்பார்த்து யாவரும் சந்தோஷிப்பார்கள்" எனப் பிரார்த்தித்தார்கள்.

அப்பொழுது சகிகளோடு கூடியிருந்த ஸீதாதேவியானவள் இராமனைப்பார்த்து ஆனந்தக்கண்ணீர் பெருக, ஆசனத்தினின்று சீக்கிரம் எழுந்திருந்து துளசி யென்கிற தோழியின் தோளின் மீது தனது கொடிபோன்ற கையைப் போட்டுக்கொண்டு, அன்புடன் அவளைப்பார்த்து "இப்போது என் கலியாணத்திற்காக கடினமான பரீட்சையை ஏற்படுத்திய என் தந்தையே எனக்கு விரோதியாய் விட்டார்! ஏனென்றால் இராமர் மிகவும் மிருதுவான தேக முடையவர். இந்தச் சிவதநுஜு மலைபோல் கடினமாயிருக்கிறது. இந்தவில்லை அவரால் எவ்வாறு நாணேற்ற முடியும்? ஏ தெய்வமே! நீ,என்னசெய்யப் போகிறாயோ? உன்னுடைய மனதில் என்ன எண்ணம் இருக்கிறதோ நான் அறியேன். நான் கலியாணம் பண்ணிக்கொள்ளும் விஷயத்தில் இராமரைத் தவிர வேறொருவரையும் மனதில் நினைக்கவில்லை. இதற்கு விரோதமாக என் தந்தை வேறொருவனுக்கு என்னைக் கொடுப்பாரேயானால், இந்த மெத்தையிலிருந்து விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளுவேன். ஏ சங்கரா! ஏ பிர

மதேவா! துர்க்காதேவி! ஏ காயத்திரீ! ஏ ஸாவித்திரீ! ஏ ஸரஸ்வதீ! ஏ இந்திரா! ஏ யமா! ஏ வருணா! ஏ குபேரா! ஏ அக்கினீ! ஏ லட்சுமிதேவி! ஏ விஷ்ணு! ஏ கருடா! ஏ ஆதிசேஷா! ஏ சந்திராதி சமஸ்த தேவர்களே! உங்கள் யாவரையும் நான் பிரார்த்திக்கிறேன். உங்கள் கைகளால் இவ்வில்லைத் தொட்டு பூமாலைபோல் மிருதுவாகும்படி செய்து உங்கள் சக்தியை இராமருடைய புஜங்களில் ஆவிர்ப்பிக்கச் செய்து, வில்லை நாணேற்றும்படி அநுக்கிரகியுங்கள். பிற்காலத்தில் ரிஷிபத்தினி போல் பதினான்கு வருஷ காலம் காட்டில் நான் வாசம் பண்ணப்போகிறேன். இது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஆகையால் அதற்குத் தகுந்தபடி நீங்கள் எல்லோரும் என்னுடைய கருத்து நிறைவேற அநுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தாள்.

இவ்விதம் சபையிலுள்ள மன்னருடைய வார்த்தைகளையும் ஸீதை முதலிய அந்தப்புர ஸ்திரீகளுடைய வார்த்தைகளையுங் கேட்டுப் புன்சிரிப்படைந்த இராமன் சிவதநுஸின் அருகே சென்று, அதற்குப் பிரதட்சிண நமஸ்காரஞ் செய்து பரமசிவனையும் தன் தந்தையாகிய தசரதரையும் தாயாகிய கௌஸல்யையையும் குருவாகிய விசுவாமித்திரரையும் மனதில் தியானித்துக் கொண்டு இடதுகையால் வில்லைப் பிடித்து வலதுகையால் நாண் கயிற்றை யெடுத்துக்கட்டி வளைத்தார். அக்காலத்தில் வாத்தியங்கள் முழங்கின. வந்திமாகதர்கள் துதித்தார்கள். இழுத்து வளைக்கும்போது அவ்வில் மூன்று துண்டாக ஒடிந்து விழுந்தது. அவ்வில் முறிந்த சப்தமானது ஆகாயமளவும் பரவியது. அதனால் பூமியும் சமுத்திரங்களுங் கலங்கின. பத்துத் திசைகளிலும் பிரதித்தொனி தொனித்தது. நட்சத்திரங்கள் பூமியில் விழுந்தன. ஆதிசேடன் சிரக்கம்பமுற்றான். காற்றுவாசனையுடன் சுகமாகவீசியது. தேவர் முதலியவர்கள் ஆகாயத்திலிருந்து நந்தன வனத்திலுள்ள புட்பங்களைக் கொண்டுவந்து இரைத்து வாத்தியகோஷஞ் செய்தார்கள். அப்ஸரஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள். சுயம்வர மண்டபத்தில் துந்துபி முதலான வாத்தியங்களை முழங்கச் செய்து ஜயபேரிகை அடித்தார்கள். தாசிகள் நடனமாடினார்கள்.

வந்திமாகதர்கள் துதித்தார்கள். அரண்மனையின் மீதிருக்கும் ஸ்திரீகள் பலகணிகளின் வழியாக ஸ்ரீராமன் மீது புஷ்பங்களை வாரி இறைத்தார்கள்.

அச்சமயத்தில் வெட்கத்தால், கிரீடம்விலகிய தலைகளைக் கவிழ்த்துக்கொண்டு, அவிழ்ந்த வஸ்திரத்துடனிருந்த ராவணேசுவரன், ஒரு நிமிஷநேரமாவது அச்சபையில் நிற்காமல் துரிதமாக லங்கைக்குச்சென்றான். ஸ்ரீராமன் வில்லை முறித்ததைப்பார்த்த ஸ்திரீகள் மிக மகிழ்ச்சியுடன் ஜயசப்தங்கூறி, கை கொட்டி ஆரவாரித்தார்கள். அதைப்பார்த்த ஸீதா தேவியும் அதிக ஸந்தோஷத்தால் புளகாங்கித மடைந்தாள்; நீலோற்பலம் போன்ற தனது கண்களால் பிரியத்துடன் இராமனை இமைகொட்டாமல் பார்த்துக்கொண்டு, இந்த மகானை நாம் எப்போது அடைவோமென்கிற ஆவலுடனிருந்தாள். அப்பொழுது ஜனகமகாராஜன் தனது மந்திரிமார்களைப் பார்த்து "மந்திரிகளே! நம்முடைய குழந்தையாகிய ஸீதையை யானையின் மீதேற்றுவித்து, நான்கு புறமும் நம்முடைய சேனைகள் காவல்செய்ய மகோற்சவத்துடன் இவ்விடத்திற்கு வரவழையுங்கள்" என்று கட்டளை யிட்டார். அதைக்கேட்ட மந்திரிமார்கள் "நல்லது தங்களுடைய உத்தரவின் படி நடக்கிறோம்" என்று கூறிவிட்டு, வேகமாக ஜானகியிடஞ் சென்று அஞ்சாலிபஸ்தர்களாய் நின்று, "நீலோற்பலம் போன்ற கண்களையும், பிடியானை போன்ற நடையினையு முடைய ஸீதா தேவியே! நீ மகா புண்ணிய சாலி; இப்பொழுது சூரிய வமிசத்திற்பிறந்த தசரதருடைய பிள்ளையாகிய இராமர் பல தேச வரசர்கள் கூடிய இச்சபையில் சிவ தநுஸை முறித்து விட்டார். ஆகையால் சீக்கிரமாக எழுந்திருந்து இதோ வந்திருக்கும் பெண்யானையின்மீ தேறிக்கொண்டு, இராமரிருக்கு மிடத்திற்கு வரவேண்டும்; இரத்தினங்களாகிய இம்மாலையைச் சந்தோஷத்துடன் அவருடைய கழுத்திலணிய வேண்டும்"—என்று இனிமையாகக் கூறினார்கள். ஸீதாதேவி தன் தாய்மார்களை வணங்கித் தோழிகளுடன் யானையின் பிடரியின் மீதேறிச் சந்தோஷமாய் உட்கார்ந்தாள். அந்த யானையின் முன்னும்,

பின்னும் இனிமையான பலவித வாத்தியங்கள் கோஷித்தன. நூற்றுக் கணக்கான கஞ்சுகிகள் நல்ல பிரம்புகளைக் கைகளிலே பிடித்துக்கொண்டும், விசித்திரமான உருமாலைகளை யணிந்து கொண்டும், யானையின் முன்பாகப் போய்க்கொண்டும், ஸீதையின் ஊர்வலத்தைப் பார்க்கவரும் ஜனக்கூட்டத்தை உரத்த சப்தமிட்டு விலக்கினார்கள். அக்காலையில் தாசிகள் நர்த்தனஞ் செய்தார்கள். மாகதர்கள் துதித்தார்கள். நடர்கள் பாடினார்கள். ஸீதையினுடைய தாசிகள் நல்ல அலங்காரத்துடன் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு யானையைச் சுற்றி நின்று சாமரம் முதலிய உபசாரங்களைச்செய்து வந்தார்கள். ஸீதையினுடைய நூற்றுக்கணக்கான வயது சென்ற செவிலித்தாய்மார்கள் கைகளில் சஸ்திரங்களையும், தங்கத்தடிகளையுங் கொண்டு குதிரைகளின் மீதேறிக்கொண்டு யானையைச் சூழ்ந்து வந்தார்கள். இன்னும் சில ஸ்திரீகள் புருஷ வேஷத்துடன் நல்ல ஆபரணங்களை யணிந்துகொண்டு புடைசூழ்ந்து வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் கஞ்சுகி ஸ்திரீகள் குதிரைகளின் மீது முகத்தை மறைத்துக்கொண்டு வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் மந்திரிமார்கள் யாவரும் தங்கள் தங்கள் வாகனங்களின்மீது சைன்னியங்களுடன் யானையைச்சூழ வந்தார்கள். ஸீதையுடன் யானையின்மீது உட்கார்ந்திருக்கும் தோழிமார்கள் சாமரங்களை இடைவிடாமல் வீசிக்கொண்டிருந்தார்கள். இவ்விதம் ஊர்வலம் வந்த ஸீதையின் மீது, பட்டணத்திலுள்ள ஸ்திரீகள் பலகணிகளின் வழியாகப்புஷ்பங்களை வருஷித்தார்கள். மின்னலைப்போன்ற அழகுடைய ஸீதை இரத்தின மாலையைக் கையிலெடுத்துக்கொண்டு கோலாகலத்துடன் ஊர்வலமாக வந்து சபையின் தலைவாயில் வந்ததும், யானையின் மீதிருந்திறங்கி, இராமனைக்கடைக்கண் பார்வையால் பார்த்துக் கொண்டு, முகமலர்ச்சியுடன் சபைக்குள் நடந்து சென்று, இராமனருகில் வந்து, அம்மாலையை இருகைகளாலும் எடுத்து அவருடைய கழுத்திலணிந்து அவருடைய திருவடிகளில் சிரசைவைத்து வந்தனஞ் செய்து எழுந்திருந்து, வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றாள். மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மார்பினையுடைய ஸீதையை இராமன்

பார்த்து ஸந்தோஷங்கொண்டு பின் விசுவாமித்திர முனிவருக்கு வந்தனம் புரிந்தார்.

அப்பொழுது விசுவாமித்திர முனிவர், சபையில் ஜபம் பெற்ற இராமரைத் தழுவித் தமது மடியிலுட்காரவைத்துக் கொண்டு அன்புடன் உச்சிமோர்ந்து மகிழ்ந்தார். பின் ஜனகமகாராஜன் திவ்வியமங்கள சொரூபியாகிய தன்கன்னிகை ஸீதாதேவியை இராமருடைய அருகில் உட்காரவைத்தான். அவ்விருவரும் பரம அலங்காரமாய் விளங்கினர்கள். விசுவாமித்திர முனிவர் அவ்விருவரையும் ஸந்தோஷத்துடன் ஆசீர்வதித்துத்தமது பிறப்பு பலனடைந்ததாக மனதில் நினைத்தார். ஜனகமகாராஜன் அச்சபையுள், "ஸ்வாமி விசுவாமித்திர முனிவரே தங்களுடைய பிரசாதத்தால் நான் தந்யனுனேன். என்வம்சம் தந்யமாயிற்று. என் தாய் தந்தையரும் தந்யராயினர். ஸ்ரீராமசந்திரனுக்கு நான் மாமனுர் என்கிற பெயரையும் இவ்வுலகத்தில் பெற்றேன்" என்று கூறி விசுவாமித்திர முனிவரை வணங்கினர். சபையிலுள்ள அரசர்கள் யாவரும் மின்னற் கொடிபோன்ற பிரகாசமும், கோவைப் பழம்போன்ற உதடழகும், சந்திரன்போன்ற முகவிலாசமுமுள்ள ஸீதாதேவியின் கண்களாகிற பாணங்களால், அடியுண்டு மயங்கி, தேகம் மெலிந்து, நமக்குத் துரதிர்ஷ்டமென்று சிலர் கூறினர்; சிலர் மூர்ச்சை யடைந்தார்கள். இவ்வாறு வருத்தப்பட்டுக் கொண்டும், வெட்கத்தினல் தலை குனிந்தவர்களாயும் முகம் வாடினவர்களாயுமுள்ள சபையிலுள்ள அரசர்களிடஞ் சென்று, அவர்களைப்பார்த்து, தங்கள் சிநேகிதனுன நான் என் கன்னிகையாகிய ஸீதைக்கு விவாகம் நடத்துகிறபடியால், அதை நடத்திவிட்டுப் பிறகு தங்கள் தங்கள் பட்டணங்களுக்குப் போகும்படி கேட்டுக்கொள்ளுகிறேனென்று ஜனகர் வேண்டினர். அதைக்கேட்ட அரசர்கள் யாவருமொன்று கூடி, மந்திராலோசனை செய்து நாம் நல்லவேளையில் புறப்பட்டுவராததனல் அவமானமடைந்திருக்கிறோம். இக்காலத்தில் நாம் இராமனுடன் போர்செய்தாலும் நமக்கு ஜயம் கிடைப்பது கஷ்டம். ஆகையால் நாம் நமது பட்டணங்களுக்குச் சென்று நல்ல வேளை பார்த்துக்கொண்டு புறப்பட்டுவந்து இராமனுடன் போர்செய்து யுத்த

களத்தில் பாணங்களினால் அவனைப் பிளந்து தள்ளுவோமேயானால், அப்பொழுது நாம் கிருதகிருத்தியர்களாகி, அம்புபோல் நம்மனதிற் பாய்ந்திருக்கும் அவமானத்தினின்றும் நீங்கியவர்களாவோம். ஆகையால் இப்போது ஏன் நாம் நம்முடைய விரோதத்தைக் காண்பிக்க வேண்டும் என்றாலோசனை செய்து, ஜனக மகாராஜனைப் பார்த்து "தாங்கள் கேட்டுக் கொண்டபடி நாங்களிருந்து கலியாணத்தை நடத்திவிட்டு எங்கள் பட்டணங்களுக்குச் செல்லுகிறோம்" என்று கூறினார்கள். அதனைச் செவியுற்ற ஜனக மகாராஜன் ஸந்தோஷமடைந்து அவரவர்களுக்குத் தக்கபடி விடுதிகளும் வேண்டிய சாமான்களும் திட்டஞ் செய்தனுப்பினார். அதுபோலவே விசுவாமித்திரர் முதலியவர்களுடைய இடங்களுக்கும் சாமான்களை வேண்டியபடி கொடுத்தனுப்பினார்.

பிறகு ஜனக மகாராஜன் விசுவாமித்திர முனிவருடைய சொற்படி, தசரத மகாராஜனை வரவழைப்பதற்காக, தமது மந்திரிமார்களை யனுப்பி, அவருடைய வரவை எதிர்பார்த்தார். அம் மந்திரிகளும் அயோத்தியா பட்டணத்திற்குச் சென்று தசரத மகாராஜனைப் பார்த்து வணங்கி, விநயத்துடன் முன்னின்று, ஜனக மகாராஜனுடைய சுயம்வர மண்டபத்தில் இராமருக்குண்டான ஜயத்தையும், ஸீதாதேவியை இராமருக்குக் கன்னிகாதானஞ் செய்து கொடுக்க முகூர்த்தம் ஏற்படுத்தியுள்ளதையும் விவரமாகக்கூறி, அதற்குத் தாங்கள் பரிவாரங்களுடன் விஜயஞ்செய்ய வேண்டுமென்று அழைக்க, தசரத மகாராஜன் அதைக்கேட்டு மகிழ்ச்சியடைந்து தமது பட்டண வாசிகளான குடிகளுடனும், சைன்னியங்களுடனும், ஸ்திரீகளுடனும், தம் தேசத்தாருடனும், புறப்பட்டு அதிசீக்கிரமாக மிதிலா பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார். ஜனக மகாராஜன் தசரத மகாராஜனை ஊர்வலத்துடன் பெருமையாகத் தமது பட்டணத்திற்குள் அழைத்து வருவதற்காக, ஒரு யானையை அலங்கரித்துக்கொண்டு, சில அரசர்களோடு தசரத மகாராஜனிடஞ் சென்று அவரைப் பார்த்தார். அவரைப் பார்க்கும்போது அவருடைய முன்னிலையில் இரண்டு வாலிபர்கள்

நிற்பதைக்கண்டு அவர்களை இராம லட்சுமணர்களென்றே சந்தே கித்து, இவர்கள் இவ்விடம் வந்திருக்க வேண்டிய காரணமென்ன வென்று மனதில் ஆலோசித்துத் திரும்பிப் பார்க்க விசுவாமித்திர முனிவருடன் இராம லட்சுமணர்கள்இருப்பதைக் கண்டுஆச்சரிய மடைந்தார். பிறகு தசரத மகாராஜனையும் வஸிஷ்ட முனிவரைப் பார்த்து, "இராம லட்சுமணர்களைப் போலவே இங்கு நிற்கும் இக்குமாரர்கள் யாவர்" என்று கேட்டார். அதற்கு விசுவாமித் திரமுனிவர் பாதனைக்காட்டி இவன் இராமனுடைய அமிசமென் றும், சத்ருக்னனைக்காட்டி, இவன் லட்சுமணனுடைய அமிச மென்றும், பாதசத்ருக்னனென்கிற பெயர்களை யடைந்த இக் குமாரர்கள், தசரத மகாராஜாவினுடைய மூன்ருவது தாரமாகிய கைகேயினுடைய பிள்ளைகளென்றும் தெரிவித்தார். அதைக் கேட்ட ஜனகமகாராஜன் தசரத மகாராஜனையும், விசுவாமித்திர முனிவரையும் சதாநந்த முனிவரையும் பார்த்துப் பின் வருமாறு சொல்லுகிருர்—

அயோநிஜைபாக பூமியிலிருந்தவதரித்துஎனக்குக் குமாரத்தி யாயிருக்கிற ஸீதையை இராமனுக்கும், இரண்டாவது குமாரத்தி யாகிய ஊர்மிளை என்பவளை லட்சுமணனுக்கும், கன்னிகாதானஞ் செய்து கொடுக்க நிச்சயித்திருக்கின்றேன். என் சகோதரன் குபத்துவஜனுக்கு நல்ல அழகு பொருந்தியவர்களாயும், யௌவன பருவமடைந்தவர்களாயும், ஸீதை ஊர்மிளை இவர்களைப் பார்க்கி லும் அதிக செல்வத்துடன் வளர்த்து வரப்பட்டவர்களான, மாண்டவி சுருதகீர்த்தி என்கிற பெயர்களையுடைய இரண்டு குமா ரத்திகளிருக்கின்ருர்கள். அவர்களில் மாண்டவி யென்பவளைப் பாதனுக்கும், சுருதகீர்த்தி யென்பவளைச் சத்ருக்னனுக்கும் கன்னிகாதானம் செய்து கொடுப்பதாக நிச்சயித்திருக்குறேன். தாங்கள் கலியாணத்தை நடத்தி என்னைக் கௌரவப் படுத்த வேண்டும்-என்று கூறி. "இந்நான்கு பெண்களையும் மருமக்களாக தாங்கள் அடைய வேண்டும்" எனச்சொல்லி வணங்கினுர். தசரத மகாராஜன் "அப்படியே நடக்கட்டும்" என்று ஜனகமகாராஜனைப் பார்த்துக் கூறிவிட்டு, அவருடைய பக்கத்திலிருக்கும் அகல்லி

யையின் புத்திரராகிய சதாநந்தரென்னும்,ஜனக மகாராஜனுடைய புரோகிதரைப்பார்த்து, "ஸீதை அயோநிஜை யென்றும், பூமியிலிருந்து பிறந்தவளென்றும் ஜனகமகாராஜன் கூறியதை எனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்" என்று கேட்க சதாநந்த முனிவர் தசரதமகாராஜனைப் பார்த்து, "இது கேட்க வேண்டிய விஷயந்தான்; இதை யாவரும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியந்தான்; நான் கூறும்வரலாற்றைக் கவனித்துக் கேட்க வேண்டும்" என்று கூறிச் சொல்லுகிறார்—

முன்னொரு காலத்தில் பத்மாச னென்னும் பேர் பெற்ற ஓர் அரசன் இருந்தான்; அவன் ஒரு சமயத்தில் உலகத்தின் நடவடிக்கைகளை யோசித்துப் பார்த்து, யாவரும் இலட்சுமி கடாட்சத்தையே விரும்புகிறார்களென்பதை யறிந்து, நாம் தவஞ் செய்து லட்சுமியைப் பெண்ணாகவடைந்து, அக்குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு இடை விடாமல் சந்தோஷிக்க வேண்டுமென்றெண்ணி, அப்பொழுதேபுறப்பட்டுக்காட்டுக்குச்சென்று லட்சுமி தேவியைக்குறித்து உக்கிரமான தவஞ்செய்து லட்சுமி தேவி பிரத்தியட்சமானதும் வணங்கி "அம்மணி! நீர் எனக்குப் பெண்ணாக அவதரித்து என்னைக் கிருதார்த்தனாக்க வேண்டும்" என்று பிரார்த்திக்க, லட்சுமி தேவி "அரசனே! நான் மகாவிஷ்ணுவின் ஆதீனத்தி லிரிப்பவளானதால், அவருடைய தயவு பெற்றால், உன்கோரிக்கையை அவர் நிறைவேற்றுவார்" என்று கூற, அதன் பின் அரசன் மகாவிஷ்ணுவை குறித்து அகோரமான தவஞ் செய்ய, விஷ்ணு அரசன் தவத்திற்குகந்து அவன்முன் தோன்றி அரசனைப்பார்த்து, "உனக்கு வேண்டியவரத்தைக் கேள்" என, அரசன் அவரைப் பிரதட்சிண நமஸ்காரஞ் செய்து வணங்கி பக்தி விநயத்துடன் எதிரில் நின்று "லட்சுமிதேவி எனக்குப் பெண்ணாக அநுக்கிரகிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான். உடனே விஷ்ணு சிரேஷ்டமான ஒரு மாதுளங்கனியை அவன் கையில் கொடுத்து மறைந்தார்- அரசன் அக்கனியைப் பிட்டுப் பார்க்க அதன் ஒரு பாதியில் விரையும் மற்றொரு பாதியில் சுவர்ணச்சாயலுள்ள ஒரு பெண் குழந்தையும் இருக்கப் பார்த்து ஆச்சிரியப்பட்டு, மிகுந்த ஆசையுடன் நாம் விரும்பிய

படி சுபமான பெண் குழந்தை கிடைத்ததென்று சந்தோஷித்துக் கையிலெடுத்து வைத்துக்கொண்டு மகிழ்ந்தான். அப்பெண் பார்ப்பவர்களுடைய மனதைக் கவரத்தக்க அதிக அழகுள்ளவளாயிருந்ததனுல், அவளை உலகத்தார் பத்மையென்று பெயரிட்டழைத்தார்கள். அப்பெண் சுக்கில பட்சத்துச் சந்திரகலைபோல் வளர்ந்து மங்கைப்பருவமடைந்த காலத்தில், அரசன் அவளுக்குத் தகுந்தவன் யாவன்? எங்கேயிருக்கிறான்? யாருக்குக்கொடுக்கலாமென்று மனதில் நினைத்து தமது மந்திரிமார்களையழைத்து அவர்களுடன் மந்திராலோசனை செய்து சுயம்வரம் ஏற்படுத்தி, தக்கவரனைச் சம்பாதிக்க நிச்சயித்து, சுயம்வரத்துடன் யாகத்தையும் செய்ய யத்தனித்துப் பலதேச அரசர்களுக்கு நிருபம் எழுதினான். நிருபங் கண்ட அரசர்கள் தங்களுக்குரிய பலவித ஆபரணங்களை யணிந்துகொண்டு பத்மையினுடைய சுயம்வரத்திற்கு வந்தார்கள். இந்தச் சுயம்வரத்தைப் பார்ப்பதற்காக முனிவர்களும், தேவகந்தர்வர்களும், யட்சர்களும், கின்னரர்களும் இராவணன் முதலிய இராட்சஸர்களும் வந்தார்கள். தேவாமிசங்களான பறவைகளும், மலைகளும், ஆறுகளும், சமுத்திரங்களும், கற்பகவிருட்சங்களும் தங்கள் இஷ்டப்படி ரூபங்கொண்டு, வந்தன- இவர்கள் யாவரும் சுயம்வர மண்டபத்தில் அவரவர்களுடைய ஆசனத்தில் உட்கார்ந்த பின் அரசன் அவர்கள் யாவரையும் பார்த்து, "இந்த ஆகாயத்தில் தெரிகிற நீலநிறத்தை எடுத்து உடலில் பூசிக்கொள்ளுகிறவனுக்கு என் பெண்ணுகிய பத்மை என்பவளைக் கன்னிகாதானஞ் செய்துகொடுப்பேன். இது ஸத்திய மானவார்த்தை" என்று உரக்கச்சொன்னான். அதைக்கேட்ட அரசர்கள், இவன் சொல்வது ஆகாத காரியமென்றெண்ணி, பத்மையின் சௌந்தரியத்தில் மயங்கி, அவ்விடம் விட்டுப் போக மனமில்லாமல் யாவரும் ஒன்று கூடி அப்பெண்ணை அபகரித்துக் கொண்டு போக யத்தனித்தார்கள். அப்பொழுது பத்மாட்சன் அவர்களுடன் கொடிய போர் தொடங்கி யெதிர்த்து மாரியாகப் பாணப் பிரயோகஞ் செய்ய அதைப்பொறுக்கமாட்டாமல் தேவர் முதலிய அநேகர் ஓடிப்போய் விட்டார்கள். அசுரர்கள் ஒன்று

சேர்ந்து போர்செய்து பத்மாட்சனை யுத்தகளத்தில் கொன்று பத்மையை அபகரிப்பதற்காக அவளிடஞ்செல்ல, அதைக் கண்ட பத்மை யென்பவள் திடீரென்று அக்நிப்பிரவேசமானாள். அது தெரியாத சில அரசர்கள் அப்பெண்ணைக் கண்டுபிடிக்கப் பட்டணத்திற்குட் சென்று தேடிப்பார்க்க அவளகப்படாமையால், அரண்மனை முதலியவைகளை இடித்துத்தோண்டி நிமிஷ நேரத்திற்குள்ளாக அப்பட்டணத்தை மயானத்திற் கொப்பாகச்செய்து விட்டார்கள். அக்காலையில் அங்கிருக்கும் சில விவேகிகள் லட்சுமியைப் பெண்ணாக வடைந்த பத்மாட்சவாசனுடைய கதி இவ் விதமாயிற்றல்லவா? ஆகையினாற்றான் தெரிந்த முனிவர்கள் லட்சுமியை விரும்புகிறதில்லை. லட்சுமியானவள் பிராணிகளுடைய மனதுக்குச் சஞ்சலமுண்டாக்கிப் பயம், சோகம், வதம் முதலிய பல கஷ்டங்களைக் கொடுப்பதால் லட்சுமியை விரும்புகிறவன் விவேகமற்றவனென்று சொல்லிக் கொண்டார்கள். பத்மாட்சவாசன் யுத்தகளத்தில் மரித்தபிறகு அவனுடைய பத்நிமார்கள் யாவரும் உடன்கட்டை யேறிமரித்தனர். தைத்தியர்கள் யாவரும் தங்கள் தங்களிடங்களுக்குச் சென்றார்கள்.

பத்மை என்கிற பெண் மகாவிஷ்ணுவினுடைய அழிவற்ற சக்தியாகையால் அக்நிகுண்டத்தில் வெகுநாள் வசித்திருந்து பிறகு ஒருநாள் அவ்வக்நி குண்டத்தினின்றும் வெளிப்பட்டு அதனருகில் உட்கார்ந்திருந்தாள். இப்பொழுது தசானன் திக்கு விஜயம் செய்யும் பொருட்டுப் புட்பகவிமானமேறி, ஆகாயமார்க்கமாய் வருகையில் அவனுடைய மந்திரியாகிய சாரணனென்பவன் அக்நி குண்டத்தினருகி லுட்கார்ந்திருக்கும் பத்மையைப் பார்த்து "மகாராஜா! முன் சுரர்கள் அசுரர்கள் முதலியவர்கள் எப்பெண்ணை அபகரிப்பதற்காகப் பலவித வருத்தமடைந்து பார்த்தனரோ அப்பெண் உட்கார்ந்திருப்பதைப் பாருங்கள்! இப்பெண் தான் பத்மாட்ச வாசனுடைய குமாரத்தியாகிய பத்மை யென்பவள்" என்று கூறினான். அதன்மேல் இராவணன் பத்மையைப் பார்த்து காமவெறியடைந்து, அவளைக்கொண்டு போகவெண்ண விமானத்தை வேகமாகச் செலுத்திச் சமீபத்தில் நெருங்கி, அவளைப் பிடிக்குஞ் சமயத்தில் அவள் முன்போலவே அக்நிகுண்டத்தில் மறைந்து விட்டாள். அதைப் பார்த்த

"தசானனன் அந்த இடத்தைக்குறிப்பாகப் பார்த்து "பத்மை! நீ இருக்குமிடத்தை நான் அறிந்தேன். நீ இவ்விதம் இவ்விடத்தில் மறைந்து தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் மிகுந்த தொந்தரையை உண்டாக்குவதால், இவ்விடத்தைப் பரிசோதித்துப்பார்க்கிறேன்" என்று கூறிவிட்டு, இராட்சஸர்களைக்கொண்டு குடங்களிலே ஜலமெடுத்துவரச் செய்து அவ்வக்கி குண்டத்தில் ஊற்றி அதை அணைத்துச் சாம்பரைக் கிளறிப் பார்த்தான். அதில் அதியற்புதமான ஐந்து இரத்தினங்கள் அகப்பட்டன. அவைகளையெடுத்து ஒரு பெட்டியிலடக்கஞ்செய்து விமானத்தின் மீதேற்றிக்கொண்டு லங்காபட்டணம்போய்த்தன்னரண்மனைக்குள்ளிருக்கும் பூஜை அறையில் வைத்துவிட்டான். அன்றிராத்திரி மண்டோதரியுடன் இராவணன் மஞ்சத்தின் மீது இருக்கும்பொழுது "மண்டோதரீ! நீ பார்த்து ஆச்சரியப்படத்தக்க ஐந்து திவ்விய இரத்தினங்களைச் சம்பாதித்துப் பூஜை அறையில் பெட்டியில் வைத்திருக்கிறேன். அவைகளை நீ எடுத்துக்கொள்ளலாம்" எனக்கூற மண்டோதரி பூஜையறைக்குச் சென்று அப்பெட்டியைப் பார்த்து அதைத் தன் கணவன் முன்னிலையில் கொண்டு வந்து திறந்து ரத்தினங்களை எடுத்துக்கொள்ளலாமென்று நினைத்துப் பெட்டியை அசைக்க அது அசைக்க முடியாமலிருந்தது. அதனல் அவள் வெட்கமடைந்து கணவனிடஞ் சென்று செய்தி தெரிவித்தாள். இராவணன் சிரித்துத் தான் எடுத்துக்கொண்டு வருவதாக அவ்வறைக்குச் சென்று அப்பெட்டியை எடுத்தான். அது அவனுலும் அசைக்க முடியவில்லை. அதனல் அவன் தனது இருபது கரங்களையும் கொண்டு எடுத்துப் பார்த்துப் எடுக்க முடியாமலிருந்தது. அதைக்கண்டு ஆச்சரியமடைந்த இராவணன் பயங்கொண்டு அவ்விடத்திலேயே அப்பெட்டியைத் திறந்தான். அதற்குள் சூரியப்பிரகாசம்போன்ற பிரகாசத்துடன், தான் முன் கண்டபெண்விளங்குவதைக்கண்டான். அப்பெண்ணை இராவணேச்வரனும் மற்றராட்சஸர்களும்பார்த்துவியந்தனர். அவர்களுடைய கண்கள் அந்தப்பிரகாசத்தால் மழுங்கின. அப்பெண்ணைப்பார்ப்பதற்காக இராவணனைச் சேர்ந்த யாவரும் வந்து கூடினர்கள். அப்பொழுது இராவணேச்வரன் மண்டோதரியைப் பார்த்து "மண்

டோதரீ! இப்பெண்பத்மாட்ச அரசனுடைய குமாரத்தி; இவ ளுடைய பெயர் பத்மையென்று கூறுவார்கள். இவள்பொருட்டு இவர் தகப்பனார் ஏற்படுத்திய சுயம்வரத்தில் பூலோக வாசிகளும் சொர்க்கலோக வாசிகளும் கூடிப் பத்மாட்சவரசனுடன் போர் புரிந்து, அவனையும் அவனுடைய பட்டணத்தையும் நாசஞ்செய்து இவளைப் பிடிக்கப்போகவே இவள் அக்நிப் பிரவேசமாய் விட் டாள். அவ்வக்நியைத் தண்ணீரால் அணைத்துச் சாம்பரைப் பரி சோதிக்குங் காலத்தில் அதில், ஐந்து இரத்தினங்களிருக்கக்கண்டு, அவைகளைப் பெட்டியில் அடக்கஞ்செய்து நான் எடுத்துக்கொண்டு வந்தேன்" என்று கூறினன். அதைக்கேட்ட மண்டோதரி பயந்து நடுங்கி அதிக சோகங்கொண்டு "நாதா! பிப்பலாதருடைய கன் னிகையாகிய கிருத்தியாதேவி போல் உக்கிரமாய்த் தன் குலத்தை நாசப்படுத்தினவளான இவள் இக்குழந்தைப் பருவத்திலேயே இக்காரியஞ் செய்தாள். தகுந்த வயது வந்தபோது எக்காரியஞ் செய்யமாட்டாள். இவளை ஏன் இவ்விடம் கொண்டுவந்தீர்? இவள் மூலமாகவே உமக்கு மிருத்தியு வரப்போகிறதென் றெண்ணுகி றேன். ஆகையால் நிமிஷமும் தாமதம் செய்யாமல் இன்றைய தினமே இவளைப் பெட்டியுடன் காட்டில் எறிந்துவிடச் செய்யும்" என்று கூறினள். இராவணன் இவள் கூறுவது நியாயமென்றெண் ணி தன் மந்திரிமார்களுடன் ஆலோசனை செய்து தூதர்களை வர வழைத்து "தூதர்களே! இப்பெட்டியை ஜாக்கிரதையாக எடுத்து விமானத்தின் மீதேற்றிக்கொண்டு வனாந்தரத்தில் எறிந்துவிட்டு வாருங்கள். தாமதிக்கவேண்டாம். சீக்கிரமாகப் புறப்படுங்கள்" என்று கட்டளையிட்டான். அதைக் கேட்ட இராட்சஸர்கள் கூட் டங்கூடி அப்பெட்டியைப் புட்பக விமானத்தின் மீதேற்றிக் கொண்டு ஆகாயவழியே புறப்பட்டனர். மண்டோதரி அவர்க ளைப் பார்த்து "தூதர்களே! இப்பெட்டியிலிருக்கும் பெண் பார்க் கிறவர்களுடைய குலத்தை உடனே நாசஞ் செய்யக்கூடிய தன் மையுடையவளாதலால்,இப்பெட்டியை வெளியில் எங்கும் எறியா மல் பூமிக்குள் புதைத்துவிடுங்கள். இவள் சில நாளைக்குப் பிறகு கிரகஸ்தாசிரமத்தில் சரிவரக் கருமங்களை நடத்துபவளாயும் இந் திரிய நிக்கிரகஞ் செய்தவளாயும் சராசரப் பொருள்களை ஆத்ம சொரூபமாகப் பார்க்கும் ஞானியாகவு முள்ள ஒருவ

ருடைய வீட்டில், வளரப்போகிறாள்" என்றுகூறி அனுப்பினாள். அதைக்கேட்ட தூதர்கள் விமானமேறுஞ் சமயத்தில் பெட்டியி லிருக்கும் பெண்ணானவள் யாவரும் கேட்கச் சொல்லுகிறாள். "இராவணன் முதலிய சகல இராட்சஸர்களையும் கொல்லுவதற் காக மறுபடி நான் லங்கைக்கு வருவேன். அப்புறம் நிகும்பனு டைய மகனாகிய பௌண்டாகன், நூறுதலை இராவணன் இவர்க ளைக் கொல்லுவதற்காக வருவேன். பின்னொருதரம் மகாசூரனை மூலகாசுரனையும் கும்பகர்ணன் மகனாகிய சூரனென்பவனையும் கொல்லுவதற்காக இப்பட்டணத்திற்கு வருவேன்" என்று கூறி னாள். அதைக்கேட்ட இராவணன் மனங்கலங்கி மயங்கினான். அங்கிருந்த இராட்சஸர்கள் யாவரும் பயந்து பிணம்போல் உணர் வற்றிருந்தார்கள். இராவணன் எழுந்திருந்து இப்பொழுதே இப்பெண்ணைக் கொன்று விடுகிறேனென்று மனதில் நினைத்துக் கூர்மையான ஒரு கத்தியை எடுத்து வெட்டுவதற்காக அப்பெட் டியினிடம் செல்வதைக் கண்ட மயன்மகளாகிய மண்டோதரி, "நாதா! உமக்கு நெடுங்கால மிருக்கும் ஆயுளை இப்பொழுதே ஒழித்துக் கொள்ளவேண்டாம், இந்த ஸாகஸகாரியத்தை செய்ய வேண்டாம். இவளாலே தான் உமக்கு நாசம் வரப்போகிறது; இவளுடைய வார்த்தை பொய்யாகாது. பின்னால் வரப்போகிற காரியத்தை இப்பொழுதே என் வரவழைத்துக் கொள்கின்றீர்! ஆகையால் இப்பெட்டியை எடுத்துக் கொண்டுபோய் எறிந்து விடச் செய்யுங்கள்" என்று கூறினாள். இவ்விதம் கூறியமனைவி யின் வார்த்தையைக்கேட்ட இராவணன் கோபந்தணிந்தான். தூதர்கள் விமானமேறி வேகமாய்ச் சென்று, காடு, மலை, வனம், வனாந்தரம் முதலியன கடந்து, மிதிலா பட்டணத்திற் கருகே உழவு செய்திருந்த பூமியைத் தோண்டி அதில் பெட்டியை வைத்துப் புதைத்துவிட்டு, லங்காபட்டணஞ் சென்று இராவ ணேசுவரனிடம் தெரிவித்தனர்.

அப்பூமியை விதேகமகாராஜன் சூரியக் கிரகண புண்ணிய காலத்தில் ஒரு வேதியருக்குத் தானஞ்செய்தார். அவ்வேதியர் அப்பூமியை உழுவதற்காக முகூர்த்தம்பார்த்தார். அநேகவருஷங் களாக நல்ல முகூர்த்தம் கிடைக்காமல், பிறகு பெரும்பயனைக்

கொடுக்கக் கூடிய ஒரு முகூர்த்தங்கிடைத்தது. அதில் விவசாயஞ் செய்வதற்காக ஒரு குடியானவனைக்கொண்டு அப் பூமியை அவர் உழுதார். அப்பொழுது கலப்பையின் நுனியில் அப்பெட்டி வெளிப்பட்டது. அக்குடியானவன் அப்பெட்டியை எடுத்துக்கொண்டு, தன் எஜமானனாகிய வேதியரிடஞ் சென்று, "வேதியரே! தாங்கள் பார்த்த முகூர்த்தம் மிகவும் மேலானது; இப்பொழுது மகா பாக்கியம் ஒன்று கிடைத்திருக்கின்றது. கலப் பையின் நுனியில் பூமியிலிருந்து கிடைத்த நிதி நிறைந்து அதிக கனமாயிருக்கும் இப்பெட்டியை மிக வருத்தத்துடன் சுமந்து கொண்டுவந்தேன். இதைப் பெற்றுக் கொள்ளும்" என்று அப் பெட்டியைக் கொடுத்தான். வேதியன் பெட்டியை வாங்கிக் கொண்டு, விதேகராஜனுடைய அரண்மனைக்குச் சென்று, மந் திரி, பிரதானி முதலியவர்கள் நிறைந்த சபையின் மத்தியில் வைத்து, அப்பெட்டி கிடைத்த வரலாற்றைத் தெரிவித்தான்.

விதேகராஜன் "வேதியரே! உமக்குத் தானங் கொடுத்த பூமியில் இருப்பதெதுவும் உம்மைச் சேர்ந்தவைகளேயாம். ஆகை யால் இப்பெட்டியை நீரே உம்முடைய கிரகத்திற்கு எடுத்துக் கொண்டு செல்லும்" என்று கூற, வேதியர் "அரசனே! பூமியை எனக்குத்தானஞ் செய்யுங்காலத்தில், இப்பெட்டி அப்பூமியிலி ருப்பது தெரியாமல், தானஞ் செய்து விட்டீர். ஆகையால் அதில் அகப்பட்ட நிதி நிறைந்த இப்பெட்டி உமக்குத்தான் சொந்தமா கும். எனக்குச் சம்பந்தமல்லாத பொருளை நான் பெற்றுக்கொண் டால், எனக்குப் பாவம் நேரிடுமாகையால், அந்தப் பாவத்தினின் றும் நான் நீங்கும் பொருட்டு நீங்கள் அப்பெட்டியைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று சொல்ல, அரசன் "நான் பெற்றுக்கொள்ள மாட்டேன்" என்று கூற, இருவருக்கும் விவாதம் நடந்தது. இப் பொழுது சபையார் அரசனைப்பார்த்து, "இப்பெட்டியைத்திறந்து இதற்குள்ளிருக்கும் வஸ்து இன்னதென்று அறிந்து கொண்ட தன் மேல் விவாதத்தைத் தீர்த்துக்கொள்ளலாம்" என்று கூறினர் கள். பின் அரசன் தூதர்களை வரவழைத்து, அப்பெட்டியைத் திறக்கும்படி கட்டளையிட, அவர்கள் திறந்தார்கள். அப்பெட்டி

யில் கோடி சூரியப்பிரகாசம் பொருந்திய ஒரு கன்னிகை யிருக்கக்கண்டு, அரசன் அதிக ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்தான். அதைக்கண்ட வேதியர் பெட்டியை அரசனிடம் ஒப்புவித்து விட்டு வீட்டுக்குச் சென்றார். அரசன் அப்பெண்ணைப் பெட்டியினின்றெடுத்துக் கொண்டு, அந்தப்புரத்துக்குப் போகும் பொழுது, தேவர்கள் வாத்தியங்களை முழக்கினர்கள்; புஷ்பங்களை வருஷித்தார்கள். கந்தருவர்கள் கானஞ்செய்தார்கள். அப்ஸரஸ்திரீகள் நர்த்தனஞ்செய்தார்கள். அப்பெண்ணைத்தான் பெற்றபெண்ணாகப் பாவித்துத் தன் புரோகிதரையும், வேதியர்களையும் வரவழைத்து, ஜாத கர்மம் முதலிய சுப கர்மங்களைச்செய்து, வேதியர்களுக்குப் பலவித தானங்களையும் அரசன் கொடுத்தான். இப்பெண் ஆதியில் மாதுளம் பழத்தினின்றும் வெளியானதால் மாதுளங்கியென்றும், சிலநாள் அக்னி குண்டத்தில் வாசஞ் செய்ததால் அக்னி கர்ப்பை யென்றும், இரத்தினரூபமா யிருந்ததால் இரத்தினவதி யென்றும், பூமியிலிருந்து வெளியானதால் பூபுத்திரி யென்றும், ஜனகமகாராஜாவால் வளர்க்கப்பட்டு வந்தமையால் ஜானகி யென்றும், பத்மாட்சவரசன் தவஞ்செய்து மாதுளம் பழத்தையடைந்து, அதிலிருந்து இப்பெண்ணை யடைந்ததனால் பத்மை யென்றும், கடைசியாகப் பூமிக்குள்ளிருந்து கலப்பையின் நுனியில் வெளிப்பட்டதால் ஸீதையென்றும் பலபேர்கள் ஏற்பட்டன.

தசரத மகாராஜனே! ஆகாயம் போல நீல நிறமான தேகத்தையுடைய உமது குமாரனாகிய இராமன், பத்மாட்சவரசன் ஆதிகாலத்தில் பிரதிக்ஞை செய்தபடி இப்பொழுது ஸீதையை மனைவியாக அடைந்தான். ஆகையால் தாங்கள் கேட்டதைத் தெரிவித்தேன். இந்நான்கு பெண்களையும் மருமக்களாக அடையத்தக்கவர் நீரேயாகிறீர்-என்று சதாநந்தர் கூறி முடித்தார். தசரத மகாராஜாவால் கலியாணத்திற்கு வரவழைக்கப்பட்ட மாமன்மார்களாகிய, கோசலேச்வரன், மகதேச்வரன், கேகயவரசன், மச்சினனாகிய யுதாஜித்து இவர்கள், சைன்னியங்களோடும், பந்துக்களோடும் மிதிலா பட்டணம் வர, ஜனகமகாராஜன் அவர்களுக்

குச்செய்ய வேண்டிய மரியாதைகளைச்செய்து அழைத்துப்பின்பு எல்லோருக்கும் ஆடையாபரணாதிகள் கொடுத்து, மரியாதை செய்து ஊர்வலத்துடன் அவர்களைப் பட்டணத்துக்குள் வரவழைத்தார். அப்பால் இராமர் முதலியவர்களை யானைகளின் மீதேற்றி ஊர்வலம் வர நிச்சயித்து, யானைகளை வரவழைத்த சமயத்தில் ஸ்ரீராமர் தசரதரை நமஸ்கரிக்க அவர் பலதரம் ஆலிங்கனம் செய்து மகிழ்ந்தார். பிறகு வஸிஷ்டர், விசுவாமித்திரர் கௌஸல்லியை முதலானதாய்மார்களையும் ஸ்ரீராமர் வணங்கினார். அப்பால் எல்லாரும் யானைகளின்மீது ஏறிக்கொண்டு ஸ்ரீராமர் முன்னும் மற்றவர்கள் பின்னுமாக, பாடகர்கள் பாடவும் வாத்தியங்கள் முழங்கவும் தாசிகள் நர்த்தனம் செய்யவும் பட்டணப்பிரவேசஞ் செய்தார். ஊர்வலத்தையும் இராமனையும் பார்ப்பதற்காகப் பட்டணத்து ஜனங்கள் உப்பரிகைகளின் மீதேறி யிருந்துக்கொண்டு அவர்மீது புஷ்பங்களை வருஷித்தார்கள். இவ்வித மகோற்சவத்துடன் தசரத மகாராஜன் தமக்கென்று மகா தோரணங்களால் அலங்கரித்துச் சகல பதார்த்தங்களும் வஸ்திரம் முதலிய பலவித வஸ்துக்களும் சேகரித்து வைத்திருக்கும், மனோகரமான விடுதிக்குச் சென்றார்.

பிறகு ஜனகமகாராஜன் தக்க சோதிடர்களை வரவழைத்து மங்களகரமான கலியாண நாளையும் லக்கினத்தையும் நிச்சயித்துக் கொண்டு, மந்திரிகளை அழைத்து, நகரை யலங்கரிக்கும்படி ஆக்ஞாபிக்க, மந்திரிகள் தோரணங்களாலும் பதாகைகளாலும் துவஜங்களாலும் மண்டபங்களை யலங்கரித்து வீதிகளில் சந்தனத் தண்ணீர் தெளித்து மகா தோரணங்கள் முதலியன கட்டி மங்கள வாத்தியங்கள் முழங்கும்படி செய்ய மிதிலா பட்டணம் மிகுந்த அழகுடன் விளங்கியது.

முகூர்த்ததினத்தின் விடியற்காலத்தில் சுபமுகூர்த்தத்தில் இராம லட்சுமண பரதசத்ருக்னர்களைக் கௌஸல்லியை முதலிய தாய்மார்கள் ஆசனங்களில் உட்காரவைத்து நீராஞ்சன முதலிய உபசாரங்கள் செய்து, சுகந்த தைலந்தேய்த்து நான்கு பக்கங்களி

னும் அலங்காரமான தீபப்பிரதிமைகள் ஜலம் நிறைந்த குடங்க ளைக் கைகளிலேந்திக்கொண்டு பிரகாசத்தைத்தரும் இடத்தினடு வில் மங்கள வாத்தியங்கள் முழங்க, மங்கள ஸ்நானஞ் செய்வித் தார்கள்; பிறகு கௌஸல்லியை முதலிய தாய்மார்களும் மங்கள ஸ்நானம் செய்தார்கள்; பிறகு இராமலட்சுமண பரத சத்ருக் னர்களை நல்ல வஸ்திரபாணுதிகளால் அலங்கரித்துத் தாங்களும் அலங்காரஞ் செய்துகொண்டார்கள். தசரத மகாராஜனும் அப்பி யங்கனஞ் செய்துகொண்டு மங்கள ஸ்நானஞ் செய்து அலங்கரித் துக் கொண்டார். வஸிஸ்டமுனிவர், தசரதரையும் இராமர் முத லிய நான்கு குமாரர்களையும் கௌஸல்லியை முதலிய பட்டமகிஷி களையும் வரவழைத்து மண்டபத்தின் நடுவில் திவ்ய ஆசனத் தில் முதலில் தசரதரை யுட்காரவைத்து அவருக்கு இடது புறத் தில் இராம லட்சுமண பரத சத்துருக்னர்களையும் அவர்களுக்குப் பின்புறத்தில் கௌஸல்யை முதலிய ஸ்திரீகளையும் உட்கார வைத்தனர். குங்குமம் முதலிய அலங்காரங்களினல் இராஜஸ்திரீ களும் இராமர் முதலிய நான்கு குமாரர்களும் அநேகம் வேதியர் களோடு கூடி வஸிஷ்டமுனிவரும் அச்சபையில் அலங்காரமாக விளங்கினர்கள். அப்போது வஸிஷ்ட முனிவர் தசரத மகாராஜ னைக்கொண்டு விக்கினேசுவர பூசைசெய்வித்து புண்ணியாகம் முத லிய மூவகைச் சடங்குகளையும் சாஸ்திரப்படி, நடத்தி தேவகப் பிரதிஷ்டையுஞ் செய்வித்து கிராமாசாரம் குலாசாரம் விருத் தாசாரம் தேசாசாரம் பிரமதாசாரம் முதலியவைகளையும் நடத்தி னர். பூர்ண கும்பங்களை எடுக்கச்செய்து மண்டப பூஜை முதலிய வைகளைச் செய்தார். கௌஸல்யை முதலிய பட்ட மகிஷி கள் பச்சை நிறம் சிவப்புநிறம் மஞ்சள் நிறமுள்ள புடவை களையும் சரிகைப் புடவைகளையும் தரித்துக் கொண்டு மண்டப அங்கணத்தில் விளங்கினர்கள். இப்பொழுது ஜனகமகாராஜன் அநேக வாத்தியங்களோடும் அரசர்களோடுங் கூடி இராமர் முதலியவர்களைக் கலியாண மண்டபத்திற்கு அழைத்துவரப் புறப் பட்டு, அவ்விடம் வந்து சரிகை வஸ்திரம் இரத்தினபாணங்கள் முதலியவைகளால் இராமர் முதலியவர்களைப் பூஜிக்க, அவைகளை

இராமர் முதலிய நால்வரும் தரித்துக்கொண்டு சந்தோஷ மடைந்தார்கள்.

பிறகு ஜனகர், இராமர் முதலான நால்வரையும் யானைகளின் மீது ஏற்றி வைத்துச் சில மாதர் பக்கங்களிலிருந்து வெண்சாமரம் வீசவும் சிலமாதர் பெண் யானைகளின் மீதேறிக்கொண்டு மங்களகாமான முத்துக்கள் கலந்த சோபனாட்சதைகளை வாரி இரைக்கவும் பலவித வாத்திய கோஷங்கள் முழங்கவும், முன்னே தாசிகள் நர்த்தனஞ் செய்யவும் ஊர்வலமாக அழைத்து வந்தார். அப்பொழுது பட்டணத்திலுள்ள மாதர்கள் தத்தம் வீடுகளின் உப்பரிகைகளின் மீதேறிப் பலகணிகளின் வழியாக வெண்பொரிகளை இரைத்துக் கண்குளிரப் பார்த்துச் சந்தோஷித்தார்கள். வேலைக்காரர்கள் அழகிய மண் தொட்டிகளில் வைக்கப்பட்டிருக்கும் பூச் செடிகளைத் தலைமீது தூக்கிக்கொண்டு வரிசை வரிசையாக வந்தார்கள். பலவிதமான நெட்டிகளாலும், தக்கைகளாலும், செய்த பூச்செடிகள் கொடிகள் மரங்கள் முதலியவைகளைப் பலர் எடுத்து வந்தனர். கும்பங்களையும் கொடிகளையும் பலர் எடுத்துக்கொண்டு வந்தனர். புருசு மத்தாப்பு ஆகாயபாணம் நக்ஷத்திரபாணம், கம்பபாணம், சுழல்பாணம், சந்திரன்போற் பிரகாசிக்கும் பாணம் முதலிய பலவித பாணவேடிக்கைகள் நடந்தன. வீதிகளெல்லாம் சிறு சிறு தீபங்களாலும், விருக்ஷம் போன்ற தீபங்களாலும், சந்திரன்போன்ற தீபங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. சூத்திரங்களால் அமைக்கப்பட்ட சிங்கம், புலி முதலிய மிருகங்களும், மயில், சக்கரவாகம் முதலிய பறவைகளும், வேடிக்கைகளைச் செய்துகொண்டு வந்தன. தேவர்கள் தமது விமானங்களில் ஏறிக்கொண்டு, ஆகாயத்தில் வந்து சந்தோஷமாக ஊர்வலத்தைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள். இவ்விதமாக இராமர் முதலிய நால்வரையும் வெகு ஆடம்பரத்துடன் ஊர்வலமாக அரண்மனை வாயிலுக்குக்கொண்டு வந்து, யானைகளின் மீதிருந்திறங்கி, அலங்காரஞ் செய்யப்பட்டிருந்த ஒரு மண்டபத்தின் கண் எழுந்தருளச் செய்தார்.

தசரதமகாராஜாவினுடைய குருவாகிய வஸிஷ்டரும், ஜனக மகாராஜாவினுடைய குருவாகிய சதாநந்தரும் வான்மீகி முதலிய முனிகணங்களுடன் கூடி மனங்களி கூர்ந்து, மதுபர்க்க விதிப்படி கிரமமாக ஆசனம் முதலியவைகளை அவர்களுக்குக்கொடுத்து உபசரித்தார்கள். வஸிஷ்டர் சொற்படி அம்மண்டபத்திலுள்ள மாதர்களுக்கு வேண்டிய மரியாதைகளைத் தசரதர் செய்தார். பின் சுப லக்கினத்தில், இராம லட்சுமண, பரத சத்துருக்னர்களை, ஸீதை, ஊர்மிளை, மாண்டவி, சுதகீர்த்தி என்கிற கன்னிகைகளுடன் முறையே பட்டு வஸ்திரங்களால் மூடிக் கலியாண வேதிகைகளின் மீது உட்கார வைத்தார்கள். அக்கலியாண மண்டபத்தில் நிறைந்திருக்கும், புருஷர்களும், ஸ்திரீகளும் மங்கள வாத்தியங்களைக் கேட்டுக்கொண்டு, வேறு வார்த்தைகளொன்றும் பேசாமல், புஷ்பங்களாலும் சோபனுக்ஷதைகளாலும் நான்கு தம்பதிகளையும் ஆசிர்வதித்து, "பார்வதிதேவியின் திருக்குமாரர்களாகிய கணபதியும், சுப்பிரமண்ய சுவாமியும் மங்களத்தைத் தரும் சங்கரும், சூரிய சந்திரர்களும், ஆதிசேஷன் முதலிய நாகங்களும், சிங்கம், முதலிய மிருகங்களும், கங்கை முதலிய புண்ணிய நதிகளும், மானஸம் முதலிய சரோவரங்களும் புண்ணிய தீர்த்தங்களும், சமுத்திரங்களும், நதங்களும் இந்திரன் முதலிய தேவர்களும் பிர்மதேவரும் தம்பதிகளுக்கு மங்களத்தை யுண்டாக்கவேண்டும்" என்று வாழ்த்தினர்கள். காசி க்ஷேத்திர பதியாகிய பரமசிவத்தின் ஸ்மரணஞ் செய்யும் சமயமே உத்தம லக்கினமென்றும் சுதினமென்றும், நக்ஷத்திர பலமுள்ளதென்றும், தெய்வ பலந்தருவதென்றும் கூறினர்கள். வஸிஷ்ட முனிவரும், சதாநந்த முனிவரும் தம்பதிகளை மூடியிருந்த பட்டுவஸ்திரங்களை நீக்கிப் பிரணவ பூர்வகமாக இவர்களுக்குப் புண்ணிய முண்டாக வேண்டுமென்று அநுக்கிரகஞ் செய்து, அதே லக்கினத்தில் விதிப்படி, அந்நான்கு குமாரர்களைக்கொண்டு ஸீதை முதலிய நான்கு கன்னிகைகளுக்கும் பலவிதமான மங்களவாத்தியங்கள் முழங்க, பாணிக்கிரகண மகோற்சவம் செய்வித்து லாஜஹோமம் முதலிய ஹோம காரியங்களையும் செய்வித்தார்கள்.

அச்சமயத்தில் தாசிகள் நர்த்தனஞ் செய்தார்கள். வந்தி மாதர்கள் துதித்தார்கள். நடர்கள் மங்கள கீதம் பாடினார்கள். தசரதமகாராஜனும், ஜனகரும் வேதியர்களுக்குப் பலவிததானஞ் செய்தார்கள். இராமர் முதலிய நான்கு தன்பதிமார்களையும் பட்டுப் பாய்களின் மீது உட்காரவைத்துச்சந்தனம், தாம்பூலம் முதலிய சோப திரவியங்களால் உபசரித்து, ஆலாத்தி யெடுத்துக் கோஸல்வியை முதலிய மாதர்களுடன் போஜன சாலைக்கு அழைத்துச் சென்றார்கள்.

பார்வதீ ! போஜன சாலையில் இராமர் முதலிய நால்வரும் ஆநந்தமடைந்திருக்கும் அவர்கள் பத்தினிகளோடு உன்னையும் என்னையும் பூஜித்து மாவிலைகளைக் கொண்டு ஜலம் தெளித்துச்சுத்தம் செய்து அநேக சுமங்கிலிகள் சூழ்ந்திருக்க, ஸந்தோஷத்துடன் போஜனம் செய்தார்கள். தசரதரும் முனிவர்கள், ராஜசிரேஷ்டர்கள், நகரவாசிகள், தேசவாசிகள் இவர்களோடு ஜனகருடைய கிரகம் சென்று சந்தோஷமாகப் போஜனம் செய்தார். கௌஸல்வியை முதலிய தேவிமார்களும் தங்கள் இஷ்ட மித்திரர்களுடன் ஜனகர் கிரகத்திற்குச் சென்றார்கள். அங்கே சுமேதை யென்பவள் பலமுறை வணங்கி அவர்கட்கு வேண்டிய உபசாரம் செய்தாள். அங்கு அவர்கள் உத்தமமான போஜனஞ் செய்தார்கள். இவ்விதமாக ஜனகர், தசரதர் முதலிய யாவருக்கும் பரமானந்த முண்டாகும்படி உபசரித்தார். பிறகு ஸ்ரீராமர் முதலிய நால்வரும் தத்தம் மனைவிகளுடன் பெரியோர்கள் சொற்படி கௌஸல்வியை முதலிய தங்கள் தாய்மார்களுடைய பாதபங்கஜங்களைச் சிரமேற் கொண்டு மனமகிழ்ச்சியோடு நமஸ்கரித்தார்கள். இப்படி வணங்கியவுடன் கௌஸல்வியை முதலிய தேவிகள் மூவரும் தம்பதிகளை ஆசனத்தில் உட்காரவைத்து மருமக்களுடைய பாதங்களுக்குக் குங்குமாதிகளால் நலங்கிட்டு, அவர்களை அவரவர் நாயகனது மடிமீது வீற்றிருக்கச் செய்து, பார்த்து ஆநந்தமடைந்தார்கள். திவ்யபீதாம்பரதாரியாய், கருணை கடாட்ச முடையவராய், ஜகமுழுதும் தானேயான அழகிய திருமேனிகொண்ட திரிலோக்ய சூடாமணியாய் விளங்கும் ஸ்ரீராமபிரான், ஜகதீசுவரியாகிய லக்ஷ்மிதேவியின் அம்சமான ஸீதா

பிராட்டியை இவ்வாறு மணந்து மூவுலகத்திலும் ஒப்பிடற்கரிய பெருமையை யடைந்தார். பிறகு நான்காம்நாள் இரவு மூங்கிலி னாற் செய்த பாத்திரங்களில் தீபங்கள்வைத்து தம்பதிகளுக்கு நீராஞ்சனம் செய்தார்கள். ஜனக மகாராஜன் தம்பதிகளுக்கு வெகுமதியாக கணக்கற்ற வேலையாட்கள், தாதிமார், லட்சக் கணக்கான ரதகஜதுரகபதாதிகள் யாவுங்கொடுத்து மகிழ்ந்தார். இந்த வெகுமதிகளைப் பெற்றுக்கொண்டு தசரதர், ஸ்ரீராமர் முத லானவர்களோடு பலவித வாத்திய கோஷங்கள் முழங்க யானை யின்மீதேறித் தங்கள் விடுதி மண்டபத்திற்குப் போய், அந்த மிதுலா பட்டணத்திலேயே ஜனக மகாராஜனுடைய வேண்டு கோளுக்கிணங்கி ஒரு மாதகாலம் வசித்திருந்து, பின் சேனை கள் புடைசூழ வாத்தியங்கள் முழங்க, ஸ்ரீராமர் முதலானவர்க ளோடும் மருமக்கள் மார்களுடனும், அயோத்திக்குப் புறப்பட் டார். இப்பொழுது ஸீதை முதலானவர்கள் தங்கள் தாய்தந்தை யர்களைப் பிரிவதால் மனவருத்தங் கொண்டார்கள். அவர்களைச் சுமேதை யென்பவள் ஆலிங்கனஞ் செய்து தேற்றிச் சந்தோஷப் படுத்தி யனுப்பினாள். தசரத மகாராஜன் தம்மை வழி யனுப்பக் கூட வந்த ஜனகமகாராஜனை அவருடைய பட்டணத்திற்குத் திரும்பும்படி விடைகொடுக்க, அவர் மனங் கலங்கிக் கண்களி னின்று நீர்ததும்ப நின்று சிறிது முகம் வாட்டமுற்றுத் தசரத ரைப் பார்த்து, "இதுவரையில் ஸீதை முதலானவர்களை மிகவும் செல்வமாக வளர்த்துவந்தேன்; இனிமேல் தமது கருணையை அவர்கள் மேல் வைத்து, ஆதரிக்க வேண்டுகிறேன்" என்று உப சார வார்த்தை கூறி அவரிடம் விடை பெற்றுத் திரும்பினார்.

தசரதர் தமது மக்கள், மனைவிகள் மருமகள் இவர்களுடன் சேனைகள் புடைசூழ, ஸ்ரீராமபிரானை முன்னிட்டுக்கொண்டு மிதுலா நகரத்தை விட்டு மூன்றுகாத தூரம் வந்ததும், அநேக அபசகுனங்களுண்டாயின. இதைக் கண்டதும் தசரதர் மனதிற் கிலேச முற்று அருகில் வீற்றிருக்கும் வஸிஷ்ட மஹா முனிவரைப் பார்த்து வணங்கி "சுவாமி! கெட்ட சகுனங்கள் உண்டாகின் றனவே! இப்படி உண்டாவதற்குக் காரணம் யாது?" – என்று வினவ, வஸிஷ்டர் "தசரத! இந்தக்கெட்ட சகுனங்கள் இனிவரப் போகின்ற தீங்கைத் தெரிவிக்கின்றன. ஆயினும், இதோ! மான்

முதலியவைகள் உம்மைச் சுற்றிப் பிரதட்சிணமாகப் போகின்றன வல்லவா? இதனால் அத்தீங்கிலிருந்து க்ஷேமமுண்டாகுமென ஊகிக்கவேண்டும்'' என்று கூறினர். உடனே பிரசண்டமாருதம் போன்ற ஒரு பெருங் காற்றானது ஆகாயமும் பூமியும் ஒன்றாகு மாறு மண்களை வாரி யிறைத்துக்கொண்டு வீசியது. இதனால் தச ரதர் முதலிய எல்லோரும் தங்கள் கண், காது, மூக்கு முதலிய வைகளில் மண்படிந்து தொந்தரவடைந்து பின் இதென்ன விபத் தோ தெரியவில்லையே என மலைத்தனர். உடனே திடீரென்று தசர தர் முன் கார்த்தவீரியார்ச்சுனனைக்கொன்றவரும் மதங்கொண்ட அரசர்கள் யாவரையும் இருபத்தொரு முறை அழித்தவரும் அச காய சூரருமாவ பரசுராமர், மகாதேஜஸோடு கூடிய நீலமேகத் தை யொத்த நிறமுடையவராய் ஜடா மண்டலதாரியாய் ஒரு கையில் பரசும், ஒரு கையில் தநுஸுங் கொண்டு பிரமிக்கத்தக்க உயரமான திருவுருவத்தோடு கண்களில் தீப்பொறி பறக்க, முகத் தில் கோபாக்கினி ஜொலிக்க, எமதர்ம ராஜனெனத் தோன்றி நின்றார். அவரைப் பார்த்ததும் தசரதர் பயந்து நடுக்கங்கொண்டு அவருக்குச் செய்யவேண்டிய அர்க்கி பாத்திய ஆசமனீயாதி உப சாரங்களை மறந்து, "என்னை ரக்ஷிக்கவேண்டும் ரக்ஷிக்கவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டே நீண்ட மரம்போலச் சாய்ந்து தரை யில் விழுந்து நமஸ்கரித்தெழுந்து "என் மக்களுக்குப் பிராண பிச்சை தரவேண்டும்'' என்று அஞ்சலியஸ்தராய் நின்று வேண் டினர். இப்படிப்பயந்து வணங்கி நின்ற தசரதரை இவர்பொருட் படுத்தாமல், பஞ்சேந்திரியங்களுந் துடிக்கக்கோபங்கொண்டு இரா மரிடம் சென்று அவரைப்பார்த்து "க்ஷத்திரியர்களுக்குள் அத மனே! இராமனென எனது நாமத்தையே நீயும் புனைந்து, கர்வ மடைந்திருக்கின்றாய்! நீ உத்தம அரசனாயின் என்னோடு இப்பொ ழுதே மல்யுத்தம் செய்யவா'' என்று கூறி, "வலுவற்ற பழைய தநுஸை முறித்தோமென்று கர்வங்கொள்ளாதே; இதோ என் கையிலிருக்கும் விஷ்ணு தநுஸை நீ நாணேற்றி, உன் புஜபலத் தைக் காட்டு பார்ப்போம். பிறகு யுத்தஞ்செய்வோம்; நீ இந்த வில்லை நாணேற்றாவிடில், யான் க்ஷத்திரியாந்தகனானதால் இந்த

க்ஷணத்தில் உங்களெல்லாரையுங் கொன்று விடுவேன்'' என்றார்; இவ்வார்த்தைகளைச் செவியுற்றதும் ஸ்ரீராமர் பரசுராமரைப் பார்த்து, தேவர்கள், பசுக்கள், ஸ்திரீகள், பிராமணர் இவர்களை எதிர்த்து, ஆயுதம் எடுதுவது ரகுவம்சத்தவராகிய எங்களுக்கு வழக்கமல்ல; நாங்கள் பூஜிக்கத்தக்கவராகிய பிராமணோத்தமரே! உம்முடைய பாதார விந்தத்தில் எங்களெல்லோருடைய பிராணன்களையும் அர்ப்பணம் செய்துவிட்டோம். இஷ்டப்படி செய்யலாம், நாங்கள் வில் எடுக்கமாட்டோம்'' என்று சொல்ல பரசுராமருக்கு மிகுந்த கோபம் உண்டாய்விட்டது. அந்தக் கோபத்தால் பூமி நடுங்கிற்று. சப்தசாகரங்களும் கலங்கின. எங்கும் இருள் சூழ்ந்துவிட்டது. இதைக் கண்ட தசரதராமரும் மிகக் கோபங்கொண்டு பரசுராமரை விழித்துப் பார்த்து, அவர்கையிலிருக்கும் தநுஸைப் பிடுங்கி நாணேற்றி, அம்புறாத் தூணியினின்றும் ஒரு அம்பை எடுத்து அதை வில்லிற் பூட்டி, இழுத்து "பிராமணோத்தமரே! இராமன் தொடுத்த அம்பு வீணாய்ப்போகாதாதலால், தமது பாதார விந்தத்தையோ அல்லது பரலோகத்தையோ இதற்கு இலக்காகக் காண்பியுங்கள்'' என்று ஆக்ஞாபித்தார்.

இப்படிச் சொல்லவே பரசுராமர் முக வாட்டமுற்றுத் தமது பூர்வவிர்த்தாந்தங்களை நினைத்து, ஸ்ரீராமரைப்பார்த்து, மகா வீரராகிய இராமா! உம்மை ஈசுவரனென்றும் அநாதி புருஷராகிய விஷ்ணுவென்றும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமாகிய மூன்றுக்கும் காரணமானவரென்றும் யான் அறிவேன்; கார்த்த வீரியார்ச்சுனனனைக் கொல்வதற்காகவும் பூபாரத்தைக் குறைப்பதற்காகவும் அவதரித்த ஸ்ரீமந் நாராயணனுடைய அம்சமாகிய யான் அந்த நாராயணனைப் பிரத்தியக்ஷமாய் அடைய, எனது வாலிபத்திலே கௌதம நதியில் நாக தீர்த்தத்தில் அருந்தவம் புரிந்தேன். எனது அருந்தவத்திற்கு மகிழ்ந்து நாராயண மூர்த்தி, சங்கு சக்கர கதாதாரராய் முகமலர்ச்சியோடு என்முன் பிரஸன்னமாகி, "அந்தணா! உனது தவம் பலித்தது, நீ எனது அம்சமாகையால் உனது தந்தையைக் கொன்ற கார்த்த வீரிய கூட்டத்தை அழித்துப் பூமி முழுவதும் உனது சுவாதீனமாக்

க்கொண்டு, பின் இப் பூமியைக் கசியபருக்குத் தானஞ் செய்து, நீ ஒழிவைப் பெறுவாய்; வரும் திரேதாயுகத்தில் நான் தசரத ராமனாகப் பூமியில் அவதரிப்பேன். அப்பொழுது நீ என்னைப் பக்தியோடு பார்ப்பாய். உன்னிடத்தில் வைத்திருக்கும் எனது சக்தியை அச்சமயம் மீண்டும் யான் எடுத்துக்கொள்வேன். பிறகு நீ தவஞ்செய்துகொண்டு பிரமனுடைய ஆயுட்காலத்தில் ஒருநாளிருப்பாய்''—என்று அநுக்கிரகித்து, அந்தர்த்தான மாயினர். ஆகையால் அவருடைய கட்டளைப்படி யான் நடத்தி விட்டேன். பிர்மதேவனுடைய பிரார்த்தனையினால் அவதரித்த, விஷ்ணுவே நீர் ஆகையால், முன் என்னிடத்தில் வைத்திருந்த உமது சக்தியை நீர் பெற்றுக்கொண்டது யுக்தமே, இப்பொழுது தான் என் ஜன்மம் சபலமடைந்தது. என்னிலும் நீரே பேர்பெற்றவர், நீரே உலக நாயகர், நீரே பக்த பராதீனர், நீரே பரமகாருண்ய மூர்த்தி உமக்கு அநேக வந்தனம் தருகின்றேன்! இராமசந்திரா! புண்ணியலோகத்தை யடைவதன் பொருட்டு யான் இயற்றியதவ முழுதும் உமது பாணத்திற்கே அர்ப்பணஞ் செய்து விட்டேன்'' என்று கூறினர். பிறகு ஸ்ரீராமர் பரசுராமருடைய சத்கர்மங்கள் யாவையும் தமது பாணத்திற்கு இரையாகக்கொண்டு கருணை கூர்ந்து முகமலர்ச்சி யடைந்து உமக்கு வேண்டிய வரங்களைக் கேளுமென்று பரசுராமரைப் பார்த்துக் கூறினர். பரசுராமர் மனமுவந்து "இராமா! எனது பக்தியானது உமது பாதத்திலும் எனது நேசமானது உமது பாத பக்தர்களிடத்திலும் சாஸ்வதமாக இருக்க வேண்டுகிறேன்" என்று பிரார்த்தித்தார். ஸ்ரீராமர் அவ்விதமே ஆகுகவென அநுக்கிரகிக்க, அவரை வலம் வந்து நமஸ்காரஞ் செய்து அவரிடம் மரியாதை பெற்றுக்கொண்டு அநுமதி கொடுத்த பின் மகேந்திர பர்வதஞ் சென்றார். ஏ பார்வதி! சமஸ்த தேவர்களையும் ஜயித்துக் கர்வங்கொண்டிருந்த இராவணனைக் கட்டிய ஆயிரங் கைகளுடைய கார்த்த வீரியனைப் போரில் ஒரு நிமிஷத்தில் வென்ற பரசுராமனுடைய கைவில்லை வாங்கி நாணேற்றி அதில் ஒரு அம்பு தொடுத்து அவரை ஜெயித்த ஸ்ரீராமனுடைய சாமர்த்தியத்தை யான் என்னென்று சொல்

வேன்! பிறகு தசாதர் இந்தப் பெரும் ஆபத்திற்குத் தப்பிப் பிழைத்த இராமனை, இறந்தவன் மீண்டும் உயிர் பெற்றதுபோலப் பாவித்துக் கட்டித் தழுவி மனக் கலக்க மொழிந்து, கண்களி னின்று ஆநந்த பாஷ்பம் சொரிய சந்தோஷ மடைந்து அவ்விட மிருந்து அயோத்திக்குப் புறப்பட்டார்.

தசாதர் முதலானவர்கள் அயோத்தியாபுரிக்குச் சமீபமாய் வந்ததும், அதை யறிந்த தசாதருடைய மந்திரி சுமந்த்ரான், அயோத்தியைக் கொடிகளாலும் தோரணங்களாலும் புஷ்பங்க ளாலும் அலங்கரிக்கும்படி செய்து, தான் பட்டத்து யானைகளுட னும் வாத்திய கோஷத்துடனும் புறப்பட்டு அவர்களை எதிர் கொண்டழைக்கச் சென்றான். தசாதர் தமது மந்திரி சுமந்த்ரான் அலங்கரித்துக் கொண்டுவந்த பட்டத்து யானைகளில் இராமர் முதலிய நால்வரையும் அவர்கள் பத்தினிகளுடன் ஏற்றி வைத் துக்கொண்டு, மங்கள வாத்தியங்கள் முழங்கவும் வந்தி மாகதர் கள் துதிக்கவும் பாடகர்கள் பாடவும் பட்டணப் பிரவேசஞ் செய்து ஊர்வலம் வந்து, தமது அரண்மனைக்குச் சென்று அரண் மனையில் லக்ஷ்மிதேவிக்குப் பூசை செய்வித்து. வேதியர்களுக்குப் பலவிதமான தானங்கள்செய்து மகிழ்ந்தார். அப்பொழுது அவ் விடம் வந்திருந்த தசாத மகாராஜனுடைய மித்திரர்களாகிய அர சர்கள் வஸ்திராபரணங்களைத் தசாதர், இராமர் முதலிய நால்வ ருக்குங் கொடுத்து, மரியாதை செய்தார்கள். அவர்கள் மரியாதை களைத் தசாதர் மனமுவந்து ஏற்றுக்கொண்டு. பின் அவரவர்களுக் குத் தக்கபடி பதில் மரியாதைகளைத் தாமும் செய்தார். அவ் வரவர்கள் அந்த மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு தங்கள் தங் கள் பட்டணங்களுக்குச் சென்றார்கள். தசாதர் தமது மைத்துன னாகிய யுதாஜித்தை மட்டும் அனுப்பாமல் நிறுத்திக்கொண்டார். பின் ஸ்ரீராமர் முதலிய நால்வரும் அவரவர் மனைவிமார்களுடன் சுகமாக வாழ்ந்துவந்தார்கள்.

இவ்வித்மாகப் பரமசிவன் பார்வதிதேவிக்கு ஸ்ரீராமருடைய ஜனன காலமுதல் விவாகம் வரையில் கூறியருளியதும், பார்வதி தேவியார் தமது நாயகனைப்பார்த்துப் "பிராணேசா! பரசுராமர் மகாவிஷ்ணுவினுடைய அம்சமென்றீர், அதுபோல் ராகவரும் அந்த மகா விஷ்ணுவினுடைய சித்அம்சந்தானோ என்பதை விளக்கி என் சங்கையைத் தீர்த்தருளும்" என்று கேட்டார். பரமசிவன் மனமுவந்து பார்வதி! விஷ்ணுவினது அவதாரங்களில் எட்டு அவதாரங்கள் அவருடைய சில அம்சங்களேயாம். மற்ற இரண்டு அவதாரங்களாகிய இராமகிருஷ்ண அவதாரங்களே பூர்ணாவதாரமாம். ஆகையால் இவ்விரண்டு அவதாரங்களே அவைகள் எல்லாவற்றிலும் மேன்மையானவை. அந்த இராம கிருஷ்ணர்களுள் இராமரே ஸத்தியஸந்தரும் ஜிதேந்திரியருமானதால், அவரே அவ்விருவருள் மேலானவரென் றறிவாய்! மற்ற யாவரும் அவருக்கு ஒப்பாகார். கிருஷ்ணன் கறுத்த நிறமுள்ளவர், ஸ்ரீராமர் ருக்மநிறமுள்ளவர். பார்வதி! இந்தச் சருக்கத்தைக் கேட்டவர்கள் சர்வமங்களங்களையும் பெறுவார்கள்.

3-வது சருக்கம் முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

### பரமசிவன் கூறுகிறார்.

ஸ்ரீராமர் அயோத்தியில் தசரதருக்குவேண்டிய பணிவிடை செய்துகொண்டு ஸீதாதேவியுடன் பலவிதமான போகங்களை அனுபவித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்து வரும் நாளில், ஜனக மகாராஜன் சாருதுவில் ஐப்பசி மாதத்தில் வரும் தீபாவளி மகோற்சவத்திற்கு தசரதமகாராஜாவை யழைத்து வருவதற் காகத் தமது மந்திரிகளை யனுப்பினர். அவர்கள் அயோத்தியா பட்டணம் சென்று தசரதரைக் கண்டார். தசரதர் அவர்களுக் குத் தக்க மரியாதை செய்து, "நீங்கள் வந்த காரணம் என்ன" வென்று கேட்க, அதற்கு அவர்கள் "வருந் தீபாவளி உற்சவத் திற்குத் தங்கள் மித்திரராகிய ஜனகர் தங்களைத்தங்கள் குடும்ப சகிதமாயும் இஷ்டமித்திர பந்துஜனங்களுடனும் அழைத்துவரச் சொன்னர்" என்றனர். தசரதர் தூதர்களை வரவழைத்து "நாம் தீபாவளி உற்சவத்திற்கு மிதுலா பட்டணம் போகிறோம் என் பதை நமது பட்டணத்துள்ள ஜனங்களுக்கும் தேசமன்னர்களுக் கும் தெரிவித்து அவர்களும் நம்மோடு புறப்பட வேண்டுமென் பதையுந் தெரிவியுங்கள் என்று கட்டளையிட்டார்.

பிறகு ஒரு நல்லமுகூர்த்தத்தில் தசரதர் ரதகஜ துரகபதாதி களுடன் தமது நகர வாசிகளும் தேசமன்னர்களும் புடைசூழ யானையின் மீதேறி மிதுலைக்குப் பிரயாணப்பட்டார். அவருக்குப் பின்னே இராமலக்ஷ்மண பரத சத்துருக்னர்களும் அலங்கரித் துக்கொண்டு யானைகளின் மீதேறிப் பிரயாணப்பட்டார்கள். இவர் களுக்குப் பின்னல் கௌஸல்லியை முதலிய பட்ட மஹிஷிகளும் ஸீதை முதலிய மருமக்களும் திவ்விய அலங்காரஞ்செய்த பெண் யானைகளின் மீதேறிக்கொண்டு தாதிகள் புடைசூழப் புறப்பட் டார்கள். இவர்களெல்லோரையும் அழைத்துக்கொண்டு தசரதர் மிதுலா பட்டணத்துக்குச் சமீபம் வர அதையறிந்த ஜனகர் தமது பட்டணத்தாருடனும் வாத்திய கோஷத்துடனும் தசர தரை எதிர்கொண்டுசென்று வரவேற்றுப் பட்டணப் பிரவேச மாக அழைத்துச் சென்றனர். அப்போது, தெருக்களில் தாசி

கள் ந்ர்த்தனஞ் செய்தார்கள். பாடகர் பாடிப் புகழ்ந்தார்கள். பட்டணத்து மாதர்கள் தத்தம் வீட்டு மேல் மாடிகளிலிருந்து, புஷ்பமாரி பொழிந்தார்கள். இவ்வித கோலத்துடன் ஜனகர் தசரதர் முதலானவர்களைத் தமது நகரத்துக்குள் அழைத்து வந்து அவர்களுக்கென்று திட்டப்படுத்திச் சகல வஸ்துக்களும் நிறைத்து வைக்கப்பட்டிருக்கும் மாளிகையில் அவர்களை எழுந் தருளச்செய்து யாவருக்கும் ஸந்தோஷத்துடன் திவ்யபோஜனம் செய்வித்து, வஸ்திராபரணங்க ளளித்துரத்னதீபங்களால், நீராஞ் சனம் செய்து உபசரித்தார். பிறகு அன்றிரவு தசரதர் முதலிய யாவர்க்கும் மங்கள ஸ்நானமும் விருந்துஞ் செய்வித்து, இராமர் முதலிய மருகர்களுக்கு இரதகஜதுரகபதாதிகளையும் வெகுமதி யாகக்கொடுத்து, எல்லாரையும் ஸந்தோஷப்படுத்தினர். இவ்வித மாகவே கௌஸல்யாதி தேவிமார்களுக்கும் ஸீதைமுதலிய தமது பெண்களுக்கும் அயோத்தியிலிருந்து வந்திருக்கும் மற்றவர் களுக்கும் வஸ்திராபரணாதிகள் அளித்துச் சந்தோஷப்படுத் தினர். ஆதிகாலத்தில் மகாபலி இராஜ்யத்தில் கொண்டாடின உலகத்துக்கு ஆநந்தகரமான இந்தத் தீபாவளி மகோற்சவத்தை பட்டணத்திலுள்ள ஒவ்வொருவரும் அவரவர் வீட்டில் மங்களகர மாக அனுஷ்டித்து மிதிலையை மகாபலியின் ராஜ்யத்திற்கொப்பா கச் செய்தார்கள்.

இந்த மகோற்சவமுடிந்ததும் தசரதர் தமது சேனைகளுட னும் மித்திரர்கள் இராமர் முதலிய எல்லோருடனும் மிதிலையி லிருந்து புறப்பட்டு வரும் வழியில், முன் ஸீதையினுடைய சுயம் வரத்தில் அவமானமடைந்த அரசர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து, சைன்னியங்களுடன் புறப்பட்டுவந்து, தசரதரை எதிர்த்தார்கள். இதைக் கண்டதும் தசரதர் தமது மந்திரிமார்களிடம் கவலை கொண்டு யோசிக்க, அப்பொழுது ஸ்ரீராமர் தமது தந்தை கவலை கொண்டு வருத்தப்படுகிறார் என்பதை யறிந்து, அதிசீக்கிரத்தில் லக்ஷ்மணருடன் அவரிடஞ்சென்று, அவரைவணங்கி "பிதாவே! நானிருக்கும்போது உமக்கேன் மனக்கவலை? நிமிஷத்தில் இவர் கள் யாவரையும் அதமாக்கிவிடுகின்றேன். என் தைரியத்தை நீர்

பாரும்" என்றுசொன்னர். இப்படிச் சொன்ன ஸ்ரீராமரைத் தசரதர் மகிழ்ச்சியோடு ஆலிங்கனஞ்செய்து கொண்டு "அப்பா! நீ ஆறு வயது குழந்தையல்லவா? இவர்களுடன் நீ யுத்தம் செய்ய விரும்புவது தகுமோ? இக்காட்டில் துஷ்டர்களாகிய அரசர்கள் என்னை எதிர்த்திருக்கிருர்கள். ஆகையால் நானே அவர்களோடு யுத்தம் செய்கிறேன். நீ சேனை முதலியவைகளைக் காத்துக்கொண்டிரு" என்று சொன்னர். இதைக் கேட்டதும் இராமர் தந்தையைப்பார்த்து, "நானே யுத்தம் செய்கிறேன். அப்பொழுது என் சக்தி குறைந்ததாக உமக்குத் தோன்றுமாயின் நீர் வந்து உதவிசெய்யலாம். அதுவரையில் நீர் இவ்விடத்திலேயே என் சொற்படி உம்முடைய சேனைகளையும் குடும்பத்தையும் பாதுகாத்துக் கொண்டிரும்" என்று சொல்லித் தமது தந்தையை வணங்கி, வில்லை இழுத்துக் கட்டிக்கொண்டு இரதமேறி யுத்தத்திற்குப் புறப்பட்டார். இதைப்பார்த்து லட்சுமணனும் அவனைப்பார்த்து பரதனும் அவனைப்பார்த்து சத்ருக்னனும் அவரவர் ரதமேறி யுத்தஞ் செய்யப் புறப்பட்டார்கள்.

இவர்கள் புறப்பட்டுப்போய் எதிரிகளைச் சந்தித்த உடனே ஸ்ரீராமர் அவர்களை எதிர்க்கத் தமது சைன்னியங்களில் பதினயிரக்கணக்காக முன் செலுத்தினர். இவர்களைப்பார்த்த எதிரிகள், "இதோ இராமன் தன் தந்தையினுடைய இரதத்திலேறி வந்துவிட்டான், இதோபெரிய உயர்ந்தமரமொன்று கிளைகளோடு தெரிகிறதே, அதுதான் தசரதனுடைய ரதத்தின் பேரிலிருக்கும் கோவிதாரத்துவஜம் அவ்விரதத்தில் தசரதருடைய உத்தரவுப்படி அநேக ஆயுதங்கள் நிறைந்திருக்கின்றன பாருங்கள்; அந்த உயர்ந்ததுவஜத்தில் கொடிகள் அநேகம் பறக்கின்றன பாருங்கள்" என்று இவ்விதம் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு யுத்தத்திற்கு ஆரம்பித்தனர். பின்னர் இருவர் சைன்னியங்களும் அஸ்திரம் சஸ்திரம் பிண்டிபாலம் சதக்னி முதலிய ஆயுதங்களைக்கொண்டு அகோரமான யுத்தஞ்செய்ய அரசர்கள் யாவரும் ஸ்ரீராமரை எதிர்த்து ஆகாசமெங்கும் பரவச்சரமாரி பொழிந்தார்கள். அதைக் கண்டதும் லட்சுமண பரத சத்ருக்னர்கள் மூவரும் இராமரிடம் அதிவேகமாக வந்து அவருடன்சேர்ந்தனர். பின் இருதிறத்தாரும் ஸ்ரீ சுப்ரமண்யருக்கும் தாரகனுக்கும் நடந்த அகோர

யுத்தம் போல் யுத்தம் செய்தார்கள். பிறகு எதிரிகள் யாவரும் பரதனுடன் எதிர்த்து அவனைச் சஸ்திரங்களால் அடித்து மூர்ச்சையடையச்செய்ய அவன் இரதத்திலிருந்து கீழே விழுந்தான். அப்பால் சத்ருக்னனுடன் போர் செய்து அவனையும் இரதத்தை விட்டு வீழ்த்தி, லட்சுமணனை எதிர்த்துப் பாணங்களால் அடித்து அவனை மனங்கலங்கும்படி செய்து விட்டுக் கடைசியில் ஸ்ரீராமனை எதிர்த்துப் பாணப் பிரயோகஞ் செய்தார்கள். இவைகளனைத்தையும் கௌஸல்யாதி தேவிகளும் ஸீதை முதலியவர்களும் சேனைகளுக்கிடையே காணும் சந்துகளின் வழியே பார்த்துக்கொண்டிருக்க, ஸ்ரீராமபிரான் தமது வில்லைக்குணத்தொனிசெய்து, அதில் வாயுவாஸ்திரத்தைப் பூட்டிப்பிரயோகித்தார். அந்த அஸ்திரமானது, பிரசண்டமாருதமாகக் கிளம்பி, பகையரசர்கள் யாவரையும் காய்ந்த சருகுகள் போல் ஆகாசத்திற்குக் கொண்டு போய், அங்கிருந்து சமுத்திரக் கரையில் சேர்த்துவிட்டது. மிஞ்சிய சைன்னியங்களையும் மோகனாஸ்திரம் விடுத்து மூர்ச்சை யடையச்செய்ய; அவைகள் கீழேகிடந்து புரண்டன.

இப்படி யிருக்கையில், மூர்ச்சை போயிருக்கும் பரதனைப் பார்த்த கைகேயி யானையிலிருந்து திடீரென்று குதித்து, பரதனிடம் சென்று, அவனை மடியில் வைத்துக்கொண்டு பிரலாபித்தாள். அதைப்பார்த்து தசரதர் கௌஸல்லியை முதலானவர்களும் பரிதபிக்க, ஸ்ரீராமர் அவர்களுக்குச் சமாதானஞ் சொல்லி லட்சுமணனை யழைத்து, "இதோ கொஞ்ச தூரத்தில், முத்கல முனிவருடைய ஆசிர மிருக்கின்றது அங்கே அம்முனிவருடைய மகிமையால் சஞ்சீவினி முதலிய கொடிகளிருக்கின்றன. அவைகள் க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியவைகள். அவைகளைச் சீக்கிரம் எடுத்துக்கொண்டுவா" என்று சொல்ல, லட்சுமணர் "ஆகா! அப்படியே ஆகட்டும்" என்று முனிவர் ஆசிரமத்திற்கு வேகமாகச் சென்று, அம்முனிவருடைய சிஷ்யர்களை விசாரித்தார். அவர்கள் "இப்பொழுது முனிவர் சமாதியிலிருக்கின்றார். அவர் எழுந்திருந்ததும் அவருடைய உத்தரவுபெற்று வேண்டியதைக் கொண்டுபோ;

நாங்கள் அதை உனக்குக் கொடுக்கச் சுதந்தரர்களல்லர்" என்று தடுத்தனர். அப்பொழுது லட்சுமணர் "அந்தோ! பொழுதாகிறதே, என்று எண்ணித் திரும்பவும் இராமனிடம் சென்று, சங்கதி தெரிவிக்க, அதற்கு இராமர் "தம்பி இலட்சுமணா, நீ அவ்விடம் சென்று அந்த முனிவர்க்கேனும் அவருடைய மாணவர்களுக்கேனும் யாதொரு தொந்தரவும் கொடுக்காமல் கொடிகளை, மட்டும் பறித்துக்கொண்டுவா" என்று கூறி அனுப்பினர். இலட்சுமணர் மறுபடியும் அவ்வனமடைந்து சீடர்களுக்குச் சமாதானங் கூறிக் கொடிகளைப் பலாத்காரமாக எடுத்துக்கொண்டு இராமரிடம்வந்து சேர்ந்தார். அக்கொடிகளைக் கொண்டு ஸ்ரீராமர் பரத சத்ருக்னர்களை மூர்ச்சை தெளிவித்தார்.

இதைக்கண்டதும் கைகேயி தசரதர் முதலிய யாவரும் சந்தோஷமடைந்து, இராமரைத் தழுவி அவரைப் புகழ்ந்து பின் பரதனையுங் கட்டிக்கொண்டு மகிழ்ந்து வஸிஷ்டரையும் பிராமணர்களையுங்கொண்டு, அங்கே ஒரு மகோற்சவம் வெகு விமரிசையாக நடத்தினர்கள்.

இது இங்கிப்படியிருக்க, முத்கல முனிவருடைய மாணவர்கள் தங்கள் முனிவர் சமாதியினின்று எழுந்ததும், லட்சுமணன் ஓஷதிகளைக் கொண்டுபோன சங்கதியை ஆரவாரித்துக்கொண்டு அவருக்குத் தெரிவித்தனர். அதைக்கேட்ட முத்கல முனிவர், ஆச்சரியமடைந்து மாணவர்களைப் பார்த்து, "இலட்சுமணன் என்பவன்யாவன்? அவன் யாருடைய ஆக்ஞை மேற்கொண்டு நமது ஆசிரமம் வந்தான்; எதற்காக நமதனுமதியின்றி ஓஷதிகளைக் கொண்டுபோனன். என்பதை சீக்கிரமாகச் சென்று விசாரித்து வாருங்கள்" என்றனுப்பினர். மாணவர்கள் "ஆகா! அவ்விதமே செய்கிறோம்". என்று முனிவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, தசரதரிடம் வந்து, "நீயார்? எதற்காக எமதாசிரமத்திலுள்ள கொடிகளை லட்சமணன் மூலமாகத் தருவித்தீர், காரணங்கூறும்" என்று கோபத்துடன் கேட்க தசரதர் அவர்களைப் பார்த்துச் சிறிது ஆலோசித்து, "அந்தணர்களே! நான் தசரதன் பரதனுக்காகக் கொடிகள் வரவழைக்கப்பட்டன. இந்தச் சங்கதி

யை முனிவர்க்கு வணக்கத்துடன் தெரிவியுங்கள், நானும் முனிவரைத் தரிசனம்செய்யச் சீக்கிரம் வருகிறேன்" என்று கூற சீடர்கள் திரும்பவும் முனிவரிடம் சென்று, சங்கதி தெரிவித்தார்கள். முனிவர் ஸ்ரீராமருடைய தந்தை தசரதரால் மூலிகைகள் கொண்டு போகப்பட்டிருக்கின்றனவென அறிந்து, உடனே கோபந் தணிந்து, அவர்களைப்பார்க்க வேண்டுமென்று மனதில் நினைத்தார். நினைத்த அப்பொழுதே தசரதரும் முனிவர் முன்னே வந்து அஞ்சலியஸ்தராய் நின்று, பிரார்த்தித்து பின் நமஸ்கரிக்க, முனிவர் அவரை எழுப்பி, அவருக்குத் தக்க மரியாதை செய்து ஆசனத்திலிருக்கச்செய்தார். பிறகு இராமர் முதலியவர்களும் முனிவரை வணங்கித் துதித்து ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். கௌஸல்யாதி தேவிமார்களும் முனிவரையும் சுமதி என்னும் அம்முனிவர் பத்னியையும் நமஸ்கரித்து அவருடைய மரியாதைகளை வணக்கத்துடன் ஏற்று, ஆசனத்திலமர்ந்தார்கள். இப்பொழுது தசரதர் முனிவரை வணங்கி "சுவாமி! யான் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார். முனிவர் தசரதரைப் பார்த்து, "எனக்கு நல்ல உபகாரம் செய்தீர், நீர் இப்படிச் செய்யாவிடில், யான், மாயையால் உமக்குப் பிள்ளையாகப் பிறந்த ஸ்ரீராமரை ஸீதையுடன் காண்பது எவ்வாறேற்படும்?" என்றார். முனிவர் கோபந்தணிந்து சந்தோஷமடைந்துள்ளதைக்கண்ட தசரதர் "அடியேன் தங்களிடம் ஒருவிஷயம் பேசவிரும்புகிறேன்" என்று விநயத்துடன் தெரிவித்தார். முனிவர் சற்று யோசித்துத் தசரதருடைய விருப்பம் இன்னதெனவறிந்து, அவரைமாத்திரம் தனியே அருகிலிருந்த ஒரு துளசிக்காட்டுக்கு அழைத்துச் சென்று, அவ்விடம் உட்கார்ந்து "உமது விருப்பத்தைத் தெரிவித்தால், உடனே அதற்கு விடைதருவே" னெனக்கூறினார். தசரதர் "சுவாமி! இராமனுக்கு இனிவரப்போகும் நன்மை தீமைகள் இவைகளென்று அடியேன் அறியவிரும்புகிறேன்" என முனிவர் கூறுகிறார்.—

முத்கலர் கூறுகிறார்.

ஏ தசரத மகாராஜனே! ஸர்வவியாபகரான ஸ்ரீமந் நாராயண மூர்த்தி, உமக்கு வரந்தந்திருப்பதாலும், பூபாரந்தீர்க்கக் கருதிய

தாலும் துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனஞ் செய்வதற்காகவும், அதர்மத்தை யொழித்துத் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் உமது பூர்வ புண்ணிய வசத்தால் உமக்கு அவரே ஸ்ரீராமனுகப் பிறந்திருக்கிறார். நீர் ஸ்வர்க்கலோகஞ் சென்ற பிறகு இராமர் மகாமகிமையோடு பதினோராயிர வருஷகாலமாய் ஏக சக்ராதிபதியாயிருந்து ராஜ்ய பரிபாலனம் செய்து வருவார்; சப்ததீவுகளுக்கும் அதிபதியாய் விளங்குவார்; அவருக்கு இரண்டு சத் புத்திரர்கள் பிறப்பார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் இரண்டு மனைவிகளை விவாகஞ் செய்துகொண்டு 24 பிள்ளைகளையும் 12 கன்னிகைகளையும் பெறுவார்கள். இந்த 24 பிள்ளைகள் மூலமாகக் கணக்கற்ற வம்சத்தவர் உற்பத்தியாவர். இன்னும் சிலநாட்களுக் கெல்லாம் பிருந்தையினுடைய சாபத்தை அனுபவிப்பதாகத் தண்டகாருண்ய வாசஞ்செய்தபிறகு மேற்கூறியபடி ராஜ்யபரிபாலனஞ் செய்வர்" என்று முத்கலமுனிவர்கூற, தசரதர் அவரைப்பார்த்து "முனிபுங்கவரே! பிருந்தை யென்பவளார்! அவள் யாருடைய மனைவி விஷ்ணுவிக்கு அவளுடைய சாபம் என் சம்பவித்தது? இவைகளை எனக்குச் சொல்லியருளும்" என்று கேட்டார்.

முன்னொரு காலத்தில் பரமசிவனுக்கும் ஜலந்தராசுரனுக்கும் ஒரு யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் பரமசிவன் பலவாறாக அவனை இம்சித்தும் அவன் பிழைத்திருக்க, அதைக் கண்ட பார்வதிதேவியார், விஷ்ணுவைப்பார்த்து, "இவ்வசுரன், இவனுடைய மனைவி பிருந்தை யென்பவளுடைய பாதிவிருத்திய மகிமையால் இன்னும் ஜீவித்திருக்கிறான்" என்று குறிப்பிக்க விஷ்ணுவானவர் உடனே, ஜலந்தராசுரனுடைய பட்டணம் சென்று பிருந்தையுடன் சுகித்து, அவள் பாதி விருத்தியத்தைக் கெடுக்க வேண்டுமெனக் கருதினர். அச்சமயத்தில் தன்னரண்மனையில் சுகமாக நித்திரைசெய்து கொண்டிருந்த பிருந்தை தன் கணவன் எண்ணெய் தேய்த்துக்கொண்டு நிர்வாணத்தோடு ஓர் எருமைக்கடாவின் மீதேறிக்கொண்டு தெற்குமுகமாகச் செல்வதாகவும், அப்போது அவன் தலையில்லா முண்டமாகத் தோன்றி இருளில்மறைந்ததாகவும் ஒருகனவுகண்டு, திடீரென்று விழித்துக்கொண்டுபெருங்

கவலைகொண்டு, அக்கவலை ஒழிவதன் பொருட்டு உப்பரிகை முதலிய பல விடங்களில் உலாவினள். உலாவியும் அக்கவலையினாலுண்டான வருத்தம் நீங்கப்பெறாமல் இரண்டு தோழிகளோடு, பட்டணத்திற் கருகாமையிலிருக்கும் உத்தியானவனஞ்சென்று, அங்கிருந்துவேறொரு வனத்திற்குச்சென்று இப்படிப் பலவனங்கடந்து போய்க் கொண்டிருக்கும் பொழுது, சிங்கம்போல் கர்ச்சித்துக் கொண்டுவரும் இரண்டு ராட்சஸர்களைக்கண்டு, அவர்கள் கோரப் பல்லையும் குரூரமான கண்களையும் பார்த்து மனங்கலங்கி, அவ் விடம் விட்டு வேறு பக்கம் ஓட அவ்விடத்தில் ஒரு மரத்தடியில் ஒருமுனிவர் தமது சீடன் ஒருவனோடு உட்கார்ந்திருந்தார். அவர் வெகு சாந்த முடையவராக விருந்தமையால், பிருந்தை அவரிடம் சென்று அவரைத் தன்னுடைய கொடிபோன்ற கையால் தழுவிக் கொண்டு, "முனிபுங்கவரே! அடியேன் உம்மைச் சரணமடைந்தேன், கருணை கூர்ந்து ஏழையைக் காத்தருளவேண்டும்" என அதைக் கேட்ட அம்முனிவர், தமது தியானத்திலிருந்து எழுந்து கண்ணைத் திறந்து பிருந்தியைப் பார்த்து "குழந்தாய்! நீபயப்பட வேண்டாம். இவ்விடம் உட்காரு" என்று கூறியவுடன், அம்மாதைத் துரத்திக்கொண்டுவரும் இரண்டுஇராட்சஸர்களையும் பார்த்துக் கோபங்கொண்டு ஹூம்! ஹூம்! என்று மிரட்ட, அவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள்.

இப்பொழுது பிருந்தையானவள் அம்முனிவருடைய மகிமையைக் கண்டு பரமாச் சரியமடைந்து, பூமியில் விழுந்து நமஸ்கரித்துப் பின் எழுந்து "முனிபுங்கவரே! கிருபா நிதியே! அடியேனை இப்பெரும் ஆபத்திலிருந்து மீட்டு ரக்ஷித்தீர். இப்பொழுது ஒரு விண்ணப்பஞ் செய்ய விரும்புகிறேன். அதைத் தயவுடன் கேட்டுப் பதிலளிக்க வேண்டுகிறேன்" என்று சொல்லி, "சுவாமி! எனது பர்த்தா ஜலந்தராசுரர் பரமசிவனுடன் யுத்தத்திற்குச் சென்றிருக்கிறார். அவர் யுத்தத்தில் என்ன ஸ்திதியிலிருக்கிறார் என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்" என்றாள். முனிவர் உடனே கருணைகூர்ந்து, ஆகாசத்தைப்பார்க்க, அங்கிருந்து இரண்டு வானரங்கள்இறங்கி அவர் முன்னால் வந்துவணங்கி நிற்க, அவைகளுக்கு ஒருவித புருவசமிஞ்ஞைசெய்தார். அவை

கள் இரண்டும் அதை அறிந்து, பழையபடி ஆகாசத்தில் கிளம்பி மறைந்து, அரைட்சனத்திற்கு பிறகு, கீழேவந்து முன்போலவே எதிரில் நிற்க; அவைகளின் பக்கத்தில் ஜலந்தானுடைய தலையும் இரண்டு கைகளும் முண்டமும் கிடக்கப்பார்த்த பிருந்தை தன் கணவன் மரணமடைந்தானென அறிந்து வருந்தி திடீரென்று கீழேவிழுந்து மூர்ச்சையானாள். இப்பொழுது முனிவர் அவள்பேரில் தன் கைக்கமண்டல ஜலத்தைத் தெளிக்கவே, பிருந்தை மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து. கொஞ்ச நேரம் அழுது விட்டு, அம்முனிவரைப் பார்த்து “ முனிவரே! தாங்கள் கருணைகூர்ந்து என்நாயகனைப் பிழைப்பிக்கவேண்டும், தங்களுக்கு இந்த ஜீவனைப் பிழைப்பிக்கக்கூடிய சக்தியிருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது” என வேண்ட அம்முனிவர், அவளைப்பார்த்து பெண்ணே! யுத்தத்தில் ருத்திரனால் கொலையுண்டவனை யாராலும் பிழைபிக்க முடியாது. ஆயினும் உன்பேரில் எனக்கு இரக்கம் உண்டாகிறது; ஆகையால் உன் புருஷனை உயிர்ப்பிக்கின்றேன்” என்று சொல்லி உடனே மறைய, ஜலந்தாசுரன் உயிர் பெற்றெழுந்து பிருந்தையைக் கட்டிக்கொண்டு முத்தமிட்டான். பிருந்தையும் தன் புருஷனைப்பார்த்து, சந்தோஷமடைந்து, அவனுடன் வெகு நாள்கூடி மகிழ்ந்திருந்தாள்.

இப்படியிருக்கையில், ஒருநாள் அவனுடன் சுகமனுபவித்து முடிந்த சமயத்தில் அவனை மகாவிஷ்ணு வென்றறிந்து, மிகக் கோபங்கொண்டு “ விஷ்ணுவே! உன் சித்தங்கெட்டது; அதுபிறர் மனையாளை விரும்புவதிலேயே செல்லுகிறது! முன் சீடனோடு இவ்விடமிருந்த மாயமுனியும் நீதான்; உன்னுடைய கருடனே அச்சீடன்; அதையும் நான் அறிவேன். உனக்கு முன்னால் ஆகாயத்திலிருந்து வந்திறங்கின குரங்குகளும் உன்மாயமேயாம். அவர்கள் புண்ணியசிலன் சுசிலன்என்கிற உன்னுடைய தாசர்களென்று யானறிவேன். முன்வந்த இராட்சஸர்களும் உன்னுடையமாயமேயாம். அவர்கள் ஜயன்விஜயன் என்ற உன்னுடைய தாசர்களேயாவர். அவர்கள், பூமியில் இராட்சஸர்களாகப் பிறந்து உன்னுடைய மனைவியை அவர்கள் அபகரிப்பார். அதன் பொருட்டுநீ பலவித

மான தொந்தரையடைந்து, நீ சர்வேசுவரனாக இருந்தபோதி லும் குரங்குகளைச் சகாயமாகக் கொள்ளக்கடவாய், அப்பொழுது உனக்குச் சகாயமாகுங் குரங்குகளாகப் புண்ணியசீலன், சுசீலன் என்பவர்கள் பூமியில் பிறக்கக்கடவர்:—எனக் கடுஞ்சாபமிட்டுத் தன் நாயகன் ருத்திரனால் கொல்லப்பட்டானென்பதையும் அறி ந்து, உடனே அக்நிப்பிரவேசமாயினள்.

தசரத மகாராஜனே! அந்தப்பிருந்தியினுடைய சாபத்தின் படியே ஜயன், விஜயன் என்பவர்கள் இராவண கும்ப கர்ணர்க ளென்கிற இராட்சஸர்களாகப் பிறந்து, சமுத்திர மத்தியிலிருக் கும் இலங்காபுரியில் இப்போது வசித்து வருகிறார்கள்- ஸ்ரீராமர் இனித் தண்டகாரண்ய வாசஞ் செய்யுங் காலத்தில் பஞ்சவடி தீரத்திலிருந்து, ஜனகராஜன் புத்திரியாகிய ஸீதையை அவ் விராட்சதர்கள் கொண்டுபோய்த் தாய்போல் ஆறு மாதகாலம் பாதுகாத்து வைத்திருந்து பின், இராம பாணங்களால் அவர்கள் கொலையுண்டு அழிவார்கள். அதற்காக, இராமர் வாலியைக் கொன்று அவன் சகோதரன் சுக்ரீவனை கிஷ்கிந்தாபுரிக்கு அரச னாக்கி, அவனுடைய நட்பை யடைந்து, சமுத்திரத்தில் சேது பந்தனஞ் செய்து, அவ்வழியே இலங்கைக்கேகி அங்கிருக்கும் துஷ்ட இராட்சஸர்கள் யாவரையும் அழித்து ஸீதையை மீட்டுக் கொண்டு அயோத்திக்கு வருவார். பிறகு ஸ்ரீராமர் யாத்திரை, யக்ஞம் முதலியவைகளைச் செய்து சப்தத் தீவுகளையும் ரக்ஷித்து, தமது மனைவி ஸீதாதேவியுடனும் தம்பிமார்களுடனும் பந்துக்க ளுடனும் "இராஜ்ய பரிபாலனஞ் செய்து சுகமாகவாழ்ந்துவருவார். யான் கூறிய இவ்விஷயங்கள் யாவும் இரகசியமாக உமது மனதி லேயே இருக்கட்டும். ஒருவருக்கும் வெளியிட வேண்டாம்" என்று முத்கல முனிவர் கூறினர். இப்படிச் சொல்லக்கேட்ட தசரதர் மனமகிழ்ந்து, முனிபுங்கவரைப் பார்த்து "சுவாமி! சந் தோஷமாயிற்று; எனது முன் ஜன்மம் என்ன? ஸ்ரீமந்நாராயண மூர்த்தியே எனக்கும் புத்திரனாகவும், சாட்சாத் லக்ஷ்மிதேவி யான ஸீதை எனக்கு மருமகளாகவும் யான் செய்த புண்ணிய மென்ன? இவைகளை எனக்குத் தெரிவிக்க வேண்டுகின்றேன்" என்றார்.

முனிவர் கூறுகிறார்:—சஹ்ய மலையினருகிலுள்ள தேசத்தில் காவீரம் என்கிற நகரத்தில் சகல தர்மங்களையு மறிந்த தர்மதத்த னென்னும் பேர்கொண்ட ஒரு வேதியர் இருந்தார். அவர் அநேக விஷ்ணு விரதங்களை அனுஷ்டித்து அக்காலத்தில் விஷ்ணுவை நன்றாய்ப் பூஜித்து, துவாதசாட்சர வித்தை என்கிற வாசுதேவ மந்திரத்தை எப்பொழுதும் ஜபித்துக் கொண்டு அதிதி பூஜையும் செய்து வந்தார். அப்பொழுது ஒரு நாள் கார்த்திகை மாசத்தில் ஏகாதசி தினத்தில் உபவாசமிருந்து, இரவில் கண் விழித்து விடியற் காலம் கோவிலுக்குப் போய் பூஜை செய்வதற்காக, பூஜைக்கு வேண்டிய உபகரணங்களோடு புறபுபட்டுப் போனார். வழியில் கோரப் பற்களோடும் குழிந்து சிவந்த கண்களோடும் தொங்குகிற உதடு நாக்குகளுடனும் தேகாத்தியந்தமும் எலும்பு மயமான உருவத்தோடுங் கூடிய ஒரு ராக்ஷஸி கர்! கர்! என்று பயங்கரமாகச் சப்தித்துக் கொண்டு நிர்வாணமாக எதிரே வருவதைக் கண்டார். பயந்து நடுக்கங் கொண்டு, கையிலிருக்கும் பூஜை சாமான்களை அவள் பேரில் வரிசையாக எறிந்து, கடைசியாக ஹரி நாமத்தை மனதில் தியானத்துத் துளஸி தீர்த்தத்தை வீசித்தெளித்தார். அத்தீர்த்தம் அவ்விராட்சஸி தேகத்தில் பட்ட மாத்திரத்தில் அவள் பாவங்களிலிருந்து விடுபட்டுத் தன் பூர்வ ஜன்ம விருத்தாந்தத்தை யறிந்து வேதியரைப் பார்த்து "ஐயா! முன் ஜன்மங்களிற்செய்த கர்மவினையால் யான் இக்கதி யடைந்தேன். இனி நற்கதி எவ்வாறு பெறுவேன்?" என்று கேட்க வேதியர் தர்மதத்தர் கருணைகூர்ந்து, துளஸிதீர்த்தத்தின் மகிமையை யுணர்ந்து, வியந்து அவ்வாக்கியைப் பார்த்து, " ஏ பெண்ணே! நீ இக்கதியை யடைந்ததற்கு எக்கருமம் புரிந்தாய்? நீ எங்கிருந்து வருகிறாய்? நீ எவ்விதமான ஒழுக்கமுள்ளவள்? இவைகளனைத்தையும் எனக்குத் தெரிய விஸ்தரித்துக் கூருவாய்— என்று கேட்டார்.

கலகை கூறுகிறாள்.

ஐயா! சௌராஷ்டிர தேசத்தில் பிக்ஷு என்ற பிராமணரொருவரிருந்தார். அவரை நான் நாயகனாக அடைந்தேன். என்

பெயர்கலகை. நான் என் கணவனது பேச்சுக்கு எதிரிடையாய் நடந்து வந்தேன். நான் ஒரு பொழுதும் என் கணவனோடு இன்பமாகப் பேசிச் சிறித்தும் நன்மை செய்ததில்லை. ஒரு வேளையேனும் அன்புடன் அவருக்குத்திருப்தியாக அன்னமிட்டவளல்லள். ஒவ்வொரு நாளும் நான் பலவித மாயும் இனிமை யாகவும் பாகம் செய்வதுண்டு. ஆனால் அவைகளை நான் முந்தித் திருப்தி யாகப் புசித்து விட்டுப் பிறகு தான் அவருக்குப் போஜன மிடுவது வழக்கம். இப்படி யிருக்க, ஒரு சமையத்தில் என் கணவன் தமது மித்திரனிடஞ் சென்று, அவனை, "என்னுயிர்த் தோழனே! என் மனைவி என் வார்த்தை கேளாம லிருக்கிறாளே, இதற்கு யான் என்ன செய்வேன், அதற்கொரு உபாயஞ் சொல்" என்று கேட்க, அவன் "உன் மனைவி உன் சொற் கேளாமல் என்னென்ன செய்கிறாள், அதை எனக்கு விவரிப்பாய்" என அதற்கவர் "நண்பனே! யான் எதைச் செய்கின்றேனோ அதற்கு முற்றும் விரோதமாகவே செய்து வருகிறாள்" என்று கூறினான். மித்திரன், ஒரு க்ஷணப்போது ஆலோசித்து, "நண்பனே! நீ அவளிடமிருந்து எதைவிரும்புகிறாயோ அதைச்செய்ய வேண்டாமென்று எதிரிடையாகவே சொல், அப்பொழுது நீ எது விரும்புகின்றாயோ அதைச் செய்வாளென நான் நினைக்கிறேன்; அப்படியே நீ செய்" என்று ஒரு யுக்தி சொல்லி யனுப்பினான். என் கணவன் "மித்திரனே! அப்படியே செய்கிறேன்" எனக் கூறிவிட்டு, எனது கிரகம் வந்து என்னைப் பார்த்து "கலகை! இன்றையதினம் நமது கிரகத்திற்கு யாரையும் போஜனத்திற்கழையாதே! என் மித்திரன் மிகப்பொல்லாதவன்" என்று சொல்ல, நான் என் கணவனைப்பார்த்து "உமது மித்திரன் சாதுசம்மதன். ஆகையால் இன்றைக்கு அவரை அவசியம் விருந்துக்கழைப்பேன்" என்று சொல்லிவிட்டு என் நாயகனது மித்திரன் வீடுசென்று அவரை விருந்துக்கழைத்து அன்று அவருக்குத் திருப்தியாக விருந்து செய்வித்தேன். அது முதல் என் கணவர் தாம் எதை விரும்புகிறாரோ அதற்கு விரோதமாகவே எனக்குக் கட்டளையிட்டுத்

தம் எண்ணம் நிறைவேறப் பெற்று வருங் காலத்தில், ஒரு நாள் என் கணவனது தந்தைக்குச் சிராத்தம் வந்தது. அன்று அவர் என்னை யழைத்து "கலகை! இன்றைக்கு எனது பிதாவுக்குச் சிராத்தம்; அதை நான் நடத்தேன்" என்று சொல்ல, நான் உடனே சிராத்தத்திற்கு யோக்கியமான பிராமணர்களை யழைத்துவிட்டு, என் கணவனைப் பார்த்து, "உமக்கு என் புத்தி இவ்விதமாயிற்று? பிள்ளையாகப் பிறந்தது எதற்காக? பிதுர் சிராத்தத்தைவிடத் துணிந்த நீர் எக்கதியடைவீரோ" என்று சொன்னேன். அதற்கு என் கணவன் "ஏ கலகை! இன்றையதினம் பக்குவமாக எதையும் சமையாதே; பிராமணர்களை அதிகமாக அழைக்காதே! ஒருவரே போதும்" என்று சொன்னார். நான் உடனே யோக்கியமான பதினெட்டுப் பிராமணர்களை அழைத்துவிட்டு, ஸ்நானஞ் செய்து நேமநிஷ்டையுடன் சுத்தமாயிருந்து, தகுந்த பக்குவான்னங்களைச் செய்து சித்தப்படுத்தினேன். அச்சமையத்தில், "கலகை! இன்று நாமிருவரும் முன்னால் திருப்தியாகப் போஜனம் செய்வோம்; பிறகு மிஞ்சினதைப் பிராமணர்களுக்குப் போடுவோம்" என்று புருஷன் கூறினான். நான் அவரை நிந்தித்து, தந்தையினுடைய சிராத்தத்தன்று எவன்தான் முன்பு போஜனம் செய்து, பின் மீந்ததைப் பிராமணர்களுக்கு இடுவான், என்று சொல்லிச் சிராத்தத்தை விதிப்படி முடித்து வைத்தேன். பிறகு சிராத்த முடிவில் என் கணவன் பிண்டப்ரதானம் தர்ப்பணம் முதலியவைகளைச் செய்துவிட்டு என்னைப் பார்த்து, "கலகை! இன்றையதினம் யான் போஜனம் செய்யேன், பட்டினியாகவே யிருப்பேன்" எனக் கூற, நான் அவரைப் பார்த்து "சிராத்தஞ் செய்துவிட்டுப் பட்டினியாயிருந்தால் திரும்பவும் சிராத்தம் செய்யவேண்டு மென்பது விதியாயிற்றே! ஆகையால் அவசியம் நீர் போஜனம் செய்ய வேண்டும்" என மன்றாடி, அவருக்குத் திவ்யான்ன போஜனஞ் செய்வித்தேன். பிறகு என் கணவன் சிராத்த பிண்டங்களை நல்ல தீர்த்தத்தில் போட்டுவாவெனத் தெய்வச் செயலாய்த் தாம் சொல்ல வேண்டிய விதத்தை மறந்து எனக்குக் கட்டளை யிட்

டார். நான் அப்பிண்டங்களை சௌசகூபத்திலே கொண்டுபோய் போட்டுவிட்டுத் திரும்பி வந்தேன். இதை யறிந்ததும் என் கணவன் மிக வருத்தப்பட்டு, ஆ! ஆ? எனச் சொல்லி பிரமித்து நின்று ஒரு க்ஷணம் ஆலோசித்து, மறுபடி என்னைப் பார்த்து' அப்பிண்டங்களை அக்கிணற்றிலிருந்து எடுக்க வேண்டாம்' என்று சொல்ல, உடனே நான் அப்பிண்டங்களை அக்கிணற்றிலிருந்து எடுத்து வர, அப்பொழுது என் கணவன் "கலகை! இதை நல்ல தீர்த்தத்திலே போட வேண்டாம்" எனக் கூற உடனே நான் அன்புடன் அதைக்கொண்டு போய் நல்ல தீர்த்தத்தில் போட்டுவிட்டேன். இவ்வாறு நான் கணவன் சொல்லுக்கு எதிரிடையாகவே செய்து வர, அவர் அதைப் பொறுமல் இவள் எப்பொழுதும் கலகப் பிரியையாயிருந்து மனவருத்தமுண்டுபண்ணுகின்றுளாதலால், நாம் வேறொரு பெண்ணை விவாகம் செய்துகொள்வோம், என நினைத்து முயற்சி செய்தார். அதை யறிந்த நான் உடனே விஷத்தை யுண்டு பிராணனை விட்டு விட்டேன். பிறகு எமதூதர்கள் என்னைக்கட்டி இம்சித்துக்கொண்டு போய், தர்மராஜனருகில் விட, அப்பொழுது தர்மராஜன் என்னைப் பார்த்து சித்ரகுப்தனை யழைத்து, "சித்திரகுப்தா! இவள் செய்த பாப புண்ணியங்களைத் தெரிவி" எனச்சித்திரகுப்தன் "ஏ தருமராஜா! இவள் சிறிதும் புண்ணியமென்பதேசெய்ய வில்லை. இவள் தினம் சமையல் செய்வதும் முந்தித்தான் புசிப்பதுமாகவேயிருந்தாள். கணவனுக்குப் பிறகு தான் அன்னமிடுவள். அப்பாபத்திற்காகத் தன் மலத்தையே புசிக்கும் வல்கு என்னும் பிராணியாகப் பிறக்கவேண்டும். இவள் கணவன் சொற்கேளாமல் கலகம் செய்து வந்தபடியால், மலம்புசிக்கும் பன்றியாகப் பிறக்கவேண்டும். மேலும் சமையல் செய்த பாத்திரத்திலேயே இரகசியமாக இவள் புசித்துவந்தமையால், பெற்ற சிசுக்களைப் புசிக்கும் தன்மையுள்ள பூனையாகப் பிறக்கவேண்டும். தன் கணவன் வேறொரு பெண்ணைக் கல்யாணஞ் செய்ய யத்தனித்த நிமித்தம் இவள் பிராணத்தியாகம் செய்து கொண்டமையால்,

பிரேத சரீரமாகவே சிலகாலம் இருக்கவேண்டும். பிறகு நமது தூதர்களைக்கொண்டு இவளை ஒரு பாலைவனத்திலே தள்ளிவிடச் செய்யவேண்டும், அங்கேயும் இவள் பிரேத சரீரத்தோடு அநேக நாளிருந்து, பின் மூன்று ஜன்மமடைந்து? அந்த ஜன்மங்களிலும் பாபமே புரிந்து வரவேண்டும்"—என்று கூறினன். ஆகையால் அவ்விதமே எனக்குப் பிரேத சரீரத்தைக்கொடுத்து, ஒரு பாலைவனத்தில் தள்ளிவிட்டுத் தூதர்கள் எமலோகம் சென்றார்கள். அப்பாலைவனத்தில் என் பாபகர்மத்தாலேற்பட்ட பிரேத சரீரத்தோடு பதினைந்து வருஷகாலம் பசிதாகங்களால் மிகுந்த வருத்தமடைந்து,பின் அங்குச்செத்துகிடந்த செட்டி ஸதிரீயின் சரீரத்தில் பிரவேசித்து, தென்தேசம் சென்று கிருஷ்ணை, வேணி, என்கிற இந்நதிகளின் சங்கம் ஸ்தலத்தை யடைந்து அந்நதிக் கரையில் வசித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது சில வைஷ்ணவர்களும் சைவர்களும் சேர்ந்து என்னை அச்சரீரத்தை விட்டு விலகும்படி செய்து வெகுதூரம் துரத்திவிட்டார்கள். பிறகு பசித் தொந்தரவோடு, பூமியில் திரிந்துகொண்டு இவ்விடம் வர, உம்மைக்கண்டேன். உமது திருக்கரத்தினல் வாரித் தெளித்த துளஸிதீர்த்த மகிமையினல், நான் சகல பாபத்தினின்றும் விடுபட்டேன். இப்பொழுது எனக்கிருக்கும் இப்பிரேத சரீரம் எவ்வாறொழியும்? இனி மூன்று ஜன்மங்களும் என்னைத் தொடர்ந்திருக்கும் வகை என்ன? உம்மைச் சரணமடைந்த அடியேனைக் கிருபைகூர்ந்து, காத்தருள வேண்டும்" என்றாள். இது கேட்டுத் தர்மதத்தர், அவ்வாக்கியினுடையபாபகர்மங்களை நினைத்துப் பயந்து ஆச்சரியமடைந்து, அவள் வருந்துவதைப் பார்த்து மனமிரங்கிச் சற்று ஆலோசித்துப் பின் வருமாறு சொல்லுகிறார்.

4 வது சருக்கம் முற்றிற்று.

## 5-வது சருக்கும்

### தர்மதத்தர் கூறுகிறார்.

தீர்த்தம் தானம் விரதம் முதலியவைகளால் பாபம் யாவும் நசித்துவிடும். ஆனால் நீ இப்பிரேத சரீரத்திலிருப்பதால் அவை களைச் செய்ய உனக்கு அதிகாரமில்லை. நீ வருந்துவதைப் பார்த் தால், எனக்கு மனம் வருந்துகின்றது. உன் வருத்தத்தைத் தீர்க் கும் வரையில் எனக்கு மனக்கலக்கம் ஒழியாது. உன் பாபமோ மூன்று ஜன்மம் கொடுக்கத்தக்கது; மகா உக்கிரமானது. மிக்க இகழ்ச்சியான இப்பிரேதத் தன்மையானது உன்னுடைய அற்ப புண்ணியத்தால் தீராது. ஆகையால், நான் பிறந்தது முதல், கார்த்திகை விரதம் செய்து வந்திருக்கின்றேன். அந்தப் புண்ணி யத்தில் பாதியை உனக்கு அளிக்கின்றேன். அதைக்கொண்டு நீ நற்கதியடை. கார்த்திகை விரத புண்ணியத்துக்கு ஒப்பானது எதுவுமில்லை, யக்ஞம், தானம், தீர்த்தம் இவைகளைக் காட்டி லும், கார்த்திகை விரதமே சிலாக்கியமானது—என்று கூறி வாசு தேவ மந்திரத்தை அவ்வாக்கி செவியிற்பட ஜபித்துக்கொண்டு துளஸி தீர்த்தத்தினால் அவளை ஸ்நானஞ் செய்வித்தார். அவள் பிரேதத் தன்மையினின்று விடுபட்டு, அக்நிஜ்வாலை போன்ற திவ்ய ரூபமும் ஊர்வசிபோன்ற லாவண்ணியமு மடைந்து தர் மதத்தரைத் தரையில் விழுந்து வணங்கி "உத்தமமான வேதி யரே! கிருபாநிதியே! உம்முடைய கிருபையினால் அடியேன் நர காநுபவத்திலிருந்து விடுபட்டேன். பாப சமுத்திரத்தில் மூழ் கிக் கரைகாணாமல் தவித்த எனக்கு இப்போது பிடித்துக் கரை யேற நீர் தெப்பமானீர்" என்று கலகி சொல்ல, உடனே ஆகா சத்தில், விஷ்ணு சாரூப்பியம் பெற்ற கணங்க ளேறிவரும் அழ கிய விமானத்தைக் கண்டாள். அப்பொழுது அவ் விமானத்தில் வந்த புண்ணியசீலர் சுசீலர் முதலிய விஷ்ணு கணங்கள், அப் ஸரஸ்திரீகள் சூழ இந்தக் கலகியின் பக்கத்தில் வந்து அவளை விமானத்திலேற்றி வைத்துக்கொண்டார்கள். இதனைப் பார்த்துத் தர்மதத்தர் ஆச்சரியமடைந்து புண்ணிய ரூபிகளான அவர்களை நமஸ்கரிக்க, அவர்கள் அப்பிராமணோத்தமரை எழுப்பிப் புகழ்ந்து

"பிர்மகுலசிரேஷ்டரே! நல்ல காரியஞ் செய்தீர். நீர் விஷ்ணுவை நன்றாகப் பூஜித்திருக்கிறீர்; ஏழைகளிடத்தில் இரங்கும் குணமுடையவர்; தர்மமறிந்தவர்; அனேக விஷ்ணு விரதங்களைச் செய்து விஷ்ணுவைத் திருப்திசெய்தவர்; நீர் உமது வாலிபப் பருவமுதல் அனுஷ்டித்த கார்த்திகை விரதத்தின் புண்ணியத்தில் பாதியை இவளுக்குக் கொடுத்து இவளை நற்கதி சேர்த்த புண்ணியம் உமக்கு இரட்டித்தது. இவள் பல ஜன்மங்களிலும் புரிந்த பாப முழுவதும் உமது புண்ணிய தானத்தால் விலகிற்று. துளஸி தீர்த்த ஸ்நானத்தால் இவளுக்கு இனிவரும் பாப பலன்களும் ஒழிந்தன. நீர் செய்த ஹரிஜா காணம் முதலியவைகளால் தான், இந்த விமானம் இவ்விடம் வந்தது. நீர் கார்த்திகையன்று தீபதானஞ்செய்த புண்ணியத்தாலே தான் இவளுக்குத் தேஜோமயமான ரூபங் கிடைத்தது. நீர் துளஸி பூஜைசெய்த புண்ணியங்களால் விஷ்ணு ஸந்நிதிக்கு இவள் வரவேண்டிய பாக்கியம் பெற்றாள். கருணை நிறைந்த சாதுவே! ஆகையினாலே தான் இவளைச் சகலபோக பாக்கியத்துடன் வைகுண்டத்துக்கு அழைத்துப் போகிறோம், நீரும் இப்பிறப்பின் முடிவின் உமது பாரியைகளுடன் விஷ்ணு சாரூப்பியத்தை யடைந்து வைகுண்டம் வருவீர். ஆகையால் உம்மைப்போலவே விஷ்ணுவைப் பக்தியுடன் பூஜித்த யாவரும் தன்னியர்களாகிப் புண்ணியம் பெறுவார்கள். அவர்கள் பிறப்புத்தான் நல்ல பலனை யடையும் தன்னை ஆராதித்த பக்தர்களுக்கு விஷ்ணுவானவர் எல்லாப் பலனையுந் தருவார். உத்தானபாத அரசன் புத்திரனுக்கு ஐந்தாவது வயதில் துருவ பதத்தைத் தந்தனரன்றோ? அப்படிப்பட்ட விஷ்ணுவை நீர் ஜனனகால முதல் இடைவிடாத பக்தி செலுத்திப் பூஜித்து வந்தமையால், உமது இரண்டு மனைவிகளுடன் அவர் ஸந்நிதானமடைந்து அங்கு எண்ணாயிர வருஷகாலமிருந்து அவரைச் சேவித்து, அப்புண்ணிய பலன் முடிவாகும் சமயத்தில், சூரியவம்சத் தாசனாகப் பிறந்து தசரதனெனப் பேர் பெற்று, இரண்டு மனைவிகளை யடைவீர், பின் உமது பாதி புண்ணியத்தால் நற்கதியடைந்த இவள் (கலகை) கேகய மகாராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்து, உமக்கு மூன்றாவது தாரமாக ஆவாள். அப்பிறப்பிலும் உமக்கு மகா விஷ்ணுவானர் தரிசனந்

தருவார். அவரே உமக்குப் புத்திரராக அவதரித்துத் தேவானு கூலராயிருந்து, இராமரென்னும் பெயர்பூண்டு இராவணன்முதலிய இராட்சதர்களைக் கொன்று இராஜ்யபரிபாலனஞ் செய்வார். நீர் உமது ஜனனகால முதல் செய்த திருப்திகரமான விஷ்ணு விரதங் களைக் காட்டிலும் யக்ஞம் தானம் தீர்த்தம் இவைகள் பெரிதல்ல. ஆகையால் தர்ம மறிந்த தர்மதத்தரே! பிற்காலத்திலும் நீர் விஷ்ணு விரதங்களை அனுஷ்டித்துக் கொண்டு மாற்சரியம் டம்பம் முதலியவைகளுக்கு இடங் கொடாமல், யாவரையும் சமமாகப் பார்த்துக்கொண்டு இருக்கவேண்டும். கார்த்திகம், மாகம், சைத் திரம், வைசாகம் இந்நான்கு மாதங்களில் ஒவ்வொரு வருஷத்தி லும் ப்ராதஸ்நானம் விடாமல் செய்து வரவேண்டும். ஏகாதசி விர தத்தை இடைவிடாமல் நடத்திக்கொண்டு துளஸீ பூஜை செய்து வருவதோடு துளஸி வனமும் வைத்துப் பாதுகாக்க வேண்டும். வேதியர்கள், பசுக்கள் விஷ்ணு பக்தர்கள் இவர்களை எப்பொழு தும் சேவிக்கவேண்டும். சுரைக்காய், கத்திரிக்காய், கஞ்சி இவை களை உபயோகிப்பது கூடாது. இவ்வாறிருந்தும் கடைசியில் நீரும் எங்களைப்போல் விஷ்ணுவினுடைய பரமபதத்தைப் பக்தியினால் பெறுவீர். பிராமண சிரேஷ்டரே! நீர் விஷ்ணு பக்தராயிருந்து அடைந்த புண்ணியத்தில், பாதியை இவளுக்குக் கொடுத்தமை யால் இவளை விஷ்ணுலோகம் இதோ கொண்டுபோகிறோம்; ஆகை யால் நீர் மகா தன்னியர்—என்று சொல்லிப் புகழ்ந்து உபதேசம் செய்துவிட்டு விமானத்தைச் செலுத்திக்கொண்டு வைகுண்டம் சென்றார்கள்.

முத்கலர் கூறுகிறார்.

அரசனே! தர்மதத்தனும் அவ்வுபதேசப்படி நாள்தோறும் விஷ்ணு விரதங்களை நடத்திக்கொண்டு, அந்தியகாலத்தில் தமது இரண்டு பாரியைகளுடன் வைகுண்டஞ் சென்று அவ்விடத்தில் ஆயிரக்கணக்கான வருஷமிருந்து விஷ்ணுசேவை செய்துவிட்டு அவர் செய்த புண்ணியபலம் முடியும் சமையத்தில், விஷ்ணுவினு டைய சேவகர்களாகிய புண்யசீலன், சுசீலன் இவர்கள் சொன்ன படியே அயோத்தியில் சூரியவம்சத்தில் ஜனனமாயினர். அவர் தாம் நீர்! அப்படிப்பட்ட உமக்கு உமது மூன்று மனைவிகளிடத்தி

னும் மகாவிஷ்ணு இராமராகவும், ஆதிசேடன் இலட்சுமணராகவும், சங்கு சக்ரம் பரத சத்ருக்னர்களாகவும் அவதரித்திருக்கிறார்கள். சாட்சாத்விஷ்ணுவே உமக்குப் புத்திரனாக அவதரித்ததால் நீர் தன்னியரானீர்—என்று சொல்லி அரசனுக்கு மரியாதை செய்து அனுப்பிவிட்டார்.

பரமசிவன் கூறுகிறார்.

பிறகு தசரதர் இராம லக்ஷ்மணரை ஆலிங்கனம் செய்து கொண்டு கிருதார்த்தனானதை நினைத்துச் சந்தோஷமடைந்தார். இதன்பின் அயோத்தியா பட்டணத்திற்குத் தசரதர் தமது பரிவாரங்களுடன் புறப்பட்டுவர, அச்செய்தி யறிந்த மந்திரிமார்கள் பதாகை தோரணம் முதலியவைகளால் பட்டணத்தை அலங்கரித்து வீதிகளில் சந்தனக் குழம்புகளைத் தெளித்து மங்களவாத்தியங்கள் முழங்கத் தசரதரை எதிர்கொண்டழைத்து வந்து பட்டணப் பிரவேசஞ் செய்வித்தார்கள். அப்பொழுது இராமர் மகோத்ஸவத்தோடு வருகின்றாரென்பதை யறிந்த ஸ்திரீகள், அவரவர் வீட்டு மாடிகளில் தங்கள் குழந்தைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு நின்று ஸ்ரீராமர் பேரில் ஸ்வர்ணபுஷ்பம் முதலிய பலவிதமான புஷ்பங்களைப் பொழிந்தார்கள். சில மாதர்கள் தசரதர் முதலானவர்கள் முன்பு வந்து திருஷ்டி தோஷம் முதலியவைகள் நீங்க, நீராஜனம் கும்பதீபம் முதலியவைகள் எடுத்து உபசரித்தார்கள். இப்படிப்பட்ட மகோற்சவத்துடன் தசரதர் தமது அரண்மனைக்குச் சென்றார். அரண்மனையில் தசரதர், தம்மோடு கூடவந்த ஜனகருடைய மந்திரிமார்களுக்குத் தக்க மரியாதைசெய்து, விருந்து நடத்தி மிதிலைக்கு அனுப்பிவிட்டார். இவ்வாறாகவே வருஷந்தோறும் வரும் பண்டிகைகளுக்கு ஜனகர் தமது கிரகத்திற்குத் தசரதர் முதலியவர்களை யழைத்துவந்து மரியாதை செய்து அனுப்பி மகிழ்ந்தார். ஸ்ரீராமரும் தசரதரைத் தமது விளையாட்டுகளாலும் நடக்கைகளாலும் திருப்தி செய்வித்தார்.

இவ்வாறு வாழ்ந்து வரும்நாளில், சில வருஷஞ் சென்ற பிறகு, இராமருக்கு ஆறுமாதம் இளையவளான ஸீதாதேவி விவாக

மான பதினோராவது வருஷத்தில், ருதுவாகி மங்களஸ்நானஞ் செய்தாள். இச்செய்தியைஜனகருக்குத் தசரதர் தமது மந்திரிகள் மூலமாகத்தெரிவிக்க, அதைக்கேட்ட ஜனகர் தமது பத்தினிக ளுடனும் மந்திரி மார்களுடனும் அயோதிக்குவர, அவரைத் தச ரதர் எதிர் கொண்டுசென்று ஆலிங்கனஞ்செய்துகொண்டு வர வேற்று மகிழ்ச்சியடைந்து மங்களவாத்திய கோஷத்துடன் தமது அரண்மனைக்கு அழைத்து வந்தார்,

இதன்பிறகு தசரதர் இராமருக்கு ருதுசாந்திமுகூர்த்தம்நட த்த நிச்சயித்து உற்சாகத்துடன் பட்டணத்தை வாழை, கரும்பு, மாவிலை, புஷ்பம், கண்ணாடி மணிகள் முதலியவைகளால் அலங்க ரித்துப் பிறகு முகூர்த்த மண்டபம் ஏற்படுத்தி அம்மண்டபத் தையும் அலங்கரித்து வஸிஷ்டர் முதலியவர்களைக்கொண்டு நல்ல லக்னத்தில் ஸ்ரீராமரால் ஸீதைக்குப் கர்ப்பாதானம் செய்வித்து மகிழ்ந்தார். முகூர்த்தகாலத்தில், ஜனகர் தசரதருக்கும் அவர் பிள்ளைகளுக்கும் தமது பெண்களுக்கும் வஸ்திராபரண முதலிய வைகளளித்து மரியாதைசெய்து அயோத்தியிலேயே ஒரு மாத காலம் தசரதரோடு சுகமாக வசித்திருந்துபின் தமது பரிவாரங்க ளோடு மிதிலைக்குச் சென்றார். இராமரும் ஸீதையும் திவ்ய அலங் காரமமையப் பெற்ற ஸ்வர்ணமயமான தங்களுடைய கிரகத்தில் சுகபோகாதிகளை அநுபவித்துக்கொண்டு சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள். பிறகு அந்தந்தக் காலங்களில் லட்சுமண பரத சத் ருக்னர்களுக்கும் ஜனகர் முதலானவர்களை வரவழைத்து கர்ப்பா தான முகூர்த்தங்களை நடத்தித் தசரதர் பரமானந்த மடைந்தார். இதுமுதல் அயோத்தியாபட்டணத்தில் ஒவ்வொரு வீட்டிலும் மங்களம் பெருகி வந்தது. தரித்திர மென்பது எல்லோரையும் விட்டு நீங்கிற்று. எல்லோரும் புத்திர மித்ராதி செல்வத்தோடு யாதொரு குறைவுமின்றித் தேகவியாதி மனோவியாதியற்றுச் சுகமாக வாழ்ந்துவந்தார்கள். இராமர் முதலிய நால்வரும் தத்தம் அரண்மனையில் தமது பத்தினியோடிருந்து இல்லற வாழ்வை நடத்திவந்தார்கள்.

இராமர் நாடோறும் ஆதிகாலையில் எழுந்திருந்து சுத்தி செய்து கொண்டு பல்லக்கேறி ஸ்நானம் செய்யச் சரயுநதிக்குச்

சென்று, அந்நதிக்கரையில் பல்லக்கை நிறுத்திவிட்டு, மந்திரிக ளுடன் சரயுநதியின் மணற்பாங்கான இடத்திற்குச் சென்று அந்நதியை அங்கிருந்து வணங்கிப் பின் நதியிலிறங்கி சாஸ்தி ரோக்தமாக ஸ்நானஞ் செய்வார். பிறகு அநேகம் பிராமணர்க ளுடன் ஸந்தியாவந்தனாதி நியமநிஷ்டைகளைச் செய்துமுடித்து அந்தப் பிராமணோத்தமர்களுக்குப் பசு பூமி தானியம் முதலிய வைகளைத் தானங்கொடுத்து அவர்களையும் சரயுநதியையும் பக்தி யுடன் பூஜிப்பார். அப்பால்தங்கக்கயிறுகள் தங்கக்கட்டுகள் பட்டு கள், மணிகள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டு, திவ்யாலங்கார மான குதிரைகள் பூட்டப்பட்ட இரதத்திலேறிக்கொண்டு, சரயு நதியில் ஸ்நானஞ்செய்து பரிசுத்தனான,ஸாரதி ரதத்தைச் செலுத் தப் புறப்பட்டு, ரதத்திலுள்ள மணிகளும் கிண்கிணிகளும் கல கலவென்று சப்திக்கவும், தங்கத்தடி பிடித்த சேவகர்கள் முன் னே வழிகாட்டிக்கொண்டு செல்லவும்,மாதர்கள் தங்கள் தங்கள் கிருகத்திலிருந்து புஷ்ப வருஷம் வருஷிக்கவும் நீராஜனம் செய்ய வும் வீதி விலாசம் வந்து சூரிய கோடிப் பிரகாசம் பொருந்திய தமது அரண்மனைவாசலில் இரதத்தை விட்டு இறங்குவார். அங்கு ஸீதை கொடுக்கும் பாதார்க்கியம் ஆசமனீயம் முதலியவை களைப் பெற்றுக்கொண்டு தங்கப்பாதுகையிலேறி கிரகத்துக்குச் சென்று அக்னிஹோத்திர சாலை செல்வர். அங்குள்ள திவ்யாச னத்திலே தேவியுடனமர்ந்து சாஸ்திரோக்தமாக அக்னி ஹோத் திரம் செய்வார். பிறகு உலகத்தவர் யாவரும் ஈசுவராராதனை செய்ய வேண்டுவது அவசியமென்பதை அறிவிக்கத் தாம் ஸ்படிக லிங்கத்தில் பரமசிவனை ஆவாகனஞ்செய்து கர்மகாண்டப்படி வில் வம், துளஸி, புஷ்பம் முதலியவைகளால் அர்ச்சித்து, ஸீதா தேவி தனது கையால் கொண்டுவரும் பக்குவான்ன முதலியவை களை நிவேதனஞ்செய்து வேதியர்களுக்குத் தானங் கொடுத்துப் பூஜித்து, அவர்களுடைய ஆசீர்வாதம் பெற்றுப் பின்பு துளஸி, குரு,பசு குதிரை முதலியவைகளைப் பூஜிப்பார். சூரியநமஸ்காரம் பிரம்மயக்ம் முதலியன செய்து முடித்து ஸீதையுடன் குருமுக மாக புராண சிரவணஞ் செய்வார். அதன்பின் புராணிகரைப் பக்தியுடன்பூஜித்து, தமது பந்துக்களோடும் பிராமணர்களுடனும் தேங்காய்,விளாம்பழம், மாம்பழம்,மாதுளம்பழம், வாழைப்பழம்,

பலாப்பழம், முதலிய கனிகளையும் சுத்தமான நெய்யில் பக்குவம் செய்த பக்ஷியங்களையும் உபாகாரமாகச் செய்து பின் தாம்பூலம் எடுத்துக்கொண்டு தமது முகத்தைக்கண்ணுடியில் பார்த்துவிட்டு ஸீதை கண்டு ஆனந்தமடைய ரதாரூடராய் மந்திரி பிரதானிகள் சூழ வாத்தியகோஷங்கள் முழங்கத் தமது தாய்மார்கள் கிரகஞ் சென்று, அவர்களைச் சாஷ்டாங்கமாக வணங்கிப் பிரதட்சிண மாக வந்து தசரதரது கிரகம் சென்று சிம்மாசனத்தில் வீற்றி ருக்கும் அவரை வணங்கி அவரிடம் உத்தரவுபெற்று, ஆசனத் தில் உட்கார்ந்து, ராஜ்ய நிர்வாகங்களைக் கவனித்து வருவார். இங்கே சிறிது நேரம் கழித்துப் பிறகு, தந்தையிடம் விடை பெற்று அவரைப் பன்முறை வணங்கி, இரதத்தின் மீதேறி வாத் திய கோஷத்தோடு வாரஸ்திரீ நர்த்தனஞ் செய்யத் தமது கிர கஞ் சென்று ரதத்திலிருந்திறங்கி, பூமி புத்திரியாகிய ஸீதையி னுடைய உபசாரணையைப் பெற்றுக்கொண்டு தாம் கிரகத்திலிருந்து புறப்பட்டது முதல் திரும்பிவந்த வரையில் நடந்த சங்கதிகள் முழுமையும் அன்புடன் தெரிவித்து ஹாஸ்யம், கீதம் முத லியவைகளால் தமது பத்தினியை ஆனந்தமடையச் செய்து தாமும் மகிழ்ச்சி யடைவார்.

மத்தியான வேளையில் சரயு நதியிலோ, தமது கிரகத்திலோ, ஸ்நானஞ் செய்து மாத்தியான்னிகம் செய்து முடிப்பார். இவ் வாறு சரயு நதியில் நாடோறும் எவ்விடத்தில் ஸ்ரீராமர் ஸ்நா னஞ் செய்து வந்தாரோ அவ்விடத்திற்கு இராமதீர்த்த மென் னும் பெயருண்டாயது. அதில் சித்திரை மாதத்தில் ஸ்நா னம் ஜபதபாதிகள் செய்கிறவர்களுக்கு விசேஷமான பலனுண் டாகும் என்னும் மகிமையும் ஏற்பட்டது. மாத்தியான்னிகம் முடிந்ததும் ஸ்ரீராமர் தமது இஷ்டமித்திர பந்து ஜனங்களு டன் ஸ்வர்ண பாத்திரங்களில், திவ்ய பக்குவான்னங்களை ஸீதை கதிலாகவத்துடன் தன்னுடைய கங்கணம் தண்டை சதங்கை இவைகளிலிருந்து மனோகரமான சப்தமுண்டாகும்படி நடந்து கொண்டு பரிமாற அதனைக் கேட்டுக்கொண்டு மனமகிழ்ச்சியோடு போஜனஞ் செய்வார்; பிறகு இஷ்டமித்திரர்களுக்குத் தாம்பூல மளித்துத் தாமும் தாம்பூலந் தரித்துக்கொண்டு நாடி தூரம்

அப்பால் நடந்து, ஸீதை யருகிலிருக்கச் சற்றுநேரம் நித்திரை செய்து எழுந்து உடைதரித்துக்கொண்டு சஸ்திரம் தனுசுபாணம் இவைகளோடு இரதத்தின் மீதேறி இஷ்டர்களுடனும் பந்துக்களுடனும் பூந்தோட்டம் உத்தியானவனம் இவைகளுக்குச் சென்று அங்குள்ள விநோதங்களைப் பார்த்துவிட்டு நர்த்தனம் வாத்தியம் இவைகளுடன் தமது கிரகம் வருவார். பிறகு சாயங் காலத்தில் சந்தியா வந்தனம் அக்நி ஹோத்திரம் முதலியவை களைச் செய்து மறுபடியும் பரமசிவ பூஜைசெய்து, போஜனம் செய்வார். இதன் பின் உப்பரிகையின் மேல் இரத்தினம் ஸ்வர் ணம் மாணிக்கம் முதலியவைகளாலே அமைக்கப்பட்ட அழகிய மஞ்சத்தின் மீது ஸீதையோடு சயனஞ் செய்வார். இவ்வாறு ஒவ்வொரு நாளும் கிரமப்படி நடத்தி வருவார்.

இப்படிப் பன்னிரண்டு வருஷம் கடந்தன. அப்பால் தசரதர் ஸ்ரீராமருடைய அமானுஷீகமான நடத்தைகளையும் வஸிஷ்டர் முதலோர் இவர்களுடைய வசனங்களையும் கவனித்து ஸ்ரீராமரை நாராயணனென்றே நிச்சயித்துக்கொண்டு அவரை அழைத்து ஓர் இரகசியமான இடத்தில் உட்கார வைத்துக்கொண்டு வணக்கத் துடன் "இராமா! நீ பூபாரந் தீர்க்க அவதரித்த ஸ்ரீமந் நாரா யண மூர்த்தியல்லவா? உலகத்தவர் அறியாமையால் உன்னை எனது குமாரனென்று கொண்டிருக்கிறார்கள். பெண்டு பிள்ளை வீடு முதலியவைகளில் ஏற்பட்ட பற்றானது ஒழியாதாகையால் அந்தப் பந்தத்தினின்றும் விடுபட உன் மாயையால்மயங்கிய நான் உன்னிடம் ஞானோபதேசம்பெற விரும்புகின்றேன்" என்றார். இராமர் "பிதாவே! தாங்கள் கேட்டபடி நான் கூறுகின்றேன். என் மாதாவாகிய கௌஸல்யையும் அதைக் கேட்கட்டும்" என்று சொல்லி "கிளிஞ்சலில் வெள்ளியும் பழுதையில் பாம்பும் கானலில் ஜலமும் தோன்றுவதில் உலகமும் மாயா காரிய மானதால் பொய்யே யாம்! இவ்விதமே ஒவ்வொருவரும் தங்கள் ஆத்ம சொரூபத்திலேயே தேகாதிகளை அஞ்ஞானத்தில் கற்பித் துக் கொண்டிருக்கிறார்கள். ஞானிகள் தேகம் முதலியவைகளைப் பொய்யெனத்தேறி அஞ்ஞானமொழிந்து உண்மையான தங்கள் ஆத்ம சொரூபத்தையே பார்ப்பார்கள். ஆத்மா பரிசுத்தமானது.

சச்சிதானந்த சொரூபமுடையது. உலகங்களுக்கு ஈசர்களான பிர்மா முதலிய நாம் யாவரும் அந்த ஆத்மாவின் அம்சமேயாவோம். உலகங்கள் பிறந்து இருந்து இறந்தொழிவதற்காக மாயையின் மூலமாய் ஆத்மா வேஷதாரிபோல் பல ரூபங்கொண்டாலும் அம்மாயை தாமரை இலை நீர் போல், நித்யானந்த விக்கிரகமும் அழிவற்றதுமான ஆத்மாவோடு சம்பந்தப்படுகிறதில்லை. மக்கள் மனைவி மனையாக்கை இவைகள் நமதென்றுமதிக்கும் மதியைத்தன் விவேகத்தால் ஒடுக்கி சித்கனமான பிர்மத்தினிடத்தில் அதைச் செலுத்திவைத்துத் தான் காணும் எவையும் ஸ்ரீமந்நாராயண சொரூபமென்றே கருதுகிறவன் ஸம்ஸாரதுக்க நிவாரணம் பெறுவான். அதற்கு ஸத்தியம் தயை சாந்தம் சௌசம் சாந்தி இந்திரிய நிக்ரகம் அஹிம்சை பகவத்பக்தி வேதமார்க்காநுஷ்டானம் முதலிய நற்குணங்களை இடைவிடாமல் அநுஷ்டிக்க வேண்டும். இவைகளுக்கு எதிரிடையான திருட்டு சூது விவாதம் மாற்சரியம் டம்பம் கொடூரம் லோபம் பயம் கோபம் துக்கம் இகழ்ச்சியான காரியங்களிற் பிரவேசிப்பது வேதம் விப்பிரங்கள் சாதுக்கள் யதிகள் இவர்களுக்குக் குறைவு செய்தல், பிறர் சிந்தை, கோட்சொல்லல் முதலிய இவைகளை ஒருபொழுதுங் கொள்ளலாகாது. நீர் முன் ஜன்மத்தில் தவம் புரிந்து, என்னை உமக்குப் பிள்ளையாக வேண்டுமென வேண்டினமையால், அவ்விதமே நான் அவதரித்திருக்கின்றேன். நான் உமக்குச் சொல்லிய அக்ஞானபந்த நிவாரண மார்க்கத்தை வெளியிட வேண்டாம்"—என்று கூறினர். இப்படிக் கூறிய ஸ்ரீராமபிரானுடைய வசனாமிர்தத்தைக் கேட்டுத் தசரதர் தமது மாயாபந்தம் நீங்கி, ஸத்பாவ பரிபூர்ணராகி, புளகாங்கிதமுற்றுத் திடமான பக்திபெற்று, இராமருக்கு வந்தனஞ் செய்ய, ஸ்ரீராமர் உடனே "பிதாவே! நான் குழந்தையானதால், இப்படிச்செய்வது யுக்தமல்ல. இப்பொழுது மாயையினால் நரவேடம் கொண்டிருப்பதால், நீர் செய்வது உபாஸக காரணமாகும். ஆகையால் பக்தியுடன் என் சொரூபத்தை எப்பொழுதும் தியானம் செய்யும். என்

னிடத்திலேயே உமது ஆவி மனம் முதலியவைகள் யாவையும் அர்ப்பணம் செய்யும்'' எனக்கூறி எழுந்திருந்து, தாய்தந்தை யிரு வருக்கும் வந்தனமளித்து அவர்களிடம் விடைபெற்று, இரதமே றித் தம் கிரகம் போய்ச் சேர்ந்தார். ஸ்ரீராமர் சிலநாள் தமது தாய்மார் கிரகங்களிலும் சிலநாள் சகோதரர்கள் கிரகத்திலும் சிலநாள் தந்தையினுடைய பந்தியிலும் போஜனம் செய்வார். சில நாள் தமது கிரகத்திற்குத் தம்முடைய தாய்மார்கள், சகோதரர் கள் பிதா இவர்களையும் பட்டணத்திலிருக்கும் வேதியர்களையும் அன்போடு அழைத்துத் தம்முடைய பந்தியில் வைத்துக்கொண்டு போஜனம் செய்வார்.

இப்படி யிருக்குங் காலையில் ஸ்ரீராம தரிசனத்திற்காக தபோ வன வாசிகளாகிய முனிவர் கூட்டங்கள் ஒவ்வொரு நாளும் அயோத்திக்கு வந்து, இராமர் அரண்மனைக்குச் சென்று அவ ரைப் பார்த்துப் பலவிதமாகத் துதித்து, அவருடைய ஆதித்தியம் மேற்று, மனமகிழ்ந்து செல்வார்கள். அவர்களிற் சிலர் இரண் டொருநாள் அரண்மனையிலேயே வசித்து, ஸ்ரீராமருக்குப் புண் ணிய கதைகளைச் சொல்லி அவரைச் சந்தோஷப் படுத்திப் பின் தங்கள் தங்கள் ஆசிரமம் அடைவதுண்டு. சாத்வியும் இங்கிதஞ் ஞையுமான ஸீதாதேவி ஹாஸ்யம் கிரீடை முதலியவைகளில் எந் தெந்த சமையத்தில் எவைகளை இராமர் விரும்புகிறாரோ அவை களை அவரிஷ்டப்படி நடத்தி விவாகமான வருஷமுதல் பன்னி ரண்டு வருஷகாலம் வரையில் ஸ்ரீராமர் மகிழும்படி நடந்து வந் தாள். கிருத யுகத்தின் ஒரு வருஷமானது, திரேதாயுகத்தின் பத்து வருஷத்திலும் துவாபரயுகத்தின் நூறு வருஷத்திலும் கலியுகத்தின் ஆயிர வருஷத்திலும் சிரேஷ்ட மானதால் ஸ்ரீராமர் அநுபவித்த சுகமானது, தேவேந்திர போகத்திற் கும் மேலானதாகும். ஸ்ரீராமர் காலத்தில் பருவ நியமங்க ளின்றி எக்காலத்தும் பூ காய் பழம் முதலியவைகள் யாவும் கிடைத்துக் கொண்டிருந்தன. அநாவிருஷ்டி, தஸ்கரபயம், பிராணி ஹிம்சை முதலியவை கிடையா. இப்படியிருக்கையில்,

கைகேயியின் சகோதரனுகிய யுதாஜித்து, தன் மருமக்களாகிய பாத சத்துருக்னர்களைத் தசாதர் உத்திரவின் பேரில் அழைத்துக் கொண்டு தன் பட்டணமாகிய கேகயதேசம் சென்ருன். ஏ பார்வதி ' மனோகாமும் மங்களகாமுமான இராமருடைய இப்படிப் பட்ட பாலசரிதத்தைப் பக்தியுடன் கேட்பவர்கள் சர்வமங்களங் களையும் பெறுவார்கள். நீ கேட்ட நிமித்தம் இதைச் சுருக்கமாகக் கூறினேன்—என்ருர்.

5-வது சருக்கம் முற்றிற்று.

## 6-வது சருக்கம்.

### பரமசிவன் கூறுகிறார்.

இவ்விதம் திரேதாயுகத்தில் ஸ்ரீராமர் சுகத்தை யனுபவித்துக்கொண்டிருக்கையில் ஆகாசத்தில் நாரதமுனிவர் போகக் கண்டு, அவரை ஸீதை இலட்சுமணர் இவர்களுடன் வணங்கிப் பூஜைசெய்தார். நாரதர் ஸ்ரீராமரைப் பார்த்து "இராமா! நீர் இராவணனைக் கொன்றுவிட்டு இராஜ்யபரிபாலனம் செய்ய வேண்டு மென்பது தேவர்களுடைய விண்ணப்பமாகையால், அதைத் தெரிவித்தேன்" என்றார். அது கேட்ட இராமர் "முனிவரே! நான் அப்படியே செய்கிறேன்" என்று பதிலளிக்க, நாரதர் விடைபெற்றுக்கொண்டு சென்றார். பின்பு இராமர் ஸீதையைப்பார்த்து "ஸீதா! எனது தந்தை எனக்கு, இராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய விரும்பியிருக்கின்றார். அதைத் தடுத்து, இராவணாதிசங்காரநிமித்தம்நான் தண்டகாரண்யத்திற்குத்தம்பி இலட்சுமணனுடன் போக உத்தேசித்திருக்கின்றேன். நீ அயோத்தில் கௌஸல்யையும் என் தந்தையையும் சேவித்துக் கொண்டு வசித்துவா" என்று கூற, அதைக் கேட்டதும் ஸீதாதேவி அவரை நமஸ்கரித்து "ரகுபுங்குவா! நீர் என்னையும் காட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அதற்குக் காரணங்கள் மூன்றுள்ளன. நான் குழந்தையாயிருக்குங்காலத்தில் ஒருவேதிய சிரேஷ்டர் என்னிடம் வந்து என் கை ரேகையைப் பார்த்து, "நீ உன்னுடைய பர்த்தாவுடன் சிலகாலம் வனவாசஞ் செய்வாய்" என்று கூறினர். அவர் வாக்குப் பொய்யாகாதாதலால் தங்களோடு நானும் கூட வர இதொரு காரணம். மற்றொன்று யாதெனில், தாங்கள் எனது சுயம் வரத்தில் வில்லை இறுக்கச் சென்ற காலையில், தங்களுக்கு அவ்வில் பூமாலைபோல் ஆகவேண்டுமென்பதைக்கோரி சகல தேவர்களையும் பார்த்து "உங்கள் அனுகூல நிமித்தமாக நான் இராமருடன் பதினன்கு வருஷம் கானகவாசம் செய்கிறேன்" என்று செய்துகொண்ட பிரதிக்ஞை மற்றொரு

காரணமாம். இப்பொழுது நான் கூறிய இந்தப் பிரதிக்ஞை நிறைவேறும்படி செய்யவேண்டும். இன்னொரு காரணம், நான் கற்பாந்தர இராமாயண சிரவணஞ் செய்தபோது, ஸீதையை விட்டு இராமர் வனவாசஞ் செய்ததாகக் கேட்டறியேன். ஆகையால் என்னுடன்கூடவே தாங்கள் வனவாசத்திற்குப் புறப்படவேண்டும்'' என்று கூறியதைக் கேட்டு, ஸ்ரீராமர் ஸீதையை ஆலிங்கனஞ் செய்துகொண்டு மகிழ்ந்து அப்படியே செய்கிறேன்'' என்று கூறினர்.

பிறகு ஒரு நாள் தசரதர் ஸ்ரீராமருக்கு இளவரசப் பட்டம் கட்டவேண்டுமெனக் கருதி தமது குருவாகிய வஸிஷ்டரை வரவழைத்து வணங்கி "நமது இராமருக்குத் தாங்களிருந்து பட்டங் கட்டி வைக்க வேண்டும்'' என்று கூற, வஸிஸ்டர் அவரை அழைத்துக்கொண்டு கௌஸல்யையினுடைய கிரகஞ் சென்று கௌஸல்யை சுமித்திரை இவர்கள் பக்கமிருக்கத் தசரதரைப் பார்த்து, "நீங்கள் எல்லோரும் கேளுங்கள்; கைகேயின் வரத்தின்படி ஸ்ரீராமன் இலட்சுமணனுடனும் ஸீதையுடனும் நாளைய தினம் புறப்பட்டுத் தண்டகாரண்யம் சென்று, பிறகு இராவண வதம் செய்வான். ஆகையால் நீங்கள் யாவரும் ஒன்றுந் தெரியாதவர்கள்போல் அபிமானமற்றிருங்கள். தசரதரே! மந்திரி சுமந்திரன் மூலமாகத் தேசமன்னர்களை வரவழையும். முன் முனிவரிட்ட சாபத்தாலும் இராம விரகத்தாலும் நீர் அதிசீக்கிரத்தில் சொர்க்கலோகம் அடைவீர். பிறகு இராமர் இராஜ்யாபிஷேக மகோற்சவத்தி விருப்பதைக் கௌஸல்யை பார்த்துச் சந்தோஷிப்பாள். நீரும் விமானத்தின்மீது ஆகாசத்திலிருந்து அம்மகோற்சவத்தைப் பார்த்து மகிழ்வீர். வரும் விதியைப் பிரம்மாதிகளாலும் தடுக்க முடியாதன்றோ?'' என்று வஸிஷ்டர் கூறவே, தசரதர் சபைக்குச் சென்று மந்திரிகளை வரவழைத்துத் தூதர் மூலமாய்ப் பல தேசமன்னர்களையும் முனிபுங்கவர்களையும் யாவரையும் வரவழைக்கும்படி கட்டளையிட்டுப் பட்டண அலங்காரம் செய்யும்படிக்கும் உத்தரவிட்டார். அவ்விதமே மந்திரிமார்கள் தூதர்களுக்கு ஆக்ஞாபித்து, அயோத்தியெங்கும் மகர தோரணங்கள் பதாகைகள் ஸ்வர்ண கும்பங்கள் முதலியவைகளால் அலங்கரிக்கச் செய்தார்கள்.

இப்பொழுது வஸிஷ்டர் அரசனுடைய மந்திரியாகிய சுமந்திரனைப் பார்த்து, நாளைக்காலையில் நம்முடைய நடுப் பிராகாரத்தில் அலங்கரித்த சில கன்னிகைகளும் அலங்கரித்த பதினாறு யானைகளும் ஐராவதத்தின் வம்சத்திலே பிறந்த சதுர்த்தந்தமென்ற யானையும் சித்தமா யிருக்கட்டும். பல தீர்த்தங்கள்நிறைந்த ஆயிரக்கணக்கான தங்கக்குடங்களும் நல்ல புலித்தோல் மூன்றும் முத்தாரம் புனைந்து, தங்கக் காம்பினையுடைய வெண்குடையொன்றும் திவ்யமான மாலைகள் வஸ்திரங்கள் பூஷணங்கள் முதலியயாவும் சித்தமாயிருக்கட்டும். மேலும் நர்த்தனம் செய்யும் வாரஸ்திரீகள் பாடகர்கள் வாத்தியக்காரர்கள் முதலியவர்கள் அவரவர் தொழிலைச் சந்தோஷமாகச் செய்யட்டும். அதற்கு வெளிப் பிராகாரத்தில் ரதகஜ துரக பதாதிகள் ஆயுதங்களுடன் தயாராயிருக்கட்டும். நமது பட்டணத்திலிருக்கும் தேவாலயங்கள் முழுமையிலும் தேவதைகளுக்குப் பூஜை முதலானவைகள் சிரத்தையுடன் விமரிசையாக நடத்தப்படவேண்டும். பட்டாபிஷேகத்திற்காகவரும் மன்னர்கள் யாவரையும் விருதுகளை யெடுத்துக்கொண்டு சீக்கிரம் முகூர்த்தத்திற்கு வரும்படி செய்யுங்கள்''—என்று இவ்வாறு கட்டளையிட்டார். பிறகு வஸிஷ்டர் இரதமேறி இராமரிடஞ் சென்று அவருடைய மரியாதையைப் பெற்று அவரைப்பார்த்து "இராமா இவ்வுற்சவங்களுக்கு நீ நிமித்த மாத்திரமே யாவாய்! நாளைபதினம் புறப்பட்டு ஸீதை இலட்சுமணர்களுடன் தண்டகவனம் சென்று அவ்விடத்தில் பதினான்கு வருஷம் வாசஞ்செய்து,பிறகு இராவணனைச் சங்கரித்துப் பின்பு இராஜ்ய பரிபாலனம் பண்ணப் போகிறாய். உலகஸ்திதியை அநுசரித்து உன் தந்தை நாளையதினம் செய்ய யத்தனித்திருக்கும் இந்தப் பட்டாபிஷேகத்தை ஒப்புக்கொள். அதற்காக இன்றையதினம் நீயும் ஸீதையும் ஜிதேந்திரியர்களாகவும் பரிசுத்தர்களாகவும் உபவாச மிருந்து இரவில் பூமியில் சயனஞ் செய்ய வேண்டும்'' என்று சொல்லிவிட்டு இவ்விஷயத்தைச் ஸீதைக்கும் இலட்சுமணருக்கும் தெரிவித்து இரதமேறித் தசரதரது மாளிகை வந்து சேர்ந்தார்.

இச் சமையம் கௌஸல்யையும் சுமித்திரையும் குருமுகமாக இராமருடைய இராஜ்யாபிஷேகம் பொய்யென்பதை

யறிந்திருந்தும், இராமரிடங்கொண்ட அன்பினல் அவருடைய பட்டாபிஷேகத்திற்கு நேரிடவிருக்கும் இடையூறுகள் நீங்க வேண்டுவதைக் கோரி தேவபூஜை முதலியவைகளைச் செய்தார்கள். முனிவர்களை வைத்துக்கொண்டு பலிதானங் கொடுத்துச் சாந்தி ஜபஞ்செய்வித்தார்கள்.

இப்படியிருக்க அன்று சுமார் இருபது நாழிகைக்கு மேல் தாதியின் மகளாகிய மந்தரை என்பவள் மேல் மெத்தையின் மீதேறி நகரம் வெகு அழகாக அலங்கரிக்கப்படுவதைப் பார்த்து, இப்பட்டணம் அலங்கரிக்கப்படுவது யாது காரணம் பற்றியென வீதியில் நிற்கும் ஒரு கிழவியை விசாரிக்க, அவள் ஸ்ரீராமருடைய பட்டாபிஷேக நிமித்தமென்று கூற, மந்தரை உடனே கைகேயினிடஞ் சென்று, அவளிடத்தில் இச்சங்கதியைத் தெருவிக்கலானள். இதைக்கேட்டு கைகேயி மகிழ்ச்சியடைந்து, அவளுக்கு ஒரு இரத்னபரணத்தை வெகுமதியாகக் கொடுத்தாள். இந்தச் சந்தோஷ வேளையில், ஆகாசத்திலிருந்து ஓர் அசரீர வாக்குண்டாயிற்று. அதைக்கேட்டு மந்தரை மயங்கி, மகிழ்ச்சியடைந்திருக்கும் கைகேயியைப்பார்த்து, "புத்தியில்லாதவளே! உன்பாக்கியம் ஒழிந்தது. இப்பொழுது நீ சந்தோஷிக்கிருய், இராமனுக்குப் பட்டாபிஷேகமாய் விட்டால், நீ கௌஸல்யைக்குத் தாதியாய் விடுவாய்; ஆகையால் யான் சொல்வதைக் கேட்டு அந்தப்படி செய், நீ தசாதரிடமிருந்து பெறவேண்டிய இரண்டு வரங்களில், ஒன்றுல் பாதனுக்கு இப்பட்டாபிஷேகமாக வேண்டுமென்றும், மற்றொன்றுல இராமன் கால்நடையாய்க் காட்டுக்குச் சென்று அங்குப் பதினன்கு வருஷகாலம் வசிக்கவேண்டுமெனவும் கேள். அதற்காக இப்பொழுது நீ கோபகிரகத்தில் படுத்துக்கொள்" என்று சொன்னள். அதைக்கேட்டுக் கைகேயி, மந்தரை சொன்னது தனக்கு அநுகூலமா யிருக்கிறதென்று நினைத்து அவ்விதமே செய்தாள்.

அன்றிரவு தசாதர் கைகேயி கோபகிரகத்தில் சயனித்திருக்கிருளென்பதை யறிந்து. அவ்விடம் அதிவேகமாகச்சென்று அவள் கூந்தலை விரித்துக் கொண்டு ஆபாணங்களைக் களைந்து

விட்டுத் தரையில் படுத்துக் கொண்டிருக்கும் அலங்கோலத்தைக் கண்டு, நாம் கொடுத்திருக்கும் இரண்டு வரங்களுள் ஒன்றைப் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டு மென்பதற்கும், மற்றொன்றை இராமன் காட்டிற்சேக வேண்டு மென்பதற்கும் உபயோகிக்கக் கருதியிருக்கிறாளென்பதைத் தெரிந்து உடனே மூர்ச்சைபோய் விட்டார். இச்சங்கதி மந்திரி சுமந்திரன் கேட்டு, அரசனிடஞ்சென்று, அவர் பக்கத்திலிருக்கும் கைகேயியைப் பார்த்து சங்கதி யாதெனக் கேட்க, அதற்கவள் இப்பொழுது அரசன் இராமனைப் பார்க்க விரும்புகிறதனால், அவனை இவ்விடத்திற் கழைக்கவேண்டுமெனக் கூற மந்திரி "அரசனது உத்தரவின்றி யான் அழைக்க நியாயமில்லை" என்றார். உடனே தசரதர் ஈனசுவரத்தோடு "அப்பா! மந்திரி! சீக்கிரம் இராகவனை இவ்விடம் அழைத்துவா" என்றார். மந்திரி உடனே சென்று இராமனை யழைத்துவர, இராமர் வந்து தமது தந்தையைப் பார்க்கும்போது கைகேயி இராமனைப் பார்த்து "அப்பா உமது தந்தை முன்கொடுத்த வரத்தின்படி உன்னைத் தண்டகாரண்யம் இன்றையதினமே அனுப்பக்கேட்டேன்" என்று கூற, "இராமர் நல்லது அம்மா! அப்படியே செய்கிறேன்" எனப் பகர்ந்து தசரதரைப் பார்த்து "அன்புள்ள பிதாவே! நீர் சிறிதும் வருத்தப்பட வேண்டாம்; எனது சிறியதாயின் மனக்கவலை தீர யான் தண்டகாரண்யம் செல்லுகிறேன்" என்று கூறினார். இதைக் கேட்டதும் "ஆ! குழந்தாய்! என்னை விட்டுப் பிரிந்து கடும்புலி வாழும் காட்டிற்குப்போக உன் மனம் எப்படி விரும்பியது" என்றுகூறிப் பயந்து அக்ஷணமே பழையபடி மூர்ச்சை யடைந்தார். உடனே இராமர் தமது தந்தையை மூர்ச்சை தெளிவித்து, "நான் இப்பிரதிக்ஞையை நிறைவேற்றிவிட்டுச் சீக்கிரம் உமது பக்கம்வந்து விடுகிறேன். நான் இப்பொழுது புறப்படாவிட்டால், என்சிறியதாயினுடைய மனக்கவலை தீராதாகையினால், என் தாய் முதலியவர்களைச் சமாதானஞ் செய்துவிட்டு இப்பொழுதே உமக்கு வந்தனந் தந்து சுகமாகக் காட்டிற்குச் செல்லுகிறேன்" என்று சொல்லி அவ்விடமிருந்து தமது தாய் கௌஸல்யை கிரகஞ் சென்று அவளைப் பார்த்துச் சமாதானஞ் சொல்லிப் பிரதக்ஷண நமஸ்காரஞ்

செய்து, அவ்விடமிருந்து தமது கிரகம் சென்று ஸீதைக்குச் சகல விஷயங்களையுந் தெரிவித்தார். இச்சங்கதி கேட்ட லட்சுமணர் ராமர் பக்கம் சென்று "அண்ணு! தாங்கள் தனியே போவது சரியல்ல; எங்களிருவரையும் கட்டாயமாய் அழைத்துக்கொண்டு போகவேண்டும்" என்று பிரார்த்திக்க, ராமரும் "சரி, சீக்கிரம் புறப்படுங்கள்" என்று வேதியர்களை யழைத்து யாத்திரா தானம் செய்து, அக்நிஹோத்தராக்நி ஸீதை லட்சுமணர் இவர்களுடன் கால்நடையாகத் தமது தந்தையைப் பார்க்கப் புறப்பட்டு வர, அதைப் பார்த்த, பட்டணத்து ஜனங்கள் மிக வருத்தமடைந்து எல்லாரும் வீதியில் சூழ்ந்துகொண்டிருக்க, ராமர் தந்தையிடஞ்சென்று வணங்கினர். பின் கைகேயியைப் பார்த்து, "அம்மா! காட்டுக்குப்போக உத்தரவு தாரும்" என்று சொல்ல, கைகேயி மரவுரி முதலியவைகளைக் கொடுத்தாள். அவைகளை ராமர் வாங்கி முதலில் தாம் தரித்துக்கொண்டு பிறகு ஸீதைக்குக் கொடுத்தார். ஸீதை அதனைத் தரித்துக்கொள்ளத் தெரியாமல் மயங்கும்போது, ராமர் இவ்விதம் தரித்துக் கொள்ளென்று சொல்ல, அதை அருகிலிருந்து கேட்ட வஸிஷ்டர், மிகவும் கோபங்கொண்டு கைகேயியைப்பார்த்து, "புத்திகெட்ட பாபியே! ராமன்மட்டு மல்லவோ காட்டுக்குப் போகவேண்டுமென்பது உன் வரம்; அவனுக்கு மரவுரி கொடுத்தது நியாயமே. ஏ துஷ்டே! ஸீதைக்கும் மரவுரி கொடுத்தது யாது காரணம்பற்றி" எனச் சினந்து, திவ்ய வஸ்திரங்களை வரவழைத்து ஸீதைக்குக் கொடுத்தார். இப்போது தசரதர் தமது மந்திரியை யழைத்து, "மந்திரீ! இம்மூவரும் காட்டுக்குச் செல்ல இரதத்தைச் சித்தப்படுத்து" என்று கட்டளையிட்டார். பிறகு ராமர் தமது தாய் தந்தையரை வலம் வந்து அவ்விடமிருந்து வெளியே வந்து அங்குத் தயாராயிருக்கும் இரதத்தில் ஸீதை லட்சுமணருடன் ஏறி, ஸாரதியைப் பார்த்து "ஏ ஸாரதி! சீக்கிரம் இரதத்தைச் செலுத்து" என்று உத்தரவிட்டு, அருகிலிருந்த கௌஸல்யை, சுமித்திரை, தசரதர், பட்டணத்து ஜனங்கள் யாவருக்கும் சமாதானங்கூறி, புறப்பட்டு வெகு சீக்கிரத்தில் தமஸா நதியின் கரைக்கு வந்து சேர்ந்தார். இப்பொழுது மகாநுபாவராகிய ராமருக்கு வயது பதினெட்டு,

இது மாசிமாதம் சுக்கிலபட்சம் பஞ்சமி திதி கூடிய சிரேஷ்ட மான நாளில் நடந்தது.

இங்ஙனம் ராமன் வரும்போது வழியில் நல்ல சகுனங்களா யின. இந்திரன் முதலிய தேவர்கள் ராமர் முதலிய மூவர்க்கும் வழியில் சிறிதும் சுகக் குறைவுண்டாகா வண்ணம் வேண்டிய சௌகரியங்களைச் செய்தார்கள், தமஸா நதிக்கரையில் ஒருநாள் தங்கி, பிறகு அவ்விடமிருந்து சிருங்கிபேரபுரம் சென்று அப்பட் டண அரசனுகிய குகனுடைய உபசாராதிகளைப் பெற்று அன் றிரவை அவ்விடம் கழித்தார். பின் அவ்வரசன் மூலமாக ஆலமரத் துப் பால் வரவழைத்து, ஜடை தரித்துக்கொண்டு ஸீதை லக்ஷ்  மணருடன் ஓடமேறினர். பின் சுமந்திரனுக்கு இரதத்துடன் அயோத்திசெல்ல விடைகொடுத்தார். இப்பொழுது குகன் தன் ஞாதிகளைக்கொண்டு கங்கையில் ஓடத்தைச் செலுத்த அவ்வோ டம் கங்காநதியின் மத்தியில் வரும்போது ஸீதை "ஏ கங்காதேவி! உன்னை வணங்குகிறேன். நாங்கள் மூவரும் வனவாசத்தை முடித்து க்ஷேமமாகத் திரும்பி வரும்போது, உன்னை மது, மாமிசம், பலி முதலியவைகளால் நான் பூஜிக்கிறேன்" என்று பிரார்த்திக்க, ஓடமும் விரைவில் அக்கரை போய்ச் சேர்ந்தது. உடனே ராமர் முதலிய மூவரும் ஓடத்தைவிட்டிறங்கி, குகனுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டு, அன்றிரவு அந்த நதிக்கரையிலிருந்து மறுநாட்காலை யில் மெதுவாக நடந்து பரத்வாஜ ஆசிரமம் போய்ச்சேர்ந்து, அம் முனிவருடைய பூஜையை ஏற்றுக்கொண்டு அவ்விடங் கொஞ்ச நேரந் தங்கியிருந்து, பிறகு பிரயாகை க்ஷேத்திரத்திற்குச்சென்று அங்குள்ள யமுனு நதியை வணங்கி, அதைத்தாண்டி மகாவனம் சென்று அங்கிருந்து வான்மீகாசிரமம் போய், அவருடைய பூஜையை ஏற்றுக்கொண்டு, அங்கே கொஞ்சநேரந் தங்கினர்கள். பிறகு, சித்ரகூட பர்வதம் அடைந்தார்கள். இவ்விடத்தில் லக்ஷ்  மணரால் மனேகரமான பர்னசாலை ஏற்படுத்திக்கொண்டு, மிருக மாமிசத்தை வரவழைத்து, வாஸ்துபலி கொடுத்தார் ராமர். சய னம், ஆசனம், பாகம், அக்நிஹோத்திரம், தேவபூஜை முதலிய வைகள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே ஒவ்வொரு ஆசிரமம் மரம் கொடிகளாலடைத்துக் கொண்டார். அவ்வாசிரமங்களில்

மூவரும் அயோத்தியிலிருப்பது போலவே வசித்து வந்தார்கள். அப்பொழுது அங்குவரும் முனிவர்களுக்கு, கந்தமூலம் மாமிசம் பழம் முதலியவைகள் கொடுத்து அதிதி பூஜை செய்தார்கள்.

இப்படியிருந்து வருஞ் சமயத்தில், ஒரு நாள் ராமர் ஸீதையின் மடியில் தமது சிரஸை வைத்துப் படுத்து நித்திரை செய்துகொண்டிருந்தார். இதைப் பார்த்த இந்திரன் புத்திரனாகிய ஜயந்தன் ஒரு காக்கை உருவங்கொண்டு, அவ்விடம் வந்து, மிருதுவும் சிவந்ததுமான ஸீதையினது * பெருவிரல் மாமிசத்தைப் புசிக்கக் கருதி, தன் நகத்தாலும் மூக்கினாலும் கீறிக் கொத்தினான். ஸ்ரீ ராமருடைய நித்திரைக்குப் பங்கம் வருமென்று பயந்து, அக்காக்கையை ஸீதை தடுக்கவில்லை. ஸ்ரீராமர் நித்திரை தெளிந்து எழுந்து ஸீதையினது பெருவிரலிலிருந்து இரத்தம் பெருகுவதையும் காக்கையானது தன் வாயில் இரத்தம் ஒழுக ஓடுவதையும் பார்த்து, அவ்வாயசத்தின்பேரில் இஷீகாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தார். அந்த அஸ்திரமானது காக்கையைத் தொடர்ந்து வெகு தூரம் துரத்திச்சென்றது. இந்தப் பிரம்மாண்ட கோளத்திற்குள் அந்த அஸ்திரத்தினின்றும் அவ்வாயசத்தைக் காப்பவர் யாருமில்லாததனால் கடைசியாக அது ராமரையே சரணம் புகுந்தது. ஸ்ரீராமர் நாரதமுனிவர் கூறியபடி அக்காக்கையினுடைய ஒரு கண்ணைமட்டும் நிமிஷநேரத்தில் இரையாகக் கொள்ளும்படி அந்த அஸ்திரத்திற்கு ஆஞ்ஞாபித்தார்; இவ்விதம் பல சந்தோஷகரமான காரியங்களைச் செய்துகொண்டு சுகமாக இருந்து வந்தார்.

இங்கு இப்படியிருக்க, சுமந்திரன் இரதத்தோடு அயோத்திக்குச்சென்று தசரதரிடம் ராமர் காட்டுக்குச் சென்றதைத் தெரிவித்தான். அதைக்கேட்டதும் அரசன் "ஏ ராகவா!" என்று சொல்லிக்கொண்டு பிராணனை விட்டார். இதையறிந்த வஸிஷ்டர் தசரதரது சரீரத்தைத் தைலகடாரத்திற் போட்டுப் பாதுகாக்கச் செய்து, கைகேயின் புத்திரர்களாகிய பரத சத்ருக்னர்களை யுதாஜித்தினுடைய நகரத்திலிருந்து தூதர்களைக் கொண்டு சீக்கிரம்

---

* பிரசித்த ராமாயணத்தில் ஸ்தனமென்று கூறியுளது இது கற்பாந்தரபேதம்.

அழைத்துவரச் செய்தார். அவர்கள், அயோத்திக்கு வந்ததும் தங்கள் தாய் கைகேயி, செய்த துஷ்டச் செய்கைகளைக் கேட்டு இவளை மிகவும் அவமதித்துப் பிறகு, தந்தை தசாதரது சரீரத்துக்குச் சரயூ நதியில் வஸிஷ்டர் கூறிய விதிப்படி அக்நி ப்ரதானம் செய்தார்கள். வீரர்களுக்குத் தாய்மார்களாகையால் கௌஸல்யை முதலிய மூவரும் பர்த்தாவுடன் உடன்கட்டை யேறவில்லை. பரதன் பின் நடக்கவேண்டிய காரியங்களையும் சரிவர முடித்துவிட்டு, தன் தாய் கைகேயின் முன்பாக மந்தரை என்பவளைத் தக்கபடி தண்டித்தான். தன் தாய் தன்னைப்பலதரம் பட்டாபிஷேகம் செய்துகொள்ளும்படி பிரார்த்தித்தும் அதற்குச் சம்மதிக்காமல், ஸ்ரீராமரை வனவாசத்திலிருந்து திருப்பி நகரத்துக்கழைத்துவரும்பொருட்டு மந்திரிபிரதானிகளோடு தன் தாய்மார்களையும் அழைத்துக்கொண்டு நகரவாசிகள் சூழ்ந்துவர, அயோத்தியாபட்டணமிருந்து பிரயாணமாகி, கங்கைக் கரைக்குச் சென்று, அவ்விடத்தில் குகனுடைய பூஜையை ஏற்றுக்கொண்டு உடனே பரத்வாஜாசிரமம் போய்ச்சேர்ந்தான். இங்கு பரத்வாஜ முனிவர் தாமிருக்குமிடத்தையே தபோபலத்தால் சொர்க்கமாகச்செய்து, வந்திருக்கும் சைன்னியங்கட்கெல்லாம் உபசாரங்கள் செய்தார். பரதன் அந்தமுனிவரை வணங்கி அவர் கூறியவழியேசென்று சித்திரகூட பர்வதம் போய் ஸீதையுடனும் லட்சுமணருடனும் பர்ணசாலையில் வசித்து வரும் தன்னுடைய தமையனாராய ராமரைக் கண்டு வணங்கினன். ஸ்ரீராமரும் பரதனைக் கட்டித்தழுவ, அவன் நடந்த சங்கதிகள் முழுவதையும் அவருக்குத் தெரிவித்தான். ஸ்ரீராமர் தமது தந்தை இறந்ததைக்கேட்டு, கங்கைக்குச் சென்று ஸ்நானம் திலதர்ப்பணம் முதலிய கர்மங்களைச் செய்து, முடித்துப் பர்ணசாலையை அடைந்தார். பிறகு பரதன், குருவாகிய வஸிஷ்டரோடு ஸ்ரீராமரைப் பார்த்துப் பட்டணத்துக்குவந்து பட்டாபிஷேகஞ் செய்து கொள்ள வேண்டுமென வேண்ட, ஸ்ரீராமர் அது முடியாதென்று மறுத்து விட்டார். பரதன் இதைக்கேட்டதும் தர்ப்பையை விரித்து, அதில் 'இனியான் ஆகாரம் புசிப்பதில்லை' எனக் கூறிப் படுத்துவிடவே, ஸ்ரீராமர் அவன் பிடிவாதத்தைக் கண்டு, அவனைச்சமாதானம் பண்ணும்படி குருவாகியவஸிஷ்டருக்

குச் சொன்னார். வஸிஷ்டர் பரதனுக் கருகில்வந்து "ஏபரதா! மகா விஷ்ணுவே ராமராகப் பூபாரந்தீர்க்க அவதரித் திருக்கிறார். அவர் ராவணாதி ராட்சஸர்களைக் கொல்வதற்காகப் புறப்பட் டிருக்கிறார். ஆதலால் இவ்விஷயத்தில் நீ பிடிவாதம் செய்வது சரியல்ல" என்று ஸ்ரீராமருடைய உண்மையைப் போதித்தார். பின்பு பரதன் ஸ்ரீமந் நாராயணரே ராமரென்று அறிந்து, அவ ரைப் பார்த்து "அண்ணா! தங்களுடைய ராஜ்யபாரம் ஏற்கவும் நாள் தோறும் யான் வணங்குவதற்கும் தங்கள் பாதுகைகளை எனக்குக் கொடுக்கவேண்டும். நானும் ஜடாவற்கல தாரியாய் இந் தப் பதினான்கு வருஷ காலமும் தங்களை எதிர்பார்த்த வண்ண மாகப் பட்டணத்துக்கு வெளியிலேயே யிருந்து, ராஜ்யத்தை நடத்திவந்து பதினைந்தாவது வருஷத்து முதல் நாள் சூரிய அஸ்த மனம் வரையில் காத்திருந்து, பிறகு தங்களைக் காணாவிடில், அக்நிப்பிரவேசஞ் செய்து விடுவேன். இது என்னுடைய ஸத் தியமான பேச்சு" என்று கூறினான். அதைக் கேட்டதும் ராமர், "அங்ஙனமே ஆகட்டும்" என்று கூறி இரத்தினங்களால் அலங் கரித்த தமது பாதுகைகளை ராஜ்ய பரிபாலன நிமித்தம் பரத னிடம் கொடுத்து, அவன் அயோத்திக்குப் போக உத்தரவளித் தார். பரதன் அந்தத் திவ்ய பாதுகைகளைப் பெற்று அவைகளைத் தனது சிரசில் வைத்துக்கொண்டு, தான் கிருதார்த்தனாகி விட்ட தாக நினைத்து, ராமரைப் பன்முறை வலம்வந்து வணங்கி விடை பெற்றுக் கொண்டு, தாய் மார்களுடனும் சேனைகளுடனும் அயோ த்திக்குப் புறப்பட்டான். இப்பொழுது கைகேயி ஸ்ரீராமரைப் பார்த்து "ஏ ராமா! நான் செய்தது தவறு; அதை நீ மன்னிக்க வேண்டும்" என்று பலதடவை பிரார்த்தித்தாள். அதற்கு ராமச்சந்திரர் "அன்புள்ள தாயே! நீங்கள் ஒரு அபராதமும் செய்தவரல்லர். இனி வரப்போகும் சம்பவத்தின் காரணமாக எனது இஷ்டப்படி மந்தரையும் ஆகாசவாணியும் உங்களை மயங் கச் செய்தார்கள். ஆகையால் உங்களிடத்தில் எனக்குச் சிறிதும் கோபங் கிடையாது. சுகமாகப் பட்டணத்துக்குப் போங்கள்" என்று சொல்லவும், கைகேயி பரதனோடு அயோத்திக்குப் புறப் பட்டாள். பரதன் எல்லாருடனும் வந்தவழியே போய் அயோத்

தியின் எல்லைக்குவந்து, நாரதர் யாவரையும் அவருடைய கிரகத்தில் சுகமாக இருக்க உத்தரவிட்டு, வெளியில் நந்திகிராமம் எனத் தானிருக்கும் இடத்துக்குப் பெயரிட்டு, அங்கே ஸிம்மாசனம் ஏற்படுத்தி ஸ்ரீராமருடைய இரத்தினப் பாதுகைகளை அச்சிம்மாசனத்தில் ஏற்றித் தான் காய் கனி கிழங்குகளைப் புசித்துக் கொண்டு ராஜகாரிய முழுவதையும் அப்பாதுகைகளின் ஸந்நிதானத்தில் தெரிவித்து, சதாகாலமும் முனிவர் பரபிர்மத்தைத் தியானிப்பதுபோல், ஸ்ரீராமரைத் தியானித்துக்கொண்டு ராஜ்ய பரிபாலனம் நடத்தி வந்தான்.

ஸ்ரீ ராமர் சித்திரகூட பருவதத்தில் அநேக முனிவர்கள் சூழ வசித்தார். அப்பொழுது ஸீதையின் பிறைபோன்ற நுதலில் சுந்தரத்திலகமிட்டு, கன்னத்தில் பலவித வர்ண புஷ்பரசங்களால் கொடி யெழுதிக்கொண்டு விநோதமாக விருந்தார். இப்படி இருக்கையில் பட்டணத்து ஜனங்கள் அடிக்கடி அவ்விடம்வந்து, அன்புடன் தம்மைத் தரிசித்துப் போவதைக் கண்டு, அத்தொந்தரவினின்றும் விலக, அம்மலையைவிட்டு அத்திரி மஹரிஷி ஆசிரமஞ் சென்று அவரைவணங்கி அவருடைய உபசாரணைபெற்று, அவரிட்ட ஆசனத்தில் உட்கார்ந்தார். பிறகு ஸீதை அத்திரிமஹரிஷியின் சொற்படி, அவருடைய பத்தினியாகிய அநசூயையைப் பார்த்து வணங்க, அநசூயை ஸீதையைத் தழுவித் தனது மடிமீது உட்கார வைத்து, விசுவகர்மாவினால் செய்யப்பட்ட இரண்டு கர்ண குண்டலங்களும் இரண்டு வெண்பட்டுகளும் அங்கராகமும் கொடுத்து உபசரித்து “ஏ ஸீதே! இவ்வங்காரகத்தைச் சரீரத்தில் தரித்துக் கொண்டால் அழகு எப்பொழுதும் மாறாது. பாதிவிருத்தியத்தைப் பாதுகாத்து ஸ்ரீராமபிரானிடம் உன்னை அடையும்படி செய்யும். ராமர், லட்சுமணருடனும் உன்னோடும் சுகமாக வனவாசஞ் செய்து முடித்துத் தமது ராஜ்யத்துக்குப் போய்ச் சேர்வார்” என்று அநுக்ரகித்தாள். இப்பொழுது அத்திரிமுனிவர் ராமர் முதலிய மூவருக்கும் தக்கபடி போஜனம் செய்வித்தார். இங்கே ராமர் மூன்று நாள் வசித்திருந்து பின் முனிவரை வணங்கி, மற்றொரு வனம் சென்றார். இவ்விதமாக வருஷம் ஒன்றைக் கழித்தார். ஏ பார்வதீ! ராமருடைய பாலசரித்திரமானது உனக்குச் சிறிது விளக்கப்பட்டதென்று பரமசிவன் கூறினார்.

6-வது சருக்கம் முற்றிற்று.

## 7-வது சருக்கம்

### பரமசிவன் கூறுகிறார்.

ஏ பார்வதி! பிறகு ராமர் வில்லை நாணேற்றிக்கொண்டு தண்டகாவனத்தில் ஸீதா லட்சுமணர்களுடன் பிரவேசித்து வழியில் தாம் முன்பும், தமக்குப் பின்னால் ஸீதையும், ஸீதைக்குப்பின்னால் நாணேற்றின வில்லைக் கையிற்கொண்ட லட்சுமணனுமாக நடந்து சென்று, அவ்வனத்தில் ஒரு தடாகத்தைப் பார்த்து அதிலிறங்கிச் சுகமாக ஸ்நானஞ்செய்து, தீர்த்தபானம் பண்ணி அத்தடாகக் கரையிலிருந்த மரங்களில் பழுத்திருந்த பழங்களைப் பறித்துப் புசித்துவிட்டு, அங்கே சற்று நின்றார்கள்.

இச்சமயத்தில் விராதனென்னும் ஒரு ராட்சஸன், கண்டவர் அஞ்சத்தக்க, பூதாகிருதியான சரீரத்தோடு வாயில் கோர தந்த முடையவனாய், யாவரும் பயப்படத்தக்க பெருத்தசத்தமிட்டுக்கொண்டு தன்தோளில் அநேக மானுடர்களை ஒரு சூலாயுதத்தில் குத்திக் கோத்துக்கொண்டு வழியில் தன் எதிர்ப்படும் புலி, யானை, எருமை முதலியவைகளைக் கொன்றுதின்றுகொண்டு தங்களை நோக்கி வருவதைப் பார்த்தார்கள். இப்பொழுது ராமர் "ஏ லட்சுமணா! ஸீதையைக் காத்துக்கொண்டிரு. நான் இதோ வரும் இவ்வரக்கனைச் சங்கரிக்கப் போகிறேன்" என்று கூறினார். இதற்குள் விராதனென்னும் அவ்வசுரன் இவர்களை நெருங்கி, ஒவ்வொருவரையும் தனித்தனியே "நீங்கள் யார்" என்று கேட்க, ராமர் தாம் இன்னாரென்றும் தாம் காட்டுக்கு வந்த காரணம் இதுவென்றும் சொன்னார். விராதன் உடனே சிரித்து "யான் உலகப் பிரசித்தனான விராதனென்பதை உணராய்போலும்? எனக்குப் பயந்து இக்காட்டின்கண் வசித்த அநேக முனிவர்கள் இருந்த இடந்தெரியாமல் ஓடிவிட்டார்கள். நீங்களிருவரும் உயிர் பிழைக்க வேண்டுமானால், உங்கள் ஆயுதங்களை இவ்விடம் எறிந்துவிட்டு வேகமாக ஓடிவிடுங்கள். இல்லாவிடில் இதே நிமிஷத்தில் உங்களிருவரையும் புசித்து விடுவேன்" என்று சொல்லிவிட்டு, உடனே தன் பெருங் கரங்களை நீட்டிக்கொண்டு ஸீதையைத் தூக்கப்போனான். அந்தக்ஷணமே ஸ்ரீராமர் ஒரு பாணம் எய்து, அவனுடைய இரண்டு கரங்களையும் துண்டு செய்து விட்டார். பிறகு விராதன் மிகவும் கோபமடைந்து, வாயைக் குகைபோல்

திறந்துகொண்டு ராமரிடம் எதிர்த்து ஓடி வர ராமர் மற்றொரு பாணம் விடுத்து வேகமாக ஓடிவரும் அவனுடைய இரண்டு கால்களையும் வெட்டித் துண்டாக்கினர். இப்பொழுது விராதன் தரையில் விழுந்து புரண்டு தன்னுடைய பூதாகாரமான உடலைப் பாம்புபோல் வளைத்து வளைத்து நகர்ந்து முன்போல் வாயைத் திறந்துகொண்டு, ராமர் முன்வந்து எதிர்த்தான். இதைக் கண்டதும் ராமர் ஆச்சரியப்பட்டு, ஓர் அர்த்த சந்திரபாணத்தைப் பிரயோகித்து அவன் உயிரை மாய்த்து விட்டு ஸீதையிடம் சென்றார். ஸீதை தன் நாயகனைக் கண்டதும் ஸந்தோஷமடைந்து ஆலிங்கனஞ் செய்துகொண்டு புகழ்ந்தாள். கருணையங்கடலாகிய ராமபிரான் இப்படி விராதவதஞ் செய்ததைப் பார்த்த, தேவ கணங்கள் மகிழ்ந்து வாத்தியங்களை முழக்கினர்கள். பிறகு விராதனுடைய தேகத்திலிருந்து திவ்விய புருஷரூபத்துடன் ஒருவன் கிளம்பி ராமரிடம் சென்று வணங்கி அவரைப் பார்த்து, "கருணாநிதியே? முன் நானொரு வித்யாதரனாக இருந்தேன்; தூர்வாச மகரிஷியின் சாபத்தை யடைந்து, ராட்சஸனானேன். இப்பொழுது தங்களால் அச்சாபம் விமோசனமாயிற்று" என்று கூறி அவரைத் துதித்துவிட்டு, அப்பொழுது தேவலோகத்திலிருந்து வந்திருந்த விமானமேறிச் சொர்க்கலோகம் சென்றான்.

இவ்விடத்திருந்து ராமர் ஸீதையுடனும் லட்சுமணருடனும் சர்வசுக நிதியாகிய சரபங்காசிரமமடைந்து, அவரை வணங்கி அவருடைய உபசரணைகள் பெற்று, அங்கே ஓரிரவு தங்கினர்கள். மறுநாள் விடிந்ததும் சரபங்கர் ராமருக்குத் தமது புண்ணியத்தைச் சமர்ப்பித்துத் துதித்து மகிழ்ந்து ஜொலிக்கும் சிதையில் பிரவேசித்து, ஸ்தூல சரீரத்தைத் தகித்துவிட்டு, விஷ்ணுகணங்களால் கொண்டு வரப்பட்ட விமான மேறி வைகுண்டம் அடைந்தார். பிறகு அவ்விடமிருந்து ராமர் முதலிய மூவரும் சுதீக்ஷண முனிவருடைய ஆசிரமம் சென்று அவரை வணங்கி, அவருடைய உபசரணைகளை ஏற்றுக்கொண்டு சுகமாக வசித்து வந்தார்கள்.

இப்படி வசித்துவரும் நாளில், அவ்வனத்திலுள்ள ஆசிரமங்களிலிருந்து அநேக முனிவர்கள் ராகவரைத்தரிசிக்கவந்து கூடி

தரிசிக்கவந்தும்ஒவ்வொருவரும் இராமரைவணங்கித் துதித்து அவரைச் சீதை லக்ஷ்மணருடனும் தத்தம் ஆசிரமங்களுக்கு அழைத்துச்சென்று சிலர் ஒருநாளும் சிலர் மூன்று நாளும் சிலர் ஐந்து நாளும் சிலர் ஏழு நாளும் சிலர் ஒரு பட்சகாலமும் சிலர் ஒரு மாத காலமும் சிலர் ஒன்றரைமாத காலமும் சிலர் மூன்றுமாத காலமும் சிலர் ஐந்து மாதமும் சிலர் ஆறுமாதமும் சிலர் எட்டு மாதமும் சிலர்பதினொரு மாதமும் சிலர்வருஷகாலமும் தங்களோடு வசிக்கும்படிசெய்து ஒருவரைவிட ஒருவர் மேன்மேலும் விசேஷமாக உபசரித்துத் திருப்திகரமாகப் பூஜித்து அனுப்பினார்கள். இராமர் தமது தண்டகாரண்ய வாசத்தில் ஒன்பது வருஷங்களை இவ்விதம் சுகமாகக் கழித்தார். அப்பொழுது இராமர் சீதா லக்ஷ்மணருடன் சஞ்சரித்துக் கொண்டு வருகையில் அங்கங்கே தென்படும் இராக்கதர்களைக்கொன்று அங்கங்கேயுள்ள முனிபுங்கவர்களுடைய ஆசிரமங்களிலும் பூந்தோட்டங்களிலும் உபவனங்களிலும் ஆறு தடாகம் மலை மலையினுச்சி இவைகளிலும் நாகை, வாழை, மா முதலிய மரங்களின் அடிகளிலும் கைலாய பருவதத்தில் பரமசிவனும் பார்வதி தேவியும் விநோதமாக இருப்பதுபோல் சீதையுடன் சுகமாக வசித்து வந்தார்.

பிறகு ஸ்ரீராமர் அகஸ்தியருடைய தம்பியாகிய சுமதிமுனிவருடைய ஆசிரமமடைந்து, அவருடைய உபசாரணையைப் பெற்று, அங்கிருந்து பலவித விருக்ஷங்கள் நிறைந்த அகஸ்தியாசிரமம் செல்ல, அவர் முனிவர்களுடனும் மாணாக்கர்களுடனும் எதிர் கொண்டு வந்து ஸ்ரீராமரை ஆலிங்கனஞ் செய்து மகிழ்ந்து தமது ஆசிரமத்திற்கு அழைத்துவந்து உபசரித்தார். ஸ்ரீராமர் அகஸ்தியருடைய பூஜையைப் பிரியத்துடனேற்றுக் கொண்டு, அங்கு சில காலம் வசித்தார். அப்பொழுது அகஸ்தியர் தம்மிடத்தில் முன்னொருசமயம் தேவேந்திரன் ஸ்ரீராமருக்குக் கொடுக்கும்படி தந்திருந்த தனுசையும், குறைவுறாது வளரும் இரண்டு அம்புறாத்தூணிகளையும், இரத்தினப்பிடியமைந்த ஒரு கத்தியையும் அவருக்குத் தந்து அவரைப் புகழ்ந்து வாழ்த்தினர். பிறகு இராமர் அம்முனிவர் சொற்படி பஞ்சவடிக்குப் போகப் புறப்பட்டு கௌதமியாற்றின் வடகரையின் வழியே சென்றார். அவ்விடத்தில் ஒரு மலை

போல் எதிர்ப்பட்ட அருணருடைய பிள்ளையாகிய ஜடாயுவைக் கண்டு "தாங்கள் எனது தந்தை தசரதருக்குப் பரமமித்திரரல்லவா?" என்று கேட்டு, அவருடன் சற்றுச் சம்பாஷித்துப் பிறகு அவ் விடமிருந்து பஞ்சவடிக்குள் பிரவேசித்து, அங்கொரு இடத்தில் சித்திரகூட பர்வதத்தில் அமைத்துக்கொண்டது போல் ஆசிரமங் களை அமைத்து, மிருக மாம்ஸங்களால் வாஸ்து பலி செய்து சுக மாக வசித்து வரும்போது, ஜடாயுவும் அங்குச்சென்று அவர்க ளைப் பாதுகாத்து வந்தார். ஏ பார்வதி! இங்கு ஸ்ரீராமர் மூன் றரை வருஷகால மிருந்தார்.

இக்காலத்தில் சூர்பனகை யென்னும் இராட்சஸியின் பிள்ளை யாகிய சாம்பவன் என்பவன் ஒரு காட்டில் வெகு உக்ரமாகத் தவம் புரிந்து வந்தான். பிரமதேவர் அவன் தவத்துக்கிரங்கி, அவனுக்கு ஒரு கத்தியைக் கொடுத்து விட்டுப் பிர்மலோகம் போனார். அவன் அதை மறந்துவிட்டு, தவத்திலேயே யிருந்தான். அவ்விடத்தில் கொஞ்சநாளைக்கெல்லாம் செடிகொடிகள் அடர்ந்து அவனை மூடிக்கொண்டது. அங்கே தற்செயலாய் வந்து சேர்ந்த இலட்சுமணர் கையில் அக்கத்தி கிடைக்கவே, அதையெடுத்து அப்புதரை வெட்டினர். அதிலிருந்த சாம்பனும் வெட்டுண்டான். அதை யறிந்த இலட்சுமணர் பயந்து இராமரிடஞ் சென்று, "ஏ அண்ணா! யான் இன்று ஒரு பிர்மஹத்தி செய்து விட்டேன். அதற்கு ஒரு பிராயச்சித்தம் விதியுங்கள்" என்றுகேட்க, இராமர் "இலட்சுமணா நீ பயப்படாதே! கொலையுண்டவன் முனிவனல்ல, சாம்பனென்ற இராட்ச" னென்று சொல்ல அதைக் கேட்டு, இல ட்சுமணர் தமது பயமொழிந்து சந்தோஷமடைந்தார். இச்சங்கதி சூர்ப்பனகை யறிந்து, மிகவும் வருந்திக் கோபா வேசத்தால் காம ரூபம் பெற்றுத் தன் கண்ணுக்கெதிர்ப்படும் ஒவ்வொரு பிராணி யையும் இம்சித்துக்கொண்டு சஞ்சரித்து வருகையில் ஒருநாள் பஞ்சவடிதீரஞ்சென்று அவ்விடத்தில் இராமலட்சுமணர்க ளிருப் பதைப்பார்த்து தன் பிள்ளையை நினைத்து வருத்தப்பட்டு, இவர் களைக் கபடமாகக் கொல்ல வேண்டுமெனக் கருதி, உடனே திவ்யவஸ்திராபரணம் பூண்ட ஒரு மனோகரமான ஸ்திரி வேடங் கொண்டு, இராமரிடஞ்சென்று "நீங்கள்யார்? இவள் (சீதை) யார்?

இந்நாட்டுக்கு வந்த காரணம் யாது? எங்கிருந்து வந்தீர்கள்? இனி எங்கே போகப்போகிறீர்க''ளென்று வினவினள். அதற்கு இராமர் தாம் இன்னாரென்பதையும் நகரம் விட்டுக் காட்டுக்கு வந்ததின் வரலாற்றையும் விவரமாகக் கூறினர். இதைக்கேட்ட சூர்ப்பனகை ''ஐயா! நீர் எனக்குப் பர்த்தாவாகவேண்டும்'' என்று கேட்டாள். இராமர் யான் ஒரு பத்தினியை ஏற்கனவே அடைந்திருக்கிறேன். அதோ இலட்சுமண னிருக்கிறானென்று சொல்ல, சூர்ப்பனகை இலட்சுமணரிடஞ் சென்று, அவரையும் தனக்குப் பர்த்தாவாக வேண்டுமென, இலட்சுமணர் '' யான் இராமபிரானுக்குத் தாஸன்; என்னை நீ அடைவாயானால் நீயும் தாஸியாகவேண்டும்'' என்று விடை பகர்ந்தார். இதைக் கேட்டுச் சூர்ப்பனகை வேகமாகச் சீதையிடஞ்சென்று, அவளை எடுக்கப்போனாள். அப்பொழுது இராமர் ''ஏ சூர்ப்பனகே! இங்குவா! இங்குவா!'' என்று அவசரமாகக் கூப்பிட்டு ''இந்தா இந்த அம்பைக் கொண்டுபோய் இலட்சுமணரிடம் அடையாளமாகக் காண்பி; பிறகு உன் மனோபீஷ்டம் நிறைவேறும்'' என்று ஒரு அம்பை அவள் கையில் கொடுத்தார். இராமர் இப்படிச் சொன்னதை சூர்ப்பனகை நம்பி, அந்த அம்பை எடுத்துக்கொண்டு சென்று, இலட்சுமணருக்குக் காண்பித்தாள். அதைப்பார்த்து, இலட்சமணர் தமது தமயனுடைய கருத்தை அறிந்துகொண்டு, அந்த அம்பைத் தனுசில் பூட்டி, அவள்பேரில் விட, இராமநாமம் வரைந்துள்ள அந்தப்பாணம் அதிவேகமாகச் சென்று சூர்ப்பனகையினுடையமூக்கு, காது, உதடு, ஸ்தனம் முதலியவைகளை அறுத்தெரிந்து க்ஷணநேரத்தில் இராமருடைய அம்புறாத் தூணியை அடைந்துவிட்டது. இவ்விதம் அறுபட்ட இராக்ஷசி யானவள் ஆ! ஆ! என்று பெருங் கூச்சலிட்டுக் கொண்டு, தன் சகோதரர்களாகிய கரதூஷணர்களிடம் சென்றாள். இவ்விதமான அவளுடைய கோலத்தைப் பார்த்த கரதூஷணன் திரிசிரசு மூவர்களும் அதன் காரணத்தை அவள் மூலமாகத் தெரிந்து, கோபங்கொண்டு இராமலட்சுமணர்களைக் கொல்லும்படி குரூரர்களான பதினான்கு இராட்சதர்களை அனுப்பினார்கள். அவர்கள் இராமரிடம் வர, இராமர் அப்பதினான்குபேர்களையும் சுலபமாகப் பதினான்கு பாணங்களால் எமனுக்கு நிவேதித்துத் தமதுலகுக்கு அனுப்பிவிட்டார். இந்தப்பதி

ளுன்குபேர்களும் இராமராற் கொல்லப்பட்டதையறிந்த கரதூஷ ணர்கள் மிகக்கோபங்கொண்டு, பதினாலாயிரம் சைன்னியங்க ளுடன் இராமருடன் போர்செய்யப் புறப்பட்டார்கள். இதை யறிந்த இராமர் சீதையையும் இலட்சுமணரையும் அருகிலிருந்த ஒரு குகையில் பத்திரமாக விருக்கச்செய்து, தாம் தமது வில்லை நாணேற்றி எடுத்துக்கொண்டு இராட்சதர்கள் முன்வந்து, அவர்க ளோடு சஸ்திர அஸ்திரங்களைக் கொண்டு சிறிது நேரம் யுத்தம் செய்து பிறகு அந்த இராட்சதர்கள் பதினாலாயிரம் பேர்கள் முன்னும் பதினாலாயிரம் இராமராக நின்று யுத்தஞ்செய்து அவர் களை அதமாக்கிவிட்டு, உடனே கரனோடு யுத்தஞ்செய்து அவ னைக்கொன்று, பின் தூஷணன் திரிசிரஸ் இவர்களோடும் யுத்தஞ் செய்து கொன்று யாவரையும் தமது பதவிக்கு அனுப்பிவிட்டார். இவ்வளவும் கௌதம ஆற்றின் கரையில் ஒரு முகூர்த்த காலத் திற்குள் நடைபெற்றது. கரன் முதலிய மூவரும் எந்த இடத்தி லிருந்தார்களோ அந்த இடத்திற்கு திரிகண்டகமென்னும் பெயர் வழங்கிவந்தது. பிறகு அந்த இடமானது திரியம்பக க்ஷேத்திர மென்னும் பேர்கொண்டு விளங்குகிறது. இந்த ஜனஸ்தானத்தை இராமர் பிராமணர்களுக்குத் தானங்கொடுத்து, சுகமாக வசிக் கச்செய்தார். இவ்விதம் யுத்தத்தில் ஜயமடைந்து இராகவர் ஜய லட்சுமியுடன் சீதையிடம் வர, சீதை மகிழ்ந்து இராமரை ஆலிங் கனஞ்செய்து கொண்டாடினாள்.

இச்சமயம் ஸ்ரீராமர் சீதையை தனிமையான ஓரிடத்திற்கு அழைத்துச்சென்று "ஏ சீதா! நீ இந்தவேளை முதல் மூன்றுவித மாகப் பிரிந்து, அக்கினியில் ரஜோரூபமாக வாசஞ்செய்; எனது வலதுப் புறத்தில் சத்வரூபமாக விருந்து வசி; இப்பஞ்சவடியில் தசக்ரீவனை மயக்குவதற்காகச் சாயாரூபமாக வசி" யென்று அன் புடன்கூற, சீதை அவ்விதமே மூன்றுருவங்கொண்டு மூவிடங்களி லும் வசித்துவந்தாள். மூக்கறுபட்ட சூர்ப்பனகை லங்காபட்டணம் சென்று, இராவணனைப்பார்த்து "ஏ அண்ணா! நீ பரம முட்டாள்; உலகத்தில் அரசர்கள் அங்கங்கே நடக்கும் சங்கதிகளைச் சாரர் களைக்கொண்டு உடனுக்குடனே தெரிந்துகொள்வது வழக்கம். அதை நீ சிறிதும் அனுஷ்டிக்கவில்லை. இராமனென்ற ஒரு மனி

தன் ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் சேனைகளையும் உன் சகோதரர்களையும் கொன்று எமலோகம் சேர்த்துவிட்டான்" என்று சொன்னாள். இதை இராவணன் கேட்டு அவளுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அவள் மூக்கு முதலிய அங்கங்கள் அறுபட்டிருப்பதைக் கண்டு, திடுக்கிட்டு நடுங்கித் தன் சிம்மாசனத்தினின்று இறங்கி அவளைப் பார்த்து "நீ இக்கதியை யடைந்ததற்கும் யுத்தத்திற்கும் காரணம் யாதென" சூர்ப்பனகை "ஏ அண்ணா யான் ஜனஸ்தானத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கையில், அவ்விடத்தில் ஜானகியைப் பார்த்தேன். அவள் மிக அழகாக இருந்தமையால் இவளை நமது தமையன் இராவணனுக்காகக் கொண்டு போவோமென்று கருதிக்கிட்டநெருங்கி அவளையெடுக்கப் போகும் தருணத்தில் இலட்சுமணன் விட்ட ஒரு பாணத்தால், இக்கதியடைந்தேன். இராமனுடைய உத்தரவுப்படி இலட்சுமணன் தவம் புரிந்துகொண்டிருந்த சாம்பனை நிஷ்காரணமாகக் கொன்றுவிட்டான். என்நிமித்தம் கரன் முதலியவர்களும் அவர்களிடம் போர்செய்து மாண்டார்கள். ஆகையால் நீ சாமர்த்தியவானானால் சீதையைக் கொண்டு வந்து சேர்; இல்லாவிடில் பதியை யிழந்த ஸ்திரிபோல் தலை குனிந்து கொண்டிரு" என்று சொன்னாள். இதைக்கேட்டு இராவணன் சூர்ப்பனகையைப் பார்த்து "அம்மா சூர்ப்பனகே! உன்னைச் சின்னப்படுத்தினார்களென்று வருந்தாதே; இந்தட்சணம் அவர்களைக் கொன்றுவிட்டு அந்தக் கையால் உன் கண்ணீரைத் துடைக்கிறேன்" என்று பலவிதமாக அவளுக்குச் சமாதானங் கூறிவிட்டு, உடனே இரதமேறித் தனக்கு இதஞ் சொல்லுபவனும் தபசு செய்து வருகிறவனுமான தன் மாமன் மாரீசனிடஞ் சென்று, அவனுக்கு இச்சங்கதிகளைத் தெரிவித்தான். மாரீசன் "ஏ இராவணா! இலங்கைக்கே ஹானியுண்டாக்கத் தக்க இந்த உபதேசம் உனக்கு எந்த இதசத்ரு செய்தாள்? விசுவாமித்ரர் யாகத்தில் யான் இராமருடைய ஒரு பாணத்தால் சமுத்திரத்தில் விழுந்து, தப்பிப் பிழைத்தது அரிதாய்ப் போயிற்றே. அன்றுமுதல் ரதம், ரத்நம், ரஜதம், ருக்மம் முதலியவைகளைக் கேட்கும்போது அவைகளின் முதலெழுத்தான ர எனக்கு ராமனை ஞாபகமூட்டிப் பீதியுண்டாக்குகின்றது. நீ அந்த இராம

யைப் பார்ப்பாயாகில், அந்தட்சணத்தில் எமலோகம் போய் விடுவாய்; ஆகையால் இராமரைப்பற்றி நினையாதே" என்று பல தடவை கூறிப் பயமுறுத்தினன். இதைக் கேட்டதும் இராவணன் மிகக் கோபங்கொண்டு மாரீசனைப் பார்த்து "நீ என்னோடு இப்பொழுது வாராவிடில், உன்னைக் கொன்றுவிடுவேன்; ஆகையால் யான் சொல்வதைக்கேட்டு உடனே புறப்படு; நீ ஒரு மானுருவங்கொண்டு அவ்வனத்தில் இராமன் முன்னிலையில் விளையாடு; அப்பொழுது இராமன் உன்னைப்பிடிக்க வெண்ணித் தொடர்வான்; அப்படித் தொடர்ந்து சிறிதுதூரம் சென்ற பிறகு ஏ இலட்சுமணா! ஏ சீதை! என்று இராமன் குரல்போல் உரத்துச் சத்தமிடு. அதைக் கேட்டு இலட்சுமணன் சீதையை விட்டுப்பிரிந்து விடுவன்; அச்சமயத்தில் சீதையை யெடுத்துக்கொண்டு யான் இலங்கைக்கு வந்து விடுகிறேன். பிறகு யான் உன் சிரமத்திற்காக இந்த இலங்கா ராஜ்யத்தில் பாதியை உனக்குக் கொடுத்து விடுகிறேன்" என்று வாக்குத்தத்தம் செய்து அழைத்தான். மாரீசன் இவன் பிடிவாதத்துக்குட்பட்டு, இந்தப் பாவிகையில் நாம் ஏன் மரணமடைய வேண்டும்; ஸ்ரீராமர் கையில் மரணமடைந்தால் நமக்கு நற்கதி கிடைக்கும் என்று மனதில் உறுதி செய்து கொண்டு, பின் "ஏ இராவணா உன் இஷ்டப்படியே செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு அவருடன் இரதமேறிப் பஞ்சவடிசென்று நவரத்தனவர்ணம் பொருந்திய ஒரு தங்கமானாகி அங்கிருக்கும் சீதையை மயக்கினன். சாயா சீதை அந்த மானைப் பார்த்து "பிராண நாதா! இந்த மானை எனக்குப் பிடித்துக் கொடுக்கவேண்டும். இம்மான் உயிருடன் கிடைத்தால் அதனோடு விளையாடலாம். கொன்று பிடித்தால் அந்த மானின் தோலைக்கொண்டு கஞ்சுகம் முதலியவைகளைச் செய்து கொள்ளலாம் என்று சொன்னாள். இராமர் நடக்கப்போகும் சங்கதிகளை யறிந்துகொண்டு, இலட்சுமணனை யழைத்து "ஏ இலட்சுமணா! நீ சீதையினிடம் இரு, யான் இந்த மானைப் பிடித்து வருகிறேன்" என்று சொல்லி, உடனே பானைத் தொடர்ந்தார். மானானது இராமரை வெகு தூரம் கொண்டு போவதற்காகச் சில இடம் மறைந்தும் சில இடம் வெளிப்பட்டும் விளையாடிக்கொண்டே வெகு தூரம் செல்ல இராமர் சற்று யோசித்து உடனே பாண

த்தை அம்மானின் மேலெய்ப, மான் "ஏ இலட்சுமணு! ஏ சீதா! யான் இறந்தேன்" என்று இராமர் குரல்போல் கத்தி விட்டு இரத் தங் கக்கிக்கொண்டு பிராணனை விட்டது. இச்சப்தம் ஜானகியின் செவிக்கெட்டியதுங் ஜானகி "ஏ இலட்சுமணு! நீ உடனே போய் இராமரைப் பார்த்து வா" என்றாள். இலட்சுமணர் "சீதா! இது இராமர் குரலல்ல. நீ அஞ்சவேண்டாம்" என்று சொல்ல, சீதை "ஏ இலட்சுமணு! உன் நடத்தை எனக்குத் தெரியும். நீ இப்படிச் சொல்வது பரதனுடைய உபதேசத்தால் இராமருடைய மரணத் தை விரும்பியோ அல்லது என்னையடைய விரும்பியோ தெரிய வில்லை. அப்படியானால் இப்போதே நான் பிராணனை விட்டுவிடுகி றே" னென்றாள். இந்தக் கொடிய வார்த்தையைக் கேட்டதும் இலட்சுமணன் அந்த பயங்கரமான இடத்தில் சீதையைத் தனியே விட்டுப்போக மனமில்லாமல் " ஏ அம்மா! யான் சொல்வதைக் கேள்; இராகவன் உத்தரவுப்படி உன்னைக் காத்துவரும், என்னைப் பார்த்து அம்புபோன்ற கொடிய மொழிகளைப் பேசினதற்குச் சீக்கிரம் உனக்குப் பலன் கிடைக்கும். ஆயினும் இப்போது யான் சொல்லும் இதத்தைக்கொள்.எந்தத் துஷ்டர்களும் உன்னை அணுக முடியாதபடி பாதுகாப்பதற்காக இந்தத் தனுசால் உன்னைச்சுற்றி ஒரு இரேகை கீறுகிறேன். எவ்வித ஆபத்து உனக்கு வருவதா யிருந்தாலும் நீ அதைவிட்டு வெளியேறாமலிருந்து வரவேண்டு" மென்று சொல்லித் தனுசின் நுனியால் பஞ்சவடியைச் சுற்றி லும் அகழிபோல் கோடு கிழித்து விட்டு, சீதையை வணங்கி வேறொன்றும் பேசாமல் இராமரிருக்கு மிடத்திற்கு வேகமாகச் சென்றார்.

முன்னதாகவே அங்குவந்து மறைந்திருக்கும் இராவணன் அந்தச் சமயம் ஒரு சந்நியாசி வேடங்கொண்டு, அவ்வாச் சிரமத் திற்கு அருகில் சென்று இலட்சுமணனால் வரையப்பட்டிருக்கும் இரேகையைத் தாண்டிப்போக முடியாததினால், ஆசிரமத்தின் கடை வாயிலுக்கு வெளிப்புறமே "நாராயணா" வென்று சொல்லி நின்றான். இதைக் கேட்டுச் சீதை அச்சந்நியாசிக்குப் பிக்ஷை கொ டுப்பதற்காக பிக்ஷையெடுத்து வாசலினருகிற் சென்று, இரே கைக் குட்புறமே நின்றுகொண்டு கையை நீளமாக அந்தச் சந்நி யாசியிருக்கும் இடம் வரையில் நீட்டிப் பிட்சையை வாங்கிக் கொ

ள்ளுமென்று சொல்ல, சந்நியாசி தாமரைப் பூவெனத் திகழும் நேத்திரங்களுடைய சீதையைப் பார்த்து "இவ்வளவு தூரத்தி லிருந்து நீ பிட்சை கொடுப்பதும் நான் அதைப் பெற்றுக் கொள் வதும் சரியல்ல; இராமருடைய கிரகஸ்த தர்மத்தைப் பாதுகாக்க உனக்குவிருப்ப மிருக்குமானால், இந்த இரேகையை விட்டு இவ் விடம் வந்து பிட்சை கொடுப்பதே உனக்குத்தகுதி" யென்று கூற, சீதை 'தர்மத்துக்கு விரோதம் ஏன்' என்று நினைத்து சஞ் சலப்பட்டுக் கொண்டே இரேகைக்கு வெளியில் இடதுகாலை வைத்து முன்போலவே கையை நீட்டி "இதோ இந்தப் பிட்சை யைப் பெற்றுக்கொள்ளு"மென்று கூறினாள். இராவணன் உடனே சீதையைப் பிடித்துக் கொண்டு சந்நியாசி வேடத்தை விட்டு, தன் னுடைய நிஜரூபமெடுத்துக் கோவேறுகழுதை பூட்டின தனது இரதத்தில் அவளை வைத்துக்கொண்டு இலங்கா பட்டணஞ் செல்வதன் பொருட்டு, வேகமாகத் திரும்பி, சிறிது தூரம் போ னான். அப்பொழுது அவ்வழியில் தற்செயலாய் வந்த ஜடாயு வானவர் இராவணன் சீதையை அபகரித்துப்போவதை யறிந்து, அவனிடம் அமர்புரிந்து, தன் கால்களாலும் மூக்கினாலும் அவ னுடைய சிரேஷ்டமான இரதத்தைச் சின்னபின்னப் படுத்தி, அதில் பூட்டியிருக்கும் எட்டுக் கோவேறு கழுதைகளையும் கொன்று, தரையோடு தரையாய்த் தேய்த்துவிட்டு, அவனுடைய மகத்தான தனுசையும் ஒடித்து, பத்துக் கிரீடங்களையும் தள்ளி உடைத்து அவனுடைய சரீரங் கட்டுவிட்டுப்போக நகங்களால் பிறாண்டி, அவனையும் மூர்ச்சையடையச் செய்து, சீதையை எடுத் துக்கொண்டு திரும்ப, உடனே இராவணன் மூர்ச்சை தெளிந்து கோபங்கொண்டு மறுபடி ஜடாயுவினிடம் வந்து அதனோடு யுத் தம் புரிந்து ஜடாயுவை இரத்தங்கக்க அடித்து, தள்ளிவிட்டுச் சீதையை யெடுத்துக் கொண்டு ஆகாச மார்க்கமாக இலங்கையை நோக்கிப் புறப்பட்டான். அப்பொழுது சீதை சொல்ல முடியாத வருத்தமடைந்து, தரையை நோக்கின வண்ணமாகவே இருந்து, தனது நகைகளிற் சிலவற்றை உத்தரீயத்தில் முடிந்து வைத்துக் கொண்டு, வழியில் ஒரு மலையின்மீது ஐந்து வானரங்கள் கூடி உட்கார்ந் திருப்பதைக் கண்டு, இந்த ஆபரணம் இராமருக்கு நாம் செல்லும் வழியைக் காண்பிக்கு மென்று கருதி, அவைகளுக்கு மத்தியில் விழும்படி அம்முடிச்சைப் போட்டாள். பிறகு இவ்

வஞ்சகனுன இராவணன் வேகமாக இலங்கைக்குச்சென்று அசோக வனத்தில் சீதையைவைத்துவிட்டு, அவளைக்காக்க ஆயிரக்கணக்கான இராட்சதர்களைத் திட்டப்படுத்தி வைத்து, சீதையைப் பலவிதமா கத் தான் பிரார்த்திக்க, அப்பொழுது சீதை தன் முகத்தைப்பார்க் காமலும் விடைகொடுக்காமலு மிருப்பதையும் பார்த்து விட்டுப் பிறகு பார்த்துக்கொள்வோம் என்று நினைத்துத் தன் அரண்மனைக் குச் சென்முன்.

அப்பொழுது பிரமதேவன் உத்தரவுப்படி, புசித்தவர்க்கு வருஷபரியந்தம் பசியாதிருக்கும் படியான பாயசத்தைத்தேவேந் திரன் இரகசியமாகச் சீதைக்குக் கொண்டுவந்து கொடுக்க, சீதை சந்தோஷமாய்ப்பெற்று அதிற்கொஞ்சமெடுத்து ஆகாசத்தில் சஞ் சரிக்கும் தேவர்களுக்கும் இராமர் இலட்சுமணர் அதிதி தேனு இவர்களுக்கும் சமர்ப்பித்து விட்டு, திரிசடைக்கும் கொஞ்சம் கொடுத்து மிகுந்ததைத் தானும் புசித்துவந்தாள். அப்பொழுது இராவணன் மந்திராலோசனை செய்து இராம லட்சுமணர்களைக் கொல்வதற்காகப் பதினுறு அரக்கர்களை யனுப்ப, அவர்களை வழி யில் கபந்தன் என்னும் மற்ருெரு அசுரன் கொன்று தின்று விட்டான்.

மாரீசனுகிய மான் இராமபாணத்துக்குப் பயந்து திரிந்து நின்ற இடங்களெல்லாம் சமஸ்தானங் களாகவும் நகரங்களாக வும் ஆயின. அந்த மான் தன்னுடைய காலில் ஒருநூபுரம் அணிந் திருந்தது. அது கௌதமி ஆற்றங்கரையில் விழுந்தது. அந்த இடம் இப்பொழுதுகூட நூபுரக்கிராமம் என்னும் பெயர்கொண்டு விளங்குகிறது. அந்தமான் இராமபாணத்தால் அடிபட்டுச் சபாலா க்ஷமாக எவ்விடத்தில் விழுந்ததோ, அவ்விடத்துக்குச் சாபல்ய கிராமமென்று பெயராயிற்று. இந்த இடம் இப்பொழுதும் பிரத்தி யட்சமாக விளங்குகின்றது. இலட்சுமணன் பஞ்சவடியைச் சுற்றிச் செய்த இரேகை இப்பொழுதும் பயங்கரமான ஆழுகத்தெரிகிறது. ஏ பார்வதி! இப்பொழுது அந்த இடங்களில் இராமலட்சுமணர்கள் ஞானமுடைய சாதுக்களுடைய கண்ணுக்குப் பிரத்யட்சமாகிருர்

கள். அவர்களே அக்ஞானதிருஷ்டி யுடையவர்களுக்குச் சிலா ரூபமாகக் காணப்படுகிறார்கள். அந்தக் கௌதமியாற்றில் இராமர் இலட்சுமணர் சீதை இவர்கள் ஸ்நானஞ்செய்த தீர்த்தங்கள் இப் பொழுதும் அவரவர்களுடைய பேரால் அழைக்கப் படுகின்றன. இராமரும் சீதையும் எந்த மலையினுடைய உச்சியில் படுக்கை போட்டுச் சயனித்தார்களோ, அந்த மலை இராமசையாகிரி என்னும் பேர்கொண்டு விளங்குகிறது. இன்னும் அம்மலையில் பலவிடங்களில் புற்றரைகள் படுக்கைகள் போலவே காணப் படுகின்றன.

இனி இராமரிடஞ் சென்ற இலட்சுமணரைக் கவனிப்போம். இராமர் தம்மை நோக்கி ஓடிவரும் இலட்சுமணரைப் பார்த்து அவர் தெரிவித்த சீதையினுடைய கொடூர வார்த்தைகளைக் கேட் டுக் கோபம் கொண்டார். கண்களில் நீர் விட்டு மனதில் ஆச்சரியங் கொண்டார். தம்மைச் சுற்றிநடக்கும் அபசகுனங்களையும் பார்த் தார். உடனே இலட்சுமணருடன் பஞ்சவடிவந்து ஆச்சிரமத்தில் சீதையைக் காணாமையால் தாமெடுத்த மானிட அவதாரத்துக் கேற்ப, வருந்தி "ஏ இலட்சுமணா! சீதையைக் காணோமே! எங்கே போயிருப்பாள்; நம்மை விட்டுப் பிரியுஞ் சுபாவம் அவளுக்குக் கிடையாதே!" என்று சொல்லிக்கண்ட விடமெல்லாம் இருவரும் தேடிக்கொண்டு வரும்வழியில், பக்ஷிராஜனாகிய ஜடாயுவைக் கண் டார்கள். ஜடாயு இராமரைப்பார்த்து "ஏ இராமா! சீதையை இரா வணன் இலங்கைக் கெடுத்தேகினன். அதையான்கண்டு சீதையை மீட்க அவனுடன் போர்புரிந்து, இக்கதி யானேனெனக் கூறித் தம்முயிரை விட்டார். பிறகு இராமர் அவருக்கு அக்நி ஸம்ஸ் காரங்கள் செய்து, கௌதமிநதியில் தீர்த்தமாடிக் காட்டு மிருகங் களினுடைய மாம்சத்தால் அவருக்குத் திருப்தி செய்வித்து, பிறகு தட்சிணதிக்கைநோக்கிப் பித்தன்போல் சீதையைத்தேடிக் கொண்டு சென்று, தங்குமிடங்களி லெல்லாம் தருப்பையால் சீதையைச் செய்துவைத்து அக்நி ஹோத்திர முதலிய கிரகஸ்த தர்மங்களை நடத்தி வந்தார். அக்காலத்தில் பரமசிவன் பார்வதி யைப் பார்த்து "ஏ பார்வதீ முன்னொருதரம் நீ என்னைப்பார்த்து

எந்த இராகவருடைய மந்திரத்தை நீர் ஜபித்துவருகிறீரோ அந்த இராகவர் மனைவியை விட்டுப் பிரிந்ததனால் வருத்தமடைந்து பித்தன்போல் இக்காட்டில் திரிகிறாரே என்று கேட்டாய். இராமர் சாக்ஷாத் மகாவிஷ்ணு; உலகத்தவர், ஸ்திரீகளினிமித்தம் உண்டாகும் கஷ்டங்களை உணர்ந்து அவர்களுடைய சங்கையை விலக்க வேண்டு மென்பது கருதி, ஸ்ரீராமர் தாம் மானிடராக அவதரித்து, ஒருஸ்திரீயை மணந்து அதனால் நேரிடும் கஷ்டங்களைத் தாமே ஜனங்களுக்குப் போதிப்பதற்காகவே இவ்விதம் அபிநயம் செய்கிறாரென்று நான் உனக்கு விடையளித்தேன்; உடனே நீ அதைப் பரீக்ஷிப்பதற்காக இராகவர் சஞ்சரிக்கும் வனத்திற்குச் சென்று சீதையுருவங் கொண்டு இராமரைப்பார்த்து "ஏ ராமா! ராஜீவபத்ராக்ஷா! நீர் என் வருத்தப்படவேண்டும். இதோஜானகியானிருக்கிறேன். என்னுடன் நீர்விளையாடிச் சுகியும். வாரும் போவோம்" என்றுசொல்ல, அதைக்கேட்ட இராமர் சிறித்துக்கொண்டு உன்னைப்பார்த்து 'நீயார்! நீயார்! நீ சீதையல்ல, உன்னையானறிவேன். நீ இக்காட்டில் சீதைவேடங்கொண்டு என்னை மயக்கவல்லவோ வந்திருக்கிறாய்" என்று பலதடவை சொல்ல, நீ யான் சொன்ன அவருடைய உண்மையை அறிந்து, அவரை வணங்கிப் பல தடவை பிரார்த்தித்துத் திரும்பவும் கைலாசமலைக்குவந்து என்னை யடைந்தாய்; இராமர் உன்னை எவ்விடத்தில் "நீயார்" என்று பல தடவை விசாரித்தாரோ அந்த இடத்தில் நீ இப்பொழுதும் த்வங்காம்பிகை என்கிற நாமங்கொண்டு விளங்குகிறாய். ஸ்ரீராமர் உன்னை வெட்கப் படும்படி செய்தவிடத்தில் த்வம்லஜ்ஜாபுர மென்றொரு பட்டணம் விளங்குகிறது" எனச் சிவபெருமான் பார்வதிக்கு ஸ்ரீராம பிரானுடைய உண்மையைக் கூறி யருளினார்.

பிறகு இராம லட்சுமணர்கள் தங்கள் எதிர்ப்படும் கோர ரூபமான பல ராட்சதர்களைச் சங்கரித்துக்கொண்டு, தெற்கு நோக்கிச் செல்லுகையில், ஒரு காதவழி நீண்ட கைகளையுடைய கபந்தன் என்னும் அசுரன் அவர்களை மறித்துக் கொண்டான். இராம லட்சுமணர் அவன் யார் என்று பார்த்து, அவனுக்குக் காலும் தலையு மில்லாததை யறிந்து, தலைக்கொரு பாணமாக எய்து அந்தக் கபந்தனுடைய இரண்டு கைகளையும் அறுத் தெறிந்தார்கள்.

உடனே அவன் அச்சரீரத்தி லிருந்து ஒரு திவ்ய ரூபம்பெற்று எதிர்தோன்றி இராமரைவணங்கி அவரைப்பார்த்து "ஏ ஸ்ரீராகவா நான் முன்னொரு கந்தர்வராஜன்; பிர்மாவினிடத்தி லிருந்து ஒருவராலும் எனக்கு இம்சை ஏற்படக்கூடாதென்கிற ஒரு வரம் பெற்று அந்தக் கர்வத்தால் அஷ்டாவக்ர முனிவரைப் பரிகசித்தேன். அம்முனிவர் கோபங்கொண்டு நீ இராட்சதனைக் கடவதெனச் சபிக்க யான், அவரை வேண்டினதின் பேரில் திரேதா யுகத்தில் ஸ்ரீராம இலட்சுமணர்கள் உன்னுடைய நீண்ட கைகளை யறுத்துத் தள்ளி விடுவார்கள். அப்பொழுது உன் சாபம் விடுபடுமென அனுக்கிரகித்துச் சென்றார். அம்முனிவர் சாபப்படியே யானொரு ராட்சதனாகித் தேவேந்திரனைத் துரத்த, அவர் கோபங்கொண்டு வஜ்ரா யுதத்தினால் என் சிரசில் அடிக்க, சிரசும் கால்களும் என்னுடைய தேகத்துக்குள் அடங்கிவிட்டன. பிரமதேவன் கொடுத்தவர மகிமையால், வஜ்ராயுதத்தால் அடிபட்டும் எனக்கு மரணம் நேரிடவில்லை. அப்பொழுது இந்திரன் என்னைப் பார்த்து முகமில்லாதவன் எப்படிப் பிழைப்பானென்று இரக்கங்கொண்டு "உனக்கு உன் வயிற்றில் முகம் உண்டாகும்; கைகள் காதவழி தூரம்நீளும்" என்று அனுக்கிரகித்துச் சென்றார். அதுமுதல் இவ்வனத்தில் என் கைக்கெட்டும் பிராணிகளைக் கொன்று தின்று ஜீவித்து வந்தேன். இதோ அந்த வனத்தில் மதங்கர் முதலிய முனிவர்களுக்குக் கைங்கரியம் புரிந்து வரும் சபரியென்பவள் தங்களைத் தரிசிக்கவேண்டுமென்கிற ஆவல்கொண்டு வெகு நாளாகக் காத்துக் கொண்டிருக்கிறாள். ஏ ரகுனந்தனா! அவள் சீதையை மீட்டு வரும் மார்க்கத்தைத் தங்களுக்குத் தெரிவிப்பாள்" என்றுசொல்லி இராமரை நமஸ்கரித்துத் துதித்துப் பின் சொர்க்கலோகம் சென்றான்.

இராம லட்சுமணர்கள் அவ்வரக்கன் கூறியவாறே, சபரியிடஞ் சென்றார்கள். சபரி இவர்களைக் கண்டதும் வணங்கி வெகு நாளாய்ச் சேர்த்து வைத்திருந்த கனிவர்க்கங்களை அவர்களுக்குச் சமர்ப்பித்துத் திருப்தி செய்வித்துப் பின், சீதைக்கு அருகிற் சென்று மனக்களிப்புடன் "ஏ இராகவா! ருசியமூகம் என்னும் மலையின் உச்சியில் சுக்ரீவன் மந்திரிகளுடன் வசிக்கிறான். அவனை நீர் மித்திரனைக் கொண்டால் சீதையை மீட்டு வரலாம். இதோ உங்

களுக்கு முன்னல் பம்பை யென்கிற ஒரு பெருந் தடாக மிருக்கிறது. அந்தத் தடாகத்தைச் சுற்றிலும், ருசியான பழங்களைக் கொடுக்கக் கூடிய மரங்க ளிருக்கின்றன. அவைகளிலுள்ள பழங்களைப் புசித்துவிட்டு, தாகசமனஞ் செய்துகொண்டு சுகமாக சுக்ரீவனிடஞ் செல்லுங்க'' ளென்று மார்க்கத்தைக் காட்டி வணங்கி உடனே அக்நிப்பிரவேசஞ் செய்து, இராமபிரானுடைய தரிசனத்தால் வைகுண்ட பதவியை அடைந்தாள்.

பிறகு இராமர் மிக மெதுவாக நடந்து பம்பாசரஸுக்குச் சென்று அதன் கரையிலிருக்கும் இனிமையான கனிகளைப் புசித்து தீர்த்த பானஞ்செய்து அங்கிருந்து மறுபடியும் புறப்பட்டு ருசியமூக பர்வதத்தை நோக்கிச் செல்லுகையில், வழியில் காணும் விநோதமான வனங்களின் வனப்பைக் கண்டு சீதையை நினைத்துக் கொண்டு கண்ணுக்கெட்டின வரையில் பார்த்துக்கொண்டே சென்ருர்.

### 7-வது சருக்கம் முற்றிற்று.

## 8-வது சருக்கம்.

### பரமசிவன் கூறுகிறார்.

பிறகு இராம லட்சுமணர்கள் இருவரும் நாலா பக்கங்களிலும் பார்த்துக்கொண்டு ருசியமூக பர்வதத்தின் அருகிற் செல்லுகையில் அம்மலையின் உச்சியிலிருக்கும் சுக்ரீவன் மலை அடிவாரத்தில் வரும் இவ்விருவர்களையும் பார்த்து இவர்கள் யாரா யிருக்கக் கூடுமெனச் சற்றாலோசித்துப் பின் தன் மந்திரி அனுமாரை நோக்கி "ஏ அனுமந்த! இதோ அடிவாரத்தில் வரும் இவ்விருவரும் வாலியால் என்னைக் கொல்ல அனுப்பப்பட்டவர்கள் போற் காணப்படுகிறார்கள். ஏனெனில் இவ்விருவரும் தனுசுபாணம் இவைகளோடு வருகிறார்களல்லவா? ஆகையால் இவ்விடத்தை விட்டு நாம் தப்பி ஓடிப்போய் விடவேண்டும். அதற்கு நீர் ஒரு பிரமசாரி வேடங்கொண்டு அவர்கள் அருகிற் சென்றவர்களோடு பேசி உள்ளக் கருத்து யாதெனத் தெரிந்து அவர்கள் கெட்ட எண்ண முடையவர்களா யிருந்தால், அங்கிருந்து எனக்குக் கை சமிக்ஞை செய்யும்; நல்லபிப்பிராய முடையவர்களா யிருந்தால் சிரித்த முகமாயிரும்" என்று சொல்லி யனுப்பினான். அவ்விதமே அனுமார் இராம லட்சுமணரிடஞ் சென்று அவர்களை வணங்கி "புருஷ சிரேஷ்டர்களே! தாங்கள் யார்" என்று கேட்க, அதற்கு இலட்சுமணர் தங்களுடைய விருத்தாந்தங்களைச் சவிஸ்தாரமாகக் கூறி, இப்பொழுது சபரியின் சொற்படி சுக்ரீவனிடம் சினேகஞ் செய்வதற்காக இராமர் வந்திருக்கிறார் என்று சொல்ல அனுமார் தன்னுடைய உண்மையான உருவத்தைக் காண்பித்து தங்களுடைய விர்த்தாந்தங்களையும் இராமருக்குத் தெரிவித்து அவர்களைப் பார்த்து "நீங்களிருவரும் இனிநடந்து மலையேறுவது தகுதியல்ல; என் தோளில் ஏறி உட்காருங்கள். நான் மலையினுச்சிக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன்" என்று சொன்னார். இராம லட்சுமணர்கள் இருவரும் அனுமாருடைய தோளில் ஏறிக் கொண்டவுடன், அனுமார் ஒரு பெரிய உருவங் கொண்டு ஒரே தாவில் மலையினுச்சிக்குச் சென்று அவர்களை ஒரு மரத்தின் நிழலிலிறக்கி, உட்காரச் செய்து விட்டுப் பின் சுக்ரீவனிடம் சென்று, இராம இலட்சுமணர்கள் இன்னா ரென்பதையும் அவர்கள் மித்திர பாவத்தைக் கருதி வந்தார்க ளென்றுந் தெரிவித்தார்.

உடனே சுக்ரீவன் இராம லட்சுமணர்களை வரவழைத்து அவர்கள் முன்னிலையில் அக்னி வளர்த்து அந்த அக்னிசாட்சியாக அவரோடு சினேகஞ் செய்துகொண்டு ஆலிங்கனஞ் செய்து மாத்தின் கிளை களைப் பரப்பி ஆசனமமைத்து அவ்வாசனத்தில் அவர்களை வீற் றிருக்கச் செய்து தானும் மந்திரிகளுடன் உட்கார்ந்தான். இப் பொழுது ஒருவர்க்கொருவர் தங்கள் விருத்தாந்தங்கள் முழுவதை யும் தெரிவித்துக் கொண்டார்கள். சுக்ரீவன் இலட்சுமணரைப் பார்த்து "முன் வாலியினால் யான் அடைந்த துன்பங்களைக் கூறு கிறேன். தயை செய்து கேட்டருளும்; மயன் பிள்ளையாகிய துர் மதன் என்ற ஒரு அசுரன் ஒரு காலத்தில் கிஷ்கிந்தை அருகில் வந்து உரக்கச் சத்தமிட்டு வாலியை யுத்தத்துக்கு அழைத்தான். வாலி அவனை எதிர்த்து ஓரே குத்தில் கீழே வீழ்த்தினான். அவன் பயந்து ஓடிப்போய் தன் குகைக்குள் நுழைய அவனைத் துரத் திக்கொண்டு வாலியும் அக்குகைத் துவாரத்தினருகே சென் றான். நானும் அங்கு சென்றேன். அப்பொழுது என்னைப் பார் த்து, 'நீ வெளியிலேயே யிரு, நான் குகைக்குள் சென்று வரு கிறேன்' என்று சொல்லிவிட்டுக் குகைக்குள் சென்று பின் ஒரு மாதகாலம் வரையில் வெளிவரவில்லை; அதன் பிறகு அந்தக் குகைத் துவாரத்திலிருந்து இரத்தம் வெளியிடக் கண்டு பயந்து வாலி யைத் துர்மதன் கொன்று விட்டானென நிச்சயித்து, விசன முற் றிருந்தேன். இந்தநேரம் பார்த்து கிஷ்கிந்தையைச் சத்துருக்கள் சூழ்ந்து கொண்டார்க ளெனக்கேட்டு அக்குகைத் துவாரத்தை ஒரு பெரிய மலையைக் கொண்டு மூடிவிட்டுக் கிஷ்கிந்தை போனேன். சத்துருக்கள் என்னைப் பார்த்ததும் பயந்து ஓடி விட்டார்கள். அப்பொழுது மந்திரிமார்கள் என்னை அரசனாக விருந்து ராஜ்ய பரிபாலனம் செய்துவர வேண்டுமென்று வேண்ட, நான் பிரி யப் படாமலிருந்தும் கட்டாயப்படுத்தி அவர்கள் என்னை அரச னாக்கினார்கள். பின் சிலநாட் சென்றபின், வாலி துர்மதனைச் சங் கரித்துவிட்டு, திரும்பிக் குகைத் துவாரத்துக்கு வந்து அது அடை பட்டிருப்பதனால் கோபங்கொண்டு ஒரு உதையில் அம்மலையைத் தள்ளிவிட்டு வெளியே வந்து கிஷ்கிந்தை சென்று அவனுடைய சிம்மாசனத்தில் யானிருக்கக் கண்டு நான் மோசஞ்செய்து விட்ட

தாக எண்ணி என்னை அடித்துத் துரத்திவிட்டதுமன்றி, யாராவது சுக்ரீவனுக்குப் பரிந்து நின்று அவனைக் காப்பார்களாயின் அவர்களைக் கொன்று விடுவேனென்று எல்லாத் தேசங்களிலும் பறைசாற்றுவித்தான். பிறகு யான் லோகமெங்கும் சுற்றி எங்கும் தங்க முடியாமல் இந்த ருசியமூகம் வந்தடைந்தேன். இங்கு அவனுடைய தொந்தரவில்லாத காரணமாவது, முன்னொரு சமயம் துந்துபி என்ற ஒரு அசுரன் பயங்கரமான மகிஷரூபங் கொண்டு இராத்திரி வேளையில் கிஷ்கிந்தையின் அருகில் வந்து வாலியை யுத்தத்துக்கு அழைத்தான். வாலி உடனே அவனை எதிர்த்து ஒரு கையால் ஒரு கொம்பைப் பிடித்துத் தூக்கி கரகரவென்று சுற்றித் தரையில் தாக்கிப் பின் இரு கைகளாலும் கொம்பைத் திருகித் தலையைப் பிடுங்கி வெகுதூரம் இரத்தம் தெரிக்க வீசியெறிந்தான். அது வெகுதூரத்துக் கப்பாலிருந்த மதங்காசிரமத்தின் முன்போய் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு விழுந்தது. இதனை யறிந்த மதங்க முனிவர் வெகு கோபங்கொண்டு "ஏ வாலி என் மலைக்கு இனி நீ தலை காட்டுவாயானால், அந்த க்ஷணமே நீ மரண மடைவா" யென்று சாபமிட்டாராதலால் அதுமுதல் வாலி இங்கு வருவதில்லை; நான் சீதையை வரவழைத்துத் தங்களிடஞ் சேர்ப்பிக்கிறேன். இது என் பிரதிக்ஞை. ஆகாய மார்க்கமாய் இராவணன் சீதாதேவியை எடுத்துக்கொண்டு சென்றதை யான் கண்டேன். அப்பொழுது சீதை தன் உத்தரீயத்தில் முடிந்து எங்களிடத்திற் போட்ட ஆபரண முடிப்பைப் பாருங்கள்: இதோ இருக்கிறது" என்று அதை எடுத்துக்காட்ட, இராமர் அதைக் கையில் வாங்கி "இலட்சுமணா! இந்த ஆபரணங்களைச் சீதை அணிந்திருக்கப் பார்த்ததுண்டோ? இவை அவளுடைய தென்பது நிச்சயந்தானா? தெரிவிப்பாய்" எனக்கேட்க, இலட்சுமணர் "அண்ணா! பிராட்டியாருடைய பாதங்களில் அணிந்திருக்கும் நூபுரங்களை மட்டும் யான் பிரதிதினமும் பிரதட்சிணஞ் செய்து வணங்குங் காலையில் கண்டிருக்கிறேன். மற்ற எந்த ஆபரணங்களையும் யான் கண்டதில்லை" என்றுகூற, அதைக்கேட்டு இராமர்தாம் இப்பொழுதே சீதையை அடைந்ததுபோல் எண்ணி மகிழ்ந்தார். பின் சுக்ரீவன் தமது பராக்கிரமத்தைக் காண்பதின் நிமித்தம் அங்கிருந்த துந்துபியின் சிரசைத் தமது பெரு விரலால் எற்ற அது பத்துக் காத வழி தூரஞ் சென்று விழுந்தது.

இதுவன்றி மகானுகிய இராமர் அங்கொரு இடத்தில் சக்ராகார மாக நின்ற ஏழு பனைமரங்களைக் கண்டு, அம்மரங்கள் பூமிக்குள்ளிருக்கும் ஒருபாம்பின் உடலிலிருந்து முளைத்திருப்பதாகவும் தெரிந்து பக்கத்திலிருக்கும் இலட்சுமணருடைய பாதத்தைத் தமது பாதப் பெருவிரலால் சிறிது அழுத்தி, ஆதிசேஷ அம்சமான அப் பாம்பை ஒழுங்குபடுத்தி மரங்கள் யாவையும் வரிசைக் கிரமத்திலிருக்கச் செய்து, ஒரு பாணத்தால் அவைகளைத் துளைத்து வீழ்த்தினுர். அப்பாம்பில் மரங்கள் முளைக்க வேண்டிய காரணம் யாதெனில், முன்னொரு சமயம் தற்செயலாய் ஏழு பனம் பழங்களை ஒருவன் கொண்டுவரக்கண்டு, வாலி அவைகளைத் தன் குகையில் வைக்கும்படி சொல்லிப் பின் அவைகளைத் தான் சென்று பார்க்கையில், அந்தப் பழங்களேழும் ஒரு சர்ப்பமாகக் காணப்பட்டன. அதைப் பார்த்தவுடன் வாலி உன் உடலின் மேல் ஏழு மரங்கள் முளைக்கக் கடவதெனச் சாபமிட்டான். உடனே சர்ப்பமானது அம்மரங்களை வெட்டுகிறவனே உன்னைக் கொல்லுகிறவனுவான்; அதற் கையமில்லை எனப் பிரதி சாபங் கொடுத்தது.

இப்படிப்பட்ட இராம சாமர்த்தியங்களைச் சுக்ரீவன்கண்டு மகிழ்ச்சி யடைந்து "ஏ இராமா! நான் இன்னொரு விசேஷங் கூறுகிறேன். தேவர்களுக் கதிபதியாகிய இந்திரன் முன் ஒரு மாலையை வாலிக்குக் கொடுத்திருக்கிறுன். அந்தமாலையை அணிந்திருப்பவனை யுத்த முகத்தில் யார் பார்க்கிறுனே அவனுக்கு அவனுடைய புஜபலம் முழுமையும் போய்விடும். அம்மாலை வாலிக்குக்கிடைத்த தெப்படியெனில், கசியபப் பிரஜாபதி முன்னொரு காலத்தில் உக்ர மானதவஞ் செய்து பரமசிவனிடத்திருந்து அம்மாலையை யடைந்து தமது புத்திரனுகிய இந்திரனுக்குக் கொடுத்திருந்தார். இந்திரன் தன்னுடைய புத்திரன் வாலிக்கு அன்புடன் கொடுக்க, அம்மாலையை இப்பொழுது வாலி தன்கழுத்தில் அணிந்திருப்பதால், அவனை நீர் பார்த்தவுடன் உமது பலம் ஒழிந்துவிடும். ஆகையால் அதிலிருந்து ஜயம் பெற உபாயம் ஒன்று யோசித்துக் கொள்ளும்" என்று சொன்னுன். இராமர் உடனே அருகிலிருந்த சர்ப்பத்தைப் பார்த்து "உன் உடலில் முளைத்திருந்த மரங்களேழையும் வெட்டி உனக்

குச் சாபவிமோசனந் தந்தேனல்லவா ? ஆகையால் நீ என் சொற்படி இப்பொழுதே கிஷ்கிந்தாபுரி பட்டணஞ் சென்று இரவில் வாலி நித்திரை செய்யும் சமயம் நோக்கி, அவன் கழுத்தில் அணிந்திருக்கும் மாலையை கொண்டுவா'' வென கட்டளை யிட்டார். அந்தப்படி அச்சர்ப்பம் கிஷ்கிந்தைக்குச் சென்று வாலியின் அந்தப்புரத்தில் மஞ்சத்தின் பேரில் வைத்திருக்கும் அம்மாலையை எடுத்துகொண்டு அங்கிருந்து திரும்பி இராமரிடம் வந்து அதைக் கொடுத்து வணங்கிச் சென்றது. இராமர் மாலையைப்பெற்றதும் வாலியோடு அமர்புரியச் சுக்ரீவனுக்குக் கட்டளையிட, சுக்ரீவன் உடனே கிஷ்கிந்தாபட்டணம் சென்று வாலியை யுத்தத்துக்கு அழைத்து இருவரும் யுத்தஞ் செய்தார்கள். இராமர் இவ்விருவரில் ஒருவர்க் கொருவர் தோல்வியடையாத பலங்கொண்டவராயும் வித்தியாச மில்லாத ரூபமுடையவராயும் இருப்பதைக்கண்டு இச்சமயத்தில் நாம் பாணம் எய்வோமாகில், அது சுக்ரீவனைக் கொன்றாலும் கொல்லும்; அப்படிக் கொன்று விடுவோமாகில், நமக்கு மித்திர துரோகமல்லவா வந்து சேரும். ஆகையால் இச்சமயம் நாம் பாணம் விடுவது யுக்தமல்ல என்று நினைத்துச் சும்மாவிருந்தார். சுக்ரீவன் வெகு நேரம் போர் செய்து களைப்படைந்தமையால், யுத்தத்தை விட்டுப் பிரிந்து இராமர் பக்கம் வந்து அவரைப்பார்த்து "ஏ இராமா ஏன் என்னை வாலியினுடைய கைக்கு இரையாக்குகிறீர். என்னைக் கொல்ல உமக்குவிருப்பமிருக்குமானால் நீரே கொன்றுவிடு''மென்று சொல்ல, இராமர் இலட்சுமணரைக்கொண்டு சுக்ரீவன் கழுத்தில் கொடிகளால் செய்த மாலை ஒன்றைப் போடச் செய்து அவனை யுத்தத்துக்கு மறுபடியும் அனுப்பினர். அவன் முன் போலவே வாலியை யுத்தத்துக் கழைத்தான். உடனே வாலி யுத்தத்துக்குப் புறப்பட அதைக் கண்ட அவன் மனைவி தாரை "ஏ நாதா இராமர் என்றொருவர் இவ்விடம் வந்து சுக்ரீவனிடம் சிநேகங் கொண்டிருப்பதாகக் குழந்தை அங்கதன் என்னிடம் கூறியுள்ளானதலால், நீர் இப்பொழுது யுத்தம் செய்வதை யொழித்து இராமரிடம் சென்று நமஸ்கரித்து, தம்பி சுக்ரீவனை அன்புடன் அழைத்து வந்து, யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைக்கவேண்டும்; நான் சொல்வதைத் தட்டவேண்டாம்'' என்று பிரார்த்தித்தாள். வாலி

"ஏதாரே! நான் சொல்வதைக்கேள்; சாக்ஷாத் நாராயணரே நரவேடம் பூண்டு இராகவராக வந்திருப்பதை நானறிவேன். அவர் கையால் நான் மரணமடைந்து, பரமபதமடைய வேண்டிய விதி எனக்கு இருக்கிறது. நீ இவ்விடத்தில் சுக்ரீவனைச் சேவித்துக் கொண்டு சுகமாக விரு. சுக்ரீவன் உன்மேல் ஒரு சமயம் விருப்பங்கொள்வான். அப்பொழுது அவன் மனதுக்கு விரோதமின்றி அவனுடன் சுகித்திருப்பாயாகில் அவன் பத்தினியை நான் அநுபவித்த கடன் தீர்ந்துவிடும். நான் மரணமடையக் காலம் வந்தமையாற்றான் ஒரு போதும் என்னை விட்டகலாத என்மாலை என்னை யறியாமலே மறைந்திருக்கிறது பார். இன்று இராமபாணத்தால் அடி பட்டு யுத்தகளத்தில் மரணமடையப் போகிறேனாதலால், நான் தன்னியனானேன். என் தாய் தந்தையரும் தன்னியரானார்கள். ஆகையால் யான் யுத்தத்திற்குப் போகிறேன். நீ வருத்தமுற வேண்டிய அவசியமில்லை" என்று அவளுக்குச் சமாதானங் கூறி, சண்டைக்குப் புறப்பட்டுச்செல்ல, மார்க்கத்தில் மகோத்பாதங்களைக் கண்டு சந்தோஷமடைந்து ரணகளம் சென்று தம்பி சுக்ரீவனுடன் கொடூரமான யுத்தம் புரிந்தான். அப்பொழுது ஸ்ரீராமர் ஒரு மரத்தில் மறைந்துகொண்டு ஒரு பாணமெய்து வாலியை யடித்து வீழ்த்தினார். இதைக்கேட்ட தாரை ஓடிவந்து ரணகளத்தில் இராமபாணத்தினால் அடிபட்டு விழுந்துகிடக்கும் வாலியைப் பார்த்து மிக்க வருந்தினாள். பிறகு வாலி ராமநாதனாகிய ஸ்ரீராமரைப்பார்த்து "நீர் வீரராகவிருந்தும் என்னை ஒருமரத்தில் மறைந்து மார்பில் பாணம் எய்ததினால் உம்முடைய கீர்த்திக்குப் பெருங்குறை நேரிட்டது. எனக்கு வெகு நன்மை கிடைத்தது. இவ்விதம் என்னை அடித்துத் தள்ளும்படியாக யான் தங்களுக்குச் செய்த அபகாரம் யாது?" என்று வினவினான். இராமர் "ஏ வாலி! உன் சகோதரனாகிய சுக்ரீவனுடைய மனைவியை நீ உன்மனையில் வைத்துக் கொண்டதுமன்றி, அவனையும் துரத்தித் துரத்தி யடித்துக் கொன்றுவிட நீ விரும்பிய குற்றமே, உன்மேற் கோபங்கொண்டு கொன்றதற்குக் காரணமாகும். நீ சுக்ரீவன் பத்தினியை இது நாள் வரையில் அநுபவித்ததற்காக, இனி உன்னுடைய பத்தினி தாரையை என் அநுமதியில் சுக்ரீவன் அநுபவிப்

பன். உன் துர்நடக்கை நிமித்தம் நான் உன்னைக் கொன்றேனுயி னும் நீ அதற்குப் பிரதியாக துவாபரயுகத்தின் கடைசியில் ஒரு வேடனுகப்பிறந்து பிரபாஸமென்ற க்ஷேத்திரத்தில் என்னுடைய காலில் ஒரு பாணம் எய்து இப்பழியை தீர்த்துக்கொண்டு, அப் பிறப்பிலேயே முத்தியடைவாய்'' என்று கூறினர். வாலி "ஏ இரா கவா! எனக்கு அப்படியாகப்போவது உண்மையே. ஆனல் சீதை யை இராவணன் எடுத்துப்போன விஷயத்தை எனக்கு முன்னலே யே தெரிவித்திருப்பீரேயாகில், ஒரு நிமிஷத்தில் இராவணனைக் கொன்டே அந்தச் சீதையை உம்மிடம் திரும்பக் கொண்டுவந்து விடும்படி செய்திருப்பேன்; இனி என் குமாரன் அங்கதனை நீர்தான் பாதுகாத்து வரவேண்டுமெனப் பிரார்த்தித்து, யுத்தகளத்திற் பிரா ணனை விட்டான். பிறகு இராமர் அங்கதனைக்கொண்டு வாலிக்கு உத்தரகிரியை நடத்தி முடித்தார். சுக்ரீவன் இராமரை வணங்கி "ஏ இராமா! இக்கிஷ்கிந்தா நகரத்திற்கும் தாங்களே அரசனுக விருக்கவேண்டுமென்று வேண்ட, இராமர் லட்சுமணரை யழை த்து சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து அச்சமயம் மாரிகாலம் ஆரம்பமானதால், இந்த நான்கு மாதமும் சுகமாக வசிக்கத் தகுந்த இடம் எதுவென்று விசாரிக்க, அருகிலிருக்கும் பிரவர்ஷணகிரியின் உச்சியில் ஸ்படிகமயமான ஒரு குகையிருப் பதாகத் தெரிந்துகொண்டு அங்குசென்றூர். அந்தக் குகையைச் சுற்றிலும் வாசனை மலர் நிறைந்த மரங்களும் இனிமையான கனிவர்க்கம் கொடுக்கத்தக்க மரங்களும் நிறைந்திருந்தமையால், அதுவே வசிக்க யோக்கியமானதெனக் கண்டு, அங்கே அவர் லட்சுமணருடன் வாசஞ்செய்தார்.

இங்கு வாசஞ்செய்து வருங்காலத்தில் ஒருநாள் லட்சு மணர் ஸ்நானஞ் செய்துவிட்டு, இராமர் சமீபம் வந்து இராமரைப் பார்க்க, அப்பொழுது இராமர் பக்கம் சாத்விகாம்ஸமான சீதை யிருக்கக்கண்டு, வந்தனஞ் செய்தார். உடனே சீதை இராமருடைய வலது பாகத்தில் ஐக்கியமானுள். ஏ பார்வதி! ஆகையால் இராமர் சீதையை விட்டு ஒருக்காலும் பிரிந்தவராகார்—என்றூர்.

இராமரும் இலட்சுமணரும் அம்மலையில் ஸ்நானஞ் செய்து வந்த தீர்த்தங்களுக்கு இராம தீர்த்தமென்றும் இலட்சுமண

தீர்த்தமென்றும் பெயருண்டாயின. கிஷ்கிந்தாநகரத்தில் இராஜ்ய பரிபாலனம் செய்துவருகிற சுக்ரீவன் தன்னுடைய மந்திரி அனுமார் கூறிய யோசனைப்படி உலகத்தில் பலவிடங்களிலிருக்கும் தன் வானரசேனைகளை வரவழைக்க, ஒற்றர்களுக்கு உத்தரவளித்தான். இப்பொழுது மாரிகாலம் மாறி சரத்காலம் வந்தது. இதை இராமபிரான் அறிந்து சுக்ரீவன் தமது காரியத்தில் சிறிது மெதுவாயிருப்பதினிமித்தம் கோபங்கொண்டு இலட்சுமணரை யழைத்து நீ சுக்ரீவனிடம் சென்று வாவென விடுத்தனர்.

இலட்சுமணர் அவர் உத்தரவுப்படி கிஷ்கிந்தாபுரி சென்று வானரங்களை மிரட்டிப் பயமுறுத்த, அதை யறிந்த சுக்ரீவன் அவரைச் சமாதானம் பண்ணி யழைத்துவரத் தன் மந்திரி அனுமாரை யனுப்பினன். அனுமார் இலட்சுமணரிடம் சென்று இனிமையாகப் பேசி அவரைச் சமாதானப்படுத்தி, அழைத்துக்கொண்டு கோட்டையின் நடுப்பிரகாரத்தினருகே வந்தார். இங்கே மறுபடியும் சுக்ரீவனால் இலட்சுமணரைச் சமாதானஞ் செய்ய அனுப்பப்பட்ட தாரையும் வந்து சேர்ந்து, இலட்சுமணரைப் பார்த்து, "ஐயா மைத்துனரே! இதோ வெகு தொலைவிலிருந்த வானர சைன்னியங்களெல்லாம் சுக்ரீவன் உத்தரவுப்படி வந்துகொண்டிருக்கிறார்கள். கோபஞ் செய்யவேண்டாம்" என்று சமாதானப்படுத்தி, அவர் கையைப்பிடித்துக்கொண்டு அழைத்து வந்து சுக்ரீவனுடைய அந்தப்புரஞ் சென்றாள். சுக்ரீவன் இலட்சுமணரைக் கண்டதும் தன்னுடைய ஆசனத்திலிருந்தெழுந்து உபசரித்தான். இலட்சுமணர் "ஏ சுக்ரீவா! ரகுசிரேஷ்டராகிய இராமரை நீ மறந்துவிட்டாய். வாலியைக்கொன்ற இராமபாணம் உன்னை எதிர்பார்க்கிறது. நீ என்னால் கொலையுண்டு வாலியினுடைய வழியைப் பின்பற்றுவாய்" என்று கூறினர். இவ்விதம் கடுமையாகப்பேசிய லட்சுமணரைப் பார்த்து அனுமார் "ஐயா தாங்களேன் இப்படிப் பேசவேண்டும்? எங்கள் மன்னன் சுக்ரீவன் இராமரை மறக்கவில்லை. அவர் காரியத்தில் எப்பொழுதும் கண்ணுயிருந்துவருகிறார்" என்று சொல்லி, சுக்ரீவனைக்கொண்டு அவருக்குப் பூஜைசெய்வித்துச் சமாதானஞ்செய்தார். பிறகு சுக்ரீவனும் பிரதானமான வானர சிரேஷ்டர்கள் சூழ சேனை

களுடன் இராமரிடஞ் சென்று வணங்கி ஐயா! இதோ வந்திருக்கும் என்னுடைய சைன்னியங்களைப் பாருங்கள். பதினெட்டுப் பத்ம யூகாதிபதிகள் வந்திருக்கிறார்களென்று தன் சேனா சமுத்திரங்களைக் காண்பித்துப் பிறகு அவர் உத்தரவுப்படி அச்சைன்னியங்கள் முழுவதையும் பிரித்து, ஜாம்பவான், அங்கதன், அனுமான், நளன், சுஷேணன், சரபன், மைந்தன் இவர்களைப் பரிவாரங்களுடன் தெற்கு திக்கிற்கும் மற்றவர்களை மற்ற மூன்று திக்குகளுக்கும் போக உத்தரவிட்டு சீதையிருக்கு மிடத்தைக் கண்டுபிடித்து ஒருமாத காலத்திற்குள் திரும்பி வராவிட்டால் நீங்கள் வதைசெய்யப் படுவீர்களென்று ஆக்ஞாபித்தனுப்பினான். இவ்விதம் உத்தரவுபெற்றுச் செல்லும் அனுமாரிடம் இராமர் தமது நாமம் வரைந்துள்ள கணையாழியைக் கொடுத்து இதைச் சீதையினிடத்தில் இரகசியமாகக் கொடுவென்று சொல்லி தன்னுடைய மந்திரத்தை அவருக்கு உபதேசஞ்செய்து அனுப்பினார். அனுமார் அம்மந்திரத்தை உடனே இலக்ஷம் ஆவர்த்தி ஜபித்து அதை இலக்ஷம் ஆவர்த்தி ஏட்டிலும் வரைந்து அம்மந்திர சித்தியினால் இலங்காபட்டணம் போய்வர இணையற்ற சாமர்த்தியமடைந்து இராமபிரானைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து வணங்கி வானர சைன்னியங்களுடன் புறப்பட்டார். அப்பொழுது இராமர் "ஏ அனுமந்த! சித்திரகூடப் பர்வதத்தில் சீதையினுடைய கன்னங்களில் மனோசிலை என்கிற ஔஷதியால் நான் தொடி எழுதினதை சீதைக்கு அடையாளமாகச் சொல்" என்று கூறியனுப்பினார்.

சுக்ரீவன் கட்டளைப்படி யாவரும் அவரவர்களுடைய திக்குகளுக்குச் சென்று தேடியதில் மேற்கு வடக்கு கிழக்கு இத்திசைகளை நோக்கிச் சென்றவர்கள் அத்திக்குகளில் ஒரு மாத காலத்திற்குள் சீதையைக் காணமுடியாமல் திரும்பிவந்து சுக்ரீவனிடம் சங்கதியைத் தெரிவித்துவிட்டார்கள். தெற்குநோக்கிச் சென்ற அங்கதன் முதலியவர்கள் காடு காடாகச்சென்று சீதையைத் தேடிப்போகையில், வழியில் ஒரு அரக்கனைக் கண்டு அவனை இராவணனெனச் சந்தேகித்துக் கொன்றார்கள். இவ்விதமே தங்கள் மார்க்கத்தில் சந்திக்கும் இராட்சதர்கள் யாவரையும் இராவணனென்று நினைத்துச் சங்கரித்தார்கள்.

இப்பொழுது இவர்களுக்கு தண்ணீர் குடிக்கவேண்டுமென்கிற அவாவுண்டானதின் நிமித்தம் சுற்றிலும் பார்த்தார்கள். அப்பொழுது அருகிலிருந்த ஒருமலையின் குகைத் துவாரத்திலிருந்து அநேகபட்சிகள் நனைந்த மூக்குடன் வெளிப்படுவதைப் பார்த்து, அந்தக் குகையில் நல்ல தீர்த்தம், இருக்கவேண்டுமெனக் கருதி யாவரும் அக்குகையினுட் பிரவேசித்தார்கள். அக்குகையினுள் அந்தகாரமாக இருள் சூழ்ந்திருந்தமையால் திரும்பிவர வழிதெரியாமல் அங்கேயே ஒருவரோடொருவர் பேசாமல் பதினெட்டு நாள்வரையில் அங்குமிங்கும் திரிய, அவ்விடத்தில் இரத்தின மயமாகவிருந்த ஒரு கிரகத்தைக் கண்டு, அதினுட் பிரவேசித்து அங்கே வசிக்கும் மங்களகரமான ஒரு ஸ்தீரீயைப்பார்த்து, தங்கள் விர்த்தாந்தங்களை அந்த ஸ்திரீக்கு அறிவித்து, அவளுடைய விர்த்தாந்தங்களைத் தாங்களுமறியக் கேட்டார்கள். அந்த யோகனியானவள் அவர்களுக்குத்தக்க உபசாரஞ் செய்து, தன் விர்த்தாந்தத்தைப் பின்வருமாறு கூறுகிறாள்.

விசுவகர்மாவினுடைய பெண்ணாகிய ஹேமை என்பவள் பரமேசுவரனைத் தன்னுடை நர்த்தனத்தால் சந்தோஷப்படுத்த பரமசிவன் அவளுக்கு இப்பட்டணத்தை மனமுவந்தளித்தார். இந்தப் பட்டணத்தில் ஹேமை வெகுகாலம்வசித்து வருகையில் நான் அவளுக்குப் பரிசாரிகையாக இருந்துவந்தேன். இதை விட்டு அவள் சொர்க்கமடையுங்காலத்தில் என்னைப்பார்த்து, சிறிதுகாலத்திற்குப் பிறகு இராமபிரான் இவ்விடம் வரப்போகிறார். நீ அவரைத் தரிசித்துப் பூஜைசெய்து வணங்கிவிட்டு, என்னிடம் வந்து சேர் என்று கூறிவிட்டுச் சென்றனள். எனக்குச் சுயம்பிரபை என்று பேர். உங்களுக்கு நான் இப்பொழுது எவ்விதமான பணிவிடை செய்யவேண்டும் என்று கேட்டாள். அதுகேட்ட அங்கதன் முதலியவர்கள், நாள் பல கழிந்ததை நினைத்து, எங்களை இக்குகையை விட்டு வெளியேற்ற வேண்டும். இதுவே நாங்கள் வேண்டுவது என்றுகூற, சுயம்பிரபை "நீங்களனைவரும் கண்ணை மூடிக்கொள்ளுங்கள்" என்று சொன்னாள். அப்படியே அவர்கள் கண்ணை மூடிக்கொண்டு ஒரு க்ஷண நேரத்திற்குப் பிறகு கண்ணைத் திறந்து பார்க்க, அவளுடன் யாவரும் வெளியிலிருக்கக்கண்டு தாங்கள்

வெளிக்குக் கொண்டு வரப்பட்ட வழியையும் அறியாமல் ஆச்சரியப் பட்டார்கள். பின்பு சுயம்பிரபையும் இராமபிரானருகிற் சென்று அவரை வணங்கிப் பூஜைசெய்து அவர் அனுமதிபெற்றுத் தேகத்தியாகஞ் செய்து சொர்க்கலோகஞ் சென்றாள்.

பிறகு ஜாம்பவான் முதலியவர்கள் குகையில், காலங்கழித்ததை நினைத்து, அருகிலிருக்கும் சமுத்திரத்தையும் பார்த்து மிக்க வருத்தமடைந்து, ஸ்ரீராமபிரான் விருத்தாந்தத்தை உரக்கச் சொல்லிக்கொண்டு பிராயோபவேசஞ் செய்தார்கள். இப்படி இவர்கள் இராமருடைய விருத்தாந்தத்தைப் பேசிவரும் வேளையில், ஜடாயுவினுடைய மரணத்தை அங்கு அருகில் ஒரு மலைச்சந்திலிருந்து கேட்ட, அவர் சகோதரர் சம்பாதி கோபங்கொண்டு இவர்களைக்கொல்ல அருகில்வந்து, பின் தமது தம்பி மரணத்தின் காரணத்தையறிந்து, அவர்க்குத் தர்ப்பணம் முதலியவை செய்துவிட்டு, இவர்களுடைய வரவைத் தெரிந்துகொண்டு "இதோ நூறுகாதவழி விஸ்தாரமான சமுத்திரத்துக்கப்பாலுள்ள இலங்கையில் அசோகவனத்திலிருக்கும் சீதையைச் சாமர்த்திய முள்ளவர்கள் இச்சமுத்திரத்தைத் தாண்டிச் சென்று பார்த்து வரலாம். எனக்கு இறக்கைகளில்லாமையால், என்னால் செல்லவொண்ணாது. நான் வெகுதூரம் பார்க்கக்கூடிய கழுகினத்தைச் சேர்ந்தவனாகையால், இம்மலையிலிருந்தே சீதையைப் பார்க்கிறேன். முன்னொரு சமயம் சொர்க்கத்தை எட்டிவரக்கருதி, நானும் என் தம்பியும் ஆகாசத்தில் பறந்து சூரியன் அருகிற்செல்ல, சூரிய கிரணங்கள் எங்கள் இறக்கைகளை எரிக்கவே, நான் என் தம்பியை எனது இறக்கைகளால் மறைத்துக்கொண்டேன். அதனால் என் இறக்கைகள் தகிக்கப்பட்டுப் போயின. தம்பி இறக்கைகளுடன் பிழைத்துத்தேசாந்திரம் போய்விட்டான். நான் இம்மலையில் விழுந்து, இறக்கையில்லாமல் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் சந்திரசர்மாஎன்னும் முனிவரைக்கண்டு வணங்கி, என் கஷ்டங்களைத்தெரிவித்துக்கொண்டேன். அம்முனிவர் 'ஏ சம்பாதியே! பிற்காலத்தில் சீதையைத் தேடிக்கொண்டுவரும் வானரங்களுக்கு நீ சீதையிருக்கு

மிடத்தைச் சொல்லப்போகிறாய்; அப்பொழுது உனக்கு இறக்கைகள் முளைக்கும்" என்று அநுக்கிரகித்தபடியே இதோ பாருங்கள் க்ஷணத்திற்குள் இறக்கை முளைக்க ஆரம்பித்துவிட்டது. இராவணன் சீதையை ஆகாச மார்க்கமாகக் கொண்டுபோகுங் காலையில், என் பிள்ளை பார்த்து என்னிடம் வந்து அச்சங்கதியைத் தெரிவித்தான். உடனே நான் என் பிள்ளையைப் பார்த்துச் சினங்கொண்டு ஏ பரம மூடா! நீ கண்டதும், இராவணனை அதமாக்கிச் சீதையை விடுவிக்காமல், இங்கு வந்து தெரிவிக்கிறாய், பேதாய்! என் முன் நில்லாதே! ஓடென்று நான் அவனைத் துரத்தினேன். "அப்போது கோபத்தோடு ஓடினவன் இன்னும் என் பக்கம் வரவில்லை" என்று கூறிவிட்டு அங்கதன் முதலியவர்களிடத்தில்விடை பெற்றுக்கொண்டு சென்றார்.

பின் அங்கதன் முதலியவர்கள் ஒவ்வொருவரும் சமுத்திரத்தைத்தாண்டுவதில் அவரவர்களுக்குள்ள பலத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். அப்பொழுது மூத்தவராகிய ஜாம்பவான், இவர்கள் ஒருவருடைய பலமும் சமுத்திரத்தைத் தாண்டவல்லதல்லவென வறிந்து, அநுமாரிடஞ் சென்று, அவர் ஜனன காலமுதல் செய்த பராக்கிரமங்களை அவர் செவிக்கேற எடுத்துக்கூறிப் பின் இக்காரியத்தை முடிக்கத்தக்கவன் நீதான் என்று சொல்லிச்சென்று வாவெனக்கட்டளை யிட்டார். அநுமார் இதைக்கேட்டவுடன் புறப்பட்டு அங்கிருந்த மகேந்திர பர்வதம் ஏறி மலையைத் தரையோடு தரையாகும்படி அழுத்தி ஸ்ரீ ராமபிரானை நினைத்து ஆகாசத்திற் கிளம்ப முயற்சி செய்தார்.

8-வது சருக்கம் முற்றிற்று.

# 9 - வது சருக்கம்

## பரமசிவன் கூறுகிறார்.

பிறகு அனுமார் மலையிலிருந்து தாவி ஆகாச மார்க்கமாய்ச் செல்லுகையில், தேவதைகள் அனுமாருடைய பலத்தைப் பரீக்ஷிப்பதின் நிமித்தம் தங்கள் தாயாகிய சுரஸை என்பவளை அனுப்ப அவள் வேகமாகச் சென்று அனுமார் முன்னிலையில் வந்து, அனுமானைப்பார்த்து, "ஏ அனுமந்த! நீ என் வாயிற்புகு" என்று கூற அனுமார் "ஸ்ரீராமபிரானுடைய காரியத்தை நிறைவேற்றிப் பிறகு உன் இஷ்டத்தை நிறைவேற்றுகிறேன்" என்றார். சுரஸை அதற்குச் சம்மதிக்காமல், முன்போலவே தொந்தரைசெய்ய, அனுமார் தன் உடலை அவள் வாய் பிடியாமலிருக்கும்படி பெருக்கச் செய்து கொண்டார். அதைக்கண்டு சுரஸையும் தன் வாயை அவர் உடலை விடப் பெரிதாகச் செய்துக்கொள்ள, அச்சமயத்தில் அனுமார் அங்குஷ்டப் பிரமாண உருவங்கொண்டு, அவள் வாய்க்குட் புகுந்து அப்புறம்போனார். சுரஸையும் அவர் பலத்தைப் பார்த்து, ஆச்சரியமடைந்து அவரை மெச்சிச் சொர்க்கலோகம் சென்றார்.

இதன் பின் அனுமார் முன்போலவே ஆகாச மார்க்கமாய்ச் செல்லுகையில், மைநாகமலையானது சமுத்திர ராஜன் உத்தரவுப்படி அனுமாருக்குச் சிரமபரிகாரஞ் செய்விக்கக் கருதி, இரத்னமயமான சிகரங்களுடன் ஜலமத்தியி லிருந்து கிளம்பி, அச்சிகரத்தின் பேரில் ஒரு மானிடனாய்த் தோன்றி, அனுமாரைப் பார்த்து "ஏ அனுமந்த! யான் மைநாகமென்ற ஒருமலை; என்னிடத்தில் அமுதத்துக்கொப்பான கனிகளிருக்கின்றன; அவைகளைப் புசித்து க்ஷணநேர மிருந்து சிரமபரிகாரம் செய்துகொண்டு பிறகுசுகமாகச் செல்லுங்கள் என்று கூறி, பின் முன்னொரு காலத்தில் இந்திரனுக்கும் மலைகளுக்குங் கொடூரமான யுத்தம் நடந்தது. அப்பொழுது தசரதமகாராஜா அவ்வாபத்திலிருந்து என்னை விடுவித்தார். அது முதல் நான் இச்சமுத்திரத்தில் வசித்து வருகிறேன். ஆதலால் ஸ்ரீ ராமபிரான் ஏவலைக்கொண்டேகும் உமக்குச் சிரமபரிகாரஞ் செய்விப்பதாகிய பிரதியுபகாரம்புரிந்து கிருதார்த்தனாகவிரும்புகிறேன்" என்று கூறிற்று. அனுமார், "ஏ மைநாக! இராமகாரியத்தில் எனக்குச் சிரமமென்பதில்லை. சுவாமிகாரியம் முடியும்வரை

யில் யான் ஒன்றையும் புசிப்பதில்லை,'' என்றுகூற, மைநாகம், நல்லது என்னைத்தொட்டுப் பரிசுத்தனுக்குக'' எனவேண்ட, அநுமார் தம் கையால் அம்மலையின் சிகரத்தை "அப்படியே ஆகுக'' எனத்தொட்டு உடனே புறப்பட்டார். அப்பொழுது, சதாகாலமும் நீரிலேயே வசித்துக்கொண்டு மேலே பறக்கும் பிராணிகளின் நிழல்களின் வழியே அவைகளை யிழுத்துப் புசித்து வருவதால், சாயாக் கிரகம் எனப்பேர்கொண்ட, கோரரூபியான ஸிம்மகி என்ற ஓர் அரக்கி, அநுமாருடைய நிழலையும் பிடித்துக்கொண்டாள். அச்சமயத்தில் அநுமார் சுற்றிலும் பார்த்து ஒன்றையுங் காணமல் நம்முடைய வேகத்தைத் தடுத்தவன் யாரென நினைத்துச் சற்று யோசித்துக் கீழே நோக்க, அவ்விடத்தில் வாயைத் திறந்துகொண்டிருக்கும் ஸிம்மகி என்னும் அரக்கியைப் பார்த்து அவள் வாயில் திடீரென விழுந்து, தமது தேகத்தைப் பெருக்கச் செய்து, அவ்வரக்கியின் தேக நரம்பு பொடிபட அவளைப் பிளந்து கொன்றுவிட்டு, அங்கிருந்து கிளம்பி, இலங்கைக்கு ஒரு புறமாகிய சமுத்திரத்தின் தென்கரையிற் குதித்தார். அங்கே எதிர்தோன்றின இராவணன் தங்கையாகியகிரௌஞ்சைஎன்கிற அரக்கியைச் சமுத்திரமத்தியில் எதிர்த்த ஸிம்மகியைக் கொன்றதுபோல் கொன்றுவிட்டுச் சூரியாஸ்தமனமான பின் இலங்கைக்குட்செல்ல அப்பொழுதிலங்கிணிஎன்னும் பேர்கொண்ட அரக்கியொருத்தி அவரைப்பயமுறுத்த, அவ்வரக்கியை அநுமார் அலட்சியமாகத் தமது இடதுகைமுஷ்டியால் தாக்கிக் கீழே தள்ளினர். இப்பொழுது அவ்வரக்கிக்கு முன் பிர்மதேவன் கொடுத்திருந்த வரம் ஞாபகம் வரவே, அவள் அநுமாரைப் பார்த்து "ஐயா! எப்பொழுது உன்னை ஒரு குரங்கானது அவமதித்து ஜயம்பெறுகிறதோ, அப்பொழுது இராவணனைக் கொல்ல இராமர் வருவார்'' என்றுபிர்மதேவன்எனக்கு வரங்கொடுத்திருப்பதால், இப்பொழுது இராமர் இராவணனைச் சங்கரிப்பதுநிச்சயம். நீ ஜயமடைவாய்; இலங்கைகுட் சென்று அசோகவனத்தி லிருக்கும் சீதையைச் சுகமாகப் பார்'' என்றுகூறினள். பின்பு அநுமான்திரிகூட மலையினுச்சியில் அலங்காரமா யிருக்கும் இலங்கா பட்டணத்துக்குட் பிரவேசித்து, அங்கு அழகிய கோபுரங்கள் மேன்மாடிகள் நாற்சந்திகள் இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு ஒவ்வொரு

வர் வீடுகளிலும் சீதையைத் தேடிப்பார்த்துக்கொண்டே போனர். பின் ஒரு குகைப்போன்ற வீட்டுக்குள் நித்திரைச்செய்யும்பயங்கா ரூபியாகிய கும்பகர்ணனைப் பார்த்துவிட்டு வேறொரு வீட்டுக்குச் செல்ல அவ்விடத்தில் ஸ்ரீ ராமபிரானைப் புகழ்வதில் சந்தோஷ மடைந்திருக்கும் விபீஷணனையும் அவர்மனைவி சுலோசனையையும் பார்த்துவிட்டு வேறொரு வீட்டுக்குச் சென்றார். இங்கே நித்திரை செய்யும் மேகநாதனாகிய இந்திரசித்தைப் பார்த்து, பிறகு இராவ ணன் அரண்மனைக்குச் சென்றார். இப்பொழுது நடுராத்திரி வேளை யானமையால், இராவணன் ஒரு கட்டத்தினடுவில் சயனித்திருக்கப் பார்த்து, அங்கு பிரகாசிக்கும் தீபங்களை அணைத்துவிட்டு, இரா வணன் முதலியவர்களை நிர்வாணர்களாக்கி, ஒரு கொள்ளிக்கட்டை யால் இராவணன் மீசையைக் கொளுத்திப் பின் அங்கு கோடிக் கணக்காக விருக்கும் அரக்கிகளையும் நிர்வாணிகளாக்கி, அங்கே வைத்திருந்த தண்ணீர்க் குடங்களையும் உடைத்துவிட்டுக் காவ லாளிகளைத் தமது வாலைக் கொண்டு பயமுறுத்தினர். உடனே காவலாளர்கள் பயந்து எழுந்திருந்து, “இப்பொழுது ஜானகி கோபங் கொண்டிருக்கிறாள். இது நிச்சயம்; இது நமக்குப் பிரான ஹானிகரம்” என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொள்வதை அனுமார் கேட்டுச் சந்தோஷமடைந்து, அருகிலிருக்கும் மற்றொரு கிரகத்திற்குட் பிரவேசித்தார். இங்கேயும் ஜானகியைத் தேடிக் காணுமையால் அருகே யிருந்த புட்பகவிமான மேறிச் சுற்றிலும் பார்த்தார். இப்பொழுது மறுபடியும் இராவணன் அநேக ஸ்திரீகள் கூட்டத்தின் மத்தியில் நித்திரை செய்வதையும் அவனருகில் அவன் மனைவி மண்டோதரி நித்திரை செய்வதையும் பாரத்து, சீதையோவெனச் சந்தேகித்து, தமக்கு இலட்சுமணர் கூறியிரு ந்த சீதாதேவிக்குரிய அடையாளங்கள் அவளிடத்தில் உள்ளன வோவென உற்றுப்பார்க்க, அவ்வடையாளங்களைக் காணுமலிருந் தும்,சீதையெனச்சந்தேகித்துச்சஞ்சலமடைந்தார் அனுமாரென்று, பரமசிவன் கூறினர். உடனே பார்வதி, “நாதா! மண்டோ தரி ஒரு இராட்சஸியாயிற்றே; அவள் எப்படிச் சீதைக்கொப்பா வாள்? ஆனுல் உலகத்தில் பிறக்கும் மாதர்களெல்லாம் சீதையி னுடைய அம்சாம்ச பாவமென்று சொல்லக்கேட் டிருக்கிறேன்”

என்றாள். பரமசிவன் சீதை விஷ்ணுவினுடைய சிருஷ்டியே. மண்டோதரியும் விஷ்ணுவினுடைய சிருஷ்டியே. முன்னொரு சமயம் இராவணன் தாயாராகிய கேகயி என்பவள் இராவணனைப் பார்த்து, நான் பூஜைசெய்து வரும் லிங்கமானது, ஆதிசேஷனுடைய சுவாசத்தின்வழியே இன்று பாதாள உலகம் போய்விட்டது. நீ பரமசிவனிடம் சென்று ஒரு ஆத்மலிங்கம் அவரிடமிருந்து வாங்கிக் கொண்டு வாவென்று கூறினாள். இராவணன் அப்படியே ஆகட்டுமென்று கூறிப் புறப்பட்டுச் சாமகானத்துக்கு மகிழ்ந்து வரங்களை கொடுக்கும் என்னிடம் வந்து வணங்கி, சாமகானஞ் செய்து, "ஏ சம்போ! கைலாசபதே! நான் தங்களிடமிருந்து இரண்டு வரம் பெற விரும்புகிறேன். என் தாய் பூஜிப்பதற்கு ஒரு ஆத்ம லிங்கம் கொடுப்பதொன்று, மற்றொன்று உமது வாமபாகத்தி லிருக்கும் பெண்ணை எனக்கு மனைவியாகக் கொடுப்பதொன்று" என்று கேட்டான். நான் அப்பொழுது அவன் கேட்ட வரங்களின்படியே உன்னையும் ஆத்மலிங்கம் ஒன்றையும் கொடுத்து, "ஏ இராவணா! இவ்வாத்ம லிங்கத்தை மார்க்கத்தில் கீழே வைப்பாயானால் அங்கேயே லிங்கம் ஸ்திரமாகிவிடும்" என்று சொல்லி யனுப்பினேன். இராவணன், உன்னையும் லிங்கத்தையும் எடுத்துக்கொண்டு போகையில் நீ வழியில் விஷ்ணுவை ஸ்மரித்தாய்; அவர் அதை யறிந்து உடனே தமது சரீரத்தில் பூசியிருக்கும் சந்தனத்தைத் திரட்டி ஒரு பெண்ணைச் சிருஷ்டித்து மண்டோதரியெனப் பெயரிட்டு, அவ்வணங்கை மயன் கையில் கொடுத்தார். மயன் அப்பெண்ணை யெடுத்துக்கொண்டு சீக்கிரமாய்ப் பாதாளலோகஞ் சென்று தன் கிரகமடைந்தான். அப்பொழுதே மகாவிஷ்ணுவானவர் ஒரு அந்தணர் வேடம்பூண்டு இராவணன் செல்லும் வழியில் எதிர்தோன்றி, அவனைப் பார்த்து, "ஏ இராவணா! பரமசிவன் தமது பத்தினி பார்வதியைப் பாதாளலோகத்தில் மயன் கிரகத்தில் வைத்து ஒளித்துவிட்டு, உனக்கு வேறொரு பெண்ணை துர்க்கையாகக்காட்டி உன் கையில் கொடுத்து ஏமாற்றிவிட்டார். உலகிலும் சுவர்க்கத்திலும் நீ சென்று தேடக்கூடும், பாதாளலோகம் உனக்குச் சொந்தமானதால் நீ அங்கு சென்று தேடமாட்டாய் என்று நினைத்து, அங்கே கொண்டுபோய்த் தன் மனைவியை வைத்துவிட்டார். ஆகை

யால் நீ இப்பொழுதே பாதாளலோகம் சென்று மயனுடைய கிரகத்திலிருக்கும் கிரிராஜன் பெண்ணை மனைவியாகப் பெற்றுச் சுகம் பெறு'' என்று சொல்ல, இராவணன் மறுபடியும் இவ்விடம் வந்து என்னைப்பார்த்துச் சிரித்துவிட்டு, ''உமது மனக்கருத்தை யானறிந்தேன்; பாதாள லோகத்தில் உமது மனைவியை ஒளித்துவைத்துவிட்டு எனக்கு வேறொரு பெண்ணைக் கொடுத்து ஏமாற்றிவிட்டீர். இவள் இவ்விடமேயிருக்கட்டும். நான் இப்பொழுதே பாதாள லோகஞ்சென்று அங்கிருக்கும் பெண்ணை அழைத்துச் செல்லுகிறேன்'' என்று கூறி உன்னை என்னிடம் விட்டுப் பாதாள லோகத்துக்குப் போனான். வழியில் அற்பசங்கையின் தொந்தர வுண்டாயிற்று. அப்பொழுது அங்கிருந்த ஒரு பிராமணரைப் பார்த்து, ''ஏ அந்தண சிரேஷ்டரே! இந்த ஆத்மலிங்கத்தைச் சற்று உமது கரத்திலேயே வைத்துக்கொண்டிரும்; அற்பசங்கா பாதையைத் தீர்த்துக்கொண்டு சீக்கிரம் வந்துவிடுகிறேன்'' என்றுசொல்ல; அதற்குப்பிராமணரூபங்கொண்டிருந்த விஷ்ணு '' லிங்கத்தை ஒரு முகூர்த்தம் வரையில் தான் நான் வைத்துக்கொண்டிருப்பேன். அதற்குள் நீ வாராவிடில் கீழேவைத்துவிட்டுப் போய்விடுவேன்'' என்று கூற, இராவணன் ஆகட்டும் அப்படியே செய்யும் என்று சொல்லி லிங்கத்தை அவர் கையில் கொடுத்துவிட்டு அற்பசங்கைக்குச் சென்றான். அவனுக்குத்தான் பிராமணனிடம் செய்துகொண்ட ஒப்பந்தப்படி வர முடியாமற் போனதினால், அந்தப் பிராமணர் லிங்கத்தை மேற்குச் சமுத்திரக் கரையாகிய அவ்விடத்தில் வைத்துவிட்டுத் தன்பதிக்கேகினார். பிறகு இராவணன் விதிப்படி காரியத்தை முடித்துக் கொண்டு அவ்விடம் வந்து லிங்கம் பூமியில் வைத்திருப்பதைப் பார்த்து, அதை யெடுக்க முயன்றான். அது பூமியில் வேரூன்றிப் போனபடியால், அதை அசைக்க அவனால் முடியவில்லை. லிங்கத்தின் மேலே செவித்துவாரம்போல் ஒரு துவாரமிருந்தது. அதைக் கண்டு துவாரத்தை உற்றுப் பார்த்தான். அதில் செவியின் ஜவ்வு போல் ஒன்றிருந்தது. அது பூமிக்கு ஒரு செவிபோற் காணப்பட்டமையால், அது முதல் அந்த லிங்கமிருக்கு மிடத்துக்கு கோகர்ண க்ஷேத்திர மெனப் பேர்வழங்கி வருகிறது. இதனால்

இராவணன் மிக்க வருத்தப்பட்டுப் பாதாள லோகம் சென்ருன்.

அங்கு மயன் வீட்டில் மாதுசிரோமணியாகிய மண்டோதரி யிருக்கக்கண்டு, அவளைத் தனக்கு மனைவியாகக் கொடுக்கவேண்டுமென்று மயனைப் பிரார்த்திக்க, மயன் உடனே சம்மதித்து விவாகஞ்செய்து கொடுத்தான். மயன் தன் பெண்ணுக்குச் சீதனமாக அநேக பொருள்களையும் ஆபரணங்களையுங் கொடுத்து, அத்துடன் சத்துருக்களைக் கொல்வதில் பழுது படாத ஒரு சக்தி ஆயுதத்தையும் கொடுத்தான். இராவணன் மண்டோதரியின் இடை சிறுத்திருப்பதை நோக்கி, மண்டோதரி என்கிற பெயர் இவளுக்கே தகுமெனக் கருதி மகிழ்ச்சியடைந்து அவளுடன் இலங்கைக்குச் சென்ருன். தான் கேட்டுக் கொண்டபடி லிங்கங் கொண்டு வாராமையைக் கண்டு அவன் தாய், அவனைக் கோபித்து வெறுக்க, இராவணன் உடனே புறப்பட்டுக் கோகர்ண க்ஷேத்திரமடைந்து, அங்கு உக்ரமான தவஞ்செய்து பிர்மதேவனிடத்தில் வரப்பெற்று மூவுலகங்களையும் தன் சுவாதீனப் படுத்திக்கொண்டு மறுபடி இலங்கைக்குச் சென்று அங்கே இராஜ்யபரிபாலனஞ் செய்து வந்தான். இந்த விசேஷத்தினுல் தான் மண்டோதரி சீதைக்கொப்பாய் இராவணன்பக்கம் விளங்க அனுமார் கண்டு சந்தேகங்கொண்டார். மயனும் இலங்கைக்கே சென்று அங்கே வீடுகட்டி வசித்துவந்தான். மயனுடைய தம்பி கயன் என்பவன் மகாவீரனும் பிரதாபமுள்ளவனும் பிர்மதேவன்வரத்தால், இராத்தூக்கத்தை ஒழித்தவனுயுமிருந்துவந்தான். அவனுக்கு இராவணன் கையால் மரணமென்று விதித்திருப்பதை யறிந்த அனுமார் முன்னொரு சமயம் கயன் தன் சபையிலிருக்கும்போது காற்று எடுத்துக்கொண்டு போய் ஓரிடம் போட்டிருந்த அவனுடைய வஸ்திரத்தை எடுத்து இராவணனுடைய சொர்ணமயமான படுக்கையில் இப்பொழுது போட்டுவிட்டார். விபீஷணனுடைய படுக்கையில் இராவணன் வஸ்திரத்தை யெடுத்துப் போட்டுவிட்டுச் சீதையைத் தேடிச் சென்ருர். கடைசியாக உயர்ந்த விருட்சங்களும் அழகான மாடிவீடுகளும் நிறைந்த அசோகவனஞ்சென்று அங்கே ஓரிடத்தில் உயர்ந்து செழித்த சிம்சுபாமரத்தைக் கண்டு அதனடியில்

அநேக அரக்கிகளின் கூட்டத்தினடுவில் ஒரே பின்னலான கூந்தலோடு, அழுக்கடைந்த ஆடையணிந்து தரையில் படுத்து இராமா இராமா வென்று உச்சரித்து வருந்தும் ஒரு கன்னியைக் கண்டார். கண்டதும், இவள் சீதைதானென நினைத்து நாம் கிருதார்த்தனானோமென அம்மரத்தின் கிளைகளின் நடுவில் மறைந்து சீதையின் தேகத்தை உற்றுப்பார்த்து ருசியமூக பர்வதத்தில் சுக்ரீவனோடிருக்கும்போது ஆகாசத்திலிருந்து முடிப்பாக விழப்பெற்று இராமபிரான் முன்னிலையில் அவிழ்த்து அவர்கையில் கொடுக்கும்போது தான் பார்த்தநகைகள் அப்பெண்ணரசியின் அங்கங்களில் இல்லாமலிருக்கவும் பார்த்தார்.

இப்படி யிருக்கையில், இராவணன், ஒரு குரங்கு இலங்கைக்குள் வந்து அசோகவனத்திலிருக்கும் சீதையைக் கண்டதாகக் கனவு கண்டு விழித்துக்கொண்டு, ஸ்ரீராமபிரான் கையால் நாம் சீக்கிரம் மரணமடைந்து நற்கதி பெறவேண்டும். ஆகையால், இப்பொழுது சீதையினிடம் சென்று அவளை நாம் விரும்பினதாகக் காண்பிப்போம். குரங்கு அதைப்பார்த்து இராமருக்குத் தெரிவிக்கட்டும். உடனே இராமர் இவ்விடம் வந்து நம்மோடு யுத்தம்புரிந்து நம்மைச் சங்கரிப்பார் என்று தன் மனதில் நினைத்து உடனே அநேக மாதர்கள் சூழக் கோலாகலமாகப் புறப்பட்டுக் குதூகலங்கொண்டு சீதையிடஞ் சென்றான். இப்படி இராவணன் வரும்போது அவனோடு வந்த மாதர்களுடைய நூபுரம் முதலிய ஆபரணங்களின் சத்தங்கேட்டுச் சீதைமனங்கலங்கி வருத்தப் பட்டாள். இச்சமயம் இராவணன் சீதை முன் திடீரென்று வந்து "ஏ ஜானகி! நீ ஏன் என்னைப் பார்த்து மிக்கவெட்கங்கொள்கிறாய்? இராமன் இராஜ்ய பிரஷ்டனாய்த் தன்னுடைய பந்து மித்திரர்கள் தாய் தந்தையர்களையு மிழந்து ஜடாவல்கலதாரியாய் ஏகாங்கியாக வசித்துக்கொண்டு உன்னிடத்தில் சிறிதும் அன்பில்லாதவனாய் இருக்கிறான். நீ அவனை ஒழித்துவிட்டு, திரிலோகாதிபதியாயும் மகா பராக்ரமசாலியாயும் தேவமாதர்கள் பணிவிடை செய்யும் பாக்கியம் பெற்று உத்தம பதவியிலிருப்பவனுமான என்னை அடைந்து சுகமாயிரு. இதுமுதல் மண்டோதரி முதலிய யாவரையும் உனக்குப் பணிவிடைப் பெண்களாகச் செய்கிறேன்; என் இராஜ்யத்தையும்

என் உயிரையும் உனக்குச் சுதந்தரமாக்கி விடுகிறேன்" என்று பற்பலவிதமாகப் பேசிப் பிரார்த்தித்தான். சீதை எழுந்து தலை குனிந்து நின்று ஒரு துரும்பை இராவணனுக்கு முன்னிலையிலெறிந்து அத்துரும்பைப்பார்த்து, "ஏ நீசா! நீ இராமனுக்குப் பயந்து சந்நியாசி வேடங்கொண்டு, இராம இலட்சுமணராகிய அவ்விரு வீரரும் என்னருகில் இல்லாத சமயம் நோக்கி, ஆசிரமம் வந்து யாசித்து, யாகசாலையி லிருக்கும் ஹவிஸ்ஸை ஒரு பெண் நாய் கௌவிச் செல்வதுபோல், என்னைக் கபடமாக அபகரித்து வந்தாய்; அதன் பலனை நீ அதி சீக்கிரம் பெறுவாய்; லோகநாதனாகிய ஸ்ரீ ராமபிரான் இவ்விடம் வந்து உன்னோடு யுத்தம்செய்து உன் சரீரத்தைப் பாணங்களால் சின்ன பின்னமாகப் பிளந்து கொல்லும்போது, இராமனை மானுடனென்று எண்ணி யிருப்பது தெரியும்" என்றாள். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் இராவணன் மிகக் கோபங்கொண்டு, "ஏ! சீதா இலங்கையில் (எனது ஏவலாளராக விருக்கும்) தேவர்களுடைய முகம் சீக்கிரத்தில் வாட்டமுறும்; இராமர் இலட்சுமணர் இவ்விருவரும் சேர்ந்து ஏக காலத்தில் எதிர்த்த போதிலும் யுத்தத்தில் என்னை வெல்ல முடியாது. ஆகையால் அந்த யுத்தத்தில் இராமன் தன் தம்பியுடன் பெரும் ஆபத்தை யடைவான். ஜயம் இராமருக்குக் கிடையாது. எனக்குத்தான். பிறகு வெகு சந்தோஷத்தை யடையப் போகின்றேன்" என்ற இப் பொருளடங்கிய,

ஹவி த்ரீரும் காயாம் த்ரிஷஸவ நஹூர் நிரவிராஸ
ஸ ராஜோரவி ஷூராதாநயா யிவா ர தெறுக்ஷணவஸவஃ
தயா யாஸ்த்ரா யெவ்வி புவஷூ நா ஜெநாத்ருஜடிறுஃ
ஜயஸ்ரீ ராஉவெஸ்ர நூஉவஹா தொஷொஉத்ரு தாஹவெஸ

இச்சுலோகத்தைக் கூறினன். இதைச் சீதை கேட்டு "ஏ மூடா! நீ சொல்லிய சுலோகத்தின் நான்கு பாதங்களிலும் ஆறுவது எழுத்துக் கப்பாலுள்ள ஒரு எழுத்தைத் தள்ளிப் (ஏழாவது எழுத்தை) படித்துப்பார்; அப்பொழுது சுலோகம் எவ்விதம் பொருள்படுமோ அவ்விதமே தான் நடக்கும்" என்று கூறினள்.

முதற் பாதத்தில் தி என்ற எழுத்தைத் தள்ள, தச வதனனுக்குக் கெடுத லென்றும், இரண்டாவதடியில், ந என்றதைத் தள்ள, இராமர் யுத்தத்தில் எதிர்ப்பரென்றும், மூன்றாவது பாதத்தில், வி என்ற எழுத்தைத் தள்ள, இராமருக்கு மேன்மையான பதவி கிடைக்கு மென்றும், நான்காவது பாதத்தில் ந என்பதைத் தள்ள இராமர் ஜயம் பெறுவர் என்றும் பொருள்படுவது காண்க.

இவ்விதம் சீதை தன்னுடைய வார்த்தைகளாகிய பாணங்களால் இராவணனை ஜயிக்க, இராவணன் அக்கணத்தில் மிகச் சினமடைந்து கத்தியை உருவி யெடுத்துக்கொண்டு வேகமாகச் சீதையினருகே ஓட, அப்பொழுது அவனருகிலிருந்த மண்டோதரி அவன் கையைப் பிடித்துத் தடுத்து, "ஏ நாதா! நானும் என்னைப் போன்ற அழகானஸ்திரீகள் அநேகம் பேர்களும் உமக்கிருக்க துரும்புபோல் இளைத்தும் ஏழையாயு மிருக்கிற இச்சீதையை நீர் ஏன் விரும்புகிறீர்; விட்டு விடும்" என்று சமாதானஞ் செய்தாள். பிறகு இராவணன் சீதைக்குக் காவலாக அங்கிருக்கும் அரக்கிகளைப் பார்த்து "இச்சீதை என்னை விரும்பும்படியாகவும், எனக்குச் சுவாதீனப் படும்படிக்கும் நயத்திலும் பயத்திலும் முயற்ச்சி செய்யுங்கள்; இன்னும் இரண்டு மாதத்திற்குள் இவள் என் விருப்பத்தை நிறைவேற்ற இணங்காவிடில், இவளைக்கொன்று எனக்குக் காலை நேரத்திற் புசிக்க ஆகாரமாக்குங்கள்" என்று ஆக்ஞாபித்தான். இவைகளைக் கேட்டதும் சீதை மறுபடியும் "ஏ மூடாத்மா! நீ என்னை ஒரு பெட்டியில் இரத்தனமாகக் கொண்டுவந்து இவ்விடத்தில் திறந்து பார்த்தபொழுது நான் ஒரு குழந்தையாகி, உன்னைப்பார்த்து, "நான் இப்போது புறப்பட்டுப்போய்க் கொஞ்ச காலத்திற்குப் பிறகு, உன்னை வம்சத்துடன் அழிப்பதற்காக இன்னொரு முறை வரப்போகிறேன்" என்று சொல்லிய மொழிகளை உண்மையாக்குவதன் பொருட்டே இப்பொழுது வந்திருக்கிறேன். அதி சீக்கிரத்தில் இராமபிரானுடைய திருக்கரத்திற்கு உன்னையும் உன் பந்துக்களையும் உன் சந்ததிகளையும் இரையாக்கிப்பின்அயோத்திக்குச் செல்வேன். அப்பொழுது தன் பாட்டின் வீட்டில் வசித்துவரும் நிகும்பன் புத்திரனாகிய பௌண்டரகன், தீபாந்தர வாசியாகிய சதானன இராவணனைத் தனக்குத் துணையாகக்கொண்டு இந்த

இலங்கையில் அரசாட்சி செய்வான். அக்காலத்தில் நான் மூன்ரு வது தடவையாக இவ்விலங்கைக்கு வந்து, அவ்விருவர்களேயும் கொன்றுவிட்டு மீண்டும் அயோத்திக்குச் செல்வேன். பின் சின் ருட் சென்றதன்மேல், நாலாவது தடவையாக இலங்கைக்குப் புஷ் பக விமானத்தில் வந்து, கும்பகர்ணன் குமாரன் மூலகன் என்ப வனே நானே யுத்தரங்கத்தில் எதிர்த்துப் போர் புரிந்து கொல்லப் போகிறேன். இவைகளனைத்தையும் நான் முன்னமே உனக்குத் தெரிவித்திருக்கிறேன். நினைத்துப்பார். இதுவன்றி முன் பிரம தேவன் உன் மரணத்தைப்பற்றித் தெரிவித்த காலையில், கௌ ஸல்யையை எடுத்துவந்து ஒரு பேழையிற் பூட்டி. உன் சுவாதீனத் தில் வைத்திருந்து, பிறகு அப்பெட்டியைத் திறந்து பார்க்கும் போது அதிற் கௌஸல்யை அயோத்தியாதி பதியுட னிருக்கக் கண்டு, உடனே அப்பேழையை எறிந்துவிடத் தூதர்களுக்குக் கட் டளை யிட்டனுப்ப, அது சாகேத நகரத்தையே யடைந்தது; இது தெய்வகதியென நீ நினை; உன் மரணத்தை உத்தேசித்தே நீ என்னை யபகரித்து வந்திருக்கிருய்; உன் கிரகம் சென்று சுகமனு பவி. சீக்கிரம் இராமபிரான் வந்து உன்னைக் கொல்வர்'' என்று கூறினள். சீதையினுடைய இவ்வார்த்தைக ளனைத்தும் இராவ ணன் மார்பில் பாணம்போற் பாய, அவன் வாய் பேசாமல் வெட்க மடைந்து, தன் அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

இராவணன் சென்ற பிறகு அவன் உத்தரவு செய்தபடி காவ லாயிருக்கும் அரக்கிகள் சீதையிடஞ்சென்று, சிலர் கொடூரமான வார்த்தைகளை அடிக்கடி பேசியும், சிலர் வாயைத் திறந்துகொண்டு நீ இராவணன் விருப்பத்துக்கிசையாவிடில் உன்னை விழுங்கி விடுவே னென்று சொல்லியும் சிலர் கத்தியை உருவிக்கொண்டும் சிலர் கைகளை ஓங்கி அடிக்கப்போயும் பயமுறுத்தினர்கள். இதைக் கண்ட விபீஷணனுக்குப் பிரியையான திரிசடை அவர்களைத் தடு த்து, ''நீங்கள் சீதையைப் பயப்படுத்த வேண்டாம்; அவளுக்கு வணங்குங்கள்; நான் இப்பொழுது, ஸ்ரீராமபிரான் சேனைகளுடன் இவ்விடம் வந்து இலங்கையைக் கொளுத்தி இராவணனைக்கொன்று சீதையை விடுவித்துக்கொண்டு போனதாகவும், இராவணன்

என்னைத் தேய்த்துக்கொண்டு நிர்வாணியாய்ச் சாணிக்குழியில் விழுந்து கிடப்பதாகவும்" ஒருகனவு கண்டேன். ஆகையால், இவளுக்கு ஹிதமாக நடந்து வருவோமாகில், நமக்கு ஸ்ரீ ராமபிரானிடமிருந்து அபயம் கிடைக்கும். இவளைத் தொந்தரை செய்வோமாகில் நம்மையும் அவரைக்கொண்டு அழித்து விடுவள். ஆகையால் சாகஸகாரியம் செய்யாதேயுங்கள் என்று அவ்வரக்கிகளுக்குப் போதித்தாள். அரக்கிகள் திரிசடையின் சொற்படி சீதைக்கு யாதொரு தொந்தரவுஞ் செய்யாமலிருந்தார்கள்.

இச்சமயம் சீதை சொல்லற்கரிய வருத்தமுற்று, "நாம் இப்பொழுதே மரணமடையவேண்டும்; அதற்கு உபாயம் யாது? நமது கூந்தல் வெகு நீளமாயிருக்கிறது; அதைக்கொண்டு கழுத்திற் சுருக்கிட்டுக்கொள்வது தான் தக்க உபாயம். முன் பஞ்சவடியில் நிரபராதியான லட்சுமணனைக் கடுஞ்சொற்களாகிய அம்புகளால் எய்து தொந்தரை செய்தோம். இப்பொழுது இவ்வரக்கிகளால் தொந்தரை யடைவது அதன் பயனே. கௌதமியாற்றங் கரையில் குற்றமற்ற லட்சுமணனை மனவருத்தமடையச் செய்த பாபத்தைப் போக்க இப்பொழுதே துர்மரணமடைந்து பிராயச்சித்தம் பெறவேண்டும் என்று இவ்வாறு தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

இவ்விதஞ்சொல்லி மரணமடையத் துணிந்த சீதையின் வருத்தத்தைக்கண்ட வாயு புத்திரனாகிய அனுமார், இனி நாம் க்ஷணமும் தாமதிக்கலாகாதென்று கருதி உடனே மிக மெதுவாக, சீதையின் தலைக்கு அருகாமையிலிருக்கும் கிளையில் வந்து மறைந்துகொண்டு சற்றுலோசித்து, இதுதான் இச்சமயத்துக்குத்தக்க உபாயமென நினைத்து, ஸ்ரீராமபிரான் சாகேத நகரம் விட்டுப்புறப்பட்டதுமுதல், தாம் சீதையைக் கண்டது வரையில், நடந்த விருத்தாந்தத்தை முறையே கேட்டுச் சீதை மனமகிழத் தெரிவிக்கலாயினர். இராமபிரான் விருத்தாந்தம் செவியிற்பட்டதும் சீதைமனதில் ஆச்சரியங்கொண்டு இதென்ன தெரியவில்லையே! இராக்காலமானதாற் சொப்பனமோ! இது மாயையின்றி உண்மையாக இருக்குமாகில் அமுதமாரியாக இவ்வார்த்தைகளைப் பொழிந்த அந்த மகாபாக்கிய

வான் என்முன்னிலையில் வரட்டும் என்று சொன்னாள். உடனே அனுமார் மரக்கிளையிலிருந்து சீதை முன் வந்துவணங்கித்துதித்து மறுபடியும் இராமபிரான் விருத்தாந்தத்தைச் சுருக்கமாகக் கூறி, அவர் தம்மிடத்தில் கொடுத்திருந்த கணையாழியைக் கொடுத்தார். சீதை தன் பிராணநாதருடைய கணையாழியைப் பெற்றதும் உற்றுப் பார்த்து முத்தமிட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டு வணங்கி அனுமாரைப் பார்த்து நீர் இராமரைக் கண்டதுமுதல் விஸ்தாரமாக இன்னொரு முறை கூறவேண்டும என்றனள்.

அனுமார் மன்முவந்து தான் இராமரைக் கண்டது முதல் நடந்ததைக் கூறிவிட்டுப் பின் ஏ தாயே! "ஸ்ரீராமபிரான் எனது தோள்மீதேறிக்கொண்டு வானர சைன்னியங்களுடன் இங்கு வந்து இராவணனுடன் யுத்தம் புரிந்து அவனைக்கொன்று உம்மைச் சீக்கிரம் மீட்டுக்கொண்டு போவார்; நான் சொல்வதை நம்புங்கள் பயத்தை ஒழியுங்கள்" என்று சமாதானங் கூறி, நம்பிக்கைஉறுதிப் படுவதினிமித்தம் சீதைக்குத் தமது விசுவரூபத்தையுங் காட்டித் "தாயே! முன்சித்ரகூட பர்வதத்தில் ஸ்ரீராமபிரான் உமது கபோலத்தில் மனோசிலை யென்ற ஓஷதியால் பொட்டிட்டதையும் உமக்கு ஞாபகமூட்டும்படி அவர் கூறியிருக்கின்றார்" என்று சொன்னார்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் சீதை ,சங்கைகளொழிந்து பரமானந்தமடைந்தாள். உடனே அனுமார், "தாயே! நான் இதை விட்டு இராமரிடம் போகவேண்டும். அனுமதி தந்து நான் தங்களைக்கண்டதற்கு ஓர் அடையாளமும் கொடுக்கவேண்டும்" என்றார். உடனே சீதை மகிழ்ந்து தன்னுடைய தந்தையிடம் பெற்றுச் சிரசில் மறைவாகச் சூட்டிக்கொண்டிருக்கும் சூடாமணியைக் கரத்தால் உருவி அனுமாருடைய கையிற்கொடுத்து, சித்ரகூடபர்வதத்தில் ஒரு காகத்தால் தனக்கு நேரிட்டதையும் ஸ்ரீராமபிரானுக்குத் தெரிவிக்கும்படி கூறியருளினாள். அனுமார், சீதையை மறுபடியும் வணங்கி நின்று தன் மனதிற்குள் சுவாமி ! காரியம் நிறைவேறிவிட்டது, இன்னுமொரு விளையாட்டுச் செய்யவேன்டு" மென்று நிச்சயித்து மறுபடியும் சீதையைப்பார்த்து அம்மா! அடியேனுக்கு இப்பொழுது பசிக்களைப்புண்டாயிருக்கிறது. இந்தத் தோ

ப்பில் இனிமையானதும் கிடைத்தற் கரியதுமான பழங்கள் அநேகம் இருக்கின்றன. அதை நான் உண்ணத்தங்கள் அனுமதி வேண்டும்'' என்ருர், இதை ஜானகி கேட்டதும் தன்கையிலிருந்து ஒரு கங்கணத்தை யுருவி இதை நீர் பெற்றுக்கொண்டு அரண்மனையிலிருக்கும் பண்டசாலை சென்று அங்குள்ள கனிகளை யெடுத்துப் புசித்துவிட்டுத் தாகசமனம் செய்துகொண்டு பின் புறப்பட்டுப் போம். இவ்வனத்திலுள்ள பழங்களைப்பறிக்க வேண்டாம்'' என்றனள். மாருதி ''நான்பிறர்கையிலிருந்து எதையும் வாங்கிப்புசிப்பதில்லை; இது என் விரதம்; நான்போய் வருகிறேன்'' என்று சொல்லிப் புறப்பட அவரைப்பார்த்து மறுபடியும் ''ஏ வானசிரேஷ்ட! ஏ பாலக! இவ்வனத்துக்கு அதிபதி தசக்ரீவன் ஆகையால் இதிலுள்ள கனிகளைப் பறிக்க உமக்குத் திறமை போதாது, உம்மால் முடியாது; நீர் எவ்விதம் பறித்துப்புசிக்கக்கூடும்''என்றனள்,மாருதி தாயே! எனது இதயத்தில் ராம என்ற பரம மந்திரமானது சஸ்திரமாக விளங்குகிறது. ஆகையால் அரக்கர்கள் யாவரும் இச்சமயம் எனக்கு ஒரு துரும்புமாத்திர'' மென்ருர். ஜானகி சரி; வாய் பேசாமலும் கனிகளை மரத்திலிருந்து பறிக்காமலும் தரையில் விழுந்துகிடக்கும் பழங்களைமட்டும் புசியும்''என்ருள். மாருதி ஆகா அப்படியே ஆகட்டும் என்று சொல்லிவிட்டு உடனே தனதுவாலை உயரத்தூக்கி மரத்தின் கிளைகளை சுற்றிப்பிடித்துக் குலுக்கினர். அதிலிருந்து அநேகங் கனிகள் உதிர்ந்தன. அவைகளைப் பொறுக்கிப் புசித்துவிட்டுப் பிறகு அங்கிருக்கும் மரங்களை வாலைக் கொண்டு பிடுங்கி மற்றுமுள்ள மரங்களின்மேல் எறிந்தார். அவைகளிலிருந்து தரையில் உதிர்ந்த பழங்களையும் புசித்தார். இவ்விதமாக மரங்களிலுள்ள பழங்கள் யாவற்றையும் ஒரு நிமிஷ நேரத்தில் உதிர்த்துப் புசித்துவிட்டார். இதையறிந்த அவ்வனக் காவலாளிகள் அனுமாரைப் பிடிப்பதற்காகத் துரத்தினர்கள். இப்படித் துரத்தும் காவற்காரர்களை அவ்வனத்திலுள்ள மரங்களைப் பிடுங்கிஅடித்துக் கொன்றுவிட்டுச் சீதையிருக்கும் மரமொன்றைத் தவிர மற்ற எல்லாமரங்களையும் பிடுங்கி வனத்தை மைதானமாக்கினர். பின்பு சைத்தியப்பிரஸாதம் என்னும் கட்டிடத்தை இடித்து அங்கிருந்த காவலாளிகளையும் கொன்ருர்.

இப்படி வனம் அதமாக்கப்பட்டதைப் பார்த்த அரக்கிகள் யாவரும் சீதையிடம் சென்று "ஏ சீதே! இவன் யார்? இவன் யாருக் குரியவன்? எங்கிருந்து இங்கு வந்தான்" என்று கேட்டார்கள் சீதை "நான்பஞ்சவடியி லிருக்கையில் இராவணன் சந்நியாசி வேடம்பூண்டு அவ்வனத்தி லிருந்து என்னை யபகரித்து வந்தது முதல் அரக்கர்கள் களிப்படைந்து, தங்கள் இஷ்டப்படி ரூபந்தரித்துப் பூமியில் சஞ்சரிக்கிறார்க ளென்பதை யானறிவேன். ஆகையால் இதன் விபரம் உங்களுக்குத் தான் தெரியவேண்டும். இவன் யாரென்று என்னை ஏன் கேட்கிறீர்கள்" என்றாள். உடனே அரக்கிகள் பயந்து மனங்கலங்கி இச்சங்கதியைச் சீக்கிரம் இராவணனுக்குத் தெரிவிப்போமென்று அவ்விடம்விட்டுப்புறப்பட்டார்கள். அக்காலநோத்தில் இராவணன் தன்னுடைய மஞ்சத்தில் கயனுடைய வஸ்திரமிருக்கக்கண்டு அவன் மண்டோதரியை அநுபவித்திருப்பானெனக் கருதி சினமடைந்து கத்தியை உருவிக்கொண்டு அவனைக் கொல்வதற்குப் போனான். அப்பொழுது அங்கிருந்த இராட்சஸ ஸ்திரீகள் "ஸ்திரீ ஹத்தி" யுக்தமல்ல என்று தடுக்க உடனே இராவணன் அக்கோபத்தோடுகயன்கிரஹஞ் சென்று நித்திரை செய்யும் வீரனாகிய கயனை வெட்டிவிட்டுத் தன் கிரகமடைந்தான். இதே சமயத்தில் விபீஷணனும் தன் படுக்கையில் தன் தமையன் இடுப்பு வஸ்திரமிருக்கக் கண்டு அவனும் தன் மனைவியின்மேல் கெட்ட அபிப்பிராயப்பட்டுக் கோபங்கொண்டு அவளைக் கொல்லுவதற்காக அவளருகில் செல்ல அங்கிருந்த ராட்சஸ ஸ்திரீகளும் "ஸ்திரீ ஹத்தி" மிகவும் இகழ்வானதென்னும் நியாயம் கூறித் தடுத்தார்கள். அன்று முதல் விபீஷணன் தன்னுடைய தமையனிடம் சந்தேகங்கொண்டவனாக விருந்தான். மாருதி செய்த கிருத்திரமம் இவ்விதம் முடிந்தது.

அசோகவன ராக்ஷசிகள் வெகு வேகமாகவந்து சபையிலிருக்கும் இராவணனைக் கண்டு அசோக வனத்தில் நடந்த சங்கதியை பயத்தினால் வாய் குளற நின்று தெரிவித்தார்கள். அதைக்கேட்டு இராவணன் கோபங்கொண்டு ஆ! நமக்குப் பிரியமான அசோக வனம் இவ்விதமாயிற்றா? என்று சொல்லி காவற்றலைவனாகிய ஜம்புமாலியை வரவழைத்து ஏ ஜம்புமாலி! நீ இருபதாயிரம் ராட்ச

தர்களுடன் சென்று நமது அசோகவனத்தை அழித்த அக்குரங்கைப் பிடித்து வாவென உத்தரவளித்தான். ஜம்புமாலி ஆகா! உத்தரவுப்படியே! ஆகட்டுமென்று கூறிப்பரிவாரங்களுடன் வேகமாக அசோகவனம் சென்றான். அப்படி அதிவேகமாகத் தன்னுடன்யுத்தம் புரியவரும் ராட்சஸக்கூட்டங்களைப் பார்த்ததும் மாருதி தீர்க்கமாகச் சிம்மநாதம் செய்தார். உடனே ராட்சஸர்கள் வானர சிரேஷ்டராகிய அநுமந்தர்மேல் பாணங்களை பிரயோகித்தார்கள். அநுமார் அவ்விடமிருந்து அருகிலிருந்த தோரண ஸ்தம்பத்தைப்பிடுங்கி யானைகள் கொசுக்களைத் தேய்ப்பதுபோல் ஒரு நிமிஷநேரத்திற்குள்ளாக அவர்கள் யாவரையும் தரையில் தேய்த்துக் கொன்றுவிட்டார். பின்வேகமாக ஓடி ஒருபனைமரத்தைப் பிடுங்கி வந்து, காவற்றலைவனாகிய ஜம்புமாலியையுங் கொன்றுவிட்டார். இவர்கள் யாவரும் யுத்தத்தில் மடிந்ததைக்கேட்ட இராவணன் லட்சம் ராட்சஸர்களுடன் பஞ்ச சேனாதிபதிகளை அநுமாருடன் யுத்தஞ் செய்ய அனுப்பினான். அவர்களையும் அநுமார் அத்தோரணத்தம்பத்தைக்கொண்டே கொன்றுவிட்டார். அவர்கள் மடிந்ததைக் கேட்டு இராவணன் தன் புத்திரனாகிய அட்சகுமாரனைச் சைன்னியத்துடன் அனுப்பினான். அவனையும் அவன் சேனைபையும்முஷ்டிக்ராயுதத்தால் அநுமார்கொன்று விட்டார். தன்பிள்ளை அட்சகுமாரன் இறந்ததைக் கேட்டு இராவணன் மகா கோபங்கொண்டு, தன் மற்றொரு பிள்ளையாகிய இந்திரஜித்தை அநேக சேனைசைன்னியங்களோடு அனுப்பினான். இந்திரஜித்து இரதமேறி கோடி இராட்சர்களுடன் அநுமா ரிருக்குமிடஞ் சென்று பிழைபடாத அஸ்த்ர சஸ்த்ரங்களை வரிசை வரிசையாக அவர்பேரில் பிரயோகித்தான். அநுமான் தமது வாலால் அந்தக்கோடி சைன்னியங்களையும் அரண்போல் வளைத்துக்கொண்டு க்ஷணநேரத்தில் முழுவதையும் கைத்தோரணத்தால் அதமாக்கிக் விட்டு ஒரு மரத்தைப்பிடுங்கி மேகநாதனையும் புடைத்தார். அவ்வடிபால் மேகநாதன் அவயவங்கள் நொருங்கிப்போயிற்று; உடனே ஒருகுகைக்குட் பிரவேசித்து மறைந்தான். இச்சமயத்தில் பிரம்மதேவன் வந்து அநுமந்தரைப் பார்த்து, "ஏ மாருதி! நீ இன்று என் அஸ்திரத்துக் கடங்கி, இராவணனைப் பார்" என்று கூற அநுமார் ஆகா அப்படியே ஆகட்டும் எனக்கூறி வணங்கினர்; பிரம்மதேவன் மேகநாதனிடஞ் சென்று

அவனைப் பார்த்து உன் பராக்ரமம் இன்று எங்கே போயிற்று, மறுபடியும் அனுமாரை எதிர்த்து எனது அஸ்திரத்தால் அவனைக் கட்டி உன் பிதாவின் முன் கொண்டுபோய் விடு என்றார். இதைக் கேட்டதும் மேகநாதன் அனுமாரிடம் மறுபடியுஞ் சென்று அமர் புரிந்து அவரை பிர்ம்மாஸ்திரத்தினுற் கட்டிப் பிடித்து இராவணனிடங் கொண்டுபோய்ச் சேர்த்தான்.

இராவணன் உடனே தன் மந்திரி பிரஹஸ்தனைப் பார்த்து, நீ இவன் யாரென்று விசாரி என்று சொல்ல, அம்மந்திரி அனுமாரைப் பார்த்து "நீ யார்? எங்கிருந்து இவ்விடம் வந்தாய். உன்னை அனுப்பினவன் யார்?" என்று வினவினுன். வாயுநந்தனன் அம்மந்திரிக்கு இராமருடைய விர்த்தாந்தத்தை விஸ்தாரமாகக் கூறி, இராவணன் முகத்தைப் பார்த்து, "எ தசானன! உம்முடைய மூர்க்கத் தன்மையையும் சத்ருபாவத்தையும் அறவே யொழித்து, சரணமடைந்தவர்களிடத்து அன்புள்ளவராகிய இராமபிரானிடம் சீதையைச் சமர்ப்பித்து உமது மக்கள் மனைவி பந்துக்கள் மித்திரர்கள் இவர்களோடு அவரைச் சரணமடைந்து வணங்கும். இப்படி வணங்குவீராகில், உமக்குப் பயமில்லை. அன்றேல் பற்கள் நகங்கள் இவைகளையே ஆயுதமாகக் கொண்டு யுத்தம் புரியும் சிங்கம் மலைகள் போன்ற வானர வீரர்கள் இந்த இலங்கா பட்டணத்தை ஆக்ரமித்துக்கொண்டு, அழித்துவிடுவார்கள். ஆகையால் இதற்கு முன்னமே அதி சீக்கிரத்தில் சீதையை இரகு நாதரிடம் சேர்த்துவிடும். இல்லாவிடில் சுரேந்திரன் சங்கரன் இவர்கள் உம்மைக் காத்தபோதிலும் நீர் இராமருக்குத் தப்பி ஜீவிப்பது அரிது. இந்திரன் எமன் இவர்கள் உம்மை மடியில் வைத்துக் காத்தபோதிலும் நீர் பாதாள உலகஞ்சென்று ஒளித்துக் கொண்ட போதிலும் தப்பமாட்டீர்" என்று இதமாகக் கூறினர். சுபமும் ஹிதமும் சுத்தமுமான அனுமாருடைய இவ்வசனங்கள், இறக்கப் போகிறவனுக்கு ஔஷதம் பிரயோஜனமாகாதது போல், இராவணனுக்குப் பயனற்றதாயின. ஆகவே இராவணன் ஆஞ்சனேயரைப் பார்த்து, "தேவதைகள் யாவரையும் ஜயித்த என் பௌருஷம் நீ யறியாய்; ஆதலால் தான் இவ்விதம் பிதற்றுகிறாய்; அதில் உனக்குச் சிறிது தெரிவிக்கிறேன். இதோ பார் பிர்மா பஞ்சாங்கம் படிக்கிறுன்.

சூரியன் எனது கடைவாசலைக் காத்துக்கொண்டிருக்கிறான். சந்திரன் எனக்குக் குடை பிடிக்கிறான். வருணன் தண்ணீர் கொண்டு வருகிறவனாயிருக்கிறான். அதோ வாயு எனது அரண்மனையை நிமிஷந்தோறும் விளக்கிக்கொண்டிருக்கிறான். அக்நி வெளுக்கும் வண்ணானாகவிருக்கிறான். இந்திரன் மாலை தொடுக்கிறான். இதோ எமன் தண்டதாரனாகவிருந்து காக்கிறான். அப்ஸர ஸ்திரீகள் அடிமைக்காரிகளாகவிருந்து வருகிறார்கள். மார்த்தாண்டன் நாவிதனாகவிருக்கிறான். கணபன் காராக்ஷகனாக விருக்கிறான். மங்களன் முதலிய ஏழு கிராமங்களும் எனது சிங்காசனத்துக்குப் படிகளாக விருக்கிறார்கள். சஷ்டிதேவி குழந்தைகளைப் பாதுகாப்பவள். கைலாச மலையை ஊஞ்சலாக ஆட்டினேன். குபேரனை ஜயித்தேன். இவ்விதமான சாமர்த்தியமுள்ள என் முன் சிறிதும் அச்சமின்றிப் பிதற்றுவதால் நீ வானரங்களுள் அதமன். உனது புத்தி சரியல்ல. காட்டிலலையும் இராமன் எனக்கு எம்மாத்திரம்? மனிதர்களுக்குள் கீழ்ப்பட்டவனான இராமனை நிமிஷத்தில் கொன்று விடுவேன்'' என்று இவ்விதம் கூறி அனுமாரைக் கொல்லக்கருதிச் சபையில் எழுந்திருந்து நின்றான். இதை அருகே யிருந்து பார்த்த விபீஷணன் சத்துருக்களுடைய தூதனைக் கொல்வது அதர்மம் என்பதைப் பலவிதத்திலும் எடுத்துக்காட்டி, இராவணனைத் தடுத்தான். பிறகு லோக ராவண (உலகத்தைக் கதறும்படி செய்கிறவ) னாகிய இராவணன் கோபாவேச மடைந்து, தன் தூதர்களைப் பார்த்து இக்குரங்கின் வாலை அறுத்து முடக்குங்கள் என்று உத்தரவளித்தான். உடனே தூதர்கள் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து கோடாலி ரம்பம் முதலிய அநேக ஆயுதங்களை யெடுத்துக் கொண்டுவந்து, மாருதியினுடைய வாலை வெட்ட, ஆயுதங்கள் மழுங்கிப் பொடியாயினவே யன்றி அவருடைய வாலுக்கு யாதொரு கெடுதியும் உண்டாகவில்லை, ஒரு மயிரும் உதிரவில்லை. இந்த ஆச்சரியத்தை இராவணன் பார்த்து, "ஏ குரங்கே! இப்பொழுது உன் வாலைச் சேதிக்க உபாயம் யாது? வீரர்கள் தங்களுடைய மரணத்தையும் கேட்பவர்களுக்கு ஒளியார்கள்'' என்று கூற; அனுமார் தாம் சிரஞ்சீவி யென்பதைத் தெரிவித்தார். இதை இராவணன் நம்பாமல், அனுமாரைப் பார்த்து "நீ பொய் பேசுகிறாய்; உண்மையைக்கூறு'' என்று கேட்

டான். வாயு நந்தனன் தம் மனத்திற்குள் "அக்நி நமது தந்தைக்கு மித்திரன். ஆகையால் நாம் அதனிடம் பயப்பட வேண்டியதில்லை. நமது வாலில் நெருப்பைக் கொளுத்தும்படி சொல்லி, பின் அதைக் கொண்டு இலங்கையை எரித்து விடுவோம்" என நிச்சயித்துக் கொண்டு சபையில் வெகு தைரியமா யிருந்து இராவணனைப் பார்த்து, "என்வாலில் நெருப்பிட்டால், அது கொளுத்தப்படும்; சந்தேகமில்லை" என்றனர். இராவணன், உடனே தன்னருகே நிற்கும் கிங்கரர்களைப் பார்த்து, "இக்குரங்கின் வாலில் தகுந்த பிரயத்தனஞ் செய்து தீயூட்டுங்கள். பிறகு அதை இந்த இலங்காபட்டணத்தில் வீதிதோறும் இழுத்துச் சென்று யாவருக்கும் காட்டுங்கள்! இப்படிச் செய்தால் பகைவர் நம்மிடம் அச்சத்துட னிருப்பார்க" ளெனக் கட்டளையிட்டான். உடனே கிங்கரர்கள் எண்ணெயைக் குடங்குடமாகத் தருவித்து ஏராளமான சணல் பட்டைகள் துணிகள் இவைகளை அவ்வெண்ணெயில் தோய்த்து, அனுமாருடைய வாலில் அவைகளைச் சுற்றினார்கள். அப்பொழுது அனுமார் தமது வாலை, எவ்வளவு துணிகளைச் சுற்றுகிறார்களோ அவ்வளவும் போதாதென்னும்படி வளர்த்தினர். இதனால் முதலில் எண்ணெயில் தோய்க்கப்பட்ட துணிகள் முழுதுந் தீர்ந்து விடவே, அந்தக் கிங்கரர்கள் யாவரும் ஜவுளிக்கடைகளி லிருக்கும் துணிகள் யாவையும் வரவழைத்துச் சுற்றினார்கள். இதுவும் போதாமற் போகவே, ஜவுளிக் கிடங்குகளி லிருக்கும் துணிகளையும் கொணர்ந்து சுற்றினார்கள். இதுவும் போதாமற் போகவே அவரவர் வீடுகளிலிருக்கும் வஸ்திரங்கள் யாவையும் கொணர்ந்து சுற்றினார்கள். இதுவும் போதாமற் போகவே இச்சங்கதியை, இராவணனிடம் தெரிவிக்கலானார்கள். இராவணன் உடனே இலங்காபட்டணத்திலுள்ள ஸ்திரீ புருஷர்களுடைய வஸ்திரங்களையும் பலாத்காரமாகப் பிடுங்கிச் சுற்றுங்களென்று ஆக்ஞாபிக்க, கிங்கரர்கள் அப்படியே செய்து இலங்கா பட்டணத்திலுள்ள ஸ்திரீ புருஷர்கள் யாவரையும் நிர்வாணமாக்கினார்கள். பிறகு படுக்கைகள் ரவிக்கைகள் கஞ்சுகங்கள் முதலியவைகளைப் பலபேர்களுடைய வீடுகளிலிருந்தும் கொணர்ந்து சுற்றினார்கள். இதுவும் போதாமற் சபையி லிருக்கும் இராஜ ஸ்திரீகள், அரசன், இவர்களுடைய வஸ்திர முதலியவை

களையும் எடுத்துச் சுற்றினார்கள். இதுவும் போதாமல் கொடியில் உலர்த்தியிருக்கும் துணிகள் தலைப் பாகைகள் பிராமணர்களின் வஸ்திரங்கள் மண்டோதரி முதலிய பட்டமகிஷிகளுடைய வஸ்திரங்கள் எல்லாவற்றையும் கொணர்ந்து சுற்றினார்கள். இச்சங்கதி சாரர்களால் சீதைக்குத் தெரிவிக்கப்பட்ட தென்பதை, அனுமார் அறிந்ததும், தமதுவாலை வளர்த்துவதை நிறுத்திக் கட்டி முடிந்ததாகக் காட்டினார். இப்பொழுது அரக்கர்கள் யாவரும் கோலாகலத்துடன் நல்லெண்ணெய் நெய் முதலிய எரியூட்டத்தக்க சாதகங்களை ஒவ்வொரு வீட்டிலிருந்தும் குடங் குடமாகக் கொணர்ந்து அனுமார் வாலில் ஊற்றி நனைத்தார்கள். இன்றிரவு இலங்கையில் தீபம் கொளுத்தவும் எண்ணை யில்லாமற் போயிற்று. குழந்தைகளுக்குக் கூட நெய்யில்லாமலும் போயிற்று. ஸ்திரீ புருஷர்களெல்லாம் நிர்வாணர்களாகி வெட்கத்தையும் இழந்தார்கள். பிறகு கிங்கரர்கள் அனுமார் வாலில் தீயைமூட்டி இலங்கையிலுள்ள முறம் விசிறி முதலியவைகளெல்லாவற்றாலும் விசிறினார்கள். விசிறியும் தீபிடிக்கவில்லை. இப்பொழுது அனுமார் "ஏ கிங்கிரர்களே! உங்கள் தலைவன்வந்து வாயிட்டு ஊதினால் தீபிடித்துஎரியு"மென்றுசொல்ல, அதைக்கேட்டுக் கிங்கரர்கள் இராவணனுக்குத் தெரிவிக்க இராவணன்உடனே தன்சிம்மாசனம் விட்டெழுந்து அனுமாரிடம் வந்து, அவருடைய பிரஷ்டபாகத்தில் முகத்தை வைத்துக்கொண்டு ஊதினான். உடனே குபீரென்று ஜ்வாலைகிளம்பி இராவணனுடைய பத்துத் தலைகளிலிருக்கு மயிரையும் மீசைகளையும் எரித்துவிட்டது. இராவணனுடைய இருபது கைகளும் இப்பொழுது அவனுடைய பத்து முகத்திலெரியும் தீயை அவிக்கச் சாதகமாயின. இப்படி இருபதுகைகளாலும் இராவணன் தன்மீசைத் தீயை அவிப்பதைக்கண்ட, இராட்சதர்கள் யாரும் நகைத்தார்கள். இப்பொழுது அனுமாரும் சிரிக்கக்கண்ட இராவணன், கோபமடைந்து "சீ! இக்குரங்கைக்கொண்டுபோங்கள்" என்று தூதர்களுக்குக் கட்டளையிட்டான். உடனே கிங்கரர்கள் அனுமாரைச் சங்கிளினாற் கட்டிவாத்தியகோஷத்துடன் அநேகம் சஸ்த்ர தாரிகள் சூழ, இலங்காபட்டணத்தில் வீதிகள்தோறும் இழுத்துச் சென்றார்கள். இவ்விதம் இழுத்

துச்செல்லுகையில் அனுமான் பகலில் இலங்காபட்டணம் முழுமையும் நன்முகப் பார்த்துக் கொண்டே சென்று, கடைசியில் தமது தேகத்தைச் சிறுக்கச்செய்து கட்டுகளின் பலத்தைக் குறைத்துக் கொண்டு பிர்மாஸ்திரம் முன்னமே தம்மைவிட்டு விலக்கினதையறிந்து,மேற்குக் கோட்டைவாசலைச் சேர்ந்ததும் அங்கிருந்த தோரணஸ்தம்பத்தைப் பிடுங்கிக்கொண்டு கோட்டைக் காவலர்களையும் தம்மை இழுத்துச் செல்லுகிறவர்களையும் நையப்புடைத்து அங்கிருந்த கிரகங்களின் மேன்மாடிகளுக்குத் தாவி, அங்கங்கு தமது வாலிலிருக்கும் தீயை வைத்துப் பட்டணம் முழுதும் எரியும்படி செய்துவிட்டார்.

இப்படி இலங்கை முழுதும் பற்றி எரிகையில், ஒவ்வொரு வீட்டிலுள்ள அரக்கிகளுடைய தலைமயிரும் ஆடையும் தீப்பிடித்துக்கொண்டன. அதனுல் அவர்கள் தங்கள் உயிர் பிழைத்தாற் போதுமென நினைத்து, நித்திரை செய்யும் தங்கள் சிசுக்களைக்கூட எடுக்காமல் படுக்கையிலேயே கிடத்தி விட்டு வெளியே வந்து பெருங்கூச்சலிட்டார்கள். பிறகு அனுமார் இராவணன் முதலியவர்களுடைய கிரகங்களையும் அவர்களது அதிகார சபைகளையும் தீயிட்டெரித்தார். அப்பொழுது அவரை எதிர்க்கும் அரக்கர்களை வாலா லடித்து எமனுக்கிரையாக்கினுர். அநேக கோடி அரக்கர்கள் தீயின் வாய்ப்பட்டு வாயில் அடித்துக்கொண்டு மூலை மூலையாய் ஓடினுர்கள்.

இலங்கை இப்படி அலங்கோலப்படுவதையும் தன் அலங்கார சபை முழுதும் பற்றி எரிவதையும் கண்ட இராவணன், கடுஞ்சினமடைந்து, பத்துக்கோடி அரக்கர்களுடன் அனுமாரை எதிர்த்தான். அனுமார் தமது வாலால் அவ்வரக்கர்களைச் சுற்றி ஒன்று சேர்த்துத் தடுத்துக்கொண்டு தோரணஸ்தம்பத்தால் அடித்துக் கொன்றபின் இராவணனுடைய தலைகளில் வாலா லடித்து அவன் மேல் அக்கினியை இறைத்தார். அவ்வக்கினி இராவணனுடலிற் பற்றி எரிக்கவே, அவன் அது பொறுக்கமாட்டாமல் களைப்படைந்து கீழே விழுந்து மூர்ச்சையானுன். இராவண சங்காரத்தினுல் உண்டாகும் கீர்த்தியானது, இராமருக்குண்டாக வேண்டு

மென்று கருதி, அனுமார் இப்பொழுது இராவணனைக் கொல்லாமல் விட்டு விட்டார். பின் எதிர்க்க வந்த இந்திரஜித்து, அரக்கர்கள் யாவரும் பஸ்மமாயிருப்பதையும், தன் தந்தை மூர்ச்சை போய்க் கிடப்பதையும், பார்த்துப் பயந்துத் தன்னுயிர் காப்பதின் நிமித்தம் ஒரு குகைக்குட் புகுந்து மறைந்தான். இந்திரஜித்தைக் கொல்லுங் கீர்த்தி இலட்சுமணர் பாலடைய விரும்பி, அனுமார் அவனையுங் கொல்லாமல் விட்டார். இவ்விதம் இலங்கா பட்டணங்களிலுள்ள மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் யாவையும் எரித்து விட்டுக் கடைசியில் கடற்கரையடைந்து, கடலிலுள்ள ஜலஜந்துக்களுக்கு உபத்திரவம் உண்டாகாதிருக்கும்படிக்கு, தமது வாலினுடைய தீயைத் தரையில் தேய்த்துதறிவிட்டு, வாலின் உஷ்ணந்தணிய சமுத்திர அலைகளில் நனைத்தார். தமது கழுத்தில் படிந்திருக்கும் புகைக்கட்டிகளை எடுத்துச் சமுத்திரத்தி லெறிந்தார்.

இங்கு அனுமார் சற்றுநேரம் மௌனமாயிருந்து பின் சீதையை நினைத்துக்கொண்டு, "ஒகோ! நமது சுவாமி இராமருக்கு இன்ப நாயகியாகிய ஜானகியம்மாளைச் சற்றும் நினைக்காமல் இலங்கை முழுவதையும் தீயிட்ட நமது குரங்குப் புத்தியை என்னென்பது! நாம் மகா மூடனானோம். நிந்தைக்காளானோம். சிறிதும் யோசிக்கவில்லையே. இந்த அவிவேகத்தை யாருக்குச் சொல்வது? இப்படிப்பட்ட நிந்தைக்காளான நம்முடைய முகத்தை இனி இராமருக்கு ஏன் காட்டவேண்டும். ஆகையால் இட்சணமே நமது வாலைக்கொண்டு கழுத்திற் சுருக்கிட்டுப் பிராணனை மாய்த்துக்கொள்வோம். சீதை அக்கினிக் கிரையான சங்கதி இராமர் செவியிற் படின் உடனே இராமர் இறப்பர். அவ்வருத்தத்தால் சகோதரன் ஸௌமித்திரி (இலட்சுமணன்) உடனே மரித்து விடுவர். இதிற் சந்தேகமில்லை. இவ்விருவருடைய மரணத்தையும் சுக்ரீவன் கேட்பானாகில் அவரும் உயிர்விடுவர். அதைப் பார்த்து அவர் பத்னி ருமையும், யுவராஜன் அங்கதனும் அவன் தாய் தாரையும், அரசன் போன வருத்தத்தால் வானரங்கள் யாவும் இம்மண்ணுலக வாழ்வை ஒழிப்பார்கள். பதினைந்தாவது வருஷம் பிறந்த தினமே பரதனும் இராமனைக் காணாமல் மரணமடைவான். புத்திர துக்கத்

தால் கௌஸல்லியை சுமித்திரை இவர்களும் உயிரிழப்பார்கள். இவ்வளவு அனர்த்தங்களுக்கும் காரணமானகைகேயும் இக்கதியே யடைவாள். சத்துருக்னன் தன் சகோதாருடைய துக்கத்தால் இறந்துவிடுவான். இன்னும் இரகுவம்சத்தாரும் இராமருடைய பக்தர்களும் அவர் மந்திரிகளும் மித்திரர்களும் இவ்விதமே யாவார்கள். சீதையினுடைய தந்தையாகிய ஜனகவம்சத்தாரும் கௌஸல்வியையின் பிதாவாகிய கோஸல வம்சத்தாரும், சுமித்திரையின் தந்தை வம்சமும் கைகேயியின் தந்தையாகிய கேகயவம்சமும் அவ்வம்சத்தின் பந்து மித்திரர்களும் பிராணனை விடுவார்கள். இராஜகுலம் இவ்விதம் நாசமடைந்தால், ஜனங்களும் சுதந்தரர்களாகி நாசமடைவார்கள். இதில் ஐயமில்லை; பிறகு ஸ்தாவரஜங்கமங்களும் நாசமடையும். இப்படிப் பூவுலகுநாசமுறுமாயின், ஹௌவியகௌவியங்கள் (பிதுர்கர்மம் தேவகர்மம்) அற்றுப்போம். இதனால் தேவர்கள் நாசமானவர்களுக்கு ஒப்பாய்த் துன்புறுவார்கள். தன் ஸ்ருஷ்டிக்குட்பட்ட உலகங்களுக்கு நேரிடும் அகாலநாசத்தினால், பிரம்மதேவனும் வெறுப்படைந்து, பரிதாபமுற்று நாசமடைவான். இவ்விதம் கிரமமாக பிர்ம்மாண்டத்துக்கே கேடு நேரிடும். இதற்காகவா நாம் ஜனன மெடுத்தோம்'' என்று தம்மைத்தாமே வெறுத்துக்கொண்டு, தமது பிராணனை மாய்த்துக்கொள்ள எத்தனிக்கையில், ''ஏ குரங்கே! வருந்தேல், ஜானகி சுகமா யிருக்கிறாள். நீ அவளிடம் சென்று உன்னை அவளுக்குக் காண்பித்துவிட்டு, ரகுபுங்கவரிடம் செல்'' என்னும் மகிழ்ச்சியைக் கொடுக்கத் தக்க ஆகாசவாக்குண்டாயிற்று. இதைக்கேட்ட அநுமார் பரமசந்தோஷ மடைந்து சீக்கிரத்தில் சீதையைப் பார்ப்பதற்கு அசோகவனஞ் சென்றார்.

ஏ பார்வதி! அநுமான் சீதையைப் பார்க்கப்போகுங்காலையில் தரைமுழுதும், சொர்ண முருகிப்பெருகுவதைப் பார்த்தார். அவ்விதம் பெருகினகாரணத்தைக் கூறுகிறேன் கேள். ஏ தேவி! பாற்கடலின் மத்தியில் பதினாயிரம் காததூர உயரமும் பதினாயிரங்காதம் சதுர அளவுமுள்ள திரிகூடமென்றொருபர்வதம் தங்கம் வெள்ளி இரும்பு ஆகிய இம்மூன்று லோகங்களாலாய மூன்று சிகரங்களை யுடையதாய், திக்குகள் ஆகாயம் எங்கும் பிரகாசம் வீசப்பரவி நின்றது. அப்பருவதத்தின் மத்தியில் மகாத்மாவாகிய வருணனுக்குரிய

ருதுமது என்னும் பெயர்கொண்ட ஒரு உத்தியானவன மிருந்தது. அங்கே விஸ்தாரமான தடாகம் ஒன்றிருந்தது. அதன் கண் சொர்ணமயமான தாமரை, நீலோத்பலம், குமுதம், செங்கழுநீர், சதபத்திரம் முதலியபுஷ்பங்கள் அழகாய்மலர்ந்திருந்தன. செய்ந்நன்றி கொன்றவர்கள் ஜீவஹிம்சை செய்பவர்கள், நாத்திகம் பேசித்திரிபவர்கள், இவரால், இத்தடாகத்தைக்காணமுடியாது. இந்தத்தடாகத்தினுள்கெட்ட எண்ணம், குரூபம் மகாபலமுள்ள யானைகளையுமிழுக்கத்தக்க பலம் இவைகளோடு கூடிய ஒரு முதலை வசித்துக்கொண்டிருந்தது. இம்முதலைஎவருடையகையிலும்அகப்படுவதில்லை. ஒரு காலத்தில் அழகான தந்தங்களையுடைய யூதபதியாகிய ஓர் மதயானை தாகசமனஞ்செய்துக்கொள்ள அநேகபெண்யானைகளோடு அத்தடாகத்திற்கு வந்து அதிலிறங்கி தண்ணீர் குடித்தது. அப்பொழுது அதிலிருந்த முதலையானது யூதபதியாகிய யானையின் காலைப்பிடித்து இழுத்து தண்ணீர்க்குள்ளே கொண்டுபோய்விட்டது உடனே யானையானது தன் முழுபலத்தாலும் முதலையைக் கரைக்கிழுத்தது. முதலை தண்ணீர்க்குள்ளிழுத்தது. இவ்விதமாக ஒன்றுக்கொன்று தோல்வியடையாம லிருந்தது. வெளியில் தன் உருவத்தைக் காட்டாமல் ஜலத்திற்குள்ளிருக்கும் ஒரு முதலையால் தங்கள் யூதபதி இழுக்கப்படுவதை நோக்கிய மற்றயானைகள், விசனமடைந்து எல்லாம் ஒன்று சேர்ந்து தங்கள்யூதபதியின்துதிக்கையைப்பிடித்து இழுத்துக் கரையேற்ற முயன்றும் முடியாமற் போயிற்று. பின் யூதபதியாகிய யானையும் முதலையும் தேவ வருஷத்தில் ஆயிர வருஷகாலம் அகோரயுத்தம் புரிந்தது. அத்தடாக அதிபதியாகிய வருணன் முதலைக்குச் சகாயமாய் நின்று, கொடூரமான தன் பாசங்களைக்கொண்டு யானையைக் கட்டினான்; அதன் பின் யானை யுத்தம் புரியச் சக்தியற்றுப் போயிற்று. முதலைமறுபடியும் இப்பொழுதுஜலத்திற்குள் இழுக்க, யானை அந்த இடத்திலேயே திடமாய் நின்று தன் ஆபத்தை நினைத்து வருந்திச் சற்றுயோசித்துப்பின் ஆபத்பாந்தவனாகிய ஸ்ரீமன்நாராயணமூர்த்தியையேகாக்ரசித்தமாயிருந்து "இவ்வாபத்து வேளையில் இந்தப் புருஷோத்தமன் தான் நம்மை ரக்ஷிப்பவ" என்று கருதி, பரிசுத்தமான அந்தராத்மாவால், தியானஞ்

செய்து, அத்தடாகத் தாமரை மலரைத் தன் துதிக்கையாற் பறித்து அவரை அர்ச்சித்து மானஸ நைவேத்தியம் ஸமர்ப்பித்து இவ்வாபத்தி லிருந்து அடியேனைக் கரையேற்ற வேண்டுமென்று பலவாறாகத் துதித்தது. இவ்வாறு பரவசமாய் நின்று துதிபுரியும் யானைக்கு சுரோத்தமாகிய பரமேசுவரர் மனமிரங்கி உடனே கருடவாகனமேறித் தடாகத்திற்கு வந்து, அங்கு முதலையால் வருத்தப்படும் யானையைக் கண்ணுற்று, அட்சணமே தம்முடைய சக்ராயுதத்தால் அம் முதலையைப் பிளந்து யானையைக் கறையேற்றி, வருணபாசத்தினின்றும் விடுவித்தார்.

ஏ பார்வதி! யானை முதலை இவைகளின் பூர்வ விருத்தாந்தத்தைக் கூறுகிறேன் கேள். இந்த யானை முன் ஜன்மத்தில் இந்திரத்யும்னன் என்னும் பேர்கொண்ட பாண்டிய தேசத் தரசனாயிருந்தது. இந்திரத்யும்னன் ஒருசமயம் பகவத்தியானம் செய்ய விரும்பி தபோநிஷ்டையி லிருந்தான். அச்சமயம் தற்செயலாய் அகஸ்தியமுனிவர் அவன் பக்கஞ் சென்றார். அவன் தபோநிஷ்டையி லிருந்ததனால் முனிபுங்கவர் வந்திருப்பதை யறியவில்லை. அகஸ்தியர் இந்திரத்யும்னன் எழுந்து மரியாதை செய்யாததைக் கண்டு, கோபங்கொண்டு ஏ இந்திரத்யும்னா! என்றழைத்து "நீ தபோமதங்கொண்டு என்னைக்கண்டதும் எழுந்து மரியாதை செய்யாதபடியால் நீ ஒரு யானையாகப் பிறந்து மதம்பிடித்து அநேக காலம் காட்டில் அலைந்து திரியக்கடவா" யென்று சபித்தார். அவ்வரசனதைக் கேட்டதும் திடுக்கிட்டுப் பயந்து எழுந்திருந்து அம்முனிவரைப் பலமுறை வணங்கி! சாபவிமோசனத்தைக் கேட்க, அம்முனிவர், "உன்னை ஒரு குளத்தில் ஒரு முதலை பிடித்து இழுக்கும்; அப்பொழுது பகவான் நாராயணர் உன்னை ஸ்பரிசிப்பர். அப்பொழுது சாபவிமோசனமாகு" மென்று கூறித் தன்னிருப்பிடம் சென்றார்.

முதலையானது பூர்வஜன்மத்தில் ஹூ ஹூ என்ற ஒரு கந்தர்வனா யிருந்தது. அக்கந்தர்வன் ஒரு சமயம் அனேக அப்ஸரஸ்திரீகளுடன் ஜலக்ரீடை செய்வதற்காக இத்தடாகக் கரைக்கு வந்து தடாகத்தை நோக்கும்போது, அதில் தேவலர் என்னும் ஒரு முனிவர் அகமருஷண விதிப்படி ஸ்நானம் செய்து கொண்

டிருப்பதைப் பார்த்தான். தன்னுடைய ஜலக்ரீடைக்குத் தடையாயிருக்கும், அம்முனிவரை வெளியேற்றக்கருதி, வேருெரு பக்கம் சென்று, ஜலத்தில் மூழ்கி அம்முனிவருடைய காலேப்பிடித்து இழுத்தான். முனிவர் அதனை யறிந்து "ஏ கந்தர்வ! நீ என்னை முதலை போல் ஜலத்திலிருந்து இழுத்தமையால் நீ முதலையாகக் கடவா" யென்று சாபமிட்டார். உடனே அவன் பயந்து சாபவிமோசனங் கேட்க, முனிவர் "ஏ கந்தர்வ! உனக்கு ஒரு காலத்தில் நாராயணரால் சாபவிமோசன மாகு" மென்றருளிச் சென்றனர். இவ்விதம் முனிவர்களுடைய சாபமேற்று இச்சங்கடத்திலாழ்ந்த, இவ்விருவருக்கும் ஸ்ரீமன் நாராயண மூர்த்தி சாபவிமோசனஞ் செய்து முத்திகொடுத்து அவர்களுடன் வைகுண்டம் சென்ருர்.

நாராயணமூர்த்தி வைகுண்டபதவியை யடைந்ததும் கருட பகவான் தமக்கு மிக்கப் பசியாயிருக்கிறதென்று தெரிவித்து, அவரை ஆகாரம் கொடுக்கும்படிவேண்டினர். நாராயணர் "ஏகருடா பூலோகத்தில் இப்பொழுது நாம் போய் வந்த, தடாகக் கரையில் கிடக்கும் யானை, முதலை இவ்விரண்டினுடைய சரீரங்களையும் புசித்து உன் பசியை ஆற்றிக்கொள்" எனக் கட்டளையிட்டனர். கருடன் அப்படியே அத்தடாகத்தினருகிற் செல்ல, அதற்கு முன்பே அங்கு வந்து அப்பிணங்களைக் கொத்தித்தின்னக் காத்துக்கொண்டிருக்கும் ஒரு கழுகரசைக்கண்டு அத்துடன் போர்செய்து, அதைக் கொன்று தமது ஒரு காலில் அதையும் முதலை யானை இவ்விரண்டின் சரீரங்களை மற்ருெரு காலிலும், தூக்கிக்கொண்டு, ஆகாச மார்க்கமாகச் சென்று, இவைகளைப் புசிக்கத்தக்க சுத்தமான இடம் யாதெனத் தேடிச் சென்று அந்த க்ஷீரசாகரத்தின் மத்தியில் ஆயிரங் காதவழி உயரம் வளர்ந்து அவ்வளவு காதவழிக்கு கிளைகள் பரவிய ஒரு சொர்ண மரத்தைக் கண்டு விஸ்தாரமான அம்மரத்தின் ஒரு கிளையில் உட்கார்ந்தனர். அந்தக் கிளையில் ஏற்கனவே அறுபதினாயிரம் வாலகில்லியர்கள் தலை கீழாகத் தொங்கிக்கொண்டு தவம் புரிந்து கொண்டிருக்கிறபடியால் கருடன் வந்து உட்கார்ந்ததும் பாரந் தாங்கமாட்டாமல் முறிந்து சமுத்திரத்தில் விழ ஆரம்பித்தது. உடனே கருடன் அக்கிளையை உற்று நோக்கி, அதில் வாலகில்லியர்கள் தவம்புரிவதைக்கண்டு, அந்தோ!

இந்த ரிஷிகள் சமுத்திரத்தில் விழுந்து விட்டால், சாபம் வந்து சம்பவிக்குமே யெனப்பயந்து தமது மூக்கில் அக்கிளையைக் கௌவிக்கொண்டு ஆகாசமார்க்கமாகச்சென்று வட்டமிட்டனர். அப்பொழுது தமது தந்தை கசியபமுனிவரைக்கண்டு, அவரை வணங்கிப் பிதாவே இவ்வாகாரங்களைப் புசிக்கத்தக்க இடம் ஒன்றைத் தெரிவியுமென்று, விக்ஞாபனம் செய்துகொண்டார். கசியப முனிவர் இதோ இந்தச் சமுத்திரத்தில் நூறு காதவழிக்கப்பால், இலங்கை என்ற ஒரு சுத்தபூமி யிருக்கிறது. அங்கு சென்று நீ போஜனஞ் செய்யெனத் தெரிவித்தார். அட்சணமே கருடன் இலங்கைக்குச் சென்று அங்கு ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு, சொர்ணக்கிளையைத் தமது இறக்கையை உயர்த்தி அதன்மேல் வைத்துக்கொண்டு அம்மூன்று சரீரங்களையும் புசித்தார். புசிக்கும் போது எறிந்த அப்பிராணிகளின் எலும்புக் குவியல் மூன்று சிகரங்களை யுடையதாயிற்று. பிற்காலத்தில் திரிகூட மென்ற பெயரைப் பெற்ற ஒரு பெரிய மலையாயிற்று. சிகரத்தில் கருடன் தாம் கொண்டு வந்த சொர்ணக்கிளையை வைத்துவிட்டுச் சென்றனர். பிறகு அக்கிளையிலிருந்த வாலகில்லியர்கள் தங்கள் தவம் முடிந்தபின் விஷ்ணு லோகத்தை யடைந்தார்கள். இலங்கையில் அச்சிகரங்களின்மேலிருந்த அச்சொர்ணக்கிளையானது நாளடைவில் சிலையாகமாறி, பாசத்தால் மறைக்கப்பட்டிருந்தது. இந்த இரகசியத்தை இராட்சதர்கள் அறியவில்லை. அனுமார் இலங்கையைக் கொளுத்தினதும் அவ்வனல் தாக்கினபடியால், சொர்ணக்கிளை உருகி இலங்கை முழுதும் ஓடிற்று. அதனுல் அநேக பிராணிகள் நாசமடைந்தன. அப்பட்டணத்துத்தரை சொர்ணமயமாயிற்று. ஏ பார்வதி! இதுதான் இலங்கை இப்பொழுது சொர்ணமயமாய்க் காணப்படுவதன் காரணம்'' என்று பரமசிவன் கூறினர்.

இனிச் சீதையைப் பார்க்கச் சென்ற அனுமாரைப்பற்றிப் பேசுவோம். அவர் அசோகவனம் நோக்கிச் செல்லுகையில், இலங்கை சொர்ணமாக உருகி வருவதைக் கண்டு பயந்து வியப்படைந்து, உடனே வேகமாக அவ்வனம் சென்று சீதையைப் பார்த்து வணங்கி "அம்மா! ஜானகி! இனி நீங்களேன் கஷ்டப்படவேண்டும்? என் தோளில் உட்கார்ந்து கொள்ளுங்கள். இப்பொழுதே

இராமரைப் பார்க்கலாம் என்றார். சீதை "ஏ மாருதி! என்னை யார் விடுவித்தபோதிலும் இராமபிரான் சம்மதியார்" என்று கூறி, இக்கணையாழியையும் அவரிடம் சேர்த்து விடுமென்று சொல்லி, இராம பிரானுடைய கணையாழியை அனுமந்தரிடம் கொடுத்து விட்டாள். அனுமார் அக்கணையாழியைப் பெற்று அதற்கு வணங்கி, அவ்விடம் விட்டுப் புறப்பட்டு சுவேல மலையினுச்சிக்கு வந்து, அங்கிருந்து தாண்ட எத்தனித்தார். அனுமார் காலா லமுத்தியதும் அம்மலை பொடியாயிற்று. பிர்மதேவர், அனுமார் இலங்கையில் செய்த காரியங்கள் முழுவதையும் பத்திரிகையில் விஸ்தாரமாக வெழுதி எடுத்துக் கொண்டு, இச்சமயம் அவர் முன்தோன்றி, "ஏ அனுமந்த! இந்த லிகிதத்தை ஸ்ரீராமபிரானிடம் கொடு" என்று சொல்லி அவர் கையில் கொடுத்தார். அனுமான் அப்பத்திரிகையைப் பெற்றுக்கொண்டு பிர்ம்மதேவரை நமஸ்கரித்து, அவரிடம் விடைபெற்று உடனே அங்கிருந்து கிளம்பி, பெருங் கூச்சலிட்டுக்கொண்டு ஆகாசமார்க்கமாகச்சென்று வடதிசையில் சமுத்திரக்கரையிலிருக்கும் வானரக் கூட்டங்களுக்கு நேரே உயரவந்து, அவர்கள் அருகில் குதித்து அங்கே சில குரங்குகளையும் ஒரு முனிபுங்கவரையுங் கண்டார். மாருதி அந்த முனிபுங்கவரைப் பார்த்து, "ஏ முனிவரே! நான் இராம காரியத்தைச் செய்து முடித்தேன். எனக்கு இப்பொழுது மிகுந்த தாகமாயிருக்கிறது. ஆகையால் தாகசமனஞ்செய்துகொள்ள இப்பொழுது தடாகம் காண்பியுங்கள்" எனக் கர்வத்துடன் கேட்டார். முனிவர், தமதாட்காட்டி விரலை நீட்டி, ஒரு தடாகத்தைக் காண்பித்தார். உடனே அனுமார் தமது கையிலிருக்கும் ஸ்ரீராமபிரான் கணையாழி, சீதாபிராட்டியின் சூடாமணி பிர்ம்மதேவன் கொடுத்த பத்திரிகை இம்மூன்றையும் முனிவர் முன் னிலையில் வைத்துவிட்டுத் தீர்த்த மருந்தத் தடாகத்தை நோக்கிச் சென்றார். இச்சமயத்தில் ஒரு குரங்கு முனிவர் சந்நிதியிற் றோன்றி, கணையாழியை எடுத்து அவர் முன்பிருக்கும் கமண்டலத்துள் போட்டுவிட்டது. அனுமார் தீர்த்தபானஞ் செய்துவிட்டு முனிவர் சந்நிதிக்கு வந்து, தாம் வைத்துவிட்டுப்போன மூன்று வஸ்துவில் இரண்டு இருக்கக்கண்டு, அவைகளைக் கையிலெடுத்துக் கொண்டு, கணையாழியைக் கேட்டார். முனிவர் தமது கமண்ட

லத்தை நோக்கும்படி புருவ சமிக்ஞை செய்தார். அனுமார் உடனே வாயைப் பொத்திக்கொண்டு கமண்டலத்தை நோக்கினர். அதனுள் ஆயிரக்கணக்கான இராமநாம சின்னமுள்ள கணையாழி களிருக்கக்கண்டு, பயந்து ஆச்சரியப்பட்டு "முனிவரே! இவ்வளவு கணையாழிகள் இங்கு எப்படிவந்தன? இவைகளில் நான் கொண்டு வந்த கணையாழியெது" என்றுவினவ; முனிவர் எவ்வளவோ வாயு நந்தனர், எவ்வளவோ இராகவர்களா லனுப்பப்பட்டு இலங்கையை யடைந்து, எவ்வளவோ சீதைகளிடமிருந்து எவ்வவளவோ கணை யாழிகள் பெற்று என்முன் வைத்திருக்கிறார்கள். அவைகளை எவ் வளவோ குரங்குகள் எவ்வளவோமுறை இக்கமண்டலத்துள் எடுத் துப்போட்டிருக்கின்றன. ஆகையால் நீ கொண்டுவந்த கணையாழி யை நீ அடையாளம்பார்த்து எடுத்துக்கொள்ளென்றார். அனுமார் ஆச்சரியப்பட்டு "எ முனிவரே! இப்படி எத்தனை இராமர் இப் பூவுலகின்கண் உதித்திருக்கிறார் என்பதை அடியேன் அறியவேண்டு கிறேன்" என்றார். முனிவர் "அனுமந்த! இக்கணையாழிகளை வெ ளியே எடுத்துப்போட்டு எண்ணிப் பார்த்துக்கொள்" என்றனர். அனுமார் இரண்டு கையிலும் வாரி வாரி எடுத்துப்போட்டும் முடி வில்லாமல் வளர்ந்ததைநோக்கி, மறுபடியும் கணையாழிகளை அக் கமண்டலத்துள் எடுத்துப்போட்டுவிட்டு, முனிவரை வலம்வந்து நமஸ்கரித்துவிட்டு "ஓகோ! எவ்வளவோ அனுமார் இம்மாதிரி சீதையைக்கண்டு கணையாழி வாங்கி வந்திருக்க, நாம் கண்டு வந்தது ஒருகணக்கா" எனத்தமது மனதிற்குள் நினைத்து,கர்வத்தை ஒழித் துப் பின் அங்கிருந்து கரைவழியே சென்று, அனுமாரைக் காண் கிறவரையில் புசிப்பதில்லையென பிராயோபவேச விரதத்திலிருக் கும் அங்கதன் முதலியவர்களுடைய கூட்டத்திற்சேர்ந்தார். அவர் கள் அனுமாரைக் கண்டதும் சந்தோஷமடைந்து, ஆலிங்கனஞ் செய்து கொண்டார்கள். அனுமார் தாம் இலங்கையில் அசோக வனத்தில் சீதையைக் கண்டதாகத் தெரிவித்தார். அதைக் கேட்டதும் அவர்கள் பரமானந்தமடைந்து, கவலையை ஒழித்து யாவரும் ஒன்று சேர்ந்து சீக்கிரமாக இராமபிரானுக்கு இச்சுபச் செய்தியைத் தெரிவிக்க வேண்டுமென்று புறப்பட்டு வேகமாக வரும் வழியில் சுக்ரீவனுடைய ஆக்ஞையால் பாதுகாக்கப்பட்டு

வரும் மதுவனத்தைக் கண்ணுற்று, அங்கதன் உத்தரவின்பேரில் அவ்வனத்திலுள்ள இனிய கனிவர்க்கங்களைப் புசித்தார்கள். அவ் வனக்காவற்றலைவன் ததிமுகன் அவர்களைத்தடுக்க, அவன் சுக்ரீவ னுக்கு மாமனென்பதை யறிந்தும் அவனை அடித்துத் தூத்திவிட்டு மதுவைக் குடித்துக் கனிகளைப் புசித்தார்கள். அத்ததிமுகன் சுக்ரீவ னிடம் சென்று சங்கதி முழுவதையும் தெரிவித்தான். சுக்ரீவன் "அவர்கள் சீதையைக்கண்டு பிடித்திருக்க வேண்டும். அப்படி யில்லாவிட்டால், உத்தரவின்றி நமது காவலிலிருக்கும் மதுவனக் கனிகளைப் பறிக்கத் துணியார்" என்று நினைத்து "ஏ ததிமுக! அவர்களைத் தடுக்கவேண்டாம், சீக்கிரம் என்னிடம் வரும்படி அவர்களுக்குத் தெரிவி" யென்று அனுப்பிவிட்டான்; பிறகு சுக்ரீ வன் உத்தரவுப்படி ததிமுகன் அங்கதன் முதலியவர்களுக்குத் தெரிவிக்க உடனே அவர்கள் சுக்ரீவனிடம் வந்து இராமபிரானை வணங்கி, சன்னிதியில் நின்றார்கள். பிறகு அனுமான் தம்மிடம் பிர்மதேவர் கொடுத்த பத்திரிகையையும் சீதை தந்த சூடாமணி யையும் கொடுத்து, சீதை அடையாளமாகத் தெரிவிக்கும்படி கூறிய காக விர்த்தாந்தத்தையுங் கூறினர்.

ஸ்ரீராமபிரான் அதைக் கேட்டு மகிழ்ந்து, அப்பத்திரிகை யைப் படித்துப்பார்த்து, இலங்கையில் அனுமார்செய்த செய்கை களை யறிந்து, அனுமாரை ஆலிங்கனஞ் செய்து "ஏ மாருதி! இவ் வுபகாரஞ்செய்த உனக்கு யான் செய்யத்தக்க உபகாரம் வேறு யாதுளது? இவ்வுலகத்திற்கு நீயே தன்னியன். ஆனல் பரமாத்மா வாகிய என்னுடைய ஆலிங்கனம் கிடைப்பதரிது. ஆகையால் கவிபுங்கவ! நீ தான் எனக்குப் பிரியமான பக்தன்" என்று சொன்னர். ஏ பார்வதி துளசிதளங்களால் பூஜிப்பவர்களுக்கு வைகுண்டபதவியைக் கொடுக்கும் பாதபத்மங்களையுடைய ஸ்ரீராம னது திவ்யாலிங்கனம் பெற்ற வாயுநந்தனன் வெகு புண்ணியம் செய்தவனென்பதற்கு ஐயமேது! ஏ பார்வதி! பிறகு அனுமந்தன் பயந்து நடுங்கி "சுவாமி! யான் ஒரு அபராதஞ் செய்தேன். அதை மன்னிக்க வேண்டும்" என்று, ஒரு முனிவரிடம் தாம் கணையாழி யைக் கொடுத்ததினல், நடந்த சங்கதியை இராமருக்குத் தெரி

வித்தார். இராமசந்திரமூர்த்தி அதைக்கேட்டு நகைத்து "நீ கர்வ மடைந்ததை அறிந்து, நான் தான் அங்கு ஒரு முனி ரூபமாக விருந்து அந்த வேடிக்கையைச் செய்தேன். இதோபார் நீ அங்கு விட்டுவந்த கணையாழி என்கைச் சுண்டுவிரலி லிருக்கிறது" என்று காட்டினர். அனுமார் இராமருடைய கைவிரலில் அக்கணையாழி யிருப்பதைக்கண்டு, அவரை சாட்சாத் விஷ்ணுவென்றே நினைத்து வணங்கிக் கர்வமடங்கி, நாம் இலங்கையில் காட்டிய சாமார்த்திய முழுதும் இந்த இராமபிரானுடைய கிருபையினலேயே யன்றி வேறில்லையென நினைத்து மகிழ்ந்தார்.

## 9 - வது சருக்கம் முற்றிற்று.

## 10 - வது சருக்கம்.

### பார்வதிரமணர் கூறுகிறார்.

இரகு குலோத்தமர் மாருதியைப் பார்த்து, "ஏ வாயுநந்தன! இலங்கையின் விவரத்தை எனக்கு விஸ்தரித்துக்கூறு; பிறகு அதற்குத் தக்கபடி செய்வோம்" என்றார். ஆஞ்சநேயர் மனமகிழ்ந்து தேவஸ்ரேஷ்ட! இலங்கையானது திரிகூடமலையி னுச்சியில், ஸ்வார்ண மயமான பிரகாரங்களுடனும், சொர்ணமயமான மாடிகளுடனும் மகாசுத்தமான நீர் நிரம்பிய அகழிகளால் சூழப்பட்டும் பலவிதமான உபவனங்கள், திவ்விய தடாகங்கள், நவரத்நங்களிழைத்த ஸ்தம்பங்கள் நாட்டிய கிரகங்கள் முதலியவைகளோடு பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அதன் மேற்குக் கோட்டை வாசல்களில் யானைப்பாகர்கள் யானைகளுடனும் வடக்குக்கோட்டை வாசலில் குதிரை வீரர்கள் குதிரைகளுடனும் அநேகம் காலாட்படைகளுடனும் இருக்கிறார்கள். இன்னும் இவ்விதமே அநேக இடங்களில் அற்புதக் கணக்காக, யானைகள் குதிரைகள் அஸ்த்ர சஸ்த்ரங்களில் தேற்சி பெற்றவர்கள் இரதவீரர்கள் முதலியவர்களிருந்து இலங்கையைக் காத்து வருகிறார்கள். சதக்நி முதலிய ஆயுதங்கள் நிறைந்த ஆயுதசாலைகள் அநேகமிருக்கின்றன. ஏ! தேவேச! இவ்வளவுகாவல்கள் ஏற்படுத்தப்பட்ட இலங்கையில், தங்கள் தாஸன் செய்த செய்கையைக் கேட்க வேண்டும். தசானனுடைய சைன்னியங்களில்நாலிலொருபங்கை அழித்து விட்டேன். சொர்ணமயமான இலங்கா பட்டனை முழுமையும் கொளுத்தப்பட்டது. ஆயுத சாலைகளிலுள்ள அநேக ஆயுதங்கள் முறிக்கப்பட்டன. இனித்தங்கள் பார்வையால் மிகுந்திருப்பது பஸ்மமாகப் போகிறது. இலங்கைக்கு வடக்கே சுவேல மலையிருக்கிறது. மேற்கு திக்கில் பரலங்கையும் தெற்கில் நிகும்பிலேயும் அந்த நிகும்பிலேயில் யோகினிவடமென்ற ஒரு ஆலமரமுமிருக்கின்றன. கிழக்குதிக்கில் லகுலங்கையிருக்கிறது. இவைகளின் மத்தியிலிருக்கும் இலங்காபுரியானது என்னுடைய வால் நெருப்பால் கொளுத்தப்பட்டது. ஆகையால் தாங்கள்சீக்கிரம் புறப்படவேண்டும். சமுத்திரத்திற்குச்செல்வோமென்று கூறினார். இராமர் இவைகளைக்கேட்டதும் சுக்ரீவனைப்பார்த்து "ஏ சுக்ரீவ!இப்பொ

முது விஜயமென்கிற முகூர்த்தகாலமாகையால், இச்சுபமுகூர்த்தத்தில் உனது சைன்னியங்களைப் பிரயாணப்படுத்து. ஆசுவயுஜமாஸம் சுக்லபக்ஷம் சிரவண நக்ஷத்திரம் தசமி திதி இவைகள் கூடிய இன்றையதினம் மிகச் சுபகரமானது. ஆகையால், இன்றே நாம் யாவரும் லவண சமுத்திரம் போய்ச் சேரவேண்டும். சேனைகளை முன்னும்பின்னும் புறங்களிலும் அணிவகுத்து நிறுத்தி, சேனாதிபதிகள் பாது காக்கட்டும். அவர்களில், நமக்கு முன்னே நளனும், பின்னே நீலனும், இடது புறத்தில் ஜாம்பவானும், அக்கினி திக்கில் கஜனும், நிருதி திக்கில் கவாக்ஷனும், வாயு திக்கில் கவயனும், ஈசான திக்கில் மைந்தனும் இருந்து வரட்டும். துவிவிதன் முதலிய யூதபர்களும் மற்றவர்களும் சேனையைக் காத்துக்கொண்டு எதிர்ப்படும் சத்துருக்களைக் கொல்லச் சித்தமாய்ச் செல்லட்டும். நான் அனுமார் பேரில் ஏறிக்கொண்டு வருகிறேன். இலட்சுமணர் அங்கதன் பேரில் ஏறிக்கொண்டு என் முன்னால் செல்லட்டும். நீ என்னுடன் கூடவே வா என்று சொல்லி, இவ்வித ஒழுங்குப்படியே பிரயாணப்பட்டு தட்சிண திக்கை நோக்கிச் சென்றார். இப்பொழுது வானர சைன்னியங்கள், எதிரிகள் அஞ்ச பூ! பூ! என்று சத்தஞ்செய்து கொண்டு பணகம், ஆனகம், கோமுகம் முதலிய வாத்தியங்களை முழக்கிக் கொண்டு, க்ஷணநேரங்கூட வழியில் தங்காமல் இராப்பகலாகச் சென்றார்கள். இப்பொழுது இராமருக்கு நல்ல சகுனங்கள் ஆயின. பிறகு அவர்கள் யாவரும் சகியம், மலயம் இவ்விரு மலைகளையுங் கடந்து, தக்ஷிண சமுத்திரக்கரைக்குச் சென்றார்கள். இங்கே சமுத்திர மணலில், இராமர் சேனைகளோடு தங்கினார். வானர சிரேஷ்டர்கள் யாவரும் இப்பொழுது சமுத்திரத்தைக் கடக்க யோசனை செய்தார்கள்.

அனுமார் வாலின் தீயால் சுடப்பட்டு மூர்ச்சைபோன, இராவணன் கதியாதாயிற்றென்று பார்ப்போம். இராவணன் மூர்ச்சை போய்ச் சிறிது நேரத்திற்கெல்லாம் தெளிந்து தன் மந்திரி பிரஹஸ்தன் முதலியவர்களைப் பார்த்து நமது கண் காண ஒரு சிறிய குரங்கு இலங்கையைக் கொளுத்தி இவ்வித அலங்கோலத்துக்குள்ளாக்கிச் சீதையையும் கண்டு பேசிவிட்டு அருமையான அசோக

வனத்தை ஹதமாக்கியதுமன்றி நமது செல்வக்குமாரன் அக்ஷனை யும் கொன்றுவிட்டது. இனி நடக்கப்போவது யாதோ தெரியவில்லையே என்றான். அப்பொழுது மந்திரிமார்கள் அரசனைப் பார்த்து ஏ அரசே! நாங்கள் சற்று உபேட்சையா யிருந்தமையால், குரங்கு தப்பிப் போயிற்று. தாங்கள் உத்தரவு கொடுத்தால் இவ்வுலகத்தில் வானரப் பூண்டில்லாமலே ஒழித்து விடுகிறோம் என்றார்கள். அருகி லிருந்த கும்பகர்ணன் இராட்சேந்திரனாகிய இராவணனைப் பார்த்து "நீ ஜானகியை அபகரித்து வந்தது சிறிதும் தகாது; ஆனால் அறியாமையினால் இந்த அனுசிதமான செய்கையை நீ செய்து விட்டாய். ஆயினும், உன் கவலையை ஒழிக்க யான் முயற்சி செய்கிறேன். எனக்குத்தரவு கொடும். ஒரு நிமிஷத்தில் இராமன் லட்சுமணன் சுக்ரீவன் மற்றுமுள்ள வானரர்கள் யாவரையும் கொன்றுவிட்டு வருகிறேன்" என்றான். ஸ்ரீமானும் மஹாபாகவத னும் ராமபக்த சிரேஷ்டனுமான விபீஷணன், மஹா கர்வியாகிய கும்பகர்ணன், மத்தன், பிரமத்தன் முதலிய இராட்சஸ பிரமுகர் களை ஆச்சரியத்துடன் பார்த்து, பிறகுகாமாதுரனாகிய இராவணனை அண்ணாவென்றழைத்து "யுத்தத்தில் ஸ்ரீராமர்முன் கும்பகர்ணன், இந்திரசித்து, மகாபார்சுவன், மகோதரன், நிகும்பன், கும்பன் அதி காயன் இவர்களில் யாவரும் நின்று எதிர்க்கமுடியாது. ஆகையால் ஸீதையை அபிராமரிடம் கொடுத்து நீ சுகமாய் வாழ்; அன்றேல், சுரேந்திரன் ஈசுவரன் இவர்கள் உனக்குத் துணைநின்றுகாத்தபோதி லும் நீ அவரிடமிருந்து தப்புவதரிது" என்று நியாயங் கூறினான். இவ் விதம் விபீஷணன் கூறிய ஹிதவசனங்கள் கால வித்தியாசத்தினால் இராவணனுக்கு ஆத்மசுக சாதனமாகத் தோன்றவில்லை; இராவ ணன் தன்சகோதரன் விபீஷணனைப் பார்த்து "அடே! நீஎனக்கு சத்துருவாகப் பிறந்திருக்கிறாய், இதில் சிறிதுமையமில்லை. இன்னும் எவனேனும் இவ்விதம் கூறியிருப்பானாகில், அவனை உடனே கொன் றிருப்பேன். ஏ இராட்சஸ குலாதம! சீ! என் முன் நில்லாதே ஓடு! எழுந்திரு! சீக்கிரம்! என்று கோபித்தான். இப்படிப்பட்ட இராவணனுடைய கொடூர மொழிகளைக் கேட்ட விபீஷணன் உடனே எழுந்திருந்து தன் மந்திரிமார்கள் நால்வருடன் ஸ்ரீராம

பிரான் சந்நிதியை யடைந்தான். ஸ்ரீராமர் விபீஷணனைப் பார்த்து சங்கதிகளை அறிந்து அவனுடன் சினேகித்து அச்சமுத்திர மணலி லேயே அநுமாரைக் கொண்டு மணல் மயமான இலங்கா பட்டண மொன்று செய்வித்து, தமது மித்திரனாகிய விபீஷணனை அவ் விலங்கையில் வீற்றிருக்கச் செய்து அவனுக்கு வானரங்களைக் கொண்டு இலங்கா ராஜ்யாபிஷேகம் செய்வித்து, அவனைப் பார்த்து நகைத்து "ஏ மித்ர! யான் ராவண சங்காரம் செய்யும் வரையில் இந்த இலங்கையை உன்னிடம் நியாஸமாக வைத்திருக்கிறேன். இது அநுமந்தருடையது. இச் சமுத்திரக் கரையில் அநுமன் இலங்கா என்னும் பெயர் இதற்குண்டாகப்போகிறது" என்று சொ ன்னார். ஏ பார்வதி! இராவணனைக் கொன்றபின் விபீஷணனுக்குச் சொந்தமாகச் செய்திருக்கும் இவ்விலங்கையின் சுதந்தரத்தை அநுமாருக்குரிமையாக்கினதால், இப்பொழுதும் அவ்விடம் அநு மன் இலங்கையென்று அழைக்கப்படுவது காண்க. இத்தருணத்தில் இராவணனுடைய ஏவலை மேற்கொண்ட சுகன் சார்த்தூலனென்ற மந்திரிகள் ஆகாச மார்க்கமாக வந்து அவர்களிற் சுகனென்பவன் சுக்ரீவனைப் பார்த்து, ஏ சுக்ரீவ! எமது இறைவன் இராவணேசு வரன் உனக்குக் கூறியதைக் கேள், அதாவது:—"யான் இராஜபுத் திரனுடைய பத்னியை அபகரித்து வந்ததனால் உனக்கு நஷ்டமான பொருளென்ன? ஆகையால் உடனே உன் சைன்னியங்களுடன் கிஷ்கிந்தை போய்ச்சேர். என்னுடன் விரோதங்கொள்ளாதே" என் பதே என்று தமது இறைவன் ஆக்ஞையைத் தெரிவித்தான். உடனே வானரர்கள் ஆகாசத்திற் கிளம்பி சுகனென்பவனைப் பிடித் துக்கொண்டு வந்து இருப்புச் சங்கிலிகளால் கட்டிவிட்டார்கள். கூட வந்த சார்த்தூலன் வானர சைன்னியங்களின் நிலைமையைப் பார்த்து அச்சமடைந்து உடனே இராவணனிடஞ் சென்று சங்கதியைத் தெரிவித்தான். இராவணன் இதைக் கேட்டுத் தீர்க்காலோசனை செய்யலானான்.

ஸ்ரீ ராமபிரான் தாமிருக்குமிடத்தை ஏகாந்த ஸ்தலமாக்கி, விபீஷணன் சுக்ரீவன் மாருதி இவர்களுடன் ஒரு க்ஷணநேரம் ஆலோசித்துப் பிறகு, இலட்சுமணனைமட்டும் தனியே அழைத்துச் சென்று, வானரக் கூட்டங்களுக்கப்பாலிருக்கும் ஒரு புதருக்குள்

மறைந்து சைன்னியங்கள் பேசிக்கொள்வதைக் கேட்க விரும்பி அங்கு சற்றுநேரமிருந்தார். பிறகு இவ்வளவு நேரமாயும் சமுத்திர ராஜன் தம்மிடத்தில் வராமையைநினைத்து, அவனைத் தமது இடது கையை உதறிச் சினந்து, மேகநாதம் போல் கர்ச்சித்து, உடனே தர்ப்பையைப் பரப்பி அதிற் படுத்துப் பிராயோபவேச மிருந்தார். இவ்விதம் இரண்டுநாள் இருந்து மூன்றுவது தினத்தில் தர்ப்பசயனத்திலிருந்து எழுந்து "ஏ இலட்சுமணு! இங்கு வந்திருக்கும் நம்மைக்கேவலம் மனிதரென்றெண்ணி, இவ்வானரங்களைக்கொண்டு இவர்கள் யாது செய்யவல்லவர்கள் என அலட்சியஞ் செய்து ஸமுத்திராஜன் வராமலிருக்கிறுன். ஏ மகாபாகோ! இதோ பார் இந்த நிமிஷத்தில் இந்த வாரிதியை வற்றச்செய்து வானரங்கள் கவலையற்றுக் காலால் நடந்து செல்லும்படி செய்கிறேன்" என்று சொல்லித் தமது தனுசை எடுத்து இழுத்துக் கட்டி, அதிற் சிரேஷ்டமான பாணத்தைப் பொருத்தினர். உடனே பூமி நடுங்கிற்று; திக்குகள் இருண்டன; சமுத்திரம் கலங்கிக் கரையை விட்டுக் காதவழிக் கப்பாற் சென்றது. திமிங்கிலம், மீன், முதலை, ஜஷம் முதலிய ஜலஜந்துக்கள் தவித்துப் பயமடைந்தன. இத்தருணத்தில் சமுத்திராஜன் ஒரு திவ்ய ரூபந்தரித்து அநேக ரத்தினங்களை உபாயனமாகக் கொண்டுவந்து இராமரிடம் சமர்ப்பித்து வணங்கித் துதித்து "ஏ தீனசரண்ய! எனக்கபயமருளும், இதோ இலங்கைக்கேக வழி விடுகிறேன்" என்று இராகவரைப் பிரார்த்தித்தான். அப்பொழுது இராமர் சமுத்திர ராஜனை நோக்கி வில்லில் இப்பொழுது பொருத்திய பாணம் வீணுகாது; ஆகையால் இதற்கொரு குறி காண்பி; எவ்விடத்திற் பிரயோகிப்பது?" என்று கேட்டார். சமுத்திராஜன் "ஏ ரகுசிரேஷ்டரே! வடதிசையில் சமுத்திரத்தினருகில்துருமகல்பம் என்ற பிரசித்தமான பிரதேசம் ஒன்றிருக்கிறது. அதில் அநேக பாபிகளிருக்கிறுர்கள். அவர்கள் இரவும் பகலும் என்னைத் தொந்தரை செய்கிறுர்கள். ஆகையால் இந்தப்பாணம் அங்கு பிரயோகம் செய்யப்படட்டும்" என்று தெரிவித்தான். உடனே இராமபிரான் பாணத்தை அங்கு பிரயோகிக்க, அந்தப்பாணம் அங்கிருக்கும் ஆபீரமண்டலத்தை (இடையர் கூட்டம்) அழித்து விட்டு மறுபடி இராமரிடம் வந்து அம்புறுத்தூணி யடைந்து முன்போலிருந்தது.

பின்பு சமுத்திரராஜன் இராமரை வணக்கத்துடன் பார்த்து, "இந்த நளனைக்கொண்டு என்மீது அணை கட்டுவியுங்கள். இவன் விஸ்வகர்மாவி னுடைய புத்திரன் இவன் முன்னொரு காலத்தில் கங்கைக் கரையில் பூஜை செய்து கொண்டிருந்த ஒரு வேதியருடைய சாளிக்கிராமத்தை கங்கையிலெறிய, அவர் உடனே அவனைப் பார்த்து உன் கையாலெறியப்பட்ட பாஷாண முதலியவைகளும் தண்ணீரில் மிதக்கக் கடவதெனச் சாபமிட்டிருக்கிறார்; அது சாபமாயினும் நமக்கு இனி நடக்கவேண்டிய காரியத்துக்குச் சாதகமாய் முடிகிறபடியால், அது வரமே" என்று சொல்லி விட்டு இராமரைப் பன்முறைவணங்கி விடைபெற்றுமறைந்தான். உடனே இராமர் நளனை வரவழைத்து, சமுத்திரத்தில் சேதுபந்தனம் செய்யக் கட்டளையிட்டார். சேதுகட்ட ஆரம்பிக்குங் காலத்தில் அவ்விடத்தில் ஒரு விக்நேசுவரரை ஸ்தாபித்து, பூஜை செய்து பிறகு நவக்கிரகங்களைப் பூஜிப்பதற்காக மகோ ததியில் ஒன்பது பாஷாணங்களை (கல்லை) நளன் கையால் நடுவித்துப் பூஜித்தார். பிறகு இவ்விடத்தில் தமது பெயரால் ஒரு சிவலிங்கம் ஸ்தாபிக்க நிச்சயித்து மாருதியை யழைத்து "நீ இப்பொழுதே வாரணாசியை அடைந்து அகிலலோக சரண்ணியனாகிய சிவ பெருமானை வணங்கி அவரிட மிருந்து ஒரு சிவலிங்கம் பெற்று இப்பொழுது நான்குறித்திருக்கு முகூர்த்த காலத்திற்குள் கொண்டு வரவேண்டும்" என்று உத்தரவிட் டனுப்பினார்.

ஏ நாராயணி! அப்படி இராமருடைய உத்தரவு பெற்ற அனுமான் "நல்லது அப்படியே நடக்கிறேன்" என்று கூறி உடனே கிளம்பி ஆகாசமார்க்கமாக நிமிஷ நேரத்தில் நமது காசி க்ஷேத்திரமடைந்து என் சந்நிதியில் வந்து வணங்கி இராமகாரியத்தைத் தெரிவிக்க, நான் உடனே இரண்டு திவ்ய லிங்கங்களை இராமருக்காகக் கொடுத்து, "ஏ மாருதி! இதற்கு முன்னமே அகஸ்தியர் வேண்டுகோளின்படி தெற்குத் திக்கில் வருவதாக நிச்சயித்தேன். இப்பொழுது இராமருடைய கருத்தை நிறைவேற்றுவதற்காகவும் அவ்விடம் வருகிறேன்" என்றுசொன்னேன். அனுமான், என்னைப் பார்த்து "தாங்கள் எப்பொழுது இவ்விதம் நிச்சயித்தது? அந்தக்

கும்பமுனிவர் எப்பொழுது தங்களை இவ்விதம் வேண்டினது. இவைகளை என்னிடம் கிருபை கூர்ந்து தெரிவிக்கவேண்டு" மெனக் கேட்டார். "ஏ மாருதி ! யான் முன் நடந்தவைகளை உனக்குக் கூறுகிறேன், கவனமாய்க்கே"ளென்று பின்வருமாறு சொன்னேன்.

முன்னொரு காலத்தில் ஸ்ரீமான் நாரத முனிவர் நருமதைநதியில் ஸ்நானம் செய்து, சகலதேகிகளுக்கும் சர்வமனோரதங்களையும் அருளும் ஸ்ரீமத் ஓங்காரேசுவரரை அர்ச்சித்து விட்டுச் செல்லும் வழியில் விந்தியபருவதத்தைக் கண்டார். சம்சாரதுக்க நிவாரணஞ் செய்யும் நருமதா நதிக்கரைக் கலங்காரமாயும் தராதரம் என்கிற தன் பெயருக்கேற்ப, விசாலமான இப்பூமியைத் தாங்கிக் கொண்டிருப்பதுமான விந்திய பர்வதம் தன் தாவரசரீரத்தின் மேல் ஒரு ஜங்கமசரீர மெடுத்து, நாரதரைப் பார்த்து அவரை எதிர்கொண்டு வந்து தமது கிருகம் அழைத்துச் சென்று சாஸ்திரோக்தமாகப் பக்தியுடன் பூஜித்து அவர் சிரம நிவர்த்தியடைந்ததாகத் தெரிந்ததும் வணக்கத்துடன் சிறிது சம்பாஷித்தது. "தங்கள் பாததூளியால், எனது பாபங்கள் யாவும் பரிகாரமாயின. உமது சரீரத்தின் தேஜஸைப் பார்த்ததும் என் அந்தக் கணத்திலிருக்கும் அக்ஞானமாகிற இருள் நீங்கிற்று. இன்று சகல சம்பத்துங் கொடுக்கத் தக்க சுதினமாயிற்று. முன் அநேக ஜன்மங்களில் யான் செய்த புண்ணியங்களின் பலனை இன்று அடைந்தேன். இனி நானே மலைகளைக் காட்டிலும் மேன்மை பெற்றவன்" என்றது. இதைக்கேட்டதும் முனிவர் பெரு மூச்சுவிட்டார். உடனே விந்திய பர்வதம் பரபரப்புடன் அவரைப்பார்த்து, "சர்வக்ஞராகிய தாங்கள் பெருமூச்சுவிடக்காரணமியாது? அதைத்தெரிவித்தால், உடனே நிவர்த்திசெய்கிறேன். மேருவாதி பர்வதங்கள் மலைகளுக்குள் சிறந்தன வென்று முன்னோர்கள் புகழ்ந்திருக்கின்றார்கள். நான் ஒருவனே இப்பூவுலக முழுவதையும் தாங்குகிறவன். ஹிமவான் மலைகளுக்கு அதிபதியானதாலும், பசுபதியாகிய சிவபெருமானுக்கு மாமனாராதலாலும் கௌரிக்குத் தந்தையாதலாலும் அவனை மலைகளுக்குமேலென்பார்கள். மகாமேருமலை சொர்ணமயமானதாலும் ரத்னமயமான அடிவாரங்களையுடையதாதலாலும் தேவதைகளுக்கு இருப்பிடமான

தாலும் அதுவும் எனக்குச் சில அம்சத்தில் மேன்மை பெற்ற தென்பதும் என்சம்மதமே; இப்பூமியின்கண் இன்னும் மேன்மை பெற்ற மலைகளும் சாமான்னியமான மலைகளும் பல இருக்கின்றன. உதயகிரியானது மந்தேகாள் முதலிய அசுரர்களுக்கு இருப்பிடமா யிருக்கிறது. நிடத மலையானது ஓஷதிக்கு இருப்பிடம். அஸ்தமன கிரியானது எப்பொழுதும் ஒளியற்றது. நீல மலையானது நீலவர்ண முடையது. மந்தரம் மந்தலோசனமுடையது. மலயம் சர்ப்பங்க ளுக்கு இருப்பிடம். ரைவதமென்னு மலை திரவியமற்றது. ஹேம கூடம் திரிகூடம் முதலிய மலைகள் உச்சியில் கூடமென்கிறதைப் பெற்றிருக்கிறதே அப்பெருமைதான்; கிஷ்கிந்தை கிரௌஞ்சம்சகி யம் முதலியமலைகள் பூமியைத்தாங்கும் சக்தியுடையவனல்ல என்று மற்ற பர்வதங்கள் யாவற்றையும் இகழ்ந்ததைக் கேட்ட நாரதர் தம் மனதிற்குள் "ஓகோ? இவ்வளவு கர்வமடைந்தவன் மகத்வம் பெற அருகனல்ல;சிகரங்களைத் தரிசித்தமாத்திரத்தில் முத்தி கொடுக்கக் கூடிய மகிமையுள்ள ஸ்ரீசைலம் முதலிய மலைகள் பூமியிலில்லையா ? இதன் பலத்தை நாம் அறியவேண்டுமென்று கருதி, ஏ விந்திய பர் வதமே! நீ கூறியது யாவும் உண்மையே" அவைகளில் மேருமலை யானது உன்னை மிகவும் அவமதிக்கின்றது. அதை நினைத்துத் தான் நான் பெருமூச்சுற்றேன்.இப்பொழுது அதையும் தெரிவித்து விட்டேன்! ஆனால் எங்களைப்போலொத்த உலகப் பற்றற்றவர் களுக்கு இவைகளைப்பற்றிய சிந்தை தான் எதுக்கு? ஆயினும் உன க்கு மங்கள முண்டாகுக" என்று சொல்லிவிட்டு ஆகாயமார்க்கமா கச் சென்றார். நாரதர் சென்ற பிறகு விந்தியபர்வதம் பயந்துமனங் கலங்கி தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டு,தன்மனதிற்குள் மேரு க்கு மேன்மைகிடைத்தது எவ்விதம்? ஆனால் இச்சூரியன் நாள் தோறும் அதை வலம் வருகிறது. இவைகளன்றோ அதுபெருமை பேசியதற்குக் காரணம் என்று நினைத்து அத்துடன் அமர்புரியக் கருதி சூரியனுடைய கதிக்குத் தடையுண்டாகும்படி வளர்ந்து நின் றது. மறுநாட்காலையில் சூரியன் மகாமேருவை வலமாக வந்து வழக் கப்படி தென்புறத்தில் உதயமாய் வர, அங்கு வழி தடைபட்டிருப் பதைக்கண்டு, தான் அரைநிமிஷத்தில் 2202 யோசனைதூரம் செல் லுகிற சுபாவமுள்ளவனாயினும் அவ்விடத்திலேயே வெகுகாலம்

தங்கிவிட்டான். அச்சமயத்தில், கிழக்குத்திக்கிலுள்ளவர்களும் வடக்குத்திக்கிலுள்ளவர்களும் சண்டரஸ்மி (உக்ரமான கிரணமுடையவர்) யினுடைய கிரணக்கூட்டங்களால் தகிக்கப்பட்டு வருந்தினர்கள். தெற்குத்திசையிலும் மேற்குத்திசையிலு முள்ளவர்கள் இருள் அந்தகாரமாக மூடியிருந்தமையால் மூடின கண்ணைத் திறக்காமல் நித்திரை போய்க்கொண் டிருந்தார்கள். ஆகாசத்திலுள்ள கிரகம் முதலிய நட்சத்திரங்கள் வருத்தமுற்றன; இவ்வுலகத்தில் சுவாஹா, சுவாதா வஷட்காரம், பஞ்சயக்ஞக்கிரியைகள், முதலிய சத்கிரியைகள் லோபமடைந்தன; அதனால் மூவுலகங்களும் நடுங்கின; பிறகு தேவர்கள் ஒன்றுகூடி பிரமதேவனை யடைந்து அவரிடத்தில் இச்சங்கதியைத் தெரிவிக்க, அதற்கவர் விந்திய பர்வதத்துக்குக் குருவாகிய அகஸ்தியரிடஞ் சென்று பிரார்த்தியுங்களென்று சொல்லக்கேட்டு உடனே அகஸ்திய முனிவரிடம் சென்று அவரை வணங்கி சங்கதியைத் தெரிவித்தார்கள். அவர் அதைக் கேட்டதும் மனங் கலங்கினர். ஏ பார்வதி அப்படி வருந்திய அகஸ்தியரைப் பார்த்து "நீரேன் இவ்விதம் வருத்தமுறவேண்டும். நான் கூறுகிறபடி விந்திய பர்வதத்தை ஒருவார்த்தையால் அடக்கிவிட்டு தட்சிணதிக்குக்குச் சென்று அங்கு என்னைப் பூஜித்துக் கொண்டிரு; நானும் அதிசீக்கிரத்தில் உன் வருத்தத்தைத் தீர்ப்பதற்காகவும் சேதுவில் ஸ்ரீராமர் என்னைப் பூஜிப்பதற்காகவும் தட்சிணத்திற்கு வருகிறேன் என்று" அவருக்கு அநுக்கிரகஞ் செய்து அனுப்பினேன்; உடனே அகஸ்தியர் மனமகிழ்ச்சிகொண்டு அவர் பத்னி லோபாமுத்திரையுடன் புறப்பட்டு, விந்திய பர்வதத்தின் அருகிற் சென்றார். அப்பொழுது விந்திய பர்வதமானது பத்னியுடன் வரும் அகஸ்தியரைப் பார்த்து நடுங்கி பூமிக்குள் புகுந்து செல்லுகிறவன்போல் அதி சீக்கிரத்தில் தரையோடு தரையாய்த் தாழ்ந்து வணங்கி, "தங்களுடைய ஆக்ஞைக்குக் கீழ்ப்பட்டவனாகிய நான் தங்களுக்கு இச்சமயம் செய்யவேண்டுவதைக் கட்டளை யிட்டருளும்" என்றது. "ஏ விந்திய! நீ மிக்க பிராக்ஞன், சாது, என்னை நீ நன்றாய் அறிவாய்; நான் மறுபடிதிரும்பிவரவேண்டுமென்றகருத்து உனக்கு இருந்தால் நான் வரும் வரையில் இவ்விதமாகவே இரு" என்று சொல்லி, தென் திசை சென்றார். இப்படி அகஸ்தியர் சொல்

லக் கேட்ட விந்திய மலை நடுங்கி, தான் மறு ஜன்மமடைந்ததாக எண்ணித் தலையை மட்டும் உயரத்தூக்கிக்கொண்டு தட்சிணதிக்கை நோக்கிக்கொண்டே முனிவர் வரவை இன்று வருவர் நாளை வருவர் என்று எண்ணிப் பன்னிரண்டு வருஷகாலம் எதிர்ப் பார்த்திருந்து வராமை கண்டு, அதனால் உண்டான மனக் கவலையாகிய பாரத்தினால் அமுத்தப்பட்டவனுக் கொப்பாய், எப்போதும் போல் தாழ்ந்திருந்தது. ஆகையால் இன்னும் அகஸ்திய முனிவர் வடக்குத் திக்குக்கு வரவில்லை. மலையும் வளரவில்லை. சூரிய சாரதியாகிய அருணன் இதை யறிந்து குதிரைகளை ஓட்ட, உலகத்தில்சூரிய சஞ்சாரமுண்டாய் நாற்றிசையிலுள்ளவர்களும் க்ஷேமமடைந்தார்கள். பிறகு அகஸ்தியமுனிவர் தண்டகாரண்யம் சென்று அவ்விடத்தில் எனது வரவை எதிர்பார்த்து வருவதால், நான் சீக்கிரம் அவ்விடம் வருகிறேன். நீ ராமரிடம் செல்லென்று சொல்லி மாருதியைக் காசியி லிருந்து அனுப்பினேன். உடனே மாருதி கர்வமடைந்து இவ்விரண்டு லிங்கங்களையும் எடுத்துக்கொண்டு, இராமரிடம் செல்ல, ஆகாசமார்க்கமாகப் புறப்பட்டார்.

ஸ்ரீராமபிரான் அனுமார் கர்வமடைந்ததை அறிந்து சுக்ரீவன் முதலானவர்களைப் பார்த்து, முகூர்த்தவேளை தப்பிப்போகும்போலிருக்கிறது. ஆகையால் இவ்விடத்தில் இப்பொழுதே ஒரு மணல் லிங்கம் செய்து அதைச் சேதுபந்தனத்திற்கு ஆரம்பஞ் செய்யுமிடத்தில் ஸ்தாபிக்கிறேன் என்று சொல்லிவிட்டு வானரங்களும் முனிவர்களும் சூழ்ந்திருக்க, லிங்க ஸ்தாபன விதியை அனுசரித்து சைகத லிங்க ஸ்தாபனம் செய்துவிட்டு, உடனே தமது திருவுள்ளத்தில் கௌஸ்துப மணியைச் சிந்தித்தார். அக்கணமே கௌஸ்துபமணி கோடிசூரியப்ரகாசம் போல் ஆகாசத்தி லிருந்து அவர் முன்னில் வர, அக்கௌஸ்துப மணியை லிங்கத்தின் கழுத்தில் அணிந்தார். உடனே அம்மணியின் மகிமையால் ஐசுவரியம் வஸ்திரம் ஆபரணம் பசுக்கள் திவ்யான்ன பாயசங்கள் யாவும் சித்தமாயின. அவைகளை ராமபிரான் முனிவர்களுக்குச் சமர்ப்பித்து மரியாதை செய்வித்தார். பிறகு முனிவர்கள் களிப்படைந்து அவரவர் ஆசிரமத்திற்குச் செல்லும் வழியில் அனுமார்

அவர்களைப் பார்த்து "முனிவர்களே! யாருடைய பூஜை பெற்று வருகிறீர்க"ளென்று கேட்க, முனிவர்கள் இராமபிரான் சேதுபந் தனம் தொடங்கு மிடத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார். அதை நாங்கள் யாவருங்கண்டு தரிசனஞ்செய்து வணங்கினோம். அப்பொழுது இராமரால் செய்யப்பட்ட பூஜையை ஏற்றுக்கொண்டு இப்பொழுது எமதாசிரமம் செல்லுகிறோ"மென, அதைக் கேட்ட அனுமார் மிகக்கோபங்கொண்டு ஓகோ! இராமபிரான் நம்மை மோசஞ் செய்துவிட்டாரெனச்சொல்லிக்கொண்டே ஒரு நொடிப்பொழுதில் இரகுபுங்கவர் முன்னிலையில் தமது கால்கள் தரையிற் பதியத் திடீரென்று குதித்தார். உடனே இராம பிரானைப் பார்த்து "அடியேனை மறத்தல் தகுமோ? நான் இலங்கைக் கேகிச் சீதையைக்கண்டு தங்களுக்குத் தெரிவிக்கவில்லையா? அவ் விதம் செய்த என்னை லிங்கத்துக்காகக் காசிக்கனுப்பி, யாவரும் சிரிக்கும்படி செய்துவிட்டீர்களே! இப்படிப்பட்ட எண்ணம் தங் கள் சித்தத்தில் இருக்க, ஏன் என்னை சிரமப்படுத்த வேண்டும்? தங்கள் எண்ணம் இப்படிப்பட்டதென்பதை யான் அறிந்திருப்பேனானால், காசிக்குச் சென்று ஏன் லிங்கம் கொண்டு வருகிறேன்? தங்களுக்கொன்றும் எனக்கு ஒரு ஆத்மலிங்கமும் கொண்டு வந் திருக்கிறேன். இனி என்ன செய்வேன்" என்றார். இராமபிரான் இன்னும் அனுமந்தர் கர்வம் அடங்கவில்லை என்பதை யறிந்து, அவரைப் பார்த்து "நீ சத்தியவக்தன்தான். நான் இந்த லிங்கத் தைப் பிரதிஷ்டை செய்துவிட்டேன். நீ உன் பலத்தைக் கொண்டு இங்குப் பிரதிஷ்டை செய்திருக்கும் லிங்கத்தைப் பிடுங்கி விடு; நீ காசியிலிருந்து கொண்டுவந்திருக்கும் விசுவநாத லிங் கத்தை அதில் ஸ்தாபித்து விடுகிறேன்" என்றார். மாருதி நல்ல தென்று சொல்லி, அந்தமணல் லிங்கத்தைத் தமது வாலாற்சுற்றி வால் நுனியைத் தமது சிரசில் வைத்துப் பிடித்துக் கொண்டு பன்முறை வலித்து இழுத்தார். அப்பொழுது இழுத்த வேகத் தால், வாலறுந்து கீழே விழுந்து மூர்ச்சை யடைந்தார். லிங்கம் சிறிதும் அசையவில்லை. வானரர்கள் அதைக்கண்டு நகைத்தார் கள். சிறிது நேரத்திற்கெல்லாம் அனுமார் மூர்ச்சை தெளிந்து எழுந்து கர்வத்தைவிட்டு இராகவரைப் பணிந்து "ஏ கிருபா

நிதியே! நான் செய்த குற்றத்தைத் தாங்கள் பொறுத்தருள வேண்டும்'' எனப் பன்முறை பிரார்த்தித்தார். இராமர் "ஏ மாருதி! யான் ஸ்தாபித்த லிங்கத்துக்குச் சற்று வடக்கே நீ கொண்டுவந்திருக்கும் விசுவநாத லிங்கத்தை இப்பொழுது ஸ்தாபி'' என்றார். அவ்விதமாகவே இராமர் குறித்த இடத்தில் வாயுநந்தனர் தாம் கொண்டுவந்த விசுவநாத லிங்கத்தை ஸ்தாபித்தார். "ஏ மாருதி! இங்கு உன்னால் இப்பொழுது ஸ்தாபிக்கப்பட்ட விசுவநாத லிங்கத்துக்கு பூஜை செய்யாமல் யான் ஸ்தாபித்த இராமேசுவர லிங்கத்தை முதலிற் பூஜை செய்கிறவர்களுக்குப் பலன் கிடைக்காதென்று வரங்கொடுத்தார். பிறகு "ஏ மாருதி! இங்கு எனக்காக நீ கொண்டுவந்த விசுவநாத லிங்கம் இந்த இராமநாதருடைய ஆலயத்தில் பிரதிஷ்டை பண்ணப்படாமலும் பூஜிக்கப்படாமலும் பூமியிலேயே யிருக்கட்டும். பின் ஒரு காலத்தில் அதையும் நான் பிரதிஷ்டை செய்யப் போகிறேன்'' என்றார். ஏ கௌரி! அஃது இப்பொழுதும் விசுவேசுவாருடைய சமீபத்தில் பிரதிஷ்டை பண்ணப்படாமலே யிருக்கிறது. ஒருவரும் பூஜிப்பதுமில்லை. இராமர் மறுபடியும் அனுமாரைப் பார்த்து "நீ இந்த ஸ்தலத்தில், உனக்குக் கர்வத்தால் நேரிட்டதை நினைத்துக் கொண்டு அறுந்தவாலோடும் பூமியிற் புதைந்த காலோடும் ஒருருவெடுத்திரு'' என்று சொன்னார். அனுமார் உடனே அந்த ஸ்தலத்தில்தம்முடைய ஒரு அம்சத்தினால், அவ்விதமே உருக்கொண்டார். அவ்வுருவினின்றும்இந்தஇராமேசுவரஸ்தலத்தி லிருப்பது பிரத்தியட்சம். அனுமார் மூர்ச்சித்து விழுந்த இடம் பாப விமோசனகரமான ஒரு புண்ணிய தீர்த்தமாயிற்று. அதற்கு அனுமத் தீர்த்த மென்றும் பேருண்டாயிற்று. அப்பொழுதே ஸ்ரீராமரும் ஒரு புண்ணிய தீர்த்தத்தை உண்டாக்கி அது தமது பெயரால் பிரசித்தி யடையும்படி செய்து, அக்கரையில் தமது மூர்த்தமும் ஸ்தாபித்தார். இக்காலத்தும் அம்மூர்த்தம் சேது மாதவரென்கிற பெயரோடு விளங்குகிறது. அவ்விதமே இலட்சுமணரும் ஒரு உத்தமமான தீர்த்தமுண்டாக்கித் தமது பெயரால் பிரசித்தியடையச்செய்தார். பிறகு அனுமார் தமதுவால் அறுபட்டுப்போனமைக்கு வருந்தி, ஸ்ரீராமரிடம் குறை யிரக்க, இராமர் அவருக்கு இரங்கித் தமது கையால் அவ்வாலைத் தொட்டார். தொட்டதும் வால் முன்போலாகி முன்னிருந்த பலத்திலும் அழகிலும் மேம்பட்டு

விளங்கிற்று. இராமநாத லிங்கத்தை அனுமார் வாலிற் சுற்றி யிழுக்கும்போது, அவ்விலிங்கத்தின் தலை சற்றுச் சிறிதாயிற்று. அஃது இன்றைக்கும் அவ்விதமே காண்கிறது. அன்றுதொட்டு அனுமார் இராமர் விஷயத்தில் கர்வங்கொள்வதை ஒழித்தார்.

ஏ பர்வதராஜபுத்திரியே! இராமர் பூஜித்த அந்த இராமநாத லிங்கத்தில் நான் ஆவிர்ப்பவித்து அவருக்குச் சொன்ன விஷயங் களைத் தெரிவிக்கிறேன் கேள்.

"ஏ ராகவேந்திர! முன்னொரு சமயத்தில் நான் இப்பூவுல கில் பிராமண வேடம்பூண்டு அழுக்கு வஸ்திரமுடுத்து முனிவர்க ளாசிரமந்தோறும் சென்று பிச்சையெடுப்பதற்காகத் திரிந்தேன். அப்படித் திரியும்போது எனது சௌந்தரியத்தைப் பார்த்து மய ங்கிய முனிவர் பத்னிகள் ஆயிரக்கணக்காக என்னைப் பின்தொ டர்ந்தார்கள். அவர்கள் தங்கள் கணவர்களால் தடுக்கப்பட்டும் நிற்கவில்லை. அப்பொழுது முனிவர்கள் மனங்கலங்கிக் கோபங் கொண்டு என் உண்மையறியாமல் என்னைப் பார்த்து ஏ பிராமண அதமனே! நீ ஆசிரமம் வந்து எங்கள் பத்னியை மோகிக்கச் செய்தால் அதற்குச் சாதகமான உன் அவயவம் எங்களுடைய சத்திய வாக்கால் பூமியில் விழக் கடவதெனச் சாபங்கொடுத்தார் கள். பிராமணனுகக் கபடரூபங்கொண்ட எனக்கு முனிவர்கள் சாபம் பலிதமாயிற்று. உடனே நான் மறைந்தேன். நான் மறை யவே ரிஷிபத்னிகள் அவரவர் வீட்டுக்கு மனவருத்தத்துடன் சென்றூர்கள். பின் அவயவம் பூமியில் வெகு தூரம் பரவி ஆகா சமளவும் அளாவியது. அதைப்பார்த்த பிர்ம்மதேவர் பயந்து உடனே கைலாசமலைக்கு வந்து என்னைப்பார்த்து வணங்கி, ஏ அப்பிரமேய! இதனுல் அகாலப் பிரளய முண்டாகும் என முறை யிட்டார். நான் பிர்மாவுக்கு நடந்த விருத்தாந்தங்களை விவரித்து அவ்வுருவத்தைச் சேதிப்பதற்காக ஒரு திரிசூலங் கொடுத்தேன். அதற்குப் பிர்மதேவர் யான் தங்கள் அவயவத்தைச் சேதிக்கத்து ணியேன்; தாங்களே அக்காரியஞ் செய்யுங்கள்" என்றூர். ஏ இராகவ! பின் யானே அவ்வவயத்தைப் பன்னிரண்டு பாகமாகப் பிரித்தேன். அந்தப் பிரிவுகள் பன்னிரண்டும் பன்னிரெண்டு ஜோதி லிங்ககங்கள் ஆயின. அவைகளிற்பதினேருபிரிவுகள்ஓங்காரேசுவரர்

சோமநாதேசுவரர் திரியம்பகேசுவரர் மல்லிகார்ச்சுனேசுவரர் நாகேசுவரர் வைத்தியநா தேசுவரர் காசிவிசுவேசுவரர் கேதா ரேசுவரர் மாகாளேசுவரர் பீமேசுவரர் குஸ்ருணேசுவரர் என் பனவாதிப் பெயர்களை யடைந்தன. பன்னிரண்டாவது கந்தமாத னேசுவரர் என்னும் பெயரை யடைந்து அது மேரு மலையின் ஈசானிய திக்கிற் சென்றிருந்தமையால், வெகுகாலம் மனிதர் யாவருக்கும் தென்படா திருந்தது. இப்படியானதைக் கண்டதும் முனிவர்கள் என்னைப் பரமேசுவரனென வறிந்து "ஏ ஜகதீசா! நினது தத்வத்தை யுணராமல், சாபங்கொடுத்த எங்களை மன் னிக்கவேண்டும்; அவயவம் முன்போலவே ஆகட்டும்" என்று சாபவிமோசனமுஞ் செய்தார்கள். மகா மேருவுக்கு வடபாரி சுத்தில் ஒரு சிகரமாகவிருந்த அக்கந்தமானத்தைச் சிலநாட்சென்ற பின் கிளம்பின பிரளய மாருதமொன்று அங்கிருந்து எடுத்து வந்து இவ்விடத்தில் (இந்த இராமேசுவரத்தில்) போட்டு விட்டது. இந்த தட்சிணசமுத்திரச்சந்நிதியிலிருக்கும் இதுதான் கந்தமாதன மெனப் பெயர்பெற்ற பன்னிரண்டாவது ஜோதிலிங்கம். அஃது இரு க்குமிடம் நீர் பிரதிஷ்டைசெய்த இந்த இராமநாத லிங்கத்துக்கு ஈசானிய பாகத்தில் இருக்கின்றது. அதை இதுவரையில் ஒரு வரும் அறியார்கள். அஃது உங்கள் கண்களுக்குத் தென்பட்டது. இப்பொழுது பிரதிஷ்டை செய்த இந்த இராமநாதருடைய மகிமை யாலேயே ஏ இரகு புங்கவ! இந்தக் கந்தமாதன லிங்கம் ஜோதி லிங்கமெனப் பிரசித்தி பெற்றிருப்பதால், இதிற் பிரகாசிக்கும் எனது ஜோதியானது எனது வரத்தால் இன்றைக்கே இந்த சைகதமான சேதுலிங்கத்தில் வந்து சேரப்போகிறது. ஆதலால் இராமநாதலிங்கமானது பன்னிரண்டாவதுலிங்கமே. இனி ஜனங்கள் யாவரும் இதை எனது பன்னிரண்டாவது லிங்கமாகக் கொண்டு பூஜை உத்சவம் முதலியவைகளை நடத்தி வருவார்களாக. நானும் உமது வார்த்தைக்கும் அகஸ்தியருடைய வேண்டுகோளுக்கும் இணங்கிக் காசியைவிட்டு இங்கேயே வந்துவிட்டேன். இனிமேல் நான் வசிப்பது இவ்விலிங்கத்திலே தான். ஆகையால் இச்சேதுபந் தத்தில் இராமநாதலிங்கத்தை வணங்கினவன் எனது அனுக்கிரக மடைந்து பிர்ம்மஹத்தியாதி பாபவிமோசனம் பெறுவான். ஏ இரா கவ! மணிகர்ணிகா கட்டத்திலிருந்து கங்காதீரத்தைக்கொண்டு

வந்து இந்த லிங்கத்திற்கு அபிஷேகஞ் செய்கிறவனுக்கு நீர் வரங் கொடும் என்றேன். இதைக்கேட்டதும் இராமர் களிப்படைந்தார். ஒருவன் சேதுவில் ஸ்நானஞ்செய்து இராமேசுவாரைத் தரிசித்து, அவ்விடத்தில் சங்கற்பஞ் செய்துகொண்டு நியமத்துடன் சேதுவி லிருந்து மணலெடுத்துப் பெட்டிகளில் நிரப்பிக்கொண்டு வாரணாசி சென்று பிரயாகை திரிவேணியில் அம்மணலைப்போட்டுவிட்டு பெட் டியையும் எறிந்துவிட்டுக் கங்காதீர்த்தத்தை எடுத்துக்கொண்டு இராமேசுவரம் வந்து இராமநாதருக்கு அபிஷேகம் செய்து சங்கற் பத்தை முடித்தானாயின் பிர்மலோகஞ் சேர்வான். சங்கற்பமில்லா மல், காசியிலிருக்கும் கங்கை இராமநாதருடைய அபிஷேகத்துக்கு வராதென்பது நிச்சயம். அப்படி வருமாகில் அது பூர்வஜன்ம சங் கற்பமென்று என்னுடைய சொல்லால் நம்பவுமென. இவ்விதம் பல வித வரங்களைக் கொடுக்குங் காலையில், அகஸ்தியமுனிவர் அவ்விடம் வந்து இராமநாதேசுவரரை வணங்கி இராமரையும் வணங்கினார். அவரை இராமரும் வணங்கினார். அப்பொழுது முனிவர் இராமரைப் பார்த்து, "ஏ இராகவ! உமது அனுக்கிரகத்தால் இடையில் நெடுநாளா யில்லாதிருந்த விசுவேசுவாருடைய தரிசனம் இன்று கிடைத்தது. இன்று நான் அடைந்த சந்தோஷத்திற்கு அடையாளமாக இங்கு ஒரு லிங்கம் ஸ்தாபிக்கிறே"னென்று கூறி, ஒரு லிங்க ஸ்தாபனஞ் செய்து, அகஸ்தீசுவரர் எனப் பெயரிட்டார். அஃது இராமேசுவர லிங்கத்துக்கு ஆக்நேயதிக்கில் அமைந்தது. அகஸ்தியர் தாம் ஸ்தா பித்த லிங்கத்தைப் பூஜித்துப் பிறகு விசுவநாதரையும் வணங்கித் துதித்து இராமரையும் இராமேசுவர லிங்கத்தையும் வணங்கி விட்டுக் கடைசியாகக் கந்தமாதனமென்ற புராண லிங்கத்தையும் வணங்கி மகிழ்ச்சியுற்றுத் தமதாசிரமம் சென்றார். ஆகையால் ஏ தேவி! சேதுக்ஷேத்திரத்தில் இராமேசுவர லிங்கமிருக்கும் ஆல யத்தில் ஆக்நேயதிக்கில் அகஸ்தீசுவரலிங்கமும் ஈசானியத்தில் கந்தமாதனலிங்கமும் இருப்பது இப்பொழுதும் பிரத்தியட்சம். இதை ஜனங்கள் ஊகித்தறியவேண்டும் அதுமுதல் சொர்க்கம், பூமி, பாதாளம் இம்மூன்றுலகங்களிலும் இராமேசுவர் பிரசித்தி யடைந்தார்.

பின்பு நளன் ராமர் உத்தரவு பெற்று சேதுபந்தனஞ்செய்யத் தொடங்கி அதனால் சிறிது கர்வங்கொண்டான். இதை ராகவர்

அறிந்தார். நளன் மலைகளைப்பிடுங்கி சமுத்திரத்திற் போடப்போட அலைகள் அவைகளை அடித்துக்கொண்டு போகக்கண்டு, மனம்வருந்தி கர்வத்தைவிட்டு இராமரிடம் தெரிவித்தான். அப்பொழுது இராமர் நளனைப்பார்த்து "ஏ நளனே! மலைகள் ஒன்றோடொன்று சேரவேண்டுமென்ற விருப்பத்துடன், அம்மலைகள் சேருமிடங்களில் ஒவ்வொரு மலையிலும் இராம என்ற என்னுடைய நாமத்தை எழுது; அப்பொழுது அவைகள் திடசந்திகளாய் விடும்" என்று சொல்லியனுப்பினர். நளன் அப்படியே செய்கிறேனென்று கூறி விட்டு மலைகளைக் கொணர்ந்து சமுத்திரத்திற் போட்டு இராமபிரான் கூறியபடி இராம மந்திரமெழுதி இணைக்கி (12) யோசனை தூரம் அகலம் வைத்துச் சேதுபந்தனஞ்செய்து வந்தான். முதல் தினத் தில் பதினன்கு யோசனை தூரம் கட்டி முடிந்தது.

இரண்டாவது தினத்தில் இருபது யோசனை தூரமும் மூன் ருவது தினத்தில் இருபத்தொரு யோசனை தூரமும் நான்காவது தினத்தில் இருபத்திரண்டு யோசனை தூரமும் ஐந்தாவது தினத்தில் இருபத்துமூன்று யோசனை தூரமுமாகக் கட்டி ஆக ஐந்து நாளைக் குள் நூறு யோசனை தூரமும் கட்டி முடித்தான். ஏ ஈசுவரீ! சேது பந்தத்தில் நளன் சமுத்திரத்திற் கொண்டுவந்து போடும் மலைகள் மிதப்பதும் அவைகளின் மேற்போடப்படும் மலைகள் அவைகளை அமிழ்த்துவதும், தாண்டற்கரிய சமுத்திரத்தில் இவ்விதம் நூறு யோசனை வழி தூரம் சேதுபந்தஞ் செய்து முடித்ததும், அதன் வழியே வானர சேனைகள் தாண்டுவதுமாகிய இவைகள் மலைகளின் சக்தியல்ல; சமுத்திரத்தின் சக்தியல்ல; வானரங்களின் சக்தியல்ல; மகானுபாவனுகிய ஸ்ரீராமச் சந்திரனுடைய பிரதாபத்தின் மகிமையே இவ்வளவுக்குங் காரணமாம்.

அப்படிக் கட்டி முடிந்த சேது வழியாக இராமர் அனுமந்தர் மீதும் இலட்சுமணர் அங்கதன் மீதும் ஏறிக்கொண்டு சேனை சமுத் திரத்தோடு வாயுவேகமாகச் சென்று இலங்கைக்கருகே போய்ச் சேர்ந்தார்கள். வானரவீரர்களனைவரும் அங்கிருக்கும் சுவேலமலைக் குச்சென்று அதன்மீதேறி இலங்கையைப் பார்த்தார்கள். பிறகு இராமரும் இலங்கையைப் பார்க்க விரும்பி சைன்னியங்களோடு

அம்மலை மீதேறி இலங்கையைப் பார்த்தார். இலங்கை வெகு விஸ்தாரமாகவும் பல விதமான கொடிகள் பலவிதக் கோட்டைகள் சொர்ணமயமான தோரணங்கள் அகழிகள் சதக்னி முதலிய ஆயுதங்கள் நிறைந்த ஆயுதசாலைகள் முதலியவைகள் நிறைந்து விளங்குவதைக் கண்டார். அங்கு ஒரு விஸ்தாரமான மேன்மாடியின் மேலிருந்துகொண்டு வானர சைன்யங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் இராவணனை இரகுபுங்கவர் பார்த்தார். இப்பொழுது இராமர் சுகனைக் கட்டவிழ்த்து விடும்படி கட்டளை யிட்டார்.

பிறகு சுகன் உடனே பிழைத்தேனென்று சொல்லிக்கொண்டே தசானனனிடம் சென்று அவனை வணங்கி வானரசைன்னியத்தைப்பார்க்கச் சொல்லி "ஏ இராவணேசுவர; விபீஷணனை இந்த இலங்காதிபதியாகச்செய்து விட்டு சீதையை இராமபிரானிடம் சேர்ப்பித்து அவரைச் சரணமாக அடையும். அன்றேல் அவர் உம்மை விட மாட்டார். தப்புவதரிது" என்றான். அதைக் கேட்ட இராவணன் மிக்க கோபங்கொண்டு அவனைப் பலவாறாகத் திட்டித் தூதர்களைக் கொண்டு ஊரைவிட்டுத் துரத்தி வானர சேனையை மறுபடியும் பார்த்துக் கொண்டிருந்தான்.

சுகன் என்பவன் பூர்வ ஜன்மத்தில் பிர்ம்மஞானமுள்ள ஒரு பிராமணனாகவிருந்தான். அவன் பலயாகங்களைச் செய்து வானவர்களைத்திருப்தி செய்துவந்தான். அது நிமித்தம் அவனுக்கு அரக்கர்களுடைய விரோதமுண்டாயிற்று,

இந்தசமயத்தில் அகஸ்தியர் அவனிடம் சென்று மாம்சான்ன போஜனம் வேண்டுமென யாசித்தார். இதையறிந்த வஜ்ரதம்ஷ்டரன் என்னும் பேர்கொண்ட ஓர் அரக்கன் சுகனுடைய பார்வை போல் ரூபங்கொண்டு அகஸ்திய முனிவருக்கு நரமாம்ச போஜனமிட அகஸ்தியர் கோபங்கொண்டு நான் மாம்சங்கேட்க நீநரமாம்சங் கொடுத்தமையால் நீஅரக்கனாகக் கடவாயென்று சுகனுக்குச்சாபமிட்டு பின் இப்படி நடந்ததற்குக் காரணம் யாதென்பதை ஞான திருஷ்டியாற் கவனித்து, இது சுகன் சுயபுத்தியைக் கொண்டு செய்ததல்ல, ஓர் இராட்சதன்செய்த மோசமெனவறிந்து, சுகன் பிரார்த்தித்ததற்கு இரங்கி, "ஸ்ரீராமரைத்தரிசித்து இராவண

னுக்கு நற்புத்தி போதித்தவன்றே நீ சாப நிவர்த்தி யடைந்து உன் சுயரூபம் பெறுவாயென அநுக்கிரகித்துத் தமதாசிரமம் சென்றனர். பிறகு சுகன் முன்போல் பிராமணனுப் விட்டான்.

ஸ்ரீ ராமபிரான் சுவேலமலையின்மீது சுகமாக இருந்து கொண்டு வானரங்களோடு கூடி ஆலோசனை செய்து தாம் யுத்தத்திற்குச் சித்தமாயிருப்பதைப் பகைவர்களுக்குத் தெரிவிப்பதற்காக அங்கதனை இலங்கைக்குத் தூதனுப்பினர். வாலி தனயனாகிய அங்கதன் இராமபிரானது உத்தரவின்படியே இலங்கைக்குச் சென்று இராவணன் சபையில் தன் வாலையே ஓர் ஆசனமாக அமைத்துக்கொண்டு அதில் உட்கார்ந்து, மனதிற் சிறிதும் அச்சங்கொள்ளாமல் தைரியமாயிருந்து பல நீதிகளைக் கூறிப் பின்வருமாறு போதித்தான். "ஏ இராவண! நான் ஒரு நன்மை உனக்குக் கூறுகிறேன். அதைக் கேள். சீக்கிரத்தில் வெகுமானங்களுடன் சீதையை இராமபிரானிடத்தில் ஒப்புவித்து விடு. ஸ்ரீ ராமபிரானை சாட்சாத் நாராயணரென்று அறி; அவர் மீதுகொண்டிருக்கும் துவேஷத்தை ஒழி; ஞானிகள், தமது பக்தியினால் சம்சாரமாகிற சாகரத்தைக் கடக்கும் தெப்பமாக அடையும் பாதபத்மங்களையுடைய ஸ்ரீராமரை மனிதரென்று நினைப்பதுதகுமோ?" உன் குலம் சுகமடைய வேண்டுமாயின் நான் கூறுவதற்குச் செவி கொடுத்து அங்ஙனம் நட" என்று அங்கதன் பலவாறாகப் போதித்தான். அங்கதனுடைய இந்நீதி வாக்கியங்களுக்கு இராவணன் சிறிதும் செவி கொடுக்காம லிருந்ததுமன்றி, மகா கோபங்கொண்டு அங்கதனை நோக்கி, "ஏ குரங்கே! லோகராவணனாகிய என்னை நீ பயப்படுத்துகிறாயா? தேவர்கள் யாவரையும் நான் ஜயித்தவன். கையிலாய மலையைக்கரத்திலெடுத் தாட்டினவன். இப்படிப்பட்ட பராக்ரம சாலியாகிய என்முன் இப்பொழுது வீணாக ஏன் பிதற்றுகிறாய்! இதோபார் ஒரு நொடிக்குள் இராம இலட்சுமணர்களைக் கொன்றுவிட்டுப் பிறகு சுக்ரீவன் மாருதி விபீஷணன் இவர்களையும் உன்னையும் கொன்று மற்ற வானரங்களையும் பக்ஷித்து விடப் போகிறேன்" என்றான். இப்படிக் கூறியதும் அங்கதன், "மகாபலியால்கட்டுண்டு தொந்தரவடைந்தவனே! உன் பராக்ரமத்தையானறிவேன். பரமசிவன் தமது பாதப்பெருவிரலால் கைலாய பர்வதத்

தை அழுத்தியபோது அதனடியிலகப்பட்டுத் தொங்கரவடைந்ததையும் நானறிவேன். கார்த்த வீரியார்ச்சுனனுடைய புத்திரனுக்கு விளையாட்டு மிருகமாக விருந்ததையும் என் மனமறியும். சுவேதத்தீவிலிருக்கும் மாதர்கள் தங்கள் கரங்களால் உன் முகத்தில் அடித்ததையும் யானறிவேன். மகா விஷ்ணுவினுடைய புத்திரன் பிரமதேவர், அவருடைய புத்திரன் மரீசி, அவருடைய புத்திரன் கசியபர்; அவருடைய பிள்ளை தேவேந்திரன், அவருடைய புத்திரன் வாலி. இந்த வாலியுடன் நீ ஒருசமயம் யுத்தம் செய்து அவரால் சிறைப்பட்டிருந்தபொழுது ஒரு நாள் உன்னை என் தந்தையாகிய அவர் நான் படுத்திருக்கும் மஞ்சத்திற்கு நேரே கொண்டுவந்து கட்டித் தொங்கவிட்டு விளையாட்டுக் காட்டினரன்றோ? அந்தச் சமயத்தில் நான் ஜலமோசனம் செய்து, உன்முகத்தைக் கழுவியதை யான் அறியேனோ?'' என்று கூறினன். பாணங்கள்போன்ற இப்படிப்பட்ட வார்த்தைகளால் பயமுறுத்திய அங்கதனை முகத்திலடித்தது தாத்தும்படி இராவணன் தன்னுடைய தூதர்களுக்குக் கட்டளை யிட்டான். உடனே ஆயிரக்கணக்கான இராட்சத தூதர்கள் நல்லதென்று எழுந்திருந்து சஸ்திரங்களைக் கையிலெடுத்துக்கொண்டு அங்கதனை எதிர்த்துத் தூக்கினார்கள். அங்கதன் அவர்களைப் பார்த்து, அவர்கள் யாவரையும் தன்னுடைய வாலால் அடித்து ஒரு நிமிஷநேரத்தில் தரையோடு தரையாய்த் தேய்த்துவிட்டான். பின் இராவணனிடத்திற் சென்று அவனுடைய கைகால்களைத் தன் வாலால் கட்டி, பத்து முகங்களிலும் தன் கைகளால் அறைந்துவிட்டு, அங்கிருந்து அதிவேகமாகக் கிளம்பி, ஒரு வீட்டின் மேல்மாடியைப் பிடுங்கித் தலையில் வைத்துக்கொண்டு சுவேலமலையிலிருக்கும் இராமபிரானிடம் ஆகாச மார்க்கமாக வந்து சேர்ந்தான்.

இப்படி வரும் அங்கதனை இராமபிரான் பார்த்து, "அடே சிறுவனே! இந்தக்காரியம் நீ யேன் செய்தாய்? இதைக்கொண்டு வரலாமா? இந்த இலங்காபுரியை எனது மித்திரன் விபீஷணனுக்கல்லவா யான் கொடுத்திருக்கிறேன்; ஆகையால் நமது மித்திரனுடைய வஸ்துவை நாம் எடுத்துவரக்கூடுமோ?'' என்றுகேட்டார்,

உடனே அங்கதன் பயந்து, அந்த வீட்டின் மாடி தன் சிரசிலிருக்கும் வண்ணத்திலேயே இராமரைப்பார்த்து "சுவாமி! இதை யானறியேன். வருகிற வேகத்தில் இதைப்பிடுங்கித் தங்களிடத்திற்குக் கொண்டுவந்து விட்டேன். மறுபடியும் இதைக்கொண்டு போய் அவ்விடத்திலேயே வைத்துவிடுகிறேன்" என்று சொல்ல, இராமர் அப்படியே செய்யென்று கட்டளையிட்டார். உடனே அங்கதன் அதிவேகமாகச் சென்று அந்தமாடியை முன் இருந்த இடத்திலேயே வைத்துவிட்டுத் திரும்பி சுவேல பர்வதத்துக்கு வந்து தனக்கும் இராவணனுக்கும் நடந்த சங்கதிகளையெல்லாம் இராமரிடத்தில் கூறினன். ஸ்ரீ ராமர் அங்கதனைப்பார்த்துச் சிரித்து ஆலிங்கனம் செய்துகொண்டார். இராமபிரான் அப்பொழுது சுவேலமலையி லிருந்துகொண்டே, விளையாட்டாக ஒரு தனுசை எடுத்து, அதில் சிறந்த பாணத்தைப் பூட்டிப் பிரயோகித்து இலங்கையில் ஓர் அரண்மனையின் உச்சியில் பல பேர்களுடன் இருந்து பார்க்கும் இராவணனுடைய கிரீடங்கள் பத்தையும் ஆயிரக்கணக்கான அவனுடைய குடைகளையும் வானரங்கள் கண்டு களிக்க, அரை நிமிஷத்தில் கீழே தள்ளிவிட்டார். இப்போது இராமர் ஸந்நிதானத்திலிருந்த மகானும், வானரத்தலைவனுமான சுக்ரீவன், சீதையைக்கொடுக்க இராவணனுக்கு மனமில்லை யென்பதை அங்கதன் மூலமாக அறிந்ததும் மகாகோபங்கொண்டு உடனே அங்கிருந்து கிளம்பி, இராவணனிருக்கும் மாடியிற் குதித்து, யுத்தத்துக்குத் துணிந்திருக்கும் அவனருகிற் சென்று, அவனைத்தன் கைமுஷ்டியால் குத்தி, ஸிம்காசத்தினின்று தரையில் தள்ளிவிட்டான். உடனே இருவரும் மல் யுத்தத்துக்கு ஆரம்பித்து புஜம் தொடை மார்பு இவைகளில் ஒருவர்க்கொருவர் குத்திக்கொண்டார்கள். அப்பொழுது இராவணன் சுக்ரீவனுடைய இடியால் மிகத் தொந்தரவடைந்து யுத்தத்தைவிட்டுப்பின்னிட்டு ஓடித் தன் வீட்டையடைந்தான். இராவணன் தப்பி ஓடியபோது சுக்ரீவன் அவனுடைய கிரீடத்தைப் பிடுங்கிக்கொண்டு இராமபிரான்சமீபம் வந்து வணங்கி நடந்த சங்கதியைத் தெரிவித்தான். இராகவர் அவனைத் தழுவிக்கொண்டு "ஏ சுக்ரீவ! என்னிடம் தெரிவிக்காமல் நீ

இவ்விதம் இராவணனிடம் செல்வது தகுமா? உனக்குப் பிராண ஹானி நேரிட்டிருக்குமாகில் யான் சீதையால் பெறத்தக்க சௌக்கியம் யாது? ஆகையால் இனி அவ்விதமான காரியமொன்றும் செய்யாதே" என்றார்.

பிறகு வானரர்கள், பேரி, மிருதங்கம் முதலிய வாத்தியங்களை முழக்கியவாறே இலங்கைக்குச் சென்று சூழ்ந்துகொண்டு நான்குகோட்டை வாசல்களிலும் நிறைந்திருந்தார்கள். இராமபிரான் இப்பொழுது இராவணனுடைய கிரீடத்தைச் சேனாதிபதியாகிய அங்கதனுக்கு மனமகிழ்ச்சியுடன் கொடுத்து, அவனைத் தெற்கு வாசலிலும், அநுமானை மேற்கு வாசலிலும், நளனைக் கிழக்கு வாசலிலும், ஸுஷேணனை வடக்குவாசலிலும் அவரவர் சைன்னியங்களுடனிருந்து இலங்கையை முற்றுகை போடும்படி ஆக்ஞாபித்தார். உடனே அவர்கள் இராகவரை வணங்கி அவரவர் சேனாசமுத்திரத்துடன் இலங்கைக்குச் சென்று முற்றுகை போட்டார்கள்.

சுக்ரீவனால் தொந்தரவடைந்து இரகசியமாக வீட்டிற்குள் உட்கார்ந்திருக்கும் இராவணன், தன்னுடைய பராக்ரமங்களை நினைத்து நினைத்து மனம் ஏங்கினான். அவன் அப்படியிருக்க, அவனுடைய உறவினர்களும் தாயைப்பெற்ற பாட்டன்மார்களான மாலி, சுமாலி, மாலியவான் இம்மூவரும் சேர்ந்து தனியே ஆலோசனை செய்து இராவணனுக்கு நற்புத்தி போதிக்கவேண்டுமென நினைத்து அவர்களில் புத்திசாலியும் இராவணனிடத்தில் அன்புள்ளவனுமான மாலியவான் என்பவன் இராவணனிடம் சென்று, அமரிக்கையுடன் அவனைப்பார்த்து 'ஏ இராவணா! இப்பொழுது நான் சொல்வதைக்கேள். பிறகு உன் இஷ்டப்படி நட. இராமருடைய மனைவியாகிய ஜானகி என்பவள் இலங்காபட்டணத்திற்குள் கால் வைத்தது முதல் கோரமும் நாசகரமுமான அபசகுனங்களே காணப்படுகின்றன. மேகங்கள் பயங்கரமாகச்சப்திக்கின்றன இடிகளும் விழுகின்றன. இரத்த மழை அதியுஷ்ணமாகப் பொழிகின்றது. கோவில்களிலிருக்கும் தேவலிங்கங்களெல்லாம் வேர்த்து வருந்தி நடுங்குகின்றன. நமது காளிகாதேவி வெளுத்த தந்தங்களு

டன் நம் முன் நகைக்கிறுள். பசுக்களுக்குக் கழுதைகள் பிறக்கின் றன. எலிகள் பூனைகளுடனும், கிரிகளுடனும் சண்டை யிடுகின் றன. பாம்புகள் கருடனுடன் அமர்புரிகின்றன. எமன் உக்ரமாயும் வக்ரமாயும் முண்டனையும் கிருஷ்ண பிங்கள நிறமுடையவனையும், எல்லாருடைய வீடுகளையும் அவ்வப்போது நோக்குகிறுன். இவ் விதமான இன்னும் பல அபசகுனங்கள் நடந்து வருகின்றன. ஆகையால் யான் கூறுவதற்குச் செவிகொடு ஏ தசானன! நமது குலத்தை ரக்ஷிப்பதின் நிமித்தம் ஒரு சாந்திபுரியவேண்டும். ஆகை யால் சீதையை வெகுமதியுடன் இராமரிடம் சீக்கிரம் கொடுத்து விடு' என்று கூறினுன். இப்படித் தன்னுடைய பாட்டன் கூறிய வைகளைக்கேட்ட இராவணன் அவனைப்பார்த்து, 'நீர் இராமருடைய ஏவலாளாகவந்து இவ்வளவு துணிகரமாய்ப் பேசுவதாகத்தெரி கிறது. நீர் கிழவரானதாலும் பந்துவானதாலும் உமது வார்த்தை யைப் பொறுத்தேன். இப்பொழுது உமது வார்த்தைகள் எனது செவிகளைத் தீப்போல் பற்றி எரிக்கின்றன. நீர் உமது அலுவலை நோக்கிச்செல்லும்' என்ருன். மாலியவான் உடனே தன் வீடு சென்ருன்.

இராவணன் பின்பு சபைக்குவந்து இராக்கதர்களைப் பார்த்து கிழக்குவாசலில் தூம்ராக்ஷனையும் மேற்கு வாசலில் வஜ்ரதம்ஷ் ட்ரனையும் தெற்கு வாசலில் நராந்தகனையும் வடக்கு வாசலில் மகோதரனையும் அவரவர்கள் சைன்னியங்களுடனும் ஆயுதங்களு டனுமிருந்து யுத்தம் புரியும்படி கட்டளையிட்டு, அவர்களுக்குச் சந்தோஷமுண்டாக வெகுமதி கொடுத்தனுப்பினுன். அந்நால் வரும் இராவணனை வணங்கிவிட்டு அவ்விதமே தத்தமக் குரிய வாசலுக்குச் சென்றுர்கள். பிறகு இராமராவணர்களுடையசைன் னியங்கள் தத்தமக்கு நேரான எதிரிகளுடன் யுத்தம் புரிய லாயின.

இராம இராவண சேனு சையோகமாகிய

10-வது சருக்கம் முற்றிற்று.

# 11-வது சருக்கம்.

பிறகு அந்தந்த வாசல்களில் இருக்கும் மகாகாத்திரமுடைய வரும் மகாபலமுடையவருமான இராட்சதர்கள் யாவரும் மிகக் கோபங்கொண்டு பிண்டி, பாலம், சூலம், கத்தி, பரசு, குந்தம், சத க்னி, சங்கரமம், சக்தி முதலிய ஆயுதங்களையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு கிளம்பி வானரசைன்னியங்களை யடித்தார்கள். உடனே வானரவீரர்களும் வெகு கோபமடைந்து மரங்களாலும் மலைகளாலும் முஷ்டிகளாலும் கரதாடனங்களாலும் அரக்கர்களை அடித்தார்கள். அரக்கர்கள் மறுபடியும் ஆக்ரோஷமடைந்து சொர்ண மயமான இரதங்களிலேறிப் பத்துத்திக்குகளிலும் எதிரொலி உண் டாகச் சப்தித்துக்கொண்டு அகோரமான யுத்தம் புரிந்தார்கள். இவ்விதம் வானரசேனைகளும் ராக்ஷஸசேனைகளும் யுத்தம்புரிந்து வர, நளன் தூம்ராக்ஷனையும் மாருதி வஜ்ரதம்ஷ்ட்ரனையும் அங் கதன் நராந்தகனையும் சுஷேணன் மகோதரனையும் எதிர்த்துக் கொன்றுவிட்டார்கள். இப்பொழுது இராவணன் சைன்னியங்க ளில் முக்கால் பாகம் ஒழிந்தது. அங்கதன் முதலிய நால்வரும் இராமனை வணங்கிவிட்டு ஜயபேரி முழக்கினார்கள்.

இதற்குப் பின் மேகநாதனாகிய இந்திரசித்து, தங்கள் சைன் னியங்களில் ஏராளமாக மடிந்ததை நோக்கி, உடனே சர்ப்பாஸ் திரத்தைப் பிரயோகித்து, வானரர்களுடன் இராம இலட்சுமணர் களையும் மயக்கினான். இதைக்கண்ட ஸ்ரீ ராமபிரான் உடனே கருடனை நினைக்க, கருடன் அட்சணமே அவ்விடம் வந்து அந்த சர்ப்பாஸ்திர மயக்கத்திலிருந்து யாவரையும் தெளிவித்தான். இதனை யறிந்த சர்வாஸ்த்ரசமர்த்தனாகிய இந்திரஜித்து பிர்மதேவ னது வரப்பிரஸாத மகிமையால், ஆகாசத்தில் மறைந்து நின்று பிர்மாஸ்திர ப்ரயோகஞ்செய்து எதிரிகளைக்கட்டி பாணங்களை அவர் கள் மேல் மாரியாகப்பொழிந்தான். ஸ்ரீராமபிரான் அந்த பிர்மாஸ் திரத்துக்குவணங்கித் தம்பிஇலட்சுமணருடனும் வானரங்களுடனும் க்ஷணநேரம் அமைதியோடிருந்து, பிறகு தம் நிலைமையையுற்றுத் தமது சைன்னியங்கள் யாவும் பிர்மபாசத்தால் மூர்ச்சையடைந்து கிடப்பதை நோக்கி, அருகேயிருந்த இலட்சுமணரை யழைத்து “ஏ ஸௌமித்திர! தனுசைக் கொண்டுவா; நிமிஷத்திற்குள் இந்த

அரக்கர்கள் யாவரையும் சாம்பலாக்கிவிடுகிறேன்" என்றார். இவ்வார்த்தையைக்கேட்ட இந்திரஜித்து பயந்து உடனே இலங்காபட்டணத்துக்குட் புகுந்து விட்டான். பிறகு அநுமார் விபீஷணன் இவ்விருவரும் தமக்கு எதிரில் வந்து வருந்தி யழுவதைக்கண்ட இராமபிரான் இவர்கள் பிர்ம்மாவினுடைய வரமகிமையால் பிழைத்தார்களென்பதை யறிந்து அவர்களைப் பார்த்து, ஜாம்பவான் உயிரோடிருப்பானேயாகில், அவனிடம் சென்று, வானரங்கள் பிழைக்கும் உபாயத்தைக் கேளுங்களென்று அவர்களுக்குக்கூறி யனுப்பினார். விபீஷணனும் மாருதியும் அந்த அர்த்த ராத்திரி வேளையில் கொள்ளிக்கட்டையைக் கையிலெடுத்துக்கொண்டு யுத்தகளமெங்குந் தேடி ஜாம்பாவனைக் கண்டு பிடித்து, சங்கதி தெரிவித்தார்கள். ஜாம்பவான் இராமபிரானது வாக்கியத்தைக் கேட்டு மகிழ்ச்சியுற்றுக் கண்களை மூடிக்கொண்டபடியே அவர்களைப் பார்த்து ,, நீங்கள் யார்? இந்த யுத்தத்தில் வாயுநந்தனனாகிய அநுமான் உயிரோடிருப்பானாகில், வானரங்கள் யாவும் பிழைப்பதில் ஐயமில்லை'' என்றார். இதைக் கேட்டதும் விபீஷணன் அங்கதன் முதலிய வானரங்களிருக்க, அவர்களை விட்டு, வாயுபுத்திரராகிய அநுமாரை மட்டும் அப்படிச்சிறப்பித்துப்பேசிய காரணம் யாதென, ரிஷிசிரேஷ்டனாகிய ஜாம்பவான் "ஏ விபீஷண! வாயுபுத்திரனும் பிரதாபவானுமான அநுமான் ருத்திராம்சத்தோடு ஜனித்தவன். அவனைச் சாமான்யக் குரங்குகளில் ஒருவனாகக் கருதக்கூடாது. ஆகையால், நீ அவனைத் தேடிப்பார்" என்றான். அப்பொழுது அருகிலிருந்த அநுமான் ஜாம்பவானை வணங்கி, "தாங்கள் விரும்பு அநுமான் யானே; இதோ வருகிறேன்'' என்றார். ஜாம்பவான் உடனே களிப்படைந்து "ஏ ஆஞ்சனேய! நீ இவ்விடமிருந்து பாற்கடலுக்கு அதிவேகமாய்ச் சென்று அதன் மத்தியிலிருக்கும் துரோண பருவதத்தை இவ்விடம் கொண்டு வாவேண்டும்'' எனக் கூறினான். இதைக் கேட்டவுடன் அநுமார் புறப்பட்டு, பாற்கடல் சென்று பார்க்க, அம்மலை கந்தர்வர்களால் மறைக்கப்பட் டிருந்தமையால் அவர் கண்ணுக்குத் தென்படவில்லை. அப்பொழுது அங்கே காமதேனு எதிர்ப்பட்டு, அநுமாருடையகண்களைத் தன் க்ஷீரவஜலத்தால் துடைக்க, அம்மலை அவர் கண்ணுக்குத் தென்பட்டது.

உடனே அம்மலையைப்பிடுங்கி ஒரு மலரை எடுத்துவருவதுபோல் வெகு சுளுவாக எடுத்துக்கொண்டு அதிவேகமாய் இலங்கைக்கு வந்து சேர்ந்தார். அமுதத்துக் கொப்பான அந்தப் பர்வதத்தி லுள்ள ஒஷதிகளின் வாசனை பட்ட மாத்திரத்தில் செத்துக் கிடக் கும் அரக்கர்கள் உயிர்பிழைத் தெழுவார்களென்றெண்ணி, விபீ ஷணனும் தார்க்ஷியனும் இராமரிடந் தெரிவிக்க, இராமர் அவ்வர க்கச்சவங்களைக் கடலிலிழுத்துப் போடுங்களென்று உத்தரவிட, க்ஷணநேரத்தில் அவர்களிருவரும் அவ்விதமே செய்தார்கள். அப்பொழுது வைத்திய சிரேஷ்டனுகிய சுஷேணன் அம்மலை களிலிருக்கும்ஒஷதிகளைக்கொண்டு வானரர்கள் யாவரையும் பிழைக் கும்படி செய்தான். பிறகு வானரங்கள் யாவரும் எழுந்து குதூக லங்கொண்டார்கள். அனுமார் அந்தத் துரோணபர்வதத்தைக்கொண் டுபோய் இருந்த இடத்தில் வைத்துவிட்டார்.

இச்சமையத்தில் இராமர் குபேரனிடமிருந்து பெற்ற திவ்ய தீர்த்தத்தைத் தம் கண்ணில் தடவிக்கொண்டு மற்றவர்களுக் கும் அவ்விதமே செய்வித்தார். இதனுல் இராமரும் மற்றுமுள்ள வானரங்கள் யாவரும் மறைந்து யுத்தம் புரிபவர்களைக் கண்டு பிடிக்கும் பார்வையை யடைந்தார்கள். பிறகு இராவணன் தன் மந்திரிகளாகிய அதிநாதன், மகாநாதன், பிரஹஸ்தன்; ததீமுகன், தேவசத்ரு, நிதும்பன், தேவாந்தகன், நராந்தகன், சாரணன் முதலியவர்களை யுத்தத்திற்கனுப்பினுன். அவர்கள் தங்கள் தங் கள் சைன்னியங்களுடன் யுத்தகளத்திற்குச் சென்று வானரர் களை யெதிர்த்து அமர்புரிய, அங்கதன் முதலிய வானரசிரேஷ் டர்கள் அவர்கள் யாவரையும் கொன்றுவிட்டு கர்ச்சித்தார்கள். இதனை யறிந்த இராவணன் கும்பகர்ணனுடைய புத்திரர்களா கிய கும்பன் நிகும்பன் இவ்விருவரையும் யுத்தத்திற்கு அனு ப்ப, கும்பன், ஜாம்பவானை எதிர்த்து அவனுல் கொல்லப்பட்டான். நிகும்பன் அங்கதனேடு அமர்புரிந்து அழிந்தான். பிறகு தசா னனன் தன் புத்திரன் அதிகாய னென்பவனை யுத்தத்திற்கனுப் பினுன். அதிகாயனை லட்சுமணர் எதிர்த்து அவனேடு அகோர யுத்தம் புரிந்து ஒரே பாணத்தில் அவன் தலை இலங்கையில் இரா வணன் முன்னிலையில் விழும்படி அடித்தார்.

பிறகு, இராவணன் தானே யுத்தம் புரிவதாக நிச்சயத்துத் தன் பட்டணவாசிகள், மித்திரர், பந்துக்கள், சேனை சமுத்திரங்கள் யாவரும் சூழ, யுத்த அரங்கத்தை யடைந்து, அங்கே யிருந்த விபீஷணனைக்கண்டு கோபங்கொண்டு, அவன்மீது சக்தி ஆயுதத்தைப் பிரயோகம் பண்ணினான். இதைக்கண்டதும் இலட்சுமணர் விபீஷணனைத் தமக்குப் பின்னே,மறைத்துக்கொண்டு அச்சக்தி ஆயுதத்துக்குத் தான் இலக்காக நின்று எதிர்த்து அதைத் தமது மார்பிலேதாங்கித் தரையில் விழுந்தார். இப்படிக் கீழேவிழுந்த இலட்சுமணரைப் பார்த்த இராவணன் அவரைத் தன்னுடைய நகரத்துக்குள் எடுத்தேக நினைத்து, அதிவேகமாக அவர் அருகில் ஓடிவந்து, அவரை அசைத்துப் பார்த்தான், ஆதிசேஷாவதாரமாகிய அவருடைய ஒரு கையையும் அவனால் அசைக்க முடியவில்லை. இப்பொழுது இராவணன் கருத்தை யறிந்த அனுமார், தமது முஷ்டியால் அவனை இடித்தார். இராவணன் அந்த முஷ்டி இடியைத் தாங்கச் சக்தியற்று, இரத்தத்தைக் கக்கிக்கொண்டு கீழேவிழுந்தான். உடனே மாருதி இலட்சுமணரைத் தூக்கிக்கொண்டு தமது சைன்னியங்களுக்குச் சென்று விட்டார். பிறகு இராவணன் எழுந்து கோபங்கொண்டு இரதமேறி மாருதியைப் பாணங்களால் அடித்தான். இதைப்பார்த்த இராமபிரான் சினமுற்று, ஓர் பாணப்பிரயோகஞ் செய்து, அவன் மார்பைத் துளைத்துப், பின் அவனுடைய அசுவம், இரதம், துவஜம், பதாகை, ஸாரதி, தனுசு, குடை இவைகளையும் பாணங்களால் சேதித்து ஓர் அர்த்தசந்த்ர பாணப்பிரயோகத்தால் சூரியப்பிரகாசம்போல் ஜொலிக்கும் அவனுடைய கிரீடத்தை வீழ்த்தினர். இப்பொழுது இராவணன் வியாகுலமடைந்து நிற்க, இராமர், அவனைப்பார்த்து "ஏ இராவணா! இப்பொழுது நீஇலங்கைக்குச் சென்று சிரமபரிகாரஞ் செய்துகொண்டு, நாளையதினம்வந்து என்னுடைய பலத்தைக்காணக்கடவாய்!'' என்று கூறியனுப்பினர். இதன் பின் தசானனன் வெட்கத்தினால் தலை குனிந்துகொண்டு இலங்கைக்குட் பிரவேசித்தான். இராமர் இலட்சுமணரையும் இன்னும் சில வானர வீரர்களையும் மூர்ச்சையினின்று தெளிவிக்கக் கருதி, மாருதியைப்பார்த்து, "ஏ மாருதி! துரோணமலையைக் கொண்டுவந்து இவர்களைப் பிழைப்பி" யென ஆக்ஞாபித்

தார். மாருதி நல்லதென்று கூறி உடனே வேகமாகப் புறப்பட்டுப் போனார். அதை அறிந்த இராவணன், காலநேமி என்ற தனது மித்திரனை அழைத்து அனுமந்தரைத் தடுக்கும்படி பிரார்த்தித்து அனுப்பினான். உடனே காலநேமியும் இமயகிரி பர்வதத்தினருகிற் சென்று அங்கு ஒரு தபோவனம் அமைத்துக்கொண்டு அதில் ஒரு முனிவரைப்போல் பலமாணுக்கர்கள் சூழ வீற்றிருந்தான். மாருதி அங்கே சென்று, அவ்வாச்சிரமத்தைக் கண்டுதீர்த்தபானம் செய்யக்கருதி அதனுட் பிரவேசித்தார், அப்பொழுது அந்தக் கபடமுனி, தீர்த்தம் நிறைந்த ஒரு குடத்தை அவருக்குக் காண்பித்தான். அதைப்பார்த்து அனுமான் இந்தத் தீர்த்தத்தால் எனக்குத் திருப்தி யேற்படாதெனக் கூற, அதற்கு அம்முனி அருகிலிருக்கும் ஒரு தடாகத்தை அவருக்குக்காட்டி, "அங்குச் சென்று நீர் உமது கண்களை மூடிக்கொண்டு உமது இஷ்டப்படி தீர்த்தம் அருந்திப் பிறகு என்னிடம் வந்து சுகமாக இங்கு வசியும்; எனது ஞானதிருஷ்டியால், நீர் உத்தேசித்துவந்த காரியத்தை யானறிந்தேன். இலட்சுமணர் சுகமாக எழுந்திருந்துவிட்டார். துரோண பர்வதத்தை நீர் கண்டுபிடிக்க என்னிடம் சிலமந்திரோபதேசம் பெற்றுக்கொள்ளும். அதைக் கந்தர்வர்கள் மறைத்திருக்கிறார்கள். வானரங்களைப் பிழைப்பிப்பதின் நிமித்தம் அம்மலையை இலங்கைக்கு அதிசீக்கிரமாக எடுத்தேக நீர் விரும்புகிறீர். என்னிடத்தில் மந்திரோபதேசம் பெற்றுக்கொண்டு எனக்குக் குருதட்சிணை கொடும்" என்று கூறினான். அதைக்கேட்டு மாருதி நல்லது அப்படியே செய்கிறேனென்று கூறித் தடாகத்துக்குச்சென்று, கண்களை மூடிக்கொண்டு தீர்த்தபானஞ்செய்தார். அப்போது அக்குளத்திலிருந்த ஒரு பெண்முதலை அவர்காலைப் பிடித்து இழுத்து விழுங்கிற்று. அப்படி விழுங்குகையில், அனுமான் தன் தேகத்தை அம்முதலை பிளவுபடும்படி பெருக்கச்செய்து கொண்டார். அது அனுமந்தரைக் கவ்வியிருந்தபடியே மரித்து விட்டது. பிறகு அம்முதலையிலிருந்து திவ்ய ரூபத்தோடு ஓர் உருவம் உண்டாய், ஆகாயத்திற்குச் சென்று, மாருதியைப்பார்த்து "முன் ஜன்மத்தில் நான் மாலினி என்ற பெயரையுடைய ஒரு அப்ஸர ஸ்திரீயா யிருந்தேன்.

அப்பொழுது ஒரு நாள் ஒரு முனிவர் என்னுடன் சுகிக்க விருப்பங்கொண்டு என் சம்மதங்கேட்க, அவ்வேளையில் ஸ்பரிசிக்கத் தகாதவளா யிருந்தமையால், நான் சம்மதிக்கவில்லை. அதற்கு அம்முனிவர் கோபங்கொண்டு என்னை "நீ முதலையாகக் கடவாய்" என்று சபித்து விட்டார். அதன்பின் நான் அம்முனிவரைப் பார்த்து வணங்கிச் சாபவிமோசனமளிக்க வேண்டுமெனக் கேட்க, அவர் உம்மால், என் சாபம் நிவர்த்தியாகுமெனக் கூறி அனுக்கிரகித்தார். அவ்விதமே நான் இப்பொழுது உம்மைக் கண்டு சாபவிமோசனமடைந்தேன். தங்களுக்கு ஓர் இரகசியம் கூறுகின்றேன் கேளுங்கள். நீர் இங்கிருந்து செல்லும் மார்க்கத்தில் இராவணனுடைய ஏவலைக்கொண்ட காலநேமி யென்ற ஒரு அசுரன் உமது காரியத்துக்கு விக்னமுண்டாக்க உத்தேசித்து முனிவரைப் போலிருக்கிறான். அவனைச்சீக்கிரத்தில் கொன்று விடும்" என்று கூறி அவருடைய அனுமதிபெற்றுத் தன்னிருப்பிடம் சென்றாள். மாருதி அக்கணமே அதிவேகமாகக் கபட முனிவன் பக்கம் வந்து திடமான முஷ்டி பந்தனம் செய்துகொண்டு, "முனிவரே! உமது விருப்பப்படி யான் இப்பொழுது குருதக்ஷிணை அளிக்கிறேன்; பெற்றுக்கொள்ளும்" என்று கூறி, அக்காலநேமியின் மார்பில், பலமாய் இடிக்க, காலநேமி அப்பொழுதே இரத்தத்தைக் கக்கிக் கொண்டு கீழேவிழுந்து உயிர்துறந்தான். பிறகு அனுமார், அங்கிருந்து பாற்கடல் சென்று, அங்கு துரோணமலையைக் காத்து வரும் கந்தர்வத் தலைவர்களை ஜயித்து, அம்மலையை எடுத்துக் கொண்டு ஆகாசமார்க்கமாகப் புறப்பட்டு அதிவேகமாக வந்தார். வழியில், அயோத்திபா பட்டணத்துக்கு நேரேவருகையில் மாருதியைப்பார்த்த பரதன் ஒருபாணம் எய்து அவர் தூக்கிச்சென்றமலையைக் கீழே தள்ளிவிட்டான். மாருதி பரதனைப் பார்த்ததும் இராமபிரான் எங்கே இங்கு வந்தாரென ஐயமுற்று மனங் கலங்கி, நீர் "இராவணனுக்குப் பயந்து ஓடிவந்து விட்டீரா" என்ன வென்று கேட்க, அவ்வார்த்தையைக்கேட்டதும் பரதன் மாருதியை ஓர் இராட்சஸனென்றே கருதி, மறுபடியும் வில்லில் பாணத்தைப் பூட்டினான். அதைக் கண்ட அனுமார் பூ! பூ! என்றுகத்தி, அவனைஇராகவனல்லவென்று

கண்டு தமது மனதில் ஒரு நிமிஷ நேரம் ஆலோசித்து, மறுபடி யும் பரதனைப்பார்த்து "யான் இராமதூதன்; என்பலத்தைப் பார்க் கிருயா?" என்றுகேட்டார். பரதன் "தண்டகாரண்ணிய வாசியாகிய எனது சகோதரர் ஸ்ரீ ராமருடைய சிநேகம் உனக்கு எப்படி கிடைத்தது? அதை ஸவிஸ்தாரமாகக் கூறு" என்றுகேட்டான். பிறகு அனுமார் பரதன் கேட்டபடியே தமக்கும் இராமபிரானுக்கும் சிநேகம் ஏற்பட்டதை ஐயமறத் தெரிவித்தார். பரதன் புன்பு ஒரு பாணத்தால் அம்மலையைத்தூக்கி ஆகாசத்திலெறிய, அதை அனு மார் பிடித்துக்கொண்டு, உடனே இலங்கைக்கேகி, அம்மலையின் ஒஷதிகளைக்கொண்டு, இலட்சுமணரையும், வானரர்களையும் எழுப்பி வழியில் பரதனுக்கும் தமக்கும் நடந்ததை இராமருக்குக் கூறி ஞர். அப்பால் மறுபடியும் அந்தத்துரோணமலையை எடுத்துக்கொ ண்டுபோய்ப் பாற்கடலில் வைத்துவிட்டு அதிவேகமாகத் திரும்பினர்; வழியில் பரதனைக்கண்டு இலட்சுமணர் மூர்ச்சை தெளிந்தெழுந்த நற்செய்தியைத் தெரிவித்து இலங்கைக்கு வந்து சேர்ந்தார்.

இங்கு இப்படியிருக்க, இராமபிரான் இராவணனுடன் அமர் புரிவதைக்கேட்ட பரதன், தான் அவருக்குச் சகாயஞ்செய்யக் கருதிப் பல தேச மன்னர்களை வரவழைத்தான். இச்சமையத்தில் இராவணன் தன் சபையில் வீற்றிருந்து இராட்சதர்களைப் பார் த்து "ஏதுதர்களே! பாதாளஉலகத்தில் எனது நண்பர்களும் மகா பலசாலிகளுமான ஐராவணன், மைராவணன் என்கிற இரண்டு இராட்சஸ சிரேஷ்டர்க ளிருக்கிறார்கள். நீங்கள் இங்கிருந்து வேகமாகச் சென்று அவர்களிடத்தில் நான் இராமனுடன் அமர் புரிந்து வருவதைத் தெரிவியுங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்கள் அப்படியே ஆகட்டும் என்று சொல்லி, உடனே வேகமா கப் பாதாள லோகஞ்சென்று சங்கதியை அவ்விருவருக்குந்தெரி வித்தார்கள். அவர்கள் இச்செய்தி கேட்டதும் மனங்கலங்கி உடனே புறப்பட்டு இலங்கைக்கு வந்து, இராவணனுடன் ஆலோசித்து அனு மாருடைய வாலால் அமைக்கப்பட்ட கோட்டைக் குள்ளிருக்கும் இராமலட்சுமணர்களை இன்றிரவு அபகரித்துக்கொண்டுபோய் விடு கிறதெனத் தீர்மானித்து, அங்கிருந்து ஆகாச மார்க்கமாகத்

கிளம்பி வானர சைன்னியங்களுக்குள்ளே குதித்தார்கள். அப்பொழுது இராமலட்சுமணர்கள் யுத்தம் செய்த சிரமத்தால் ஒரு பாறையிற் படுத்து நித்திரை செய்து கொண்டிருந்தனர். இப்படி நித்திரைசெய்யும் இராமலட்சுமணர்களை அவ்விரு ராட்சஸர்களும் அவர்கள் படுத்திருந்த பாறையோடு பெயர்த்து எடுத்துக்கொண்டு பாதாள லோகம் சென்று தங்கள் அரமனைக்குள்ளே ஒருபக்கம் மறைத்துவிட்டார்கள்.

பிறகு தமது வால் கோட்டைக்குள் இராமலட்சுமணர்கள் இல்லாதிருப்பதைக் கண்ட அனுமார், உடனே அவர்களைத்தேடிக் கண்டுபிடிக்கப் புறப்பட்டு, கால்நடையாகத் தெற்குநோக்கிச் சென்று நிகும்பலை யென்னும் ஸ்தலத்தை யடைந்தார்; அங்கு இரண்டு புறுக்கள் ஒன்றுக்கொன்று பேசிக்கொள்வதைக்கேட்டார். அவைகளில் சூல் கொண்டிருந்த பெண்புறுவானது ஆண்புறுவைப்பார்த்து, 'ஏ நாதா! இன்று அடியேன் மனம் நரமாம்சம் புசிக்க இச்சிக்கிறது'' என்று கூறிற்று. அதற்கு ஆண்புறுவானது 'நல்லது, இராம இலட்சுமணர்களை இரண்டு அசுரர்கள் பாதாள லோகத்திற்குக் கொண்டுபோய்க் காளிகாதேவிக்குப் பலிகொடுப்பதாக வைத்திருக்கிறார்கள். நாளைபதினம் காலமே அவர்களைப் பலிகொடுப்பார்கள். அதற்குப் பிறகு நான் அவர்களுடைய மாம்சங்களை உனக்குக் கொண்டுவந்து கொடுத்து, உன் இச்சையை நிறைவேற்றுகிறேன்'' என்றது. இப்படிப்புறுக்கள் பேசிக்கொண்டதை அனுமார் கேட்டுச் சந்தோஷமுற்று, உடனே வாயுவேகமாகப் பாதாள உலகஞ் சென்று, அவ்வசுரர்களின் பட்டணத்துக் கோட்டை வாயிலுக்குட் புகுந்தார். அங்கே அவ்வாசற் காப்போனாகிய மகரத்துவஜன் என்பவன் அனுமாரைக்கண்டதும் அவரைத் தன் இரண்டு கையாலும் பிடித்துக்கொண்டு, "நீ யார்? எங்கிருந்து வருகின்றாய்?'' என வினவினான். மாருதியான இராமதூதன். "இலங்கையில் எனது காவலில் நித்திரைசெய்துகொண்டிருந்த இராமலட்சுமணர்களை உன்னுடைய எஜமான்களாகிய இரண்டு அசுரர்களும் இன்று தூக்கிவந்து இவ்விடம் வைத்திருக்கிறார்கள். அவர்களைத் தேடிக்கண்டுபிடித்துக் கொண்டுபோக வந்தேன்,

நீ அறிவாயேயாகில் அவர்களிருப்பிடத்தை எனக்குக்காண்பி" என்றார். இதைக்கேட்டதும் மகரத்வஜன் "ஓய்! இலங்கையில் எனது தந்தை ஆஞ்சனேயர் இருக்கிறதாகக் கேள்விப்படுகிறேன். அவர் சுகமாயிருக்கின்றனரா?" என்றுகேட்டான். அவ்வார்த்தையைக் கேட்டதும் அனுமார் ஆ! ஆ! என்று ஆச்சரியமுற்று மகரத்துவஜனைப்பார்த்து, "அப்பா! அனுமாருக்குப் பத்தினியேது? பத்தினியிருந்தாலல்லவா புத்திரன் உண்டென்பது நிச்சயமாம்?" என்றார். மகரத்வஜன் "எனது தந்தை ஆஞ்சனேயர் இலங்கையை எரித்துவிட்டுத், தமது வாலை உஷ்ணசமனத்துக்காகச் சமுத்திரத்தில் நனைக்கும்பொழுது தமது கழுத்தில் அடைந்திருந்த புகைக்கரியை எடுத்து வெளியிலெறிய அது சமுத்திரத்தில் விழுந்தது. அதை ஒரு மீன் விழுங்கிற்று. பிறகு அது அம்மீனுக்கு ஒரு குழந்தையாகப் பிறந்தது. அக்குழந்தைதான் நான்" என்றுக்கூறினன். உடனேமாருதி "அப்பா! நான்தான் அந்த ஆஞ்சனேயன்" என்று தெரிவிக்க மகரத்வஜன் உடனே அவருக்கு வணக்கஞ்செய்து "என் பிதாவே! தாங்கள் கூறியது உண்மையே. இராம இலட்சுமணர்களை அவ்வசுரர்கள் காளிக்குப் பலிகொடுக்க நிச்சயித்து இலங்கைக்குச் சென்று அங்கிருந்து அவர்களைக் கொண்டுவந்திருக்கிறார்கள். நாளையதினம் காலையில் அவர்களைப் பலிகொடுப்பது நிச்சயம். ஆகையால் நீர் அந்தத் தேவாலயம் சென்று அங்கிருக்கும் இராமலட்சுமணர்களை யெடுத்துக்கொண்டு போகலாம்" என்றுக் கூறினன். உடனே அனுமார் அணுரூபமாகி அக்கோட்டைக்குட் பிரவேசித்து அங்கிருக்கும் தேவாலயத்துக்குச் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டார். அப்பொழுது ஐராவண மைராவணர்கள் காளிகாதேவியி னுடைய ஆராதனைக்குரிய சாமக்கிரியைகளுடன் கோவில் வாசலுக்கு வந்தார்கள். அதைக் கண்ட அனுமந்தர் காளியின் குரல்போலவே அவ்வசுரர்களை "அன்பர்களே! என்று அழைத்து இராம லட்சுமணர்கள் உயிருடனிருக் கின்றார்களா?" என வினவி, "இந்தச் சாளரத்தின் வழியே இன்று எனக்கு நீங்கள் பூஜை நடத்துங்கள்" என்று கூறினர். அவ்வசுரர்களிருவரும் அனுமார் கூறியவற்றைக் காளியின் ஆக்ஞை யாகக்கொண்டு

கனிவர்க்கங்களையும் மலர்களையும் சாளரத்தின் வழியாகப் போட்டு அர்ச்சித்தார்கள். அனுமார் அவர்கள் பூஜையை ஏற்றுக்கொண்டு மறுபடியும் காளிகாதேவி கூறுவது போலவே "அன்பர்காள்! எனக்குப் பலியாகக்கொடுக்க உத்தேசித்தவர்களை மலர்களால் அலங்கரித்து அவர்களுக்குக் கோதண்டம் அம்புறாத்தூணி இவை களிரண்டையும் கொடுத்து, எனது ஸந்நிதானக் கதவை மெது வாகக்கொஞ்சம் திறந்து எனக்குப் பலியாக அனுப்புங்கள். அப் பொழுது என்னை நீங்கள் பார்ப்பீர்களானால் உங்கள் கண்கள் அவிந்து விடும். இது நிச்சயம்" என்றார். இதைக் கேட்டதும் அவ்வசுரர்கள் காளிகாதேவி தங்கள் மீது கருணைபுரிந்திருக்கிறு ளென நினைத்து, மகிழ்ச்சியுற்று, அவ்விதமே சாளர மார்க்க மாகப் பக்குவான்ன உருண்டைகளையும் குடங்குடமாகப் பாயஸம் பஞ்சாமிருதங்களையும் பலவிதமான பலவர்க்கங்களையும் கோடிக் கணக்காகச் சமர்ப்பித்து நிவேதித்தார்கள். அனுமார் அவைகளை னைத்தையும் புசித்துவிட்டு, மறுபடியும் 'பக்தர்களே! நீங்கள் நிவே தித்த யாவும் எனக்கு ஒரு கவளத்துக்கே போதுமானதாயிருந் தது. இன்னும் என்பசி தீரவில்லை" என்றார். இதையும் தேவியின் வசனமென்றே எண்ணி, அசுரர்கள் மிக்க ஆச்சரியமடைந்து உடனே தூதர்களை அனுப்பி, தங்கள் பண்டசாலையில் சேமித்து வைத்திருப்பவைகளையும், தங்கள் பட்டணங்களில் ஒவ்வொரு வீடுகளிலிருக்கும் பதார்த்தங்கள் யாவையும் வரவழைத்து முன் போலவே நிவேதனம் செய்தார்கள். இச்சமாசாரத்தை அப்பட்ட ணத்துள்ளவர்கள் யாவரும் அறிந்து, கோலாகலமடைந்தார்கள். பிறகு அவ்வசுரர்கள் இராமலட்சுமணர்களைக் காட்டுப் பூக்களால் அலங்கரித்து, கோதண்டம் அம்புறாத்தூணிஇவைகளையும் அவர் களுக்குக்கொடுத்து, தேவியின் உத்தரவின்படியே மெதுவாக ஆலயத்தின் கதவைக்கொஞ்சம் திறந்து, அவர்களைத் தேவிக்கு அர்ப்பணம் செய்து விட்டு வெளியேவந்து விட்டார்கள்.

மாருதியானவர் இராம இலட்சுமணர்களைக் கண்டதும் ஆன ந்தங்கொண்டு வணங்கி ஆலிங்கனஞ் செய்து உடனே கோயிற் கதவுகளைத்திறந்து கொண்டு வெளியே வந்தார்.

பிறகு இராமலட்சுமணரும் வெளியே வந்து அங்கிருந்த அவ் வசுரர்களுடன் அமர்புரிய ஆரம்பித்து வில்லை நாணேற்றிப் பாணப்பி ரயோகஞ்செய்து அவர்களைக்கொன்றுவிட்டு அவர்களுக்குத்துணை யாக வந்த அவர்கள் மித்தார்களையும் சைந்நியங்களையும் கொன்று விட்டார்கள். மறுபடியும் அவ்விரு அசுரர்களும் உயிர்பிழைத்து எழு ந்து யுத்தத்துக்குவர, இராமர்மறுபடியும்தமதுவில்லில் பாணங்களைப் பூட்டி எய்து அவர்களைக் கீழே வீழ்த்தினர். இவ்விதம் பலதடவை அவர்களை வீழ்த்தியும் அவ்வசுரர்கள் மரணமடையாததைக்கண்ட அனுமார் ஆச்சரியமடைந்து அங்குமிங்கும் திரியும்போது, ஓரிடத் தில் ஐராவணனுடைய போகபத்தினியிருக்கக் கண்டு அவளைப்பார் த்து‘ ஏபெண்ணே ! நீயார் ? ஏன்கவலையுற்றிருக்கின்றனே! என்றகேட் டார். அம்மாது “ஐயா நானொரு நாககன்னிகை. என்னை ஐராவணன் பலாத்காரமாக எடுத்து வந்துவிட்டான். மைராவணன் என்னை அடிக்கடி கெட்ட எண்ணத்துடன்பார்த்து வருகிறான். இருவருக் கும் பத்தினியாக விருக்க என்மனம் ஒப்பவில்லை ; அவர்களில் ஒரு வன் மித்திரனாகயிருக்கிறான். ஒருவன் சத்துருவாகயிருக்கிறான். இதனால் தான் நான் வருத்த முற்றிருக்கின்றேன். அவ்விரு வரும் இறந்தால் எனக்குச் சம்மதமே '' எனக் கூறினள். உடனே அனுமார் இவளைக்கொண்டு அவ்வசுரர்களின் உயிர்நிலை களை அறியலாமென்று கருதி, அவளைப்பார்த்து “ ஏ மாதரசே ! உனக்கு அவ்வசுரர்கள் இறப்பதில் சம்மதமிருக்குமானல் அவர்க ளுடைய உயிர்நிலைகளைத் தெரிவி. நான் உன் இஷ்டத்தை இட்சண மே நிறைவேற்றுகிறேன் ” என்றார். அம்மாது, “ ஐயா ! அந்த இரா மாபிரான் என்னை மனைவியாகக் கொள்வாரானல் அவர்களின் உயிர் நிலைகளை உமக்கு இப்பொழுதே தெரிவிக்கின்றேன் ” என்றாள்.

அனுமார்:— “ அம்மா! உனது மஞ்சம் அந்த இராமபிரானைத் தாங்கவல்லதாயின் நீ கூறியபடியே உன்னை அவர் மனைவியாகக் கொள்ளும்படிசெய்கிறேன் '' என்றார்.

மாது:—நல்லது அப்படியே யாகட்டும். முன்னொருசமயத் தில் சில சிறுவர்கள் சில வண்டுகளைப் பிடித்து அவைகளை முட் களில் கோர்த்து விளையாடுவதை இவ்விரு அசுரரும் கண்டு அவை

களுக்கிரங்கி அவ்வுபத்திரவத்திலிருந்து அவைகளை விடுவித்தார் கள். அவ்வண்டுகள் அவர்களைப்பார்த்து "ஐயன்மீர்! நீங்கள் இவ் விதம் எங்களை ரக்ஷிக்காவிட்டால் நாங்கள் மரணமடைந்திருப் போம். அவ்வுபகாரத்துக்குப் பிரதியாக உங்களுக்கு மரணம்நேரி டாமல் உங்கள் ஜீவனை இன்று முதல் நாங்கள்காத்து வருகிறோம்" என்று சொல்லி "அன்று முதல் அவ்வண்டுகள் இவர்களுக்கு ஹானியுண்டாகும் போதெல்லாம் அமிர்த்தைக் கொண்டுவந்து இவர்களுடைய சரீரங்களின் இரத்தத்தில் கலந்து பிழைக்கும்படி செய்து வருகின்றன. அவைகள் யாவையும் பிடித்து நசுக்குவீரே யானால் உமது கருத்து நிறைவேறும்" எனக்கூறினாள்.

அநுமார் அக்கணமே மகிழ்ச்சியுடன் அவ்வசுரர்களின் அந் தப்புரம் சென்று அங்குக் கூட்டமாக விருந்த வண்டுகளைக் கண்டுபிடித்து ஒன்றையும் விடாமல் யாவையும் நசுக்கினர். கடைசியாகத் தம்மைச் சரணமடைந்த ஒரு வண்டைப்பார்த்து உன்னை நான் இப்பொழுது விட்டுவிடுகிறேன். நீ இப்போது இவ் வசுரர்களது போகபத்தினியின் மஞ்சத்தைக்குடைந்து அதிற் புகுந்து அதை ஒருயானை விழுங்கின விளாங்கனிக் கொப்பாகத் துளைத்துவிடு" எனக்கூறினர். வண்டு அப்படியே செய்கிறே னெனக் கூறிய உடனே மஞ்சத்தைக்குடைந்து அதிற் புகுந்து அவ்விதமே செய்துவிட்டது.

இராமர் இதன்பின் அவ்வுரு அசுரர்களையும் கொன்றுவிட்டு அவர்களது சிங்காசனங்களில் மகரத்வஜனை வீற்றிருக்கச் செய்து அந்தப்பாதாள இலங்கைக்கு அவனை அரசனாக்கினர். பிறகு இரா மர் அவ்விடம் விட்டுப் புறப்பட யத்தனிக்கையில் மாருதி தாம் நாககன்னிகைக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றும் படி இராமரை வேண்டினர். இராமபிரான் அதற்கிணங்கித் திவ் யாலங்கார மமையப்பெற்ற நாககன்னிகையின் வீடு சென்று சுந் தரவதனாலங்கார பூஷிதையான அக்கன்னிகையைப் பார்த்து தமது செந்தாமரை மலர்போன்ற திருக்கரத்தால் அம்மாதின் கரத்தை ஸ்பரிசித்து அவளுக்கு மகிழ்ச்சியுண்டாக்கி மஞ்சத்தி லேறினர். ஏறினவுடன் அந்த மஞ்சமானது முறிந்துவிழுந்துவிட் டது. உடனே அம்மாது ஸ்ரீராமபிரானைப்பார்த்து "ஐயா! எனது

கோரிக்கை நிறைவேறாமற் போய்விட்டதே'' என்று வருந்திப்பி ரார்த்தித்தாள். இராமர் அம்மாதின்மீது இரக்கங்கொண்டு ''நீ இச் சரீரத்தையொழித்துப் பூலோகத்தில் ஒரு வேதியனுக்குப்பெண் ணாகப்பிறந்து அப்பொழுது என்னைக்குறித்து நெடுநாள் தவமிரு ந்து பிறகு அச்சென்மத்தை ஒழித்துத் துவாபரயுகத்தில் ஒரு பெண்ணாக அவதரித்து எனக்கு மனைவியாகக்கடவாய்'' என்றனு க்ரகித்தார். உடனே அவள் அக்நிவளர்த்து அதிற்பிரவேசித் துப் பிறகு தென் சமுத்திரக்கரையில் ஒரு வேதியர்க்குப்பெண்ணா கப்பிறந்து கன்னியாகுமரி யென்னும் பேரையடைந்தாள்.

அதற்குப் பிறகு இராமபிரான் மகிழ்ச்சியடைந்து மகரத்வஜ னுடைய வேண்டுகோளுக்கிணங்கி அவனுக்கு இலட்சுமணரை மந்திரியாக்கினர். பிறகு யாவரும் இலங்கைக்குச் செல்ல வேண்டு மென்பதை இராமர் தெரிவிக்க, உடனே அனுமார் தமது தோளில் இராமரைத் தூக்கிக்கொண்டார். மகரத்வஜன் பிரம்மாண்டத் தைத் தாங்கும் ஆதிசேஷாவதாரமான இலட்சுமணரைத் தன் தோளில் தூக்கிக்கொண்டான். பிறகு நிமிஷநேரத்தில் யாவரும் இலங்கைக்கு வந்து சேர்ந்தார்கள்.

இங்கே மிக்க விசனமுற்றிருந்த சுக்ரீவன், ஜாம்பவான் முத லிய வானரசிரேஷ்டர்கள் இராமலட்சுமணர்களைக் கண்டதும் பன் முறை வணங்கித் தழுவி மகிழ்ந்தார்கள். இராமபிரானும் நடந்த சங்கதிகள் யாவையும் சுக்ரீவன் முதலானவர்களுக்குத் தெரி வித்து மகிழ்ந்தார்.

இப்படித் தனது மித்திரர்களான ஐராவண மைராவணர்கள் இறந்ததை அறிந்த இராவணன் மனங்கலங்கிச் சபையிலிருக்கும் அரக்கர்களைப் பார்த்து ''முன்னொரு சமயம் பிரம்மதேவன் என க்கு ஒரு மனிதனால் மரணமுண்டாகுமெனக் கூறியிருப்பதால், சாட் சாத் நாராயணமே தசரதனுக்கு இராமனென்கிற மனிதனாகப் பிற ந்து என்னைக் கொல்ல இப்பொழுது இங்குவந்திருக்கிறார். அதில் ஐயமில்லை. அன்றியும் முன் ஒரு சமயம் யாகதீட்சையிலிருந்த அனாரண்யனென்னும் ஓர் அரசனை அமருக்கழைத்துக் கொல்லும் போது சூரிய வம்ஸத்திற் பிறந்தவனாகிய அவ்வரசன் என்னைப்

பார்த்து, எனது வம்சத்தில் அவதரிக்கப்போகும் பரமாத்மாவாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தி உன்னைப்புத்திர பௌத்திர பந்துக்கள்சகிதமாக அழிக்கப்போகிறார்'' என்று சாபங்கொடுத்துச் சொர்க்கத்துக்கேகினன். ஆகையால் இப்பொழுது என்னுடன் அமர் புரிய வந்திருக்கும் மனிதன் அவனேயாவன். இதுவே அச்சமையம்; யுத்தத்தில் என்னை அவர் கொல்லப்போகிறார். ஆகையால் அதிசீக்கிரத்தில் கும்பகர்ணனிடம் சென்று அவனை நித்திரையிலிருந்து எழுப்பி அழைத்து வாருங்கள்'' என்று கட்டளையிட, உன் தூதர்கள் கும்பகர்ணனிருக்கும் குகையின் முகத்துவாரத்திற்கருகே செல்ல, அவனுடைய சுவாசக் காற்றானது அவன் சுவாசிக்கும்பொழுது அவர்களனைவரையும் உள்ளே இழுத்துப் பின் அவன் சுவாசத்தை விடும்போது வெளியே தள்ளிற்று. இப்படிப் பன்முறை உள்ளே இழுத்து வெளியே தள்ளவே, அத்தூதர்கள் யாவரும் அம்முகத்துவாரத்தை விட்டு வேறிடம் சென்று அங்கு ஒன்று சேர்ந்து ஒருவரையொருவர் கைகளால் பலமாகக் கட்டிக் கொண்டு குகைக்குட் பிரவேசித்து, கும்பகர்ணன்மேல் கற்களை வீசி யெறிந்தும், மரங்களைப் போட்டும், தங்கள் காலால் துகைத்தும் எழுப்பினார்கள்; அவன் அப்பொழுதும் எழாதது கண்டு, குதிரைகளையும் ஒட்டகைகளையும் அவன்பேரில் ஓட்டிப் பார்த்தார்கள். அப்படியும் அவன் எழுந்திருக்கவில்லை. பிறகு இராவணன் உத்தரவின்படி அவன்பேரில் கட்டைகளைக்குவித்து நெருப்பு வைத்தார்கள். கும்பகர்ணன் உடனே விழித்துக் கொண்டு எதிர்தோன்றிய பன்றிகளையும் எருமைகளையும் கோடிக் கணக்காக ஆகாரமாகக் கொண்டு, அநேக தடாகங்களிலுள்ள நீரைக்குடித்துத் தாகசமனஞ் செய்துகொண்டு இராவணனிடம் வந்து பின் வருமாறு போதிக்கலானான்.

"அண்ணா! நான் முன்னொரு சமையம் வனத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தேன். அங்கு முனிபுங்கவராகிய நாரதர் வந்தார். அவரை நான் வணங்கி 'ஐயா! முனிவரே! நீர் எங்கிருந்து வருகிறீர்?; எங்கேபோகிறீர்?'' என்று விசாரித்தேன். அவர் 'அப்பா! நான் தேவலோகத்திலிருந்து வருகிறேன். இப்பொழுது அயோ

த்திக்குச் செல்கிறேன்' என்றார். நான் அவரைப்பார்த்து 'நீர் இப்பொழுது அயோத்திக்குச் செல்வது யாது காரணம் பற்றி' யென வினவினேன். அவர் 'அப்பா! இராவணாதி இராட்சஸர்களை யழிக்க மகாவிஷ்ணுவானவர் தசரதனுடைய தனயனாய் அயோத்தியில் அவதரித்திருக்கிறார். இதை அறிந்த தேவர்கள், அக்காரியத்தைச் சீக்கிரம் நிறைவேற்றும்படி தசரத தனயனுக்குத் தெரிவிக்க, என்னை வேண்டினர். அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி நான் இப்பொழுது விரைவாகச் செல்கிறேன்' என்று சொல்லிவிட்டுச் சென்றனர் அவர் தான் இப்பொழுது இங்கு தசரத தனயனாகிய இராமரை அனுப்பியிருக்கிறாரென்பதையும் கேள்விப்பட்டேன். நான் இப்பொழுது அதை உனக்குச் சொல்லிவிட்டேன். ஆகையால் பிரபுவே! சீதையை இராமரிடம் கொடுத்து அவரை மித்திரராக்கிக்கொண்டால், உமக்கு க்ஷேமமுண்டாகும்'' என்று இதங்கூறினான். அதைக்கேட்ட இராவணன், "தம்பீ! உனக்கு உன் நித்திரை மயக்கம் இன்னும் தெளியவில்லை யெனத்தெரிகிறது. உன் கண்கள் சுழல்வதே அதைத் தெரிவிக்கிறது. ஆகையால் நீ சுகமாக நித்திரை செய்துகொண்டிரு. இப்பொழுது என் எதிரில் நில்லாதே! போ!'' என்று சுடிந்து பேசினான். தன் சகோதரனுடைய கொடூர வசனங்களைக் கேட்ட கும்பகர்ணன் இராவணனை வணங்கி, வேகமாகப் புறப்பட்டு உயர்ந்த மதிலை ஒரேதாண்டாகத் தாண்டி யுத்த அரங்கம் சென்று இராமரை யுத்தத்திற்கு அழைத்தான். அதைக் கண்ட வானர வீரர்கள் யாவரும் பயந்து மனங்கலங்கி அதிவேகமாக ஓடிப்போய் ஸ்ரீ ராமபிரான் பக்கம் அடைந்தார்கள்.

அப்போது, விபீஷணன் தன் தமையனாகிய கும்பகர்ணன் வந்திருப்பதைப் பார்த்து, அவனருகிற் சென்று வணங்கி, "அண்ணா நான் என்னால் இயன்றவரையில் சீதையை இராமபிரானிடம் ஒப்புவிக்கும்படி நமது தமையனுக்குப் போதித்தேன். அதற்குச்சிறிதும் அவர் செவிகொடுக்காமல், என்னைச்சினந்து ஊரைவிட்டுத்துரத்தி விட்டார். உடனே நான் மனதில் ஆலோசித்துப்பார்த்து அண்ணனே நம்மைத் தள்ளிவிட்டான் இனியாது செய்வதெனமயங்கி,

இராமராக அவதரித்திருக்கும்மகாவிஷ்ணுவிடம் சரணம்புகுவது நம க்குநன்மை பயக்குமென்று தீர்மானித்து, அவரைச் சரணம் புகுந் தேன் '' என்றுகூறினன். இதைக்கேட்டதும் கும்பகர்ணன் மகிழ்ச்சி யுற்று, '' தம்பி! நீ நல்லகாரியஞ் செய்தாய் ; ஆனல் பின்னல் நாங்கள் நற்கதியடைவதற்காக, நீ யாவது பிழைத்திருக்கவேண்டியது அவசி யமாதலால், இச்சமையத்தில் நீ என் முன் ஒரு க்ஷணமும் நில் லாதே இது யுத்த சமயமாதலால் இப்பொழுது தன்னைச்சேர்ந் தவன், அன்னியன் என்கிற முறைமை கொள்வது கூடாது, ஆகையால் சீக்கிரம் இவ்விடம்விட்டு அப்புறம் செல்'' என்றான். உடனே விபீஷணன் அவனை வணங்கி, விடைபெற்று இராமபிரா னிடம்சென்றான். கும்பகர்ணன் பிறகு யுத்தத்துக்கு ஆரம்பித்து அங்கிருக்கும் வானர சைன்னியங்களை வளைத்து வளைத்துக் கை களாலும் கால்களாலும் குத்தியும், உதைத்தும், தேய்த்தும் அதிகவேகமகச் சுழன்று வருகையில், அங்கே சுக்ரீவனைக்கண்டு திரிசூலத்தால் அவனைத்தாக்கிக் கீழே வீழ்த்தித் தூக்கிக்கொ ண்டு இலங்கைக்குள் வந்தான். வரும் வழியில் சுக்ரீவன் களை தெளிந்து, கும்பகர்ணன் '' மூக்கையும் செவிகளையும் நகங்களால் பிறாண்டி அவன் கையிலிருந்து திமிறிக்கொண்டு, கிளம்பி அதி வேகமாக இராமபிரான் பக்கத்துக்கு வந்து சேர்ந்தான். இப்பொ ழுது பட்டணத்தார் யாவரும் கும்பகர்ணனைப் பார்த்துப் பரிக சிக்க அவன் உடனே திரும்பியுத்தகளம்வந்து யுத்தம்புரியநின்றான். இதையறிந்த இரகுநந்தனர் அவன்மேல், கூர்மையான பாணங் களைப்பிரயோகித்து அவன் சரீரத்தைத் துளைத்தார். கும்பகர்ணனும் மலைகளையும் மரங்களையும் பிடுங்கி, இராமபிரான் மேல் வீசி யெறிந்தான். இராமர் சில பாணங்களைப் பிரயோகித்து அவைகள் யாவையும் பொடியாக்கி, உடனே வாயுவாஸ்த்ரப் பிரயோகஞ் செய்து ஆயுதங்கள் தரித்திருக்கும் அவன் கரங்களை அறுத்துத் தள்ளினர். அவன் கைகளிழந்த பின்னும் மேகநாதம்போல் சப்தித்துக்கொண்டு இராமரை எதிர்க்க இராமர் கூர்மையான இரண்டு அர்த்த சந்திர பாணங்களை யெய்து அவனுடைய இர

ண்டு கால்களையும் சேதித்தார். அக்கால்கள் பேரிரைச்சலோடு இலங்கையின் கோட்டை வாசலிற்போய் விழுந்தன. அப்படியிருந்தும் கும்பகர்ணன் தன் வாயை வடவாக்கினிபோல் திறந்து பெருங்கூச்சலிட்டுக் கொண்டு ராகு சந்திரனைப்பிடிக்கத் துரத்துவதுபோல் இராமபிரானைத் துரத்தினன். அப்பொழுது இராமபிரான் அநேக பாணங்களைப் பிரயோகஞ்செய்து அவன் வாய் முழுதும் பாணமயமாகச் செய்தார். அவன் தன் வாய் பாணங்களால் நிறைக்கப்பட்டும் அதை லட்சியஞ் செய்யாமல் பயங்கரமாகக் கூச்சலிட்டான். பின் இராமபிரான் சூரியப் பிரகாசம பொருந்திய சிரேஷ்டமான ஒரு சரத்தை யெடுத்து ஐந்த்ராஸ்த்ர மந்திர உச்சாரணம் செய்து கும்பகர்ணன் கண்டத்திலெய்து பிர்ம்மாண்டமான அவன் சிரசைத் துண்டித்தார். அதைப்பார்த்த தேவர்கள் வாழ்த்தி வாத்திய முழக்கம் செய்து புஷ்பமாரி பொழிந்து இராமரைப் பலவாறு துதித்தார்கள்.

கும்பகர்ணன் இறந்ததை யறிந்த இராவணன் மனங்கலங்கி மிகவும் துக்கப்பட்டான். அப்பொழுது அருகே யிருந்த இந்திரஜித்து, இராவணனைப்பார்த்து "நீர் துக்கப்படவேண்டாம், நானிருக்கிறேன். இதோ இப்பொழுது என் பலத்தைக் காட்டுகிறேன் பாரும்" என்றுகூறிவிட்டுத் தனக்கு ஜயந்தரும்படியான சஸ்திரம் இரதம் முதலியவைகளைக் கொடுக்கும் ஆபிசாரஹோமம் புரியக்கருதி, அருகேயிருந்த நிகும்பிலைக்குச் சென்று அங்கேயோகினீ வடமென்கிற ஆலமரத்தடியிலிருந்த குகைக்குட் பிரவேசித்து, ஒரு ஹோமகுண்டம் ஏற்படுத்தி, அதன்மேல் ஒரு கிருஷ்ண சர்ப்பத்தைத் தொங்கவிட்டு, அக்குகையைச்சுற்றி முதலில், முட்டைகளையும், இரண்டாவது இராட்சதர்களையும், மூன்றாவது சர்ப்பங்களையும் நான்காவது புலிகளையும் ஐந்தாவது நெருப்பையும் ஆறாவது வாயுவையும் ஏழாவது தண்ணீரையும் எதிரிகள் உள்ளே பிரவேசியாதவாறு அரணாகவைத்து இரத்தவர்ணமான மலர்மாலை, இரத்தவர்ணமான வஸ்திரம், இரத்தவர்ணமுள்ள சந்தனம் முதலியஇவைகளைத்தான் தரித்துக்கொண்டு ஹோமகுண்டத்திற்குநேரே யமர்ந்து,

இரத்தவர்ணமான புஷ்பம், இரத்தவர்ணமான அக்ஷதை, சிவப்புக் குந்துமணி, சிவப்புக்கடுகு, சிவப்புச்சந்தனக்கட்டை சிவப்புக்கரும்பு கள் இவைகளினாலும், மா, பலா, அத்தி இவைகளின் சமித்துகளா லும், கருங்காலிச் சேகுகளாலும், மாம்சம், உளுந்து, கருங்காலிப் பழம் விளாங்கனி, எருக்கங்காய், வேப்பங்காய், மாதுளம்பழம், கரு ஊமத்தங்காய், கோரோசனை, நாயுருவி, இலந்தை இவைக ளாலும், மனிதர்களுடைய கவந்தங்கள், ஊன் தண்ணீர், நரம் புகள் இவைகளாலும், சர்ப்பங்களின் துண்டுகள், தவளைகள், இன்னும் சில பிராணிகளின் தோல், நரம்பு; பல், மயிர் இவைக ளாலும் அதததனுக்குரிய மந்திரங்களைச்சொல்லிக் கண்ணை மூடிக் கொண்டு இரகசியமாக ஹோமம் புரிந்து வந்தான்.

இப்படிப் பிரமாதமான ஆர்ப்பாட்டத்துடன் ஹோமஞ்செய் யும் இந்திரஜித்தினுடைய ஹோமகுண்டத்தினின்று கண்டவர் மனங்கலங்கக் கிளம்பிய புகையைப் பார்த்த விபீஷணன் உடனே இராமபிரானிடத்தில் இந்திரஜித்து ஹோமம் புரிகிறானென்ப தைத் தெரிவித்து "ஏ இரகுநாத! இப்பொழுது இந்திரஜித்து செய்யும் இந்த ஹோமம் சமாப்தியாகுமேயானால், அந்த இந்திரஜித் தை தேவாசுரர்களில் எவரும் ஜயிக்கவொண்ணாது. ஆகையால் அதிசீக்கிரத்தில் இலட்சுமணரைக்கொண்டு அவன் ஹோமகுண்ட த்தை அதமாக்கி அவனையுங்கொன்றுவிடுகிறேன். அவன்சாமான் னியர்களால் கொல்லத்தக்கவனல்லன் அவனைக் கொல்லுகிறவர்கள். பன்னிரண்டு வருஷகாலம் ஆகாரத்தையும் நித்திரையையும் ஒழித்த வர்களாயிருக்கவேண்டும். இப்படிப்பட்டவராலேதான் அந்தத் துஷ்டனுக்கு மரணம் நேரிடுமென்பது பிர்மதேவன் கொடுத்தவ ரம். நமது இலட்சுமணர் அயோத்தியிலிருந்து வனவாசத்துக்குப் புறப்பட்ட நாள்முதல் தங்கள் பணிவிடையின் நிமித்தமாக இது வரையில் ஊணும் உறக்கமுமின்றி. இருந்துவருகிறார். இவைகளை யான் நன்றாய் அறிவேன். ஆகையால் நமது இலட்சுமணரே அவ னைக் கொல்லத்தக்கவர்" என்று கூறி அவரை யுத்தத்திற்கு அனுப் புப்படி வேண்டினான். உடனே இராமர் இலட்சுமணருக்கு உத் தரவு கொடுக்க, இலட்சுமணரும் விபீஷணனும் அனுமார் முதலிய

பூதபதிகள் சூழப் புறப்பட்டு நிகும்பலைக்குச்சென்று பார்க்க, அங்கே முதலாவதாக அமைத்திருந்த முள்கோட்டையை இலட்சுமணர் ஆக்நேயாஸ்த்ர ப்ரயோகஞ்செய்து எரித்துவிட்டு இரண்டாவதான இராட்சஸக்கூட்டங்களை பாணங்களை எய்து கொன்றுவிட்டு, மூன்றாவதாய சர்ப்பக் கோட்டையை கருடாஸ்திரத்தினால் அழித்து, நான்கவாதாய புலிக்கோட்டையை பர்வதாஸ்திரத்தால் தொலைத்துவிட்டு ஐந்தாவதாய அக்நிக்கோட்டையை மேகாஸ்திரத்தால் அவித்து விட்டு, ஆறாவதாய வாயுக்கோட்டையைத் தாம் உட்கொண்டு ஏழாவதாய ஜலக்கோட்டையை வாயுவாஸ்திரத்தால் வற்றவடித்து, அதற்கப்பாற்சென்று பார்த்தார்கள். அங்கு அவர்களுக்கு இந்திரஜித்தைப்பற்றிய தொன்றும் தென்படவில்லை. இதைக்கண்ட அனுமார் கோபங்கொண்டு அங்கேயிருந்த யோகினிவடத்தைப் பிடுங்கிப் பார்க்க நினைத்துப் பிடுங்கப்போனார். அப்பொழுது அம்மரத்திலிருந்த யோகினியானவள் அனுமாரைப் பார்த்து "ஐயா! மரத்தைப் பிடுங்கவேண்டாம். இதோ இங்கு கல்லைக்கொண்டு மூடியிருக்கும் குகைக்குள் இந்திரஜித்திருக்கிறான். அங்கு சென்று பாருங்கள்" என்று தெரிவித்தாள். உடனே அனுமார் சிலையைத் தமது பாதங்களால் சின்னபின்னப் படுத்திக் குகையினுட்சென்று இந்திரஜித்தை மிரட்டினார். இதைக் கண்ட மேகநாதன் திடுக்கிட்டு ஹோமத்தை விட்டெழுந்திருந்து கோபாவேசத்துடன் வெளியே வந்து இரதமேறி இலட்சுமணரை எதிர்த்து, அவருடையமனம் வருந்த அவரை இழித்துப்பேசி அஸ்த்ரங்களாலும் மலை முதலியவைகளாலும் யுத்தம் புரிந்தான். இலட்சுமணரும் உடனே பல பாணங்களை எய்து அவனது இரதம் அசுவம் தேர்ப்பாகன் தனுசு அவனது திடமான கவசம் இவைகளை க்ஷணநேரத்தில் சின்னபின்னமாக்கினார். பின்பு மேகநாதன் வேறொரு தனுசைக் கையிலேந்தித் தரையில் நின்றுகொண்டு ஆயிரக்கணக்காகப் பாணங்களைப் பிரயோகஞ்செய்து இலட்சுமணருடைய கவசத்தைச் சேதித்தான். உடனே இலட்சுமணர் மிகக் கோபங்கொண்டு சிரேஷ்டமான ஒரு பாணத்தைப் பிரயோகஞ் செய்து அம்புகளைத் தாங்கிக்கொண்டிருந்த இந்திரஜித்தினுடைய வலதுகையை அறுத்தெறிந்து அது அவன்

கிருகத்திற் போய் விழும்படிசெய்தார். பிறகு மேகநாதன் மனங் கலங்கி இடதுகையில் ஒரு சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு இலட்சுமணரைத் தாக்கினன். அவர் உடனே சிரேஷ்டமான ஒரு பாணத்தைப் பிரயோகித்து, அவனுடைய இடது கரத்தை யும் அறுத்து அதனைச் சூலாயுதத்துடன் இராவணன் முன்னி லையில் விழும்படி செய்தார். அக்கை அப்படியே இராவணன் முன்னிலையில் விழுந்து யாவருக்கும் ஆச்சரியத்தை உண்டாக்கி யது. இதன்பின் இந்திரஜித்து வாயைத் திறந்துகொண்டு இல ட்சுமணரை எதிர்த்தான். இலட்சுமணர் இராமநாம அடையாள முள்ள ஒரு திவ்ய சரத்தை எடுத்து இராமரை மனதில் தியானித் துக்கொண்டு இந்திரஜித்தின் பேரில் பிரயோகித்தார். அந்தப் பாணமானது அழகிய குண்டலங்களோடும் கிரீடத்தோடுங் கூடிய இந்திரஜித்தினுடைய சிரசை அறுத்துக் கீழே வீழ்த்திற்று. இதைக்கண்ட தேவர்கள் மிகவும்களிப்படைந்து இலட்சுமணரின் மேல் மலர்மாரி பொழிந்து அவரை வாழ்த்தினர்கள். இலட்சுமணர் சிறிது நேரம் அங்கிருந்து சிரமபரிகாரம் செய்துகொண்டு பிறகு ஜயசங்கத்தை ஊதினர். அந்தச்சங்கநாதத்தை சீதை கேட்டு அது யாருடைய சங்கநாதம் என்று தெரிந்துவரத் தன் னருகிலிருந்த திரிசடையை அனுப்பி அவளால் இலட்சுமணர் இந்திரஜித்தைச் சங்கரித்துச் சங்கம் முழக்கினர் என்பதைக் கேட்டு மனமுவந்தாள். பிறகு மாருதி மேகநாதனுடைய சிரசை எடுத்துக் கொண்டு போய் ஸ்ரீ ராமபிரானுக்குக் காட்டவேண்டு மென்று இலட்சுமணரைத் துரிதப்படுத்தினர். உடனே அவர் அங்கதன் மேலேறிக்கொண்டு விபீஷணனுடன் புறப்பட்டு வாத் தியகோஷங்கள் முழங்க ஸ்ரீ ராமபிரான் முன்பு சென்று அவரை வணங்கி மேகநாதனது சிரசை அவருக்குக் காண்பித்தார். இராம பிரான் அதைப்பார்த்து மகிழ்ந்து தம்பி இலட்சுமணரைத் தழு விக்கொண்டார்.

இங்கிவ்வாறிருக்க, இராவணன், சபையில் தன் முன்னிலையில் இந்திரஜித்தினுடைய கரம் வந்து விழக்கண்டதும் பகரமுடியாத துக்கமடைந்து தரையில் விழுந்து மூர்ச்சை யடைந்தான். பிறகு

சிறிது நேரத்திற்கெல்லாம் இராவணன் மூர்ச்சை தெளிந்து எழுந்து ஒரு கத்தியை உருவிக்கொண்டு சீதையைக் கொல்வதற்காக மிகக் கோபத்துடன் ஓடினன். இதைப் பார்த்த மகா புத்திசாலியாகிய சுபார்சுவன் என்ற மந்திரி இராவணனுடைய கத்தியேந்திய கையைப்பிடித்துத் தடுத்து "ஐயா! எல்லாந்தெரிந்த மகா பிரபுவாகிய தாங்கள் ஒரு ஸ்திரீயை இவ்விதம் கோபங்கொண்டு கொல்லச் செல்வது நீதியாகுமா? ஆகாது; ஆகையால்நாம் யாவரும் யுத்தத்துக்குச்சென்று இராமலட்சுமணர்களைக் கொன்றுவிடுவோம். பிறகு சீதையை நீர் அடையலாம். சீக்கிரம் புறப்படும்" என்று சொல்ல இராவணன் கோபந்தணிந்து திரும்பினன். சுலோசனையென்ற இந்திரஜித்தின் மனைவி அங்கு பாணத்துடன் விழுந்துகிடந்த இந்திரஜித்தின் கரத்தை நோக்கி அவனுடையபராக்ரமங்களை நினைத்துக் கொண்டு மிகவும் வருந்தி யழுதாள்.

அந்தக் கரமானது மிகவும் பிரலாபித்து அழுது வருத்தப்படும் சுலோசனைக்கிரங்கித். தன்னுடன் வந்த பாணத்தை இரத்தத்தில் தோய்த்து தரையில் பின்வருமாறு எழுதிச் சமாதானந் தெரிவித்தது. "ஏ மாதரசே! நீ சிறிதும் வருத்தப்படவேண்டாம். சாக்ஷாத் ஆதிசேஷாவதாரமாகிய இலட்சுமணருடைய சரப்பிரயோகத்தால் அறுபட்டு இப்பொழுது யான் முத்திக்குப் பாத்திரவானனேன். நீ இராமபிரானை யடைந்து உனது பர்த்தாவின் சிரசையாசி; அதைஅவர் உடனே உனக்குக்கொடுத்து, இத்தனுடன் நீயும் அக்னிப்பிரவேசஞ்செய்து என்னை அடை, யென அனுக்கிரகிப்பார்" என்று எழுதிற்று. இதைச் சுலோசனை படித்துப் பார்த்து மகிழ்ச்சியுற்று, இராவணனிடமும் மந்தோதரியிடமும் அனுமதிபெற்று அலங்காரஞ் செய்துகொண்டு பல்லக்கிலேறி இராமரிடம் சென்முள். அவள் இப்படி வருவதைப் பார்த்து வானர சைன்னியங்கள் அதோ சீதையை இராவணன் நமக்குப் பயந்து அனுப்பி விட்டான் பாருங்களென்று சொல்லிக்கொண்டு ஓடிப்போய்ப் பல்லக்கைச் சூழ்ந்துகொண்டு பார்க்க அதில் சீதையில்லா திருக்கக் கண்டு பல்லக்குப் போகிகளை இவள் யாரென்று விசாரித்து அவர்கள் மூலமாகச் சுலோசனை யென்றறிந்து,

திரும்பி இராமபிரானிடம் சென்றன. சுலோசனை பிறகு இராமரிடம் சென்று பல்லக்கை விட்டு இறங்கிச் சிரங்குனிந்து பன்முறை அவரைவணங்கி, தன்பர்த்தாவின் சிரசை யாசித்தாள். இராமர் அவளைப்பார்த்து " ஏ பெண்ணே! இப்பொழுது உனக்கிரங்கி உன் பர்த்தாவைப் பிழைப்பிக்கிறேன். நீஅக்கினிப்பிரவேசம்செய்யவேண்டாம் இதுஉனக்குப்பிரியமா?" என்றுகேட்டார். அவள் "பிரபுவேஅப்படி என் பர்த்தா பிழைப்பாரேயானல் மோக்ஷ ஹேதுவான இலட்சுமணருடைய கையால் மரண முண்டாகாதாகையால், அவரைப் பிழைப்பிக்கவேண்டாம்" என்று கூறி மகிழ்ந்து, இராகவரைவணங்கி வானரங்களின் மூலமாகத் தன் கணவனுடைய சிரசைக்கண்டு, அதற்கு வணங்கி அதை யெடுத்துக்கொண்டு இலங்கா பட்டணத்திலிருந்த இரண்டு கரங்களையும் வரவழைத்து, அவைகளோடு நிகும்பலைக்குச் சென்று அங்கிருந்த தன்கணவனுடைய சரீரத்தில் அவைகளைச் சேர்த்து அக்நி வளர்த்து, அதில் அந்தத் தேகத்தைப்போட்டு அதனுடன் தானும் பிரவேசித்தாள். உடனே இருவரும் திவ்யதேகம் பெற்று வைகுண்டபதவியை யடைந்தார்கள்.

இதன் பின் இராவணன் தன் மித்திரர்களுடனும் சைன்னியங்களுடனும் புறப்பட்டு இராமர் முன் வந்து அவரை எதிர்த்தான். உடனே இராமர் பாணங்களைப் பிரயோகித்து, கூட வந்த அரக்கர்கள் யாவரையும் ஒழித்துவிட்டு, இராவணன் பேரில் ஒரு பாணத்தைப் பிரயோகிக்க, அவனை அப்பாணம் தூக்கிக்கொண்டு போய் இலங்கையின் மத்தியில் போட்டுவிட்டது. இப்படி விழுந்த இராவணன் எழுந்து தன்னுடைய கிருகத்திற்குச்சென்று, சற்றுச் சிரம பரிகாரஞ் செய்து கொண்டபின், தூதர்களை அனுப்பித் தன் மாமனார் மயனை வரவழைத்து, அவனைக்கொண்டு மாயையால் ஸ்ரீ ராமபிரான் சிரசொன்றைச் செய்வித்து, அதைக் கையிலெடுத்துக் கொண்டு சீதைக்குக் காட்டுவதற்காக அசோகவனம் சென்றான். இச்சூழ்ச்சியை அறிந்த பிரமதேவர், சீதாபிராட்டியிடம் சென்று, "ஏ ஜானகி! உன்னை மோசம்பண்ணுவதற்கு இராவணன் தன் மாயையால் இராமபிரானது சிரசொன்று செய்து அதை இப்பொ

மூது இங்கே கொண்டுவந்து உனக்குக் காட்டுவான். அதைப்பார்த்து நீ சிறிதும் சஞ்சலப்படவேண்டாம்'' என்று தெரிவித்துவிட்டு மறைந்தார். இவர் மறைந்த அந்த க்ஷணமே இராவணன் சீதையின் அருகேவந்து, இராமர் சிரசைக் காண்பித்து, "ஏ சீதே! இதோபார் உன் கணவனுடைய சிரசு; அவன் இறந்தான்; இனி என்னைச்சேர்'' என்றான். இதைக்கேட்டதும் சீதாபிராட்டி. தலைகுனிந்துகொண்டு "ஏ துஷ்டா! அதி சீக்கிரத்தில் உன்னுடைய தலைகள் தான் இராம பாணத்தா லடிபட்டு யுத்தகளத்தில் விழப்போகின்றன. அதை நான் பார்க்கப்போகிறேன்'' என்றாள். அம்புகளுக்கொப்பான இப்படிப்பட்ட வார்த்தைகளைக்கேட்டதும் இராவணன் வெட்கமடைந்து, தலை குனிந்து தன் கிருகஞ் சென்றான்.

இப்படியிருக்க வானரவீரர்கள் இராமபிரானிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு கோடிக்கணக்கான தீப்பந்தங்களை யெடுத்துக்கொண்டு க்ஷணநேரத்தில் இலங்கைக்குட் சென்று, கண்டவிடங்களிலெல்லாம் தீயிட்டு, இலங்கையை எரித்தார்கள். இப்பொழுது இலங்கையானது முன் அனுமார் எரியூட்டிய காலத்தில் எப்படி அலங்கோல மடைந்ததோ அப்படியே அலங்கோல மடைந்தது. இவ்விதம் தன் அரண்மனைகளும் பட்டணமும் எரிவதைப்பார்த்த இராவணன் ஒரு மேகாஸ்திரப்ரயோகஞ் செய்தான். உடனே ஆகாயத்திலிருந்து மழை பொழிந்தது பின் தீ அவிந்தமையால், வானர வீரர்கள் வெளியே ஓடிப்போய் விட்டார்கள்.

அப்பால் இராவணன் தனக்கு சுக்ராசாரியார் போதித்தபடி ஆபிசார ஹோமம் செய்ய நிச்சயித்து, இலங்கா பட்டணத்தின் கோட்டை வாசல்களை மூடிவிட்டு, உள்ளே ஒருவரும் பிரவேசியாதபடி காவல்கள் அமைத்து, நிகும்பலையில் நடந்த ஹோமத்திற்கு இந்திரஜித்து கொண்டுபோனபடியே ஹோமதிரவியங்களை எடுத்துக்கொண்டு, இரத்தத்தில் ஸ்நானஞ் செய்துவிட்டு முண்டமாலை தரித்து, இரகசியமான ஒரு குகைக்குட் சென்றான்; அங்கிருந்த ஹோமகுண்டத்தின் எதிரே பிரேதாசனமிட்டு அதிலுட்கார்ந்து கூட வந்தவர்களை நோக்கி. "நீங்கள் வெளியே காவலாக விருங்கள், குகைத்துவாரத்தை ஒரு பெரிய கல்லைக்கொண்டு மூடிவிடுங்கள்''

என்று ஆணையிட்டான்; அவர்கள் அவ்வாறு செய்தபின் தான் ஏகாங்கியாய் அங்கிருந்து ஹோமகுண்டத்தில் அக்னிவளர்த்து அதற்கு நாற்புறங்களிலும் சதுரமாக சஸ்திரங்களைப் பரப்பி, சத்ரு சங்கார சங்கற்பஞ் செய்து பத்து வயதிற்குட்பட்ட குழந்தைகளின் தலை, மாம்சம் இரத்தம் இவைகளால் ஹோமஞ்செய்தான்.

இப்படி இராவணன் செய்த ஹோமகுண்டத்திலிருந்து ஏராளமாகப் புகை கிளம்பி வெளியே பரவிற்று. இதைப்பார்த்த விபீஷணன், சற்று யோசித்துப்பார்த்து, அதனுண்மை இன்னதெனவறிந்து, இராமரிடஞ் சென்று, அவரைப்பார்த்து, "மகாபிரபுவே! இப்பொழுது இலங்கையில் ஓர் இரகசியமான இடத்தில் ஓர் ஆபிசார ஹோமம் நடக்கிறது. இந்த ஹோமம் நிறைவேறுமாயின், இராவணனை வெல்லுவ தரிது" என்று தெரிவித்தான். உடனே ஸ்ரீராமபிரான் வானர சிரேஷ்டர்களை வரவழைத்து, "விபீஷணனுடைய சொற்படி நடவுங்கள்" என்று ஆக்ஞாபித்தார். பின், வானரங்கள் விபீஷணனது சொற்படி இலங்கையின் கோட்டை வாசலுக்கருகேசென்று அக்கோட்டை வாசல் அடைக்கப்பட்டிருப்பதைப்பார்த்து மதிலைத் தாண்டிக்குதித்து, இராவணனுடைய அரண்மனை சென்று அங்கே காவலாயிருந்த அரக்கர்கள் யாவரையும் அதமாக்கிவிட்டுக் குகையைத் தேடினார்கள். குகை அகப்படாமல் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தார்கள். இதைப்பார்த்த விபீஷணன் மனைவி சரமை என்பவள் குகையிருக்கும் இடத்தைக்கையால் சூசிப்பித்தாள். இதைக்கண்ட அங்கதன் உடனே அவ்விடம் சென்று, குகைத்துவாரத்தில் மூடியிருக்கும் சிலையைத் தன் கால்களால் உதைத்துப் பொடியாக்கி விட்டு, உள்ளே புகுந்து ஹோமகுண்டத்தி னருகிலிருந்து தியானித்து வரும் இராவணனைக் கைமுஷ்டியினால் குத்தினான். மற்ற வானரங்களும் வெளியிலிருக்கும் மரங்களைப் பிடுங்கிக்கொண்டு குகையினுட் பிரவேசித்து இராவணனை அடித்தன. இவைகள் ஒன்றுக்கும் இராவணன் அசையாமல் தியானத்திலிருந்தான். அதைக்கண்டு, வியப்புற்றவானரங்கள் உடனே இராவணன் மனைவி மந்தோதரியைத் தலைமயிரைப் பிடித்து இழுத்துக்கொண்டுவந்து இராவணன் முன்னால் நிறுத்தினார்கள். வானரங்கள் பிடித்திழுத்து வந்த வேகத்தினால் மந்தோதரியினுடைய ஆடை, கஞ்சுகம்முதலியவைகள் நழுவிப்போய் விட்டன. பின்அவள்

நிர்வாணமாக நின்று அழுதாள். அதைக்கேட்டவுடன் இராவணன் ஹோமத்தியானத்திலிருந்து திடுக்கிட்டெழுந்தான். இராவணன் எழுந்தவுடன் வானரங்கள் யாவும் தாங்கள் வந்த காரியம் நிறைவேறியதென்று நினைத்து, ஸ்ரீராமரிடம் போய்ச்சேர்ந்தன.

பிறகு மந்தோதரி மிகவும் விசனத்துடன் இராவணனைப் பார்த்து "ஏ நாதா! சீதையை இராமரிடம் விட்டுவிடுங்கள். இலங்கைக்கு விபீஷணனை அரசனாக்கிவிடுங்கள். நாமிருவரும் வனத்துக்குச் சென்று சுகமாகத் தவம்புரிவோம். தயை செய்து நான் சொல்வதைக் கேட்கவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். இராவணன் "ஏ பிரிய நாயகியே! என் கருத்தைக்கேள். இப்பொழுது வந்திருக்கும் இராமர் சாக்ஷாத் மகா விஷ்ணுவேயாவர். சீதை இலட்சுமிதேவியேயாவள். இவைகளை நான் நன்றாய் அறிவேன். நான் சீதையை அபகரித்து வந்திருப்பது இராமர் கையால் மரணமடைய வேண்டுமென்றே. இதன் மூலமாய்த் தேகத்தையொழித்து பரமபதத்தையடையப் போகிறேன்; நீ எனக்குச் செய்யவேண்டிய கர்மங்களை விதிப்படி நடத்திப் பிறகு நீயும் அக்னிப்பிரவேசம் செய்து என்னுடன் பரமபதத்தையடை'' என்று கூறிவிட்டு அங்கிருந்து வெளிப்புறப்பட்டு இரதமேறி யுத்தத்திற்குப் புறப்பட்டான். வழியில் ஒரு மொட்டையனைச் சந்தித்தான். உடனே அவன் தலையிலிருக்கும் விசித்திரமான கிரீடங்களில் ஒன்று தலையிலிருந்து கீழே விழக்கண்டான்; இவைகளைக் கண்டதும் அச்சத்துடன் யுத்தகளஞ்சென்று பாணங்களை வருஷித்து வானர சைன்னியங்களை மிகத் தொந்தரவு செய்தான். அப்பொழுது தன் இரதத்தில் வைத்திருந்த மயனால் செய்யப்பட்ட மாயா சீதையை வானரங்கள் யாவும் பார்க்க இரதத்திலிருந்தபடியே கத்தியை எடுத்து வெட்டிக்கொன்றான். இதைக்கண்ட வானரங்கள் யாவும் பயந்து ஆ! ஆ! வென்று கூச்சலிட்டு மிக்க வருத்தமடைந்து இராமரிடம் தெரிவிக்க ஓடின. இச்சமயம் பிர்மதேவர் ஸ்ரீராமபிரான் முன்வந்து "இராவணன் இரதத்திலிருந்து கொன்றது மாயா சீதை. ஆகையால் நீங்கள் யாவரும் வருத்தப்படவேண்டாம்" என்று கூறி மறைந்தார். ஸ்ரீராமபிரான் முதலியயாவரும் அதைக் கேட்டு விசனத்தை விட்டுச் சந்தோஷமடைந்து இராவணனுடன் யுத்தத்துக்குப் புறப்பட்டார்கள்.

இப்பொழுது இந்திரனுடைய உத்தரவின்படி அவனுடைய இரதசாரதியாகிய மாதலி என்பவன் அநேக சஸ்த்ரங்கள், அஸ்த்ரங்கள், அசனித்வஜம், பரந்துயர்ந்த குடை இவைகளோடு கூடிய இரதத்துடன் இராமபிரான் முன் வந்து வணங்கி "சுவாமி! இச்சமையத்தில் எங்கள் அரசன் இந்திரன் இந்த இரதத்தைத் தங்களுக்குக் கொடுக்கும்படி ஆக்ஞாபித்தார். தயைசெய்து இரதத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும்" என்று கூறித்தான் கொண்டுவந்த இரதத்தை அளித்தான். இராமபிரான் அந்த இரதத்தை மகிழ்ச்சியுடன் பெற்று அதிலேறிக்கொண்டு, இராவணனுடன் பல விதமாக யுத்தம் புரிந்தார். இப்பொழுது இராவணன் இராமபிரான் மீது ஆக்நேயாஸ்த்ரத்தையும் தெய்வாஸ்திரத்தையும் பிரயோகித்தான். இராமரும் அவ்வஸ்திரங்களையே பிரயோகித்து, அவைகள் தம்மீது படாதபடி தடுத்தார். பிறகு இராவணன் ஒரு சர்ப்பாஸ்திரப் பிரயோகஞ் செய்தான். ஏராளமான சர்ப்பங்கள் தம்மை எதிர்த்து வருவதைப்பார்த்த இராமர், கருடாஸ்திரப் பிரயோகஞ்செய்து அவைகளை யொழித்தார். இப்படித்தான் பிரயோகித்த அஸ்திரங்கள் யாவும் பயனற்றுப்போனதைப் பார்த்த தசானனன், மேகாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அதை இராமர் ஓர் வாயுவாஸ்திரப் பிரயோகஞ்செய்து தொலைத்து உடனே ஓர் ஆக்நேயாஸ்திரப் பிரயோகஞ் செய்தார். அந்த அஸ்திரத்தை இராவணன் ஓர் மேகாஸ்திரம் விடுத்து அவித்தான். பதினாயிரம் யானைகளும், இருபதினாயிரம் குதிரைகளும், நூற்றைம்பது இரதங்களும், நூறுகோடி காலாட்படைகளும் இராமபிரான் யுத்தம் செய்யும்போது மாண்டு போனால், அப்பிணக் குவியல்களுக் கிடையே ஒரு கவந்தம் எழுந்து கூத்தாடுவது வழக்கம். இப்படி ஒருகோடி கவந்தம் கூத்தாடினால்; இராமபிரான் கோதண்டத்திலிருக்கும் மணிகளில், ஒரு மணி ஒரு தரம் சத்தமிடுவது வழக்கம். இப்பொழுது இந்த யுத்தத்தில் இராமபிரான் கோதண்டத்திலிருக்கும் இருபது மணிகளும் அரை ஜாமநேரம் கலகலவென்று சத்தமிட்டன. அச்சமையத்தில் தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் முதலிய யாவரும் தங்கள் தங்கள் விமானங்களிலேறி மனமகிழ்ச்சியோடு யுத்தவேடிக்கை பார்க்க ஆகாசத்தில் வந்து நின்றார்கள். அப்பொழுது இராவணன். பல பாணங்களைப் பிரயோகித்து. ஸ்ரீ ராமபிரானது இரதத்திலிருக்கும் அசனித்வஜத்தை அறுத்துத் தள்ளினான். இராமபிரான் தமது இரதத்தின் கொடியறுந்துபோனதைக் கண்டவுடன் அருகிலிருக்கும் மாருதியை யழைத்து, "நீ என்

இரதத்தின் பேரில் ஒரு க்ஷணநேரம் த்வஜமாக இரு" என்று ஆக்ஞாபித்தார். உடனே மாருதி, நல்லது அப்படிசெய்கிறேன்" என்று, ஒரு பனை மரத்தைப் பிடுங்கிக்கொண்டு வந்து இரதத்தில் நாட்டி அதன் பேரில் சந்தோஷத்துடன் ஏறிநின்றார். இதைக்கண்ட இராவணன் ஒன்பது பாணங்களைப் பிரயோகித்து, இரதத்தில் நாட்டியிருந்த பனை மரத்தை அநுமாருடனும், சாரதியாகிய மாதலியையும், இரதத்தில் பூட்டியிருந்த குதிரைகளையும், இராமபிரான் கையிலிருக்கும் இந்திர தநுசையும், குடையையும் அறுத்துக் கீழே தள்ளிவிட்டான். மாதலியும் மாருதியும் மூர்ச்சித்துப்போயினர். பிறகு க்ஷணநேரத்திற் கெல்லாம் அநுமார் மூர்ச்சை தெளிந்து எழுந்துவிட்டார். உடனே ஸ்ரீராமபிரான் அநுமார்தோளில் ஏறிக்கொண்டு இராவணனோடு பயங்கரமான யுத்தம் புரிந்தார். இராவணன் பரிகாயுதத்தை எடுத்து அநுமார் மார்பில் விடுத்தான். உடனே அநுமார் மூர்ச்சையடைந்து கீழேவிழுந்துவிட்டார். ஸ்ரீராமபிரான் அந்தட்சணமே தமக்குச் சொந்தமான இரதத்தை நினைத்தார். உடனே அந்த இரதமானது நான்கு குதிரைகள் பூட்டப்பெற்றுத் தாருகன் என்ற சாரதியுடன் ஆகாசத்திலிருந்துவந்து இராமர் முன் நின்றது. அதில் பல சஸ்திரங்களும், கதை, பத்மம், அழகிய கழுத்தையுடைய சைப்பியன், ஒரு மேகம், தங்கத்தடி, இரண்டு சாமரங்கள், சார்ங்கம் என்னும் பேர்கொண்ட தநுசு இவைகள் நிறைந்திருந்தன. இந்த இரதத்தைக் கண்டதும் இராமர் அதை வலம்வந்து வணங்கி சந்தோஷத்துடன் அதன் மேலேறி நின்று தமக்குரித்தான சார்ங்கம் என்னும் தநுசைக் கையிலெடுத்து, அதில் சிரேஷ்டமான பாணங்களைத் தொடுத்துப் பிரயோகித்து இராவணனுடைய இரதத்தைப் பொடியாக்கி, அவனைப் பயமுறுத்தினர். உடனே இராவணன் மற்றொரு இரதத்திலேறிக்கொண்டு இராமபிரானை எதிர்த்தான். உடனே இராமர் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்து, இராவணனுடைய சிரங்களை அறுத்துத் தள்ளினர். அத்தலைகள் ஆகாசத்திற் கிளம்பி, ஓகோ! நமக்கும் தசரதநந்தனனது கையால் மரணங்கிடைத்ததே என நினைத்து மகிழ்ந்து அவருடைய பாதபத்மங்களில் வணங்க விரும்பி யுத்தகளத்தை நோக்கிச் சிரித்துக்கொண்டு வந்தன. கோரப்பற்களைத் திறந்து கொண்டு தம்மை நோக்கிவரும் அத்தலைகளை இராமபிரான் பார்த்து, இவைகள் நம்மை இம்சிக்க வருகிறதென்று எண்ணிப் பயந்து, அவைகள் சின்னபின்னமாகும்படி பாணப்பிரயோகஞ் செய்தார். அப்படிச் சின்னபின்னமாக

அறுபட்டனவென்பது கற்பபேதமென்று சிலர் கூறுகிறார்கள். ஸ்ரீ ராமபிரான் இவ்விதம் இராவணனுடைய தலைகளைச் சேதித்தும் அவன் மரணமடையாமல் முன் போலவே நிற்பதைப்பார்த்து, சந்தேகங்கொள்ள, அதைக்கண்ட விபீஷணன் இராவணனது நாபியில் குண்டலாகாரமாக அமிர்தம் நிலை பெற்றிருக்கிறதென இராமருக்குத் தெரிவித்தான். இதைக்கேட்டதும் இராமபிரான் ஒரு ஆக்நேயாஸ்த்ரப் பிரயோகஞ் செய்து, அந்த அமிர்தத்தை வற்றவடித்து மீண்டும் சில கணைகளைப் பிரயோகித்து, அவனுடைய சிரங்களையும் புஜங்களையும் அறுத்துத் தள்ளினர். பிறகு இராவணன் தன் பிரதான சிரசுடனும் இரண்டு கைகளுடனும் யுத்தரங்கத்தில் நின்றான். அந்தட்சணமே இராமருக்கும் இராவணனுக்கும் கண்டவர்கள் மனம் அஞ்சக் கொரமான யுத்தம் நடந்தது. இந்தச்சமயத்தில் இரதசாரதியாகவிருந்த தாருகன் இராமருக்கு இராவணனது மர்மஸ்தானத்தைக் குறிப்பிட்டுக் காட்டினன். உடனே இரகு சிரேஷ்டர் தசகந்தரன் மர்ம ஸ்தானத்தைக் குறிப்பிட்டுப் பிர்மாஸ்திரத்தால் அடித்தார். அந்தப் பிர்மாஸ்திரம் இராவணனது இருதயத்தைப் பிளந்து அவனையுங் கொன்று விட்டு ஸ்ரீ ராமபிரான் அம்புறாத்தூணியிற் புகுந்து தான் கிருதார்த்தனனதாக நினைத்து மகிழ்ந்தது. உடனே இராவணனது தேகத்திலிருந்து ஆதித்தன் போற் பிரகாசிக்கும் ஒரு ஜோதி கிளம்பி, விண்ணோர்கள் காண இரகு சிரேஷ்டரிடம் ஐக்கியமாயிற்று. இதைப்பார்த்த தேவர்கள் பரமானந்தமடைந்து இராவணாந்தகனாகிய இராமபிரான் மீது மலர் மாரி பொழிந்து, வாத்திய கோஷங்கள் செய்தார்கள்; அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் புரிந்தார்கள். உடனே மாந்தோதரியும் மரணமடைந்து தனது பர்த்தாவாகிய இராவணனுடன் வைகுண்டமடைந்தாள். பிறகு இராமபிரான் விபீஷணனைக்கொண்டு இராவணனுக்கு அபரக்ரியை நடத்தி முடித்தார்; அப்பால் விபீஷணனை இலங்கைக்குள் அழைத்தேக இலட்சுமணருக்கு உத்தரவுகொடுத்து, அவர் மூலமாக அவனுக்கு இலங்கா இராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்து, தாம் அவனிடம் நியாஸமாக வைத்திருந்த அனுமன் இலங்கையை மீட்டு அதை அனுமந்தருக்குச் சொந்தமாக்கினர். பிறகு விபீஷணன் முதலியவர்களுடன் மாருதியை அசோகவனத்துக்கனுப்பிச் சீதைக்குச் சகல விருத்தாந்தங்களையும் தெரிவிக்கச்செய்தார்.

இராவணவதமாகிய

(11-வது சருக்கம் முற்றிற்று.

## 12-வது சருக்கம்.

### பரமசிவன் கூறுகிறார்.

ஏ பார்வதி! அசோகவனத்தில் சுக்ரீவன் முதலிய வானர சிரேஷ்டர்கள் அதிசீக்கிரமாக சீதாபிராட்டிக்கு மங்களஸ்நானம் செய்வித்து, ஆடையாபரணங்களால் அலங்கரித்து, பல்லக்கிலேற்றி வைத்து அநேக காவலாளர்கள் சூழப்புறப்பட்டு பற்பல வாத்திய கோஷங்கள் முழங்க, தேவதாஸிகள் நர்த்தனஞ்செய்ய, ஸ்ரீராம பிரான் முன்பு அழைத்து வந்தார்கள். உடனே சீதை பல்லக்கிலிருந்து கீழே இறங்கி, இராமபிரானை வணங்கி, வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றாள். ஸ்ரீ ராமபிரான் சீதை கற்புநிலை தவறாதவளென்பதைத் தாமறிந்திருந்தபோதிலும், உலகத்தவர்க்கு நம்பிக்கை யுண்டாக்குவதற்காக, சீதையைப்பார்த்து, "ஏ வைதேகி, சத்துருவினுடைய கிருகத்தில் வசித்தவளே! இனி நான் உன்னைப் பிர்மதேவர் பிரார்த்தித்தபோதிலும் ஒப்புக்கொள்ளேன். உன் னிஷ்டப்படி நீ செல்" என்று கூறினர். இதைக்கேட்டதும் சீதை வருத்தமுற்று இலட்சுமணரைக்கொண்டு ஒருசிதை அடுக்குவித்து அதில் தீயைமூட்டி, அதன்முன்னின்று, "அக்நிபகவானே! இராமபிரானைத்தவிர வேறு புருஷனை நான் என் மனதிலும் கருதியதில்லை. இது என்பால் உண்மையாயின், நீர் சீதளமாயிருந்து என்னை ஒப்புக்கொள்ளவேண்டும்" என்று சபதங்கூறி விட்டு, அக்னியில் பிரவேசித்தாள். அப்பொழுது அதை ஆகாயத்திலிருந்து பார்த்த தேவர்களும் தசரதரும் அவ்விடம் வந்து, இராமரைப்பார்த்து, "இராமா! சீதை கற்பிற் சிறந்த மகா உத்தமி! நீ இதிற் சிறிதும் சந்தேகங்கொள்ளாதே!' என்று கூறினர். இதன்மேல் இராமர் சீதையை ஏற்றுக்கொண்டார். உடனே அக்நிபகவான், முன் பஞ்சவடியில் தம்மிடத்தில் ஒப்புவித்திருந்த இராஜஸ அம்சமான சீதையை திவ்யாலங்காரத்துடன் இராமபிரானிடம் கொடுத்தார். இராமபிரான் மனமகிழ்ச்சியுடன் சீதையை ஏற்றுக்கொண்டு தமது மடியில் வைத்துக்கொண்டார். இராவண சங்காரநிமித்தமாக பஞ்சவடி தீரத்தில் சாத்விக, இராஜஸ, தாமஸமாகப் பிரிந்த மூன்று அம்சங்களும் இப்பொழுது ஒன்று சேர்ந்தன. பிறகு தேவர்

கள் ஸ்ரீராமபிரானைத் துதித்தார்கள். அப்பொழுது அவர் தேவேந்திரனைப்பார்த்து, இந்தயுத்தத்தில் இறந்த வானரர்கள் யாவரும் இப்பொழுதே உயிர் பிழைத்தெழுந்திருக்க வேண்டுமென்றார். உடனே இந்திரன் அமிர்த மழை பொழியச்செய்து, யாவரையும் பிழைக்கச்செய்தான். பிறகு ஸ்ரீராமபிரான் உயிர் பிழைத்தெழுந்த வானரவீரர்களையும் மற்றவர்களையும் பார்த்தார். அந்த வானர வீரர்களில் ஒருவன் இல்லாமலிருக்கக்கண்டு, மாருதியை யழைத்து "ஏ மாருதி! வானரவீரர்களில் ஒருவனைக் காணோமே! அவனெங்கே?" என்று வினவினார். மாருதி "சுவாமி! அவனைக் கும்பகர்ணன் விழுங்கிவிட்டான். இந்த யுத்தகளத்தில் அவ்வானரத்தின் நகம், மயிர், இரத்தம், எலும்பு இவைகளில் ஏதாவதொன்று இருக்குமாயின், பொழிந்த அமிர்த மழையால் அவன் ஜீவித்திருக்க வேண்டும். இது நிச்சயம். ஆனால் அமிர்தமழை பொழிவதற்கு முன் இறந்த அரக்கர்களும் பிழைத்து விடுவார்களென்று கருதி அவர்கள் யாவரையும் இழுத்துச் சமுத்திரத்தில் எறிந்து விட்டோம். அதனால்தான் இப்பொழுது அவனை இங்குக்காணவில்லை" என்றார். இதைக்கேட்டதும் ஸ்ரீராமபிரான், அங்கு அப்பொழுது வந்திருந்த தர்மராஜனது முகத்தைப்பார்த்தார். தர்மராஜன் பயந்து, அவ்வானரத்தை அப்பொழுதே அவர் முன்பு உயிர்பெற்று நிற்கச்செய்தான். இதைப்பார்த்து இராகவர் மகிழ்ச்சியுற்றார். பின் இந்திரன் இரதசாரதியாகிய மாதலியை யழைத்து, "இனி நீ உம்முடைய இரதத்துடன் சொர்க்கலோகம் போய்ச்சேரக்கடவாய்" யென ஆக்ஞாபித்தார். மாதலி அவரை நமஸ்கரித்து விட்டுத் தன் இரதத்துடன் தேவேந்திரலோகம் சென்றான். அப்பொழுது விபீஷணன் ஸ்ரீராமபிரானைப்பார்த்து பிரபுவே தாங்களும் இன்று மங்களஸ்நானம் செய்யவேண்டுமென்று பலவாறு பிரார்த்திக்க, இராமர் பரதனுக்குத் தாம் கூறிவந்த உறுதி வாக்கியத்தை நினைத்து அதற்குச் சம்மதியாமல் உடனே புஷ்பகவிமானத்தை வரவழைத்து வானரசேனைகளுடன் அதில் ஏறினர். பிறகு இவர்களுடன் கூட தாருகன் கருடன் மகரத்வஜன் இவர்களும் புஷ்பகவிமானத்திலேறினர்கள். கடைசியாக விபீஷணன் ஸ்ரீராமபிரான் உத்தரவு பெற்று

அவனும் விமானத்திலேறினன். அங்கு வந்திருந்த தேவர்களும் தசரதரும் இராமரிடம் விடைபெற்றுக்கொண்டு விமானமேறித்தத்தம் பதிக் கேகினர்.

இப்பொழுது விமானத்திலிருந்த விபீஷணன் இராகவரைப் பார்த்து, தங்களை நான் ஒரு விஷயம்கேட்க விரும்பியுள்ளேன். அதன் உண்மையை அடியேனுக்குத் தெரிவிக்கவேண்டும்'' எனக் கூறி "சுவாமி, பாதாளலோகத்திலிருந்து வந்த ஐராவணமைராவணர்கள் உங்களிருவரையும் எடுத்தேகுங்காலத்தில் தாங்கள் மௌனமாயிருந்ததின் காரணம் யாது? அங்குச் சென்று மகாபல சாலிகளாளாகிய அவர்களை க்ஷணநேரத்தில் கொன்றது எவ்விதம்?'' என்று கெட்டான். தசரதநந்தனர் இதைக்கேட்டதும் நகைத்து'ஏ விபீஷண! ஐராவண மைராவணர்களுடைய உயிர்நிலைகளாகிய வண்டுகளுக்கு அனுமாருடைய கையால் மரண முண்டாமென்பது பிரமதேவருடைய வரம். ஆதலால் அதை யனுசரித்து அனுமாரின் வருகையை நோக்கி நான் தாமதித்தேன். இரண்டாவது பாதாளலோகவாசிகளும் மகா பலசாலிகளுமான ஐராவணமைராவணர்களிடமிருந்து இராமபிரானை மீட்டு வந்தான் அனுமந்தன் என்கிற பௌருஷம் உலகத்திலெங்கும் பரவவேண்டுமென்பதும் ஒருகாரணமாம் இக்காரணங்கொண்டே அவ்வரக்கர்கள் எங்களைபயகரிக்குங்காலத்தில் அவர்களைக் கொல்லவில்லை. முன் ஒரு காக்கை உருவங்கொண்டு வந்தவனை ஒரு இஷீகாஸ்திரப் பிரயோகத்தில் கண்ணையிழக்கும்படி செய்யவில்லையா? விசுவாமித்திர யாகத்தில் என்னுடன் அமர்புரிய வந்த மாரீசனை ஒரு பாணத்தால் நூறுகாதவழிக் கப்பாலுள்ள சமுத்திரத்திற் கொண்டு போய்த் தள்ளவில்லையா? அப்படிப்பட்ட என்னுடைய சௌரியம் இப்பொழுதுகுறைந்து விட்டதா? ஒரு ஹூங்காரசப்தமாத்திரத்தில் அவர்களையான் கொல்ல வல்லவனன்றோ? பாதாள லோகத்தில் அவர்களோடு யான் யுத்தம்புரியுங் காலத்தில் அஸ்திரசஸ்திரங்களையும் எதிர்பார்க்கவில்லை ஆகையால் மாருதியின் சாமர்த்தியம் உலகில் பரவவேண்டுமென்பதற்கே நான் இவ்விதம் செய்தேனென்பதை அறி'' என்று கூறினர். இப்படிச் சொன்னதும் மாருதி விபீஷண

னைப் பார்த்து நகைத்து "ஏ விபீஷண! மறந்துவிட்டாய்போலும்! சேதுபந்தனஞ்செய்த காலத்தில் யான் கர்வமடைந்து இலிங்கத்தைப் பிடுங்க யத்தனித்து வாலறுபட்டதை யறியாயோ? எல்லாம் ஜகதீசனாகிய ஸ்ரீராமபிரானுடைய திருவருளேயன்றி வேறல்ல வென்பதை உணர். ஆகையால் அவ்வசுரர்களைக் கொல்வது இராமபிரானுக்கு எம்மாத்திரம்? தமது பக்தனுக்குக் கீர்த்தியுண்டாக்க வேண்டுமென்பதே இராமபிரானுடைய கருத்து" எனக்கூறினர். விபீஷணன் இதைக்கேட்டதும் இராமபிரானிடத்தில் மகோத்தமமான பக்தியை யடைந்து நமஸ்கரித்துப் பூஜித்தான்.

பிறகு சீதாபிராட்டி தனது பிரிய நாயகனைப்பார்த்து "பிராணநாதா! அசோகவனத்தில் என்னிடத்தில் பரிபூர்ணமான அன்பு வைத்து எனக்குச் சகாயமாயிருந்த திரிசடைக்குத் தாங்கள் அனுக்ரகஞ்செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். இதைக்கேட்டதும் இராமர் உள்ளம் பூரித்து சீதையின் வார்த்தையை மதித்து உடனே திரிசடைக்கு வஸ்திரம் திவ்யாபரணம் முதலியவைகளை யளித்து "ஏ திரிசடே! சர்வ மங்களங்களையும் தந்தருளும் என் வாய் மொழியைக்கேள். கார்த்திகை, மாசி, சித்திரை, வைகாசி இந்த நான்கு மாதங்களிலும் பிராத ஸ்நானஞ் செய்யும் வேதியர்களின் முதல் மூன்று தினங்களின் ஸ்நானபலனை நீ பெற்று சர்வ பாக்கியங்களையும் பெறுவாய். மனிதர்களில் எவர்கள் மேற்குறித்த நான்கு மாதங்களிலும் பௌர்ணமைக்குப் பிறகு மூன்றுதினங்களில் ஸ்நானஞ் செய்யத் தவறுகிறார்களோ அவர்களுடைய ஒரு மாத புண்ணியத்தை என் சொற்படி நீயே கிரகித்துக்கொள். பின்னும் இன்னொரு வரங் கூறுகிறேன் கேள். கிருக சுத்தி செய்யாமல் நடத்தும் புண்ணிய காரியத்தின் பலமும் கிருகசுத்தி செய்யாமல் செய்யும் சிராத்தபலமும் பிதிர்க்களின் கடனை விதிப்பிரகாரம் செய்து கோபிப்பானானால் அந்தப்பலனும் காலில்நெய் தடவாமல் பாதப்ரக்ஷாளனஞ் செய்பவர்களின் பலனும் எள்ளில்லாமல் தர்ப்பணம் செய்கிறவர்களுடைய பலனும் தக்ஷிணை யில்லாமல் சிரார்த்தம் செய்கிறவர்களுடைய பலனும் உன்னையடையும்" என்று வரங்களைக் கொடுத்துவிட்டு அவளையும், சரமையையும்

அழைத்துக்கொண்டு விபீஷணன் சுக்ரீவன் மகரத்வஜன் முதலிய எல்லாருடனும் ஆகாசமார்க்கமாகப் புறப்பட்டு "ஏ சீதே! இதோ இலங்கையைப் பார். இதுதான் சமுத்திரத்தின் மேல் நாங்கள் சிலைகளால் கட்டின அணை" யென்று ஒவ்வொன்றாகக் காண்பித்துஇராமேசுவரத்துக்கு நேரே வந்ததும் இதுதான் சேதுகட்ட ஆரம்பித்த இடமென்றும் இதுதான் சேது தீர்த்தம் என்றும் காண்பித்து விபீஷணனுடைய பிரார்த்தனைப்படி விமானத்திலிருந்து இராமர் அங்கு இறங்கிச் சேதுவைத் தமது கைக்கோதண்டத்தால் உடைத்து விட்டார். அதன்பின் அவ்விடத்துக்குத் தனுஷ்கோடி என்கிற பேர் உண்டாய் அப்பெயர் உலகெங்கும் பரவியது. ஆகையால் அத்தீர்த்தமும் ஸ்நானஞ் செய்கிறவர்களுக்குக் கைவல்லிய பலனைக் கொடுக்கும் மகிமையை யடைந்தது. அன்று முதல் அவ்விடத்தில் கோதண்டபாணி யென்கிற ஸ்ரீராமமூர்த்தி ஆலயமேற்பட்டு பூஜிக்கப்பட்டு வருகின்றது.

இச்சமயத்தில் சம்பாதி இராமரிடம் வந்தார். இராமசந்திரர் அவரைத் தழுவிக்கொண்டு சந்தோஷமடைந்து இந்தசேது பந்தத்தில் உம்முடைய சகோதரன் ஜடாயுவின்பேரில் ஓர் உத்தமமான தீர்த்த முண்டாக்குமென ? சம்பாதி அவர் சொற்படி ஜடாயுவின் சந்தோஷ நிமித்தமாக ஒரு தீர்த்தத்தை உண்டாக்கினர். அன்று முதல் அதற்கு ஜடாயுதீர்த்தமெனப் பேர்வழங்கிவருகிறது. அதன்பிறகு இராமர் உத்தரவின்பேரில் சம்பாதியும் விமானத்தின் பேரிலேறினர். இராமர் புஷ்பக விமானத்திலேறிப்புறப்பட்டு இராமேசுவரத்திற்கு வந்து அங்கு இராமநாதலிங்கத்தை பூஜித்துவிட்டு சீதையைப்பார்த்து "ஏ சீதே! முன் இரகசியமாயிருந்து இங்கு வெளியாயிருக்கும் மந்திரார்த்தத்தைப்பார்; ஏவிதேகபுத்திரீ! இங்குதான் யான் தர்ப்பசயனம் செய்துகொண்டேன்; இவ்விடத்தில் நவக்கிரக பூஜைக்காகச் சமுத்திரத்தில் ஒன்பது கற்கள் நாட்டப்பட்டன. இதோ சமுத்திரமும் எனதுகட்டளைக்குக் கீழ்ப்படிந்து அலைகளை யடக்கிக்கொண்டு அமைதியாயிருக்கிறது பார்' என்று இவ்விதமான பற்பல ஆச்சரியங்களைச் சீதைக்குக் காண்பித்துக் கொண்டு கிஷ்கிந்தை சென்றார். அங்கே தமது வரவைக்கண்டு மகி

ழ்ந்து வணங்கின, வானர ஸ்திரீகள் யாவரையும் சீதைக்குக்காண் பித்து, அவர்களையும் விமானத்தின் மீதேற்றிக்கொண்டு அங்கிரு ந்து பிரவர்ஷணகிரிக்குச் சென்று அதையும் சீதைக்குக் காண்பி த்துப் பின் இருசியமூக பர்வதத்துக்குச் சென்று, அதையும் சீதைக்குக்காட்டி அவ்விடமிருந்து பம்பா ஸரஸை யடைந்து சுப காமான கிருஷ்ணு நதியையும் பீம நதியையும் காண்பித்து அங்கி ருந்து கோதாவரி நதியையடைந்து அந்நதியால் அழகுவாய்ந்த பஞ்சவடி தீரத்திற்குச் சென்று அதையுங்காண்பித்துப் பிறகு அகஸ்திய முனிவர் சுதீக்ஷ்ன முனிவர் அத்திரி முனிவர் இவர்க ளுடைய ஆச்ரமங்களையும் காண்பித்துப் பின்னர், சித்ரகூடபர்வ தஞ்சென்று, அங்குள்ள யமுனை கங்கை முதலிய புண்ணிய நதி களையும் சீதைக்குக்காட்டி அதன்பின் பரத்வாஜாசிரமத்திற்கு நேரே செல்ல, அம்முனிவர் பிரார்த்தனைப் படி அங்கு இறங்கி, சுகமாக இருந்தனர். அன்றே மாசிமாதம் சுக்லபட்சம் சதுர்த்தசி திதிகூடிய பதினாலாவது வருஷத்தின் கடைசிநாள். பாத்வாஜர் தமது தவமகிமையால், பூலோகத்தில் சொர்க்கத்தை சிருஷ்டித்து சமஸ்த வானரவீரர்களுக்கும் சீதாதேவியுடன் ஸ்ரீராமசந்திரனுக் கும் தக்கபூஜைசெய்தார். அப்பொழுது இரகுநந்தனர் தமது சித் தத்தில் ஆலோசித்து மாருதியைப்பார்த்து “ ஏ மாருதி! நீ இப்பொ ழுதே அயோத்திக்குப் புறப்படு; போகும் வழியில் சிருங்கிபேர புரத்திலிருக்கும் எனது நண்பன் குகனுக்கு நமது வருகையைத் தெரிவித்துவிட்டுப் பின் அயோத்திக்குச்சென்று எனது அன்புள்ள சகோதரன் பரதனுக்கு நமது வருகையைத் தெரிவி ” யென்று கட்டளையிட்டார். ஆஞ்சநேயர் நல்லது அவ்விதமே செய்கிறேன் எனக்கூறி இராமபிரானைவணங்கிவிட்டு, சிருங்கிபேரபுரம் சென்று குகனுக்குச் சங்கதிகளைத் தெரிவித்துவிட்டு உடனே அயோத் திக்குப் புறப்பட்டார். குகனும் உடனே பரமானந்தங்கொண்டு, ஸ்ரீராமபிரானைத்தரிசிக்கப் புறப்பட்டு அவரிடம் வந்து சேர்ந்தான்.

பதினான்காவது ஆண்டின் கடைசிநாள் முடிவாகப் போவ தைக் கண்டு நந்திக் கிராமத்திலிருந்த பரதன், தன் தமையன் இராமபிரான் அவரது வாக்குப்படி வாராமைக்கு வருந்தி, அக்கிப் பிரவேசஞ் செய்ய நிச்சயித்து சத்ருக்னனைப்பார்த்து, “ அப்பா! யுத்தத்தில் இராமரையும் இலட்சுமணரையும் இராவணன் கொன் று விட்டதாகக் காண்கிறது. இல்லாவிடில் அவர்கள் இன்று வாரா திருக்கமாட்டார்கள். அந்த யுத்தத்தின் சகாயத்திற்காகப் பல அரசர்களை வரவழைத்தேன். நான் இன்று சூரியாஸ்தமனம்

வரையில் பார்த்துவிட்டு அக்நிப்பிரவேசம் செய்து விடப்போகிறேன். இவ்வரசர்களுடன் நீ இலங்கைக்குச் சென்று போர்செய்து இராவணனைக் கொன்று ஜனக புத்திரியாகிய சீதையை மீட்டுவந்து. அதன் பிறகு உனது சகோதரராகிய எங்கள் மூவருக்கும் பரலோகக்கிரியையை நடத்து'' என்றுகூறி, சூரியனது அஸ்தமனத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இச்சொற்களைக்கேட்ட பட்டணத்து ஜனங்களும் தேசமன்னர்களும் ஊர்மிளை முதலானவர்களும் சுமந்திரன் முதலிய மந்திரிமார்களும் மற்றுமுள்ள பட்டணத்து ஸ்திரீகளும் மனங்கலங்கி வருத்தமுற்று, பரதனைச் சூழ்ந்து கொண்டார்கள் அப்பொழுது பரதன் அவர்கள் யாவரையும் சமாதானப்படுத்தித் தான் சரயு நதிக்குச்சென்று, அதன்கரையில் சிதையடுக்கி, தீ மூட்டிவிட்டு ஸ்நானஞ்செய்து பற்பல தானங்களைப் பார்ப்பனர்களுக்குக் கொடுத்து அவ்வக்கினியை ஏழுமுறை வலம் வந்து அக்கி, இரகுநாதர், சீதை, இலட்சுமணர் இவர்களுக்கு அநந்தகோடி நமஸ்காரஞ்செய்து, பின் தாய் மார்களையும் தன் குலகுரு வசிஷ்ட முனிவரையும் வணங்கிவிட்டு, குலதேவதையைத் தியானித்து சாயங்காலத்தில் சூரியனை நோக்கிய வண்ணமே வடக்கு முகமாக நின்றான். இச்சமையத்தில் அங்கிருந்த ஸ்திரீ புருஷர்கள் யாவரும் கோலாகலத்துடன் ஆரவாரித்தார்கள். ஆகாசமார்க்கமாய் வந்த வாயுநந்தனர், பரதன் அக்கிப் பிரவேசஞ் செய்யச் சித்தமாயிருப்பதைப் பார்த்தவுடன், அதிவேகமாகப் பரதனருகில் வந்து வாய்தடுமாற நின்று 'ஏ பரத! நீர் அக்நிப் பிரவேசம் செய்யவேண்டாம். ஸ்ரீராமபிரான் சீதையுடனும் இலட்சுமணருடனும் பரத்வாஜா சிரமத்திற்கு வந்திருக்கிறார். வானரர்களுடன் நீ அவர்களை நாளையதினம் நிச்சயமாய்ப் பார்ப்பாய்; இராமரும் உன்னைப்பார்க்க மிக்க ஆவல் கொண்டிருக்கிறார்'' என்று அமிதத்தைச் செவிகளில் புகட்டுவது போல் இனிமையாகக் கூறினர்.

இவ்விதம் அமிர்தத்தினுமினிய மொழிகளைக்கேட்டதும் பரதன் பரமானந்தமடைந்துத், அவ்வக்நியை வலம் வந்து வணங்கிப் பின் வாயுநந்தனரைப் பார்த்து அவரையும் நமஸ்கரித்தான். மாருதியும் பரதனை வணங்கி ஆலிங்கனம் செய்து சந்தோஷகரமான இராவண சங்காராதி விர்த்தாந்தங்களைத் தெரிவித்தார். இதைச் செவியுற்ற பரதன் உள்ளம் பூரித்து மனக்கவலை யொழிந்து உடனே

பட்டணங்களைப் பதாகைகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கும்படி மந்திரிகளுக்கு ஆக்ஞாபித்துவிட்டு, மாசி மாதம் சுக்கில பட்சம் பஞ்சமிதிதிகூடிய பதினேந்தாவது வருஷத்தின் முதல் நாளாகிய அத்தினத்தில் அதிகாலேயில் ஸ்நான ஸந்தியாவந்தனுதி நேமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு இரகுகுல சிரேஷ்டருடைய பாதுகைகளைத் தன் சிரமீது வைத்துக்கொண்டு பட்டத்துயானே, மந்திரிமுதலானவர்களுடன் புறப்பட்டுத் தென்றிசை நோக்கிச் செல்லுகையில், கோலாகலத்துடன் வரும் புஷ்பகவிமானத்தைக் கண்டான். கண்டதும் பரமாநந்தங் கொண்டு அதிக வேகமாக எதிர்கொண்டு சென்று இராமபிரானைப் பார்த்து சாஷ்டங்கமாக நமஸ்கரித்தான். உடனே இராமர் தமது இரண்டுகரங்களாலும் பரதனை எழுப்பி ஆலிங்கனஞ் செய்துகொண்டதுமன்றி அக்கணமே அநந்தமான இராமரூபங்கொண்டு அங்கு வந்திருந்த யாவரையும் ஏககாலத்தில் தழுவிக்கொண்டு மகிழ்ந்தார். இப்படி அநந்தமான இராமமூர்த்திகளைப் பார்த்து, ஜனங்கள் யாவரும் ஆச்சரியமடைந்தார்கள். பிறகு இராமர் கண்களில் ஆனந்தபாஷ்பம் சொரியப்பரதனைப் பார்த்துச் சமாதானப்படுத்தி, அப்பால்தமது தாய்மார் மூவரையும் நமஸ்கரித்து, பிறகு வசிஷ்டரையும் அருந்ததியையும் நமஸ்கரித்து, பற்பல வாத்திய கோஷங்களுடன் வாரநாரிகள் நர்த்தனம் புரிய நந்திக்கிராமஞ் சென்றார். அங்குத் தமது சகோதரர் மூவர்களுடன் தீட்சா நிவர்த்தி செய்து கொண்டு சுகந்த வஸ்துக்களால் மங்கள ஸ்நாநஞ் செய்தார். அப்பொழுது, மனோகரமான நவவாத்தியங்களும் முழங்கின. குலஸ்திரீகள் யாவரும் இரத்ந தீபங்களைக் கொண்டு இராமபிரான் முதல் நால்வருக்கும் நீராஜனம் செய்தார்கள் அப்பொழுது சீதையும் கௌஸல்லியை முதலான மாமியார்களையும் அருந்ததி வசிஷ்டர்களையும் வணங்கி மகிழ்ந்தாள். பிறகு கௌஸல்லியை முதலியவர்கள் சீதையைத் தழுவிக்கொண்டு, வாத்திய கோஷத்துடன் அந்தமாதரசிக்கு மங்கள ஸ்நாநஞ் செய்வித்து வஸ்திராபரணுதிகளால் அலங்கரித்தார்கள். பரதன் ஸ்ரீராமபிரான் பாதுகைகளைப் பூஜித்து, அவைகளைப் பக்தியுடன் அவருடைய பாதபத்மங்களிற் சேர்த்

தான்.பிறகு பரதன் வணங்கி, அவரைப்பார்த்து "ஏ ஜகதீசா! உமது மகிமையால், என்னிடத்தில் நியாஸமாக வைத்திருந்த இந்த இரா ஜ்யத்தில் சைன்னியபலம் பொக்கிஷம் தானியம் முதலியவைகள் ஒன்றுக்குப் பத்தாக விருத்தியாயிருக்கின்றன. அவைகளுடன் இராஜ்யத்தைத் தங்களிடம் ஒப்புவித்தேன். அது தங்களுக்கு உரிமையானதால், அதை ஏற்றுக்கொண்டு பரிபாலிக்கவேண்டும்" என, இராமபிரானும் அப்படியே யாகட்டும் என்று மனமகிழ்ச்சி யுடன்கூறிப் பரதனைத் தமதருகில் உட்காரவைத்துக் கொண்டார். பிறகு இரகுநந்தனர் திவ்விய வஸ்திராபரணமணிந்து, சீதாதேவி யுடன் இரதத்திலேறி வாத்தியகோஷங்களும் ஜயகோஷங்களும் முழங்க நாரிகள் நர்த்தனம் செய்ய, அயோத்தியாபட்டணத்திற் குள் பிரவேசித்தார். அப்பொழுது அப்பட்டணத்து மாதர்கள் யாவரும் அவரவர் வீட்டு உப்பரிகை மீதிருந்து இவர்கள் பேரில் புஷ்பங்களை வருஷித்து உடனே அவிடமிருந்து கீழே இறங்கி, திருஷ்டி பரிகாரமாக நீராஜனஞ் செய்தார்கள். இராமர் தமது அரண்மனை வாசலுக்கு வந்ததும் சீதையுடன் இரதத்தை விட் டிறங்கிச் சீதையை அந்தபுரத்துக்கு அனுப்பி விட்டு விமானத் தைப் பார்த்து "ஏ புஷ்பகமே! நீ குபேரனிடம் சென்று அவருக் குச் சொந்தமாயிரு' என்று அக்ஞாபித்தனுப்பினர். புஷ்பகம் நல்ல தென்று கூறிவிட்டுக் குபேரனிடம்சென்றது.

# ஸ்ரீராமபட்டாபிஷேகம்.

பிறகு இராமபிரான் கொலுமண்டபத்தில் வீற்றிருந்து வா னரவீரர்கள் ஒவ்வொருவருக்கும் சுகமாக வசிக்கத்தக்க வீடுகளை ஏற்படுத்தும்படி மந்திரிகளுக்கு ஆக்ஞாபித்தார். அப்பொழுது குலகுருவாகிய வசிஷ்டமுனிவர் ஸ்ரீ ராமபிரானுக்கு ராஜ்ய பட் டாபிஷேகஞ் செய்விக்கக் கருதி ஒரு நல்லமுகூர்த்தம் நிச்சயித்து அனுமார் முதலிய நான்கு வானர சிரேஷ்டர்களைக் கொண்டு

நான்கு சமுத்திரங்களின் தீர்த்தங்களை வரவழைத்து, அநேக மங்களவாத்தியங்கள் முழங்க, அங்கு வந்திருக்கும் அரசர்களைக் கொண்டு பட்டாபிஷேக மஹோற்சவத்தை நடத்தி முடித்தார்.

இலட்சுமணர் இராமபிரான் பின்னுலிருந்து சந்திரப்பிரகாசம் போன்ற வெண் குடை பிடித்தார். பரதன் வலதுபக்கத்திலும் சத்ருக்னன் இடது பக்கத்திலும் நின்று இரண்டு திவ்வியசாமரங்களை யெடுத்து வீசினர்கள். அனுமார் இராமருடைய சந்நிதானத்திலிருந்து அவரது திவ்விய பாதுகைகளைச் சிரமீது தாங்கி நின்றார். மகாபலசாலியான சுக்ரீவன் தனது கையில் ஜலபாத்திரத்தை வைத்துக்கொண்டு ஆக்நேய திக்கிலிருந்து இராமரைத் தரிசித்து வந்தான். விபீஷணன் திவ்யமான ஒரு கண்ணாடியைப் பிடித்துக் கொண்டு ஈசானிய திக்கில் நின்றான். வாலிபுத்திரன் அங்கதன் தனதுகையில் தாம்பூலபாத்திரத்தை வைத்துக்கொண்டு ஆக்நேய திக்கிலிருந்து இராமரைத் தரிசித்து வந்தான். மகாவிவேகமுள்ள ஜாம்பவான் நூதன வஸ்திரங்களை அடுக்காகக் கையிலேந்திக்கொண்டு நிருதிதிக்கிலிருந்து இராமரைத் தரிசித்து வந்தார். இவ்விதமான வைபவத்துடன் இராமபிரான் திவ்விய சாய்மானமமைப்பெற்ற சிங்காதனத்தில் வீற்றிருந்தார். இலட்சுமணருக்கு இடதுபுறத்தில் சம்பாதியும், பரதனுக்கு இடது புறத்தில் குகனும் சத்ருக்னனுக்கு இடதுபுறத்தில் மகரத்வஜனும், அநுமந்தனுக்கு இடதுபுறத்தில் கருடாழ்வாருமிருந்து இராமபிரானைத்தரிசித்து வந்தார்கள். சுக்ரீவன் முதலிய நால்வருடைய இடது புறங்களிலும் சித்ரரதன், சுமந்தரன், விஜயன், தாருகன் இந்நால்வருமிருந்து தரிசித்து வந்தார்கள். அப்பொழுது தேவாசுரர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், கந்தர்வர்கள் இவர்கள் இராஜாக்களுக்குரிய வெகுமானங்களைக் கையிலெடுத்துக்கொண்டுவந்து, இராமபிரானைத் தரிசித்தார்கள். ஒஷதிகள், மலைகள், புண்ணிய விருக்ஷங்கள், சப்த சமுத்திரங்கள், பல புண்ணிய நதிகள் இவைகள் யாவும் தங்கள் தேவரூபங்களோடு பட்டாபிஷேக மஹோற்சவத்தில் ஸ்ரீராமபிரானைத் தரிசிக்க வந்தன. அப்பொழுது தேவேந்திரன் காஞ்சனமாலை ஒன்றை வாயுபகவான் மூலமாக இராமருக்குக்கொடுத்

தனுப்ப, அவர் அதைக்கொண்டு வந்து பட்டாபிஷேகமுகூர்த்தத்தில் இராமபிரான் கழுத்தில் அணிந்தார். பிறகு தேவேந்திரனும் நவரத்னங்களிழைக்கப்பெற்ற ஒருஸ்வர்ணஹாரத்தை எடுத்துக்கொண்டுவந்து ஸ்ரீராமபிரானுடைய கழுத்தில் மனமகிழ்ச்சியுடன் அணிந்து தரிசித்தான். தேவர்கள் துந்துபி வாத்தியம் முழக்கினார்கள். கந்தர்வர்கள் பாடினார்கள். வாரநாரிகள் நர்த்தனஞ் செய்தார்கள். ஆகாசத்திலிருந்து ஒரு ஜாமநேரம் இடை விடாமல் மலர் மாரி பொழிந்தது.

* * *

* * * * * *

ஏ கார்த்தியாயனீ! ஸ்ரீராமபிரான் அரண்யவாச விரதத்தை நிறைவேற்றி அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டு பூபரிபாலனஞ் செய்யவிரும்பி, நந்திக்கிராமத்திலிருந்த பரதன் என்னைப் பரம பக்தியுடன் பூஜித்தான். அவனுக்கிரங்கி நான் ஸ்ரீராமபிரானை அவ்விதமே கொண்டுவந்துசேர்த்து அவன் எண்ணத்தை நிறைவேற்றி இராமரைப் பின்வருமாறு புகந்தேன்.

---

॥ 𑌶𑍍𑌰𑍀𑌶𑌿𑌵𑌃 ॥

---

𑌸𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂
𑌸𑍀𑌤𑌾𑌕𑌲𑌤𑍍𑌰𑌂 𑌨𑌵𑌮𑍇𑌘𑌗𑌾𑌤𑍍𑌰𑌮𑍍 ।
𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌶𑌤𑌪𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥ 1

𑌸𑌂𑌸𑌾𑌰𑌹𑌾𑌰𑌂 𑌨𑌿𑌗𑌮𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌂
𑌯𑌜𑍍𑌞𑌾𑌵𑌤𑌾𑌰𑌂 𑌹𑍃𑌤𑌭𑍂𑌮𑌿𑌭𑌾𑌰𑌮𑍍 ।
𑌸𑌦𑌾𑌵𑌿𑌕𑌾𑌰𑌂 𑌸𑍁𑌖𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌸𑌾𑌰𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥ 2

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌵𑌿𑌲𑌾𑌸𑌂 𑌜𑌗𑌤𑌾𑌂 𑌨𑌿𑌵𑌾𑌸𑌂
𑌲𑌙𑍍𑌕𑌾𑌵𑌿𑌨𑌾𑌶𑌂 𑌭𑍁𑌵𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌮𑍍 ।
𑌭𑍂𑌦𑍇𑌵𑌵𑌾𑌸𑌂 𑌶𑌰𑌦𑌿𑌨𑍍𑌦𑍁𑌹𑌾𑌸𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 ... ... ... 𑌨𑌮𑌾𑌮𑌿 3

𑌮𑌨𑍍𑌦𑌾𑌰𑌮𑌾𑌲𑌂 𑌵𑌚𑌨𑍇 𑌰𑌸𑌾𑌲𑌂
𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 𑌹𑌤𑌸𑌪𑍍𑌤𑌤𑌾𑌲𑌮𑍍 ।
𑌕𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌦𑌕𑌾𑌲𑌂 𑌸𑍁𑌰𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 … … … 𑌨𑌮𑌾𑌮𑌿 4

𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌗𑌾𑌨𑌂 𑌸𑌕𑌲𑍈𑌸𑍍𑌸𑌮𑌾𑌨𑌂
𑌹𑌤𑌾𑌰𑌿𑌮𑌾𑌨𑌂 𑌤𑍍𑌰𑌿𑌦𑌶𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌮𑍍 ।
𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌯𑌾𑌨𑌂 𑌵𑌿𑌗𑌤𑌾𑌵𑌸𑌾𑌨𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 … … … 5

𑌶𑍍𑌯𑌾𑌮𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂 𑌨𑌯𑌨𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌗𑍁𑌣𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂 𑌵𑌚𑌨𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌵𑌿𑌶𑍍𑌵𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌂 𑌕𑍃𑌤𑌭𑌕𑍍𑌤𑌕𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 6

𑌲𑍀𑌲𑌾𑌶𑌰𑍀𑌰𑌂 𑌰𑌣𑌰𑌙𑍍𑌗𑌧𑍀𑌰𑌂
𑌵𑌿𑌶𑍍𑌵𑍈𑌕𑌸𑌾𑌰𑌂 𑌰𑌘𑍁𑌵𑌂𑌶𑌹𑌾𑌰𑌮𑍍 ।
𑌗𑌂𑌭𑍀𑌰𑌨𑌾𑌦𑌂 𑌜𑌿𑌤𑌸𑌰𑍍𑌵𑌵𑌾𑌦𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 … … … 7

𑌖𑌲𑍇 𑌕𑍃𑌤𑌾𑌨𑍍𑌤𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑍇 𑌵𑌿𑌨𑍀𑌤𑌂
𑌸𑌾𑌮𑍋𑌪𑌗𑍀𑌤𑌂 𑌮𑌨𑌸𑌾 𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑌮𑍍 ।
𑌰𑌾𑌗𑍇𑌣 𑌗𑍀𑌤𑌂 𑌵𑌚𑌨𑌾𑌦𑌤𑍀𑌤𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 … … … 𑌨𑌮𑌾𑌮𑌿 8

𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌵𑌰𑌾𑌷𑍍𑌟𑌕𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂
𑌮𑌯𑍋𑌦𑌿𑌤𑌂 𑌦𑍇𑌵𑌿 𑌮𑌨𑍋𑌹𑌰𑌂 𑌯𑍇 ।
𑌪𑌠𑌨𑍍𑌤𑌿 𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾
𑌤𑍇 𑌸𑍍𑌵𑍀𑌯𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌲𑌭𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥ 9

॥ ஸ்ரீ சிவஃ ॥

ஸுக்ரீவமித்ரம் பரமம் பவித்ரம்
ஸீதாகளத்ரம் நவமேககாத்ரம்.

காருண்யபாத்ரம் சதபத்ரநேத்ரம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி (க)

ஸம்ஸாரபாரம் நிகமப்ரசாரம்
தர்மாவதாரம் ஹ்ருதபூமிபாரம்.
ஸதாவிகாரம் ஸுகஸிந்துஸாரம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி (உ)

லக்ஷ்மீவிலாஸம் ஜகதாம் நிவாஸம்
லங்காவிநாஸம் புவனப்ரகாசம்.
பூததேவவாசம் சரதிந்துஹாஸம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி (ங)

மந்தராமாலம் வசநே ரஸாலம்
குணைர்விசாலம் ஹதஸப்ததாலம்.
க்ரவ்யாதகாலம் ஸுரலோகபாலம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி (ச)

வேதாந்தகானம் ஸகலைஸ்ஸமானம்
ஹதாரிமானம் த்ரிதசப்ரதானம்
கஜேந்த்ரயாநம் விகதாவஸாநம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி (ரு)

ச்யாமாபிராமம் நயநாபிராமம்
குணாபிராமம் வசநாபிரமம்
விச்வப்ரணாமம் க்ருதபக்தகாமம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி (சு)

லீலாசரீரம் ரணரங்கதீரம்
விச்வைகஸாரம் ரகுவம்சஹாரம்
கம்பீரநாதம் ஜிதஸர்வவாதம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி (எ)

கலே நிருதாந்தம் ஸ்வஜநே விநீதம்
ஸாமோபகீதம் மனஸா ப்ரதீதம்

ராகேணஸிதம் வசனாதநீதம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி (அ)

ஸ்ரீ ராமசந்த்ரஸ்ய வராஷ்டகம் த்வாம்
மயேரிதம் தேவி மனோஹரம் யே.
படந்தி சிருண்வந்தி கிருணந்தி பக்த்யா
தே ஸ்வீயகாமாந் ப்ரலபந்தி நித்யம் (கூ)

## பரமசிவன் கூறுகிறார்.

சுக்ரீவனுக்கு மித்திரரும் மிகப் பரிசுத்தமானவரும் சீதையை நாயகியாகக் கொண்டவரும் நவமேகம் போன்ற சரீர முடையவரும் காருண்ய பாத்திரரும் தாமரைப்பூப் போன்ற நேத்திர முடையவருமான ஸ்ரீ ராமசந்திரரே உமக்கு வந்தனம். (க)

சம்ஸாரத்தைக் கடந்தவரும் வேதங்களைப் பிரசாரம் செய்பவரும், பூமிபாரத்தைத் தீர்த்துத் தர்மபரிபாலஞ் செய்கிறவரும், திரிகாலங்களிலும் விகாரமற்றவரும், சுகசாகரஸாரமுமான ஸ்ரீ ராமசந்திரரே உமக்கு வந்தனம். (உ)

லக்ஷ்மி விலாசமமைந்தவரும் உலகங்களுக் கிருப்பிடமானவரும் இலங்கையை யழித்தவரும் உலகங்களை உற்பத்தியாக்கினவரும் வேதியர்களுடைய கஷ்டநிவர்த்தி செய்து சுகப்படுத்துகிறவரும் சரத்கால சந்திரன் போன்று பிரகாசிக்கு மந்தஹாஸ வதன முடையவருமான ஸ்ரீராமசந்திரரே உமக்கு வந்தனம். (ங)

மந்தாரமாலை பூண்டவரும் தேமாங்கனிக் கொப்பான வாய்மொழியை யுடையவரும் நற்குண நிறைந்தவரும் ஏழுபனைமரங்களை யழித்தவரும் அரக்கர்குல அந்தகனும் சுரலோக பாலகருமான இராமசந்திரரே உமக்கு வந்தனம். (ச)

வேதாந்த நாதரும் எல்லாருடனும் சமனாயிருப்பவரும் கர்வத்தையடக்குகிறவரும் தேவர்களுக்கு ப்ரதானமானவரும் யானையை வாகனமாகக் கொண்டவரும், முடிவில்லாதவருமான ஸ்ரீராமசந்திரரே உமக்கு வந்தனம். (ரு)

நிறத்திலும் குணங்களிலும் பேச்சுக்களிலும் மேன்மையான வரும் அழகான கண்களை யுடையவரும் உலகம் வணங்கத் தக்க வரும் பக்தர்களுடைய கோரிக்கையை நிறைவேற்றுகிற வருமான ஸ்ரீராமசந்திரரே உமக்கு வந்தனம். (சு)

விளையாட்டுக்காகச் சரீரமெடுப்பவரும் யுத்தகளத்தில் அதி தீரமானவரும் உலகங்களின் ஸாரமானவரும் இரகு வம்சத்துக்கு ஹாரம் போன்றவரும் கம்பீரமான குரலுடையவரும் வாதத்தில் யாவரையும் அடக்கவல்லவருமான ஸ்ரீராமசந்திரரே உமக்கு வந்த னம். (எ)

துஷ்டனுக்கு யமன் போன்றவரும் சுவஜன வணக்கமு டையவரும் சாமவேதத்தால் துதிக்கப்பட்டவரும் எப்போதும் தெளிவான மனமுடையவரும் பாடல்களால் துதிக்கப்பட்டவரும் வாசாமகோசாருமான இராமச்சந்திரரே உமக்கு வந்தனம். (அ)

ஏ இராமசந்திரா! மனோகரமாய் இப்பொழுது நான்செய்த உமது துதியாகிய இந்த அஷ்டகத்தை பக்தியுடன் படிப்பவர்க ளும் கேட்பவர்களும் இஷ்டார்த்தசித்திகளைப் பெறுவார்களாக என்று இராமசந்திரரைத் துதித்துவிட்டு அச்சபையின் கண் இரு ந்தேன். அச்சமயத்தில் மகானகிய தசரதர் தேவசேனைகள் சூழ ஓர் இரதத்திலேறிக்கொண்டு சூரியப்பிரகாசம் போன்ற ரூபத்துடன் இராமபிரான் சபைக்கு வந்து, தமது சகோதரருடனும் சீதா பிராட்டியுடனும் பட்டாஷேக மகுடஞ் சூட்டப் பெற்றுச் சிங்கா தனத்தில் வீற்றிருக்கும் இராமரைப் பார்த்து பரமாத்மாவாகிய அவரைத்துதித்து மகிழ்ந்து பின்வருமாறு கூறினர்.

தசரதர் கூறுகிறார்.

ஏ மகா பாகுவே! நீ பதினன்கு வருஷகால வனவாசத்தை முடித்து அயோத்திக்கு வந்து இப்பொழுது பட்டாபிடஷகஞ் செய்துகொண்டு பந்துக்களுடன் சிங்காசனத்தில் வீற்றிருக்கக் கண்ட நான் தன்னியனானேன். எனது தாய் தந்தையரும் தன்னி யரானார்கள். நமது குலமே தன்னியமாயிற்று. நம்தேசமும் தன்

னிய மாயிற்று. இம்மஹோத்சவத்தைப் பார்த்து மகிழும் உன் தாய் கௌஸல்யையும் தன்னியையானாள் என்று சொன்னார்.

இவ்விதம் கூறிய தசரத மகாராஜனை இராமபிரான் வணங்கினார். இலட்சுமணன் பரதன் சத்ருக்னன் மந்திரிமார்கள் கௌசல்யை முதலிய பட்ட மகிஷிகள் யாவரும் இரதத்தின் பேரிலிருக்கும் தசரதமகாராஜனை மகிழ்ச்சியுடன் வணங்கினார்கள். அப்பொழுது தசரதர் அவர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியே க்ஷேமம் விசாரித்துவிட்டு இராமசந்திரனது பூஜையை ஏற்றுக்கொண்டு என்னுடன் அவ்விடம் விட்டுத்திரும்பினார். பிறகு எல்லாரும் அவரவரிடம் போய்ச் சேர்ந்தார்கள். நானும் இந்தக் கைலயம் பதிக்கு வந்து சேர்ந்தேன். இவ்விதமான மஹோற்சவத்துடன் சர்வலோக சுககரரான ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் நடந்தபின், பூமி செழிப்புற்றது. மரங்கள் எல்லாம் பூத்துக் காய்த்தன. வாசனையில்லாத புஷ்பமும் வாசனையை யடைந்தது. இச்சமையம் இராமபிரான் பொருள்களைக் கோடிக் கணக்காகவும் அசுவங்கள் பசுக்கள் விருக்ஷங்கள் இவைகளை இலட்சக்கணக்காகவும் வேதியர்களுக்குத் தானம் செய்தார்; பிறகு சூரியகாந்திக்குச் சமமான ஒளியுள்ள நவரத்னமயமான ஒரு மாலையை எடுத்து மகிழ்ச்சியுடன் சுக்ரீவனுக்குக் கொடுத்தார்; விபீஷணனுக்கு ஒரு சிரோ பூஷணத்தைப் பரிசளித்தார்; அங்கதனுக்கு இரண்டு புஜ கவசங்களைப் பரிசளித்தார்; கோடிசந்திரப் பிரகாசம் பொருந்திய ஒரு ரத்னமாலையைச் சீதாதேவியிடங் கொடுத்து "ஏ பிரியநாயகி இந்த மாலையை உனக்குப் பிரியமானவனுக்குக் கொடு" என்று! கொடுக்க, அதைச் சீதாதேவி அன்புடன்வாங்கி முன்னேயிருந்த அனுமந்தருக்கு மனமுவந்தளித்தாள். மாருதி அதை வாங்கித் தமது கழுத்தில் அணிந்துகொண்டு மகா கௌரவம் பெற்று விளங்கினார். அப்பொழுது இராமர் அநுமாரைப் பார்த்து "ஏ மாருதி! உன் விஷயத்தில் எனது மனம் மிகவும் மகிழ்ச்சியடைந்திருக்கிறது; உனக்குவேண்டிய வரங்களைக்கேள். அவைகளைக்கொடுக்கிறேன்" என்றார்,

இதைக்கேட்ட அனுமார் 'ஏ நாதா! உமதுநாமத்தைஸ்மரித்து நான் இன்னும் திருப்தியடையவில்லை யாதலால் இவ்வுலகத்தில் உமது திருநாமம் பிரசாரமாய் உள்ளமட்டும் அடியேன் உமது நாமோச் சாரணத்தைச் சலிப்புருமல் செய்துகொண்டிருக்கவேண் டும். எனது சரீரமும் அதுவரையி லிருக்கவேண்டும். எங்கெங் கே உமதுசரித்திரம் நடைபெறுகிறதோ அங்கங்குத்தவருமல் யான் சென்று அதைச்சிரவணம் செய்யவேண்டும். தேவாலயம் நதிதீரம் தடாகம் நடைவாவி முதலிய இடங்களிலன்றி, மற்றவிடங்களில் நடக்கும் உமது சரித்திரத்தின் மகிமை ஆறுநாழிகை வழிக் கப்பாலும் விளங்கவேண்டும். இவைகளேயான் விரும்பிய வரங் கள்'' என்று தெரிவித்தார். உடனே இராமபிரான் ''நீ கேட்டபடியே யாவும் நடைபெறும். நீ முக்தனுகி இந்தக் கற்பகாலம் முழுவது மிருந்து இதன் முடிவில் எனது சாயுஜ்யம் பெறுவாய்; இதிற் சிறிதும் ஐயமில்லை'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

பிறகு சீதாபிராட்டி அனுமந்தரைப்பார்த்து '' ஏ மாருதி! நீரி ருக்கும் கிராமம் தோட்டம் பட்டணம் பசுக்கொட்டடி தேவா லயங்கள் நதிதீரம் க்ஷேத்திரங்கள் தீர்த்தங்கள் தடாகக்கரைகள் நந்தவனங்கள் அரசமரம் ஆலமரம் பிருந்தாவனம் முதலியவைக ளில் உலகத்து ஜனங்கள் உம்மை வணங்கித் தங்கள் இடையூறு நீங்கும்பொருட்டு உமது மூர்த்தியைப் பூஜிப்பார்கள். உம்மை நினைத்தவர்களுக்குப் பூதம் பிரேதம் முதலிய துஷ்டகிரகங்களின் தோஷம் சிறிதும் அணுகாது'' என்று அன்புடன் வரமளித்தாள். அங்குவந்திருக்கும் மற்றவானரவீரர்கள் யாவருக்கும் மதிப்பிடற் கரியஆபரணங்கள் வஸ்திரங்கள் முதலியவைகளை இராமர் பரிசளித் தார். பிறகு சுக்ரீவன் முதலிய வானரர்கள் விபீஷணன் மகரத் வஜன் சம்பாதி குகன் அரசர்கள் முதலியயாவருக்கும் அவரவர்களுக் குத் தக்கபடி வஸ்திராபரணங்களை வெகுமதியாகக்கொடுத்து மகி ழ்ந்தார்.

இதன் பின் இராமபிரான் எல்லாருடனும் போஜனசாலைக்குச் சென்று போஜனம் செய்தார். இராமர் போஜனஞ்செய்து முடியும் தருணத்தில் அனுமார் எழுந்திருந்து அவர்முன்பு சென்று முக்

காவியின்மேல் வைத்திருக்கும் பக்குவான்னங்கள் நிறைந்த சொர்ணபாத்திரத்தைத் தமது இடதுகையால் எடுத்து தூக்கிப்பிடித்துக்கொண்டு இராமரது போஜன சேஷத்தைத் தாம் புசித்து விட்டு மீந்ததை மற்ற வானரவீரர்களுக்குங் கொடுத்தார். அப்பொழுது விபீஷணன் முதலியவர்களும் தங்கள் தங்கள் போஜனஸ்தானத்தை விட்டு உடனே எழுந்திருந்து, மாருதியைப்பார்த்து 'ஏ மாருதி! நீ நல்ல காரியம் செய்தாய்' என்று அவரைத் துதித்து விட்டு அவர் கையில் வைத்திருக்கும் இராமபோஜனசேஷத்தை எடுத்துப் புசித்தார்கள். மற்றவர்களும் அந்த போஜனத்தை விரும்பி ஓடிவந்தார்கள். இது ஒரு கோலாகலமாயிருந்தது. இதை இராமரும் சீதையும் பார்த்து மகிழ்ந்து நகைத்தார்கள். சுக்ரீவன் முதலியவர்கள் இவ்விதமாகப் பல கோலாகலங்களைச் செய்துகொண்டு சுகமாகச் சிறிதுகாலம் இராமபிரானேடு வசித்தார்கள்.

இப்படி யிருந்து வருகையில் புஷ்பக விமானமானது மறுபடியும் இராமபிரான் முன்வந்து வணங்கி "ஏ மகாபிரபுவே! நான் இப்பொழுது குபேரன் உத்தரவின்படி இங்கு வந்திருக்கிறேன். அவர் எனக்குச்செய்த உத்தரவாவது—ஏ விமானமே! நீ முன் இராவணனல் ஜயிக்கப்பட்டு, அவனிடமிருந்தாய்; இப்பொழுது இராவணனை இராமர் ஜயித்து விட்டபடியால் நீ அவரிடம் சென்று அவர் பூவுலகத்திலுள்ள வரையில் நீ அவர் சுவாதீனத்திலிருந்து வரவேண்டும். அவர் வைகுண்டத்துக்குச் சென்றபின் நீ என்னிடம் வரவேண்டும். ஆகையால் நீ இராமபிரானிடம் செல் "என ஆக்ஞாபித்தார்" என்று விமானங் கூறிற்று. உடனே இராமர் விமானத்தைப்பார்த்து 'நீ சுக்ரீவாதி வானரங்களை அவரவரிருப்பிடத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டுப் பின், இந்த அயோத்தியா பட்டணத்துக்கு வெளியில் வாசஞ்செய்து வா" எனக் கட்டளையிட்டார். அக்கட்டளையின்படியே புஷ்பகம் சுக்ரீவன் முதலியவர்களை அவரவர்களிருப்பிடத்திற்குக் கொண்டுபோய்ச்சேர்த்துவிட்டு, அயோத்தியா பட்டணத்துக்கு வெளியே வாசஞ்செய்து வந்தது. அன்று முதல் விபீஷணன் இலங்காபட்டணத்தைத் தருமநெறிதவருமல் பரிபாலனம் செய்து வந்தான். மகா

த்வஜன் பாதாளலோகத்தைத் தர்மமாக ஆண்டுவந்தான். அப்பொழுது கருடன் சம்பாதிக்கு யுவராஜ்யபட்டாபிஷேகஞ்செய்து தன் இராஜ்யத்தில் வைத்துக்கொண்டான் வானராதிபதியாகிய சுக்ரீவன் கிஷ்கிந்தா ராஜ்யத்தை நீதி தவறு தாண்டுவந்தான். குகன் சிருங்கி பேரபுரத்தில் சந்தோஷத்துடன் அரசாண்டு வந்தான். வாயுநந்தனராகிய மாருதி இராமரை வணங்கிவிட்டுத் தவம் புரிய இமயமலைக் சாரலுக்குச் சென்றார். விபீஷணன் முதலிய யாவரும் ஐந்து, ஏழுநாட்களுக் கொருதடவை இராமபிரானைத் தரிசிக்க அயோத்திக்கு வருவதும் அங்கு வந்து ஐந்து ஏழுநாள் இராமருடன் வசித்து விட்டுப் பிறகு தங்கள் தங்கள் பட்டணஞ் செல்வதுமாக இருந்துவந்தார்கள். இலட்சுமணர் பிரியங்கொள்ளாதிருந்தும் இராமர் அவருக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்வித்து, தாம் பிரஜைகளிடத்தில் மிக்க அன்புபாராட்டி அவர்களுக்குச் சந்தோஷமுண்டாகும்படி இராஜ்ய பரிபாலனஞ் செய்து வந்தார் இலட்சுமணர் இராமரிடத்தில் மிக்க பக்தி செலுத்திக்கொண்டு அவருடைய பணிவிடையிலேயே புத்தியைச் செலுத்திவந்தார்.

ஏ தேவி! முன் விசுவாமித்திரர் யாகம்செய்தகாலையில் அவர் யாகத்தை நடத்த * அவபிருத ஸ்நானம் செய்து முடித்தாரென்றும், ஸ்ரீராமபிரான்யுத்தயாகத்தை அப்பொழுதே ஆரம்பித்து, முடிக்காமல் நிறுத்தினாரென்றும் கூறியிருக்கிறேன் அல்லவா? அந்த யுத்தயாகத்தை ஸ்ரீ ராமபிரான் பட்டாபிஷேகம் பெற்றுத் தமது பதவியிலிருந்து இப்பொழுது முடித்தார். இந்த இரணயாகத்தை விஸ்தாரமாக உனக்குக்கூறுகிறேன் கேள்-இந்த இரணயாகத்துக்கு அக்நிகுண்டம் யுத்த பூமியில் சத்ருக்களுக்குப் பின்னிடாமல் தைரியமாய் எதிர்த்து நிற்பது தான் (1) வேதவிதி என்றும் பிர்மஸ்தவம் என்றும் சொல்லப்படும். யுத்தத்தில்உண்டாகும் ஆயுதங்க

---

* தீட்சையை வகித்து, அதன் முடிவில் செய்யும் ஸ்நானம்.

1. ஒருபிடி தர்ப்பையை முறுக்கி ஒன்றாய்க்-கட்டியிருப்பது. பிரமஸத்வம்—பிரமதேவருக்கு முக்கியமானது.

ளின் சப்தமே (2) கடாடோபம் பாணங்களைக் கற்களிற்தீட்டுவ தே (3) சுருக் சுருவங்களைத் துடைப்பதாகும். பாணங்களைச் சுத்தி செய்வதற்காகத் தரையில் பரப்புவதே (4) பரிஸ்தரணம். யுத்தத்தில் ஒவ்வொருவர் மனதிலும் உண்டாகும் தைரியமே (5) பரிசமூஹனம். யமனே யகாக்நி. மாம்சத்தை அக்நியில் ஆகுதிபண்ணச் சாதகமான (6) சுருவம் பாணமே. சத்ருக்களுடைய தேகத்தை அறுப்பதினால் பெருகும் இரத்ததாரையே (7) வஸோர்த்தாரை. யுத்தகளத்திலுண்டாகும் பயங்கரமான ஹா ஹா காரமே (8) ஓங்காரமும்(9) வஷட்காரமுமாம். சஸ்திரங்களின் காந்தியேயாகாக்நியின் ஜ்வாலை. சரீரங்களிலிருந்து உண்டாகும் வேர்வையே புகை. யாக குண்டத்திலிருந்து கிளம்பி ஒங்கி எரியும் ஜுவாலையைத் தணிக்கும் (10) பிரஷதாஜ்யஸேசனமானது. இங்கு உத்தமாஸ்திரப்ரயோகமேயாம். தீப பலியென்பது இங்கு உணர்வுடன் உயிரை இழப்பதே. பலிதீபங்களை யாககுண்டத்துக்கு எடுத்து வருகிறவர்கள் தேகாபிமானம் வைத்தவர்களேயாம். சிரங்களை அறுத்துக்குவிப்பதே பூர்ணாகுதி. ஜயவீரர்கள் இடசாரி வலசாரியாய் வருவதே பிரதக்ஷிணங்கள். ஸ்ரீராமபிரான் தமது பதவியை யளிப்பதே யாகதக்ஷிணையாம். தேவர்கள் பொழியும் மலர் மாரியே வேதியர்களுடைய ஸ்நானம். யுத்தத்தில் ஜயம் பெறுவதே யாகசிரேயஸ் பெறுவது. ஸ்ரீ ராமரைச் சேர்ந்தவர்கள் ஆனந்திப்பதே சராசர ஆனந்தமாம். யுத்தத்தில் மாண்டவர்களைத் தின்று பூதங்கள் திருப்தியடைவதே

---

2, யாகடாம்பீகம்.
3 ஹோமம் நெய் விட்டிருக்கும் பாத்திரம்
4 அக்நிக்கு நாற்புறமும் சதுரமாகத் தர்ப்பங்களைப் பரப்புதல்
5 அக்நிக்குச்செய்யும் அலங்காரம்.
6 நெய்யை எடுக்கும் மரக்கரண்டி
7 மந்திரோச்சாரணம் முடியும் வரையில் ஹோமகுண்டத்தில் இடையறுதொழுகும் நெய்த்தாரை
8 ஓம்—ஆரம்பம்.
9 வௌஷட் முடிவு.
10 அக்நியில் நெய் பொட்டுப் பொட்டாய் விடுதல்.

பிராமண போஜனமாம். யாகபலியைப் புசித்த தோஷமுடையவனே தேகாபிமானமேலிட்டு இராமபிரான் திருக்கரத்தால் மரணமடையப் பயந்து ஓடிப்போய் பந்தத்திலுழலுகிறவனும். சுபாகுவுடன் இராமர் யுத்த யாகத்தை ஆரம்பித்ததும் விசுவாமித்திரர் யாகம் ஆரம்பித்ததும் ஒரே தருணத்திலாயினும் விசுவாமித்திரர் அப்பொழுதே தாம் ஆரம்பித்த யாகத்தை முடித்துவிட்டார். ஸ்ரீ ராமபிரான் காலாக்கி திருப்தியடையாமலிருந்ததைக்கண்டு அதனை மறுபடியும் திருப்தி செய்து வைப்பதற்காகத் தாம் ஆரம்பித்த இரணயாகத்தைப் பூர்த்திசெய்யாமல் நிறுத்தினர். இராமபிரான் இந்த இரணயாகத்தில் சித்ராகுதி செய்யக்கருதி பூமியைப் பாத்திரமாக்கி, அதை விராதனுடைய இரத்தத்தால் பாத்திர புரோக்ஷணை செய்தார். சூர்ப்பநகையினுடைய மூக்கையும் செவியையும் அறுத்ததே பவித்திர தர்ப்பையின் சேதம். ஐந்து பிராணாகுதிகளுக்குப் பதிலாக கரன், தூஷணன் திரிசிரஸ் மாரீசன் கவந்தன் இவ்வைந்து பேர்களையும் க்ஷணத்தில் கொன்றார்.

முடிந்த சிகையை அவிழ்ப்பதற்குப் பதிலாகச் சபரிக்குப் பந்தத்தை யொழித்து முத்தியளித்தார். பிறகு சுத்த ஜலத்தை ஸ்பரிசிப்பதற்குப் பதிலாக வாலியின் நேத்திரத்திலடித்து அந்த இரத்தத்தை ஸ்பரிசித்தார். இலங்கையாகிய அடுப்பில் தீ மூட்டி, அதில் கும்பகர்ணன் இந்திரஜித்து இவர்களாகிற அன்னம்பக்குவம் பண்ணப்பட்டது. அரக்கர்கள் யாவரும் சாகபதார்த்தமாகச்சேதிக்கப்பட்டார்கள். சாரணன் முக்கியமான அன்னமானான். பிரகஸ்தன் வடகமானான். நிகும்பன் அப்பளமானான். சூர்பன் லவணமானான். காலநேமி என்பவன் பாயஸமானான். அதிகாயன் சர்க்கரையானான். ஐராவணன் பாலானான். மைராவணன் நெய்யானான். இராவணன் யுத்தயாகத்தின் சமாப்தியில் ததியோதனமானான். இவைகளைப் பூமியாகிற பாத்திரத்தில் வைத்துக் காலனாகிற அக்நிக்கு நிவேதித்தார். அங்கு மிஞ்சிய தோல் மயிர் எலும்பு முதலியவைகளே பலி போடுவதாயின. இவ்விதம் இயமனாகிற அக்நி திருப்தி யடைந்ததின்மேல், இராமபிரான் அயோத்தியில் பிரவேசித்ததே இரண

யாகத்தின் முடிவாம். பிறகு பட்டாபிஷேகம் செய்து கொண்டதே இரணயாகத்தின் அவபிருத ஸ்நானனமாம். சகல உலகங்களுக்கும் மங்களமுண்டாக வேண்டுமென்பதைக் கோரி ஸ்ரீ ராமபிரான் இரணயாகத்தை உலகமறிய நடத்தி முடித்தார். ஏ பார்வதி, இந்த இரணயாகவைபவத்தை நீயும் அறிய உனக்குக் கூறினேன். ஸ்ரீராமர் பரமாத்மா, அதிநிர்மலர். நான் என்னும் அகங்காரம் அற்றவர். நிர்விகாரன். தனக்குத்தானே தன் ஆனந்தத்தை அனுபவிப்பவர். ஆயினும் அவர் உலகரக்ஷண நிமித்தமாக அவதரித்து, கிரகஸ்த தர்மத்தை ஆச்ரயித்துப் பற்பல தர்மங்களை நடத்தி ஹிதோபதேசம் செய்து இராஜ்ய பரிபாலனம் நடத்தி வந்தார். அக்காலத்தில் ஸ்திரீகள் அமங்கலையானதில்லை. சர்ப்பங்கள் தீண்டுவதில்லை. ஒருவரையும் நோய் அணுகுவதில்லை. ஸ்ரீராமர் உலகத்தில் ஒரு தந்தை தன் குழந்தைகளைப் பரிபாலிப்பதுபோல் பிரஜைகளைத் தமது குழந்தைகளாகவே பாவித்து, அவர்களை ரக்ஷித்துச் சீதையுடனும் சகோதரர்களுடனும் சாகேத நகரத்தில் சுகமாக வசித்துவந்தார்.

இராம இராஜ்ய பட்டாபிஷேகமாகிய
12-வது சருக்கம்
முற்றிற்று.

---

# 13 - வது சருக்கம்.

## பரமசிவன் கூறுகிறார்

ஏ பார்வதி! இப்படி சர்வ மங்களங்களும் உலகத்தில் குறைவற விளங்க இராஜ்ய பரிபாலனம் நடாத்திவரும் இராமசந்திரனைத் தரிசிப்பதற்காக அநேக முனிபுங்கவர்களோடு கும்பமுனிவர் புறப்பட்டுச் சாகேத நகரத்துக்கு வந்து, சபையில் ஆனந்தமாக வீற்றிருக்கும் இராமபிரானைக் கண்டார். இராமபிரான் இருஷிசிரேஷ்டர்களைக் கண்டதும் என்று மடையாத மகிழ்ச்சியை யடைந்து சிங்காதனத்தை விட்டெழுந்திருந்து, அவர்களுக்கு அர்க்கிய பாத்தியாதி உபசாரங்களைச் செய்து, ஆசனங்களளித்து அவைகளில் வீற்றிருக்கச்செய்து வணங்கினர். முனிவர்கள் இராமபிரான் செய்த பூஜையால் மனமகிழ்ச்சியடைந்து அவர் வினவிய குசலப் பிரசனைகளுக்குப் பதிலளித்துவிட்டு, அவருடைய யோகக்ஷேமம் விசாரிக்கலானர்கள். ஏ மகாபாகோ! இரகு நந்தன! யாவற்றிலும் உமக்கு க்ஷேமந்தானு? மேகநாதன் முதலிய அசுரர்களை நீர் கொன்றது எங்களதிர்ஷ்டவசமே. அரக்கர்கள் யாவரையும் கொன்று கிருதார்த்தராகிச் சுகமாக வசித்துவரும் உம்மை நாங்கள் இன்று தரிசிப்பதும் மகிழ்வதும் எங்களுடைய அதிர்ஷ்டமே என்று கூறினர்கள். இப்படி முனிபுங்கவர் கூறிய சந்தோஷ வசனங்களைக்கேட்ட இராமர் புன்சிரிப்புக்கொண்டு "முனி புங்கவர்களே தாங்கள் மேகநாதனை முன்வைத்துக் கூறியதற்குக் காரணம் யாதெனவினவினர்."

### மேகநாத ஜனனம்.

அதைக்கேட்ட அம்முனிவர் யாவரும் அகஸ்திய முனிவருடைய திருமுகத்தை நோக்க, அவர், இரகுநந்தனரைப் பார்த்து, 'ஏஇராமா! மேகநாதனுடைய ஜனனம், கிருத்தியும், வரப்பிராப்தி முதலியவைகளைச் சுருக்கமாய்க் கூறுகிறேன் கேளும். முன் கிருத யுகத்தில் பிரம்ம புத்திரராகிய புலஸ்தியர் என்பவர் இருந்தார். அவர் திரணபிந்து என்பவருடைய புத்திரியை மணந்து அவளிடத்

தில் மூவுலகமும் புகழத்தக்க விச்ரவசு என்னும் புத்திரனைப்பெற்றார். அவர் பிரமசரிய விரதந்தரித்து நான்கு வேதங்களையும் அத்தியயனம் செய்து நன்குணர்ந்து, பரத்வாஜ முனிவருடைய பெண்ணை மணந்து, அவளிடத்தில் வைச்ரவணன் என்கிறபிள்ளையைப்பெற்றார். அந்த வைச்ரவணன் நெடுங்காலம் பிர்மதேவனை நோக்கி அரியதவம் புரிந்தான். அவனுடைய தவத்துக்கிரங்கி, பிர்ம்மதேவன் அவனுக்குத் தரிசனந்தந்து, நினைத்த இடங்கட்கு அக்கணமே செல்லும்படியான புஷ்பகம் என்ற ஒரு விமானத்தையும் குறைவற்ற செல்வ ஸம்பத்தையும் கொடுத்து நிதிபதியாக்கி ஆசீர்வதித்துச் சென்றனர். அந்த வைச்ரவணன் தனக்கு பிர்மதேவன் கொடுத்த ஜோதிர்மயமான புஷ்பகவிமானமேறித் தன் தந்தையைத் தரிசிக்கச்சென்று அவரை வணங்கி, "பிதாவே! பிர்ம்மதேவர் எனக்குச் செய்த சம்பத்தைக் கொடுத்து வாசஸ்தலம் ஒன்றைக் குறிப்பிடாமல் சென்றனர். அவர் கொடுத்ததை வைத்துக்கொண்டு நானெங்கிருப்பது? தாங்கள் விசாரணை செய்து எனக்கு ஓரிடம் குறிப்பிடுங்கள்" என்று கேட்டான். விச்ரவசு தமது புத்திரனுடைய வேண்டுகோளுக் கிரங்கி "ஏ மைந்த! விசுவகர்மாவாகிய தெய்வதச்சனால் நிர்மாணஞ் செய்யபட்டுத் தெற்குச் சமுத்திரத்தையே தனக்கு அகழியாகக் கொண்ட லங்கை யென்றொரு பட்டணமிருக்கிறது. அதில் வசித்த தைத்தியர்கள்யாவரும் விஷ்ணுவினுடைய தொந்தரவுக்குப்பயந்து, அப்பட்டணத்தைவிட்டுப் பாதாள உலகஞ்சென்றுவிட்டனர். அங்குச் சென்று நீ சுகமாக வசித்து வா" என்றுகூறி யனுப்பினர். இதைக் கேட்டதும் வைச்ரவணன் தன் தந்தையை வணங்கி அவருடைய அநுமதிபெற்று லங்கைக்குச்சென்று அங்குக்குடியேறி நெடுங்காலம் வசித்து வந்தான். பின்னொரு காலத்தில் சுமாலி என்ற அரக்கன், கேகசி யென்ற தன்புத்திரியுடன் பூலோகத்தில் சஞ்சரித்து வருகையில், வைச்ரவணன் புஷ்பகவிமானமேறி வருவதைக்கண்டான். அப்பொழுது சுமாலி, அரக்கர்கள் யாவருக்கும் ஒருநன்மைபுரியவிரும்பிச் சற்று யோசித்துப்பார்த்து, "ஏ பெண்ணே! இங்கு விச்ரவசு என்ற முனிவர் இருக்கிறார். அவரிடம் சென்று அவரை வணங்கி, அவருக்கு மகிழ்ச்சியைத்தந்து "எனக்

குப் புத்திர பாக்கியம் தந்தருளும்'' என்று பிரார்த்திப்பாயேயா னால், அவர் அவ்விதமே அநுக்கிரகிப்பார். அப்படி உனக்குப்பிறக் கும் புத்திரர்களால் அசுரர்குலத்துக்கு நன்மையுண்டாம்'' என்று கூறியனுப்ப, அந்தக்கேகஸி உடனே விச்ரவசு முனிவரிடம் சென்று, அவரை நமஸ்கரித்து, அவர் எதிரில் தன் கால் பெருவிர லால், தரையில் கீறிக்கொண்டு தலை குனிந்து நின்றாள். அப்பொ ழுது அந்திநேரமாயிருந்தது. இப்படி நிற்கும் கேகஸியை அம் முனிவர் சற்றநேரத்திற் கெல்லாம் கண்விழித்துப் பார்த்து, "மாதே! நீயார்? இங்கு யாதுகாரணம் பற்றிவந்தனை?' என்று வினவ, அவள் "சர்வக்ஞ! எல்லாம் தங்கள் சித்தம் அறிந்ததே?" என்று கூறிவிட்டு மௌனமாயிருந்தனள். முனிவர் சற்றநேரம் தியானத்திலிருந்து "உன் உள்ளக் கருத்தை யானறிந்தேன். நீ என்னிடம் புத்திரபாக்கியம் பெற விரும்புகின்றாய்! சிறுத்த இடை யுள்ளவளே! நீ விரும்பி வந்திருக்கும் வேளை கொரேமான சந்தி காலமானதால் உனக்கு இரண்டு பிள்ளைகள் கொரேமான அரக்கர்களாகப் பிறப்பார்கள்'' என்று அநுக்கிரகித்தார். இதைக் கேட்டதும் கேகஸி அந்தமுனிவரைப்பார்த்து, "ஏ மகாநுபாவ! பரமசாந்த சீலராகிய தங்களை யடைந்த அடியேனுக்கு அப்படிப் பட்ட புத்திரர்கள் உண்டாகுமெனக் கூறுவதைக்கேட்க என் மனம் வருந்துகிறது" என்றாள். முனிவர் "ஏ பெண்ணே! நீவருந் தேல். உனக்கு மூன்றாவதாக ஒருபுத்திரன் பிறப்பான். அவன் சாந்த சீலனும் மகாபுத்திசாலியாயும், பரமபக்தசிரோமணியா யும் இருப்பான்'' என்று அநுக்கிரகித்தனுப்பினர். பிறகு கேகஸி அந்தப்படியே காலக்கிரமத்தில் முதலில் ராவணன் கும்பகர்ணன் என்கிற இரண்டு பிள்ளைகளையும் பிறகு கிரௌஞ்சை, சூர்பணகை, கும்பீநஸி என்னும் மூன்று பெண்களையும் கடைசியில் விபீஷணன் எண்கிற புத்திரனையும் பெற்றாள். அவர்களில் முதலிரண்டு பிள்ளை களும் மூன்று பெண்களும் பிராணி பட்சணம் செய்துகொண்டு முனிவர்களை ஹிம்சித்து வந்தார்கள்.

இப்படியிருந்து வருகையில், ஒருநாள் கேகஸி தான் ஆத்ம லிங்க பூஜைசெய்யக்கருதி, அதைக்கொண்டுவருவதற்குப்பரமசிவ னிடம் போய் வரும்படி இராவணனை யனுப்பினள். இராவணன்

புறப்பட்டுக் கைலாய பர்வதஞ்சென்று அங்குத் தான்பரமசிவனைப் பிரத்தியட்சத்தில் தரிசிக்கவிரும்பி ஒரு அசாத்தியமான செய்கை யைச் செய்தான். அதாவது-வீணாகானம் செய்து பரமசிவனுக் குத் திருப்தியுண்டாக்கக் கருதி தன்தலையை வீணைக்கிணைக்சமாக அறுத்துத் திருப்பிக்கொண்டு தன் தேகத்தை வீணைக்குப் பீட மாக்கி, தன் பாதங்களை வீணையின் நுனிப்புறமாகக்கொண்டு விரல் களை அதன் மூளைகளாக அமைத்து, நூறுயிரக் கணக்கான தன் தேக நரம்புகளை அதற்குக் கம்பிகளாகப் பொருத்திச் சுருதி சேர்த்து அந்தச்சுருதிக்கொத்தபடி தன்வாயால் சுகமான கந்தர்வ கானத்தைப் பாடி ஸ்தோத்திரஞ்செய்தான். இதையறிந்த சர் வக்ஞரான சங்கரர், நந்தியை யழைத்து "ஏ நந்தி! நீ இராவணனி டம் சென்று அவன்சிரஸை ஸ்பரிசித்து, " நீ ராட்சஸனாகையால் உனக்குப் பரமசிவன் ஆத்மலிங்கத்தைக் கொடுக்கமாட்டார். நீ உன்னிருப்பிடம் செல் என்று கூறிவா" என்று கட்டளையிட் டார் நந்தி உடனே இராவணனிடம் சென்று அவன் சிரஸை ஸ்பரிசித்துப் பரமசிவன் உத்தரவைத் தெரிவித்தார். அதைக்கேட் டும் இராவணன் அவ்விடத்தை விட்டசையாமலும் பாடுவதைநிறுத் தாமலும் அன்று இரவைக்கழித்து மறுதினமும் முன்தினம்போ லவே கானம் செய்தான். சங்கரரும் முன்போலவே நந்தி மூல மாய்த் தெரிவித்தார். இவ்விதம் பத்துநாள் நடந்துவந்தது. பிறகு சங்கரர் அவனுடைய கானத்துக்குகந்து பிரஸன்னராகி "ஏ இராவ ணா! நீ விரும்பியவரனைக் கேள்" என்று கூறினர். உடனே இராவ ணனது அறுபட்ட சிரசு தேகத்தில் முன்போலவே பொருந்திற்று. பிறகு இராவணன் எழுந்து ஈசுவரனை வணங்கி, தன் அன்னைக்கு ஓர் ஆத்தமலிங்கமும் தனக்குப் பார்வதி தேவியையும் தந்தருளும் படி வரங்கேட்டான்; அவ்விதமே அவரிடமிருந்து பெற்றுக் கொண்டு புறப்பட்டான். அப்பொழுது அவனைப்பார்த்து, "ஏ, இராவணா! நீ எனது திருப்திக்காக உனது தலையைப் பத்துத்தடவை கத்தியால் அறுத்தமையால் உனக்குப் பத்துச்சிரங்களும் அதற் கேற்ப இருபதுகரங்களும் என் சொற்படி உண்டாகும்" எனவும் வரங்கொடுத்தார். பின் இராவணனுக்குப் பத்துத்தலைகளும் இரு பது கைகளு முண்டாயின. இது போலவே கற்பாந்தரங்களில்

இராவணன் நூறு தடவை தலையை அறுத்ததினிமித்தம் நூறு தலைகளும் இருநூறு கைகளும் உண்டாயின என்றும் சொல்லு கிறார்கள். இராவணன் இப்படி உக்ரமான தவம்புரிந்து இலிங்கத் தையும் பார்வதியையும் பெற்றுக்கொண்டு தன்னிடத்துக்குச் செல்லும் வழியில் அவனை மகாவிஷ்ணு சந்தித்து முற்கூறிய உபாயத்தால் ஏமாற்றி உன்னை (பார்வதியை) மீட்டு வந்தார். * நீ யன்றோ இராவணனிடமிருந்து ஆத்மலிங்கத்தை வாங்கிச் சமுத்தி ரக்கரையில் ஸ்தாபித்தது? பிறகு அவ்விடம், கோகர்ண க்ஷேத்திர மென ஆனதும் உன்னாலன்றோ?

பிறகு இராவணன் தன் கிருகமடைந்து தன் தாயாரின் கோரிக்கை நிறைவேறாமைக்கு வெட்கமடைந்து வருந்தினான். இதன் பின் விஷ்ணுவின்சொற்படி மயன்மகள் மந்தோதரியை மணந்து சுகமாக இருந்தான். [ராவணன் ஆத்மலிங்கம் பெறப் பரமசிவனிடம் சென்றானென்பது முற்கூறியுள்ள தெனினும் இங்குமீண்டும் கூறியது இராவணன் தன் தேகத்தை வீணையாக் கிப் பரமசிவனைத் துதித்தா னென்பதையும் அவன் பத்து சிரங்க ளும் இருபதுகரங்களும் அதன் மூலமாகப் பெற்றானென்பதை யும் விளக்குவதற்கேயாம்.]

இப்படி இராவணன் வாழ்ந்துவரும் நாளையில் அவன் தாயார் கேகஸி வைச்ரவணன் புஷ்பகவிமானத்தில் சஞ்சரிக்கும்போது அதனைப் பார்த்து அவன் வாழ்க்கையில் பொறாமை கொண்டு தன் பிள்ளையை யழைத்து, "உங்கள் ஸபத்நீ மாதாவின் பிள்ளை யாகிய ஞாதியின் வாழ்வைப்பார்த்துச் சிறிதும் வெட்கமடையாத நீங்கள் நபும்ஸகர்களோ? அல்லது பிணத்துக்கு ஒப்பானவர் களோ?" என்று திட்டி அவமதித்தாள். உடனே அம் மூவரும் வீட்டை விட்டுப் புறப்பட்டுத் தவம் செய்யக் கோகர்ணக்ஷேத்தி ரம் சென்றார்கள்.

* முன் மகா விஷ்ணு அந்தணர் வேஷம் பூண்டு இராவணன் முன் தோன்றி அவனிடமிருந்து ஆத்மலிங்கத்தை வாங்கி ஸ்தாபித்தாரென்று கூறினவர் இங்குப் பார்வதியென்று கூறினமையால் விஷ்ணுவுக்கும் பார் வதிக்கும் அபேதம் கூறப்பட்டது.

இங்கே கும்பகர்ணன் பதிஞயிரம் வருஷகாலம் கடுந்தவம் புரிந்தான். விபீஷணன் தர்ம சிந்தனையுடன் சத்தியபரஞயிருந்து, கால் பெருவிரலில் நின்று ஐயாயிரம் வருஷம் அருந்தவம் புரிந்தான். தசானனன் புகையை ஆகாரமாக அருந்தி தேவ வருஷத்தில் ஆயிர வருஷம் தவப்புரிந்தான். ஆயிரம் வருஷத்திற்கு ஒரு தரம் தன் தலை ஒன்றை அறுத்து அக்கினியில் ஹோமம் செய்தான். இவ்விதம் ஒன்பதிஞயிரம் வருஷம் கழிந்ததன் மேல், பத்தாவதாயிர வருஷத்தின் முடிவில், பத்தாவது தலையை அறுக்க விரும்பிய போது, அவனது தவத்துக் கிரங்கிய பிரமதேவர் அவன் முன் தோன்றி "ஏ இராவண! நின் தவத்தால் யாம் மகிழ்ந்தோம். நீ கோரிய வரங்கள் யாவை?" எனக்கேட்டார். இராவணன் அகிலநாதா! சுபர்ணன், நாகர்கள், யக்ஷர்கள், தேவர்கள் அசுரர்கள், சங்கரர், விஷ்ணு, நீர் இவர்கள் யாவராலும் எனக்கு மரணமுண்டாகக்கூடாது. மனிதர்கள் எனக்குத்திரணத்துக் கொப்பானவர்களாதலால், அவர்களைப்பற்றிக் கவலையில்லை" என்று கூறி வரங் கேட்டான். பிரமதேவர் "நல்லது நீ விரும்பியவாறே ஆகுக" எனக் கூறிஅவனது ஒன்பது சிரங்களையும் முன்போலவே உண்டாக்கிஞர். பிறகு விபீஷணனிடஞ்சென்று அவன் தவத்துக்கு மனமகிழ்ந்து உத்தமமானபுத்தியையும் அமரத்வத்தையும் அவனுக்கு அளித்தார். இதன்பின் தேவேந்திரபதவியை யடையவேண்டு மென்று விரும்பிய கும்பகர்ணனைப்பற்றி, சற்று யோசித்துத் தன் பத்தினி சரஸ்வதியைக் கொண்டு அவன் புத்தியைமயக்கி, அவனிடம் சென்று "கும்பகர்ண! உனக்கு வேண்டிய வரம் யாது?" எனவினவினர். கும்பகர்ணன் "ஜகத்கர்த்தாவே! ஆறுமாதகாலம் சுகமாக நித்திரைசெய்ய வேண்டும்" என்றுகேட்டான். பிரமதேவர் அவன் கேட்டபடியே ஆறுமாதத் தூக்கத்தையும் கொடுத்து அதற்குள் ஒருநாள் நித்திரை தெளிந்து எழுந்து வசிக்கவும் வரங்கொடுத்து மறைந்தனர்.

இராவணுதி மூவரும் இப்படி வரங்களைப் பெற்றுக்கொண்டு தங்களிடம் சென்ருர்கள். அவன் பாட்டஞகிய சுமாலியென்பவன் இவர்கள் பெற்று வந்த சிரேஷ்டமான வரங்களுக்குச் சந்தோஷித்துப் பயமொழிந்து தன்பேரன்மார்களுடன் பிரஹஸ்தன்முதலிய மந்திரிகளுடனும் பாதாளலோகத்திலிருந்து பூலோகத்துக்கு

வந்து, சுகமாகச்சஞ்சரித்தான். இப்படிச் சஞ்சரித்து வருகையில் தாங்களிருக்க ஒரு வாசஸ்தலத்தை நாடி யோசித்தார்கள். அப்பொழுது பிரஹஸ்தன் லங்காபட்டணத்தைத்தகுந்த வாசஸ்தலமாகக் கூற, உடனே இராவணன் லங்காபட்டணம் சென்று அங்கிருக்கும் வைச்ரவணனைப் பாலாத்காரமாகத் துரத்திவிட்டு, அங்கே குடியேறி ராக்ஷஸர்களுடன் லங்கையை யாண்டுவந்தான். வைச்ரவணன் உடனே அங்கிருந்து புறப்பட்டுத் தன் தந்தையையடைந்து நடந்ததைத்தெரிவித்தான். தந்தை விச்ரவசு, "வைச்ரவண! நீகைலாசமலை சென்று அங்குத்தவம்புரிந்து சிவனிடத்தில் உன்கோரிக்கைகளைத் தெரிவி" யெனக்கூறினர். வைச்ரவணன் அவர் சொற்படியே கைலாசமலைசென்று அருந்தவம் புரிந்து பரமசிவனுக்கு மகிழ்ச்சி யுண்டாக்க, அவர் அவனைந் தமக்கு மித்திரனாகக் கொண்டார். பிறகு தமதிருப்பிடத்திற் கருகே, விஸ்வகர்மாவைக்கொண்டு அளகை என்கிற ஒரு பட்டணத்தை நிர்மாணஞ்செய்வித்து, அதை அவனுக்குச் சொந்தமாக்கி வடதிசையின் ஆதிபத்தியத்தையு மளித்துக் குபேரனெனப் பெயரிட்டார்.

இராவணன் தன் தங்கை சூர்ப்பணகையை வித்யுஜ்ஜிஹ்வன் என்பவனுக்கு மணஞ்செய்து கொடுத்துத் தண்டகாரண்யத்தை அவளுக்கு ஸ்திரீதனமாக அளித்து, தன் தாய்வழிச் சிற்றன்னையின் மக்கள்களாகிய கரன் தூஷணன் திரிசிரஸ் இவர்களையும் அவர்களுக்குத் துணையாக வைத்தான். பிறகு சில நாட்களுக்கெல்லாம் வித்யுஜ்ஜிஹ்வன் என்பவன் இறந்துபோனமையால், சூர்ப்பணகை வைதவ்யத்தை யடைந்தாள். இதன்பின் இராவணன் தன்மற்றொரு சகோதரியாகிய கும்பீநஸி என்பவளை மது என்ற தைத்தியனுக்கு மணஞ்செய்து கொடுத்து அவளுக்குச் சிரேஷ்டமான மதுவனத்தை ஸ்திரீதனமாக அளித்தான். மற்றொரு சகோதரியாகிய கிரௌஞ்சை என்பவளைக் கடகஜிஹ்வன் என்பவனுக்கு மணஞ்செய்து கொடுத்து பரலங்கை என்னும் பட்டணத்தை அவளுக்கு ஸ்திரீ தனமாக அளித்தான். பிறகு வைரோசனன் என்பவனுடைய பேத்தி விருத்திரஜ்வாலை என்பவளை அவனுடைய பிரார்த்தனைக்கிணங்கி கும்பகர்ணனுக்கு மணஞ்செய்வித்தான். சைலூஷன் என்

கிற கந்தர்வராஜனுடைய பெண் சரமை என்பவளை விபீஷண னுக்கு மணஞ்செய்வித்தான்.

இப்படி யிருக்கையில் மண்டோதரிக்கு ஒரு புத்திரன் பிறந் தான். அவன் பிறந்த அக்கணமே மேகம்போல் கர்ச்சித்தமை யால், அவனுக்கு மேகநாதனெனப் பெயரிடப்பட்டது. கும்பகர் ஒரு குகையைத் தனக்கு நித்திரை ஸ்தானமாக்கிக் கொண்டு அதில்சுகமாகத்தூங்கினன். இராவணன் தேவர்கள் கின்னரர் கள் கந்தர்வர்கள் ரிஷீசுவரர்கள் நாகர்கள் இவர்களை யெல்லாம் இம் சிப்பதும் அவர்கள் மனைவிமார்களை அபகரிப்பதுமாக இருந்துவந் தான். இப்படி இராவணன்செய்யும் அக்ரமங்களை யறிந்த வைச்ரவ ணன் ஒரு தூதன்மூலமாய் அக்ரமஞ் செய்வது உனக்குத்தகா தென இதங்கூறினன். இதைக்கேட்டதும் இராவணன் அதிக கோபங்கொண்டு உடனே அளகாபுரிக்குச்சென்று வைச்ரவணனை யெதிர்த்து யுத்தம் புரிந்து அவனிடமிருந்த புஷ்பகவிமானத்தைப் பிடுங்கிக்கொண்டு அங்குச் சிலநாள் வசித்தான். இதற்குமுன் யொருநாள், வைச்ரவணன் பிள்ளையாகிய நளகூபரன் தன்னை விரும்பிப் பிரார்த்தித்தற் கிணங்கிய தேவலோகமாதாகிய இரம்பை, அவன் குறிப்பிட்டதினமாகிய ஓரிரவு இராவணன் அளகைக்குவந்து வசிப்பதை அறியாளாதலால், தன் பாதச்சிலம்பு கலகலவென்று ஒலியிட வேகமாக நளகூபரனது கிருகத்தக்குவந்தாள். இந்தச் சிலம்பொலி இராவணன் செவியிற்பட்டதும் அதன் வழியே இரம் பையையறிந்து அவளையழைத்துத் தான் அவள்மேற்கொண்ட காதலைத் தெரிவிக்க, அவள் அதற்கிணங்காததினல், அவளைப் பலாத்காரமாகப் புணர்ந்தான். பிறகு இரம்பை நளகூபரனிடஞ் சென்று இராவணனுடைய அக்ரமத்தைத்தெரிவித்தாள். நளகூபரன் அதைக்கேட்டதும் மிகக்கோபங்கொண்டு இனி அவன் தன் இச் சைக்கிசையாத மாதை பலாத்காரஞ்செய்து சுகிப்பானுனல், உட னே மரிக்கக்கடவன் என்று கடுஞ்சாபமிட்டான். இராவணன் சா ரர்கள் மூலமாய்த் தனக்கு நளகூபரினிட்ட சாபத்தையறிந்து, அன்று முதல் தன் இச்சைக்கிசையாதமாதை பலாத்கரிப்பதில்லை யெனத் தீர்மானித்தான். பிறகு அங்கிருந்து யமலோகஞ்சென்று யமனை யுத்தத்தில் வென்று அங்கிருந்து வருணலோகஞ் சென்று

வருணனையும் வென்று இந்திரனை இம்சிக்க விரும்பி ஸ்வர்க்க லோகம்போய் அவனை எதிர்த்தான். இந்திரன் இராவணனுடன் உக்ரமான யுத்தம் புரிந்து அவனைக் கட்டிச் சிறையிட்டான். இச் செய்தியை இராவணன் புத்திரன் மேகநாதன் அறிந்து உடனே ஸ்வர்க்லோகம்வந்து இந்திரனுடன் கோரமான யுத்தம் புரிந்து தனது தந்தை இராவணனை விடுவித்து இந்திரனைக் கட்டிப்பிடித் துக்கொண்டு லங்கைக்கு வந்தான். இச்சங்கதி யறிந்த பிர்மதே வர் உடனே லங்காபட்டணத்துக்கு வந்து மேகநாதனைப் புகழ்ந்து அவன் விரும்பிய வரங்களை யளித்து, “இனி இவ்வுலகில் உன்பெ யர் இந்திரஜித்தென வழங்கக்கடவது” என்றுகூறி, இந்திரனை விடு வித்துத் தமது லோகஞ்சென்றார். ஆகையால் இராவணனைவிட இந்தி ரஜித்தே பலசாலி யென்பதும் யுத்தப் பிரியனென்பதும் பெறப் படுவதால், அவனை முதலில்வைத்துக் கூறினேமென்று முனிபுங் கவர் ஸ்ரீராமபிரானுக்குத் தெரிவித்தனர்.

பிறகு இராவணன் கிரமமாக பூலோகத்தில் யாவரையும் ஜயித் துத் திக்பாலகர்களாகிய அக்நி நிருதி வாயு ஈசானன் இவர்களையும் ஜயித்து கைலாசமலையைக் கம்பீரமான புஜங்களால் அசைத்தான். அப்பொழுது உமாதேவியானவள் பயந்து கைலாசபதியைக் கட்டிக்கொண்டாள். இதையறிந்த கைலாசபதி தமது இடதுகாற் பெருவிரலை அம்மலையின் சிகரத்தில் அழுத்தினர். உடனே மலை யானது கீழே அழுந்தி கொடிபோல் நீண்ட இராவணனுடைய இரு பது கைகளையும் நசுக்கிற்று. அப்பொழுது இராவணன் ஒரு தூணிற் பிணிக்கப்பட்ட திருடன்போற் கதறியழுதான். அங்கிருந்த நந்தி தேவர் இராவணனைப்பார்த்து “ஏ இராவணா! நீ குரங்கு போல் சஞ்சலமான கர்மத்தைப் புரிந்தமையால், அச்சுபாவமுள்ளகுரங்கு களாலும் மனிதர்களாலுமே உனக்கு நாசமுண்டாகக் கடவது” என்று சபித்தார். பிறகு வெகுகாலங் கழிந்தபின் கைலாசபதிக்கு இரக்கம்வந்து அவனை அக்கஷ்டத்தினின்றும் விடுவித்தனர். இவ் விதம் நந்தியால் சபிக்கப்பட்டும் இராவணன் சிறிதும் மனக்கவலை கொள்ளாமல் அங்கிருந்து ஹைஹயபட்டணஞ் சென்று அந் நகரத்து அரசன் கார்த்தவீரியார்ச்சுனனை அமருக்கழைத்தான். அவன் நகரத்துக்கு வெளியே சென்றிருப்பதாகத் தெரிந்து

அச்சமயம் மத்தியான்ன வேளை யானதால் அப்பட்டணத்திற் கருகே ஓடும் நருமதை நதிக்குச் சென்று அந்நதியில் ஸ்நானஞ் செய்து அங்கே பரமசிவ பூஜையைச் செய்தான். அந்த இடத்திற்குச் சற்றுக் கீழ்ப்புறத்தில் கார்த்தவீரியார்ச்சுனன் ஜலக்ரீடை செய்யும் பொருட்டு வந்தான். இங்கே ஜலக்ரீடைக்குப் போதுமான ஜலமில்லாமையால், தன் ஆயிரங் கைகளில் ஐந்நூறு கைகளைப்பரப்பி ஆற்றைத்தடுத்து ஜலத்தைத் தேக்கிக்கொண்டு மற்ற ஐந்நூறு கைகளாலும் பதினாயிரக் கணக்கான ஸ்திரீகளுடன் கிரீடை செய்தான். இதனால் சற்று மேற்கே தியானத்திலிருந்த இராவணன் முழுகும்படி ஜலம் பெருக, அவன் உடனே தியானத்தை விட்டு எழுந்து, இது கார்த்தவீரியார்ச்சுனனுடைய காரியந்தானென்று கருதி, அவனிருக்கு மிடஞ்சென்று அவனை அமருக் கழைத்தான். கார்த்தவீரியார்ச்சுனன் இராவணனுக்கு இருபது கைகளிருப்பதைக்கண்டு தன் கைகளில் இருபதுகைகளால் அவனை நையப்புடைத்து அவன் கழுத்தில் ஒருகயிற்றைக்கட்டிஅவனைத் தன் பிள்ளைகளுக்கு விளையாட்டுப் பதுமையாக அனுப்பி விட்டான்.

இப்படிச் சிலநாட் சென்றபின் இராவணன் பாட்டனாகிய புலஸ்திய முனிவர், இச்சங்கதியைக் கேட்டு வெட்கமடைந்து கார்த்த வீரியார்ச்சுனனிடம்வந்து, அவனுக்குத் தக்கவிதம்சொல்லி இராவணனை விடுவித்தார். அப்படியிருந்தும் தன்னைவிட எவ்வளவோ மடங்கு பலசாலிசான வாலியைக்கொல்லக்கருதி, அவன் கிழக்கு சமுத்திரத்தினின்று தியானஞ்செய்துகொண் டிருக்கும்போது, அவனுக்குப் பின்புறமாகச்சென்று அவன் சரீரத்தைப் பிடித்தான். வானரசிரேஷ்டனாகிய வாலி, தசகந்தரனைத் தன்கைகளால் தன் சரீரத்தோடுசேர்த்து இடுக்கிக்கொண்டு நான்கு சமுத்திரங்களிலும் சுற்றிப்படித்து, வேகமாகக் கிஷ்கிந்தைக்குவர, அப்போது அவனுடைய குழந்தையாகிய அங்கதன் தன்தந்தையைப் பார்க்க விரும்பி வேகமாக ஓடிவந்தான். வாலி அக்குழந்தைக்கு முத்தங் கொடுக்க வெண்ணித் தன்கைகளைவிரித்துக்குழந்தையை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டான். வாலி கையைவிரித்ததும் இராவணன் அவனுடைய கட்கத்திலிருந்து தரையில் பொத்தென்று

விழுந்தான். அப்படிவிழுந்த இராவணனைத்தன் குழந்தைக்கும் தன் பத்தினிக்கும் பட்டணத்து ஜனங்களுக்கும் காண்பித்தான். பிறகு இராவணனைத் தன் குழந்தை அங்கதனுடைய தொட்டிலிற்கு மேலே தலைகீழாகத்தொங்கவிட்டு விளையாட்டுக் காட்டினுன். அப்பொழுது அக்குழந்தை ஜலமோசனம் செய்ய, அது இராவணனது முகங்களைக்கழுவிற்று. இப்படி அநேககாலம் சென்றபிறகு, வாலி தனக்கே சலிப்புண்டாய் இராவணனை விடுவித்தான். இராவணனும் வாலியைத் தனக்கு மித்திரனுக்கிக் கொண்டு புஷ்பகவிமான மேறிச் சுகமாகச் சஞ்சரித்து பூலோகத்திலுள்ள மற்ற வீரர்களையும் வென்று விட்டுப் பாதாள உலகம் செல்ல, அங்கு கோடி சூரியப்பிரகாசம் போன்றிருந்த மகாபலி புரத்தின் காந்தியால் புஷ்பக விமானத்தின் ஒளி மங்கிப்போனபடியாய், அது இருந்த இடம் விட் டசையாமல் நின்றுவிட்டது. அப்பொழுது இராவணன் தன்விமானத்தை விட்டிறங்கிக் கால்நடையாய்த் தனியே வாய்பேசாமல் கோட்டை வாயிலுக்கருகே சென்றுன். அங்கே கோடி சூரிய பிரகாசமாய்ப் பீதகௌஸேய வஸ்திர தாரியான நான்கு புஜமுள்ளவராய்ப் பக்கத்தில்பத்தினியுடன் வாமனுவதாரங்கொண்டு துவார பாலகரா யிருந்து வரும் உம்மைப் பார்த்து, “இந்நகரத்து அரசன் யார்? அவன்எங்குள்ளான்? உடனேதெரிவி” யென்றுன். அதற்கு நீர் சத்துருவாகிய அவனுக்கு யாதொருபதிலும் கூறுமல் மௌனமாகவிருந்தீர். அப்பொழுது அவன் உம்மைச்செவிடனென்று எண்ணி அரண்மனைக்குட்புகுந்து, அங்கே தன் பத்தினியுடன் காய்விளையாடிக்கொண் டிருக்கும் மகாபலியைக்கண்டு, அவ்விளையாட்டையும் அவனுடைய லக்ஷ்மி ஸம்பத்தையும் பார்த்தான். அச்சமயத்தில் பலியினுடைய கையிலிருந்து ஒருகாய் நழுவிக் கீழே விழுந்தது. அதை யெடுத்துவரும்படி அங்கே நின்ற இராவணனுக்கு மகாபலி அக்ஞாபித்தான். இராவணன் அதை எடுக்க அதிவேகமாய்ச் சென்று, அக்காயைக் கையால் அசைக்க, அது அசைக்கமுடியாமலிருக்கக்கண்டு, கிரமமாக இருபது கைகளையும் உபயோகித்துத்தூக்கினுன். அப்பொழுது அவன் கைகளின் விரல்கள் அக்காய்க்கும் பூமிக்கும் இடையே அகப்பட்டு நசுங்கின. இராவணன், இப்படிவெகு நேரம் அவஸ்தைப் பட்டு அழுது கொண்டி

ருந்தான். இதைப்பார்த்த மகாபலி நகைத்துத் தன் வீட்டுப்பணிவி டைக்காரிக்கு அக்காயை எடுத்துவர உத்தரவிட்டான். அவள் உட னே அக்காயை அலட்சியமாக எடுத்துவந்து கொடுக்கப்பெற்றுக் கொண்டு மகாபலி இராவணனைப் பலவாறு திட்டி, அரண்மனையி லிருந்து அவனை வெளியே துரத்தினான். வெளியேவந்ததும் அங் கிருந்த இராஜதூதர்கள் அவனைப்பிடித்துத் தங்கள் வசம்வைத்துக் கொண்டு அவனுக்குத் தாங்கள் புசித்து மீந்ததை ஆகாரமாகக்கொடு த்து அங்கே யிருக்கும் குதிரைக்கொட்டடியிலுள்ள குப்பைகளை வாரி வெளியே எறியும்படி வேலையிட்டார். இப்படியிருக்கும் முறைவணங்கி என்னை இவர்களிடமிருந்து விடுவிக்கவேண்டு மென்று பிரார்த்திக்கே, நீர் அவனை உமது பாதப்பெருவிரலால் உந்தித்தள்ளி இலங்காபட்டணம் சேர்த்தீர். அவன் இலங்கையை யடைந்து தான் மறுஜன்ம மடைந்ததாக நினைத்து மகிழ்ந்தான்.

இராவணன் யாவரையும் தனக்குக் கீழாக்கக்கருதி, இவ்வி தம் பலதடவை புஷ்பகவிமானமேறி உலகங்களில் சஞ்சரித்து வந்தான். இக்காலத்தில் இந்த சாகேத நகரத்தில் எமது முன் னோரில் ஒருவராகிய அநரண்யரென்பவர், யாகஞ்செய்துகொண் டிருந்தார். இராவணன் அவரைக்கண்டு அவருடன் அமர்புரிந்து அவரைக்கொன்றான். அவர் இறக்குந்தருவாயில் இராவணனைப் பார்த்து "அடே இராவணா! நீ யாகஞ்செய்து கொண்டிருக்கும் என்னை அகாரணமாய்க் கொன்றமையால், இனி என்வம்சத்தில் ஜனனமாகும் இரகுநந்தனனால் குடும்பத்துடன் அழிக்கப்படுவாய்" என்று சபித்து விட்டு ஸ்வர்க்கலோகம் சென்றார். பிறகு இராவ ணனும் இந்த வெகுமானத்தைப் பெற்றுக்கொண்டு இலங்கைக் குச் சென்றான்.

பின் னொருகாலத்தில் பிர்ம புத்திரராகிய ஸனத்குமாரமுனி வர் ஏகாந்தமாக இருக்கக்கண்டு, அவரை வணங்கி "ஏ பகவானே தேவர்களுக்குள் யார்சிரேஷ்டமானவர்" என்று இராவணன் பக்தி யுடன் கேட்டான். அதற்கு அவர் மகாவிஷ்ணுவென்று கூறி னர். உடனே அதன் யுத்தத்தில் அவரால் மரணமடைந்த இராட் சதர்களுக்கு எக்கதியுண்டாகும் என்று வினவினான். அவரால் மர

ணமடைந்தவர்கள் என்றும் அடைதற் கரிதான மோக்ஷத்தைப் பெறுவார்களென்றார் முனிவர். இராவணன் இதைக்கேட்டதும் அவரைமறுபடியும் வணங்கி, அப்படிப்பட்டவிஷ்ணுவின்கையால் நான் மரணமடைய வேண்டும், அஃதெப்படி எனக்குக் கிடைக்கும்'' என்றுக் கேட்டான். அதற்கு அம்முனிவர், "வரும் திரேதாயுகத்தில் விஷ்ணு அயோத்தியா பட்டணத்தில் மனிதனாக அவதரிக்கப்போகிறார். அவருடன் நீ அப்பொழுது கோரமான பகைகொண்டு யுத்தம் புரிந்து மரணமடை. அப்பொழுது உனக்கு முத்தி கிடைக்கும்'' என விடையளித்தார். அதனால், இராவணன் உம்முடைய விரோதத்தை யடைய பஞ்சவடிக்கு வந்து சீதையை யபகரித்து இலங்கா பட்டணத்தில் அசோகவனத்தில் வைத்து மாதாவைப்போல், பாதுகாத்து வந்தான். பின்னொரு காலத்தில் தற்செயலாய் ஆகாசத்தில் சஞ்சரித்து வரும் நாரதரைக்கண்ட இராவணன், அவரை வணங்கி, "ஏ முனிபுங்கவரே! நான்மிக்க பலசாலியுடன் அமர்புரிய விரும்புகிறேன். தாங்கள் திரிலோக சஞ்சரியானதால் அப்படிப்பட்டவர்கள் எங்கிருக்கிறார்கள்;? அதை எனக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன்'' என்று வினவினான். முனிவர்சற்றுயோசித்துப்பார்த்து "ஏ இராவண! சுவேதத்வீபத்தில், மகாபலமுள்ளவர்களும்திடகாத்திர தேகமுடையவர்களுமாகப் பலபேர்களிருக்கிறார்கள். அவர்கள் யாவரெனில், விஷ்ணுவை பக்தியுடன் ஆராதித்தவர்களும் அவருடைய கையால் மரணமடைந்தவர்களுமேயாவர். அவர்கள் மகாபலசாலிகளானதால், சுராசுரர்களில் எவரும் அவர்களைஜயிக்க வல்லவர்களல்லர்'' எனக்கூறிச் சென்றனர். இதைக் கேட்டதும் இராவணன் இலங்கைக்குச் சென்று தன் மந்திரிமார்களுடன் புஷ்பகவிமானமேறி, சுவேதத்தீவினருகிற்செல்ல, அந்தத்தீவின் காந்தியால், புஷ்பகவிமானத்தின் ஒளிமழுங்கி, இருந்த இடத்தை விட்டசையாமல் நின்றுவிட்டது இதைக்கண்டதும் இராவணன் கால் நடையாக நடந்து சுவேதத்தீவிற்குள் சென்றான். அப்போது மலர்கொய்ய உத்தியானவனத்திற்குப்போய்க் கொண்டிருக்கும் ஒரு தாவியானவள், இராவணனைத் தன்கையால் பிடித்துக்கொண்டு, "அவனை நீயார்? உன்னையார் அனுப்பினது?'' எனக்கேட்டு நகைத்துவிட்டு, அவள் தன்னோடு கூடவந்த தோழிகளுக்கும்

அவனைக்காண்பித்து முகங்களிலடித்து, அவனது ஒரு காலைப்பிடித்துத் தலைகீழாகச்சுற்றி ஒருவர்க்கொருவர் எறிந்துகொண்டு பலவாறு விளையாடிக் கடைசியாக, ஒருத்தி அவனைத்தன் ஒரு கையால் தூக்கி வீசியெறிய, அவன் பரலங்கையில் கிரௌஞ்சையின் சேளசகூபத்திற்போய்விழுந்தான். இராவணன் தான் இப்படி விழுந்ததைப் பொருட்படுத்தாமல், தான் அம்மாதர்கள் கையிலிருந்து தப்பினதையே மேலாகக்கருதி, அவர்களுடைய பலத்தை நினைத்து நினைத்து ஆச்சரியமுற்று, "ஓகோ! இவர்கள் மகாவிஷ்ணுவின் கையால் மரணமடைந்ததல்லவா இவ்விதமான பலத்தை யடைந்திருக்கிறார்கள்; ஆகையால் இப்பூவுலகில் நாம் எவ்விதமாவது விஷ்ணுவினுடைய கையால் மரணமடைந்து சுவேதத்தீவில் ஜனனமாகவேண்டும்" என்று தன் மனதில் நினைத்து, அந்த விஷ்ணுபகவானுக்குத் தான மிகக்கோபமுண்டாக்க நிச்சயித்தே, சீதையை எடுத்துச்சென்றான்; பிறகு தான் இவ்விதம் வதமடையக்கருதியே ஜானகியை லக்ஷ்மிதேவியென்றறிந்து தாயைப்போல் பாவித்துப் பாதுகாத்தான் என்று அகஸ்தியர் கூறினர்.

ஸ்ரீராமசந்திரர் கூறுகிறார்.

முனிவர் பிரானே! இதுவரையில் தாங்கள்கூறி வந்தவைகளைக் கேட்டு மனமுவந்தேன். இன்னும் சிலவற்றைத் தமதுமுகமாகக் கேட்க விரும்பியுள்ளேன்" என்றுகூறி, "ஏ முனிவரே! இந்திரனும் சூரியனுமே பூவுலகில் வாலி சுக்ரீவர்களாகப் பிறந்தார்களெனச் சொல்லப்படுகிறதே; அஃதெப்படி?" என்றார் உடனே அகஸ்தியர் இராமபிரானைப்பார்த்து "ஏ இரகு நந்தன! முன்னொருகாலத்தில் மேரு மலையிலிருக்கும் சத்தியலோகத்தின்கண்ணுள்ள ஸ்வர்ணமயமான சபையில், வீற்றிருந்த பிர்மதேவருடைய கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருக, அதை அவர் தமது கையிலேந்திச் சற்று நேரந்தியானித்துப் பின் கீழே விட்டார். அந்த ஜலமானது பூமியில் விழுந்து உடனே ஒரு பெரிய வானரமாயுற்று. அதைப் பிர்மதேவர் அறிந்ததும் தம்மருகில் வரவழைத்து, "ஏ குழந்தே! நீ இவ்விடத்திலேயே எப்போதும் வசித்து வா" என்று கட்டளையிட்டார்.

## வாலி ஜனனம்.

இந்த ஸத்திய லோகத்தில் வெகு காலம் வசித்து வந்த பின் யுத்திசாலியாகிய அந்த ரிக்ஷவிரஜஸ் என்கிற வானரமானது, ஒரு நாள் கந்த மூலாதிபலங்களைப் புசித்துக்கொண்டு மேருமலையில் சஞ்சரித்து வருகையில் அங்கு இரத்னமயமான கற்களால் படிகளமைக்கப்பட்டுப் பரிசுத்தமான தீர்த்தம் நிறைந்த ஒரு வாவியைக் கண்டு, அதில் தீர்த்தபானம் செய்ய விரும்பி, இறங்கித் தீர்த்தம் அருந்தியபின் கரையிலுட்கார்ந்து அந்தத் தெளிவான நீரை எட்டிப்பார்த்து, அதில் தன்னிழலைக்கண்டு, "ஓஹோ! நமக்கு எதிரியாக இங்கொரு குரங்கு வந்திருக்கிறது" என்று நினைத்துக்கோபங்கொண்டுதண்ணீருக்குள் விழுந்து அதன்மேற்பாய்ந்து அப்பொழுது உள்ளே ஒன்றுமில்லாததைக்கண்டு வெட்கி, அதைவிட்டு வெளியேறிக் தரையில் நடந்து வருகையில், தான் திவ்யசுந்தரரூபமைந்த ஒரு மாதாயிருப்பதைப் பார்த்து வியப்படைந்து பிரமித்து நின்றது. அப்பொழுது அங்கே தற்செயலாய் வந்த இந்திரன் அம்மாதைக்கண்டதும் அவள்மேற் காதல்கொள்ள, அதனால் அவனிடத்து ஜனித்த வீரியத்தை அம்மாதின் மீது செலுத்த அது அவளுடைய சரீரத்திற்படாமல் முன் அவளுடைய வால் படிந்திருந்த தரையில் விழுந்தமையால், உடனே ஒரு குரங்காயிற்று. அக்குரங்குதான் வாலி யென்கிற பேர் உண்டாயிற்று. அவன் இந்திரனுக்குச் சரியான புஜபல பராக்ரமங்கள் உள்ளவனானன்.

## சுக்ரீவ ஜனனம்.

இதேசமையத்தில் சூரியன் அம்மாதைக் கண்ணுற்றுக்காமவசத்தனாகித்தன் வீரியத்தை அவள்கழுத்திற் செலுத்த, அது உடனே ஒரு மகாபலசாலியான வானரமாயிற்று. அவனுக்குச் சுக்ரீவனெனும் பேருண்டாயிற்று. அக்குழந்தைகளிரண்டையும் அம்மாது தன்கையில் எடுத்துக்கொண்டு ஓரிடம் சென்று, அங்கு அன்றிரவு தங்கிநித்திரைசெய்து பிறகு அதிகாலையிலெழுந்திருந்து தன்தேகத்தைப்பார்க்கத் தான் முன்போல் வானர ரூபமாக இருக்கக்கண்டு ஆச்சரியமடைந்தனள். இந்த அதிசயத்தைப் பிர்மதேவர்

அறிந்து இவர்கள் சுகமாகவசிக்க, ஓரிடம் கற்பிக்கவேண்டுமெனக் கருதிக் கிஷ்கிந்தை யென்னும் பட்டணத்தைப் பூலோகத்தில் உண்டுபண்ணி அதை அந்தரிக்ஷவிரஜஸ்ஸுக்குக் கொடுக்க, அது தன் இரண்டு குழந்தைகளுடன் அப்பட்டணத்தில் சுகமாக வசித்து வந்தது. சிலகாலம் சென்றபின் அந்த ரிக்ஷவிரஜஸ் இறக்க வாலியானவன் வானரங்களுக்கதிபதியாகிக் கிஷ்கிந்தையை யாண்டு வந்தான் என்று அகஸ்திய முனிவர் கூறினர்.

ஸ்ரீ ராமச்சந்திரர்வினவுகிறார்.

ஏ முனிவரே! சுக்கிரீவன் தன் தமையனாகிய வாலிபால் எப்பொழுது கிஷ்கிந்தையை விட்டு வெளியேற்றப்பட்டான்? அநுமான் அவனுக்கு எப்பொழுது மந்திரியானது? வாலிக்குச் சமானமான பராக்ரமமுடைய அநுமானுக்கு அவன் பலம் தெரியாமற்போனதற்குக் காரணம்யாது?'' என வினவினர்.

அகஸ்திமுனிவர் கூறுகிறார்.

ஏ இராமச்சந்திரா! அஞ்சனமென்கிறமலையில் கேசரியென்கிற பேர்கொண்ட ஒரு வானர வீரனிருந்தான். அவனுக்கு இரண்டுபத்தினிகளிருந்தார்கள். அவர்களில் மூத்தவனுக்கு அஞ்சனை என்று பெயர். ஒரு நாள் அம்மலைக்குமேல் ஆகாசத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த ஒருகழுகின் மூக்கிலிருந்து அமிர்தமயமான பாயஸபிண்டமொன்று அந்த அஞ்சனையின் முன்னிலையில் விழுந்தது. அதாவது யாதெனில், முன் தசரதர் செய்த புத்திர காமேஷ்டி யாகத்திலுண்டான பாயஸத்தைக் கைகேயி எடுத்து அஞ்சனமலை மீது எறிந்ததாகக் கூறப்பட்டதே அதுதான். அஞ்சனி என்பவள் தன்முன் விழுந்த அந்தப் பாயஸபிண்டத்தை எடுத்துப்புசித்தாள். பிறகு மார்ச்சாரமுகியென்கிற மற்றொரு ஸ்திரீ அவளிடம் வந்தாள். வந்தவுடன் இருவரும் சேர்ந்து விளையாடினார்கள்; இச்சமயத்தில் ஒரு பெருங்காற்றடித்து அவ்விருவருடைய ஆடைகளையும் விலக்கிற்று. அதைப்பார்த்துக் காதல் கொண்ட வாயு தன்னுருக்கொண்டு அஞ்சனையின் எதிர்தோன்றி அவளுடன் சரசவார்த்தைகளாடி அவளைப் புணர்ந்தான். அப்பொழுது தற்செயலாய் அங்குவந்த நிருதி என்பவன் மார்ச்சாரமுகியின்மீது காதல்கொண்டு அவளைப் பிரார்

த்தித்துப் புணர்ந்தான். அதன்பின் அவ்விருவரும் கர்ப்பந்தரித்து இரண்டு பிள்ளைகளைப் பெற்றார்கள். அஞ்சனைக்குப் பிறந்தவனே மாருதி. மார்சாரமுகிக்குப் பிறந்தது பிசாசாயிற்று. சித்திரைமாதம் சுக்லபட்சம் ஏகாதசி திதி மகா நக்ஷத்திரங்கூடிய சுபதினத்தில்மாருதி பிறந்தமையால், அவன் சத்ருசங்காரசூரனானன். அவர் பௌர்ணமியன்று பிறந்தாரென்பது கற்பபேதம். அவர் தமது குழந்தைப்பருவதத்திலேயே ஜோதிசொரூபமாகக் கிளம்பும் சூரிய பகவானை ஒரு கனியெனநினைத்து அதைப்பறிக்கக்கிளம்பி ஐந்நூறு காதவழிதூரம் வாயுவேகமாய்ச்சென்றார். அமாவாசியை யாகிய அத்தினத்தில் இராகு சூரியனைப் பிடிப்பதற்காகச் சென்றான். அப்பொழுது சூரியன்முன் ஒருகுரங்கு அவனைப்பிடிக்கக் காத்திருப்பதைக் கண்டு, பயந்து உடனே தேவேந்திரனிடத்தி லோடி வந்து சங்கதியைத்தெரிவித்து அடியேனுக்குச் சூரியனைப் பிடிக்க உத்தரவு கொடுத்ததற்கு இன்று ஒரு தடைநேரிட்டது; அதற்குப் பதிலாய் உம்மைப்பிடிப்பேன்; ஆகையால் சீக்கிரம் அத்தடையை நிவர்த்திசெய்யுமெனக்கூறினன் இராகு. இந்திரன் பலதேவர்களோடு ஐராவதத்திலேறிக்கொண்டு சூரியனிடஞ்சென்று அவரருகிலிருக்கும் குரங்கைப்பார்த்து அதன் பேரில் வஜ்ராயுதத்தைப் பிரயோகித்தான். அவ்வஜ்ராயுதத்தால் அடிபட்ட மாருதி ஆகாயத்திலிருந்து ஒரு மலையின்மீது விழுந்தமையால் மாருதியின் ஹனு (கபோலத்தின்மேற்புறம்) உடைந்து போயிற்று. பிறகு அவருக்கு ஹநுமார் என்கிறபேர் உண்டாயிற்று. அதைக் கண்ட வாயுபகவான் மிகக்கோபங்கொண்டு தமது புத்திரனுக்குச் சமாதானங் கூறிவிட்டு உடனே தாம் ஸ்தம்பித்துவிட்டார். அந்த வாயுஸ்தம்பனத்தால் பிராணிகள் யாவும் உணர்விழுந்து தரையில் வீழ்ந்தன. மூவுலகங்களும் சவமயமாயின, அப்பொழுது பிர்மா அவ்விடம்வந்து இந்திரனை அவமதித்து வாயுபகவானை வணங்கி "வாயுபகவானே! தேவேந்திரன் செய்தகுற்றத்தை க்ஷமிக்கவேண்டும். உமது குழந்தைக்கு அநந்தமான வரங்களைக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்று கூற, வாயுதேவன் கோபந்தணிந்து மகிழ்ச்சியுற்று ஸ்தம்பனத்தை விட்டுச் சஞ்சரித்தார். பிறகு எல்லாப்பிராணிகளும் க்ஷணநேரத்திற்குள்ளாகப் பிழைத்தெழுந்திருந்து சுகமாகா

பிர்மதேவர் மாருதியைப்பார்த்து ஏமாருதி! நீ சிரஞ்சீவியாயிருப்பாய். உன் தேகம் வஜ்ரத்திலும் திடங்கொள்ளும். ஏ அஞ்சனு புத்திர உன்னுடைய ஸஞ்சாரத்திற்கு எங்கும் தடையேற்படாது. உனக்கு ஹரிபக்தியானது விசேஷமாக உண்டாகும். என்வரபலத்தால் விஷ்ணுவுக்கு நீ சகாயம்செய்வாய்'' என்றுகூறிவிட்டுத்தம் பதிக்குச்சென்றூர். பிறகு இராகுவும் சூரியனைப் பிடிக்கப்போனுன்- என்று அகஸ்தியர்கூறினர். இதைக்கேட்டதும்ஸ்ரீராமபிரான் "முனிவரே! சூரியனைப் பிடிக்க இராகுவுக்கு இந்திரன்அதிகாரம் கொடுத்த சங்கதியை எனக்குக்கூறவேண்டும்'' என்றூர். அகஸ்தியமுனிவர் இரகுநந்தனு!இராகு ஓர் அசுரன். அவன் அமிர்தபானத்தால் தானும் அமரனுனன். நவக்கிரகங்களில் அவன் எட்டாவது கிரகமானுன். அவன் தேவர்கள் யாவரையும் இம்சித்துவந்தான். அப்பொழுது தேவர்கள் ஒன்று சேர்ந்து சூரிய சந்திரர்களைமட்டும் அவனுடைய இம்சைக்குள்ளாக்கித் தாங்கள் தப்பிக்கொண்டார்கள். சூரிய சந்திரர்களுக்கு இராகுவால் இவ்விதம் தொந்தரவேற்பட்டதை ஜனங்கள் யாவரும் பார்த்து அச்சமையத்தில் பல தான தர்மங்களைச் செய்து இராகுவைத் திருப்தி செய்வித்துச் சூரிய சந்திரர்களை அவனிடத்திலிருந்து விடுவித்தார்கள். அன்றுமுதல் அப்பருவகாலங்களில் இராகு சூரிய சந்திரர்களைப் பிடிக்கும்போதெல்லாம் பூலோகத்தில் ஜனங்கள் யாவரும் பக்தியுடன் தானதர்மங்களைச் செய்து அவனுக்குத் திருப்திசெய்து வருவது வழக்கமாயிற்று. ஏ ஸ்ரீராமசந்திர ! நீர் கேட்டபடி மாருதியினுடைய ஜனனம் பலம் வரம் இவைகளைக் கூறியாயிற்று. ஆகையால் அந்த மாருதியின் பலமகாத்மியம் யாரால் அறியத்தக்கது. இனி அவருடைய நடத்தையை விவரிக்கிறேன் கேளுங்கள். மாருதியானவர் குழந்தைப் பருவத்தில் மகாமுனிவருடைய ஆசிரமங்களிற் பிரவேசித்து, அவர்களுடைய ஆசனம் முதலியவைகளை அங்குமிங்கும்தூக்கியெறிந்து அங்குள்ள முனிவர்களுடைய குழந்தைகளையும்,பத்னிகளையும் பயமுறுத்திக்கொண்டு வந்தார். முனிவர்கள் அவரைக்கண்டு நல்லவார்த்தை சொல்லியும் பயமுறுத்துவதை நிறுத்தவில்லை. இதைக்கண்ட முனிவர்கள் மாருதியைப்பார்த்து "ஏ கபிசிரேஷ்ட! இன்றுமுதல், உனதுபலம் உனக்குத்தெரியாமற் போகக்கடவது'' என்றும், "மற்றொருவன் உன்னைத்

துதிக்கும்போது உனக்கு உன்பலத்தின் திறமைதெரியக்கடவது" என்றும் சாபமிட்டனர். ஆகையினாலேதான் அந்தமாருதி தமது பலத்தை யறியாமல் சுக்ரீவனிடம் மந்திரித்வம் செய்துவருகிறார். முன் சமுத்திரக்கரையில் பிராயோபவேசம் செய்தகாலத்தில், ஜாம்பவான் அவரைத்துதித்த பின்னரே அவருடைய பலம் அவருக்குத்தெரிந்து சமுத்திரத்தைத் தாண்டினார் - என்று அகஸ்தியமுனிவர் கூறி முடித்தார்

அகஸ்தியர் இராமரைத் துதிக்கிறார்.

𑌰𑌾𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌸𑌿 𑌸𑌕𑌲𑌂
  𑌜𑌾𑌨𑌾𑌸𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍃𑌕𑍍
𑌭𑍂𑌤𑌂 𑌭𑌵𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌤𑍍𑌰𑌿𑌕𑌾𑌲𑌕𑌲𑌨𑌾
  𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑍋𑌜𑍍𑌝𑌿𑌤𑌃 ॥

𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑌾𑌯 𑌸𑌕𑌲𑌾𑌂
  𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑌂𑌹𑌤𑌿𑌂
𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍 𑌮𑌨𑍁𑌜𑌾𑌕𑍃𑌤𑌿𑌰𑍍𑌮𑌮 𑌵𑌚𑍋
  𑌭𑌾𑌸𑍀𑌶 𑌲𑍋𑌕𑌾𑌰𑍍𑌚𑌿𑌤𑌃 ॥

ராம த்வம் பரமேசுவரோஸி ஸகலம்
  ஜாநாஸி விஜ்ஞான த்ருக்
பூதம் பவ்யமிதம் த்ரிகால கலநா
  ஸாக்ஷீ விகல்போ ஜ்ஜிதஃ

பக்தாநாமநு வர்த்தனாய ஸகலம்
  குர்வன் க்ரியாஸம்ஹதிம்
சாசிருண்வன் மனுஜாகிருதிர்மம் வசோ
  பாஸீச லோகார்சித:.

ஏ ஸ்ரீராம! நீரே பரமேசுவரர். யாவையும் நீர் அறிவீர். நீர்விஞ்ஞானமுள்ளவர். முக்காலங்களையும் நடத்துவதில் நீர் சாக்ஷியாக விளங்குகிறீர். நீர் விகற்பமற்றவர். நீர் பக்தர்களுக்கு வழிகாட்டுவதின்மித்தம் உலகத்தில் மானிடராக அவதரித்து, கிரியைகள்

யாவையும் செய்துகொண்டு, இவ்விதம்யான் கூறும் கதைகளையும் சிரவணம் செய்துகொண்டு சமஸ்த ஜீவராசிகளாலும் பூஜிக்கப்பட்டு விளங்குகிறீர்.

பரமசிவன் கூறுகிறார்.

ஏ பார்வதி! அகஸ்திய முனிவர் இவ்விதம் இராமரைத் துதித்து அவர்செய்த உபசாரணையையும் பெற்றுக்கொண்டு, தம்மோடு வந்த முனிவர்களுடன் தமதாசிரமம் சென்று, சுகமாகவிருந்தார். தமது உருவத்தைக் காணுமேயாகில் விந்தியபர்வதம் முன்போல் உயர்ந்து விடுமெனக்கருதி இன்றும் அவர் தமது உருவை, அதற்கு மட்டும் மறைத்துக்கொண்டே யிருக்கிறார். ஸ்ரீராமபிரானும் சீதாதேவியுடனும் சகோதரர்களுடனும் மந்திரிமார்களுடனும், கூடி ஒரு பெரிய சம்ஸாரிபோல் காண்பித்துக்கொண்டு ஒன்றிலும் பற்றுதலின்றித் தமது மனைவியுடன் சகல போகங்களையும் அனுபவித்து வந்தார். அநுமார் முதலியவர்களும் அப்போதைக் கப்போது இராமரைத் தரிசித்து மகிழ்ந்து வந்தார்கள். ரமாநாதனும் லோகநாதனுமாகிய ஸ்ரீராமபிரான் இராஜ்யபரிபாலனம் செய்யும்பொழுது பூமி செழிப்படைந்து நற்பலனைத்தந்தது. மரம் செடிகள் நன்றாய்ப் பூத்துக் காய்த்தன. ஜனங்கள் யாவரும் தர்மநெறி தவறாதிருந்து வந்தார்கள். ஸ்திரீகள் யாவரும் பதிபக்தியிற் சிறந்து விளங்கினார்கள். ஸ்ரீராம இராஜ்யத்தில் குழந்தைகளின் மரணத்தைப் பெரியோர்கள் பார்த்ததில்லை. ஸ்ரீராமபிரான் தம் பத்தினி, வானரர்களுடனும் சகோதரர்களுடனும் புஷ்பக விமானத்தின் மீதேறிப் பூமியிலெங்கும் சஞ்சரித்து யாவருக்கும் தமது ஆச்சரியகரமான காரியங்களை நினைப்பூட்டிவந்தார். கோடிக்கணக்காக பூலோகத்தில் சிவலிங்க ஸ்தாபனம் செய்து, அவைகளுக்குப் பூஜை நைவேத்தியங்களையும் சரிவர ஏற்படுத்தினார். பிறகு அசுவமேத முதலிய யாகங்களையும் ஏராளமாகத் தக்ஷிணைகளையுங் கொடுத்து நடத்தி முடித்தார். தாம் மானிடராக விருந்தபோதிலும் தேவ போகங்களைச் சீதையிடம் அனுபவித்தார். இவ்விதம் தர்மமாக இராஜ்யபரிபாலனம் செய்து வந்து, தமது சரித்திரத்தை உலகங்களின் பாப நிவர்த்திக்காகப் பரவச்செய்தார். திரேதாயுகக் கணக்குப்படி பதினோராயிர வருஷ

காலம் இராஜ்ய பரிபாலனம் பண்ணி லோகமுழுவதும் தம்மை வணங்கும்படி விளங்கினர். அப்பதினோராயிர வருஷங்களும் கலியுகக் கணக்குப்படி பதினொரு லட்சங்களாயின. அப்பதினோராயிர வருஷ்காலமும் ஏக பத்நீவிரதம் தவறாமல் பரிசுத்தராக விருந்து வந்தார். ஸ்ரீராமபிரானுக்குப் பத்நியும் ஒன்று. அதுபோல் பேச்சும் ஒன்று. பாணமும் ஒன்று. அவர், ஜனங்களுக்குப் போதிப்பதி னிமித்தமாக கிரகஸ்த தர்மங்கள் யாவையும் நடத்திவந்தார். சீதையும் ஸ்ரீராம பிரானிடத்தில் அன்பு, ஒற்றுமை, வணக்கம், அடக்கம், வெட்கம், பயம் இவைகளைச் சமயத்துக் கேற்றவாறு உபயோகித்து அவர் மனதைத்திருப்தி செய்தாள். ஏ பார்வதி! இப்படிப்பட்ட ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை நீகேட்டபடி உனக்கு கூறினேன். இந்த இராம சரித்திரத்தைக் கேட்பவர்களுக்குச் சகல பாபங்களும் நீங்கி மங்களங்கள்பெருகும். இந்த ஸாரகாண்டத்தைக் கேட்பவர்கள் தங்கள் மனோரதங்களைக் குறைவறப் பெறுவார்கள்.

அகஸ்திய ராம சம்வாதமாகிய

13-வது சருக்கம் முற்றிற்று.

---

ஸாரகாண்டம்

முற்றிற்று.



ஸ்ரீராமனின் புஷ்பக விமான யாத்திரை.

ஸ்ரீகணேசாய நம꞉.

# யாத்ரா காண்டம்.

## 1 - வது சருக்கம்.

### பார்வதி வினவுகிறாள்.

மகா புண்ணிய முண்டாக்கத்தக்க ஸாரகாண்டத்தை அடியேன் கேட்கக் கூறினீர்கள். மற்றவைகளையும் எனக்குக் கூறும்படி பிரார்த்திக்கின்றேன். மகா பல பராக்ரமசாலியான ஸ்ரீராமபிரான் அசுவமேதயாகஞ் செய்த விதத்தையும் இராம லட்சுமணபரத சத்ருக்னர்களுக்கும் அவர்களுடைய பந்துக்களுக்கும் உண்டான சந்ததிகளின் விவரத்தையும் கூறவேண்டுகிறேன். அவர்களுடைய மக்களும் பந்துக்களுடைய மக்களும் அவரவர் பத்னிகளுடன் சேர்ந்து எவ்விதம் இல்லற தர்மத்தை நடத்தினார்கள். திரேதாயுகத்தில் பதினோராயிரத்துப் பதினொரு வருஷங்கள் ஸ்ரீராமபிரான் இராஜ்ய பரிபாலனம் செய்தாரென்று கூறினீர்கள். அவர் செய்த இராஜ்ய பரிபாலன விசேஷத்தை எனக்கு விவரமாகக் கூறுங்கள். இராமர் செய்த அற்புதங்களையும் விவரியுங்கள் என்று பார்வதி தேவி கேட்க, பரமசிவன் கருணைகூர்ந்து சொல்லுகிறார்.

### பரமசிவன் கூறுகிறார்.

ஏ தேவி! நீ இராகவனது திவ்யசரிதம் கூறும்படி கேட்டது நல்லது. அதைக்கூறும் விஷயத்தில் எனக்கு மிகச் சந்தோஷம்; சொல்லுகின்றேன் கேள்.

இராகவனுடைய சரித்திரமானது நூறு கோடி கிரந்த விஸ்தாரமுள்ளது. அவருடைய சரித்திரத்தில் ஓர் அக்ஷரத்தை ஒருவன் கூறுவானாயின், அவனுடைய மகா பாதகமும் அகலும்.

முன் வான்மீகி முனிவர் அவருடைய சரித்திரத்தைக் கூறியிருக்கின்றார். அதில் சிறிது உனக்குக் கூறுகின்றேன்.

ஒரு சமயம் வான்மீகி முனிவர் தமது சிஷ்யர்களுடன் ஸ்நானஞ் செய்வதாகத் தமஸாநதி சென்றார். அந்நதிக்கரையில் தமது கைக்கமண்டலத்தை வைத்துவிட்டு, தமக்குத் தேவையானவைகளைச் சேகரித்துக்கொண்டு சௌசம் முதலியவைகளையுஞ் செய்து விட்டுக் கையில் தர்ப்பையை எடுத்துக்கொண்டு ஸ்நானஞ் செய்யப் போனார்.

𑌯𑌾𑌵𑌦𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌸𑍍𑌨𑌾𑌨𑌾𑌯𑍁𑌂 𑌦𑌹𑍁𑌵𑌾𑌣𑍀𑌸𑍍𑌸𑍇𑌵𑌿𑌤𑌃 ।
𑌤𑌾𑌵𑌦𑍍𑌦𑌦𑌰𑍍𑌶 𑌤𑌮𑌸𑌾𑌤𑍀𑌰𑍇 𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑌾𑌨𑍍𑌤𑍌 ॥
𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑌯𑍋𑌰𑍍𑌮𑍈𑌥𑍁𑌨𑌤𑌃 𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑍋 𑌨𑌿𑌷𑌾𑌦𑍇𑌨 𑌪𑌤𑌤𑍍𑌰𑌿𑌣𑌾 ।
𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑍀 𑌶𑍋𑌕𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌲𑌲𑌾𑌪𑌾𑌤𑌿 𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑌾 ॥
𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌪𑌤𑌿𑌨𑌾 𑌤𑍇𑌨 𑌦𑍍𑌵𑌿𑌜𑍇𑌨 𑌸𑌹𑌚𑌾𑌰𑌿𑌣𑌾 ।
𑌤𑌾𑌮𑍍𑌰𑌶𑍀𑌰𑍍𑌷𑍇𑌣 𑌮𑌤𑍍𑌤𑍇𑌨 𑌪𑌤𑍍𑌰𑌿𑌣𑌾 𑌸𑌹𑌿𑌤𑍇𑌨 𑌵𑍈 ॥
𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌂 𑌦𑍍𑌵𑌿𑌜𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌨𑌿𑌷𑌾𑌦𑍇𑌨 𑌨𑌿𑌪𑌾𑌤𑌿𑌤𑌮𑍍 ।
𑌋𑌷𑍇𑌰𑍍𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌂 𑌸𑌮𑌪𑌦𑍍𑌯𑌤 ॥
𑌤𑌤𑌃 𑌕𑌰𑍁𑌣𑌯𑌾 𑌵𑌿𑌷𑍍𑌟𑌸𑍍𑌯𑌾𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌯𑌮𑌿𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 ।
𑌨𑌿𑌶𑌾𑌮𑍍𑌯 𑌰𑍁𑌦𑌤𑍀𑌂 𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑍀𑌮𑌿𑌦𑌂 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥

அப்பொழுது அவர் அந்தத் தமஸா நதிக்கரையில் ஓர் ஆச்சரியத்தைக்கண்டார். அதாவது அங்கே ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்திருந்த கிரௌஞ்ச பட்சிகளில் ஆண்பறவையை ஒரு வேடன் வில்லாலடித்துக் கொன்றான். இதனால், பெண் பறவையானது சிவந்த இறக்கை நுனியை யுடையதும் கொழுப்படைந்ததும் இப்பொழுது இறந்துகிடப்பதும் எப்போதும் தன்னுடன் சஞ்சரித்ததும் தனக்குப் பதியாயிருந்ததுமான அந்த ஆண் பறவையின் பிரிவாற்றாமையால் மிகதுக்கத்தையும் சோகத்தையுமடைந்து பிரலாபித்தது. இதைக் கண்ணுற்ற மகாத்மாவான

வான்மீகி முனிவர் கருணைகொண்டு இது அதர்மமெனக் கருதி அங்கு வருந்தும் பெண் பறவையைப் பார்த்து விட்டுக் கூறுகிறார்.

மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகம: ஶாஶ்வதீ: ஸமா: ।
யத் க்ரௌஞ்சமிதுநாதேகமவதீ: காமமோஹிதம் ॥
தஸ்யேத்தம் ப்ருவதஶ்சிந்தா பபூவ ஹ்ருதி வீக்ஷத: ।
ஶோகார்த்தேநாஸ்ய ஶகுநே: கிமிதம் வ்யாஹ்ருதம் மயா ॥
சிந்தயந் ஸ மஹாப்ராஜ்ஞஶ்சகார மதிமாந் மதிம் ।
ஶிஷ்யம் சைவாப்ரவீத் வாக்யமிதம் ஸ முநிபுங்கவ: ॥
பாதபத்தோ(அ)க்ஷரஸமஸ்தந்த்ரீலயஸமந்வித: ।
ஶோகார்தஸ்ய ப்ரவ்ருத்தோ மே ஶ்லோகோ பவது நாந்யதா ॥

"ஏ வேடா! நீ அநேக வருஷம் ஜீவித்திருக்க மாட்டாய், ஏனென்றால், காமமோகிதமாயிருந்த கிரௌஞ்ச பட்சிகளில் ஆண் பறவையைக் கொன்றாயல்லவா!'' என்று கூறினர். பட்சியைப் பார்த்துவிட்டு இவ்விதம் கூறிய வான்மீகி முனிவருக்கு இப்பொழுது ஓர் ஆலோசனை யுண்டாயிற்று. சோகாவஸ்தையி லிருந்த இப்பறவையைப் பார்த்ததும் நாம் என்ன சொன்னேம் என்று ஆலோசித்து சிஷ்யனை யழைத்து சோகத்தை யடைந்த பட்சியின் பொருட்டு வெளிப்பட்டதும் நான்கு பாதங்களோடு கூடியதும் சரிசமானமான அக்ஷரங்களோடு கூடியதும் செய்யுட்கிசைந்தும் ராக தாளமெட்டுக் கொத்ததுமான இது சோகநிமித்தமாக வெளிப்பட்ட தாயினும், சுலோகமே யல்லது வேறல்ல என்று கூறினர்.

இவ்விதம் கூறிய மகரிஷியின் உத்தமமான வாய்மொழியைக் கேட்ட சிஷ்யன் சந்தோஷத்துடன் அந்தச் சுலோகத்தைக் கிரகித்துக்கொண்டு மகிழ்ந்தான். அதனல் முனிவரும் சந்தோஷித்தார். பிறகு முனிவர் சாஸ்திரோக்தமாக அந்நதியில் ஸ்நானஞ்செய்து அந்த சுலோகத்தின் பொருளைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டு திரும்பினர். அவருடைய சிஷ்யனன பாத்வாஜனும்

குரு சொல்வதை வணக்கத் துடன் கேட்டுக்கொண்டு தீர்த்தம் நிறைந்த கடத்தையு மெடுத்துக்கொண்டு மனமகிழ்ச்சியுடன் பின் சென்ருன். தர்மத்தை அறிந்தவரான அந்த வான்மீகி முனிவர் தமது சிஷ்யனோடு அநேக கதைகளைச் சொல்லிக்கொண்டே ஆசிரமத்தை யடைந்து பிறகு உட்கார்ந்து வேறு சில கதைகளையுஞ் சொல்லி முடித்துத் தியானிக்கலானர்.

𑌤𑌤 𑌆𑌜𑌗𑌾𑌮 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ।
𑌚𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌖𑍋 𑌮𑌹𑌾𑌤𑍇𑌜𑌾 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌤𑌂 𑌮𑍁𑌨𑌿𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌮𑍍 ॥

சுயம்பிரபுவும் மகாதேஜஸ் உடையவரும் லோக கர்த்தாவுமான சதுர்முக பிர்மதேவர் வான்மீகி மகா முனிவரைப் பார்ப்பதற்காக, அப்பொழுது அங்கு வந்தனர். அவர் வரவை யறிந்த வான்மீகி முனிவர் உடனே எழுந்து அஞ்சலி பந்தஞ் செய்து கொண்டு வணக்கத்துடன் மிகவும் ஆச்சரிய முற்று, சற்று மௌனமாய் நின்று, பிறகு அர்க்கிய பாத்திய ஆசமனீய உபசாராதிகளால் பூஜித்து, சாஸ்திரோக்தமாக நமஸ்கரித்து, குசலபிரச்னஞ் செய்தார். இதன் பின் இவ்வாறு பூஜையை ஏற்றுக்கொண்ட பிர்மதேவர் வான்மீகி ரிஷியைப் பார்த்து ஆசனத்தி லுட்காரும் படி சொன்ஞர். அவர் ஆக்ஞைப்படி வான்மீகி முனிவர் ஆசனத்திலுட்கார்ந்து கிரௌஞ்ச பட்சியைப் பற்றிய சிந்தையாகவே யிருந்தார். பகையையே மேற்கொண்ட புத்தியையுடைய பாபாத்மாவான வேடனல் இனிய குரலையுடைய பட்சியானது, அகாரணமாக வதஞ்செய்யப் பட்டது. இது சகித்தற்கரிய கஷ்டம்! என்று பெண் கிரௌஞ்ச பட்சியை நினைத்து மறுபடியும் முன் பாடிய சுலோகத்தையே பாடினர். மறுபடியும் அதே நினைவு கொண்டு துக்கித்தார்.

𑌤𑌮𑍁𑌵𑌾𑌚 𑌤𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌹𑌸𑌨𑍍𑌮𑍁𑌨𑌿𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌮𑍍 ।
𑌶𑍍𑌲𑍋𑌕 𑌏𑌵 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌬𑌦𑍍𑌧𑍋 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌾 ॥
𑌮𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌾𑌦𑍇𑌵 𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌯𑌂 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 ।

அப்பொழுது பிர்மாவானவர் முனிவரைப் பார்த்து புன்னகை கொண்டு "ஏ மகாரிஷியே! நீர் சொல்லியது சுலோகந்தான். அவ்விஷயத்தில் வேறு யோசனை வேண்டாம். என்னுடைய ஆக்ஞையினாலேயே சரஸ்வதியானவள் சுலோக ரூபமாக உமது வாயிலிருந்து வெளிக்கிளம்பினாள்.

ஏ ரிஷி சிரேஷ்டனே! தர்ம சொரூபியும் குணவானும் மகா புத்திமானும் தீரனுமான இராமபிரானுடைய திவ்ய சரித்திரத்தை நாரதரிடமிருந்து கேட்ட பிரகாரம் செய்யும்.

ராமஸ்ய சரிதம் க்ருத்ஸ்நம் குரு த்வம்ருஷிஸத்தம ॥
தச்சாப்யவிதிதம் ஸர்வம் விதிதந்தே பவிஷ்யதி ।

ஸ்ரீராமபிரான் இரகசியமாகச் செய்தவைகளும் பிரகாசமாகச் செய்தவைகளும் லக்ஷ்மணருடன் அவர் வசித்த விதமும் குரங்குகள் இராக்ஷசர்கள் இவர்களுடைய சரித்திரங்களும் சீதை இரகசியமாகச் செய்தவைகளும் பிரகாசமாகச் செய்தவைகளும் உமக்குப் புலப்படாமலிருந்தபோதிலும் இப்பொழுது அவைகள் யாவும் உமது சித்தத்தில் பிரகாசிக்கும். அவ்விதமே ராமசரிதத்தைக் காவியமாகச் செய்யும்.

ந தே வாகந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி ॥
குரு ராமகதாம் புண்யாம் ச்லோகபத்தாம் மநோரமாம் ।
யாவத் ஸ்தாஸ்யந்தி கிரய: ஸரிதச்ச மஹீதலே ॥
தாவத்ராமாயணகதா லோகேஷு ப்ரசரிஷ்யதி ।
யாவத்ராமாயணகதா த்வத்க்ருதா ப்ரசரிஷ்யதி ।
தாவதூர்த்வமதச்ச த்வம் மல்லோகேஷு நிவத்ஸ்யஸி ॥

காவியஞ் செய்யும் விஷயத்தில் உமது வாக்கானது எந்த இடத்திலும் பொய்யில்லாமல் வெளிப்படட்டும். பொய் வாராமலிருப்பதுடன் இராமசரித்திரம் முழுவதிலும் உமக்குத் தெரியாத தொன்றுமிராது. நீர் சுலோகரூபமாகச் செய்யும் இரா

மர் கதையானது இந்தப் பூமியில் மலைகள் நதிகள் இவைகளுள்ள வரையில் சாசுவதமாக பிரகாசிக்கக்கடவது. இந்த இராமாயண கதை உலகத்தில் உள்ளகாலம் வரையில் நீர் இந்த உலகத்திலும் பாதாளத்திலும் தேவலோகத்திலும் எனதுலகத்திலும் வசித்து வருவீர் என்று கூறிப் பிர்மதேவர் தாமும் இராமசரித்திரத்தை புண்ணியகரமான வேதவாக்கியங்களுடன் வான்மீகருக்கு உபதேசித்தார். மறுபடியும் பிர்ம்மதேவர் வான்மீகிமுனிவர் பூஜையை ஏற்றுக்கொண்டு களிப்புடன் அந்தர்த்தானமானார்.

பிறகு வான்மீகி முனிவர் தமது சிஷ்யர்கள் பாட்டுக்கும் தாளத்துக்கும் ஒத்துவரும் அந்தச் சுலோகத்தை அடிக்கடி பாடக் கேட்டு சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது வான்மீகி முனிவர் ஸ்ரீராமசரித்திரத்தை நாம் இவ்வாறு செய்ய வேண்டுமென்றும் மனதில் ஆலோசித்துக் கொண்டு மகா கீர்த்தி பெற்ற ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை மனோரம்யமான விருத்தப் பாக்களில் எளியதான நடையில் சதகோடிக்கணக்கான சுலோகங்கள் அமைந்த ஓர் காவியமாகச் செய்தார்.

யாத்ரா காண்டம்

சுலோகபக்தியைக் கூறும் முதலாவது சருக்கம்

முற்றிற்று.

---

# 2 - வது சருக்கம்.

## பரமசிவன் கூறுகிறார்.

இவ்விதம் வான்மீகி முனிவர் செய்த இராமாயணத்தை அவ் வாசிரமத்திலுள்ள முனிவர்கள் யாவரும் அவரிடத்திலிருந்து உபதேச மூலமாகப் பெற்று, அவரவர் ஆசிரமத்தில் வீற்றிருந்து, ஓதி யுணர்ந்து அதிலுள்ள சரித்திரங்களை யாவரும் ஒன்று சேர்ந்து பேசிப்புகழ்ந்து மகிழ்ந்தார்கள். இவ்விதம் நடந்து வரும் கதைகளைக் கேட்பதற்காக தேவலோகத்திலிருந்த தேவர்கள், அவரவர் விமானமேறி ஆசிரமத்தருகில் வந்து அற்புதமான செய்யுட்களால் பாடப்பட்ட ராமசரித்திரத்தைக் கேட்டு மகிழ்ந்து வான்மீகர் செய்தாரென்பதை யறிந்து அவரைப் புகழ்ந்து, அவர் மீது புஷ்பமாரி பொழிந்து ஜயசப்தங்களால் அவரை வாழ்த்தினார்கள். பிறகு தேவர்கள் யக்ஷர்கள், கந்தர்வர்கள் நாகர்கள், முனிவர்கள், குஹ்யகர்கள் அசுரர்கள் இவர்களும் பிரம தேவரும் இந்த இராமாயண காவிய நிமித்தமாகக் கலகம் செய்து கொண்டார்கள். பிரம தேவர் முதலிய வானவர்கள், பன்னகர்களையும், அசுரர்களையும் மனிதர்களையும் பார்த்து "இந்த இராமாயண காவியத்தை எங்கள் உலகத்துக்குக் கொண்டு போகப் போகிறோம் என்றார்கள். அது கேட்ட அசுரர்களும் பன்னகர்களும் இந்தக் காவியத்தைப் பாதாள உலகமாகிய எங்கள் உலகத்துக்குக் கொண்டு போகப் போகிறோம்" என்றார்கள். இவைகளைக் கேட்ட முனிவர்களும் அரசர்களும் மங்களகரமும் பரிசுத்தமுமான இராம கதையாகிய காவியத்தை எங்களுலகம் விட்டு சொர்க்கத்துக்காவது பாதாளத்துக்காவது கொண்டு போக நாங்கள் விடமாட்டோம்'' என்றார்கள். இவ்விதம் மூவுலகத்தவரும், ஒருவர்க்கொருவர் வாதாடிக்கொள்ள யான் அவர்களுக்கு இனிமையாகச் சமாதானங்கூறி அவர்களை யழைத்துக்கொண்டு க்ஷீரசாகரம் சென்று ஆதிசேஷசயனராகிய விஷ்ணுவை வேதங்களாலும் மந்திரங்களாலும் பலவிதமான பூஜோபசாரங்களாலும் உபசரித்து, கீதம் வாத்தியம் முதலிய கோஷங்கள் செய்

தோம்; அவர் கண் விழித்துக் கொண்டார். அப்பொழுது மகா விஷ்ணு என்னைப் பார்த்து, என்னை எழுப்பிய காரணம் யாதெனக் கேட்க, நடந்த செய்தி முழுவதையும் தெரிவித்தேன். பக்த வத்ஸலராகிய மகாவிஷ்ணு, காவிய நிமித்தமாக இவர்கள் சச்சரவு செய்து கொள்ளுகிறார்களென்பதை யறிந்து, நகைத்து, உடனே அக்காவியத்தை ஒரு பாகத்துக்கு முப்பத்து மூன்றுகோடியே முப்பத்து மூன்று லட்சத்து முப்பத்து மூவாயிரத்து முந்நூற்று முப்பத்து மூன்று கிரந்தங்களாகப் பிரித்து மூன்று பிரிவினை களாகச் செய்தனர். அந்தக் காவியத்தில் அடங்கியிருந்த ஒரு மந்திரத்தையும் ஒரு பாகத்துக்குப் பத்து அக்ஷரங்களாகப் பிரித்து மூன்று பாகமாக்கினார். இவைகளன்றி மீதியான வற்றில் இரண்டு எழுத்துக்களை மாத்திரம் நான் கேட்க எனக்குக் கொடுத் தார். அவ்விரண்டு எழுத்துக்களையும் காசியில் மரணமடையும் பிராணிகளின் செவியில் உபதேசித்து வருகின்றேன். அது ராமா என்ற மந்திரமென்றறிந்துகொள். அச்சமையத்தில் லக்ஷ்மி கரு டன் ஆதிசேஷன் இம்மூவரும் இந்த மூன்று மந்திரங்களைத் தங் களுக்கு உபதேசிக்க வேண்டுமென்று வணங்கிப் பிரார்த்தித்தார் கள். அதைக் கேட்டதும் விஷ்ணுவானவர் மகிழ்ந்து அவர்களுக் குத் தனித்தனியே உபதேசஞ் செய்தருளினர். ஆதிசேஷன் இவ் வாறு உபதேசம் பெற்று, தம்முடைய உலகமாகிய பாதாளலோகஞ் சென்று, அங்குள்ள வாசுகி முதலிய நாகங்களுக்கும் அம்மந் திரத்தை உபதேசித்துப் பிரசித்தப் படுத்தினர். லக்ஷ்மி தேவி வைகுண்டலோகஞ் சென்று வானவர்கள் யாவரையும்வரவழைத்து, அவர்களுக்கு அம்மந்திரத்தை உபதேசித்து, சொர்க்க லோகத் திலும் பிரசித்தப் படுத்தினள். கருடன் பூலோகம் வந்து இங் குள்ள யாவருக்கும் இவ்வாறே அம்மந்திரத்தை உபதேசித்தார்.

ஏ கிரிராஜ புத்திரியே! அம்மந்திரங்களின் இரகசியமான உண்மையை மந்திர சாஸ்திரங்களிலேயே யறியவேண்டும். ஆதி யில் மூன்றாக வகுத்த பிரிவுகளில், ஒரு பாகத்தை வானவர்களுக்



ஸ்ரீராமர் அசுவமேதயாகம்.

கும் மற்ற பாகத்தை முனிவர்களுக்கும் இன்னொரு பாகத்தை நாகர்களுக்கும் அளித்தார். பிறகு தேவர்கள் தங்களுக்குக் கிடைத்த பாகத்தைப் பெற்றுக்கொண்டு சொர்க்க லோகஞ் சென்று மகிழ்ந்தார்கள். இவ்வாறே நாகர்களும் பாதாள உலகம் சென்று மகிழ்ந்தார்கள். முனிவர்களுக்குக் கிடைத்த பாகமானது பூலோகத்தின் கண் பரவிற்று. அந்த பாகத்தை மறுபடியும் சப்தத்தீவுகளிலும் பரவும்படி ஏழுபாகங்களாகப் பிரித்தார். அது பாகமொன்றுக்கு நான்கு கோடியே எழுபத்தாறு லக்ஷத்து பத்தொன்பதினுயிரத்து நாற்பத்தேழு கிரந்தங்களாக ஏற்பட்டுக் கடைசியாக நான்கு சுலோகங்கள் மீந்தன. அவைகளைப் பிர்மதேவர் தமக்குக் கொடுக்கும்படி வேண்ட, பக்தியிற்சிறந்தவரான அவருக்கு, மகா விஷ்ணுவானவர் மனமகிழ்ச்சியுடன் யளித்தார். அத்தீவுகளுக்குள் புஷ்கரமென்னுந் தீவு இரண்டு பாகமாகப் பிரிந்திருந்தமையால், அதற்குரிய கிரந்தங்களை இரண்டு பாகமாகப்பிரித்தார். அதில் பாகமொன்றுக்கு இரண்டு கோடியே முப்பத்தெட்டு லட்சத்து, ஒன்பதினுயிரத்து ஐந்நூற்று இருபத்து மூன்று கிரந்தங்கள் பிரிந்தன. சாகத்தீவு முதலிய ஐந்து தீவுகளும் ஒவ்வொன்று எவ்வேழு பிரிவுகளாக இருந்தமையால், அவற்றுக்குத் தக்கபடி பாகங்கள் ஒவ்வொன்றையும் பிரித்தார். இப்படிப் பிரிக்கப்பட்டதில் பாகம் ஒன்றுக்கு, அறுபத்தெட்டு லட்சத்து இரண்டாயிரத்து எழுநூற்று ஐம்பத்தொன்றுகப் பிரிந்தது. கடைசியாகிய ஜம்பூத்தீவானது ஒன்பது பிரிவாக இருந்தமையால் அதற்கொத்து, அதற்குரிய பாகத்தை ஒன்பது பிரிவுகளாகப்பிரிக்க, பாகமொன்றுக்கு ஐம்பத்திரண்டு லக்ஷத்துத் தொண்ணூற்றோராயிரத்தைந்து கிரந்தங்களாகிக் கடைசியில் ஸ்ரீ என்ற எழுத்து மீந்தது. அதைப் பொதுவாக ஒன்பது பிரிவுகளிலும் சேர்த்துவிட்டார்.

இவ்வாறு சதகோடி இராமாயண கிரந்தத்தைத் தக்கபடி பிரித்து விட்டு மகாவிஷ்ணு அந்தர்த்தானமாயினர்.

ஏ காத்தியாயனி! பின்னொருகாலத்தில் புத்திசாலிகளுக்குள் சிறந்தவனுன இராவணன், கலியுகத்தில் வேதியர்கள், மந்த புத்தியுடையவர்களாயும் குறைந்த ஆயுளை யுடையவர்களாயும் இருப்பார்களென்று தன்புத்தி விசேஷத்தாலறிந்து, அவர்களுக்கு இணக்கமாக நான்கு வேதங்களையும் தன்னுடைய புத்தி

சாமர்த்தியத்தால், சுளுவாகவும் நூற்றுக்கணக்கான பிரிவுகளாக வும் வகுப்பான். ஏ தேவி! கிருஷ்ணன் பூலோகத்தில் வியாச ராக அவதரித்து, மனிதர்களின் நன்மைக்காக, இந்த இராமா யணத்தின் சில பாகங்களைக் கொண்டு பதினேழு புராணங் களைப் பல வேறுவிதமாகச் செய்யப்போகின்றார். பாரதமென்னும் சிரேஷ்டமான இதிகாசத்தை விரிவாகச் செய்யப்போகின்றார். இவற்றில் பாரத வருஷத்துக்குள்ளடங்கிய ஒரு பாகத்தைப் பற்றி விசேஷமாகச் சொல்லப்படும். அவ்வியாச முனிவர் இவ் வளந்தம் புராணங்களைச் செய்தும் மன ஓய்வுபெறாமல் ஸரஸ்வதி நதியின் கரையில் இன்னும் எதைச் செய்யலாமென்னும் யோசனை யிலிருக்கப்போகின்றார். அந்தச் சமயத்தில், பிர்மதேவர் முன் மகாவிஷ்ணு தமக்கு உபதேசித்திருக்கும் நான்கு சுலோகங்களை நாரத முனிவர்க்கு, உபதேசிக்கப்போகின்றார். அவ்வுபதேசம் பெற்றபின் நாரத முனிவரும் தமது வீணையை மீட்டி இந்தச் சுலோகங்களை இனிமையாகப் பாடிக்கொண்டே சத்தியவதீசுத ராகிய வியாச முனிவர்க்கருகில் சென்று, அச்சுலோகங்களை அவ ருக்கு உபதேசிக்கப்போகின்றார். இராமாயணத்திலடங்கிய அச் சுலோகங்களை வியாசமுனிவர் உபதேசமூலமாகப் பெற்ற பின், மனவொழிவடைந்து, அவைகளின் கருத்தைத் தாம் விவரித்து அக்கருத்தைக் கொண்டே பதினெண்ணாயிரம் கிரந்தம் அடங் கிய ஸ்ரீமத் பாகவதமெனப் பதினெட்டாவது புராணத்தை சர்வ ஜன மனோகரமாகச் செய்வார். அதனாலே தான் பாகவத்தை இயற்றியதானது மற்ற புராணங்களைவிட வேறுவிதமாகவே இருக்கின்றது. ஏ பிரியே! இப்புராணங்கள் யாவற்றிலும் வான் மீக முனிவர் இயற்றியது மிக்க இனிமையாகவிருக்கும். வியாச முனிவரும் இந்த இராமாயணத்தை நூறு மடங்கதிகமாக விவ ரிக்கப்போகின்றார். இன்னும் பற்பல ஸாரங்களையும் அடக்கி உபபுராணங்கள் யாவையும் செய்யப்போகின்றார். பரதகண்டத் திற்குரிய இராமாயணத்தின் மூலமாக முனீசுவரர்கள் ஆறு சாஸ்திரங்களைச் செய்யப்போகின்றார்கள். பூலோகத்தில் இன்னும் பலபேர் சுலோகரூபமாகச்செய்யும் கதைகளுக்கு இந்த இராமாய ணமே மூலமாகும்.

பார்வதி கூறுகிறாள்.

ஏ நாதா ! நான் ஒன்றுகேட்க விரும்புகிறேன். நாரதமுனிவர் பிர்ம தேவரிடத்தி லிருந்து தாம் அறிந்தவாறு மகா பாதகங்களையும் போக்கடிக்கும் அந்த நான்கு சுலோகங்களை வியாச முனிவருக்கு உபதேசம் செய்யப் போவதாயும் அந்த உபதேச மூலமாய் அந்த முனிவர் பாகவதம் செய்யப் போவதாயும் கூறினீர்களே ; அந்நான்கு சுலோகங்களையும் தங்களிடங் கேட்கவிரும்புகிறேன் ; தயவு செய்து கூறவேண்டும்.

பரமசிவன் கூறுகிறார்.

ஏ பிரியே ! நீ நல்ல கேள்வி கேட்டாய் ! நான் சொல்வதைக் கவனித்துக்கேள். ஆதியில் நாராயணன் பிர்ம தேவருக்கு உபதேசஞ் செய்தார். அவர் வியாச முனிவர்க்கு உபதேசஞ் செய்தார். அவைகளை உனக்கு கூறுகின்றேன்.

॥ 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

𑌅𑌹𑌮𑍇𑌵𑌾𑌸𑌮𑍇𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌨𑌾𑌨𑍍𑌯𑌦𑍍𑌯𑌤𑍍𑌸𑌦𑌸𑌤𑍍𑌪𑌰𑌮𑍍 ।
𑌪𑌶𑍍𑌚𑌾𑌦𑌹𑌂 𑌯𑌦𑍇𑌤𑌚𑍍𑌚 𑌯𑍋𑌽𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌤 𑌸𑍋𑌽𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ ௧
𑌋𑌤𑍇𑌽𑌰𑍍𑌥𑌂 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑍇𑌤 𑌨 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑍇𑌤 𑌚𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 ।
𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌮𑌾𑌯𑌾𑌂 𑌯𑌥𑌾𑌭𑌾𑌸𑍋 𑌯𑌥𑌾 𑌤𑌮𑌃 ॥ ௨ ॥
𑌯𑌥𑌾 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑍇𑌷𑍂𑌚𑍍𑌚𑌾𑌵𑌚𑍇𑌷𑍍𑌵𑌨𑍁 ।
𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌯𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌿 𑌤𑌥𑌾 𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌤𑍇𑌷𑍍𑌵𑌹𑌮𑍍 ॥ ௩ ॥
𑌏𑌤𑌾𑌵𑌦𑍇𑌵 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌃
𑌅𑌨𑍍𑌵𑌯𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌯𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ॥

மகாவிஷ்ணு கூறியவை.

சிருஷ்டிக்கு முன்நான் ஒருவனாகவேயிருந்தேன். என்னைத் தவிர சதசத்பரமான வஸ்து வேறொன்றில்லை சிருஷ்டிக்குப் பிறகு தான் நானும் இவ்வுலகமும்; அதன்முடிவில் மீந்திருப்பவனும் நானே. (௧)

ஒரு வஸ்துவில் இல்லாதது உள்ளதுபோல் காணப்படுவதும், இருட்டைப் போலவும் உண்மையின்றித் தோன்றுவதும் ஆத்மாவினிடத்தில் உண்மையாகத் தோன்றும விருப்பதுமே மாயை. (உ)

மகா பூதங்களெந்தும் பஞ்சபூதங்களில் கலந்தும் கலவாதது போல் தோற்றுவது போலவே, நான் மகா பூதங்களில் கலந்திருப்பேனுயினும் கலவாதவனே. (ந)

பொய் மெய் என்பவைகளில் எது இல்லாதபோது எது பிரகாசிக்கிறதோ அது மெய்; எது பிரகாசிக்கும்போது எது இல்லையோ அது பொய். ஆத்மதத்துவத்தை அறிய விரும்புகிறவன் அறியத்தக்கன இவைகளே. (ச)

ஏ தேவி! இவைகளே மகாவிஷ்ணு பிர்மதேவனுக்கு உபதேசித்த நான்கு ராமாயண சுலோகங்கள். இவைகள் அதிபவித்திரங்கள். மனிதர்களுடைய பாவங்களை ஒழித்து அஞ்ஞானத்தை அழித்து, உடனே ஞானத்தைக் கொடுப்பன. விவேகிகள் எப்பொழுதும் பாராயணஞ் செய்வது, நீ கேட்டபடி விவரித்தாயிற்று. இனி நான் முன் கதையைச் சொல்லுகின்றேன் கேள்.

பிறகு நாளடைவில் இராமாயண கதையை முனிவர்கள் சிறிது சிறிதாக மறந்து விட்டார்கள். இதையறிந்த வியாஸ முனிவர், மிஞ்சின இராமாயண அம்சங்களை ஆராய்ந்து பார்த்து, ஒன்று சேர்த்து இருபத்து நாலாயிரம் கிரந்த மடங்கிய எழுகாண்டங்களாக வகுத்து, அவைகளைக் காத்து வந்து கதையின் ஆதியிலும் அந்தத்திலும் சில மங்களகரமான சுலோகங்களைச் சேர்ப்பர். பர்வத புத்திரியே! அதன் மூலமாக அகஸ்தியர் முதலிய முனிவர்கள் பலவித இராமாயணங்களை வெவ்வேறாகச் செய்து, பாதகண்டத்தின் பிரிவுகளில் பிரசித்தப்படுத்துவார்கள். இப்படிப் பிரசித்தப்படுத்துவது நூற்றுக்கணக்காக வாயினும் அவைகள் முழுவதும் வான்மீகி மகரிஷியினுடைய இராமாயணமென்றே புத்திமான்கள் கொள்வார்கள். ஏ தேவி! உனக்கு நான் கூறிய ஸாரகாண்டத்தின் கதையும் வான்மீகி யியற்றிய இராமாயணத்தின் ஸாரமே. சதகோடிக் கணக்கான இராமாயண கதையை ஐந்து முக

முள்ள யான், தேவ வருஷங்களில் அற்புதக் கணக்கான வருஷங்கள் கூறினும் முடியாது. வான்மீகி முனிவர் தமது தபோ மகிமையால், அநந்தமாகச் செய்த இராம சரித்திரத்தின் ஸாரங்களையெடுத் தெடுத்துச் சுருக்கி, உனது பிரியத்தை முன்னிட்டு, இராம தாஸ், விஷ்ணு தாஸர்களுடைய சம்வாத ரூபமாக ஏற்பட்ட மங்களகரமான யாத்திரா காண்டத்தை ஞான திருஷ்டியால் அறிந்து யான் கூறுகின்றேன்.

இராமாயண விரிவைக் கூறும் இரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

## 3—வது சருக்கம்.

### பார்வதி கூறுகிறுள்.

பிராண நாதா! தாங்கள் கூறிய இராமதாஸர், விஷ்ணுதாஸர் என்பவர்கள் யாவர்? அவர்கள் எங்கிருந்தனர்? அவர்களில் குருவாகிய ஒருவர் தமக்கு மாணுக்கராகிய மற்றவர்க்குக் கூறியது யாது? அதை எனக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன் என்றனள்.

### பரமசிவன் கூறுகிறுர்.

பாரத வருஷத்தின் ஒரு பாகமாகிய தண்டகாரண்யத்துள், கோதாவரி நதியின் நடுவில் விளங்கும் அப்ஜகம் என்னும் திவ்ய க்ஷேத்திரத்தில், நரசிம்மமென்னும் பேர்கொண்ட முனிவர் இருந்தார். அவருக்கு இராம னென்னும் ஒரு புத்திரன் பிறந்தான். அந்த இராமனுக்கு விஷ்ணு வென்கிற மாணுக்கன் ஏற்பட்டான். அவ்விருவரும் நாள் தோறும் விஷ்ணு பக்தியில் சிறந்தவர்களாகி அவரைத் தொழுது வந்தார்கள். அவ்விரு பிராமணுேத் தமர்களும் ஸ்ரீராம பிரானுடைய பக்தியில் மூழ்கி இடைவிடாயல் சேவிப் பார்களாதலால், இராமன் என்பவனுக்கு இராமதாஸ ரென்றும் விஷ்ணு என்பவனுக்கு விஷ்ணுதாஸ ரென்றும் பெயர் உலகத்தில் பரவிற்று. அவர்களில் ராமதாஸன் என்பவன் கயா க்ஷேத்திரஞ் சென்று அங்குத்தனது பிதிர் திருப்திக்காக கயா சிராத்தம் செய்து, பிறகு பூமியிலுள்ள சகல தீர்த்தங்களுக்கும் சென்று கிரமப்படி யாத்திரையை முடித்துக் கொண்டு மறுபடி கோதாவரி நதிதீரம் அடைந்து, கிரகஸ்தாச்ரமம் பெற்று, பல மாணுக்கர்களுக்குக் கல்வி போதித்து வந்தான். அப்படிப் போதித்து வருங் காலையில் விஷ்ணு தாஸ னென்பவன், இராம தாஸரது முகார விந்தத்தின் மூலமாகப் பலவிதமான கதைகளையும் இராமாயணத்தில் ஸார காண்டத்தையுங் கேட்டுப் பிறகு சில சந்தேகங்களையும் கேட்டான்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறுர்.

ஆசாரிய! எனக்குச் சில சந்தேகங்கள் இருக்கின்றன. அவற்றை எனக்குத் தெரிவிக்கவேண்டுகின்றேன். தங்கள் மூலமாக

இராமாயணத்தில் ஸாரகாண்டத்தின் கதையை நான் கேட்டேன். அதில் இராமபிரானுக்காவது, ஜானகிக்காவது, சிறிதும் சௌக்கிய மேற்பட்டதாகத் தெரியவில்லை. இராமருடைய ராஜ்ய பரிபாலனத்தைப் பற்றியவைகளும் தெரியவில்லை. அவர் யாகஞ் செய்தவிதமென்ன? அவர்க்குண்டான சந்ததிகள் எவ்வளவு? அவருடைய சகோதரர்களுக்குப் புத்திரர்கள் எவ்வளவு பேர்கள்? அந்தப் பிள்ளைகளுக்கு எவ்விடங்களில் விவாகம் நடைபெற்றிருக்கிறது? இவைகளனைத்தையும் நான் கேட்க விரும்புகின்றேன். ரம்மியமானதும், பரிசுத்தமானதும், ஆனந்தமுண்டாக்குவதும் பாபங்களைப் போக்கக் கூடியதுமான ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை எனக்குக் கூறியருளுமென்றார்.

### இராமதாஸர் கூறுகிறார்.

மாணவா! நீ கேட்க விரும்பிய இராமபிரானுடைய சரித்திரமானது உள்ளபடியே பாபவிமோசனந் தரத்தக்கதும் மங்களகரமுமானதால், அதைக் கூறுவதில் எனக்கு மிகவும் சந்தோஷம். அதை நான் கேட்டபடி உனக்குக் கூறுகின்றேன்.

ஸ்ரீராமபிரான் இராவண சங்காரஞ் செய்து, இவ்வுலகத்தைச் சத்ரு பயத்தினின்றும் விடுவித்து, முத்தியை அளிக்கத்தக்க பட்டணங்களுள் முதன்மையான அயோத்தியா பட்டணத்திலிருந்து நீதி தவறாமல் இராஜ்ய பரிபாலனஞ் செய்து வந்தார்.

இராமர் இவ்விதம் இராஜ்ய பரிபாலனஞ் செய்து வருங்காலத்தில் பஞ்சம் திருட்டு அகாலமரணம் அதிவிருஷ்டி அநாவிருஷ்டி வெட்டுக்கிளிகள் எலிகள் இராஜாக்கள் பேராசைப் படுவது முதலிய பதிபாதைகள் எதுவுங் கிடையா; தரித்திரம், மனக்கவலை, நோய்கள் இவைகள் கிடையா; பிச்சை யெடுப்பவன் துஷ்டன் இரக்கமில்லாதவன், கோபக்காரன், நன்றி மறந்தவன் இவர்களைக் காண்பதரிது.

ஒரு காலத்தில், அழகான நாசியையுடைய வதனும்போருகமும் திவ்யாலங்கார பூஷிதையுமான சீதாதேவி ஏகாந்தமாக விருக்கும் தனது பர்த்தா இராம பிரானருகே சென்று

திவ்ய சாமரங்களை எடுத்து வீசி உபசரித்து தலை வணங்கி நின்று நாணத்துடன் வினயமாய் அவர் திருமுகநோக்கிக் கூறலாயினள்.

ஏ இராமா! இராஜீவபத்ராக்ஷா! இராவண சங்காரஞ் செய்த எனது பிரபுவே! அநுமதி தந்தால் தர்ம மூலராகிய தங்களிடத்தில் நான் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றேன் என்றாள். உடனே ஸ்ரீராமபிரான் "ஏ சீதே! தாமரை தளம் போன்ற நேத்திரமுடையவளே! உன் மனதிலிருப்பதைச் சீக்கிரம் தெரிவி; அதை உடனே நான் நிறைவேற்றுகின்றேன்" என்றார். ஒரு சம்மான மளித்ததற் கொப்பான ஸ்ரீராம பிரானுடைய மொழியமுதத்தைச் செவியிலருந்திய சீதாபிராட்டி சந்தோஷ ப்ரவாகத்தில் மூழ்கினவளாகி, "ஏ நாதா! இரகுபுங்கவா! நீர் உமது பிதிர் வாக்ய பரிபாலன நிமித்தம் என்னுடனும் ஸௌமித்ரியுடனுங் கூடி தண்டகவனம் போவதற்காக நமது அயோத்தியா நகரத்தைப் விட்டுப் புறப்பட்டு, சிருங்கபேரபுரஞ் சென்று, அங்கிருந்து கங்கா நதியைத் தாண்ட ஓடமேறிச் செல்லுகையில், உங்களிருவர் முன்பாக நான் சங்கற்பம் செய்து கொண்டதை இப்போது தங்களுக்கு ஞாபகப்படுத்து கின்றேன் "ஏ கங்கா தேவி! உன்னைப் பலவாறு வணங்கிப் பிரார்த்திக்கின்றேன். பதினான்கு வருஷகால வனவாஸ விரதத்தை முடித்து, இராமர் இலட்சுமனர் இவர்களுடன் க்ஷேமமாகத் திரும்பி வரும்போது, மதுமாம்சோபகாரம் முதலியவைகளைக் கொண்டு பக்தியுடன் உன்னை நான் பூஜிக்கின்றேன்" எனக் கங்காதேவியை நான் பிரார்த்தித்தது உங்களுக்குத் தெரிந்த விஷயம். பிறகு அந்தப் பதினான்கு வருஷமும் சென்று புஷ்பக விமானமேறி நமது பட்டணம் வருகையில் பரதன் சத்ருக்னன் கௌசல்வியை இவர்களைப் பார்க்கவேண்டு மென்னும் ஆவலினால், அதை நான் மறந்துவந்து விட்டேன். இப்பொழுது அதை நினைத்துக் கொண்டேன். அந்த என் கோரிக்கை நிறைவேறுவதற்காகத் தாங்கள் தாய்மார்களுடனும் சகோதரர்களுடனும் அவ்விடம் போகவேண்டு" மெனப் பிரார்த்திக்கின்றேன். இது தங்கள் மனதிற்குத் திருப்தியா யிருக்குமானால், செய்யலாம். செய்ய

வேண்டுமென்று கட்டளையிடவில்லை'' என்றாள். இவ்வாறு சீதை கூறியதைக் கேட்டதும் இரகுராமர் சந்தோஷமடைந்து நகைத்துச் சீதையைத் தழுவிக்கொண்டு ''ஏ மைதிலி! இவ்வளவு சாதுர்யமான வார்த்தைகளைப் பேச நீ எவ்விதம் கற்றாய்? நீ கங்காதேவியைக் குறித்து அப்போது சங்கற்பம் பண்ணியது உனக்குமட்டு முரியதன்று. உன்னுடன் கூட வனவாஸத்துக்கு வந்த எங்களுக்கும் பாத்தியப்பட்டதே. நீ சொல்லியபடியே உன் கோரிக்கையை நிறைவேற்ற நாளைய தினமே புறப்படுவோம். ஆனால் கங்கா நதியைப் பூஜிப்பதற்கு எவ்விடத்துக்குச் செல்லவேண்டுமென்று நீ உத்தேசித்திருக்கின்றாய் அதைத்தெரிவித்தால் அங்கே போவதற்கு மார்க்கத்தை யுண்டாக்கவும் இறங்குமிடத்தைச் சுத்தகரிக்கவும் தூதர்களுக்குக் கட்டளையிடுகின்றேன். அதுகேட்ட சீதை ஸ்ரீராமபிரானை ''ஏ ரகுகுல சிரேஷ்டரே! கங்காநதியும் சரயூநதியும் சங்கமமாகும் இடத்தில் கங்கையின் வடகரைக்குச் செல்லவேண்டுமென்று என்மனம் விரும்புகிறதென்றாள்'' பிறகுஇராமர் ''சீதே! அப்படியேசெய்வோம்''என்று சொல்லிச் சீதையை வஸ்திரத்தால் மறைத்து விட்டுத் தன் துவாரபாலகர்களை வரவழைத்து, அவர்களைப் பார்த்து, நீங்கள் சீக்கிரம் இலட்சுமணரிடம் சென்று நான் சொல்லும் விஷயங்களை விவரித்துக் கூறுங்கள். அதாவது—''உன்னுடனும் தாய்மார், மந்திரிகள், மித்திரர்கள், பரதசத்ருக்னர்கள், பட்டணத்து ஜனங்கள் வேதியர்கள் இவர்களுடனும் நானும் சீதையும் சரயூ கங்காசங்கமம் சென்று, அவ்விடத்தில் கங்காபூஜைசெய்ய உத்தேசித்திருப்பதால் அங்கே அரைக்காத வழி விஸ்தீரணத்துக்கு சேனைகளுக்கிருப்பிடமும், அதனருகில் நம்மெல்லாருக்கும் தனித்தனியே அன்ன பானாதி சகல வஸ்துக்களும் வைக்கத்தக்க அறைகளும் ஏற்படுத்தவேண்டியது. நாளையதினம் வேடிக்கையாகப் புறப்படத் தயாராயிருக்கவேண்டும்'' என்று தெரிவி யெனத் துவாரபாலகர்களுக்கு ஆக்ஞாபித்தார். ஆக்ஞையைக்கேட்ட உடனேதுவாரபாலகர்கள் ''தங்கள்உத்தரவுப்படியே செய்யக்காத்திருக்கிறோம்'' என்று அவரைப்பலவாறு வணங்கி ஸௌமித்ரியிடம் சென்றுஇராமபிரான் கூறிய விஷயமுழுவதையும் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட

யுவராஜ்ய பதவியிலிருக்கும் இலட்சுமணர், மந்திரிகளுடைய முகங்
களைப்பார்த்து விட்டுத் தூதர்களைப்பார்த்து, "தூதர்காள்! அவரது
உத்தரவை ஏற்றுக்கொண்டதாக ஸ்ரீராமபிரானிடம் தெரிவியுங்க"
ளென்று அவர்களுக்குக் கட்டளை யிட்டார். அவர்கள் உடனே
இராமபிரானிடம் வந்து, அவ்வாறே தெரிவித்தார்கள்.

பிறகு இலட்சுமணர் தங்கத்தடி பிடித்தவர்களும் பலவிதமான
தலைப்பாகைகள் அணிந்தவர்களுமான தூதர்களைப்பார்த்து"நீங்கள்
யாவரும் சீக்கிரம் பட்டணத்துக்குச் சென்று பட்டணத்து ஜனங்
கள் யாவருக்கும் நாளையதினம் ஸ்ரீ ராமபிரான் யாத்திரை புறப்
பட்டு போவதைத் தெரிவியுங்க"ளென்று ஆக்ஞாபித்தார். அத்தூத
ர்கள் நல்லது அப்படியே செய்கிறோமென்று சொல்லி விட்டு
உடனே இராஜ வீதிகள் தோறும் சென்று அங்கே தங்கள் கரங்
களை உயரத் தூக்கிக்கொண்டு உரத்து "ஏ ஜனங்களே! சுகமாகக்
கேளுங்கள். நாளையதினம் இராமபிரான் சீதையுடன் கங்கா
பூஜை செய்வதற்காக, கங்காஸரயூசங்கமத்திற்குச் சந்தோ
ஷமாகப் புறப்படப் போகிறார். இதை நீங்கள் அறியுங்கள்"
என்று யாவருக்கும் தெரிவித்து விட்டு, இலட்சுமணரிடஞ் சென்று
தங்கள் உத்தரவுப்படியே ஜனங்கள் யாவருக்கும் தெரிவித்து
விட்டோமென்று கூறிச்சென்றார்கள். இலட்சுமணர் சபையில்
தமது சேவகர்களைக் கொண்டு தச்சர்கள், செங்கலப்பவர்கள்
கன்னார், சக்கிலியர்கள், மண் ஒட்டர்கள், கடைக்காரன், விறகு
வெட்டிகள், குடியிருப்புக் கிரகங்கள் அமைப்பதில் கைதேர்ந்தவர்
கள், பொதி மாட்டு மூலமாகத் தண்ணீர் கொண்டு வருகிறவர்கள்,
மற்ற வேலைகளையும் நடத்தத் தக்க வேலைக்காரர்கள் இவர்கள்
யாவரையும் வரவழைத்து அவர்களுக்கு வஸ்திரா பரணங்களை
அளித்துச் சந்தோஷப் படுத்தி அன்புடன் "வேலையாட்களே!
ஸ்ரீ ராமபிரான் சீதா பிராட்டியுடன் சைன்யங்கள் சூழ நாளைய
தினம் யாத்திரை புறப்படுகிறாராதலால், நீங்கள் மார்க்கததை
மேடு பள்ளங்க ளில்லாமல் ஒழுங்குப் படுத்தி நடையாய்ப் போவத
ற்கும் இரதஞ் செல்வதற்கும் சரியானபடி வைக்கவேண்டியது.
மார்க்கத்தில் இடையூறாக விருக்கும் மலைகளையும் மரங்களையும்
வெட்டி ஒழுங்குப்படுத்த வேண்டியது. வழியிலிருக்கும் வாவிகள்

கிணறுகள் குளங்கள் தடாகங்கள் இவைகளைச் சுத்தப்படுத்தி இல்லாத விடங்களில் நூதனமாக உண்டுபண்ணி, எல்லா இடங்களிலும் ஜலம் சுகமாகக் கிடைக்கும்படி செய்யுங்கள். சேனைகள் இறங்குவதற்காக ஒன்றரைக் காத வழி விஸ்தீரணமுள்ள இடமேற்படுத்தி, அங்கே சகல சாமான்களும் நிறைந்திருக்கும்படி செய்யவேண்டியது. நல்ல சுவர்களெழுப்பிச் சமையல் வீடுகளையும் அங்கு அடுப்புகளையும் ஏற்படுத்த வேண்டும். வீடுகளின் மேல் புற்களைப் போட்டு வெய்ந்து உட்புறங்களில் வஸ்திரங்களைக்கட்டி அலங்கரி யுங்கள். இன்னும் சில கிருகங்க ளேற்படுத்தி அவைகளைச்சிவப்பு வஸ்திரங்களால் அலங்கரித்து அங்கே சாமான்களைச் சித்தப் படுத்துங்கள். மார்க்கத்தில் அங்கங்கே பூந்தோட்டங்க ளேற்படுத்தி, அவைகளின் சுற்றுச் சுவர்களில் சித்திரங்களை வரைந்து அழகு செய்யுங்கள். மனிதர்கள் தங்கள் சிரசில் தூக்கிக்கொண்டு செல்லும் படியாகச் சித்திரப் படங்களைத் தயார் செய்யுங்கள். குளிர்ச்சிக் காகவும் வாசனைக்காகவும் மண் பாத்திரங்களில் பூஞ்செடிகளை வைத்துத் தயார் செய்யுங்கள். வழியில் அங்கங்கே பாட்டுக்காரர்கள் சுகமாகப் பாடிக்கொண் டிருக்கத் தக்க வசதிகளை யேற்படுத்துங்கள். யானை குதிரை தேர் இவைகளுக்கு ஆயிரக் கணக்கான சாலைகள் ஏற்படுத்தி, அவைகளில் புல் முதலியவைகளை நிறைத்து வையுங்கள். மார்க்கங்களில் சந்தனக் குழம்புகளைத் தெளித்து இரதங்களின் சக்கரங்கள் பதியாம லிருக்கும்படி செய்யுங்கள். அங்கங்கே கூடாரங்களை யடித்து அவைகளைப் புஷ்பங்களா லலங்கரி யுங்கள். யானை ஒட்டகம் குதிரை இரதம் இவைகளுக்கு வஸ்திரங்கள் கட்டி மணிகள் தொங்கவிட்டு அலங்கரி யுங்கள். வண்டிகள் இரதங்கள் ஒட்டகங்கள் யானைகள் இவைகளில் சதக்னி, பரிகம், பாணம், சக்தி, விற்கள் இவைகளை நூற்றுக் கணக்காகவே வைத்து அனுமான் கருடன், கோவிதாரம், பாணம் முதலிய சுபகரமான அடையாளங்களமைந்த கொடிகளை நாட்டுங்கள். அவைகள் பச்சை, வெண்மை, சிவப்பு, நீலம் இந்நிறங்கள் உள்ளவைகளா யிருக்கட்டும். ஸ்ரீ ராமபிரான் ஏறிச் செல்லும் யானையின் மீது, சொர்ணம், மாணிக்கம் இவைகளால் செய்யப்பட்ட பச்சை நிறமான ஆசனத்தை அமைத்து, அதைச் சுற்றிலு முத்துச் சரங்களைக் கட்டித்

தொங்க விட்டு, அதன்மேல் சந்திர வட்டக் குடையை நாட்டுங்கள். சீதாபிராட்டி ஏறிச் செல்லும் பெண் யானையைச் சொர்ணம் பவளம் வைடூரியம் முத்து இவைகளால் அலங்கரித்து நீல வர்ணமுள்ளதான ஓர் ஆசனத்தை ஏற்படுத்தி அதில் சொர்ண கும்பத்தையும் வையுங்கள். வழியில் புஷ்ப மாலை மயமான தோரணங்களைக் கட்டுங்கள். இரதங்களில், அவ்விடத்துக்கு வேண்டிய வஸ்திரங்கள், தோரணங்கள், பலவிதமான பாத்திரங்கள் இவைகளை எடுத்து வையுங்கள். இன்னும் பல விஷயங்கள் கூறவேண்டியிருக்கின்றன. ஆயினும் புத்திசாலிகளாகிய நீங்கள் யாத்திரைக்கு வழியில் வேண்டியவைகளை யோசித்துப் பார்த்து சித்தப்படுத்தி இராமபிரானைத் திருப்தி செய்விக்கவேண்டும்'' என்று இவ்வாறு இலட்சுமணர் கட்டளை யளித்துச் சாயங்கால வேளை வந்தமையால், சந்தியாவந்தனஞ் செய்யச் சென்றனர்.

இலட்சுமணர் கூறிய கட்டளைப்படியே தூதர்கள் இராமபிரான் சந்தோஷமடைய வேண்டு மென்னும் எண்ணத்துடன் யாவற்றையும் சரிவர நடத்தி வந்தார்கள். இராமபிரான் சீதையுடன் நவரத்ன மயமான தமது கிருகத்தில் புஷ்பப் படுக்கையில் சயனித்து, திவ்விய சொர்ணாபரண பூஷிதையான பல தாஸிகள் சாமரம் வீசிவர அன்றிரவு சுகமாக நித்திரை செய்தார்.

தூதர்களுக்குக் கட்டளையிட்ட மூன்றாவது சருக்கம்.

முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

அன்றிரவு விடியற் காலத்தில் வந்திகள் சுகமாகப் பாடினார்கள். மங்கள வாத்தியங்கள் இனிமையாக முழங்கின. இதைக் கேட்டு இராமபிரான் சீதையோடெழுந்திருந்து, நித்தியகர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு பற்பல தானதர்மங்களைச் செய்து விட்டு, கோபாலன் என்னும் பேர் கொண்ட ஒரு ஜோதிட பிராமணரை யழைத்து, அவரை வணங்கி, தக்க மரியாதை செய்து பூஜித்து, அவரைப் பார்த்து "ஏ மகா புத்திசாலியாகிய கோபால கணிகரே! பிராமணோத்தமரே! கங்கா பூஜை செய்வதன் நிமித்தம் இப்பொழுது யாத்திரை செய்ய விரும்புகிறேன். அதற்காக ஒரு முகூர்த்தம் தீர்க்கமாய் யோசித்து வைத்துக் கொடும்" என்றார். அது கேட்டவுடன் கோபால ஜோஸியர் தமது முன்னிலையில் பஞ்சாங்க படத்தை விரித்து, அதில் நவக்ரகங்களின் பலாபலன்களைச் சோதித்துப் பார்த்து, தமது மனதில் நன்றாய் நிச்சயஞ் செய்துகொண்டு "ஏ இராஜீவ பத்ராக்ஷ! இன்று முதல் யாமத்தில் பூசநக்ஷத்திரங்கூடிய ஒரு உத்தமமான முகூர்த்தமிருக்கின்றது; அதன் பலனைக் கூறுகின்றேன். தாங்கள் கவனித்துக் கேட்கவேண்டும். இங்கு வந்திருக்கு முனிவர் யாவரும் கேட்கட்டும். தமது குருவாகிய வசிஷ்டரும் செவிசாய்க் கட்டும், பூசநக்ஷத்திரந் தரும் பலனை யோகங்களாவது லக்னமாவது மற்ற நக்ஷத்திரங்களாவது சந்திரனாவது குருவாவது ராகு வாவது யோகினியாவது கொடுக்கத் தக்கதன்று. அப்பூச நக்ஷத்திரமானது அக்காலத்தில் சகலமான நற்பலனையுமளிக்கும். ஏ இரகு நாயகா! யாத்திரைக்காக நான்வைத்துக் கொடுத்த இம் முகூர்த்தத்தில் தாங்கள் சீதாபிராட்டியுடன் புறப்படுங்கள்" என்றார். இவ்வாறு ஜோதிடர் கூறியதைக் கேட்ட இராமர், இலட்சுமணரைப் பார்த்து, "ஏ இலட்சுமணா! நல்ல முகூர்த்தத்தில் நாம் புறப்படப் போவதால், இப்பொழுது நம்முடன் சேனைகளும் புறப்படுவதற்கு முதல் அடையாளமாகப் பேரி மிருதங்கம் பணவம் காகளம் ஆனகம் கோமுகம் தாளம் கர்கரம் துந்துபி என்னும் இவ்வொன்

பது மங்கள வாத்தியங்களும் முழங்கட்டும்'' என்றார். உடனே இலட்சுமனர் தூதர்களை யழைத்து அவ்விதஞ் செய்ய உத்தர விட்டார். அக்கட்டளையைப் பெற்ற தூதர்கள் அவ்வாறே செய் தார்கள். புரோகிதராகிய வசிஷ்ட முனிவர் சொற்படி அநேகம் வேதியர்களைக் கொண்டு நாந்தி சிராத்தம் செய்து புத்துருக்கு நெய்வார்த்து அன்னமிட்டு அவர்களுக்குத் திருப்தி யுண்டாக்கி னர். அதன்பிறகு கணேசர் முதலிய தேவபூஜை செய்து வசிஷ் டர் கூறியபடி யாத்திரைக்குச் செய்யத் தக்க விதிகளையும் முடித் துக்கொண்டு, அவரைப் பார்த்து "ஏ பரமகுருவே! நமது புஷ்பக விமானத்தில் நமது பந்துக்களுடனும் வேதியர்களுடனும் என் முன்பாக அக்னி ஹோத்திரங்களை எடுத்து வையுங்கள். நீங்களே அவைகளை யெடுத்துச்சொல்லத் தக்கவர்கள். சீதை ஏறிவரப் போகும் புஷ்பமாலை அலங்காரத்தோடு கூடிய பெண் யானை யானது, நானேறிவரும் யானையினருகிலேயே வரட்டும்'' என்று கூறினர்.

பிறகு சீதையிடஞ் சென்று "ஏ சீதே! எந்த வாகனத்தில் நீ ஏறிவர உனக்குப்பிரியம்; அதை எனக்குத் தெரிவி; அந்தப் படி யான் திட்டஞ் செய்கிறேன்'' என்றார். சீதை ஒரு நிமிஷ நேரம் மனதி லாலோசித்து "ஏ இரகுநாயகா! நான் பெண்யானை யின்மேல் ஏறி வருகிறேன். அது உமக்குப் பிரியமானல் அப் படியே நடக்கட்டும்'' என்றாள். பிறகு இராமபிரான் இலட்சும ணருக்கு அவ்வாறு உத்தரவு செய்துவிட்டு, சீதைக்கு திவ்ய வஸ் திரங்களை ஸமர்ப்பித்து, தமது தாய் மார்களுக்கும் சோதரபத்னி களுக்கும் குரு பத்னிகளுக்கும் வசிஷ்டருக்கும் வேதியர்களுக் கும் வஸ்திரங்களை யளித்துப் பிறகு தமது சகோதரர்களுக்கும் வஸ்திரங்களை யளித்து, தரித்துக்கொள்ளும்படி செய்து, தாமும் நூதன வஸ்திரம் உடுத்துக் கொண்டார். இதன்பின் பலவித மான சஸ்திரங்களைக் கையில் எடுத்துக்கொண்டு சீதையைச் சீக்கி ரம் புறப்படும்படி அவசரப்படுத்தி விட்டு, தாய்மாரையும் பெரியோரையும் வணங்கிப் பின் மந்திரிகள் சூழ சிவிகையி லேறிச் சபைக்கு வந்தார். அங்கே சிங்காதனத்தில் வீற்றிருந்து இலட்சுமணரைப் பார்த்து, "ஏ இலட்சுமணா! இரண்டாவது

அடையாளமாக மறுபடி நவவாத்தியங்களும் முழங்கும்படி உத்தரவு செய்யெனக் கூறினர். அவ்வாறு இலட்சுமணர் கட்டளையிடத் தூதர்கள் வாத்தியங்களை மேகநாதம் போல் முழக்கினர்கள். மறுபடியும் இலட்சுமணரைப் பார்த்து அன்புடன் "ஏ ஸௌமித்திரே! எனது உத்தரவுப்படி சுமந்திரர் அயோத்தியா பட்டணத்தைப்பாதுகாத்து வரட்டும். எனக்குமுன் பரதனும் என்பின் நீயும் உனக்குப்பின் சத்ருக்னனும் அவனுக்குப் பிறகு சீதையும் அவளுக்குப் பிறகு உனது பத்னியுமாகிய ஊர்மிளேயும் அவளுக்குப்பிறகு பரதன் பத்னியாகிய மாண்டவியும் அவளுக்குப் பிறகு சத்ருக்னன் பத்தினியாகிய சுதகீர்த்தியுமாகப் புறப்படவேண்டும். பட்டணத்து ஸ்திரீகளுடன் நமது தாய்மார்களும் விமானமேறிப் புறப்படட்டும். இப்பொழுது சீதை முதலியவர்கள் பெண்யானைகளின்மீது சீக்கிரம் இவ்விடம் வரட்டும். அதன் பிறகு நான் யானையின் மீதேறிக்கொள்கிறேன்" என்றார். உடனே இலட்சுமணர் அவ்வாறே சீதை முதலியவர்களை யானைகளின் மீது ஏற்றி வைத்துக்கொண்டு, வெகு சீக்கிரத்தில் வந்தார். இராமர் உடனே சுமந்திரனுக்குத் திவ்ய வஸ்திரங்களைக் கொடுத்து நான் யாத்திரை செய்துவரும் வரையில், அயோத்தியா பட்டணம் உன் ஆதீனத்திலிருக்கவேண்டிய தென்று கூறி, இராஜ்யத்தை அவன் வசப்படுத்தினர். அப்பால் இராமர் முகூர்த்த காலம் வந்ததை யறிந்து, இலட்சுமணர் கரத்தைப் பிடித்துக்கொண்டு, சிம்மாசனத்திலிருந்து எழுந்து பட்டத்து யானையின் பக்கம் சென்று, அதை வலமாக வந்து யானைத் தந்தங்களால் அமைத்திருந்த படியில் பாதமலரை வைத்து மெதுவாக ஏறி அதன்மேல் சுகமாக உட்கார்ந்தார், அச்சமயத்தில் இராஜதூதர்கள் துந்துபி முதலிய நவவாத்யங்களையும் இனிமையாக முழக்கினர்கள். அப்பொழுது வாரநாரிகள் நர்த்தனஞ் செய்தார்கள். யானை குதிரை இரதம் இவைகளில் பெரிய பெரிய வாத்தியங்களை வைத்துக்கொண்டு முழக்கினர்கள். குண்டு முதலிய யந்திர சப்தங்களைச் செய்தார்கள். வேதியர்கள் ஜயசப்தங்களையும் வேத கோஷங்களையும் செய்தனர். விஜயன் என்பவன் இராமபிரானுடைய ஒரு பாரிசத்தில் நின்று கொண்டு இரத்தினப்பிடி யமைத்த மயில் தோகையாற் செய்யப்பட்ட சாமரத்தை வீசி வந்தான். இன்னொருவன் அவருக்குப் பின் புற

மிருந்து மான் விசிறியை வீசினன். நூறாயிரம் கலசங்களமைத்துச் சுற்றிலும் முத்துமாலை தொங்கவிட்டு இரத்தினப்பிடி போட்ட விஸ்தாரமான குடையை மற்றொருவன் பிடித்தான். இதற்குப் பிறகு இலட்சுமணர் ஒரு யானையின்பேரில் ஏறிக்கொண்டு அதிவேகமாக வந்து, இராமபிரானுக்குப் பின்னே நின்றார். சீதை முதலானவர்களும் இலட்சுமணருடைய யானைக்குப்பின்னால், தங்கள் தங்கள் யானையின்பேரிலிருந்து சுற்றிலும் நடக்கும் வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு வந்தார்கள். புஷ்பக விமானமும் மெதுவாக ஆகாயமார்க்கத்தில் வந்து கொண்டிருந்தது. அதிலிருக்கும் பட்டணத்து ஸ்திரீகளும் ஸ்ரீராமபிரானையும் யாத்திரோற்சவத்தையும் பார்த்துக்கொண்டே மலர்மாரி பொழிந்தார்கள். பிறகு முன் சொன்னவர்கள் யாவரும் கஜங்களின்மேலும் அசுவங்களின் மேலும் இரதங்களின்மேலும் ஏறிக்கொண்டு ஸ்ரீ ராமபிரானுக்கு இரு பக்கங்களிலும் இரத சக்ரதாரைபோல் ஒழுங்காக விருந்து கொண்டும் வழிப்பிரயாணஞ் செய்பவர்களுக்கு ஆகாரமெப்படிச் சந்தோஷங் கொடுக்குமோ அப்படித் தங்கள் அருகேயிருந்து சந்தோஷமளிக்கும் இராமபிரானை வணங்கிக்கொண்டும் வந்தார்கள். ஸ்ரீராமபிரானும் தமது கமலம் போன்ற கைகளால் அவர் வந்தனங்களை யேற்றுக்கொண்டு மகிழ்ந்தார். இவ்வாறு ஸ்ரீராமபிரான் மெதுவாகப் பிரயாணஞ்செய்து வரும்போது, சில நடர்கள் யானைகளின் பேரிலேறிக்கொண்டு வீணை முதலிய வாத்தியங்களை வாசித்தார்கள். இராமர் இவ்வாறு வழியில் நடக்கும் வேடிக்கைகளையும் வாரநாரிகளுடைய நர்த்தனங்களையும் பார்த்துக்கொண்டு, இனிமையான வாத்திய சப்தங்களையும் கேட்டுக்கொண்டு அங்கங்கு ஏற்படுத்தி யிருக்கும் பண்டசாலைகளையும் பார்த்துக்கொண்டு சதுரங்கசேனைகள் சூழ, சேனைகள் இறங்க ஏற்படுத்தியிருக்கும் இடத்துக்குச் சென்று, அவ்விடம் அயோத்தியைப்போ லிருப்பதைப் பார்த்து மகிழ்ந்து யானையிலிருந்து கீழே யிறங்கினார். அச்சமையத்தில் பல வீரர்கள் செய்யும் வணக்கங்களைப் பெற்று, இலட்சுமணருடைய கையைப் பிடித்துக்கொண்டு அங்கே அமைத்திருக்கும் கூடாரத்துக்குட்சென்று, சிங்காஸனத்திலமர்ந்தார். சீதைமுதலியபட்டஸ்திரீகளும் அவரவர்களுக்கமைக்கப்பட்டிருந்த கூடாரத்

துக்குட் சென்றுர்கள். பிறகு இராமர் இலட்சுமணனைப் பார்த்து, ''ஏ இலட்சுமணு! இரண்டு மைல் விஸ்தார முள்ள இவ்விடத்தின் எல்லையில் நான்கு திக்குகளிலும் நூற்றுக் கணக்கான தூதர்களைத் தனித் தனியே நின்று காக்கும்படி செய். காதவழிக் கப்பால் எட்டுத் திக்குகளிலும் நூற்றுக் கணக்காகக் குதிரை வீரர்களிருந்து காத்து வரட்டும்'' என்று கட்டளை யிட்டார். இலட்சுமணரும் நல்லது அப்படியே செய்கிறேன் என்று சொல்லிவிட்டு இவர் ஆக்ஞைப்படி காவலாளர்களை நியமித்தார். பிறகு இராமபிரான் மித்திரர்களுடனும் வேதியர்களுடனும் நாந்தி சிராத்த சேஷமான நெய்யை மனோகரமான அன்னத்தோடு கலந்து புசித்தார். பிறகு வேதியர்களுக்குத் தாம்பூலமுந் தட்சிணையுங் கொடுத்துவிட்டு, முக சுத்தி செய்துகொண்டு மறுபடியும் சிங்காஸனத்தி லமர்ந்து வேதாந்த சாஸ்திர சிரவணஞ் செய்தார். பிறகு சந்தியாகாலம் வந்தவுடன், சந்தியா வந்தனுதிகளை முடித்துக்கொண்டு விதிப்படி அக்நிஹோத்திர ஹோமஞ் செய்தார். இதன் பின் சபைக்கு வந்து சிம்மாசனத்தில் வீற்றிருந்து வாரநாரிகள் நர்த்தனஞ் செய்வதையும், காயகர்கள் பாடுவதையும் இரண்டு யாமம் கேட்டுக்கொண்டிருந்து பிறகு படுக்கை அறைக்குச் சென்று அங்கு ஹம்ஸதூளிகா மஞ்சத்தில் சீதா தேவியுடன் நித்திரை செய்தார். மறுநாளையும், அவ்விடத்திலேயே வேடிக்கையாக விருந்து கழித்து, மூன்றுவது தினத்தில் முன்போலவே வாத்திய கோஷத்துடன் வேறிடம் சென்றுர். இவ்வாறு சில விடங்களில் ஒரு நாளும் சில இடங்களில் இரண்டு நாளும் இருந்து அங்கங்கு நடக்கும் வேடிக்கைகளைப் பார்த்துச் சந்தோஷ மடைந்து சீதைக்கும் காட்டி, அவளைச் சந்தோஷப்படுத்தி, மார்க்கத்தில் மிகவும் மெதுவாகச் சென்று ஒரு மாதகாலத்தில், முன் முத்கலமுனி வாசஞ் செய்ததும் இப்பொழுது ஜீர்ண மடைந்திருப்பதுமான உத்தம ஆசிரமத்தை யடைந்தார். அவ்வாசிரமத்திற்கு இராமர் வந்திருக்கும் செய்தியை பாகிரதியின் தென்கரையில் வசித்துவரும் முத்கலர் அறிந்து, உடனே அவ்விட மிருந்து புறப்பட்டு வந்து இராமபிரானைத் தரிசித்தார். இராமபிரான் அவரைக் கண்டதும் ஆசனத்திலிருந் தெழுந்திருந்து வணங்கி மரியாதை செய்து, தமது வாசகிரகத்தில் அவருக்கு

ஆசனமளித்து அதில் வீற்றிருக்கச் செய்து வினயத்துடன் முனிவரை வினவுகிறார்.

ஏ முனிபுங்கவரே! இவ்வாசிரமத்தைத் தாங்கள் விட்டு வேறிடம் ஆசிரம மேற்படுத்திக்கொண்டு வசிக்கக் காரணம் யாது? அதன் உண்மையை ஸவிஸ்தாரமாக எனக்குச் சொல்லியருள வேண்டு மென்றார். இதைக் கேட்டதும் முத்கல முனிவர் "ஏ இராமா! பதினான்கு வருஷகால வனவாஸ விருதத்தை முடித்து, அயோத்தியா பட்டணத்தை யடைந்து பட்டாபிஷேகம் செய்து கொண்டு சுகமாக ராஜ்ய பரிபாலனஞ் செய்து வரும் உம்மை ஏதோ ஒரு காரண நிமித்தமாக இவ்விடத்தில், வெகுகாலமான பின் இன்று தரிசித்ததால், யான் தன்னியனானேன். முன் பரதனுடைய பிராண நிமித்தம் எனது ஆசிரமத்தி லிருந்து திவ்ய ஒஷதிகளைக் கொண்டுபோன தினத்தன்றோ யான் தம்மைத் தரிசித்தது? இவ்வாசிரமத்தை விட்ட காரணத்தை நான் உமக்குக் கூறுகிறேன். ஸ்நான முதலிய அனுஷ்டானங்களைச் செய்வதற்கு வசதியான கங்கையேனும், சரயூவேனும் இல்லாததால் இதைவிட்டு நான் கங்காதீரம் சென்றேன். ஆனால் இது மகா உத்தமமான ஆசிரமம். முன் காலத்தில் இங்கு நூறாயிரக் கணக்கான முனிவர்கள் தவஞ் செய்து சித்தி யடைந்திருக்கிறார்கள். ஆதலால் நானும் சிலகாலம் இங்கிருந்து தவஞ்செய்தேன். நீர் கேட்டபடியே இவ்வாசிரமத்தை விட்டகாரணங் கூறியாயிற்று. உமது மனதில் இன்னும் ஏதாகிலும் கேட்கவேண்டுமென்ற கருத்திருந்தால், அதை நான் அறிய விரும்புகிறேன்" என்றார். உடனே இராமபிரான் "ஏ முனிபுங்கவரே! இங்கு என்ன ஏற்பாடுசெய்தால் இந்த இடம் தங்களுக்கு முன்போல வாச யோக்கியமாயிருக்கும், தெரிவிக்கவேண்டுகிறேன்" என்றார். அதற்கு முத்கலமுனிவர் "இவ்விடத்தில் சரயூ நதியானது கங்கையுடன் கலக்குமானால் இந்த இடம் எனக்குச் சுகமான வாசஸ்தல மாகும்" என்றார். அதற்கு இராமபிரான் முனிவரைப் பார்த்து "ஏ முனிசிரேஷ்டரே! இந்தச் சரயூநதியைத் தாங்கள் அவ்வளவு முக்கியமாய் விரும்புவதற்குக் காரணம் என்ன? அது எங்கு உற்பத்தியாயிற்று,

விவரமாக எனக்குக் கூறியனுப்புங்கள்'' என்றார். அதற்கு முத்கல முனிவர் ''ஏ இராமா! உமது சரித்திரத்தையே என் முகமாக நீர் கேட்க விரும்புகிறீர். ஆயினும் கூறுகிறேன் கேளும்—

முன் கிருதயுகத்தில் சங்கனென்னும் ஒரு தைத்தியன் வேதங்களை யபகரித்துக்கொண்டு போய் சமுத்திரத்தி லெறிந்துவிட்டு அவனும் அங்கேயே மறைந்துவிட்டான். அந்த அசுரனைக் கொல்வதற்காக அளவிட்டுச் சொல்வதற்கு அரிய ஒரு மச்சரூபந் தரித்து அவனைக்கொன்று அவ்வேதங்களை எடுத்துப் பிர்மதேவருக்குக் கொடுத்துவிட்டுப் பின் முன்போலவே சுயரூபத்தை எடுத்துக்கொண்டீர். அப்பொழுது தங்களுக்குண்டாகிய மகிழ்ச்சியால் தங்கள் கண்களினின்று ஆநந்தபாஷ்பம் பெருகி இமய பர்வதத்தின் உச்சியில் விழுந்தது. அது ஓர் புண்ணிய நதியாகிச் சுபகரமான தீர்த்தமாகப் பெருகி மெதுவாக ஓடிவந்து பிந்து ஸரஸில் கலந்தது. அந்த பிந்து ஸரஸிலிருந்து மானஸமென்னும் ஸரஸை யடைந்தது. இத்தருணத்தில் மகா பூஜிதரான தங்கள் முன்னோராகிய வைவசுவதமனு வென்பவர் தாம் யாகம் செய்யக் கருதி அதற்கு வேண்டிய முயற்சி செய்துகொண்டு தமது குருவைப் பார்த்து, ''ஏ ஆசார்ய! இவ்வயோத்தியானது அநாதி சித்தமானதாலும் நான் சுகமாக வாசஞ் செய்ய வேண்டுவதன் நிமித்தம் மிக்க வசதியாகச் செய்திருப்பதாலும் இங்கு யான் யாகம் செய்யவிருக்கின்றேன். இது தங்கள் மனதிற்குந் திருப்திதானா'' வென்று கேட்டார். அதற்கு குருவானவர் ''ஏ மகாராஜா! இங்கு சிரேஷ்டமான நதியுமில்லை. உத்தமமான தீர்த்தமுமில்லை. ஜலசௌக்கியமில்லாத இவ்விடத்தில் யாகம் செய்ய உன் மனது கருதினால் மானஸ ஸரஸிலிருந்து பாதகங்களைப் போக்கும் ஓர் நதியை இதனருகே ஓடும்படி செய்'' என்றார். இப்படி குரு சொல்லியதும் வைவசுவதமனு உடனே வில்லையெடுத்து நாணேற்றிடணத்காரஞ் செய்து, அதில் ஓர் உத்தமமான அம்பைப் பொருத்தி வடதிசை நோக்கி எய்தார். அந்த அம்பானது மானஸ ஸரஸில் ஒரு பக்கத்தைப் பிளந்து அதிலிருந்த தீர்த்தத்தை ஓர் நதியாகப் பிரவகிக்கச் செய்து அங்கிருந்து அயோத்திக்கு வந்து அதன் அருகே ஓடிற்று. அந்நதியானது அவர் எய்த சரத்தின் வழியே வந்ததனால்

சரயூ என்கிற பெயரையும் மானஸமென்னும் ஸரஸிலிருந்து உண்டானதால் ஸரயூ என்கிற பெயரையும் அடைந்து பிரசித்தமாயிற்று.

இதற்குச் சிலகாலத்திற்குப் பின் கபில முனிவர் கோபாக்னியால் சாகரர்களாகிய உமது முன்னோர் அறுபதினாயிரம் பேர்களும் பஸ்மமாயினர். அவர்கள் சொர்க்கமடைவதன் பொருட்டு உமது முன்னோராகிய பகீரத மகாராஜன் அருந்தவம் புரிந்து பரமசிவனைத் திருப்தி செய்வித்து அவருடைய அநுக்ரகத்தால் ஆகாச கங்கையைப் பூலோகத்தில் பிரவகிக்கச்செய்து இச்சரயூ நதியுடன் கலக்கச் செய்தார். சங்கருடைய வரப்பிரஸாதத்தால் பெருகிவந்தமையால் கங்கையானது நதிகளுக்குள் மிக்க சிரேஷ்டமெனப் பெயர் பெற்றது. சமுத்திரத்தில் கலக்கின்றமையால் இச்சரயூநதியையும் கங்கையென்றே கொள்வார்கள். உமது பாதத்தில் பிறந்த கங்கா நதியானது உலக முழுவதையும் சுத்தப்படுத்தி வரும்போது உமது நேத்திரங்களிலுண்டான இச்சரயூ நதியினுடைய மகிமையை நான் என்னென்று கூறுவேன். மகா வல்லமையுள்ள ஒருவன் இச்சரயூ நதியின் மகிமையை ஆயிரத்து நூறு கோடி வருஷங்கூறின போதிலும் முழுமையும் அவனால் சொல்வது அசாத்தியம். ஏ இரகுபுங்கவா! நீர் கேட்டபடியே சரயூநதியின் மகாத்மியத்தை உமக்குக் கூறினே''னென்று முத்கலர் கூறினார்.

ஸ்ரீ ராமபிரான் இவ்வாறு முத்கலர் கூறியதைக்கேட்டு இலட்சுமணரைப் பார்த்து ''ஏ இலட்சுமணா! எனது ஆக்ஞையின் சாமர்த்தியத்தைக்கொண்டு ஒரு பாணம் எய்து சரயூநதியை இவ்விடங் கொண்டுவா'' என்றார். உடனே இலட்சுமணர் ஆகா அப்படியே செய்கிறேன் என்று கூறிவிட்டு இராமபாணங்களில் ஒன்றை எய்து சரயூநதியின் கரையை யுடைக்க,அச்சரயூநதியானது அதன் வழியே ஒரு பாகமாகப் பிரிந்து முத்கல முனிவருடைய ஆசிரமத்தின் அருகில் பிரவகித்தது. மறுபடியும் கங்கையுடன் கலந்தது. ஸ்ரீராமபிரான் ''அதைப்பார்த்து நமது இலட்சுமணன் இவ்விடமிருந்து பாணம் எய்து சரயூநதியின் கரையைப் பிளந்தமையால் இவ்விடத்தில் ஒரு நகரம் ஏற்பட்டு அதற்குத் தத்திரி என்கிற பெயர்

பிரசித்தமாகப்போகிறது. தத்திரி என்னும் நகரமானது மகா மகிமை பெற்ற உமது வாச விசேஷத்தால் பூலோகத்தில் பிரசித்த மான பதரிகாசிரமத்தைக்காட்டிலும் அதிகமான மகிமை பெறப் போகிறது" என்றார்.

இதன்பின் இராகவர் சீதா தேவியை யழைத்து "ஏ சீதே! இந்த முத்கல முனிவருடைய ஆசிரமத்தில் நமது இலட்சுமணன் எனது நாமம் எழுதியுள்ள பாணத்தை எய்து சரயூநதியை இவ் விடம் பிரவகிக்கச் செய்திருக்கிறான். ஆகையால் சரயூ கங்காசங்க மத்திற்கு நமது தாய்மார்கள் நம் கூடவந்திருக்கும் பட்டணத்து ஸ்திரீகள் இவர்களுடன் புஷ்பகவிமானத்தி லேறிச்சென்று நமது குரு, வேதியர்கள் இவர்கள் கூறியபடி உனது சங்கற்ப பிரகாரம் கங்கையை நன்றாய் பூஜித்துவிட்டுச் சீக்கிரம் இங்கு வந்து சேர்" என்று கூறினார். பிறகு புதிதாய் உண்டான சரயூநதி கங்கையில் சேருமிடத்தில் முத்கல முனிவருடைய ஸந்நிதியில் என்னுடன் நீ கங்காபூஜை செய்வாய் என்று கூறி யனுப்பினார். விதேக புத் திரியாகிய சீதாபிராட்டியானவள் நல்லது அப்படியே செய்கிறே னென்று அவர் திருவுளக் கருத்தை ஏற்றுக் கொண்டு பூஜாசாமக் கிரிகளைச் சேகரித்துக்கொள்வதற்காக கூடாரத்திற்குள் நுழைந் தாள்.

சரயூ நதி இரண்டு பிரிவானதைக் கூறும்

4-வது சருக்கம்.

முற்றிற்று.

## 5-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ஜனகமகாராஜாவின் புத்திரியாகிய சீதாபிராட்டி பூஜைக்கு வேண்டிய சாமக்ரிகளை யெடுத்துக்கொண்டு, கௌஸல்யை முதலிய யாவருடனும் புஷ்பக விமானமேறிச் சென்று க்ஷணநேரத்திற்குள்ளாக கங்கையுடன் விருத்த சரயூ சேருமிடத்தை யடைந்தாள். தீக்ஷித பத்னியாகிய ஒருத்தி, தன் கணவனையும் அக்நிஹோத்திரத்தையும் விட்டுப் பிரிந்து தாங்களிருந்த இடத்தின் எல்லையைத் தாண்டக்கூடாதெனச் சாஸ்திர மேற்பட்டிருக்கிறது. இப்பொழுது சீதாதேவி புஷ்பகவிமானமேறி ஆகாயமார்க்கமாய் வந்தமையால், எல்லையைக் கடந்தாள் என்னும் தோஷ மேற்படவில்லை யென்றறிக.

சீதாபிராட்டி விமானத்திலிருந்து சங்கமஸ்தலத்தி லிறங்கி அதற்குவணங்கி, புரோகிதர் கூறியபடி சகல வாயனங்களுடனும் தேங்காய் பழ முதலியவைகளைச் சமர்ப்பித்து, விதிப்படி அங்கு ஸ்நானஞ்செய்து, பிறகு விதிப்படி, பூஜைசெய்து மது மாம்சங்கள் பக்குவான்னங்கள், பலிகள், பட்டுவஸ்திரங்கள், முத்துமாலைகள், சந்தனங்கள், திவ்யமான பலவித ஆபரணங்கள், வாயனங்கள் இன்னும் பலவித உபஸ்கரங்களைச் சமர்ப்பித்து, அதன் பிறகு சுமங்கலிகளைச் சகலோபசாரங்களால் பூஜித்து, அருந்ததி வசிஷ்டர்களையும், நன்றாய்ப் பூஜித்து யாவருக்கும் திவ்யபோஜனம் அளித்துத் திருப்திசெய்து வைத்தாள். யாவரும் புசித்த பிறகு அவர்களுக்குத் தாம்பூலங் கொடுத்து மறுபடியும் பட்டு வஸ்திரங்கள் திவ்யாபரணங்கள் அளித்து சந்தோஷப்படுத்தினாள். தானும் அன்று சிறிது உப ஆகாரம் செய்துகொண்டு இராமருடைய க்ஷேமத்திற்காக உபவாஸமிருந்து பிறகு சீக்கிரமாக எல்லாருடனும் விமானமேறி இராமபிரானருகில் போய்ச் சேர்ந்தாள். பிறகு ஸ்ரீராமசந்திரரும் ஆசாரியர்களையும் வேதியர்களையும் அழைத்துக்கொண்டு சீதையுடன் சகல சாமக்கிரிகளையும் சேகரித்துக் கொண்டு புறப்பட்டு கங்காசங்கமத்தை யடைந்து சீதை செய்த

பூஜைக்கு நூறுமடங்கு அதிகமாக விதிப்படி பூஜைசெய்தார். ஆயிரக்கணக்கான வேதியர்களுக்குப் பசு யானை குதிரை இரதம் இவைகளைத் தானமளித்து, அவர்களுக்குச் சிரத்தையுடன் திவ்ய போஜனமளித்துத் திருப்தி செய்வித்துப் பின் தாம் சீதை யுடனும் சகோதரர்களுடனும் இன்னும் மற்ற பந்துக்களுடனும் திவ்யபோஜனம் செய்துவிட்டுச் சிங்காசனத்தமர்ந்து இலட்சுமண னைப் பார்த்துப் பின்வருமாறு கூறுவாராயினர்.

ஏ இலட்சுமணா! "இவ்விடத்தில் எனது வாஸம் ஒன்பது நாள் என்றறி. இவ்விடத்திற்கு எல்லைகளைக் குறிப்பிட்டு காவற் காரர்களை ஏற்படுத்து. யான் இப்பொழுது கூறும் உத்தரவுப்படி செய். வழிப்போக்கர்களில், பிரமசாரிகளாயினும், கிரகஸ்தர் களாயினும், வானப்பிரஸ்தர்களாயினும், சந்நியாஸிகளாயினும், வேறு யாராகிலும் இவ்விடம் வருவார்களாயின், அவர்கள் என் னைப் பாராமலும் எனது பூஜையைப் பெறாமலும் போகக்கூடாது. அப்படி என்னைப் பாராமல் எவரேனும் போவார்களாயின் உங்க ளுக்கு சிக்ஷை விதிக்கப்படும்" என்று கட்டளையிட்டார். இலட்சு மணர் அவர் உத்தரவுப்படியே செய்துவந்தார். பிறகு சியவனர் என்னும் ஒரு முனிவர் ஸ்ரீராமபிரான் இவ்விடம் வந்திருக்கும் செய்தியை யறிந்து அவரைத் தரிசிக்க விரும்பி அதி சீக்கிரமாக அவர் சமீபத்திற்கு வந்தார். இராமபிரான் அவரைக் கண்டதும் வணங்கி, தக்க பூஜை செய்து ஓர் ஆசனமளித்து அதில் வீற்றிருக் கப் பிரார்த்தித்தார். அம்முனிவர் அவ்வாசனத்தில் வீற்றிருந்து இராமபிரானைப் பார்த்து, "ஏ இராமா! இராஜீவ பத்ராக்ஷ! கங்காநதியின் தென்கரையில் சிகடம் என்னும் தேசத்தில் பரம சுபகரமான ஓர் ஆசிரமம் எனக்கிருக்கின்றது. அவ்விடத்தில் எங் களுக்கு வேண்டிய கந்தமூல பலாதிகளை வளரவொட்டாமல் பாத கர்கள் தடைசெய்கிறார்கள். தங்கள் தூதர்களைக்கொண்டு அதை நிவர்த்தி செய்து பாதுகாக்கவேண்டும்" என்றார். உடனே இராம பிரான் ஒரு தனுசை எடுத்து குணத்தொனி செய்து அதில் ஒரு பாணத்தைப் பூட்டி அவ்வாசிரமத்திற்கு நேரே எய்து, அதைச் சுற்றிலும் துஷ்டர்கள் உட்செல்லா வண்ணம் அகழிபோன்ற ஒரு ரேகையை யுண்டாக்கினர். இராமபாணத்தா லுண்டாகிய

ரேகை யிருந்த அந்த இடத்தில் இராமரேகை என்று ஒரு பட்டண மும் அதே பெயர்கொண்ட ஒரு நதியும் உண்டாயின. இவ் வாறு உண்டானதை யறிந்த சியவன முனிவர் ஸ்ரீராமபிரானைப் பார்த்து "பிரபு! வெகு நாளாய் இழிவடைந்திருந்த அந்தக் கிகட தேசத்தில் உமது வாக்கியத்தால் அநேகம் புண்ணிய ஸ்தலங்கள் ஏற்படப்போகின்றன. இப்போது எனக்குச் சுகமுண்டாகும்படி ஒரு வசனுநுக்கிரகம் செய்யக் கோருகிறேன்" என்றார். இவ்வாறான முனிவருடைய வசனத்தைக் கேட்டதும் இராம பிரான் "ஏ முனீசுவர! இந்தக் கிகட தேசத்தில் புண்ணியகரமான கயா க்ஷேத்திரமும் புனப்புனா என்னும் ஒரு நதியும் புண்ணியகர மான ராஜவனம் என்கிற ஒரு சிரேஷ்டமான வனமும் உண்டாய் உமது ஆசிரமம் மகா புண்ணியகரமாக விளங்கட்டும். சந்தேகிக்க வேண்டாம்" என்றார். இவ்வாறு இராமபிரானுடைய வசனுநுக் கிரகத்தைப் பெற்ற சியவன முனிவர் மிகச் சந்தோஷமடைந்து அவர் அநுமதி பெற்றுத் தமது ஆசிரமம் சென்றார். அக்காலத் தில் ஸ்ரீராமபிரான் ஏற்படுத்தி யிருக்கும் சத்திரத்தில் நாள்தோ றும் கோடிக்கணக்காக சந்நியாஸிகளுடன் வேதியர்கள் போஜ னம் செய்து வந்தார்கள். இப்படி யிருக்கையில், கங்கா யாத்திரை மூலமாக கயாக்ஷேத்திரம் செல்வதற்கு பிரயாகையிலிருந்து புறப்பட்டுவரும் கும்போதரர் என்னும் ஒரு முனிவர், இவ்விடம் வந்து எல்லைக்காவற்காரர்களைப் பார்த்து, "ஏ தூதர்களே! நீங்கள் யாருடைய கட்டளைப்படி இங்கு காவல்செய்கிறீர்கள். ஆகாசத்தை யளாவி விசித்திரமாக எதிரில் அநுமான், கோவிதாரம், கருடன், பாணம் இந்த யடையாளங்களோடும் வெண்மை, நீலம், பசுமை, மஞ்சள் இந்நிறங்களோடும் விளங்கும் கொடிகளும் துவஜ ஸ்தம் பங்களும் இங்கு கேட்கும் ஜயசப்தங்களும் யாருக்குச் சொந் தம். இதற்குப் பதில் கூறுங்கள்" என்றார். தூதர்கள் கும் போதர முனிவரைப் பார்த்து "ஏ முனிசிரேஷ்டரே! அயோத் தியாதிபதியாகிய இராஜீவ பத்ராக்ஷரான இராமபிரபு, யாத் திரையாக வந்து இங்கே, உமக்கு முன் தெரியும் கூடாரத் தில் வசிக்கின்றார். அந்த பிரபுவின் ஆக்ஞா கிங்கரர்கள் நாங் கள். அந்த பிரபு இந்த இடத்தில் அன்ன சத்திரங்கட்டி வைத்

திருக்கிறார். நீங்கள் பசியடைந்து களைத்திருப்பதாகத்தெரிகிறது. சுகமாக அவ்விடஞ் சென்று போஜனஞ் செய்து தாக சமனஞ் செய்துகொண்டு புறப்பட்டுப் போங்கள் என்றார்கள். இதைக் கேட்டதும் கும்போதர முனிவர், வந்த வழியைப் பார்த்துத் திரும்பிச் சென்றார். அப்படித் திரும்பிச் செல்லும் அம்முனிவரைப் பார்த்த தூதர்கள் பரபரப்புடன் அவருக்கு முன் சென்று அவர் போகும் மார்க்கத்தைத் தடுத்துக்கொண்டு, அவரைப் பார்த்து "ஏ முனிவரே! இவ்விடம் வந்த நீர் இதனுட்செல்லாமல் வந்தவழியிலேயே திரும்பிப் போகக் காரணமென்ன? அதனுண்மையைக் கூறும்" என்று கேட்டார்கள். உடனே அம்முனிவர் சற்றுநின்று இவர்களுடைய நிர்ப்பந்தத்தை மனதிலெண்ணி க்ஷண நேரம் ஆலோசித்துப் பின் வருமாறு நிச்சயம் செய்து கொண்டார்.

இராமபிரான் இந்த யாத்திரையை முடித்துக்கொண்டு அயோத்திக்குச் செல்லப்போகிறார். அவர் இங்கிருந்த வண்ணத்திலேயே திரும்பி விடுவாராகில், பலதேச ஜனங்கள் இவரை தரிசிப்பது எங்ஙனம்? தவிர அங்கங்கே அவருடைய பேரால் மகா பாதகங்களைப் போக்கத் தக்க திவ்ய தீர்த்தங்கள் ஏற்படக்காரணம் எப்படி யுண்டாகும்? இன்னும் அவரையே ஈசுவரனுகக்கொண்டு பக்தி புரிந்து மற்றவர்களையும் பரகதி யடையச் செய்யும் ஹரிபக்தர்கள் பூலோகத்தில் பரவுவ தெங்ஙனம்? ஆகையால் இந்த இராமபிரான் சீதாபிராட்டியுடன் பூலோகத்தில் சகலதேச யாத்திரை செய்யும்படி ஓர் உபாயம் செய்வோம். இதன் மூலமாக உலகத்தில் பல பேருக்கும் பல நல்ல பழக்கம் ஏற்படும். இதில் ஐயமில்லை" என்று உறுதிகொண்டு தூதர்களைப் பார்த்துப் புன்முறுவல் பூத்து, "ஏ தூதர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். சதுர் முகப் பிர்மதேவருக்குப் பேரனுகிய, தசானனனை சகோதரர்களுடனும் மக்களுடனும் சங்கரித்து, பிறகு தீர்த்த சேவை செய்யாமலும் அவர்களுக்குரிய யாகங்களைச் செய்யாமலுமிருப்பதால், அவருடைய அன்னம் நாங்கள் புசிக்கத்தக்கதல்ல எனக்கு வழி விடுங்கள். நீங்கள் நான் கூறியதை இராமருக்குத் தெரிவியுங்கள். பிறகு அவர் யாத்திரைகளையும் யக்ஞங்களையும் செய்வர்" என்றார். இவ்விதமான கும்போதர முனிவருடைய வார்

த்தைகளைக்கேட்டு அவர் சாபத்துக்குப் பயந்து ஆச்சரியம் கொண்டு, அவர் மார்க்கத்தைத் தடுப்பதினின்றும் விலகி, உடனே இராமபிரானிடம் சென்று, வணங்கி, முனிவர் சொன்ன வார்த்தைகளை மெதுவாகச் செவியிலோதித் தெரிவித்தார்கள். ஸ்ரீராமபிரானும் கும்போதர முனிவருடைய உத்தமமான கருத்தைத் தெளிவா யறிந்து, சிறிது நகைகொண்டு சபா மத்தியில் முனிவருடைய கருத்தை வெளியிட்டு யாவருக்குந் தெரிவித்தார். பிறகு புரோகிதராகிய வசிஷ்டர், இலட்சுமணர் முதலிய சகோதரர்கள், இவர்களுடன் மந்திராலோசனை செய்து, முனிவர் கருத்துப்படியே செய்ய நிச்சயித்தார். பிறகு வசிஷ்டரைப் பார்த்து ஸ்ரீ ராமபிரான், ஏ ஆசார்ய சிரேஷ்ட ! இப்போது முதலில் தீர்த்த யாத்திரைகளைச்செய்து அதன் பிறகு யாகங்கள் செய்யத்தக்க''தென்று கூறிவிட்டு அங்கிருக்கும் தூதர்களைப் பார்த்து, ''ஏ தூதர்காள் ! நாம் யாத்திரை புறப்படும் சங்கதியை சுமந்திரனுக்குச் சீக்கிரம் தெரிவியுங்க'' ளென்று கட்டளையிட்டார்; உடனே தூதர்கள் அங்கிருந்து புறப்பட்டு அயோத்தியா பட்டணஞ் சென்று, மந்திரி சுமந்திரனிடத்தில் சங்கதியை விஸ்தாரமாகக் கூறினர்கள். சுமந்திரனும் சங்கதி தெரிந்துகொண்டு உடனே ஒட்டகைகள் குதிரைகள் இரதங்கள் யானைகள் இவைகளின்பேரில் வஸ்திரம் தனம் முதலியவைகளை ஏராளமாக ஏற்றி, இராமரிருப்பிடத்துக்கு அனுப்பினன். ஸ்ரீராமபிரான் புஷ்பக விமானத்தைப்பார்த்து''ஏவிமான சிரேஷ்டமே ! இயற்கையாக உனக்கு அதிக சக்தி இருக்கிறது ; ஆயினும் யாத்திரா சாமாக்கிரிகளைக் கொண்டுவரும் ஒட்டகங்கள் இரதங்கள் யாவும் உனக்குள்தான் அடங்கவேண்டும். ஆகையால் அதற்குத் தக்கபடி நீ இடத்தை உண்டாக்கிக்கொள் ; எனது அநுக்கிரகத்தால் இவைகளனைத்தையும் வகிக்கச் சக்தி பெற்றுச் சுகமே சஞ்சரிப்பாய். இன்னும் உன்னிஷ்டப்படி சூட்சும ரூபத்தையும் மகா ரூபத்தையும் எடுத்துக்கொள்ள உனக்கு சக்தியுண்டாகும். இதில் ஐயமில்லையென்றும் அநுக்கிரகித்தார். பத்துக்காத வழி அகலமும் இருகாத வழி உயரமுமாக விமானம் விஸ்தரித்தது. சொர்ணமயமாகவும் இரத்தினமயமாகவும் படிகளமைந்த நூற்றுக்கணக்கான உக்ரான வீடுகளுண்டாயின. அவை

களின்மேல் ரத்ன மயமான திவ்ய கலசங்கள் ஆயிரக்கணக்குக ளாகப் பிரகாசித்தன. அவ்வாறான சாளரவாயில்களும் அநேகம் உண்டாயின. பளிங்கு மயமான கவாடங்களும் ஜலயந்திரங்களும் உண்டாயின. அநேக பூந்தோட்டங்கள் ஏற்பட்டு அங்கங்கே பலவிதமான பறவைகள் விநோதமாகச் சப்தமிடவும் ஆரம்பித் தன. நாகமணிகள் விமானத்தைச் சுற்றிலும் ஆயிரக்கணக்காக பதிக்கப்பட்டுப் பிரகாசியாநின்றன. ஆகாசத்தை அளாவிய கோபு ரங்கள் ஆயிரக்கணக்காகப் பிரகாசித்தன.

இவ்வாறு விமானமானது பஞ்ச லோகங்களாலாகிய கட்டுக ளுடன் கோடி சூரியப் பிரகாசம் பொருந்தி விளங்கிற்று.

புஷ்பக விமானத்தில் நூறு கட்டுகள் ஏற்பட்டன.

அந்நூறு கட்டுகளையும் ஸ்ரீ ராமபிரான் உபயோகித்த விவரம்.

முதற்கட்டு :—இதில் யானை, குதிரை, இரதம், ஒட்டகம் இவைகளை ஏற்றி அதற்குரிய வீரர்களையும் அவைகளின் மேலிருக்கக் கட்டளையிட்டார்.

2 ,, விறகு, புல், உரல், உலக்கை, அம்மி, எந்தரம் இவைகளை இக்கட்டில் ஏற்றும்படி ஆக்ஞாபித் தார்.

3 ,, பலவித தானியராசிகளை நிரப்பும்படி செய்தார்.

4 ,, கரிகாய் இலைகள் இவைகளை ஏற்றும்படி செய்தார்.

5 ,, சதக்னி, குத்தால முதலிய பெரிய ஆயுதங்கள் ஏற் றப்பட்டன.

6 ,, பாணங்கள் முதலிய சிறு ஆயுதங்களை நிரப்ப ஆக் ஞாபித்தார்.

7 ,, யானைகள் குதிரைகள் ஒட்டகங்கள் முதலிய அர சர்களுக்குரிய வாகன வர்க்கங்களிருக்கக் கட் டளை யிட்டனர்.

8 ,, நூதன வஸ்திர மூட்டைகளும் அரிசிமூட்டை களும் இவ்வாறான பலவேறு மூட்டைகளும் நிரப்பப்பட்டன.

ஒன்பதாம் கட்டு:—பலசாமான்கள் அடங்கிய பண்டசாலையாயிற்று.

10 ,, ஸ்திரீ புருஷ வேலையாட்களின் இருப்பிடமாகக் கொண்டார்.

11 ,, படர்களுக்கும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் இருப்பிடமாக்கினர்.

12 ,, வாரநாரிகள் தங்கியிருக்க ஆக்ஞாபித்தார்.

13 ,, யுத்த வீரர்களையும் அவர்களுக்குரிய காலாட்களையும் ஏறும்படி ஆக்ஞாபித்தார்.

14 ,, சேனாதிபதிகள் தங்கினார்கள்.

15 ,, குதிரை வீரர்கள் ,,

16 ,, இரத வீரர்கள் ,,

17 ,, யானை வீரர்கள் ,,

18 ,, இராஜ்ய போக்கியாதிகாரிகள் தங்கினார்கள்.

19 ,, மாண்டலிக அரசர்கள் அவர்களைச் சேர்ந்தவர்கள் இவர்களுக்கு இருப்பிடமாக்கினர்.

20 ,, அயோத்தியா பட்டண வாசிகளும் மற்றுமுள்ள இராம மித்திரர்களும் நிறைந்தார்கள்.

21-40 ,, போஜன சாலைகளாயின.

41-45 ,, பாகசாலைகளாயின.

46-55 ,, ஸ்திரீ போஜனசாலைகளாயின.

56 ,, கௌஸல்யாதி மாதூர்வர்க்கங்கள், இலட்சுமணர் முதலிய சகோதரர்கள் தங்களுக்கு இருப்பிடமாகக் கொண்டனர்.

57 ,, ஸ்ரீ ராமபிரானுடைய சிம்மாஸனம் அமைக்கப்பட்ட சபையாயிற்று.

58 ,, சகிகள் யாவருடனும் கூடி சீதா பிராட்டியார் தங்குமிடமாயிற்று.

59 ,, ஸ்ரீராமபிரான் சீதா பிராட்டியுடன் விளையாடும் சாலையாயிற்று.

60 ,. இராம மித்திரர்களுடைய பத்தினிகள் வசிக்கும் சாலையாயிற்று.

61-67 ,, ஸ்திரீகளுடைய சபாமண்டபங்களாயின.

68-79 கட்டு:—சித்ரசாலைகளாயின.
80-84 ,, பலவித விநோதமான பறவைகளிருந்து விளையாடும் சாலைகளாயின.
85-89 ,, பூந்தோட்டங்களாயின.
90 ,, நாழிகைகாட்டுங் கருவிகள் நிரப்பப்பட்டன.
91 ,, விஸ்தாரமானதும் அழகானதுமான புலி முதலிய மிருகங்களடங்கிய கண்காட்சி சாலையாயிற்று.
92 ,, ஸ்ரீராமபிரானுடைய அக்நிஹோத்திர சாலையாயிற்று.
93 ,, சுபகரமான சிவபூஜா சாலையாயிற்று.
94 ,, பிராம்மணர்கள் தங்கும் சாலையாயிற்று.
95 ,, வித்தியாகர்த்திகளுடைய சாலையாயிற்று.
96 ,, யதிசாலையாயிற்று.
97 ,, வாத்திய சாலையாயிற்று.
98 ,, ஜலசாலையாயிற்று.
99 ,, ஜலயந்திரசாலையாயிற்று.
100 ,, ஈரவஸ்திரங்களுலர்த்து மிடமாயிற்று.

இவ்வாறாக விமானத்திலேற்பட்ட நூறு கட்டுகளையும் இராமபிரான் உபயோகித்துக்கொண்டார்.

இவ்விதம் ராமசேவகர்கள் இந்நூறு சாலைகளையும் இராமபிரான் ஆக்ஞைப்படி அமைத்தார்கள். ஸ்ரீராமபிரானும் அந்த நூறு சாலைகளையும் நன்றாய்ப் பார்த்துவிட்டு, விமானத்திலேறினார். அப்பொழுது மங்கள வாத்தியங்கள் முழங்கின. மாகதர்கள் துதித்தார்கள். வாரநாரிகள் நர்த்தனஞ் செய்தார்கள். கொடிகள் அசைந்தன. பிறகு புஷ்பகவிமானமானது ஸ்ரீ ராமபிரான் உத்தரவுப்படி பத்துத் திக்குகளிலும் சூரியன்போல் ஜோதியை வீசிக்கொண்டு கிழக்கு திக்கிலிருந்து வடதிசையை நோக்கி, ஆகாச மார்க்கமாகப் புறப்பட்டு கிண்கிணிகள் கணகணவென்று ஒலியிட வாயுவேகமாகச் சென்று ஸ்ரீராமருடைய துவஜ அடையாளத்துடன் பிரயாகை க்ஷேத்திரத்தை யடைந்தது.

## விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஏ பரமகுருவே! இதற்குமுன் ஸ்ரீ ராம பிரானுக்கு நான்கு துவஜங்க ளிருப்பதாகக் கூறியிருக்கிறீர்கள். அப்படி நான்கு துவஜங்கள் ஏற்பட்டதற்குக் காரணங்களை விஸ்தாரமாகக் கூறவேண்டுகிறேன்.

## இராமதாஸர் கூறுகிறார்.

இராமபிரான் சிறு பிள்ளையாயிருக்கும்போது தமது தந்தையினுடைய இரதத்தில் ஏறி வந்தமையால், அவர்க்குக் கோவிதாரத்துவஜனென்று பெயர் ஏற்பட்டது. பாணத்வஜ அடையாளமுள்ள இரதமேறி அடவிக்குச் சென்று அங்கு தாடகை என்னுமோர் அதிகொடூரமான அரக்கியைக் கோதண்டத்தில் ஒரு பாணத்தைப்பூட்டி எய்து சங்கரித்தார். ஆதலால் அவருக்குப் பாணத்துவஜரென்னும் பேருண்டாயிற்று. இராவணனுடன் போர்புரியுங்காலத்தில் தமது இந்திரத்துவஜத்தை அவன் அறுத்தமையால் அநுமாரை அப்பொழுது துவஜமாகக் கொண்டார். அதனால் அவருக்கு அநுமத்துவஜனென்னும் பேருண்டாயிற்று. அத்தருணத்திலேயே இராவணன் மாதலியை மூர்ச்சையடையச் செய்வித்தான். அப்போது இராமர் உடனே தமது இரதத்தை மனதில் நினைத்தார். அது வைகுண்டத்திலிருந்து வர, அதிலேறிப் போர்செய்தமையால், கருடத்வஜரென்னும் பேருண்டாயிற்று. இப்பதாகைகளில் வெள்ளை நிறமுள்ளதற்கு கோவிதார அடையாளமும், நீலவர்ண முள்ளதற்கு சுபமான பாண அடையாளமும், பச்சை நிறமுள்ளதற்கு மாருதியின் அடையாளமும், மஞ்சள் நிறமுள்ளதற்கு கருடனுடைய அடையாளமும் அமைந்தன. ஆதலால் ஸ்ரீ ராமபிரானுக்கு கோவிதாரத்வஜரென்றும் பாணத்துவஜரென்றும் கபித்வஜ ரென்றும் கருடத்வஜரென்றும் இம்மாதிரியாகவே அநந்தமான பேர்கள் ஏற்பட்டன. இதனால் தான் ஸ்ரீராமபிரானுக்கு நான்கு துவஜங்கள் உள்ளனவென்று கூறினேன். பின்னும் முன்னொரு சமயம் அமர் புரியுங்காலத்தில் இந்திரன் அனுப்பிய இரதத்தில் ஏறிப் போர்புரிந்த

மையால், அசனித்துவஜரென்னும் பேர் அமைந்துள்ளது. ஆகையால் ஸ்ரீ ராமபிரானுக்கு இதுதான் துவஜமென்று கூறுவதற்கில்லை. ஏ சிஷ்யனே! முன் சொன்ன நான்கு துவஜங்கள் தான் ஸ்ரீ ராமபிரானுக்குப் பிரியமானவைகள். கோவிதாரத்வஜமுள்ள ரதத்துக்கு சுமந்திரன் சாரதி. பாணத்துவஜமுள்ள இரதத்திற்குச் சித்திராதன் சாரதி. அனுமத்துவஜமுள்ள இரதத்துக்கு விஜயன் என்பவன் சாரதி. கருடத்துவஜமுள்ள இரதத்துக்கு தாருகன் சாரதி. நீ கேட்டபடியே நான்கு துவஜங்களின் விவரத்தையும் அவைகளுக்குரிய சாரதிகளின் விவரத்தையும் கூறினேன்.

கும்போதர முனிவருபாக்கியானமாகிய

ஐந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## 6—வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு இராமர் புஷ்பகவிமானத்தைச் சிறிது தென்றிசை நோக்கிச் செலுத்தி, திரிவேணி யென்னும் பிரசித்தமான ஸ்தல மகிமையோடு விளங்கும் பிரயாகை க்ஷேத்திரத்திற்கு வெளியே ஒரு குரோச தூரத்தில் விமானத்தை நிறுத்தி, அதிலிருந்து கீழே யிறங்கிக் கால்நடையாகச் சீதையுடன் மெதுவாகச் சென்று திரி வேணி சங்கமத்தை யடைந்து, வாயனத்துடன் நாரிகேள பலத்தை அங்கு நிவேதித்து, சீதையின் கூந்தலில் அலங்காரத்துடன் நாலு விரற் கடை யளவு தாமே சேதித்து, திருவேணிக்குச் சமர்ப்பித்து, பிறகு தமது சகோதரர்களுடன் க்ஷௌரஞ் செய்து கொண்டு அன்று தமது மாதுர் வர்க்கங்களுடன் உபவாச மிருந்தார். மறுநாட் காலையிலெழுந்திருந்து ஆந்ஹிகங்களை முடித் துக்கொண்டு தர்ப்பணமும் செய்து, பிறகு பிராமண போஜனஞ் செய்வித்தார். இது மாசி மாதமாகையால், அம்மாத முழுவதும் அந்த க்ஷேத்திரத்தில் வசித்துப் பிறகு அஷ்ட தீர்த்த யாத்திரை செய்து அங்கு வேதியர்களுக்கு அநேக தானங்களை யளித்தார். பிறகு பிரளயகாலத்திற்குப் பின் தமது நித்திரா ஸ்தானமாகக் கொள்ளும் அக்ஷயவடத்தையும் தரிசித்து, அங்குச் சிறிது நகை த்து, சீதாதேவியுடனும் தம்பிகளுடனும் மறுபடியும் திரிவேணி யைப் பலவித பூஷணங்களால் பூஜித்து விட்டு, அதற்குப் பிறகு தாம்ரபிரக்கணக்கான காச கும்பங்களில் (சீஸாக்கள்) சுத்த கங்கா தீர்த்தத்தை நிரப்பி புஷ்பகவிமானத்தில் அவைகளை எடுத்து வைத்துக்கொண்டார். பிறகு அங்குள்ள தீர்த்த புரோகிதர்களைப் பக்தியுடன் நன்றாய்ப் பூஜித்து அவர்களைப் பன்முறை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு புஷ்பக விமானத்திலேறி அவ்விடமிருந்து ஆகாசமார்க்கமாகப் புறப்பட்டு, விந்திய பர்வதம் வந்து விமானத்தி லிருந்து இறங்கி, அங்கொரு பக்கத்திலிருந்த துர்க்கா க்ஷேத் திரத்தையடைந்து, அங்குள்ள தீர்த்தத்தில் விதிப்படி நீராடி, தீர்த்த சிரார்த்தம் முதலியவைகளைக் கிரமமாகச் செய்து விந் திய பர்வத வாசியாகிய துர்க்காதேவியை வஸ்திராபரணம் முத

லியவைகளால் பூஜித்து, அங்கு பலதானங்களை அத்தீர்த்த புரோ கிதர்களுக்குப் பக்தியுடன் அளித்து, அவர்களுக்குத் திருப்திசெய் வித்து, அங்கிருந்து விமான மீது புறப்பட்டுச் சுகமாகக் காசி க்ஷேத்திரம் சென்றார். இந்தச்சந்தர்ப்பத்தில் காசியிலிருக்கும் ஜன ங்கள் யாவரும் மேற்குத் திக்கிலிருந்து கோடி சூரியப் பிரகாசம் போல் ஜ்வலித்துக்கொண்டு வரும் விமானத்தைப்பார்த்து, இவ் விதம் நமது பட்டணத்தை நோக்கிவரும் இவ்வளவு பிரகாசம் பொருந்திய இந்த விமானம் யாருடையதென்று யோசித்து அவ ரவர் வீட்டின் மேன்மாடிகளின் மேலேறிக் கூட்டங்கூட்டமாக நின்றுகொண்டு அதைப்பற்றித்தர்க்கவிதர்க்கங்கள் செய்தார்கள். அவர்களுடைய தர்க்கவிதர்க்கங்களாவன—இந்தப்பிரகாசம் மலை யினுச்சியில் எரியும் காட்டுத் தீயே என்று சிலரும், சூரியன் திரிந் துகொண்டே இருப்பவனாதலால், அவன் பிரமித்து வழிதப்பி வருகிறானென்று சிலரும், நாரதமுனிவர் வருகிறாரென்று சிலரும் சூரியன் சொர்க்கத்திலிருந்து விழுகிறானென்று சிலரும் வாயு புத்திரனாகிய அனுமான் துரோணாசலத்தைக்கொண்டு வருகிறா னென்று சிலரும் சந்திரனிடத்திலிருந்த மான், சந்திரனை சொர்க் கத்திலிருந்து தள்ளிவிட்டதென்று சிலரும் இவர் விசுவேசுவரர் என்று சிலரும் இது மகா மேரு பர்வதம் என்று சிலரும் வசிஷ்ட பத்னியாகிய அருந்ததி யென்று சிலரும் கருடனென்று சிலரும் பிரளயகாலாக்னி யென்று சிலரும் இவைகளொன்றுமல்ல, யாரோ ஒருவன் எங்கேயோ பிரயோகித்த ஆக்நேயாஸ்திரமிது வென்று சிலரும் இரத்தினங்கள் பிரகாசிக்கும் ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷரென்று சிலரும் இவ்வாறாகத் தர்க்க விதர்க்கங்களைச் செய்துகொண்டு விமானத்தைப்பார்த்தார்கள். பிறகு அது வரும் கோலாகலத்தை யுற்றுப்பார்த்து, ஓகோ! அயோத்தியாதிபதியா கிய ஸ்ரீ ராமபிரானல்லவா யாத்திரை செய்வதன்பொருட்டுத் தமது பட்டணவாசிகளுடன் வருகிறாரென்று கூறித் தெளிந்தார் கள்.

காசிபதியாகிய விசுவேசுரர் ஸ்ரீ ராமபிரான் புஷ்ப விமானத் தில் வருவதையறிந்து விசாலாட்சியம்மையுடன் விருஷபவாகன

மேறிக் காசிவாசிகள் சூழ்ந்துவர, பல உபாயனங்களோடு எதிர்கொண்டு சென்றார். அத்தருணத்தில் ஸ்ரீ ராமபிரான் விமானத்தை விட்டிறங்கி, முதலில் தகேளி விநாயகரைப் பூஜித்துப் பின்பு எதிர்கொண்டுவரும் விசுவேசுவரரைத் தரிசித்துச் சிரங்குனிந்து வணங்கினர். உடனே விசுவேசர்; வணங்கி நிற்கும் இராமபிரானைத் தழுவித் தாம் கொண்டு வந்த உபாயனங்களைக்கொடுக்க, இராமபிரான் பெற்றுக்கொண்டு மகிழ்ந்தார். பிறகு விசுவேசுவரரை வஸ்திராபரணாதிகளால் உபசரித்துப் பூஜித்துக் காசிநாதராகிய அவருடைய கரத்தைத் தமது கரத்தால் பிடித்துக்கொண்டு, இருவரும் தங்கள் வாகனங்களை அபேக்ஷிக்காமல் கால் நடையாகவே மணிகர்ணிகைக்குச் சென்றார்கள். பிறகு ஸ்ரீராமபிரான் சீதையுடன் சக்ரபுஷ்கரணீ தீர்த்தம் சென்று அதில் வில்வப்பழங்களைப் போட்டுவிட்டு, அங்கே க்ஷௌரம் செய்துகொண்டு சசேல ஸ்நானம் செய்து வஸ்திரமுடுத்துக்கொண்டு, அங்கிருந்து புறப்பட்டு ¶ நித்திய யாத்திரை செய்தார். பிறகு அன்று இருவரும் உபவாஸமிருந்தார்கள். மறுநாள் தீர்த்த சிராத்தத்தை விதிவத்தாகச்செய்து பஞ்சதீர்த்தங்கள் மானஸ தீர்த்தங்கள் இவைகள் கூடிய அந்தர்க்கிரக மகாயாத்திரையும் செய்து நாற்பத்திரண்டு சிவலிங்கங்களையும் பிறகு வேறு எட்டு லிங்கங்களையும் எட்டு பைரவர்களையும் அறுபத்துநான்கு யோகினிகளையும் ஒன்பது துர்க்கைகளையும் எட்டுத் திக்குப்பாலகர்களையும் ஒன்பது கிரகங்களையும் தரிசித்துப் பூஜை செய்து, காசி க்ஷேத்திர பிரதக்ஷிணமாகிய பஞ்சகுரோச யாத்திரையும் செய்தார்—இவ்வாறு பதிநான்கு யாத்திரைகளையும் செய்து முடித்துக்கொண்டு, காசியின் வாயு திக்கில் வருணா நதியின் கரையில் இராமலிங்கம் என்னும் ஒரு மகா லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, கங்கையில் இராம தீர்த்தமென ஒரு தீர்த்தத்தையும் உண்டாக்கினர்.

---

¶ விசுவேசர், மாதவர், டுண்டி, தணபதி, தண்டபாணி, பைரவர், காசி, குகர், ஆதிகங்கை, பவானி, மணிகர்ணிகை இவர்களைக் கிரமப்படி நாள்தோறும் தரிசித்து வருவது நித்திய யாத்திரை யெனப்படும்.

இப்படியிருக்கையில், வாயு புத்திரனுகிய அனுமார், இராம பிரானைப் பார்ப்பதற்காக அயோத்தியா பட்டணஞ் சென்றார். அங்கே போனதும் ஸ்ரீராமபிரான் யாத்திரை போயிருப்பதாகத் தெரிந்துகொண்டு, உடனே புறப்பட்டுக் காசி க்ஷேத்திரத்திற்கு வந்து, சீதாபிராட்டியுடன் ஸ்ரீராமபிரானைக்கண்டு வணங்கி, கங்கா தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அங்கே தமது பேரால் ஒரு லிங்க ஸ்தாபனஞ் செய்து அதனருகே இருக்கும் கங்கா தீர்த்தத்திற்கு அனுமந்த தீர்த்தமென்று பெயரிட்டு, அத்தீர்த்தத்திற்குக் கற்களைக்கொண்டு படிகட்டி ஒரு புண்ணிய கட்டமாகச்செய்தார். அது இப்பொழுதும் காசியில் அனுமந்த கட்டமென்னும் பெயரோடு விளங்குகிறது. அவ்விதமே ஸ்ரீராமபிரானும் ஒரு கட்டம் ஏற்படுத்தினர். அங்கே சீதையுடன் ஸ்ரீராமரை நாள்தோறும் ஜனங்கள் தரிசித்து வருகிறார்கள். பிறகு ஸ்ரீராமபிரான் கார்த்திகை மாதத்தில் பஞ்சகங்கா கட்டத்தில் ஸ்நானஞ் செய்தார். இவ்விதம் காசியில் ஒரு வருஷகாலம் பல தர்மங்களைச் செய்துகொண்டு வசித்து வந்தார். அவர் செய்த தர்மங்களாவன—தீர்த்தவாஸம் செய்வதாக வந்து வசிக்கும் வேதியர்களுக்குத் தனித்தனியே ரத்தினங்கள் சுவர்ணங்கள் வஸ்திரங்கள் ஆபரணங்கள் பசுக்கள் குதிரைகள் இவைகளைத் தானஞ்செய்தார். பிறகு தங்கத்தினுலும் வெள்ளியினுலும் விசித்திரமாகச் செய்யப்பட்ட போஜன இலைகள் அவர்களனைவருக்கும் போட்டு அமுதத்துக்கொப்பான பக்குவான்னம், சர்க்கரை கலந்த பாயஸம், நெய், பால், தயிர் இவைகளைப் பரிமாறித் திருப்தியாக போஜனம் செய்வித்து திவ்யகந்த சந்தனம் பூசி கர்ப்பூர தாம்பூலங் கொடுத்து திவ்ய சாமரங்கள் வீசி, அவைகளை அவர்களுக்கே யுதவி பஞ்சணை மெத்தைகள் தீபங்கள், கண்ணாடிகள், ஆசனங்கள், பல்லக்குகள், தாஸதாஸர்கள், பசுக்கள், விசித்திரமான துவஜங்களோடு கூடிய வீடுகள் இவைகளைத் தானம் செய்தார். இன்னும் பெரியோர்களுக்கு துவஜாரோபணம் செய்த கிரகங்களை சமஸ்த சாமகிரிகளுடன் தானம்செய்து அவர்களுக்கு ஒவ்வொரு வருஷத்துக்கும் வேண்டிய அன்னபானதி சௌகரியங்களையும் ஏற்படுத்தினர். இன்னும் யதிகளுக்கும் தவசிகளுக்கும் யோக்கியமான பட்டு வஸ்திரங்கள் மெது

வான சித்ரக்கம்பளங்கள் தண்டகமண்டலங்கள், மான்தோல்கள், கௌபீனங்கள் இவைகளை யளித்தார். பின்னும் வித்தியார்த்திகளுக்குச் சொர்ணமயமான மடங்கள் கட்டி, அதில் அவர்களுக்கும் அதிதிகளுக்கும் அன்னதானம் நடந்துவரத் திட்டப்படுத்தினர். பின்னும் வைத்தியர்களுக்குப் பல விதமான ஒளஷதங்களைக்கொடுத்து ஜீவனம் செய்யும்படி செய்தார். புத்தகம் எழுதி ஜீவிக்கிறவர்களுக்குத் திரவியங்களை ஏராளமாகக் கொடுத்து புத்தகங்களை எழுதி வெளியிடும்படி அளித்தார். கிரீஷ்ம காலத்தில் ஏராளமாகத் திரவியச் செலவு செய்து தண்ணீர்ப் பந்தர்களை ஏற்படுத்தி அவைகளில் சிரேஷ்டமான ரஸாயனங்களைக் கொடுத்து வரும்படி திட்டப்படுத்தினர். வருஷ ருதுவில் குடை, போர்வை இவைகளை அதிதிகளுக்குக் கொடுக்கும்படி திட்டப்படுத்தினர். ஹேமந்த ருதுவில், சீதளசமனத்துக்கு வேண்டிய சாதகங்களை ஏற்படுத்திக்கொடுத்தார். மாணாக்கர்கள் இராக்காலங்களில் படிப்பதற்காகத் தீபங்களை யேற்படுத்தினர். அவர்கள் பாதங்களில் எண்ணெய் தடவிக்கொண்டு உஷ்ணஸமனம் செய்துகொள்ளத்தக்க வசதிகளையும் உண்டாக்கினர். தேவாலயம் ஒவ்வொன்றிலும் புராணங்களோதுகிறவர்கள் புராணங்களைப் படித்து யாவருக்கும் போதிக்கும்படி ஏற்பாடு செய்தார். நர்த்தனம் கீதம் வாத்தியம் இந்த உபசாரங்கள் தேவாலயங்களில் நடந்துவரவும் பழைய ஆலயங்களையும் புது ஆலயங்களையும் புதுப்பிக்கவும் அவைகளிற் சித்திரம் வரையவும் தரையில் அழிவுறாத கோலங்கள் போடவும் திட்டப்படுத்தினர். தூபதீப தசாங்க திரவியங்களுக்கு மானியங்களளித்து அவைகள் குறைவின்றி நிறைவேறச் செய்தார். பஞ்சாமிருத ஸ்நானமும் வாசனைத் திரவியங்கலந்த ஸ்நானமும் ஆலயங்களில் கிரமமாய் நடந்துவரவும் பூஜை புரிவதற்கு வேண்டிய புஷ்பங்களுக்காகவும் மாலைகளுக்காகவும் ஏராளமாகப் புஷ்பங்களைக் கொடுக்கும் நந்தவனங்களை ஏற்படுத்தவும் அந்தப் புஷ்பங்களை எடுத்து மாலை தொடுத்து முக்காலங்களிலும் ஆலயங்களுக்குக் கொண்டுபோய்க் கொடுக்கிற ஆண்டிகளை ஏற்படுத்தவும் பூஜா காலங்களில் சங்கம் பேரி மிருதங்கம் முதலிய பலவாத்தியங்கள் ஆலயங்களில் முழங்கி

வரத்தக்க திட்டங்களைச் செய்யவும் வசதிகளை உண்டாக்க ஆக்ஞாபித்தார். பின்னும் ஆலயங்களில் ஸ்நான வசதிக்காக தண்டுகம் கும்பகம் முதலிய பாத்திரங்களையும் யக்ஷகர்த்தமமென்னும் ஸ்நானவாசனைத் திரவியங்களையும் தலைதுடைக்க வெண்மையான வஸ்திரங்களையும் ஏராளமாகவாங்கியளித்தார். ருத்ரம் முதலிய மகாமந்திரங்களை ஜபிக்கவும் ஹோமங்கள் செய்யவும் தேவதாஸ்தோத்திரங்கள் படிக்கவும் சிவநாமோச்சாரணத்தை உச்சத்தொனியாகக்கூறவும் அந்தணர்களை ஏற்படுத்தி அவர்களுக்குத் திருப்தியானவசதிகளையும் உண்டாக்கினர். பிரதக்ஷிணமாகத் தெப்போற்சவங்கள் நடந்துவரவும் ஏற்பாடு செய்தார். இப்படியாக அநந்தமான தானதர்மங்களையும் தேவகாரியங்களையும் செய்துகொண்டு ஒருவருஷகாலம் வரை, அந்த காசிக்ஷேத்திரத்தில் வசித்துவந்து அங்கு அநேக புண்ணிய தீர்த்தங்களையு மேற்படுத்தினர். தீனர்களுக்கும் அநாதர்களுக்கும் ஏராளமான திரவியங்களை யளித்து திருப்திசெய்வித்து நாள்தோறும் விசுவேசுவரரைத் தரிசித்துத் தொழுதுவந்தார். ருதுஸ்நானமுதல் குறிப்பிடப்பட்ட நாட்களிலன்றி, மற்றநாட்களில் பத்னிமுகம் பாராமலிருக்கும் பிரமசரிய விரதத்தையும் சத்தியசம்பாஷண விருதத்தையும் அநுஷ்டித்து அடிக்கடி விசுவநாதர் காலபைரவர் கணபதி தண்டபாணி அன்னபூர்ணி இவர்களைத் தரிசித்து, வணங்கித் துதித்து, விசுவேசுவரரது அநுமதிபெற்று புஷ்பகவிமானமேறிக் கங்கைக்குத்தென்கரை வழியாக ஆகாசமார்க்கத்தில் புறப்பட்டார்.

அப்படிப் புறப்பட்டு வருகையில் வழியில் கர்மநாசை என்னும் ஒரு நதியைக்கண்டு, அதன்கரையிலிருந்து தவமியற்றிவரும் சியவன முனிவருடைய ஆசிரமஞ்சென்று விமானத்திலிருந்து இறங்கி, அந்நதியில் ஸ்நானஞ்செய்து முனிவரை வணங்கி, அங்கு ஒரு புண்ணிய தீர்த்தத்தை யுண்டாக்கி, இராமேசுவரர் என்னுமோர் லிங்கப் பிரதிஷ்டையும் செய்தார். அம்முனிவருடைய ஆசிரமத்தைச் சுற்றிலும் தமது பாணத்தாலேற்பட்ட இரேகையை யாவருக்கும் காண்பித்து அவ்விடத்தில் காசியில் செய்ததைவிட அதிகமான பலதானங்களைச் செய்தார்.

சியவனாசிரமத்திலிருந்து புறப்பட்டு சுவர்ணபத்திர கங்கா சங்கமத்திற்குவந்து, அங்கு முன்னிரண்டு தடவைகளைவிட அதிகமான தானங்களைச்செய்து, அநேக புண்ணிய தீர்த்தங்களையும் உண்டாக்கினார். இவ்வாறு ஸ்ரீராமபிரான் தாம் சீதையுடன் செல்லும் க்ஷேத்திரங்கள் யாவற்றிலும் மேலும்மேலும் அதிகமாகவே தானதர்மங்களைச் செய்துகொண்டு, அங்கங்கு பல புண்ணிய தீர்த்தங்களையும் உண்டுபண்ணி யாத்திரை செய்யலானார். இவ்வாறு இராமபிரான் தரிசித்த க்ஷேத்திரங்களில் செய்த தானங்களையும் உண்டாக்கின புண்ணிய தீர்த்தங்களையும் ஆதிசேஷன் தன்னுடைய ஆயிரவாயினாற் கூறிக்கணக்கிடினும் முடியா. அவைகளில் சிரேஷ்டமான தீர்த்தங்கள் ஆறு என்று பெரியோர்கள் கூறுவார்கள். அவைகளின் விவரமாவன 1. இராமதீர்த்தம் 2. இலட்சுமணதீர்த்தம் 3. பரததீர்த்தம் 4. சத்ருக்னதீர்த்தம் 5. சீதாதீர்த்தம் 6. அனுமத்தீர்த்தம் இந்த முக்கியமான தீர்த்தங்கள் ஆறும் ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் ஏற்பட்டன. ஸ்ரீராமபிரான் சுவர்னபத்ரங்கா சங்கமத்தில் ஸ்நானஞ்செய்து சந்தோஷமடைந்து, மூன்றிராத்திரி அவ்விடம் வசித்து, அங்கிருந்து புறப்பட்டு, தண்டகி சங்கமம் சென்றார். இவ்விதமாக க்ஷேத்திரங்கள் தோறும் சென்று சில க்ஷேத்திரங்களில் மூன்றுநாட்களும் சிலவற்றில் ஏழுநாட்களும் சிலவற்றில் ஒருபக்ஷமும் சிலவற்றில் பதினெட்டு நாட்களும் சிலவற்றில் இருபத்தொரு நாட்களும் சிலவற்றில் மூன்று மாதங்களுமாக வசித்துப்பல தானதர்மங்களையும் செய்து, அங்கிருந்து நேபாளதேசம் சென்றார். அங்கு ஜகதீசுவரரைத்தரிசித்துப் பிறகு ஹரஹர க்ஷேத்திரம் சென்றார். அவ்விடமிருந்து இன்னும் பல க்ஷேத்திரவாசம் செய்துகொண்டு கங்கையின் தென்கரையிலிருக்கும் புனப்புனா சங்கமத்துக்குச்சென்று பிறகு ஜராசந்தபுரமாகிய வைகுண்ட நகரத்தை யடைந்து, அங்கு ஓடும் வைகுண்டா நதியில் ஸ்நானம் செய்து, சிறிது காலம் அங்கேயே வசித்துப் பிறகு கயாக்ஷேத்திரம் போய் அங்கே பல்கு நதியின் கீழ்க்கரையில் விமானத்தை நிறுத்திவிட்டுக் கால்நடையாகக் கயா க்ஷேத்திரத்துக்குட் சென்று திவ்யமான விஷ்ணு பாதத்தை

வணங்கி, மறுபடியும் விமானத்திற்கு வந்து அங்கு அன்றிரவு வசித்தார்.

மறுநாட் பொழுது புலர்ந்ததும், அநேகமான பிராமணர்களு டன் ஸ்நானஞ் செய்வதற்காக பல்குநதிக்குச் சென்றார். அத்தரு ணத்திலேயே சீதாபிராட்டியும் பல்கு நதியில் ஸ்நானம் செய்வ தற்காகத் தனது சகிகள் யாவருஞ் சூழப் புறப்பட்டு நதிக்குச் சென்று அங்கு ஸ்நானம் செய்து சுமங்கலிகளைப் பூஜித்தாள். அந்த ஆற்றின் மணலில் மஹேசுவரியை ஆராதிக்கக் கருதி க்ஷணநேரம் நின்றாள். பிறகு அவ்விடத்தில் ஐந்து மணலுருண் டைகளைக் கொண்டு துர்க்காபிம்பத்தைச் செய்யவேண்டி, தனது இடது காத்தில் ஈரமணலை யெடுத்து, வலது காத்தில் வைத்துப் பிண்டமாக உருட்டி, தரையில் வைக்கையில், பூமியிலிருந்து வந் திய வண்ணமாகத் தோன்றிய கை ஒன்று தெரியக் கண்டு, உற் றுப் பார்த்து அதனைத் தன் மாமனாராகிய தசரதருடைய சுபகா மானது வலதுகரமெனத் தெரிந்துகொள்ளும் அந்த நிமிஷத்திலே யே அக்கை அப்பிண்டத்தை யேற்று பூமிக்குள் மறைவதைக் கண்டு, ஆச்சரியமடைந்தாள். மறுபடியும் இரண்டாவது பிண் டத்தை யெடுத்து, உருட்டி முன்போலவே வைக்க, அவ்விதமாக வே அந்தக்கை கிளம்பி வாங்கி மறைந்தது. அவ்வாறு சந்தோ ஷத்துடன் நூற்றெட்டுப் பிண்டங்களை வைத்து அதனால் சிறிது களைப்படைந்து நின்றாள்.

பிறகு சிறிது நேரம் சென்றபின் களைதெளிந்து, துர்க்கா தேவியை மனதால் பூஜித்துவிட்டு விமானத்தினருகே சென்றாள். இவ்வாறு சீதை செய்ததைக் கூடவந்திருக்கும் சகிகளும் அறிய வில்லை. இராமபிரானும் அறியவில்லை. சீதை தான் செய்ததை இராமருக்குத் தெரிவித்தால், கோபிப்பாரோ வெனச் சந்தே கித்து அவருக்கும் சொல்லவில்லை.

பிறகு இராமபிரான் பஞ்சதீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து விட்டு, பிரேத பர்வதத்துக்குப்போய், அங்கு பிண்டம் போடுவ தற்காகத் தமது நாமம் வரைந்ததான தமது கைச் சுண்டுவிரல் மோதிரத்தைக் கழற்றி, தெற்கு முகமாக நின்றுகொண்டு

அபஹதா என்னும் மந்திரத்தை உச்சரித்துப் பூமியில் மூன்று ரேகைகளைக் கீறினர். அது அங்கு இன்றைக்கும் தெளிவாகத் தெரிகிறது. அந்த ரேகைகளில் குசங்களைப் பரப்பி, அவைகளில் எள், நெய், தேன் இவைகளோடு சத்மயமான பிண்டங்களை வலது கையால் எடுத்து வைக்க, உத்தேசிக் கையில் தமது தந்தையின் கரம் பூமியிலிருந்து வெளிவராதிருக்கக்கண்டு, மலைத்து நின்றார். அதை அருகேயிருந்து பார்த்த தீர்த்த வாசிகள் ஆச்சரியமடைந்து, "ஏ இராமா! இந்த இடத்தில் பிண்டம் போடும்போதெல்லாம் அதற்குரிய பிதிர்க்கள் வலதுகையைக் காண்பித்து அதை வாங்கிக்கொள்வது வழக்கம். இன்று தங்கள் தந்தையினுடைய கரம் காணப்படவில்லை. இதன் காரணம் எங்களுக்குத் தெரியவில்லை" என்று சொன்னார்கள். இப்பொழுது இராமபிரானும் ஆச்சரியமும் பயமுமடைந்து, அருகே யிருந்த இலட்சுமணரைப் பார்த்து "ஏ இலட்சுமணா! இதன் காரணத்தை நீ யறிவாயோ" வெனக்கேட்டார். அதற்கு இலட்சுமணர் "அண்ணா! கோதாவரி நதிக்கு நாம் போயிருக்குங் காலையில் அங்கு இங்குதி பலங்களைப் பொடி செய்து அதில் பிண்ணாக்கைச் சேர்த்துப் பிண்டம் பிடித்து வைக்கும்போது, ஏந்தி வாங்கிக்கொண்ட நமது தந்தையின் கை இங்குவராததன் காரணம் எனக்குப் புலப்படவில்லை. அது எனக்கு ஆச்சரியமாகவே யிருக்கிறது. சீதாபிராட்டியைக் கேட்டால் அதன் காரணம் ஒருவேளை வெளியாகு" மென்றார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த ஜானகி தேவி திடுக்கிட்டுப் பயந்து இராமலட்சுமணர்களைப் பார்த்து "இவ்விஷயத்தில் நான் ஒரு அபராதம் செய்துவிட்டேன். க்ஷமிக்கவேண்டு" மென்றாள். உடனே இராமபிரான் சீதையைப் பார்த்து "ஏ சீதே! என்ன நடந்ததோ அதை இப்பொழுது தெரிவி. பயப்படவேண்டாம்" என்றார். உடனே சீதாபிராட்டி நடந்ததை உள்ளபடியே ஸ்ரீராமபிரானுக்குத் தெரிவித்தாள். பிறகு இராமபிரான், "சரி நீ அவ்விதம் செய்ததற்குச்சாட்சி யார்"என்றார். சீதை, "இதோ இந்த மாமரம் சாட்சியென்று" அங்கிருக்கும் ஒரு மாமரத்தைக் குறிப்பிட்டாள். இராமர் மரத்தைக் கேட்டார் அம் மரம் நானறியேன்" என்று கூறிவிட்டது. இதைக் கேட்ட சீதா

பிராட்டி, உடனே அம்மாமரத்தைப் பார்த்து "நீ பொய் கூறினமை யால், இனிமேல் நீ நிஷ்பலமாகப் போவதுமன்றி உன் இலைகளைப் புழுக்கள் அரிக்கக்கடவது" என்று சபித்துவிட்டு, "ஏ இராகவேந் திரா! இந்த பல்குநதி ஒரு சாட்சி" என்றாள். பல்குநதியைப்பார்த்து இராமர் நீ கண்டாயாவெனக் கேட்க, அதுவும் நானறியே னென்றது. உடனே சீதாதேவி நதியைநோக்கி, "நீ சத்தியத்தை மறைத்தமையால், அந்தர்வாகினியாகப் போகக்கடவது" என்று சபித்து, இங்கிருக்கும் தீர்த்தவாசிகளாகிய வேதியர்கள் சாட்சி யென்றனள். அவர்களை இராமர் கேட்க, அவர்களும் இப்பொழுது நாம் சாட்சி கூறின், அப்படிச் செய்த சீதையை நீங்களேன் தடுக்கவில்லை யென்று கோபித்து இராமர் நம்மைச் சபித்துவிடு வாரென்றெண்ணிப் பயந்து "நாங்களறியோம்" என்று பொய் மொழி கூறினார்கள். சீதை அவர்களைப்பார்த்து, "நீங்களிப்பொழுது பொய்கூறினமையால், இதுவரையில் ஆசையற்றவர்களாக விருந்த நீங்கள் இனிப்பேராசைகொண்டு இங்கு உங்களுக்கு எவ்வளவுதானங் கொடுத்தபோதிலும் அவைகளைக்கொண்டு திருப்தி யடையாமல், ஏழை வேடங்கொண்டு திரவியங்களுக்காகத் தேச மெங்கும் திரிந்துவரக் கடவீர்க"ளென்று சாபமிட்டாள். பிறகு ஒரு பூனையைக்காட்டி இதுசாட்சியென்று ஜானகிகூறினள். அதை யும் இராமர் கேட்க, அதுவும் நானறியேன் என்று கூறிவிட்டது. உடனே சீதை அதைப்பார்த்து, "நீ உன் வாலை முன்னே நீட்டிக் கொண்டு என்னருகில் உட்கார்ந்திருந்து பார்த்திருந்தும் பொய் கூறினமையால், உன்வால் அசுத்தமாகப்போகக் கடவ"தென்று சபித்தாள். இதோ நிற்கும் இந்தப்பசு எனக்குச் சாட்சி கூறுமென் றாள். அதையும் இராமர் கேட்க அதுவும், நானறியேனென, சீதை அதைப்பார்த்து, "ஏ பசுவே! நீயும் பொய் கூறினமையால் உன்முகம் தரிசனத்திற்கு யோக்கியமில்லாமற்போக கடவ" தென் றனள். பிறகு ஓர் அரசமரத்தைச் சாட்சியாகக் காட்டினள். அதுவும் இராமருக்கு அவ்விதமே கூற, சீதை அதைப்பார்த்து, "ஏ அரச மரமே! நீயும் பொய் கூறினமையால், உன் இலைகள் சலித்துக்கொண் டிருக்கக்கடவ" தென்று சபித்து, மறுபடியும் இராமபிரானைப்

பார்த்து "இதோ சர்வசாட்சியாக விளங்கும் பாஸ்கரன் தான் சாட்சி" யென்றனள். இராமபிரான் அவரைக்கேட்க, அவர் உண்மையை சொல்லி, "இராமா! உனது தந்தை திருப்தியடைந்தார்" என்றுங் கூறினர். இத்தருணத்தில் தசரதர் சூரியன்போல் பிரகாசிக்கும் ஒரு விமானத்தில் அங்கு வந்து, இராமனை ஆலிங்கனஞ் செய்து கொண்டு "ஏ இராமா! தாண்ட முடியாத நரகத்திலிருந்த என்னை நீ கரையேற்றிவைத்தாய். மிதிலாதிபதியின் புத்திரியாகிய சீதாதேவியின் பிண்டதானத்தால் எனக்கு உத்தமமான திருப்தியுண்டாயிற்று; ஆயினும் லோகத்தாருடைய ஒழுக்கத்துக்காக, நீ கயாசிராத்தம்செய்" என்றார். அதற்கு இராமபிரான் தமது தந்தையைப் பார்த்து "அப்பா! நான் இங்கே கயாசிராத்தம் முதலியவைகளைச் சிரத்தையாகச் செய்து தமக்குத் திருப்திசெய்யக் கருதியிருக்க, அதற்குள் அவசரப்பட்டு சீதைகொடுத்த மணற் பிண்டத்தை எதற்காக ஏற்றுக்கொண்டீர்கள். அப்படி யேற்றுக்கொள்ளக் காரணமென்ன" என்று கேட்டார். தசரதர், இந்த கயாக்ஷேத்திரத்தில், கயாசிராத்தம் பண்ணுகிறவர்களுக்குப் பலவிதமான இடையூறுகள் நேரிடுவது வழக்கம். ஆதலால், நான் அவசரப்பட்டு சீதை கொடுத்ததைப் பெற்றுக் கொண்டேன்" என்று சொல்லி இராமரிடமிருந்து, அப்பொழுது அவர் கொடுத்த கவ்யத்தை (பிண்டத்தை)ப் பெற்றுக்கொண்டு விமானமேறிச் சொர்க்கலோகம் சென்றார். இராமபிரானும் பிரேத கிரியில் பிண்டதானம் செய்த பிறகு அங்கிருந்து பிரேதசிலைக்குச்சென்று, அங்கே காகபலி கொடுத்துவிட்டு, அங்கிருந்து தர்மாரண்யம் சென்று, அங்கே சில விடங்களில், எள், நெய், பாயஸம், சர்க்கரை, இவைகளோடு பத்தொன்பது சத்துப் பிண்டங்களைத் தனித்தனியாக வைத்து வட சிராத்தம் செய்தார். அங்கே எட்டுத் தீர்த்தங்களை உண்டுபண்ணி மூன்று இடங்களில், சந்தியா வந்தனாதிகளைச் செய்தார். பல தானங்களையும் செய்தார். பிறகு கதாதரரைத் தமது வைபவத்துக்குத் தக்கபடி பூஜித்து அவ்வபிஷேக தீர்த்தத்தால் சீதையினது சாபமேற்றுப் புழுமலிந்திருக்கும் மாமரத்தின் வேரைநனைத்தார். பிறகு இராமர் விஷ்ணு பாத பூஜையைச் செய்து அதற்கு விமானத்தை யேற்படுத்தினர். இந்தப்படி மூன்று மாத

காலம் வரையில் வசித்து ஜனங்களைச் சந்தோஷப்படுத்திவிட்டுப் புஷ்பகவிமானமேறிக் கிழக்குத் திக்கிற் சென்று பல்கு நதியின் கீழ்கரையில் ஓரிடத்தில் தங்கினர். அந்த இடத்தை வேதியர்கள் இராமகயை என்று கூறுகிறார்கள். அங்கு இராமேசுவர லிங்கமும் இராமதீர்த்தமு மிருக்கின்றன. பிறகு இராமர் பல்குநதி கங்கையில் சேருமிடத்துக்குச் சென்றார். கயாக்ஷேத்திரத்திற்கு வெளியெல்லை மகாநதியாகிய பல்குவென்றே அறியத்தக்கது. அதன் பிறகு ஸ்ரீராமபிரான் முத்கலருடைய நூதன ஆசிரமத்துக்குச் சென்றார். அவ்விடத்தில் பாபநாசகரமான கங்கையானது வடக்குமுகமாகச் செல்கிறது. இந்த இடத்தை சீதை சொர்க்கமாக இனிச் செய்யப்போகிறாளாதலால், அந்த இடத்தில் இராமபிரான் தம்பேரால் ஒரு தீர்த்தம் உண்டுபண்ணிச் சகோதரர்கள் பேர்களாலும் தீர்த்தங்களை உண்டுபண்ணினர். சீதைபேரால் மட்டும் தீர்த்தம் ஏற்படவில்லை. பிற்காலத்தில் இந்த இடம் என்னால் மகிமையை அடையப்போகிறது. அப்பொழுது என்பேரால் இங்கு தீர்த்த மேற்படுமென்று சீதை கூறினள். இதன்பின் இராமபிரான் உத்தரவாகினியான கங்கைக்கரைவழியே சென்று, கங்கையின் நடுவில் ஒருமலையையும் அதன்பேரில் விச்வேசுவரம் என்கிற சிவஸ்தலமும், புரி என்னும் ஒரு பட்டணமு மிருக்கும் இடத்தை யடைந்து, அங்கிருந்து இராவணனால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட வைத்தினதேசுவர க்ஷேத்திரமடைந்து அவரைத் தரிசித்து வணங்கி அங்கிருந்து புறப்பட்டு அநேக ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு பிரயாகையிலிருந்து நூறுகாதவழி யளவில் கங்கையானது வெண்மை நிறத்தை யடைந்து தனியே பிரியுமிடத்துக்குச் சென்றார். பிறகு கங்கையானது ஆயிரமுகமாகப் பிரிந்து சமுத்திரத்திற் கலக்குமிடமாகிய கங்கா சாகர சங்கமத்திற்கு ஸ்ரீராமபிரான் புஷ்பகவிமானத்துடன் சென்று அங்கு ஸ்நானம் செய்தபிறகு யமுனசாகரசங்கமத்திலும் ஸ்நானம்செய்தார். அங்கிருந்து புறப்பட்டு மத்தியிலிருக்கும் அநேக புண்ணிய ஸ்தலங்களையும் புண்ணிய தீர்த்தங்களையும் தரிசித்துக்கொண்டு கீழ் சமுத்

திரக்கரையிலிருக்கும் புருஷோத்தமமாகிய ஜகன்னாதரைத் தரிசித்து, அங்கே பலதானங்களைச்செய்தார். தேவதைகளையுந் தரிசித்தார். பிறகு அதைவிட்டுப் புறப்பட்டுப் பலதேசங்களையும் பலநதிகளையும் தாண்டிக் கோதாவரி தீர்த்தத்துக்குவந்து சேர்ந்தார். அங்கே இராமகிரி என்கிற ஒரு மலையை உண்டுபண்ணினார். இதன் பின் கோதாவரி நதி ஏழுபிரிவுகளாகப் பிரியுமிடத்திலும் பிரிந்து சமுத்திரத்தில் சங்கமமாகுமிடத்திலும் ஸ்னானஞ் செய்து அங்கிருந்து தெற்கு நோக்கிப் புறப்பட்டு கிழக்குத் தேசத்துக்கு வந்தார். அங்கே இருக்கும் அரசர்கள் தங்கள் தங்கள் கப்பங்களையெடுத்துக் கொண்டு வந்து ஸ்ரீராமபிரானிடம் செலுத்தி வணங்கினார்கள். ஸ்ரீராமபிரான் அவைகளை யேற்றுக்கொண்டு அவர்களுடன் விமானத்திலேறிப் புறப்பட்டுத் தென்தேசத்திலுள்ள அநேக தீர்த்தங்களைத் தரிசிப்பதற்காகத் தென்திசை நோக்கிப் புறப்பட்டார்.

கீழ்ப்பாக யாத்திரையாகிய

ஆறுவது சருக்கம்

முற்றிற்று.

# 7—வது சருக்கம்.

## இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ஸ்ரீராமபிரான் சில தேசங்களையும் மனோரம்மியமான மத்ஸிய தீர்த்தத்தையுங் கடந்து மகா நதியாகிய கிருஷ்ணாநதியையும் அதனருகிலிருக்கும் புண்ணிய ஸ்தலங்களையும் தரிசித்து அங்கிருந்து பானக நரசிம்மரைத் தரிசித்துப் பின் கிருஷ்ணா சாகர சங்கமஞ்சென்று அங்குத் தீர்த்தமாடிப் பல தானங்களை விஸ்தாரமாகச் செய்தார். இதன்பின் அங்கிருந்து புறப்பட்டு அநேகமான புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு ஸ்ரீ சைல பர்வதத்துக்கு வந்து அதனருகே பிரவகியாநின்ற நீலகங்கையில் ஸ்நானஞ்செய்து ஸ்ரீ மல்லிகார்ச்சுனரைத் தரிசித்தார். நீலகங்கை யென்பது அங்கு பிரவகிக்கும் கிருஷ்ணா நதி யென்றே யறியத்தக்கது. மறு பிறப்பை ஒழிக்கும் ஸ்ரீ சைலசிகரத்தைத் தரிசித்து விட்டு அங்கிருந்த பிர்ம குண்டம் பீமகுண்டம் நிவர்த்தி சங்கமம் துங்கபத்திரா சங்கமம் பவநாசினி இவைகளில் ஸ்நானஞ் செய்து அஹோபில க்ஷேத்திரஞ்சென்று அங்கு நரசிம்மரைத் தரிசித்து வணங்கி ஸ்தம்பப் பிரதக்ஷிணங்களைச் செய்தார். பிறகு புஷ்பகிரி சென்று அதனருகிலோடும் பினாகினி நதியில் ஸ்நானம் செய்து அதன் பக்கமிருக்கும் புண்ணிய ஸ்தலங்களையும் ஈசாலயங்களிலுள்ள பரமசிவ மூர்த்திகளையும் தரிசித்து அங்கிருந்து பம்பாஸரஸுக்கு வந்து அதைப்பார்த்துவிட்டு, கிஷ்கிந்தைக்குச் சென்றார். இராமபிரான் வந்து தமது ராஜ்யத்தில் விஜயஞ்செய்திருப்பதைக் கண்ட சுக்ரீவன் பரமானந்தமடைந்து அவரை நமஸ்கரித்து பூஜோபசாரங்கள் செய்தான். ஸ்ரீராமபிரான் சுக்ரீவாதி வானரசிரேஷ்டர்களையும் தம்முடன் அழைத்துக் கொண்டு விமானமேறி ஆகாச மார்க்கமாக பிரவர்ஷணகிரி சென்று அங்கு முன் தாம் வசித்த ரம்மியமான குகையைச் சீதாபிராட்டிக்குச் சந்தோஷத்துடன் காண்பித்துச் சிறிது நகைத்து இரண்டாவது பீமகுண்டத்தில் ஸ்நானஞ்செய்து அங்குச் சுப்பிரமண்யக் கடவுளைத் தரிசித்து அங்கிருந்த அகஸ்திய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தார். பிறகு அநேக தீர்த்தங்களைத் தரிசித்துக்கொண்டு கனக

கிரிசென்று அங்கு மகாதேவரையும் வீரபத்திரரையும் தரிசித்தார். பிறகு வேங்கடம் சென்று வெங்கடேசுவரரை வணங்கி அங்கு அடிவாரத்தில் திருப்பதிப் பட்டணத்திலிருக்கும் கோவிந்தராஜப் பெருமாளைத் தரிசித்துக் கபிலதாரையில் ஸ்நானஞ்செய்து அங்குத் தீர்த்தசிராத்தந்தையும் நடத்தினர். பிறகு சேஷாசலத்துக்குச்சென்று அப்புஷ்காணியில் தீர்த்தமாடி வெங்கடேசுவரரைப் பூஜித்து அங்குள்ள பஞ்ச தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தார். பிறகு சுவர்ணமுகி நதியின் கரையிலிருக்கும் ஸ்ரீ காளத்தீசுவரரைத் தரிசித்து பூஜித்து சிவ விஷ்ணுக்களுக்குப் பிரிய ஸ்தலமான காஞ்சிபுரம் சென்று ஏகாம்பரேசுவரரைப் பூஜித்து அங்குள்ள சர்வ தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து காமாக்ஷி என்னும் ஜகதாம்பிகையை வணங்கி வேகவதிநதி தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து பிறகு வரதராஜப்பெருமாளை வணங்கி அங்கிருந்து பட்சிதீர்த்தம் சென்று ஸ்நானம்செய்து அங்கு பூஷா, விதாதா, என்னும் இரண்டு பக்ஷி சிரேஷ்டங்களை சீதையுடன் பூஜித்து, அங்கிருந்து புஷ்பகத்தை வேகமாகப் பாலாறுக்குச் செலுத்தி அங்கு ஸ்நானஞ் செய்து திரிவிக்ரமரை வணங்கி, பிறகு எண்ணின மாத்திரத்தில் முத்தியருளும் அருணசல க்ஷேத்திரமடைந்து அங்கு அருணசலேசுவரரை வணங்கி, பிறகு மணிமுத்தா நதியின் கரையிலிருக்கும் விருத்தாசல க்ஷேத்திரஞ்சென்றார். அங்கு விருத்தாசலேசுவரரைப் பூஜித்து அதன்பின் வடபாகஞ் சென்று வடபாலேசுவரரைப் பூஜித்தார். அங்கிருந்த ஸ்ரீ முஷ்ணம் வந்து அங்கு எழுந்தருளியிராநின்ற ஜகதீசராகிய யக்ஞவராகப் பெருமாளைத் தரிசித்து பிறகு தரிசன மாத்திரத்தில் முத்தி யுதவும் சிதம்பரம் வந்தார். அத்தேசத்தில் ஆதிகாலத்தில் ஆதிசேஷர் ஒரு சிலையில் எழுதியிருந்த தாண்டவ மூர்த்தியின் ஆகிருதியைத் தரிசித்தார். அங்கிருந்து காவேரி நதியைத் தாண்டி சிம்ம க்ஷேத்ரம் சென்று அங்கு பிரம்மபுரேசரையும் வைதீசுவரரையும் வணங்கி, அவ்விடமிருந்து, சுவேதாரண்யம் சென்று அங்குள்ள சங்கமுகியென்னும் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, பிறகு சாயாவனஞ் சென்று அங்கிருந்து கௌரீ மயூர (மாயூர)த்திற்கு வந்து பின் வேதாரண்ய மத்தியார்ச்சன க்ஷேத்திரங்களுக்குச் சென்று,

அங்குள்ள மஹாலிங்கேசுவரரைத் தரிசித்து, விருத்த காவேரியில் ஸ்நானம் செய்து பிறகு கும்பகோணத்துக்குச் சென்று ஸ்ரீநிவாஸரையும் அங்குள்ள பிருந்தா வனத்தையும் தரிசித்துப் பிறகு சாரங்கபாணியைத் தரிசித்து அவரிடத்துள்ள ஸ்ரீவத்ஸ மணியையும் பார்த்தார். பிறகு பிரயாகை மாதவரை வணங்கி விட்டு அப்ரசிரஸு ஸ்தலத்தைத் தரிசித்தார். அதன்பின் ஆகாசம்போல் நீல நிறம்பொருந்திய கமலாலயத்தையடைந்து அங்கு தியாகேசரைப் பூஜித்து, அங்குக்கயாதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, பிறகு தக்ஷிண துவாரகைக்குச் சென்று, அங்கு கோவிந்தரை வணங்கி, பின் ஜயபாலபட்டணம் சென்று, அபயநேசுவரரையும் தாம் முந்திபிரதிஷ்டை செய்த விக்நேசுவரையும் வணங்கி அங்கிருந்து நவபாஷாணம் சென்று, பிறகு தேவீ பட்டணமடைந்து அங்குள்ள வேதாள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, பின்சமுத்திரத்தைக்கடந்து பைரவதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, தமக்குச் சொந்தமான இராமேசுவரம் சென்று விமானத்தை விட்டிறங்கி யாவருடனும் கால்நடையாக நடந்து, லட்சுமண தீர்த்தத்துக்குச் சென்று அங்கு இராமகுண்டமாகிய தமது சொந்தத்தீர்த்தில் ஸ்நானஞ் செய்தார். பிறகு தனுஷ்கோடியிலும் ஜடாயு தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து பின் கந்தமாதனத்துக்குச் சென்று அங்கு அனுமான் கொண்டுவந்து பிரதிஷ்டை செய்திருக்கும் விசுவநாதரை முதலில் வணங்கி, பிறகு இராமேசுவரரைத் தரிசித்து அவர்க்குக் கங்காபிஷேகம் செய்வித்து காசகும்பங்களை தனுஷ்கோடியிலெறிந்துவிட்டு அங்கே வில்நுனியில் கோடி தீர்த்தமென்னும் ஓர் உத்தமமான தீர்த்தத்தை உண்டுபண்ணி, க்ஷேத்திரங்களின் பாபசாந்திக்காக சேது மாதவரைத் தரிசித்து அங்கே பல தானங்களைச் செய்துகொண்டு ஒரு மாதகாலம் வசித்திருந்து அங்குள்ள தேவதைகள் யாவருக்கும் பலவிதமான வாகனங்களைச் செய்து வைத்து வாகன மகோற்சவங்களையுஞ் செய்வித்தார். பிறகுநடந்த க்ஷேத்திர பாபசாந்திக்காகக் கோடிதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தார். பிறகு கோபுரவாயிலிலிருக்கும் கணபதியைத் தரிசித்து மறுபடியும் கடலைக்கடந்து விமானமேறித் தர்ப்பசயனம் சென்றார். பின் தாம்பிரபர்ணீ சமுத்திர சங்கமத்திற்குச் சென்று

அங்கு ஸ்நானம் செய்து பல தானங்களை அளித்து, அக்கரையி லிருக்கும் கந்தபிரானைப்பூஜித்து தாம்பிரபர்ணீ நதிக்கரை வழியே சென்று, அங்குள்ள புண்ணிய ஸ்தலங்கள் யாவையும் தரிசித்து வேங்கடநாதனையும் வணங்கி அவ்வழியாய்த் தோதாத்திரி சென்று, அங்குச் சமுத்திரக்கரையில் வசிக்கும் கன்னியா குமாரியைக்கண்டார். புஷ்பமாலையை வைத்துக்கொண்டு நெடுநாளாகத் தமது வரவை நோக்கிக் காத்துக்கொண்டிருக்கும் அவளைப் பார்த்து "விருதானுஷ்டான சீலமுடையவளே! உனக்கு வேண்டிய வரனைக்கேக" என்றார். நெடுநாளாய் விருதம் அனுஷ்டித்து வரும் அவள் "ஏ இரகு குலோத்தமா! யான் ஒரு முனிவருடைய புத்திரி. எனது தந்தை என்னைச் சுஸேந்திரர் என்பவருக்குக் கன்னிகாதானஞ்செய்து கொடுப்பதாக நிச்சயித்து அவரை வரவழைத்தார். நான் தாங்கள் தீர்த்தயாத்திரைசெய்து வருவதைக் கேட்டு தாங்கள் இவ்விடம் வரும்பொழுது தங்களை வரனை வரிக்கவேண்டுமென்று எண்ணி, இந்த விருதத்தை அனுஷ்டித்து இவ்விடம் வசித்து வருகிறேன். நான் இப்படி நிச்சயித்திருப்பதை யறிந்தே எனது தந்தை, சுஸேந்திரர் என்பவரை அவரிருப்பிடத்துக்குச் செல்லும்படி யனுப்பினார். அவர் இதோ ஒரு காதவழிதூரத்தில் மனவருத்தத்துடனிருந்து வருகிறார். எனது தந்தை இதனால் மனவருத்தமும் கோபமுமடைந்து எனது தாய், விவாகத்திற்காகச் சேகரித்திருந்த சாமான்கள் யாவற்றையும் சமுத்திரத்திற் கொட்டிவிட்டு, அவரும் ஒரு காதவழி தூரத்தில் வசிக்கிறார். இதோ பாருங்கள் சமுத்திரத்தின் அலைகள் அந்தச் சாமான்களைக் கரைக்குச் சிறிது சிறிதாகக் கொண்டுவருகின்றன. ஆதலால் தாங்கள் என்னைத் தாஸியாகக் கொண்டு காப்பாற்ற வேண்டுமெனப் பிரார்த்தித்தாள். இரகுநந்தனரும் அவள் கருத்தை யறிந்து கொண்டு "ஏ குமாரியே! நீ கேட்டபடி வரந்தர எனக்கும் பிரியமே" ஆனால் யான் இப்பிறப்பில் ஏகபத்னீ விருதமென்ற ஒரு விருதத்தை மேற்கொண்டிருக்கிறேன். இந்தப் பிறப்பில் உனதுகோரிக்கைநிறைவேறாது; இனியான்செய்யவிரும்பியகிருஷ்ணவதாரத்தில் உனது தபோபலத்தால் நீ ஜாம்பவானுக்கு ஜாம்பவதி யென்கிற

பெயர்கொண்ட புத்திரியாகப்பிறப்பாய். அப்பொழுதகிருஷ்ணனுக்குப்பத்னியாவாய் என்று வரமளித்தார். பிறகு அவள் இராமர்புவியிலிருக்கும்வரையில் அவருடையவார்த்தையைநம்பி இயமநியமங்களை செய்துவந்தாள். பிறகு இராமபிரான் அவ்விடமிருந்து சுவேந்திரனிருக்கும் இடத்திற்குவந்து,அவ்விடத்திலுள்ள பயோஷ்ணியென்னும் தீர்த்தத்தில்ஸ்நானம்செய்து அங்கிருந்து தாம்பிரபர்ணீநதிக்கரையிலிருக்கும் ஆதிஅனந்த ஸ்தலத்துக்குச்சென்று அங்கு இலட்சுமி கருடர் இவ்விருவரும்சேவிக்கச் சேஷசயனராகவிருக்கும் அனந்தரைத் தரிசித்து வணங்கினர். அங்கு மேற்கு நோக்கி ஒரு ஆறு போய்க்கொண்டிருக்கிறது. அதனை வேறொருதாம்ரபர்ணீயென்றே கொள்ளவும்அங்கிருந்துபுறப்பட்டுஅநந்தசயனஞ்சென்று அங்குள்ள பத்மதீர்த்தம் மச்சதீர்த்தம் சங்கதீர்த்தம் இவைகளில் சீதையுடன் பிரபுவாகிய இராமர் ஸ்நானம் செய்தார். பிறகு விமானமேறி தர்மாதர்ம ஸரோவரத்திற்குச் சென்று அங்கு ஸ்நானஞ்செய்து அங்கிருந்து மேற்கு சமுத்திரக்கரையிலிருக்கும் ஜனார்த்தன க்ஷேத்திரமடைந்து அங்குள்ள கங்காதாராசமுத்திர சங்கமத்தில் அமாவாசையிலும் பௌர்ணமியிலும் ஸ்நானம் செய்து ஜனார்த்தனரைப் பூஜித்து பெண் மலையாளத்தினருகே சென்று அதைப் பார்த்துவிட்டு லோகத்துக்கு நல்வழியை போதிப்பதன் நிமித்தம் அதனுள் பிரவேசிக்கவில்லை. அதை விட்டுத்திரும்பி கிருதமாலை ஸிந்து நதி இவைகளுக்கு வந்து ஸ்நானம் செய்து அங்கிருந்து தாம்பிரபர்ணி நதியின் கரையின்கண்ணுள்ள கஜேந்திர க்ஷேத்திரத்துக்குச் சென்றார். பிறகு தாம்பிரபர்ணிஉற்பத்தியில்ஸ்நானஞ்செய்து அங்கிருந்து மயிராள தீர்த்தஞ்சென்றுபிறகு சந்திரகுமாரம் என்னும் மலையையடைந்து தென்காசிக்குச்சென்று காசிவிசுவநாதரைவணங்கிச்சம்பகாரண்யம் அடைந்தார். இதன்பின் சித்ரங்கா தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அங்கு ஹரிஹரர்களை வணங்கி, பிறகு விமானத்துடன் மதுராபுரிக்குச்சென்று, வேகவதி நதியில் ஸ்நானம் செய்து அங்கு மீனாட்சி சுந்தரேசுவரரைத் தரிசித்து வணங்கி, திராவிட கிரியிலுள்ள வேங்கடேசுவரரையும் வணங்கிப் பிறகு, உபய காவேரி மத்திய க்ஷேத்திரமாகிய ஸ்ரீரங்கம் வந்து, அங்கிருந்து, மாதுரு

பூதேசுவராலயம் போய் அவரை வணங்கிப் பின், ஜம்புகேசுவரத்துக்குச் சென்று அவரையும் வணங்கிக் கடைசியில், ரங்கநாதரைத் தரிசித்து, வணங்கினர். இதற்குப்பின் அவினுசிக்குச் சென்றார். இங்கிருந்து ஸ்ரீரங்கபட்டணம் சென்று அங்குள்ள ஹைமவதி தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, சாளிக்ராமத்துக்கு வந்தனமளித்து இராமநாதபுரம் சென்றார். அங்கிருந்து குமார தாரைக்குச் சென்று, அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து சுப்பிரமண்யரைப் பூஜித்து, உடுப்பியில் பிரஸித்தமாயிருக்கும் கிருஷ்ண பகவானைவணங்கி, அங்கிருந்து சிருங்காசிரமம் சென்று அங்கே துங்காநதிக்கரையிலிருக்கும், சிருங்ககிரியில் சாரதாம்பாளை வணங்கி, அங்கிருந்து கும்பகாசிக்குச் சென்று, பின் கோடீசுவர சிவக்ஷேத்திரத்தை யடைந்து அங்கு மிருடேசுவரர் மூகாம்பிகாதேவி இவர்களைத் தரிசித்து, வணங்கி, குணவந்தேசுவரர், தாரேசுவரர், கௌரேசுவரர், சர்ஜேசுவரர், இவர்கள்நால்வரையும்வணங்கி, பிறகு கோகர்ண க்ஷேத்திரஞ் சென்று அங்கு மகாபலேசுவரரைவணங்கிவிட்டு, ஹரிஹரேசுவரஞ் சென்று அங்குள்ள அநேக தீர்த்தங்களைத் தரிசித்தார். பின்மஹேந்திர பர்வதத்திலிருக்கும் ஜாமதக்னி முனிவரை (பரசுராமரை) வணங்கி, பின் பீமேசுவரஞ் சென்று அங்குள்ள தௌமமகாபலேசுவரரை வணங்கிவிட்டுக்கோலாபுரஞ்சென்று, பின்கரவீரபுரமடைந்தார். அங்கே கிருஷ்ணு வேணி சங்கமத்தில் ஸ்நானஞ் செய்து கதாலட்சுமீசுவரரை வணங்கி, கடப்பிரபா தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, அதன்பின் அநேகமான புண்ணிய ஸ்தலங்களைத்தரிசித்துக் கொண்டு பிறகு மகாதேவர் மல்லாரீசுவரர் இவர்களை வணங்கி கரா நதிக்கரையி லிருக்கும் வக்ரதுண்ட விநாயகரைத் தரிசித்து, நீராநதியில் ஸ்நானஞ் செய்து நரஸிம்மரைப் பூஜித்து பாண்டுரங்கரை வணங்கி, சந்திரபாகையில் ஸ்நானஞ் செய்து பிறகு பீமாசங்கமம் சென்றார். அங்கிருந்து சந்தல்லா க்ஷேத்திரம் சென்றார். பிறகு பிரேமபுரம் சென்று அங்குள்ள மார்த்தாண்டேசுவரரை வணங்கிப் பின் நளதுர்க்கையைத் தரிசித்து அதனருகிலுள்ள பல ஸ்தலங்களையும் தரிசித்துவிட்டு, பிறகு துளஜாபுரத்திலிருக்கும் தேவியை வணங்கி, மாணிக்காம்பிகையையும் தரிசித்து, அங்குள்ள தீர்த்தங்

களில் ஸ்நானம் செய்துவிட்டுப் பின் அம்பாபுரஞ் சென்று அங்கே யோகீசுவரி யென்னும் அம்பிகையைத் தரிசித்து பின் வைத்தி நாதரை வணங்கி, வஞ்சரா சங்கமஞ்சென்று அங்கு நாகேசுவரரைத் தரிசித்தார். இதற்குப் பிறகு கோதாவரிக்கு வடகரையாகிய பூர்ணாசங்கமத்தில் ஸ்நானஞ் செய்து, அங்கு தமது பெயரால் ஓர் பட்டணத்தை யுண்டுபண்ணி, பிறகு முத்கலாசிரமம் வந்து சேர்ந்தார்.

அப்பால் பாணதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து விட்டுப் பேணாசமுத்திர சங்கமத்தில் ஸ்நானஞ் செய்தார். இதன் பின் மாலை போல் வரும் கோதாவரி நடுவிலிருக்கும் அப்ஜகமென்னும் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அங்கு திரிவிக்ரமரை வணங்கி, அக்கரையில் தமது பெயரால் ஒரு சிரேஷ்டமான பட்டணத்தை யுண்டுபண்ணினார். பிறகு சண்டிகாம்பிகையை பூஜை செய்து, ஆத்மதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, அங்குள்ள விக்னேசுவரரை வணங்கி, மகாலட்சுமியைத்தரிசித்து, பின் வடவா சங்கமம் சென்றார். பிரதிஷ்டா நகரதரிசனஞ் செய்து விட்டு, விருத்தைலா சங்கமத்திலும் சிவநந்தா சங்கமத்திலும் ஸ்நானஞ்செய்து நரசிம்மரைப் பூஜித்து அங்கு தமது பேரால் ஓர் தீர்த்தத்தை யுண்டுபண்ணி பிறகு பிரவரா சங்கமம் சென்றார். அங்கே சித்தேஸ்வரரை வணங்கி அதன் பின் நிவாஸபுரத்துக்கும் நூபுரத்துக்கும் சென்று அதனருகேயுள்ள பல ஸ்தலங்களைத் தரிசித்து கோதாவரிக் கரையிலிருக்கும் புண்ணிய ஸ்தலம் சென்றார். அப்புறம் கத்ருவிநதா சங்கமங்களில் ஸ்நானஞ் செய்து ஜனஸ்தானமடைந்து அங்குதிரியம்பகேசுவரரைத் தரிசித்துத் தங்கினர். அங்கு தென்தேசத்தரசர்கள் யாவரும் ஸ்ரீராமபிரானைத் தரிசித்து வணங்கிதங்கள்கப்பங்களைச் செலுத்தி மகிழ்ந்தார்கள். இராமபிரான் அவர்களையும் அழைத்துக் கொண்டு மறுபடியும் யாத்திரைக்குப் புறப்பட்டார்.

தக்ஷிணதேச தீர்த்த யாத்திரை வர்ணனையாகிய

7-வது சருக்கம்

முற்றிற்று.

## 8-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! அடியேன் மனதில் ஒரு சந்தேகம் ஜனித்திருக்கிறது. அதனைத் தாங்கள் நிவர்த்தி செய்ய வேண்டும். சாதுக்கள் கிருபையுள்ளவர்களல்லவா? வாகனமேறி யாத்திரை செய்யக் கூடாதென்று சாஸ்திரங் கேட்டிருக்கிறேன். இராகவர் புஷ்பக விமான மேறி யாத்திரை செய்தாரெனத் தாங்கள் கூறினீர்கள். அதன் காரணமென்ன? அதை நிவர்த்திக்க வேண்டுகிறேன் என்றார்.

### இராமதாஸர் கூறுகிறார்.

தீவுக்கு அதிபதியும் சத்திரசாமர உபசார போக்கியனுமான மண்டலாதிபதி, காலால் நடந்து யாத்திரை செய்யக்கூடாது. இன்னும், ஒரு தேசத்தரசனும் லக்னம்நிச்சயித்து விவாகஞ்செய்து கொள்ளச் செல்லும் வரனும் ஒரு பெரிய மடாதிபதியும் காலால் நடக்கக்கூடாது. ஆதலால் ஸ்ரீராமபிரான்விமானத்துடன்யாத்திரை செய்ததில் நீ சிறிதும் சந்தேகங் கொள்ளாதே. இராமருடன்கூட வருகிறவர்களோவெனில், அவர்கள் யாவரும் அம்மகானுடைய உத்தரவின்பேரில் உட்கார்ந்து வருவதால், அவர்களுக்குந் தோஷமில்லை. ஈசுவரனுடைய செயலையாரால் அறியமுடியும்? இராமசந்திரனுடைய கதையை இன்னும் சொல்லுகிறேன்கேள். இராமர்கிரியம்பக க்ஷேத்திரத்திலிருந்து புறப்பட்டு முன் சீதையோடு தாம் சுகமாக நித்திரை செய்த, பர்வதத்துக்குச் சென்று அங்கு மூன்று தினம்வசித்து விட்டு சப்த சிருங்க மலைக்குச் சென்றார். பிறகுஅகஸ்தியர், சுதீஷ்ணர் இவர்களுடைய ஆசிரமம் சென்றார். இதன் பின் சைலபுரஞ்சென்று அங்குகிருஷ்ணேசுவரரை நமஸ்கரித்து அங்குள்ள சிவ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பின் தேவகிரியைத் தரிசித்து விட்டு விராஜ க்ஷேத்திர மடைந்தார். அங்கே மாதாபுரத்திலிருக்கும் தேவியை வணங்கி அதனருகே யிருக்கும் ஸ்தலங்களைத் தரிசித்து தேவவடத்தில் நரசிம்ம சுவாமியை, சீதாதேவியுடன் நமஸ்கரித்து, பிறகு பயோக்ஷணி யென்னும் தீர்த்தத்தில் ஸ்நோ

தார்களுடன் சாஸ்திரோக்தமாக ஸ்நானஞ் செய்தார். பிறகு தாபி யென்னும் நதியின் உற்பத்தி ஸ்தானத்தில் ஸ்நானஞ்செய்து தமது பெயரால் விளங்கும் இராம பர்வதத்தை யடைந்து, அதனருகே ஓடிக்கொண்டிருக்கும் நருமதையில் ஸ்நானம் செய்து ஓங்காரே சுவரரைப் பூஜித்தார். பிறகு மேற்றிசை சென்று அங்கு பல புண் ணிய ஸ்தலங்களைத் தரிசித்து, தாபீசாகர சங்கமத்திலும் நர்மதா சங்கமத்திலும் மகா நதி தீர்த்தத்திலும் ஸ்நானஞ் செய்து பிறகு பிரபாஸ க்ஷேத்திரஞ்சென்று அங்கே பஞ்ச சரஸ்வதி நதி களின் சங்கமத்தில் ஸ்நானம் செய்து, இதன் பின் ஸௌராஷ்டிர தேசத்திலிருக்கும் சோமநாதேசுவரரைத் தரிசித்து ஸாப்ரமதி நதியையும் இன்னும் பல தீர்த்தங்களையும் தரிசித்துக்கொண்டு சங்கோத்தார ஸ்தலத்தை யடைந்தார். அப்புறம் கோமதி நதியில் விதிப்படி ஸ்நானம் செய்துவிட்டு அநாதி தொடங்கியிருக்கும் முக்திபுரிகளுக்குள் பிரசித்தமாகிய துவாரவதி யென்னும் பட்ட ணத்துள் பிரவேசித்து தீர்த்த சிராத்தத்தையும் அநேக தானங் களையும் செய்து, அங்கிருக்கும் பல புண்ணிய தீர்த்தங்களையும் தரிசித்தார். இங்கே மேற்தேச மன்னர்கள் இராமபிரானைத் தரி சித்து கப்பங்களைச் செலுத்தி வணங்கிப் பூஜித்தார்கள். இராகவர் அவர்களுடைய கப்பங்களை ஏற்றுக்கொண்டு அவர்களுடன், ஸரஸ் வதி நதியின் கரை வழியாகச்சென்று, அங்கிருக்கும் பல புண்ணிய ஸ்தலங்களையும் தரிசித்து, அங்கு புஷ்பகவிமானத்தை மெது வாகச் செலுத்திக்கொண்டே அங்கங்குள்ள விநோதங்களை சீதைக் குக் காண்பித்துக்கொண்டு பல தேச மன்னர்கள் சூழப் புஷ்கர க்ஷேத்திரம் சென்றார். இராமபிரான் தாம் க்ஷேத்திர யாத்திரை செய்யத்தொடங்கிய நாள்முதல் ஒவ்வொருநாளும்கோடிக்கணக்கான பிராமணர்களுக்கு திவ்யான்ன பாயஸபோஜனஞ் செய்வித்து வந் தார். இது வன்றி, விமானத்தில் வசித்து வரும் அயோத்தியா பட்டண வாசிகள் கீழ்த்தேச மன்னர்கள் தென் தேச மன்னர் கள் மேற்தேச மன்னர்கள் இவர்களுக்கும் இவர்களுடைய சேனை களுக்கும் வாகனங்களுக்கும் அன்னம், வஸ்திரம், ஆபரணம் முத லியவைகளை அதிதிகளுக்குக் கொடுப்பதுபோலவே யளித்து, மரி

யாதை செய்து பெருமைப் படுத்தினர். அவர்களும் மனமகிழ்ச்சி யடைந்து பக்தியுடன் சுகமாக வசித்தார்கள். இவ்வளவனந்த கோடிக்கணக்கான ஜனங்களில் ஒருவரேனும் தனியே சமையல் செய்து கொள்வதில்லை. அந்த புஷ்பகவிமானத்தில் புல், விறகு, தீர்த்தம் இவைகளைப்பற்றிய கவலை யாருக்கும் ஏற்படவில்லை. ஏ விஷ்ணுதாஸ! அங்கிருப்பவர்களுக்குப் பசி எப்படியுண்டாகிற தென்பதைப்பற்றிய சிந்தை யொன்றே எனக்குள்ளது. அவர்கள் பசி யெடுக்கச் சாதகமான சூர்ணங்களைக் கொடுக்கத் தக்க வைத்தியர்களையுங் கூடவே வைத்துக்கொண்டிருக்க வேண்டுமென்றெண்ணுகிறேன். இடைவிடாமல் வாத்திய கோஷங்கள் நடந்து வருவதால் நித்திரைக்குமட்டும் எப்பொழுதும் தாரித்திரியம். அந்த விமானத்தில் எந்த பாகத்திலும் இரத்ன தீபங்கள் இரவு பகல் இவ்விரண்டின் பேதத்தை யறிய முடியாவண்ணம் இடைவிடாமல் பிரகாசிப்பதால், அங்குள்ள வாரநாரிகள் தங்களுடைய கானம், கண்களின் அபிநயம், வசனங்கள், விளையாட்டுகள் இவைகளில் மயக்கமடைவார்கள். அவர்களுக்கு, விமானம் இரவில் சஞ்சரிக்கிறதென்பதும் பகலில் சஞ்சரிக்கிறதென்பதுங்கூடத் தெரிகிறதில்லை.

இப்படியிருக்கையில், புஷ்கர க்ஷேத்திர வாசிகள் காதுக்கு இனிமையும் ரம்மியமுமான சப்தங்களைக் கேட்டார்கள்.

இவ்வித சப்தங்களுண்டானதின் விவரம்.

(1) வார நாரிகளின் தண்டைகள் கங்கணங்கள் கரதாடனங்கள் வாய்ப்பாட்டுகள் இவைகளா லுண்டாவது (2) மிருதங்கம் பணவம் முதலாய நவ வாத்தியங்களா லுண்டாவது (3) யாத்திரைக்காக வந்திருக்கும் யானைகளின் மணிகளா லுண்டாவது (4) பதாகைகள் அசைவதாலுண்டாவது (5) வாராங்கனைகளின் இடையிலணிந்திருக்கும் கிங்கிணிகளாலுண்டாவது (6) யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், மயில்கள், குரங்குகள் இவைகளால் ஏற்படுவது (7) வீரர்கள் ஆர்ப்பது (8) வேதியர்கள் சிஷ்யர்கள் இவர்களுடைய வேத கோஷங்கள் (9) நடர்கள் வந்திகள் இவர்கள் செய்யும் நடனங்

களாலேற்படுவது (10) பசுக்கள், எருமைகள் வெள்ளாடுகள் இவைகளிலிருந்து பால் கறக்கும் சப்தம் (11) தயிர் கடையுஞ் சப்தம் 12) குழைந்தைகளின் ரோதனங்கள் 13) குழந்தைகளைத் தொட்டிலி லிட்டு ஆட்டுவதாலாகும் சங்கிலியின் சப்தம் (14) பேரி, தூரியம் முதலிய வாத்திய கோஷங்கள் (15) மாவரைக்கும் எந்திரம் முதலியவைகளின் சப்தங்கள் (16) செப்பில் அன்னத்தைப் பக்குவஞ் செய்வதாலுண்டாவது (இது கேசரிபாத் தென்று சொல்லப் படுவது) (17) நாரதர் முதலிய முனிபுங்கவர்களுடைய வீணை முதலிய வாத்தியங்களாலுண்டாவது (18) புராணங்களை வாசித்து அவைகளின் கதைகளை விவரிப்பதாலுண்டாகும் சப்தம் (19) ஹரி கீர்த்தனத்தால் உண்டாவது (20) ஸ்ரீராம ஸஹஸ்ரநாமாவளி முதலியஸ்தோத்திரங்களின் சப்தம் (21) ஸ்திரீகள் வேலைகள் செய்யுங் காலத்தில் உண்டாகும் கங்கண சப்தம் (22) வேதியர்கள் போஜன சமயத்தில் கால் அலம்புதல் முதலியவைகளால் உண்டாவது—இவைகள் முதலிய இன்னும் பல காரணங்களால் உண்டாகிய பலவித சப்தங்களை புஷ்பவாசிகள் உதயகாலத்தில் கேட்டு, மேற்கு திசையை நோக்கி இதென்னவென்று பயந்து மனங்கலங்கிப் பின் வருமாறு சங்கித்தார்கள். இச்சப்தம் சிவபிரானது இடப வாகனத்தின் கழுத்தில் அணிந்திருக்கும் மணிகளினுடையதென்று சிலரும், இந்திரன் விமானத்துடன் சொர்க்கம் செல்கிறானென்று சிலரும், ரம்பை முதலான அப்ஸர ஸ்திரீகள் யாவரும் ஆகாசமார்க்கமாக வருகிறார்கள் என்று சிலரும், இது மேகத்தின் சப்தமென்று சிலரும், இது ஐராவதத்தின் சப்தமென்று சிலரும், பிரளயகாலத்தை எதிர் பாராமல் சமுத்திரந் தான் வருகிறதென்று சிலரும், அனுமாருடைய சப்தமென்று சிலரும், கருடனுடைய சப்தமென்று சிலரும் கந்தர்வசிரேஷ்டர்கள் விமானமேறி ஆகாசத்தில் சஞ்சரிக்கிறார்கள் என்று சிலரும், நாககன்னிகைகள் பாடுகிறார்கள் என்று சிலரும் இப்படிப் பலவிதமாக ஒருவர்க்கொருவர் தர்க்கம் செய்து கொண்டிருக்கையில், அது கிட்ட நெருங்கிற்று. அதைப் புஷ்பக விமானமென்றும் அதில் !இராமபிரான் தமது பரிவாரங்களோடும் அயோத்தியா பட்டண வாசிகளோடும் வருகிறாரெனக் கண்டு,

சந்தோஷ பரிதரானுர்கள். உடனே அவர்கள் தங்கள் உபாயனங்களைச் சேகரித்துக் கொண்டு மன மடங்காத அன்புடன் ஸ்ரீராம பிரானை எதிர்கொண்டு வந்து, அவரை வணங்கித் தாங்கள் கொண்டு வந்த உபாயனங்களைச்சமர்ப்பித்தார்கள். இராகவர் அவைகளைப் பெற்றுக்கொண்டுமகிழ்ச்சியடைந்தார். அவர்கள் அம்மகிழ்ச்சியையே தக்க சம்மானமாகக் கொண்டு தங்கள் ஜன்மம் சாபல்யம் பெற்றதாகக் கருதி மகிழ்ந்தார்கள். ஸ்ரீராமபிரானும் விமானத்தை விட்டிறங்கி அவ்வேதியர்களை வணங்கி, அவர்களுக்குப் பதில் மரியாதைகளைச் செய்து, அவர்களையும் விமானத்தில் ஏற்றி வைத்துக்கொண்டு, அங்குள்ள ஓர் திவ்விய தீர்த்தத்திக்குச் சென்று, ஸசேல ஸ்நானம் செய்து தீர்த்த சிராத்தத்தையும் விதிவத்தாக முடித்து, காசியில் செய்ததைக் காட்டிலும் கோடிமடங் கதிகமான தானங்களைச் செய்து வேதியர்களுக்கு திரவிய வஸ்திரா பரணம் அன்னம் இவைகளை அவர்கள் விரும்புமளவும் அளித்துச் சந்தோஷ முண்டாக்கினர். பிறகு அவர்களுடைய அனுமதி பெற்று, ஸ்ரீ ராம பிரான் விமானமேறி மறுபடியும் புறப்பட்டார்.

ஸ்ரீராமபிரானுடைய மேற்றேச யாத்திரையைக் கூறும்

8-வது சருக்கம்

முற்றிற்று.

## 9—வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமபிரான் புஷ்கர க்ஷேத்திரத்திலிருந்து வடதிசையை நோக்கிப் புறப்பட்டு பர்வததீர்த்தம், ஜுவாலாமுகி, தப்தை, ஸ்ரீமணிகர்ணிகை முதலிய பல புண்ணிய க்ஷேத்திரங்களையும் தீர்த்தங்களையும் தரிசித்துக்கொண்டு கரதோயாநதியில் ஸ்நானஞ் செய்தார். அதைத்தாண்டிச் செல்வதில் தோஷம் சம்பவிக்கு மென்று கேட்டுத் திரும்பிவிட்டார். கர்மநாசா நதியை ஸ்பரிசிப்ப தாலும் கரதோயாநதியைத் தாண்டுவதாலும் தண்டகியை நீந்திக் கடப்பதாலும் தான் செய்த தானத்தை வாயிட்டுக் கூறுவதாலும் தர்மத்துக்கு லோபமுண்டாகுமெனவறிக. பிறகு இராமபிரான் தேவபிரயாகத்துக்குச்சென்று அங்கிருந்து அளகநந்தையெனும் நதியின் கரைவழியே பார்த்தமாத்திரத்தில் முக்தியை யளிப்ப தான நரநாராயணாசிரமம் சென்று, அங்கிருந்து பதரிகாசிரமஞ் சென்று அங்கு கேதாரேசுவரரைத் தரிசித்து, பின் கந்தர்வர்கள் வசிக்கும் இமயகிரிக்குச்சென்று மகாபதத்தின் வழியே மானஸம் என்னும் தடாகத்துக்குப்போய்ச் சேர்ந்தார். அந்த மானஸ ஸரஸி லிருந்தே கங்கை, சரயூ இவ்விரண்டு நதிகளும் உற்பத்தியாயின. அதில் சொர்ணத்தாமரைப் பூக்கள் மலர்கின்றன. அங்கே முகம், கைகால் இந்த அவயவங்கள் சிவந்துள்ள அன்னப்பட்சிகள் முத் துக்களை ஆகாரமாகப் புசித்து ஆயிரக்கணக்காக வசிக்கின்றன. அப்பிரதேசத்தில் ஆச்சரியகரமான ஓர் இடமிருக்கிறது. அங்கே தேவர்கள், கின்னரர்கள் கந்தர்வர்கள் இவர்கள் அப்ஸர ஸ்திரீக ளுடன் இராப்பகலாக விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். அந்த மானஸ ஸரஸில், இராமபிரான் சீதாதேவியுடன் ஸ்நானஞ் செய் துவிட்டு, அங்கிருந்து பிந்து ஸரஸுக்கு வந்து அங்கு ஸ்நான தா னங்களைச் செய்து, அந்த இமயகிரியில் மகாமேருவிலிருக்கும் ஸபைக்கொப்பான பிர்மஸபையைப் பார்த்தார். உடனே சீதை முதலிய யாவருடனும் விமானத்திலிருந்து அங்கு இறங்கினார். அவரைக்கண்ட பிர்மதேவர் இந்திரன் முதலிய தேவர்களுடன்,

வணங்கினர். இராமர் அவரைத் தழுவிக்கொண்டு அவர்கள் யாவருக்கும் தக்க மரியாதை செய்தார். பிர்மதேவரும் ஸ்ரீராமபிரானுக்குத் தக்க பூஜை செய்து அவருக்குத் தமது காமதேனுவையும் அளித்தார். ஸ்ரீராமபிரான் அந்தக் காமதேனுவை விமானத்தில் வைத்துக்கொண்டு, பிர்மா இந்திரன் முதலியவர்களையும் கூடவே யழைத்துக்கொண்டு விமானமேறி கைலாஸ மலை சென்றார். அக்கைலாஸத்தில் வசிக்கும் கிரிஜா பதியாகிய சிவபெருமான், பார்வதியுடன் விருஷபவாகனரூடராகி, இராமருக்கு எதிர்கொண்டுவந்தார். தம்மை எதிர்கொண்டுவரும் சிவபெருமானை இராமர் பார்த்து விமானமிருந்திறங்கி, அவரை வணங்கினர். சிவபிரான் இராமபிரானைத் தழுவிக்கொண்டு சந்தனம் பூசி, கோடிசூரிய ப்ரகாசம் பொருந்திய ஆபரணங்கள், திவ்யவஸ்திரங்கள், ஓலைகள், தண்டைகள், சேயூரங்கள், கடகங்கள் இவைகளை யளித்து கிங்கிணிகள் கட்டின மேகலாபரணத்தைச் சீதையின் இடுப்பில் பூட்டி, தலையில் சிமந்த பூஷணங்களைச் சூட்டி, கழுத்தில் நவரத்ன மயமான ஹாரங்களை அணிந்து மகிழ்ந்தார். ஜனகநந்தினியும் அவ்வாபரணங்களை மனமுவந்து ஏற்றுக்கொண்டாள். பிறகு சிவபெருமானும் இராகவரைத் தமது வைபவத்துக்குச் சரியாக உபசரித்து, "ஏ இராமா! உமது நாபீகமலத்தில் பிர்மதேவர் பிறந்தார். அவரிடத்திலிருந்து ஏகாதச ருத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் உமது பௌத்திரர்கள். அவர்கள்சங்கார அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். ஆகையால் சிருஷ்டிஸ்திதிசங்காரம் என்கிற முத்தொழிலுக்கும் மூலகாரணமாகிய உமக்கு இராவணனைக்கொன்றதால், பாபமென்பதேது? அதற்காக நீர் தீர்த்தயாத்திரை செய்துவருவது ஒரு விளையாட்டாக வல்லவா இருக்கின்றது. சுகமாக சீதையுடன் விளையாடும் விளையாட்டானது லோகோபகாரமாச் செய்யப்படுகிறதென்பதை யானறிவேன்" என்று அவருடைய சரித்திரத்தைக் கூறிவிட்டு, அவருக்கு சுத்திரம், சாமரம், பஞ்சம், பானபாத்திரம், தங்கமயமான போஜனபாத்திரம், கங்கணங்கள், குண்டலங்கள், தோள்வளைகள் உத்தமமான கிரீடமொன்று இவைகளையளித்து, அவருடைய மார்பில் சிந்தாமணி யொன்றைக் கட்டி, பய

ணப்படுத்தி அனுப்பினர். விதேக புத்திரியாகிய சீதாபிராட்டி இராமபிரானுடைய மார்பில் சிந்தாமணியைக் கண்டதும் சிறிது வெட்கத்துடன் அவரைப்பார்த்து, "ஏ நாதா! சிந்தாமணி உமக்கு காமதேனு எனக்கு" என்றாள். அதற்கு இராமபிரான் அப்படியே யாகட்டுமென்று கூறிவிட்டு, யாவருடனும் பரமசிவனை வணங்கித் தாம் யாகம்பண்ணப் போவதையும் சூசிப்பித்து, பிறகு அங்கு பிர்மாவை வரவழைத்து ஒரு மாதத்துக்குள் தாம் யாகம் நடத்தப்போவதையும் தெரிவித்து விட்டு, அங்கிருந்து கங்கைக் கரை வழியே ஹரித்துவாரத்துக்கு வேகமாய்ச் சென்று, பிறகு குருக்ஷேத்திரம் இந்திரப்பிரஸ்தம் இவைகளைப் பார்த்துக்கொண்டு பின் ரம்மியமான மதுவனஞ் சென்றார். இதன்பின் பிருந்தாவனம் கோகுலம் இவைகளைப் பார்த்துக்கொண்டு மெதுவாகக் கோவர்த்தனகிரி சென்றார். பிறகு ஷிப்ரா நதியின் கரையிலிருக்கும் புண்யகரமான அவந்திகாபுரிக்குச் சென்று அங்கு மகாகாளேசுவரரை நமஸ்கரித்து, அங்குள்ள தீர்த்தங்களைத் தரிசித்துக்கொண்டு அங்கிருந்து அஸ்தினபுரம் வந்தார். அங்கே ஸாகாம் என்னும் பேர்கொண்டு விளங்கும் ஒரு கிணற்றைப் பார்த்துவிட்டு, பிறகு நைமிசாரண்யம் சென்றார். அங்கே கோமதி நதியில் ஸ்நானஞ் செய்து, சூதபுராணிகரையும் சௌனகர்முதலிய முனிவர்களையுந் தரிசித்துப் பூஜித்து, பின் பிர்ம கைவர்த்த மென்னும் தடாகத்திலும் தமஸா நதியிலும் ஸ்நானஞ் செய்து பிறகு தமது பட்டணமாகிய அயோத்தியா பட்டணத்தினருகே வந்தார்.

இவ்வாறு ஸ்ரீ ராமபிரான் யாத்திரை செய்துகொண்டு நகரத்தினருகே வருவதையறிந்த விவேக சீலனாகிய சுமந்திரன் வெகு வேகமாக அயோத்தியா பட்டணத்தை உன்னதமான அநேக துவஜங்கள், பதாகைகள், தோரணங்கள் பூமாலைகள் இவற்றா லலங்கரித்தான். மார்க்கங்களை ஒழுங்குபடுத்தி, சந்தனக்குழம்புகள் தெளித்துக்குளிர்ச்சி செய்தான். பூமலர்களைப் பொழிந்தான்; பலி தீபங்கள் ஏற்படுத்தினன். பின்பட்டத்துயானையை முன்னிட்டுக் கொண்டு சேனைகள் சூழப் புஷ்பகவிமானத்திலிருக்கும் ஸ்ரீராமபிரானை எதிர்கொண்டு சென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து உபா

யனங்களைச் சமர்ப்பித்தான். ஸ்ரீராமபிரான் அவ்வுபாயனங்களை யேற்றுக் கொண்டு சுமந்திரனைத்தழுவி மகிழ்ந்தார். சுமந்திரனும் மனமகிழ்ச்சியடைந்து தான் கிருதார்த்தனனதாக எண்ணினன்.

இப்பொழுதும் பற்பல வாத்தியங்கள் முழங்கின. வாரநாரிகள் நர்த்தனம் செய்தனர். வேதியர்கள் வேத கோஷங்கள் செய்தார்கள். இந்த வைபவத்தோடு இராமர் நித்திய கர்மானுஷ்டானத்துக்காக சரயூ நதியில் முன் தாம் ஏற்படுத்தியிருக்கும் புண்ணியகரமான இராம தீர்த்தம் சென்று, அங்கு ஸ்நானஞ் செய்து வசிஷ்டர் கூறிய விதிப்படி ஓர் உபவாசமிருந்து ததிசிராத்தம் செய்து பிறகு பல தானங்களைச் செய்தார். பின் மூன்ருவது தினத்தில் விமானமேறி ஆகாசமார்க்கமாக சொர்ணங்களாலும், இரத்தினங்களாலும் செய்யப்பட்ட பிராகாரங்களைத் தாண்டி, ஒளி பொருந்தியதாயும் கோபுரம் அட்டாலம் இவைகளால் அலங்காரமாகவும், நாற்சந்திப் பாறைகளால் அழகாகவும் விளங்குவதான அயோத்தியாபட்டணத்துக்குட் புகுந்து, அவ்விநோதங்களைப் பார்த்துக்கொண்டு தமது ராஜ சபை வாயிலருகிற்செல்ல, அப்பொழுது விமானமானது பூமியிலிறங்கிச் சுகமாக நின்றது. உடனே சுமந்திரன் முதலியவர்களுடைய மந்திரிபத்னிகள் வெண்கலப் பாத்திரங்களில் பலியன்னத்தையும், தயிர்க்குடம் தீர்த்தக் குடம் இவைகளையும் எடுத்து வந்து இராமர் சீதை இவ்விருவர்களுடைய சரீரங்களை நூறு தடவைச் சுற்றியிறக்கி பின் அவைகளை வெகு தூரத்திற் கொண்டுபோய் எறிந்து விட்டு அங்கு ஸ்நானஞ் செய்து நூதனவஸ்தாபரணமணிந்து கொண்டு மறுபடி ஸ்ரீராமபிரானிடம் வந்தார்கள். இதன் பின் இராமர் தமது சகோதரர்கள், நாகர்கள், அரசர்கள் இவர்களுடன் விமானத்திலிருந்து கீழேயிறங்கி, சபைக்குட் பிரவேசித்து, சிம்மாஸனத்தில் வீற்றிருந்து கௌஸ்துப, சிந்தாமணிகளுடன் விளங்கினர். அரசர்களும் ஸ்ரீராமபிரான் உத்தரவின்பேரில் உட்கார்ந்தார்கள். சீதாபிராட்டியும் தனது காமதேனுவை முன்னிட்டுக்கொண்டு நவரத்ன நிர்மிதமான தனது சித்ர கிருகத்தை மகிழ்ச்சியுடன் அடைந்தாள்.

இதன் பின் இராமபிரான் காமதேனுவால் உண்டாக்கப்பட்ட பால், நெய் இவைகளால் பக்குவமான பரமான்னத்தை ஷட்ரஸோபேதகமாக வேதியர்களுக்கிட்டுத் திருப்தி செய்வித்தார். பிறகு எல்லா வருணத்தவர்க்கும் போஜனஞ் செய்வித்தார். பிறகு அங்கிருக்கும் அரசர்கள் யாவரையும் புஷ்பக விமானத்தில் படுத்துச் சுகமாக நித்திரை செய்யும்படி ஆக்ஞாபித்து விமானத்துக்கும் இடந்தரும்படி ஆக்ஞாபித்தார். இவ்விதம் அரசர்களை ஐந்து நாள் வரையில் தம்முடன் கூடவேயிருக்கும்படி உத்தரவு செய்து, பிறகு அவர்களுக்கு வஸ்திராபரண பூஷணங்கள், குதிரைகள் இவைகளைக் கொடுத்துச் சந்தோஷ முண்டாக்கினர். அப்போது அஞ்சலியஸ்தர்களாகத் தம் முன்னிலையில் நிற்கும் அரசர்களைப் பார்த்து "அரசர்களே!யாகக் குதிரைபுறப்படப் போகிறது. அதைப் பார்த்தவுடன் நீங்கள் யாவரும் சைன்னியங்களுடனும் பட்டணத்தாருடனும் வரவேண்டிய" தெனக் கட்டளையிட, அது கேட்ட அரசர்கள் அக்கட்டளையை யங்கீகரித்துக்கொண்டு அவரிடம் விடைபெற்றுத் தத்தம் சைன்னியங்களுடன் தங்கள் தங்கள் பட்டணத்துக்குச் சென்றார்கள். பிறகு இராமபிரான் சுக்ரீவாதி வானரசிரேஷ்டர்களைப் பார்த்து யாம் செய்யும் அசுவமேத யாகம் முடிந்த பிறகு பரிவாரங்களுடன் உங்கள் தேசத்துக்கு உங்களை அனுப்பிக்கொடுக்கிறே னென்று சொல்லி, அவர்களுக்குத் தமது அரண்மனைக்குப் பக்கத்தில் வீடுகளை ஏற்படுத்தி வசிக்கச் செய்தார். பிறகு இன்று முதல் நமது பட்டணத்தில் வசிப்பவர்களும் அதிதிகளும் நாம் இந்த பூமியில் சீதையுடனிருந்து இராஜ்ய பரிபாலனம் நடத்தும் வரையில் தனியே சமையல் செய்யக் கூடாது. சுயம்பாக விருத மனுஷ்டிந்து வரும் பிராமணோத்தமர்கள் மட்டில், எனது நிர்ப்பந்தமின்றி அவரவர் கிருகத்தில் சுகமாகப் பாகம் செய்து வரட்டும்:—என்று பறையறைவிக்கும்படி ஆக்ஞாபித்துச் சீதையுடன் சுகமாக விருந்தார். அயோத்தியா பட்டணத்தில் வீடுகள் தோறும் வேத கோஷமும் மங்கள வாத்தியங்களும் மகோத்ஸவங்களும் நடந்து வந்தன. இவ்விதம் அயோத்தியா பட்டணம் என்றுமடையாத மகிழ்ச்சியை யடைந்திருந்தது.

ஏ சிஷ்ய! இவ்வாறு இராமபிரானுடைய யாத்திரா காண்டத்தை உனக்குக் கூறினேன். இதைப் பக்தியுடன் கேட்கும் மனிதர்கள் இந்த யாத்திரையின் பலனைப் பெறுவார்கள். மேலும், யாத்திரை திரவிய மீட்டல், உத்தியோகஞ் செய்தல் முதலிய இவைகளை விரும்புகிறவர்கள் இந்த யாத்திரை காண்டத்தைப் படித்தால் அவர்களிச்சித்த பலனைச் சுகமாகப் பெறுவார்கள். ஒருவன் பிர்மஹத்தியாதிமாகர் பாபங்களை ஒருதரம் செய்வானேயாகில், அவன் இந்த யாத்திராகாண்டத்தைப் படித்தால் பாபங்களொழிந்து பரிசுத்தனுவான்; இதைக் கேட்பவர் பூலோகத்திலுள்ள சர்வ தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்த பலனைப் பெறுவார்கள் இந்த யாத்திரா காண்டத்தைக் கேட்பதால் தனத்தை விரும்புகிறவர்கள் தனத்தையும் காமங்களை விரும்புகிறவர்கள் காமங்களையும் அடைவார்கள். பாபம் செய்தவன் பாபத்தினின்று உடனே விடுபடுவன். ஒருவன் காலையிலெழுந்து விதிப்படி சௌசாதிகளைச் செய்துகொண்டு ஆர்ஹியங்களை முடித்த பிறகு தீர்த்தங்கள் யாவற்றுக்கும் சிரேஷ்டமாகிய இந்த யாத்திரா காண்டத்தைப் படிப்பானேயாகில், ஸ்ரீராமபிரான் சந்துஷ்டராகி, அவனது கோரிக்கைகள் யாவற்றையும் பூர்த்தி செய்வதுமன்றி, சமஸ்த தீர்த்த ஸ்நான பாலனையும் கொடுப்பார். இப்பிறப்பிலும் முற்பிறப்பிலும் செய்த பாபங்கள் முழுதும் யாத்திரா காண்டத்தைக் கேட்பதால் ஒழியும். இதில் ஐயமில்லை.

இராமபிரான் உத்தர யாத்திரை செய்து

அயோத்தியா நகரம் பிரவேசித்ததைக் கூறும்

9-வது சருக்கம்

முற்றிற்று.

# யாககாண்டம்.

## 1 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமபிரான் ஒருதருணம் சபையில் வீற்றிருந்து தமது குரு வசிஷ்டரைப்பார்த்து, கும்போதர முனிவருடைய சொற்படி தீர்த்தயாத்திரையைச் செய்துமுடித்தேன். இனியவர் கூறிய அசுவ மேதயாகத்தை யான் செய்யவேண்டும். யாகத்துக்கு வேண்டிய சாமக்கிரிகளைச் சேகரிக்கும்படி இலட்சுமணனுக்குக் கட்டளை யிடுங்கள். செவி, பாதம், வால் இந்த அவயவங்கள் கறுத்த ஒரு சிரேஷ்டமான குதிரையை, திவ்யவஸ்திர முதலியவைகளால் அலங்கரித்து சுபலக்நத்தில், சுபமுகூர்த்தத்தில், பூப்பிரதக்ஷிணத்திற்காக விடவேண்டும். சத்ருக்னன் பதினாயிரக்கணக்கான சேனைகள் சூழச் சுமந்திரனுடன் அதன் பிறகே செல்லவேண்டுமென்றார்.

இதைக் கேட்டதும் வசிஷ்டர் சோதிடர்களை வைத்துக் கொண்டு சுபமானதும் க்ஷேமாபிவிருத்தியைத் தருவதுமான ஒரு முகூர்த்தத்தை நிச்சயஞ்செய்து, இராமபிரான் சந்நிதியில் இலட்சுமணரைப் பார்த்து, "ஏ சௌமித்ரே! இன்றைக்கு ஏழாவது தினத்தில் ஸ்ரீராமபிரான் அசுவமேதயாகஞ் செய்யத் தொடங்குகிறார். இராம தீர்த்தக் கரையில் யக்ஞ பூமி ஏற்படவேண்டும்; ஆதலால் வேதியர்களை வைத்துக்கொண்டு அவ்விடத்தை சொர்ணக் கலப்பையால் உழுது சீக்கிரம் ஒழுங்குபடுத்தவேண்டும். அயோத்தியா பட்டணத்தைச் சுற்றிலும் இருபது மையில் விஸ்தீரணத்துக்கு கல் முள் மேடு பள்ள மில்லாமல் ஒழுங்குபடுத்தி சந்தனக் குழம்புகளால் மெழுகி, அவ்விடமுழுதும் இடைவிடாமல் பந்தல் போட்டு பெரிய மண்டபமாக்க வேண்டியது. அப்பந்தலில், நாகக்கிளைகள், மாங்கிளைகள், அதன் தளிர்கள், பூக்கள் இவைகளால் தோரணங்கள் விசித்திரமாகக் கட்டிச் சுற்றிலும் வாழைமரங்களை நாட்டவேண்டும்; இன்னும் பூமாலைகள் பலவிதமான பழக்குலைகள் இவைகளையும் கட்டி அலங்கரிக்கவேண்டும். ஆயிரக்கணக்கான வேதிகைகளைச் சுண்ணாம்பு, செங்கல்களைக்கொ

ண்டு கட்டவேண்டும். தவிர என்முள்பாக ஒரு அழகான மண் குண்டம் ஏற்படுத்தவேண்டும். அக்குண்டத்தின் மேல் கருங் காலிமரத்தால் மனோரம்மியமான கோமுகம் ஒன்று ஏற்படுத்த வேண்டும். வெள்ளை, கறுப்பு, நீலம், மஞ்சள், இந்த நிறமுள்ள கோலக்கற்களைப் பொடி செய்து, அவைகளால் சுவஸ்திகம், கம லம், அஷ்டதளம், சங்கம், சக்ரம், கதை, பத்மம் பூக்கள் முத லிய பலவிதக் கோலங்களை ஆயிரக்கணக்காக வரையும்படி செய்து யக்ஞ பூமி முழுமையும் அலங்கரிக்கவேண்டும். பின்னும் 24 யக்ஞ ஸ்தம்பங்களை சொர்ணத்தால் மிக உன்னதமாகச் செய்து முத்து மாலைகளா லலங்கரித்து, அங்கங்கே நாட்டவேண்டும். இதுவன்றி சர்வதோ பத்ரம் என்னும் ஒரு குண்டமுண்டாக்கி, அதன் நடுவில், அசுவதேவதா சொரூபத்தை வரைந்து அக்குண்டத்தின் மேல் பல வர்ணப்பொடிகளால் விசித்ரமாகக் கோலமிட்டு அலங்கரிக்க வேண்டும். யக்ஞத்துக்காக வேண்டிய பாத்திரங்கள் முழுமையும் செய்து எனக்குக் காண்பிக்கவேண்டும். வருணனுடைய யாகத் தில் நடந்தது போல் உபகரணங்களைச் சொர்ணத்தாலேயே செய்யவேண்டியது. முனிவர்கள் உட்காருவதற்கும் நித்திரை செய்வதற்கும் ஆயிரக்கணக்கான ஆசனங்க ளமைக்க வேண்டும். கூடாரங்களைப்பதினாயிரக்கணக்காக ஏற்படுத்தவேண்டும். புற்களா லும் இலைகளாலும் துணிகளாலும் கிருகங்களை ஏற்படுத்தவேண் டும். பாகசாலைகள், போஜனசாலைகள், ரிஷிசாலைகள், ஸ்திரீ சாலைகள் இவைகளைத் தக்கவாறு ஏற்படுத்தவேண்டும். யக்ஞோ பகரணங்களை வைப்பதற்காக யக்ஞசாலையினருகே சுந்தரமான ஒரு சாலை ஏற்படுத்தவேண்டும். அரசர்கள் சுகமாகக் கூடியிருக் கும்படியான சபைகள் ஏற்படுத்தி அவைகளின் மேல் வஸ்திரங் கட்டி அலங்காரம் பண்ணவேண்டும். அவர்கள் உட்காருவதற் காக, விஸ்தாரமான கம்பளங்களைத் திண்டு தலையணைகளுடன் விரிக்கவேண்டும். அத்திண்டு தலையணைகள் பட்சிகளின் அடி இறகுகளாலும் பஞ்சுகளாலும் செய்யப்பட்டு மெதுவாகவிருக்க வேண்டும். ஏ இலட்சுமணா! விசித்ரமும் விலையுயர்ந்ததுமான பெரிய பெரிய திண்டுகளைச் சபையில் சித்தப்படுத்தவேண்டும். தாக சமனத்துக்காக, நன்றாய்ப் பழுத்த பழங்கள், சுகந்த திரவி

யங்கள், இனிப்பும் வாசனையுமுள்ள மதுவர்க்கங்கள், போஜை வஸ்துக்கள் இவைகளை அநேக பாத்திரங்களில் சித்தப்படுத்த வேண்டியது. சுகந்த திராவகங்கள் கலந்த சந்தனத்தை அநேகமான கண்ணாடிப் பாத்திரங்களில் நிறைத்து வைக்கவேண்டும். சகல சாமக்கிரிகளடங்கிய தாம்பூல பாத்திரங்களைச் சேகரித்து வைக்கவேண்டும். பலவிதமான கண்ணாடிகள், அரசர்கள் விளையாடுவதற்குரிய கருவிகள் இவைகளை விசித்திரமாகச் சேகரித்து வைக்கவேண்டும். மண்பாத்திரங்களில் அநேகவிதமான புஷ்பச்செடிகளும் அதற்கு வேண்டிய ஜலயந்திரங்களையும் ஏற்படுத்தவேண்டியது. சொர்ணம், முத்து, பவளம், வர்ணத்துணிகள் இவைகளைக்கொண்டு அழகிய பஞ்சரங்களைச் செய்து அவைகளில், இனிமையான குரலுடைய விசித்ரமான அனேக பக்ஷிகளை அடைத்து யாகப் பந்தல்களில் எங்கும் கட்டித் தொங்கவிட்டு அப்பறவைகளுக்குக்காலந்தவறாமல் ஆகாராதிகளைக்கொடுத்துப் பாதுகாத்து வரச் செய்யவேண்டும். அதில் தூபங்கள் ஏற்படுத்தி எங்கும் வாசனை வீசும்படி செய்யவேண்டியது. பாடகர்கள் ஆங்காங்கு நின்று பாடவேண்டியது. அப்ஸர ஸ்திரீகள் கீர்த்தனஞ் செய்யவேண்டும். பலவிதமான வாத்தியங்கள் சதாகாலமும் முழங்கி வரவேண்டும். பின்னும் பூஜைக்கு வேண்டிய உபகரணங்கள் நிறைந்த பாத்திரங்கள் தனித்தனியாகச் சபையில் வைத்திருக்கவேண்டும். முனிவர்களின் சபையில் தர்ப்பங்கள் சமித்துக்கள், தண்டகமண்டலங்கள், கௌபீனங்கள், வல்கலங்கள், மான்தோல்கள், கிருஷ்ணாஜினங்கள், பூஜா திரவியங்கள் ஹவ்யங்கள், ஜல கும்பங்கள், சௌசத்திற்காக சுத்தமான மண்கள், பல் குச்சிகள், பாதுகைகள், முகசுத்திக்காகும் மலைமண்கள் இவைகளனைத்தும் சித்தமாயிருக்கவேண்டும். இவ்விதமே ஸ்திரீகள் சபையிலும் சௌபாக்கியத் திரவியங்கள் (குங்குமம்) சுகந்தங்கள் இவைகள் நிறைக்கப்பட்ட பூஜா பாத்திரங்கள், விசித்திரமான வாயனங்கள் இவைகளையும் சித்தப்படுத்த வேண்டும். சவரிகள் கண்மைச் சிமிழ்கள் பிரகாசமான பூஷணப் பெட்டிகள் மஞ்சள் முதலிய சோபனத் திரவியங்கள், ரவிக்கைகள், ஆடைகள், விசிறிகள் இவைகள் யாவற்றையுஞ் சேகரித்து வைக்க

வேண்டும். சிநேகிதர்கள் யாவருக்கும் பத்திரிகைகள் எழுதி இராம பிரான் முத்திரையுடன் அனுப்பவேண்டும். ஜனக மகாராஜன் கேகய மகாராஜன் கோஸல மகாராஜன் சுமித்திரையின் தந்தை இவர்களுக்கும் மகா வேகமுள்ள தூதர்களை இன்றே அனுப்பவேண்டும்.

மேற்கூறிய அங்க அடையாளமுள்ள அசுவமேதக் குதிரையை விலைபெற்ற ஆபரணங்களாலும் வஸ்திரங்களாலும் சாமரங்களாலும் அலங்கரித்து, திவ்ய வீராஸனமமைத்து, சொர்ணச் சங்கிலிகள் கட்டி வேணி பூஷணங்களையும் பூட்ட வேண்டும். ஒரு பெரிய விசாலமான தங்கப்பட்டத்தில்,

कोसलेन्द्रस्य रामस्य यज्ञार्थं परमो हयः ।
जयपत्रान्वितो मुक्तः कर्तुं सर्वां प्रदक्षिणाम् ॥
यस्यास्ति सारं तेनाश्वो बन्धनीयोऽयमुत्तमः ।
नो चेत्कोशांश्च निजान् गृहीत्वा [illegible] सैन्यैस्सह
[illegible] [illegible] तथा जानपदैस्सह ।
आगन्तव्यं नृपतिभिः यज्ञाश्वानुवर्तिभिः ॥
यज्ञसंरक्षकान् [illegible] [illegible] [illegible] ।

இக்குதிரையானது கோஸலேந்திரராகிய ஸ்ரீராமருடையது, அஸ்வமேதயாக நிமித்தம் பூப் பிரதக்ஷிணம் செய்வதற்காக அனுப்பப்பட்டிருக்கிறது, இதை அரசர்கள் யாவரும் அறியத்தக்கது. பலமுள்ளவன் இந்தக் குதிரையைப் பிடித்துக் கட்டலாம். இல்லாவிடில் அரசர்கள் யாவரும் அவரவர் பொக்கிஷங்களை எடுத்துக்கொண்டு தங்கள் தங்கள் சைனியங்களுடனும் குடும்பங்களுடனும், பட்டணத்தாருடனும், தேசத்தாருடனும் புறப்பட்டு யாக அசுவத்துடன் கூடவே வந்து நடுவில் யுத்தத்துக்கு வரும் கர்விஷ்டர்களை ஜயித்து யாக பூமிக்கு வரவேண்டியது என்று— இவ்விதம் ஸ்பஷ்டமாக எழுதி அப்பட்டத்தைச் சுற்றிலும் முத்து மாலைகளா லலங்கரித்து, குதிரையின் நெற்றியிற் கட்டித்

தலையலங்காரங்களையுஞ் செய்து மண்டபத்தில் சித்தமாகக்கொண்டு வந்து நிறுத்தவேண்டும். அதனருகில் சத்ருக்னன் தனது சைன்னியங்கள் சூழ இரதமேறி சுமந்திரனுடன் இவ்வசுவத்தைப் பாதுகாக்கச் சித்தமாயிருக்க வேண்டும். சத்ருக்னனைக் கொண்டு ஆயிரக்கணக்கான நானுவித புண்ணிய தீர்த்த கும்பங்களையும், பல தேச மண்களையும் வரவழைக்க வேண்டும். அயோத்தியா பட்டணத்தைப் பதகை தோரணம் முதலியவைகளால் அலங்கரிக்க வேண்டும். தேவாலயங்களிலும் அரச உப்பரிக்கைகளிலும் சுண்ணும்பு பூசிப் பிரகாசப்படுத்த வேண்டும். தேவாலயங்களுக்குள் மனோகரமான சித்ரசாலைகள் ஏற்படுத்தவேண்டும். தவிர அங்கு எப்பொழுதும் பிரகாசம் குன்ருதிருக்கும் இரத்ன தீபங்களையும் வைக்கவேண்டும். தேவாலயங்கள் முழுவதும் பூஜோபகரணங்கள் சேகரித்து வைக்கவேண்டும். அங்குச் சகல வாத்தியங்களும் முழங்கும்படி உத்தரவு செய்யவேண்டும். இராஜமார்க்கங்களைப் பரிசோதித்து அவைகளில் சந்தனக் குழம்புகளைத் தெளித்து குளிர்ச்சியுண்டாக்க வேண்டும். மேன்மாடிகளில் எங்கும் பலவித சித்ரங்கள் எழுதி முத்து மாலைகள், பவளமாலைகள், வைடூரிய மாலைகள், காஷ்மீர ஸ்படிக மாலைகள், பலவித புஷ்ப மாலைகள் இவைகளைக் கட்டி அழகு செய்ய வேணடும். இவ்விதமே சாளர வாயில்களும் அலங்கரித்திருக்கவேண்டும்—இவ்விதம் யான் சொன்னபடி முழுவதையும் சந்தேகங்கொள்ளாமல் செய்து முடியென்று கட்டளை யிட்டார்.

இப்படிப் பரம குருவாகிய வசிஷ்டர் கூறியதைக் கேட்ட இலட்சுமணர் நல்லது அப்படியே செய்கிறேன் என்று அங்கீகரித்துக்கொண்டு, அவர் சொன்னதற்கு நூறு மடங்கு அதிகமாகச் செய்தார்.

அசுவமேதயாக உபகரணங்களைக் குறிக்கும்

முதலாவது சருக்கம்.

முற்றிற்று.

## 2-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஏ விஷ்ணுதாஸ! பிறகு ஸ்ரீராமபிரான் ஏழாவது தினமாகிய முகூர்த்த தினத்தில் சீதையுடன் ஆசனத்திலுட்கார்ந்து வெண்ணெய்ப்பூச்சு முதலியவைகளோடு மங்கள ஸ்நானஞ் செய்து, கண்ணில் மை தீட்டிக்கொண்டு, தூரியவாத்தியம் முழங்க வேதியர்கள் விசேஷமாக வேதகோஷஞ் செய்ய, பட்டணத்து ஸ்திரீகள் இனிமையாகப்பாடி, ஜயசப்தம் செய்து வரப் புறப்பட்டு, மண்டபஞ் சென்று சித்ராஸனத்தில் வீற்றிருந்தார்.

இச்சமயம் தமது குருவுக்கும் அவரது பத்னி அருந்ததியம்மாளுக்கும் திவ்யமான வெண்பட்டுகளை அளித்து, பிறகு பட்டணத்தார், அவர்களுடைய மனைவிமார்கள் சுமங்கலிகளாகிய அவர்களுடைய தாய்மார்கள், வேதியர்கள், மாமிமார்கள் மித்திரர்கள் இவர்களுக்கு திவ்ய வஸ்திரங்களை யளித்து, பிறகு ஜனகர், லட்சுமணர் முதலிய சகோதரர்கள் அவர்களுடைய பத்தினிகள் இவர்களுக்கும் நூதன வஸ்திரங்களளித்து, பின் மந்திரிகள், வீரர்கள் தாஸதாஸிகள், நடர்கள், நாடகர்கள், வந்திமாகதர்கள், வார ஸ்திரீகள் இவர்களுக்கும் பிறகு சண்டாளன் வரையில் யாவருக்கும் நூதன வஸ்திரங்களை யளித்தார். சொர்ணச்சரிகையால் செய்து, முத்து மாணிக்கங்கள் கோர்த்து, இரத்நம் காஷ்மீர நீலம் இவைகளால் நடுவில் அங்கங்கே சித்ரமெழுதி முத்து பவளம் கோமேதகம் முதலியவைகளால் நான்கு பக்கங்களிலும் கரை கட்டிக் கண்ணாடியைப்போல் பிரதிபிம்பந் தோன்றத் தக்கதாயும் மின்னல் போல் பிரகாசம் வீசத்தக்கதுமான பட்டு வஸ்திரத்தைச் சீதாபிராட்டிக்குக் கொடுத்தார். பிறகு இராமச் சந்திரர் உத்தமமான சொர்ணச்சரிகையால் கரைகளமைத்து, கொடி, மலர் இவைகள் போன்ற சித்ரம் வரையப்பட்ட வெண்பட்டைத் தாமுடுத்துக்கொண்டு அவ்விதமான உத்தரீயத்தையும் அணிந்து கொண்டார். பின் எல்லா அவயவங்களிலும் அதற்குரிய ஆபரணங்களை யணிந்துகொண்டு கௌஸ்துப, சிந்தாமணிகளையும்

கேயூரம் குண்டலம் முத்தாரம் கடகம் இவைகளையும் அணிந்துகொண்டு விளங்கினர். பிறகு ஆசாரிய சிரேஷ்டராகிய வசிஷ்ட முனிவர் இவ்வாறு திவ்யாலங்கார பூஷிதாராக விளங்கும் இராமபிரானை முத்து மயமான சொஸ்திகா சனத்தின் மேல் வீற்றிருக்கச்செய்து, தமது சிஷ்யவர்க்கத்தாரில் பலர்களையனுப்பி, சீதாபிராட்டியை வரவழைத்து ஸ்ரீ ராமபிரானது இடது பாகத்திலுட்கார வைத்துத் தாம் பல முனிவர்கள் சூழ அவர் பக்கமிருந்து, ஸ்ரீ ராமபிரானைக்கொண்டு விக்நேசுவர பூஜை செய்வித்தார். பிறகு புண்ணியாகம் முதலிய மூன்று செய்கைகளையுஞ் செய்வித்து ஸீதாராமதம்பதிக்குத் தீக்ஷைசெய்வித்தார். துவஜாரோப விதானப்படி துவஜங்களை நாட்டி, ஸ்ரீராமபிரானைக் கொண்டு சகலகர்ம விக்ஞாதாவாகிய வசிஷ்ட முனிவர்தம்மை "அத்வர்யூ" வாகவும், சதுர்முகபிர்மாவை "பிர்மாவாகவும்" விசுவாமித்திரரை "ஹோதாவாகவும்" ஜனகராஜருடைய குருவாகிய சதாநந்தரை "உத்காதா" வாகவும் தர்மராஜரை "சமிதா" வாகவும் கசியபர் முதலியோரை மிகுதியான இன்னும் பதினேரு ரித்விக்குகளாகவும் வரித்தார். இவ்விதம் இந்த அசுவமேதயாகத்துப் பதினாறு முனிசிரேஷ்டர்களை பதினாறு ரித்விக்குகளாக வரிக்கும்படி செய்தார். இன்னும் மற்ற கர்மங்களைச் செய்ய நூற்றுக் கணக்கான முனிவர்களைத் தனித்தனியே வரிக்கும்படிசெய்தார். பிறகு குண்டலத்தில் அக்னி ஸ்தாபனஞ் செய்து, அதனருகே விஸ்தாரமாக யக்ஞ பாத்திரங்களை வைக்கச்செய்தார். பிறகு அசுவமேதக் குதிரைக்கு விதிப்படி பூஜை செய்வித்து, பூலோகத்தில் ஸவ்ய பிரதக்ஷிணம் செய்து வர அனுப்பினர். அதனைப் பின்தொடர்ந்து காத்துவர, சத்ருக்னனைச் சுமந்திரனுடனும் சேனைகளுடனும் இரதாரோகணஞ் செய்வித்து அனுப்பினர். பிறகு வசிஷ்ட முனிவரும் வேதியர்களுடன் சுகமாக விருந்தார். இராமபிரானும் சரயூ நதிக்கரையில் முனிகணங்கள் நிறைந்த யக்ஞகுண்டத்தினருகில் கிருஷ்ணாஜினம் தரித்துக் குசத்தைக் கரத்தில்வைத்துக்கொண்டு அமரிக்கையாயிருந்து புராணபடனத்தைச் செய்வித்து அதன் கதைகளைச் சீதையுடன் கேட்டுக்கொண்டு வசிஷ்டாதி முனிவர்கள் ஸந்நிதியில் கோடிய சூரியப்பிரகாசம் பொருந்தியவராய் விளங்கினர்.

இராமபிரான் தீக்ஷை பெற்றிருக்கும் போது சகோதரர்கள் வஸ்திரமுடுத்துக் கொண்டு புஷ்கரமாலைமுதலிய அலங்காரஞ் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களும் அவர்கள் மனைவிகளும் ஸ்நானஞ் செய்து உத்தமமான ஆடைதரித்து, வாசனைச்சந்தனங்கள் பூசி மங்களவஸ்துக்களைக் கையில் வைத்துக்கொண்டு கழுத்தில் தங்கக்காசு மாலைகள் பிரகாசிக்கதீக்ஷாசாலைக்கு வந்தமர்ந்தார்கள். அத்தருணம் சகல மங்கள வாத்தியங்களும் முழங்கின. வாரநாரிகள் நர்த்தனஞ் செய்தனர்.

இவ்விதம் ஸ்ரீராமபிரான் அசுவமேத யாகஞ் செய்ய ஆரம்பித்திருப்பதை அவ்வப்போது கேட்டுவந்த முனி சிரேஷ்டர்களிற் சிலர் யாகசாலையை யடைந்தார்கள். அவர்கள் யாவரெனில், கசியபர், அத்திரி, பாரத்துவாஜர், விசுவாமித்திரர், கௌதமர், மார்கண்டேயர், மிருகண்டர், சியவனர், முத்கலர், அசிதர், ஜாமதக்னியர், தேவலர், வியாஸர், நாராயணர், கிரது, விபண்டகர், நாரதர், தும்புரு, காலவர், சிவதாஸர், பானுதாஸர், ஹரிதாஸர், மகாதபஸ், சிவவர்மா, ருத்ரவர்மா, ஏகசிருங்கர், சதுசிருங்கர், திரிசிருங்கர் திலபாண்டர், பிருகு, பார்க்கவர், வாக்பதி, சௌம்மியர், கண்வர், ஏகபாதர், திரிபாதர், ஊர்த்வபாகு, ஊர்த்வபாதர், ஊர்த்வ நேத்திபர், ஊர்த்துவமுகர், திரிசிரஸ், விருத்த கௌதமர், பர்ணாதர், நிசாகார், ருசியசிருங்கர், மதங்கர், ஜாபாலி, கும்பசம்பவர், ததீசி, சௌனகர், சூதர், சுதீக்ஷ்ணர், ரோமசர், வான்மீகி, துர்வாசஸ், வேதநிதி இவர்களும் இவர்களுடைய பத்தினிகள், சிஷ்யர்கள் இன்னும் சிலமுனிவர்களுமேயாம். இம்முனிவர்களிற் சிலர்பர்ணாசிகள் (சருகைப்புசிப்பவர்கள்) சிலர் வாதாசிகள் (வாயுபட்சணஞ்செய்பவர்கள்) சிலர் குசாக்ர ஜலபாயிகள் (குசத்தின் நுனியிலிருந்து விழும் ஜலத்தைக் குடிப்பவர்கள்) சிலர் அனசனர்கள் (அன்னம் புசியாதவர்கள்) சிலர் பிக்ஷாசனர்கள் (பிக்ஷையெடுத்துண்பவர்கள்) இன்னும் சிலர் பரதத்தாசனர்கள் (பிறர்கொடுக்கும் அன்னத்தையுண்பவர்கள்) (இவர்களுக்கு அபாக்ஞாவிரர்கள் என்று பெயர் கூறுவதுண்டு. பசிக்காகப் பிறரை யாசியாதவர்கள் சிலர், தியக்தசம்பாஷணர்கள் (வாய்ப்பேசாதவர்கள்) சிலர். வல்கலதாரிகள்

மரவுரி தரிப்பவர்கள் சிலர். காஷாயதாரிகள் சிலர். கிருஷ்ணாஜின தாரிகள் சிலர். ஆகாசவஸ்திரதாரிகள் (நிர்வாணர்கள்)சிலர். விருக்ஷ பல்லவதாரிகள் (மரங்களிலுள்ள பெரிய இலைகளை தரித்துக் கொள்ளுகிறவர்கள்) சிலர். பஞ்சாக்னிஸாதகர்கள் (காருகபத்தியம் ஆஹகவநீயம் தக்ஷிணாக்நி ஸப்யம் அவஸத்தியம் முதலிய ஐந்து அக்நி உபாசகர்கள்) சிலர். ஹோமதூம பானவிரதிகள் (ஹோமப் புகையை உண்பவர்கள்) (சிலர். த்யக்தேஷணர் (மண் பொன் பொருள் இவைகளின் பற்றுதலைஒழித்தவர்கள்)சிலர். இப்படிப்பட்டவர்களன்றிப் பலவிதமான வனம் தோட்டம் மலை துர்க்கம் யாவருஞ் சொல்லக்கூடாத அரண், ஆசிரமம் இவைகளில் வசிப்பவர்களும் தங்கள் பத்தினிகளுடனும் சிஷ்யர்களுடனும் வந்து சேர்ந்தார்கள். இவ்விதம் ஸ்ரீராமபிரானுடைய அசுவமேதயாக வைபத்தைப் பார்க்க ஆவல் கொண்டு பத்துத்திசைகளிருந்தும் நாள் தோறும் கோடிக்கணக்கான முனிசிரேஷ்டர்கள் யக்ஞமண்டபத்துக்கு வந்து கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீராமபிரான் எழுந்திருந்து அவர்களுக்கு ஆசனமளித்து மதுவர்க்கம் முதலியவைகளால் பக்தியுடன் பூஜித்து சந்தோஷப் படுத்தினர். அத்தருணத்தில் ஸ்ரீராமபிரான் யக்ஞ மண்டபத்துக்குக் காமதேனுவை வரவழைத்து அதை விதிப்படி வஸ்திராபரணம் முதலியவைகளால் பூஜித்து கொம்புகளுக்குத் தங்கக் கொப்பிகள் கட்டி அவைகளில் சிறு மணிகளைத் தொங்கவிட்டு பாதங்களுக்குத் தங்கத்தண்டைகள் புனைந்து அதை வணங்கி "ஏ, சாகர சம்பூதே! ஏதேனுவே! ஜகதம்பிகையே! யான் ஆரம்பித்திருக்கும் அசுவமேதயாகத்திற்கு வந்திருக்கும் முனிவர்கள் வேதியர்கள் முதலிய பல ஜனங்களுக்கும் திவ்யான்னபானங்களை அளித்து அவர்களைத் திருப்தி செய்துவைப்பது உன் கடமை" யெனப் பிரார்த்தித்தார். பிறகு யாகசாலைக்குக் கொண்டுபோய் அங்கே பட்டுமயமான ஒரு மெத்தையைவிரித்து அதனருகிற்கட்டினர். இப்பொழுது காமதேனுவானது சந்தோஷமடைந்து ஜானகிக்குப் பக்தியுடன் ஷட்ரஸோபேதமான போஜனத்தை விரும்பிய போதெல்லாம் அளித்து வந்தது. இந்த அசுவமேத யாகத்தின்

பாகசாலையில் அக்கிகாரியமே கிடையாது. முனிவராதியர்கள் யாவரும் அவரவர்கள் விரும்பியபடி விரும்பிய போதெல்லாம் போஜனம் செய்து திருப்தி யடைந்தார்கள். இராமபிரான் சிந்திக்குமளைத்தையும் கௌஸ்துபம், சிந்தாமணி இவ்விரண்டும் அவ்வப்பொழுது அளித்து வந்தன. சீதாபிராட்டி சிந்திப்பவைகள் திரிலோகங்களில் கிடைப்பதற் கரிதாயினும் அவ்வப்பொழுது காமதேனுவானது கொடுத்து வந்தது.

இவ்வாறு யாதொரு குறைவு மின்றி, காமதேனுகொடுக்கும் பற்பல விதமான திவ்யான்னபாயஸம் முதலியவைகளையும் லோகோத்ரமான பக்ஷியவர்க்கங்களையும் ஷட்ரஸோபேதமாக, யாக மண்டபத்தில் பந்தி பந்தியாக வீற்றிருக்கும் வேதியர்களுக்குச் சீதையும் ரிஷி பத்தினிகளும் சந்தோஷத்துடன் எடுத்து திருப்தியாகப் பரிமாறினார்கள். இப்படி அம்மாதர்கள் பரிமாறும் காலத்தில் அவர்கள் கரங்களில் அணிந்திருக்கும் கங்கணங்களின் சப்தங்கள் செவிக்கினிமையாகக் கேட்டன. பிறகு ஸ்ரீராமபிரான் லட்சுமணரை யழைத்து "ஏ ஸௌமித்ரே! வானபிரஸ்தர்கள் சன்னியாசிகள், பிரமசாரிகள், கிருகஸ்தர்கள் இவர்களில் யாவர் நமது யாகமண்டபத்துக்குள் வந்தபோதிலும் அவர்களை ஒருவரும் தடுக்கக்கூடாது. சிறிதும் அவர்கள் பேரில் கோபங்கொள்ளக் கூடாது. அவர்களை உள்ளே விடுவதற்காக எனது ஆக்ஞையையும் நீங்கள் கவனிக்க வேண்டியதில்லை. இவைகளனைத்தையும் தலைவாசற்காவற்காரர்களை வரவழைத்துக்கூறு. அவ்விதம் செய்துவரக் கட்டளையிடு" என்றார். இராமபிரானுடைய இப்படிப்பட்ட கட்டளையைக் கேட்ட இலட்சுமணர் உடனே காவலாளரை யழைத்து "ஏ சுமித்ராநந்தன! பிரமசாரிகள், கிருகஸ்தர்கள், வானப்பிரஸ்தர்கள், யதிகள் இவர்களைச் சேர்ந்தவர்கள், சிஷ்யர்கள், குழந்தைகள், பத்தினிகள், பட்டணத்தார், இவர்கள் பந்துக்கள், தாஸிதாஸர்கள் இவர்களுக்குள் யாரார் எதெதை விரும்புகிறார்களோ அவைகளை எனது ஆக்ஞையை எதிர்பாராமலும் கொடுத்துவர வேண்டும். சண்டாள ஜாதி பரியந்தம்

எல்லாருடைய கோரிக்கைகளையும் நிறைவேற்றி அவர்களைச் சந்தோஷப்படுத்தவேண்டும். எவருடையகோரிக்கையையும் வீணாக்குவது கூடாது. தவிர, அயோத்தி, காமதேநு, ஜானகி, கௌஸ்துப மணி, சிந்தாமணி புஷ்பகம், இராஜ்யம், பொக்கிஷம் இவைகளில் எவன் எதைக் கேட்டபோதிலும் உடனே கொடுத்துவிட வேண்டும். அப்படிச் செய்யவில்லை யென்பதை நான்கேட்பேனே யாயின் உன்பேரில் எனக்குக் கோபம் ஏற்படும். ஆகையால், என்னிடம் பயம் வைத்தே சிறிதும் யோசியாமல், கேட்டதை அளித்து விடு. கேட்டதை நீ கொடுக்க மறுப்பாயே யாயின் என்தலையை வெட்டின தோஷம் உனக்குச் சம்பவிக்கும். நான் கூறியதை நீ சிறிதும் மறவாமலிருந்து வரவேண்டும்" என்றார். இவ்வாறு ஸ்ரீ ராமபிரான் செய்த ஆக்ஞையை இலட்சுமணர் அங்கீகரித்துக் கொண்டு, அவரிஷ்டப்படியே யாவற்றையும் நடத்திவந்தார்

இராமபிரான் இலட்சுமணருக்குச்

செய்த ஆக்ஞையைக் விவரித்து கூறும்.

இரண்டாவது சருக்கம்.

முற்றிற்று.

## 3-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீ ராமபிரான் பூப்பிரதக்ஷிணத்துக்காக அனுப்பிய சியாமகர்ணம் என்னும் அசுவமேதக் குதிரையானது மகாதேசமாகிய பிர்ம்மாவர்த்தமிருக்கும் திசையை நோக்கிச் சொல்லாமல் கிழக்கு நோக்கிச்சென்று கங்கைக்கரையை யடைந்தது. சத்ருக்னனும் குதிரையைப் பின்றொடர்ந்து சென்று கங்கையை அடைந்தான். இங்கு இத்தருணம் ஸ்ரீ ராமபிரான் தமது பிரபாவத்தை வெளியிடு நிமித்தம் சத்ருக்னன் முன்பாக ஒரு வேடிக்கைசெய்தார். அதாவது, அத்தருணம் மழைகால மில்லையாயினும், ஓடமேறியுந் தாண்டிச்செல்லமுடியாத பெரும்வெள்ளமானது கங்கையிற்பெருகிற்று. சத்ருக்னன் தனது ப்ரயாணத்துக்கு இடையூறாகத் தோன்றியிருக்கும் பிரவாகத்தையும் காலம் அதிகரிப்பதையும் பார்த்து, "போஜனத்தில் முதற்கவளத்திலேயே இடையூறு நேரிட்டிருக்கிறது, ஆயினும் நமக்குச் சம்பவிக்கும் இடையூறு யாவும் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பிரதாபமகிமையால், விலகி நமது ப்ரயாணம்செவ்வனே நடைபெறும்" என்று தன்மனதி லுறுதிகொண்டு கங்கைக்கரையில் இரதத்திலிருந்த வாறே கங்காதேவியை விதிப்படி நன்ருய்ப் பூஜித்து, அங்கிருந்த தேவமுனி கணங்களின் செவியிற்பட "ஏ கங்காதேவி! மகா புண்ணியவதியே! உத்தமராகிய இராமசந்திரரிடத்தில் சத்தியமிருக்குமாயின் சைன்னியத்துடன் புறப்பட்டுவரும் எனக்குச் சீக்கிரம் நீ வழி தரவேண்டும்" என்று பிரார்த்தித்தான். இவ்வாறு சத்ருக்னன் பிரார்த்தித்ததும் ஜான்ஹவீ (கங்கை) நதியானது தனது பிரவாகவேகத்தை நிறுத்திக்கொண்டு, தனது உதரத்தின் தலத்தைக் (தரையை) காண்பித்தது. உடனே அசுவமேதக் குதிரையானது ஆற்றில் இறங்கி நடந்து சென்று க்ஷணநேரத்தில் அக்கரை சென்றது. பின் சத்ருக்கனனும் சுமந்திரனுடன் சைன்னியங்களை நடத்திக்கொண்டு அக்கரைசென்று மகாதேசமாகிய மகததேசமடைந்தான். அதுதான் கீகடதேச மெனச் சொல்லப்படுவது. இங்கும் கங்கையாற்

றில் முன்போலவே பிரவாகமுண்டாயிற்று. அதைக்கண்டு, இந்த மகா அற்புதமும் இராமசந்திரருடைய பிரதாபமென்றே யாவரும் மனதிலுறுதிகொண்டு ஜய ஜய சீதாராம்! ஜய ஜய சீதாராம்! என்று அடிக்கடி உரத்துக் கூச்சலிட, உடனே யாகக் குதிரையாகிய சியாம கர்ணம் கங்கையில் இறங்கி, அக்கரையை நோக்கிச் செல்ல முன்போலவே சத்ருக்னனும் சேனைகளுடன் அக்கரை சென்றான். அசுவமேதக் குதிரை வந்திருப்பதைக்கேட்ட மகத தேசமன்னன் தனது பட்டத்துயானையை முன்னிட்டுக்கொண்டு சைன்னியத்துடன் புறப்பட்டுக் குதிரையின் அருகிற்சென்று, அதன் நெற்றியிற் கட்டி யிருக்கும் பட்டத்தைப் படித்துப்பார்த்து, அக் குதிரையைச் சத்ருக்கனன்முதலியவர்களுடன்தனதுபட்டணத்துக்கு அழைத்துக் கொண்டுபோய்ப் பக்தியுடன் தனது வைபவத்துக்குத் தக்கபடி பூஜித்து, தனது பொக்கிஷத்திலிருக்கும் திரவியங்களைச் சத்ருக்னனுக்குச் சமர்ப்பித்து உடனே தன்பட்டணத்தார், தேசத்தார், ஸ்திரீகள், மித்திரர்கள், மந்திரிகள், பட்டணத்துஸ்திரீகள், தேசத்து ஸ்திரீகள், வேதியர்கள், தனதுபுரோகிதர்கள் இவர்கள் யாவரையும் அவரவர்களுக்குத் தக்கவாகனத்தில் ஏற்றி வைத்து அயோத்திபட்டணத்தில் நடக்கும் யாகத்துக்குச் சொல்லும்படி அனுப்பிவிட்டான்; தானும் தனது சைன்னியத்துடன் அசுவமேதக் குதிரையின் அடியின் அடையாளங்களை யநுசரித்துச் சென்று சத்ருக்கனனுடைய வார்த்தை கடவாமல் கைகூப்பியவாறு அவன் கூடவேதொடர்ந்தான்இவ்வாறேசகல தேசத்து மன்னர்களும் குதிரையைப் பின்றொடர்ந்து பாதுகாத்து வந்தார்கள். சியாமகர்ணம் என்னும் அசுவமேதக் குதிரையை அரசர்கள் ஒருவரும் பிடித்துக்கட்டவில்லை. இவ்விதமாகவே இந்திரன் முதலிய தேவர்களினும் அசுரர்களினும் ஒருவரும் அதைப் பிடித்துக்கட்டவில்லை. பிறகு அக்குதிரையானது அங்கம், வங்கம், கலிங்கம் முதலிய அநேகமான கிழக்குத் தேசங்களைக்கடந்து சமுத்திரத்தின் கரையைக்கண்டு அரசர்களுடன் தென்றிசையை நோக்கிச்சென்று கோதாவரி நதியைக்கடந்து ஆந்திரதேசம், திராவிடதேசம், ஆரவார தேசம் இவைகளையுந்தாண்டி, சுபகரமான

காஞ்சி முதலிய அநேக தேசங்களைப் பார்த்துக்கொண்டு காவேரி நதியைக்கடந்து சோளதேசஞ்சென்று, பிறகு சேதுவுக்குப் போய்த் தனுஷ் கோடியைத் தரிசித்துக்கொண்டு அங்கிருந்து மேற்கு நோக்கிப் புறப்பட்டது. அதன்பின் தாம்பிர பரணீ நதியைத்தாண்டி பன்னிரண்டு பிரிவுகளுள்ள சோளதேசத்தையுங் கடந்து, கோகர்ணக்ஷேத்திரஞ் சென்றது. பின்னும் அந்தக் குதிரையானது, கிருஷ்ணாதீரம் போய் அதையுங்கடந்து கர்நாடகமென்னும் மகாதேசத்தையுந் தாண்டி வேகமாகக் கொங்கண தேசஞ் சென்று அத்தேசத்தரசர்களுடன் பீமாபிரதேச முதலியவைகளைக் கடந்து மகாராஷ்டிர தேசங்களைத் தரிசித்துக்கொண்டு கௌதம நதியையுங் கடந்து விதர்ப்பதேசஞ் சென்று ஆபீரமண்டலம் சென்றது. பிறகு மாளவதேசத்தையும் புண்ணியகரமான மகாநதி, ஸாப்ரமதி இந்நதிகளையும் தாண்டி கூர்ஜரதேசம் பிரபாஸம் இவ்விரண்டையுங் கடந்து, ஆனர்த்தம், ஸௌவீரம், ஸௌராஷ்டிரம் இவைகளையுந் தாண்டி ஒரு விஸ்தாரமான மைதானத்தை யடைந்தது. அங்கிருந்து தன்வதேசம், ஸாரஸ்வதம் மத்ஸ்யம், மாடரம், சூரஸேனம் இவைகளையுங் கடந்து பாஞ்சாலதேசம் சென்று, அங்கிருந்து குருக்ஷேத்திரம் போய், பின் குருதேசம் ஜாங்கல் தேசம், கேகயதேசம், காஷ்மீர தேசம் பில்வதேசம் கௌடதேசம் மகதேசம், யவனதேசம் தாம்பிரதேசம் இவைகளை வெகுசீக்கிரத்தில் தாண்டி, அப்பால் அநேக தேசங்களைப் பார்த்துக்கொண்டு கரதோயா நதியின் கரை வழியே வாயுவேகமாகச் சென்று ஜுவாலாமுகியை யடைந்தது. கரதோயா நதியைக் கடப்பதாலும், கர்மநாசாநதியை ஸ்பரிசிப்பதாலும் கண்டகீநதியை நீந்திக் கடப்பதாலும் தான் செய்த தர்மத்தைக் கூறுவதாலும் தர்மத்துக்கு லோபம் வருமென்கிற நியாயத்தை இக்குதிரையுமறிந்து கரதோயா நதியைக் கடவாமலே ஹரித்வாரம் சென்று அங்கிருந்து கங்கைக் கரைவழியே இமயகிரியின் அருகே யிருக்கும் பலதேசங்களையும் கடந்து, பதரிகாசிரமத்தைத் தரிசித்து அங்குக் கலாப கிராமவாசிகள் செய்த வெகுமானத்தையும் பெற்றுக்கொண்டு அங்கிருந்து மானஸஸரஸுக்குச் சென்று, ஹரிஹரக்ஷேத்திரத்தைத் தரிசித்துக்கொண்டு சேனைகளுடன் மிதுலாபட்டணத்தை யடைந்தது.

பிறகு அங்கிருந்து புறப்பட்டுப் பலதேசங்களைப் பார்த்துக்கொண்டு ஆரியாவர்த்தம் போய், அங்கு, காசி, திரிவேணி இவைகளைத் தரிசித்துக்கொண்டு வேகமாக அந்தர் வேதிக்குச் சென்றது. அங்கிருந்து சிருங்கிபேரபுரமடைந்து பிறகு தமஸா நதியைத்தாண்டி, நைமிசாரண்யத்தில் பிரவகிக்கும் கோமதிநதியையும் தாண்டிற்று. பிறகு பிர்ம்மா வர்த்தத்தை யடைந்து அங்குள்ள மனோரம்மியமான தேசங்களைத் தரிசித்துக்கொண்டு கோசல தேசமடைந்தது; இவ்வாறாக ஆறுமாத காலத்துக்குள் பலதேசமன்னர்களும் புடைசூழ்ந்து காக்க, சத்ருக்னனுடன் சாகேத நகரத்தின் யாக மண்டபத்திற்கருகில் வந்தது.

* * *

* * * * * *

இப்பொழுது சீதாபதியானவர், சியாமகர்ணமாகிய அசுவமேதக்குதிரை பூப்பிரதக்ஷிணம் செய்து கொண்டு வந்து சேர்ந்ததை யறிந்து, அதைக்கொண்டுவரும்படி. இலட்சுமணருக்குக் கட்டளையிட்டார். இலட்சுமணர் உடனே பட்டத்து யானையுடன் எதிர்கொண்டுபோய்த் துந்துபி வாத்திய முழங்க, வாரநாரிகள் நர்த்தனஞ்செய்ய, வேதியர்கள் வேதங்களைக் கோஷிக்க; சியாமகர்ணக் குதிரையை நன்றாய்ப் பூசித்துப் பின் அதைக்காத்து வந்த அரசர்களுக்கும் தக்க உபசாரஞ்செய்து, குதிரையை மெதுவாக யாகமண்டபத்துக்குக் கொண்டுவந்தார். அச்சமயத்தில், அந்தக் குதிரையை யாவரும் பார்ப்பதே பெரிய உற்சவமாக விளங்கிற்று. அயோத்தியா பட்டணத்தைச் சுற்றிலும் வெளியில் பத்துக்காதவழி தூரமுள்ள இடமெங்கும் பல தேசத்தரசர்களும் அவர்கள் சைன்னியங்களும் நிறைந்தார்கள். இப்பொழுது அசுவமேதக் குதிரையைத் தொடர்ந்து காத்துவந்த மன்னர்கள் யாவரும் தாங்கள் முன்னரே அயோத்திக்குச் சொல்லும்படி அனுப்பிய தங்கள் குடும்பத்தார் பட்டணத்தார் தேசத்தால் இவர்களைக்கண்டுபிடிக்க, வண்டுகள்போல் கூட்டத்தில் சுற்றிப்பார்த்தும் தங்கள் தங்கள் ஜனங்களைக் கண்டுபிடிப்பது அரிதாகி மயங்

கினர்கள். இப்படித்திரிந்து கொண்டே. தங்கள் ஜனங்களை மறு நாட் சிலரும் மூன்றும் நாட் சிலரும் ஐந்தா நாட் சிலரும் கண்டு பிடித்தார்கள். அவர்களுக்குள் சிலர் இவ்வாறு தேடியு மகப்படா மையால், துந்துபிகோஷத்துடன் சுற்றிப் பதினைந்து தினங் களுக்குமேல் சிலரும், ஒருமாதத்துக்கு மேற் சிலரும் கண்டுபிடித் தார்கள். சிலர் தங்கள் ஜனங்களைப் பாராமலே திரிந்து வருத்த மடைந்தார்கள். இதனையறிந்த இராமபிரான் இலட்சுமணரை யழைத்து, "ஏ இலட்சுமணா: இக்கூட்டத்தில் விட்டுப்பிரிந்த ஜனங்களில் அவரவர் ஜனங்களை அவரவர் பார்க்க ஓர் உபாயஞ் சொல்லுகிறேன் கேள்- "தமஸாநதியின்கரையில் பெரிய ஒரு சாலைகட்டி, அச்சாலையில் இந்த யாகக் கூட்டத்தில் பிரிந்த ஜனங் களை அவரவர் பார்க்கலாமென்று பறைசாற்றுவித்து அந்தக் கஷ்டத்தை விலக்கு" என்றுகட்டளையிட்டார்; குதிரை மாடு முதலி யவைகளும் வேறு எந்தப் பொருளும் உரியவரை விட்டுப் பிரிந்ததா கத் தெரிந்தால், அவைகளை அச்சாலையிற் கொண்டுபோய்ச் சேர்த்து, பின்பு பெற்றுக்கொள்ளுமாறு பறை யறைவித்துத் தெரிவி" என்று கட்டளையிட்டார். இலட்சுமணர் இராமருடைய கட்டளையின்படி எல்லாவற்றையும் நிறைவேற்றினர். அதற்குப் பிறகு பிரிந்தவர் கள் யாவரும் அச்சாலை சென்று தங்கள் தங்கள் ஜனங்களுடன் கலந்தார்கள். பொருளை இழந்தவர்களும் அச்சாலையில் தங்கள் பொருள்களை மீண்டும் பெற்றார்கள். இவ்வாறே குதிரை முதலிய பிராணிகளைப் பிரிந்தவர்களும் தங்களுடைய பிராணியை மீண்டும் அச்சாலையில் பெற்றார்கள். ஸ்ரீராமபிரானுடைய அசுவமேத யாகத்தைத் பார்க்க இவ்வாறுகக் கூடிய கூட்டத்தில் உண்டாகும் பேரிரைச்சலினல் ஒருவரோடொருவர் காதுக்குள் பேசிக்கொள் ளினும் ஒருவர்பேச்சை ஒருவர் அறிவது அரிதாயிருந்தது. மன்னர் கள் யாவரும் கூடாரங்களில் சுகமாய் வசித்து வந்தார்கள்.

அசுவமேதக் குதிரை பூமண்டலப் பிரதட்சிணம்
செய்து வந்ததைக் கூறும்
மூன்ருவது சருக்கம்
முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ரித்விக்குகள் யாவரும் பற்பலவித மங்கள வாத்தியங்களுடன் அசுவமேத யாகத்தை விதிப்படி நடத்திவந்தார்கள். அவர்கள் யாவரும் இந்த யாகத்தில், இந்திரனுடைய யாகத்திலிருந்தது போல் சதஸ்யர்க (யாககார்ய நிர்வாகிகள்) ளுடன் இரத்னமயமான வெண்பட்டாடையுடுத்துக்கொண்டு விளங்கினார்கள். இத்தருணம் இராமபிரான் வேண்டுகோளின்படியே பகாதேவரானவர் விக்னராஜருடனும் சுப்பிரமண்யருடனும் பார்வதிசமேதராய் விருஷபவாகனமேறி பிரமதகணங்கள் இந்திரன்முதலிய தேவர்கள் யாவருஞ் சூழப் புறப்பட்டு அசுவமேத மண்டபம் வந்தார். இதனை யறிந்த இலட்சுமணர் பட்டத்து யானையை முன்னிட்டுக்கொண்டு பதாகை, துவஜம், தோரணங்கள், பற்பல வாத்தியங்கள், வாரநாரி நர்த்தனங்கள் இவைகளுடன் எதிர்கொண்டு சென்று சங்கரரைப் பக்தியுடன் பூஜித்து, உள்ளே யழைத்துவந்தார். ஸ்ரீராமபிரானும் எழுந்திருந்து ஐந்து ஏழு அடிகள் முன் சென்று சங்கரரை வணங்கி, கிரிஜாசகிதராக அவரைத் தழுவி மகிழ்ந்து கனகாசனத்தில் வீற்றிருக்கச் செய்து, ஒரு திவ்ய சொர்ணபாத்திரத்தில் அவர் பாதங்களை வைத்துப் பிடித்துச் கொண்டு, நவரத்ன கசிதமான ஜர்ஜரி யென்னும் பாத்திரத்தில் தீர்த்தத்தை யெடுத்துத் தீர்த்த தாரையை ஜானகி உசிதமாய்விட, தமது கரங்களால் அவருக்குப் பாத ப்ரக்ஷாளனம் செய்தார். இவ்வாறு பரமசிவனுக்கு உபசரிக்கும் ஸ்ரீராமபிரானையும் சீதா பிராட்டியையும் தேவகணங்கள் தாமரைப் பூப்போன்ற நேத்திரங்களால் இமைகொட்டாமல் பார்த்துத் தங்களைமறந்து சித்திரைப்பதுமைபோல் நின்றார்கள். அப்பொழுது அவர்களிற் சிலர் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு மகிழ்ச்சியுடன் இராகவரைத் துதித்தார்கள். சிலர் ஜானகி தெவியைத் துதித்தனர். கோடி சூரியப் பிரகாசத்தோடு ஒப்புயர்வற்று விளங்கும் சீதா இராமர்களுடைய திவ்விய தேஜஸ்ஸைப் பார்த்து இவ்வாறு தேவகணங்கள் ஸந்தோஷமடைந்தனர். ஸ்ரீராம

பிரான் சீதையுடன் சங்கரரைப் பூஜித்துவிட்டுப் பிறகு தேவர்கள் யாவரையும் தாமே பூஜித்து, ஸௌமித்திரியைக் கொண்டு ரிஷிகள் யாவருக்கும் பூஜை செய்வித்துப் பிறகு சங்கரரைப்பார்த்து "மகாதேவ! இன்று தமது தரிசனத்தால் நானும் சீதையும் தன்னியரானோம். இந்தச் சூரிய வம்சத்தில் என் பிறப்பு இன்று சாபல்யம் பெற்றது" என்று கூறிப் பிரார்த்தித்தனர். இவ்வாறு கூறியதைக் கேட்டதும் சசிபூஷணராகியபரமசிவன் சிறிது நகைத்து, "ஏ இராகவா! உமது மாயையை நானறிவேன். உமது நாபீகமலத்தில் பிர்மதேவர் பிறந்தார். அவரிடத்தி லிருந்து மரீசி முதலிய எழு முனிவர்கள் உமக்குப் பேரன்மார்களாகப்பிறந்தார்கள். அவர்கள் மகா தேஜஸ்விகள். அந்தமரீசி முனிவருக்குச்சிருஷ்டி உற்பத்தி விதாயகராகிய கசியப முனிவர்பிறந்தார். அவருக்கு சவிதா (சூரியன்) பிறந்தான். அவர் உமக்குப் பேரனுக்குப்பேரன். அவரிடத்தி லிருந்து சூரியவம்சம் உற்பத்தியாயிற்று. அவ்வம்சத்தில் நீர் பிறந்திருக்கிறீர். உமது வம்சத்தில் சூரியன் பிறந்திருக்கிறான். ஆகையால் பிரபுவே! இதைக்கொண்டு என்னை யேன் மயக்குகிறீர். தேவிதைகளுடைய காரிய சித்திக்காக மாயையைக் கொண்டு நீர் அவதரித்திருக்கிறீர். ஆதலால் யாத்திரை யாகம் முதலிய வேடிக்கைகளால் உமது இச்சைப்படி நீர் விளையாடும், உமது விளையாட்டானது லோக சிக்ஷார்த்தமேயாம்" என்று ஆச்சரியமாக விடையளித்தார். இவ்வாறு பரமசிவன் கூறியதைக் கேட்ட சீதா ராமர்கள் சிறிது நகைத்துக்கொண்டே யாககுண்டத்திற்கருகே சென்று தங்கள் குருவினுடைய ஸந்நிதியில் உட்கார்ந்தார்கள். இத்தருணம் அந்த அசுவமேத மண்டபத்துக்கு அநேக ஆயிரக்கணக்காக, கந்தர்வர்கள், கின்னரர்கள், சித்தர்கள், அப்ஸரோகணங்கள், லோகபாலர்கள், திக்பாலர்கள் இவர்களும் நவக்கிரகங்கள், ஆறு ருதுக்கள், அறுபது வருஷங்கள், இருபத்தேழு நக்ஷத்திரங்கள், பதினறு திதிகள், வாரங்கள், யோகங்கள், கரணங்கள் இவைகளும் பூலோக வாசிகளும் கூட்டங்கூட்டமாக வந்து சேர்ந்தார்கள். பின்னும் விருக்ஷங்கள், மலைகள் சமுத்திரங்கள், நதிகள், தடாகங்கள், கிணறுகள் இவைகள்

ஜங்கம ரூபந்தரித்துக்கொண்டு யாகமண்டபம் அடைந்தன. பின்னும் சம்பாதி, குகன், மகரத்வஜன் இவர்களும், இலங்கையிலிருந்து இராட்ஸர்களுடன் விபீஷணனும் யாகமண்டபம் வந்துசேர்ந்தார்கள். இவர்கள் யாவரையும் ஸ்ரீராமபிரான் குசலனப்ரச்னஞ் செய்து மரியாதையுடன் ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்தார். இவர்கள் யாவருக்கும் முந்தியே வானரங்களுக்குத் தமது பக்கத்தில் வீற்றிருக்க இடங்கொடுக்க, அவர்கள் அவ்விடத்திலேயே அமர்ந்தார்கள்.

இப்படியிருக்கையில் அயோத்யா பட்டணத்துக்குக் கும்போதர முனிவர் வந்தார். அவர் வருகையைக் கண்ட எல்லைக் காவலாளிகள் ஒருவர்க்கொருவர் பின் வருமாறு பேசிக்கொண்டார்கள். ஏ அண்ணன் மார்களே! நமக்கு மறுபடியும் ஒரு கஷ்டம் சம்பவித்து விட்டது. இதோ பாருங்கள் முன் வந்த கும்போதர முனியை! இவர் நிமித்தமாக வல்லவா நமது இறைவனாகிய ஸ்ரீ ராமபிரானுக்குப் பூலோக யாத்திரை செய்யும் சிரமம் நேர்ந்தது. இப்பொழுது அசுவமேதயாகம் நடப்பதும், இவ்வசுமேதயாகக் குதிரை பூப்பிரதக்ஷிணம் செய்யும்போது, அதைக்காத்துவரும் அனைவர்க்கும் எவ்வளவோ சிரமம் உண்டானதும் இவர் வாய்மொழியாலல்லவா ? இப்பொழுதும்வந்திருக்கிறாரே! இன்னமும்ஸ்ரீராமபிரானுக்கு என்ன செய்யக் கருதியிருக்கின்றனரோ தெரியவில்லையே'' என்று பேசிக்கொண்டார்கள். இப்படி அவர் பேசுவதைச் செவியில் கேட்டுக்கொண்டே கும்பேதரமுனிவர், யாகமண்டபத்தை நோக்கிப் புறப்பட்டு வந்தார். அவர் புறப்படும் முன்னமே அக்காவலாளிகள் வேகமாக முன்சென்று யாகமண்டபத்தின் அருகே நடுக்கத்துடன் நின்று அவசரத்தினால் வாய்குளற "ஏ ஸ்ரீராமா! எமகாபாகோ ! ஏ இலட்சுமணா! பிரபுவே ! கேளுங்கள் இப்போது நடந்த பூமண்டல யாத்திரைக்குக் காரணமான வரும் தங்களிடத்திற் கூட கடின சித்தம் படைத்தவருமான கும்போதர முனிவர் இதோ மறுபடியும் வந்திருக்கிறார். அதைத்தெரிவித்தோம்'' என்றனர்.

கும்போதரமுனிவரின் வருகையைக்கேட்ட ரித்விக்குகள் யாவரும் தங்கள் தங்கள் காரியத்தை நிறுத்திவிட்டு, அவரைப்பார்க்கக்

கருதிப் பயந்து எழுந்திருந்தார்கள். சீதாராமர்கள் மட்டும் பயமற்றிருந்தார்கள். மண்டபத்துள்ள யாவரும் பார்த்துக்கொண் டிருக்கையில், கும்போதர முனிவர், குட்டையான சரீரமும் பெரிய தலையும், கறுத்தமயிர்களும் சிவந்த நேத்திரங்களும் தொந்தி வயி றும் குட்டையான கைகால்களு முடையவராய்,யௌவனப்பருவம் வாய்ந்தவராய், கௌபீனந்தரித்து, மரவுரியுடுத்து, கண்டகமண்ட லங்கொண்டு ஜடாமுடியும் மீசையுமுடையவராய்ப் பாதுகையின் மீது, மெதுவாக யாககுண்டத்துக்கு வந்தார். அவரைப்பார்த்த யாவரும் மனதில் பயமடைந்து தங்கள் தங்கள் செய்கையை மறந் தார்கள். பிறகு தாங்கள் மறந்தவைகளை ஒருவர்க்கொருவர் கேட்டுத் தெரிந்துகொண்டார்கள்.

இதன்பின் ஸ்ரீராமபிரான் சீக்கிரமாக எழுந்திருந்து எதிர்கொ ண்டுபோய்க் கும்போதரமுனிவரைச் சாஷ்டாங்கமாக வணங்கிக்கை யைப் பிடித்துக்கொண்டு, மண்டபத்துக்குள் அழைத்துவந்து,சொர் ணாசனமளித்து அதில்வீற்றிருக்கச்செய்தார். கும்போதர முனிவர் அதிசீக்கிரத்தில் தமது கண்டகமண்டலத்தையும் மரவுரியையும் தரைசில் வைத்துவிட்டு ஸ்ரீ ரகுநாதரை வணங்கினர். உடனே ஸ்ரீராமபிரான் தமது கைகளால், முனிவரை யெழுப்பி, தழுவிக் கொண்டு அவரைப்பார்த்து "மகானுபாவராகிய முனிசிரேஷ்டரே! இராவண சங்காரஞ் செய்த நான் தமது வந்தனத்துக்குத் தக்கவ னன்றோ" என்று உபசரித்தார். இப்படிப்பட்ட ஸ்ரீராமருடைய வசன ரூபமான பாணங்கள் இருதயத்தில் தைத்து வருத்தமடைந்த கும் போதர முனிவர், இரகு புங்கவரைப்பார்த்துப் பின் வருமாறு யக்ஞ மண்டபத்தில் கூறுகிறார் 'ஏ ஸ்ரீராமா ஸ்ரீராமா! மகாபாகோ! என் மீது தாங்கள்கோபஞ் செய்யவேண்டாம். ஏ இரகு நாயகா! நான் தாங்கள் விஷயத்தில் செய்த அபராதத்தை மன்னித்தருளும் யான் எனது காரியத்துக்காகத் தங்களிடத்தில், தோஷாரோபணம் செய்ததல்ல. பிறரின் உபகாரத்திற்காகவும் உமது கீர்த்திக்காகவும் செய்தேன். இது சர்வலோக க்ஷேமத்துக்காகச் செய்யப்பட்டதென் பது உமது சித்தம் அறியும்; அன்றியும் இம்முனிவர்கள் யாவரும்

அதை அறிவார்கள். தமது அன்னசத்திரத்தில், கணக்கற்ற யாவரும் புசித்தார்கள். யானும் புசித்தேன். ஆகையால் ஏ இரகுநந்தனு! இவ் விதம் மகத்தான கீர்த்திபெற்ற தமக்கு தோஷம் என்பது ஏது? இவ்விதம் நிச்சயஞ் செய்துகொண்டே உலக நன்மைக்காகத் தம் மிடத்தில் என்வாயால் தோஷத்தைக் கூறினேன். இல்லாவிடில்' ஏ ஸ்ரீராமா! தமக்கு இவ்விதமான தீர்த்தங்களிலும் தேசங்களிலும் உபவனங்களிலும் முனிவர் ஆசிரமங்களிலும் கோட்டங்களிலும் கிராமங்களிலும் நதிகளிலும் மலைகளிலும் யாத்திரை செய்வதற்குக் காரணம் எப்படி சம்பவிக்கும்? மேற்சொன்ன இடங்களில், வசிக்கும் ஜனங்கள் யாவரும் சிரத்தையுடன் கர்மங்களைச்செய்து கொண்டு சுபகரமான தமது தரிசன லாபத்தைப் பெற்று சந்தோஷமடைந் தார்களல்லவா? ஏ இரகுநந்தனு! இதற்கு நானே காரண மென்று எண்ணுகிறேன். ஜனங்கள் யாவரும் 'எவ்விடங்களிலும் விஷயங்களில் பேராவல் கொண்ட நமக்கு சீதா ராமருடைய தரி சனங்கிடைத்தது.கும்போதரமுனிவருடைய பிரசாதத்தாலல்லவா? என்று எனது உபகாரத்தைப்பற்றிப் பேசுகிறார்கள் தம்மிடத்தில் ஒரு தோஷம்கற்பித்ததால் எனக்கு ஜன்ம சாபல்யமும், எங்கும் பரவாநின்ற பெரிய கீர்த்தியும் உண்டாயின. அதனால் தங்களுக் கும் கீர்த்தி பெருகிற்று. இப்பொழுது பூலோகத்தில், ஏற்பட்ட கணக்கற்ற இராமேசுவரங்கள் இராமதீர்த்தங்கள் எவ்வளவு காலம் பிரசித்தியாக இருக்கப்போகிறதோ அவ்வளவு காலம் உமது கீர்த் தியும் பரவி நிற்கும். அன்றி எனது வாக்கியத்தைத் தாங்கள் அனு சரித்தால் லோகத்துக்கு ஒரு நல்லபழக்கமும் ஏற்பட்டது. கும் போதர முனிவர், மகாத்மாவாகிய ஸ்ரீராமபிரான் மீதே தோஷங் கற் பித்தபோது நமக்கேன் அத்தோஷம் ஏற்படாது? ஸ்ரீராமபிரான் சகல தீர்த்த யாத்திரைகளுஞ்செய்து அத்தோஷத்தைப் பரிகரித் துக் கொண்டமையால், நாமும் அவ்விதம் செய்ய வேண்டுமென்ப தில் கதைபேசவேண்டுமோ? என்கிற இப்படிப்பட்ட நியமனங் கள் ஜனங்களுக்கு ஏற்பட்டு மனதில் பயம் வைத்து தங்களு டைய தோஷபரிகாரத்திற்காகப் பூதலத்தில் எங்கும் யாத்திரை செய்யத் தலைப்படுவார்களல்லவா?

தாமரை இலையில் ஜலம் சிறிதும் பற்றாததுபோல், எங்கும் நிறைந்திருக்கும் பிர்மமாகிய தங்களிடத்தில் தோஷாரோபணமென்பது உண்டாவ தெங்ஙனம்? பின்னும் தங்களுடைய புருவத்தை நெறித்த மாத்திரத்தில் இப்பிர்மாண்டம் பிரளயத்தில் மூழ்கிவிடுகிறது. நிமிஷமாத்திரத்தில் இந்த பிர்மாண்டத்துள்ளடங்கிய ஜீவவர்க்கங்கள் முழுமையும் தங்களிடத்தில் அடங்கிவிடுகிறது. இப்படிப்பட்ட மகிமைவாய்ந்த தங்களிடத்தில் தோஷாரோபணம் எவ்விதம் உண்டாகும்? தங்களுடைய ஆக்ஞைப்படி யல்லவா காலன் எல்லாவற்றிற்கும் நாசமுண்டாக்குகிறான். அப்படிப்பட்ட நீர் தோஷம் செய்ததாக யாரால் கூறமுடியும்? ஒருவன் பெரிய சுவரில் ஆயிரக்கணக்காகச் சித்திரங்களை எழுதி, அவைகளைத்தானே யழிப்பது போல, ஏ ஸ்ரீராமா! சத்வரஜஸ்தமஸாகிய முக்குணங்களில் சத்வகுணத்தால் பிர்ம்ம ரூபமும் ரஜோகுணத்தால் விஷ்ணு ரூபமும் தமோகுணத்தால் ருத்திராம்சத்தையும் பெற்று உலகங்களின் சிருஷ்டி ஸ்திதி சங்காரமாகிய முத்தொழிலையும் நடத்தி வருகிறீர்களல்லவா? தங்களுடைய மகிழ்ச்சிக்காக நாங்கள் அனைவரும் தீர்த்த யாத்திரை செய்து வருகிறோம். அத்தீர்த்த ரூபமாகிய தமக்குத் தோஷமென்பதேது? தீர்த்தங்களுள் உத்தம தீர்த்தமான ஆகாச கங்கை யென்பது, தமது வலது கால் பெருவிரல் நுனியிலிருந்து உற்பத்தியாகிய பாததூளி சம்பந்தத்தைப் பெற்று, பரிசுத்தமாகிப் பூலோகத்தில் பிரவகித்துக்கொண்டு தன்னுடைய வெண்மை நிறத்தால், இன்றும் தங்களுடைய பாததூளி சம்பந்தத்தை வெளியிட்டு வருகிறது. இவ்விதம் கும்போதர முனிவர் பலவிதமாக இராகவனைத் துதித்து மகிழ்ச்சியுண்டாக்கினர். பிறகு இராமாஷ்டோத்ர சத நாமங்களாலும் துதித்தார். இவைகளனைத்தையும் அன்போடு ஏற்றுக்கொண்ட ஸ்ரீராமபிரான் அவரை நன்றாய்ப் பூஜித்து ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்தார். பின ஸ்ரீராமரும் குருசந்நிதியில் சீதாதேவியுடன் வீற்றிருந்தார். அச்சபையில் கும்போதர முனிவருடைய தரிசனார்த்தமாக எழுந்திருந்த சகல ஜனங்களும் அவரவர்களுடைய ஆசனத்திலமர்ந்தார்கள்.

கும்போதர முனிவர் அசுவமேதமண்டபத்துக்கு வந்ததைக்கூறும்
4-வது அத்தியாயம் முற்றிற்று.

## 5-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் கூறுகிறார்.

பரகுருவே! யான் இப்பொழுது ஒரு சந்தேகம் கேட்க விரும்பியுள்ளேன். அதை விஸ்தரித்துக் கூறவேண்டுகிறேன். ஐயா! கும்போதர முனிவர், ஸ்ரீராமபிரானைத் துதித்த அஷ்டோத்தர நாமாவளி மிகவும் சுபகரமானதாகையால், அதை அடியேன் கேட்கப் பிரியப்படுகிறேன். தயைகூர்ந்து கூறவேண்டுகிறேன்.

### இராமதாஸர் கூறுகிறார்.

மகாபுத்திசாலியாகிய சிஷ்யனே! நீ இப்பொழுது கேட்ட விஷயம் எனக்கு மனக்களிப்பையளித்தது. அதை உனக்குக் கூறுகிறேன் கவனித்துக்கேள். ஸ்ரீ ராமபிரான் சர்வேசுபர், சர்வசொரூபர். சர்வபூத உபகாரார்த்தமாகவே தாம் அரூபியாயிருந்தும் ரூபத்தை எடுத்துக்கொள்கிறார். உலகத்தில் ஸம்ஸசாரபய நிவாரணஞ் செய்கிறவர் அவர் ஒருவரே. துஷ்ட அசுராதிகளால், லோகத்துக்கு உபத்திரவம் நேரிடும்போதெல்லாம் தாம் அவதரித்து, அவ்வுபத்திரவங்களை விலக்கிவருகிறார். மத்ஸ்யம் கூர்மம் வராகம் இவைகள் முதலிய பல அவதாரங்களை எடுத்து யாவருக்கும் உபகாரம் புரிந்திருக்கின்றனர். ஜனனமற்றவரும் முடிவற்றவரும் ரூபமற்றவரும் பக்தவத்ஸலருமான ஸ்ரீ ராமபிரான் சமசித்தர்களும் சாதுக்களுமாகிய பக்தர்களிடத்தில் கருணைகூர்ந்து அந்தந்த சமயத்தில் அவதரித்து அவரவர்களுடைய கஷ்டத்தைத் தீர்க்கிறாய். தேவதேவேசப் பிரபுவான இலக்ஷ்மீ நாராயணர் முன் க்ஷீராப்தியில், சங்குசக்ரதாரியாக பிரமன் முதலிய தேவர்கள் யாவருடனும் சேஷனஞ்சொய்தார். அவர்களில் இலட்சுமணர்தான் ஆதிசேஷர். ஜானகியம்மாள் தான் இலக்ஷ்மிதேவி. பரதசதருக்னர்கள் தான் சங்கு சக்ரங்கள். வானரர்களே தேவர்கள். அவர்கள் இவர்களுக்குமுன்னேயே சயதேவர்களின் பயநிவர்த்திக்காக அவதரித்தனர். ஸ்ரீராம

பிரானே ஆதிநாராயணா. அவர் சகலலோகோபகாரமாகப் பூவுலகில் தாமே அவதரித்திருக்கின்றனர். அவரை நினைத்தமாத்திரத்தில் சகலபாபங்களும் விலகிவிடும். அவர் நாமோச்சாரணஞ் செய்வதாலும் அதை சிரவணஞ் செய்வதாலும் கோடி பிர்மஹத்தியாதி பாப நிவாரணமுண்டாகும். அதிலும் இந்தக் கலியுகத்தில் அவரது நாம சங்கீர்த்தனத்தால் பாபமுழுதும் நசித்துப்போகு மென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஸ்ரீராமா! ஸ்ரீராமா!! ஸ்ரீராமா!!! என்று மூன்று தடவை உச்சரித்தவன் மகாபாபியாயினும், அவனது பாபங்கள் ஆயிரக்கோடிக் கணக்காக விருந்த போதிலும் அவைகளை நிவர்த்திசெய்கிறார். இந்த உண்மை எக்காலத்தும் மாறுவதில்லை. ஆகையால் அவருடைய அஷ்டோத்தரசத நாமங்களைக் கூறுகிறேன் கேள்.

அத ஶ்ரீராமாஷ்டோத்தர
ஶதநாமாவளி:.

அஸ்ய ஶ்ரீராமசந்த்ர நாமாஷ்டோத்தர ஶதமந்த்ரஸ்ய - ப்ரஹ்மா ருஷி: - அநுஷ்டுப் சந்த: - ஜாநகீவல்லப: ஶ்ரீராமசந்த்ரோ தேவதா - ஓம் பீஜம் - நம: ஶக்தி: - ஶ்ரீராமசந்த்ர இதி கீலகம் — ஶ்ரீராமசந்த்ர ப்ரீத்யர்த்தே ஜபே விநியோக: । ஓம் நமோ பகவதே ராஜாதிராஜாய பரமாத்மநே அங்குஷ்டாப்யாம் நம:। ஓம் நமோ பகவதே வித்யாதிராஜாய ஹயக்ரீவாய தர்ஜநீப்யாம் நம: । ஓம் நமோ பகவதே ஜாநகீவல்லபாய மத்யமாப்யாம் நம: । ஓம் நமோ பகவதே ரகுநந்தநாயாமிததேஜஸே அநாமிகாப்யாம் நம: । ஓம் நமோ பகவதே க்ஷீராப்திமத்யஸ்தாய நாராயணாய கநிஷ்டிகாப்யாம் நம: ॥ ஓம் நமோ பகவதே ஸத்ப்ரகாஶாய ராமாய கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: । ஓம் நமோ பகவதே ராஜாதிராஜாய பரமாத்மநே ஹ்ருதயாய நம: । ஓம் நமோ பக

𑌵𑌤𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌿𑌰𑌾𑌜𑌾𑌯 𑌹𑌯𑌗𑍍𑌰𑍀𑌵𑌾𑌯 𑌶𑌿𑌰𑌸𑍇 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 । 𑍐 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌜𑌾𑌨𑌕𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌾𑌯 𑌶𑌿𑌖𑌾𑌯𑍈 𑌵𑌷𑌟𑍍 𑍐 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌾𑌯𑌾𑌮𑌿𑌤 𑌤𑍇𑌜𑌸𑍇 𑌕𑌵𑌚𑌾𑌯 𑌹𑍁𑌮𑍍 । 𑍐 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌕𑍍𑌷𑍀𑌰𑌾𑌬𑍍𑌧𑌿𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌾𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯 𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌾𑌯 𑌵𑍌𑌷𑌟𑍍 । 𑍐 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌸𑌚𑌕𑍍𑌰𑌾𑌯 𑌰𑌾𑌮𑌾𑌯 𑌅𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌫𑌟𑍍 । 𑌭𑍂𑌰𑍍𑌭𑍁𑌵𑌸𑍍𑌸𑍁𑌵𑌰𑌿𑌤𑌿 𑌦𑌿𑌗𑍍𑌬𑌨𑍍𑌧𑌃 ।

𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍 ॥

𑌮𑌨𑍍𑌦𑌾𑌰𑌾𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌣𑍍𑌯𑌧𑌾𑌮𑌵𑌿𑌲𑌸𑌦𑍍𑌵𑌕𑍍𑌷𑌸𑍍𑌥𑌲𑌂 𑌕𑍋𑌮𑌲𑌂
𑌶𑌾𑌨𑍍𑌤𑌂𑌕𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌨𑍀𑌲𑌰𑍁𑌚𑌿𑌰𑌾𑌭𑌾𑌸𑌂𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌨𑌨𑌮𑍍 ।
𑌵𑌨𑍍𑌦𑍇𑌹𑌂𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌂𑌸𑍁𑌰𑌪𑌤𑌿𑌂 𑌕𑍋𑌦𑌣𑍍𑌡𑌧𑍀𑌕𑍍𑌷𑌾𑌗𑍁𑌰𑍁𑌂
𑌰𑌾𑌮𑌂 𑌸𑌰𑍍𑌵 𑌜𑌗𑌤𑍍𑌸𑍁𑌸𑍇𑌵𑌿𑌤𑌪𑌦𑌂 𑌸𑍀𑌤𑌾𑌮𑌨𑍋𑌵𑌲𑍍𑌲𑌭𑌮𑍍 ॥
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑍀𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌦𑍇𑌵𑌾𑌯 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌾𑌯𑌤𑍇𑌨𑌮𑌃 ।
𑌨𑌮𑌸𑍍𑌸𑌹𑌸𑍍𑌰𑌹𑌸𑍍𑌤𑌾𑌯 𑌸𑌹𑌸𑍍𑌰𑌚𑌰𑌣𑌾𑌯 𑌚 ॥ ॥ ௧ ॥
𑌨𑌮𑍋𑌜𑍀𑌮𑍂𑌤𑌵𑌰𑍍𑌣𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖
𑌅𑌚𑍍𑌯𑍁𑌤𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌶𑍇𑌷𑌶𑌾𑌯𑌿𑌨𑍇 ॥ ॥ ௨ ॥
𑌨𑌮𑍋𑌹𑌿𑌰𑌣𑍍𑌯 𑌗𑌰𑍍𑌭𑌾𑌯 𑌪𑌞𑍍𑌚𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌨𑌮𑌃 ॥
𑌨𑌮𑍋 𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑍇 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌹𑌿𑌤𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 ॥ ௩ ॥
𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑍇𑌶 𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌨𑌿𑌷𑍂𑌦𑌨 ।
𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌪𑌦𑍍𑌮𑌜𑌟𑌾𑌮𑌕𑍁𑌟𑌧𑌾𑌰𑌿𑌣𑍇 ॥ ॥ ௪ ॥
𑌨𑌮𑍋𑌗𑌰𑍍𑌭𑌾𑌯𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑍇𑌨𑌮𑌃 ।
𑍐𑌨𑌮𑍋𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜 ॥ ॥ ௫ ॥
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌪𑌤𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌚 ।
𑌨𑌮𑌃 𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌰𑍂𑌪𑌾𑌯 𑌕𑍈𑌕𑍇𑌯𑍀𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 ॥ ௬ ॥
𑌨𑌮𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌯 𑌤𑍇 ।
𑌯𑌜𑍍𑌞𑍇𑌶𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌕𑍍𑌰𑌤𑍁𑌪𑌾𑌲𑌕 ॥ ௭ ॥
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 𑌕𑍇𑌶𑌵𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌾𑌥𑌾𑌯 𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑌿𑌣𑍇 ।

𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌰𑌾𑌮𑌭𑌦𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯 𑌚 ॥ ॥ ௮ ॥
𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌰𑌾𑌮𑌭𑌦𑍍𑌰𑌾𑌯 𑌮𑌾𑌧𑌵𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌵𑌰𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 ॥ ௯ ॥
𑌨𑌮𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌯 𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌾𑌯 𑌤𑍇 𑌨𑌮𑌃 ।
𑌨𑌮𑌸𑍍𑌤𑍇𑌽𑌨𑌾𑌥𑌨𑌾𑌥𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌮𑌦𑌨𑌰𑍂𑌪𑌿𑌣𑍇 ॥ ॥ ௧௦ ॥
𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌕𑍍𑌰𑌮 𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌸𑍀𑌤𑌾𑌯𑌾𑌃 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ।
𑌵𑌾𑌮𑌨𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌰𑌾𑌘𑌵𑌾𑌯 𑌚 ॥ ॥ ௧௧ ॥
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌧𑌰𑌾𑌯 𑌜𑌾𑌨𑌕𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌾𑌯 𑌚 ।
𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 [illegible] 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥ ॥ ௧௨ ॥
𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌪𑌦𑍍𑌮𑌨𑌾𑌭𑌾𑌯 𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑌾𑌹𑌰𑍍𑌷𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 ।
𑌨𑌮𑍋 𑌰𑌾𑌜𑍀𑌵𑌨𑌯𑌨 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌗𑍍𑌰𑌜 ॥ ॥ ௧௩ ॥
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥 𑌨𑌮𑍋 𑌦𑌾𑌮𑍋𑌦𑌰𑌾𑌯 𑌚 ।
𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌤𑌰𑍍𑌨𑌮𑌸𑍍𑌸𑌂𑌕𑌰𑍍𑌷𑌣𑌾𑌯 𑌚 ॥ ॥ ௧௪ ॥
𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵 𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌶𑌂𑌕𑌰𑌪𑍍𑌰𑌿𑌯 ।
𑌪𑍍𑌰𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌮𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌤𑍇 𑌨𑌮𑌃 । ॥ ௧௫ ॥
𑌸𑌦𑌸𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 ।
𑌅𑌧𑍋𑌕𑍍𑌷𑌜 𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌸𑌪𑍍𑌤𑌤𑌾𑌲𑌹𑌰𑌾𑌯 𑌚 ॥ ॥ ௧௬ ॥
𑌖𑌰𑌦𑍂𑌷𑌣𑌸𑌂𑌹𑌰𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌨𑍃𑌸𑌿𑌂𑌹𑌾𑌯 𑌤𑍇 𑌨𑌮𑌃 ।
𑌅𑌚𑍍𑌯𑍁𑌤𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌸𑍇𑌤𑍁𑌬𑌨𑍍𑌧𑌕 ॥ ॥ ௧௭ ॥
𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑍋 𑌹𑌨𑍁𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯 ।
𑌉𑌪𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌾𑌯 𑌮𑌾𑌰𑍀𑌚𑌮𑌥𑌨𑌾𑌯 𑌚 ॥ ॥ ௧௮ ॥
𑌨𑌮𑍋 𑌵𑌾𑌲𑌿𑌪𑍍𑌰𑌹𑌰𑌣 𑌨𑌮𑌸𑍍𑌸𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑌰𑌾𑌜𑍍𑌯𑌦 ।
𑌜𑌾𑌮𑌦𑌗𑍍𑌨𑍍𑌯𑌮𑌹𑌾𑌦𑌰𑍍𑌪𑌹𑌰𑌾𑌯 𑌹𑌰𑌯𑍇 𑌨𑌮𑌃 ॥ ॥ ௧௯ ॥
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌭𑌰𑌤𑌾𑌗𑍍𑌰𑌜 ।
𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌪𑌿𑌤𑍃𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 𑌨𑌮𑌶𑍍𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌜 ॥ ॥ ௨௦ ॥
𑌅𑌯𑍋𑌧𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌤𑍇 𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌶𑍍𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑌸𑍇𑌵𑌿𑌤 ।
𑌨𑌮𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌯 𑌸𑌤𑍍𑌯𑌾𑌯 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌦𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑍂𑌪𑌿𑌣𑍇 ॥ ௨௧ ॥

ஸர்வதேவாதிதேவாய ஜ்ஞாநகம்யாய தே நம: ।
நம: புண்யாய ரம்யாய மாதவாய விஷ்ணவே ॥ ௨௨ ॥
ஸர்வைஶ்வர்யாய ஶ்ரேஷ்டாய விசித்ராய மஹாத்மநே ।
நமோ ப்ரஹ்மண்யசாரணாய நமஸ்தே பாபஹாரிணே ॥ ௨௩ ॥
ஸீதாராமாய ஸேவ்யாய ஸ்துத்யாய பரமாத்மநே ।
நமஸ்தே பாணஹஸ்தாய நம: கோதண்டதாரிணே ॥ ௨௪ ॥
நம: கபந்தஹந்த்ரே ச வாலிஹந்த்ரே நமோஸ்து தே ।
நமோஸ்து தஶஶீர்ஷப்ராணஸம்ஹாரகாரிணே ॥ ௨௫ ॥

இதி ஶ்ரீராமசந்த்ராஷ்டோத்தரஶத நாமாவளி:

---

## இராமசந்திர அஷ்டோத்திரசத நாமாவளி.

1. ஸஹஸ்ர சீர்ஷ்ணேநம:
2. ஸஹஸ்ராக்ஷாயநம:
3. ஸஹஸ்ரஹஸ்தாயநம:
4. ஸகஸ்ரசரணுபநம:
5. ஜீமூதவர்ணுயநம:
6. விசுவதோமுகாயநம:
7. அச்சுதாயநம:
8. சேஷசாயினேநம:
9. ஹிரண்யகர்ப்பாயநம:
10. பஞ்சபூதாத்மனேநம:
11. மூலப்ரகிருதயேநம:
12. தேவநாம்ஹிதகாரிநம:
13. ஸர்வலோகேசாயநம:
14. ஸர்வதுக்கநிஷூதனுயநம:
15. சங்கசக்ரகதாபத்ம ஜடாமகுடதாரிணே நம:
16. கர்ப்பாயநம
17. தத்வாயநம:
18. ஜோதிஷாம் ஜோதிஷேநம:
19. வாசுதேவாயநம:
20. தசரதாத்மஜாயநம:
21. இராஜேந்திராயநம:
22. ஸர்வஸம்பத்பிரதாயநம:
23. காருண்யரூபாயநம:
24. கைகேயிப்ரியகாரிணேநம:
25. தாந்தாயநம:
26. சாந்தாயநம:
27. விசுவாமித்ர பிரியாயநம:
28. யக்ஞேசாயநம:
29. க்ரதுபாலகாயநம:
30. கேசவாயநம:
31. நாதாயநம:
32. சாங்கினேநம:
33. ராமசந்திராயநம:
34. நாராயணுயநம:
35. ராமசந்திராயநம:
36. மாதவாயநம:
37. கோவிந்தாயநம:
38. பரமாத்மனேநம:
39. விஷ்ணுஸ்வரூபாயநம:
40. ரகுநாதாயநம:

41. அநாத நாதாயநம:
42. மதுஸூதநாயநம:
43. திரிவிக்ர மாயநம:
44. சிதாயா:பதயேநம:
45. வாமநாயநம:
46. ராகவாயநம:
47. ஸ்ரீதராயநம:
48. ஜானகீ வல்லபாயநம:
49. ரிஷீகேசாயநம:
50. கந்தர்ப்பாயநம:
51. பத்மநாபாயநம:
52. கௌஸல்யா ஹர்ஷகாரிணே [நம:
53. ராஜீவநயநாயநம:
54. லட்சுமணக்ரஜாயநம:
55. காகுஸ்தாயநம:
56. தாமோதராயநம:
57. விபீஷண பரித்ராத்திரேநம:
58. சங்கர்ஷணாயநம:
59. வாஸுதேவாயநம:
60. சங்கரப்ரியாயநம:
61. பிரத்யும்நாயநம:
62. அநிருத்தாயநம:
63. ஸதஸத்பக்திரூபாயநம:
64. புருஷோத்தமாயநம:
65. அதோக்ஷஜாயநம:
67. கரதூஷணஸம்ஹர்த்ரேநம:
68. ஸ்ரீநிருஸிம்மாயநம:
69. அச்சுதாயநம:
70. சேதுபந்தகாயநம:
71. ஜநார்த்தனாயநம:
72. ஹநுமதாசிரயாயநம:
73. உபேந்திரசந்திரவந்தியாய [நம:
74. மாரீசமதனாயநம:
75. வாலிப்ரஹரணாயநம:
76. ஸுக்ரீவராஜ்யதாயநம:
77. ஜாமதக்ய்யமகா தர்ப்பஹ [ராயநம:
78. ஹரயேநம:
79. கிருஷ்ணாயநம:
80. பரதாக்ரஜாயநம:
81. பிதிர்பக்தாயநம:
82. சத்ருக்நபூர்வஜாயநம:
83. அயோத்தியாதி பதயேநம:
84. சத்ருக்நஸேவிதாயநம:
85. நித்தியாயநம:
86. ஸத்தியாயநம:
87. புத்தியாதிஞானரூபிணேநம:
88. அத்வைதபிர்மரூபாயநம:
89. ஞான கம் யாயநம:
90. பூர்ணாயநம:
91. ரம்யாயநம:
92. மாதவாயநம:
93. ஹிதாத்மனேநம:
94. அயோத்தியே சாயநம:
95. சிரேஷ்டாயநம:
96. சின்மாத்ராயநம:
97. பராத்மனேநம:
98. அகல்லியோத்தாரணாயநம:
99. சாபபங்கினேநம:
100. சிதாராமாயநம:
101. சேவ்யாயநம:
102. ஸ்துத்யாயநம:
103. பரமேஷ்டினேநம:
104. பாணஹஸ்தாயநம:
105. கோதண்ட தாரிணேநம:
106. கபந்தஹந்த்ரேநம:
107. வாலி ஹந்த்ரேநம:
108. தசக்ரீவ ப்ராணஸம்ஹார [காரிணேநம:

விஷ்ணுதாஸ! சமஸ்தமான பாபங்களைப் போக்குவதும் சிரேஷ்டமும் பரிசுத்தமுமான ஸ்ரீராமசந்திரருடைய அஷ்டோத்ர சத நாமங்களைக் கூறினேன். அவைகள் பிராணிகளுடைய அதிர்ஷட வசத்தால், இவ்வுலகத்தில் எங்கும் பரவும். அதை ஜனங்கள் பாராயணஞ்செய்து நற்கதி பெறுவார்கள். இந்நாமங்களைச் சொன்ன மாத்திரத்தில், பிர்மஹத்தி யாதி பாபங்களொழியும். பயமற்றுத்திரியும் யமபடர்கள் அணுகார்கள். இந்த நாமங்களைச் சொன்ன மாத்திரத்தில், நெடு நாளாய் அறிய முடியாத ஸ்ரீராமபிரானுடைய பரமாத்ம சொரூபம் பிராணிகளுடைய மனதில் தெளிவாய்ப் பிரகாசிக்கும். இத்தோத்திரத்தை ஒரு மாத காலம் பக்தியுடன் பாராயணஞ் செய்பவன், துர்த்தானம் துர்ப்போஜனம், துர்பாஷாணம் இவைகளாலேற்பட்டிருக்கும் பாபங்களிலிருந்தும் விடுபடுவான். இத்தோத்திரத்தை உச்சரிப்பவனும் ஓதுகிறவனும் மனதில் சிந்திப்பவனும் பிறரால் கேட்பவனும் மகா பாதகங்களிலிருந்து விடுபட்டு ஸ்ரீராமநிஷ்டையை அடைவான்: மகா பாதகங்களைச் செய்பவன் அப்பாபத்திலிருந்து விலகப் பிராயச்சித்தம் பெறவேண்டினுல், இத்தோத்திரததை ஒரு மாத காலம் பாராயணஞ்செய்வதே உத்தம மான பிராயச்சித்தம். சுருதி ஸ்மிருதி புராண இதிகாச ஆகமங்களை நூற்றுக்கணக்காகப் பாராயண செய்ததின் பலன் இத்தோத்திரத்தை ஒருமுறை பாராயணஞ் செய்ததின் பதினறில் ஒருபங்குக்கு ஒப்பாகாது. புத்திரனில்லாதவன் புத்திரபாக்கியத்தையும், த்ரவிய மில்லாதவன் த்ரவியத்தையும், மனைவி யில்லாதவன் மனைவியையும், சம்பத் தில்லாதவன் சம்பத்தையும், இத்தோத்திர பாராயணத்தா லடைவான். கும்போதர முனிவர் யாக குண்டத்திற் கருகில், சீதா ராமருடைய ஸந்நிதியில், ஸ்தோத்தரித்த இராமாஷ்டோத்ர சதநாமஸ்தோத்திரத்தை உனக்குக் கூறினேன்.

ஸ்ரீ ராமாஷ்டோத்ர சதநாம ஸ்தோத்திரத்தைக் கூறும்

5-வது சருக்கம்.

முற்றிற்று.

## 6-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

பிறகு கும்போதர முனிவர் திவ்யாசனத்தில் வீற்றிருந்தார். ரித்விக்குள் சியாமகர்ணமென்னும் அசுவமேதக் குதிரையை யக்ஞ ஸ்தம்பத்தில் கட்டினார்கள். ஏ பிராம்மண சிரேஷ்ட! சாமித்தி ரர்கள் என்னும் ரித்விக்குகள் அக்குதிரையின் ஒவ்வொரு அங்கங் களையுந்தொட்டு அததற்குரிய மந்திரங்களை ஜபித்து சாமித்திரம் என்னும் இடத்திற்குக் கொண்டு போனார்கள். பிறகு ரித்விக்கு கள் அக்குதிரையின் மாம்ச கண்டங்களை யெடுத்து நெய்யில் நனைத்து அக்நியில் ஹோமஞ் செய்தார்கள். இவ்வாறே பல திரவியங்கள் சத்துபாயசம் பசு நெய் இவைகளையும் தேன் கலந்த எள் அறுகு சமித்து இவைகளையும் பக்தி யுடன் ஹோ மஞ் செய்தார்கள். பிறகு உயரக்கட்டியிருக்கும் கோமுகத்தின் வழியாக மந்திரங்களை ஜபித்து சிறிதும் இடைவிடாமல் வசோர்த் தரையிலிருந்து பசு நெய்யானது பெருந்தாரையாக விழும்படி ஹோமஞ் செய்தார்கள். இவ்விதம் நெடுநேரம் வரை யில் யாககுண்டத்தில் ஹோமஞ் செய்து அன்று செய்யவேண் டியதை முடிக்குங் காலத்தில், அந்த ஹோமதூபமானது ஆகாசத் திற் கிளம்பிச் சுற்றிலும் வியாபித்தது. அப்பொழுது கறுத்த ஆகாசந்தான் இன்னும் வெண்மையாகமலிருக்கிறது. சுக கர மான வசந்தருதுவில் மகாபுண்ணிய மாதமாகிய சித்திரைமாதத்தில் இவ்விதம் சோமயாகத்தை முனிவர்கள் நடத்தி முடித்தார்கள். பிறகு சீதையும் இராமரும் அக்நிஹோத்திர முதலிய பிரகிருதி விகுருதி என்னும் யாகங்களை யக்ஞவிதிப்பிரகாரஞ் செய்து திர வியக்ஞான கிரியாரூபியாகிய பகவானைப் பூஜித்தார்கள். ஸ்ரீராம பிரான் நாள்தோறும் அதிகாலையிலெழுந்திருந்து, சீதாதேவியு டன், சம்பு, பிரமதேவர், தேவர்கள், முனிவர்கள், கௌஸல்லியை முதலிய தாய்மார்கள், காமதேனு, தம்மார்பிலிருக்கும் சிந்தாமணி கழுத்தில் அணிந்து கொண்டிருக்கும் கௌஸ்துபம், புஷ்பகம், யக் ஞசாலையின் அதிதேவதை, யக்ஞபுருஷர் இவர்களனைவரையுந்

தனித்தனியே நமஸ்கரித்து, ஸ்ரீராமதீர்த்தஞ்சென்று அங்கு விதிப்படி ஸ்நானஞ்செய்து, ஆஹ்நிகங்கள் யாவையுஞ்செய்து முடித்துச் சங்கரரைப் பக்தியுடன் பூஜித்துக் காமதேனு உதவும் நிவேதனங்களை இரத்நபாத்திரத்தில் சீதை மூலமாகப்பெற்று நிவேதிப்பார்; பிறகு அந்தக் காமதேனுவை நன்றாகப் பூஜித்துவிட்டுத் தமது குரு ஸன்னிதியில் வந்து வீற்றிருப்பார். இவ்வாறே தேவர்களும் முனிவர்களும் ரித்விக்குகளும் காலையில் ஸ்நானஞ் செய்து, ஆஹ்நிகங்களைச்செய்து முடித்துக்கொண்டு யக்ஞமண்டபம் வந்துசேர்வார்கள். ஸௌமித்ரி இராமருடைய உத்தரவுபெற்று அவர்களுக்குக் காமதேனு உதவும் திவ்ய நிவேதனங்களைக்கொண்டு பூஜை செய்வார். இதன்பின் அரசர் முதலியவர்களுக்கு வஸ்திரங்கள், ஆபரணங்கள், பலவிதமான திவ்யபக்குவான்னங்கள், முதலியவைகளை அன்போடளித்து உபசரிப்பார். இவ்விதமே சீதாதேவியின் உத்தரவுபெற்று லக்ஷ்மணன் பத்னியாகிய ஊர்மிளையும் பரதன் பத்னியாகிய மாண்டவியும் சத்ருக்னன் பத்னியாகிய சுதகீர்த்தியும் அவர்களுடைய தோழிமார்களும் அந்தயாகத்துக்கு வந்திருக்கும் மாதர்களுக்கு உபசரணைசெய்வார்கள். பிறகு யக்ஞமண்டபத்தில் ரித்துவிக்குகள் ஸ்வாஹாகாரத்தை உச்சரித்துப் பலவிதமான சுகந்த த்ரவ்யங்களை ஹோமஞ் செய்வார்கள். ஸ்ரீ ராமபிரான் இதன்பின் ஹோமசேஷமான திவ்ய புரோடாசங்களை (மாப்பணியாரம்) சீதையுடன் புசிப்பார். ஸ்ரீராமபிரான் செய்யும் இப்படிப்பட்ட அசுவமேதயாகத்தில் யாவருங்கேட்க, மேககம்பீரமாக ரித்விக்குகள் அஸ்து ச்ரௌஷட் என்று உச்சரித்து யாகாக்னியில் ஹவிஸ்ஸுகளை ஹோமம் பண்ணிய மாத்திரத்தில் தேவர்கள் நேராகவந்து தாங்களே அவைகளைப்பெற்றுப் புசித்தார்கள்.

இந்த யாக சாலையின் நடுமத்தியில் அழகான யாககுண்டம் விளங்கியது. அதைச்சுற்றிலும் ரித்விக்குகளும், அவர்களைச் சுற்றிலும் முனிவர்களும் அவர்களைச் சுற்றிலும் தேவர்களும் அவர்களைச் சுற்றி வித்தியாதரர்களும் அவர்களைச் சுற்றிலுங் யக்ஷகந்தர்வ கின்னர வானரர்களும் அவர்களைச்சுற்றிலும் தேசத்து மன்னர்களும் அவர்களைச் சுற்றிலும் அவர்கள் சேவகர்களும், அவர்

களைச் சுற்றிலும் வாரநாரிகளும் அவர்களைச் சுற்றிலும் வந்திமாக தர்களுமாக சகல ஜனங்களும் உட்கார்ந்திருந்து சுகமாக யாகோத் ஸவங்களைத் தரிசிப்பார்கள்.

ரித்விக்குகள் மாத்தியான்ன காலம் வரும்வரையில் நிதான மாகஹோமங்களைச்செய்து விட்டுப், பிறகு மாத்தியான்னிகம் செய்வ தற்காக சரயூநதிக்குச் செல்வார்கள். அவர்கள் மாத்தியான் ஹிகத் தை முடித்துக் கொண்டு மறுபடி யாகமண்டபம் வந்து சக்ரம் போல் வட்டமான அவரவர்களுடைய ஸ்வர்ணாசனத்தின் மீதுவீற் றிருப்பார்கள். ஈசுவரர்முதலிய தேவர்களும் இவ்விதமாகவே அவ ரவர்களுடைய திவ்யாசனத்தில் வீற்றிருப்பார்கள். இலட்சுமணர் பரதசதருக்னர்களுடன் அவர்கள் யாவரையும் பூஜித்து, அவர்கள் முன்பாக ஸ்வர்ணபோஜன பாத்திரங்களை வைத்து, பரிமாறுவதற் காகச் சீதையை அவசரப்படுத்துவார். பிறகு சீதை ஊர்மிளை, மா ண்டவி, சுதகீர்த்தி, மந்திரிபத்னிகள், மித்ரர்களுடைய பத்னிகள் இவர்கள் ஆயிரக்கணக்காகச்சேர்ந்து, காமதேனு உதவும் சிரேஷ்ட மான அன்னம் முதலிய போஜனபதார்த்தங்களை யாகமண்டபத் தில் வீற்றிருக்கும் யாவருக்கும் பரிமாறுவார்கள். அப்படியவர் கள் பரிமாறும்பொழுது முனிவர்கள் முதலிய யாவரும் மிகவும் சந் தோஷமடைவார்கள்.

இப்படிச் சீதை முதலியவர்கள் பரிமாறும்போது அவர்களு டைய கங்கணம் நூபுரம் நூபுரமணிகள் இவைகளுடைய சப்த மானது யாகமண்டப முழுதும் பரவும். இப்படிவேதியர்கள் அனை வரும் போஜனம்பண்ணும் சமயத்தில், "யாவரும் அவர்களிஷ்டப் படி சாப்பிடவேண்டும். அவரவர் மனத்திற் கருதியவைகளைக் கேட்கவேண்டும். போஜனம் செய்வதில் சிறிதும் சங்கை செய்ய வேண்டாம். மனம் பிடிக்காததைத் தள்ளி விடலாம். போஜனஞ் செய்பவர்கள் திருப்தியடையும்படி பக்குவான்னங்களை அவர்கள் கேட்காம லிருந்தபோதிலும் பரிமாறவேண்டும். நெய்யைத் தாரை தாரையாகவிடவேண்டும். இவைகள் ஸ்ரீராமபிரானுடைய ஆக்ஞை" என்று ஆங்காங்கு போஜனசாலை அதிகாரிகள் கூறுவார்கள். கடைசி

யாக "சுவாமி! கொஞ்சம் அன்னம்! கொஞ்சம் அன்னம் சுவாமி!" என்று கேட்பதும் புசிப்போர்கள் போதும் என்று பதிலளிப்பது மாக யாக மண்டபத்திலெங்கும் சப்தங்கேட்கும். இப்பொழுது ஸ்ரீராமபிரான் தாமே புறப்பட்டு வேதியர்களுடைய பந்திகள்தோறுஞ்சென்று "சுவாமிகளே! இன்னும் ஏதாவது அபேக்ஷையுண்டோ?" என்று பிரார்த்திப்பார். சிலர் தங்களுடைய அபேக்ஷையைத் தெரிவித்துத் திருப்தியாகப் புசிப்பார்கள். அப்பொழுது இராமபிரான் அவர்களுக்கு விசிறியெடுத்து விசிறுவார். வேதியர்களும் முனிவர்களும் இவ்வாறு போஜனஞ்செய்தெழுந்த பிறகு ஸ்ரீராமபிரான் அவர்களுக்குத் தாம்பூலங்கொடுத்து ஸ்வர்ண நாணயங்களைத் தக்ஷிணையாக அளிப்பார். அவர்கள் அவைகளைத் திருப்தியாகப் பெற்றுக்கொண்டு அவரவர் வாசஸ்தலம் செல்வார்கள். பிறகு முன் கூறிய உபசாராதிகள் பெற்று மன்னர்கள் புசிப்பார்கள். பிறகு வைசியர்களும் அவ்வாறே புசிப்பார்கள். தேவஸ்திரீகளும் முனிவர்களுடைய ஸ்திரீகளுடன் ஸ்திரீ போஜனசாலையில் சீதா பிராட்டியினுடைய உபசரணையை யடைந்துபோஜனம் செய்வார்கள். இதன் பின்னர், மன்னர்களுடைய ஸ்திரீகளும் இவ்விதஉபசாரங்களுடனேயே புசிப்பார்கள். பிறகு வைசிய ஸ்திரீகளும் பட்டணத்து ஸ்திரீகளும் புசிப்பார்கள். அதன் பின் சூத்திரஸ்திரீகளும் மனமகிழ்ச்சியுடன் புசிப்பார்கள். பிறகு புருஷர்களுடைய சாலைகளில், வானரர்கள், அரக்கர்கள், கரடிகள், பட்டணத்தவர், தேசத்தவர் இவர்கள்யாவரும் சுகமாகப் புசிப்பார்கள். இதன்பிறகு சூத்திரர்களும் பின் மன்னர்களுடைய சேவர்களும் புசிப்பார்கள். இவ்வசுமேதயாகத்தில் பசியாலாவது தடுக்கப்பட்டாவது வருந்தியவன் ஒருவனுங்கிடையாது: இவர்கள் யாவரும் புசித்த பிறகு ஸ்ரீராமபிரான் தமது மித்திரர்கள், பந்துக்கள், மந்திரிமார்கள் இவர்களுடன் சீதை தம்மைப் பலவாறு பிரார்த்திக்கக் கவலை யற்றுப் புசிப்பார். பூமியின் தூளிகள் தண்ணீர்த்திவலைகள் ஆகாய நக்ஷத்திரங்கள் இவைகள் யாவையும் கணக்கிடின் எவ்வளவு கூடுமோ அவ்வளவு ஸ்திரீ புருஷர்கள் இந்த அசுவமேதயாகத்தில்

நாள் தோறும் புசித்து வருவார்கள். இவ்வளவனந்தகோடி ஜனங்களும் புசித்தபின்னரே சீதாபிராட்டி தனது மாமியார் மித்திர பத்னிகள் ஓரகத்திமார்கள் இவர்களுடன் திவ்யான்ன போஜனம் செய்வாள்.

இப்படி யாவருக்கும் திருப்தியாகப் போஜன மிட்டுத் தாம்பூலங் கொடுக்கும்பொழுது நான்காவது ஜாமத் தொடக்கமாகவிருக்கும்.

இந்த நான்காவது ஜாமத்தில் யாகமண்டபத்தில் சித்திரக்கம்பளங்கள் விரித்து அலங்கரிக்கப்பட்ட சபையில் ஸ்ரீ ராமபிரான் சரித்திரங்கள், நாம கீர்த்தனங்கள், புண்ணியபகரமான சாஸ்திரவாதங்கள், கீதம், வாரநாரிகளின் நர்த்தனம் இவைகளை மனோகரமாக நடக்கும். ஸ்ரீராமபிரான் செய்வித்து, மறுபடி ஹோமகாலம் வரும் வரையில் விநோதமாக அவைகளைச் சிரவணஞ்செய்து வருவார்; பின் சந்தியகாலத்தில் சந்தியாவந்தனம் ஹோமம் இவைகளை விதிப்படி செய்து, இரவு இரண்டு ஜாமம்வரையில் முற்கூறியபடியோ காலக்கைக் கழிப்பார்; பிறகு எல்லாரையும் நித்திரைக்குச் செல்லும்படி உத்தரவளிப்பார். அவர் உத்தரவின்படியே யாவரும் தங்கள் தங்கள் விடுதிக்குச்சென்று நித்திரைசெய்வார்கள். கடைசியாக ஸ்ரீராமபிரான் ஒரு வெண்பட்டைத் தரையில் விரித்து, இஷ்டதேவதைகளைச் சிந்தித்துச் சீதையுடன் நியமமாக ,அதில் நித்திரை செய்வார். அரசர்களுக்குத் தங்கள் ஆக்ஞையை மறுப்பதும் வேதியர்களுக்குச் சம்மானத்தைத் தடுப்பதும் பாரியைகளுக்குத் தனிப்படுக்கை ஏற்படுத்துவதுமாகிய இவைகள் ஆயுதமின்றி வதைப்பதை ஒக்கும். அதனாலேதான் ஸ்ரீராமபிரான் சீதையுடன் சயனித்தார். ஸ்ரீராமபிரானுடைய அசுவமேதயாக உற்சவத்தில் ஒவ்வொரு நாளும் இவ்வாறே யாவும் நடந்து வந்தன.

ஸ்ரீராமபிரானுடைய அசுமேத யாகத்தில் நாடோறும்

நடைபெறுவனவற்றைக்கூறும்.

6-வது சருக்கம்.

முற்றிற்று.

## 7-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

இவ்வாறு நடந்து வருங்காலையில், ஹஸ்த்தியாஹூஸ் என்னும் தினத்தன்று மகாமகிமை யுள்ளவர்களாகிய ரித்விக்குகள், சதஸ்யர்கள் இவர்களை ஸ்ரீ ராமபிரான் சிரத்தையுடன் நன்றாகப் பூஜித்தார். பிறகு சித்திரைமாதம் சுக்லபக்ஷம் பிரதமை திதியில் அந்தயாகமண்டபத்தில் அரசர்கள் விதிப்படி த்வஜாரோபணம் செய்தார்கள்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஆசாரியரே! யாகமண்டபத்தில், அரசர்கள் தவஜாரோபணம் செய்ததாகக் கூறினீர்கள். அதன் விதியை எனக்குத் தெளிவாக விவரித்துக் கூறவேண்டுமென்றார்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாஸ! நீ கேட்டகேள்வி யாவருக்கும் உபகாரத்தைத் தரத்தக்கது. அதை நான் உனக்குக் கூறுகிறேன்; கவனித்துக்கேள். இது ஒரு வருஷகாலம் செய்யவேண்டிய விரதம். இதற்காகவே அரசர்கள் யாவரும் வந்திருக்கின்றனர். அவர்கள் யாவரும் இந்த யக்ஞ மண்டபத்தில் மனமகிழ்ச்சியுடன் த்வஜாரோகணஞ் செய்திருக்கிறார்கள். இங்குச் செய்யாவிட்டால் விஷ்ணு ஆலயத்திலாவது அவசியம் செய்யவேண்டியது. இது ஒவ்வொரு வருஷமும் சித்திரைமாதத்தில், சுக்லப்பிரதமையில் செய்யவேண்டியது. அல்லது ஸ்ரீராம நவமி தினத்தில் செய்யவேண்டும். இவ்விரண்டுதினமும் இல்லையாயின் மேற்கூறிய மாதத்தில் சுக்லபக்ஷ தசமியிலாவது, ஐப்பசிமாத சுக்லபக்ஷ தசமியிலாவது, செய்யவேண்டும். இவ்விரதத்துக்குக் காலங்களைத் தெரிவித்தேன். இனிமகா பாபத்தைப் போக்

இப் புண்ணியத்தைத்தருவதும் ஸ்ரீராமபிரானுக்குச் சந்தோஷ மளிப்பதுமான த்வஜாரோகண மென்னும் விரதத்தைக் கூறுகின்றேன் கேள். இவ்வுத்தமமான துவஜாரோபணத்தை விஷ்ணு ஆலயத்தில் செய்பவனைப் பிர்ம்மதேவன்முதலியவர்கள் பூஜிப்பார்களெனில்,யாம் இதைப்பற்றிக் கூறவேண்டுமோ? மிகவும் ஏழையான ஒருகுடும்பிக்கு ஸ்வர்ணத்தில் ஆயிரம் பாரங்களைக் கொடுப்பதால் உண்டாகும் பயனை, ஒருதரம் இத் துவஜாரோபணவிரதம் செய்வதால் பெறக்கூடும். இந்த விரதத்துக்கு உத்தமமான கங்கா ஸ்நானமும் ஈடாகாது. துளசி பூஜையும் சிவலிங்க பூஜையும் இவ்விதமே தான். சித்திரை மாதத்தில் இவ்விரதத்தை யாவரும் அவசியம் செய்யவேண்டும். சித்திரைமாதஞ் செய்யத்தவறினால் அடுத்த பருவகாலங்களில் அவசியம் செய்யவேண்டும். விரதம் செய்பவன் சித்திரைமாதம் சுக்லபட்சம் பிரதமை திதியில் காலையி லெழுந்திருந்து தந்த சுத்தி முதலியவைகளைச் செய்துகொண்டு சங்கற்பாதிகளுடன் ஸ்நானஞ் செய்து நித்திய கர்மானுஷ்டானத்தை முடித்துக்கொண்டு முதலில் விஷ்ணு பூஜையைச் செய்யவேண்டும். பிறகு நான்கு வேதியர்களை வைத்துக்கொண்டு சொஸ்தி வாசகத்துடன் நாந்திசிராத்தம் செய்ய வேண்டும். இரண்டு துவஜஸ்தம்பங்களில் இரண்டு வஸ்திரங்களைச் சுற்றி அவைகளைக் காயத்திரி மந்திர முச்சரித்து புரோக்ஷணம் செய்து, கருடனும் ஆஞ்சநேயரும் வரைந்த இரண்டு பதாகைகளை அவைகளிற் கட்டவேண்டும். பின் சூரியன் சந்திரன் மாருதி வைநதேயன் இவர்களைப் பூஜிக்கவேண்டும். இரண்டு கலசங்களில் தாதாவையும் விதாதாவையும் ஆவாகனஞ் செய்து, மஞ்சள், அக்ஷதை, அறுகம்புல், வெண்மையான மலர்கள் இவைகளால் பூஜிக்கவேண்டும். பிறகு ஒருபசுவின் தோல் அளவுள்ள ஓரிடத்தைமெழுகி அங்கு அக்னியைப் பிரதிஷ்டைசெய்து, அதில் முதலில் ஆஜ்பாகம் என்னும் ஹோமங்களைச் செய்து, பிறகு கிரமமாக பாயஸத்தாலும் நெய்யினாலும் நூற்றெட்டு ஹோமங்கள் செய்யவேண்டும். அந்த ஹோமங்களை முதலில் புருஷஸூக்த மந்திரத்தாலும் பிறகு விஷ்ணோர்நுகம் என்னும் மந்திரத்தாலு

செய்யவேண்டும். இதன் பின் வைநதேயாயஸ்வாஹா என்று எட்டுத் தடவை செய்யவேண்டும். இவ்விதமே மாருதயேஸ்வா ஹா என்று ஹோமம் செய்யவேண்டும். பிறகு ஸோமோதே னும் என்ற மந்திரத்தால் ஹோமம் செய்யவேண்டும். இதன் பின் சூரிய மந்திரங்களையும் சாந்தி ஸூக்தங்களையும் பக்தியுடன் அங்கு ஜபிக்கவேண்டும். பிறகு அன்றிரவு சுத்தமாக ஹரிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கண்விழித் திருக்கவேண்டும். இவ்விதம் ஒன்பது நாள் பரமோற்சவத்துடனிருந்து சத்சம்பாஷணைகளைச் செய்து வரவேண்டும். பிறகு பத்தாவது தினத்தில் காலையில் எழு ந்திருந்து ஸ்நானஞ்செய்து நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு சந்தனம் புஷ்பம், அக்ஷதை இவைகளால் முன்போலவே கிரமமா கப் பூஜிக்கவேண்டும். பின்பு மங்கள வாத்தியம், வாரநாரி நர்த் தனம், ஸ்தோத்திரங்கள் இவைகளுடன் த்வஜ ஸ்தம்பங்களை எடுத்துக்கொண்டுபோய் விஷ்ணுவாலயத்திற்கு எதிரில் வாசலில் ஸந்தோஷமாக நாட்டவேண்டும். பிறகு அந்த த்வஜஸ்தம்பங் களுக்குச் சந்தனம் புஷ்பம் அக்ஷதை இவைகளால் பூஜை செய்து, தூபதீபங் கொடுத்து மனோகரமான பலகாரங்களை நிவேதிக்க வேண்டும். அப்பால் விஷ்ணு பூஜை செய்யவேண்டும். பிர தமைமுதல் தசமிவரையில், விரதமிருப்பவன் தன்னுடைய கிருகத் தில் த்வஜங்களுக்குப் பூஜை செய்து ஏகாதசியன்று விஷ்ணு வாலயத்தில் அத் த்வஜங்களைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும். அல்லது தசமி, துவிதியை, சதுர்த்தி, அஷ்டமி, சஷ்டி, இந்தத் தினங்களிலாவது விதிப்படி விரதத்தை முடிக்கவேண்டும். விர தத்தின் ஆரம்பம் மட்டும் பிரதமை தினமாகவேயிருக்கவேண்டும். முற்கூறிய மாதங்களில் தான் ஹரி பூஜை செய்யவேடும்; இதரமாதங்களில் செய்யக் கூடாது. இதுவரை விஷ்ணு த்வஜ விரதத்தின் வரலாற்றைத் தெரிவித்தேன். இனிமேல் சிவபெரு மானுடைய த்வஜ விரதத்தின் வரலாறு கூறுகிறேன் கேள்.

விஷ்ணுதாஸ! மாசிமாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்தசியில், நந்தி, பிருங்கி இவ்வுடையாளங்கள் எழுதப்பட்ட பதாகைகள் கட்டிய இரண்டு த்வஜங்களைச் சிவாலயத்துக்கெதிரில் நாட்டி முற்

கூறிய முறைப்படி பூஜித்து வரவேண்டும். சித்திரை மாதத்தில் அல்லது ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பட்சம் அஷ்டமியில் உமாதேவியின் ஆலயத்தில் த்வஜங்களை நாட்டிப் பூஜிக்கவேண்டும். ஆவணி மாதம் சுக்லபக்ஷம் சதுர்த்தியில் விக்னேசுவராலய துவஜாரோபணஞ் செய்யவேண்டும். மார்கழி மாதம் சுக்ல பக்ஷம் சஷ்டியில் சூரியனுடைய ஆலய த்வஜாரோபணம் செய்யவேண்டும். சமஸ்த தேவர்களுடைய உற்சவதினங்களிலும் த்வஜம் நாட்டி முன் சொன்னபடி பூஜை புரியவேண்டும். இவ்விதம் தேவாலயங்களில், மங்களகரமான த்வஜஸ்தம்பங்களை நாட்டி, திரவியக்குறைவின்றி சாஸ்திரோக்தமாக விஷ்ணுவைப் பூஜித்து, வலம் வந்து, பின்வரும் சுலோகங்களைக் கூறித் துதிக்கவேண்டும்.

ध्वजारोपणप्रकारेण विधेय
विष्णुस्तोत्रम्

---

नमस्ते पुण्डरीकाक्ष नमस्ते विश्वभावन ।
नमस्तेऽस्तु हृषीकेश महापुरुष पूर्वज ॥
येनेदमखिलं जातं यस्मिंश्च सकलं प्रतिष्ठितम् ।
लयमेष्यति यत्रैतत्तं प्रपन्नोऽस्मि माधवम् ॥
न जानन्ति परं देवं सर्वे ब्रह्मादयस्सुराः ।
योगिनो यं प्रपश्यन्ति तं वन्दे ज्ञानरूपिणम् ॥
अन्तरिक्षन्तु यन्नाभिर्द्यौर्मूर्धा यस्य चैव हि ।
पादादभूच्चैव पृथ्वी तं वन्दे विश्वरूपिणम् ॥
यस्य श्रोत्रे दिशस्सर्वा यच्चक्षुर्दिनकृच्छशी ।
ऋक्साम यजुषो येन तं वन्दे ब्रह्मरूपिणम् ॥
यन्मुखाद्ब्राह्मणा जाता यद्बाहोरभवन्नृपाः ।
वैश्या यस्योरुतो जाताः पद्भ्यां शूद्रश्च जा
[यत ॥ १ ॥

மநஸஶ்சந்த்ரமா ஜாதோ ஹ்யக்நிஶ்சக்ஷுஷஸ்ததா ।
ப்ராணேப்ய: பவநோ ஜாதோ மூர்த்நோ த்யௌரஜாயத ॥

பாபஸந்தாபமோக்ஷேண வதந்தி பாராஶர்யம் ।
ஸ்வபாவவிமலம் ஶாந்தம் நிர்விகாரம் நிரஞ்ஜநம் ॥ ௮ ॥

க்ஷீராப்திஶாயிநம் தேவம் மநோஜ்ஞமபராஜிதம் ।
ஸத்த்வஸ்தம் விஷ்ணும் பக்திகம்யம் நமாம்யஹம் ॥ ॥ ௯ ॥

ப்ருதிவ்யாதீநி பூதாநி தந்மாத்ராணீந்த்ரியாணி ச ।
ஸூக்ஷ்மாணி ச யேநாவஸம்ஸ்தம் பஞ்சஸர்வதோமுகம் ॥
யத்ப்ரஹ்ம பரமம் தாம ஸர்வலோகோத்தமோத்தமம் ।

நிர்குணம் பரமம் ஸூக்ஷ்மம் ப்ரணதோऽஸ்மி புந: புந: ।
நிர்விகாரமஜம் ஶாந்தம் ஸர்வதோபத்ரமீஶ்வரம் ।
யமாமநந்தி யோகீந்த்ராஸ்ஸர்வகாரணகாரணம் ॥
ஸைகோ விஷ்ணுர்பஹுர்பூதம் ப்ருதக்பூதாந்யநேகஶ: ॥
த்ரீந் லோகாந்வ்யாப்ய பூதாத்மா புங்க்தே விஶ்வபுகவ்யய: ।
நிர்குண: பரமாத்மா ஸமே விஷ்ணு: ப்ரஸீதது ॥ ௧௩ ॥

ஹ்ருதயஸ்தோऽபி தூரஸ்தோ மாயயா மோஹிதாத்மநாம் ।
ஜ்ஞாநிநாம் ஸர்வகஸ்ஸ்வஸ்த: ஸமே விஷ்ணு: ப்ரஸீதது ॥ ௧௪ ॥

சதுர்பிஶ்ச சதுர்பிஶ்ச த்வாப்யாம் பஞ்சபிரேவ ச ।
ஹூயதே ச புநர்த்வாப்யாம் ஸமே விஷ்ணு: ப்ரஸீதது ॥

ஜ்ஞாநிநாம் கர்மிணாஞ்சைவ ததா பக்திமதாம் ந்ருணாம் ।
கதிர்தாதா விஶ்வபாஹ்ய: ஸமே விஷ்ணு: ப்ரஸீதது ॥ ௧௫ ॥

ஜகத்திதாய யோ தேஹமாதத்தே ஸ்வேச்சயா ஹரி: ।
யமர்ச்சயந்தி விப்ராஸ்ஸமே விஷ்ணு: ப்ரஸீதது ॥ ௧௭ ॥

யமாமநந்தி வை ஸந்த: ஸச்சிதாநந்தவிக்ரஹம் ।
நிர்குணஞ்ச குணாதாரம் ஸமே விஷ்ணு: ப்ரஸீதது ॥ ௧௮ ॥

ஸர்வேஶ: ஸர்வகோ நந்த: ஸர்வாத்மா ஸர்வத: ப்ரபு: ।
விஶ்வப்ரபவஸ்ய ஸர்வஜ்ஞய: ஸதேவிஷ்ணு: ப்ரஸீதது ॥ ௧௯ ॥
ய இதம் ஶ்ருணுயாந் நித்யம் ஸ்தோத்ராணாமுத்தமோத்தமம் ।
ஸர்வபாப விநிர்முக்தோ விஷ்ணுலோகே மஹீயதே ॥ ௨௦ ॥

### த்வஜாரோபணகாலத்தில் செய்யும் விஷ்ணுஸ்தோத்திரம்.

ஏ புண்டரீ காக்ஷ! விசுவபாவன! ருஷீகேச! மகா புருஷ் பூர்வஜ! உமக்கு வந்தனம். (௧)

எவரிடத்திலிருந்து உலகம் உற்பத்தியாயிற்றோ, எவரிடத்தில் அது இருந்து வருகிறதோ, கடைசியாக அது எவரிடத்தில் மறைகின்றதோ அந்த மாதவரை நமஸ்கரிக்கின்றேன். (௨)

பிர்மா முதலிய தேவர்கள் எவரைப் பாபிரம்மமென்று அறிகிறதில்லையோ யோகிகள் எவரை ஞான சொரூபியென்று அறிகின்றார்களோ அவரை வணங்குகின்றேன் (௩)

எவருடைய பாதத்திலிருந்து பூமி யுண்டாயிற்றோ எவருக்குப் பாதமுதற்கொண்டு நாபிவரையில் ஆகாயமாகவும் தலை ஸ்வர்க்கமாகவுமிருக்கின்றனவோ அந்த விசுவரூபியைப் பணிகின்றேன்.

எவருக்குத் திக்குகள் சேவிகளோ எவருக்குச் சந்திர சூரியர்கள் கண்களோ, ருக்குயஜுஸ் சாமம் முதலிய வேதங்கள் யாரால் வெளியிடப்பட்டனவோ அவரைத் தொழுகின்றேன். (௫)

எவருடைய முகத்திலிருந்து பிராமணர்களும் எவருடைய கைகளிலிருந்து மன்னர்களும் எவருடைய துடைகளி லிருந்து வைசியர்களும் எவருடைய பாதங்களிலிருந்து சூத்திரர்களும் பிறந்தார்களோ அவருக்கு வந்தனம். (௬)

எவருடைய மனத்திலிருந்து சந்திரனும் எவருடைய கண்களிலிருந்து சூரியனும் எவருடைய பிராணனிலிருந்து காற்றும் எவருடைய முகத்திலிருந்து அக்கினியு முண்டாயிற்றோ அவருக்கு வந்தனம். (௭)

பாபங்களைத் தகிக்கும் மாத்திரத்தால் எவர் புருஷரென்று சொல்லப்படுகிறாரோ எவர் இயற்கையிலே நிர்மலமும் பரிசுத்தமும் விகாரமின்மையும் பற்றுதலின்மையும் உடையவரோ அவருக்கு வந்தனம். (அ)

க்ஷீராப்தி சயனரும் பிரகாசமானமரும் முடிவற்றவரும் ஒருவராலும் ஜயிக்கப்படாதவரும் பக்தவத்ஸலரும் பக்தியால் அடையத்தக்கவருமாயிருக்கிற விஷ்ணுவை நமஸ்கரிக்கிறேன். (கூ)

பிருதிவி முதலிய ஐந்து பூதங்களும் தன் மாத்திரைகளும் இந்திரியங்களும் சூட்சுமேந்திரியங்களும் எவரால் உண்டாக்கப்பட்டனவோ அவரைத் திக்குகள் தோறும் நோக்கி நமஸ்கரிக் கின்றேன். (ம)

பரபிர்மமும் தேஜோரூபியும் லோகங்களிலுள்ள உத்தமர்களுக்குள் உத்தமரும் நிற்குணரும் பரரும் சூட்சுமருமான விஷ்ணுவை அடிக்கடி நமஸ்கரிக்கின்றேன். (கக)

நிர்விகாரரும் அஜரும் சுத்தஸ்ரூபியும் எங்கும் அக்நிசொரூபமா யிருப்பவரும் ஈசுவரரும் சமஸ்தகாரணங்களுக்கும் காரணபூதரும், யோகீந்திரர்களால் வணங்கப்படுகிறவருமான பகவானை நமஸ்கரிக்கின்றேன். (கஉ)

நிற்குணரும் அழிவற்றவரும் பரமானந்த ஸ்வரூபமாகவிருந்து ஆதியில் ஒரே மகாபூதமாகி, பிறகு அளவற்ற பூதங்களாகி மூவுலகங்களிலும் வியாபித்து சமஸ்தத்தையும் புசிக்கிற விஷ்ணுவானவர் அனுக்கிரகிக்கட்டும். (கங)

எல்லாருடைய இருதயத்திலிருப்பவராயினும் மாயாமோகிதர்களுக்குத் தூரத்திலும் ஞானிகளுக்குச் சர்வதர்ம ஸ்வரூபியாகவுமிருப்பவரான விஷ்ணுவானவர் எனக்கு அனுக்கிரகிக்கட்டும். (கச)

நான்கு, நான்கு, இரண்டு, ஐந்து - மறுபடி இரண்டு ஆகிய இககணக்குள்ள மந்திரங்களை உச்சரித்து ஹோமம் செய்யப்படுகிற விஷ்ணுதேவர் அநுக்கிரகிக்கட்டும். (கரு)

ஞானிகள், கர்மிகள், பக்திமான்களான அரசர்கள் இவர்களுக்கு நற்கதியளிப்பவரும் விசுவபோக்தாவுமான விஷ்ணுவானவர் அநுக்கிரகிக்கட்டும். (கசு)

உலக நன்மையின் பொருட்டு, எவர் விளையாட்டாகச் சரீர மெடுக்கின்றாரோ, எவரை ஞானிகள் பூஜிக்கின்றனரோ அந்த ஹரியானவர் அநுக்கிரக்கட்டும். (கஎ)

எப்பொழுதும் பெரியோர்களால் தியானிக்கப்படும் ஆநந்த மூர்த்தியும் குணரஹிதரும் குணாதாரருமான விஷ்ணுவானவர் அநுக்கிரகிக்கட்டும். (கஅ)

பரமேசுவரரும், பரமானந்தரும், பராத்பரரும், பிரபுவும், சித்ரூபரென்று அறியத்தக்கவருமான விஷ்ணுவானவர் அநுக்கிரகிக்கட்டும். (கசு)

நாள் தோறும் இந்த உத்தமமான தோத்திரப்பாக்களைப் பாராயணஞ் செய்கிறவன் சகல பாபங்களிலிருந்து விலகி விஷ்ணுலோகத்தை அடைகிறான். இவ்விதம் விஷ்ணு ஸ்தோத்திரஞ் செய்து இதன் பின், ஆசாரியர் பிராமணர்கள் இவர்களுக்கு வஸ்திரம் தக்ஷிணைகளை யளித்துப் பூஜிக்கவேண்டும். இதற்குப் பின் பக்தியுடன் பிராமணர்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டும். ஏ விஷ்ணுதாஸ! பிறகு புத்திர, மித்தர, களத்திராதிகளுடனும் பந்துக்களுடனும் மௌனமாக விருந்து நாராயண நாமோச்சாரணஞ்செய்துகொண்டு பாரணை செய்ய வேண்டும். இப்படிப்பட்ட உத்தமமான த்வஜாரோபண விரதத்தைச் செய்து முடிப்பவனுடைய புண்ணியத்தைக் கூறுகிறேன் நீ கேள். துவஜஸ்தம்பத்திலே கட்டியிருக்கும் வஸ்திரமானது எவ்வளவு காலம் காற்றினால் அசைந்துகொண்டிருக்குமோ அந்தக்காலம் வரையில் அவனுடைய பாபம் கூட்டங் கூட்டமாக நசித்துவரும். இதில் ஐயமில்லை. மகாபாதகம் செய்தவனானும் வேறு எந்தப் பாபங்களைப் புரிந்தவனானாலும் விஷ்ணு ஆலயத்தில் த்வஜாரோபணஞ்செய்வானேயானால் அப்பாபங்கள் சிறிதும் அவனைச் சேர்கிறதில்லை. ஹரியினுடைய ஆலயத்தில் நாட்டப்பட்ட த்வஜமானது எந்நாள் வரையில் அழியாமலிருக்குமோ அந்நாட்களில் நாளொன்றுக்கு ஆயிரம் யுகக்கணக்காக வைகுண்டத்தில் விஷ்ணு சமீபத்தில் வசிப்பான். தர்மஞ் செய்கிறவர்கள் அவ்

விதமான த்வஜத்தைப் பார்த்து வணங்கினல், அவர்கள் கோடிக் கணக்கான உபபாதககங்ளிலிருந்தும் விலகுகிறார்கள். விஷ்ணுவால யத்தில் நாட்டியிருக்கும் த்வஜஸ்தம்பமானது தனக்குமேல் கட்டி யிருக்கும் வஸ்திரத்தைக் காற்றின் மூலமாக அசைத்துக்கொண்டு தன்னை நாட்டினவனுடைய பாபங்கள் முழுவதையும் அரைநிமிஷ நேரத்திற்குள்ளாக உதறித் தொலைத்து விடுகிறது. ஏ விஷ்ணு தாஸ! நீ கேட்டபடியே மனோகரமான த்வஜாரோபணமகாத் மியத் தை அதன் விதியுடன் உனக்குக் கூறினேன். ஆகையால் மன்னர் கள் யாவரும் இன்று சித்திரை மாதம் சுக்லபக்ஷப் பிரதமை திதி வந்ததை யறிந்து அதில் த்வஜாரோபண விரதத்தை ஆரம்பித்து, த்வஜத்திற்கு ஒவ்வொருவரும் தத்தம் கிருகத்தில் பூஜை செய்து ஸ்ரீராமபிரானை விஷ்ணுவென்று அறிந்து அவருடைய யாகமண்ட பத்திலேயே மறுநாளாகிய துவிதியை யன்று தனித்தனியே ஒவ் வொருவரும் த்வஜாரோபணம் செய்தார்கள். த்வஜத்தை விரதமனு ஷ்டிப்பவன் ஒன்பது நாள் தனது கிருகத்தில் வைத்துப் பூஜை செய்து பிறகு நாட்டலாம். அவரவருடைய சக்திக்கியன்றவாறு இந்த விரதத்தை அநுஷ்டிக்கலாம். இச்சமயத்தில் அரசர்கள் அசுவ மேத மகோற்சவத்தைத் தரிசிப்பதன் நிமித்தம் ஒருநாள். பூஜித்து த்வஜாரோபணம் செய்தார்கள். ஸ்ரீ ராமபிரானும் இதற்கு முன்பே மாசிமாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி யன்று பரமசிவன் முன்பு த்வஜாரோபண உற்சவத்வதைச் செய்திருக்கிறார். அப்பொழுது நாட்டின த்வஜங்கள் ஆகாசமளாவி மிக உன்னதமாக விளங்குகின் றன. இந்தத் துவஜாரோபண சரித்திரம் மிகவும் மனோகரமானது. சகல சம்பத்தையும் அளிக்கக்கூடியது. ஆகையால் புண்ணியகரமான இச்சரித்திரத்தைப் படிப்பவரும் அவரவர் மனக்கோரிக்கைகளைப் பெறுவார்கள்.

த்வஜாரோபண விரதத்தை விளக்கும்

7-வது சருக்கம்

முற்றிற்று.

---

## 8 வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு சித்திரைமாத சுக்லபக்ஷத்தில் இராமபிரானுடைய ஜன்மதினமாகிய நவமிதிதியில் அசுவமேதயாக பலனைத்தரும் அவபிருத ஸ்நானத்தைச் செய்விக்க, குருவாகிய வசிஷ்டமுனிவர் கருதினர்; அப்பொழுது வெயிலின் தாபம் அதிகமாயிருந்தமையால் ஸ்ரீ ராமபிரானுக்கு ஒருவிதமான சமிக்ஞை செய்து அவசரப்படுத்தினர். அந்த சமிக்ஞை அறிந்த இராமபிரான் இலட்சுமணரைப் பார்த்து "ஏ இலட்சுமண! இன்று அவபிருத ஸ்நானஞ்செய்வதற்கு யாவரும் உற்சவகோலத்துடன் இராமதீர்த்தம் செல்லவேண்டும். அதற்காக நீ செய்யவேண்டியவைகள் ஏவையெனில், இங்கு வந்திருக்கும் அரசர்கள் யாவரும் அந்தப்புர ஸ்திரீகளுடனும் தங்கள் தங்கள் சைன்னியங்களுடனும் அசுவமேத மண்டபத்தி லிருந்துகொண்டே அவரவர்களுடைய ரதம் கஜம் துரகம் பதாதி ஒட்டகம் சிவிகை இவைகளை வரவழைத்து வைத்துக் கொள்ளும்படி கட்டளையிடவேண்டும். நவவாத்தியங்கள் எங்கும் முழங்கவேண்டும். பதாகைகளுடன் த்வஜங்கள் தோரணங்கள் இவைகளை எங்கும் கட்டவேண்டும். யாகமண்டபத்தில் முத்துமாலை பவளமாலை மலர்மாலை இவைகளைக் கட்டி அலங்கரிக்க வேண்டும். அந்த யாகமண்டபத்திலிருந்து இராமதீர்த்தம் போகும் வரையிலும் மேற்கூறியபடியே அலங்கரித்து, சந்தனக் குழம்புகளைத் தெளித்து, குளிர்ச்சிசெய்விக்கவேண்டும். வழியில் இருபக்கங்களிலும் வாழை கரும்பு பேரீச்சங்குலைகள் இவைகளைக் கொண்டு அலங்கரிக்கவேண்டும். பூச்செடிகளைவழிநெடுகவைத்து திவ்ய அலங்காரஞ் செய்யவேண்டும். வாரநாரிகள் நர்த்தனஞ் செய்யவேண்டும். பட்டுகளாலும் புஷ்பங்களாலும் வழி முழுதும் பந்தலிடவேண்டும். உனது புத்தியைக்கொண்டும் இன்னும் செய்யவேண்டியவைகளையும் நான் சொல்லாதவைகளில் எவை உனக்கு உசிதமாகப் படுகின்றவோ அவைகளையும் சித்தப்படுத்தும்படி கட்டளையிடு" என்றார். லட்சுமணர் அவர் கூறியபடியே யாவும் நடைபெறும்படி செய்தார். பிறகு அவபிருதஸ்நானஞ் செய்யப்

புறப்படும் தருணத்தில் செய்யவேண்டிய இஷ்டியை [ஓர் யாகம்] விதிப்படி ரித்விக்குகள் செய்தார்கள். அப்பால் நல்ல குதிரைகள் கட்டித்தங்கமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட ஓர் இரதத்தில் யாகாக்கினிகளையும் பாத்திரங்களையும் வைத்தார்கள். வசிஷ்டமுனிவர் இராமரையும் சிதையையும் அந்த இரதத்திலேயே ஏற்றிவைத்து, ரித்விக்குகளுடன் தாமும்அதில் ஏறினர். முனிவர்கள் யாவரும் வேதமோதினர்கள். ஏக சக்கரவர்த்தியாகிய ஸ்ரீராமபிரான் இரதமேறிக்கொண்டு வந்திகள் துதிக்க, வழியில் மெதுவாகச்சென்றார். முதலில் பாதாகையால் அலங்கரித்த யானைகளும் பிறகு குதிரைகளும் பின் குதிரைகளின்மீதிருந்து தூரியவாத்திய கோஷஞ் செய்பவரும் அவர்களுக்குப் பிறகு விசித்ரமான தலைப்பாகைகளும் கையில் திவ்ய தண்டங்களும் தரித்த ராஜதூதர்களும் அவர்களுக்குப் பிறகு வந்திகள் நடர்கள் இவர்களும் பின் வாரநாரிகளும் அவர்களுக்குப் பின் தேவகந்தர்வர்களுமாகப்போய்க் கொண்டிருக்க, இராமர் சிதையுடனும் ரிதவிக்குகளுடனும் அக்நியைப் பாதுகாத்துக் கொண்டு சென்றார். இராமருக்குப்பிறகு முனிவர்களும் அவர்களுக்குப்பிறகு முனிவர்களுடைய பத்தினிமார்களும் மற்றுமுள்ள ஸ்திரீகளும் மெதுவாகச் சென்றார்கள். இவர்களுக்குப்பிறகு மன்னர்கள் அவரவர்களுடைய வாகனத்திலேறிக்கொண்டு சென்றார்கள். அப்பால் அவர்களுடைய சைன்னியங்களும் அதன்பிறகு பலவேறு ராஜசேவர்களும் சென்றார்கள். இவர்களுக்குப் பிறகு நவவாத்தியக்காரர்களும் பிறகு ஒட்டகங்களும் பாணங்கள் முதலிய பல ஆயுதங்கள் நிறைந்த வண்டிகளும் இவைகளுக்குப் பிறகு கொல்லன், தச்சன், சக்கிலியன், பூமியளப்போன், கயிறு, கடப்பாரை, இவைகளைக்கொண்டுவருகிறவர்கள் முதலிய எல்லோரும் சென்றார்கள். இத்தருணத்தில் வாத்தியங்கள் முழங்கின. வாரநாரிகள் நர்த்தனம்செய்தார்கள். முனிவர்களின் பத்தினிகளும் அரசர்களுடைய பத்தினிகளும் மலர்மாரி பொழிந்தார்கள். வந்திமாகதர்கள் யாவரும் வழி நெடுகத் துதித்து வந்தார்கள். கந்தர்வர்கள் களிப் படைந்து ஷட்ஜமம் முதலிய ஸ்வரங்களில் பாடினர்கள். முனிவர்கள் சுரத்துடன் வேத கோஷஞ்செய்

தார்கள். இவ்விதம் சுற்றிலும் நடக்கும் மகோற்சவங்களை ஸ்ரீ ராம பிரான் சீதாபிராட்டியுடன் பார்த்துக்கொண்டு இருபக்கங்களிலும் வர் வெண்சாமரம் விசிவரச்சென்றார். இந்த வைபவத்துடன் வரும் சீதாராமருடைய முககமலங்களைத் தரிசிப்பதற்காகப் பல ஜனங்க ளும் கூட்டமாக வந்து அங்கு நெருங்கிக் கோலாகலஞ் செய்தார் கள். இவர்களை நூற்றுக்கணக்காக பிரம்புக்காரர்கள் அங்கங்கு அடி த்து விலக்கித்தொந்தரவு செய்தார்கள். இப்படி அவர்கள் அடித்துத் தொந்தரவு செய்தது முன்னிலும் அதிகமான கோலாகலத்துக் கிடந்தந்தது. பிறகு இராமபிரான் இந்தக்கூச்சலையும் ஜனங்கள் படுந் தொந்தரவையும் பார்த்து அருகிலிருக்கும் லட்சுமணரைநோக்கி "ஏ இலட்சுமணா! ஜனங்கள் தொந்தரவடையவேண்டாம். புஷ்பகவிமா னத்தை யழைத்து, அதில் அவர்களனைவரையும் ஏற்றிவை. அவர் கள் சுகமாக என்னையும் சீதையையும் தரிசனஞ் செய்யட்டும்'' என் றார். உடனே இலட்சுமணர் விமானத்தை வரவழைத்து ஜனங்களை அதில் ஏற்றிவைத்துச் சுகமாக சீதாராம தரிசனம் செய்யும்படி செய்தார்.

இவ்விதம் அவர்கள் ஸ்ரீராமபிரானைத் தரிசித்துக்கொண்டே விமானத்தில் மெதுவாகச்சென்றார்கள் அக்கூட்டத்தில் சிலர் "இன்று சீதையுடன் ஸ்ரீராமபிரானைத் தரிசித்துச் சந்தோஷித்தோம்'' என்றார் கள். சிலர் "நமது மனக்கோரிக்கை நிறைவேறித்தன்னியர்களானோம்'' என்றார்கள். இன்னும் சிலர்'' நம்மைப்பெற்ற தாய்தந்தையர்கள் வெகு தன்னியர்கள்; அவர்களுடைய புண்ணிய மிகுதியால் சீதாராமரு டைய தரிசனம் கிடைத்தது'' என்றார்கள். இவ்விதம் புருஷர்கள் புஷ்பகவிமானமேறி ஸ்ரீராமபிரானைத் தரிசிப்பதைப்பார்த்து, ஸ்திரீ கள் புஷ்பகவிமானத்தில் தாங்கள் ஏறுவதற்காக ஒரு கூட்டங்கூடி ஒருவர்க்கொருவர் ஆலோசித்து அதை சீதையிடத்தில் தெரிவித்துக் கொண்டார்கள். உடனே ஜானகி தனக்கு எதிரிலிருக்கும் இலட்சு மணரையழைத்து "இலட்சுமணா இம்மாதரனைவரும் எங்களைப் பார்க்கமிகப்பிரியங்கொண்டிருப்பதால், இவர்களையும் இப்புஷ்பகவிமா னத்திலுள்ளமாதர் சாலையில்ஏற்றிவைக்கவேண்டும்"என்றாள்.இலட்சு

மனர் உடனே அப்படியே யாகட்டு சொல்லி அவர்களனைவரையும் விமானத்தில் ஏற்றி வைத்தார்.

விமானத்திலேறிய மாதர்கள் சுகமாக விருந்து சீதா ராமர் களைத் தரிசித்து மலர்மாரி பொழிந்தார்கள். அந்த அவபிருத மகோற்சவத்தில் மிருதங்கம், சங்கம், பணவம், துந்திரி, ஆனகம், கோமுகம் இப்படிப்பட்ட விசித்திர வாத்தியங்கள் முழங்கின. வாரநாரிகள் நர்த்தனஞ் செய்தார்கள். காயகர்கள் கூட்டங் கூட்ட மாகச் சேர்ந்து பாடினார்கள். வீணை வேணு முதலிய கானங்களும் நடந்தன. பூலோகத்தில் இந்த அசுவமேதயாக மகோற்சவத்தி லுண்டாகும் சப்தமானது ஸ்வர்க்கலோகமும் பரவிற்று. யது, சிரேஞ்சயம், காம்போஜம், குரு, கேயம், கோஸலம் முதலிய தே சத்துமன்னர்கள் சொர்ணாபரணங்களணிந்து கொண்டு, கொடி கட் டிய உயரமான த்வஜங்களுடனும் அலங்கரிக்கப்பட்டயானை குதிரை இரதம் காலாள் இவைகளுடனும் பூமி நடுங்கும்படி எஜமானாகிய இராமபிரானுக்குப் பின்னால் சென்றார்கள். சதஸ்யர்கள், ரித்விக் சிரேஷ்டர்கள் இவர்கள் வேத கோஷஞ் செய்தார்கள். தேவர்கள் முனிவர்கள், பிதிர்க்கள், கந்தர்வர்கள் இவர்கள் இராமபிரானைத் துதித்து மலர் மாரிபொழிந்தார்கள். பட்டணத்துப் புருஷர்களும் ஸ்திரீகளும் சந்தனம் மாலை திவ்யவஸ்திரங்கள் இவைகளைத் தரித் துக்கொண்டு திவ்யாலங்கார பூஷிதராய்ச் சென்றார்கள். வாசனைத் தைலம், கோரஸம், சந்தனம் இவைகள் கலந்த மஞ்சள் பொடியால் செய்த குங்குமத்தைப் புருஷர்கள் பூச, அதை யேற்றுக்கொண்டு வாரநாரிகள் இராமர் கூடவே சென்றார்கள். இவ்வித மகோற்சவங் களுடன் ஸ்ரீராமபிரானும் சீதையும் வேடிக்கைகளைப் பார்த்துக் கொண்டு இரதத்தை மெதுவாகச் செலுத்திச் சரயூ நதியிலேற்பட்ட சுபகரமான இராம தீர்த்தத்துக்குச் சென்றார்கள்.

இங்கே வந்ததும் ஸ்ரீராமபிரான் சீதையுடன் இரதத்திலிருந்து இறங்கி, சரயூ நதியின் தண்ணீரில் நின்று ரித்விக்குகள் சூழ ஜலேஷ்டியை (ஓர் ஜலயாகத்தைச்) செய்தார். பிறகு ரித்விக்குகள்

யாவரும் அந்த அவபிருதத்துக்கு அங்கங்களான பத்நீஸம்யஜாம் முதலிய காரியங்களை எஜமான் ஸ்ரீராமபிரானை முன்னிட்டுகொண்டுசெய்தார்கள். பிறகு ஸ்ரீராமபிரான் ஆசமனஞ் செய்ததும் அவருக்குச் சீதாதேவியுடன் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வித்தார்கள். அதன் பின் மந்திரிகளும் முனிவர்களும் முன் சத்ருக்னன் மூலமாக வரவழைத்திருக்கும் பல புண்ணிய தீர்த்தங்களை, துந்துபி முதலிய பலவாத்தியங்கள் முழங்க ஸ்ரீ ராமபிரான்மீது அபிஷேகம் செய்தார்கள். அப்பொழுது முழங்கிய நர துந்துபிகளுக்குச் சரியாகவே தேவதுந்துபிகளும் முழங்கின. தேவர்கள், முனிவர்கள், பிதிர்க்கள், மனிதர்கள், யாவரும் இச்சமயம் மலர்மாரி பொழிந்து வாழ்த்தினர்கள். பிர்ம்ம க்ஷத்திரிய வைச்ய சூத்திரர் முதலிய நான்கு வருணத்தாரும் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தார்கள். மகாபாதகர்களும் இப்பொழுது ஸ்நானஞ்செய்து அவர்களுடைய பாபங்களை பொழித்தார்கள். பிறகு இராமபிரான் புதிதான வெண்பட்டாடையுடுத்துக் கங்கண கேயூர குண்டலங்களை அதற்குரிய அவயவங்களில் அணிந்து கொண்டு முத்துமாலைகள் பலவித மலர் மாலைகள் இவைகளைக் கழுத்திலும், கால்களில் இரத்நமயமான நூபுரங்களையும் அணிந்து கொண்டார். பின் மார்பில் சிந்தாமணியும் கழுத்தில் கௌஸ்துப மணியும் அணிந்துகொண்டு திவ்யதேஜஸுடன் விளங்கினர். தமது உதரத்தில் படிந்திருக்கும் சிந்தாமணி கௌஸ்துபமணி இவைகளின் காந்தியால் கோடி சூரியப் பிரகாசம்போல் விளங்கும் ஸ்ரீ ராமபிரான் ரித்விக்குகள் சூழ சரயூநதியில் மணலில் ஓர் உத்தமமான ஆசனத்தில் ஜனககுமாரத்தியுடன் வீற்றிருந்தார். பின் ரித்விக்குகளுக்கு அலங்காரஞ் செய்து, பசுக்கள், யானைகள், குதிரைகள் இவைகளை திவ்யாலங்காரத்துடன் வேதோக்தமாகச் சரியான காலத்தில் தக்ஷிணையாகக் கொடுத்தார். அதன்பின் காமதேனுவை அலங்காரஞ்செய்து, தமது குருவாகிய வசிஷ்டருக்குக் கொடுப்பதாகக் கருதி, அதைச்செய்ய ஆரம்பித்தார். அதை யறிந்த வசிஷ்ட முனிவர், தமதுமனதில், நமக்குக் காமதேனுவின் பெண்ணாகிய நந்தினி என்னும் ஒரு தேனு இருக்கிறதே. இதனால் நாம் அடையத்தக்க

பிரயோசனம் யாது? ஆகையால் இப்பொழுது ஓர் அபூர்வமான வேடிக்கை செய்வோம். இந்தக் காமதேனுவுக்கு இவரிடத்திலிருப்பது தான் தகும். இவரும் காமதேனுவை வைத்திருக்கவேண்டியது அவசியந்தான். ஆகையால் இந்தக் காமதேனுவை இவரிடத்திலேயே யிருக்கும்படி செய்து மூவுலகங்களிலும் இவருடைய கீர்த்திப் பிரதாபம் விளங்க, சீதையை அலங்காரத்துடனும் தக்க தக்ஷிணையுடனும் தரவேண்டுமென்று யாசித்து இவருடைய உதாரகுணத்தை யாவருக்கும் வெளியிடுகிறேன்'' என்று நிச்சயித்துக்கொண்டு, இராமபிரானைப்பார்த்து,'' ஏ இரகுபுங்கவா! இந்தக் காமதேனுவையா எனக்குத் தானஞ் செய்யப் போகிறீர்? அதனால் எனக்குத் திருப்தியுண்டாகாது. நீர் எனக்குத் தானமளிக்க விரும்பினால் சீதையை சர்வாபரணங்களாலும் அலங்கரித்துத் தானஞ்செய்யும். அப்பொழுது தான் எனக்குத்திருப்தியுண்டாகும். அன்றி வேறெந்த தானத்தை நூற்றுக்கணக்காக அளித்த போதிலும் எனக்குத் திருப்தியுண்டாகாது'' என்றார். இவ்விதம் வசிஷ்டர் கூறியதும் ஜனங்கள் யாவரும் ஆகாகாரம் செய்தார்கள்; மனங்கலங்கினார்கள். வருத்தமுற்றார்கள்; முகம் வடினார்கள். சிலர் "இவ்வசிஷ்டருக்குக் கிழத்தனம் வந்தமையால், பைத்தியம் பிடித்துவிட்டது போலிருக்கிறது" என்றார்கள். சிலர், "முனிவர் வேடிக்கைசெய்கிறார்" என்றார்கள், சிலர் "இராமபிரானுடைய தைரியத்தைப்பார்க்கிறார்" என்றார்கள். சிலர் "இவ்விதங்கேட்டால் இராமபிரான் யாது செய்வார் பார்ப்போமென்று எண்ணிக்கேட்கிறார்'' என்றார்கள். இத்தருணத்தில் ஸ்ரீ ராமபிரான் முனிவர் கூறியதைக் கேட்டு நகைத்து உடனே குரு சந்நிதிக்குச் சீதையை வரும்படி சமிக்ஞைசெய்து சீதை வந்ததும் தமது கரத்தால் அவளது இடது கரத்தை மனமகிழ்ச்சியுடன் பிடித்துக்கொண்டு சபையில் வசிஷ்டரைப்பார்த்து, "ஏ குலகுருவே! நான் சீதா தானம் செய்கின்றேன், தாங்கள் ஸ்திரீதான மந்திரத்தைக் கூறுங்கள்'' என்றார்.

உடனே வசிஷ்ட முனிவரும் நல்லதெனச் சொல்லி முனிவர்கள் கூட்டத்தின் மத்தியில் தான மந்திரத்தை ஓதி ஸ்ரீராமபிரான் அன்போடளிக்கும் ஸ்திரீ தானத்தை ஏற்றுக்கொண்டார். இச்சமயம்

ஸ்தாவர ஜங்கமங்கள் யாவும் நிலை குலைந்து நடுங்கின. மனிதர்கள் யாவரும் தம்வசமற்றுச் சித்திரம்போல் நின்றார்கள். உடனே முனிவர் சீதையைப் பார்த்து "ஏ குழந்தாய்! உன்னை இராமபிரான் எனக்குத் தானமாக அளித்து விட்டமையால் நீ எனக்கு ஒருபெண். எனது முதுகில் ஏறிக்கொள்" என்றார். இதைக்கேட்டதும் சாதுவாகிய சீதாபிராட்டி சிறிதுமனதில் வருத்தமுற்று, ஒரு சார்பாக நோக்கிய வண்ணம் முனிவரது முதுகில் உட்கார்ந்தாள். உடனே தேகம் மயிர்க்குச்செறிந்தது. கண்களில் ஜலம் ததும்பியது. இப்பொழுது இராமபிரான் வசிஷ்டரைப் பார்த்து, வணக்கத்துடன், "குலகுருவே! இந்தச் சுரபியையும் தங்களுக்கு யான் தானமளித்து விடுகிறேன். பெற்றுக்கொள்ளும். முன்கைலாஸத்தில் சிந்தாமணியின் மூலமாக எனக்குச் சந்தோஷமுண்டாக்கிய சீதைக்கு யான் இதை யளித்திருப்பதால் சீதையினிடத்திலேயே இஃதிருக்கட்டும். நானும் அதைத் தங்களுக்கு அளிப்பதாக வரவழைத்து விட்டேன்" என்றார். வசிஷ்டமுனிவர், "ஸ்ரீராமா! ராமா! மகாபகோ! உமது உதாரகுணம் இன்று பிரகாசமடைந்தது. இப்பொழுது யான் யாசித்ததமது சீதை தம்மிடத்திலிருப்பதே சுபம், தராசில் இம்மாதுக்குச்சரியான சொர்ணபாரத்தை நிறுத்து எட்டுத்தடவை எனக்களித்துவிட்டு இச்சபையில் எனது வசனப்படி இம்மாதை நீரே கொள்ளவேண்டும். ஈவிர இன்னுமொரு விஷயமிருக்கிறது. கேளும். ஏ இராகவா! தேநு, சிந்தாமணி, கௌஸ்துபம், சீதை, அயோத்தியா பட்டணம், உமது இராஜ்யம், புஷ்பகம், இவ்வேழினுள் எதையாவது யாருக்கேனும் தானமளிப்பீரானால் அது எனது ஆக்ஞையைத் தவிர்த்ததற்கொப்பாகும். அதனால் மிக்ககிலேசம் நேரிடும். ஆகையால் மேற்கூறிய ஏழையுந் தவிர மற்றவைகளில் நீர் விரும்பியவற்றை யோசியாமல் வேதியர்களுக்குக் கொடும்" என்றார். ஸ்ரீராமர் தமது குலகுருவின் வார்த்தையை ஏற்றுக்கொண்டு ஸ்வர்ணங்களையும் தராசையும் கொண்டு வர ஆக்ஞாபித்து, ஒரு தட்டில் சீதாப்பிராட்டியையும் மற்றொருதட்டில் அவளுக்குச் சரியான ஸ்வர்ணத்தையும் நிறுத்துத் தானமளித்தார். இவ்விதமே இன்னும் ஏழு

தடவை தானமளித்துச் சீதாதேவி தரித்திருந்த ஆபரணங்களையும் அவருக்கே கொடுத்துச் சீதையைமீட்டுக்கொண்டார். அப்பொழுது வாத்தியங்கள் முழங்கின. விமானத்திலிருந்த சுரஸ்திரீகள் சீதா ராமர்கள் மேல் சந்தோஷமாக மலர்மாரி பொழிந்தார்கள். இப் பொழுது சீதாபிராட்டி முன்னினும் அதிகமான ஆபரணங்களை யணிந்து கொண்டாள். ஜனங்கள் யாவரும் அதுகண்டு மகிழ்ந் தார்கள். பிறகு சீதாபிராட்டி ஸ்ரீ ராமபிரானை வணங்கி ஆனந்த சாகரத்தில் மூழ்கி முகமலர்ச்சியுடன் அவரைப் பார்த்துக்கொண்டு அவர் அருகிலேயே யிருந்தாள். பிறகு இராமபிரான் ரித்விக்குகள் சதஸ்யர்கள், வித்வான்கள், முதலிய வேதியர்கள் யாவருக்கும் பல தானங்களை யளித்துப் பூஜை புரிந்தார். அப்பால் தமது ஞாதிகள் மன்னர்கள் மித்திரர்கள் மற்றவர்கள் யாவருக்கும் வஸ்திரா லங்கார பூஷணங்களை யளித்து உபசரித்தார். அப்பொழுது புருஷர்கள் யாவரும் அழகான ரத்னகுண்டலங்கள் தலைப்பாகைகள் சட்டைகள் வெண்பட்டுகள் விலை பெற்ற மாலைகள் இவைகளை யணிந்துகொண்டு மகிழ்ந்தார்கள். மாதர்கள், செவிகளிற் குண்டலங்களை யணிந்தும் இடையில் மேகலாபரணம் பூண்டும் தங்கள் முக கமலங்களின் அளக பந்திகள் பிரகாசிக்க விளங்கினார்கள்.

அசுவமேத யாகத்தின் அவபிருத ஸ்நான

மகோற்சவத்தைக் கூறும்.

8-வது சருக்கம்.

முற்றிற்று.

46

## 9-வது சருக்கம்.

### இராமதாஸர். கூறுகிறார்.

ஸ்ரீ ராமபிரான் இவ்வாறு அவபிருத ஸ்நானஞ் செய்து முடிந்ததும் சம்புவானவர் பிர்மாதி தேவர்களுடன் அவ்விடம் வந்து அவரை வேதங்களினால் துதித்து அவர் முன்பிருந்து "ராகவா, தேவ தேவா! கிருபா நிதியே! சீதையுடனும் சகோதரர்களுடனும் அசுவமேதயாக அவபிருத ஸ்நானஞ்செய்து முடித்திருக்கும் தங்களைத் தரிசித்த நாங்கள் யாவரும் தன்னியரானோம். இது எங்களுக்குச் சந்தோஷந் தரத் தக்க காலம். இந்த மகா புண்ணியமான இராம தீர்த்தம் இனி உத்தமோத்தமமாக விளங்கும். இதற்கு நீர் அநேக வரத்தைத் தந்தருளும். தவிரவும் ஒவ்வொரு வருஷத்திலும் இங்கு எங்களுக்குத் உமது தரிசனம் கிடைக்கவேண்டும். இன்னும் பூலோகத்தில், நீர் யாத்திரை செய்த பொழுது உமது பெயரால் ஏற்பட்ட தீர்த்தங்கட்கும் உமது பெயரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கங்களுக்கும் எனதுசொற்படி வரங்களைக் கொடுத்தருளும். பட்டணங்களுக்குள் அயோத்தி சிரேஷ்டமென்றும் நதிகளுக்குள் சரயூநதி சிரேஷ்ட மென்றும் எனது சொற்படி தாம் கூறவேண்டும்" என்றார். இவ்வாறு சம்புவானவர் கூறியதும் இரகுநந்தனர் நகைத்து "சம்போ! திரிலோகங்களுக்கு உபகாரமாகவும் சந்தோஷமாகவும் கூறிய தமது வார்த்தையின்படியே யானும் நினைத்திருந்தேன். அதை இப்பொழுது கூறுகிறேன் கேளுங்கள். மாதங்கள் பன்னிரண்டுக்குள் இந்த வைகாசி மாதமே சிரேஷ்டமானது. வைகாசி மாதத்திலும் கார்த்திகை சிரேஷ்டமானது; அதைக்காட்டிலும் மாசி மாதம் சிரேஷ்டமானது. அதைக் காட்டிலும் சித்திரை மாதம் சிரேஷ்டமானது. நான் இந்த மாதத்தில் பிறந்தாலும் அசுவமேத யாகஞ்செய்து அவிபிருத ஸ்நானஞ் செய்தமையாலும், தங்களுடைய வாக்கின் மகிமையால், மாதங்களுக்குள் சித்திரையே மேன்மையானது. இம்மாதத்தில் செய்த தானம் ஹோமம் ஸ்நானம் சிந்தனை முதலியவைகள் யாவும் ஒன்று கோடியாகப் பெருகும். அதிலும்

இந்த அயோத்தியில் இன்னும் விசேஷமாகும். இந்த அயோத்தியா புரியானது எனது சொல்லால், எல்லாப் பட்டணங்களுக்கும் முதன்மையாகிய முத்தியளிக்கத் தக்க மகிமையையும் பெறும். மனிதர்கள் வேறிடங்களில் 60 வருஷ காலம் செய்த புண்ணியமானது இங்கு எக்காலத்திலேனும் ஒரு நாள் செய்தால் கைகூடும். ஏ மகாதேவா! அயோத்திக்கு வரங்கொடுக்க வேண்டுமென்று தாங்கள் கூறியபடியால், பட்டணங்களுக்குள் முக்கியமான இந்த அயோத்தியா பட்டணமானது தங்களுடைய காசியைவிட நூறு மடங்கு சிரேஷ்டமானது. நதிகளுக்குள் சரயூநதியைக்காட்டிலும் வேறெந்த நதியும் சிரேஷ்டமானதன்று. இனி சிரேஷ்டமாக ஏற்படுவதுமில்லை. அச்சரயூ நதிக்குள்ளாக எனது பெயரால் யான் ஏற்படுத்திய இந்த இராம தீர்த்தம் தனது தேஜஸினாலும் பிரதாபத்தாலும் மற்றத் தீர்த்தங்கட் கெல்லாம் பிரதானமாக விருந்து சமஸ்த பாதகங்களையும் பரிகரிக்கும். இதில் ஐயமில்லை. இவ்விதமே எனது பெயரால் லோகத்தில் ஏற்பட்ட தீர்த்தங்கள் யாவும் மற்றத் தீர்த்தங்களை விட உத்தமமேயாகும். சங்கரரே! எனது பெயரால் ஏற்பட்ட சிவலிங்கங்கள் யாவும் தரிசன மாத்திரத்தில் முத்தியை யளிக்கும் மகிமையைப் பெறட்டும். இவ்விதமே தீர்த்தங்களும் ஸ்நானத்தால் முத்தியை யளிக்கும் மகிமைபெறட்டும். பூலோகத்தி லுள்ள மனிதர்கள் யாவரும் வருஷந்தோறும் சித்திரை மாதத்தில் இந்த இராம தீர்த்தத்தில் விதிப்பிரகாரம் நியமத்துடன் ஸ்நானம் செய்யவேண்டும் இப்படி ஸ்நானஞ் செய்வதால், அவர்கள் அசுவமேத பலனையும் ஸோமயாக பலனையும் கோமேத பலனையும் அடைவார்கள். பின்னும், சூரிய கிரகண புண்ணியகாலத்தில், குருக்ஷேத்திரத்தில் செய்யும் ஸ்நான தானங்களால் பெறத்தக்க பலனை அயோத்தியிலுள்ள இந்த இராம தீர்த்தத்தில் சித்திரை மாதத்தில் ஸ்நானஞ் செய்பவர்கள் அடைவார்கள். மேலும் மறு ஜன்மத்தைக் கொடாத மோக்ஷ பலனையும் பெறுவார்கள். சுகத்தை விரும்புகிறவன் மாசிமாதத்தில் பிரயாகை தீர்த்தத்திலும் கார்த்திகை மாதத்தில் காசி பஞ்ச கங்க

தீர்த்தத்திலும். வைகாசி மாதத்தில் துவாரகையின் சக்ர தீர்த்தத்திலும் சிரத்தையுடன் ஸ்நானஞ் செய்வது போல், இந்த அயோத்தி இராம தீர்த்தத்தில் சித்திரை மாதத்தில் ஸ்நானஞ் செய்தால் எவனும்தான் இச்சித்தபலனைப்பெறுவதில் ஐயமில்லை ஆகையால் யாவரும் பக்தியுடன் இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து வரவேண்டும் இதுவரையிலும் பன்னிரண்டுமாதங்களுக்குள் மார்க்சீரிஷமே(மார்கழி மாதம்) முதலாக விருந்தது. தேவர்களுக்குள் நீர் தலைமைபெற்றிருப்பது போல் சித்திரை மாதமே இனி மேல் மாதங்களுக்குள் முதலாக ஏற்படும். இந்த அயோத்தியும் அவ்வாறே பட்டணங்களுக்குள் தலைநகரமாக விளங்கும். இப்பொழுது இங்கு வந்திருப்பது போல் இனிவரும் ஒவ்வொரு வருஷசித்திரை மாதத்திலும் இந்திரன் முதலிய தேவர்கள் அவரவர் இருப்பிடத்தை விட்டு இங்கு வந்து இத்தீர்த்தத்தில் வசிப்பார்கள்" என்றார். இவ்வாறு ஸ்ரீராமர் கூறியவைகளைக் கேட்ட கௌசிபானவள் சீதாபிராட்டியைப் பார்த்து "வசிஷ்த! உலகத்துள்ள ஸ்திரீகளுக்கு அநுகூலமாக எனது சொற்படி நீ சிறிது வரங்களை யளிக்கவேண்டும்." என்றாள். உடனே ஜானகி இவ்வுலகத்தில் என் பெயரையுடைய தீர்த்தங்கள் ஆயிரக்கணக்காக இருக்கின்றன. அவைகளில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு விசேஷமான புண்ணியங் கிடைக்குமென்பதில் ஐயமில்லை. அவைகளில் நான் வெகு நாளாய் ஸ்நானஞ் செய்துவந்த இந்தச் சரயூநதியிலுள்ள தீர்த்தமானது மிகவும் சிரேஷ்டமானது அதற்குச் சீதாகௌரி பென்று பெயர். அதில் வைசாக சுக்கில திருதிபையில் ஸ்திரீகள் அவசியம் ஸ்நானஞ் செய்யவேண்டும். அந்த ஸ்நான மானது மிகவும் சிரேஷ்டம். அதில் ஒரு மாதம் ஸ்நானம் செய்கிறவர்கள் சகல பாக்கியங்களையும் பெற்றுப் புத்திர பௌத்திராதிகளுடன் வாழ்வார்கள். இதைத் தவிர மற்றத் தீர்த்தங்களில் சித்திரை மாதம் சுக்கிலபக்ஷம் திருதிதிதை திதியில் ஸ்நானம் செய்வது உத்தமமானது. இராம தீர்த்தங்களிருக்கும் இடங்களில் இடது புறத்தில் எனது தீர்த்தங்களு மிருக்கின்றன. இவைகளில் ஸ்நானஞ் செய்த மாதர்கள் சகல பாதகங்களி லிருந்தும் விடுபட்டு முத்தியைப் பெறுவார்கள்" என்று வரங்களைக் கொடுத்து விட்டு இராமருடைய முன்னிலையி லிருந்தாள்.

இதன் பிறகு குலகுருவாகிய வசிஷ்ட முனிவர் இராமரைப் பார்த்து இனி யாகமண்டபத்திற்குப் போகவேண்டுமெனத் தெரிவித்தார். இரகுகுலோத்தமர் "நல்லது அவ்வாறேசெல்வோம்" என்று ஒப்புக்கொண்டிரித்விக்குகளுடனும் சீதாதேவியுடனும் உடனே இரதமேறினர். அப்பொழுது பேரி, துந்துபி, பணவம் முதலிய சகல வாத்தியங்களும் முழங்கின. வேதியர்கள்வேதகோஷங்களையும்ஜயசப்தங்களையும் மந்திரசப்தங்களையும் பற்பலவிடங்களிலிருந்தும் செய்தார்கள். முந்தி இராமர் யாகமண்டபத்திலிருந்து புறப்பட்டுவரும்போது நடந்தது போல் யாவும் இப்போதும் நடந்தன. அவ்வுற்சவங்களை ஸ்ரீராமபிரான் பார்த்துக் கொண்டே மெதுவாக யாகமண்டபஞ் சென்று, இரதத்திலிருந்து இறங்கி, உடனே யாகாக் கினிகளை அந்தந்தக் குண்டங்களில் ஸ்தாபித்து, சீதையுடனும் ரித்விக்குகளுடனும் அவ்வக்கினிகளில் பூர்ணாகுதிசெய்து பிறகு வஸ்த்திரம் கனிவர்க்கங்கள் இவைகளை அக்நிபகவானுக்கு நிவேதித்துப் பூஜித்து, யாகத்தினுடைய முடிவில் யாகபாத்திரங்களை விசர்ஜனம் செய்து விட்டு ரித்விக்குகள் யாவருக்குப் தக்ஷிணைகொடுப்பதற்காக, அருகேயிருந்த இலட்சுமணரைப் பார்த்து "இலட்சுமணா! ரித்விக்குகளான இம் முனிவர்களைப் பொக்கிஷ மிருக்கு மிடத்துக்கு அழைத்துச் சென்று அவர்களுக்கு அதைக் காண்பித்து அங்கிருக்கும் காவலாளிகளைத் தூரவிலகும் படி செய்துவிட்டு வாய்திறவாமலிருந்து பார்த்துக்கொண்டிரு; அவர்கள் தங்கள் தங்கள் இஷ்டப்படி திரவியத்தை எடுத்துக்கொள்ளட்டும். பிறகு நீ அவர்கள் எடுத்துவைத்த திரவியங்களைத் தனித்தனியே வாகனங்களிலேற்றி அவரவர் ஆசிரமத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விடவேண்டும். பிறகு முனிவர்களுக்கும் வேதியர்களுக்கும் கைநிறைந்த பணங்களை அள்ளித் தானஞ்செய்யவேண்டும்" என்றார். இவ்வாறு ராமர் கூறியதும் இலட்சுமணர் ரித்விக்குகளையழைத்துக் கொண்டு போய் அவ்வாறே செய்தார்; இதன் பிறகு அசுவமேத யாகத்தில் வரித்திருந்த ரித்விக்குகளுக்குத் திருப்தியாகப்போஜனஞ் செய்வித்து, விடை கொடுத்தனுப் பினர்; அப்பால்

பரமசிவன் முதல் தேவர்கள் யாவருக்கும் வஸ்திரம், நன்றாய் அலங்காரஞ் செய்த வாகனங்கள் இவைகளைக் கொடுத்து தமது வைபவத்துக்குத் தக்கப்படி அவர்களை பூஜித்தார். அப்பொழுது அரசர்களிற் சிலருக்குத்திரவியங்களையும்சிலருக்குச்சிவிகைகளையும்சிலருக்குயானைகளையும்சிலருக்கு ஆயுதங்களையும் கொடுத்து அவரவர்களுக்குத் தக்க மரியாதைசெய்தார். பிறகு அந்தப்புர ஸ்திரீகளுக்கும் வேலைபாட்களுக்கும் வஸ்திராபரணம் வாகனம் முதலியவைகளை யளித்துத் திருப்தி செய்வித்தார். கடைசியில் எல்லாருக்கும் திருப்தியாகப் போஜனஞ் செய்வித்தார். பிறகு இராமர் தாமும் திவ்வியவஸ்திரங்களைத் தரித்துக் கொண்டார். இச்சமயத்தில் தேவர்களும் மன்னர்களும் ஸ்ரீராமபிரானுக்குக் கப்பமளித்து வணங்கினார்கள். நதிகள், மலைகள், சமுத்திரங்கள், சர்ப்பங்கள், பக்ஷிகள், பறவைகள், மிருகங்கள், ஸ்வர்க்கம், பூமி, சர்வ பூதங்கள் இவைகள் யாவும் இராமபிரானுக்குத் தக்க உபாயனங்களைக் கொண்டு வந்து சமர்ப்பித்து வணங்கின. இப்போது மகாராஜாவாகிய இராமபிரான் வஸ்திராபரண அலங்காரஞ் செய்து கொண்டு சீதாதேவியுடன் அக்நிபோல் விளங்கினர். அவரை இலட்சுமணர் முதலிய சகோதரர்கள் அருகில்நின்று வணங்கி மகிழ்ந்தார்கள். குபேரன் சிரேஷ்டமான ஒரு ஸ்வர்ணாசனத்தையும் வருணன் சந்திரன் போன்ற பிரகாசம் பொருந்தியதும் சற்றிலும் ஜலத்தை வருஷிக்கக்கூடியதுமான ஒரு குடையையும், வாயுபகவான் இரண்டு வெண்சாமரங்களையும் தர்ம தேவதையானவள் கீர்த்தியைத் தரும் ஒருமாலையையும், இந்திரன் உத்கிருஷ்டமான ஒரு கிரீடத்தையும், தர்மராஜன் துஷ்டர்களை யடக்கும் ஒருதண்டத்தையும், பிரமதேவர் வேதமயமான ஒரு கவசத்தையும், ஸரஸ்வதி உத்தமமான ஒரு ஹாரத்தையும், ருத்திரமூர்த்தி பத்து சந்திரன் போலப் பிரகாசிக்கும் ஒருகத்தியையும், அம்பிகையானவள் நூறுசந்திரன்போல் பிரகாசிக்கும் ஒரு கத்தியையும், சந்திரன் அமிர்தமயமான அசுவங்களையும் துவஷ்டா மிக அழகான ஓர் இரதத்தையும், சூரியன் தனது கிரணமயமான இரண்டு பாதுகைகளையும் இராமபிரானுக்கு உபாயனமாக

அளித்து மகிழ்ந்தார்கள். ஆகாசமானது நாள்தோறும் புஷ்பமாரி பொழிந்தது. தேவர்கள் கீதம் நாட்டியம் வாத்தியம் அந்தர்த்தான சக்தி முதலியவைகளைக் கொடுத்தார்கள். முனிவர்கள் யதார்த்த மான ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். சமுத்திரம் தன்னிடத்துப் பிறந்த ஓர் சங்கத்தை யளித்தது. நாற்றிசையிலுள்ள சமுத்திரங் கள், மலைகள், நதிகள், இவைகள்யாவும் மகாத்மாவாகிய இராம பிரானுக்கு இரத வீதிகளை யளித்தன. பிறகு மன்னர்கள் யாவரும் இரதம் யானை, குதிரை, சிவிகை, விருஷபங்கள், ஒட்டகைகள், தாஸ, தாஸிகள் கத்திகள் இவைகளை யளித்தார்கள். பிறகு ஆயி ரக்கணக்கான தேவபத்னிகளும் ரிஷிபத்னிகளும் சீதாபிராட்டிக்கு திவ்ய வஸ்திரம் அலங்காரம், வாகனம், மங்களகரயான ரவிக்கை கள், விளையாட்டுக்கருவிகள், விசித்திரமான பறவைக்கூண்டுகள் இவைகளை யளித்தனர். இவ்வாறு எல்லாராலும் பூஜிக்கப்பட்ட இரகுநாயகர் வந்திகள் துதிக்க, சீதையுடனும் யாகாக்னிகளுடனும் இரதத்தின் மீதேறினர். அவ்வாறு முனிபுங்கவர்கள் தமது பத்னி களுடனும் தேவபத்னிகளுடனும் புஷ்பக விமானமேறி ஆகாசமார் க்கமாக அயோத்தியிலிருக்கும் ஸ்ரீ ராமபிரானுடைய அரண்மனைக் குச்சென்றார்கள். பிறகு இராமபிரான் முற்கூறிய மகோற்சவ வைப வத்துடன் மெதுவாகச் சென்று, வந்திமாகதர்கள் துதிக்கத் தமது பட்டணத்திற்குள் பிரவேசித்தார். இப்பொழுது இலட்சுமணர் சுற் றிலும் முத்துமாலைகட்டித் தொங்கவிட்ட வெண்குடையைப் பிடித் துவந்தார். பரதன் பனிவிசிறியையும் சத்ருக்னன் இரண்டு சாம ரங்களையு மெடுத்துக்கொண்டு வீசிவந்தார்கள். சுக்ரீவன் தாம்பூல பாத்திரத்தையும் அநுமான் ஜலபாத்திரத்தையும் நீலன் காளாஞ்சி யையும், அங்கதன் சிரேஷ்டமான கண்ணாடியையும், விபீஷணன் பல புது வஸ்திரங்களையும், ஜாம்பவான் அகில் தூப பாத்திரத்தை யும், மந்திரிமார்கள் பலகனிவர்க்கங்கள் நிறைத்துவைத்திருந்த பாத் திரங்கள் பூஜா பாத்திரங்கள் சுகந்த திரவிய பாத்திரங்கள் இவைகளை யும் எடுத்துவந்தனர். இவ்வாறு கொண்டு வரும் சுகந்தப்பொடி யை வாரநாரிகளின் கூட்டத்தில் இராமபிரான் வாரி இறைத்துக் கொண்டு சீதையுடன் இரதத்தில் விளங்கிவந்தார்; வாசனையான

வர்ணப்பொடிகள் கலந்த ஜலத்தைப் பீச்சாங்குழலில் எடுத்து வாரஸ்திரீகள் மன்னர்கள் இவர்களுடைய வஸ்திரங்களில் பீச்சி, அவர்களுடைய வஸ்திரங்களை வசந்தருதுவில் மலர்ந்த பலாச புஷ்பங்கள்போல் சித்திரித்தார்; இப்படி நனைந்த அவர்களுடைய வஸ்திரங்களின் மேல் சுகந்தமான வர்ணப்பொடிகளைவாரி இறைத்து திவ்யவாசனையை ஊட்டிச்சித்தரித்தார்; வாரகாரிகள் நர்த்தனம் செய்ய, வந்திமாகதர்கள் துதிக்க, பட்டணத்தாரனை வரும் மலர்மாரி பொழிய ஸ்ரீராமபிரான் மெதுவாக ராஜவீதியின் வழியே தமது அரண்மனைக்குச்சென்றார். வீதியில் பட்டணத்து ஸ்திரீகள் கும்ப தீபங்களையும் ததியோதனங்கலந்த பலி தீபங்களையும்பூர்ண கும்பங்களையு மெடுத்துக்கொண்டு முன் சென்று சீதா ராமர்களுக்கு நீராஜனம் செய்தார்கள். உடனே ஸ்ரீ ராமபிரான் சீதையுடனும் அக்நியுடனும் இரதத்திலிருந்து இறங்கித் தமது கிரகத்துக்குட்சென்று அக்நியை ஸ்தாபித்து விட்டுப் பிறகு சபைக்குவந்துசிங்காசனத்திலமர்ந்தார். மன்னர்கள் யாவரும் இரகுநாதரை வணங்கினர்கள். மன்னர்களுடைய முடி களிலணிந்திருக்கும் மலர்களின் மகரந்தப்பொடிகள் படிந்த இராமபிரானது பாதபங்கஜங்கள் அம்மன்னர்களுடைய மகுடரத்னகாந்தியால் செந்தாமரை மலர்போல்மிகப் பிரகாசமுற்றுச் சிம்மாசனத்தின்பேரில் விளங்கின. இவ்வாறேஇராஜ பத்னிகளும் தேவபத்னிகளும் சீதா பிராட்டியினுடையபாதபங்கஜங்களை வணங்கினர்கள் அவர்களுடைய சிரசில் அணிந்திருக்கும் ரத்நமயமான சந்திரப்ரபை சூரியப்ரபை என்னும் ஆபரணங்களின் காந்தியும் அம்மாதர்களுடையகூந்தல் மாலைகளின் மகரந்தப்பொடிகளும் படிந்து சீதா பிராட்டியினுடைய பாதபங்கஜங்கள் ஸ்வர்ணமயமாக விளங்கின பிறகும்மகேசுவரர் அச்சபையில் ஸ்ரீ ராமரை ராமஸ்தோத்திரத்தால் துதித்தார். ஸ்ரீ ராமபிரானும் மகேசுவரரை நன்றாய்ப் பூஜித்தார். பிறகு மகேசுவரர் ஸ்ரீ ராமபிரான் அநுமதிபெற்றுத் தமது பரிவாரங்களுடனும் தேவாதிகளுடனும் ரிஷபாரூடராய்த் தமது இருப்பிடத்திற்குச் சொல்லக் கருதினர். இராஜபத்னிகளும் சீதா பிராட்டியை வணங்கி அநுமதிபெற்றுத் தங்கள் தங்கள் இருப்

பிடத்திற்குச்செல்ல வாகனங்களிலேறி அயோத்தியிலிருந்து புறப்பட்டார்கள். பிறகு மன்னர்கள் முதலிய யாவரும் ஸ்ரீராமபிரானது உத்தரவு பெற்றுத் தமது பரிவாரங்களுடனும் சைன்னியங்களுடனும் தத்தம் இராஜ்யமடைந்தார்கள். பரமசிவனும் கைலயங்கிரியையடைந்தார். பிர்மதேவர் ஸத்தியலோகத்திற்குச் சென்றார். இந்திராதி தேவர்களும் ஸ்வர்க்கலோகஞ் சென்றார்கள். மகா சீலர்களும் பிர்ம்மவாதிகளுமான ரித்விக்குகளான முனிவர்கள் தத்தம் ஆசிரமத்தை யடைந்தார்கள். பிறகு இராமபிரான் முன்போலவே சுகமாக சீதையுடனிருந்து இராஜ்யபரிபாலனஞ் செய்து வந்தார். அப்பால் இரண்டு வருஷத்துக் கொருதடவையாக இருபது வருஷத்தில் ஒன்றுக்கொன்று மிக சிரேஷ்டமான பத்து அசுவமேத யாகங்களைச்செய்து முடித்தார். இவ்விதம்செய்த பத்தாவது அசுவமேதயாகத்தில் குலகுருவாகிய வசிஷ்டர் கூறியவைகளைத் தவிர மற்றப்பொருள்கள் யாவற்றையும் ஸ்ரீராமபிரான் வேதியர்களுக்குத் தான மாகக் கொடுத்து ரித்விக்குகளுக்கு நான்கு திக்குகளையும் தானமளித்தாரென்று கேட்டிருக்கிறேன்.

ஏ விஷ்ணு தாஸ! கிருபாநிதிகளாகிய அந்தரித்விக்குகள் தங்களுக்கு அளித்த நான்கு திக்குகளிலுள்ளதேசங்கள் யாவையும் பரிபாலிக்கும் படி ஸ்ரீராம பிரானுக்கே திரும்பவும் கொடுத்து விட்டார்களென்று சொல்லக்கேட்டிருக்கிறேன் நீ கேட்ட மங்களகரமான இராமருடைய அசுவமேத யாக சரித்திரத்தைஉனக்குச் சிறிது கூறினேன். புண்ணியகரமும் மனோகரமுமான இந்த யாககாண்டத்தைத் காலையிலெழுந்து படிப்போர் தங்கள் கோரிக்கைகள் யாவற்றையும் பெறுவார்கள். ஸந்ததி விரும்பியவர்கள் ஸந்ததியையும் பொருளை அபேக்ஷித்தவர்கள் பொருளையும் அடைவார்கள். இந்த யாககாண்டத்தைக் கேட்கிறவன் அசுவமேதயாகபலன் பெறுவான். ஹோமகாலத்திலும் சிராத்த காலத்திலும் சாதுர்மாஸியம் முதலிய கர்மகாலங்களிலும் ஜபம் தியானம் அர்ச்சனம் இவைகளின் ஆரம்பத்திலும் இந்த யாககாண்டத்தைப் படிக்கவேண்டும். ரம்மியமும் பவித்திரமும் புண்ணியகரமுமான இராமபிரானுடைய அசுவ

47

மேதயாக சரித்திரத்தைப் படிப்போரும் கேட்போரும் தங்கள் மன திற் கருதியவைகள் யாவற்றையும் பெறுவார்கள்.

அசுவமேதயாகத்தின் முடிவைக்கூறும்

கூ-வது சருக்கமும் யாககாண்டமும்

(முற்றிற்று.)

உ

# விலாஸகாண்டம்

## 1-வது சருக்கம்.

### சிஷ்யன் வினவுகிறன்.

ஸ்ரீ ராம மூர்த்தியை சிவன் எவ்விதம் ஸ்தோத்திரம் செய்தாரோ அந்த ஸ்தோத்திரத்தைத் தாங்கள் தயைசெய்து விஸ்தாரமாகக் கூறவேண்டுமென்று சிஷ்யன் விநயத்தோடுகேட்க, ஸ்ரீராமதாஸர் அடியில் வருமாறு சொல்லுகிறார்.

### இராமதாஸர் கூறுகிறார்.

குழந்தாய்! நீ வெகு பக்தியோடு கேட்பதால், நான் சொல்வதைக் கவனமாகக்கேள்.

உலகத்தில் மேலானதும் குணங்களுக் கெல்லா மாதாரமானதும் மலரகிதமானதும் மங்களப்ரதானமானது மான வஸ்து எதுவோ அதற்கே நாம் அனைவரும் பக்திசெய்து கைவல்யத்தையடையவேண்டும்.

அதாவது இவ்விதம் உள்ளவஸ்து ஸ்ரீராம என்னும் தாரகமந்திரந்தான். இதுவே ஸம்ஸாரக்கடலிலிருந்து ஸகல பிராணிகளையும் கரையேற்றுவதால், இதற்குத் தாரகமென்று பெயர். இதையே ஸகல ரிஷிகளும் எப்போதும் ஜபித்துக் கொண்டும் தங்களது ஹிருதய கமலத்தில் தியானஞ்செய்துகொண்டுமிருக்கிறார்கள். இதுதான் பிரமமென்று கூறப்படுவது. பிர்ம்மஹத்தியாதி ஸமஸ்தபாபங்களையும் போக்கடித்து நிர்மலானந்தத்தை எப்போதும் விளைவிப்பதும் இதுதான். இப்படிப்பட்ட இந்தப்பரம்பொருளைக் குறிப்பதான ஸ்ரீராம வென்னும் திவ்யநாமத்தை எக்காலத்திலும் உச்சரித்துக் கொண்டிருப்பவர்களுக்கு இவ்வுலகில் எல்லா சௌகரியங்களும் லோகாந்தரத்தில் மோக்ஷமென்னப்படும் நிரதிசயாநந்தமும்உண்டாகுமென்பதில் ஐயமேயில்லை. இவ்வளவு மேன்மை பொருந்திய பரம்பொருளை சிவன் எவ்வாறு ஸ்தோத்திரம் செய்தாரென்பதை நான் உனக்குக் கூறுகிறேன். இந்தஸ்தோத்திரம் ஆத்யாத்மிகம், ஆதிதை

விகம் ஆதிபௌதிக மென்னும் தாபங்களைப் போக்கடித்து பாபங் களெல்லா வற்றையும் நாசஞ்செய்து விஞ்ஞானத்தையும் பிறகு மோக்ஷத்தையும் கொடுக்கக்கூடியது. ஸ்ரீராமமூர்த்தியைப் பற்றிய ஸ்தோத்திரங்களெல்லா வற்றிலும் இது சிறப்பான தாகையால் இதற்கு ராமஸ்தவராஜ மென்று பெயர்.

அயோத்தியா நகரத்தில் அழகிய ரத்னமண்டபத்தில் ரத்னஸிம் ஹாஸனத்தின் மத்தியில் அநேகரத்னங்களா லாகிப் பிரகாசியாநின்ற அஷ்டதளமுள்ள தாமரைப்புஷ்பத்தின் நடுவண் ஆனந்தமாய் வீற் றிருக்கும் ஸ்ரீராமமூர்த்தியை சிவபிரான் தியானஞ் செய்து கூறு கிறார்.

அயோத்தியா நகரத்தில் புத்திரனில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த தசரத மஹாராஜனுக்குப் புத்திரராய் அவதரித்து உலகில் மானுடஜென்மமெடுத்தவன் தனது தந்தைமுதலிய எல்லாரி டத்திலும் நடந்துகொள்ள வேண்டிய மாதிரியைத் தாமே நடத்திக் காட்டி, நம்மை மேன்மையடையும்படி செய்தவராயும் ஆயிரம் ஆதி த்தன் உதயமானாற் போல் பிரகாசி யாநின்ற இந்திர நீல மணியின் காந்தியைப் போன்ற தேக தேஜஸையும் விசாலமான நேத்திரங்களை யும் நீண்ட நாசியையும் துடைவரையில் நீண்டிருக்குங் கைகளையும் உடையவராயும் கிரீடம் முத்தாரம் இரத்தினமாலை குண்டலம் தோள்வளை காப்பு தோடா சிலம்பு முதலான ரத்நாபரணபூஷிதராயும் லோக மனோஹரராயும் ஸ்ரீவத்ஸ மென்ற மருவையும் கௌஸ்துபம் என்ற ரத்னத்தையும் மார்பில் தரித்துசிந்தாமணியுடன் விளங்குபவ ராயும் திக்குகளெங்கும் பரிமளம் வீசப் பச்சைக் கற்பூரம் அகில்கஸ் தூரிமுதலிய வாஸனைத் திரவியங்களைப் பூசிக்கொண்டிருப்பவராயும் துளஸி மந்தாரம் ஜாதிசம்பகம் மல்லிகை முல்லை தாழம்பூ முதலிய புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவராயும் இரகுவம்சத் தரசர் களை மேன்மைப் படுத்தியவராயும் எப்போதும் மந்தஹாஸத் தால் பிரகாசிக்கிற முகாரவிந்தத்தை யுடையவராயும் மஹா யோகிகளெல்லாம் யமநியமாஸனாதி அஷ்டாங்கயோகங்களால் மன தில் தியானம் செய்துகொண்டிருக்கிற திவ்ய மூர்த்தியாயும் எப் போதும் லக்ஷ்மணர் பரதர் சத்ருக்னர், ஆகிய சகோதரர்களால்

சேவிக்கப்படுகிறவராயும், யக்ஷர்கள், கின்னரர்கள், ஸித்தர்கள் ஸாத்தியர்கள் முதலான தேவர்களாலும் தேவேந்திரனாலும் நாரதர் தும்புருமுதலிய மஹாயோகிகளாலும் இரவிலும் பகலிலும் ஸ்தோத்திரஞ் செய்யப்படுகிறவராயும், வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காச்யபர் விசுவாமித்திரர் முதலான ரிஷீச்வரர்களால் சேவிக்கப் படுகிறவராயும் ஸநகஸநந்தன ஸநத்குமாராதி முனிசிரேஷ்டர்களுடனும் யோகீசுவரர்களின் கூட்டங்களுடனும் விளங்குபவராயும் தனுர்வித்தை யானையேற்றம் குதிரையேற்றம் ஆகிய எல்லாவித்தைகளிலும் கரைகண்டவராயும் உலகிலுள்ள பிராணிகளுக்கு ஸகல மங்களங்களையும் கொடுத்தருளுபவராயும் எல்லாப்பிராணிகளின் மனதிலும் பிரவேசித்து ஹிருதயத்திலுள்ள தாபங்களை யெல்லாம் போக்கி ஆனந்தத்தை விளைவிப்பவராயும் விளங்கிக்கொண்டிருக்கிற ஸ்ரீராமசந்திர மூர்த்தியை நான் வந்தனஞ்செய்கிறேன்.

ஸ்ரீ ஶிவ உவாச.

யதேகம் யத்வரம் நித்யம் யதாநந்தம் சிதாத்மகம் ॥
யதேகம் வ்யாபகம் லோகே தத்ரூபம் சிந்தயாம்யஹம் ।
ஸமஸ்தலோகாய ஸ்வாத்யாயம் ராமஸ்ய சிந்தயே ॥
விஜ்ஞாநஹேதும் விமலாயதாக்ஷம்
ப்ரஜ்ஞாநரூபம் ஸ்வஸுகைகஹேதும் ।
ஸ்ரீராமசந்த்ரம் ஹரிமாதிதேவம்
விஶ்வேஶ்வரம் ராமமஹம் பஜாமி ॥　　　　௩

---

பரமசிவன் துதிக்கிறார்.

நித்தியமானதும் சித்ஸ்வரூபமானதும் ஆநந்தமானதும் உலகமெங்கும் வியாபித்ததும் உலகமானதுமான ஏகவஸ்துவை, இராமபக்தியினால் மூவுலகங்களும் க்ஷேமமடைய தியானஞ் செய்கிறேன். ஞான காரணரும் விசாலமான நேத்திரமுடையவரும், திவ்ய சுகசொரூபம் ஆதிதேவரும் ஹரியும் விஸ்வேசுவரரும் புராணகவியும் புராணபுருஷரும், ஸநாதனரும் யோகீசுவரரும் அணுவுக்கணுவா

𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑌰𑍇𑌶𑌂
𑌸𑌨𑌾𑌤𑌨𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑍀𑌶𑌿𑌤𑌾𑌰𑌮𑍍 ।
𑌅𑌣𑍋𑌰𑌣𑍀𑌯𑌾𑌂𑌸𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌂
𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌰𑌾𑌮𑌮𑌸𑍌 𑌦𑌦𑌰𑍍𑌶 ॥ ௪

𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌜𑌗𑌨𑍍𑌨𑌾𑌥𑌮𑌭𑌿𑌰𑌾𑌮𑌂 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌮𑍍 ।
𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 𑌵𑌾𑌗𑍀𑌶𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌮𑍍 ॥ ௫

𑌰𑌾𑌜𑌰𑌾𑌜𑌂 𑌰𑌘𑍁𑌵𑌰𑌂 𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌰𑍍𑌧𑌨𑌮𑍍 ।
𑌭𑌰𑍍𑌗𑌂 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑌂 𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌂 𑌜𑌗𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 ॥ ௬

𑌸𑌤𑍍𑌯𑌂 𑌸𑌤𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌂 𑌜𑌾𑌨𑌕𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍍 ।
𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌕𑌾𑌮𑌦𑌂 𑌕𑌮𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ॥ ௭

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌰𑌵𑌿𑌮𑍀𑌶𑌾𑌨𑌂 𑌘𑍃𑌣𑌿𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌆𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌿𑌣𑌂 𑌸𑍌𑌮𑍍𑌯𑌂 𑌰𑌾𑌘𑌵𑌂 𑌕𑌰𑍁𑌣𑌾𑌕𑌰𑌮𑍍 ॥ ௮

𑌜𑌾𑌮𑌦𑌗𑍍𑌨𑍍𑌯𑌂 𑌤𑌪𑍋𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌪𑌰𑌶𑍁𑌧𑌾𑌰𑌿𑌣𑌮𑍍 ।
𑌵𑌾𑌕𑍍𑌪𑌤𑌿𑌂 𑌵𑌰𑌦𑌂 𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍀𑌪𑌤𑌿𑌂 𑌪𑌕𑍍𑌷𑌿𑌵𑌾𑌹𑌨𑌮𑍍 ॥ ௯

---

யிருப்பவரும் அநந்த சக்தியுள்ளவரும் சர்வ ஜீவேசுவரரும் நாரா யணனும் ஜகந்நாதனும் அபிராமரும். ஜகத்பதியும் வாகீசுவரனும் தசரத புத்திரனும் இரகு சிரேஷ்டரும் கௌஸல்யாதேவியின் ஆன ந்தத்தை விருத்தி பண்ணுகிறவரும் தேஜோரூபியும் வணங்கத் தகு ந்தவரும் விசுவேசுவரரும் ஜகத்குருவும்ஸத்தியஸ்வரூபரும்ஸத்தியப் பிரியரும் சிரேஷ்டரும் ஜாநகீ காந்தரும் பிரபுவும் இலட்சுமணனக்ரஜ ரும் ஸத்ரூபரும் இஷ்டங்களையெல்லாம் கொடுப்பவரும் அரவிந்தா க்ஷரும் ஸூர்யஸ்வரூபரும் ஆனந்தரூபியும் ஸௌம்மியரும் தயாமூர் த்தியும் தபோ மூர்த்தியும் ஜமதக்னியின் புத்திரரான பரசுராம ஸ்வ ரூபியும் வாக்பதியும் வரதரும் துதிக்கத்தக்கவரும் ஸ்ரீபதியும்கருட வாஹனரும் சார்ங்கமென்னுந் தநுசை யேந்தின வரும் சின்மயான ந்தமூர்த்தியும் கிருபாநிதியானபலராமரும் ஈசானரூபியும் கிருபாநிதி யும்கலாநாதரும்ஜகன்மோகனமங்களரும்விக்ரமமுள்ளவரும்மத்ஸ்ய

ஶ்ரீ ஶார்ங்கதாரிணம் ராமம் சிதாநந்தவிக்ரஹம் ।
[illegible] க்ருபாநிதிம் ॥ ௧0

ஶ்ரீவத்ஸாங்கம் [illegible] ஜகந்நாத [illegible] ।
[illegible] வராஹாதி ரூபதாரிணமவ்யயம் ॥ ௧௧

வாஸுதேவம் ஜகத்யோநிம் அநாதிநிதநம் ஹரிம் ।
கோவிந்தம் கோபதிம் விஷ்ணும் கோபீஜநமநோஹரம் ॥ ௧௨

கோபாலம் கோபவர்காட்யம் கோபகந்யா ஸமாவ்ருதம் ।
வித்யுத்புஞ்ஜப்ரதீகாஶம் ராமம் க்ருஷ்ணம் ஜகந்மயம் ॥ ௧௩

கோகோபிகாஸமாகீர்ணம் வேணுவாதநதத்பரம் ।
காமரூபம் கலாவந்தம் காமிநம் காமதம் ப்ரபும் ॥ ௧௪

மந்மதம் மதுராநாதம் மாதவம் மகரத்வஜம் ।
ஶ்ரீதரம் ஶ்ரீகரம் ஶ்ரீஶம் ஶ்ரீநிவாஸம் பராத்பரம் ॥ ௧௫

---

வராஹ முதலான அநேக ரூபங்களைத் தரிக்கிறவரும் அழிவற்றவரும் ஆதியந்தமில்லாதவரும் ஹரியும் கோவிந்தரும் கோபதியும் விஷ்ணுவும் கோபாலர்கள் கோபிகைகள் கோக்கள் முதலியவைகள் சூழ நின்று வேணு கானஞ்செய்பவரும் வித்வஸ் சொரூபத்தினல் பிரகாசிப்பவரும் மிகவும் ஆசையால் காம்யோபாசனை புரிகிறவர்களுக்கு அவரவர் இஷ்டப்படி பலன்களை யப்போதைக் கப்போது கொடுத்தருளும் தயாமூர்த்தியான கிருஷ்ண மூர்த்தியும் மகரத்வஜனை மன்மதரூபியும் மதுராநாதரும் மதாவரும் ஸ்ரீதரும் ஸ்ரீகரரும் ஸ்ரீபதியும் ஸ்ரீனிவாஸரும் பூதேசரும் பூபதியும் ஸகலமான துக்கங்களை நாசஞ் செய்து ஐசுவரியத்தைக் கொடுப்பவரும் துஷ்டர்களான ராக்ஷஸர்களை யெல்லாம் நாசம் செய்பவரும் நரசிம்ம ரூபியும் மகா தேஜஸ்வியும் சிதானந்த ஸ்வரூபரும் நித்யரும் ஓங்கார ரூபியும் ஸூர்யமண்டலத்தில் நித்யமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிற ஜோதி சொரூபரும் பக்தர்களிடத்தில் பிரியத்தோடு அவரவர்கள் கோரும் பலன்களைக்கொடுக்கிறவரும் பக்தப்பிரியரும் கௌஸல்யா புத்திரரும் தலாமூர்த்தியும் காகுஸ்தரும்

ஸுமேதஸம் ஸுபலிநம் ஸ்ரக்விணம் ஸுமதிம் ஸுரிபூஷணம் ।
ஸர்வதுஃகஹரம் வீரம் துஷ்டதாநவமர்தநம் ॥ ௧௬
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவிஷ்ணும் மஹாந்தம் தீப்ததேஜஸம் ।
சிதாநந்தமயம் நித்யம் ப்ரணவம் ஜ்யோதிரூபகம் ॥ ௧௭
ஆதித்யமண்டலகதம் நிஸ்சிதார்த்தஸ்வரூபிணம் ।
லக்ஷ்மீப்ரியம் பத்மநேத்ரம் லக்ஷ்மீநாரீஸ்விதம் ॥ ௧௮
ஔஸௌர்யம் கருணாமூர்த்திம் காகுத்ஸ்தம் கமலாப்ரியம் ।
ஸிம்ஹாஸநே ஸமாஸீநம் நித்யவ்ரதமகல்மஷம் ॥ ௧௯
விஸ்வாமித்ரப்ரியம் தாந்தம் ஸ்வதார நியதவ்ரதம் ।
யஜ்ஞேஸம் யஜ்ஞபுருஷம் யஜ்ஞபாலநதத்பரம் ॥ ௨௦
ஸத்யஸந்தம் ஜிதக்ரோதம் ஸரணாகதவத்ஸலம் ।
ஸர்வக்லேஸாபஹரணம் விபீஷணவரப்ரதம் ॥ ௨௧
தஸக்ரீவ ஹரம் ரௌத்ரம் கேஸவம் கேஸிமர்தநம் ।
வாலிப்ரமதநம் வீரம் ஸுக்ரீவேப்ஸிதராஜ்யதம் ॥ ௨௨
நரவாநரதேவைஸ்ச ஸேவிதம் ஹநுமத்ப்ரியம் ।
ஸுத்தம் ஸூக்ஷ்மம் பரம் ஸாந்தம் தாரகப்ரஹ்மரூபிணம் ॥

---

லக்ஷ்மீப்ரியரும் ஸிம்ஹாஸனாதிபதியாயிருந்தும் தமது விருதானுஷ்டானந்தவறாது நடத்துகிறவரும் களங்கமற்றவரும் விசுவாமித்ரரிடத்தில் பிரியமுள்ளவரும் இந்திரிய நிக்ரகஞ்செய்தவரும் ஏகபத்நீ விரதரும் யக்ஞங்களைச் செய்தவரும் யக்ஞங்களைக் காப்பாற்றுவதில் ஆசையுள்ளவரும் யக்ஞபுருஷரும் உண்மையான பிரதிக்ஞையையுடையவரும் கோபத்தை அடைக்கினவரும் காப்பாற்ற வேண்டுமென்று அண்டினவர்களை நிச்சயமாய்க்காப்பாற்றுகிறவரும் துக்கங்களை யெல்லாம் போக்குகிறவரும் விபீஷணரின் இஷ்டங்களைக் கொடுத்தவரும் தனது துஷ்டச் செய்கைகளால் உலகத்திலுள்ளவர்களைப் பிடித்துக்கொண்டிருந்த இராவணனைச் சங்கரித்தவரும் கேசி யென்னும் அசுரனை நாசஞ்செய்தவரும் வாலியைவதஞ்செய்து சுக்ரீவனுக்கு ராஜ்யத்தைக்கொடுத்தவரும் மனிதர் குரங்கு

ஸர்வபூதாத்மபூதஸ்தம் ஸர்வாதாரம் ஸநாதநம் ।
ஸர்வகாரணகர்த்தாரம் நிதாநம் ப்ரக்ருதே: பரம் ॥ ௨௪

நிராமயம் நிராபாஸம் நிரவத்யம் நிரஞ்ஜநம் ।
நித்யாநந்தம் நிராகாரமத்வைதம் தமஸ: பரம் ॥ ௨௫

பராத்பரதரம் நித்யம் ஸத்யாநந்தம் சிதாத்மகம் ।
மநஸா ஶிரஸா நித்யம் ப்ரணமாமி ரகூத்வஹம் ॥ ௨௬

ஸர்வோத்தமம் வேதவிதாம் வரிஷ்டம்
ஆதித்ய வம்ஶாக்நிஸமப்ரபாவம் ।
ஸர்வாத்மகம் ஸர்வகதஸ்வரூபம்
நமாமி ராமம் தமஸ: பரஸ்தாத் ॥ ௨௭

நிரஞ்ஜநம் நிஷ்ப்ரதிமம் நிரீஹம்
நிராஶ்ரயம் காரணமாதிதேவம் ।

---

கள் தேவர்கள் முதலியவர்களால் சேவிக்கப்படுகிறவரும் அனுமத் பிரியரும் சுத்தமாயும் சூக்ஷ்மமாயும் பரமாயும் சாந்தமாயுமுள்ள தாரக பிர்ம்மமென்று சொல்லப்படுகிறவரும் சர்வபூதரூபியும் அவை களுக்குள்ளிருப்பவரும் சர்வ காரண கர்த்தாவும் பிரகிருதிக்கு மேலான ஆதிகாரணரும் நிராமயரும் நிரஞ்ஜனரும், நித்யானந்தரும் நிராகாரரும் அக்ஞானத்திற்கு விலகினவரும் அத்வைதரூபியும் பரமான வஸ்துவைக்காட்டிலும் பரம்பொருளும், ஸத்யானந்த சித்ஸ்வரூபம் இரகு வம்சத்தரசர்களுக்கெல்லாம் உத்தமருமான ஸ்ரீராமசந்திர மூர்த்தியை மனதாலும் சிரஸாலும் எப்போதும் நமஸ் கரிக்கிறேன்.

வேதங்களை அங்கங்களுடனும் அர்த்தத்தோடும் அத்தியயனஞ் செய்த மகான்களுக்கு தலைமை வாய்ந்தவரும் சூரியன் சந்திரன் அக்னி இவர்களுக்கு மேலான மகிமையையுடையவரும் ஸர்வப்பிரா ணிகளிடத்திலும் பிரகாசிப்பவரும் ஸர்வாத்மகருமான இராம சந்திர ரை நமஸ்கரிக்கிறேன். (௨௭)

ஆசையற்றவரும் நிராச்ரயரும் எல்லா தேவதைகளுக்கும் சிரேஷ்டரும் நித்யரும் சாச்வதரும் விஷயங்களில் பற்றற்றமன

48

𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂
𑌨𑌿𑌰𑌂𑌤𑌰𑌂 𑌰𑌾𑌮𑌮𑌹𑌂 𑌭𑌜𑌾𑌮𑌿 ॥ உஅ

𑌭𑌵𑌾𑌬𑍍𑌧𑌿𑌪𑍋𑌤𑌂 𑌭𑌰𑌤𑌾𑌗𑍍𑌰𑌜𑌂𑌤𑌂
𑌭𑌕𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌭𑌾𑌨𑍁𑌕𑍁𑌲𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌨𑌾𑌥𑌂 𑌭𑍁𑌵𑌨𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌂
𑌭𑌜𑌾𑌮𑌿 𑌰𑌾𑌮𑌂 𑌭𑌵𑌰𑍋𑌗𑌵𑍈𑌦𑍍𑌯𑌮𑍍 ॥ உகூ

𑌸𑌰𑍍𑌵𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌂 𑌰𑌣𑌰𑌂𑌗𑌧𑍀𑌰𑌂
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚𑌿𑌦𑌾𑌨𑌂𑌦𑌮𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 ।
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌶𑌿𑌵𑌂 𑌸𑌜𑍍𑌜𑌨𑌹𑍃𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸𑌂
𑌧𑍍𑌯𑍇𑌯𑌂 𑌪𑌰𑌾𑌨𑌂𑌦𑌮𑌹𑌂 𑌭𑌜𑌾𑌮𑌿 ॥ ௩0

𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌕𑌾𑌰𑌣𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌂
𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 𑌕𑌮𑌲𑌾𑌯𑌤𑌾𑌕𑍍𑌷𑌮𑍍 ।
𑌕𑍁𑌮𑌾𑌰𑌵𑍇𑌷𑌂 𑌕𑌰𑍁𑌣𑌾𑌮𑌯𑌂𑌤𑌂
𑌕𑌲𑍍𑌪𑌦𑍍𑌰𑍁𑌮𑌂 𑌰𑌾𑌮𑌮𑌹𑌂 𑌭𑌜𑌾𑌮𑌿 ॥ ௩க

---

முடையவரும் நிரந்தரருமான இராமசந்திரரை நான் பஜிக்கிறேன். (உஅ)

ஜனன மரணமாகிற ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்கு தெப்பமும் மஹா பக்த சிகாமணியான பரதருக்கு ஜ்யேஷ்டரும் பக்தி செய்பவரிடம் பிரியமுள்ளவரும் ஸூர்ய குலத்தைப் பிரகாசிக்க அவதரித்தவரும் பூதபதியும் லோகங்களுக்கெல்லாம் அதிபதியும் ஜனனமாகிற கொடிய வியாதியைத் தொலைக்கிற வைத்தியருமான இராமரை நான் பஜிக்கிறேன். (உகூ)

யுத்த களத்தில் மஹா தைரியத்தோடு சண்டை செய்யும் லோகைகவீரரும் ஸர்வாதிபத்தியமுடையவரும் ஸத்யரும் சிதானந்த சுக சொரூபரும் மங்களகரரும் ஸாது ஜனங்களின் மனதில் வசிப்பவரும் எல்லாராலும் தியானஞ்செய்யப்படுகிறவரும் பரமானந்த ரூபருமான இராமரை பஜிக்கிறேன். (உஎ)

தாமரைப் பூப்போன்ற நீண்ட நேத்திரங்களை யுடையவரும் காரியம் காரணம் கிரியையாகிய மூவகைசொரூபரும் கருணாநிதியும் கற்பகத்தருவைப்போன்றவரும் பாலருமான இராமரை பஜிக்கிறேன்.

த்ரைலோக்யநாத2ம் ஸரஸீருஹாக்ஷம்
  த3யாநிதி4ம் த்3வந்த்3வவிநாசஹேதும் ।
மஹாப3லம் வேத3நிதி4ம் ஸுரேசம்
  ஸநாதநம் ராமமஹம் ப4ஜாமி ॥ ௩௨

வேதா3ந்தவேத்3யம் கவிபி4ரீடி3தார—
  மநாத்3யமத்4யாந்தவிஹீநமாத்3யம் ।
அகோ3சரம் நிர்மலமேகரூபம்
  பராத்பரம் ராமமஹம் ப4ஜாமி ॥ ௩௩

அசேஷவேதா3த்மக மாதி3தே3வ—
  மஜம் ஹரிம் ராமமநந்தமூர்த்திம் ।
அபாரஸம்வித்ஸுக2மேகரூபம்
  நமாமி ராமம் தமஸ: பரஸ்தாத் ॥ ௩௪

தத்த்வஸ்வரூபம் புருஷம் புராணம்
  ஸ்வதேஜஸா பூரிதவிச்வமேகம் ।
ராஜாதி4ராஜம் ரவிமண்ட3லஸ்த2ம்
  விச்வேச்வரம் ராமமஹம் ப4ஜாமி । ௩௫

---

திரிலோகநாதரும், அரவிந்தாட்சரும் தயாநிதியும் துவந்துவ நாச ஹேதுவும், மகா பலரும் வேதநிதியும் சுரேசுவரரும் புராண புருஷருமான இராமரைப் பஜிக்கிறேன். (௨௯)

வேதாந்தத்தினலறியப்படுகிறவரும் ஆதிமத்யாந்தரகிதரும் வாசாமகோசரரும் ஸாமான்யருக்கு எட்டாதவரும் நிர்மலரும் ஏகரூபரும் பராத்பரருமான இராமரைப் பஜிக்கிறேன். (௩௦)

ஸமஸ்தவேத வேதாந்தஸ்வரூபியும் ஆதிதேவரும் கரையற்ற ஸுகஸ்வரூபியும் பிறப்பற்றவரும் அநந்த சொரூபியுமான இராமரைப்பஜிக்கிறேன். (௩௧)

புராண புருஷரும் தமது தேஜஸால் உலகெங்கும் நிறைந்திருப்பவரும் ராஜாதிராஜரும் சூர்யமண்டலத்திலிருப்பவரும் விசுவேசுவரருமான இராமரைப் பஜிக்கிறேன். (௩௨)

யோகீந்த்ர ஸங்கைரபி ஸேவ்யமாநம்
நாராயணம் நிர்மலமாதிதேவம் ।
நதோ஽ஸ்மி நித்யம் ஜகதேகநாதம் ॥
ஸச்சிதாநந்தமயம் முமுக்ஷும் ॥ ௩௩

அசேஷவித்யாதிபதிம் நமாமி
ராமம் புராணம் தமஸ: பரஸ்தாத்
விபூதிதம் விச்வஸ்ருஜம் விராஜம்
ராஜேந்த்ரமீசம் ரகுவம்சநாதம் ॥ ௩௪

அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம்
ஜ்யோதிஸ்வரூபம் ராமமஹம் பஜாமி ।
அசேஷஸம்ஸார விகாரஹீந—
மாநந்தஸம்பூர்ணஸுகஸ்வரூபம் ॥ ௩௫

நாராயணம் விஷ்ணுமஹம் பஜாமி
ஸர்வஸ்ய ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் ।
முநீந்த்ரகம்யம் பரிபூர்ணமேகம்
காலநிதிம் கல்மஷநாசஹேதும் । ௩௬

---

தத்வஸ்வரூபியும் யோகேந்திரர்களின் கூட்டங்களால் சேவிக்கப் படுகிறவரும் நிர்மலமான ஆதி நாராயணரும் நித்தியரும் ஜகந்நாதம் சிதானந்தஸ்வரூபம் மோக்ஷ சுகத்தைக் கொடுக்கிறவருமான இராமரை நமஸ்கரிக்கிறேன். (௩௩)

ஸமஸ்தமான வித்தைகளுக்கு அதிபதியும் ஸகலஐச்வர்யங்களைக் கொடுக்கிறவரும் உலகங்களை சிருஷ்டித்துக் காப்பாற்றுகிறவரும் விராட்சொரூபரும் ராஜேந்திரருமான இரகுநாதனை வணங்குகிறேன். (௩௪)

மனதிற் கெட்டாதவரும் அவ்யக்தரும் அனந்தரூபியும் ஜாதி சொரூபரும் ஸம்ஸார விகாரங்களற்றவரும் ஆனந்த சுகரூபியுமான இராமரைப் பஜிக்கின்றேன். (௩௫)

ஸகலலோகஸாக்ஷியாயிருப்பவரும் முனீந்திரர்களாலறியப்படுகிறவரும் பரிபூரணரும் காலநிதியும் பாபங்களை நாசஞ் செய்வதற்கு

பராத்பரம் யத் பரமம் பவித்ரம்
நமாமி ராமம் மஹதோ மஹாந்தம் ॥ ௧௬

ப்ரஹ்மா விஷ்ணுஶ்ச ருத்ரஶ்ச தேவேந்த்ரோ தேவதாஸ்ததா ।
ஆதித்யாதி க்ரஹாஶ்சைவ த்வமேவ ரகுநந்தந ॥ ௨௦

தாபஸா ருஷய: ஸித்தா: ஸாத்யாஶ்ச முநயஸ்ததா ।
விப்ரா வேதாஸ்ததா யஜ்ஞா: புராணம் தர்மஸம்ஹிதா: ॥ ௨௧

வர்ணாஶ்ரமாஸ்ததா தர்மா வர்ணதர்மாஸ்ததைவ ச
நாகா யக்ஷாஶ்ச கந்தர்வா திக்பாலா திக்கஜா திஶ: ॥ ௨௨

வஸவோऽஷ்டௌ த்ரய: காலா ருத்ரா ஏகாதஶ ஸ்ம்ருதா:
தாரகா த்வாதஶாதித்யாஸ்த்வமேவ ரகுநாயக ॥ ௨௩

ஸப்தத்வீபா: ஸமுத்ராஶ்ச நத்யோ வ்ருக்ஷாஸ்ததாத்ரய: ।
ஸ்தாவரா ஜங்கமாஶ்சைவ த்வமேவ ரகுநந்தந ॥ ௨௪

---

ஹேதுவானவரும் பரிசுத்தரும் பரம்பொருளும் பராத்பரரும் பெரிதிற்கெல்லாம் பெரிதுமான வருமான இராமரை பஜிக்கிறேன். (௧௬)

ஸ்ரீ ராமசந்திரப் பிரபுவே! பிர்ம்மா விஷ்ணு ருத்ரன் தேவேந்திரன் தேவதைகள் சூரியன் முதலான கிரஹங்கள் இவர்கள் யாவரும்நீரே. (௧௭)

தபஸ்விகள் ரிஷிகள் சித்தர்கள் ஸாத்யர்கள் முனிவர்கள் பிராம்மணர்கள் வேதங்கள் யக்ஞங்கள் புராணங்கள் தர்ம சாஸ்திரங்கள் இவைகளும் நீரே. (௧௮)

வர்ணாசிரமங்கள் தர்மங்கள் நீதிகள் நாகர்கள் யக்ஷர்கள் கந்தர்வர்கள் திக்பாலர்கள், திக்கஜங்கள் திக்குகள் இவர்களும் நீரே, (௧௯)

அஷ்டவசுக்கள் திரிகாலங்கள் ஏகாதசருத்திரர்கள் துவாதசாதித்தர்கள் நக்ஷத்திரங்கள் சப்ததீபங்கள் இவர்களும் நீரே.. (௨௦)

ஸமுத்திரங்கள் குளங்கள் நதிகள் விருக்ஷங்கள் அசையும் பிராணிகள் அசையாப் பிராணிகள் இவைகளும் நீரே. (௨௧)

𑌦𑍇𑌵𑌤𑌿𑌰𑍍𑌯𑌙𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌦𑌾𑌨𑌵𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌵𑍈 𑌖𑌲𑍁 ।
𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑌾 𑌤𑌥𑌾𑌭𑍍𑌰𑌾𑌤𑌾 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 ॥ ௪௨

𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌵𑌦𑍍𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍇𑌵 𑌚 ।
𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌰𑌘𑍁𑌪𑍁𑌙𑍍𑌗𑌵 ॥ ௪௩

𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ।
𑌰𑌾𑌜𑍀𑌵𑌲𑍋𑌚𑌨𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌮𑍍 ॥ ௪௪

---

தேவதைகள் மனிதர்கள் பட்சிகள் தேவாசுரர்களின் மாதா பிதாக்கள் அண்ணன் தம்பி இவர்கள் யாவரும் நீரே. (௪௨)

ஏ இரகுநந்தனே! ஸர்வேசுவரரும் பரபிர்ம்மமும் நீரே, உமது உருவமே இந்த உலகம் நாசமற்ற பரஞ்சோதியும் நீரே. (௪௩)

சாந்தரும் சர்வப்பிராணிகளின் இருதயத்தில் வசிப்பவரும் சூட்சமரும் பரபிர்ம்மமும் ஸநாதனரும் ஜகத்பதியும் அரவிந்தாக்ஷருமான ராமமூர்த்தியும் நீரே. (௪௪)

இவ்விதம் சிவபெருமான் ஸ்தோத்திரஞ் செய்தவுடன் ஸ்ரீராமபிரான் அவருக்குப் பிரசன்னமாகி நான் உமது ஸ்தோத்திரத்தால் ஸந்தோஷமடைந்தேன். உமக்கு வேண்டியவரனைக் கேட்டுக்கொள்ளும் என்றார்.

சிவபிரான் இராமரைப்பார்த்து ஏ இராமா! ஸர்வலோக ரக்ஷகரான பிரபுவே! எனக்கு வேறுவரன் ஒன்று வேண்டுவதில்லை. ஸம்ஸாரத்தைத் தொலைப்பதான உமதுபாதாரவிந்தத்தில் அசஞ்சலமான பக்தி எப்போதும் இருக்கவேண்டும். இந்த ஒருவரனைத் தாங்கள் கொடுத்தருளினால் இதுவே எனக்கு மேலான பாக்கியம் என்றார். ஏ விஷ்ணுதாஸ! இவ்விதம் பரமசிவனால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட ஸ்ரீராமர், அவருக்கு அந்த வரனைக் கொடுத்துவிட்டு உலகத்துள்ள ஜனங்களின் நன்மைக்காக, அவரால் சொல்லப்பட்ட ஸ்தவராஜமென்னும் ஸ்தோத்திரத்திற்கும் அதிக மேன்மையுண்டாகுமெனவும் அனுக்கிரகம் செய்தார். அந்த ஸ்தவராஜத்தையே வெகு ஆவலோடு கேட்டதால் உனக்கெடுத்துரைத்தேன். இது ஸாக்ஷாத் பரமசிவனால் சொல்லப்பட்ட வேதங்களின் ஸாரமானதால்

இதனைத் தினந்தோறும் பாராயணஞ் செய்தாலும் அல்லது பக்தியுடன் கேட்டாலும் பிர்ம்மஹத்தி சொர்ணஸ்தேயம் ஸுராபானம் முதலிய மஹா பாதகங்களுடன் உலகிலேற்பட்ட பாபங்களையெல்லாம் ஒழித்து மனதிற்கு சுத்தியையும் நிரதிசயானந்தத்தையும் உண்டுபண்ணும். மனதால் செய்யப்பட்ட பாபமானாலும் வாக்கினல் செய்யப்பட்ட பாபமானாலும் கர்மத்தினல் செய்யப்பட்ட பாபமானாலும் ஸ்ரீராமனை ஒரு தரம் அன்புடன் ஸ்மரித்த மாத்திரத்தில் வெகு தீவிரமாய் விலகி விடுகின்றது என்பது சத்தியம்! சத்தியம்!

ஸத்யமாயும்பரமாயுமிருக்கிற பிர்மம் இராமன் தான். அவரைத் தவிர இவ்வுலகில் வேறொன்றுமில்லை. இவ்வுலகமே ஸ்ரீராமஸ்வரூபமானது. மலர்ந்து அழகிய நீலோத் பலம் போன்ற தேக காந்தியையுடையவரும் நிர்மல குணமுடையவரும் முனீந்திரர்களின் மனதாகிய மானஸ ஸரஸில் ஸஞ்சரிக்கும் ஹம்ஸமும்ஜனன மரண ரூபமான ஸம்ஸாரத்தை நாசம் செய்கிறவருந் தடுக்க முடியாத பராக்கிரமசாலியும் ரகுகுலத்திற்குத் திலதம் போன்ற வரும் புராண புருஷரும் தயாநிதியும் ஸர்வேசுவரருமான ஸ்ரீராம சந்திர மூர்த்திக்கு நாம் தினந்தோறும் வந்தனம் செய்வோமாக.

---

## விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

கருணாநிதியாகிய எனது குருவே அயோத்தியா நகரத்தில் ராமனும் சீதையுமாக எந்தெந்த சுகங்களை யனுபவித்தார்கள். என்னென்ன நன்மையான காரியங்களைச் செய்தார்கள். இவைகளைத்தயை செய்து தாங்கள் தெரிவிக்கவேண்டும்.

---

## ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஏ சிஷ்ய! நீ நல்ல விஷயங்களைக்கேட்கிறாய்! இப்போது நான் சொல்வதைக் கவனமாய்க் கேள்,

ஸ்ரீ ராம சந்திர மூர்த்தியானவர் முதலில் பெரும் யுத்தத்தைச் செய்து பிறகு அசுவமேத முதலிய யாகங்களை நடத்திவிட்டு அயோத்தியா பட்டணத்தில் சீதையோடும் அநேக விதமான சுகத்தை யனுபவித்துக்கொண்டிருந்தார். சீதையும் ஸ்ரீராமரும் வெகு வேடிக்கையாய் இருந்துகொண்டு அநேக அற்புதச் செய்கைகளைச் செய்து கொண்டிருந்தார்கள். இவைகளைக்கேட்கும்போது வெகு ஆச்சரியமாயிருந்தாலும் பிறகு நமக்கு மங்களங்களெல்லாம் உண்டாக்கும். அவர்களின் விலாஸ சரிதங்களைச் சொல்லுவதற்கு யாரால் முடியும்? இருந்தாலும் நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

கைலையங்கிரியில் ஜகத்பதியாகிய பரமசிவன் பார்வதி தேவியாரோடு சுகமாக இருந்து வருவதுபோல் ஸ்ரீராமர் சீதாதேவியோடு அநேக லீலைகளைச்செய்துகொண்டு அயோத்தியில் வசித்து வந்தார். ஸ்ரீராமபிரான் வசித்து வந்த கிருகம் சொர்ணத்தில் இரத்தினங்கள் பதித்து வெகு அழகாக அமைக்கப்பட்டிருக்கும். அந்த கிருகத்தில் ஸ்ரீராமபிரானது பள்ளிபறை பார்க்கவெகு விநோதமாக விருக்கும் அந்த அறையின் சுவர்களில் இரத்தினங்கள் பதித்திருக்கும். அங்குள்ள தூண்களில் பளிங்குகள் பதித்துச் சித்திரங்கள் வரைந்திருக்கும். அங்கங்கே அறைகளில், முத்துகளும் இரத்னங்களும் ஸ்வர்ணங்களும் குவியல் குவியல்களாக நிறைந்திருக்கும். அந்த கிருகத்தில் வெகு ஜனங்கள் ஸஞ்சரிப்பினும் ஒருவர்மேல் ஒருவர் படாமல் சஞ்சரித்தல் கூடும் மேலும் அந்த கிருகம் அநேகமாடிகளும் பெரிய கூடங்களும்உடையதாயிருக்கும். ஆங்காங்கு இரத்தனமயமான தீபங்களும் மரகதம்முதலிய நவரத்னமயமான பதுமைகளும் சாமரம் குடை முதலிய உபசார சாமான்களும் இன்னும் மற்றுமுள்ள வெகு நேர்த்தியான சாமான்களும் கணக்கில்லாமல் காணப்படும். வேறு சில விடங்களில் சொர்ணமயமான கட்டில்களும் அவைகளுக்குவேண்டிய உபகரணங்களும் பார்ப்பவர்களின் மனதைக் கவரத் தக்கபடிவைத்திருக்கும். இன்னொரு பக்கத்தில் பீதாம்பரம் வெண் பட்டுமுதலியவைகளால் நன்றாய் அலங்கரிக்கப்பட்ட பல்லக்குகளும்

ராஜாஸனங்களும் கணக்கில்லாமற் காணப்படும். வீடு முழுவதும் இரத்தின தீபங்கள் ரமணீகரமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும். விலாமிச்ச வேரினால் செய்யப்பட்ட சாமரங்களும் விசிறிகளும் கணக்கில்லாமல் இருக்கும். அவ்விடத்தில் ஏலம் கிராம்பு ஜாதிக் காய் ஜாதிப்பத்திரி முதலிய வாஸனைத் திரவ்யங்களோடு நல்ல வெற் றிலைகளும் சிப்பிச் சுண்ணும்பும் நிறைந்த வெற்றிலைத் தட்டுகளும் அங்கங்கே அன்றன்று புதிது புதிதாகக் கொண்டுவந்து வைக்கப் பட்டிருக்கும். நவரத்னபரணங்களானும் விலையுயர்ந்த வஸ்திரங்களா லும் நன்முய் அலங்கரித்துக்கொண்ட, இரம்பை ஊர்வசி முதலான தேவஸ்திரீகளுக்கொப்பான தாஸிகள் தங்கள் கைகளில் ஸ்வர்ணம் வெள்ளி இவைகளாலாகிய பிடிகளையுடைய சாமரங்களை யேந்தி இராமருக்கும் ஸீதைக்கும் உபசாரங்களைச் செய்வார்கள். சில விடங்களில் தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப் பட்டபக்ஷிக்கூடு கள் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும். இவைகளில் சில, ஸ்ரீராமர் யாகம் செய்தபோது ஸீதாதேவிக்கு அநேக ராஜபத்தினிகளால் பரி சாக அளிக்கப்பட்டன. இந்தக்கூடுகளில் மயில்களும் ஹம்ஸங்களும் ஸாரஸ பக்ஷிகளும் நாகணவாய்ப் பறவைகளும் கிளிகளும் கோகி லங்களும் அந்தந்தக் காலங்களில் போடப்பட்ட மிருதுவான ஆகார ங்களைப் புசித்துவிட்டு உல்லாஸமாயும் அநேகவிதமாய்க் கூவிக்கொ ண்டுங் கேட்பவர்களின்மனதை ஆனந்தப்படுத்திக்கொண்டுமிருக்கும். அந்தப் பக்ஷிகள் செய்யும் சப்தங்களின் மகிமையை என்னென்று கூறுவது ! காட்டில் வசித்துக்கொண்டு ஆகாரமில்லாமல் சீதோஷ்ண ங்களை ஸஹித்துக்கொண்டு காயக்லேசஞ்செய்த மகரிஷிகள் தங்கள் மனதில் தியானம் செய்யும் பரம்பொருளின் நாமமாகிய இராமவெ ன்னும் திவ்ய நாமத்தைப் பழக்கத்தால் பக்ஷிகள் யாவும் அடிக்கடி சொல்லித் துதிக்கும் ; அப்படித் துதிப்பதைக் கண்டவர்கள் இப்ப க்ஷிகள் ஜீவன் முக்திதசையை அடைந்து விட்டனவென்று கருது வார்கள்.

𑌪𑌕𑍍𑌷𑌿𑌣 𑌊𑌚𑍁𑌃.

𑌜𑌯𑌤𑍁 𑌰𑌾𑌘𑌵𑍋 𑌜𑌾𑌨𑌕𑍀𑌯𑍁𑌤𑍋
  𑌜𑌯𑌤𑌿 𑌵𑍀𑌰 𑌰𑌾𑌜 𑌰𑌾𑌜𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌗𑍍𑌰𑌜𑍋
  𑌜𑌯𑌤𑍁 𑌶𑍍𑌰𑍀𑌪𑌤𑌿𑌸𑍍𑌤𑌾𑌟𑌕𑌾𑌨𑍍𑌤𑌕𑌃 ॥ ௧

𑌜𑌯𑌤𑍁 𑌕𑍌𑌶𑌿𑌕𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌵𑌰𑌂 𑌗𑌤𑍋
  𑌜𑌯𑌤𑍁 𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌂 𑌘𑌾𑌤𑌕𑍋 𑌭𑌾𑌨𑍁 ।
𑌜𑌯𑌤𑍁 𑌗𑍌𑌤𑌮𑌾𑌹𑌲𑍍𑌯𑌯𑌾 𑌸𑍍𑌤𑍁𑌤𑍋
  𑌜𑌯𑌤𑍁 𑌜𑌾𑌨𑌕𑍀 𑌤𑌾𑌤 𑌪𑍂𑌜𑌿𑌤𑌃 ॥ ௨

𑌜𑌯𑌤𑍁 𑌨𑌃 𑌪𑌤𑌿𑌶𑍍𑌚𑌾𑌪 𑌭𑌂𑌜𑌨𑍋
  𑌜𑌨𑌕𑌜𑌾𑌕𑌰𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑌾𑌲𑌯𑌾 ।
𑌨𑍃𑌪𑌸𑌭𑌾𑌙𑍍𑌗𑌣𑍇 𑌕𑍌𑌶𑌿𑌕𑌾𑌨𑍁𑌗𑌃
  𑌪𑌰𑌶𑍋𑌭𑌿𑌤𑌶𑍍𑌚𑌾𑌤𑌿𑌹𑌰𑍍𑌷𑌿𑌤𑌃 ॥ ௩

---

பக்ஷிகள் துதிக்கின்றன

ஸீதாதேவியுடன் கூடிய ராகவருக்கு ஜயம் உண்டாகுக! ஸமஸ்தமான ராஜாதி ராஜர்களுக்கும் ஈச்வரராயும் தசரதரின் பிள்ளையும் லக்ஷ்மணரின் ஜேஷ்ட ஸகோதரராயும் லக்ஷ்மீபதியாயும் தாடகையைக் கொன்றவராயும் இருக்கிற ஸ்ரீராமருக்கு ஜயம் உண்டாகுக! (௧)

விச்வாமித்ரரின் யாகத்தை ரக்ஷிக்கச்சென்று அங்கே ராக்ஷஸர்களை யெல்லாம் நாசம் செய்து அஹல்யையும் பெண்ணாக்கி அவளாலும் அவளது கணவரான கௌதமராலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு மிதிலா நகரம் சென்று அங்கே ஜனகமகாராஜனால் உபசரிக்கப்பெற்ற ஸ்ரீராமர் ஜயத்தை யடைவாராக! (௨)

சிவதனுஸை ஒடித்து ஸீதாதேவிக்கு மாலை யிட்டு ஸகல அரசர்களும் புகழ விச்வாமித்திரரைப் பின் றொடர்ந்து வந்த ஸ்ரீராமர் ஜயம்பெறுவாராக! (௩)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ௪

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ௫

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ௬

[illegible]
[illegible]

---

சீதையின் தாமரை மலர் போன்ற பாதங்களில் தமது கைகளை வைத்துக் கமலம் போன்ற ஹஸ்தங்களால் அஞ்சலி பந்தம் செய்த இராகவர் நம்மைச் சுகமாய்க் காப்பாற்றவேண்டும். (௪)

ஸீதாதேவி ஆலிங்கனம் செய்து கொள்ளும் அழகு வாய்ந்தவரும், பிரகாசம் பெற்றவரும், பரசுராமரால் கொடுக்கப்பட்ட தனுசை வளைத்துப் பிதாவுக்குத் தன் பலத்தை வெளியிட்டவருமான ஸ்ரீராமருக்குச் சகல மங்களங்களுமுண்டாகுக! (௫)

சீதாதேவியோடு சில காலம் போகங்களையனுபவித்துக்கொண்டிருந்து கைகேயியின் ஏவலினால் வனஞ்சென்று வெகு காலம் மலையில் வசித்துக்கொண்டிருந்து காட்டில் அத்திரி மஹரிஷியால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமருக்கு ஜயம் உண்டாகட்டும்! (௬)

விராதனைக்கொன்று தூஷணன் முதலானவர்களையும் நாசம் செய்து மான் வேடம் பூண்ட மாரீசனை ஸம்ஸாரத்திலிருந்து கரை

ஜயது யோ ம்ருகம் சேதவ்யஹத்வா
ஜயது ய: கபந்தம் க்ஷணாஜ்ஜஹௌ ॥ ௭

ஜயது வாலிஹா ஸேதுகாரகோ
ஜயது ராவணாதிப்ரமர்தக: ।
ஜயது ஸ்வம் புரம் ப்ராப்ய ஸீதயா
ஜயது மங்களஸ்நாநக்ருந்முதா ௮

ஜயது வாக்யதோ ப்ராஹ்மணஸ்ய ய:
ஸகலபூதலம் வ்யசரச்சிரம் ।
ஜயது யாகக்ருல்லோகசிக்ஷயா
ஜயது ஜாநகீம் ரஞ்ஜயந் ஸ்தித: ௯

---

யேறும்படி செய்து க்ஷண காலத்திற்குள் கபந்தனையும் கொன்ற பகவானுக்கு ஜயம் வரக்கடவது! (எ)

வாலியைக்கொன்று ஸமுத்திரத்தில் அணையைக் கட்டி ராவணன் முதலான கொடிய துஷ்டர்களை வதம் செய்து சீதாதேவியோடு தமது நகரமான அயோத்தியை யடைந்து மங்கள ஸ்நானம் செய்து சுகமாயிருக்கிற ஸ்ரீராமசந்திர மூர்த்திக்கு ஜயம் உண்டாகக் கடவது! (அ)

பிராம்மணனுடைய வாக்கியத்தினால் வெகுகாலம் பூமியில் ஸஞ்சரித்து உலக நன்மைக்காக யாகங்களைச் செய்து சீதாதேவியோடு சுகமாயிருக்கிற ஸ்ரீராமமூர்த்திக்கு ஸகல ஜயமும் உண்டாகுக (௯)

---

## இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராகவர் விஷயமாய்ப் பக்ஷிகள் கூறிய இந்த உத்தமமான ஒன்பது சுலோகங்களையும் உலகில் பக்தியோடு படிப்பவனுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகும். இவ்விதமான அழகிய கிருகத்தில் ஸ்ரீராமர் ஸீதாதேவியோடு ஏகபத்நீவ்ரத முள்ளவராய்

வெகு சுகங்களை யனுபவித்துக் கொண்டிருந்தார். சீதாதேவியும் அப்போதைக் கப்போது அவர் மனதிற்கொத்தபடி நடந்து அவரைச் சந்தோஷப்படுத்தி வந்தாள். இப்படியிருக்கையில், ஒரு நாள் ஸ்ரீராமர் மஞ்சத்தின் மீது உட்கார்ந்துகொண்டு சீதையினுடைய விலாஸங்களால் மிகவும் ஸந்தோஷ மடைந்து சீதையை வர்ணிக்க ஆரம்பித்தார். "தாமரைப் பூப்போன்ற கண்களையுடைய ஏ சீதே! நீ பிர்ம்மாவினுல் எவ்விதம் சிருஷ்டிக்கப்பட்டாய்? அவரால் நீ சிருஷ்டிக்கப்படவில்லை யென்று எனக்குத்தோன்றுகிறது. ஏனென்றால், உனதுரூபத்திற்குச்சரியான வேறொருமாதை இந்த உலகில்காணேன். உனது நகங்கள் பிரதமைச்சந்திரனுக்கொப்பானதாயிருக்கின்றன. நகமத்தியிலுள்ள சிவப்புக் கோடுகள் மாதுளை முத்துகளின் மத்தியிலுள்ளவஸ்துக்கள் போலிருக்கின்றன. கால் பெருவிரல்கள் அழகுள்ளவைகளாயும் சக்ராகாரமாயு மிருக்கின்றன. உள்ளங் கால்கள் மிருதுவாயும் தாமரைத் தளம் போன்றவைகளாயும் கொடி குடை சாமரம் முதலிய ரேகைகள் அமைந்து மேலான அழகோடு விளங்குகின்றன. கணுக்காலுக்கு மேற்பட்ட இடமோ தசையடர்ந்ததாயும் வழ வழப்பாயும் அநேக ராஜஸ்திரீகள் வந்து வணங்குவதற்கு யோக்கியமாயுமிருக்கின்றது. துடையோ வாழைமரத்தையும் யானையின் துதிக்கையையும் தனது காந்தியாலும் உருவத்தாலும் ஜயித்துவிட்டது. இடுப்பு மிகவும் மெலிந்ததாய், இருக்கின்றதோ இல்லையோவென்று ஐயுறத்தக்கதா யிருக்கின்றது. அங்குள்ள மடிப்புகளைப் பார்த்தால் வீணையின் தந்தியோவென்று நினைக்க வேண்டியதாயிருக்கிறது. உன்னுடைய ஸ்தனங்களோ தங்கக்குடத்திற்குச் சமமாய்ப் பருத்தும் யானை மஸ்தகத்தை யொத்துமிருக்கின்றன. கைகள் நீண்டு பருத்து மெதுவாய் யானையின் தும்பிக்கைக்குச் சமமாயிருக்கின்றன கைவிரல்கள் நீண்டுமெலிந்து வழவழப்பாயும் அழகாயும் இருக்கின்றன உள்ளங்கையில் சங்கு மத்ஸியம் முதலிய பாக்கிய ரேகைகள் மிகவும் காண்கின்றன. புறங்கை பருத்தும் தசையடர்ந்தும் பார்ப்பவரெல்லாருக்கும் ஆனந்தத்தை யுண்டாக்கக் கூடியதாயு மிருக்கின்றது. கழுத்துச் சங்குக்குச் சமானமாய்ப்

பருத்து மாம்ஸமடர்ந்திருக்கிறது. பிடரியோ வெகு சிலாக்கியமாய் பாக்கிய ஸூசகமான ரேகைகளுடன் கூடியதாயிருக்கிறது. கன்னம் பருத்து நடுவில் பள்ளமாகவும் உருண்டையாகவும் இருக்கிறது. கீழ் உதடு கொவ்வைக்கனியும் துளிரையும்போல் மிகவும் சிவந்து அமிர்தத்திற் கொப்பாயிருக்கிறது. பற்கள் முல்லை புஷ்பத்திற்குச் சமானமாயும் மிகவும் ரமணியமாயும் இருக்கின்றன. மூக்கு நீண்டு அழகுவாய்ந்திருக்கிறது. கண்கள் விலாசமாய்த்தாமரை மலருக்குச் சமானமாயிருப்பதுமன்றி பெண்மான்களின் கண்கள்போல் அடிக்கடி சலித்துக்கொண்டு பார்ப்பவரின் மனதை இழுக்கின்றன. உனது செவிகள் அகன்று அதிபாரத்தைத் தாங்குவனபோல் தோன்றுகின்றன. புருவங்கள் கறுப்பாகவும் மெலிந்த மன்மதபாணம் போலவும் இருக்கின்றன நெற்றி விசாலமாயும் ஸமமாயும் மிருதுவாயும் இருக்கின்றது. வயிறு கங்கைக்கரைபோல்அழகாயும் தலைமயிர் நன்றாய்க் கறுத்து வண்டுகளின்கூட்டம்போலவுமிருக்கின்றன. தலை சிறுத்து உருண்டையா யிருக்கின்றது; தலைப்பின்னல் நாகம்போல் இடுப்புக்குக் கீழ்வரையில் தொங்குகிறது. உன் சரீரகாந்தியானது சண்பகப் பூவிற்குச் சமானமானது. ஸீதே! சந்திரன் உன் முகத்தோடு போட்டிபோட்டுக் குறைவை யடைந்து விட்டான். உன் நேத்திரத்தினால் ஜயிக்கப்பட்ட பெண்மான் காட்டில் ஓடுகிறது; உன் புருவத்தோடு கலகத்திற்கு வந்த வில்லை முந்தியே நான் ஒடித்துவிட்டேன். உன் கடைக்கண் பார்வையால் முனிவர்களும் காமசேஷ்டையை யடைகிறார்கள்; கண்கள் அடிக்கடி சலிப்பதைக்கண்டு மீன்களெல்லாம் வெட்கப்படுகின்றன. மூக்கைப் பார்த்து கிளி தன்னை நிந்தித்துக்கொள்ளுகிறது; உன் உதடுகளின் சிவப்பையும் தேககாந்தியையும் பார்த்து ஒட்டுமாமரத்தின் துளிர் கூடத்தனது ஸ்வபாவமான இரத்தத்தன்மையைவிட்டுப் பச்சையாய் விளங்குகிறது; இவ்விதமான உனது அழகை நான் எவ்வாறு வர்ணிப்பேன்? இன்னும் வர்ணிக்கவேண்டியவை எவ்வளவோயிருக்கின்றன. உன்னைச் சிருஷ்டித்த பிர்ம்மாவினால் கூட உனது அழகை வர்ணிக்கமுடியாதென்பது நிச்சயம்—என்று ஸ்ரீராமபிரான் ஆசையோடு சொல்லிவிட்டு, ஸீதையைத் தழுவிக்கொண்டார். ஸீதையும்

தன்னைப்பற்றிக் கூறிய அந்த வர்ணனையைக் கேட்டு வெட்கத்தால் தலை குனிந்துகொண்டு மந்தஹாஸமுள்ள முகத்தோடு பதியான ஸ்ரீராமர் மடியில் உல்லாசமாய் உட்கார்ந்திருந்தாள்.

ஸீதாவர்ணனமென்கிற இரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

## 3-வது சருக்கம்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ஜானகியானவள் சிறிது வெட்கமடைந்து, "ஏ பிரபுவே! தாமரை மலரின் இதழ்போன்ற கண்களையுடைய இரகுபுங்கவரே! தங்களை யொருவார்த்தை கேட்கவேண்டுமென் றெண்ணங் கொண்டிருக்கிறேன். தாங்கள் உத்தரவு கொடுத்தால் தெரிவிக்கிறேன்" என்றாள்

இப்படிச் சொல்லக்கேட்டதும் ஸ்ரீராமர் "ஏ ஸீதே உனக்கு எது கேட்கவேண்டுமோ அதைக்கேள். அது எவ்வளவு இரகசியமாயிருந்தாலும் நான்விடை சொல்கிறேன்" என்றுசொன்னார். பிறகு சீதை "பிரபுவே! தங்கள் விஷயமாய் நல்ல ஞானம் கொடுக்கக் கூடியதை எனக்குத் தயையோடு உபதேசிக்கவேண்டுகின்றேன்" என்றாள்.

இப்படிச் சீதை கூறியதும் இராமர் "ஏ சீதே நீ கேட்டது மிகவும் நல்லது. ஆகையால் நான் கூறுவதை மிகவும் கவனமாய்க் கேள்" என்றார்.

॥ ஸ்ரீராம: ॥

ஸச்சிதா³நந்த³ரூபாக்²ய ஸாக³ரஸ்ய தரங்க³யா ।
தத³ச்சா²ரூபயா ஜாத: ஶுத்³தா⁴த்மாம்ஶோ விநிர்க³த: ॥ ௧ ॥

ஆத்மநாமோத்³யபு³த்³தே⁴ர் ஜட²ராத் ஸம்ப⁴வ: ।
ஶுத்³த⁴ஸத்த்வாந்த:கரணம் பிதா தஸ்ய ப்ரஶம்ஸித: ॥ ௨ ॥

---

இராமச்சந்திரர் கூறுகிறார்.

ஸச்சிதாநந்த ரூபம் என்ற பெயரையுடைய ஸமுத்திரத்துக்கு அலையாகிய அதனுடைய இச்சையினால் சுத்தமான ஆத்மாம்சத்தின் பிந்துவானது உண்டாயிற்று. (௧)

ஆத்மாவென்ற பெயரையுடையது தாயாகிற புத்தியின் வயிற்றிலிருந்து உண்டாயிற்று. சுத்த சத்வாந்தக்கரணம் என்பது ஆத்மாவின் பிதாவென்று கூறப்படுகிறது. (௨)

அந்த ஆத்மாவின் நான்கு பேதங்களும் பந்துக்களாக எண்ணப் படுகின்றன. அவைகளில் துரியாவஸ்தை யென்பது முதலாவது. இரண்டாவது ஜாக்ராவஸ்தை. மூன்றாவது ஸ்வப்நாவஸ்தை. நான்காவது ஸுஷுப்தியவஸ்தை

ஹிருதயாகாசம் என்பது அவைகளின் ஸ்தானம். மனோவேகம் என்பதுவெளிச்சஞ்சாரம்.

மனதின் கெட்ட வியாபாரங்களை யொழிப்பது மனதின் வேகத்தையடக்குவதாம். மாயாயோகம் என்பது அதன் பூர்வ ஸம்ஸ்காரங்களை யடக்குவதாம்.

வெகுகாலம் ஸம்ஸாரமாகிய காட்டில் ஸஞ்சரிப்பது புத்தியின் காரணத்தினாலேயே. அங்குத் தம்பத்தை யடக்குவதென்பது ஸ்திரமான பஞ்சபூத சொரூபமாம்.

பர்னசாலை ஆத்மாவுக்கு சிரமபரிகாரம் செய்து கொள்ளும் ஸ்தானமென் றெண்ணப்படுகிறது காமம் குரோதம் லோபம் இவைகளை ஜயிப்பதென்பது ஆசையையடக்குவதாம்.

முதலில் மோகத்தை யடக்குவது சுத்த மாயையை யடைவது. பிறகு ரஜோரூபமான மாயையானது ஜடாக்னியில் சேர்கிறது.

பிறகு அக்ஞான ஸம்பந்தமான அந்த மாயையின் வியோகம் உண்டாகின்றது. அப்போது சுகமில்லாததே பெரிய வருத்தம்.பிறகு தூக்கத்தின் பங்கமும் உண்டாகிறது.

அப்போது விவேகத்தின் ஆச்ரயமும் அதிகமான பக்தியின் சேர்க்கையும் உண்டாகின்றன.

திரிகுணங்களுக்கு ஆச்ரயமான வீட்டில், அஜ்ஞானத்தைத் தாண்டும் உபாயம் லிங்கம் என்னும் பெயரையுடைய மதத்தை அடக்குவதென்று கூறப்படுகிறது.

மச்சரத்தை அடக்குவதும் பின் அகங்காரத்தை அடக்குவதும் பின் லிங்கதேகத்தின் வியோகமும் பிறகு மாயையென்னும் ஏகத்தன்மையும் ஹிருதயாகாசத்தை அடைவதும் பிறகு ஆனந்த

மாகிற ஏகசுகமும் அதற்குப் பிறகு மாயையை விடுவதும் ஸாத்வி கியை யடைவதென் றெண்ணப்படுகிறது.

ஸாத்விகமான மாயையோடு கூட உத்தமமான ஹிருதயாகா சத்தை ஸச்சிதாநந்தமென்னும் பெயருள்ள மஹாகாசத்தில் சேர்க் கப்படுகிறது.

ஸாகாசத்தில் பிரவேசிக்கும்படி செய்வதே ஆத்மாவுக்கு சிரேஷ் டமான முக்தியென்று அறியத்தக்கது. நான்கு முக்தியிலும் அது ஸாயுஜ்யமுக்தி யென்னப்படும்.

ஏ சீதே! இரகஸ்யமான அர்த்தத்தை யுடையதும் வேதங் களின் ஸாரமான விஷயங்களையுடையதும் மனதிலுள்ள அக்ஞா னத்தை நாசம் செய்வதும் என் விஷயமான ஞானத்தையுண்டாக் கக்கூடியதுமான ரத்னம் போன்ற பதினைந்து சுலோகங்களால் நிறைந்த ஸம்ஜ்ஞானபேடிகா வென்னும் இவ்விஷயத்தைப் பிரீதி யோடு நான் உனக்குச் சொன்னேன். இதை நீ நன்றாய் உன் மன தில், தாரணஞ்செய்து ஆலோசித்துப்பார்த்தால், மேன்மேலும் ஆனந்த முண்டாவதோடு இன்னும் என் ஸம்பந்தமான அநேக அற்புதமான விஷயங்கள் உன் மனதிலே தோன்றும் என்றார்.

சீதாதேவியானவள் இராமர் சொன்ன அந்த வார்த்தையைக் கேட்டு ஸம்ஜ்ஞான பேடிகையைத் தனது மனத்தில் நன்றாய் நிலை நிறுத்தி அடிக்கடி புத்தியால் ஆலோசித்துப் பார்த்துச்சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு தன்னுடைய லீலைகளை யெல்லாம் தெரிந்துகொண்டு ஸ்ரீராமமூர்த்தியின் சரணாரவிந்தங்களில் நமஸ் கரித்தாள்.

அப்புறம் ஆனந்தம் நிறைந்த உள்ளத்தோடு ஆனந்தக் கண்ணீ ரைப் பெருக்கிக்கொண்டு க்ஷணநேரம் ஒன்றும் பேசாமல் இருந் தாள். இவ்வித ஸ்திதியிலிருக்கும் சீதையைப் பார்த்து ஸ்ரீராமர் "ஏ சீதே! இந்தப் பேடிகையில் ஆனந்தம் விளைவிக்கக்கூடியதாகக் கண்டதெது ? உன் அக்ஞானம்விலகிற்றா ? என் விஷயமாகிய நல்ல ஞானம் உனக்கு உண்டாயிற்றா ? நீ எவ்விதம் அறிந்துகொண்டாய்? உனக்கு ஏதாவது தெரிந்ததா இல்லையா ? அல்லது நான் நன்றாய்ச் சொல்லட்டுமா ?" என்றார்.

இப்படி ஸ்ரீராமர் சொல்வதைக்கேட்டு மிகவும் ஆனந்தமடைந்த சீதை இராமரிடம் பின் வருமாறு கூறுகிருள்.

## சீதாதேவி கூறுகிருள்

இராவணனுடைய கொழுப்பை யடக்கிய ஏ ராம! நீங்கள் உபதேசித்த ஞான பேடிகையைப் புத்தியால் ஆராய்ந்து பார்த்து நான் நல்ல ஞானத்தை யடைந்தேன். நிர்க்குணமாயும் நிர்விகாரமாயும் இருக்கிற நீர் உலகில் ஜனங்களின் நன்மைக்காக என் ஸம்பந்தத்தால் வெகு லீலைகளைக் காட்டியிருக்கிறீர். நீங்கள் பதினைந்து சுலோகங்களால் சொன்ன பேடிகையில் அடங்கிய உத்தமமும் இரஹஸ்யமுமான விஷயங்களை ஜனங்களின் நன்மைக்காக வெகு விஸ்தாரமாய் எடுத்துக்கூறுகிறேன். இதைப்பக்தியோடு நன்ருய்த்தியானஞ்செய்து கொண்டுவந்தால் மனிதனுக்கு ஆத்மஞானம் அவசியம் உண்டாகும் என்பது நிச்சயம். ஸச்சிதாநந்த ரூபியான விஷ்ணுவேதான் ஸாகரம் என்னப்படுவது; விஷ்ணுவுக்குப் பூபாரத்தைக் குறைக்க வேண்டுமென்னும் எண்ணம் உண்டாவதே அலையென்று சொல்லப்படுவது. அந்த இச்சையால் மங்களகரமான அவரது அம்சத்தின் லவமானது ஸமுத்திரத்திலிருந்து வெளிப்படுத்தப்படுகிறது. அதற்குத் தான் உலகத்தில் ஆத்மாவென்னும் பெயர் வழங்குகிறது.

அதனுடைய தாயாகிய புத்திரன் இவ்வுலகத்தில் கௌஸல்யை என்று சொல்லப்படுவது. அந்த ஆத்மாவுக்குப் பிதாவான சுத்த ஸத்வாந்தக்கரணம் என்பதுதான் ஸத்யபராக்ரமமான ஸ்ரீமத்தசரத மஹா ராஜன்.

அந்த ஆத்மாவினுடைய நான்கு பேதங்கள் தான் சகோதரர்களான இராமலக்ஷ்மணர் பரத சத்ருக்னர்கள்.

அவைகளில் முதன்மையான ஸத்வகுணப் பிரதானமான துரியாவஸ்தை என்பது தான் ஸ்ரீராமசந்திர மூர்த்தி.

ஜாக்ராவஸ்தை தான் லக்ஷ்மணர். மூன்ருவதான ஸ்வப்நாவஸ்தை தான் பரதன்.

கடைசியான ஸுஷுப்தி யவஸ்தை தான் சத்ருக்னன். இவைகளுக்கு ஸ்தானமான ஹிருதயாகாச மென்பதுதான் அயோத்யாபட்டணம்.

மனோவேக மென்பது வெளியில் பிரயாணம் போவதும் விச்வாமித்திரரின் யாகத்திற்குப்போவதுமாம். மனதின் கெட்ட வியாபாரங்களை நாசம் செய்வதே தாடகையைச் சங்கரித்ததாம்.

மனோவேகத்தை பங்கப்படுத்துவதே தனுஸை யொடித்தது. பிறகு அது மாயையோடு சேர்வதே என்னைத் தாங்கள் கல்யாணம் செய்துகொண்டது.

முன்னுள்ள ஸம்ஸ்காரங்களை யடக்குவதே பரசுராமரைப் பங்கப்படுத்தியது. பிறகு புத்தியின் தாரணைத்தால் ஸம்ஸாரமாகிய மகா காட்டில் ஸஞ்சரிப்பதே கைகேயியின் வரதானத்தால் தண்டகாரண்யத்தில் ஸஞ்சரித்தது.

அங்கே தம்பத்தை யடக்குவதே விராதனைக் கொன்றது.

பஞ்சபூத சொரூபமானதும் சஞ்சலமானதுமான ஆத்மாவின் இந்தச் சரீரம் பர்ணசாலையை யடைவதே நீர் சிரமத்தைத் தீர்த்துக் கொள்ளுவதற்காகப் பஞ்சவடியை யடைந்தது.

காமத்தை அடக்குவதே கரனைக்கொன்றது. குரோதத்தை அடக்குவதே தூஷணனைக்கொன்றது.

லோபத்தை ஒழிப்பது தான் திரிசிரஸ்ஸைக் கொன்றது. அங்கே ஆசையை யடக்குவதேபாணத்தால் சூர்ப்பனகையை அலங்கோலம் செய்தது.

மோகத்தை அடக்குவது தான் மிருக ரூபியுமான மாரீசனைக் கொன்றது. பிறகு சுத்த மாயையை யடைவதே தண்டகா வனத்தில் ஸத்வகுணப்ரதானையான என்னை இடது புறத்தில் அடைவதாம். ஜடராக்னியில் ரஜோ ரூபமாயிருக்கிறதென்றெண்ணப்படுகிற மாயை தான் அக்னியில் பிரவேசித்த ரஜோ ரூபமான நான். அப்போது தாமஸியான மாயையின் வியோகமென்பது தான் தமஸ்வரூபிணியான என்னை இராவணன் அபஹரித்துக்கொண்டு போனது. சுகமில்லாமலிருக்கிற பெரிய வருத்தமே நான் உம்மை

விட்டுப் பிரிந்தது. பிறகு துக்கத்தின் பங்கம் தான் கபந்தனைக் கொன்றது. விவேகத்தை யடைவது தான் சுக்ரீவனைச் சேர்ந்தது. அதிகமான பக்தியை யடைவது தான் நீர் அநுமானையடைந்தது. அவிவேகத்தை நாசஞ்செய்வது தான் நீர் வாலியைக்கொன்றது. பிறகு உற்சாகத்தோடு சேருவது தான் விபீஷணரின் சரணாகதி. அக்ஞானத்தைத் தாண்டுவதற்கு வேண்டிய உபாயந்தான் பெரிய ஸமுத்திரத்தில் அணைபோட்டது.

ஏ இரகு நந்தன! லிங்கதேகம் என்னும் பெயரையுடைய மங்களகரமான திரிகுணங்களும் ஆச்ரயமான லிங்கதேகத்தையடைவது தான் நீர் திரிகூட மலைமேலுள்ள இலங்கையை யடைந்தது.

அங்கே மதத்தை யடக்குவது தான் நீர் கும்பகர்ணனைக்கொன்றது. மச்சரத்தை அடக்குவது தான் நீர் மேக நாதனை (இந்திரஜித்தைக்) கொன்றது. அங்கே அஹங்காரத்தை யொழிப்பதுதான் நீர் இராவணனை வதஞ்செய்தது. மாயை யென்பதோடு சேர்வது தான் நீர் மூன்று விதமான என்னுடன் சேர்ந்தது.

இலிங்கதேகத்தின் வியோகந்தான் நீர் இலங்கையிலிருந்து திரும்பியது. ஹிருதயாகாசத்தையடைவதே மறுபடி நீர் அயோத்திக்குப்போனது. ஆனந்தமான ஏக சுகம் என்பது தான் அங்கு நீர் இராஜ்யசுகங்களை யனுபவித்தது. மாயையைவிடுவது என்பது தான்வான்மீகியின் ஆச்ரமத்தில் என்னைத் தாங்கள் விட்டுவிட்டது. இன்னும் மேலேவரப்போகிறதும் ஸ்ரீராம! உம்மால் பிரகாசப்படுத்தப்பட்டிருக்கிறது. மறுபடியு ஸாத்விகையை கிரகித்துக்கொள்வதென்பதே தாங்கள் மறுபடியும் என்னை அடைந்தது. ஸாத்விகமான மாயையோடு சேர்வதென்பதே நீர்என்னுடன் சேர்ந்திருப்பது. பிறகு ஹிருதயாகாசத்தைமஹாகாசத்தில் லயிக்கும்படிசெய்வதென்பது, நீர் அயோத்தியா பட்டணத்தை விட்டுப் பிறகு வைகுண்டத்திற்குப்போவது. ஸச்சிதாநந்தமென்றபெயருள்ள ஸமுத்திரத்தில் பிரவேசிப்பது தான் நீர் மானுடரூபத்தை விட்டு விஷ்ணுரூபத்தைக் காட்டுவது. ஸாயுஜ்யமென்பதுதான் உமது ஆத்மாமுத்தியை அடைவதென்றுமனிதர்களால் சொல்லப்படுகின்றது. ஏ ராம! சுபமானதும்

அசுபமானதுமான எந்தெந்தக் காரியங்கள் உம்மால் செய்யப்பட்டனவோ அவைகளெல்லாம் ஜனங்கள் அறிவையடைவதற்கும் எல்லாருடையநன்மைக்காகவும் ஏற்பட்டனவாகும். உம்முடைய செய்கைகளில் செய்யத்தகாதவைகளிருந்தாலும் ஸச்சிதாநந்தரூபியும் நிர்க்குணரும் ஆத்மஸ்வரூபருமான உமக்கு அதனால் என்ன உண்டாகக்கூடும்? இவ்விதம் நீர் எனக்கு உபதேசித்த மங்களகரமான ஸம்க்ஞான பேடிகையை நான் நன்றாய் விசாரித்ததால் ஜீவன்முக்தையாகிவிட்டேன். ஐயமேயில்லை. பதினைந்து சுலோகங்களால் நீர் எனக்கு உபதேசித்த தேகராமாயணத்தை நான் ஹாரம்போல் தரித்துக்கொண்டுவிட்டேன்! ஸ்லோகரத்னங்கள் அடங்கிய இந்த ஹாரத்தை எவன் கழுத்திற்போட்டுக் கொள்ளுகிறானோ அப்படிப்பட்ட புருஷசிரேஷ்டன் ஒருக்ஷண காலத்தில் ஜீவன்முக்தனாகவே ஆய்விடுவான் என்பதற்குஐயமில்லை. ஏ ராம! நீர் உபதேசித்த இந்த தேகராமாயணத்தைப் போல் ஒருவரும் சொன்னதுமில்லை இனிமேல் சொல்லப்போகிறதுமில்லை. ஏ இரகுபுங்கவா! என்னிடத்தில் பிரியத்தால் நீர் உபதேசித்தீரேயொழிய பிரம்மா முதலானவர்களாலேயும் அறியமுடியாத இவ்விஷயத்தை இம்மாதிரி ஒருவரும் தெரிந்துகொள்ள முடியாது. தேகராமாயணமானது இரகசியமாயும் அழகுள்ளதாயும் மிகவும் கஷ்டப்பட்டுத்தெரிந்து கொள்ளக்கூடியதாயும் ஸ்வல்பமாயுமிருந்தாலும் நல்ல ஞானத்தை யுண்டாக்குகிறதாயும் கேட்பதால் பாபங்களையெல்லாம் போக்குகிறதாயும் இருக்கிறது என்று கூறிப்புகழ்ந்தாள்.

இவ்வாறு சீதை கூறியவார்த்தைகளைக்கேட்டு மிகவும் ஆச்சரியமடைந்து ஸ்ரீராமர், "சீதே! நீ பரிசுத்த முடையவள். நான் கூறிய ஸம்கஞானபேடிகையை நன்றாய்மனத்திற்கொண்டு உள்ளது உள்ளபடியே யறிந்திருக்கிறாய். மோகத்தை வெகுதூரத்தில் தாத்தி என் விஷயமான ஞானத்தை நன்றாய் உண்டாக்கக்கூடிய இந்ததேகராமாயணத்தை நாஸ்திகனாயிருந்து வெளிக்கு ஆஸ்திகன் போல் நடிப்பவனுக்கும் நல்ல ஹிருதயம் இல்லாதவனுக்கும் போதித்தல் கூடாது. மிகவும் இரகசியமான இது கலியுகத்தில் அதிகப்பயன்

உள்ளதாக விளங்கும். சகல வேதாந்த ஸாரம் அடங்கியதாயும் பக்தி முக்தி இவைகளைக்கொடுக்கக்கூடியதாயும் என்னல் உனக்கு உபதேசிக்கப்பட்டதாயும் இருக்கிற இந்த தேக ராமாயணத்தை மனிதர் தியானஞ்செய்தால், அவர்களுக்கு பிர்ம்மாநந்தாநுபவம் அவசியம் உண்டாகுமென்பதில் சிறிதும் ஐயமில்லை என்றார்.

இவ்வாறு ஸ்ரீராமர் இரவில் ஸீதாதேவியுடன் பேசிக்கொண்டேயிருந்து, அவளோடு இரத்தினமயமான கட்டிலில் சுகமாய் நித்திரை செய்தார்.

மூன்றுவது சருக்கம்

முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீ ராமபிரான் சீதையோடு சுகமாக நித்திரை செய்த அன்றையதினம் இராத்திரி விடிய நான்கு நாழிகையிருக்கும் போது அவரை நித்திரையிலிருந்து எழுப்புவதற்காக சயன கிருகத்திற்கு வெளியில் வந்திகள், மாகதர்கள், சூதர்கள், தாஸீகள் நடர்கள் இவர்கள் யாவரும் வந்து கூடி வாத்தியங்களை முழக்கினார்கள். அப்ஸர ஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள்; மங்கள கீதங்களைப் பாடினார்கள்; விடியற்காலத்தில் துதிக்கும் ஸ்தோத்திரங்களை மனோகரமாகவும் இனிமையாகவும் பாடினார்கள்.

> 𑌵𑌿𑌘𑍍𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌸𑌕𑌲𑌵𑌿𑌘𑍍𑌨𑌵𑌿𑌨𑌾𑌶𑌦𑌕𑍍𑌷𑍋
> 𑌦𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 𑌭𑌗𑌵𑌤𑍀 𑌚 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀𑌚 ।
> 𑌦𑍁𑌰𑍍𑌗𑌾𑌷𑍍𑌟𑌭𑍈𑌰𑌵𑌗𑌣𑌾 𑌨𑌵𑌦𑌿𑌵𑍍𑌯𑌦𑍂𑌤𑍀𑌭𑌾
> 𑌸𑍇𑌵𑍍𑌯𑌾𑌸𑍍𑌸𑍁𑌰𑌾𑌸𑍁𑌰𑌨𑍃𑌪𑌦𑍇𑌤𑌵𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌮𑍍 ।
> 𑌭𑌾𑌨𑍁𑌶𑍍𑌶𑌶𑍀 𑌕𑍁𑌜𑌬𑍁𑌧𑍌 𑌗𑍁𑌰𑍁 𑌶𑍁𑌕𑍍𑌰𑌕𑍇𑌤𑍂
> 𑌰𑌾𑌹𑍁𑌸𑍍𑌸𑌕𑍇𑌤𑍁𑌰𑌦𑌿𑌤𑌿𑌦𑌿𑌤𑌿𑌜𑌾𑌦𑌿𑌤𑍇𑌯𑌾𑌃 ॥
> 𑌶𑌕𑍍𑌰𑌾𑌦𑌯𑌃 𑌕𑌮𑌲𑌭𑍂𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌶𑍍𑌚
> 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌕𑌰𑍋𑌤𑍁 𑌸𑌤𑌤𑌂 𑌤𑌵 𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌮𑍍 ॥

---

எல்லா இடையூறுகளையும் போக்கும் விநாயகரும், உலகமாதாவாகிய தாக்ஷாயணியும், பகவதியான ஸரஸ்வதியும், மஹோன்மத்தர்களான பைரவகணங்களும் துர்க்காதேவியும், தேவர்களும் ஏ அரசனே! உம்முடைய விடியற்காலத்தைச் சுபகரமாகச் செய்யட்டும்

சூரியன், சந்திரன், குஜன் புதன், குரு, சுக்ரன், ராகு கேது, அதிதி, திதி ஆதிதேவர்கள், இந்திராதிதேவர்கள் பிர்ம்மா விஷ்ணு, ருத்திரன் இவர்கள் யாவரும் எப்பொழுதும் உம்முடைய இந்த விடியற்காலத்தைச் சுபகரமாகச் செய்யட்டும்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சப்தகுலாசலங்கள், சதுர்த்தசபுவனங்கள், பர்வதங்கள், ஆரண்யங்கள், கங்கை முதலிய நதிகள் இவையாவும் உமது விடியற் காலத்தைச் சுபகரமாகச் செய்யட்டும். திக்சக்ரவாளம், திக்குகள், திக்பாலர்கள், நாகங்கள், கருடன் முதலிய பக்ஷிகள், விருக்ஷங்கள் மலையிலுள்ள கொடிகள், புண்ணியகரமான தேவாலயங்கள், தேவ பிலங்கள் இவையாவும் உமது விடியற்காலத்தைச் சுபகரமாகச் செய்யட்டும்.

ஆறு அங்கங்களோடு கூடிய வேதங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், காவியங்கள், நல்ல மார்க்கத்தைப் போதிக்கும் முனிவர்கள், பரமகாருண்யர்களான வியாசர் முதலிய ரிஷீசுவரர்கள், ரிஷிகளுடைய கோத்திரங்கள் இவர்கள் யாவரும் உமது விடியற்காலத்தைச் சுபகரமாக்கட்டும்—இவ்விதம் வந்திகள் சூதர்கள் கூண்டுகளிலிருக்கும் அநேக பக்ஷிசமூகங்கள் முதலியவர்கள் வாத்திய கோஷங்களோடு ஸ்ரீ ராமபிரானைத் துதித்தார்கள். இந்த ஸ்தோத்திரங்களைக் கேட்டுச் சீதை முதலிலும் ஸ்ரீராமர் பின்னுமாக எழுந்திருந்தார்கள். இராமர் எழுந்திருந்ததும் தேவர்களையும் முனிவர்களையும் மாதா பிதா குரு இவர்களையும் காமதேனுவையும் சிந்தாமணியையும் மனஸில் தியானித்தார். பிறகு சீதையும் துர்க்கை சரஸ்வதி, ஸ்ரீராமர், கௌஸல்யை, குரு பத்நி, தன் தாய் இவர்களை மனஸில் த்யானித்து ஸ்ரீராமமூர்த்தியை மிகவும் வணக்கத்துடன் நமஸ்கரித்தாள். பின் இராமர் நித்திய கர்மானுஷ்டானத்துக்கு வேண்டியவைகளைச் சேகரித்துக்கொண்டு தேவதைகள் அக்நி, பிராமணர்கள் இவர்களை வணங்கிக்கிரமப்படி சௌசம் தந்த சுத்தி முதலியவைகளையுஞ் செய்து முடித்தார். பிறகு ஸ்நானஞ் செய்து நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு தேவ பூஜையுஞ் செய்து முடிந்தார். இதற்குப்பின் கிரமப்படி பிராமணர்களுக்குத் தானமளித்தார். இச்சமயத்தில் சீதையும் கௌரி பூஜை செய்து முடித்துத் தன்னுடைய மாமிமார், இராமசந்திரர் இவர்களுக்கும் நமஸ்காரஞ் செய்து அவரருகில் வீற்றிருந்தாள்.

இதன் பின் இராமபிரான் சீதை, தாய்மார்கள், தமது பந்துக்கள், மித்திரர்கள் இவர்களுடனிருந்து புராணகதைகளை வசிஷ்டர் ஓதிவரக் கேட்டுவந்தார். புராண சிரவணஞ்செய்தபிறகு இராமர் தமது குருவாகிய வசிஷ்டர் அவர் பத்னி தாய்மார் பிராமணர் பண்டிதர் வைதிகர் முனிவர் யோகநிஷ்டர் தபோநிஷ்டர் ஜோதிடர் மீமாம்ஸகர் தார்க்கிகர் மந்திரசாஸ்திர நிபுணர் மர்மசாஸ்திரம் அறிந்தவர் இன்னும் பூஜிக்கத்தக்க மகான்கள் இவர்கள் யாவரையும் சீதையுடன் கூட பூஜித்து வணங்கினர். பிறகு சீதை தன்னுடைய தோழிமார்களுடன் சுவர்ணபாத்திரத்தில் பூஜாதிரவியங்களை எடுத்துக்கொண்டு காமதேனுவிடஞ் சென்று அதற்கு ஆராதனை புரிந்து நமஸ்கரித்துத் தூபதீபாதி உபசாரங்கள் செய்து பக்குவான்னம் பாயஸம் இவைகளை நிவேதித்து சந்தோஷப்படுத்தி அதை வலம் வந்து, "ஏ காமதேனுவே! உனக்கு நமஸ்கரிக்கிறேன். நீ சீக்கிரமாக இராமபிரானுக்கும் பிராமணர்களுக்கும் திவ்யபக்குவான்னம் முதலியவைகளைக் கொடு" என்று பிரார்த்தித்தாள். இவ்வாறு சீதை பிரார்த்தித்துப் பின் காமதேனுவின் அருகில் கோடிக் கணக்கான சுவர்ண பாத்திரங்களை வைத்தாள். காமதேனு அப்பாத்திரங்களெல்லாவற்றிலும், திவ்யான்னங்கள் நிரம்பும்படி செய்தது. உடனே சீதை அந்தப் பக்குவான்னங்களையும் போஜன பதார்த்தங்களையும் சொர்ண பாத்திரங்களில் தனித்தனியே எடுத்துக்கொண்டு தன் பாதச் சிலம்பு ஒலியிடப் பரிமாறச் சென்றாள். இதற்குள் இராமர் கோடிக்கணக்காகப் பிராமணர்களையும் ஆயிரக்கணக்கான தமது மித்திரர்களையும், மந்திரிமார்களையும் அழைத்து வந்து போஜனசாலையில் போட்டிருக்கும் சுவர்ண பீடங்களில் சக்ராகாரமாக உட்காரவைத்து அவர்களுக்கு வெண்பட்டு, சுவர்ணபாத்திரம் இவைகளையளித்துச் சந்தனம் புஷ்பம் முதலியன கொடுத்துப் பூஜித்தார். இராமபிரானுடையபந்துக்கள் மூன்றுகால்களுள்ள சொர்ணபாத்திரங்களில் போஜனபதார்த்தங்களைத் தனித்தனியே யெடுத்துவந்து போஜனசாலைக்குச் சமீபத்தில் ஓரறையில் வைத்தார்கள். பிறகு போஜனஞ்செய்ய

விருக்கும் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே சொர்ணதீர்த்த பாத்திரமும் இரத்தின தீபத்துடன் உபபாத்திரமும் வைத்தார்கள். இத்தருணத்தில் அந்த ஸ்திரீகளின் பாதநூபுரங்கள் கிண்கிணிகள், கைக்கங்கணங்கள் இவைகளின் ஒலியும் அவர்கள் கழுத்திலணிந்து கொண்டிருக்கும் முத்துமாலைகள் ஒன்றோடொன்று உராய்ந்து கொள்வதாலுண்டாகும் சப்தமும் காதுக்கினிமையாகவும் மனோகரமாகவும் கேட்டன. இச்சப்தங் கேட்டதும் அங்குள்ளார்யாவரும் திடுக்கிட்டு இஃதென்ன சப்தமென வியப்புற்றார்கள். பின் சீதை அங்கு நடந்துவருவதைக் கண்டார்கள். இவ்விதம் வரும் சீதையானவள் மின்னற் கூட்டங்களின் பிரகாசம்போலவும், ஆகாயத்தில் விளங்கும் சூரியப்பிரகாசம்போலவு மிருந்தாள். கைவிரல்களிலும் கால்விரல்களிலும் மீன், முதலை, ஆமை இவைகளின் உருவம்போல் செய்யப்பட்ட மோதிரங்களை யணிந்து கொண்டிருந்தாள். காலில் நூபுரம், கிண்கிணி, கைகளில் கல்லிழைத்த கங்கணம் இவைகளை யணிந்து கொண்டிருந்தாள். இடையில் அழகுவாய்ந்த வெண்பட்டுடுத்திக் கொண்டிருந்தாள். கழுத்தில் நடந்துவரும்போது ஒலியுண்டாகக் கூடியதும், சொர்ணக் கம்பியில் கட்டப்பட்டதுமான முத்துமாலைகளையும் தரித்துக்கொண்டிருந்தாள். சொர்ணக்கொடியில் கட்டப்பட்டதும் இரத்தினச் சதங்கைக் கொத்துகள் நாற்றியதும், சிங்கம், வியாக்ரம், மான் முதலிய மிருகங்களின் உருவங்கள் வரையப்பெற்றதும் நீலம், மஞ்சள், கறுப்பு, சிவப்பு முதலிய பலவர்ண இரத்தினங்களிழைக்கப்பெற்றதுமான மேகலாபரணத்தை இடையில் பூண்டிருந்தாள். அந்த இடைக்குமேல் வயிற்றில் வாழைப்பழம்போன்ற பதக்கங்களுடன் சுவர்ணமாலைகள் தொங்கிக்கொண்டிருந்தன. சித்திர வர்ணமுள்ள இரவிக்கையணிந்திருந்தாள். இரண்டு செவிகளிலும் இரத்தினக் கம்மல்களும் நாசியில் திவ்ய மூக்குத்தியும் சிரசில் சந்திரபிரபை சூரியபிரபை என்னும் ஆபரணங்களும் பின்னல் முதல் நெற்றிப் பொட்டுவரையில் வந்து தொங்கும் சுட்டியும் ஜனக மகாராஜனால் விவாக காலத்தில் அளிக்கப்பட்ட சூடாமணியும் பூண்டிருந்தாள்.

இவ்வாறான அலங்காரங்களோடு கூடிய சீதையைப் பார்த்த பிறகு எந்தப் புருஷன் மனமுருகாமலிருப்பான்? இடதுகரத்தில் சொர்ண பாத்திரத்தையும் வலது கரத்தில் கரண்டியையும் தரித்திருப்பவளும் தாமரைப் புஷ்பம் போன்ற முகம், தாமரை இதழ் போன்ற நேத்திரங்கள், காந்தள் மலர்போன்ற கைகள், பச்சைக் கர்ப்பூர முதலிய வாசனைத் திரவியங்கள் கூட்டி கலவைச்சந்தனம் பூசிய சரீரம், இவைகளோடு கூடியவளும், நவரத்தின மயமான தோள் வளை திவ்யகங்கணங்கள் செம்பஞ்சுக் குழம்பினால் பிரகாசியாநின்ற தண்டைகள் இவைகளை யணிந்திருப்பவளும் நெற்றியில் கஸ்தூரிப் பொட்டும் குங்குமம் தரித்துக் கண்களில் மைதீட்டியிருப்பவளும், புன்னகை விளங்கும் முகமுள்ளவளுமாகிய சீதையைக் கண்ட பிராமணோத்தமர்கள் முதலிய எல்லோருடைய நேத்திரங்களும் நவரத்தினத்தின் காந்தியைக்கண்டு ஒளிமழுங்கியது போலாயின. யாவரும் சித்திரப்பதுமைபோலாயினர். தங்களையும் மறந்தனர்.

சீதையின் அலங்காரத்தைக் கூறும்

4 - வது சருக்கம்

முற்றிற்று.

## 5 - வது சருக்கம்.

அப்பால் சீதாதேவி ஒரு க்ஷணநேரத்தில் யாவருக்கும் திவ்ய பக்குவான்னத்தைப் பரிமாறினள். காமதேனுவின் அநுக்ரகத்தா லுண்டான நெய் பாயஸம் முதலியவைகளையும் பேணி வடை முதலிய பலகாரங்களையும் பூசனிக்காய் முதலியவைகளாற் செய் யப்பட்ட வடகங்களையும் சித்திரான்னங்கள், மா, பலா, வாழை முதலிய கனிவர்க்கங்கள், உஷ்ணமாருத லேகியங்கள், நாவினல் புசிக்கத் தக்கவைகள், பேயங்கள் என்று சொல்லப்படும் பான பதார்த்தங்கள், சீனி சர்க்கரை, கண்ட சர்க்கரை, மிளகு முதலிய வைகள் கலந்த மோர், நெய்யில் பக்குவமான வ்யஞ்சனம் ஆகிய இவ்வித போஜன பதார்த்தங்களைத் தனித்தனியே எடுத்துச் சீதை பரிமாறினள். இராமரும் புண்ணிய கதைகளைச் சொல்லிக் கொண்டு தமது சிநேகிதர்களுடன் யாவருக்கும் பரிமாறினர். இராமர் அவர்கள் யாவரும் புசித்து எழுந்தபின் எல்லாருக்கும் தமது கரத்தால் தாம்பூல மளித்துப் பின் தாம் போஜனம் செய்து மகிழ்ந்தார். உடனே வேறு வஸ்திரமுடுத்தி ஆயுதங்கள் தரித்துக் கண்ணாடியில் தமது முகத்தைப் பார்த்துவிட்டு முத்துப் பல்லக்கி லேறித் தமது அரண்மனையை விட்டு வெளிப் புறப்பட்டார். பந்துக்கள் தாதிகள் மித்திரர்கள் இவர்கள் யாவரும் சூழ்ந்து ஸ்தோத்திரஞ் செய்ய இரகுராமர் தமது தாய்மார்களின் அரண் மனையை யடைந்தார். அங்கு முதலில் கௌஸல்யா தேவியை நமஸ்கரித்துப் பிறகு கிரமப்படி மற்றவர்களையும் நமஸ்கரித்து அவர் களுடைய ஆசிர்வாதம் பெற்றுச் சபைக்கு வந்து, தமது மந்திரி மார்களுடன் சிம்மாஸனத்தில் வீற்றிருந்து இராஜ்ய விவகாரங் களைக் கவனித்து நீதியாய் அரசுபுரிந்து வந்தார். பிறகு சீதை தன் தோழிகள் கொழுந்தன்மார் ஊர்மிளா முதலிய தன் சகோதரி கள் முதலிய யாவருக்கும் திவ்ய போஜனம் செய்வித்துத் தானும் போஜனஞ் செய்து தாம்பூலந் தரித்துப் பச்சை வர்ணமுள்ள புடவை யுடுத்துச் சிவப்பு வர்ணமுள்ள ரவிக்கை யணிந்து தன்னு டைய கிருகத்தின் பின்புறமிருக்கும் உபவனத்திற்குத் தோழி மார்களுடன் சென்று அங்கு வீற்றிருந்து திவ்ய சரித்திரங்களைப் பேசிக்கொண்டிருந்தாள். இப்பொழுது சீதை திவ்யமான அநேக

ஆபரணங்களை யணிந்து கொண்டிருந்தாள். அவைகளின் பெருமையை வர்ணிக்க நான்கு முகமுள்ள பிர்மதேவனுலும் ஐந்து முகமுள்ள பரமசிவனுலும் ஆறுமுகமுள்ள சுப்பிரமணியக் கடவுளாலும் எழு முகமுள்ள உச்சைசிரவசுவாலும் ஆயிர முகமுள்ள ஆதிசேஷனுலும் இயலாது. இப்படியாயின் நரர்களுக்குள் யாரே வர்ணிப்பவர்?

இப்படிப்பட்ட திவ்யாலங்காரத்துடன் சீதாதேவி உபவனத்துக்கு வந்திருப்பதை யறிந்த தண்ணீரிறைக்கும் வேலைக்காரர்கள் அங்குள்ள ஜலயந்திரங்களைச் சீக்கிரமாகத் திறந்துவிட்டனர். சீதாதேவி அவைகளின் வேடிக்கைகளையும் விருக்ஷங்கள் கொடிகள் இவைகளின் அழகையும் கண்டு களித்துப் பரமானந்த மடைந்தாள். இப்போது இராமர் சபையை விட்டெழுந்து பந்துக்களுடன் தமது அரண்மனைக்குப் புறப்பட்டார். துந்துபி நவவாத்தியம் கோமுக வாத்தியம் பேரிகை முதலியவை முழங்கின. தாஸிகள் நிர்த்தனம் செய்தனர். இந்த அரவமானது தோட்டத்தில் தன் தோழிமாருடன் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த சீதையின் செவியிற் பட்டது. உடனே சீதை இடது கையில் கனகப்பட்டை என்கிற வாத்தியத்தையும் வலது கையில் உபபாத்திரத்தையுமெடுத்துக்கொண்டு தன் நாயகனுகிய ஸ்ரீராமச் சந்திர பிரபுவின் வரவை எதிர்பார்த்திருந்தாள். இராமர் அரண்மனை வாயில் வந்ததும் தமது பந்துக்களை அனுப்பி விட்டு பல்லக்கிலிருந்து இறங்கி வெளியில் பல்லக்கை நிறுத்திவிட்டுக் கிருகத்துக்குள் பிரவேசித்தார். இப்பொழுது அநேக தாஸிகள் தத்தம் வேலைகளில் பிரவேசித்து இராமபிரானுக்கு முன் விரைவாக வந்து, ஒருத்தி பிரபுவுக்கு விசிறினள். ஒருத்தி சாமரம் போட்டாள். ஒருத்தி ஆசனமளித்தாள். ஒருத்தி வெற்றிலை பாக்கு வைக்கும் பெட்டியை எடுத்து நின்றாள். ஒருத்தி காளாஞ்சியைத் தூக்கிக்கொண்டு அருகே நின்றாள். ஒருத்தி ஜலபாத்திரத்தை எடுத்துக்கொண்டாள். ஒருத்தி வஸ்திரப் பெட்டியையும் ஒருத்தி வில்லையும் மற்றொருத்தி அம்புறாத்தூணியையும் ஒருத்தி கத்தியையுமாக எடுத்துக் கொண்டனர். இப்படி அநேக தாஸிகள் அநேக

மான கைங்கரியங்களை செய்யத் தலைப்பட்டு இருகு வீரரைச் சூழ்ந்து கொண்டார்கள். இராமபிரான் பின்பு கால் நடையாக உபவனத்தை நோக்கி வந்து தமது வரவை எதிர்பார்த்திருப்பவளும் வெட்கத்தால் தலை குனிந்து புன்னகையுடன் கூடிய முகத்துடனிருப்பவளும் அழகான மூக்கு கண்கள் அன்போடு கூடிய கடைக்கண் பார்வை இவைகளையுடையவளுமான சீதையைக் கண்டு புன்னகை கொண்டார். உடனே சீதை எழுந்து நமஸ்கரித்து இராமருக்கு ஆசமனஞ் செய்ய நீர் கொடுத்து ஆசனமிட்டு உபசரித்தாள். இராமர் மனமகிழ்ச்சியுடன் அந்த ஆசனத்தமர்ந்து தீர்த்தம் அருந்திப் பின் சீதையுடன் ஜல யந்திரத்திற் கருகாமையிலுள்ள சாலைக்குச் சென்றார். அப்பொழுது அங்கு அருகே யிருந்த இலட்சுமணரைப் பார்த்து "இலட்சுமண! நீ போஜன சாலைக்குப் போ, அங்குப் பிராமணர்கள் முதலியவர்களை அழைப்பி; ஊர்மிளை முதலியவர்களுக்கு ஞாபகப்படுத்து; உசிதம்போல் காரியங்களையெல்லாம் சித்தப்படுத்திய பிறகு எனக்குத் தெரிவி" என்றார். இலட்சுமணர் இராமர் உத்தரவைச் சிரமேற்கொண்டு அவ்விடமிருந்து புறப்பட்டு வசிஷ்டர் முதலியவர்களையும் பிராமணர்களையும் சிநேகிதர் மந்திரிமார்கள் முதலியவர்களையும் போஜனசாலைக்கு வரவழைத்தார். ஊர்மிளை மாண்டவி முதலியவர்களுக்கு ஸ்ரீராமர் கட்டளையைத் தெரிவித்தார். பிறகு இராமபிரான் தாதுக்கள் கலந்ததும் சித்திர ராகங்கள் நிறைந்ததுமான ஜலநிலயத்தில் சீதையுடன் இறங்கி முதலில் சீதையைத் தமது கரங்களால் கட்டித்தழுவி மூழ்கச்செய்து பின் தாமும் அநேக தாஸிகள் பார்த்திருக்க மூழ்கி மைதிலியாகிய தமது பத்தினியுடன் ஜலக்ரீடை செய்தார். சீதையைத் தமது கரங்களால் கட்டிப் பின்னே தள்ளுவதும் இரு கைகளாலும் ஜலத்தையெடுத்து அவள்மீ திறைப்பதும், தாஸிகள் அங்குத் தயாராகக் கொண்டு வந்து வைத்திருக்கும் வாசனைத் திரவியங்கள் புஷ்பங்கள் இவற்றை வாரி ஒருவர்மீது ஒருவர் எறிவதும் ஜலயந்திரங்களை மூடிப்பிறகு திறப்பதுமாக விளையாடினார்கள். இப்போது இராமருடைய கண் ஜாடையால் இராமரது வேலைக்காரர்களிற் சிலரும் சீதையின் கண் ஜாடையால் அவளது வேலைக்காரர்

களிற் சிலரும் தனித்தனியே கூடி நின்று வேடிக்கை பார்த்தார்கள். சீதை இராமரைத் தனது முஷ்டியால் குத்தினள். இராமரும் புஷ்பம் போன்ற தமது முஷ்டியால் சீதையைக் குத்தி விளையாடினர். இராமர் சீதையின் கோவைக்கனிபோன்ற அதரபானஞ் செய்து ஆலிங்கனம் செய்து கொண்டார். சீதையும் இராமரைக் கட்டித் தழுவி ஆலிங்கனம் செய்து கொண்டாள். இவ்வாருக இருவரும் வெகுநேரம் வரையில் விளையாடினர்கள். இந்த விளையாட்டை யாரால் வர்ணிக்கமுடியும்?

இச்சமயத்தில் போஜன விஷயமாகத் தெரிவிக்க இலட்சுமணர் வந்தார். அவரைத் தாஸிகள் பார்த்து "இலட்சுமண! இராமர் சீதையுடன் ஜலக்ரீடை செய்கிறார். இராமபிரானிடம் செல்ல இது சமயமல்ல; நீர் இங்கே தானே யிரு" மென்று கூறித் தோட்டத்திற்கு வெளியிலேயே தடுத்தார்கள். இலட்சுமணர் அந்தத் தாஸிகளைப் பார்த்து "ஏ தாஸிகளே! நீங்கள் ஸ்ரீராமபிரானிடம் சென்று இலட்சுமணர் ஏதோ ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்த உம்மிடம் வந்திருக்கிறாரென்று தெரிவியுங்கள்; பிறகு நான் வீடு செல்கிறேன்" என்று கூறினர். இதைக் கேட்டதும் தாஸிகளுள் ஒருத்தி மெதுவாக இராமரிடஞ் சென்று மறைவிலிருந்து இலட்சுமணர் வந்திருக்கிறாரெனத் தெரிவித்தாள். இராமர் அந்தத் தாஸி கூறியதைக்கேட்டு உடனே சீதையுடன் தாமும் ஜல நிலயத்தி லிருந்து வெளியேறி வெந்நீரில் ஸ்நானஞ் செய்து நூதன வஸ்திரமுடுத்து வாசனை வஸ்துக்களாலும் புஷ்பங்களாலும் அலங்கரித்துக் கொண்டு புஷ்பங்களா லலங்கரிக்கப்பட்ட வழியே இருவரும் போஜன சாலைக்கு வந்தனர்.

இங்கு ஊர்மிளை முதலியவர்கள் காமதேனு உதவிய அன்னத்தையும் பலகாரங்களையும் முற்கூறியதை விடப் பதின் மடங்கு அதிகமான உபசாரத்துடன் பரிமாறினர்கள். இராமபிரான் வசிஷ்டர் முதலியவர்கள் மித்திரர்கள் பந்துக்கள் இவர்களுடன் திருப்தியாகப் போஜனஞ்செய்து சந்தோஷித்தார். அப்பொழுது சீதை விநோத விளையாட்டுகளுடன் ஸ்ரீராமபிரான் அருகிலிருந்து பேசிக் கொண்டு அவருக்குத் திருப்தியுண்டாகும்படி சாமரம் வீசினள். இவ்விதம் இராமர் போஜனஞ்செய்து சீதை கொடுத்த தாம்பூல

தரித்துக்கொண்டு சபைக்கு வந்து மந்திரி பிரதானிகளுடன் பல பல பேச்சுக்களைப் பேசிக்கொண்டு சுகமாக விருந்தார்.

பிறகு சீதையும் போஜனம் செய்து தன் தோழிமாருடன் சயன கிருகம் சென்று கிளிகளுடன் பேசிக்கொண்டு ஸ்ரீராமபிரானது வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.

ஜலக்கிரீடை வர்ணனை கூறும்

5 - வது சருக்கம் முற்றிற்று.

## 6 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

இதன்பின் இராமபிரான் இலட்சுமணர் முதலியவர்களையனுப்பி விட்டுத் தாஸிகளுடன் வந்திமாகதர்கள் புகழ மனமகிழ்ச்சியுடன் சயனகிருகம் வந்து சீதையைக் கண்டார். ஸ்ரீராமபிரானது வரவை யறிந்த சீதை சொக்கட்டானடுவதை நிறுத்திவிட்டுக் கால் தண்டைகள் சப்திக்கத் தன் தோழிமார்களுடன் பதியை எதிர்கொண்டழைத்து, நமஸ்கரித்து அவரது கரங்களைப் பிடித்துப் படுக்கையில் உட்கார வைத்துத் தாம்பூல மளித்தாள். பின்பு இராமபிரான் சீதாதேவியுடன் ரத்நங்களாலும் முத்துக்களாலும் அலங்கரித்த மஞ்சத்தில் படுத்து தாஸிகள் சாமரம்போட நித்திரை புரிந்தார். சீதாதேவி ஒரு முகூர்த்தத்திற்குப் பிறகு எழுந்து மஞ்சத்திலிருந்து கீழே சயனித்துக்கொண்டாள். பிறகு இராமரும் விழித்துக்கொண்டார். உடனே சீதை மகிழ்ச்சியுடன் எழுந்திருந்து இராமருக்குத் தீர்த்தங்கொடுத்துத் தாம்பூல மளித்தாள். இராமருடைய பணிவிடைப் பெண்கள் இராமருக்கு மயில் தோகை விசிறியால் பக்தியுடன் விசிறினார்கள். சீதையின் பணிவிடைப் பெண்கள் தேனுவின் வால்மயிரினல் செய்யப்பட்ட விசிறியைக் கொண்டு சீதைக்கு விசிறினார்கள். இதற்குப் பிறகு இராமர் சீதையினுடைய கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு திராட்சைக் கொடியால் அமைக்கப்பட்ட மண்டபத்துக்குச் சென்று அங்கு ஓர் ஆசனத்தில் பின் பக்கத்தில் தலையணைகொண்டு இடது பக்கத்தில் சீதையுடன் உட்கார்ந்து, அங்கு வரைந்திருக்கும் யானை, ஒட்டகை, குதிரை, மந்திரி, அரசன், தூதர்கள் இவர்கள் போன்ற சித்திரங்களின் விநோதங்களையும் தங்கம், இரத்தினம், தந்தம் இவைகளாற் செய்யப்பட்ட யானைகளையும் பார்த்துக்கொண்டு சந்தோஷமாக விருக்கும் சீதையுடன் சுகத்தை அனுபவித்தார். பிறகு அங்குக் கூண்டுகளிலிருக்கும் பக்ஷிகளுடன் சீதையும் தாமுமாக விளையாடினார். இப்பொழுது சீதையின் தாஸிகள் அங்கு வந்து நடனம் செய்தார்கள். ஷட் சுவரத்துடன் பாடினார்கள். பிறகு சீதை அந்தத் தாஸிகளுக்கு ஆபரணங்கள் வஸ்திரங்கள்

சந்தன தாம்பூலம் முதலியவைகளைக் கொடுத்து அனுப்பிவிட்டு இராமபிரானை நோக்கி "பிராண நாதா! தங்களுடன் நான் மேன் மாடியிலிருந்து தெருவில் நடக்கும் விநோதங்களைப் பார்க்க விரும்பு கிறேன்; அங்கு வரவேண்டு"மெனப் பிரார்த்தித்தாள். தசரத நந்தனர் சீதையுடன் உப்பரிகை சென்று திவ்யாசனத்தில் அமர்ந்து இரத்தின மயமான கதவுகளமைக்கப்பட்ட சாளரத்தின் வழியே இராஜ வீதிகளிலும் மற்ற வீதிகளிலும் நடக்கும் ஜனங்களின் கொண்டாட்டத்தைத் தமது வலதுகையின் ஆள்காட்டி விரலால் சீதைக்குக் காண்பித்தார். இச்சமயத்தில் வீதியில் ஓர் அந்தண மாது இடுப்பில் அழுக்குவஸ்திர முடுத்து இளைத்த சரீரமுள்ள ஒரு குழந்தையை யெடுத்துக்கொண்டு பிக்ஷை யெடுப்பதற்குச் சென்றாள். அதைக் கண்ணுற்ற சீதை உடனே தன் தாதிகளுள் ஒருத்தியை யழைத்து, அந்த அந்தண மாதைத் தன்னருகில் அழைத்து வரும்படி ஆக்ஞாபித்தாள். அவள் வேகமாகச் சென்று அந்தப் பிராமண ஸ்திரீயை யழைத்து வந்தனள். சீதாதேவி அந்தப் பிராமண ஸ்திரீயைப்பார்த்து, "அம்மா! நீங்களேன் இவ்வாறு அழுக்காடை யுடுத்துப் பிக்ஷை யெடுக்கப் புறபட்டீர் கள்? தங்கள் குழந்தை ஏன் இளைத்திருக்கிறது?" என்று கேட் டாள்.

அதைக்கேட்டதும் பிராமண ஸ்திரீ கண்களில் நீர்ததும்ப நின்று "அம்மா! என் புருஷன் என்னை என் தந்தையின் கிரு கத்தில் விட்டுவிட்டுத் தீர்த்த யாத்திரை சென்றார். அவர் கிழவ ராகையால், யாத்திரை போன விடத்திலேயே மரணமடைந்து விட்டார். எனது சகோதரர்கள் இருவரும் அவந்திதேசம் சென்று சாஸ்திராப்பியாசஞ் செய்கிறார்கள். இப்பொழுது என்னைக் காப் பாற்றுகிறவர் வீட்டில் ஒருவருமில்லாமையால், இக்கோலத்துடன் பிக்ஷைக்கு வெளிப்புறப்பட்டேன். என் குழந்தையும் சரியான உணவில்லாமல் இந்த ஸ்திதிக்கு வந்து விட்டது" என்றாள். இப் படி அந்த அந்தணமாது கூறியதும் ஜானகி தன் நாயகனது திரு முகத்தை நோக்கிப் பின் தன் ஆபரணங்களையும் திவ்ய வஸ்திரங் களையும் அந்த ஸ்திரீக்கு மனமகிழ்ச்சியுடன் அளித்து அம்மாதைப்

பார்த்து "அம்மா நீங்கள் விரைவாக இலட்சுமணரிடம் சென்று என் உத்தரவுப்படி இலட்சம் பவுன் வாங்கிக்கொள்ளுங்கள்" என்று கூறினாள். அம்மாது அவ்விதமே இலட்சுமணரிடஞ் சென்று சீதையின் உத்தரவைத் தெரிவித்தாள். இலட்சுமணர் நமது இராஜ்யத்தில் பொய் கூறுகிறவர்கள் கிடையாது; ஆகையால் இம்மாது புகல்வதும் உண்மையாகத் தானிருக்குமென நம்பி அம்மாதுக்குச் சீதை உத்தரவுப்படியே இலட்சம் பவுன் கொடுத்தனுப்பினார். பிறகு சீதை தன் தாதியை இலட்சுமணரிடம் அனுப்பி, "இந்த ஏழு தீவுகளிலும் மற்ற இடங்களிலும் ஸ்திரீகளிலோ புருஷர்களிலோ யாரேனுமொருவர் நல்ல ஆடை ஆபரணங்களில்லாம லிருக்கிறதாகச் சாரர்கள் எனக்குத் தெரிவிப்பார்களானால், அந்தத் தேசத் தரசர்களுக்கு என்னாலும் இராமராலும் தக்க சிக்ஷை விதிக்கப்படும்" என்று பறைசாற்றுவிக்கும்படி தெரிவித்தாள். அயோத்தியிலும் இந்த உத்தரவைத் தெரியப்படுத்தவேண்டு மெனவும் கூறினாள். இதுவன்றி நமது தேசத்து அந்தணர்களுக்குக் கஜானுவிலிருந்து வேண்டிய திரவியங்கள் கொடுத்து அவர்களைப் பூஜிக்க வேண்டுமெனவும் தெரிவித்தாள். இலட்சுமணர் சீதையின் உத்தரவுப் படியே பறை சாற்றுவித்தார். ஏழு தீவுகளிலுள்ள அரசர்களும் தங்கள் தேசங்களில் சீதாபிராட்டியின் உத்தரவை யானையின் மீதேறி வாத்திய சப்தங்களுடன் தெரிவித்தார்கள். அது முதல் எல்லாத்தேசங்களிலும் பூமி புத்திரியாகிய சீதாபிராட்டியின் உத்தரவுப்படி வஸ்திர மில்லாதவர்களுக்கு வஸ்திரமும் ஆபரண மில்லாதவர்களுக்கு ஆபரணமும் அளிக்கப்பட்டன. இவ்விதம் சீதாபிராட்டியானவள் அநேக விநோதங்களை நடத்தினாள். பிறகு இராமபிரான் மாகதர்கள் வந்திகள் துதி செய்யத் தமது சபை சென்று இராஜ காரியத்தைக் கவனித்தார்.

அப்பால், சாயங்காலமானதும் சபையை விட்டெழுந்து சீதையின் அரண்மனை வந்து சந்தியாவந்தனாதி நேம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு ஔபாஸன அக்னி ஹோத்திரங்கள் செய்து கைலாஸ பதியாகிய பரமசிவனைப் பூஜித்தார். பிறகு பிராமணர்களைப்

பூஜித்தார். அநேகவித பல வர்க்கங்களை அவர்களுக்கு அளித்தார். பிறகு தாம் போஜனம் செய்து புராணம், காயகர்களின் கானம் விஷ்ணுபக்தர்களின் நாமகீர்த்தனம் இவைகளைக் கேட்டுக்கொண்டு இரவு பதினொன்றே கால் நாழிகை வரையிலிருந்து விட்டு சயனகிருகம் வந்தார். இராமச்சந்திர பிரபுவின் வருகையை யறிந்த சீதை தன்தோழிகளுடன் எதிர்கொண்டு சென்றழைத்தாள். பிறகு இராமர் சீதாபிராட்டியுடன் ரத்தினமஞ்சத்தில் படுத்துத்தாஸிகள் சாமரங்கள்வீச நித்திரை புரிந்தார். இவ்வாறு இராமரால் சீதையும் சீதையால் இராமரும் சுகத்தை யனுபவித்தார்கள். சில சமயம் நிலாவில் வீட்டு முற்றத்திலும், சில சமயம் உப்பரிகையிலும், சில சமயம் உப்பரிகையின் மேற்புறத்திலும், சிலசமயம் கிருகத்திலும் சுவர்ணமணிகளால் அலங்கரிக்கப்பட்ட மஞ்சத்தின்மேல் சில சமயமும், சில சமயம் திராட்சை மண்டபத்திலும், சில காலம் ஜலயந்திரத்திற்குச் சமீபத்திலும், சில சமயம் மண்பூமியிலும், சிலகாலம் ஸ்படிக பூமியிலும், சிலசமயம் புஷ்பக விமானத்திலும், சிலசமயம் சித்திர கிருகத்திலும், சிலசமயம் விலாமிச்சைத் தோட்டத்திலும், சில சமயம் இன்னும் மற்றுமுள்ள அநேக இடங்களிலும் சீதையோடு சுகித்தார்.

சீதாராமர்களின் தினசரி அனுஷ்டானங்களை விவரிக்கும்

6 - வது சருக்கம்.

முற்றிற்று.

## 7 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஒரு நாள் வியாச மகா முனிவர், சரயூ, நதியில் ஸ்நானஞ் செய்யும் பொருட்டு சித்திரை மாதத்தில் அயோத்திக்கு வந்தார். இராமபிரான் அவரை எதிர்கொண்டழைத்து, நமஸ்கரித்து, பக்தியுடன் ஆசனமளித்துத் தமது அரண்மனைக்கு வந்திருக்கும் முனிவர்களுடன் வீற்றிருக்கச் செய்து காமதேனுசிந்தாமணி இவைகளினுதவியால் திவ்ய போஜனமளித்து அவருக்குத் தாம்பூல தக்ஷிணை கொடுத்து உபசரித்து க்ஷேமம் விசாரித்தார். அப்பொழுது சீதாதேவி சத்தியவதி குமாரராகிய வியாச முனிவருக்கு விசிறிக் கைங்கர்யமாற்றினாள். இச்சமயத்தில் வியாச முனிவர் தமது க்ஷேமத்தைத் தெரிவித்து இராமபிரானுடைய க்ஷேமத்தையுஞ் சந்தோஷமாக விசாரித்துப் பின் விசனமுற்று, "மகாபலம் பொருந்திய இராம! நீ அரசாட்சி செய்வது போல் மற்றவர்கள் செய்தது மில்லை, செய்கிற வருமில்லை, இனிச் செய்யப்போவதுமில்லை. உன்னுடைய மனத்திலிருக்கும் மற்றொரு தைரியத்தை நினைத்து இப்பொழுது ஆச்சரியப்படுகிறேன். அதாவது "ஏ இரகு சிரேஷ்ட! யௌவன பருவத்தில் காமமாகிற காட்டுத் தீயைச் சகிப்பவர் யார்? சீதையைத் தவிர மற்ற ஸ்திரீகளின் முகம் பார்ப்பதில்லை யென்னும் விரதம் அனுஷ்டித்து வரும் நீ இந்த யௌவன பருவத்தில் சகிப்பது மிகவும் ஆச்சரியமல்லவா" என்றார். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் இராமச்சந்திரர் "ஏ வியாஸமுனிவரே! என்னால்மூன்று பிரதிக்ஞைகள் செய்யப்பட் டிருக்கின்றன. ஒன்று, என் வாக்கினால் சொன்னதைப் பொய்யாக்குவதில்லை. அதற்கு இரண்டாவதும் பேசுவதில்லை. இரண்டாவது, சீதையைத் தவிர மற்ற ஸ்திரீகளை நினைப்பதில்லை. மூன்றாவது, எந்த சத்ருவைக்கொன்று விட வேண்டுமென்று விரும்புகிறேனோ அவனை ஒரே பாணத்தினாற் கொன்று விடுவது; இரண்டாவது பாணம் எடுப்பதில்லை. ஆகிய இம்மூன்று நியமங்களும் தங்கள் ஆசீர்வாதத்தினால் குறைவற நிறைவேறவேண்டு" மென்றார். வியாஸர் ஸ்ரீராமர் மொழியைக்கேட்டு "அவ்வாறே யாகுக" என்றாசீர்வதித்து "ஏ இராமா!

இந்த ஏக பத்நீ விருதத்தின் புண்ணியத்தால் அடுத்த ஜன்மத்தில் நீ கிருஷ்ணனாக அவதரித்து அநேக ஸ்திரீகளை மணந்து அனுபவிக்கப் போகிறாயா'' என்று கூறினர்.

இவ்வாறு அம்முனிவர் கூறியதும் இரகுநந்தனர் புன்னகை கொண்டு ''முனிவர் பிரானே! துவாபரயுகத்தில் கிருஷ்ணனாக அவதரித்து அநேக ஸ்திரீகளை மணந்துகொள்ளும்பாக்கியத்தைப் பெற நான் செய்யவேண்டிய விருதங்களும் தானங்களும் எவை? தயை செய்து கூறவேண்டு'' மெனப் பிரார்த்தித்தார். வியாசமுனிவர் ''ஏ இராம! நீ நல்ல கேள்வி கேட்டாய்? நீ அநுஷ்டித்து வரும் ஏக பத்நீ விருதத்தினாலேயே அந்தப் பாக்கியம் உனக்கு கிடைக்கும். ஆனாலும் நீ செய்யவேண்டியதைக் கூறுகிறேன் கேள். அதாவது சீதையின் உருவத்தைப்போல் பதினாறு உருவங்கள் சொர்ணத்தினால் செய்து அவைகளை வஸ்திரம் ஆபரணம் இவைகளாலலங்கரித்துச் சரயூநதிக்கரையில் பிராமணர்களுக்குத் தக்ஷிணையுடன் தானஞ்செய்தால் அடுத்த ஜன்மத்தில் அநேக ஸ்திரீகளை யடைவாய்'' என்று கூறினர். அம்முனிவர் பிரானது திருவாக்குப்படியே இராமபிரான் பதினாறு உருவங்களைச் செய்து சரயூநதிக்கரையில் தானஞ்செய்தார். அந்தப் பதினாறு உருவங்களைப் பெற்றுக்கொண்ட அந்தணர்கள் இராமபிரானைப்பார்த்து ''ஏ இராமா! ஒன்று கொடுத்தால் ஆயிரங் கிடைக்குமென்பது தருமசாஸ்திர விதி. ஆகையால் நீ பதினாயிரம் ஸ்திரீகளை யடைவாய்'' என்று ஆசீர்வதித்துச்சென்றனர். பிறகு இராமர் சந்தோஷத்துடன் வியாஸமுனிவரை நமஸ்கரித்துப் பூஜை செய்து ஆசிரமத்திற்கு அனுப்பினர்.

இதன் பின்பு ஒரு நாள் சித்திரை மாசத்தில் இராமர் சீதாபிராட்டியுடன் சரயூநதிக்கரையில் கூடாரத்திலிருந்து விளையாடினர். இப்பொழுது இராம தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்ய வெகு ஜனங்கள் அயோத்தி நகரம் வந்தார்கள். தேவர்கள், யக்ஷர்கள் பன்னகர்கள், கின்னரர்கள், கந்தர்வர்கள், ஓஷதிகள், நதிகள், முனீசுவரர்கள், அரசர்கள், அப்ஸரஸ்திரீகள் புண்ணிய க்ஷேத்திர அபிமான தேவதைகள், குரங்குகள் இவர்கள் யாவரும் அயோத்திக்கு வந்தார்கள். பிறகு தேவ பத்னிகள் வந்தார்கள். அந்தச் சமயம்

சீதை தீண்டத்தகாதவளா யிருந்தாள். (ரஜஸ்வலையா யிருந்தாள்) இதை அறிந்த அவர்கள் இராமபிரானுடைய அழகில் மோகங் கொண்டு மன்மத பாணத்தால் வருத்த முற்றுப் பாதி ராத்திரி வேளையில் இராமசந்திரரைப் பார்க்க வந்தார்கள். அவர்கள் வருவதைப் பார்த்த இராமபிரானுடைய காவலாளிகள் "நீங்கள் யார்? இந்த நள்ளிருளில் இங்கு வரக் காரணம் யாது? சந்தேகமின்றித் தெரிவியுங்க" ளென்று கேட்டார்கள். அவர்கள் 'நாங்கள் இராமரை பார்க்க வந்தவர்கள்? இப்போது ஸ்ரீராமச்சந்திரருடைய தரிசனம் கிடைக்காவிட்டால் சரயூநதியில் எங்கள் தேகத்தை ஒழித்துவிடுவதாகத் தீர்மானித்து விட்டோம்'' என்றார்கள். இப்படிக் கூறிய அந்த தேவபத்நிகளுடைய வார்த்தையைக் கேட்ட அந்த வேலைக்காரர்கள் தாஸிகள் மூலமாக, ஸ்ரீ ராமபிரானுக்குத் தெரிவித்தார்கள். உடனே இராமபிரான் தாம் சயனித்திருந்த இடத்திற்கு அவர்களை யழைக்கும்படி தாதிகளுக்கு உத்தரவிட்டார். தாதிகள் அவர்களை யழைத்து வந்ததும் ஸ்ரீ ராமபிரானுக்கு அவர்கள் வந்தனம் புரிந்து நாம் மகா புண்ணியஞ் செய்தவர்கள், அதனால் தான் இராமதரிசனம் கிடைத்ததென்று எண்ணிக்கொண்டு வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றார்கள். இராமர் அப்பொழுது அவர்களைப் பார்த்து "நீங்கள் இங்கு வந்த வரலாறு யாது"என்று கேட்டார். அந்த ஸ்திரிகள் "ஈசுவர! சகலமும் அறிந்தவராயிற்றே தாங்கள். நாங்கள் எதைத் தெரிவிக்கப் போகிறோம்'' என்றார்கள். இராமர் உடனே அவர்கள் மனத்திற் கொண்டிருக்கும் எண்ணத்தை யறிந்து "தேவபத்நிகளே! உங்கள் எண்ணத்தை யானறிவேன். நான் இந்த ஜன்மத்தில் ஏகபத்நி விருதம் அனுஷ்டித்து வருகிறேன். என்வார்த்தையைப் பொய்யாக நினைக்க வேண்டாம்; உங்கள் இருப்பிடத்திற்கு நீங்கள் விரைவாகச் செல்லலாம், அரசர்களுக்குக் கெடுதியைத் தரும்படியான காரியம் நமது இராஜ்யத்தில் வேண்டாம்'' என்றார். இவ்வார்த்தைகளைக்கேட்டதும் அந்த ஸ்திரீகள் அவ்விடத்திலேயே மூர்ச்சித்து விழுந்துவிட்டார்கள். இவ்வாறு விவேகமற்றுக் கீழே விழுந்த அந்த ஸ்திரிகளைப் பார்த்த தீனரக்ஷகரான இரகுபுங்கவர் மனமிரங்கி "ஏ மாதர்களே! உங்களுடைய வருத்தந் தீரும்படியான என் வார்த்தையைக் கேளுங்கள். நான் துவாபர யுகத்தில் கிருஷ்ணனாக அவதரித்து நந்தகோப

ளுல் பரிபாலிக்கப்பட்டு இடைச்சேரியில் வசிக்கப்போகிறேன். அப்பொழுது இனி நான் கொடுக்கப்போகிற வரத்தினுல் தேவர்கள் கோபாலர்களாகவும் இந்திரன் நந்தனுகவும் அவதரிக்கப் போகிறூர்கள். அப்போது நீங்கள் கோபஸ்திரீகளாக அவதரிப்பீர்கள். உங்களிஷ்டம் அக்காலந்தான் நிறைவேறும். உங்களோடு இராஜக்ரீடையை பிருந்தா வனத்திலும் யமுனுநதியின் மணலிலும் செய்கிறேன். ஆகையால் வருத்தப்படாமல் உங்களிருப்பிடத்திற்குச் செல்லுங்கள்" என்று கூறினர்.

இவ்வாறு கூறிய அந்த இராமருடைய வசனுமிருதத்தினுல் அவர்கள் உயிர்பெற்றுச் சந்தோஷத்துடன் அவரை நமஸ்கரித்துத் தங்களிருப்பிடஞ் சென்றூர்கள். இச்சமயத்தில் மாயாபுரியிலிருந்து மங்களசொரூபியான குணவதியென்பவள் மேற்கூறிய புண்ணிய காலத்தை உத்தேசித்துச்சரயூ நதியில் ஸ்நானஞ்செய்வதற்காக வந்தாள் என்று இராமதாஸர் கூறினர். இதைக்கேட்டதும் விஷ்ணு தாஸர், "பரமகுருவே! தாங்கள் கூறிய குணவதி யென்பவள் யார்? அவளுடைய சுபாவமென்ன? அவள் யாருடைய பெண்? முன் யாருக்கு அவள் பத்னியாயிருந்தாள். இவைகளை விஸ்தரிக்கவேண்டுகிறேன்" என்றூர். இராமதாஸர் மறுபடி மேலே கூறுகிறூர்.

தேவபத்நிகளுக்கு வரமளித்ததைக் கூறும்.

7 - வது சருக்கம் முற்றிற்று.

## 8 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

மாயாபுரியில், கிருதயுகத்தின் முடிவில் தேவசர்மாவென்றொரு அந்தணரிருந்தார். அவர் ஆத்திரேய கோத்திரத்தில் பிறந்தவர். நான்கு வேதம் ஆறு சாஸ்திரம் இவைகளின் கரைகண்ட நிபுணர். அதிதிபூஜை அக்நிஹோத்திரம் சூரியவிருதம் சூரியபூஜை இவைகளைத் தவறாமற் செய்யும் பிராமண சிரேஷ்டர். அவருக்குக் குணவதி யென்ற பெண்ணிருந்தாள். ஆண் சந்ததி கிடையாது. அவர் தமது பெண் குணவதியைச் சந்திரன் என்ற பெயருள்ள தமது சீடனுக்கு விவாகம் செய்துகொடுத்தார். அந்தச் சந்திரனையே தனக்குப் பிள்ளையாகவும் கொண்டு அன்புபாராட்டி வந்தார். இந்திரியங்களை ஜயித்த சந்திரனும் தேவசர்மாவைத் தனக்குத் தந்தையாகப் பாவித்துவந்தான். ஒரு நாள் தேவசர்மாவும் சந்திரனும் தர்ப்பங்கள் சமித்துகள் முதலியவைகளைக் கொண்டு வருவதற்கு இமயமலைக்குச் சென்று அங்கு, இங்குமங்கும் உலாவிக்கொண்டிருக்கையில் பயங்கரமான ரூபத்துடன் ஓர் அரக்கன் அவர்கள் எதிர் தோன்றினன். அவனைக் கண்டதும் பயமடைந்து தேக நடுக்கமுற்று ஓடித்தப்ப வழியற்று யமனுக்குச் சமானமான அவ்வரக்கனுக்கு இரையானார்கள். அவ்விருவரும் உயிருள்ள வரையில் சூரிய பகவானைப் பூஜை செய்து கடையிலும் இமயமலையில் மரித்தமையாலும் மாயாபுரியில் இதுவரையில் வசித்து வந்தமையாலும் தருமங்களைச் செய்து வந்தமையாலும் மகா விஷ்ணுவினுடைய கருணைக்குப் பாத்திரவான்களாகி அவருடைய தூதர்களால் அழைக்கப்பட்டு வைகுண்டலோகஞ் சென்றார்கள். சூரிய பூஜைபுரிந்தவர் வைகுண்ட உலகம் அடைவது எதனாலென்றால், விஷ்ணுவே சூரியனாகவும் சக்தியாகவும் விக்நேசுவரராகவும் பரமசிவனாகவும் இருக்கிறார். சூரியன் முதலிய தேவர்களைப் பூஜிப்பவர்கள் மழைஜலம் சமுத்திரத்தை யடைவதுபோல் அந்த மகாவிஷ்ணுவையே யடைகிறார்கள். சூரியனைப்போன்ற தேஜஸையடைந்து விமானத்தில் வைகுண்டத்திற்குச் சென்று அங்கு வசிக்கிற தேவசர்மா, சந்திரன் இவ்விருவரும் திவ்ய ஸ்திரீகளிடம் திவ்ய போகங்களை

அநுபவித்துக்கொண்டு விஷ்ணு ஸந்நிதானத்தில் விஷ்ணுவுக்குச் சமமான சாரூப்பிய முத்தி பெற்றுச் சுகமாக இருந்தார்கள்.

குணவதியானவள் தன் தந்தையும் புருஷனும் அரக்கனுக்கு இரையானதை யறிந்து விசனமுற்றுத் தன் வீட்டிலுள்ள சாமான்களைக் கிரயப்படுத்திப் புருஷனுக்கும் தந்தைக்கும் செய்யவேண்டிய சடங்குகளை முடித்து விட்டு அந்த மாயாபுரியிலேயே வாஸஞ் செய்து வந்தாள். விஷ்ணு பக்தியிற் சிறந்த குணவதி ஏகாதசி விருதம் கார்த்திகை விருதம், வருஷந்தோறும் மாக ஸ்நானம் சைத்திரஸ்நானம் வைகாசி மாதத்தில் (மாதவ) ஸ்நானம் விஷ்ணு ஆலயத்திருப்பணிசெய்தல், கோவில்களிற் கோலமிடுதல், விஷ்ணுவினிடத்தில் மனத்தைச் செலுத்தித்தினந்தோறும் விஷ்ணுபஜனம் செய்வது ஆகிய இவ்வெட்டு விருதங்களை வெகு பக்தியுடன் இந்திரிய நிக்ரகம் செய்து அநுசரித்து வந்தாள். சித்திரைமாதத்தில் அயோத்தியில் சரயூநதியிலுள்ள இராமதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால் மோக்ஷ முண்டாமென்று புராணிகர்கள் கூறுவதைக் கேட்ட குணவதி, ஒருநாள் பல ஜனங்களுடன் அயோத்தியாபுரி வந்து, ஸ்ரீராமதீர்த்தத்தில் தங்கினாள். அங்கிருக்கையில் ஒருநாள் சரயூநதியின் மணலில் கூடாரத்தில் வசித்து வரும் இராமரைப் பார்த்தாள். அவருடைய பூஜைக்கேற்றவைகளை எடுத்துக்கொண்டு புறப்பட்டுக் கூடாரம் சென்று வாயிற்காப்போன் மூலமாக இராமருக்குத் தெரியப்படுத்தி அவர் உத்தரவின் பேரில் கூடாரத்திற்குள் நுழைந்து, பாதங்களில் நூபுரமும் இடையில் அரைஞாணும் கரங்களில் இரத்தினகங்கணமும் தோட்களில் இரத்தினங்களிழைத்த தோள்வளையும் கழுத்தில் கௌஸ்துபமணி, இரத்தின மணிமாலை, முத்துமாலை, பவளமாலை துளசிமாலை இந்திரநீலம் மரகதமணிமாலை முதலிய மாலைகளும் ஸ்ரீராமா என்ற பெயர் வரைந்துள்ளமாலைகளும் கைவிரல்களில் இரத்தினமோதிரங்களும் செவிகளில் இரத்தினக் குண்டலங்களும் சிரசில் சூரியனுக்கொப்பான கிரீடமும் தரித்துக் கோடி சூரிய பிரகாசமுடையவராய் இரத்தினக்கட்டில் வீற்றிருந்து தமது மனைவியுடன் சொக்கட்டானடிக்கொண்டிருக்கும் ஸ்ரீராமரைக்கண்டு குணவதி சாஷ்டாங்க

மாக நமஸ்கரித்தாள். ஸ்ரீராமர் அவளை எழுந்திரு எனக் கூறிய தும் குணவதி எழுந்து அவருக்குப் பூஜை செய்தாள். இதனுல் இராமர் சந்தோஷமடைந்து உனக்கு வேண்டுவது யாதெனவினவி ஞர். குணவதி "ஏ இரகுவீர! எனக்கு வேண்டுவதொன்றுமில்லை, தங்களுடைய வேலைக்காரிகளில் ஒருத்தியாக என்னையுஞ் சேர்த்துக் கொள்ளவேண்டும்" என்று பிரார்த்தித்தாள்.

குணவதி இவ்வாறு கேட்டதும் இராமர் புன்னகைகொண்டு "ஏ மாதே! நீ ஒரு பிராமணமாது. இம்மாதிரி சொல்வது உசித மல்ல. என்னைச்சேவிக்க வேண்டுமென்ற விருப்பம் உனக்கிருந் தால் கூறுகின்றேன் கேள். துவாபரயுகத்தில் துவாரகா பட்ட ணத்தில் கிருஷ்ணுவதாரம் செய்யப்போகிறேன். உனது தந்தை தேவசர்மா சத்ராஜித் என்ற பெயர் கொண்டு பிறக்கப்போகிறுன். சந்திரன் அக்ரூரன் என்னும் பெயருடையவனுகப் பிறந்து எனக் குத் தோழனுகப் போகிறுன். நீ சத்தியபாமை யென்கிற பெய ரோடு பிறந்து எனக்குப் பத்நியாகப் போகிறுய். அச்சமயம் உன் மனத்தில் இருக்கும் அபிப்பிராயப்படி என்னைத் திருப்திபண்ணி வைக்கலாம்" என்று கூறினர்.

அதைக்கேட்டதும் குணவதி சீதாராமர்களுக்கு அநேக நமஸ் காரஞ் செய்து அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு சைத்திர ஸ்நானத்தையும் முடித்துக்கொண்டு தன்னேடு வந்த ஜனங்களு டன் அரித்துவாரம் சென்று அங்கு ஆயுளுள்ள மட்டும் வசித் திருந்து பிறகு கங்காநதியில் ஜுரமடிக்கும் வேளையில் ஸ்நானஞ் செய்து தன் தேகத்தை த்யாகம் செய்து, வெகுகாலம் வரையில் சொர்க்கத்திலிருந்தாள். பிறகு துவாபரயுகத்தில் துவாரகா பட் டணத்தில் சத்ராஜித்துக்குப் பெண்ணுகப் பிறந்து ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்குப் பத்நியாகி அநேக விதமாகப் பகவானை உபசரித் தாள்

பிறகு ஒருநாள் இரவு பிங்களை என்ற ஒருவேசியானவள் இரா மபிரான் சீதாதேவியுடன் திவ்யமஞ்சத்தில் படுத்து நித்திரைசெய் யும் சமயத்தில் தன்பாதங்களில் அணிந்துகொண்டிருந்த தண்டை

களைக் கழற்றிவிட்டு திவ்ய வஸ்திராபரணம் பூண்டு இங்குமங்கும் பார்த்துக்கொண்டு சீதை காண்பாளோ வென்னும் பயமுடைய வளாய் மன்மத பாணத்திற்கு மனமுடைந்து வாசற்காவலாளிகளை யறியாமல் இராமபிரானது சயனஸ்தானத்துக்கு வந்து அவரது பாத தாமரையைத் தன் கையால் தொட்டு எழுப்பினள். அப்பொழுது இராமசந்திர பிரபு விழித்துக்கொண்டு தன் எதிரில் நிற்கும் பிங்களை என்பவளைக் கண்டார். இராமர் பார்த்ததும் பிங்களை இரகுநந்தனர் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு "ஏ இராம! செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய ஏ காகுஸ்த! நான் செய்த குற்றத்தை மன்னித்துக் கிருபை கூர்ந்து என்னிடம் கருணை செய்யவேண்டும்" என்றாள். இவ்வார்த்தையைக் கேட்டதும் இராமர் இவள் காமவெறிகொண்டவளெனத் தெரிந்து "ஏ பிங்களே! என்னுடைய ஏகபத்னீ விரதத்தின் மகிமையை நீ அறியாய் போலும்" என்று கூறிவிட்டு "ஏ மாதே! நான் கிருஷ்ணவதாரம் செய்யப்போகிறேன். அப்பொழுது மதுரா பட்டணத்து அரசனாக விருக்கப்போகிற எனது மாமன் கம்ஸனை நான் வதஞ்செய்யப் போகிறேன். நீ அப்போது அவன் வீட்டில் குப்ஜை என்னும் பெயரையுடைய ஒரு வேலைக்காரியாக இருக்கப் போகிறாய். அந்தக்காலத்தில் உன் எண்ணம் நிறைவேற்றப்படும்" என்று கூறி, ஸ்திரீ ஜாதியானதால், அவள் துணிகரமாய் யாவரையும் அறியாமல் உள்ளேவந்த குற்றத்தை மன்னித்து அனுப்பி விட்டார். பிறகு வேலைக்காரர்களின் அஜாக்கிரதைக்காக அவர்களைத் தண்டித்தார். இதன் பின்பு சீதையை எழுப்பிப் பிங்களை வந்ததைக் கூறினர். இதைக் கேட்டதும் சீதை கோபமடைந்து தன் நாயகனைப் பார்த்து "அப்போதே ஏன் என்னை எழுப்பித் தெரிவித்திருக்கப்படாது. உம்முடைய ஏகபத்நி விரதத்தைப்பற்றி முன் வியாசமுனிவரிடம் நீர் பிரதிக்ஞை கூறிப் புகழ்ந்தது பொய் போலும்! நீர் பிங்களையோடு சுகமனுபவித்து விட்டு இப்பொழுது அவள் சென்றபின் என்னை எழுப்பியிருக்கிறீர். உமது நடத்தையை யறிந்தேன். அன்னிய ஸ்திரீயை நான் எனது தாயாகிய கௌஸல்வியைக்குச் சமானமாகக் கருதுகிறேன் என்று அடிக்கடி கூறியிருக்கிறீரே! அவ்வார்த்தை இப்போது

எப்படியாயிற்று? அந்த ஏக பத்நீ விரதம் இப்போது எங்கே? இந்த நிமிஷத்திலேயே நான் சரயூநதியில் விழுந்து என் பிராணனை விட்டு விடுகிறேன். ஒரு வேசி படுத்த படுக்கையை நானும் தீண்டப்போமோ? வேசியுடன் கூடிச் சுகித்த உம்மைப் பார்த்த என் மனம் சகிக்கவில்லை. நான் மரணமடைந்தபிறகு தங்களுக்கு என்ன நேரிடப்போகிறதோ தெரியவில்லை. வேசியினிடம் ஆசை வைத்த அரசனிடம் இராஜ்யம் அதிகநாளிராது" என்று கூறி இராமரை நமஸ்கரித்து, உயிரை மாய்த்துக்கொள்ளத் திடீரென்று எழுந்து மின்னற் கொடிபோன்ற ஜானகி விரைவாகச் சரயூநதிக்குப் புறப்பட்டாள். இவ்வாறு கோபங்கொண்டு செல்லும் ஜானகியை இராமர் பின் தொடர்ந்து சென்று விரைவாகத் தமது கரங்கொண்டு கட்டித்தழுவி மணலில் உட்காரவைத்து, "ஏ வைதேகி! கோபங்கொள்ளாதே! நான் ஒரு வார்த்தை கூறுகின்றேன் கேள். உனக்கு நான் எவ்வளவு பிரதிக்ஞை செய்தாலும் நம்பிக்கையுண்டாகாது. நீ இப்போது எவ்விதமாகப் பிரதிக்ஞை செய்யச் சொன்னபோதிலும் செய்கிறேன். சீக்கிரமாகத் தெரிவி" யெனக்கூறினார். பிராணநாதன் இவ்விதங் கூறியதும் சீதாபிராட்டி கூறுகிறாள்.

நாதா! நான் தங்களுக்கு என்ன சொல்லப்படுகிறேன். அக்கினிதேவன் தங்களுடைய வதனத்திற் பிறந்தவன். தங்களுக்குச் சந்திரன் சூரியன் இவர்களிருவரும் நேத்திரங்கள். சமுத்திரம் தமக்கு இருப்பிடம். இந்தப் பூமியைத் தாங்குகிறவரும் நீரே. ஆதிசேஷன் தங்களுக்குப் படுக்கை. அந்த ஆதிசேஷனே தங்களுக்குச் சகோதரனாகப் பிறந்து தங்கள் வாசலிலிருக்கிறான். தங்களுடைய நகங்களிலிருந்துண்டான ஆயுதங்களே இங்கிருப்பவை. நான் பார்க்கும் எந்தப் பொருளும் தங்களுடைய சொரூபமாகவே யிருக்கின்றது. ஆகையால் எனக்கு நம்பிக்கையுண்டாவதன் நிமித்தம் தாங்கள் சபதஞ் செய்வதற்கு நான் எவைகளைக் கவனித்தாலும் அவைகள் யாவும் தங்களுடைய அம்சமாகவேயிருக்கிறபடியால் ஒன்றையும் குறிப்பிடுவதற்கில்லை. ஆனால் என் புத்திக் கெட்டியதொன்று. அந்தச் சபதத்தைத் தாங்கள் செய்தாற்போ

தும். அதாவது இந்த நிமிஷமே தங்களுடைய ஆசிரியராகிய வசிஷ்ட மகா முனிவரை வரவழைத்து அவருடைய பாதங்களைத் தொட்டுச் சபதம் செய்தால் நம்பிக்கையுண்டாகும்'' என்றாள்.

இப்படிச் சீதாபிராட்டி கூறியதும் இராமர் புன்னகை கொண்டு இலட்சுமணரை வரவழைத்து வசிஷ்ட முனிவரை அழைத்து வரும்படி கட்டளையிட்டார். இதைக் கேட்டதும் இலட்சுமணர் பல்லக்கிலேறி பட்டணத்திற்குள் பிரவேசித்து வசிஷ்ட முனிவர் வீடுசென்று வேலைக்காரர்கள் மூலமாகத் தமது வரவை வசிஷ்டருக்குத் தெரிவித்தார். அந்த நள்ளிருளில் இலட்சுமணர் வரவைக் கேட்டதும் வசிஷ்ட முனிவர் இவ்வேளையில் இலட்சுமணன் வரயாது காரணமென்று திடுக்கிட்டு அவரை உள்ளே அழைத்து வரும்படி தெரிவித்து "இலட்சுமணா! இப்பொழுது இங்கு வந்த காரணம் என்ன'' என்று கேட்டார். இலட்சுமணர் முனிவரை நமஸ்கரித்து "முனிவர் பிரானே! இராமசந்திரர் தங்களுக்கு ஞாபகப் படுத்தும்படி ஆக்ஞாபித்தார். அதன்பொருட்டு வந்தேன். பல்லக்குத் தயாராக இருக்கிறது. இப்போதே புறப்படவேண்டும். காரணம் நானறியேன்'' என்று கூறினர். இதைக்கேட்டதும் வசிஷ்டமுனிவர் அருந்ததியுடன் பல்லக்கிலேறிச் சரயூநதிக்குப் புறப்பட்டார். இலட்சுமணர் வேறு பல்லக்கிலேறிக் கொண்டு அவர்களுக்குப் பின் சென்றார்.

இராமசந்திரர் தமது குரு வசிஷ்டரது வரவை அறிந்து இரத்தினத் தீவட்டிகளுடன் எதிர்கொண்டு சென்று குருவையும் அவரது பத்தினியையும் அழைத்து ஆசனமளித்துச் சீதையுடன் தாமும் நமஸ்கரித்து இருவரும் அவர்களை வஸ்திராபரணாதிகளால் பூஜித்து, பிங்களை வந்து போனதையும், சீதை அதனால் கோபங் கொண்டிருப்பதையும் அவள் சபதஞ்செய்யச் சொன்ன விதத்தையுங் கூறி, "ஏ முனிவரே! நான் அந்தப் பிங்களையை அனுபவிக்க வேண்டும் என்று மனத்திலும் எண்ணவில்லை; இதுவரையில் வேறு எந்த ஸ்திரீயையும் நான் மனத்திற்கருதினவனன்று. இந்த

வாக்கியம் தங்கள் பாதசாக்ஷியாக உண்மையென்று கூறி அவரு டைய பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்துச் சபதஞ்செய்தார்.

இவ்விதம் இராமர் சபதஞ் செய்ததைக்கண்ட சீதை ஆச்சரிய மடைந்து தன் நாயகன் குற்றமற்றவனெனவறிந்து "பிராணநாதா! அடியேன் தங்கள் மகிமையை யறியாது கூறியதை க்ஷமிக்கவேண்டு மென வணக்கத்துடன் பிரார்த்தித்துக்கொண்டாள். பிறகு அருந் ததிக்கு வஸ்திராபரணங்கள் கொடுத்து உபசரித்தாள். இராம ரும் வசிஷ்டருக்குப் பூஜை செய்து உபசரித்தார். உடனே இரு வரும் பல்லக்கிலேறி அவ்விடமிருந்து புறப்பட்டுத் தங்களுடைய கிருகம் வந்து சேர்ந்தார்கள்.

பொழுது புலர்ந்ததும் சீதை தன் தாதிகளிலொருத்தியை யனுப்பிப் பிங்களையைப் பிடித்துக்கொண்டு வரும்படி ஆக்ஞா பித்து, அவள் அப்படிக் கொண்டு வரப்பட்டதும் அவளைப்பார்த்து, "நீ எனக்குப் பெருங்குற்றஞ் செய்தமையால், மதுராபுரியில் மூன்று கோணல்களுடன் கூடிய சரீரத்துடன் 'பிறக்கக்கடவாய்" என்று சாபமிட்டாள். பிங்களை தாமே என் சாப விமோசனத்துக்கும் அநுக்கிரகம் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, சீதா பிராட்டி, உனக்குக் கிருஷ்ணமூர்த்தியின் கிருபா கடாக்ஷத்தால் திவ்ய ரூபமுண்டாகு மெனவும் அநுக்கிரகஞ் செய்து அனுப்பினள்.

இவ்விதம் இராமபிரான் தன் மனத்திற்கிசைந்த விளையாட்டு களைப் பலவிதமாகச் செய்து சீதைக்குச் சந்தோஷ முண்டாக்கிக் கொண்டு சுகமாகவிருந்து வந்தார்.

சீதை சினமடைந்ததை கூறும்

8 - வது சருக்கம்

முற்றிற்று.

## 9 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஒரு நாள் இராமர் சூரியகிரகண புண்ணிய காலத்தில் சீதையுடனும் பந்துக்களுடனும் புஷ்பகவிமானமேறி குரு க்ஷேத்திரஞ் சென்றார். அங்குத் தேவர்கள், முனிவர்கள், கந்தர்வர்கள், பன்னகர்கள், கின்னரர்கள் முதலிய யாவரும் வந்திருந்தார்கள். இராமபிரான் அந்த க்ஷேத்திரத்தில் அந்தப் புண்ணியகாலத்தில் ஸ்நானஞ் செய்து குதிரைகள், ஒட்டகங்கள், இரதங்கள், யானைகள் இவைகளைத் தானஞ் செய்தார். இங்கு அரசர்கள் யாவரும் காணிக்கையுடன் இரகுவீரரைத் தரிசித்து மகிழ்ச்சி யடைந்தார்கள். ராஜபத்நிகளும் சீதையைத் தரிசித்து மகிழ்ந்தார்கள்; ஜானகி தேவியும் ராஜஸ்திரீகளை ஆலிங்கனஞ் செய்து உத்தமமான ஆசனங்களில் உட்காரவைத்துத் தோழிமாருடனும் முனிவர் பத்நிகளுடனும் தானும் உட்கார்ந்தாள். இந்தச் சமயம் சீதாதேவியின் பூஜையை யேற்றுக்கொண்ட அகஸ்திய முனிவருடைய பத்நியாகிய லோபாமுத்திரை சந்தோஷங்கொண்டு சீதையைப் பார்த்து, "ஏ சீதே! தாமரைதளம் போன்ற கண்களையுடையவளே! மதம் பிடித்த பெண் யானையைப் போன்ற நடையுடையவளே! நீ பாக்கியம் செய்தவள். செவிக்கினிமையைத் தரும் உனது பர்த்தாவின் பராக்கிரமத்தைச் சிறிது தெரிவிப்பாயென வினவினாள். லோபாமுத்திரை இவ்வாறு வினவியதும் சீதாபிராட்டி மனமுவந்து இராமபிரான் தன்னை விவாகம் செய்து கொண்டது முதல் இப்போது குருக்ஷேத்திரம் வந்திருக்கிறவரையில் தான் தன் நாதனிடங்கண்டு களித்த பராக்கிரமங்களை யெடுத்துரைத்தாள். இதைக்கேட்டதும் லோபாமுத்திரை சிரித்துக் கொண்டு "மஹானுபாவனாகிய இரகுவீரர் செய்த சகல காரியங்களும் உசிதந்தான்; சமுத்திரத்தில் குரங்குகளைச் சிரமப்படுத்தி அணைகட்டியது தான் வீணென்று என் புத்திக்குப் படுகிறது. அவர் அகஸ்தியமுனிவரிடம் ஒரு வார்த்தை கூறியிருப்பாரேயாயின், அவர் தமது உள்ளங்கையில் அச்சமுத்திரத்தை வரவழைத்துப் பானஞ் செய்திருப்பார். அப்படிச் செய்யாமல் வீண் சிரமப்

பட்டார்'' என்றாள். முனிவர் பத்நியின் வார்த்தையைக் கேட்ட சீதாபிராட்டி, புன்னகைகொண்டு ''ஏ பதிவிருதா சிரோமணியே! இராமபிரான் அணைகட்டியது மிகவும் உசிதம். அதற்குக் காரணம் கூறுகின்றேன்; கவனித்துக் கேளுங்கள். ராஜஸ்திரீகளும் கவனித்துக் கேட்கட்டும். அம்மா! எனது நாயகன் ஒரு பாணத்தால் சமுத்திர ஜலத்தை வற்றச்செய்தல் கூடும். அப்படி வற்றிப் போகும்படி செய்தால், அதற்குள்ளிருந்து வாழும் அநேக ஜந்துக்களுக்குக் கஷ்ட முண்டாகுமென்று கருதிப் பாணமெய்யவில்லை. ஆகாயமார்க்கமாக வந்தால் இராவணன் இராமரை மானிடனென்று எண்ணமாட்டா னென்பதைக் கருதி அவ்வாறு செய்யவில்லை. அனுமார் தூக்கிச்சென்றால் இராமருக்குப் பராக்ரமமில்லை யென்று இராவணன் கருதக்கூடுமென்று அவ்வாறு செய்யவில்லை. நீந்திச்செல்லலாமே என்றால், பிராம்மணனுடைய மூத்திரத்தைத் தாண்டக் கூடாதென்று ஆலோசித்து அவ்வாறு செய்யவில்லை. தங்கள் பிராணநாதர் முதலில் இச்சமுத்திரத்தைப் பானஞ்செய்து பிறகு மூத்திரத் துவாரத்தின் வழியே திரும்பவும் வெளிப்படுத்தினர். இச்சமுத்திரம் உப்பாகவிருப்பதே அதற்குச் சாட்சியென்று கொள்ளவேண்டும். தங்கள் பர்த்தா, இராமபிரான் உத்தரவிடும் பக்ஷத்தில் செய்வார், தட்டமாட்டார்; இராமன் தன் நிமித்தம் ஒருபிராமணனை மூத்திரபானம் செய்யச்சொன்னனென்கிறவீண் அபவாதம் வருமென்றஞ்சி அவ்வாறு செய்யவில்லை. இவ்வளவு காரணங்களைக் கொண்டு தான் எனது பிராணநாதர் அணைகட்டினர். இராமருக்கு முன் ஒருவரும் இவ்வாறணைகட்டியதில்லை; இனிக் கட்டப்போகிறது மில்லை. இதனால் கல்லைக் கடலில் மிதக்கச் செய்தார் இராமபிரான் என்ற பெருமையையடைந்தார்'' என்று பதிற் கூறினாள். இப்படிச் சீதை கூறியதும் லோபா முத்திரை ஸ்திரீகளின் கூட்டத்தில் மிகுந்த வெட்கத்தையடைந்தாள்.

பிறகு வைதேகி சிறித்துக்கொண்டு, லோபாமுத்திரையையும் முனிவர்பத்நிகளையும் பூஜைசெய்து லோபாமுத்திரையைப் பார்த்து ''பதிவிரதா சிரோமணியே! நான் செய்த குற்றத்தை மன்னிக்க வேண்டும். நாம் ஒருவர்க் கொருவர் விளையாட்டாகப் பேசிக்கொண்டிருந்ததனாலே தான் எனது பிராணநாதர் பராக்ரமத்

தைப்பற்றிப் பேசினேன். தங்கள் நாயகனுடைய ஆசீர்வாதத்தின் மகிமையால் தான் இராமர் இந்த மகோன்னத பராக்ரமத்தைப் பெற்றார் என்பதை நானறிவேன்" என்று கூறி, அவர்களெல்லோரையும் பூஜித்து விடை கொடுத்தனுப்பினாள். அரசர்கள் யாவரும் இரகுபுங்கவரைப் பூஜித்துத் தத்தம் பதிக்கேகினர். இரகு வீரரும் சீதையுடன் கருடவாகனமேறிப் புறப்பட்டார். தாசரதி அயோத்தி வந்ததும் அரண்மனை ஸ்திரீகள் நீராஜனம் சுற்ற அரண்மனைக்குட் பிரவேசித்து சீதா பிராட்டியுடன் அநேக விளையாட்டுகளைச் செய்துகொண்டு சுகமாக இருந்தார்.

இராமச்சந்திரர் சீதையுடன் எப்படி அநேக விளையாட்டுகளைச் செய்துகொண்டு சுகித்து வந்தனரோ அவ்விதமே இலட்சுமணரும் ஊர்மிளையுடனும் அநேக விளையாட்டுகளைச் செய்துகொண்டிருந்தார். பரதன் மாண்டவியுடனும், சத்ருக்னன் சுருதகீர்த்தியுடனும் பட்டணத்திலுள்ளவர்கள் தீவுகளிலுள்ளவர்கள் எல்லோரும் அவரவர் பத்நிகளுடனும் அநேக விதமான விளையாட்டுகளைச் செய்துகொண்டு சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள். பார்வதி பரமேசுவரன் போல் இராமரும் சீதையுடனிருந்து அரசு செலுத்தி வந்தார். இராமபிரான் அரசாக்ஷி செய்யுங் காலத்தில் இந்தப் பூமியில் பரஸ்திரீ கமனஞ்செய்கிறவன், சாராயம், கஞ்சா முதலிய போதை வஸ்துக்களை உபயோகப் படுத்துகிறவன் தரித்திரன், வியாதிபஸ்தன், விபசனப்படுகிறவன், தளர்வுற்றோன், பாபஞ்செய்கிறவன், ஜடன், திருடன், ஹிம்ஸிக்கிறவன் இவர்களைக் காண்பதரிது. விஷ்ணுதாஸ! செவிக்குப் பரமானந்தத்தைக் கொடுக்கக்கூடிய சீதாராமர்களின் விளையாட்டை நானுனக்குரைத்தேன். இந்த விலாஸகாண்டத்தை முக்காலங்களிலும் இராமபிரானுடைய ஸந்நிதானத்தில் எவனொருவன் படிக்கின்றானோ அவனை பூமியில் மானிட வடிவமெடுத்த இராமனென்றே கருது. இந்த விலாஸகாண்டத்தைப் பாராயணம் செய்தால் திரவியத்தில் அபேக்ஷையுள்ளவர் திரவியத்தையும் போகங்களில் அபேக்ஷையுள்ளவர் போகங்களையும் புத்திரனை அபேக்ஷித்தவர் புத்திர

பாக்கியத்தையும் அடைவார். எந்த மானிடன் இராமபக்தி யுடன் பாராயணஞ் செய்கின்றானோ அவன் பாபரகிதனாகிச் சுக மடைவான். சிலாக்கியமானதும் ஜனங்களின் மனத்துக்கு ஆனந் தத்தை உண்டு பண்ணக்கூடியதும் செவிகளுக்கு இனிமையைக் கொடுக்கக் கூடியதுமான இந்த விலாஸகாண்டத்தைப் படித்தாலும் கேட்டாலும் சகல காமங்களையும் அடைவதுடன் மோக்ஷமென் னும் நான்காவது புருஷார்த்தத்தையும் பெறுவான். இராக்காலத் தில் படுக்கையில் தன் பத்னியுடன் இந்தக் காண்டத்தை ஆறுமா தம் படித்தால், புத்திரபாக்கியமுண்டாகும். அல்லது ஒரு படுக் கையில் வியாஸமுனிவர் போன்ற ஒரு பௌராணிகரை உட்கார வைத்து இரண்டாவது படுக்கையில் தானும் பத்தினியுமாக விருந்து அந்தரங்கமாய் ஒன்பது மாதம் கேட்டால் நிச்சயமாய்ப் பிள்ளை யுண்டாகும். இதில் ஐயமில்லை. புத்திரனை யுத்தேசித்து மாத் திரந்தான் படுக்கையிலிருந்து கேட்கவும் படிக்கவும் கூடும். விவா கத்தை உத்தேசித்துப் படித்தால் ஒன்பது மாதத்தில் பத்தி னியை அடைவான். கல்யாணமாகாத கன்னிகை படித்தால் ஆறு மாதத்தில் நல்ல புருஷனைப் பெறுவாள். புருஷனுடைய ஆயுளை யபேக்ஷித்த ஸ்திரீகள் ஸ்நானஞ்செய்து நியமத்துடன் கேட்க வேண்டும். ரமணீயமானதும் விசித்திரமானதும் பரிசுத்தமான தும் கரும்பு போன்றதும் ஸம்ஸார ரோகத்திற்குத் தண்டம் போன்றதுமான இந்த விலாச காண்டத்தை யானுனக்குக் கூறி னேன் என்றார் இராமதாஸர்.

குருக்ஷேத்திர யாத்திரை கூறும்

9-வது சருக்கமும் விலாஸகாண்டமும்

முற்றுப்பெற்றன.

# ஜன்மகாண்டம்.

## 1-வது சருக்கம்

### இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீ ராமபிரான் அயோத்தியா பட்டணத்தில் தமது பத்நி சீதாதேவியுடனும் பந்துக்களுடனுமிருந்து தேவர்களுக்குங்கிட்டு தற்கரிய விளையாட்டுகளை அநேகவிதமாக வெகுநாள் விளையாடி வந்தார். அச்சமயத்தில் சீதாதேவி கர்ப்பந்தரித்திருக்கின்றாள் என்று தாதியர்கள் சொல்லக்கேட்ட ஸ்ரீராமர் அநேக தானங்களைச் சந்தோஷத்துடன் வேதியர்களுக்குக் கொடுத்தார். நாடோறும் கோடிக்கணக்கான அந்தணர்களுக்குப் போஜனமளித்து வந்தார். சீதாதேவிக்கு நூதனமான இரத்தினுபரண அலங்காரங்களை அநேக விதமாகச் செய்யும்படி ஆக்ஞாபித்தார். சொர்ணமயமான நூற்களால் செய்யப்பட்டதும், பச்சை, மஞ்சள், சிவப்பு இவ்வர்ணங்க ளோடு கூடியதும் சரியான அகலநீள முள்ளதும் புஷ்பம் போல் மிருதுவானதும், விலையுயர்ந்ததும் மிக அழகுள்ளதுமான அநேக வஸ்திரங்களைப் புதிதாக நெய்து கொண்டுவரும்படி செய்து அவை களைத் தமது பத்திநி சீதைக்குக் கொடுத்தார்.

பிறகு இரண்டாவது மாதத்தில், தமது மாமி ஸுமேதையை யும் மாமனர் ஜனகமகாராஜனையும் மற்றுமுள்ள பந்துமித்திரர்களை யும் வரவழைத்து, பகற்பொழுதில் வசிஷ்டருடனும் பிராமணர் களுடனுமிருந்து சீதாதேவிக்குப் பும்ஸவனம் என்கிற கர்மாவை விதிப்பிரகாரம் திவ்யோற்சவங்களுடன் செய்தார். ஜனகமகாராஜன் கர்ப்பந்தரித்திருக்கும் தன் குமாரத்தியை இந்தப் பும்ஸவன முகூர்த்தத்தில் தான் பார்க்கும் பாக்கியம் பெற்றதற்கு மகிழ் ந்து தம்பதியை ஆசீர்வதித்து உபசரித்தார். அச்சமயத்தில் ஜனகமகாராஜன், சீதாதேவிக்கு சொர்ண நூற்களால் நெய்யப் பட்டதும் பச்சை, மஞ்சள் இவ்வர்ணங்களோடு கூடியதும் லேசானதும் பார்வைக்கு அழகானதும், அகல நீள முள்ளதுமான திவ்ய வஸ்திரங்களைச் சந்தோஷத்துடன் கொடுத்தார். ஸ்ரீராம பிரானுக்கு மனமகிழ்ச்சியுண்டாகத் தக்க யானைகள், குதிரைகள்

ஒட்டகங்கள் இரதங்கள் இவைகளையும் தாஸிதாஸர்களையும் மன மகிழ்ச்சியுடன் கொடுத்தார். இவ்விதமாக ஜனகமகா ராஜன் ஸ்ரீராமரையும் ஸீதாதேவியையும் உபசரித்தார். ஸ்ரீராமரும் ஜனக மகாராஜனைப் பூஜித்தார். பிறகு அவர் தமது பத்னியுடன் மிதிலைக்கேகினர். இராமபிரானுஞ் ஸீதாதேவியுடன் சுகமாகப் பல கிரீடைகளைச் செய்துகொண்டிருந்தார்.

இப்படியிருந்து வருகையில், நாளடைவில் ஸீதைக்குச் சரீரத்தில் பளுவுண்டானமையால், ஆபரணந் தரித்துக்கொள்வதை ஒழித்தாள். ஆபரணமணிந்துகொள்ளவில்லையாயினும் வெளுத்தும் இளைத்தும் தைன்னிய நிலைமையிலுமிருந்த அவள் தேசமானது வெகுஅழகாகவிருந்தது. இப்பொழுது ஒருநாள் ஸீதாதேவி, அயோத்தியா பட்டணத்திற்கு வெளியேயுள்ள உத்தியான வனத்தில் வசிப்பதற்குப் பிரியப்பட்டு, அதைத் தன்தாதி மூலமாக இராமருக்குத் தெரிவித்தாள். இராமர் அதனை யறிந்ததும் இலட்சுமணரை வரவழைத்துப் புன்னகையுடன் "ஏ இலட்சுமண! ஸீதை என்னோடு உத்யானவனத்தில் வஸிக்கவேண்டுமென்பதாகத் தெரிவித்திருக்கின்றனள். அதற்காகத்தான் உன்னை இப்பொழுது வரவழைத்தேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி ஆட்களுக்குக் கட்டளையிடு" என்றார். இலட்சுமணர் இராமபிரானுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு அவ்விதஞ் செய்விக்கிறேனெனக்கூறி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு, கையில்பிரம்பு பிடித்தவர்களும் விசித்திரமான முண்டாசுகளைப் பூண்டவருமான வேலைக்காரர்களை வரவழைத்து, அவர்களைப்பார்த்து ஸ்ரீராமபிரான் நமது அன்னையார் ஸீதாதேவியுடன் உத்யான வனத்துக்குச் செல்கிறார். இதை நகரத்து, வியாபாரிகளுக்கும் மற்றவர்களுக்குமறிவித்து உத்தியானவனத்திற்குச் செல்லும்படி அவர்களைத் துரிதப்படுத்துங்கள்" என்றார். உடனே அந்த வேலைக்காரர்கள் பட்டணத்து வீதிகள் தோறும் சென்று கைகளைத் தூக்கிக்கொண்டு உரத்த சப்தத்துடன் "பட்டணத்து ஜனங்களே! வியாபாரிகளே! மற்றுமுள்ள பெரியோர்களே! இதைச் சந்தோஷத்துடன் கேளுங்கள், நமது அன்னையார் ஸீதாதேவி இராமபிரானுடன் உத்யானவனம் செல்கி

ளுர்; நீங்கள் யாவரும் முந்திச்செல்லுங்கள்" என்று கூறிவிட்டு இலட்சுமணரிடம் சென்ருர்கள். மறுபடியும் இலட்சுமணர் அந்த வேலையாட்களைப் பார்த்து, பின் வரும் வேலைகளைச் சீக்கிரமாகச்செய்து முடிக்கும்படி ஆக்ஞாபித்தார். உத்யானவனத்தில் ஆச்சரியப்படத் தக்க கூடாரங்களை நான்கு பக்கங்களிலும் தயார்செய்ய வேண்டும். பூமியைச் சமன் படுத்தவேண்டும். ஜலயந்திரங்கள் யாவும் சரியாயிருக்கும்படி செய்யவேண்டும். அநேகமான மங்கள வஸ்துக்கள், ஸிலாக்யமான வாஸனைத் திரவியங்கள் இவைகளைத் தயாராக வைத்திருக்க வேண்டும். மிகமேலான வஸ்திரங்களையும் இன்னும் அங்கு வேண்டப்படும் அநேக சாமான்களையும் சீக்கிரம் தயார் செய்யவேண்டும். தோட்டத்திலுள்ள உப்பரிகைகளைத் திவ்ய வஸ்தரங்களாலும் தோரணம் முதலியவைகளாலும் கொடிகளாலும் விசேஷமாக அலங்கரித்து வைக்கவேண்டும்" என்ருர். வேலையாட்கள் சுவாமி அவ்விதமேசெய்து முடிக்கிருேமென்று கூறி அவரிடம் விடைபெற்றுச் சென்று ஆக்ஞைப்படி யாவற்றையும் அதி சீக்கிரத்தில் செய்து முடித்தார்கள். பிறகு இலட்சுமணர் இராமரிடம் சென்று, "இரகுநந்தன! தங்களுத்தரவுப்படி யாவும்செய்து முடிந்தன. உத்தியான வனத்துக்குப் புறப்படலாம். தங்களுக்கும் அண்ணியாருக்கும் எந்த வாகனத்தைக் கொண்டுவரட்டும்" என்று கேட்டார். இராமர் இதைக்கேட்டதும் சீதையையழைத்து "ஏசீதா! நீ எந்த வாகனத்தில் ஏறிக்கொண்டு உத்தியானவனம் செல்லப் பிரியப்படுகிருய்! அதைத்தெருவி" என்ருர். சீதை நான், பல்லக்கிலேறிப் போகப் பிரியப்படுகிறே"னென்ருள். இராமரும் அப்பொழுது பல்லக்கையே விரும்பினர். உடனே இலட்சுமணர் இரத்தினங்களாலும் முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்ட இரண்டு பல்லக்குகளைத் தூதர்கள் மூலமாக வரவழைத்தார். உடனே இராமர் பல்லக்கில் ஏறினர். தேகம்வெளுத்து இளைத்திருக்கிற சீதையானவள் சிறிது ஆபரணங்களை யணிந்து கொண்டு தாதியர்கள் அழைத்துவர, மெதுவாக வந்து பல்லக்கிலேறினள். கர்ப்பிணியானதால், சாய்ந்துகொள்ளத் தெண்டும், கீழே மிருதுவான மெத்தையும் போடப்பட்டிருந்தன. பல்லக்கில் பக்கத்

தில் தாதியர்களிருந்து விசிறி வந்தார்கள். சொர்ண முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட அப்பல்லக்கின் மேலே கட்டி விடப்பட்டிருக்கும் பிடியைத் தன் கையினால் பிடித்துக் கொண்டாள். உடனே இரண்டு பல்லக்கும் புறப்பட்டன. தெருக்களில் வரும்போது அங்கங்கே நடக்கும் வேடிக்கைகளை முத்துக்களா லமைக்கப்பட்ட சாளர மார்க்கத்தின் வழியே சீதாதேவி பார்த்துக்கொண்டே போனார். பிறகு பந்துக்களும் அவர்கள் மனைவிமார்களும் அழகான பல்லக்குகளில் தனி தனியே பேறிப்புறப்பட்டார்கள். முதலில் குலகுருவாகிய வசிஷ்டர் பிறகு சகோதரர்கள், பின் தாய்மார்கள், இவர்களுக்குப் பின்சீதை முதலியவர்கள் பந்துக்கள் அவர்கள் மனைவிமார்கள் இவ்விதமாக யாவரும் இராமரைத் தரிசித்துக்கொண்டு மனமகிழ்ச்சியுடன் சென்றார்கள். தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள். வாத்தியங்கள் முழங்கின. வந்திகள் சீதா ராமரை ஸ்தோத்திரம் செய்தார்கள்.

இவ்வாறு மங்கள வாத்தியங்கள் முழங்கவும் சேனைகளும் பட்டணத்து ஜனங்களும் சூழ்ந்துவரவும் ஸ்ரீ ராமபிரான் சீதாதேவியுடன் உத்யானவனம்வந்து அவர்க்கென்று பிரத்தியேகமாக அமைக்கப்பட்டிருந்த கூடாரத்துக்குட் சென்றார். பிறகெல்லாரும் அவரவர் கூடாரங்களில் பிரவேசித்தார்கள். இப்பொழுது வாரஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள். வாத்தியங்கள் முழங்கின. சீதாதேவியின் கூடாரமானது திவ்ய வஸ்திரங்களால் அமைக்கப்பட்டிருந்தது. சீதையும் இராமரும் மனஉல்லாசமாக வீற்றிருக்கும் அந்தக் கூடாரமானது ஐந்துமையில் நீளமும் ஐந்துமையில் அகலமும் உள்ளதாயிருந்தது. இவ்விதமான கூடாரத்தையும் அரசர்களுக்கு இன்பந்தரத் தக்கதாக விருக்கும் உத்தியானவனத்தையுங் கண்ட சீதை மிகவும் மகிழ்ச்சியடைந்தாள். அங்கு மிகுதியும் காணபட்ட கட்டிமாமரங்களால் அவ்வனம் இரசத்திற்கு இருப்பிடமாக விளங்கியது. அசோகமரங்களின் மிகுதியால் சோகத்தை யொழிப்பதுபோற் காணப்பட்டது. பனைமரங்கள் பச்சிலைமரங்கள் கூந்தற்பனைகள் இவைகளின் மிகுதி, மூர்ளம்பன்றிகள் எங்குசஞ்சரிப்பது போற் காணப்பட்டது. அங்கு விளங்கும்கமுகமரங்கள் ஆகாயத்தில்

ஒரு பட்டணமிருப்பது போல் வளர்ந்திருந்த வில்வ மரங்களின் மிகுதியானது இலட்சுமிக்குப் பிரயோஜன முள்ளதென்று சொல்லும்படி விளங்கிற்று. அங்கு நிறைந்திருந்த அகில் மரங்கள் மிகுந்த பிரகாசத்தைத் தந்தன. விளாமரங்கள் கோரோசனை வர்ணமுள்ள குரங்கினங்களைக் குறித்தன. எலுமிச்சைமரங்களிலுள்ள பழங்கள் இலட்சுமியின் ஸ்தனங்களுக்கொப்பாக விளங்கின. அங்குள்ள நாரத்தை மரங்கள் இலட்சுமியின் அரங்கமண்டபத்தையொத்திருந்தன. வாழைமரங்கள் மாதுளை முதலியனவும் நிறைந்திருந்தன. அங்கு பயிரிடப்பட்டிருக்கும் வெற்றிலைக்கொடி அசைவதானது சிரமப்பட்டு வழி நடப்பவர்களை சிரமபரிகாரத்தின் பொருட்டு அழைப்பதை ஒத்திருந்தது. அங்கு வளர்ந்திருக்கும் புன்னை மரங்கள் நான்கு பக்கங்களிலும் அசையும் துளிராகிய கைகளால் மல்லிகைப்பூ மொட்டுகளாகிய ஸ்தனங்களைத் தொடுகிற புருஷயானைகள் போன்றிருந்தன. மாதுளை வெடித்திருப்பதானது ஒருமாது ஆசையுள்ள தன் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பது போன்றிருந்தது. அத்தோட்டத்தில் மாதவியென்னும் மரங்களோடுவெள்வேலமரங்கள் அடர்ந்திருப்பதுமாதவியை வெள்வேல் ஆலிங்கனம் செய்து கொண்டதுபோல்விளங்கியது. ஆகாயத்தை அளாவிநிற்கும் பழத்தோடு கூடிய அத்திமரங்கள் பிர்ம்மாண்டத்தை தாங்கிநிற்கும் பகவானுக்கொப்பாக விளங்கின. பலாமரங்கள் யாவும் அவ்வனத்துக்கு மூக்குகள் போலிருந்தன' பொரசமரங்களும் இலந்தை மரங்களும் கடம்பமரங்களும் மகாமேருவின் சிகரம் போன்ற செம்புளிச்ச மரங்களும் அநேகமாக இருந்தன. பழமுண்ணிப்பாலை மரங்கள் காமிகள் கிருகம் போல் விளங்கின. அங்கு நாலாபக்கங்களிலும் நிறைந்திருந்த ஆலமரங்கள் கூடாரங்கள் போடப்பட்டதுக்கொப்பாக விளங்கின. வென்பாலை தாதுவளை பெருங்களாச்செடி முதலியவைகளும் சில விடங்களில் நிறைந்திருந்தன. அங்கே சில விடங்களில் தங்கம்போன்ற செந்தாழை மலர்கள் நிறைந்த தாழை மரங்களும் கொன்றை மரங்களும் நிறைந்திருந்தன. சிலவிடங்களில் உச்சித்திலங்கள் (புத்திர ஜீவன்கள்)இங்குலமரங்கள் இலுப்பை மரங்கள் நிறைந்திருந்

தன. கீழே விழுந்து கிடக்கும் இலுப்பைப் பூக்கள் பூமி ரூபமாக இருக்கிற பரமசிவனை அர்ச்சித்திருப்பது போல் விளங்கின. சிலவிடங்களில் மருதமரங்களும் அஞ்சனமரங்களும் விசிறி கொண்டு விசிறுவது போல் விளங்கின. தென்னை பேரீச்சு இவைகள் ஆகாயத்தில் குடைபிடிப்பன போல் சில விடங்களில் விளங்கின. மலைஆத்திமரங்கள்,பசிமந்தாதிமரங்கள்,எப்போதும் புஷ்பித்துப் பலனையளிக்கக்கூடிய மரங்கள், நாகமரங்கள் இவைகளால் சிலவிடங்கள் மிகவும் அழகாகக் காணப்பட்டன. சந்தனம், கோங்கு, நெல்லி முதலிய மரங்கள் சில விடங்களில் நிறைந்திருந்தன. மல்லிகை, முல்லை முதலிய கொடிவகைச் செடிகள் சில விடங்களில் நிறைந்து பரிமளத்தைத்தந்தன. துளசிச்செடிகள் சிலவிடங்களில் நிறைந்திருந்தன. வண்டுகள், வனம், மாலையைத் தரித்துக்கொண்டிருப்பது போல் சஞ்சரித்துக்கொண்டிருந்தன. திவ்யபரிமளத்துடன் காற்றானது சதாகாலமும் வீசிக்கொண்டிருந்தது. ஆசையைக் கொடுக்கக்கூடிய அநேக மிருகங்களும், பக்ஷிகளும், அங்கு நிறைந்திருந்தன. ஓடைகள், நதிகள், வாவிகள் முதலியவை அவ்வனத்தின் நான்கு பக்கங்களிலுமிருந்து ஜலசௌக்கியத்தைக் கொடுத்தன. நாலா பக்கங்களிலும் விழும் புஷ்பங்கள் பார்வைக்குச் சொர்ண மழை ஆகாயத்திலிருந்து பொழிவது போற் காணப்பட்டன. அங்கு மயில் கூட்டங்கள் கூவுவது வாருங்கள்! வாருங்கள்!! என நல்வரவு கூறுவது போன்றிருந்தது. அப்படிப்பட்ட அந்த உத்தியான வனத்தைச் சீதாபிராட்டி கண்டாள். கண்டு சந்தோஷமடைந்து இங்கு மங்கும் சஞ்சரித்தாள்.

ஜன்மகாண்டம்.

1 - வது சருக்கம்

முற்றிற்று.

## 2 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு சீதாதேவியானவள் அந்த உத்தியான வனத்தில் ஸ்ரீராம பிரானோடு அநேகவிளையாட்டுகளைத்தேவர்களும் மகிழும்படி அநேக விதமாக விளையாடினாள். சில சமயம் உத்தியானவனத்தின் மத்தியிலுள்ள உப்பரிகையின் மேலும் சிலசமயம் கூடாரங்களிலும் சில சமயம் மரங்களின் நிழலிலும் சிலகாலம் பூந்தோட்டங்களிலும் சிலகாலம் ஜலயந்திரங்களுக் கருகிலும் சில சமயம் ஓடைக்கரையிலும் சில சமயம் நதியின் பாங்கரும் சில சமயம் இராமரோடு ஓடத்திலேறிச் சரயூநதியின் ஜலத்தில் மத்தியிலும் சில சமயம் இரவிலும் சில சமயம் பகலிலும் ஜலக்ரீடை செய்தும் சில சமயம் தாமரைக் குளங்களில் ஓடமேறி விளையாடியும் சிலசமயம் வாழைத் தோட்டங்களிலும் சில சமயம் மரங்களின் மேல் அமைக்கப்பட்ட கிருகங்களிலும் சில சமயம் விலாமிச்சை வேரினாலாக்கப்பட்டகிருகங்களிலும் சில சமயம் சரயூநதியின் கண் அமைக்கப்பட்டு விளங்கும் கிருகங்களிலும் சில சமயம் புஷ்பங்கள் நிறைந்த வனங்களிலும் சில சமயம் சித்திர மண்டபங்களிலும் சில சமயம் புஷ்பக விமானத்திலும் சில சமயம் தாழைவனத்திலும் சில சமயம் ஒற்றைக்கால் மண்டபத்திலும் சில சமயம் ஓடத்தின் மேற் பக்கங்களிலுள்ள இடத்திலும் சில சமயம் சரயூநதியின் மணற்பாங்குகளிலும் சில சமயம் இராமபிரானோடு தனிமையாகவும் சில சமயம் பல்லக்கின் பேரிலும், சில காலம் அரண்யத்தின் நடுவிலும் சில காலம் மாதுளைத் தோடடத்திலும் சில சமயம் மரக்கட்டிலின் மேலுமாக விருந்து வெளுத்த சரீரமும் பெருத்த தேகமுமுடைய சீதா தேவி இராமபிரானோடு விளையாடினாள். இப்பொழுது சீதா தேவி பச்சை வஸ்திரமுடுத்துச் சிவப்புரவிக்கை தரித்துக்கொண்டு விளங்கினாள். ஒரு சமயம் சீதாதேவி இலைகளின் மத்தியில் தன் தேகத்தை மறைத்துக்கொண்டு இராமரைக் கலங்கும்படி செய்வாள். அவள் தன்னைப் பார்த்துவிட்டதாகக் கண்டால் வேகமாக அவரிடம் ஓடிவந்து இராமர் கழுத்தில் கைகளைக்கொடுத்து கட்டிக்கொள்வாள். இப்படிப்பட்ட சீதாராமருடைய பரமாச்சரியமான விளையாட்டை இந்தப் பூமண்டலத்தில் விஸ்தாரமாக வர்

ணிப்பதற்கு எவனே சக்திவாய்ந்தவன்? சீதா ராமர்களுடைய சரிதையை நூறுகோடி கிரந்தங்களால் வர்ணித்த அந்த வான்மீகி முனிவர் ஒருவரே சக்திபெற்றவரல்லது வேறொருவருமாகார். அவைகளில் ஆலோசித்து மிகவும் சாரமான பாகத்தை வர்ணிக்கிறேன் கேள்—

ஏ விஷ்ணுதாஸ! சில சமயம் சீதை தாசிகளை நர்த்தனம் புரியும்படி செய்து பார்த்து மகிழ்ந்தாள். சிலகாலம் சிலாக்கியமான வாத்தியங்களைக் கேட்டுச் சந்தோஷிப்பாள். சில சமயம் வேடிக்கையான நகைகளைக் கேட்பாள். சில சமயம் இந்திர ஜாலங்களைப் பார்ப்பாள். சில சமயம் டொம்பன் கழைக்கூத்துமுதலான விளையாட்டுகளைப் பார்ப்பாள். யந்திரங்களால் செய்யப்படும் வேடிக்கைகளைச் சில சமயம் கவனிப்பாள். சில சமயம் மரம் முதலியவைகளாற் செய்யப்பட்ட யானை முதலிய மிருகங்களையும் தன்னுடைய உருவத்தோடு சேர்த்துச் செய்யப்பட்ட இராமருடைய உருவத்தையும் பார்த்து மகிழ்வாள். இவ்வாறாகக் காலத்தைக் கழித்துக்கொண்டு சீதையானவள் ஒருமாதம் அந்த உத்தியானவனத்தின் கண் வசித்து வந்தாள். பிறகு சீதாதேவி இராம பிரானுடன் மங்கள வாத்தியங்களும் ஆடல் பாடல்களும் நடைபெற உப்பரிகையிலிருந்து பட்டணத்து ஸ்திரீகள் புஷ்பவருஷம்வருஷிக்கத் தன் அரண்மனைவாயில் வந்து சேர்ந்தாள். இங்கு வந்ததும் கும்பதீபங்களாலும் தயிரன்னத்தின் மத்தியில் வைக்கப்பட்ட தீபங்களாலும் நீராஜனம் செய்யப்பட்டு உளுந்து, எண்ணெய் கடுகு முதலியவைகளால், பூஜிக்கப்பட்டு இராமருடன் தன் அரண்மனைக்குள் சென்றாள்.

இரகுநந்தனனாகிய ஸ்ரீ ராமபிரான் இவ்வாறு தமது பத்நிக்குப் பிரியமானவைகளைச் சகலவைபவங்களுடனும் செய்துதிருப்தி செய்வித்தார். சீதாதேவியும் தன்னுடைய நாயகனாகிய ஸ்ரீ ராமபிரானைத்தன் விளையாட்டில் திருப்திசெய்வித்தாள். பிறகு ஆறாவது மாதம் பிறந்ததும் இராமபிரான் வசிஷ்டமுனிவரையும் பிராமணர்களையும் தமது மாமி சுமேதையையும் வரவழைத்துச் சீதா தேவிக்குச் சீமந்த முகூர்த்தத்தைச் செய்தார். இச்சமயம் பிராமணர்

ளுக்கு இரகுசிரேஷ்டர் அநேக தானங்களைச் செய்தார். ஜனக மகாராஜன், தமது மருமகன் ஸ்ரீ ராமபிரானுக்கும் அவருடைய பந்துக்களுக்கும் கௌஸல்யாதி ஸ்திரீகளுக்கும் பட்டணத்துஸ்திரீ புருஷர்களுக்கும் அவரவர்களுக்குத் தக்கபடி திவ்ய வஸ்திரங் களைக்கொடுத்து உபசரித்தார். பட்டணத்து ஜனங்கள் யாவரும் சீதாதேவியோடு ஸ்ரீராமபிரானை யழைத்துத் தங்கள் தங்கள் வீட்டில் போஜனம் செய்வித்துப் பூஜித்தார்கள். அவர்கள் போஜனத் துக்கு வரும்போதும் ஆடல்பாடல்களும் வாத்திய கோஷங்களும் நடந்தன. பலதேச மன்னர்களுடைய பத்நிகள் சீதாதேவியைப் பார்ப்பதற்கு அயோத்தியா பட்டணம் வந்தார்கள். அயோத்தி யானது இப்பொழுது வெகு அலங்காரமாக விளங்கிற்று. அந்த ஸ்திரீகள் யாவரும் சீதாதேவி விரும்பும் வஸ்துக்களைக் கொணர்ந்து கொடுத்து உபசரித்தார்கள். தேவர்களுக்கும் கிடைத்தற் கரிய திவ்ய அலங்கார வஸ்துக்களையும் தங்கள் தங்கள் தேசத் திற்கிடைக்கக் கூடிய அபூர்வமான பதார்த்தங்களையும் அந்த ராஜ ஸ்திரீகள் சீதா தேவிக்கு மனமுவந்து கொடுத்து வணங்கினார்கள். அவர்கள்யாவரும் சீதாதேவியோடு ஒரு மாதகாலம் வசித்துவிட்டுப் பின் தங்கள் தங்கள் தேசம் சென்றார்கள்.

பிறகு ஒருநாள் ஸ்ரீராமர் சீதாதேவியின் முன்பு தாம் இரக சியமாக மனத்தில் வைத்திருந்த ஒரு விஷயத்தைச் சுமேதையை யும் ஜனகமகாராஜனையும் பார்த்துக் கேட்டார். ஒருக்ஷணநேரமா வது சீதை என்னிடமில்லா திருப்பாளாயின், எனக்குப் பொறுக்க முடியாத விரகதாப முண்டாகிறது. உடனே நான் அவளிடம் சென்று அவளுடைய முகாரவிந்தத்தின் அழகாகிய அமுதபானஞ் செய்து ஸ்திரபுத்தியை யடைகிறேன். எனக்குக் கவலையுண்டா னால் உடனே சீதையின் சமீபஞ்சென்று நீக்கிக்கொள்வது வழக்கம். இப்பொழுது ஜானகியினிடத்தில் எனக்கு அதிக விருப்பமுண்டா கிறது. கர்ப்பந்தரித்து ஐந்து மாதமான ஸ்திரீயை முனிவர்கள் நிந்திக்கிறார்கள். பிரசவமான பின் ஸ்திரீ திருடையாக ஆகிறாள். ஐந்து மாதத்துக்குள் சேர்ந்தால் தம்பதிக்குக் குறைவு ஏற்படும்.

இவ்விஷயத்தில் நான் செய்யவேண்டியதை ஏ மாமா! நீங்களே தெரிவியுங்கள். இந்தச் சீதையை இப்பொழுது மிதிலைக்கு அனுப்பினால் நானும் அங்குவரவேண்டும். கொஞ்சகாலம் வரையில் சீதா வியோகமானது எந்தக்காரணத்தைக் கொண்டாவது ஏற்படவேண்டும், நானென்று யோசித்திருக்கிறேன். உலக அபவாதத்திற்குப் பயந்தும் வண்ணான் கூறினான் என்னும் காரணங்கருதியும் கங்கா நதியின் தென்கரையிலுள்ள வான்மீக முனிவருடைய ஆசிரமத்தில் பரிசுத்த முடையவளான சீதையை விட்டுவிடவும் மறுபடி கொஞ்ச காலங் கழிந்தபின் வரவழைத்துக்கொள்ளவும் நிச்சயித்திருக்கிறேன். சீதை எனக்கு நம்பிக்கையுண்டாகும்படி சபதமொன்று செய்யப்போகிறாள். பிறகு நான் அவளைக் கானகத்திலிருந்து அழைத்து வந்து அவளோடு அநேககாலம் வாழ்ந்து சுகங்களைப் பெறப்போகிறேன். அந்த வான்மீகியின் ஆசிரமத்தில் நீரும் உமது பத்னி சுமேதையும் ஐந்து வருஷ மிருக்கவேண்டும்'' என்றார். இதைக் கேட்டதும் ஜனகமகா ராஜனும் அவர் மனைவியும் அவ்வாறே செய்கிறோ மென்பதாக ஒப்புக்கொண்டார்கள். சீதையும் புன்னகை கொண்டு பதியின் கட்டளையை ஒப்புக்கொண்டாள். உடனே இராமர் அவர்களுக்கு மிதிலைக்குப் போக உத்தரவுக் கொடுத்தார்.

ஜனகமகா ராஜன் மிதிலைக்குப் போனதும் தம் அரசாட்சியை மந்திரிவசம் ஒப்புவித்துவிட்டுத் தம் பத்னியுடன் வெகு சீக்கிரமாக வான்மீக முனிவருடைய ஆசிரமம் வந்து சேர்ந்தார். வரும்போது சீதாதேவிக்காகத் தாஸி தாஸர்களையும் அநேக வஸ்துக்களையும் வாகனங்களிலேற்றிக் கொண்டுவந்து ஆசிரமத்தில் நிறைத்தார். அங்கு வான்மீகருக்கு ஆநந்த முண்டாக்கக் கூடியதும் வெகு விஸ்தாரமும் அதிக அழகோடு கூடியதும் சந்திரகாந்தக் கற்களாலாகிய சாளரங்கள் கதவுகள் இவைகளோடு கூடியதுமான ஒரு திவ்ய கிருகத்தை ஏற்படுத்தினார். அந்தக்கிருகத்தில், அநேகம் அழகான பசுக்கள் எருமைகள் இவைகளைக்கொண்டு வந்து கட்டினார். தானிய மூட்டைகள் வஸ்திரங்கள் ஆபரணங்கள் இவைகளை நிறைத்தார். அருகே குளங்கள் புஷ்பத்தோட்டங்கள் முதலியவற்றை யுண்

டாக்கினர். இரத்தினசனங்களையும் இரத்தினக் கட்டில்களையும் செய்து அங்கங்கு அலங்காரமாக வீடுமுழுவதும் நிறைத்தார். அன்னம், மாடப்புறு, குயில், மயில், கிளி இவைகளிருந்து வசிக்க வசதிகளேற்படுத்தி அவைகளின் சப்தம் சதாகாலமும் செவியிற் படும்படி செய்தார். சாட்சாத் இலட்சுமிதேவி வசித்தற்கு யத்தினம் செய்திருக்கும் கிருகத்தில் எந்த வஸ்துக்களில்லா திருக்கும்? சகல வஸ்துக்களும் நிறைந்திருக்குமல்லவா! கடைக்கண்பார்வையினல் இந்திராதிதேவர்களுக்கு மகத்தான ஐசுவரியத்தை யளிக்கும் இலட்சுமிதேவியின் இருப்பிடத்தை நான் வர்ணிக்க வேண்டுமா?

ஜனக மகாராஜன் பின்பு தாம் அங்குவந்த வரலாற்றையும் சீதை வரப்போவதையும் வான்மீகருக்கு வந்தனத்துடன் தெரிவித்தார். வான்மீகர் கேட்டு மனதில் பரமானந்த மடைந்தார்.

ஜன்ம காண்டம்

2 - வது சருக்கம்

முற்றிற்று.

## 3 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஒருநாள் ஸ்ரீராமர் தனியேயிருக்கும் போது கௌஸல்யா தேவி அவரைப்பார்த்து "ஏ இராமா! சீதாதேவியை சீக்கிரத்தில் எல்லைக் கப்புறம் அனுப்பு" என்றாள். இவ்வாறுகௌஸல்யாதேவி கூறியதும் ஸ்ரீராமபிரான் அப்படியே செய்கிறேனென்று கூறித் தாம் சீதையை வான்மீகி முனிவருடைய ஆசிரமத்தில் விடுவதாக ஆலோசித்திருப்பதைத் தெரிவித்தார். இதன் பின் தாமரைப் பூவின் இதழ் போன்ற நேத்திரமுடைய ஸ்ரீராமபிரான் எட்டாவது மாதத்துவக்கத்தில் சீதாதேவியைப் பார்த்து "ஏ சீதே வண்ணான் கூறியதை வியாஜமாகக் கொண்டு உலக அபவாதத்திற்குப் பயந்த வன் போல் உன்னை இப்பொழுது கானகத்திற்கு அனுப்புகிறேன். அல்லாமலும் அந்த வண்ணான் கூறியதையே வியாஜமாகக்கொண்டு ஸ்திரிகள் கர்பந்தரித்த மூன்று அல்லது ஐந்து ஏழு மாதங் களுக்கு மேல் அவர்களுடன் சேரக்கூடாதென்று ஏற்படுத்திய புத் மான்களுடைய சாஸ்திரவிதியை உன்னுடைய அருகில் இருக்க முடியாத யான் காப்பாற்றுகிறேன். சந்திரன்போன்றமுகமுள்ள உனது பேரெழிலானது என்னை மன்மதன் கைப்பாணத்துக் குள்ளாக்குகிறது. இப்பொழுது உன் வியோகமானது நிர்பந்தமின்றி எவ்விதமேற்படும்? ஆகையால் என் மனமொத்த மைதிலீ! அந் நிர்ப்பந்தத்தை நான் உனக்குக் கொடுக்கிறேன்; இதைச்சத்திய மாகக் கேள். நீ ஐந்து வருஷத்திற்குப் பிறகு மறுபடியும் என்னி டம் வந்து உலக நம்பிக்கைக்காகச் சபதம் கூறப்போகிறாய்; அதா வது சிம்மாசனத்தின் பேரிலிருந்து பூமியின் வழியே பூமாதேவி யின் பூஜையைப் பெற்றுப் பாதாளஞ் செல்லப்போகிறாய். அப் பொழுது நான் பூமிதேவியைத் தோத்திரஞ் செய்தும்பயப்படுத்தி யும் உன்னைப்பெற்று மடியில் உட்காரவைத்துக்கொள்ள போகி றேன். ஏ சீதே! நீ அப்போது உன் இரண்டு பிள்ளைகளோடு என்னிட மிருந்து சுகமாக வசிக்கப்போகிறாய். என் மூலமாக உனக்குக் குசன் என்னும் மூத்தபிள்ளை யுண்டாகப் போகிறான்.

வான்மீகி முனிவரின் தபோமகிமையால், லவன் என்னும் பேர் கொண்ட மற்றொரு பிள்ளை உனக்குண்டாகப் போகிறான். இந்த இரண்டு பிள்ளைகளும் வான்மீகி முனிவருடைய ஆசிரமத்தில் உண்டாகும்; எனது உத்தரவினால் முந்தியே உனது தந்தை அவ்வாசிரமஞ்சென்று உனக்கு யோக்கியமான கிருகம் முதலிய எல்லாவற்றையும் தயார்செய்து வைத்திருக்கிறார். ஏ ஜனக புத்திரியே! இப்பொழுது நான் கூறுவதைக் கேள். நீ முன்பு தண்டகாரண்யத்தில் கௌதமி நதிக்கரையில் சத்வகுண வடிவத்துடன் எனது சரீரத்தில் இடது பாகத்தில் எவ்வாறு இருந்தனையோ அவ்வாறே இப்போது எனதருகிலிருந்துவா; வான்மீகி முனிவருடைய ஆசிரமத்தில் ரஜஸு தமஸு என்னும் இவ்விருவித குணங்களோடு கூடிய வடிவத்துடன் இருந்துவா; இவ்விதமாக நம்மிருவருக்கும் பிரிவினை ஏற்படட்டும், அங்கே குசன் பிறக்கும்போது நான் உனக்கு இரகசியமாகத் தரிசனந்தருகிறேன்'' என்றார். இராமர் இவ்விதங் கூறியதைக் கேட்டதும் ஜனக புத்திரியாகிய சீதாதேவி புன்னகைகொண்டு அவரை நமஸ்கரித்துப் "பிராணநாதா! தங்கள் சித்தப்படியே செய்கிறேன்'' என்று கூறி, இராஜஸ தாமஸமென்கிற இரண்டு குணங்களாகிய தன்னுடைய சாயலைத் தனியே நிறுத்தி சத்வகுணச் சாயலை இராமபிரானிடம் மறைத்தாள்.

இதன் பின் இராமபிரான், ஆலோசனையின் உண்மையையறிந்தவர்களும் வயது சென்றவர்களுமாகிய மந்திரிகளோடும் சேனாபதிகளோடும் சிங்காதனத்தமர்ந்தார். அப்பொழுது அவருடைய சிநேகிதர்கள் நான்கு பக்கங்களிலும் வீற்றிருந்து அவருக்குச் சந்தோஷமுண்டாகும்படி சில கதைகளைக் கூறி வந்தார்கள்.

இராமர் இவ்விதம் கதை சொல்லி வருகிறவர்களுள் விஜயன் என்பவனைப் பார்த்து "ஏ விஜயா! நமது நகரத்திலுள்ளவர்கள் என் நல்ல குணத்தையும் கெட்டகுணத்தையும் பற்றி ஏதாவது பேசிக்கொள்ளுகிறார்களா? கைகேயியைக் குறித்தாவது, சீதையைக்குறித்தாவது அல்லது என் தாய்மார் கௌஸல்யை முதலியவர்களைப் பற்றியாவது என்ன பேசிக்கொள்ளுகிறார்கள். நீ பயப்படவேண்

டாம்; என்பேரில் ஆணைப்படி தெரிவி'' என்று கேட்டார். இப்படிக் கேட்ட இராமரைப் பார்த்து விஜயன் "பிரபுவே! பட்டணத்து ஜனங்கள், இராமபிரானுல் யாவரும் செய்தற்கரிய செய்கை செய்யப்பட்டது'' என்று புகழ்கிருர்கள்; இப்படி புகழ்ந்தாலும், "இராமர் இராவணனைக் கொன்று பின் கோபத்தை ஒழித்துச் சீதையைத் தமது வீட்டுக்குத் தருவித்து கொண்டார். அவர் மனம் எப்படிப்பட்டதோ? அவருக்குச் சீதையின் சம்போகத்தின் சுகம் எத்தன்மைத்தோ? இவைகளையாறறிவார்? வனத்தில் அபகரிக்கப் பட்டவளல்லவா சீதை? ஸ்திரீகளிடத்தில் அகாரணமாக ஏற்படும் சாதாரணச் செய்கையிலுமன்ரே கோப முண்டாகிறது? அரசன் எவ்விதமோ அப்படியே குடிகளுமிருப்பார்கள்'' என்று இகழ்ந்தும் பேசுகிருர்கள். வண்ணுன் ஒரு விஷயம் தெரிவித் திருக்கிருன். அதனைக் கூறுகிறேன் கேளுங்கள்; வண்ணுன் தன் மனைவியின் மீது சினங்கொண்டு அவளைப் பார்த்து "ஏ முண்டே! இராவணன் வீட்டிலிருந்த சீதையைத் தன் வீட்டுக்கு மறுபடியு மழைத்துச் சேர்த்துக்கொண்ட இராமனல்ல நான்; உன் இஷ்டப் படியே நான் உன்னை இராமனைப் போல் சேர்த்துக் கொள்ளமாட்டேன் என்று கூறினுன். இதை நான் போய்க்கொண்டிருக்கையில் வழியில் கேட்டேன்; ஏ இரகுகுலதிலக! தாங்கள் இப்போது என்னைக் கேட்டதால் தெரியப்படுத்தினேன்''என்ருன். "இவ்வார்த்தையை இராமர் கேட்டதும் மற்றவர்களைப் பார்த்து இவ்விஷயம் உண்மைதானே'' என்ருர். அவர்கள் இராமருக்கு வந்தனஞ்செய்து "பிரபுவே! அது உண்மை தான்'' என்றனர். இராமர் அவர்கள் எல்லோரையும் அனுப்பிவிட்டு இலட்சுமணரை வரவழைத்து "இலட்சுமணு! சீதையின் மூலமாக எனக்கு உலக அபவாத மேற்பட்டிருக்கிறது. நாளை உதயத்திற் கெல்லாம் சீதையை இரதத்திலேற்றி, வான்மீகி முனிவருடைய ஆசிரமத்திற் கொண்டு போய்விட்டு உடனே இவிடம் திரும்பி வா; இந்தக் கட்டளையை மறப்பாயேயாயின் என்னைக் கொன்ற பாபத்தை யடைவாய். உலகத்தாருடைய நம்பிக்கைக்காகச் சீதையின் கையை வெட்டிக்கொண்டுவா'' என்று இலட்சுமணருக்குக் கட்டளையிட்டுக் கைகேயினிடம் போனுர்.

இங்கே கைகேயி சீதையைப் பார்த்து "ஏ சீதே! இந்தச் சுவரில் இராவணனுடைய உருவத்தை எழுதிக் காட்டு பார்ப் போம்" என்று கேட்டாள். சீதை, "அம்மா நான் ஒரு போதும் இராவணனைப் பார்த்ததில்லை, கௌதம நதிக்கரையில் என்னை அபகரிக்க வந்த காலத்தில் நான் அவனுடைய வலது காற் பெருவிரலை மட்டும் நோக்கினேன்" என்றாள். உடனே கைகேயி "நீ பார்த்தபடி அவனுடைய பெருவிரலை இங்கு எழுது" என்றாள். சீதை ஆகாவென்று கூறிச் சுவரில் இராவணனது பெருவிரலை எழுதிக்காட்டி விட்டுப் பிறகு அவளிடம் விடை பெற்று அரண்மனை சென்றாள். கைகேயி கெட்ட எண்ணங் கொண்டு, அந்த விரலாகிருதிக்குத் தக்கபடி இராவணனது உருவத்தை எழுதி அந்த உருவத்தை இராமருக்குக் காண்பிக்க வேண்டுமென்று நினைத்து அவ்வாறே எழுதி முடித்தாள். இப் போது இராமரும் அவள் எதிர் தோன்றினர். இராமரைக் கண்ட தும் "அப்பா! இராமா! வா; இந்த ஆசனத்திலமர்ந்திரு" என்று ஆசனமிட்டாள். இராமர் தமது மாதாவாகிய கைகேயியை நமஸ் கரித்து அந்த ஆசனத்தமர்ந்தார். உடனே அங்கே சுவரில் எழுதப் பட்டிருந்த இராவணனுடைய உருவத்தைப் பார்த்து, "அம்மா! இந்த உருவம் இங்கு யாரால் எழுதப்பட்டது" என்று கேட்டார். கைகேயி, "அப்பா இராமா! இந்த உருவத்தைச் சீதை வரைந்த னள்" என்று கூறி, "மனுஷியர்களுக்கு எங்கு மனம்பற்றுகிறதோ அதைக்குறித்து அடிக்கடி ஞாபகம் உண்டாகும். ஸ்திரீயின் நடத்தையை யறிபவர் யார்? சிவன் முதலிய தேவர்களையும் ஸ்திரீ கள் மோகமடையச் செய்கின்றனர்" என்றாள். உடனே இராமர் கைகேயியினிடம் சற்றுமுன் சபையில் சீதை விஷயமாக நடந்த தைத் தெரிவித்து, "ஏ அம்மா! நாளைக்காலையில் சீதையை இலட்சு மணன் கங்கைக்கரையில் கொண்டுபோய் விட்டுவிடப் போகிறான். அவளுடைய கையை வெட்டிக்கொண்டு வந்து உனக்கும் பட்ட ணத்து ஜனங்களுக்கும் காட்டப் போகிறான்; ஸ்திரீ ஹத்தி தோஷத்திற்குப் பயந்து, இராவணன் உருவத்தைச் சுவரில் வரைந்த சீதையைக் கொல்லும்படி இலட்சுமணனுக்கு ஆக்ஞை

யிடவில்லை. ஒரு நிமிஷத்தில் வனத்தின் கண்ணுள்ள துஷ்ட மிருகங்கள் அவளைப் பட்சித்து விடும்'' என்று இராமர் கூறவே, கைகேயி கேட்டுச் சந்தோஷமடைந்து, சீதை தன்னை விட்டுப்பிரிந்து விட்டமையால் இராமன், இராஜ்யத்தில் வெறுப்படைந்து விட்டு விடுவான்; இலட்சுமணனும் இராமசேவையின் நிமித்தம் இராஜ்யத்தை ஒப்புக்கொள்ளான். அப்போது இராமன் உத்தரவினால் நமது பிள்ளையாகிய பரதன் அரசாட்சிசெய்வான் என்று தன் மனத்திற்குள்ளெண்ணிக் கொண்டாள். பிறகு இராமர் கைகேயியை நமஸ்கரித்து அவளிடம் விடைபெற்றுக்கொண்டு சுமித்திரை கௌஸல்யை இவர்களிடம் சென்று அவர்களுக்கு வந்தனஞ் செய்து சபையில் சீதையின் விஷயமாக நடந்த வாலாற்றைத் தெரிவித்துப் பின் ஜானகியின் அரண்மனைக்கு வந்தார். சீதை இராமபிரானைக் கண்டதும் அர்க்கிய பாத்தியாதி உபசாரங்களைச் செய்தாள். அதனை இராமர் ஒப்புக்கொண்டு, சந்தோஷத்துடன் அவளிடத்தில் சபையில் நடந்ததையும் கைகேயியின் அரண்மனையில் நடந்ததையும் தெரிவித்தார். இதைக் கேட்டதும் சீதை ''பிராணநாதா! கைகேயி என்னைப் பன்முறை கேட்டுக்கொண்டதன் மேல் இராவணனுடைய பெருவிரலை மாத்திரம் நான் எழுதினேன். பிறகு அவள் கெட்ட எண்ணங்கொண்டு அந்தப் பெருவிரலுக்குத் தக்கபடி இராவணனது உருவத்தை வரைந்திருக்கிறாள்'' என்று கூறினாள். இராமர் ''ஏ சீதே! அந்தக் கைகேயியின் கெட்ட எண்ணத்தை நான் நன்றாயறிவேன்'' என்று கூறிச் சீதையைக் கட்டித் தழுவி முத்தமிட்டார்.

பிறகு அன்றிரவு இராமபிரான் சீதையுடன் சொர்ண மஞ்சத்தில் சயனித்திருக்கும்போது, விளையாட்டாக வைதேகியைப் பார்த்து, ''ஏ சீதே! கர்ப்பந் தரித்திருப்பவர்களுடைய மனமானது சில வஸ்துக்களில் ஆசை கொள்வதுண்டு; அப்படி யேதேனும் உனக்கு விருப்பமிருந்தால் தெரிவி. அதை உடனே நிறைவேற்றுகிறேன்'' என்றார். இப்படி இராமர் கூறியதும் சீதை நடக்கப் போகிறவைகளுக்குக் கட்டுப்பட்டு, ''நாதா! கங்கைக் கரையிலிருக்கும் மரங்களையும் முனிவர்களின் பத்தினிமார்களையும் அந்த வனத்தின் வனப்பையும் பார்க்க என்மனம் விரும்புகின்றது; ஆகையால்

அங்கே என்னை அனுப்ப வேண்டுகின்றேன்" என்றாள். இவ்வாறு சீதை கூறியதும் இராமர் மனமகிழ்ச்சியடைந்து "ஏ ஜானகி! நாளையதினம் என் உத்தரவுபடி இலட்சுமணன் உன்னையழைத்துக் கொண்டு போவான்" என்று கூறி, மறுபடியும் சீதையைப் பார்த்து, "ஏ சீதே! உன்னுடன் விளையாடிக்கொண்டிருந்தமையால் ஜெபம் தியானம் முதலியவைகளைச் செய்ய மறந்துவிட்டேன். நீ அரண்யம் சென்ற பிறகு தான் செய்யவேண்டும்" என்று தெரிவித்துப் படுத்து நித்திரைசெய்தார்.

சீதையும், நமது தாய் தந்தை ஆசிரமத்திலிருக்கும்போது, நமக்கு அங்கே குறைவென்ன ஏற்படப்போகிறது; ஆகையால் நாம் ஒன்றுங் கொண்டுபோக வேண்டாம். நாளைக்காலையில் தோழிமார்களுடனும் இலட்சுமணருடனும் தேரின் மீதேறி சுகமாகப் போவோம் என்று தனக்குள் எண்ணிக்கொண்டு படுத்து நித்திரை புரிந்தாள்.

இதன்பின் விடியற்கால மெழுந்திருந்து ஸ்நானஞ் செய்து நேமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு, ஸ்நானஞ்செய்துவீற்றிருந்த பதியாகியஇராமருக்குப் போஜனமளித்து அவர் புசித்தானபின் தானும்புசித்தாள். பிறகு ஊர்மிளைமுதலியசகோதரிகளிடத்திலும் மாமிமார்களிடத்திலும் தான் கங்கைக்கரையிலிருக்கும் மரங்களையும் முனிவர்களையும் பார்க்கப்போய் வருகிறேனென்று கூறி விடைபெற்றுக்கொண்டாள். இலட்சுமணரையும் தன்தோழிகளையும் பணிவிடைப்பெண்களையும்வரவழைத்தாள். பிறகுஇராமரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு, தாசிகளுடனும் துளஸிமுதலிய தோழிகளுடனும் இலட்சுமணருடனும் இரதத்திலேறினாள். இரதம் உடனே தென்றிசைநோக்கி வாயுவேகமாகச் சென்றது. அன்னையார்செல்வதையறிந்துஇந்திரன் முதலிய தேவர்கள் வழியில் உபசரித்தார்கள். இலட்சுமணர் பரிசுத்தமான தமஸாநதியையும் கோமதி என்ற நதியையுந்தாண்டி கங்கை யமுனை மந்தாகினி இரண்டாவது தமஸா நதி இவைகளையுந்தாண்டி மலையின்தாழ்வரையில் வான்மீகி முனிவருடைய ஆசிரமத்துக்கருகாமையில் ஓர் அரசமரத்தடியில், இரதத்தை நிறுத்தி அங்கு யாவரையும் உட்காரவைத்துக் கண்களினின்று நீர்பெருக நின்று சீதையைப் பார்த்து" அம்மா! என் தமையனாகிய

இரகு வீரர் உலக அபவாதத்திற்குப் பயந்து உம்மைக் காட்டிற் கொண்டுவந்துவிட எனக்கு ஆக்ஞாபித்தார். தங்களுக்கு ஒருவித தோஷமும் இடையாது. சுகமாக இந்த வான்மீகி முனிவருடைய ஆசிரமம் சென்று அங்கிருங்கள்'' என்று சொல்லி அன்னையை வலம்வந்து நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு தேரின்மீதே றிப் புறப்பட்டுக் கங்காநதி வந்தார்.

பிறகு வான்மீகிமுனிவர் தமது மாணாக்கர்கள் மூலமாக சீதை வந்திருப்பதையறிந்து, ஜனகமகா ராஜன் சுமேதை தமது பத்தினி இவர்களுடன் சீதையினிடம் வந்து உபசரித்து பல்லக்கிலேற்றி வைத்து அநேக வாத்திய சப்தங்களுடனும் நர்த்தனங்களுடனும் தமதாசிரமத்திற் கழைத்துவந்தார். அங்குள்ள முனிவர்கள் இப் பொழுது ஜானகியின்மீது புஷ்பமாரி பொழிந்தார்கள். சிலர் ஜான கிக்கு 'நீராஜனம்' செய்து மெதுவாகப் பல்லக்கி லிருந்து கீழே யிறக்கி, ஒரு திவ்யாசனமிட்டு அதில் வீற்றிருக்கும் படி உபசரித்தார்கள். பிறகு முனிவர்களின் பத்தினிகள் தனித் தனியே பிராட்டியைப் பூஜித்தார்கள். வான்மீகி முனிவருடைய வாய்மொழியால் வைதேகியை, ஸ்ரீமன்நாராயணமூர்த்தியின் இரு தய கமலவாசியாகிய இலட்சுமிதேவி யென்றே யறிந்து, நாடோ றும் ஜானகிக்குத் திவ்யான்ன மளித்து அவள் விரும்பும் கனிவர்க் கங்களையும் கொடுத்து முனிவர் பத்தினிகள் யாவரும் உபசரித் தார்கள். இங்கு ஜானகி அயோத்தியி லிருந்ததை விடப் பன் மடங்கு சுகமாகவே யிருந்து வந்தாள்.

### 3 - வது சருக்கம்

முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

பிறகு இலட்சுமணர் கங்கைக்கரை வந்ததும் பரிசுத்த இருதயமுள்ள சீதாதேவியை இந்தக் கானகத்தில் விட்டு விடும்படி நமக்கு இராமபிரான் மனதிற் சிறிதுங் கலக்க மின்றி ஆக்ஞாபித்தது, ஜனங்களைத் திருப்தி செய்வதற்காவே யென்று தனக்குள் சிந்தித்து, அவருடைய கட்டளை இன்னும் என்னவென்று யோசித்துப் பார்த்து, சீதையின் கையை வெட்டி வரும்படி ஆக்ஞாபித்தது ஞாபகத்துக்கு வரவே, ஆ! நான் இதற்கென்ன செய்வேன்? ஐயோ! அப்போது அவர் ஆணையிட்டதைக் கண்டு பயந்து பேசாமல் வந்து விட்டேனே? இப்போது என்ன பதிற் கூறுவேன்? எப்படி இராமரிடம் போவேன்? சீதையின் கையைக் கொண்டு போகாமற் போனல் அவர் என்னைப்பார்த்து என்ன சொல்வார்? அந்தோ! சீதையின் கையை எப்படி வெட்டுவேன்? என்னைத் தன் வயிற்றுப் பிள்ளையைப்போல் ஆதரித்து வந்த உத்தமியாயிற்றே. ஆ! இதற்கென்ன செய்வேன் என்று நெடு நேரம் ஆலோசித்தார். பிறகு நான் என் முகத்தை இராமருக்கு காண்பிக்கவில்லை; அக்நியில் பிரவேசித்துவிடுகிறேன். இதைத் தவிர வேறு மார்க்கமில்லை யென்று நினைத்து, சிதையடுக்க முயற்சித்தார். இத்தருணத்தில் பிர்ம்ம தேவரது ஆக்ஞைப்படி தேவ தச்சனுகிய விசுவகர்மா என்பவன் கையில் ஒரு கோடரியுடன் தச்சவேடம் பூண்டு அங்கு சஞ்சரித்து வந்தான். அத்தச்சனை இலட்சுமணர் கண்டு நீ எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும்; என்னவெனில், உன் கைக்கோடரியைச் சற்றுக்கொடு; இம்மரங்களை வெட்டிச் சிதை யடுக்கவேண்டும்; சீக்கிரமாகக் கொடு, உனக்கு வேண்டிய பொருள் தருகிறேன்'' என்றார். இதைக் கேட்டதும் விசுவகர்மா சிதை அடுக்குவதற்குக் காரணம் யாதென வினவினன். இலட்சுமணர் முன் நடந்ததைக் கூறினர். தச்சன் இலட்சுமணர் கூறியவைகளை மௌனமாய்க் கேட்டுக்கொண்டிருந்து பிறகு புன்னகையுடன், "பிர்ம்மாவின் கைகளிலிருந்து உற்பத்தியான க்ஷத்திரிய குமாரனுகிய இலட்சுமணு! இந்த அற்ப காரியத்திற்காக உன் சரீரத்தை அக்னியில் ஹோமம் செய்யாதே; நான் சீதையின் கையை உண்டாக்கி ஒரு க்ஷணத்தில் கொடுக்கிறேன்''

என்று கூறி, தோல், மாமிசம், எலும்பு, சிறு நாம்பு, இரத்தம், ரவிக்கை சீதாதேவி அலங்கரித்துக் கொண்டிருப்பது இவைகள் யாவும் பொருந்திய சிலாக்கியமான சீதையின் கையைச் செய்து இலட்சுமணரிடம் கொடுத்து உடனே மறைந்து விட்டான்.

இலட்சுமணர் அக்கையை யெடுத்துக்கொண்டு, பிரகாச மழுங்கியதும் சந்தோஷமற்றதும், சுழல் காற்றினல் மிகுந்த தூளி படிந்ததும் மனைவியில்லாத கிருகம் போன்றதுமான அயோத்திக்கு வந்து உள்ளே தலையைக் குனிந்துகொண்டே பிரவேசித்தார். பிறகு சபையில் வீற்றிருக்கும் இராமபிரானைக் கண்டு வந்தனம் செய்து கங்கண முதலிய அலங்காரங்களோடு கூடிய சீதையின் கையைக் காண்பித்தார். இராமர் அக்கையைப் பார்த்ததும் தலை குனிந்துகொண்டே "இலட்சுமணு! இந்தக் கையை என் உத்தரவுப்படி நமது தாய் கைகேயி அம்மாளுக்கும் பட்டணத்து ஜனங்களுக்கும் காண்பித்துவிட்டு வா" என்ருர். இலட்சுமணர் இராமபிரான் உத்தரவுப்படியே கைகேயி முதல் யாவருக்கும் காண்பித்து விட்டு அக்கையைப் பெட்டியில் வைத்துக் காப்பாற்றினர். கைகேயி அக்கையைக் கண்டு மிகவும் சந்தோஷித்தாள். விஞ்ஞான சொரூபரும், பிரதான புருஷரும் ஆதிதேவரும் முனிவர்கள் வணங்கும் சரணங்களுள்ளவரும் பரமாத்மாவுமாகிய ஸ்ரீராமரும் சீதையில்லாததினல் எல்லாச்சுகங்களையுமிழந்துவிரக்தராகவும் முனிவர்களின் அனுஷ்டானத்துடனுமிருந்து வந்தார். சீதையும் முனிவருடைய ஆசிரமத்தில், முனிவர் பத்னிகள் உபசரிக்கச் சுகமாகஇருந்து வந்தாள்.

சீதாபிராட்டி வான்மீகி முனிவருடைய ஆசிரமத்தில் இரண்டு மாதங்களிருந்த பிறகு ஒரு புத்திர ரத்தினத்தைப் பெற்ருள். சீதாபிராட்டி பிரசவமானதையறிந்த இரகுவீரர் இராத்திரியில் தமது ஆப்த பந்துவுடன் புஷ்பக விமானத்திலேறி ஆகாச மார்க்கமாக வான்மீகி முனிவருடைய ஆசிரமம் வந்து, அம்முனிவரை நமஸ்கரித்து, அங்குள்ள முனிவர்களுடனும் பிராமணர்களுடனுமிருந்து விதிப்படி ஜாதகர்மாதி கிரியைகளை நடத்தினர். சீதாபிராட்டி கண் காணத்தமது புத்தி

சந்தோஷத்துடன் பார்த்தார். வஸ்திராபரணங்களைத் தானங் கொடுத்தார். பிள்ளை பிறந்த மகோற்சவத்தில் விதிப்படி நாந்தி சிராத்தம் செய்தார். இப்போது தேவ துந்துபி முதலிய வாத்தியங் கள் முழங்கின. ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தன. தேவர் கள் ஆகாயமார்க்கமாகச் சஞ்சரித்துப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள். தேவ ஸ்திரீகள் நர்த்தனம் புரிந்தார்கள். ஜனகமகாராஜனது சேவ கர்கள் வாத்தியகோஷம் செய்தார்கள். தாஸிகள் நர்த்தனம் செய் தார்கள். மாகதர்கள் சீதை, இராமர், இவர்கள் குழந்தை முதலிய வர்களைக் கொண்டாடினார்கள். முனிவர் பத்தினிகள் திவ்ய அலங் காரஞ்செய்துகொண்டு, இராமர், சீதை, குழந்தை இவர்களுக்கு நீராஜனம் செய்து இனிமையான குரலுடன் பாடி வாழ்த்தினார் கள். இராமபிரான் அந்த முனிவர் பத்தினிகள் யாவருக்கும் திவ்ய வஸ்திரமளித்துப் பூஜித்தார். வான்மீக முனிவர் குழந்தைக்கு விதிப்படி குசங்களால் அரிஷ்ட நிவாரணஞ்செய்தார். அரிஷ்ட நிவாரணத்தின் பொருட்டு குசங்கள் நனைக்கப்பட்ட நீரால் புரோ க்ஷணம் செய்யப்பட்டமையால் அக்குழந்தைக்கு குசன் என்னும் திருநாமம் இராமர் முன்னிலையில் வான்மீக முனிவரால் கொடுக்கப் பட்டது. இந்த வைபத்துடன் இராமபிரான் அன்றிரவு முழுதும் அங்கிருந்து, புறப்படும் சமயத்தில் அங்குள்ளவர்களைப் பார்த்து, "நான் இங்கு வந்த வரலாற்றை இந்த ஆசிரமத்திற்கு வெளிப்பக் கத்தில் கூறுகிறவன் என்னுடைய சிக்ஷைக்குள்ளாவான். இதிற் சந்தேகமில்லை" யென்று கூறிவிட்டு முனிவர்களை நமஸ்கரித்து, அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டார். பிறகு சீதையிடஞ் சென்று, போய் வருவதாகக்கூறிவிட்டு இலட்சுமணருடன் புஷ்பக விமானம் ஏறி, ஆகாசம் மார்க்கமாக ஓர் நொடியில் அயோத் தியா புரிவந்து முன்போல் அரண்மனையில் நித்திரை புரிந்தார்.

சிலநாட் சென்றதும் இராமபிரான் வஸ்திராபரண அலங்காரத் துடன் சொர்ணத்தால் செய்யப்பட்ட சீதையைப் பத்தினியாகக் கொண்டு யாகம் செய்ய நினைத்தார்.

பாபஞ்செய்தவள், அநாசாரமுள்ளவள், புருஷனை நிந்திக்கிற வள், திருடுகிறவள், புருஷனைக்கொல்ல எண்ணங்கொண்டவள்

எப்போதும் சண்டை போடுகிறவள், பரபுருஷனால் அநுபவிக்கப் பட்டவள், பாபச் செய்கைகளை விரும்புகிறவள், புருஷன் வார்த் தையைக் கேளாதவள், தன் இச்சைப்படி நடக்கிறவள், காணமற் போனவள், மரணத்தை யடைந்தவள், பிறரால் அபகரிக்கப்பட்டு அதற்கிணங்கிச் சென்றவள், இப்படிப்பட்ட மனைவிகளைத் தள்ளி விட்டு, பிராமணர்களானால் தர்ப்பையால் மனைவியை ஏற்படுத்திக் கொண்டு தாங்கள் செய்யவேண்டிய கருமங்களைச் செய்யலாம். க்ஷத்திரியர்கள் சொர்ணத்தாலும் வைசியர்கள் வெள்ளியினாலும், சூத்திரர்கள் தாம்பிரத்தாலும் ஏற்படுத்திக்கொள்ளவேண்டியது. இல்லையாயின் எல்லா வருணத்தவரும் சொர்ணத்தால் ஏற்படுத்தி கொள்ளலாம் என்பது விதி. ஸ்ரீராமர் க்ஷத்திரியர் மரபிற்கேற்ப இப்போது சொர்ணத்தால் சீதை போல் கற்பித்து அக்நிஹோத் திரம் செய்தார். தண்டகாரண்யத்தில் இராவணன் சீதையை அப கரித்துச் சென்றபோது, சொர்ணம் இல்லாமையால் இராமசந்திர பிரபு குசங்களால் சீதையை ஏற்படுத்திக்கொண்டு கருமத்தை நடத்தினர். நித்திய கர்மாநுஷ்டானத்தைவிடுவது சாஸ்திரத்திற்கு மிகவும் அசம்மதமான தென்பதைக் கருதி மற்ற வருணத்தவரும் குசங்களால் மனைவியைக் கற்பித்து அக்நிஹோத்திரம் செய்கிறார் கள். விபசாரம் செய்கிறவள், பாபஞ்செய்கிறவள், புருஷனை விரோ திக்கிறவள் இப்படிப்பட்ட ஸ்திரீயை ஆதானம் என்ற கருமத்தில் தியாகம் செய்யவேண்டுமென்பது விதி. (ஆதானத்தில் தியாகம் செய்யவேண்டாமென்பது மற்றொரு மதக்கொள்கை).

ஸ்ரீராமர், வசிஷ்டமுனிவர், மற்றுமுள்ள பிராம்மணோத்தமர் கள் இவர்களுடன் பக்ஷந்தோறும் நவமியில் அவபிருத ஸ்நானம் செய்ய நிச்சயித்து, முத்கல முனிவரது ஆசிரமத்திற் கருகாமை யில் தென் பக்கத்தில் கங்கா நதி வடக்கு முகமாகப் பிரவகிக்கு மிடத்தில் பிரயாகை க்ஷேத்திரத்திற்குச் சமீபத்தில், யாக பூமியேற் படுத்தி அந்த ஸ்தலத்தைத் தங்கக் கலப்பை கொண்டு சோதனை செய்து அங்கு சொர்ண சீதையுடனிருந்து யாகஞ்செய்யத் தொடங்கினர்.

அஜ்ஞானிகள் சொர்ண சீதையையும் ஞானிகள் தமது இடது பாரிசத்தில் மறைந்திருக்கும் சத்வகுண சீதையையும் தரி

சிக்க யாக காரியங்களை யனுஷ்டித்தார். பிரபுவான தசரத குமாரர் இவ்விதம் யாகஞ்செய்து முடிந்ததும் தமது குலகுருவாகிய வசிஷ்ட முனிவருக்கு அந்த சொர்ண சிதையைத் தானமாகக் கொடுத்து விட்டார். இவ்விதம் நூறு யாகங்களியற்றி நூறு சொர்ண சிதையைத் தானம் செய்தார். இவ்விதம் தானஞ்செய்ததன் பலனாக ஸ்ரீராமபிரான் கிருஷ்ணவதாரத்தில் பதினாறாயிரத்து நூறு ஸ்திரீகளை விவாகம் செய்துகொள்ளப்போகிறார். இரகு வீரர் யாகந்தோறும் கறுப்புக் காதுகளுள்ள குதிரையை பூப்பிரதக்ஷிணத்திற்கு அனுப்பினர். அந்தக் குதிரைகளொவ்வொன்றும் யாக மண்டபத்திலிருந்து புறப்பட்ட நாலாவது தினத்தில் நான்கு திக்குகளையும் சுற்றிக்கொண்டு வந்து சேரும். சத்ருக்னனே ஒவ்வொரு யாகத்தில் விடப்பட்ட குதிரையை புஷ்ப விமானத்தின் மீதேறி ரக்ஷித்து வந்தான். இவ்விதமாக தொன்னூற்றொன்பது யாகங்கள் நடந்தன. ஸ்ரீராமர் நூறாவது அசுவமேதயாகம் செய்யத் தொடங்கி அந்த யாகத்தையும் கங்கைக் கரையில் முத்கல முனிவர் ஆசிரமத்திற் கருகிலேயே நடத்தலானர்.

இது நிற்க, இனிச் சீதாபிராட்டியைக் கவனிப்போம். பிராட்டியாருக்குக் குழந்தை பிறந்த பத்து நாள் வரையில் இரவிலும் சந்தியா காலங்களிலும் வான்மீகி முனிவர் குழந்தைக்கு இராமரக்ஷை என்ற மந்திரத்தால் அபிமந்திரணம் செய்தார். இரகுவீரர் உத்தரவுப்படி பதினோராவது நாளில், குசன் என்று பெயரிட்டு மற்றுமுள்ள காரியங்களை நடத்தினர். இவ்விதம் குழந்தை குசன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கப்பட்டு வந்தான். ஜனகமகாராஜனும் சுமேதையும் குழந்தைக்கு வஸ்திரங்களாலும் புஷ்பங்களாலும் அலங்கரித்துப் பெருமைப் படுத்தினர்கள். குசன் பலவித விளையாட்டினால் தனது தாய் சிதாபிராட்டிக்குச் சந்தோஷமுண்டாக்கி வந்தான். ஒரு நாள் வான்மீகி முனிவருடைய சந்நிதியில் குழந்தையானது தொட்டிலிற் படுத்து நித்திரை செய்துகொண்டிருந்தது. அச்சமயம் பிராட்டியாரின் தோழி துளஸி, தாய் சுமேதை இவர்கள் வெளியே போயிருந்தார்கள். ஜானகி இதே சமயத்தில் அதாவது ஐப்பசி மாதம் ஞாயிற்றுக்

கிழமை யன்று தமஸாநதிக்குச் செல்லவெண்ணித் தன் குழந்தையைப் பார்த்துக்கொள்ளும்படி வான்மீகி முனிவருக்குத் தெரிவித்து விட்டுத் தான் தமஸா நதிக்குச் சென்றாள். தாஸி வழி காட்டப் பின்னால் சென்ற சீதை வழியில், இடுப்பு தோள் தலை இவைகளில் ஐந்து குட்டிகளை கட்டிக்கொண்டு சஞ்சரிக்கும் ஓர் பெண் குரங்கைக் கண்டாள். அப்பெண் குரங்கைப் பார்த்ததும் தன் குழந்தையை நினைத்துக்கொண்டு, "திரியக் ஜாதியில் பிறந்த ஓர் குரங்குமல்லவா தன் குழந்தைகளை விட்டுப் பிரியாமல் கூடவே அழைத்துக்கொண்டு போகிறது. மானிட ஜன்மமெடுத்த என்னைச் சுடவேண்டும். எனக்குப் பிறந்த ஒரே குழந்தையைத் தனியே விட்டு ஸ்நானம் செய்யப்புறப்பட்டு விட்டேனே. இப்பூமியில் சுகமானது ஓர் க்ஷண காலமும் விடாமல் அநுபவிக்கத்தக்கது. நான் பெரிய முட்டாள்" என்று தன்னைத் தூஷித்துக்கொண்டு திரும்பவும் ஆசிரமம் வந்தாள். இச்சமயத்தில் வான்மீகி முனிவர் லகுசங்கைக்குச் சென்றிருந்தார். சீடர்கள் ஸமித்துகள் சேகரித்துவரச் சென்றிருந்தார்கள். சீதை தொட்டிலிலிருந்த குழந்தையை எடுத்துக்கொண்டு வெளியே வந்து நதிக்குச்சென்று ஸ்நானஞ்செய்து கொண்டிருந்தாள். முனிவர் வந்து தொட்டிலிற் குழந்தையைக் காணாமல் சீதாதேவியின் சாபத்திற்குப் பயந்து, முன் போல், நறுக்கின குசங்களின் அடிப்பக்கங்களால் (லவங்களால்) குழந்தையைக் கற்பித்து, மந்திர தீர்த்த புரோக்ஷணம் செய்து தவத்தின் மகிமையால் அக்குழந்தைக்கு உயிருண்டாக்கினர். வான்மீகி முனிவர் ஞானதிருஷ்டியால் குழந்தை காணாமற் போனதின் காரணத்தை நோக்கவில்லை.

இப்படியிருக்க சீதாபிராட்டியும் நதியில் ஸ்நானஞ்செய்துவிட்டு இடுப்பில் குழந்தையை எடுத்துக்கொண்டு தன் தாதியுடன் கால் தண்டைகள் சப்திக்க ஆசிரமம்வந்து தொட்டிலில் வேறொரு குழந்தையிருக்ககண்டு இக்குழந்தை யாருடையதென்று முனிவரைக் கேட்டாள்? முனிவர் ஜானகியின் இடுப்பில் குசன் இருக்கக்கண்டு மிகவும் ஆச்சரியமடைந்து, சீதையை யழைத்து நடந்ததைத் தெரிவித்தார். பின்தொட்டிலிற்படுத்திருக்கும்குழந்தையையெடுத்துசீதையின் மடிமீது வைத்து எனது அநுக்கிரகத்தாலுண்டான இக்குழந்

தையை நீ இரண்டாவது குழந்தையாகக்கொள். இக்குழந்தை லவங்களால் உண்டுபண்ணப்பட்டபடியால், லவன் என்று இவனையழைக்க வேண்டும் என்றுகூறினர். முனிவர்இவ்விதங் கூறியதும் ஜானகி மனமகிழ்ச்சியுடன் குழந்தையை யெடுத்துக்கொண்டாள். பிறகு முனிவர் லவனுக்கு ஜாதகர்மம் முதலிய காரியங்களைச் செய்தார். அப்பொழுது பூமியிலும் ஆகாசத்திலும் வாத்தியங்கள் முழங்கின. தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். ஜனகமகாராஜன் சுமேதை இவ்விருவரும் சந்தோஷமாக உற்சவம் கொண்டாடினார்கள். பிறகு முனிவர் குசலவர்களுக்கு வில்வித்தை அஸ்திரவித்தை இவைகளைக் கற்பித்தார். வித்தியாப்பியாசம் உண்டாக்கினர். தாம் செய்த இராமாயணத்தை உபதேசித்தார். அச்வனி தேவர்கள் போல் அழகினிற் சிறந்த குசன் லவன் இருவர்களும் அந்த இராமாயணத்தைப் பாடிக்கொண்டு வனத்தில் சஞ்சரித்தார்கள். இப்படி இவர்கள் இராமாயண கானஞ் செய்து கொண்டு உலாவுவதைக் கண்ட முனிவர் கூட்டங்கள், பரமாச்சரிய மடைந்து ஒருவர்க்கொருவர், இப்படிக் கானஞ்செய்கிறவர்களை நாம் எங்கும் கண்டதில்லை. கந்தர்வலோகம், கின்னரலோகம் பூமண்டலம் தேவலோகம், அமராவதி பாதாளம். சத்தியலோகம் இவைகளெங்கும் நாம் பார்த்திருக்கிறோமே. நமக்கு வயசும் அதிகமாயிற்றே. நமது நீண்ட ஆயுட்காலத்தில் இப்படிக் கானஞ் செய்கிறவர்களை மேற்கண்ட விடங்களில் நாம் எங்கு கண்டிருக்கிறோம்? எங்கும் கண்டதில்லையல்லவா? அன்றி செவியால் கேட்டுத் தானிருக்கிறோமா? அதுவுமில்லையே என்று வியந்து பேசிக்கொண்டார்கள். முனிவர்கள் எல்லாரும் தினந்தோறும் கொண்டாட அவ்விரு பாலர்களும் வனத்தில் சஞ்சரித்துக்கொண்டு சுகமாக விருந்தார்கள். தங்கக்கங்கணம், தண்டை, சதங்கை, அரை நூன்மாலை, ஹாரம், குண்டலங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் அக்குழந்தைகள் இருவரும் நாள்தோறும் பல பல விளையாட்டுகளை விளையாடித் தங்கள் தாய் சீதாபிராட்டி, ஜனக மகாராஜன், சுமேதை, முனிவர் இவர்களுக்குச் சந்தோஷ முண்டாக்கி வந்தார்கள்.

நான்காவது சருக்கம்.

முற்றிற்று.

## 5 - வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

பரம குருவே! வான்மீகிமுனிவர் குசன் என்ற பாலனுக்கு இராமரக்ஷையால் அபிமந்திரஞ்செய்தாரென்று கூறினீரே, அந்த பாலர்களுடைய இராம ரக்ஷையை எனக்குக் கூறவேண்டுமென்று விஷ்ணுதாஸர் வினவினார். இராமதாஸர் இவ்விதங்கேட்ட தமது சிடனைப் பார்த்து ஏ விஷ்ணுதாஸ! இந்த இராமரக்ஷையைப் பரம சிவனானவர் பார்வதிக்கு சுப்பிரமணியரின் பொருட்டுக் கூறியுள்ளார். அவ்விதம் கூறுகின்றேன் கேள்.

ஒரு சமையம் பரம சிவன் பார்வதியைப் பார்த்து, "குமாரன் சுப்பிரமணியனுக்கு இராமரக்ஷையைச்செய். அவன் தாரகாசுரனைக் கொல்லும் சக்தி பெறுவான்" என்று கூறி பரிசுத்தத்துடனிருந்து பார்வதிக்கு அந்த இராமரக்ஷையை உபதேசம் செய்தார்.

॥ ധ്യാനം ॥

വാമേ കോദണ്ഡദണ്ഡം നിജകരകമലേ
ദക്ഷിണേ ബാണമേകം
പശ്ചാദ്ഭാഗേ ച നിത്യം ദധതമഭിമതം
സാസിതൂണീരഭാരം
വാമേ വാമേ വസദ്ഭ്യാം സഹമിളിതതനും
ജാനകീലക്ഷ്മണാഭ്യാം
ശ്യാമം രാമം ഭജേഽഹം
പ്രണതജനമനഃഖേദവിച്ഛേദദക്ഷം

---

### தியானம்

இடது கையில் வில்லையும் வலது கரத்தில் பிரதானமான பாணத்தையும் பின் பக்கத்தில் சிலாக்கியமான கத்தி, அம்புறாத் தூணி, இவைகளையுங்கொண்டு, இடது பக்கத்தில் சீதையும் வலது பக்கத்தில் இலட்சுமணனும் வீற்றிருக்கப் பெற்ற சரீரத்தோடு கூடியவரும், சரணமடைந்தவர்களின் மனதிலிருக்கும் சிரமத்தை நீக்குகிறவரும் கறுப்பு நிறமுடைய வருமான ஸ்ரீராமரை நான் பஜிக்கிறேன்.

𑌅𑌸𑍍𑌯𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌰𑌕𑍍𑌷𑌾𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 । 𑌬𑍁𑌧𑌕𑍌𑌶𑌿𑌕
𑌋𑌷𑌿𑌃 । 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌰𑌾𑌮𑌇𑌤𑌿𑌬𑍀𑌜𑌮𑍍
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 𑌪𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑍇 𑌜𑌪𑍇𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 ।

𑌚𑌰𑌿𑌤𑌂 𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌶𑌤𑌕𑍋𑌟𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌮𑍍 ।
𑌏𑌕𑍈𑌕𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌮𑌹𑌾𑌪𑌾𑌤𑌕𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 ॥ ௧

𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌨𑍀𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌶𑍍𑌯𑌾𑌮𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌰𑌾𑌜𑍀𑌵𑌲𑍋𑌚𑌨𑌮𑍍 ।
𑌜𑌾𑌨𑌕𑍀𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋𑌪𑍇𑌤𑌂 𑌜𑌟𑌾𑌮𑍁𑌕𑍁𑌟𑌮𑌣𑍍𑌡𑌿𑌤𑌮𑍍 ॥ ௨

𑌸𑌾𑌸𑌿𑌤𑍂𑌣𑌧𑌨𑍁𑌰𑍍𑌬𑌾𑌣𑌪𑌾𑌣𑌿𑌂 𑌨𑌕𑍍𑌤𑌂𑌚𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑌮𑍍 ।
𑌸𑍍𑌵𑌲𑍀𑌲𑌯𑌾𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌰𑌾𑌤𑍁𑌮𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌮𑌜𑌂 𑌵𑌿𑌭𑍁𑌮𑍍 ॥ ௩

𑌰𑌾𑌮𑌰𑌕𑍍𑌷𑌾𑌂 𑌪𑌠𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 𑌪𑌾𑌪𑌘𑍍𑌨𑍀𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌦𑌾𑌮𑍍 ।
𑌶𑌿𑌰𑍋 𑌮𑍇 𑌰𑌾𑌘𑌵𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌭𑌾𑌲𑌂 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌃 ॥ ௪

---

இந்த இராம ரக்ஷா ஸ்தோத்திர மஹா மந்திரத்திற்கு புத கௌசிகர் ரிஷி, ஸ்ரீராமசந்திர பிரபு தேவதை, ஸ்ரீராமர் பீஜம் அனுஷ்டுப் சந்தஸ் இராமரின் பிரீத்யர்த்தமாக ஜபம் செய்தல் (வினியோகம்).

நூறு கோடி கிரந்தங்களால் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்ட ஸ்ரீஇரகு புங்கவருடைய சரித்திரத்தின் ஒவ்வொரு அக்ஷரமும்; மகா பாபங்களைப் போக்கத்தக்கது. (௧)

கரு நெய்தல் புஷ்பம் போன்ற மேனியும் தாமரைப் புஷ்பம் போன்ற கண்களையுடையவரும், சீதை, இலட்சுமணர் இவர்களுடன் கூடியிருப்பவரும், ஜடாமகுடதாரியா யிருப்பவரும், கத்தி, அம்புறாத்தூணி, வில், பாணம், இவைகளைக் கையிலேந்தியவரும் அரக்கர் குல காலனும் தம் விளையாட்டினால் உலகங்களை இரக்ஷிப்பதற்கு அவதாரம் செய்தவரும் பிறப்பற்றவரும் பிரபுவுமான ஸ்ரீ ராமரைத் தியானஞ்செய்து பிரக்ஞை யென்னும் புத்தியையுடையவன், பாபங்களை யொழித்து இஷ்டார்த்த சித்திகளைக் கொடுக்கும் ஸ்ரீராம ரக்ஷையைப் படிக்க வேண்டும். இராகவர் சிரஸை ரக்ஷிக்கட்டும், தசரத குமாரர் நெற்றியை ரக்ஷிக்

𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑍇𑌯𑍋 𑌦𑍃𑌶𑍌 𑌪𑌾𑌤𑍁 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑍀 ।
𑌘𑍍𑌰𑌾𑌣𑌂 𑌪𑌾𑌤𑍁 𑌮𑌖𑌤𑍍𑌰𑌾𑌤𑌾 𑌮𑍁𑌖𑌂 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌵𑌤𑍍𑌸𑌲𑌃 ௫

𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌧𑌿𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌕𑌣𑍍𑌠𑌂 𑌭𑌰𑌤𑌵𑌨𑍍𑌦𑌿𑌤𑌃 ।
𑌸𑍍𑌕𑌨𑍍𑌧𑍌 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌯𑍁𑌧𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌭𑍁𑌜𑍌 𑌭𑌗𑍍𑌨𑍇𑌶𑌕𑌾𑌰𑍍𑌮𑍁𑌕𑌃 ॥ ௬

𑌕𑌰𑍌 𑌸𑍀𑌤𑌾𑌪𑌤𑌿𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌜𑌾𑌮𑌦𑌗𑍍𑌨𑍍𑌯𑌜𑌿𑌤𑍍 ।
𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 𑌰𑌘𑍁𑌵𑌰𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌕𑍁𑌕𑍍𑌷𑌿𑌂 𑌇𑌕𑍍𑌷𑍍𑌵𑌾𑌕𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌃 ॥

𑌮𑌧𑍍𑌯𑌂 𑌪𑌾𑌤𑍁 𑌖𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑍀 𑌨𑌾𑌭𑌿𑌂 𑌜𑌾𑌮𑍍𑌬𑌵𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ।
𑌸𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑍇𑌶𑌃 𑌕𑌟𑌿𑌂 𑌪𑌾𑌤𑍁 𑌸𑌕𑍍𑌥𑌿𑌨𑍀 𑌹𑌨𑍁𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ॥

𑌊𑌰𑍂 𑌰𑌘𑍂𑌤𑍍𑌤𑌮𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌰𑌕𑍍𑌷𑌃𑌕𑍁𑌲𑌵𑌿𑌨𑌾𑌶𑌕𑍃𑌤𑍍 ।
𑌜𑌾𑌨𑍁𑌨𑍀 𑌸𑍇𑌤𑍁𑌕𑍃𑌤𑍍 𑌪𑌾𑌤𑍁 𑌜𑌙𑍍𑌘𑍇 𑌦𑌶𑌮𑍁𑌖𑌾𑌨𑍍𑌤𑌕𑌃 ॥ ௯

---

கட்டும், கௌஸல்லியையின் குமாரர் கண்களை ரக்ஷிக்கட்டும், விசுவாமித்திரருக்குப் பிரியமுள்ளவர் காதுகளை ரக்ஷிக்கட்டும், யாகத்தைக் காப்பாற்றுகிறவர் மூக்கைக் காக்கட்டும், இலட்சுமணரிடம் அன்புள்ளவர் முகத்தைக்காக்கட்டும். (௨-௫)

வித்தைகளுக்கு இருப்பிடமானவர் நாவைக்காக்கட்டும், பரதர் வணங்கும் பரம புருஷர் கழுத்தை ரக்ஷிக்கட்டும், திவ்ய ஆயுதம் தரித்தவர் தோள்களை ரக்ஷிக்கட்டும், பரமசிவன் வில்லை முறித்தவர் புஜங்களைக் காக்கட்டும். (௬)

சீதாபதியானவர் முன் கைகளை ரக்ஷிக்கட்டும், பரசுராமரை ஜயித்தவர் மார்பைக்காக்கட்டும், இரகு ராமர் பக்கங்களை பரிபாலிக்கட்டும், இக்ஷுவாகு குமாரர் வயிற்றைக் காக்கட்டும். (எ)

கரனைக்கொன்றவர் இடையைப் பாதுகாக்கட்டும், ஜாம்பவாசிரியர் நாபியை இரக்ஷிக்கட்டும், சுக்ரீவனுக்குப் பதியானவர் இடையின் கீழ்ப் பக்கத்தைக் காக்கட்டும், ஹனுமத் பிரியர் மேல் தொடைகளைக் காக்கட்டும். (அ)

ஸ்ரீ ரகுசிரேஷ்டர் கீழ்த்தொடைகளைக் காக்கட்டும், அரக்கர் குலத்தை நாசஞ்செய்தவர் இரகசியமான குஹ்யஸ்தலத்தை இரக்ஷிக்கட்டும், சேதுபந்தனம் செய்தவர் முழங்கால்களை காப்பாற்றட்டும், இராவணனை நாசஞ்செய்தவர் கால்களைக் காக்கட்டும். (௯)

𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑌶𑍍𑌰𑍀𑌦𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌰𑌾𑌮𑍋𑌽𑌖𑌿𑌲𑌂 𑌵𑌪𑍁𑌃 ।
𑌏𑌤𑌾𑌂 𑌰𑌾𑌮𑌬𑌲𑍋𑌪𑍇𑌤𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌾𑌂 𑌯𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑍀 𑌪𑌠𑍇𑌤𑍍 ।
𑌸 𑌚𑌿𑌰𑌾𑌯𑍁𑌃 𑌸𑍁𑌖𑍀 𑌪𑍁𑌤𑍍𑌰𑍀 𑌵𑌿𑌜𑌯𑍀 𑌵𑌿𑌨𑌯𑍀 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ ௧௰

𑌪𑌾𑌤𑌾𑌲𑌭𑍂𑌤𑌲𑌵𑍍𑌯𑍋𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑌶𑍍𑌛𑌦𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑌃 ।
𑌨 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌪𑌿 𑌶𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 𑌰𑌾𑌮𑌨𑌾𑌮𑌭𑌿𑌃 ॥ ௧௧

𑌰𑌾𑌮𑍇𑌤𑌿 𑌰𑌾𑌮𑌭𑌦𑍍𑌰𑍇𑌤𑌿 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌤𑌿 𑌵𑌾 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌨𑌰𑍋 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌪𑌾𑌪𑍈𑌰𑍍𑌭𑍁𑌕𑍍𑌤𑌿𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ॥ ௧௨

𑌜𑌗𑌜𑍍𑌜𑍈𑌤𑍍𑌰𑍈𑌕𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌰𑌾𑌮𑌨𑌾𑌮𑍍𑌨𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ।
𑌯𑌃 𑌕𑌂𑌠𑍇 𑌧𑌾𑌰𑌯𑍇𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑌸𑍍𑌥𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑌃 ॥ ௧௩

𑌵𑌜𑍍𑌰𑌪𑌂𑌜𑌰𑌨𑌾𑌮𑍇𑌦𑌂 𑌯𑍋 𑌰𑌾𑌮𑌕𑌵𑌚𑌂 𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍 ।
𑌅𑌵𑍍𑌯𑌾𑌹𑌤𑌾𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌲𑌭𑌤𑍇 𑌜𑌯𑌮𑌂𑌗𑌲𑌮𑍍 ॥ ௧௪

---

விபீஷணருக்கு இராஜ்யம் கொடுத்தவர் பாதங்களைக் காக்கட்டும். ஸ்ரீராமர் ஸகல சரீரத்தையும் ஸம்ரக்ஷிக்கட்டும். இராமருடைய பலத்தோடு கூடிய இந்த இரக்ஷையை எந்தப் புண்ணியசாலி படனம் செய்கின்றானோ அவன், தீர்க்காயுள் சுகம் மக்கள் விஜயம் வணக்கம் இவைகளைப் பெற்று மேன்மை யடைவான். (௧௦)

சொர்க்க மத்திய பாதாளம் இவைகளில் ஸஞ்சாரம் செய்பவர்கள், கபடமாகச் சஞ்சாரம் செய்பவர்கள், இராம ரக்ஷையினால் இரக்ஷிக்கப்பட்டவனைப் பார்க்கவும் சக்தியற்றவர்கள். (௧௧)

இராம! இராம பத்திரா! இராம சந்திரா! என்றுநினைக்கிறவர்கள் பாபரகிதர்களாகி இகலோக போகத்தையும் மோக்ஷத்தையும் அடைவார்கள். (௧௨)

வல்லமையுள்ள முக்கியமான ஓர் இராம மந்திரத்தை கழுத்தில் அணிந்து கொண்டால், ஸகல சித்திகளையும் பெறுவான். (௧௩)

இந்த, (வஜ்ர பஞ்சரம்) வஜ்ரக்கூடு என்ற பெயருள்ள ஸ்ரீராம கவசத்தைப் படனம் செய்தவன், தடை ஏற்படாத ஆக்ஞையுடன் எங்கும் ஜயத்தையும் மங்களத்தையும் அடைவான். (௧௪)

𑌆𑌦𑌿𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑍍 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇 𑌰𑌾𑌮𑌰𑌕𑍍𑌷𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌹𑌰𑌃 ।
𑌤𑌥𑌾 𑌲𑌿𑌖𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌤𑌃 𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑍋 𑌬𑍁𑌧𑌕𑍌𑌶𑌿𑌕𑌃 ॥ ௧௫
𑌰𑌾𑌮𑍋 𑌦𑌾𑌶𑌰𑌥𑌿𑌃 𑌶𑍂𑌰𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌨𑍁𑌚𑌰𑍋 𑌬𑌲𑍀 ।
𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ॥
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑍋 𑌯𑌜𑍍𑌞𑍇𑌶𑌃 𑌪𑍁𑌰𑌾𑌣𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌜𑌾𑌨𑌕𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌃 ॥ ௧௭
𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌜𑌪𑍇𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 ॥
𑌅𑌶𑍍𑌵𑌮𑍇𑌧𑌾𑌯𑍁𑌤𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ॥
𑌸𑌨𑍍𑌨𑌦𑍍𑌧𑌃 𑌕𑌵𑌚𑍀 𑌖𑌡𑍍𑌗𑍀 𑌚𑌾𑌪𑌬𑌾𑌣𑌧𑌰𑍋 𑌯𑍁𑌵𑌾 ।
𑌗𑌚𑍍𑌛𑌨𑍍 𑌮𑌨𑍋𑌰𑌥𑍋𑌽𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌰𑌾𑌮𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌸𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌃 ।
𑌤𑌰𑍁𑌣𑍌 𑌰𑍂𑌪𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍌 𑌸𑍁𑌕𑍁𑌮𑌾𑌰𑍌 𑌮𑌹𑌾𑌬𑌲𑍌 ।
𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑍌 𑌚𑍀𑌰𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌜𑌿𑌨𑌾𑌂𑌬𑌰𑍌 ॥ ௧௯

---

பரமசிவன் இராமரக்ஷையைப்புதகௌசிகருக்கு ஸ்வப்னத்தில் உபதேசம் செய்தார். அந்த புதகௌசிகர் அதிகாலையில் தாம் உபதேசம் பெற்றபடி எழுதினர். (௧௫)

1. இராமர், 2. தசரதர் குமாரர், 3. சூரர், 4. இலட்சுமணரோடு கூடியவர், 5. பலமுள்ளவர், 6. காகுஸ்தர், 7. புருஷர், 8. பூர்ணர், 9. கௌஸல்யைக்கு ஆனந்தத்தை விருத்தி செய்கிறவர், 10. வேதாந்தத்தினல் அறியத் தகுந்தவர், 11. யாகங்களுக்கு அதிபதி, 12. புராண புருஷர்களுக்குள் சிரேஷ்டர், 13. ஜானகிக்குப்பதி, 14. ஸ்ரீமான், 15. அளவிறந்த பராக்கிரமமுள்ளவர் இந்த நாமங்களை பக்தி சிரத்தையுடன் எப்போதும் ஜபித்துவரின் பதினுயிரம் அசுவமேதயாகங்கள் செய்தபலனை நிச்சயமாக அடைவான். (௧௬-௧௭)

பக்தர்களைக் காக்க ஸன்னத்தம் உள்ளவர், கவசம் பூண்டவர், கத்தி தரித்தவர், வில் பாணம் இவைகளுள்ளவர், யௌவனமுள்ளவர், இலட்சுமணருடன் கூடினவர்—ஆகிய இராமபிரான் எங்கள் மனதின் இஷ்டம்போல் நடந்து காக்கக்கடவர். (௧௮)

யௌவனம் அழகு மிருதுவான சரீரம் மிகுதியான பலம் தாமரைப் புஷ்பம் போன்ற கண்கள் இவைகளையுடையவர்களும் மரவுரி,மான்தோல் இவைகளை வஸ்திரமாக அணிந்திருப்பவர்களும்,

பலமூலாஶிநௌ தாந்தௌ தாபஸௌ ப்ரஹ்மசாரிணௌ ।
புத்ரௌ தஶரதஸ்யைதௌ ப்ராதரௌ ராமலக்ஷ்மணௌ ॥
தந்விநௌ பத்தநிஸ்த்ரிம்ஶௌ காகபக்ஷதரௌ ஶுபௌ ।
வீரௌ மாம் பதி ரக்ஷேதாம் தாவுபௌ ராமலக்ஷ்மணௌ ॥
ஶரண்யௌ ஸர்வஸத்வாநாம் ஶ்ரேஷ்டௌ ஸர்வதநுஷ்மதாம் ।
ரக்ஷ꞉குலநிஹந்தாரௌ த்ராயேதாம் நோ ரகூத்தமௌ ॥

ஆத்தஸஜ்ஜதநுஷாவிஷுஸ்ப்ருஶா
வக்ஷயாஶுகநிஷங்கஸங்கிநௌ ।
ரக்ஷணாய மம ராமலக்ஷ்மணா—
வக்ரத꞉ பதி ஸதைவ கச்சதாம் ॥

ஆராம꞉ கல்பவ்ருக்ஷாணாம் விராம꞉ ஸகலாபதாம் ।
அபிராமஸ்த்ரிலோகாநாம் ராம꞉ ஶ்ரீமாந் ஸ ந꞉ ப்ரபு꞉ ॥

---

பழம் காய்கிழங்குகளை ஆகாரமாகக் கொள்கிறவர்களும் இந்திரியங்களை அடக்குகிறவர்களும் தவஞ்செய்கிறவர்களும் பிர்ம்மஸ்வரூபத்தைத் தரிசிப்பவர்களும் தசரத மகாராஜனது புத்திரர்களும் சகோதரர்களும் இராமர் இலட்சுமணர் என்ற பெயருள்ளவர்களும் வில்லை யுடையவர்களும் இடைவாரில் கட்டப்பட்ட கத்தி உள்ளவர்களும் அழகான குடுமியுள்ளவர்களும் பிரசித்தர்களும் வீரியம் உள்ளவர்களுமான இராமலக்ஷ்மணர்கள் வழியில் காப்பாற்றட்டும். (உக-உஉ)

ஸகல பிராணிகளையும், காப்பாற்றத் தக்கவர்களும் ஸகல வில்லாளிகளுக்குள் சிறந்தவர்களும் இராக்ஷஸ குலத்தை நாசம் செய்தவர்களுமான அந்த இரகு சிரேஷ்டர்கள் இரக்ஷிக்கட்டும். (உ௩)

தயார் செய்யப்பட்ட விற்களையும் பாணங்கள் நிறைந்த அம்புறாத்தூணியையு முடையவர்களான இராமலட்சுமணர்கள் என்னைக்காக்க முன் பக்கத்திலும் வழியிலும் எப்போதும் இருக்கட்டும். (உச)

கற்பக விருக்ஷங்களுக்கு இருப்பிடமானவரும் ஸகல கஷ்டங்களைப் போக்குகின்றவரும் மூன்று உலகங்களுக்கும் அன்பை அளிக்கிறவருமான கிருபையுள்ள இராமர் எனக்குப் பிரபு (உ௫)

𑌰𑌾𑌮𑌾𑌯 𑌰𑌾𑌮𑌭𑌦𑍍𑌰𑌾𑌯 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌵𑍇𑌧𑌸𑍇 ।
𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌾𑌯 𑌨𑌾𑌥𑌾𑌯 𑌸𑍀𑌤𑌾𑌯𑌾𑌃 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ॥ ௨௬

𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮 𑌭𑌰𑌤𑌾𑌗𑍍𑌰𑌜 𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮 𑌰𑌣𑌕𑌰𑍍𑌕𑌶 𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮 𑌶𑌰𑌣𑌂 𑌭𑌵 𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮 ॥ ௨௭

𑌲𑍋𑌕𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂 𑌰𑌣𑌰𑌙𑍍𑌗𑌧𑍀𑌰𑌂
𑌰𑌾𑌜𑍀𑌵𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 𑌰𑌘𑍁𑌵𑌂𑌶𑌨𑌾𑌥𑌮𑍍 ।
𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 𑌕𑌰𑍁𑌣𑌾𑌕𑌰𑌂 𑌤𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥ ௨௮

𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍇 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌵𑌾𑌮𑍇 𑌚 𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 ।
𑌪𑍁𑌰𑌤𑍋 𑌮𑌾𑌰𑍁𑌤𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌮𑍍 ॥

---

இராமா! இராம பத்திரா! இராம சந்திரா, வேதஸ, இரகுநாதா, நாதா, ஸீதாபதி என்ற பெயர்கள் அமைந்தவருக்கு நமஸ்காரம். ( )

ஸ்ரீ ராமா! ஸ்ரீராம! இரகு நந்தன! இராம இராம! ஸ்ரீராம இராம! பரதருக்கு முன் பிறந்த இராம! இராம ஸ்ரீராம! இராம! யுத்தத்தில் சமர்த்தராகிய ஏ இராம! இராம! ஸ்ரீராம! இராம! இராம! இராம! நீர் என்னை இரக்ஷிக்கவேண்டும். (௨௭)

ஜனங்களுக்குச் சந்தோஷ முண்டாக்குகிறவரும் யுத்தகளத்தில் தைரியமுள்ளவரும் தாமரைப் புஷ்பம் போன்ற கண்களுள்ளவரும் இரகு குலத்திற்கு நாயகரும் கருணை வடிவானவரும் கருணைக்கு இருப்பிடமானவருமான அந்த ஸ்ரீராம சந்திரரை இரக்ஷிக்கிறவரென்று நானடைகிறேன். (௨௮)

வலது புறத்தில் இலக்ஷ்மணரும் இடது பாகத்தில் ஸீதா தேவியும் முன் புறத்தில் ஹனுமானுமாகவுள்ள ஸ்ரீராமரை நமஸ்கரிக் கின்றேன். (௨௯)

கோஷ்பதீக்ருதவாராஶிம் மஶகீக்ருதராக்ஷஸம் ।
ராமாயணமஹாமாலாரத்நம் வந்தேऽநிலாத்மஜம் ॥ ௯௰

பாபௌக⁴ திஷ்ட² தூ³ரே த்வம் ரோகா³ஸ்திஷ்ட²த தூ³ரத꞉ ।
வஸதி ஹி ஸதா³ஸ்மாகம் ஹ்ருதி³ ராமோ த⁴நுர்த⁴ர꞉ ॥ ௯௧

மநோஜவம் மாருததுல்யவேக³ம்
ஜிதேந்த்³ரியம் பு³த்³தி⁴மதாம் வரிஷ்ட²ம் ।
வாதாத்மஜம் வாநரயூத²முக்²யம்
ஶ்ரீராமதூ³தம் ஶரணம் ப்ரபத்³யே ॥ ௯௨

ராம ராம தவ பாத³பங்கஜம்
சிந்தயாமி ப⁴வப³ந்த⁴முக்தயே ।
வந்தி³தம் ஸுரநரேந்த்³ரமௌலிபி⁴ —
ர்த்⁴யாயிதம் மநஸி யோகி³பி⁴꞉ ஸதா³ ॥ ௯௩

---

சமுத்திரத்தைப் பசுவின் குளம்படியாகக் கொண்டவரும் அரக்கர்களைக் கொசுக்களுக்குச் சமானமாக எண்ணினவரும் இராமாயணமாகிய சிலாக்கியமான மாலைக்கு இரத்தினம்போல்பவருமான அந்த வாயுநந்தனரை நமஸ்கரிக்கின்றேன். (௯௰)

ஏ பாபக் கூட்டமே! எட்டி நில்லு! ஏ வியாதிகளே! நீங்களும் எட்டி நில்லுங்கள்; எங்கள் மனதில் வில்லுங்கையுமான ஸ்ரீராமர் எப்போது மிருக்கின்றார். (௯௧)

மனோவேகம் போன்ற வேகமுள்ளவரும் வாயு பகவானுக்குச் சமமான வேகமுள்ளவரும் இந்திரியங்களை ஜயித்தவரும் புத்தி உள்ளவர்களுக்குள் சிறந்தவரும் வாயுவுக்குப் பிள்ளையும் வானர சிரேஷ்டர்களுக்குள் சிரேஷ்டரும் ஸ்ரீராமதூதருமான ஹனுமாரைச் சரணமாக அடைகின்றேன். (௯௨)

ஏ இராம! இராம! தேவர்களும் அரசர்களும் சிரோபூஷணமாகக்கொள்வதும் யோகீசுவரர்கள் தங்கள் மனதில் எப்போதும் தியானிப்பதுமான தங்களுடைய சாரார விந்தத்தை ஸம்ஸாரபந்தம் நீங்குவதன்பொருட்டுத் தியானம் செய்கின்றேன். (௯௩)

𑌰𑌾𑌮𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌂 𑌰𑌘𑍁𑌵𑌰𑌂
𑌸𑍀𑌤𑌾𑌪𑌤𑌿𑌂 𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌂
𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 𑌕𑌰𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌂 𑌗𑍁𑌣𑌨𑌿𑌧𑌿𑌂
𑌵𑌿𑌪𑍍𑌰𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌧𑌾𑌰𑍍𑌮𑌿𑌕𑌮𑍍 ।
𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌤𑍍𑌯𑌸𑌨𑍍𑌧𑌂 𑌦𑌶𑌰𑌥𑌤𑌨𑌯𑌂
𑌶𑍍𑌯𑌾𑌮𑌲𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑍍
𑌵𑌨𑍍𑌦𑍇 𑌲𑍋𑌕𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂 𑌰𑌘𑍁𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂
𑌰𑌾𑌘𑌵𑌂 𑌰𑌾𑌵𑌣𑌾𑌰𑌿𑌮𑍍 ॥ ௧௬

𑌏𑌤𑌾𑌨𑌿 𑌰𑌾𑌮𑌨𑌾𑌮𑌾𑌨𑌿 𑌪𑍍𑌰𑌾𑌤𑌰𑍁𑌤𑍍𑌥𑌾𑌯 𑌯𑌃 𑌪𑌠𑍇𑌤𑍍 ।
𑌅𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌲𑌭𑌤𑍇 𑌪𑍁𑌤𑍍𑌰𑌂 𑌧𑌨𑌾𑌰𑍍𑌥𑍀 𑌲𑌭𑌤𑍇 𑌧𑌨𑌮𑍍 ॥

𑌮𑌾𑌤𑌾 𑌰𑌾𑌮𑍋 𑌮𑌤𑍍𑌪𑌿𑌤𑌾 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌃
𑌸𑍍𑌵𑌾𑌮𑍀 𑌰𑌾𑌮𑍋 𑌮𑌤𑍍𑌸𑌖𑌾 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 ।

---

இலட்சுமணருக்கு முன் உண்டானவரும், இரகுவம்சத்தில் பிறந்த அரசர்களுக்குள் சிரேஷ்டரும், சீதைக்குப் பதியும் அழகுள்ளவரும், காகுஸ்த வம்சத்தில் உண்டானவரும், கருணைக்கு இருப்பிடமானவரும், குணங்களுக்கு நிதியானவரும், பிராம்மணர்களிடம் அன்புள்ளவரும், தருமகுண சீலரும் அரசர்களுக்குச் சிரேஷ்டரும் ஸத்தியம் தவருதவரும், தசரத மகாராஜரின் பிள்ளையும், சியாமளவர்ண முள்ளவரும், ஜனங்களை ஆனந்திக்கச் செய்பவரும், இரகு குலத்திற்கு திலகம் போன்றவரும், இரகுவம்சத்தில் பிறந்தவரும், இராவணனுக்கு சத்துருவுமான ஸ்ரீராமரை நமஸ்கரிக்கின்றேன். (௧௬)

இந்த இராமநாமங்களை விடியற்காலத்தில் எழுந்து எவன் படனம் செய்கின்றானோ அவன் பிள்ளை இல்லாதவனானால் பிள்ளையையும் திரவியமில்லாதவனானால் திரவியத்தையும் அடைவான். (௧௭)

எனக்குத் தாய் இராமர், தகப்பன் இராமர் அண்ணன் தம்பிகளாக இருப்பவரும் இராமர், தோழனும், இரகுகுலத்தில் பிறந்தவர்களுக்குள் சிரேஷ்டராகிய இராமரே. எனக்கு ஸகல தனமும்,

ஸர்வஸ்வம் மே ராமசந்த்ரோ தயாலு—
நாந்யம் ஜாநே நைவ ஜாநே ந ஜாநே ॥ ௩௬

ஸ்ரீராமநாமாம்ருதமந்த்ரபீஜம்
ஸஞ்ஜீவநீ சேந்மநஸி ப்ரவிஷ்டா।
ஹாலாஹலம் வா ப்ரலயாநலம் வா
ம்ருத்யோர்முகம் வா விஶதாம் குதோ பீ: ॥

ஸ்ரீஶப்தபூர்வம் ஜயஶப்தமத்யம்
ஜயத்வயேநாபி புந: ப்ரயுக்தம்।
த்ரி:ஸப்தக்ருத்வோ ரகுநாதநாம
ஜபந்நிஹந்யாத்த்விஜகோடிஹத்யா: ॥ ௩௮

---

தயையுள்ள இராமசந்திரர் தான். வேறுதெய்வத்தை நான் அறியவில்லை. (௩௬)

இராமருடைய நாமமாகிற அமிருதமந்திர ஸஞ்சீவனிஎன்னும் ஔஷதியானது மனதிற் புகுந்திருந்தால், ஆலாஹால விஷத்தையோ பிரளயகால நெருப்பையோ அல்லது யமன் முகத்தையோ அடைந்திருப்பினும் பயம் ஏது? (௩௭)

ஸ்ரீஎன்ற சப்தத்தை முன் சொல்லி இராமஎன்றும், ஜயஎன்ற சப்தத்தை முன்சொல்லி இராமாவென்றும் ஜயஜயவென்று இரண்டு தடவை முன் சொல்லி மறுபடியும் இராம என்றும் இவ்விதம் இருபத்தொருதடவை சொன்னால் [அதாவது இராம ஜயராம ஜயஜய ராம] கோடி பிரும்மஹத்தி தோஷமும் விலகிவிடும். (௩௮)

ஏ பார்வதி! இவ்விதம் நான் முன் என் ஐந்து முகங்களினால் விசுவாமித்திர முனிவருக்கு உபதேசம் செய்திருக்கும்இராமரக்ஷை என்னும் ஸ்தோத்திரத்தை உனக்கு உபதேசம் செய்தேன் என்று பரமசிவன் கூறினார்.

இராமதாஸர் கூறுகிறார்.

இவ்விதம் பரமசிவனிடம் உபதேசம்பெற்றபர்வதராஜன்புத்திரியாகிய பார்வதி இராமரக்ஷையைப் பாராயணம் செய்து சுப்பிரமணியசுவாமிக்கு இரக்ஷை செய்தாள்.

அந்த இராமரக்ஷையின் பலத்தினால் தாரகாசுரனை ஸ்கந்தர் சங்காரம் செய்து தமது காரியங்களை முடித்துக்கொண்டார். சர்வபயமும் நீக்கக்கூடிய இராமரக்ஷையைத் தான் நானுனக்குகூறினேன். வான்மீகி முனிவரும் இந்த மந்திரத்தினால் தான் குசனுக்குரக்ஷை செய்தார். பாலர்களுடைய துஷ்ட கிருகங்களை விலக்குவதும் பாபங்களைப் போக்குவதும் புண்யங்களைக் கொடுப்பதுமான இந்த மந்திரத்தை ஜபம்செய்ய வேண்டும். வேறு ஸ்தோத்திரங்கள் இதனிலும் புண்யமானதும் மிக சிரேஷ்டமானது மல்ல. இது சத்தியம்" என்றார் இராமதாஸர்.

இராமரக்ஷையின் மகிமையைக் கூறும்

ஐந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## 6-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஒரு நாள் ஜானகிதேவியானவள் வான்மீகி முனிவரைப் பார்த்து ஐயா! இராமசந்திரருடைய சேர்க்கையை அடைவதற்கு யான் அனுஷ்டிக்கவேண்டிய விருதத்தைக் கூறவேண்டும் என்று வினவினாள். முனிவர் பிரான் உடனே ஜானகியைப்பார்த்து ஜானகி! ஒரு விருதமிருக்கின்றது. அந்த விருதத்தைச் சுக்லபட்சம் பிரதமைமுதல் நவமி வரையில் அனுஷ்டிக்கவேண்டும். அதைக் கூறுகிறேன் கேள்.—

சொர்ணத்தால் இரகுநந்தனருடைய பாதுகைகளைச் செய்து பிரதமை திதியன்று ஒன்பது தாமரைப் புஷ்பங்களைக் கொண்டு மந்திரங்களைச் சொல்லிப் பூஜை செய்யவேண்டும். பிறகு உனது குமாரர்கள் குசலவர்கள் முகமாக இந்த ஜன்மகாண்டத்தைச் சிரவணம் செய்யவேண்டும். துவிதியை திதியன்று பதினெட்டுத் தாமரைப் புஷ்பங்களால் பூஜித்துப் பிறகு இந்த ஜன்மகாண்டத்தை இருமுறை கேட்கவேண்டும். ஸ்திரீகளுக்குப் புருஷனைத் தவிர வேறு தெய்வமில்லை. இவ்விதம் ஒவ்வொரு நாளும் முதல் நாள் செய்ததைவிட ஒன்பது தாமரைப் புஷ்பம் அதிகமாக எடுத்துப் பூஜை செய்து ஜன்மகாண்டத்தையும் ஒருமுறை யதிகமாகக்கேட்டுவா; கடைசியில் நவமி திதியன்று எண்பத்தொரு தாமரைப்புஷ்பங்களைக் கொண்டு பூஜித்து ஒன்பதுதடவை ஜன்மகாண்டத்தை குசலவர்கள் முகமாகக் கேள்; பிறகு தசமி திதியன்று ஸ்நானஞ்செய்து எண்பத்தொரு பிராம்மண தம்பதிகளுக்கு வஸ்திராபரணங்களளித்துத் தக்ஷிணைகள் கொடுத்து, அவர்களைவணங்கி பிரார்த்தனைசெய்து கொண்டால், இவ்விருதம் முடிவுபெறும். ஏ வைதேகி! இவ்விருதத்தைச்செய்து ஜன்மகாண்டத்தைக்கேட்டால் நீ சீக்கிரமாக உன்பதியையடைவாய். ஸம்யோகரணம்--(சேர்க்கையுண்டாக்குவது) என்ற பெயருள்ளதும் விசேஷபுண்ணியமுள்ளதுமான இந்த விருதத்தைச் செய்பவர்கள் விட்டுப்பிரிந்தவர்களோடு சேர்வார்கள் என்றார் முனிவர். சீதாதேவி உடனே அவரைப்பார்த்து "முனிவர் பெருமானே!

அயோத்தியில் ராம தீர்த்தத்தில் அனேக தாமரைப்புஷ்பங்களிருக்கின்றன. அதற்குச்செல்ல யார் சக்தியுள்ளவர்? பூந்தோட்டத்தின் கண்ணுள்ள இராமதீர்த்தத்தை இராமதூதர்கள் அவரதுஉத்தரவுப்படி காவற்காக்கிறார்கள் என்றாள். இதைக்கேட்டதும் பிராட்டியாரினருகே நின்ற ஐந்து வயதுள்ள லவன் தன்னுடைய தாயாரைப் பார்த்து, அம்மா தாங்கள் விருதத்திற்கு யத்தினம் செய்யலாம். தவக்கமின்றித் தாமரைப் புஷ்பங்களைக்கொண்டுவருகிறேன் என்று கூறினான். இப்படித்தன் குழந்தை கூறியதைக்கேட்டதும் சீதாதேவி லவனைக்கட்டித்தழுவி முத்தமிட்டு ஏ லவா! அந்த இராமதீர்த்தம் அளவற்ற தூதர்களால் காக்கப்பட்டு வருகின்றது; அங்கு நீ எவ்விதம் பிரவேசித்துப் புஷ்பம் பரித்து வருவாய் என்றாள். லவன் அன்பார்ந்த என் தாயே! நான் தங்களது முலைப்பாலருந்தி வளர்ந்தவனாதலாலும், வான்மீகி முனிவரிடமிருந்து வில்வித்தையைக் கற்றவனாதலாலும் முனிவர்களின் ஆசீர்வாதம் பெற்றிருப்பதாலும் இராமரிடம் எனக்குப் பயமில்லை. எனது பராக்ரமத்தை இப்போது பாருங்கள். தயை செய்து விடைகொடுத் தனுப்புங்களென்று தன் தாயாரையும் வான்மீகி முனிவரையும் பார்த்துக் கேட்டான். பிராட்டியாரும் வான்மீகி முனிவரும் உடனே லவனை ஆசீர்வதித்துப் போய்வரும்படி உத்தரவிட்டார்கள். உடனே லவன் வெகு சந்தோஷத்துடன் நல்ல வஸ்திரமுடுத்து வில் அம்புறாத் தூணி இவைகளுடன் இரதத்தின்மீது தானொருவனாகவே ஏறி, லக்ஷ்மியாகிய சீதாதேவியில்லாத அயோத்திக்கு வந்து கூப்பிடு தூரத்திற்கு முன் தேரை நிறுத்திக் கால்நடையாக தோட்டம் வந்தான். அப்பொழுது நடுப்பகலாயிருந்தமையால், காவலாளிகள் போஜனத்துக்குச் சென்றிருந்தார்கள். லவன் யாதொரு தடையுமின்றி இராமதீர்த்தத்திலிறங்கிப் புஷ்பங்களை பறித்துக்கொண்டு தன் தேரின் மீதேறி ஆசிரமம் வந்து முனிவரையும் தாயாரையும் நமஸ்கரித்து, தாமரைப் புஷ்பங்களைக் கொடுத்தான். பிறகு சீதாபிராட்டி மிகுந்த சந்தோஷத்துடன் விருதமனுஷ்டிக்கத்தொடங்கி, நடத்திவந்தாள். குழந்தையாகிய லவன் இவ்விதம் ஏழுநாள் வரையில், தாமரைப் புஷ்பங்களைப் பறித்துக் கொணர்ந்து

கொடுத்தான். எட்டாவது நாள், வழக்கம்போல் சென்று புஷ்பம் பறித்து இரதத்தில் ஏறப்போகும் தருணத்தில், அவனைக் காவலர்கள் கண்டு, அப்பா நீயார்? இராமபிரானுடைய வேலைக்காரர்களுக்குள் உன்னை நாங்கள் பார்த்ததில்லையே. எப்பொழுது முதற்கொண்டு நீ பிரபுவுக்கு ஊழியஞ்செய்துவருகிறாய்? என்று கேட்டார்கள். இப்படிக்கேட்டதும் லவன், சிரித்து "நான் இராமரைப்பார்த்ததில்லை. நான் வான்மீகிமுனிவரைச் சேர்ந்தவன். அம்முனிவரின் உத்தரவால் தினம் தினம் புஷ்பம் பறித்துக்கொண்டு போகிறேன். இன்றுதான் உங்களைப் பார்த்தேன்" என்றான். உடனே காவலாளிகள், சினமடைந்து, நீ இராமரைப் பார்க்கவுமில்லை; எங்களைக்கேட்கவுமில்லை; இராமபிரானது உத்தரவின்றித் தினந்தோறும் புஷ்பங்களைச் கொண்டுபோகிறாய்; இப்பொழுது நீ போகக்கூடாது; நில்! நீ இராமருக்குக் குற்றஞ்செய்தவன்; பிரபு விடம் உன்னைக்கொண்டு போக வேண்டும் என்றுரைத்து அவனைத்தடுத்தார்கள். தன்னைத் தடுத்த தூதர்களைப்பார்த்து லவன் சிரித்து, நீங்கள் இராமரிடம் சென்று என் நடத்தையைத்தெரிவியுங்கள். அவருக்குப் பராக்கிரமமிருக்குமானால் நிச்சயமாய் என்னிடம் வருவார் என்று தேரின் மீதிருந்தே தெரிவித்தான். இந்தவார்த்தையைக் கேட்ட தூதர்கள், கோபத்துடன் ஏ குழந்தாய்! நீ இறப்பதில் விருப்பங்கொண்டவனாகக் காண்கின்றாய். இல்லாவிடில் இவ்விதம் பிதற்ற மாட்டாய்! இப்போது நாங்கள் உன்னைக்கட்டி இராமபிரானிடம் கொண்டு போவோமென்று தேருக்குச் சமீபம் வந்தார்கள். தன் சமீபம் வந்த இராம தூதர்களைப் பார்த்த லவன், வில்லைக்குணத்தொனி செய்து, நாணேற்றி பாணங்களைப்பூட்டி, "ஏ தூதர்களே! என் சமீபம் வரவேண்டாம்; தூரவே நில்லுங்கள். வருவீர்களேயாகில் இந்த பாணங்களால் உங்களை இராகவன் முன் செல்லும்படி செய்வேன்" என்று சொன்னான். இவ்விதம் சொல்லியும் அந்தத் தூதர்கள் மறுபடியும் தன்னைக்கட்ட அருகில் வரவே; அவர்களை அந்த யாக சாலையிலேயே பாணங்களினால் தள்ளினான். தூதர்கள் லவன் விட்ட பாணத்தினால் அடிபட்டுக் கங்கா நதிக்கரையில் இராமருக்கு முன் மூர்ச்சித்து விழுந்தார்கள். சிலர் லவனைப் பார்த்து பயந்து ஓடினார்கள்.

பிறகு லவன் ஆச்சிரமம் வந்து, புஷ்பங்களைச் சீதையிடம் கொடுத்து நடந்த வரலாற்றைக் கூறினான். அந்தத் தூதர்களும் மூர்ச்சை தெளிந்து நடந்த வரலாற்றை இராமரிடம் தெரிவித்து முறையிட்டார்கள். உடனே இராம சந்திரர் ஆச்சரியப்பட்டுத் தோட்டக்காவலுக்கு ஆயிரம் தூதர்களை யனுப்பினர். பிறகு லவனும் முன்போல் நவமி திதி யன்று அயோத்திக்கு வந்தான். அவனைக் கண்டதும் இராமருடைய காவலாளிகள் ஆயிரம் பேர்களும் யுத்தஞ் செய்ய யத்தினப்படும் பொழுது அவர்களைநோக்கி, "ஏ காவலாளிகளே! உங்கள் எஜமான் எப்பொழுது சீதையைக் காட்டில் விடக் கட்டளையிட்டனரோ அதுமுதல் உங்களிடமிருந்த ஜயலட்சுமிபோய் விட்டாள். ஆகையால் வாய் பேசாமல் இராமரிடம் செல்லுங்கள் ; சீதையைப் பிரிந்ததினால் உங்கள் இராமருக்கும் வீரியம் போய்விட்டது" என்றுரைத்தான். பாணங்கள் போன்ற இப்படிப்பட்ட லவனுடைய வார்த்தைகளால் மருமஸ்தலம் பிளவுபட்டு மிகக் கோபமடைந்து லவன்மீது பாணங்களைப் பொழிந்தார்கள் தூதர்கள். லவன் அதைக் கண்டதும் வில்லைக் குணத்தொனிசெய்து பாணங்களைப் பிரயோகித்து அவர்களை முன்போல் இராமபிரான் முன்னிலையில் விழும்படி செய்தான். பிறகு லவன் தாமரைப்புஷ்பங்களுடன் ஆசிரமம் சென்று நடந்த வரலாற்றைக் கூறினான். குழந்தையின் சௌரியங்களைக்கேட்ட ஜானகி சந்தோஷ மடைந்தாள். இராம தூதர்கள் பிறகு மூர்ச்சை தெளிந்து லவனுடைய பாணங்களால் அடிபட்டு நொந்த சரீரத்துடன் இராமபிரானைப்பார்த்து, "பிரபுவே! ஒரு அபூர்வமான வேடிக்கை,இதனைக் கவனமாய்க் கேளுங்கள்; ஐந்து வயதுள்ள சிறுவனால் நாங்கள் இப்போது மிகுந்த அவமான மடைந்தோம். அவன் வான்மீகி முனிவரிடம் வில்வித்தை பயின்றவன். இலட்சுமணர் முதலியவர்களாலும் ஜயிக்கத்தக்க ஆண்மையுள்ளவன். தாங்கள் சீதையைக் காட்டில் விட்டது முதலிய வசனங்களைக்கூறி நம்மைத் தூஷிக்கிறான். ஆகையால் அவனைக் கொல்வதற்கு இப்போதே தாங்கள் உபாயந் தேடவேண்டும்" என்று முறையிட்டார்கள். தூதர்கள் சொல்லைக் கேட்டதும் இராமர் மந்திரிகளுடன் ஆலோசனை செய்து, வான்

மீகி முனிவருக்குத் தூதனை அனுப்பினர். தூதன் ஆச்ரமம் சென்று முனிவரைப் பணிந்து, "முனிவரே! நான் இராமபிரானுடைய தூதன். இராமர் தாம் செய்யும் யாகத்திற்குத் தங்களை யழைக்க மறந்து போனதைப்பற்றி மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டார். உங்களுடைய சிடர்களில் மிகவும் குரூரனான ஒருவன் இராமபிரானுக்குக் குற்றம் செய்திருக்கிறான். அந்தச்சிடனை இராமபிரானிடம் இப்பொழுது அனுப்பவேண்டும்; அல்லது நீர் அவனை யழைத்துக் கொண்டு வரவேண்டும்; இவைகளே இராமபிரான் தங்களிடம் தெரிவிக்கும்படி கூறியவை" என்றான். முனிவர், "அப்பா! நான் எனது இரண்டு சிடர்களுடனும் யாகத்திற்கு வருகின்றேன். நீ முந்திச் செல்" என்றுகட்டளையிட்டார். தூதன் உடனே அங்கிருந்துதிரும்பி இராமரிடம் வந்து அவரை நமஸ்கரித்து சங்கதி தெரிவித்தான். உலக விவகாரப்படி அநுஷ்டானஞ்செய்து வரும் இராமர் இவ்விதம் நடக்கப்போகிறதென்று தெரிந்தே, சிடர்களுடன் வான்மீகி முனிவரை யாகத்திற்கு முந்தியே யழைக்கவில்லை. சீதாதேவிக்கும் அவ்விருதம் முடிவாயிற்று.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

பரம குருவே! இந்த விதிப்படி செய்யச்சக்தியற்றவர்கள் இவ்விருதத்தை எவ்விதம் செய்வது? தயை செய்து கூறவேண்டும்.

இராமதாஸர் கூறுகிறார்.

சுவர்ணம், அல்லது வெள்ளி இல்லையாயின் தாம்பிரம் முதலிய லோகங்களில் எதினாலாவது சக்திக்குத் தக்கபடி இராமருடைய பாதுகையைச்செய்து, தாமரைப் புஷ்பங்களில்லாவிடில், மற்ற எந்தப் புஷ்பத்தைக் கொண்டாவது, பாதுகைகளைப் பூஜித்து, முற்கூறிய எண்பத்தொரு தம்பதிகளைப் பூஜிக்கச் சக்தியில்லாவிடில், ஒன்பது தம்பதிகளையாயினும் பூஜை செய்யவேண்டும். அதற்குச்சக்தியில்லையாயின், ஒன்பதுக்குக்குறைந்த எவ்வளவு தம்பதிகளைப் பூஜை செய்ய முடியுமோ அவ்வளவு தம்பதிகளைப் பூஜித்து, தன் கைப்பொருளைச்செலவுசெய்ய மனமில்லாதவராயிராமல்

சக்திக்குத் தக்கபடி அந்த விருதத்தைச் செய்தால் வெகு தூரத்திலிருக்கும் பந்துக்களுடன் சேர்க்கையுண்டாவது மன்றி கோரிய காரியங்கள் விரைவாகவும் சிலாக்கியமாகவும் பூர்த்தியாகும் இது நிச்சயம்'' என்று கூறினர்.

பந்துக்களின் சேர்க்கை யுண்டாக்கும் விரதத்தைக் கூறும்.

6-வது சருக்கம்

முற்றிற்று.

## 7-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஏ விஷ்ணுதாஸ! பிறகு தரும சிந்தனையுள்ள இராமபிரான் தாம் செய்ய யத்தனித்த நூறுவது அசுவமேத யாகத்தில் வழக்கம் போல் பூப்பிரதக்ஷிணம் செய்யக் குதிரையை யனுப்பி, அதற்குப் பின் சத்ருக்னனை இரக்ஷணையின் பொருட்டு அனுப்பினார்.

அந்தக் குதிரையானது தெற்கு மேற்கு வடக்கு, கிழக்கு இத்திக்குகளில் சஞ்சரித்து விட்டு யாகசாலைக்குத் திரும்பிற்று. சத்ருக்னன் அநேக அரசர்களிடம் மிகுந்த திரவியத்தை ஸம்மானமாகப் பெற்று அவ்வரசர்களுடனும் பதினாயிரக்கணக்கான இரத கஜதுரகபதாதிகளுடனும் குதிரைக்குப் பின்வந்தான். யாகத்திற்கோ இராஜ ரிஷிகள், பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் எல்லோரும் வந்து கொண்டிருந்தார்கள். வான்மீகி முனிவரும் சீதையுடனும், இராமாயண கானம் செய்யும் குசலவர்களுடனும் வந்தார். அரசர் கூட்டங்களில் யாவரும், பல்லக்கில் வரும் சீதையை இன்னாரென்று கவனிக்கவில்லை. சீதை வருவதை அவர்களறியார்கள். இவ்விதம் முனிவர் வந்து யாகசாலைக்கு இரண்டு கூப்பிடு தூரத்திற்கப்பால், பர்ணசாலை ஏற்படுத்திக் கொண்டு அங்கு சீதையை வைத்து யாருமறியாவண்ணம் பாதுகாத்துக்கொண்டு குசலவர்களுடனிருந்து வந்தார். ஜனகமகாராஜனும் சுமேதையுடன் யாகத்திற்கு வந்து அரசர்கள் தங்குமிடத்தில் தங்கினார். பிறகு வான்மீகி முனிவர் அநேகஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டும் ஜடை, மரவுரி, மான்தோல், இவைகளை தரித்துக்கொண்டுமிருக்கிற அதிபுத்திசாலிகளான சீதையின்குமாரர்களை பார்த்து, "குழந்தைகளே; நீவிரிருவரும் தெருக்களில் இராமாயணத்தை கானம் செய்துகொண்டு போகும்போது இராமர் கேட்க விரும்பினால் ஜன்மகாண்டம் வரையில் கானம் செய்யுங்கள். மற்ற காண்டங்களை நான் சொன்னபிறகு கானம் செய்யலாம். ஏதாவது திரவியம் முதலியவைகளை இராமர் உங்களுக்குக்கொடுத்தால், நீங்

கள் வாங்கவேண்டாம்'' என்று ஆக்ஞாபித்தார். அவ்விருவரும் முனிவர் தங்களுக்குமுன் உபதேசித்தபடியே கானம் செய்து சஞ்சரித்து வந்தார்கள். அபூர்வமான விருத்தம், சுலோகம், பாட்டு முதலியவைகளோடு தாம் முன்னடத்தியசரித்திரத்தைச் செவியிற்கேட்ட இராமர் சந்தோஷத்துடன் யாக காரியங்கள் நடக்கும்போது மத்தியில் முனிவர்கள், அரசர்கள், பட்டணத்திலுள்ளவர்கள், புத்திமான்கள், பௌராணிகர்கள், சாஸ்திரம் படித்தவர்கள், கணக்கர்கள், வைத்தியர்கள், அநேக வித்தைகளில் பயிர்ச்சி பெற்றவர்கள், பெரியோர்களாகிய பிராமணர்கள் இவர்களைப் பூஜித்து அவ்விதம் கானம் செய்கிறவர்களை யாகசாலைக்கு வரவழைத்தார். அந்த சமயத்தில் அரசர்கள் பிராமணர்கள் எல்லாரும் வெகு ஆனந்தத்துடன் இராமரையும் அந்த குழந்தைகளையும் இமை கொட்டாமல் பார்த்து ஆச்சரியப்பட்டு ஒருவருக்கொருவர், இவ்விருவரும் இராமருக்கு ஒப்பாக விளங்குகிறார்களல்லவா? இராமதேகமாகிய பிம்பத்திலிருந்து உண்டான பிம்பங்கள் போல் காணப்படுகின்றார்களன்றோ? இவ்விருவரும் ஜடைமரவுரி மாந்தோல் இவைகளில்லாவிடில் இராமருக்கும் இவர்களுக்கும் விசேஷம் ஒன்றுமில்லையென்றேகூறவேண்டுமல்லவா என்று பேசிக்கொண்டிருந்தார்கள். இச்சமையம் இராமதூதருள் ஒருவன் லவனுடைய பாணங்களால் தானடைந்த உபத்திரவத்தை நினைத்துக்கொண்டு யாகசாலையிலிருக்கும் இராமரிடம் வந்து லவனை விரலினால் காட்டி இராமசந்திரபிரபுவே! இவனைப்பாருங்கள், இவன்தான் எங்களை பாணங்களாலடித்து தங்களருகில் எங்களைத் தள்ளினதுமன்றி ஸீதையைக் காட்டுக்கனுப்பியது முதலான விஷயங்களைக் கூறி நிந்தித்து, சுவர்ணகாந்தியுள்ள தாமரை புஷ்பங்களைக்கொண்டு போனவன் தங்களுடைய சமீபத்தில் இப்போதுவந்திருக்கிறஇவன் நீங்கள் தண்டனைசெய்வீர்களென்றஞ்சி முன் தான்கொண்டிருந்த வேஷத்தை மாற்றிக்கொண்டு இரதம் வஸ்திரம் ஆபரணம் அம்புறை பாணங்கள் இவைகளின்றி மரவுரி முதலியவைகளைத் தரித்துக்கொண்டு ஏழைபோல் காணப்படுகிறான். இப்போது தாங்கள் அவனைத் தண்டனை செய்ய வேண்டும்'' என்றான். இதைக்கேட்ட இராமர் அன்புடன் அமிர்த

பிரவாகத்தில் மூழ்கிய கண்களால் குழந்தைகளைப்பார்த்தார். பாலர்களாகிய குசலவர்கள் சபையிலுள்ள பெரியோர்களைக் கிரமப்படி வணங்கிப் பிறகு இராமரையும் தங்கள் சிறிய தகப்பன்மார்களையும் வசிஷ்ட முனிவரையும் நமஸ்கரித்து திவ்யவீணைகளை மீட்டிக்கொண்டு கானம் செய்யுமிடம் சென்று கந்தர்வர்கள்போல் அழகாகப் பாடுவதற்கு யத்தினம் செய்தார்கள்.

இராமசந்திரர் அவர்களுடைய கானத்தின் முகமாகத் தாம் முன்பு சீதையோடு நடத்திபவிஷயங்களை விலாஸகாண்டம் வரையில் கேட்டார். பிறகு பகற்பொழுதானதும் அக்குழந்தைகளை இராமபிரான் மலர்ந்த முகத்துடன் பார்த்து இன்று நேரமாயிற்று. நாளைக்காலை எனதருகில்வந்து பாக்கிக்கதைகளையும் கானம் செய்யுங்களென்று உத்தரவிட்டார். குசலவர்கள் அப்படியே செய்கிறோமென்று ஒப்புக்கொண்டார்கள். பிறகு இராமர் அவனைப்பார்த்து "லவா! நீ எனக்குக் குற்றஞ்செய்திருக்கிறாய்; ஆயினும் நீ இப்பொழுது பாடிய உன் கானத்தின் மூலமாக என் கதையைக் கேட்டு சந்தோஷமடைந்தேன். ஆகையால் உன் குற்றம் மன்னிக்கப்பட்டது. நீ எங்கும் பயமில்லாமல் சஞ்சரிக்கலாம்" என்றார். லவன் உடனே இராமமூர்த்தியைப் பார்த்து "இராமசந்திர பிரபுவே தங்களைப் பார்க்கவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு தங்களுக்குக் குற்றமிழைத்தேன். நான் எண்ணியபடியே இப்பொழுது உங்களைப் பார்த்தேன். அதனால் எனக்கு இப்பொழுது பராக்ரமம் உண்டாயிருக்கிறது. தங்களுக்கு முன்பு கானஞ்செய்ததன் நிமித்தம் கீர்த்தியும் ஏற்பட்டது" என்று கூறி, மௌனமாயிருந்தான். பிறகு குசன் லவன் இவ்விருவரும் முனிவரிடம் செல்ல விருப்பங்கொண்டு புறப்பட்டார்கள். அதையறிந்த இராமபிரான் பரதனைக்கொண்டு அவர்களுக்குப் பதினாயிரம்பவுன் கொடுக்கும்படி ஆக்ஞாபித்தார். அச்சிறுவரிருவரும் பரதாழ்வார் கொடுத்த பொருளை வாங்காமல் "அரசனே! நாங்கள் காட்டிலுள்ள காய்,கனி,கிழங்கு முதலியவைகளைப் புசிக்கிறவர்கள். எங்களுக்கு இப்பொருளால் பிரயோசனம் யாது? தாங்கள் எப்போதும் எங்களைக் கருணையுடன் பாதுகாக்க வேண்டும்" என்று தெரிவித்து விட்டு வான்மீகி முனிவரிடம் வந்தார்கள். இராமபிரான் தமது சரிதரத்தைக் கேட்டதனால் மிக

வும் மகிழ்ந்தார். குசன் தன் தாயாரிடம் நடந்த சங்கதிகளைத் தெரிவித்துவிட்டு கங்காநதிக்கு ஸ்நானம் செய்யச் சென்றான். லவன் அநேக முனிபாலர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தான்.

அப்பொழுது அங்கு யாகக் குதிரையைக் கண்டு தன் விளையாட்டை நிறுத்தி விட்டு குதிரையைப் பிடித்து ஆசிரமத்திற் கருகாமையில் ஓர் மரத்திற் கட்டிவிட்டு மறுபடியும் முனி பாலர்களோடு விளையாடினான். பிறகு ஆகாயமார்க்கத்தில் புஷ்பக விமானம் வந்தது. அந்த விமானத்தில் வரும் சத்ருக்னன் குதிரை கட்டியிருப்பதைப் பார்த்து நகைத்து தன் தூதர்களைப் பார்த்து "குதிரையை அவிழ்த்து விடுங்கள்" என்று உத்தரவுகொடுத்தான். அவர்கள் குதிரையை அவிழ்த்து விட வருகையில் லவன் கண்டு உடனே ஓர் வில்லையெடுத்து வாயு தேவதையின் மந்திரத்தை ஜபித்து பாலர்களுடன் விளையாடிக்கொண்டே பிரயோகஞ் செய்தான். அக்கணமே யுண்டான சுழல்காற்றால் ரதகஜதுரகபதாதிகள் நிறைந்திருந்த அந்த புஷ்பகவிமானமானது ஆகாயத்தில்வண்டு போல் சுழன்றது. இந்தச்சங்கதியை இராமசந்திரர் கேட்டு விரைவாக சுக்ரீவன் அங்கதன் நீலன் மைந்தன் ஜாம்பவான் நளன் சுமந்திரன் பரதன் ஹனுமான் கருடன் விபீஷணன் சுஷேணன் இவர்களையும் இவர்களுக்குரிய சேனைகளையும் திவிதன் ததிவக்தன் மகரதுவஜன் இவர்களையும் மற்றுமுள்ள வானரர்களையும் அனுப்பினார். அந்தவீரர்கள் கருவத்தினால் வெகு விரைவாக வந்து லவனை எதிர்த்தார்கள். அப்போது லவன் அவர்களைப்பார்த்துக் குதிரையை அவிழ்த்துவிட ஏற்கனவே வந்து அவமானப்பட்ட தூதனுடைய கையிலிருந்து நழுவிப் பூமியில் விழுந்திருந்த வில்லையும் அம்புறாத்தூணியையும் எடுத்துக்கொண்டு வேகமாக யுத்தம் செய்ய வந்து வில்லோசை செய்து மனதில் ஆலோசித்தான்.

இப்போது யுத்த பூமியில் என்னோடு யுத்தம் செய்ய எனது சிறிய தகப்பன் முதலியவர்கள் வந்து நிற்கின்றார்கள். நான் இவர்களோடு எப்படி யுத்தம் செய்வேன். எப்படி இவர்கள் தேகத்தில் கடுமையான பாணங்களைப் போடுவேன், தங்களைச் சேர்ந்தவர்களைக்

கொன்றால், சீதை வான்மீகி முனிவர் ஸ்ரீராகவர் இவர்கள் எப்படிப் பொறுப்பார்கள். நான் இப்போது செய்யவேண்டியது என்ன? யுத்தத்தை நிறுத்தித் திரும்பி முனிவரிடம் சென்றால் முனிவரிடம் கற்ற வில்வித்தை பிரயோஜனமற்றதாய் விடும். ஆகையினால் யாரையும் கொல்லாமல் யுத்தம் செய்கிறேனென்று நிச்சயம் செய்து கொண்டு மேகம் போல் சப்தித்து எதிரிகளை நோக்கி "எதற்காக நீங்கள் விரைவாக என்னிடம் வருகின்றீர்கள்? கூறுங்கள்; நான் உங்களால் உபத்திரவத்தை யடைவதற்குச் சீதையல்ல, வ துஷ்டர்களே! என்னை சீதையின் துக்கமாகிற நெருப்பை அவிக்கும் மேகமெனக் கருதுங்கள்; சீதாதேவியின் உண்மையான பெருமூச்சாகிற கடுமையான தீயின் ஜ்வாலைகளால் உங்கள் வீரியம் பொசுங்கிப் போய்விட்டது. ஆகையால் நீங்கள் அடையவேண்டிய உலகத்தை உங்களுக்குக் காட்டுகிறேன்" என்றுலவன் கூறினான். இந்தச் சொற்கள் அவர்களுடைய மார்பில் பாணங்கள் போற்பாய்ந்தது. மறுபடியும் ஓர் மோகனாஸ்திரப் பிரயோகஞ்செய்து எல்லோரையும் மயங்கும்படி செய்துவிட்டு சுமந்திரன், பரதன் இவ்விருவர்களையுந் தன் கட்கங்களிலிடுக்கிக்கொண்டு இருகைகளிலும் அனுமாரையும் சுக்ரீவனையும் எடுத்துக்கொண்டு பர்ணசாலை வந்து அவர்களைச் சீதைக்குக் காட்டினான். சீதாபிராட்டி தன் பிள்ளையின் மோகனாஸ்திரத்தினால் மயங்கிய சூரர்களைப் பார்த்து அவர்களை விடுதலை செய்து யாருமறியாமல் இரக்ஷணை செய்தாள். இப்படிச் சேனைகள் யாவரும் லவனால் கொண்டு போகப் படுவதைக் கேட்ட இரகுவீரர் இலட்சுமணனைப் பார்த்து "இலட்சுமணா! இராவணனும் இம்மாதிரி நம்மைக் கட்டவில்லையே! இதென்ன விபரீதம்! இதற்கென்ன செய்வது" என்று கேட்டார். இலட்சுமணர் "அண்ணா! கவலை வேண்டாம் நான் ஒரு க்ஷணப்பொழுதில் அந்த பாலகனைத் தங்களிடத்தில் கொண்டுவந்து சேர்க்கிறேன்" என்று கூறி, அவரை வணங்கி, சேனைகளுடன் தேரின்மீதேறி, வான்மீகி முனிவர் இருக்குமிடம் வந்தார். லவன் இலட்சுமணர் வரவை யறிந்து, அவர் முன்னிலையில் தைரியமாய் நின்றான். இலட்சுமணர் சுந்தரரூபமுள்ள அக்குழந்தையைப் பார்த்து, கருணை கூர்ந்து இப்பொழுது என் முன்னிலையில் சாகஸம்

செய்யாதே. ஏ குழந்தாய்! நீ என் எதிரில் நிற்பதற்கும் சக்தியில்லாதவன்; போய்விடு; இல்லாவிடில் பிராணனை இழப்பாய்; உன்னிடம் பாக்கியான இராமாயண கதையைக் கேட்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் நான் கொல்லவில்லை; ஏ பால! நீ அடிக்கடி இராமருக்குக் குற்றஞ்செய்கிறாய். நீ அவ்விதக் குற்றஞ்செய்தாலும் நான் உன்னைக் கொல்லவில்லை. நீ பிராணனுடன் இருக்கப் பிரியங்கொண்டால், நீ கொண்டு போன தூதர்களையும் குதிரையையும் விட்டுவிட்டு இராமசந்திர பிரபுவைச் சரணமடைவாய்'' என்றார். இவ்விதம் இலட்சுமணர் கூறிய வசனங்களைக் கேட்ட லவன் பயப்படாமல், ''இலட்சுமணா! உன்னையும் இராமரையும் சீதையைக் காட்டுக்கு விரட்டிய வீரர்களென்று யானறிவேன். உங்கள் வீரம் சீதையினிடந்தான் செல்லும். லவனாகிய என்னிடம் பலியாது. சீதையின் துக்கத்தைப் போக்குவதற்காக வான்மீகி முனிவர் என்னை யுண்டு பண்ணியிருக்கிறார். இப்பொழுது உங்களை வென்று சீதையின் துக்கத்தை யொழிக்கின்றேன். பதிவிருதையான சீதையை வீணாகக் காட்டில் விரட்டியதற்குப் பிரதி செய்யவே நான் வந்திருக்கின்றேன். எற்கனவே சீதையின் துக்கமாகிய தீயினால் உங்கள் சௌரியம் எரிந்து போயிருக்கிறது. என் முன்னிலையில் நீங்கள் நில்லாதேயுங்கள் செல்லுங்கள்'' என்று வீரவாதம் பேசினான். இப்படிப்பட்ட சொற்களாகிய பாணமானது இலட்சுமணர் மார்பைப் பிளந்தது. உடனே இலட்சுமணர் சினமடைந்து ஆயுதங்களாலும் பாணங்களாலும் லவனை அடித்தார். உடனே லவன் தன்னுடைய பாணங்களால் அவர் பாணங்களைத் தொலைத்து இராமருடைய மந்திரிகளைப் பாணங்களால் அடித்து யாக சாலையில் எறிந்தான். அப்படி விழுந்த அவர்கள் யாவரும் அழுதுகொண்டு இராமரிடஞ்சென்று இராமசந்திர பிரபுவே! லவன் செய்யும் காரியம் அசாத்தியமாகவிருக்கிறது. எங்களை பாணங்களால் எற்றி இங்கு தள்ளிவிட்டான். அவனைக்கொல்ல இந்த க்ஷணம் வேறு உபாயந் தேடவேண்டும். ஆயுதங்களிலாவது பாணங்களிலாவது அவன் சாகமாட்டான். தங்களுக்கு இலட்சுமணரை உயிருடன் பார்க்க இஷ்டமிருக்குமாகில், அவருக்கு உதவி செய்யுங்கள்'' என்று கூறி

லவன் கூறிய சொற்களையும் கூறினார்கள். இராமர் இவ் வாக்கியங் களைக் கேட்டதும் ஓர் க்ஷணம் பேசாமல் ஆலோசனையுட னிருந் தார். இது நிற்க.

லவன் இலட்சுமணரைப் பத்து பாணங்களால் அடித்தான். அந்தப் பத்து பாணங்களும் இலட்சுமணருடைய சரீரத்தில் கணுக் கணுவாய்ப் பாய்ந்து தொந்தரவு செய்தன. பிறகு இலட்சுமணர் கோபமடைந்து, இந்த லவன் பேரில் ஆயுதங்களை பிரயோகித்தால் பிரயோஜனந் தராது என்று நினைத்து, பிர்ம்மாஸ்திரத்தை விடுத்து லவனைக்கட்டிக் குதிரையுடன் லவனையும் இராமபிரானிடம் கொண்டு வந்து "அண்ணா! இதோகுதிரையையும் லவனையும் கொண்டுவந்தே ன்"என்று தெரிவித்தார். லவனும் பிர்ம்மாஸ்திரத்திற்கு மரியாதை தந்து வாய் பேசாமல் இராமரிடம் சென்றான்.

இராமர் லவனைத் தமது புத்திரனென்று அறிவாராயினும் ஜனங்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பதன் பொருட்டு, "இலட்சுமணா! இவனால் பெரிய யுத்தம் செய்யப்பட்டிருக்கிறது. இவனை நான் க்ஷத்திரிய னென்றே கருதுகிறேன். பிர்ம்ம ஹத்தி தோஷம் வருமே யென்று சிறிதும் யோசிக்காமல் இப்போதே இவனைக் கொல்"என்று உத்தரவிட்டார். இதைக் கேட்டதும் இலட் சுமணர் "அண்ணா! இவன் ஆயுதங்களினால் மரணமடையமாட்டான். பரதன் முதலியவர்களாலும் என்னாலும் அடிபட்ட இவனுடைய சரீரத்தில் சிறிதேனும் காய மிருக்கின்றதா பாருங்கள்" என்று கூறினார். இந்த வசனத்தைக்கேட்டு இராமர். "இலட்சுமணா! என் முன்னிலையில் இந்த லவனைப் பார்த்து உனக்கு எந்த உபாயத்தி னால் மரண மென்று கேள்; சூரர்கள் தன் மரணத்தை மறைக்க மாட்டார்கள்; தன் பலத்தினால் உயிரை ஸ்திரப்படுத்திக் கொள் ளும் வீரர்கள் எப்போதும் பொய் சொல்ல மாட்டார்கள்" என்று கூறினார். ஸௌமித்திரியானவர் லவனை உன்னுடைய மரணத் திற்கு உபாயம் யாதென, லவன் தன்னை ஜலத்தினால் நனைத்தால், தன் சரீரம் விருத்தியாகு மென்பதைத் தான் ஏற்கனவே முனிவரி டம் தெரிந்துகொண்டிருப்பதால், இப்பொழுது உலகத்தாருக்குக் காட்டுவதன் பொருட்டு, " ஜலத்தினால் என்னை நனைத்தால் மரண

முண்டாகும்.'' என்று கபடமாகக் கூறினான். இலட்சுமணர்இதைக் கேட்டதும் லவனை ஓர் கல்லில் உட்காரவைத்து, ஜலத்தினால் ஸ்நானம் செய்து வைத்தார். அவ்விதம் ஸ்நானம் செய்து வைத்ததும் லவன் ஒரு கெடுதியையும் அடையாமலிருக்கக்கண்டு, அயோத்தியா பட்டணத்திலிருக்கும் ஸ்திரீ புருஷர்கள் யாவரையும் குடங்களினாலும் தோலினால் செய்த பைகளினாலும் ஜலத்தைக் கோடிக்கணக்கான எருதுகள்,யானைகள்,ஒட்டைகைகள் இவைகளின்மேலேற்றிக் கொண்டு வரும்படி செய்து, அவ்வளவு ஜலத்தையும் அவன்மேலூற்றி ஸ்நானஞ் செய்வித்தார். ஜலங் கொட்டக் கொட்ட லவன், விருத்தியாகி ஏழு பனையளவு உயரமுள்ளவனாகவும் புத்தியிற் சிறந்தவனாகவும் விளங்கினான். இதைக் கண்ட இலட்சுமணர் ஆச்சரியமடைந்து, "லவா! நீ பொய் கூறினாய்; இதுவல்ல உன் மரணத்திற்கு உபாயம். நீ விருத்தி யடைவதன் உபாயமே யாகும்''என்றார். லவன், "இலட்சுமணா! ஓர் விளக்கானது எண்ணெய்யில்லாமல் அணையும்போது பிரகாச மாவதுபோல், என் ஆயுள்முடியும் இச்சமையம் என் தேகமும் பலமும் விருத்தியாகின்றன''என்றுகபடமாகப்பதிற் கூறினான். இவ்விதங் கூறிய லவன் சொல்லை யுண்மையென நம்பி, முன்போலவே கங்கா நதியிலிருந்து ஜலத்தை வரவழைத்து, கட்டைகளாற் செய்யப்பட்ட கோமுகம் முதலியவைகளின் வழியே அநேக ஜனங்களைக்கொண்டு அபிஷேகஞ் செய்வித்தார். பிறகு லவன் பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டுக் கைகளைக்கொட்டி, குழந்தை விளையாட்டாகத் துடைகளைத் தட்டினான்.

இப்பொழுது அங்கிருந்த ஜனங்கள் யாவரும் குடங்களை யெறிந்துவிட்டு, மல ஜலங் கழித்துக்கொண்டு கௌபீனம் அவிழ்ந்தது கூடத் தெரியாமல் லவனைப் பார்த்துக்கொண்டே ஓடினார்கள். இச்சமயத்தில் கங்கையில் முனிவர் குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருந்த குசன், அடிக்கடி கூட்டங்கூட்டமாக வந்து ஜலங் கொண்டுபோகும் ஜனங்களைப் பார்த்து, நீங்கள் அடிக்கடி ஏன் ஜலமெடுக்கின்றீர்கள் என்று வினவ, "லவன் தனக்கு ஜலத்தால் மரணமென்று சொன்னதை நம்பி நாங்கள் அவனைக் கொல்வதற்கு

ஜலமெடுத்துச் செல்கின்றோம்" என்று சொன்னார்கள். குசன் அவ் வசனத்தைக் கேட்டதும் பரப்பரப்புடன் ஆசிரமம் வந்து, பெரிய வில்லை யெடுத்து குணத்தொனி செய்து லவனை விடுவிப்பதற்கு யாக சாலைப் பக்கம் வந்தான். லவன் குசனுடைய வில்லோசையைக் கேட்டதும் யுத்தம் செய்யாமலிருந்தான். யுத்த கோலத்துடன்வந்த குசனைப்பார்த்த இலட்சுமணர் அவனோடு யுத்தம் செய்ய வந்தார்.

குசன் இலட்சுமணரைப் பார்த்து, "இலட்சுமணா! நீயும் இராம னும் மற்றவர்களும் சேர்ந்து சீதையையும் லவனையும் ஜயிக்க முடியுமே தவிர வேறு யாது காரியம் செய்ய வல்லீர்கள்? என்னை லவனைப்போ லெண்ண வேண்டாம். உங்கள் சௌரியம் ஸ்திரீயி னிடத்திலும் குழந்தையிடத்திலும் தான் செல்லும்; இதையா னறிவேன். சீதையினுடைய துக்கமாகிற நெருப்பினால், கரிந்து போன உங்கள் பலமானது என் முன்பு சோபிக்காது. வீண் பரி காசமாகவே முடியும். வான்மீகி முனிவரிடம் கற்ற வித்தையை உனக்கும் இராமருக்கும் காட்டுகின்றேன்"என்று வீரவாதம் பேசி சிறிய தகப்பனோடுயுத்தம் செய்தான். இலட்சுமணருடைய பாணங் களானது ஜானகியின் குமாரனாகிய குசனிடம் பிரயோசன மற் றவைகளாகப் போயின. குசன் சிறிய தகப்பனையினும் யுத்தத்தில் கொல்வதுதோஷமல்ல வென்கிற அரச நீதிப்படிப் பயமில்லாமல் ஆதிசேஷரே இலட்சுமணராக அவதரித்திருக்கின்றனர் என்பதை இராமாயண முகமாகத் தெரிந்துகொண்டிருப்பவனாதலால், அவ ரைக் கொல்வதற்குக் கருடாஸ்திரப் பிரயோகஞ் செய்தான். அந் தக் கருடாஸ்திரம் சமீபத்தில் வந்ததும் இலட்சுமணர் மிகவும் பயந்து, சக்தியற்றுத் தேரிலிருந்து பூமியில் விழுந்தார். இவ் விதம் கீழே விழுந்த தம்பியை இராமசந்திரர் பார்த்து யாகத்தில் தீக்ஷையை யடைந்திருந்தாலும், விரைவாக வில்லையும் அம்பை யும் எடுத்துக்கொண்டு யாக குண்டத்திற்கு முன்னின்று இலட்சு மணன் உயிர் பிழைத்தெழுந்திருக்கவேண்டுமென்கிற ஆசையால், பிர்ம்மாஸ்திரத்தை ஜபம் செய்து ஆகாசத்திலிருக்கும் கருடா ஸ்திரத்தின்மேல் குறி வைத்து விடுத்தார். உடனே கருடாஸ்திர மானது அந்தப் பிர்மா ஸ்திரத்தி லொடுங்கி விட்டது.

பிறகு குசன் சர்ப்பாஸ்திரத்தை இராமரிடம் பிரயோகஞ் செய்து, "இராமா! சீதையைப் போல் என்னை நினையாதே! உன்னுடைய புருஷத்தன்மையை இவ்வுலகத்தாருக்குக் காட்ட, வீணில் ஜானகியைக் காட்டுக்கு அனுப்பினையே, அதை யானறிவேன். யுத்தம் செய்ய சக்தியில்லாவிடில் வான்மீகி முனிவரையும் சீதையையும் சரணமடைவாய்" என்று சொன்னான்.

குசனுடைய வாக்கியங்களாகிய பாணங்களால் அடிபட்டு மர்மஸ்தலம் பேதித்துத் தத்தளித்த இராமர் தம்மை நோக்கி வரும் குசனுடைய ஸர்ப்பாஸ்திரத்தைப் பார்த்து, பூனையின் அஸ்திரத்தை பிரயோகித்தார். அதனால் ஸர்ப்பாஸ்திரம் தலை காட்டாமலொழிந்தது. பிறகு குசன் ஸ்ரீராமர்மேல் நாய் அஸ்திரத்தை விட இராமர் அதை உலக்கை அஸ்திரத்தினால் தடுத்தார். பின் குசன், அக்கினியின் அஸ்திரத்தை இராமரிடம் விடுத்தான். இராமர், மேகாஸ்திரத்தால் அதைத் தடுத்தார். சீதையின் வயிற்றிற் பிறந்த குசன், வாயுவாஸ்திரத்தை இராமரிடம்விட இராமர் அதைப் பர்வதாஸ்திரத்தினால் தடுத்தார். பிறகு ஜானகி நந்தனன் பிரம்மாஸ்திரம் விடுத்தான். அப்போது யாகசாலையில், ஆ! ஆ!! என்ற சப்தமுண்டாயிற்று. அதை இரகு சிரேஷ்டர், நாராயணாஸ்திரத்தினால் தடுத்தார். பிறகு இராமரை, குசன், நாராசபாணங்களாலும், இராமர், குசனை அனேகபாணங்களாலும் இப்படி ஓர் யாமம்வரையிலும் அடித்துக்கொண்டு கடுமையான யுத்தம் செய்தார்கள். இராமர் விடும்பாணங்கள் குசனுடைய சிரசுக்கு மேற் சென்று பூமியில் விழுகின்றன. குசன் விடும்பாணங்கள், ஸ்ரீராமருடைய, பாதங்களுக்குச் சமீபத்தில் விழுகின்றன. இந்த வேடிக்கையைப் பார்த்த இராமர், ஆச்சரியப்பட்டு, மந்திரியை வரவழைத்து, ஏ மந்திரியே! நீ வான்மீகி முனிவரிடம் சென்று, அவரை நமஸ்கரித்து உம்முடைய சீடர்களாகிய இவ்விருவர்களும், யார், என்று கேட்டுவா! சிக்கிரம் செல், பிறகு இவர்களை நான் ஸம்ஹாரம் செய்யப்போகிறேன் என்று உத்திரவு செய்தார்.



லக்ஷ்மணர் சீதையை வனத்தில் விட்டுச்செல்லுதல். வான்மீகி மகாரிஷி சீதையை ஆசிரமத்துக்கு அழைத்தேகுதல். பார்வாஸர் வான்மீகி.

உடனே மந்த்ரி ரதத்திலேறி குசலவர்களுக்கு இரண்டு கூப்பிடு தூரத்திற்கு அப்பாலுள்ள வழியாக ஆச்ரமம் சென்று, முனிவரை நமஸ்கரித்து, ஸ்ரீ ராமருத்தரவைத் தெரியப்படுத்தினன். மந்த்ரியின் சொல்லைக்கேட்டு வான்மீகி முனிவர் நாளைய தினம் காலையில் சபையில் ராமாயண கானம் செய்யும்போது குழந்தைகளுடைய வரலாற்றைத் தெரிந்து கொள்ளலாமென்று கூறினர். உடனே மந்த்ரி ராமரிடம் வந்து முனிவர் கூறியதைத் தெரிவித்தான். பின் வான்மீகி முனிவரும் குசலவர்களைத் தம தருகில் அழைத்து அன்புடன் ஆலிங்கனம் செய்து கதைகளைச் சொல்லிக்கொண்டு ராத்திரியில் சுகமாக இருந்தார்.

குசலவர்களின் பராக்ரமத்தைக் கூறும்
7-வது சருக்கம்
முற்றிற்று.

## 8-வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

மறுநாட்காலையில் ராமர் குசலவர்களை அழைத்து வரும்படி தூதனை யனுப்பினார். குசலவர்கள் தூதர்கள் வந்தழைத்ததும் வான்மீகிமுனிவரின் உத்தரவுபெற்று, ராமருடைய சபைக்குச் செல்லத் தீர்மானித்து மாங்கோலுடுத்து, சீதையையும் முனிவரையும் வணங்கி, சபைக்குச்சென்று தந்தையின் முன்னிருந்து ஜன்மகாண்டத்தைக் கானம் செய்தார்கள். ராமசந்திரப் பிரபு தமது சரித்திரத்தைக்கேட்டு பரமாச்சரியமடைந்தார். ஜனங்களும் ஆச்சரியமடைந்தார்கள். யாவரும் குசலவர்களை ஸீதையின் குமாரர்களென்று அறிந்து பரமானந்தங் கொண்டார்கள்.

இச் சமயத்தில் எற்கனவே லவனுடைய பாணங்களால் அடிபட்டுக் கிடந்த சத்ருக்னன் முதலியவர்களும் அங்கதன் முதலிய வானர வீரர்களும் லட்க்ஷ்மணரும் மற்ற அரசர்களும் உபத்திரவமொழிந்து அவரவர்கள் வாகனத்தின் மீதேறிச் சபைக்கு வந்து ஸ்ரீராமரை நமஸ்கரித்து அவர் அருகிலிருந்தார்கள். ஸ்ரீராமர் ஆலோசித்துக் குசலவர்களை அன்புடன் விடை கொடுத்தனுப்பி விட்டு, விபீஷணன் லட்சுமணன் சத்ருக்னன் மகரத்துவஜன் கருடன் சுஷேணன் ஜாம்பவான் இவர்களைப் பார்த்து, இப்பொழுது, தேவருக்குச் சமானராகிய வான்மீகி முனிவரை ஸீதையுடன் அழைத்து வாருங்கள்; கங்காநதியின் தென்கரையில் பெரிய ஒரு சபை ஏற்படுத்துங்கள்; கங்கைக் கரையில் அந்தச் சபையிலிருந்து, ஸீதை என் முன்னால் சபதம் செய்யட்டும்; முனீச்வரர் முதலிய எல்லோரும் ஸீதாதேவி தோஷமற்றவளென் றறியட்டும். அவ்விதமே என்னையும் வான்மீகி முனிவரையும் தோஷமற்றவர்களென்று அறியட்டுமெனக் கூறினார்.

இவ்விதம் ஸ்ரீராமர் கூறியதும் லக்ஷ்மணர் முதலியவர்கள் வான்மீகி முனிவரிடம் வந்து ராமபிரான் திருவாய் மலர்ந்தருளியதைத் தெரிவித்தார்கள். அப்போது வான்மீகி முனிவர் ராமருடைய அபிப்பிராயங்களையெல்லாம் அறிந்து லவன் யுத்த அரங்கத்

தில் தூக்கிக்கொண்டு வந்த சுமந்திரன், பரதன், அனுமான் சுக்ரீவன் இவர்களை அவர்கள் வசம் ஒப்புவித்து, நீங்கள் ஸ்ரீராமரிடம் சென்று, நாளைய தினம் சபையில் ஸீதை சபதம் செய்வாள். ஸ்திரீகளுக்குப் புருஷனே தெய்வம், வேறு தெய்வமில்லை, ஸ்திரீகளுக்கு மூவுலகத்திலும் புருஷனை விட்டால் வேறு கதியில்லையென்பதையுங் கூறுங்கள் என்றார்.

இவ்விதம் முனிவர்சொல்லக்கேட்ட லக்ஷ்மணர் முதலியவர்கள் உடனே ஸ்ரீராமரிடம் வந்து சுமந்தரன் முதலிய நான்கு வீரர்களையும் அவரிடம் ஒப்புவித்து வான்மீகி முனிவர் கூறியதைத் தெரிவித்தார்கள். ஸ்ரீராமச்சந்திரர் முனிவர் சொல்லியனுப்பிய வசனத்தைக்கேட்டு, சந்தோஷமடைந்து சுமந்திரன், பரதன், அனுமான், சுக்ரீவன் இவர்களைக் கட்டியணைத்து அவர்கள் பிழைத்தது மறு ஜன்மமென்றே கருதினர். அந்நால்வரும் ஸீதாராமரை வணங்கி "பிரபுவே! நாங்கள் லவனால் ஜயிக்கப்பட்டு ஸீதையின் திருவருளால் உயிர்பெற்றோம்" என்று நடந்த வரலாற்றை விவரமாய்க் கூறினர்கள்.

மறுநாள் தசரத குமாரர் சபை கூட்டி எல்லோரையும் வரவழைத்து "ஏ முனிவர்களே! அரசர்களே! நீங்கள் யாவரும் ஒரு மனதுடனிருந்து ஸீதை செய்யப்போகும் சபதத்தை நல்லதாயிருந்தாலும் கெடுதலா யிருந்தாலும் கவனியுங்கள்" என்று தெரிவித்தார்.

பிறகு வான்மீகி முனிவர் ஸீதாதேவியை யழைத்துக் கொண்டு யாகசாலைக்குப் புறப்பட்டார். ஸீதை முனிவர்க்குப் பின்னால் தலைகுனிந்து கைகூப்பிக்கொண்டு மெதுவாக நடந்துசென்று யாக சாலைக்குள் பிரவேசித்தாள். இவ்விதம் முனிவர்பிரானுடன் வந்து யாகசாலைக்குள் பிரவேசித்த ஸீதாதேவியைக் கண்ணுற்றவர்கள் இம்மாது விஷ்ணுவின் இதயாரவிந்தத்தில் வசித்துவரும் லக்ஷ்மிதேவியே யென்று கருதிச் சந்தோஷமடைந்து "நின்வரவு நல் வரவாகுக" என்று வாழ்த்தினர்கள். இப்பொழுது ஸீதாதேவியுடன் சபையில் பிரவேசித்த முனிவர் அவ்விடத்திலேயே நின்று ராமரைப் பார்த்து தசரத குமாரராகிய "ஏ ராம! நீ உலக அப

வாதத்திற்குப் பயந்து நல்ல நடத்தையுள்ளவளும் தருமகுண முள்ளவளுமான ஸீதையை யமுனா நதியின் தென் கரையிலுள்ள எனதாச்ரமத்திற்கு அருகே த்யாகம் செய்தாய். இந்த உத்தமி இப்பொழுது உன் முன்னிலையில் சபதம் செய்யப் போகிறாள். அதற்கு இப்போது உத்தரவு தரவேண்டும். ஏ ராமா! இவர்களுள் (குசலவர்களைக் காட்டி) குசன் உனக்குப் பிறந்தவன்.* ஸீதையின் சாபத்திற்குப் பயந்து தருப்பங்களை நறுக்கி அவைகளின் அடிப் பக்கத்தால் யான் இந்த லவனை உண்டுபண்ணினேன். ஆதலாலே தான் இவன் பெயர் லவனென அழைக்கப்பட்டது. இவ்விருவரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாத அதி பராக்ரமசாலிகள். இப்பொழுது யான் கூறியயாவும் உண்மையே; ரகுகுலதிலகனாகிய ப்ரபுவே!யான் பிரசேதஸ்என்பவருக்குப் பத்தாவது புத்திரன். பொய்யைக் கனவிலும் நினையேன். இந்த ஸீதை தோஷமுள்ளவளானால் அநேக வருஷங்களிற் செய்த எனது தவத்தின் பலனை யான் அனுபவியாமல் போகிறேன் என்று கூறி ராமரது வலதுதொடையில் குசனையும் இடதுதொடையில் லவனையும் உட்காரவைத்து, அவர் முன்பு நின்றார்; உலகநாயகராகிய ராமசந்திரப் பிரபு தமது குழந்தைகளை ஆலிங்கனம் செய்துகொண்டு உச்சிமோந்து மிகக் குட்டையாயும் சிறியவனாகவு மிருக்கிற லவனுடைய சிரசில் தமது தாமரை மலர்போன்ற திருக்காதத்தை வைத்து முன் குசனுக்குச் செய்ததுபோல் ஜாதகர்ம முதலியவைகளைச் செய்தார். பிறகு தமக்கு முன் அழகான இருகரங்களையும் கூப்பிக்கொண்டு நிற்கும் ஸீதையைப் பார்த்தும் அறியாதவர்போல் அருகேநிற்கும் லக்ஷ்மணனை யழைத்து, "லக்ஷ்மணா! முன் நீ என்னிடம் கொண்டு வந்து காண்பித்த ஸீதையின்கரமெங்கே? பத்திரமாகப்பாதுகாத்து வைத்திருந்தால் இங்கு இப்பொழுது கொண்டுவா" என்றார். லக்ஷ்மணர் ஆச்சரியமடைந்து 'ஆகா!அவ்விதமே கொண்டு வருகிறேன்' என்று சொல்லி வேகமாகச் சென்று பெட்டியில் வைத்திருந்த ஸீதையின் கையை எடுத்து வந்து ராமர் முன்னே வைத்தார்.

* ஸ்நானத்திற்குச் சென்ற ஸீதை மீண்டும் வந்து வான்மீகரை யறியாமல் குசனை யெடுத்துச் சென்றதின் காரணமாக வான்மீகர் லவனை உண்டுபண்ணிய விஷயம்.

ஐந்து வருஷகாலமாயும் அக்கை மாம்சம் முதலியவைகளோடு சிறிதும் வித்தியாசப்படாமல் ஸீதையின் கையைப்போலவே யிருக்கக் கண்டு யாவரும் பரமாச்சரிய மடைந்தார்கள். இச்சமயத்தில் விசுவகர்மாவால் செய்யப்பட்ட அக்கையானது எல்லாருடைய கண்முன்பும் ஒரு க்ஷணப்பொழுதில் மறைந்தது. இதுவும் அங்கிருப்பவர்களனைவர்க்கும் பரமாச்சரியத்தை விளைத்தது. ராமசந்திரப் பிரபுவும் ஆச்சரியமடைந்து வான்மீக முனிவருக்கு வந்தனமளித்து மகாபுத்திசாலியாகிய முனிவரே! இப்பொழுது தாங்கள் எனக்குக் கூறியவைகள் உண்மையே; தமது வசனங்களால் ஸீதை குற்றமற்றவளென்பதில் எனக்கு நம்பிக்கைதான்; இலங்கையில் தேவர்களுக்கு முன்பு இந்த ஸீதை சபதம் செய்ததன் பேரில் அயோத்திக்கு அழைத்து வந்தேன். அவ்வாறு சபதம் செய்தவளாயினும் தோஷமணுகாத பதிவிரதையாயினும் உலக அபவாதத்திற்குப் பயந்தே த்யாகம் செய்தேன். இதைப்பற்றித் தாங்கள் என்னை மன்னித்தல்வேண்டும். இந்தக் குசன் எனது அம்சமாக ஜனித்தவன் என்பதனையும் இந்த லவனைத் தாங்கள் ஸீதையின் சாபத்திற்குப் பயந்து லவங்களால் உண்டுபண்ணினீர்கள் என்பதையும் யானறிவேன். எது எவ்விதமாயினும் சகல ஜனங்களும் பார்த்து நம்பிக்கை கொள்ளும் சபதத்தை இப்பொழுது உமது முன்னே ஸீதை செய்யட்டும். பிறகு நான் ஒப்புக்கொள்ளுகிறேன்'' என்றார்.

இவ்விதம் கூறி முடிந்ததும் சபையிலுள்ள அனைவரும் சபதத்தைப் பார்க்க வெகு ஆவலுள்ளவர்களாக இருந்தார்கள். உடனே ஸீதாதேவி பட்டு வஸ்திரமுடுத்து வடக்கு முகமாக நின்று தலையைக் குனிந்துகொண்டு ''யான் ராமசந்திரப் பிரபுவைத் தவிர வேறு புருஷனை மனதிற் கருதாதிருப்பது உண்மையாயின் இந்தப் பூமிதேவி எனக்கு இடங்கொடுக்க வெடிக்கட்டும்'' என்றாள். இவ்விதம் சபதம் செய்த ஸீதாதேவியின் முன்பு ஆச்சரியப்படத்தக்கதும் சிலாகிக்கத்தக்கதும் சூரியனைப்போல் பிரகாசிப்பதுமான ஸிம்மாசனமொன்று பூமியிலிருந்து தோன்றியது. அதைத் தேவசரீரம் பெற்ற ஸர்ப்பராஜர்கள் சுமந்து கொண்டிருந்தார்கள். பின் பூமிதேவியானவள் தன் பெண்ணாகிய ஸீதைக்கு நல்வரவு கூறித்

தன் கைகளால் ஆலிங்கனம் செய்துகொண்டு ஆசனத்தமர்த்தி வஸ்திரம் புஷ்பம் சந்தனம் அவைகளால் அலங்கரித்து அன்புடன் சாமரம் விசினள். இப்பொழுது ஸிம்மாசனமானது மெள்ளப் பூமிக்குள் மறைந்தது. ஸிம்மாசனமேறி ஸீதை பாதாள உலகம் செல்லும்போது ஆகாசமார்க்கத்திலிருந்த தேவர்கள் எல்லோரும் மலர்மாரி பொழிந்தார்கள். நன்று! நன்று!! என்று கூறி மகிழ்ந்தார்கள். விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலுமுள்ள யாவரும் நடுங்கினர்கள். அசையாப் பொருள்களும் நடுக்கமுற்றன; சில வானரர்களும் மானிடர்களும் அநேகவிதமாகப் பேசிக்கொண்டார்கள். சிலர் கவலையுடனும் சிலர் ஆசையுடனுமிருந்தார்கள். சிலர் ராமபிரானைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பாதாள உலகம் செல்லும் ஸீதையைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களனைவரும் மோகமடைந்து சிறிதுநேரம் தங்கள் அறிவை யிழந்து வாய் பேசாமலிருந்தார்கள். பின் ராமர் ஸீதையினிடம் பரபரப்புடன் வந்து தமது இடது கரத்தால் ஸீதையின் கையைப் பிடித்துக் கொண்டு பூமிதேவியைப் பார்த்து பிரார்த்தனை செய்கிருர்.

ஏ தேவி! நீ மானிடர்களுக்குரிய இருப்பிடம்; எல்லோருக்கும் தாய்; நீ பிரளய ஜலத்துக்குமேல் சதாகாலமும் பரிசுத்த உருவத்துடனிருந்து எல்லாருக்கும் உத்தமமான பதார்த்தங்களை அளித்து வருகிருய். உலகங்களுக்குத் திருப்தியைத் தரும் ஓஷதிகளை நீ உன் வயிற்றில் உண்டுபண்ணித் தருகின்ருய். துர்க்கையும் விஷ்ணுவாகிய எனக்குப் பத்தினியான லக்ஷ்மியும் நீயே. ஸரஸ்வதியும் நீயே. இப்பொழுது இவ்வவதாரத்தில் என்னுல் சிருஷ்டிக்கப்பட்ட எனது சக்தியும் நீயேயாகிருய். உன்னிடமிருந்து சகல ஜனங்களும் சொர்ணம் முதலியவைகளை அடைகிருர்கள். இன்சொல்லினும் கடுஞ்சொல்லினும் நீயே பெருமை வாய்ந்தவள். ஜனகன் பெண்ணுகிய இந்த ஸீதை எனக்குப் பெண்ணுகிருள். இப்பொழுது உனக்கு நீ மாமி, முன்பு நீ கன்னிகையை எனக்குத் தானமளித்தமையால் இப்பொழுதும் எனக்கு கன்னிகையைத் தானம் கொடுத்து அநுக்கிரகம் புரியவேண்டும்; இல்லையேல் உன்பால் மிகக் கோபமுண்டாகும்'' என்று கூறினர்.

ராமதாஸர் கூறுகிறார்.

அதி பராக்ரமசாலியாகிய ராமபிரான் இவ்விதம் பிரார்த்தித்தும் ஸ்திரீகளுடைய மனம் கடினம் என்பதற்கேற்ப அவரது திருவாய் மொழிக்குச் செவிகொடாமல் மெள்ள மெள்ள ஸீதையுடன் பாதாளம் நோக்கிச்செல்லும்போது பூமிதேவியைப் பார்த்துச் சினமடைந்து லக்ஷ்மணனை யழைத்து வில்லை எடுத்துவா, சக்திபோன்ற பாணத்தால் இந்தப் பூமிதேவியைத் தண்டிக்கிறேன். அப்போது தான் இவள் ஸீதையை நம்மிடம் கொடுப்பாள். இப்பூமிதேவியைக் கொல்ல எனக்கு இஷ்டமில்லை'' என்று கூறினார். உடனே லட்சுமணர் வில்லைக் கொணர்ந்து ராமரிடம் கொடுத்தார். ராமபிரான் அதனைப் பெற்று நாண் கயிற்றை இழுத்துக் கட்டி அதில் பாணத்தைப் பொருத்தினர். அப்பொழுது பெருங் காற்றுண்டாயிற்று. கடலுங் கலங்கா நின்றது. ஆகாயத்தின் கண்ணிருந்த நக்ஷத்திரங்கள் பூமியில் உதிர்ந்தன. திக்குகளெங்கும் தூளிபடலமாயிற்று. பூமிதேவியும் நடுங்கி "ராமசந்திரப்பிரபுவே! அடியேனை ஆதரிக்கவேண்டும்'' எனப்பகர்ந்து ஸீதையுடன் வெளியே வந்து ராமரது மடிமிசை ஸீதையை உட்காரவைத்தாள்; தானும் ராமபிரான் திவ்யசரணாரவிந்தங்களில் சிரத்தைப்பொருத்தி வணங்கினாள். இப்பொழுது தேவர்கள் யாவரும் களிப்படைந்து ஸீதா ராமர்கள்மீது புஷ்பமாரி பொழிந்தார்கள். துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. பிறகு ராமபிரான் தமது சரணங்களிற் சிரம் வைத்து வணங்காநின்ற பூமிதேவியைப் பார்த்துகோபத்தை யடக்கிக்கொண்டு பாணத்தையும் வில்லையும் அருகே வைத்துவிட்டு, தமதுகரத்தால் அத்தேவியை எழுப்பினர். பூதேவி உடனே யெழுந்து ராகவனைக் கைகூப்பித் தொழுது பிரபுவே! அடியேனை மன்னிக்க வேண்டுமெனப் பன்முறை கூறிப் பிரார்த்தித்து பின்தன் விமானத்தை ஸீதைக்களித்து அவளைப் புகழ்ந்து அவளிடம் பூஜையைப் பெற்று ராகவரது உத்தரவு பெற்றுக்கொண்டு க்ஷணத்தில் மறைந்தாள். உடனே சகல ஜனங்களும் ஸீதை மறுபிறப்படைந்தனளெனக்கூறி வியப்படைந்தார்கள். ஜய ஜய! என்று கூறித் தனித்தனியே வணங்கிப் பூஜித்தார்

கள். இச்சமயம் ராமர் மனமகிழ்ச்சியடைந்து வெகு தானங்கள் செய்தார். வாத்தியக்காரர்கள் வாத்தியகோஷங்கள் செய்தார்கள். தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள். வந்திமாகதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். கங்காநதியில் ஸீதை சபதம்செய்த இடத்தில் ஸீதா குண்டம் என்னும் பிரசித்திப்பெற்ற தீர்த்தமுண்டாயிற்று. ஸீதாதேவியின் மூச்சுக் காற்றானது சபதம் செய்த அச்சமயம் மிக உஷ்ணமாக இருந்தமையால் அந்த ஸீதாகுண்டத்தின் புண்ய தீர்த்தமானது இப்பொழுதும் அந்த மூச்சின் தாபத்தை விளக்குவதற்கொப்ப மிகவும் உஷ்ணமாகவே யிருக்கின்றது; அந்த ஸீதா குண்டமானது நினைத்த மாத்திரத்தில் சகல பயத்தையும் நீக்கக்கூடியது. ஸ்திரீகள் தங்கள் புருஷர்களின் ஆயுளபிவிருத்தியின் நிமித்தம் எப்பொழுதும் இந்தப் பூமியில் சேவிக்கத்தக்கது.

பிறகு ராமபிரான் ஸீதாதேவியுடனும் வஸ்திராபரணபூஷிதர்களான தமதுமக்கள் முதலியவர்களுடனும் அவபிருத ஸ்நானம் செய்து முடித்தார். தேவர்களை பக்தியுடன் பூஜித்து அநேக தானங்களைச் செய்தார்; முனிவர்கள் அரசர்கள் மற்றுமுள்ள பந்துக்கள் இவர்களுடன் அந்த அசுவமேதயாகத்தைப் பூர்த்திசெய்தார்; முனிவர்கள், அரசர்கள், சுமேதை ஜனகர் முதலியவர்களைப்பூஜித்து ரித்விக்குகள், யாகத்தைத் தரிசனம்செய்த பிராமணர்கள் முதலியவர்களுக்குத்தக்க பொருள் கொடுத்து உபசரித்து அவரவர் இருப்பிடத்திற்குச் செல்ல விடை கொடுத்தனுப்பினர்.

இதன் பின்பு ராமபிரான் அரசர்கள் குசலவர்கள் ஜானகி இவர்களுடன் அவ்விடம் விட்டுப்புறப்பட்டுத் தமதரண்மனை வந்து சேர்ந்தார். இப்பொழுது அயோத்தியாபுரியில் எங்கே கண்டாலும் மகோற்சவம் கொண்டாடப்பட்டது. சகல ஜனங்களும் வெகு நாளைக்குமுன் பார்த்த ஜானகியைப்பார்த்து மகிழ்ந்தார்கள். பிறகு ராமபிரான் அவர்களனைவருக்கும் தக்க உபசாரஞ்செய்து அவரவர் தேசத்துக்குச் செல்ல விடைகொடுத்தனுப்பினர். ஜனகமகாராஜன் சுமேதை இவர்களுக்கும் சம்மானம் செய்து மிதிலைக்கு அனுப்பினர். பிறகு இராமர் ஸீதாதேவியுடனும் தமது மக்களுடனும் அயோத்தியிலிருந்து வெகு சுகமாக வாழ்ந்து வந்தார்.

விஷ்ணுதாஸ! ஒரு கற்பத்தில் ராமர் இப்பூமண்டலத்தில் பதின்மூவாயிர மாண்டு ஸீதை ,டனிருந்து அரசு புரிந்திருக்கிறார். மற்றொரு கற்பத்தில் பதினோராயிரத்துப் பதினொரு வருஷம் பதினொரு மாதம் பதினொரு நாள் ஸீதையுடன் அயோத்தியிலிருந்து அரசுபுரிந்திருக்கிறார். இன்னொரு கற்பத்தில் பதினோராயிரம் வருஷம் பதினொரு நாள் வரையில் அயோத்தியில் ஸீதாதேவியுடனிருந்து எழு தீவுகளையும் ஆண்டிருக்கிறார். வேறொரு கற்பத்தில் ராமர் பதினோராயிரம் வருஷம் ராஜ்ய பரிபாலனம் செய்திருக்கிறார்.

ஸீதையை!யேற்றுக்கொண்ட"கதையினைக் கூறும்

8-வது சருக்கம்

முற்றிற்று.

# 9-வது சருக்கம்.

## ராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாஸ! பிறகு ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தியாகிய மூவரும் சிறிது முன்னும் பின்னுமான நாட்களில் கர்ப்பந்தரித்தார்கள். அந்தக் கர்ப்பிணிகள் மூவருக்கும் ஸீதை ஆதரவுடன் அவ்வப்போது அலங்காரங்கள் செய்து சந்தோஷப்படுத்தி வந்தாள். ரகுஸ்ரேஷ்டராகிய ராமசந்திரர் ஜனக மகாராஜனை சுமேதையுடன் வரவழைத்து, பந்துக்களுடன் கர்ப்பிணிகள் மூவருக்கும் பும்சவனம் முதலியவைகளைச் செய்து முடித்தார். பட்டணத்து ஸ்திரீகளும் பந்துக்களும் அம்மூவருக்கும் அவரவர் விரும்பியவைகளைக் கொடுத்துத் திருப்தி யுண்டாக்கினார்கள். ராமபிரான் அம்மூவரையும் வஸ்திராபரண அலங்காரங்களால் உற்சாகப்படுத்திச் சுகமாகவும் சந்தோஷமாகவும் இருக்கும்படி செய்து வந்தார்.

இப்படியிருக்கையில், ஊர்மிளை ஒரு புத்திரனை யீன்றாள். மாண்டவி சுபதினத்தில் ஒரு புத்திரனைப் பெற்றெடுத்தாள். கடைசியாக சுருதகீர்த்தி இரட்டைக் குழந்தைகளை யீன்றாள். பிறகு சில காலஞ் சென்றதன்மேல் ஊர்மிளைக்கு இரண்டாவது புத்திரன்பிறந்தான். மாண்டவியும் இவ்விதமே மற்றொரு புத்திரனை யீன்றாள். ராமபிரான் இக்குழந்தைகளுக்குக் காலா காலங்களில் சாஸ்திரோக்தமாக ஜாதகர்மம் முதலியவைகளைச்செய்வித்து மகிழ்ந்தார். லட்சுமணருடைய மூத்த குமாரனுக்கு அங்கதன் எனவும் இளையவனுக்குச் சித்திரகேதுவென்றும் மாண்டவியின் மூத்த குமானுக்குப்புஷ்கரன் என்றும் இளையவனுக்குத்தக்ஷன் என்றும் சுருதகீர்த்தியின் மூத்த குமாரனுக்குச் சுபாகு என்றும் இளையவனுக்கு யூபகேதுவென்றும் குருவின் முகமாக நாமகரணம் செய்வித்து மகிழ்ந்தார். ஏ விஷ்ணுதாஸ! இந்தக்குமாரர்கள் அந்தந்தக்காலங்களில் பிறந்தவர்கள். யான் உனக்குச் சுருக்கமாகக் கூறினேன். இக்குமாரர்கள் உண்டாகும் காலத்தில் தேவர்களனைவரும் பரமானந்தமடைந்து வாத்தியகோஷம்செய்தார்கள். சூரியனைப்போன்ற தேஜஸுபெற்ற அக்குழந்தைகளுக்கு ராமபிரானது உத்தரவால் உற்சவம் கொண்டாடப்பட்டது. நவ வாத்யங்களும் முழக்கப்

பட்டன. வந்திமாகதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். பதாகைகள் தோரணங்கள் இவைகளால் பட்டணம் அலங்கரிக்கப்பட்டது. பந்துக்களும் அரசர்களும் ராமர் முதலானவர்களுக்கு வஸ்திர முதலியவைகளை யளித்து உபசரித்தார்கள். ராமர் பந்துக்களுக்கும் அந்தணர்களுக்கும் அநேக தானதர்மங்களைச் செய்து நாந்திச்ராத்தம் நடத்தி திவ்யபோஜனம் செய்வித்தார். ராமர் முதலிய நால்வருடைய புத்திரர்களான குசன் முதலிய எட்டுக் குமாரர்களும் அவரவர் தாய்மார்களால் நன்கு பரிபாலிக்கப்பட்டார்கள். தங்கச்சங்கிலி பூட்டிய தொட்டில்களில் சயனஞ்செய்து வளர்ந்து வந்தார்கள். நெற்றியில், நுனியில் முத்துக்கள் கட்டித் தொங்கவிடப்பட்ட சுட்டியும் கண்டத்தில் ச்ரேஷ்டமான ரத்தினங்களிழைக்கப் பெற்று நடுவில் புலி நகம் சேர்க்கப்பட்ட ஹாரங்களும் செவிகளில் சொர்ணம் ரத்தினம் முதலியவைகளாற் செய்யப்பட்ட கடுக்கன்களும் காலில் சப்திக்கும் மணிகள் கட்டிய தண்டைகளும் இடுப்பில் சொர்ண அரைஞாணும் தோளில் தோள்வளைகளும் பூட்டப்பெற்று வளர்ந்து வந்தார்கள்! அக்குழந்தைகள் தங்கள் தாய் தந்தையர்களுக்குப் புன்முறுவலாலும் இந்த்ரநீலம் போன்ற தங்கள் தேகத்தினாலும் பல குழந்தைகளுடன் சேர்ந்து விளையாடுவதாலும் அவர்களுடன் வேடிக்கையாகச் சண்டையிடுவதாலும் இனிமையான சொற்களாலும் ஆனந்தமளித்து வந்தார்கள்.

இப்படியாக யாதொரு குறைவுமின்றி வளர்ந்து வருகையில் ஒரு நாள் ராமபிரான் கொலுவில் வீற்றிருக்குந் தருணத்தில் அக்குழந்தைகள் அவரருகில் வந்து வீற்றிருந்தனர். அச்சமயம் ராமர் வசிஷ்ட முனிவரை யழைத்து, வரிசைக்கிரமமாக இக்குழந்தைகளுக்குள்ள அங்க அடையாளங்களைப் பரிசோதித்துப் பாருங்களெனப் பிரார்த்தித்தார். இதைக்கேட்டதும் வசிஷ்ட முனிவர் முதலில் குசனை யழைத்து அடையாளங்களைப் பரிசோதித்து ஸ்ரீராமரிடம் கூறுகிறார்.

### வசிஷ்டர் கூறுகிறார்.

ஸூக்ஷ்மமான ஐந்து அவயவங்களும் நீண்டதான அங்கங்களும் சிவந்த ஏழு அவயவங்களும் உயர்ந்த ஆறு அங்கங்

களும் பெருத்த மூன்று ஸ்தானமும் லேசும் கம்பீரமுமாயமைந்த மற்ற ஸ்தானங்களுமுள்ள இக்குசன் முப்பத்திரண்டு லட்சணங்கள் அமைந்தவனாகிருன். நீடித்த ஆயுள் பெற்ற இக்குசனுடைய நீண்டகை மோவாய்க்கட்டை, முழங்கால், மூக்கு முதலிய இவ் வவயவங்கள் மிகவும் சிலாக்கியமாக இருக்கின்றன. கழுத்து கணுக்கால், ஆண்குறி இம்மூன்று உறுப்புக்களும் பருத்துக்குட்டையாக யிருப்பதால், இவன் எல்லாராலும் பூஜிக்கத்தக்கவன். குரல் கம்பீரமாயும் நாபி ஆழமாயும் பலம் அதிகமாயுமிருப்பதால், இவன் மங்களமுடையவன். தோல் கேசங்கள் விரல்கள் பற்கள் விரல்களிலிருக்கும் கணுக்கள் ஆகிய இந்த ஐந்து அவயவங்களும் அதி ஸூக்ஷ்மமாக இருப்பதால், இவன் அதிகமான ஸம்பத்தை யடைவானெனச் சொல்லவேண்டும். உள்ளங்கை, உள்ளங்கால், கடைக்கண், நாக்கு, உதடுகள், நகங்கள் இவைகள் சிவப்பு வர்ணமுள்ளவைகளாக இருப்பதால், இவன் ராஜ்யச் சுகத்தைப் பெறுவானென்பதில் ஐயமில்லை. மார்பு, வயிறு, நெற்றி, தோள்கள், கைகள், முகம் இவ்வாறு அங்கங்களும் உயரமாக இருப்பதால், இவன் ப்ரபுத்தன்மைப் பெறுவான். நெற்றி, இடை, மார்பு இம்மூன்றும் அகலமாக இருப்பதினால் இவன் தேஜஸும், ப்ரபுத்தன்மையு மடைவானென்பது நிச்சயம். இந்தக் குசனுடைய சுண்டுவிரலின் அடியிலிருந்து ஆள்காட்டி விரல் வரையில் ரேகையானது பேதமின்றிச் சென்றிருக்கின்றது. ஆகையால் இவன் தீர்க்காயுளுடனிருப்பான். இவனுடைய கைகள் ஆமையின் முதுகுபோல், கடினமாக இருப்பதால் இவன் ராஜ்ய உரிமையைப் பெறுவானென்று கூறவேண்டும். பாதங்கள் அழகாகவும் சரியான விரல்களுடனும் சிவந்த வர்ணமுள்ளவைகளாகவும் ஒன்றுகொன்று வித்தியாசமில்லாமலும் நேர்த்தியான கரடுகளுள்ளவைகளாயும் இருப்பதால் அவைகள் இவனது ப்ரபுத்தன்மையைக் குறிக்கின்றன. கைகளில், நான்கு பக்கங்களிலும் சிவந்த வர்ணமுள்ள சொற்பமான ரேகைகளிருப்பதால் இவன் எப்போதும் சுகமுள்ளவனாகவே யிருப்பான். இவனது ஆண்குறி சிறுத்துக் குட்டையாயிருப்பதால், இவன் ராஜாக்களுக்கு ராஜாவாக ஆவான். இவனது ஆஸனம் பருத்து, கால்கரடு

இடைக்கு மேற்பாகம் நாபி இவைகள் சக்ராகாரமாகவும் இருப்ப தால் இவைகளும் இவனது ப்ரபுத்தன்மையைக் குறிக்கின்றன. எவனுடைய மூத்திரதாரையானது, வலது பக்கம் சுழன்று ஒன்ருக ஏற்படுகின்றதோ அவன் அரசனுவானென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவ்வாறு நமது குசனுக்கு வாய்த்திருக்கிறது. இவனது கைகள் நீண்டதாயும் சரி சமானமாயும் சுகப்படுவதற்கேற்றவைகளாகவும் இடது பக்கத்தில் சூழிகளுள்ளவைகளாகவும் இருப்பதால், அவைகளுக்குப் பூமியைப் பரிபாலிக்கும் சக்தியுண்டு. ஸ்ரீவத்ஸம் வஜ்ரம் சக்ரம் பத்மம் மத்ஸியம் தனுஸ் முதலியரேகைகள் குசனது கைகளில் காணப்படுகின்றன. ஆகையால் இவன் இந்த மூவுலகத்துக்கும் அரசனுக ஆவான். இந்தக் குசன் முப்பத்திரண்டு இலட்சணங்களேயுடையவன். இவன் சிலாக்யமான சங்கத்துக்கு நிகரான கழுத்தையுடையவனு யிருக்கிருன்; அன்றில் பக்ஷி, மேகநாதம் துந்துபிவாத்யம் இவைகளின் சப்தம்போன்ற குரலுடையவன். ஆகையால் இவன் ராஜாதிராஜனுக இருப்பானென்பதிற் சிறிதுமையமில்லே. இவனுடைய கண்கள் மதுவையும் கோரோசனேயையும் போன்ற நிறமுடையனவாயிருக்கின்றன. ஆகையால் இவனே விட்டு ஸ்ரீதேவி பிரியாள். இவனுடைய நெற்றியில் ஐந்து ரேகைகளிருக்கின்றன. இவன் வயிறு சிங்கத்தின் வயிறு போலுள்ளது. இவனது பாதங்களில் ரேகைகள் நீண்டு சென்றிருக்கின்றன. இவனுடைய மூச்சுக்காற்றுனது தாமரைமலரின் வாஸனேயை வீசுகிறது. ஆகவே இந்தக் குசன் தோஷமற்ற லக்ஷணமுடையவனென்று கூறி, பின் லவன் முதலியவர்களுடைய லக்ஷணங்களேயும் வரிசைக்கிரமமாக ஆராய்ந்து கூறினர் வசிஷ்டர்.

இவைகளேக்கேட்ட ராமபிரான் மனமுவந்து தமது குருவாகிய வசிஷ்டருக்கு வஸ்திராபரணமளித்துப் பூஜித்தார். பின் அரண்மனேக்குச்சென்ருர். இச்சமயத்தில் பூமிதேவியளித்த திவ்ய ஸிம்மாஸனத்தில் தாஸிகள் திவ்ய சாமரம் வீச, தோழிமார்களுடன் கண்ணுடியில் தனது முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த ஸீதா

தேவி இராமரது வரவைக்கேட்டு, வெகுவிரைவாக ஆஸனத்தி
லிருந்து எழுந்து, எதிர் கொண்டுவந்து ஒரு இடையில் யூபகேது
வையும் மற்றொரிடையில் யூபகேதுவுக்கு இளையவனாகிய அங்க
தனையும் எடுத்துக்கொண்டு குசலவர்களை முன்னிட்டுக்கொண்டு,
மெதுவாக வரும் ஸ்ரீராமரையும், ராமருக்குப் பின்னால் தக்ஷனை
இடையிலும்புஷ்கரனை வலது கையிலும் எடுத்துக்கொண்டுவரும்
லட்சுமணனையும், லட்சுமணருக்குப் பின்னால் சித்ரகேதுவை
யிடையிலும் சுபாகுவை வலதுகையிலும் எடுத்துக்கொண்டுவரும்
பரதனையும், பரதனுக்குப் பின்னால் ராமருடைய ஆயுதங்களை
யெடுத்துவரும் சத்ருக்கனனையும் பார்த்தாள். பார்த்து உள்ளத்
தில் பரமானந்தங்கொண்டு விரைவாகச் சென்று அவர்களை யழை
த்து முன்னே வந்துகொண்டிருக்கும் லவனைக் கட்டித் தழுவி
இடுப்பில் எடுத்துக்கொண்டு ராமருடன் இனிய வசனங்களைப்
பேசிக்கொண்டே மெதுவாக நடந்து தன்னரண்மனைக்கு வந்து
தோழிமார்களுடனிருந்து அவருக்குத் திருப்தி யுண்டாக்கினாள்.

பிறகு ராமபிரான் குசன் முதலான குழந்தைகளைப்பற்றி வசி
ஷ்டர் கூறிய சாமுத்ரிகா லட்சணங்களை ஸீதைக்குக் கூறி மிகு
ந்த சந்தோஷமடைந்தார். ஸீதாதேவியும் கேட்டுப் பரமானந்த
மடைந்தாள். இப்பொழுது ராமர் ஸீதையைப் பார்த்து "ஏ ஸீதே!
அங்கதன் சித்ரகேது இவ்விருவரையும் லட்சுமணனுடைய மடி
யில் உட்காரவைத்து வாவெனக் கூறினார். ஸீதை ராமரது
வாக்கியத்தைக் கேட்டதும் மகிழ்ந்து அங்கதனையும் சித்ர
கேதுவையும் எடுக்கப்போன தருணத்தில் லட்சுமணர் வெட்
கத்தினால் எழுந்திருந்து வெளிப் புறப்பட யத்தனித்தார்.
ராமர் தாமரைப் புஷ்பம்போன்ற தமது கண்களால் லட்சுமண
ரைப் போகவொட்டாமற் றடுக்கும்படி மாண்டவி சுருதகீர்த்தி
இவர்களுக்கு ஜாடை செய்தார். அவ்விதமே மாண்டவியும்
சுருதகீர்த்தியும் தடுக்க லட்சுமணர் வெளிச் செல்லாமல் தம
தாசனத்தில் உட்கார்ந்தார். உடனே ஸீதை அங்கதனையும்
சித்ரகேதுவையும் லட்சுமணர் மடியில் உட்கார வைத்து
இவ்விதமே பரதன் மடியில் தக்ஷன் புஷ்கரன் இவ்விருவரை
யும் சத்ருக்னன் மடியில் சுபாகு யூபகேது இவர்களையும் உட்

காரவைத்தாள். இப்பொழுது ராமர் ஸீதையைப் புன்னகையு டன் பார்த்து, "ஸீதே! ஊர்மிளே முதலியவர்கள் தத்தம் பதிக்கு விசிறிகொண்டு விசிறட்டும்" என்றார். இம்மொழியைக் கேட்ட தும் ஊர்மிளே முதலியவர்கள் வெட்கமுற்று அவ்விடம் விட்டு வெளியே செல்லப் புறப்பட்டார்கள். பிறகு தோழிகளால் தடுக் கப்பட்டு ராமரது உத்தரவுப்படியே விசிறினர்கள். இவ்விதம் ராமர் போஜனம் செய்தல் வீற்றிருத்தல் முதலிய பல செயல்களில் ஸீதைக்கும் பந்துக்கள் முதலானவர்களுக்கும் அநேகவித விநோ தங்களைச் செய்து காட்டினர்.

இவ்வித மிருக்கையில் ஒருநாள் ராமசந்திர ப்ரபு வஸிஷ்ட முனிவரைப் பார்த்து குசலவர்களுக்கு (விரதபந்தம்) உபனயனஞ் செய்யவேண்டுமேயெனக் கேட்க, வஸிஷ்டர் அவ்விதமே செய்வோ மென்றுகூறி உடனே ஜோதிடர்களை வரவழைத்துக் குசனுக்கு வயது ஐந்தும் லவனுக்குச் சற்றுக் குறைய ஐந்து வயதுமா கின்றது; இவர்களுக்கு உபநயனஞ் செய்யக் காலத்தை நிச்சயஞ் செய்யுங்களென்று கூறினர். அச்சோதிடர்கள் பஞ்சாங்கங்களை யெடுத்துப் பார்த்து ராமரிடம் கூறுகிறார்கள். ராமசந்திர ப்ரபு வே! அந்தணர்களுக்கு எட்டாவது வயதிலும் க்ஷத்திரியர்களுக் குப் பனிரண்டாவது வயதிலும் வைசியனுக்குப் பதினோராவது வயதிலும் உபனயனஞ் செய்ய முனிவர்கள் விதித்திருக்கின்றார் கள். வீரியத்தை விரும்பிய அரசன் எழாவது வயதில் தன் புத் திரனுக்கு விரதபந்தம் செய்யலாம். பிர்மதேஜஸை விரும்பிய பிராமணன் ஐந்தாவது வயதிலும் பலத்தை விரும்பிய க்ஷத்திரி யன் ஆறாவது வயதிலும் பொருளை விரும்பிய வைசியன் எட்டா வது வயதிலும் உபநயனஞ் செய்யலாமெனப் பெரியோர்கள் சாஸ் திரங்களில் நிச்சயஞ் செய்திருக்கிறார்கள். ஆகையால் புத்திரர் களுக்குக் கர்ப்பவாசக் கணக்குப்படி ஆறாவது வயதில் உபநயன முகூர்த்தத்தைச்செய்யுங்க ளென்றுகூறி, "பிரபுவே! இன்றைக்குப் பதினேந்தாவது தினத்தில் ஒரு முகூர்த்தமிருக்கிறது" என் றும் சொன்னர்கள். ராமர் அவர்களுக்குத் தக்க சம்மான மளித்து அனுப்பிவிட்டு, லட்சுமணரை யழைத்து "எ லட் சுமண! அரசர்கள் அரசபத்தினிகள் முனிவர்கள் பட்டணத்தி

ளுள்ளவர்கள் தேசங்களில் வசிப்பவர்கள் இவர்களை வரவழைத்தல் வேண்டும். இந்த அயோத்தியாபட்டணத்தை அலங்காரஞ்செய்து அகழிகள் எழையும் ஆதரவுடன் சீர்திருத்த வேண்டும். உப்பிரிகைகளெங்கும் சுண்ணும்பு பூசிச் சித்திரமெழுதல் வேண்டும். அங்கங்கே த்வஜங்களும் தோரணங்களும் கட்டி யலங்கரித்தல் வேண்டும். தங்கத்தினல் வேதிகைகள் அமைக்கவேண்டும். மண்டபங்கள் பல தயாராகவேண்டும். யானைகள் குதிரைகள் பல்லக்குகள் இவைகளை யலங்கரித்து வைக்கவேண்டும். மற்ற விஷயங்களில் எதெது உனக்கு உசிதமாகத் தோன்றுகிறதோ அவைகளையும் செய்து முடித்தல்வேண்டுமென ஆக்ஞாபித்தார். இலட்சுமணர் அவ்விதமே செய்கிறேனெனக் கூறி அடுத்த நாளே ராமரது ஆக்ஞைப்படி சகலகாரியங்களையும் செய்து முடித்தார்.

குறித்த முகூர்த்த நாள் வந்ததும் ஸ்ரீராமச்சந்திர ப்ரபு தமதுபந்துக்களுடனும் குமாரர்களுடனும் மங்களஸ்நானம்செய்து நூதன வஸ்திர மணிந்து அநேக அலங்காரங்கள் செய்துகொண்டு தமது குருவாகிய வசிஷ்டரையும் முனிவர்களையும் பூஜித்து, புண்ணியாவசனம் நாந்தி ச்ராத்தம் இவைகளைச் செய்து முடித்து மங்கள வாத்தியங்கள் முழங்க ஸீதையுடன் தேவகப்ரதிஷ்டையைச் செய்தார். பிறகு அநேக அரசர்கள் முனிவர்கள் ஏழு தீவுகளின் மத்தியி லிருப்பவர்கள் இவர்கள் யாவரும் தத்தம் பத்தினியுடன் வாகனங்களிலேறி அயோத்திக்கு வந்தார்.

பிறகு வசிஷ்டமுனிவர் ராமருக்கும் குசனுக்கும் மத்தியில் வஸ்திரத்தைப் பிடித்து மறைத்து பிராம்மணர்களுடனிருந்து நல்ல ஸ்வரமுந் திவ்ய அக்ஷரங்களா லமைந்ததுமான மங்கள வாசகங்களைக் கூறினர். ஸ்ரீகணேசர், பிர்மதேவருடைய பெண், பரமசிவன், பிர்மதேவர், மகாவிஷ்ணு, இலட்சுமிதேவி, பார்வதி, சரஸ்வதி, இந்திரன், தேவர்கள் நவக்கிரகங்கள், புண்ணிய வஸ்துக்கள், புண்ணிய நதிகள், முனிவர்கள், தமது குலதேவதை, தந்தைதாய் இவர்களைப் பக்தியுடன் த்யானஞ் செய்து எப்போதும் குமாரனுக்கு மங்கள முண்டாகட்டுமென்றூர். ஸீதாபதியின் ஸ்மரணமே சுபலக்னம் சுபதினம் சுபநக்ஷத்திரம் சந்திரபலம் வித்தியாபலம் தெய்வபலம் முதலிய

வகைளாம் இவ்வாறு அநேக மங்கள வசனங்களாலும் ஓங்கார சப்தங்களாலும் ராமபிரானது மனதைத் திருப்தி செய்வித்துக் குறுக்கே தடுத்திருந்த வஸ்திரத்தை யெடுத்தார். பின் ராம பிரானது மடியில் குசனை உட்காரவைத்து ஹோமம் முதலியவை களைச் செய்து கௌபீனம் தண்டம் கமண்டலம் இவைகளைக் குச னிடம் விதிப்படி சேர்த்து ஸ்வர்ணமுஞ்சியை முதலில் இடை யிலே கட்டிப் பிறகு மான்தோலை யக்ஞோபவீதத்தோடு சேர்த் துக் கட்டிக் காயத்ரி யுபதேசஞ் செய்தார்.

* * * * * *

அப்பால் வசிஷ்டர் குசனுக்கு பிரம்மசரிய விரத மனுஷ்டிக் கும் முறையைக் கூறினர். அதாவது:—சாஸ்திர விதிப்படி சௌ சம் செய்தல், பின் ஆசமனம் பண்ணி பல் நாக்கு இவைகளைச் சோதித்துச் சுத்திகரித்தல், வருணதேவதையின் மந்த்ரங்களை ஜபித்து ஸ்நானம் செய்தல், பிராணுயாமம் செய்தல், காலைமாலை களில் சூரியனை உபாசித்தல், ஸமிதா தானம் செய்தல், அந்தணர் களை நமஸ்கரித்து இந்தக்கோத்திரத்தைச் சேர்ந்தவன் யானெனக் கூறி மேகலை தண்டம் அஜினம் உபவீதம் இவைகளோடு புண்ய சாலிகளாகிய பிராமணர்களின் கிருகத்தில் பிக்ஷை யெடுத்தல், ஜீவனைக் காப்பாற்றுவதற்கு ஆசாரிய ருத்தரவு பெற்று மௌன நியமத்துடன் போஜனம் செய்தல், யாரையும் தூஷியாம லிருத்தல் முதலிய விரத அனுஷ்டானங்களைக் கூறினர். ச்ராத்த தினத்திலும் ஆபத்காலத்திலும் ஒருவேளை ஆகாரம் செய்ய வேண்டும். த்விஜர்களாகிய பிராமணர் முதலியவர்களுள் ச்ரேஷ்டனாக விருப்பவன் பகற்பொழுதில் இரண்டு தடவை புசிக்கலாகாது. அக்னிஹோத்திரத்தின் விதியை அநுசரித்தவர் கள் பகலில் ஒரு தடவையும் இரவில் ஒருதடவையுமே போஜனம் செய்வார்கள். கள்ளருந்தல், மாமிசம் புசித்தல், ஜீவஹிம்சை, சூரி யனை நீரில் பார்த்தல், ஸ்திரீசங்கம், பழையது, எச்சில் இவைகளை யுண்ணல், பிறரைத் தூஷித்தல் முதலியவைகளைத் தவிர்க்க வேண்டும். குருவின் எதிரிலிருந்து தன்னிஷ்டப்படி காரியங்களைச் செய்தல் கூடாது. எப்போதும் குருவினுடைய பெயரையும் தன்

பெயரையும் உச்சரிக்கலாகாது. எங்கேனும் குருநிந்தையை மாணவர்கள் தூஷிப்பதைக் கேட்கின் உடனே தன் செவிகளைப் பொத்திக் கொண்டு வேறுஇடம் செல்லல்வேண்டும். தாய் தங்கை தமக்கை தன் கூடப்பிறந்த ச்தோதரிகள் இவர்களுடனும் தனித்திருக்க லாகாது. மகா பண்டிதனுயினும் இந்த்ரியங்கள் மோகத்தை யுண்டுபண்ணும்—இப்படிப்பட்ட அநேகமான பிரமசரிய விரத அநுஷ்டானங்களைக் குசனுக்குஉபதேசித்தார். இவ்வமயம் அநேக தானங்கள் செய்யப்பட்டன. பிறகு குசனுக்கு ஸீதாதேவியுடன் போஜனம் செய்வித்தார். பின் புரச தண்டத்தைப் பூஜித்து விதிப்படி அநேக உற்சவங் கொண்டாடிச் சகல காரியங்களையும் நடத்தினர். குசன் ஸ்ரீராமன் ஸீதை இவர்களைக்கொண்டு தேக விஸர்ஜனம் (கங்கணவிஸர்ஜனம்) செய்வித்தார். அரசர்கள் அந்தணர்கள் ஜனகமகாராஜன் இவர்களால் ராமபிரான் உபசரிக்கப் பட்டார். ராமர் வஸ்திரம் பொருள் முதலியவைகளை அந்தணர் கள் முதல் சண்டாளர்கள் வரையிலுள்ள யாவருக்கும் அளித்துப் பெருமைப்படுத்தினர். ராமபிரான் இவ்வாறாக ஒரு மாதகாலம் வரையில் வந்திருந்த சகல ஜனங்களுடன் சந்தோஷமாக இருந்து பிறகு அரசர்களுக்கு அவரவர் தேசங்களுக்குச் செல்ல விடை கொடுத்தார். இவ்விதமாகவே லவனுக்கும் தக்கவயதில் உபநயன முகூர்த்தத்தை நடத்தி மகிழ்ந்தார். பிறகு அவ்விரண்டு வாலிபர் களும் விதிப்படி குருமுகமாக உத்தமமான வேதாத்தியயனம் செய்தார்கள். பின்பு ராமபிரான் தமது சகோதரர்களாகிய லட்சு மணர் முதலியவர்களின் குமாரர்களுக்கும் அவரவர்களுக்கு உசித மான காலத்தில் எல்லோரையும் வரவழைத்து வசிஷ்டரையும் பிராம்மண ச்ரேஷ்டரையும் வைத்துக்கொண்டு தமது குமாரர் களுக்கு நடத்தியதைக் காட்டிலும் பதின்மடங்கதிகமான உற்ச வங்களுடன் உபநயனத்தைச் செய்து முடித்தார். பின்பு அவர் கள் எல்லோரும் பிரமசரிய விரதங்களை அநுஷ்டித்து குருவின் முகமாக வேதத்தை அத்தியயனம் செய்தார்கள். ராமபிரான் ஜகதீசனுகிய பரமசிவன் பார்வதியுடனும் விநாயகர் சுப்பிரமண் யர் இவர்களுடனும் விளங்குவதற்கொப்பத் தமது பத்தினி ஸீதை புத்திரர்களாகிய குசலவர்கள் இவர்களோடு விளங்கினர். நாளடை

வில் குசன் முதலானவர்கள் குருமுகமாக வேதாத்தியயனம் செய்து நல்ல ஞானத்தைப்பெற்று சேனைகள் மந்த்ரிகள் குருமார் இவர்களுடன் பூமியில் பரதகண்டத்தின் கண்ணுள்ள புண்ய ஸ்தலங்கள் தீர்த்தங்கள் இவைகளுக்கு யாத்திரை செய்வதில் ஐந்துமாதகாலம் செலவிட்டுப் பின் அயோத்தியாபட்டணம் வந்தார்கள். லட்சுமணர் குழந்தைகளின் வரவைக் கேட்டு நகரத்தை அலங்காரஞ்செய்யச் சேவகர்களுக்கு உத்தரவிட்டு உடனே உத்தமமான யானைகளுடன் அக்குழந்தைகளை எதிர்கொண்டழைக்கச் சென்றார். குசன் முதலானவர்கள் தங்களை எதிர்கொண்டழைக்க வரும் லட்சுமணருக்கு மனமுவந்து வந்தனமளித்தார்கள். லட்சுமணர் குழந்தைகள் எல்லோரையும் கட்டித் தழுவி முத்தமிட்டு அநேக விநோதங்களுடன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். இப்படிச் செல்லுகையில் அப்பட்டணத்து வீதிகளில் மேன்மாடியிலிருந்த ஸ்திரீகள் யாவரும் புஷ்பவருஷம் வருஷித்து குசன் முதலான குழந்தைகளை வாழ்த்தினார்கள். சில ஸ்திரீகள் தெருவில் நின்று நீராஜனம் சுற்றினார்கள். இவ்விதக் கோலாகலத்துடன் குழந்தைகள் யாவரும் அரண்மனை சென்று ராமரை நமஸ்கரித்துப்பிறகு ஸீதையின் அரண்மனை சென்றார்கள். இச்சமயம் ஸீதை ஊர்மிளை மாண்டவி சுருதகீர்த்தி இவர்கள் தயிரன்னம் சுத்த அன்னம் எள்ளன்னம் கடுகு உப்பு உளுந்து இவைகள் நிறைந்த பாத்திரங்களில் தீபங்களை வைத்து நீராஜனம் செய்தார்கள். பிறகு குழந்தைகள் கௌஸல்யை முதலியவர்களுக்கு வந்தன மளித்தபின் சீதை முதலானவர்களுக்கு வந்தனமளித்தார்கள். குழந்தைகள் குருகுல வாசத்தை முடித்து வந்ததின் காரணமாக ராமர் இச்சமயம் அநேக தானங்களைச்செய்தார். அநேக கோடி பிராமணர்களுக்குப் போஜனம் செய்வித்தார். இவ்வாறு பல உற்சவங்கள் நடந்தன. பின் குசலவர் முதலான ராஜகுமாரர்கள் சில சமயங்களில் ஆச்சரியப்படக்கூடிய திவ்யவஸ்திரங்களைத்தரித்து தேர் முதலிய வாகனங்களின் மீதேறிக்கொண்டு அயோத்தியா பட்டணத்தின் ராஜவீதிகளிலும் நாற்சந்திகள் கூடுமிடங்களிலும் உத்யானவனங்களிலும், நதிக்கரையிலும்

காட்டிலும் சேனைகள் மந்திரிகள் இவர்களுடன் சஞ்சரித்து ஆனந்தமடைந்தார்கள். இவ்விதம் ராமபிரான் அயோத்தியா பட்டணத்தில் ஸீதையுடனும் குழந்தைகளுடனுமிருந்து ஜனங்களைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு வெகுகாலம் சுகமாக இருந்தார்.

விஷ்ணுதாஸ! இந்த ஜன்மகாண்டத்தை நான் உனக்குக் கூறினேன். குசன் முதலானவர்களின் உற்பத்தியை விஸ்தாரமாகக் கூறினேன். ரம்மியமானதும் பரிசுத்தமானதும் ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதும் புத்திர பௌத்திராதிகளைக் கொடுக்கக் கூடியதும் சுகமளிக்கச் சக்தியுள்ளதுமான இந்த ஜன்மகாண்டத்தைச் செவியிற் கேட்கும் மானிடர்களுக்கு புத்திரர்கள் முதலான பந்துக்களின் பிரிவு ஏற்படாது. மனைவியை விட்டுப் பிரியவும் நேரிடாது. ஸ்திரிகள் கேட்பாராயின் அவர்கள் தங்கள் கணவனை விட்டு ஒருகாலும் பிரியார்; லட்சுமிதேவிபோல் வாழ்வார்கள். அந்நியதேசம் தீர்த்த யாத்திரை இவைகளுக்குச் சென்று வெகு நாள் வராமலிருந்தால் அவர்களும் இந்தக் காண்டத்தைப் படிக்கச்சொல்லிக் கேட்ட மாத்திரத்தில் வந்துசேர்வார்கள். தங்கள் காரியங்கள் அதிசீக்கிரத்தில் முடியவேண்டு மென்னும் எண்ணமுடையவர்கள் இந்த ஜன்ம காண்டத்தை நாள் தோறும் படிக்கவேண்டும். இந்த ஜன்மகாண்டத்தை முதல் நாள் ஒரு தடவையும் இரண்டாவது நாள் இரண்டுதடவையும் மூன்றுவதுநாள் மூன்றுதடவையும் கடைசியாக ஒன்பதாவது நாளில் ஒன்பதுதடவையும் பாராயணஞ் செய்து மறுநாள் எட்டுத்தடவையோடு நிறுத்தினால் நினைத்தகாரியங்கள் யாவும் சித்தியாகும். இவ்விதம் ஒரு வருஷகாலம் பாராயணம் செய்தால் புத்திரனில்லாதவன் புத்திரனை யடைவான். ஆனந்த ராமாயணத்தின் மத்தியிலிருக்கும் இந்த ஜன்மகாண்டத்தைப் பாராயணம் செய்யினும் கேட்பினும் சுகமுண்டாகும் என்பதில் ஐயமில்லை.

குசலவர்களுக்கு உபநயனம் செய்த வரலாற்றைக் கூறும்

9-வது சருக்கம் முற்றிற்று.

---

ஜன்மகாண்டம் முற்றிற்று.

# விவாக காண்டம்.

## 1-வது சருக்கம்.

---

ஒருநாள் ராமபிரான் தமது மந்த்ரிகள் சூழ ஸபையில் வெகு விமரிசையாக அலங்கரிக்கப்பட்ட சிங்காஸனத்தில் வீற்றிருந்தார். இச்சமயத்தில் ஒருதூதன் ராமரைப் பார்ப்பதற்காக வந்து சபையின் வாயிற் காப்போனைக் கண்டு ஒரு கடிதத்தைக் கொடுத்து "ஐயா! நான் கிழக்கு தேசத்தரசனாகிய பூரிகீர்த்தி யென்பவரால் அனுப்பப்பட்ட தூதன்; அவர் இக்கடிதத்தை ராமபிரானிடம் கொடுத்து வரும்படி என்னை யனுப்பினார். தாங்கள் தயைசெய்து இதனை அவரிடம் சேர்ப்பித்துவிட வேண்டும்" என்றான். அவன் அக்கடிதத்தை வாங்கிக்கொண்டு உள்ளே சென்று லட்சுமணர் முன்பு வைத்தான். அவர் அதனைப் பிரித்துப் பார்த்தார். அதில் மஞ்சள் தடவியிருந்ததையும் தங்கக் கிலிட்டினால் புஷ்பம் போல் சித்திரங்கள் போடப்பட் டிருந்ததையும் கண்டு விவாகக் கடிதமென வறிந்து சந்தோஷத்துடன் அதைப் பார்த்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது.

## திருமுகம்.

---

உலகத்தில் மகா துஷ்டனாகி இருந்த இராவணன் முதலிய ராக்ஷஸர்களைக் கொன்று க்ஷேமத்தை யுண்டாக்குவதன் நிமித்தம் தசரதமகாராஜனுக்கும் கௌஸல்லியைக்கும் புத்திரராக அவதரித்து அருள்புரிந்த ராமசந்திர பிரபுவுக்கு எப்போதும் ஜயமுண்டாகுக. அவரது சரணாரவிந்தங்களில் வணங்கியோத்துப் பூரிகீர்த்தியாகிய நான் விக்ஞாபனம் செய்துகொள்வ தென்னவென்றால்:—

எனது பௌத்ரிகளான சம்பிகை ஸுமதி என்னும் இரண்டு குழந்தைகளுக்கும் ஸ்வயவரம் நடத்த உத்தேசித் திருக்கிறபடியால் தாங்கள் பந்து புத்திர மித்திரர்களோடு வந்திருந்து மங்கள காரியத்தை

நடத்திவைத்து என்னை அநுக்கிரகிக்கும்படி பிரார்த்திக்கின்றேன். அடியேனுடைய இத்திருமுகத்தை அலக்ஷியம் செய்யாது அவசியம் வந்திருந்து என்னைக் காத்தருள வேண்டும். அநேக கோடி வந்தனமளித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்:
தங்களன்புள்ள,
பூரிகீர்த்தி.

இத்திவ்ய திருமுகத்தைச் செவியுற்ற ராமச்சந்திரப்ரபு தமது குருமார்களுடன் சுயம்வரத்திற்குப் போக உத்தேசித்து "லட்சுமணா! நான் நாளையதினம் நமது ராஜ்யத்தை விஜயன் என்பவனிடம் ஒப்புவித்துவிட்டுச் சேனைகளோடும் உன்னோடும் சத்ருக்னனோடும்மற்றுமுள்ள ஸ்திரிகளோடும் சுயம்வரத்திற்குச்செல்லக் கருதியிருக்கின்றமையால், இன்றைக்கே வழியைப் பழுது பார்த்து அங்கங்கே கூடாரங்களை யேற்படுத்தி அவசியமான சாமான்களையும் தயார் செய்துகொண்டு பிரயாணத்திற்குத் தயாராக இருக்கவேண்டுமென்று உத்தரவிட்டார். லட்சுமணர் அவருடைய உத்தரவை வணக்கத்துடன் ஏற்றுக்கொண்டு அவ்விதமேசெய்து முடித்தார்.

மறுநாட் காலையில் ராமபிரான் ஸ்நானஞ் செய்து நேமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு மூன்று அக்னிகுண்டங்களையு மெடுத்துப் புஷ்பக விமானத்தில் வைத்துவிட்டு ஸீதாதேவி முதலிய ஸ்திரிகளைப் பயணத்துக்குத் தயாராகும்படி உத்தரவிட்டார். அவர்கள் உடனே திவ்ய அலங்காரஞ் செய்துகொண்டு விமானத்தில் ஏறினார்கள். ராமரும் தமது விருதுகளுடன் யானையின் மீதேறிக்கொண்டு இருபக்கங்களிலும் சாமரம்வீச, முன்னே சென்றார். குருவான வசிஷ்டர் ஒரு யானையின் மீதேறிக்கொண்டு அவருக்கு முன் சென்றார். இவர்களுக்குப் பிறகு குசன் முதலிய எட்டுப்பிள்ளைகளும் பரத சத்ருக்னர்களும் யானைகளின் மீதேறிக்கொண்டு சென்றார்கள். இவர்கள் பிறகு மந்திரிகளும் பட்டணத்து ஜனங்களும் இன்னு மற்றுமுள்ள எல்லோரும் வரிசைக்கிரமமாகச்

சென்றார்கள். ராமபிரானுடைய யானையானது ஐராவதத்திற்குச் சமானமானதாய் நான்கு கொம்புகளுடன் வெண்மை நிறத்துடனும் விளங்கிற்று. அவர் வீற்றிருந்த அம்பாரியானது முத்து ஜாலர்களாலும் புஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வந்திமாகதர்கள் ஸ்தோத்திரஞ்செய்யவும் காயகர் கானஞ் செய்யவும் ஸ்திரீகள் எல்லோரும் புஷ்பக விமானத்தின் மீதிரிந்து புஷ்பமாரி பொழியவும் நவ வாத்திய முழங்கவும் வெகு கோலாகலத்துடன் போய்க்கொண்டிருந்தார்கள்.

அயோத்தியா பட்டணத்திற்கு ஒரு யோசனை தூரத்திற்கப்பாற் சென்றதும் தங்குவதற்கு வசதியான இடமிருக்கக்கண்டு அங்கே சேனைகளுடன் இறங்கி ஏற்கனவே அவ்விடத்தில் அடித்திருந்த கூடாரத்திலிருந்து ஆகாரம் புசித்துச் சிரம பரிகாரம் செய்துகொண்டார்; இவ்விதம் ராமபிரான் வழியில் அங்கங்கே தங்கி அநேக தேசங்களைப் பார்த்துக்கொண்டு கங்கா நதியைக் கடந்து மெதுவாக இருபது நாட்களில், பூரி கீர்த்தியின் பட்டணம் போய்ச்சேர்ந்தார். ராமபிரானுடைய வருகையையறிந்த பூரி கீர்த்திராஜனுடைய வேலைக்காரன் வேகமாய்ச் சென்று பூரி கீர்த்தியிடம் ப்ரபுவான ராமசந்திரர் வருகிறார் என்பதைத் தெரிவித்தான். பூரிகீர்த்தி அதைச் செவியுற்றதும் சந்தோஷமடைந்து மிகுந்த பரபரப்புடன் ராமரை எதிர்கொண்டழைத்துச் சென்று அவருக்கு வஸ்திரம் ஆபரணம் முதலியவைகளைக் கொடுத்து வணங்கி மிக அழகாக அலங்கரித்திருக்கும் தமது பட்டணத்திற்கு அழைத்துவந்தான். இப்போது சுயம்வரத்திற்கு வந்திருக்கும் மற்ற அரசர்களும் ராமபிரானுக்குத் தங்கள் காணிக்கைகளைச் செலுத்தி அவரை வணங்கி, அவருடைய குமாரர்களாகிய குசன் லவன் இவ்விருவரையும் பார்த்து, "இந்தத் திவ்ய சுந்தரரூபமுள்ள வாலிபர்களிருக்க, இவர்களைவிட்டுச் சுயம்வரத்தில் அப்பெண்கள் நம்மை எங்ஙனே வரிப்பார்கள்" என்று எண்ணிக்கொண்டு விமானத்தைப் பின் தொடர்ந்தே வந்தார்கள்: அப்போது தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள்; வந்திமாகதர்கள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். இவ்வித வைபவத்துடன் ராமச்சந்திர ப்ரபு

பூரிகீர்த்தியின் பட்டணத்தில் பிரவேசித்தார். அப்பொழுது அந் நகரத்து மாதர்கள் ராமபிரான் வருவதை யறிந்து, அவரைத் தரிசிப்பதன் நிமித்தம் தங்கள் வேலைகளையும் நிறுத்திவிட்டுக் கோபுர முதலிய உயரமான இடங்களில் ஏறிக்கொண்டார்கள். ஒருமாது அழுதுகொண்டிருந்த தன்னுடைய குழந்தையைத் தொட்டிலிலே யேகிடத்திவிட்டு வெகுவிரைவாக மெத்தையின்பேரிலேறி நின்று கொண்டாள். வேறொருத்தி தனது பருஷனுக்குத் தாம்பூல மடித்துக்கொண்டிருக்கும்போதே ராமபிரான் வருவதையறிந்து, அதை நிறுத்திவிட்டு வேகமாக அவரைத் தரிசிக்க ஓடிவந்தாள். ஒருத்தி போஜனஞ்செய்து கொண்டிருக்கையில் மத்தியிலெழுந்து ராமரைப்பார்க்க ஓடி வந்தனள். தலை சீவிக்கொண்டிருந்த மற்றொருத்தி அப்படியே மயிரைக் கையி லேந்திக்கொண்டு வெளியே வந்து விட்டாள்- ஒரு ஸ்திரி தனது புருஷன் அன்போடு தன்னை ஆலிங்கனஞ்செய்துகொண்டிருக்கையில் அவன் கையை மீறிக்கொண்டு ஓடி வந்து உப்பரிகையின்மீது ஏறிக்கொண்டாள். வேறொருத்தி தன் புருஷனுடைய ஒரு காலைக் கழுவிவிட்டு மற்றதைக்கழுவ ஆரம்பிக்கும் சமயத்தில் சீதையும் இராமரும் வருகிறார்களென்று கேட்டதும் அப்படியே விட்டுவிட்டு ஓடிவந்தாள். தனது புருஷன் தன்னை முத்தமிட்டுக் கொண்டிருக்கையில், அவனுடைய முகத்தைத் தள்ளிவிட்டு தலையிலிருந்த பூ மலர்கள் கீழே விழ வெகு வேகமாயோடி வந்தாள். புருஷனோடு நித்திரை செய்துகொண்டிருந்த ஒருத்தி அவசரமாய் அரைத் தூக்கத்திலெழுந்து புரண்டு விழும் மயிர்களை விலக்கிக்கொண்டு வெகு வேகமாக வந்து ராமரை தரிசித்தாள். எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்த ஒருத்தி மத்தியில் எழுந்து வந்து மாடியின் மீதேறிக்கொண்டாள். ஒரு கையில் ரவிக்கை யணிந்து பின் மற்றொரு கையில் ரவிக்கை போட யத்தனித்த ஒருத்தி ராமபிரான் வருகிறாரெனக் கேட்டதும் அப்படியே சிக்கிரத்தில் வெளியே வந்து பார்த்தனள். ஒருத்தி ஒரு காலில் தண்டை யணிந்துகொண்டு இன்னொரு காலில் அணிந்து கொள்ள விருந்த ஒருத்தி அதை மறந்து, உப்பிரிகைக்கு வேகமாகச் சென்றாள். தன் இன்ப நாயகனோடு பேசிக்கொண்டிருந்த ஒருத்தி பேச்சை நிறுத்தி விட்டு வெளியே வந்து விட்

டாள். தன்னுடைய புருஷனுக்குப் போஜனமளித்துக் கொண்டிருந்த ஒருஸ்திரீ அன்ன பாத்திரத்தை அவ்விடத்திலேயே வைத்து விட்டு இராமரைப் பார்க்க ஓடி வந்து விட்டாள். ஒருத்தி ஸ்நானஞ்செய்து நூதனவஸ்திர முடுத்துக்கொண்டு துளசியையும் பரமசிவனையும் பூஜை செய்து கொண்டிருக்கையில் இராமர் வந்திருக்கிறாரெனக் கேட்டு அந்தப் பூஜையை நிறுத்திவிட்டு வெளியே வந்துவிட்டாள். ஜலமெடுக்கச்சென்ற ஒருத்தி குடத்தைத் தாம்புக்கயிற்றில் கட்டி கிணற்றில்போட்டதும் இராமரைப் பார்க்க ஆசைகொண்டு அப்படியே விட்டு விட்டு வேகமாய் ஓடி வந்து விட்டாள். தன்னுடைய குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண்டிருந்த ஒருத்தி மார்பின்மேல் குழந்தையை அணைத்துக்கொண்டே வந்து விட்டாள். இன்னொருத்திவஸ்திரம்உடுத்துக்கொண்டிருக்கும்போது இராமரது வரவைக்கேட்டு அவரைப் பார்க்க அப்படியே வேகமாக வந்துவிட்டாள். இவ்வாறு அப்பட்டணத்துள்ள ஸ்திரீகளனைவரும் தங்கள் தங்கள் வேலையை நிறுத்திவிட்டு இராமரைத்தரிசிக்க வந்து அங்கங்கே கூடி விட்டார்கள். ஸ்திரீகளனைவரும் யானையின்மீது வருகிற இராம மூர்த்தியின்மேல் புஷ்பங்களை வாரி இறைத்துப் புகழ்ந்தார்கள். சிலர் அரசர்களுக்கெல்லாம் அரசனாகிய இந்த இராமசந்திர பிரபுவைப் பெற்று வளர்த்த கௌஸல்யாதேவி தான் இவ்வுலகத்தில் எல்லாரிலும் புண்ணியத்தைச் செய்தவள். உலகத்திலுள்ள புருஷர்களுக்கெல்லாம் சிரேஷ்டமான இந்த இராமபிரான் சீதையுடன் லீலைகளை யனுபவிப்பதால் அவள் தான் மேலானவள். அவள் இந்தப் புருஷனை மணஞ்செய்து கொள்ளச் செய்த தர்மம் யாதோ தெரியவில்லையே என்று சில ஸ்திரீகளும், நாம் சீதையின் தாஸிகளாகப் பிறந்திருந்தால் இராமனுக்குரிய பணிவிடைகளைச் செய்யலாம்; அந்தப் புண்ணியம் நாம் செய்யவில்லையேயென்று சிலரும் பேசிக்கொண்டார்கள். இவ்விதம் புகழும் அப்பட்டணத்து ஸ்திரீகளுடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு ராஜ வீதி வழியே சென்று பூரி கீர்த்தியரசனால் தமக்கென்று ஏற்படுத்தியிருந்த திவ்ய கிருகத்திற்கு வந்து யானையின் மீதிருந்திறங்கி உள்ளே பிரவேசித்து அங்கே சீதாதேவியோடும் உறவினரோடும் சுகமாக இருந்தார்.

1-வது சருக்கம் முற்றிற்று.

## 2-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

மறுநாள் பூரிகீர்த்தியானவன் இராமரது கிருகத்திற்கு வந்து வந்தனஞ் செய்து இன்று தாங்கள் சபைக்கு வரவேண்டுமென வணக்கத்துடன் தெரிவித்தான். இராமர் அவ்விதமே செய்கிறேன் என்று கூறித் தமது குமாரர்களுக்கு ஆபரணம் பீதாம்பரம் குண்டலம் இவைகளாலலங்கரித்துக் கொள்ளும்படி உத்தரவிட்டு அவர்களுடன் மந்திரிகளையும் அழைத்துக்கொண்டு தனித்தனியான பல்லக்குகளில் பரிவாரங்கள் சூழப்புறப்பட்டு, சபைக்கு வந்தார். முன்னமேயே சபையில் ஆசனங்களில் வீற்றிருந்த அரசர்கள் யாவரும் இராமபிரான் வருவதைக் கேட்டு ஆசனத்தை விட்டெழுந்து பரபரப்புடன் எதிர் கொண்டு சென்று வெகு வணக்கத்துடன் அவருக்கு வந்தனம் செய்தார்கள். அப்போது அவரது சமீபத்திலிருந்து கையில் பிரம்பு பிடித்துக்கொண்டிருந்த சேவகர்கள் ஒவ்வொரு அரசர்களின் பெயரையும் தனித்தனியே இராமருக்குக் கூறினார்கள்.

இராஜாதிராஜ! கருனுடக தேசத்தரசனாகிய விஜயன் இதோ தங்களுக்கு வணக்கம் செய்கிறார். ஏ இராகவேந்திர! இவ்வரசன் தமிழ் நாட்டிற்கதிபன், தங்களை வந்தனம் செய்கிறார். தீனதயாளுவே! இதோ விதர்ப்ப தேசத்தரசன் தங்களை நமஸ்கரிக்கிறார். இப்பொழுது வணக்கஞ் செய்கிறவர் மகா தேசாதிபதி. சீதாபதியே! மகாபலசாலியான அவந்தி தேசத்ததிபனாகிய உக்ரபாஹு இதோ! வணங்குகிறார். இரகுவீர! ஹேஹய பட்டணத்து மன்னன் ப்ரதீபன் இதோ வந்தனம் செய்கிறார் பாருங்கள். இராமசந்திரபிரபுவே! சூரதேசாதிபதியாகிய சுஷேணன் தங்களை அடிக்கடி வணங்குகிறார் பாருங்கள். ஏ கோஸலேந்திர! இதோ வணங்கி நிற்பவர் அரித்துவாரத்தில் வசித்துவரும் நீப வம்சத்தில் பிறந்த யக்ஞகீர்த்தி என்பவர். அயோத்தியாதிபதியே! கலிங்க தேசாதிபதியாகிய ஹேமாங்கதன் இப்பொழுது வணங்கினவர். இதோ இவ்வரசன் நாகப்பட்டணத்தில் வசிப்பவர் பாண்டியன் என்னும் பெயர் கொண்டவர். இவர் மகாபுத்திசாலி

இவரும் தங்களை வணங்குகிறார் பாருங்கள் என்று இவ்விதம் இராமசந்திர பிரபுவை வணங்கும் ஒவ்வொருவருடைய பெயரை யும் பட்டணத்தையும் சேவகர்கள் கூற, பிரபு அவர்களைத் தமது பார்வை முதலியவைகளால் தக்கபடி மரியாதை செய்து கொண்டு மந்திரிகளோடும் குமாரர்களோடும் பந்துக்களோடும் சபையில் பிரவேசித்தார். அங்கே மேற்குப் பக்கத்திலிருந்த அழகான சிம் மாஸனத்தில் இராமசந்திரபிரபு கிழக்கு முகமாக உட்கார்ந்தார்.

இராமபிரானுடைய வலது பக்கத்தில் இலட்சுமணர் பரத சத்ருக்னர் மூவரும்வீற்றிருந்தார்கள். இடதுபாரிசத்தில் குசலவர் முதலியவர்களும் மந்திரிகளும் உட்கார்ந்தார்கள். சத்ருக்னரு டைய வலது புறத்தில் சுமந்திரர் முதலிய மந்திரிமார்கள் உட் கார்ந்தார்கள். இன்னும் மற்றுமுள்ள அரசர்கள் சபையின் வடவண் டையிலும் தென்பக்கமும் கிரமமாய் உட்கார்ந்தார்கள். பிராமணர் முதலியவர்கள் கோட்டையின் மேலுட்கார்ந்து பார்த்துக்கொண்டி ருந்தார்கள். வாத்தியங்கள் முழங்கிக்கொண்டிருந்தன. தூபங்கள் ஆகாயமளவும் சென்று பரவின. தாஸிகள் நர்த்தனம் செய்தும் வந்திகள் ஸ்தோத்திரம் செய்து கொண்டும் மாகதர்கள் பாடிக் கொண்டு மிருந்தார்கள்.

இச்சமயத்தில் அரசனுடைய பௌத்திரிகளாகிய சம்பிகை சுமதி என்னும் இருபெண்களும் ஆடையாபரணலங்காரத்துடன் நவரத்னமயமான மாலைகளைத்தங்கள் கையிலெடுத்துக்கொண்டுசபை யின் வாயிலில் வந்து திவ்ய தேஜஸுடன் விளங்கினார்கள். அப்பொ ழுது அச்சபையின் கண் வீற்றிருந்த அரசர்கள் யாவரும் அவ்விரு பெண்களின் கடைக்கண்ணாகியவேலின் நுனியால் தாக்குண்டு மன் மதபாணத்திற் கிரையாகி தெளிவு குன்றி மிகவும் கஷ்டப்பட்டார் கள். சம்பிகை என்பவள் தென்கிழக்கு மூலையிலிருந்து சபையில் பிரவேசித்தாள். சுமதி என்னும் மற்றொரு பெண் வடகிழக்கு மூலை யிலிருந்து சபையில் பிரவேசித்தாள். பின்பு நந்தை என்னும் உப மாதா தன் கையில் ஓர்பிரம்பை எடுத்துக்கொண்டு சபையில் தென் னண்டை வரிசையிலிருந்த அரசர்களை சம்பிகை என்பவளுக்குத் தனித்தனியே காண்பித்து அவர்களின்னாரென்பதையும் அவர்கள் குணாதிசயங்களையும் எடுத்துக்கூறினாள். ஸுநந்தை என்னும் பெய

ருள்ள மற்றொரு உபமாதா தன் கைப் பிரம்பினால் வடவண்டை வாடையிலிருந்த அரசர்களைச்சுமதிக்குத்தனித்தனியே காண்பித்து அவர்களின்னாரென்பதையும் குணாதிசயங்களையும் கூறினாள். பிறகு பல்லக்கிலிருந்த சம்பிகையை நந்தை என்னும் உபமாதா ஓர் அரசனிடம் அழைத்துக் கொண்டு போய் அவனைப் பின்வருமாறு வர்ணித்தாள்.

ஏ ராஜ கன்னிகையே! நான் கூறுவதைக் கவனித்துக் கேள். இவர் பாண்டிய தேசத்து மன்னன். நாகபட்டணத்தில் வசிப்பவர்; இவர் பெயர் மகிமான். குடிகளை வெகு நியாயமாய்ப் பரிபாலிப்பவர்; அதிசமர்த்தர். உனக்குப் பிரியமாயிருந்தால் இவரை நீ வரிக்கலாம். இவ்வரசனுக்கு வாழ்க்கைப்பட்டால் நாகபட்டணத்தில் வசித்து அவருடன் வெகு ஆநந்தமாய் உப்பரிகையின்மீது விளையாடலாம் என்று கூறினாள். அவ்வரசனிடம் சம்பிகைக்குப் பிரியமுண்டாகவில்லை. ஆகையால் வேறு அரசனிடம் செல்லும்படியாக உத்தரவு அளித்தாள். உடனே நந்தை வேறு அரசனிடம் பல்லக்கைக் கொண்டு போகச்சொல்லி, ஏ குழந்தாய்! இவ்வரசனைப்பார். இவன் கலிங்கதேசத்ததிபன், அவன் பெயர் ஹேமங்கராஜன், இவரது புஜங்களில் கோடிக்கணக்கான முத்தாரங்கள் பிரகாசிக்கின்றன பார். இவருக்கு நீ மனைவியாவாயேயாகில், உப்பரிகையின்மீதிருந்து சமுத்திரத்தைப் பார்த்துக் கொண்டு ஆனந்தத்தை யனுபவிக்கலாம். மேலும் இவருடைய பத்தினிகளுக்கு தலைவியாகலாம் என்றாள். நந்தை இவ்விதம் சொல்லியும் சம்பிகை கேளாமல் வேறொரு அரசனிடம்போகுமாறு உத்தரவு செய்தாள். அவ்விதமேமற்றொருஅரசனிடம்போய் குழந்தாய்! இவ்வரசனைப்பார்; இவர் அரித்துவாரத்தில் வசிப்பவர். நீபவம்சத்தைச்சேர்ந்தவர், க்ஷீராப்தியின் மத்தியில் உற்பத்தியான சந்திரன்போல் உதயமானவர். இவ்வரசன் அநேக யக்ஞங்களைச்செய்து உலகத்தில் கீர்த்தி பெற்றமையால் இவர் யக்ஞகீர்த்தி யென்னும் பெயர் பூண்டனர். ஸ்திரீகளிடம் மிகுந்த பிரியமுள்ளவர். சொர்ண ஆபரணங்கள் பூண்ட இவரையே நீ வரிக்க வேண்டும். நீ இவருக்குப் பத்தினி யாவாயேயாகில் ஓடங்களிலேறிக்கொண்டு கங்கையின் அலைகளைப் பார்த்து விளையாடலாம்;

வெகு சுகமாக விருக்கலாம் என்றாள். அவ்விதம் நந்தை கூறவும் சம்பிகை அவ்வரசனுக்கு மாலையிட இசையாமல், வேறொரு அரசனிடம் செல்லப் பணித்தாள். நந்தை வேறு அரசனிடம் அழைத்துப் போய் சம்பிகை! இவ்வரசனைப்பார். இவர் ஆவரண தேசத்தை ஆண்டு வருபவர். ஸுஷேணன் என்பது இவர் பெயர். இவருடைய குதிரைகள் வாயுவேகமுள்ளவைகள். மானைப்போன்ற விழியினையுடைய அநேகம் ஸ்திரீகள் இவருக்கு மனைவிகளாயிருக்கின்றனர்கள். இவரது அரண்மனையில் இரவும் பகலும் தாஸிகள் நர்த்தனம் செய்துகொண்டிருப்பார்கள். உன் முகம் இவருடைய முகமும் ஒத்திருக்கிறது. ஏ குழந்தாய்! மறுவார்த்தை பேசாமல் இவனை வரித்துக்கொள். உன் ஜன்மம் சபலமடையும் என்றாள். நந்தை இவ்விதம் கூறியதும் சம்பிகை அவனைத் தாஸி விடனென்று அறிந்து கொண்டு வெறுப்புக்கொண்டு வேறு அரசனிடம் போகும்படி கூறினாள். உடனே நந்தை வேறொரு அரசனிடம் அழைத்துச் சென்றாள். கண்மணியே! இவ்வரசனைப்பார். இவர் ஹேஹயப்பட்டணத்தரசன். ஆயிரம் கைகளையுடைய கார்த்தவீரியார்ஜுனனுக்கு ஆபரணம் போன்றவர். பிரதிபனென்பது இவர் பெயர். மிகசூரர். அதிரதர். இவரை நீ வரித்து இவருக்குப் பட்டமகிஷியாய் விட்டால், இவரோடு நர்மதா நதியில் பலவிதமான ஜலக்ரீடைகளைச் செய்துகொண்டு சுகமாக விருக்கலாம் என்றாள். மிகவும்சாமர்த்தியசாலியான அந்தப்பெண் அவனைவரிக்காமல்மேலே செல்லும்படி நந்தைக்குக் கூறினாள். இம்மாதிரி அநேக அரசர்களுடைய வரலாற்றையும் குணாதிசயத்தையும் நந்தை கூறி வர, சம்பிகை தடுத்துக்கொண்டேவந்து இராமபிரானுடைய மந்திரிகளாகிய சுமந்திரர் முதலியவர்களையுங் தாண்டி சத்ருக்னனிடம் வந்தாள். இங்கு வந்ததும் நந்தையானவள் இவ்வரசனைப் பார். இவர் பரதாழ்வாருக்கு இளையவர். கோஸலதேசத்தரசனான இராமபிரானுக்குச் சகோதரர். இவர் அயோத்தியில் வசித்து வருகிறார். இராமபிரான் கூறும் வார்த்தைகளுக்கு இவர் மறு பேச்சுப் பேசுவதில்லை. நீ இவரை வரிப்பாயே யாகில் சுருதகீர்த்திக்குச் சகோதரி போலிருக்கலாம் என்றாள். நந்தை இவ்விதங் கூறியும் சம்பிகை சத்ருக்னனிடம் தன் மனதைச் செலுத்தாமல் மேலே செல்லும்படி

நந்தைக்குக் கண்சாடை செய்தாள். உடனே நந்தை பரதரிடம் அழைத்துப்போய் ஏ குழந்தாய்! இவர்தான் சத்ருக்னனுடைய தமையனான பரதன். கைகேயியின் புத்திரன். இராமருக்கு உண்மையான சேவை செய்பவர். இவரை நீ வரித்தால் இவரோடும் மாண்டவியோடும் சரயூநதியில் ஆநந்தகரமாக ஜலக்ரீடை செய்யலாம் என்றாள். சம்பிகை இதற்கும் செவி கொடாமல் வேறொரு அரசனிடம் செல்லக் கட்டளையிட்டாள். பிறகு நந்தை இலட்சுமணரிடம் அழைத்துச்சென்று இவரைப் பார் இவர் சுமத்திரையின் வயிற்றிற் பிறந்தவர். இவர்தான் இலட்சுமணர் என்னும் திருநாமம் படைத்தவர். அயோத்தியாபுரியில் வசிப்பவர். எப்போதும் இராமபிரானுக்குச் சேவை செய்வதில்தான் இவருக்குப் பிரியம். இவர்தான் மகாதுஷ்டனான மேகநாதனைக் (இந்திரஜித்தை) கொன்றவர். இவர் ஆதிசேஷருடைய அம்சம். இவரை நீ வரித்தால் ஊர்மிளைக்குச் சகோதரி போலாகலாம் என்றாள். சம்பிகை, அவர்கள் யாவரும் இராமருக்குச்சேவை செய்வதில் பிரியமுள்ளவர்களாயிருப்பினும் அவர்களுக்கு இராஜலக்ஷணங்களுக் குற்ற குடை சாமரம் ஒன்று மில்லாதிருப்பதாலும் எல்லாரும் பத்னிகளுடன் கூடினவர்களாயிருப்பதாலும் அவர்களை விரும்பாது மேலே செல்லும்படி நந்தைக்குத் தெரிவித்தாள். அவள் பிறகு சம்பிகையை இராமர் சந்நிதானத்திற்கு அழைத்துச் சென்று அவ்வரை ஸ்தோத்திரிக்கலானாள். ஏ சம்பிகே! நீ இராகவனைப் பார்க்க நேர்ந்தது உனக்குப் பாக்கியமேயாம். இவரை வர்ணிக்க எதிரில் வந்திருக்கும் நானும் புண்ணியவதிதான். குணக்கடலாகிய இராமபிரான் எங்கே? மந்தபுத்தியுள்ள ஸ்திரியாகிய நான் எங்கே. இவரை வர்ணிக்கும் விஷயத்தில் வான்மீகி மஹரிஷியே தடைபட்டுப் போயிருக்கும் போது, நான் இவரை எவ்வாறு வர்ணிக்கக்கூடும்? வான்மீகி மஹரிஷியால் இராமரது சரித்திரம் நூறு கோடி சுலோகங்களால் வர்ணிக்கப் பட்டிருந்தாலும் அவரது குணங்களின் கோடியில் ஒரு பாகம் கூட வர்ணிக்கப்படவில்லை. ஆகிலும் இவரைப்பற்றி எனக்குத்தெரிந்தவரையில் சொல்லுகிறேன் கேள். இந்த ஸ்ரீராமர் சூரிய வம்சத்திற்கு ஆபரணம் போன்றவர். தசரதரின் பிரியமு

ள்ள குமாரர். கௌஸல்யாதேவியிடம் பிறந்தவர். கருணாநிதியான நாராயணரே இவர். இவர் தாடகையைக் கொன்று விசுவாமித்திர மஹரிஷியின் யாகத்தைக் காப்பாற்றினர். அஹல்யையின் சாப நிவர்த்தி செய்தார். சிவனது வில்லை யொடித்து ஜனக மஹாராஜனுடைய புத்திரியாகிய சீதையை மணஞ்செய்துகொண்டார். பரசுராமரை ஜயித்தார். அரசர்களை யெல்லாம் ஜயித்து பரதனைக் காப்பாற்றினர். தந்தையினுடைய வாக்கியத்தைப் பரிபாலனம் செய்வதற்காக ஸஹோதரனான லக்ஷ்மணனோடும் பத்தினியான சீதையோடும் அரண்யத்தில் வசித்தார்! அங்கே விராதன் கரன் தூஷணன் முதலியவர்களைக் கொன்றார். இன்னும் மான் வேடம் பூண்டு வந்த மாரீசனையும், கபந்தன் வாலி இவர்களையும் கொன்றார். ஸமுத்திரத்தில் அணை கட்டி லங்கை சென்று அங்குள்ள ராக்ஷஸர்களை யெல்லாம் நாசஞ் செய்து கொடிய துஷ்டனாகிய ராவணனையும் வதம் பண்ணி சீதையை யடைந்து ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து கொண்டார். பிறகு பரிசுத்தமான அநேக யாகங்கள் செய்தார். முதலில் ஜானகியை காட்டிற்கு அனுப்பி விட்டு, பிறகு அவளைத் திரும்பவுமடைந்து, தமது குமாரர்களான குசன் லவன் என்பவராகிய இவர்களோடு அஸ்வமேத யாகக்குதிரைக்காகச் சண்டை செய்தார்.

ஏகபத்னீ விருதமுடையவர். நிச்சயமனமுடையவர். மஹா சாந்தசீலர். சத்தியவந்தர். ஒரே பாணத்தால் சத்துருக்களை யழிக்க வல்லவர். இவரது கொடியில் எப்போதும் ஹனுமார் இருப்பர். அரசர்களெல்லோரும் இவரை வணங்குவதால், அவர்களது சிரஸிலுள்ள முத்துக்களால் இவரது திவ்ய சரணாரவிந்தம் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. சிலாக்யமான ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து குடை சாமரம் இவைகளால் உபசரிக்கப்படுகிறார். ஏ குழந்தாய்! நீ இவரை வரிக்கவேண்டும். வரிப்பாயேயாகில் சீதையோடு சுகமாகவிருக்கலாம். இவர் ஏழு தீவுகளுடன் கூடிய இப்பூமிக்கு அதிபதி. ஆகையால் நீ மேலே செல்லாது இவரது கழுத்திலேயே நவரத்னமயமான மாலையைப் போட்டுவிடு. இவ்வாறு நந்தை சொன்னதைக் கேட்ட சம்பிகை அற்ப பாக்கியஞ் செய்தவளாகையால், தெய்வ வசத்தால், அவரிடத்தில் அவளுக்கு மனம் செல்

லவில்லை. மேலும் சீதை யென்னும் பதிவிருதா சிரோமணி பத்னியாய் இருக்கிறுள் என்று கேட்டதாலும், ஸ்ரீராமர் ஏகபத்னீ விருதமுடையவர் என்றதாலும் நம்மைக் கவனிக்கமாட்டாரென்கிற எண்ணம் சம்பிகையின் மனதில் உண்டாயிற்று. அதனுல் தான் அவள் ஸ்ரீராமனை வரிக்கவில்லை யென்றுஞ்சொல்லலாம். பிறகு அவளுடைய கண் ஜாடையால் நந்தை அவளைக் குசனிடம் அழைத்துச் சென்று அவனை வர்ணிப்பதில் ஆசை கொண்டு கூறுகிறுள். ஏ கன்னிகையே! இவர் ஸ்ரீராமரது பிள்ளை. இவர் பெயர் குசன். இவர் தான் மூத்தவர். மிகவும் பால்ய வயதை யுடையவர். ஜானகி வயிற்றில் பிறந்தவர். இன்னும் இவருக்குக் கல்யாணம் ஆகவில்லை. வில்வித்தையில் மிகவும் சமர்த்தர். மிகவும் வணக்கமுடையவரானுலும் அசுவமேதக் குதிரைக்காகத் தகப்பனுரோடு போர் புரிந்தார். இவர் மிகவும் பௌருஷமுள்ளவர். மஹரிஷியான வால்மீகியே இவருக்கு ஆசாரியர். ஏ மாது சிரோமணியே! தேவர் மனிதர் முதலிய யாவரும் புகழுங் கீர்த்தியையுடைய இந்த வாலிபரை நீ அவசியம் வரிக்கவேண்டும். நவரத்னமயமான மாலையை இவரது கழுத்தில் நீ சுகமாய்ப் போட வேண்டும் என்றுள். இவ்வாறு நந்தை சொன்ன வார்த்தைகளைக் கேட்டு சம்பிகை சிறிது புன்னகை கொண்டு தனது கையிலிருந்த மாலையை குசனுடைய கழுத்தில் போட்டாள். அப்போது மங்கள வாத்தியங்கள் சப்தித்தன. வந்தி மாகதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். குழந்தையான குசன் ஸபையில் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டான்.

அப்போது மிகவும் ஸந்தோஷத்தை யடைந்த பூரி கீர்த்தி அரசர்களெல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போது குசனுடைய மடியில் சம்பிகையை உட்காரவைத்தான். இந்த வைபவத்தை உப்பரிகையின் மேலிருந்த சீதா தேவி ஸ்திரீ ஜனங்களோடு பார்த்து மிகவும் ஸந்தோஷித்தாள். ஸ்ரீராமரும் பார்த்து மிகவும் ஆனந்த மடைந்தார்.

## 2-வது சருக்கம்.

முற்றிற்று.

# 3-வது சருக்கம்

## இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு கையில் பிரம்பு பிடித்த சுநந்தை என்னும் தாதியான வள் பல்லக்கின்மீதுள்ள சுமதிக்கு வடவண்டை வீற்றிருக்கும் அரசர்க ளின்னா ரென்பதையும் அவர்களின் குணாதிசயங்களையு மெடுத்துக்கூறுகிறாள்.

"ஏ குழந்தாய்! யான் கூறுவதைக்கேள். இந்த இராஜசிரேஷ்ட னைப்பார். இவர் அவந்தி தேசத்தரசன். இவர் பெயர் உத்ரபாகு. இவர் அனுத்தமன் (இவரைக்காட்டிலும் உத்தமனில்லை). இவருக் குச் சமானமான அரசன் இவ்வுலகத்தில் கிடையாது. இவ்வரசனை நீ வரிக்கவேண்டும். இவருக்கு நீ பட்டமகிஷியாவாயேயாகில் க்ஷீரா ப்தியின்மணலிற் கூடாரங்களில் வசித்துக்கொண்டு சுகமாகவிருந்து ஆனந்தமடையலாம்" என்றாள். அனுத்தமன் என்னும்பதத்திற்கு உத்தமனில்லையென்றும் பொருள்படுமாதலால் இருவிதமும்பொருள் படும்படி சுநந்தைகூறினாளென்று சுமதி தெரிந்துகொண்டு அவனை வரிக்காமல் மேலே செல்லெனச் சுனந்தைக்குத் தெரிவித்தாள். அவள் அவ்விதமே வேறு அரசனிடம் அழைத்துச் சென்று "இவர் விதர்ப்ப தேசத்திலுள்ளவர். இவர் பெயர் அங்கநாதன். இவரை நீ அவசியம் வரிக்கவேண்டும். இவர் ஸ்திரீகளிடம் பிரியமுள்ளவர். வெகு பால்யம். கவசகுண்டல கேயூராதி பூஷணங்களோடு விளங்கு கின்றனர். இவருக்கு நீ பட்ட மகிஷியாவாயேயாகில் பயோஷ்ணி யென்னும் நதியில் நீ இவரோடு சுகமாய் விளையாடலாம்" என்று தாதி கூறினள். அவ்வரசனையும் சுமதி யிச்சிக்காமல் வேறு அரச னிடம் போகும்படி கூறினாள். அவ்விதமே சுநந்தை வேறு அரச னிடம் அழைத்துச்சென்று இவர் மகததேச மன்னன். இவர் பெயர் பரந்தபன். இவரை நீ வரிக்காமல் இவரைக் காட்டிலும் மேலானவர் உளரென்று செல்லாதே. நீ இவருக்குப் பட்டமகிஷி யாவாயேயாகில் பிர்ம்ம தீர்த்தம் என்று கூறப்படும் வெந்நீர்க் குளத்தில்பனிகாலத்தில் சுகமாகவிளையாடலாம். இவரையேவரித்து விடு" என்றாள். இம்மன்னனிடத்தும் சுமதி மனஞ் செலுத்தவில்லை.

மேலே செல்லும்படி உபமாதாவுக்குக் கட்டளையிட்டாள். உடனே அவள் வேறுஅரசனிடம் அழைத்துச்சென்று மாதே! இவ்வரசனைப் பார், இவர் தமிழ் தேசத்தி லிருப்பவர். இவர் கம்புகண்டன் என்னும் பெயர்கொண்டவர். காஞ்சிபட்டணத்தில்வசிக்கிறார். இவரை நீ விடாமல் வரித்துவிடு. வேறு இராஜனிடம் செல்லவேண்டாம். இவரைப்பர்த்தாவாகஅடைந்தால் பொற்றாமரைப் பூக்கள் நிறைந்த அழகியஸர்வதீர்த்தத்தில் விதம்விதமான கிரீடைகளை அநுபவிக்கலாம். மேலும் தினந்தோறும் இவ்வரசனோடு வரதராஜரென்று பெயருள்ள விஷ்ணுவையும் ஏகாம்பரநாதரென்ற சிவனையும் பக்தியோடு ஆராதிக்கலாம். சாதாரண அரசனென்று இவ்வரசனைவிட்டுவிடாமல் அவசியம் வரிக்கவேண்டும்'' என்று கூறினாள். சுமதி இவ்வரசனையும் வரிக்க எண்ணமில்லாமல் உபமாதாவுக்கு வேறு அரசனிடம் செல்லத் தெரிவித்தாள். அவ்விதமே சுநந்தை அவளை வேறு அரசனிடம் அழைத்துச்சென்று "ஏ பெண்மணியே! இவ்வரசனைப் பார்த்தாயா? இவர் கருனாடக தேசத்திலுள்ளவர். இவர் பெயர் விஜயபூபதி. தாமரைப் பூப்போன்ற வதன முடையவர். இவர் மிகவும் அழகுள்ளவர். நான் சொல்வதைக் கேட்டு நீ இவரையே வரிக்கவேண்டும். நீ இவரது பட்டமகிஷியானால் அழகிய கிருஷ்ணநதிக்கரையிலுள்ள வனத்தில் இவரோடு பல லீலைகளைச் செய்து சுகப்படலாம். ஆகையால் என் வார்த்தையைக்கேட்டு இவரையே மணந்துகொள். மேலே செல்லாதே'' என்றாள். உபமாதா இவ்விதம் சொன்னதில் என் வார்த்தையைக் கேளாதே, மேலே போகலாமென்ற அர்த்தம் சுமதிக்குத் தோன்றியபடியால் மேலே போகலாமென்று சுநந்தைக்கும் ஜாடை காட்டினாள். இவ்வாறு அநேகம் அரசர்களைஉபமாதாவானவள் தனித்தனியாய் ஸ்தோத்திரம்பண்ணுவதையும் அதில் கடுப்பதற்குரிய வேறு பொருள் இருப்பதையும் கவனித்து சுமதியானவள் ஒரு அரசனிடமும் தனது மனதைச் செலுத்தாமல் மேலே போவென்றே சொல்லி வந்தாள். இவ்விதம் அநேகம் அரசர்களையும் இராமருடைய மந்திரியின் பிள்ளைகளையும் தாண்டி சிறுவனான யூபகேதுவினிடம் வந்த பின், இவன் மிகவும் அழகுள்ளவன். இவன் சத்ருக்னனுடைய குமாரன். யூபகேதுவென்று பெயர். தனது தகப்பனாரின் ஸகோதரரான இராமரது பிள்ளை

களை அனுசரித்து நடப்பவன். என் கண்மணியே! இவனைப் பார். மிகவும் கவனித்து இந்த யூபகேதுவை நீ வரிக்கவேண்டும். மேலே செல்லாதே என்றாள். இவ்விதம் இவள் கூறியதில் அவனை நீ வரிக்கவேண்டாம். மேலே போவென்று அர்த்தம் தோன்றியதால் சுமதி மறுபடியும் தாதியை மேலே போவென்றே கூறினாள். அவ்விதமே சுமதி கிரமமாய் சுபாகு புஷ்கரன் தக்ஷன் சித்திரகேது அங்கதன் முதலியவர்களைத் தாண்டிச் சென்று லவனிடம் போனாள். அந்த லவனை அன்போடு நோக்கின சுமதியைப் பார்த்து "பெண்மணியே! பாலனான இவனைப்பார்த்தாயா? இவன் ஸ்ரீராமருடையஇரண்டாவதுபிள்ளையான லவன் என்பவன். அதிபால்யன். இனிமேற்றான் இவனுக்கு விவாகமாகவேண்டும். ஸீதாதேவியால் அன்புடன் வளர்க்கப்பட்டவன். வான்மீகி மகஷிரிஷியினது அனுக்கிரகத்தால் சகல வித்தைகளையும் பெற்றவன். குசனுக்குத்தம்பி. நீ இவனை வரிப்பதோடு இவனது கழுத்தில் உடனே மாலைபோட்டுவிடு. இப்போது உனது ஸஹோதரியானசம்பிகை குசனது மடியில் எவ்வாறு வீற்றிருந்தாளோ அவ்வாறு நீயும் இவனது மடியில் வீற்றிருந்து எங்களுக்கெல்லாம் மிகவும் ஆனந்தத்தை யுண்டுபண்ணு என்று சுநந்தை சொன்னதைக்கேட்டு, சுமதி புன்சிரிப்புடன் வெட்கத்தால் தலைகுனிந்து கொண்டு லவனுடைய கழுத்தில் மகிழ்ச்சியுடன் மாலையைப்போட்டாள். அப்போது வாத்தியங்கள் முழங்கின. பாடகர்கள் பாடினார்கள். தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள். வந்துமாகதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். அப்போதுமிகவும் சந்தோஷமடைந்த பூரிகீர்த்தி யென்னும் அரசன் பூர்ணமனதோடு லவனுடைய மடியில் சுமதியை உட்காரவைத்தான். இவ்வைபவத்தைக் கண்ட இராகவர் பரமானந்த மடைந்தார். ஸீதையும் தனது தோழிகளோடு உப்பரிகையின்மேலேறிக்கொண்டு ஜன்னல் வழியாய்ப் போய்ப்பார்த்துக்களித்தாள். உடனே இராஜ சிரேஷ்டனான பூரிகீர்த்தி மற்றவரசர்களைப் பார்த்து நீங்கள் கல்யாணமங்களத்தைப் பார்த்துவிட்டுப் பிறகு போகலாம் என்று கேட்டுக்கொண்டான். அரசர்கள் யாவரும் அதற்குச் சம்மதித்து முகவாட்டமுற்று உற்சாகமின்றி மன்மதபாணவஸ்தையுடன்சாமர்த்தியமற்றவர்கள் போல் தங்கள் தங்கள் விடுதிக்குச்சென்றார்கள்.

இராமரும் தமது உறவினரோடும் குழந்தைகளோடும் தமது விடுதிக்குச் சென்றார்

பிறகு அடுத்த நாள் பூரிகீர்த்தி புரோகிதரோடு இராமரது விடுதிக்குச் சென்று அவரை வணங்கி "பிரபுவே! சுகத்தை யுண்டாக்கக்கூடிய மங்களகரமான ஒரு நல்ல முகூர்த்தத்தைப் பார்த்து, அதில் விவாகத்தை நடத்துவதற்குத் தங்களிஷ்டப்படி மண்டபங்கள் நிர்மாணம் செய்யத் தாங்களே செய்யவேண்டும்" என்றார். இராகவரும் அப்படியே ஆகட்டுமென்று கூறி வசிஷ்டரிடந் தெரிவிக்க அவர் சோதிடசாஸ்திரமறிந்த அநேகருடன் நன்றாய் ஆராய்ந்துபார்த்து, அன்றைக்கு ஐந்தாவது நாளில் ஒருமுகூர்த்தத்தைக்குறிப்பிட்டார். இதன்பின் பூரிகீர்த்திதன்னுடையபந்துமித்திர்களுடனிருந்து முதலில் விநாயகரைப் பூஜித்து லக்ன பத்திரிகை கொடுத்தான். சோதிடர்களுக்கும் ஸ்ரீராமருக்கும் தக்க உபசாரஞ் செய்து தன் கிருகம் சென்றான். பிறகு இராமரது உத்திரவுப்படி லக்ஷ்மணர்மண்டபம்முதலியவைகளை நிர்மாணித்தார். பூரிகீர்த்திஅப்பட்டணம் முழுதும் கொடிகள் தோரணங்கள் இவைகளால் அலங்கரிக்க உத்தரவளித்தான். பிறகு அந்த முகூர்த்த சமயத்தில்ஸீதை முதலிய ஸ்திரி ஜனங்கள் குசனையும் லவனையும் மணப்பெண்களையும் திவ்யஆஸனங்களில்உட்காரவைத்து அவர்களுக்கு எண்ணெய்தேய்த்து மங்களவாத்திய முழங்க மங்கள ஸ்நானம் செய்துவைத்தார்கள். அப்போது இராமர் முதலியவர்களும் வெகு ஆனந்தமாய் எண்ணெய் தேய்த்துக்கொண்டு மங்கள ஸ்நானம் செய்தார்கள்.

பிறகு புரோகிதரான வஸிஷ்டர்மற்றுமுள்ள மகரிஷிகளோடும் இராமரும் அவரது பந்து மித்திரவர்க்கங்களும் குசன் லவன் முதலான குழந்தைகளும் எண்ணிறந்த இன்னும்மற்றுமுள்ள யாவரும் முத்துமயமான அம்மண்டபத்தில் வீற்றிருக்கும்போது வசிஷ்டர் சில முனிவருடனிருந்து விக்நேச்வர பூஜையைச் செய்வித்து, கிரமமாக புண்யாகம் முதலான காரியங்களைச் செய்வித்தார். தேசாசாரங்களையும் குலாசாரங்களையும் சரியாக நடப்பித்து இஷ்ட தேவதையைப் பூஜித்து கல்யாணத்திற்குரிய தேவதையை பிரதிஷ்டை செய்தார். அப்போது ஸீதை முதலான ஸ்திரீகளும்

சிவப்பு, பச்சை, மஞ்சள் முதலான வர்ணமுள்ள விலையுயர்ந்த ஜரிகை வஸ்திரங்களையுடுத்துக்கொண்டு அநேகவிதமான ஆபரணங்களைப்பூண்டு மண்டபத்திற்குச் சமீபத்தில் வந்து வெகு அழகாக விளங்கினார்கள். இதற்குமுன் ஸ்வயம்வரத்திற்கே போயிராத ஆயிரகணக்கான முனீச்வரர்கள் அந்த ஸ்வயம்வரத்தைப் பார்க்க வந்தார்கள். குசன்லவன் இவர்களுக்கு விவாகமகோற்சவம் என்றுகேள்விப்பட்டு அநேகம் பிராமணர்கள் வந்தார்கள். இராமசந்திர பிரபு இலட்சுமணரோடும் சீதையோடுமிருந்து அந்த பிராமணர்களுக்கு வஸ்திரம் ஆபரணம் பசு முதலியவைகளை அநேகமாகக் கொடுத்தார். அப்புறம் பூரிகீர்த்தி பந்துமித்திரர்களோடும் அநேகம் அரசர்களோடும் மங்களவாத்திய கோஷத்தோடும் குசலவர்களையழைத்துச் செல்ல அவர்கள் வீட்டிற்கு வந்தான். மகா வீரியமுள்ள பூரிகீர்த்தியினுடைய பிள்ளை குசனையும் லவனையும் விலையுயர்ந்த வஸ்திரம் ஆபரணம் இவைகளைக் கொடுத்து மண்டபத்தில் பூஜித்தான். பிறகு அவ்விரண்டு குமாரர்களும் பெரிய யானைகளின் மேலேறிக் கொண்டு திவ்ய சாமரங்கள் வீச எதிரில் தாஸிகள் நர்த்தனம் செய்ய மங்கள வாத்தியங்கள் கோஷிக்க வந்திமாகதர்கள் ஸ்தோத்திரம் செய்ய ஸீதாதேவி முதலான உத்தமஸ்திரீகள் பெண்யானைகளின்மேலேறி கொண்டு பின்னேவர, பட்டணத்து ஸ்திரீகள் உப்பரிகைகளின் மேலேறிக்கொண்டு புஷ்பங்களையும் பொறிகளையும் வருஷிக்க, இன்னும் சிலர் மஞ்சள், சிவப்பு முதலிய பல வர்ணமுள்ள தானியங்களையும் மங்களகரமான முத்துக்களையும் வாரியிறைக்க, வெகு ஆநந்தத்தோடு வீதிகளில் சென்றார்கள். அப்போது புஷ்பங்கள் பரப்பிய வீதிகளையும் அலங்காரமாக மரம்போல் செய்யப்பட்ட தூண்களையும் கொடிமரங்களையும் நெருப்புப்பட்டதும் எரிகிற விருக்ஷங்களையும் மனிதரைப் போல் செய்து வண்டிகளில் வைத்திழுக்கப்பட்ட பதுமைகளையும் ஆகாயத்தில் மின்னல்போல் செய்து வைக்கப்பட்ட ஒளியையும் இன்னும் அநேக வேடிக்கையான பாணங்களையும் பார்த்துக்கொண்டு உல்லாஸமாகச் சென்றார்கள். அதற்

குப்பிறகு அவர்கள் பூரிகீர்த்தியின் உத்தமமான மண்டபத்தின ருகே சென்று யானைகளிலிருந்திறங்கி உள்ளே பிரவேசித்தார்கள். அப்பொழுது அவருடைய குருக்கள் பிராம்மணர்களோடு அவர்களுக்கு சாஸ்திரப்படி மதுபர்க்கம் முதலானவைகளையும் ஆஸனம் முதலானவைகளையும் கொடுத்து உபசரித்தார்கள். இச்சமயம் மண்டபத்திற்கு ஸமீபத்தில் ராமராஜன் ஸீதையோடும் இன்னும் மற்றுமுள்ள சுமங்கலிகளோடும் உபாத்தியாயர் கூறியபடி அப்பெண்களுக்கு பூஜை செய்தார். பிறகு நல்ல முகூர்த்தம் வந்ததும் குருவானவர் குசனை சம்பிகையோடும் லவனை சுமதியோடும் வெவ்வேறு வேதிகைகளில் சேர்த்து உட்கார வைத்து அவர்களுக்கு நடுவில் ஒரு பட்டு வஸ்திரத்தை மறைவாகக் கட்டி அவரவர்களுக்குத் தனித்தனியே வெவ்வேறு வஸ்திரங்களைக் கொடுத்து உடுத்துக் கொள்ளச் சொல்லி அலங்கரித்தார்கள். அப்போது மங்கள வாத்தியங்கள் முழங்கின. அந்த மங்கள சப்தங்களைக் கேட்டுக் கொண்டு ஜனங்களெல்லோரும் நிச்சப்தமாயிருந்தார்கள்.

## 3-வது சருக்கம்.

முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

சீதை, இராமர், பார்வதி, பரமேசுவரர், கணேசர், நந்தி சுப்பிரமணியர், இலட்சுமணர், பரதர், பிர்ம்மா, சத்துருக்னர், முனிவர்கள், புண்ணிய தீர்த்தங்கள், பர்வதங்கள், திக்பாலர்கள், சூரிய சந்திரர்கள், அனுமந்தர் இவர்கள் யாவரும் உங்களுக்கு மங்களமருளட்டும்'' என்று குருவாகிய வசிஷ்டர் ஆசி கூறி, "ஸீதாபதியாகிய ஸ்ரீ ராமசந்திர பிரபுவை ஸ்மரிப்பதே சுபலக்னம், சுபதினம், சுபநக்ஷத்திரம், சந்திரபலம், வித்தியாபலம், தெய்வபலம் முதலியவைகளாகும்'' எனவும் மங்கள வசனங்கள் கூறி ஆசீர்வதித்தனர். பற்பல வாத்தியங்கள் முழங்கின. இத்தருணத்தில் வசிஷ்டர் குறுக்கிடப்பட்டிருந்த வஸ்திரத்தை எடுத்து"ஓம் புண்யாகம்'' என்று சொன்னர். பிறகு சாஸ்திர முறைப்படி பாணிக்ரஹணத்தை நடத்தி லாஜஹோமம் (பொறியிடல்) முதலியவைகளையும் மங்களாசரப்படி செய்து முடித்தார். இச்சமயம் மங்கள வாத்தியங்கள் முழங்கின. தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள். வந்திமாகதர்கள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். சந்தோஷத்துடன் அநேக தானங்கள் செய்யப்பட்டன. பிறகு குசன் லவன் இருவரும் தத்தம் பத்தினியை இடுப்பில் எடுத்துக் கொண்டு ஸீதை, ஊர்மிளை முதலிய பல ஸ்திரிகள் சூழ போஜன சாலைக்குச் சென்றார்கள். அங்கே பார்வதி பரமேசுவரரைப் பக்தியுடன் பூஜித்தார்கள்.

* * * * *

பிறகு குசன் லவன் இவ்விருவரும் தத்தம் பத்தினியை அருகில் வைத்துக் கொண்டு அநேக ஸ்திரீகளுக்கு மத்தியில் போஜனஞ் செய்தார்கள். உபநயன காலத்தில் தாயாரோடும் விவாககாலத்தில் பத்தினியோடும் புசிக்க வேண்டுமென்பது விதி ; மற்றவரோடு புசிக்கின் பாபமுண்டாகும். இராமபிரானும் தமது பந்துக்கள், மித்திரர்கள் இராஜ சிரேஷ்டர்கள் இவர்களுடன் பூரிகீர்த்தியினது கிருகத்தில் போஜனஞ் செய்து மகிழ்ந்தார். இவ்விதமே ஸீதையும் பூரிகீர்த்தியினது கிருகத்தில் தன் தோழி

மார்களுடன் போஜனம் செய்தாள். யாவரும் போஜனம் செய்த பின்பு, குசன் லவன் இவ்விருவரும் தங்கள் தாய்மார், மாமியார் இவர்களுக்கெதிரில் எல்லா ஸ்திரீகளும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அங்கிருந்த உத்தம ஸ்திரீகளின் சொற்படி, தத்தம் பத்தினியினுடைய பாதங்களில் தலைவைத்து வணங்கினார்கள். அப்பெண்களும் மந்தகாஸம் செய்து தங்கள் புருஷனை வணங்கினார்கள். பிறகு வதூவரர்கள் அழகாய் நலங்கிட்டு விளையாடி மகிழ்ந்தார்கள். இவ்வாறு உற்சாகமான அநேக வேடிக்கைகள் மூன்று நாள் நிகழ்ந்தன, நான்காம் நாள் மூங்கில் பாத்திரங்களில் தீபம் வைத்து ஆலத்தி சுற்றித் தம்பதிகளுக்குத் திருஷ்டிப் பரிகாரம் செய்தார்கள். பிறகு நர்த்தனம் செய்வதில் தேர்ந்தவர்கள், தம்பதிகளைத் தங்கள் தோளில் தூக்கிக் கொண்டு நர்த்தனம் செய்தார்கள். இதைக்கண்ட தம்பதிகளின் தாய்மார்கள் வெகு சந்தோஷமடைந்தார்கள். பூரிகீர்த்தியானவன் தனக்கு இராமபிரானுடைய சம்பந்தம் கிடைத்ததென்ற சந்தோஷத்தினால் குசனுக்கும் லவனுக்கும் பதினாயிரம் யானைகள், பதினாயிரம் பல்லக்குகள், ஐம்பதினாயிரம் குதிரைகள், பதினாயிரம் தேர்கள், கணக்கற்ற ஆபரணங்கள், வஸ்திரங்கள் பசுக்கள், சேவகர்கள், தாஸிகள் முதலியவர்களைத் தனித்தனியே ஸ்திரீதனமாகக் கொடுத்தான். இவ்விதம் மரியாதை பெற்றுக்கொண்ட பின்பு இராமபிரான் தமது குமாரர்கள், அவர்களின் பத்தினிகள், ஸீதை, பந்துக்கள் பட்டணத்து ஜனங்கள் இவர்களோடும் மித்திரர்களோடும் முன்போலவே பலவித வேடிக்கைகளுடன் தாம் இறங்கியிருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தார். பிறகு அந்த வடபுரியில் ஒரு மாத காலம் ஸீதாதேவியுடன் சுகமாக வஸித்திருந்து பிறகு யாவருடனும் தமது பட்டணத்திற்குப் புறப்பட்டார்.

அயோத்தியை யாள இராமபிரானால் முன்பு ஏற்படுத்தப்பட்ட விஜயன் என்பவன் இராமர் வருவதைக் கேள்விப்பட்டு, பட்டண முழுவதையும் பதாகை தோரணம் புஷ்பம் முதலியவற்றால் அலங்கரித்தான். பற்பலவித வாத்தியங்களுடனும் அநேக யானைகளுடனும் புறப்பட்டு இராமரை எதிர்கொண்டழைத்தான்.

இராமர் தமது பிள்ளைகள் அவர்கள் பத்தினிகள் மித்திரர்கள் பந்துக்கள் முதலியவர்களோடு சந்தோஷமாக வாத்தியக்காரர்கள் வாத்தியங்களை முழக்கவும், வந்திமாகதர்கள் ஸ்தோத்திரம் செய்யவும், பட்டணத்தில் பிரவேசித்தார். குசன் லவன் இவ்விருவரும் தத்தம் பத்தினியோடு யானையின் மீதேறி வருவதைக் கண்ணுற்ற அந்நகர ஸ்திரீகள் யாவரும் புஷ்பங்களையும் பொறிகளையும் வாரி யிறைந்து வாழ்த்தினார்கள். இவ்வித வைபவத்துடன் இராமபிரான் தமது கிருகத்திற்குச்சென்று லக்ஷ்மியைப் பூஜித்து, அநேக தானங்களைச்செய்தார். மித்திரர்களுக்கும் பட்டணம் தேசம் இவைகளிலிருந்து வந்தசகலஜனங்களுக்கும் வஸ்திராபரணங்களளித்து சந்தோஷப்படுத்தினர். பின் தம்முடன் வந்த பூரிகீர்த்தியின் மந்திரிகளுக்கு நல்ல மரியாதைசெய்து அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பினர். இதன் பின் சுக்ரீவன் விபீஷணன் இவர்களையும் உபசரித்து அனுப்பினர். யாவரும் பரமானந்தத்துடன் இராமரை வணங்கி விட்டுத் தங்கள் இருப்பிடம் சென்றார்கள். இராமபிரான் தமது குமாரர்கள் அவர்கள் பத்தினிகள் பந்துக்கள் இவர்களுடனிருந்து சுகமாக இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார். பிறகு பூரிகீர்த்தி சிராவண மாதம் அமாவாசை முதல் பதினாறு பண்டிகைத் தினங்களிலும் இராமபிரானை மக்கள்களோடும் பந்து மித்திரர்களுடனும் தன் கிருகத்திற்கு வரவழைத்து அவர்களுக்கு வஸ்திராபரணங்களளித்து உபசரித்து, பிறகுஅயோத்திக்கு அனுப்பி வந்தான். இவ்விதம் வருஷந்தோறும் செய்வது வழக்கம். ஏ விஷ்ணுதாஸ! ஒரு வருஷத்திலுள்ள பதினாறு பண்டிகைத் தினங்களையும் உனக்குச் சொல்லுகிறேன் கேள். சிரவணமாதம் அமாவாசை, புரட்டாசிமாதம் சுக்கிலபக்ஷம் சதுர்த்தசி, விஜயதசமி, தீபாவளியின் நான்கு தினங்கள், மார்கழி மாதம் சுக்லபக்ஷம் பஞ்சமி, மகரசங்கிராந்தி (தைமாதப் பிறப்பு) இரதசப்தமி, சித்திரை மாதம் சுக்லபக்ஷம் பிரதமை, பூர்ணிமை அக்ஷயதிருதியை, ஆடி மாதம் பூர்ணிமை, சிராவண மாதம் சுக்லபக்ஷம் பஞ்சமி ஆகிய இப்பதினாறு தினங்களும் வருஷத்தில் பண்டிகைத் தினங்களாம்.

ஏ விஷ்ணுதாஸ! நான் கேட்டபடி குசலவர்களின் விவாகத்தை உனக்குக் கூறினேன். இராமபிரான் மங்களகரமாக சொர்க்கத்திற்குச் சென்ற பிறகு குசன் அயோத்தியில் சரயூ நதியில் சம்பிகையோடு ஜலக்ரீடை செய்வான். அப்பொழுது அவன் வலது கையில் தரித்திருக்கும் தங்கக்காப்பு ஜலத்தில் விழுந்து விடப் போகிறது. அந்த ஜலத்தில் வசித்துவரும் குமுதம் என்னும் ஸர்ப்பத்தின் சகோதரியான குமுதவதி அதை எடுத்துக் கொண்டு தனது வீட்டிற்குப் போகப் போகிறுள். குசன் தன் காப்பைப் பெறுவதன் பொருட்டு சரயு நதியின் ஜலத்தை வற்ற வடித்து விடுகிறேனென்று கூறி பாணத்தை வில்லில் பூட்டப் போகிருன். பிறகு அச்சரயூ நதி குமுதத்தை வணக்கமாகக் கேட்க்கப்போகிறது. அந்தக் குமுதம் என்னும் சர்ப்பம் குசன் கோபமடைந் திருக்கிருனென்பதைக் கேட்டுப் பயந்து தன் சகோதரி குமுதவதியினிடமிருந்த காப்பை வாங்கி வந்து குசனிடம் கொடுத்துக் குமுதவதியையும் குசனுக்கு விவாகம் செய்துகொடுக்கப் போகிறது. இதன் பின் குசனுக்கும் குமுதத்துக்கும் சிநேகம் உண்டாகப்போகிறது. இந்த விதமாகக் குசன் குமுதவதியென்னும் ஓர் மனைவியை வெகு காலத்திற்குப் பிறகு அடையப்போகிருன், அவளிடத்தில் குசனுக்கு அதிதி என்ற ஓர் ஆண் பிள்ளை உண்டாகப்போகிறது. சம்பிகைக்குப் பெண்களை யன்றிப் பிள்ளைகளில்லாமற் போகப் போகிறது. அதிதியினிடமிருந்து சூரியவம்சம் விருத்தி யடையப் போகிறது. இவ்விதம் நான் குசனுடைய இரண்டு மனைவிகளைப் பற்றியும் வர்ணித்து விட்டேன். பிறகு குசலவர்கள் தத்தம் பத்தினியோடு சுகமாகவிருந்து வந்தார்கள்.

## 4-வது சருக்கம்.

முற்றிற்று.

## 5-வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ஒருநாள் இராமசந்திர பிரபு சீதை, தமது குமாரர்கள், பந்துக்கள், மந்திரிகள் இவர்களோடும் பட்டணத்து ஜனங்களோடும் புஷ்பகவிமானத்தின் மீதேறிக்கொண்டு வனத்திற்குச் சென்றார். அங்கே அநேக அற்புத வஸ்துக்களைப் பார்த்துக்கொண்டும் சீதாதேவியை ஆனந்தப்படுத்திக்கொண்டும் வனத்தின் கண் வெகு தூரம் சென்று தண்ட காரண்ணியத்தில் அகஸ்தியருடைய ஆசிரமத்திற்குச் சமீபம் சென்றார். முனிவர் பிரானாகிய அகஸ்தியர் இராமரது வருகையை யறிந்து அவரை யாவருடனும் தமதாசிரமத்திற்குள் அழைத்துச் சென்று சற்றுப் பேசியிருந்து விட்டுப் பிறகு ஸ்நானம்செய்து வெகு நியமத்தோடு ஏகாந்தத்திலிருந்து அன்ன பூர்ணையான மஹா லக்ஷுமியைத் தியானம் செய்தார். அப்போது அந்த தேவியானவள் அவருக்குப் பிரத்தியக்ஷமாகி அவரிடம் பாயஸம் நிறைந்த ஓர் பாத்திரத்தைக்கொடுத்து "இதிலிருந்து அநேகவித சிரேஷ்டமான பதார்த்தங்களுண்டாகும்,அவைகளை யெடுத்து லோபாமுத்திரை இங்கு வந்திருப்பவர்களுக்குப் பரிமாறட்டும்" என்று கூறிமறைந்து விட்டாள். உடனே அப்பாத்திரத்திலிருந்து போஜனத்துக்குரிய சகல பதார்த்தங்களுமுண்டாயின. அவைகளையெடுத்து அங்கிருந்த பிராமணர்களுக்கு முதலில் பரிமாறிப்பிறகு இராமர் முதலிய யாவருக்கும் பரிமாறி திவ்யபோஜனம் செய்வித்தாள். பிறகு அகஸ்தியர் இராமபிரானுக்கு ரத்னமயமான காப்பும் சீதாதேவிக்கு திவ்ய குண்டலங்களும் மனமுவந்து அளித்தார்.இவ்விதம் உபசரிக்கப்பட்ட பிறகுஇராமர் அகஸ்தியரோடுவிமானத்திலேறிக்கொண்டு முன்போல் தண்டகாரண்யத்தில் சஞ்சரித்தார். அங்குள்ள நதிகளையும் விருக்ஷங்களையும்மலைகளையும் இன்னும் மற்றுமுள்ள ஆசிரமங்களையும் ஜானகிக்கு காண்பித்துச் சந்தோஷ மடைந்தார். இவ்விதம் சஞ்சரித்துக்கொண்டு போகையில் வழியில் பஞ்சாப்ஸரஸ் என்ற ஓர் குளத்தைப் பார்த்து அன்றிரவு அங்கேயே வசித்தார். நடு ராத்திரியில் அந்த இடத்தில் அப்ஸரஸ்திரீகள் பாடும் சப்தத்தையும் அவர்கள் நர்த்தனம் செய்யும் சப்

தத்தையும் கேட்டார். அங்குள்ள மற்றவர்களும் அச்சப்தத்தைக் கேட்டார்கள். அப்ஸரஸ்திரீகளைக் காணுமல் சப்த மட்டும் உண்டா கக்காரணம் யாதென அகஸ்தியரை இராமர் கேட்டார். அகஸ்தியர் இராமா! தங்களுக்குத் தெரியாததா? எதையும் என் வாயால் கேட் கத் தாங்கள் எண்ணங்கொண்டீர் போலும்? அங்ஙனமாயின் இதோ கூறுகிறேன் கேளுங்கள்.

முற்காலத்தில் கந்தர்வ ராஜனுடைய ஐந்து பெண்கள் இக் குளத்திற்குவந்துகிரீடைசெய்தார்கள். அவர்கள் ப்ரௌடையாகாத வர்கள். இதே சமயத்தில் எழு நாக கன்னிகைகள் இக்குளத்தில் ஜலக் கிரீடைசெய்து கரையேறினர்கள். அந்நாக கன்னிகைகளுக் கும் கந்தர்வ கன்னிகைகளுக்கும் அன்று அதிக சிநேகமுண்டாயி ற்று. பிறகு இருவகுப்பினரும் அடிக்கடி இந்தக் குளத்திற்கு வந்து விளையாடுவது வழக்கம். அவர்கள் வருவதை அப்போது இங்கே தவஞ்செய்து கொண்டிருந்த ஓர் முனிவர் அடிக்கடி தடுத்து வந் தார். அவர்கள்கன்னிகைகளானதாலும், இந்திரனல்அந்தமுனிவரது தவத்தைக் கெடுக்க ஏவப்பட்டவர்க ளானதாலும், அவரது வார்த்தையைச் சிறிதும் இலட்சியம் செய்யாமல் அடிக்கடி அங்கே வந்து கொண்டிருந்தார்கள். முனிவர் அவர்கள் செய்கையில் கோப மடைந்தாராயினும், சபித்தால் தமது தவம் குறைந்து விடுமென் றஞ்சி வேறு விதமாகத் தண்டிக்க மனதில் ஆலோசித்து, தமது வாய் மொழியால் ஜல தேவதையை ஏவினர். உடனே ஜலதேவதை கள் வெளிக்கிளம்பி பகற்பொழுதில் அந்தக் கன்னிகைகளைத் தங் கள் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றன. அந்தக் கன்னி கைகளுக்கு அவ்விடத்திலிருந்து தப்பித்து வரமுடியாமையால் அங்கேயேயிருந்து இவ்விதம் பாடியும் நர்த்தனம் செய்தும் வரு கிறார்கள். இப்பொழுது கேட்டது அவர்கள் பாட்டுத்தான். இந்த விருத்தாந்தத்தைத் தாங்கள் கேட்டபடி சவிஸ்தாரமாகக் கூறிவிட் டேன். இக்கன்னிகைகளுக்குத் தாங்கள் ஏதாவது நன்மை செய்வ தாயிருந்தால் செய்யலாம். நாக கன்னிகைகளும் கந்தர்வ கன்னிகை கைகளும் சுகப்படுவார்கள் என்றார். இதைக்கேட்டதும் இராமர் இலட்சுமணனைப் பார்த்து, "ஏ குழந்தாய்! எனது வில்லைக்கொண்

டுவோ? அதில் பாணத்தைப் பூட்டி ஜலதேவதைகளை அடித்து நாக கன்னிகைகளையும் கந்தர்வ கன்னிகைகளையும் இந்தக்ஷணம் விடு விக்கிறேன், என்றார். உடனே இலட்சுமணர் வில்லையெடுத்து வந்து இராமரிடம் கொடுத்தார். இராமர் வில்லை வாங்கிக்கொண்டு வளை த்து நாணேற்றித் தமது பெயர்வெட்டப்பட்ட ஓர் பாணத்தை அதில் பொருத்தினர். அச்சமயம் பூமி நடுங்கிற்று. சப்த சமுத்தி ரங்களும் கலங்கின. பயங்கரமான காற்றுக் கிளம்பிற்று. திக்குக ளெங்கும் மணல்மாரி பொழிந்தது. ஆகாயத்திலிருந்து நக்ஷத்திரங் களெல்லாம் கீழே விழுந்தன. காட்டு மிருகங்கள் பயந்து நாட்டிற்கு ஓடிவந்து விட்டன. மலைகளெல்லாம் நடுங்கின. மேகங்கள் இரத்த மழை பொழிந்தன. இந்த உத்பாதத்தை ஜலதேவதைகள் கண்டு பயந்து அந்த கன்னிகைகளெல்லோரையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீராமரிடம் வந்து அவரை வணங்க, நன்றாய் அலங்கரிக்கப்பட்ட அப்பன்னிரண்டு பெண்களையும் இராமரது சரணாரவிந்தங்களில் ஸமர்பித்து ஏ மஹா பராக்ரமசாலியான இராமசந்திர பிரபுவே ! நாங்கள்செய்த அபராதத்தை மன்னித்து எங்கள்மேல் பாணத்தை எய்யாமல் அனுக்ரஹம் செய்யவேண்டும். தங்களுடைய சூரிய வம் சத்து ஸ்திரீகளுக்கு நாங்கள் குற்றம் செய்தவர்களன்று. தாங்கள் முந்தி கங்கைக்கரையில் ஸ்திரீயெனக் கருணை கூர்ந்து பூமிதேவி யைக் காப்பாற்றினீர். ஆனல் தாடகை முதலிய லோககண்டகிக ளைக் கொன்றது உலகத்தாரெல்லாருக்கும் க்ஷேமத்தை யுண்டாக்கு வதற்காகவே என்று கூறிப் பிரார்த்தித்தன. இவ்வாறு அவைகள் பிரார்த்தித்ததைக்கேட்ட இராமர் புன்னகைகொண்டு வில்லைத் தள ர்த்தி பாணத்தை எடுத்து அம்புறாத்தூணியில் வைத்துவிட்டு அவர் களைத் தத்தம் இடத்திற்கு போகும்படி கட்டளையிட்டார். இதன் நடுவில் கந்தர்வர்களும் பன்னகர்களும் இராமரது செய்கையை யறி ந்து அவரைப்பார்ப்பதற்கு உபாயனங்களை யெடுத்துக்கொண்டு அவ ருகில் வந்து இராமர் ஸீதை அகஸ்தியர் இவர்களை வணங்கி உபாசனங்களை அவரது சரணார விந்தங்களில் சமர்ப்பித்துக் கைகூப்பி நின்று மிகவும் வணக்கமாய்க் கூறுகிறார்கள்.

## 5-வது சருக்கம்.

முற்றிற்று.

## 6-வது சருக்கம்.

### கந்தர்வர்களும் பன்னகர்களும் கூறுகிறார்கள்.

தங்கள் பெண்களை ஜல தேவதைகளிடமிருந்து விடுவித்தனர் இராமபிரானென்பதைக் கேட்ட பன்னகர்களும் கந்தர்வர்களும் சந்தோஷமடைந்து உடனே இராமபிரானிடம் வந்து, தாமரைப்பூப் போன்ற முகத்தையுடைய இராமசந்திர பிரபுவே! வந்தன மளிக்கின்றோம். எங்கள் குமாரத்திகளைத் தாங்கள் ஜலதேவதைகளிடமிருந்து விடுவித்தீர்கள். ஆகையால், கன்னிகைகளான அவர்களைத் தங்கள் குமாரர்களுக்கு விவாகம் செய்துகொள்ளவேண்டும். இன்றைக்கு நாங்கள் கிருத கிருத்தியர்களானோம். இன்று தான் எங்கள் குலம் பரிசுத்தமாயிற்று. இன்று தங்கள் தரிசனத்தால் நாங்கள் யாவரும் கரை யேற்றப்பட்டோம். எழு ஜன்மங்களிற் கிடைக்கக்கூடிய புண்ணியம் இன்று எங்களுக்குக் கிடைத்தது. ஆகையால் பிரபுவே! நம் மிருவருக்கும் சம்பந்தம் உண்டாகட்டும் என்று கூறிப் பிரார்த்தித்தார்கள்.

இவ்விதம் அவர்கள் பிரார்த்தித்ததும் இராமபிரான் தமதுபத்தினி சீதாதேவியுடன் அவர்கள் பேச்சுக்கிணங்கி அகஸ்தியரைப் பார்த்தார். அகஸ்தியர் இராமரைப்பார்த்து, இராமா! நீர் வைகுண்டம் சென்றவுடன் குமுதனுடைய சகோதரியாகிய குமுதவதியென்பவள் குசனுக்கு மனைவியாகப்போகிறாள். குசனுக் குமுதவதியினிடம் அதிதியென்ற ஓர் புத்திரனுண்டாகப் போகிறான். அந்த அதிதியே ராஜ்யமாளுகிறவனும் வம்ச விருத்தி செய்கிறவனுயுமிருப்பான். ஆகையால் நீர் இப்போது இந்த எழு நாககன்னிகைகளையும் குசனைத்தவிர மற்ற எழுவர்களுக்கும் விவாகஞ்செய்துகொள்ளவேண்டும். ஐந்து கந்தர்வ கன்னிகைகளையும் யூபகேது, குசன், லவன் இவர்களைத்தவிர மற்ற ஐந்து பிள்ளைகளுக்கும் விவாகம் செய்துகொள்ளவேண்டும். யூபகேது இராக்ஷச விவாக முறையில் ஓர் கன்னிகையைத் தனக்குப் பத்தினியாக அடையப்போகின்றான். இவ்விதம் தங்களுடைய பிள்ளைகளுக்கு மனைவிகளேற்பட்டுச் சுகமாக வாழ்வார்கள். தங்களுக்குப் பேரன்மார்களும் அவர்களுக்குப் பேரன்மார்களும் உண்டாகப் போகிறார்கள். தாங்கள் இவைக

ளனைத்தையும் பார்த்து ஆனந்த மடைந்துவிட்டுப் பின் சீதை யோடும் பட்டணத்து ஜனங்களோடும் வைகுண்டம் போகப்போகி றீர்கள் என்றார். இராமபிரான் முனிவர் பிரானாகிய அகஸ்தியர் கூறி யதைக்கேட்டு, அவ்விதமே நடப்பதாக ஒப்புக்கொண்டு கந்தர்வர்க ளையும் பன்னகர்களையும் அவரவர் கன்னிகைகளின் பெயரைக்கூறும் படி கேட்டார். கந்தர்வர்களில் ஒருவன் உடனே இராமசந்திர பிர புவை நமஸ்கரித்து, அக்குளக்கரையில் நின்று சந்திரிகை, சந்திர வதனை சஞ்சலை, சபலை, சலை என்பவைகளே எங்கள் கன்னிகைக ளின் பெயர்கள் என்றான். பிறகு பன்னகருள் ஒருவனெழுந்து இரா மரை“வணங்கிபிரபுவே! கஞ்சானனை, கஞ்சலோசனை, கஞ்சாங்கி, கலாவதி, கலிகா, கமலா, மாலதி என்பவைகளே எங்கள் கன்னி கைகளின் பெயர்கள்” என்று கூறினன். இவ்விதமான கன்னிகைக ளின் பெயரைக் கேட்டதும் இராமர் சந்தோஷமடைந்து, அவர்க ளைப் புஷ்பக விமானத்தின்மீது ஏற்றி வைத்துக்கொண்டு அன்றிரவு அக்குளக்கரையிலேயே எல்லாருடனும் சுகமாக இருந்தார்.

பிறகு மறுநாட்காலையில் இராமபிரான் எழுந்து ஸ்நானஞ்செ ய்து விதிப்படி ஹோமம் செய்து முடித்து கந்தர்வர்களையும் பன்ன கர்களையும் பார்த்து இந்த மண்ணுலகில் வசிக்கும்யான் விவாகம் நடத்துவதற்கு ஸொர்க்கலோகத்திற்காவது பாதாள உலகத்திற்கா வது வரமுடியாது. ஆகையால் சினேகிதர்களான நீங்கள் உங்கள் உலகத்திற்குச் சென்று உங்கள் மனைவிகள் உறவினர்கள், நண்பர் கள் இவர்களுடன் அயோத்திக்கு வந்து சேருங்கள். நான் இப் போது இந்த விமானத்தின் மீதேறி அயோத்திக்குச் செல்கிறேன் என்றார். அவர்கள் இராமர் உத்தரவுப்படி நடக்கச் சம்மதித்துத் தங்கள் தங்கள் உலகம் சென்றார்கள். இராமபிரானும் அக்கணமே யாவருடனும் விமானத்தின்மீதேறி அயோத்தியாபட்டணம் வந்து சேர்ந்தார். அக்கன்னிகைகள் யாவரையும் வசிஷ்டருடைய கிருகத் திற் கனுப்பினர்.

பிறகு இராமர் சபை மத்தியில் இலட்சுமணரை யழைத்து இலட்சுமணா! அரசர்களையும், முனிவர்களையும் நண்பர்களையும் வரவழைக்கவேண்டும். தேசம் பட்டணம் இவைகளிலிருக்கும் ஜன

ங்கள் யாவரும் வரவேண்டும். நமது நகரத்து எழு அகழிகளையும் சுத்தப்படுத்தி எங்கும் அலங்கரிக்கவேண்டும். வீடு தவறாமல் சுண்ணாம்பு பூசப்பட்டு அழகான சித்திரங்கள் எழுதப்படவேண்டும். தேவாலயங்கள் யாவையும் சுத்தப்படுத்தவேண்டும். ஆங்காங்கு கொடிமரங்களை நாட்டி அலங்கரிக்க வேண்டும். நாலா பக்கங்களிலும் தோரணங்கள் கட்டவேண்டும். தங்கமயமான வேதிகைகள் பல அமைக்கவேண்டும். ஆயிரக்கணக்கான யானைகள் குதிரைகள் பல்லக்குகள் இவைகளைச் சிங்காரிக்கவேண்டும். கந்தர்வர்களும் பன்னகர்களும் வசிக்கத்தக்க கூடாரங்க ளமைக்க வேண்டும். அவைகளில் சகல சாமான்களும் நிறைந் திருக்க வேண்டும். இவைகளன்றி மற்றவைகளில் உனக்கு நல்லதெனத் தோன்றுவனவற்றையும் அவசியம் நீ செய்யலாமென்று இராமர் உத்தரவிட்டார். இராமர் இவ்விதம் உத்தரவுசெய்ததைக் கேட்ட லட்சுமணர்உடனே அதேமாதிரி எல்லாவற்றையும் செய்து முடித்தார். பிறகு கந்தர்வர்களும் தமது பந்து மித்ர புத்ரகளத்திராதிகளோடு அயோத்திக்கு வந்து சேர்ந்தார்கள். பன்னகர்களும் மனிதவேடங்கொண்டு யானை, குதிரை ரதம் காலாள் முதலிய விருதுகளோடும் பந்துமித்ராதிகளோடும் வந்து சேர்ந்தார்கள். இவர்களின் வரவையறிந்த இராமபிரான் அநேக மங்கள வாத்தியங்களோடு அப்ஸர ஸ்திரீகள் நர்த்தனம் செய்ய எதிர்கொண்டு சென்று அவர்களை மரியாதையுடன் அழைத்து அவர்களுக்கென்று ஏற்படுத்தப்பட் டிருந்த கிருகங்களில் அவர்களை யிறக்கினர்.

பிறகு ஒரு சமயத்தில் இராமர் சபையில் வீற்றிருந்து வசிஷ்டரையும் மற்ற புரோகிதர்களையும் சோதிடர்களையும் வரவழைத்து இவர்களுக்குத் [குமாரர்களுக்கு] தனித்தனியே விவாகம்செய்யமங்களகரமான முகூர்த்தங்களை இவ்வருஷத்திலேயே நிச்சயிக்கவேண்டுமெனக் கூறினர். சோதிடர்கள் மிகவும் சிரேஷ்டமான முகூர்த்தங்களைப்பார்த்து வைகாசி மாதத்தில் நல்ல இரண்டு முகூர்த்தங்களும் ஆனிமாதத்தில் இரண்டுமுகூர்த்தங்களும் மார்கழி மாதத்தில் இரண்டு முகூர்த்தங்களும் மாசிமாதத்தில் மூன்று முகூர்த்தங்களும் பங்குனி மாதத்தில் மூன்று முகூர்த்தங்களும் இருக்கின்றனவெனக்

குறிப்பிட்டார்கள். இவ்வாறு பன்னிரண்டு பெண்களுக்கும் விவாகம் நிச்சயம்செய்தார்கள்.

வைகாசிமாத முகூர்த்தத்தில் அங்கதன் லவன் இவர்களுக்கும் ஆனிமாத முகூர்த்தத்தில் சித்திரகேது புஷ்கரன் இவர்களுக்கும் மார்கழிமாத முகூர்த்தத்தில் தக்ஷன் சுபாகு இவர்களுக்கும் மாசிமாத முகூர்த்தத்தில் யூபகேது அங்கதன் சித்திரகேது இவர்களுக்கும் பங்குனி மாத முகூர்த்தத்தில் புஷ்கரன் தக்ஷன் ஸுபாகு இவர்களுக்கும் விவாகங்களை நடத்தச் சோதிடர்கள் ராமாது ஸந்நிதியில் நிச்சயம் செய்தார்கள். இவ்வாறு அவர்கள் கிரமமாய்ப் பன்னிரண்டு முகூர்த்தங்களையும் நிச்சயஞ் செய்த பிறகு ஸ்ரீராமசந்திர பிரபு அவர்களுக்குத் தக்கபடி வெகுமானமளித்துபசரித்தார்.

## 6-வது சருக்கம்

முற்றிற்று.

## 7-வது சருக்கம்.

ராமதாஸர் கூறுகிறார்.

இவ்வாறு விவாக முகூர்த்தம் நிச்சயம் செய்த பிறகு அந்தச் சோதிடர்கள், வசிஷ்டரையும் இன்னும் மற்றுமுள்ள புரோகிதர்களையும் வைத்துக்கொண்டு ராமசந்திரமூர்த்தியினது ஸந்நிதானத்தில் தெரிவித்தனர். லவனுக்குக் காஞ்சனையையும், அங்கதனுக்குக் கஞ்சாக்ஷியையும் சித்ரகேதுவுக்குக் கஞ்சாங்கிரியையும் புஷ்கரனுக்குக் கலாவதியையும் தக்ஷனுக்குக் காலிகையையும், கமலையை சுபாகுவுக்கும் மாலதீயை யூபகேதுவுக்கும் விவாகம் செய்விப்பதெனத் தீர்மானித்தார்கள். பிறகு கந்தர்வ கன்னிகைகளாகிய சந்தரிகையை அங்கதனுக்கும் சந்திராஸ்யைச் சித்திரகேதுவுக்கும் புஷ்கரனுக்குச் சஞ்சலையையும் சபலையைத் தக்ஷனுக்கும் சுபாகுவுக்கு அசலையையும் விவாகஞ் செய்விப்பதெனத் தீர்மானித்தார்கள்.

இவ்வாறு நிச்சயம் செய்த பிறகு ராமபிரான் சோதிடர்களுக்குத் தக்க மரியாதை செய்து அனுப்பிவிட்டு ஸீதையிடஞ் சென்று நடந்த சங்கதிகளைத் தெரிவித்து மகிழ்ந்தார். உடனே கோடிக் கணக்கான முனீசுவரர்களும், அந்தப்புர ஸ்திரீகள் பட்டணத்து ஜனங்கள் இவர்களுடன் கூடிய அரசர்களும் கூட்டங் கூட்டமாக வந்து கூடினார்கள். இச்சமயம் அந்நகரமானது இந்திரவுலகமும் இதற்கு ஈடில்லை யெனச் சொல்லும்படி விளங்கிற்று. விபீஷணரும் வந்துசேர்ந்தார். சுக்ரீவன் வானரசைனியங்களுடன் வந்து சேர்ந்தான். ஜனகமகாராஜனும் யுதாஜித்தும் வந்து சேர்ந்தார்கள். கௌஸல்யை முதலிய தேவிமார்களின் பந்துக்களும் வந்து சேர்ந்தார்கள்.

இவ்வாறு சகல ஜனங்களும் வந்து சேர்ந்த பிறகு தசரத நந்தனராகிய ராமபிரான், வைகாசி மாதம் சுக்லபக்ஷத்தில், பிராமணச்ரேஷ்டர்களோடும் புரோகிதர்களோடும் நண்பர்களோடுமிருந்து லவனுக்கு மங்கள ஸ்நானஞ் செய்விக்க மாதர்களுக்கு ஆக்ஞை

செய்தார். உடனே சுபமுகூர்த்தகாலமாகிய அப்பொழுதே லவனுக்கு சுகந்த தைலங்களைத் தேய்த்து ஸீதை முதலான தாய்மார்கள் மங்கள ஸ்நானஞ் செய்வித்தனர். தாங்களும் ஸ்நானஞ் செய்தார்கள். அப்போது மங்கள வாத்யங்கள் முழங்கின. பிறகு ராமர் பிராமணர்களுடனிருந்து கணபதியைப் பிரதிஷ்டை செய்து அவரைப் பூஜித்து, விதிப்படி புண்ணியாகம் முதலிய மூன்று காரியங்களையும் செய்து முடித்தார். மனமகிழ்ச்சியுடன் பிராமணர்களையும் முனிவர்களையும் பூஜித்தார். உடனே சுபமுகூர்த்த வேளையில் கஞ்சாயனைக்கும் லவனுக்கும் விவாகத்தைச்செய்து முடித்தார். நான்காவது நாள் மூங்கில் பாத்திரங்களில் ரத்தின தீபங்கள் வைத்து ஸ்ரீராமருக்கு ஸ்திரீகள் நீராஜனம் செய்தார்கள். பிறகு ராமர் தமது கிருகத்திற்குச் சென்று முற்கூறியபடி லக்ஷ்மி பூஜை செய்ய லவனுக்குத்தரவிட்டார். பிறகு மன்னர்களும் பன்னகர்களும் நண்பர்களும்பட்டணத்து ஜனங்களும் ராமபிரானுக்கு வஸ்திரம் ஆபரணம் இவைகளை யளித்து உபசரித்தார்கள். அவ்வாறே லட்சுமணர் முதலியவர்களையும் குசன் முதலிய பாலர்களையும் உபசரித்தார்கள். பிறகு அரசர்களின் பத்தினிகளும் சிநேகிதரின் பத்னிகளும் நாகரின் பத்தினிகளும் கந்தர்வரின் பத்தினிகளும் இன்னும் மற்றுமுள்ள ஸ்திரீகளும் ஸீதை முதலானவர்களுக்கு வஸ்திராபரணங்களை யளித்து உபசரித்தார்கள். ஸீதையும் அந்த ஸ்திரீகளெல்லோருக்கும் வஸ்திரங்களும் ஆபரணங்களும் அளித்து நன்குபசரித்தாள். ராமரும் தமது சிநேகிதர்கள் பட்டணத்து ஜனங்கள் கந்தர்வர்கள் பன்னகர்கள் முதலியவர்களுக்கு வஸ்திராபரணங்கள் வாகனங்கள் முதலியவைகளை யளித்து நன்குபசரித்தார். இப்படி வைகாசி மாதம் சுக்ல பக்ஷத்தில் லவனுக்கு விவாக முகூர்த்தத்தைச் செய்துவிட்டுப் பிறகு வைகாசி மாதம் கிருஷ்ணபக்ஷத்தில் அங்கதனுக்கு விவாகத்தை நடத்தினர். ஆனி மாதம் சுக்லபக்ஷம் கிருஷ்ண பக்ஷங்களில் சித்ரகேதுவுக்கும் புஷ்கரனுக்கும் ஆசையோடு விவாகத்தைச் செய்து முடித்து, அரசர்கள் முதலான யாவருக்கும் தக்கபடி மரியாதை செய்தனுப்பிவிட்டார். பிறகு முன் போலவே மறுபடியும் அவர்களை யழைத்து மார்கழி மாதத்தில் தக்ஷனுக்

கும் சுபாகுவுக்கும் ஆதரவோடு விவாகத்தை நடத்தினர். அப்புறம் மாசி மாதத்தில் யூபகேது அங்கதன் இவர்களுக்கும் சித்ரகேது வுக்கும் விவாகம் செய்து பங்குனிமாதத்தில் புஷ்கரன் தக்ஷன் ஸுபாகு இவர்களுக்கும் விவாக முகூர்த்தத்தைச் செய்து முடித் தார். இவ்வாறு ராமர் ஆதரவுடன் பன்னிரண்டுவிவாகங்களையும் செ ய்துமுடித்து, எல்லா அரசர்கட்கும் தக்க உபசாரஞ் செய்து அவ ரவர் தேசங்களுக்குச் செல்ல அவர்களுக்கு உத்தரவு கொடுத் தனுப்பினர். முனீசுவரர் முதலிய எல்லாரையும் நன்றாய்ப் பூஜித்து அவர்களையும் தத்தம் இடத்திற்கு அனுப்பினர். கந்தர் வர்களும் பன்னகர்களும் ராமரைப்பிரிந்து தங்கள் உலகத்திற் குச் செல்ல மனமில்லாமல் அந்த அயோத்தியிலேயே யிருந்து விட்டார். ராமர் எப்போது வைகுண்டத்திற்குச் செல்வாரோ அப்போது அவர்களும் ஸாந்தானிகம் என்னும் லோகங்களுக்கு நிச்சயமாகப் போவார்கள். பிறகு ராமர் பன்னகர் களுடைய வும் கந்தர்வர்களுடையவும் வீடுகளில் அந்தப்புர ஸ்திரீக ளோடும் நண்பர்களோடும் தமது பட்டணத்து ஜனங்களோடும் வருஷப் பண்டிகைகளுக்குப்போய் உண்டு உறவாடிச் சுகமாக இருந்தார். அயோத்தியில் வீடுகள் தோறும் மேலான உற் சவங்கள் ஆனந்த கரமாய் நடந்து வந்தன. பிறகு ராமர் தனித் தனியே எட்டு திவ்யகிருகங்களைக் கட்டுவித்து அவைகளில் தமது பிள்ளைகளுக்குச் சாந்திகளை நடத்தி அவர்களைத் தத்தம் பந்துக்களோடும் மனைவிகளோடும் அவைகளில் வசித்துவரும்படி செய்தார். அவ்வாறே லட்சுமணர் முதலியவர்களும் பந்துக்க ளோடும் தங்கள் தங்கள் பத்தினிகளோடும் சுகமாய் இருந்தார் கள். ஸௌமித்ரி சுமித்திரையோடும் பரதர் கைகேயியோடும் கௌஸல்யை ராமரோடும் தங்கள் தங்கள் கிருகங்களில் சுகமாக வாழ்ந்தார்கள். பிள்ளைகள் யாவரும் தங்கள் சேவகர் களாலும் தாஸிகளாலும் நன்குபசரிக்கப்பட்டுப் பரமானந்தத்தை யடைந்து வாழ்ந்து வந்தார்கள். லட்சுமணர் முதலியவர்களும் குசன் முதலான பாலர்களும் தங்கள் தங்கள் கிருகங்களில் ஒவ்வொரு நாட்காலையிலும் ஸ்நானம் செய்து ஹோமம்

சிவபூஜைகளைச் செய்து முடித்து உடனே ராமரிடம் சென்று அவரையும் ஸீதாதேவியையும் நமஸ்கரித்து அவரது ஆஸனத்திற்குச் சமீபத்தில் வணக்கமாக நிற்பார்கள். அவர்களுடைய மனைவிகளும் தினந்தோறும் அதிகாலையில் ஸ்நானம் செய்து துர்க்காதேவியைப் பூஜித்து ஸீதையினிடம் சென்று நமஸ்கரித்து அப்பிராட்டியின் கட்டளைப்படி ஆஸனத்தில் அமர்வார்கள். பிறகு லட்சுமணர் முதலியவர்களும் ராமரது சபைக்குச்சென்று தங்கள் குருவின் முகமாகப் புராணகதைகளைக்கேட்டு தங்கள் தங்கள் வீட்டிற்குச் செல்வார்கள். பிறகு அவர்கள் யாவரும் தனித்தனியே இராமருடைய உபசாரணையைப்பெற்று அங்கேயே போஜனம் செய்வார்கள். இவ்விதம் அவர்கள் மனைவிகளும் ஸீதையின் உபசாரணையைப் பெற்று அவ்வுத்தமியுடன் ஆனந்தமாய்ப் போஜனம் செய்வார்கள். ஸீதையும் ராமரும் ஒருவருக்கொருவர் எவ்வித கலகமுமில்லாமல் இவ்வாறு சகோதரர்களோடும் அவர்களுடைய மனைவிகளோடும் பந்து புத்திர மித்திரர்களோடும் கூடிச்சுகமாய் வெகுகாலம் வாழ்ந்து வந்தார்கள்.

## 7-வது சருக்கம்.

முற்றிற்று.

## 8-வது சருக்கம்.

### ராமதாசர் கூறுகிறார்.

அப்பால் ஒருசமயம் தெற்குத்தேசத்தில் சிவகாந்தி என்னும் ஒரு பெரிய பட்டணத்தை யாண்டுவந்த கம்புகண்டனென்னும் ஒரு அரசன் தன் பெண்ணுக்கு சுயம்வரம் நடத்த நிச்சயித்து, எல்லா அரசர்களுக்கும் ஆதரவோடு திருமுகமனுப்பினான். அத்திருமுகங் கண்ட அரசர்கள் யாவரும் முன் சுயம்வரத்தில் தங்களுக்குண் டான மானக்குறைவை எண்ணிச் சுயம்வரத்திற்குச் செல்லாமல் தனித்தனியே கம்புகண்டனுக்குக் கடிதமெழுதி யனுப்பினார்கள். அவைகளில் ஒரு விஷயம் இங்குக் குறிப்பிடத்தக்கது. அது வருமாறு:—

"ராமரது பிள்ளைகள் சுயவரத்திற்கு வராமல் இருந்தால் தான் இந்த ஜம்புத்வீபத்திலுள்ள நாங்களெல்லோரும் வருவோம்" என்பதே. இப்படிப்பட்ட அவர்களது அபிப்ராயத்தை அறிந்த அவ்வரசன் ராமரது பிள்ளைகளான குசலவர்களுக்கும் சம்பிகை ஸுமதி இவர்களுக்கும் நடந்த சுயம்வரத்தில் ஏற்பட்ட பகைமையை நினைத்துக்கொண்டு ஸ்ரீராமரை அழைக்காமலிருந்து விட்டான். கம்புகண்டன் ராமரைச் சுயம்வரத்திற்கு அழைக்கவில்லையென்பதை யறிந்தும் அரசர்கள் யாவரும் புறப்பட்டுக் காந்திபட்டணம் வந்து சேர்ந்தார்கள். இச்சமயம் அந்த கம்புகண்டனுடைய பெண்ணான மதனசுந்தரி என்பவள் சகிகளோடு மேன்மாடியி லிருந்தனள். இதைக்கண்ட நாரதர் ஆகாயத்திலிருந்து இறங்கி அவளருகில் வந்தார். அவள் சகிகளோடு நாரதரைப் பூஜித்து வணக்கத்துடன் எதிரில்நின்று "சுவாமி! தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே போகிறீர்கள்? தங்கள் தரிசனத்தால் என்மனம் பரிசுத்தமடைந்தது" என்று கூறினாள்.

இவ்விதம் அந்தப் பெண் கூறியதைக்கேட்டுச் சிறிது நகைத்து நாரத முனிவர் "ஏ பெண்ணே! நான் இப்போது சொர்க்க லோகத்திலிருந்து வருகிறேன். அயோத்திக்குச் சென்று ராமபிரானது பிள்ளைகளின் கிருகங்களில் தனித்தனியே விருந்து போஜனஞ் செய்வதன் பொருட்டு ஆகாயமார்க்கமாக வந்

தேன். நான் வந்துகொண்டிருக்கையில் இந்தக் காந்திபுரியின் வெளிப்பக்கத்தில் சேனைகளிருப்பதைப் பார்த்து, இவைகள் யாருடைய சேனை யென்பதைப்பற்றி மனதிற் கருதிச் சற்று நின்றேன். அப்பொழுது இங்கே போய்க்கொண்டிருந்த ஜனங்கள் உனக்குச் சுயம்வரம் என்று பேசிக்கொள்வதைக்கேட்டு, இச் சுயம்வரத்திற்கு ராமபிரானும் தமது குமாரர்களோடு வந்திருக்க வேண்டுமெனக் கருதி, அவர்களைப் பார்த்துப் பேசும் விருப்பத்துடன் இங்கு வந்தேன். இங்கே வந்து விசாரித்ததில் அவர் வரவில்லையெனத் தெரிந்துகொண்டு அவர் வராததற்குக் காரணம் யாதென்று அரசனை விசாரித்து, அவர் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டேன். அது எனக்கு மிகவும் வருத்த முண்டாக்குகிறது. ஏழு தீவுகளுக்கும் பதியாயும் பந்து புத்ரர்களோடு கூடினவராயுமிருக்கிற ராமரை அழைக்காமல் உனது தந்தை மற்ற அரசர்களை வைத்துக்கொண்டு சுயம்வரத்தை நடத்த உத்தேசித்திருக்கிறார். இப்போது நான் ஸகேத பட்டணத்திலுள்ள ராமரைப் பார்க்கப்போகிறேன்; ஏ பெண்ணே! நீ அதிர்ஷ்டமில்லாதவள். ஏனென்றால் உலகத்திற்கெல்லாம் பதியான ராமருக்கு மருமகளாகும் பாக்கியம் உனக்கில்லாமற் போயிற்று" என்றார். நாரதர் இவ்விதம் கூறி அப்பெண்ணினிடம் உத்தரவு பெற்று அவ்விடம் விட்டுப் புறப்பட யத்தனித்தார். உடனே அப்பெண் மனவருத்தங்கொண்டு கண்களில் நீர் ததும்ப வாடின முகத்தோடு உதடு துடிக்கத் தேகத்தில் மயிர்க் கூச்சலெடுக்கக் குன்றிய அழகுடனின்று தழதழத்த குரலோடு நாரதரை அடிக்கடி பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டாள். ஏ முனிச்ரேஷ்டரே! நான் ஸ்ரீராமருக்கு மருமகளாகும்படி தாங்கள் ஓர் உபதேசம் செய்ய வேண்டும். நான் தங்களைச் சரணம் அடைந்து விட்டேன் என்று சொல்லி அம்முனி சிரேஷ்டருடைய பாதங்களில் தனது சிரஸை வைத்து வணங்கி அவருக்குத் தயை யுண்டாகும்படி வேண்டிக்கொண்டாள். முனிவர் அப்பெண்ணுக்கிரங்கி "ஏ அழகிய பெண்ணே! இவ்விஷயத்தில் கொஞ்சமேனும் யோசிக்காதே! நீ ராமருக்கு மருமகளாகும் உபாயத்தை நான் அவசியம் செய்கிறேன்" என்று அப்பெண்ணுக்குத் தேறுதல் கூறிவிட்டு ஆகாயவழியே போய்விட்டார்.

இங்கு இவ்விதமிருக்க, அயோத்யா பட்டணத்தில் யூபகேது என்பவன் தேரில் ஏறிக்கொண்டு வனங்களைப் பார்த்துக்கொண்டே தமஸாநதியின் கரைக்கு வந்தான். சிறிதுசேனையோடு அவ்விடம்வந்த யூபகேது தமஸாநதியில் ஸ்நானம் செய்து சந்தியாவந்தனாதி ஹோம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு அக்கரையில் உட்கார்ந்தவுடன் நாரதரைப் பார்த்தான். அவரைக் கண்டதும் ஆதரவோடு வணங்கிப் பூஜை செய்து வணக்கத்துடன் எதிரில் நின்றுகொண்டு ஐயா! தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்டான். நாரதர் உடனே எல்லா விர்த்தாந்தத்தையும் விஸ்தாரமாகச் சொன்னார். இவைகளைக் கேட்டதும்யூபகேது முனிவரான நாரதரை வணங்கிக் கோபத்தோடும் பரபரப்போடும் அவர் முகத்தைப்பார்த்து ஐயா! எல்லா அரசர்களுக்கும் இராமரிடத்தில் த்வேஷம் உண்டாயிருக்கிறதென்று தாங்கள் சொன்னதைக் கேட்டவுடன் அவர்கள் எல்லாருக்கும் நாசகாலம் கிட்டிவிட்டதென்பதில் ஐயமில்லை. யுத்தத்தில் கம்புகண்டன் முதலிய அரசர்களின் பலத்தையும் பார்க்கிறேன். முனிவர் பிரானே! தங்களது தயவால் எல்லாரையும் ஜயித்து விட்டு அப்பெண்ணை நான் கொண்டுவருகிறேன் என்று கூறிஉடனே அவ்விடமிருந்து புறப்பட்டுச் சேனைகளோடு ஐந்தாவது நாள் காந்திபுரிக்குச் சென்றான். பிறகு மிகவும் ஸந்தோஷமுள்ள மனதுடன் நாரதரும் இராமரைப் பார்க்கச் சென்றார்.

இராமர் முனிவரைப் பூஜித்து அவருடன் போஜனத்துக்குட்கார்ந்தார். அப்பொழுது ராமர், யூபகேதுவைக் காணாமல் லட்சுமணரைக் கூப்பிட்டு எங்கே யூபகேதுவைக் காணோம்; சாப்பிட அவனை இங்கே அழைத்துவாவென்று கட்டளையிட்டார். உடனே லட்சுமணர் வேகமாய் மாலதியிடம் சென்று யூபகேது எங்கே என்று கேட்டார். அவள், சிறிது சேனையுடன் இப்போது தான் காட்டிற்குச் சென்றார் என்று கூறினள். லட்சுமணர் உடனே இச்சமாசாரத்தை ராகவரிடம் தெரிவித்தார். பிறகு ராமர் சந்தோஷமாக முனிவருடன் போஜனஞ் செய்தெழுந்து தமது ஸபைக்குச் சென்று அம்முனிவரைப் பார்த்து "என்னிஷ்டப்படி தாங்கள் இங்கே ஐந்து நாள் இருக்கவேண்டும்" என்று

வேண்டிக்கொண்டார். பிறகு ராமர் இன்றிரவும் யூபகேதுவைக் காணுமல் லட்சுமணனை யழைத்து, "யூபகேதுவைக்கூப்பிடு" என்றார். லட்சுமணர் உடனே மாலதியிடம் சென்று யூபகேது எங்கே என்று கேட்க, அவள் "இன்னும் வரவில்லை" யெனக் கூறினள். இதைக் கேட்டதும் லட்சுமணர் கவலை யடைந்து ராமரிடம்வந்து தெரிவிக்க, அவரும் பந்துக்களும் வருத்தத்தை யடைந்தார்கள். பிறகு ஜானகியும் கேட்டுப் பரபரப்போடு ராமரது முன் சென்று "குழந்தையைக் காணேம், எல்லாரும் மௌனமாய் இருக்கிறீர்களே" என்று கேட்க, உடனே யாவரும் மிகுந்த வருத்தமடைந்து அவனைத் தேடத்தொடங்கினர். அப்போது அவர்கள் கவலைப்படுவதைப் பார்த்து நாரதர் "யூபகேது காந்திபுரிக்குச் சென்றிருக்கிறன்" என்று கூறி மற்றவைகளையும் ஆதரவோடு தெரிவித்தார். அவைகளை ராமர் கேட்டுச் சிறிது மகிழ்ச்சி யடைந்து "சதுரங்க பலத்தோடு சத்ருக்னன் குசன் முதலியவர்கள் இக்கணம் காந்திபுரத்திற்குப் போகட்டும்" என்று லட்சுமணரிடம் சொன்னர். லட்சுமணரும் அவ்வாறே சேனைகளோடும் குழந்தைகளோடும் வேகமாகப் போகும்படி அன்றிரவே சத்ருக்னனுக்கு ஆக்ஞைசெய்தார். சத்ருக்னன் உடனே ராமரை நமஸ்கரித்து அவரிடம் உத்தரவுபெற்றுக் குசன் முதலியவர்களோடு இரதத்திலேறிப் புறப்பட்டுச்சீக்கிரமாக ஆறுவது நாள்காந்திபுரத்திற்குச் சென்றன். அன்று சுயம்வரநாளானதால், காந்திபுரியில் சுயம்வரத்திற்காக அரசர்கள் யாவரும் வந்து சபையில் சந்தோஷமாகக் கூடியிருந்தனர். மதனசுந்தரி நாரதர் கூறியதை எண்ணிச் சிறிது முகவாட்டத்துடன் பல்லக்கிலேறிக் கொண்டு சபையின்கண் வந்தாள். கிழவியான ஒரு தாதி அரசரெல்லாரையும் அவளுக்குக் காண்பித்தாள். இச்சமயம் யூபகேது வேகமாய்த் திடீரென்று சபைநடுவே சென்று, மோகனுஸ்திரத்தை விட்டு, அந்தச் சபையை மயக்கிவிட்டான். அந்த அஸ்திரத்தால் பல்லக்குத் தூக்குகிறவர்களும் மயக்கமடைந்து பல்லக்கைக் கீழே வைத்துவிட்டார்கள். உடனே யூபகேது பல்லக்கினருகிற் சென்று மதன சுந்தரியை யெடுத்துத் தன்ரதத்தில் வைத்துக்கொண்டு

அவளுக்குத் தானின்னுனென்பதையும் தனது பெயரையுந் தெரிவித்து அந்நங்கையை சந்தோஷப்படுத்தினுன். பின்னர் மதனசுந்தரி உள்ளன்போடு அவனைவரித்து நவரத்னமயமான மாலையை அவன் கழுத்தில் போட்டாள். அவன் பல்லக்குடன் காந்திபுரிக்கு வெளியே சென்று அங்குத் தங்கி, "பெண்மணியே! நீ இனி அஞ்சாதே! நான் எல்லா அரசரையும் ஜயித்துவிட்டு உன்னேடு பட்டணத்திற்குப் போகிறேன்" என்முன். இப்படி யூபகேது கூறியதும் மதனசுந்தரி "நாதா! இப்பொழுதோ அநேகம் அரசர்கள் தங்கள் தங்கள் சேனையோடு வந்திருக்கிருர்கள். தாங்களோ ஒருவர், சேனையும் கொஞ்சமே! ஆகையால் இச்சமயம் இவர்களுடன் போர்புரியாமல் என்னை அழைத்துக்கொண்டு ஸாகேத பட்டணம் சென்று விடுங்கள். அங்கே இவர்கள் வந்தால் ராமரும் சேனையோடு தங்களுக்கு உதவி செய்வார். ஆகையால் என்பேச்சுத் தட்டாமல் இப்போது தயவுடன் திரும்பி விடுங்கள்" என்முள். இவ்வாறு மதனசுந்தரி கூறியதும் அவளை அடிக்கடி சமாதானப்படுத்திக் கொண்டு, விளையாட்டாய்த் தான் விட்ட மோகனுஸ்திரத்தை இழுத்துக்கொண்டான். உடனே அரசர்கள் மயக்கந்தெளிந்து கண் திறந்துபார்த்து மதனசுந்தரி அங்கே காணுதிருக்க எல்லோரும் வியப்படைந்து அங்குள்ள ஸ்திரீகளை விசாரித்தார்கள். அவர்கள் சத்ருக்னரது பிள்ளையான யூபகேதுவென்பவன் அவளைப் பலாத்காரமாகக் கொண்டுபோய் விட்டான் என்று சொல்லக் கேட்டு கோடிக்கணக்கான சேனைகளைச் சேர்த்துக்கொண்டு போர் புரியச் சென்றனர்; பட்டணத்துக்கு வெளியே சென்றதும் மதனசுந்தரி போட்ட மாலையை தரித்துக்கொண்டிருக்கும் யூபகேதுவைக் கண்டு அவன் அருகே சென்று பாணங்களை ப்ரயோகித்தனர். அப்போது யூபகேது வேகமாய் வில்லை டங்காரம் செய்து அதில் ஒரு வாயுவாஸ்திரத்தைப் பொருத்தி எய்தான். அவ்வஸ்திரம் அவ்வரசரெல்லோரையும் சேனையோடுதூக்கி அப்பால் எறிந்துவிட்டது. இதைக்கண்ணுற்ற அந்தக்கம்புகன் டன் சம்பிகை ஸுமதி இவர்களின் சுயம்வரத்திலுண்டான பகைமையையும் இப்பொழுது தன் பெண்ணை ஒரு சிறியவன் பலாத்

காமமாகக் கொண்டுபோகிறான் என்பதையும் எண்ணிச் சின மடைந்து தன் சேனையுடன் நகரத்திற்கு வெளியேவந்தான். மஹாரதிகனான யூபகேது அச்சமயம் முழங்கிய துந்துபி வாத்யங்களின் பேரரவத்தைக் கேட்டு வில்லை நாணேற்றி அதில் ச்ரேஷ்டமான அம்பைப்பூட்டி நகரத்திலிருந்து வெளிப்படும் வீரர்கள்யாவரையும் அரைக்ஷணத்தில் அடித்துக்கொன்று விட்டான். கம்புகண்டன் யூபகேதுவினுடைய பராக்ரமத்தைப் பார்த்து தன் ரதத்தில் ஏறிக்கொண்டு வேகமாய் யூபகேதுவினிடஞ் சென்று, "அடே! நீ என்னோ டல்லவா போர்புரிய வேண்டும், கொசுக்குச் சமானமான இவர்களை யடித்து விட்டதினால் பராக்ரமசாலியென் றெண்ணுகிறாயா?" என்று கூறி உடனே யூப கேதுவின் மேல் ஏழுபாணங்களை எய்தான். அந்தப் பாணங்கள் வருவதைக்கண்ட யூபகேது தன் பாணங்களால் அவைகளைத் தடுத்து அவனது வில்லையும் ஸாரதியையும் கொடியையும் நாசம் செய்து விட்டுக் குதிரைகளையும் கொன்றான். அப்போது கம்புகண்டன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு வேகமாகஓடிவந்தான். யூப கேது அந்த ஆயுதத்தைப் பாணங்களால் அநேகம் துண்டுகளாகப் பிளந்துவிட்டான். பின் கம்புகண்டன் மிகவும் கோபமடைந்து கையை மூடிக்கொண்டு யூபகேதுவின் மார்பில் குத்தினான். யூப கேது அவனைப்பிடித்து தேரின் மீதுள்ள கொடியிற்கட்டி அதி சீக்ரத்தில் கத்தியை எடுத்து அவனது தலையை வெட்ட ஆரம் பித்தான். அதைப் பார்த்த மதனசுந்தரி மிகவும் ஆவலோடு யூப கேதுவினது கையைப்பிடித்துக் கொண்டு கண்ணீர் பெருக நின்று "பிரபுவே! என் தகப்பனாரான கம்புகண்டரை ஏன் கொல்கிறீர்? முதற் கவளத்தில் ஈ விழுந்ததற்கொப்ப சுகத்தின் ஆரம்பத்திற்கு முன்னமேயே ஏன் இவ்வாறு துக்கரமான காரியத்தைச் செய்கிறீர்கள். நான் சொல்வதைக் கேளுங்கள்; இவரைக் கொல்லவேண்டாம்" என்று வேண்டிக்கொண்டாள். இவ்விதம் மதனசுந்தரி சொன்னதைக்கேட்டு, அவன் சிறித்துக்கொண்டு கையிலிருந்த ஆயுதத்தைக் கீழே எறிந்துவிட்டுத் தன்ஸாரதிக்கு ரதத்தை ஓட்டும்படி ஆக்ஞைசெய்தான். ஸாரதி உடனே வேகமாக ரதத்தை

ஓட்டினுன். பின் ரதம் அயோத்யா புரிக்குப் போகும் வழி யில் செல்லும்போது, எதிரே துந்துபி வாத்தியங்களின் சத்த முண்டாயிற்று. அதைக்கேட்ட யூபகேது மறுபடியும் தன் வில்லைக் கெட்டியாய்க் கையில் பிடித்துக்கொண்டு இவ்வழியில் யாருடைய சேனை எதிரே வருகிறதென்று சற்று ஆலோசித்து, உடனே தன் பெயருள்ள பாணத்தை ஒரு யோஜனை தூரத்திற்கப்பாலிருந்த சேனையின் மீது விடுத்தான். அந்தப்பாணம் சத்ருக்னனுடைய ஸந்நிதானத்தில் போய்விழுந்தது. உடனே அவர் அதையெடுத்து அதில் வரைந்திருந்த யூபகேதுவின் பெயரைப்பார்த்து யூபகேது வழியில் நிச்சயமாய் இருக்கிறுன்'' என்று தீர்மானித்து, உடனே வில்லில் தன் பெயருள்ள பாணத்தைப் பூட்டி யூபகேதுவைக் குறித்துவிட, அது அவன் தலைக்கு நேராக மேலே விழுந்தது. அப்பாணத்தை யூபகேது பார்த்து அது தன் தந்தையின் பாண மென அறிந்து மிகவும் சந்தோஷமடைந்து துந்துபி வாத்திய முழக்கத்துடன் அதிவேகமாகச் சென்று தன் தந்தையைப் பார்த்து ரதத்திலிருந்து கீழே இறங்கி, தன் மனைவியுடன் அவரை நமஸ்கரித்து கம்புகண்டனைக் காண்பித்தான். அவனைக் கண்டதும் சத்ருக்னர் "இவன் நமது நண்பன்; ஆகையால் இவனை விட்டுவிடு'' என்றுகூறி அவனை விடுவித்தார். பின்கம்புகண்டன் சத்ருக்னரை வணங்கி நடந்த விருத்தாந்தத்தை அவருக்கு விஸ்தார மாகச் சொல்லி, அவரைத் தனது பட்டணத்திற்கு அழைத்துச் சென்றுன். சத்ருக்னரும் அவன் இஷ்டப்பிரகாரம் காந்திபுரிக்குச் சென்று பட்டணத்திற்கு வெளியே இருந்துகொண்டு ராமரை அழைத்துவரத் தூதர்களை யனுப்பினர். உடனே அந்தத் தூதர்கள் சந்தோஷத்துடன் வேகமாய் ராமரை அழைக்கச் சென்றனர்.

8-வது சருக்கம்.

முற்றிற்று.

## 9 வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

தூதர்கள் அயோத்திக்குச் சென்று ராமரிடம் எல்லா விருத் தாந்தங்களையுந் தெரிவிக்க ராமர் சந்தோஷமடைந்து விஷயத்தை ஸீதைக்கும் சொல்லி நல்ல முகூர்த்தத்தில் ஸீதையோடும் அந்தப் புர ஸ்திரீகளோடும் பந்துக்களோடும் மித்ரர்களோடும் பட்ட ணத்து ஜனங்களோடும் நாரதரை முன்னிட்டுக் கொண்டு காந்தி புரிக்கு வந்து சேர்ந்தார். கம்புகண்டன் ராமன் வந்திருப்பதை கேட்டு மிகவும் மகிழ்வெய்தி ராமரை எதிர் கொண்டழைத்து அன் போடு வணங்கி அவரைப் பூஜித்தான். பிறகு யூபகேதுவையும் இவ்வாறே பூஜித்து வாத்திய கோஷங்களுடன் பட்டணத்திற்குள் அழைத்து வந்தான். உடனே அப்பட்டணத்திலுள்ள ஸ்திரீ களெல்லாம் தத்தம் வீட்டு மெத்தைகளில் ஏறிக்கொண்டு யூப கேதுவின் மேலும் ராமர் மேலும் புஷ்பங்களை வாரியிறைத்தார் கள். இவ்வித உற்சவத்தோடு ராமர் முதலியவர்கள் தமது விடுதிக் கேகினர்.

பிறகு ராமபிரான் நல்ல முகூர்த்தத்தைப்பார்த்து வெகு ஆனந் தத்துடன் யூபகேதுவின் விவாகத்தை நடத்தினர். கம்புகண்டனும் களிப்படைந்து ரஜகஜதுரகபதாதிகளையும் தாஸதாஸி ஜனங்களை யும் கொடுத்து ராமரைப் பூஜித்தான். உடனே ராமர் மதனசுந்தரி யோடும் மற்றவர்களோடும் அயோத்திக்குப் புறப்பட்டார். அச் சமயம் வாத்தியங்கள் முழங்கின. தாஸிகள் நர்த்தனம் செய்தார் கள். வந்திமாதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். மாதர்கள் யாவ ரும் மாடியின் மீதிருந்து புஷ்பங்களை வருஷித்தார்கள். இவ்வித வைபவத்துடன் ராமர் தமது கிருகத்திற்குச் சென்று அங்கே லக்ஷ்மீ பூஜையைச் செய்வித்து கோடிக்கணக்கான தானங்களைச் செய்தார். ஆடையாபரணங்களளித்து நண்பர்களை உபசரித்தார். பிறகு பந்துமித்திரர்கள் யாவரும் ராமரிடம் விடை பெற்றுக்

கொண்டு தத்தம் இருப்பிடத்துக்குச் சென்றார்கள். பிறகு லவன் முதலிய ஏழு பிள்ளைகளும் தத்தம் மனைவிகளோடு சுகமாக இருந்தார்கள்.

பிறகு குசனுக்கும் சம்பிகைக்கும் அழகிய ஒன்பது பெண்கள் பிறந்தனர். மேலும் குசனுக்கு குமுதவதியினிடம் எட்டுப் பிள்ளைகள் உண்டாகப்போகின்றனர். சம்பகமாலினி என்ற ஒரு பெண்ணும் பிறக்கும். அப்பிள்ளைகளுள் மூத்தவனான அதிதி என்பவன் ராஜ்யமாளப் போகிறான். சுமதி முதலான பதினான்கு ஸ்திரீகளும் வரிசைக் கிரமமாகத் தனித்தனியே பெண்களையும் பிள்ளைகளையும் பெறுவார்கள். ராமர் ஸீதையோடு 1223 பௌத்திரர்களையும் பௌத்திரிகளையு மடைந்து அன்புபாராட்டி வளர்த்து ஆனந்தமடைவார். ராமரது பௌத்திரர்களுக்குச் சில அரச கன்னிகைகள் சுயம் வரத்தாலும் சிலர் ராக்ஷஸ விவாகத்தாலும் சிலர் காந்தர்வ விவாகத்தாலும் சில பெண்கள் பௌருஷ விவாகத்தாலும் மனைவிகளாகப் போகிறார்கள். இவர்களுக்கு கணக்கில்லை. அவர்களது ஸந்ததியைச் சொல்லுவதற்கும் இங்கு ஒருவராலும் முடியாது. இவ்வாறு நாரதர் யூபகேதுவின் விவாகத்தைச் செய்துவித்துச் சபையில் ஸ்ரீராமரை மிகவும் பக்தியுடன் ஸ்ரீருத்ர் தமக்குச் சொன்ன ஆயிரம் பெயர்களால் ஸ்தோத்திரம் செய்து அவரிடம் விடை பெற்றுக் கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றார்.

இவ்வாறு ஸ்ரீராமர் ஸாகேத பட்டணத்தில் சகல சுகங்களையும் அனுபவிப்பது வந்தார். இவ்வுலகத்தில் அவைகளை வர்ணிக்க யாரால் முடியும்? தபோநிதியான வான்மீகி யொருவரே, ஸ்ரீராமரது குணங்களை வர்ணிப்பதில் சமர்த்தரா யிருந்தார். அவரே மகா மங்களகரமான ராமரது சரித்திரத்தை நூறு கோடி கிரந்தங்களால் வர்ணித்தவர். அதை ஸ்மரித்துக்கொண்டு தான் நானும் கொஞ்சம் வர்ணித்தேன். இவ்வாறு ஸ்ரீராமர் அயோத்தியா பட்டணத்தில் பிள்ளைகளோடும் பேரர்களோடும் அவர்கள் பிள்ளைகளோடும் அவர்களது பேரர்களோடும் சகோதரர்களோடும்

ஸீதையோடும் இன்னும் மற்றுமுள்ளவர்களோடும் கூடிச் சுக மாக இருந்தார்.

விஷ்ணுதாஸ! இந்த ஆனந்தராமாயணத்தின் விவாககாண் டத்தை உனக்குக் கூறி முடித்தேன். இது ஒன்பது ஸர்க்கமுள் ளது. இதைக் கேட்பவர்கள் சகல மங்களத்தையும் பெறுவார்கள். இதைப் பக்தியுடன் கேட்கும் மாதர்கள் புத்திர பௌத்திரர்களை யடைவார்கள். தர்மத்தை விரும்புகிறவன் தர்மத்தையும் பொருளை விரும்புகிறவன் பொருளையும் காம்யத்தை விரும்புகிறவன் காம் யத்தையும் மோக்ஷத்தை விரும்புகிறவன் மோக்ஷத்தையும் அடை வன், அதைக் கிரமமாகப்பக்தியோடு எவர்கள் படிக்கிறார்களோ அல்லது கேட்கிறார்களோ அவர்களுக்கு ஸர்வ மங்களங்களும் உண்டாகும் என்பது நிச்சயம்

9-வது சருக்கம்

முற்றிற்று

---

விவாககாண்டம்

முற்றிற்று.

# ராஜ்யகாண்டம்.

## (பூர்வார்த்தம்.)

## 1-வது சருக்கம்

ஸ்ரீ விஷ்ணுதாசர் வினவுகிறார்.

பரமகுருவே! சூதரால் சொல்லப்பட்ட ராம ஸஹஸ்ர நாமத்தைக்கூறி நாரதர் ஸ்ரீராமரை ஸ்தோத்திரம்செய்தாரென்று விவாக காண்டத்தின் கடைசிச்சருக்கத்தில் சொன்னீர்களே; அது எப்படிப்பட்டதென்று எனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும். முற்காலத்தில் அதைச் சூதர் முனிவர்களுக்குக் கூறியவாறு தெரிவிக்கவேண்டும்-என்று பிரார்த்தித்தார்.

ராமதாஸர் கூறுகிறார்.

சிஷ்ய! நீ நன்றாய் கேட்டாய். நான் சொல்லுவதைக் கவனித்துக் கேள். சூதரால் சொல்லப்பட்ட ராமஸஹஸ்ர நாமத்தை உனக்குச் சொல்லுகிறேன். நீ இப்போது கேட்ட மாதிரி சௌனகர் சூதரைக் கேட்க, அவர் நைமிசாரண்யத்திலிருந்து விஸ்தாரமாகப் பின் வருமாறு கூறினார்.

அது வருமாறு:—

ஸ்ரீ சூதர் கூறுகிறார்:—ஸகல உலகங்களையும் காப்பாற்றுவதில் விருப்பமுள்ளவர்களும் இந்திரன் முதலிய லோகபாலர்களால் சேவிக்கப்படுகிறவர்களுமான பார்வதியும் பரமேசுவரனும் முற்காலத்தில் ஒருநாள் சுகமாக ஆஸனத்தில் வீற்றிருக்கையில் பார்வதியானவள் பரமசிவனைநோக்கி பல தர்மங்களைச் சொல்லும்படி வரிசையாகக் கேட்டாள்.

பார்வதி கூறுகிறாள்.—எனக்கும் உலகங்களுக்கும் நாதராயிருக்கிற தங்களது அருளால் நான் உத்தமமான தர்மங்களைத் தெரிந்து கொண்டேன். பாபங்களின் பிராயச் சித்தங்களையும் நன்றாகக் கேட்டேன். இன்னும் பிர்மஹத்தி முதலிய பாபங்களின் பிராயச்சித்தத்தையும் தாங்கள் கூறவேண்டும் ''என்றுகேட்டாள்,

மஹாதேவர்:—முற்காலத்தில் ஸநத்குமாரருக்கும் விக்நேச் வருக்கும் நடந்தஸம்வாதத்தின் ரகசியமானவிஷயத்தைச்சொல்லு கிறேன்; ஏ பார்வதி! விநாயகர் சுகமாக வீற்றிருக்கும் சமயத்தில் சநத்குமாரர் அவ்விடம் வந்து, அவரை வணங்கிச் சில தர்மங் களைத் தெரிவிக்கும்படி ரகசியமாகக் கேட்டார். அவைபாவன:—

ஸநத்குமாரர்:—“தர்மங்களை யெல்லாம் அறிந்த ப்ரபுவே! பிர்ம ஹத்தியை நீக்கக்கூடிய தர்மத்தைத் தயையுடன் எனக் குச் சொல்லவேண்டும்; மூன்றுலகங்களிலும் தங்களைத் தவிர வேறொருவரில்லை; இது உண்மை” யென்று கூறிப் பிரார்த்தித் தார்.

விநாயகர்:—பிராமணோத்தமரே! மிகவும் ஸந்தோஷம்; கேட் டது நன்று; எல்லா உலகங்களுக்கும் உபகாரமாகவிருக்கும்படி நான் முன் செய்த ஒரு செய்கையைக் கூறுகிறேன் கேளுங்கள்; முன்னொருகாலத்தில் நான் யானை உருவத்தோடு மலைபோல் பிறந் தேன்; உடனே மரங்களைப் பிடுங்கி முனிவர்களை இம்சிக்க ஆரம் பித்தேன்; அநேக ரிஷிகளைக்கூட்டம் கூட்டமாய்க் கொன்றேன். உடனே நாலா பக்கங்களிலும் பிராம்மணர்கள் ஆ! ஆ! என்று கதறினர்கள். அப்போது ஆயிரம் ஆயிரமான ஜனங்களின் நாசத் தாலுண்டான பாபமானது என்னைச் சூழ்ந்துகொண்டது. நான் அப்பொழுது பிரக்ஞையற்றவன்போல் பூமியில் விழுந்துகிடந் தேன். என்னைப் பார்த்ததும் என் பிதா தயவோடு சகல உலகங் களுக்கும் நாதரான ராமமூர்த்தியை எனக்காகப் பூஜித்தார். உட னே ராமமூர்த்தி அவருக்கு பிரத்தியக்ஷமாகி என் தந்தையைப் பார்த்து “ஏ மகாதேவ! நான்பிரஸன்னமாயிருக்கிறேன; என் னிடமிருந்து தாங்கள் வேண்டுவதென்ன? மூன்றுலகங்களிலும் கிடைக்கக்கூடாததாய் இருந்தாலும் உடனே கொடுக்கிறேன்” என்றார்.

மஹாதேவர்:—“தங்களுக்கு என்னிடம் தயையிருக்குமாயின் பிர்மஹத்தி பாப மடைந்த இந்தப் பிள்ளையை அப்பாபத்தினின் றும் தயவுடன் விடுவித்தல் வேண்டும்” என்றார். ராமர் “அப்படி யே ஆகட்டும்” என்று தயையோடு என்னைப் பார்த்தார். அதே க்ஷணத்தில் நான் மோகம் நீங்கிப் பாபவிமோசன மடைந்து, அநேக வாக்கியங்களாலும் ஸ்லோகங்களாலும் அவரை ஸ்தோத்

திரம் செய்து வணங்கினேன். பிறகு ராமமூர்த்தி "விநாயக! ஆயிரக்கணக்கான பிர்மஹத்திக்குப் பிராயச்சித்தம் என்னுடைய ஸகஸ்ரநாமத்தை ஜபம் பண்ணுவதேயாகும்" என்று கூறித் தமது ஸகஸ்ரநாமத்தை மிகவும் ரகசியமாக எனக்குப் போதித்தார். நான் அதைப்பெற்றுக்கொண்டு பரபாகிதனானேன். அதுமுதற்றான் தேவர்கள் என்னைப் பூஜிக்கிறார்கள். நீரும் இந்த ஸகஸ்ரநாமத்தை நன்றாய்ப் படித்து உலகெங்கும் பரவும்படி செய்யும் என்றார்.

ஸநத்குமாரர்:—"விநாயக மூர்த்தியே! நான் கிருதார்த்தனானேன்; தமது அநுக்கிரகத்தை யடைந்தேன். தங்களது தயையால் நான் ராமஸகஸ்ரநாமத்தை நன்றாய்த் தெரிந்து கொண்டேன்" என்று வணங்கினார்.

ஸ்ரீமகாதேவர்:—ஏ பார்வதி! ஸநத்குமாரர் இவ்விதம் தேவரிடம் சொல்லி, அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து விடைபெற்றுக்கொண்டு தமது இருப்பிடம் சென்று, அதுமுதல் எப்போதும் மிகவும் சுத்தமாயிருந்து இந்த ஸ்தோத்திரத்தை ஜபித்துப் புண்யபாபமற்று மேலான ஸித்தியை அடைந்தார்.

பார்வதி:—நாதா! எனக்கு அதைக்கேட்க ஆவலிருப்பதால், தயவுடன் இப்போது அருளவேண்டுமென்று கூறி வணங்கினாள்.

---

॥ மஹாதேவ உவாச ॥

[illegible]

𑌯𑍋 𑌨𑌮𑌃 । 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 । 𑌸𑍀𑌤𑌾𑌪𑌤𑌯𑍇 𑌤𑌰𑍍𑌜𑌨𑍀𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃। 𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌾𑌯 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃। 𑌭𑌰𑌤𑌾𑌗𑍍𑌰𑌜𑌾𑌯 𑌅𑌨𑌾𑌮𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 । 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌯 𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 । 𑌹𑌨𑍂𑌮𑌤𑍍𑌸𑍇𑌵𑌿𑌤𑌪𑌾𑌦𑌾𑌯 𑌕𑌰𑌤𑌲𑌕𑌰𑌪𑍃𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃। 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌹𑍃𑌦𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌸𑍀𑌤𑌾𑌪𑌤𑌯𑍇 𑌶𑌿𑌰𑌸𑍇 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 । 𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌾𑌯 𑌶𑌿𑌖𑌾𑌯𑍈 𑌵𑌷𑌟𑍍 । 𑌭𑌰𑌤𑌾𑌗𑍍𑌰𑌜𑌾𑌯 𑌕𑌵𑌚𑌾𑌯 𑌹𑍁𑌮𑍍 । 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌯 𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌾𑌯 𑌵𑍌𑌷𑌟𑍍 । 𑌹𑌨𑍂𑌮𑌤𑍍𑌸𑍇𑌵𑌿𑌤𑌪𑌾𑌦𑌾𑌯 𑌅𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌫𑌟𑍍 ।

॥ 𑌅𑌥 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍 ॥

𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌦𑌾𑌜𑌾𑌨𑍁𑌬𑌾𑌹𑍁𑌂 𑌧𑍃𑌤𑌶𑌰𑌧𑌨𑍁𑌷𑌂
 𑌬𑌦𑍍𑌧𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌂
𑌪𑍀𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌵𑌸𑌾𑌨𑌂 𑌨𑌵𑌕𑌮𑌲𑌦𑌲—
 𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌿𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌮𑍍 ।
𑌵𑌾𑌮𑌾𑌙𑍍𑌕𑌾𑌰𑍂𑌢𑌸𑍀𑌤𑌾𑌮𑍁𑌖𑌕𑌮𑌲𑌮𑌿𑌲—
 𑌲𑍍𑌲𑍋𑌚𑌨𑌂 𑌨𑍀𑌰𑌦𑌾𑌭𑌂
𑌨𑌾𑌨𑌾𑌲𑌙𑍍𑌕𑌾𑌰𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 𑌦𑌧𑌤𑌮𑍁𑌰𑍁𑌜𑌟𑌾—
 𑌮𑌣𑍍𑌡𑌨𑌂 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍍 ॥

---

மஹாதேவர் கூறுகிறார்.

மஹாதேவர்:—ஏ தேவி! ஸ்ரீராமஸஹஸ்ரநாமத்தைச்சொல்லுகிறேன், ஒரே மனதோடு கவனித்துக்கேள். இது மிகவும் ரகசியமானது. இதற்கு விநாயகர் ரிஷி; சந்தஸ் அநுஷ்டுப்; பரப்பிர்ம ஸ்வரூபியான ராமரே தேவதை………………………………

தியானம்.

முழங்தாள்வரையில் நீண்டகைகளை யுடையவரும் வில் அம்பு இவைகளைத் தரித்து பத்மாஸனமிட்டு உட்கார்ந்து கொண்டிருப்பவரும் மஞ்சள் வஸ்திரம் உடுத்துக்கொண்டிருப்பவரும் இடது துடையில் உட்கார்ந்துகொண்டிருக்கும் ஸீதையின் முககமலத்தை நோக்குகின்ற அன்றலர்ந்த இதழ்போன்ற கண்களை

𑌵𑍈𑌦𑍇𑌹𑍀𑌸𑌹𑌿𑌤𑌂 𑌸𑍁𑌰𑌦𑍍𑌰𑍁𑌮𑌤𑌲𑍇
𑌹𑍈𑌮𑍇 𑌮𑌹𑌾𑌮𑌣𑍍𑌡𑌪𑍇
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑌮𑌾𑌸𑌨𑍇 𑌮𑌣𑌿𑌮𑌯𑍇
𑌵𑍀𑌰𑌾𑌸𑌨𑍇 𑌸𑍁𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌗𑍍𑌰𑍇 𑌵𑌾𑌚𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑌞𑍍𑌜𑌨𑌸𑍁𑌤𑍇
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑍁𑌨𑌿𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌮𑍍
𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌂 𑌭𑌰𑌤𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌪𑌰𑌿𑌵𑍃𑌤𑌂
𑌰𑌾𑌮𑌂 𑌭𑌜𑍇 𑌶𑍍𑌯𑌾𑌮𑌲𑌮𑍍 ॥

𑌸𑍌𑌵𑌰𑍍𑌣𑌮𑌣𑍍𑌡𑌪𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍇 𑌸𑍁𑌵𑌿𑌰𑌾𑌜𑌿𑌤𑍇 ।
𑌮𑍂𑌲𑍇 𑌕𑌲𑍍𑌪𑌤𑌰𑍋𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌣𑌪𑍀𑌠𑍇 𑌸𑌿𑌂𑌹𑌾𑌷𑍍𑌟𑌸𑌂𑌯𑍁𑌤𑍇 ॥
𑌮𑍃𑌦𑍁𑌶𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌣𑌤𑌰𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌜𑌾𑌨𑌕𑍍𑌯𑌾 𑌸𑌹 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌰𑌾𑌮𑌂 𑌨𑍀𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌶𑍍𑌯𑌾𑌮𑌂 𑌦𑍍𑌵𑌿𑌭𑍁𑌜𑌂 𑌪𑍀𑌤𑌵𑌾𑌸𑌸𑌮𑍍 ॥

---

யுடையவரும், மேக நிறம்போன்ற மேனியையுடையவரும் அநேக அலங்காரங்களால் பிரகாசிப்பவரும் அலங்காரமான நீண்ட சடையையுடைய வருமான ஸ்ரீராமரைத் தியானம் செய்கிறேன்.

புஷ்பகவிமானத்தின் மத்தியில் கற்பகத்தருவின் கீழ் தங்கமயமான பெரிய மண்டபத்தின்கண் மணிமயமான ஆஸனத்தில் வீராஸனம் பூண்டு ஸீதாதேவியோடு சுகமாக வீற்றிருக்கிறவரும் எதிரில் ஹனுமார் படித்துக்கொண்டிருக்க, முனிவர்களுக்கு மேன்மையான தத்துவத்தை எடுத்து விவரமாய்ச் சொல்லுகிறவரும் பரதர் முதலிய சகோதரர்கள் சூழ வீற்றிருப்பவரும் நீலமேக ச்யாமலவர்ணராயுமிருக்கிற ஸ்ரீராமரைச் சேவிக்கிறேன்.

புஷ்பகவிமானத்தில் பிரகாசியாநின்ற சொர்ணமண்டபத்தின் கண் கற்பகத்தருவின் கீழ் எட்டுச் சிங்கங்கள் தாங்காநின்ற வழவழப்பான சொர்ண பீடத்தில் ஜானகியோடு சுகமாக வீற்றிருப்பவரும் நீலோத்பலம் போல் கறுத்த இரண்டு கைகளையுடையவரும் மஞ்சள் வஸ்திர முடுத்துக்கொண்டிருப்பவரும் மந்தஹாஸமுகமுடையவரும் தாமரை இதழ்போன்ற கண்களையுடையவரும் கிரீடம் முத்துமாலை தோள்வளை குண்டலம் முதலிய ஆபரணங்

𑌸𑍍𑌮𑌿𑌤𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑍁𑌖𑌾𑌸𑍀𑌨𑌂 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰 𑌨𑌿𑌭𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ।
𑌕𑌿𑌰𑍀𑌟𑌹𑌾𑌰𑌕𑍇 𑌯𑍂𑌰𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍈𑌃 𑌕𑌟𑌕𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 ॥
𑌭𑍍𑌰𑌾𑌜𑌮𑌾𑌨𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌧𑌰𑌂 𑌵𑍀𑌰𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌸𑍍𑌪𑍃𑌶𑌨𑍍𑌤𑌂 𑌸𑍍𑌤𑌨𑌯𑍋𑌰𑌗𑍍𑌰𑍇 𑌜𑌾𑌨𑌕𑍍𑌯𑌾𑌃 𑌸𑌵𑍍𑌯𑌪𑌾𑌣𑌿𑌨𑌾 ॥
𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌸𑍇𑌵𑌿𑌤𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 ।
𑌅𑌯𑍋𑌧𑍍𑌯𑌾𑌨𑌗𑌰𑍇 𑌰𑌮𑍍𑌯𑍇 𑌹𑍍𑌯𑌭𑌿𑌷𑌿𑌕𑍍𑌤𑌂 𑌰𑌘𑍂𑌦𑍍𑌵𑌹𑌮𑍍 ॥
𑌏𑌵𑌂 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌜𑌪𑍇𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌰𑌾𑌮 𑌨𑌾𑌮 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑌮𑍍 ।
𑌹𑌤𑍍𑌯𑌾𑌕𑍋𑌟𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌵𑌾𑌽𑌪𑌿 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇𑌨𑌾𑌽𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥
𑌰𑌾𑌮𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌜𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌹𑌿𑌤𑌾𑌵𑌹𑌃 ।
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌤𑌾𑌰𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌦𑌃 ।

---

கள் பூண்டு விளங்குகிறவரும் ஞான முத்திரை தரித்திருப்பவரும் வீராஸனத்தில் வீற்றிருப்பவரும் ஜானகியை இடது கையால் தழுவிக்கொண்டிருப்பவரும் வசிஷ்டர் வாமதேவர் முதலியவர்களால் சேவிக்கப்படுகிறவரும் அழகிய அயோத்தியா பட்டணத்தில் அபிஷேகம் செய்யப்பட்டவருமாயிருக்கிற ஸ்ரீராகவரை த்யானம் செய்கிறேன். இவ்வாறு த்யானம் செய்துகொண்டு, ஸ்ரீராமநாம ஸஹஸ்ரத்தைத் தினந்தோறும் ஜபம் செய்யவேண்டும். இப்படிச் செய்தால் கோடிஹத்தி செய்தவனாயிருந்தாலும் அந்தப் பாபத்திலிருந்து விடுபடுவான். இவ்விஷயத்தில் சிறிதும் ஐயமேயில்லை.

ஓம், ஸ்ரீராமர், ஸ்ரீமான், மஹாவிஷ்ணு, ஜிஷ்ணு. தேவருக்கு நன்மையுண்டு பண்ணுகிறவர், தத்துவசொரூபர், தாரகப் பிர்மம், சாச்வதர், ஸித்திகளெல்லாம் கொடுப்பவர்.

॥ 𑌨𑌾𑌮𑌾𑌵𑌲𑌿 𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌮𑍍 ॥

𑌰𑌾𑌜𑍀𑌵𑌲𑍋𑌚𑌨𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌰𑌘𑍁𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌃 ।
𑌰𑌾𑌮𑌭𑌦𑍍𑌰 𑌸𑌦𑌾𑌚𑌾𑌰𑍋 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌜𑌾𑌨𑌕𑍀𑌪𑌤𑌿𑌃 ॥ 1

நாமாவளி ஸ்தோத்திரம்.

*தாமரைப்பூப் போன்ற கண்களையுடையவர், ஸ்ரீமான் ஸ்ரீராமர், ரகுவம்ச சிரேஷ்டர், மங்களகரமான ராமர், நல்ல ஆசாரமுடையவர், ராஜச்ரேஷ்டர், ஜானகியின்பதி.* (1)

𑌅𑌗𑍍𑌰𑌣𑍍𑌯𑍋 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑌰𑌦𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑍋 𑌜𑌿𑌤𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑍈𑌕𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌃 ॥ 2
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤𑌶𑍍𑌶𑌤𑍍𑌰𑍁𑌜𑌿𑌚𑍍𑌛𑌤𑍍𑌰𑍁𑌤𑌾𑌪𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍋 𑌵𑌾𑌲𑌿𑌮𑌥𑌨𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌭𑌵𑍍𑌯𑍋𑌽𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑌃 ॥ 3
𑌵𑌾𑌗𑍍𑌮𑍀 𑌸𑌤𑍍𑌯𑌵𑍍𑌰𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌦𑌿𑌶𑌰𑌣𑌶𑍍𑌶𑍁𑌚𑌿𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌗𑌮𑍍𑌯𑍋 𑌦𑍃𑌢𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌖𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑍀 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ॥ 4
𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍𑌵𑍀𑌰𑍋 𑌜𑌿𑌤𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌽𑌰𑌿𑌮𑌰𑍍𑌦𑌨𑌃 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍋 𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌪𑌰𑌿𑌵𑍃𑌢𑍋 𑌦𑍃𑌢𑌃 ॥ 5
𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌖𑌡𑍍𑌗𑌧𑌰𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑍇𑌯𑍋𑌽𑌨𑌸𑍂𑌯𑌕𑌃 ।
𑌵𑌿𑌪𑍁𑌲𑌾𑌂𑌸𑍋 𑌮𑌹𑍋𑌰𑌸𑍍𑌕𑌃 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌠𑍀 𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ॥ 6

---

முதன்மையாகக் கருதக் கூடியவர், ச்ரேஷ்டமானவர், வரங்களைக் கொடுக்கிறவர், பரமேச்வரர், ஜனார்த்தனர் சத்துருக்களை ஜயித்தவர், பிறர் பிரயோஜனமாகக் கொடுப்பவர். (2)

விச்வாமித்திருக்குப் பிரியர், கொடுக்கிறவர், சத்துருக்களை ஜயித்தவர். சத்துருக்களைத் தவிக்கும்படி செய்கின்றவர், எல்லா மறிந்தவர், வேதங்களுக்கெல்லாம் ஆதியானவர், ரக்ஷகர், வாலியை நாசம் செய்தவர். (3)

மங்களமான ஞானத்தைக் கொடுப்பவர், அளவிட முடியாதவர், பேசுந்திறமை வாய்ந்தவர், உண்மையான விரதத்தையுடையவர், பரிசுத்தமானவர், ஞானத்தால் அடையக் கூடியவர், ஸ்திரமான புத்தியையுடையவர், கரனை நாசஞ் செய்தவர், பிரதாபமுடையவர். (4)

காந்தியையுடையவர், ஆத்மவான். வீரர், கோபத்தை ஜயித்தவர், சத்துருக்களை நாசஞ்செய்கிறவர், லோக ரூபமானவர், விசாலமான கண்களையுடையவர், பிரபு, எல்லாருக்கும் எஜமானர், ஸ்திரமானவர். (5)

ஸர்வஸம்பன்னர், கத்திதரித்திருப்பவர், லக்ஷ்மியோடு கூடினவர், கௌஸல்யையினுடைய குமாரர், அசூயையற்றவர், பெரிய தோள்களை யுடையவர், எல்லாருக்கும் மேலாயும் மேலான ஸ்தானமாயுமிருப்பவர். (6)

ஸத்யவ்ரதஸ்ஸத்யஸந்தோ குணாப்³தி⁴: பரமதா⁴ர்மிக: ।
லோகஜ்ஞோ லோகஶரண்யஶ்ச லோகாத்மா லோகக்ருத்³விபு⁴: ॥ 7

அநாதி³ர்ப⁴க³வான் ஸேவ்யோ ஜிதமாயோ ரகூ⁴த்³வஹ: ।
ராமோ த³யாகரோ த³க்ஷஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வபாவந: ॥ 8

ப்³ரஹ்மண்யோ நீதிமான் கோ³ப்தா ஸர்வதே³வமயோ ஹரி: ।
ஸுந்த³ர: பீதவாஸாஶ்ச ஸூத்ரகார: புராதந: ॥ 9

ஸௌம்யோ மஹர்ஷி: கோத³ண்டீ³ ஸர்வஜ்ஞஸ்ஸர்வகோவித³: ।
கவிஸ்ஸுக்³ரீவவரத³ஸ்ஸர்வபுண்யாதி⁴கப்ரத³: ॥ 10

ப⁴வ்யோ ஜிதாரிஷட்³வர்கோ³ மஹோதா³ரோ(அ)க⁴நாஶந: ।
ஸுகீர்த்திராதி³புருஷ: காந்த: புண்யக்ருதாக³ம: ॥ 11

---

உண்மையான விரதத்தையுடையவர், உண்மையான பிரதிக்ஞையையுடையவர், பரமகுணநிதி, தர்மமுள்ளவர், லோகங்களை அறிந்தவர் லோகசரண்யர், லோகஸ்வரூபமானவர், லோகங்களையுண்டாக்கினவர், உலகெங்கும் வ்யாபித்து நிற்பவர். (7)

ஆதியற்றவர், பகவத் ஸ்வரூபமானவர், சேவிக்கத் தகுந்தவர். மாயையை ஜயித்தவர், ரகுச்ரேஷ்டர், ஸ்ரீராமர், தயாநிதி, ஸமர்த்தர், எல்லாமறிந்தவர், எல்லாவற்றையும் சுத்தப் படுத்துகிறவர். (8)

பிராம்மண பக்தர், நீதியையுடையவர், காப்பாற்றுகிறவர், விஷ்ணு, அழகியவர்: மஞ்சள் வஸ்திரம் தரித்தவர். சூத்திரம் செய்தவர், புராணபுருஷர். (9)

பிரஸன்னமானவர், மகரிஷி, கோதண்டத்தையுடையவர், ஸர்வக்ஞர், எல்லாவற்றிலும் கரைகண்டவர், கவி, ஸுக்ரீவனுக்கு வரத்தைக் கொடுத்தவர், சகல புண்யங்களையும் அளிப்பவர். (10)

மங்களகரமானவர், காமாதிகளான ஆறுசத்ருக்களையும் ஜயித்தவர், மிகவும் உதாரர், பாபங்களைப் போக்குகிறவர், நல்ல கீர்த்தியையுடையவர், ஆதிபுருஷர் இச்சிக்கக் கூடியவர், புண்யம் செய்தவர் அடையக்கூடிய ஸ்தானமாகவிருப்பவர். (11)

𑌅𑌕𑌲𑍍𑌮𑌷𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌬𑌾𑌹𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌾𑌸𑍋 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌃 ।
𑌸𑍍𑌮𑌿𑌤𑌭𑌾𑌷𑍀 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ॥ 12
𑌧𑍀𑌰𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤𑍋 𑌘𑌨𑌶𑍍𑌯𑌾𑌮𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌯𑍁𑌧𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌃 ।
𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌯𑍋𑌗𑌨𑌿𑌲𑌯𑌸𑍍𑌸𑍁𑌮𑌨𑌾 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌗𑍍𑌰𑌜𑌃 ॥ 13
𑌸𑌰𑍍𑌵𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑌯𑌶𑍍𑌶𑍂𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍀 𑌯𑌜𑍍𑌞𑍇𑌶𑍋 𑌜𑌰𑌾𑌮𑌰𑌣𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ॥ 14
𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍀 𑌶𑌤𑍍𑌰𑍁𑌜𑌿𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌶𑌿𑌵𑌲𑌿𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑌾 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌃 ॥ 15
𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌭𑍂𑌤𑍋 𑌦𑍁𑌰𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌪𑌰𑌪𑍁𑌰𑌂𑌜𑌯𑌃 ।
𑌅𑌨𑌨𑍍𑌤𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑍋 𑌧𑌨𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑍋 𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌰𑌃 ॥ 16
𑌗𑍁𑌣𑌾𑌕𑌰𑍋 𑌗𑍁𑌣𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌅𑌭𑌿𑌵𑌾𑌦𑍍𑌯𑍋 𑌮𑌹𑌾𑌕𑌾𑌯𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑌰𑍍𑌤𑌾 𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌃 ॥ 17

---

பாபமற்றவர், நான்கு கைகளையுடையவர், எல்லா இடத்திலு மிருப்பவர்: அணுகக்கூடாதவர், புன்சிரிப்போடு பேசுகிறவர், ஒழிவடைந்த மனதையுடையவர், சாஸ்திரமுடையவர், வீரிய முடையவர், பிரபு. (12)

தீரர் இந்த்ரியங்களை அடக்கினவர், மேகம்போல் கறுத்தவர், சகலாயுதசமர்த்தர், அத்யாத்ம யோகத்தில் வசிப்பவர், நல்ல மன முடையவர், லட்சுமணருக்கு மூத்தவர். (13)

சகல தீர்த்தஸ்வரூபர், சூரர், எல்லாயக்ஞங்களுக்கும் பலத்தைக் கொடுப்பவர், யக்ஞஸ்வரூப முள்ளவர், யஜ்ஞேச்வரர், கிழத்தனம், மரணம் இவையற்றவர். (14)

வர்ணாச்ரமங்களுக்குக்குரு, பிர்ம்மசாரி, சத்துருக்களை ஜயிக்கிறவர், புருஷ ச்ரேஷ்டர். (15)

சிவலிங்கப்ரதிஷ்டை செய்தவர், பரமாத்மா, ஸர்வச்ரேஷ்டர் பிரமாணமானவர், அறியக்கூடாதவர், நிறைந்தவர், சத்துருவின் நகரங்களை ஜெயித்தவர், முடிவில்லாதவர், ஆனந்தஸ்வரூபர். தநுர் வேத ஸ்வரூபர். தநுஸைத்தரித்தவர். (16)

குணங்களுக்கு நிதி, ச்ரேஷ்டமான குணமுடையவர், ஸச்சிதானந்தஸ்வரூபர், நமஸ்கரிக்கத் தகுந்தவர், பெரிய சரீரமுள்ளவர், உலகங்களைப் படைத்தவர், ஸமர்த்தர். (17)

𑌵𑌿𑌨𑍀𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌸𑍍𑌤𑌪𑌸𑍍𑌵𑍀𑌶𑍋 𑌜𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌕𑌲𑍍𑌪𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌦𑌃 ॥ 18
𑌅𑌕𑍍𑌷𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌕𑍇𑌶𑌵𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌲𑍋𑌕𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍋 𑌮𑌹𑌾𑌕𑌾𑌯𑍋 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑌵𑌰𑌪𑍍𑌰𑌦𑌃 ॥ 19
𑌆𑌨𑌂𑌦𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌹𑌨𑍁𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑌵𑍍𑌯𑌯𑌃 ।
𑌭𑍍𑌰𑌾𑌜𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌸𑌹𑌨𑍋 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌸𑌤𑍍𑌯𑌵𑌾𑌦𑍀𑌬𑌹𑍁𑌶𑍍𑌰𑍁𑌤𑌃 ॥ 20
𑌸𑍁𑌖𑌦𑌃 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌭𑌵𑌬𑌂𑌧𑌵𑌿𑌮𑍋𑌚𑌨𑌃 ।
𑌦𑍇𑌵𑌚𑍂𑌡𑌾𑌮𑌣𑌿𑌰𑍍𑌨𑍇𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ॥ 21
𑌸𑌂𑌸𑌾𑌰𑌤𑌾𑌰𑌕𑍋 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑍃𑌤𑍍 ।
𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑌮𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑌰𑍍𑌤𑌾𑌵𑌿𑌶𑍍𑌵𑌹𑌰𑍍𑌤𑌾𑌚 𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑍃𑌤𑍍 ॥ 22

---

வினயமுள்ள மனதுடையவர், ஆசையற்றவர், தபஸ்விகளுக்கு ஈச்வரர், ஜனங்களுக்கு ஈச்வரர், கல்யாண சொரூபர் மூலப்ரகிருதி, கல்பம் எல்லாவற்றிற்கும் ஈச்வரர், இஷ்டங்களையெல்லாம் கொடுப்பவர். 18

நாசமற்றவர், புருஷர், ஸர்வசாக்ஷியாயிருப்பவர், கேசவர், புருஷோத்தமர், லோகங்களுக்கு ஈசர், பெரிய காரிய முடையவர் விபீஷணருக்கு வரத்தைக் கொடுத்தவர். 19

ஆனந்த சொரூபர், ஜோதிசொரூபர், ஹனுமாருக்கு பிரபு நாசமற்ற்வர், அனுபவிக்கிறவர் ஸத்ய ஸந்தர் அநேக ஸாஸ்திர மறிந்தவர். (20)

சுகங்களைக் கொடுப்பவர், காரணபூதர், கர்த்தர் ஸம்ஸார பந்தத்தை விடுவிக்கிறவர், தேவர்களுக்கு சூடாமணி போன்றவர் பிரோகர், பிரம்மண்யர், பிராமணர்களை விருத்தி செய்பவர். (21)

மிகவும் அறிந்தவர் உலகங்களை யளிப்பவர், உலகங்களை ஸ்ருஷ்டிப்பவர், ஸம்ஸார பந்தங்களைத் தாண்டும்படி செய்பவர். எல்லாத் துக்கங்களையும் நாசம் செய்கிறவர். (22)

𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌸𑍍𑌸𑍀𑌤𑌾𑌶𑍋𑌕𑌵𑌿𑌨𑌾𑌶𑌕𑍃𑌤𑍍 ।
𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌃 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌭𑌯𑌾𑌪𑌹𑌃 ॥ 23
𑌮𑌾𑌰𑍀𑌚𑌮𑌥𑌨𑍋 𑌰𑌾𑌮𑍋 𑌵𑌿𑌰𑌾𑌧𑌵𑌧𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌃 ।
𑌦𑍁𑌃𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌾𑌶𑌨𑍋 𑌰𑌮𑍍𑌯𑌃 𑌕𑌿𑌰𑍀𑌟𑍀 𑌤𑍍𑌰𑌿𑌦𑌶𑌾𑌧𑌿𑌪𑌃 ॥ 24
𑌮𑌹𑌾𑌧𑌨𑍁𑌰𑍍𑌮𑌹𑌾𑌕𑌾𑌯𑍋 𑌭𑍀𑌮𑍋 𑌭𑍀𑌮𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌃 ।
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍀 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌾𑌦𑍀 𑌸𑍁𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌃 ॥ 25
𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌮𑍀 𑌕𑌾𑌲𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌮𑌹𑌾𑌪𑌟𑍁𑌃 ।
𑌅𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌣𑍍𑌣𑍋 𑌗𑍁𑌣𑌗𑍍𑌰𑌾𑌮𑍋 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂𑌕𑌃 𑌕𑌲𑌂𑌕𑌹𑌾 ॥ 26
𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌭𑌦𑍍𑌰𑌶𑍍𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑌃 𑌕𑍇𑌶𑌵𑌸𑍍𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌶𑍍𑌶𑌂𑌭𑍁𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑍍𑌥𑌵𑌿𑌷𑍍𑌠𑌶𑍍𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍋 𑌧𑍍𑌰𑍁𑌵𑌃 ॥ 27

---

நித்தியர். நித்யகல்யாண சொரூபர் ஸீதையின் சோகத்தை நாசம் செய்பவர் காகுத்ஸவம்சத்திலுண்டானவர், தாமரைப் பூப் போன்ற கண்களையுடையவர், விச்வாமித்ரர் பயத்தைப் போக்குகிறவர். (23)

மாரீசனைக் கொன்றவர் இராமர் விராதனைக் கொல்வதில்சமர்தர், துர்சொப்பனத்தை நீக்குகிறவர், அழகியவர், கிரீடமுடையவர், தேவதைகளுக்கு அதிபர். (24)

பெரிய தனுஸையுடையவர், பெரிய சரீரத்தையுடையவர், பயத்தை யுண்டாக்கக் கூடியவர், அதி பராக்ரமசாலி தத்வஸ்வரூப முடையவர். (25)

பூதசொரூபி, பூதங்களை யுண்டாக்குகிறவர், ஸ்வாமி காலஞானத்தையுடையவர், பெரிய சரீரமுடையவர், ஒழிவடையாதவர் குணங்களுக்கு இருப்பிடமானவர், களங்கமற்றவர், களங்கங்களை நீக்குகிறவர். (26)

ஸ்வபாவமாக மங்களகரமானவர் சத்ருக்களை நாசம் செய்பவர் கேசவர், ஸ்தாணு, ஈச்வரர் பூதங்களுக்கு ஆதி, சுகத்தை யுண்டு பண்ணுகிறவர், சூரியசொரூபி, மிகவும் ஸ்திரமானவர் நித்யமானவர். (27)

𑌕𑌵𑌚𑍀 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀 𑌚𑌕𑍍𑌰𑍀 𑌖𑌡𑍍𑌗𑍀 𑌭𑌕𑍍𑌤𑌜𑌨𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌅𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌜𑌨𑍍𑌮𑌰𑌹𑌿𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌜𑌿𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑍋𑌚𑌰𑌃 ॥ 28
𑌅𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑍋𑌽𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌗𑍁𑌣𑌸𑌾𑌗𑌰𑌃 ।
𑌸𑌮𑌸𑍍𑌸𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌮𑌗𑍋 𑌜𑌟𑌾𑌮𑍁𑌕𑍁𑌟𑌮𑌣𑍍𑌡𑌿𑌤𑌃 ॥ 29
𑌅𑌜𑍇𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌷𑍍𑌵𑌕𑍍𑌸𑍇𑌨𑍋 𑌮𑌹𑌾𑌤𑌪𑌾𑌃 ।
𑌲𑍋𑌕𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍋 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌰𑌮𑍃𑌤𑍋 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌃 ॥ 30
𑌸𑌹𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌸𑌦𑍍𑌗𑌤𑌿𑌶𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌹𑌾𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌃 ।
𑌅𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌊𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌂𑌶𑍁𑌰𑍁𑌪𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌵𑌾𑌮𑌨𑍋 𑌬𑌲𑍀 ॥
𑌧𑌨𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑍋 𑌵𑌿𑌧𑌾𑌤𑌾 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌶𑍍𑌚 𑌶𑌂𑌕𑌰𑌃 ।
𑌹𑌂𑌸𑍋 𑌮𑌰𑍀𑌚𑌿𑌰𑍍𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑍋 𑌰𑌤𑍍𑌨𑌗𑌰𑍍𑌭𑍋 𑌮𑌹𑌾𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌃 ॥ 32
𑌵𑍍𑌯𑌾𑌸𑍋 𑌵𑌾𑌚𑌸𑍍𑌪𑌤𑌿𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌦𑌰𑍍𑌪𑌿𑌤𑌾𑌸𑍁𑌰𑌮𑌰𑍍𑌦𑌨𑌃 ।
𑌜𑌾𑌨𑌕𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌃 𑌪𑍂𑌜𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌕𑌟𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ॥ 33

---

கவசமுடையவர், குண்டலமுடையவர், சக்ரதரீ, கத்தியை யுடையவர் பக்தஜனப்பிரியர், மிருத்யு அற்றவர், ஜன்மமில்லாத வர், எல்லாவற்றையும் ஜெயித்தவர், எங்கும் நிறைந்தவர். (28)

தனக்கு மேல் உத்தமமற்றவர், அளவிடமுடியாத ஆத்மாவை யுடையவர், ஸர்வஸ்வரூபி குணக்கடல். சமமானவர் சமசொரூபி சமமாய்ப் பேசுகிறவர், ஜடாமகுடம் தரிப்பவர். (29)

ஜயிக்க முடியாதவர், சகலபூத சொரூபியாயிருப்பவர், நாலு பக்கங்களிலும் சேனையை யுடையவர், லோகேஸ்வரர், பெரியகை களை யுடையவர், அமிருத சொரூபி வேதங்களை யறிந்தவர், (30)

சகிக்கிறவர் நல்லவர்களுக்குக் கதியாயிருப்பவர். அடக்குகிற வர், லோகங்களுக்கு காரணபூதர், பெரிய காந்தியையுடையவர், இந்திரனை அதிக்ரமித்தவர் ஸ்திரமானவர் உன்னதமானவர், உபேந் திரர் வாமனர், பலி, தனுர்வேதங்களை யறிந்தவர் உலகங்களை ஸ்ருஷ்டிக்கிறவர் பிர்ம்மா, விஷ்ணு, சிவன் ஆத்மரூபி மரீசி; கோவிந்தர், இரத்தினங்களை கர்ப்பத்தில் உண்டயவர், பெரிய காந் தியை யுடையவர். (32)

வ்யாஸஸ்வரூபி, பிருஹஸ்பதி, கொழுப்பையடைந்த அசுரர் களை நாசம்செய்கிரவர், ஜானகிபதி, பூஜ்யர், ப்ரீதியை விருத்திசெய் கிறவர். (33)

सम्भवोऽतीन्द्रियो वेद्योऽनिर्देशो जाम्बवत्प्रभुः ।
मदनो मथनो व्यापी विश्वरूपो निरञ्जनः ॥

नारायणोऽग्रणीः साधुर्जटायुप्रीतिवर्धनः ।
नैकरूपो जगन्नाथः सुरकार्यहितः स्वभूः ॥ 35

जितक्रोधो जितारातिः प्लवगाधिपराज्यदः ।
वसुदः सुभुजो नैकमायो भव्यः प्रमोदनः ॥ 36

चण्डांशुः सिद्धिदः कल्पः शरणागतवत्सलः ।
अगदो रोगहर्ता च मन्त्रविन्मन्त्रभावनः ॥ 37

सौमित्रिवत्सलो धुर्यो व्यक्ताव्यक्तः स्वरूपधृक् ।
वसिष्ठो ग्रामणीः श्रीमाननुकूलः प्रियंवदः ॥ 38

---

சுகமாய் உண்டாகிறவர், இந்திரியங்களைக் கடந்தவர், அறியக்கூடியவர், குறிப்பிடக்கூடியவர், ஜாம்பவானுக்கு எஜமான், மதமுண்டாக்குகிறவர், மன்மத சொரூபி, உலகவ்யாபி, லோகரூபி அக்ஞானமற்றவர். (34)

நாராயணர், முதன்மையானவர், ஸாது, ஜடாயுவுக்குப் பிரீதியை உண்டு பண்ணுகிறவர். அநேக ரூபமுடையவர், லோகநாதர் தேவகார்யத்திற்கு ஹிதமானவர், பிரபு (35)

கோபத்தை ஜயித்தவர், சத்ருருக்களை ஜெயித்தவர், சுக்ரீவனுக்கு இராஜ்யத்தைக் கொடுத்தவர் தனத்தைக் கொடுப்பவர் நல்ல புஜங்களை யுடையவர், அநேக விதமான மாயையையுடையவர், மங்களமானவர் ஸர்வேகாஷத்தை யுண்டாக்குகிறவர். (36)

உஷ்ணகிரணரூபி, ஸித்திகளைக் கொடுப்பவர் சரணமடைந்தவரிடம் ஆசையுள்ளவர் ஔஷதசொரூபி ரோகத்தை போக்குகிற்வர், மந்திரமறிந்தவர், மந்திரரூபி. (37)

லக்ஷ்மணரிடம் பிரியமுள்ளவர், பாரத்தைவகிக்கிறவர், வ்யக்தமாயும் அவ்யக்தமாயு மிருக்கிற ரூபத்தைத்தரிக்கிறவர், வசிஷ்டர், மேன்மையானவர், ஸ்ரீமான், அநுகூலர். பிரியமாய்ப் பேசுகிறவர்.

𑌅𑌤𑍁𑌲𑌸𑍍𑌸𑌾𑌤𑍍𑌵𑌿𑌕𑍋 𑌧𑍀𑌰𑌶𑍍𑌶𑌰𑌾𑌸𑌨𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌃 ।
𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑍁𑌣𑍋𑌪𑍇𑌤𑌶𑍍𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑌾𑌟𑌕𑌾𑌨𑍍𑌤𑌕𑌃 ॥ 39

𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌕𑌮𑌠𑌃 𑌕𑌮𑌲𑌾𑌪𑌤𑌿𑌃 ।
𑌗𑍋𑌵𑌰𑍍𑌧𑌨𑌧𑌰𑍋 𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌰𑍂𑌪𑌃 𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌸𑌾𑌗𑌰𑌃 ॥ 40

𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑌰𑍍𑌣𑌪𑍍𑌰𑌭𑍇𑌤𑍍𑌤𑌾 𑌚 𑌗𑍋𑌪𑍀𑌗𑍋𑌪𑌾𑌲𑌸𑌂𑌵𑍃𑌤𑌃 ।
𑌮𑌾𑌯𑍀 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌧𑌿𑌨𑍋 𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌰𑍇𑌣𑍁𑌕𑍇𑌯𑌬𑌲𑌾𑌪𑌹𑌃 ॥ 41

𑌪𑌿𑌨𑌾𑌕𑌿𑌮𑌥𑌨𑍋 𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌸𑍍𑌸𑌮𑌰𑍍𑌥𑍋 𑌗𑌰𑍁𑌡𑌧𑍍𑌵𑌜𑌃 ।
𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑍋 𑌲𑍋𑌕𑌭𑌰𑌿𑌤𑍋 𑌭𑌰𑌤𑌾𑌗𑍍𑌰𑌜𑌃 ॥ 42

𑌶𑍍𑌰𑍀𑌧𑌰𑌸𑍍𑌸𑌙𑍍𑌗𑌤𑍋 𑌲𑍋𑌕𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍋 𑌵𑌿𑌭𑍁𑌃 ।
𑌮𑌨𑍋𑌵𑍇𑌗𑍀 𑌮𑌨𑍋𑌰𑍂𑌪𑍀 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌃 ॥ 43

---

சமானமற்றவர், ஸத்வரூபமுள்ளவர், தீரர், வில்லில் சாமர்த்தியமுள்ளவர், ஜேஷ்டர், எல்லா குணங்களோடும் கூடியவர், ஸக்தியுடையவர், தாடகையைக் கொன்றவர். (39)

வைகுண்டரூபி, பிராணிகளின் பிராணன், கூர்மரூபி, கமலாபதி, கோவர்த்தனத்தைத் தரித்தவர், மத்ஸ்யரூபி, தயாநிதி. (40)

கும்பகர்ணனைப் பிளந்தவர், இடையர், இடைச்சி இவர்களால் சூழப்பட்ட மூன்றாறு மாயைகளையுடையவர், லோகவ்யாபி, பரசுராமரின் பலத்தை நாசம் செய்தவர். (41)

சிவதநுசை ஒடித்தவர், உலகங்களால் நமஸ்கரிக்கத் தகுந்தவர், சாமர்த்தியமுள்ளவர், கருடனை த்வஜத்திலுடையவர், மூன்றுலகங்களுக்கும் ஆச்ரயமானவர் உலகமெங்கும் நிறைந்தவர், பரதனுடைய ஜ்யேஷ்ட சகோதரர். (42)

ஸ்ரீயைத் தரிப்பவர், சம்பந்தமுள்ளவர், உலகசாக்ஷி, நாராயணர், உலகவ்யாபி, மனதின் ரூபமுடையவர், மனதின் வேகமுடையவர், நிறைந்தவர், புருஷச்ரேஷ்டர். (43)

யதீநாம் ஶ்ரேஷ்டோ யதிபதிர்பூதாவாஸ: ஸுவிக்ரம: ।
தேஜோதரோ தராதாரஶ்சதுர்மூர்திர்மஹாநிதி: ॥ 44
சாணூரமர்தநோ வந்த்ய: ஶாந்தோ பரதவந்தித: ।
ஶப்தாதிகோ கபீராத்மா கோமலாங்க: ப்ரஜாகர: ॥ 45
லோகோர்த்வக: ஶேஷஶாயீ க்ஷீராப்திநிலயோऽமல: ।
ஆத்மஜ்யோதிரதீநாத்மா ஸஹஸ்ரார்சி: ஸஹஸ்ரபாத் ॥ 46
அம்ருதாம்ஶுர்மஹாகர்போ நிவ்ருத்தவிஷயஸ்ப்ருஹ: ।
த்ரிகாலஜ்ஞோ முநி: ஸாக்ஷீ விஹாயஸகதி: க்ருதீ ॥ 47
பர்ஜந்ய: குமுதோ பூதாவாஸ: கமலலோசந: ।
ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸ்ரீவாஸோ வீரஹா லக்ஷ்மணாக்ரஜ: ॥ 48

---

யதுக்களுள் ஸ்ரேஷ்டர், யதுக்களின் பதி, பூதங்களின் வாசஸ் தலம், நல்ல விக்ரமமுடையவர், தேஜஸ்ஸைத் தரிப்பவர் பூமிக்கு ஆதாரம், நான்கு மூர்த்திகளை யுடைய்வர், பெரிய நிதி. (44)

சாணூரனை நாசம்செய்தவர், நமஸ்கரிக்கக் கூடியவர், ஸாந்தர், பரதனால் சேவிக்கப்பட்டவர், நாதாதீதமானவர், கம்பீர ஸ்வ பாவமுள்ளவர், அழகிய சரீரமுடையவர், பிரளயகாலத்தில் இருப்பவர். (45)

லோகங்களின் மேலேபோகிறவர், ஆதிசேஷன் மேற்படுப்ப வர், க்ஷீரஸாகரத்தை ஸ்தானமாக உடையவர், பலமற்றவர், ஆத்ம ஜோதியையுடையவர், கம்பீர ஸ்பாவமுடையவர், ஆயிரம் வித மான கிரணமுடையவர், ஆயிரம் கால்களை யுடையவர். (46)

அமிர்தமயமான கிரணமுடையவர், பூப்ரவேசமுடையவர் லோகவிஷயங்களில் ஆசையற்றவர், மூன்று காலங்களையுமறிந்த வர், முனி, சாக்ஷி, காயத்தில் கதியுடையவர், ஸமர்த்தர். (47)

மழைக்கதி தேவதை, பூமிக்கு சந்தோஷம் கொடுப்பவர், பூதங்களின் வாஸஸ்தலம், தாமரை இதழ்போன்ற கண்களை யுடையவர், ஸ்ரீவத்ஸத்தை மார்பிலுடையவர், லக்ஷ்மிக்கு வாசஸ் தானம், வீரரைக் கொல்பவர், இலக்ஷ்மணருக்கு மூத்தவர். (48)

𑌲𑍋𑌕𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑍋 𑌲𑍋𑌕𑌾𑌰𑌿𑌮𑌰𑍍𑌦𑌨𑌃 𑌸𑍇𑌵𑌕𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑌨𑌾𑌤𑌨𑌤𑌮𑍋 𑌮𑍇𑌘𑌶𑍍𑌯𑌾𑌮𑌲𑍋 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑍍𑌤𑌕𑍃𑌤𑍍 ॥ 49

𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌯𑍁𑌧𑌧𑌰𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑍋 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌭𑍂𑌦𑍇𑌵𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑍋 𑌜𑌨𑌕𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑍃𑌤𑍍 𑌪𑍍𑌰𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ॥ 50

𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌸𑌾𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 𑌸𑌤𑍍𑌯𑌃 𑌸𑌤𑍍𑌯𑌸𑌨𑍍𑌧𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌃 ।
𑌸𑍁𑌵𑍍𑌰𑌤𑌃 𑌸𑍁𑌲𑌭𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌃 𑌸𑍁𑌘𑍋𑌷𑌃 𑌸𑍁𑌖𑌦𑌃 𑌸𑍁𑌧𑍀𑌃 ॥ 51

𑌦𑌾𑌮𑍋𑌦𑌰𑍋𑌽𑌚𑍍𑌯𑍁𑌤𑌃 𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑍀 𑌵𑌾𑌮𑌨𑍋 𑌮𑌧𑍁𑌰𑌾𑌧𑌿𑌪𑌃 ।
𑌦𑍇𑌵𑌕𑍀𑌨𑌨𑍍𑌦𑌨𑌃 𑌶𑍌𑌰𑌿𑌃 𑌶𑍂𑌰𑌃 𑌕𑍈𑌟𑌭𑌮𑌰𑍍𑌦𑌨𑌃 ॥ 52

𑌸𑌪𑍍𑌤𑌤𑌾𑌲𑌪𑍍𑌰𑌭𑍇𑌤𑍍𑌤𑌾 𑌚 𑌮𑌿𑌤𑍍𑌰𑌵𑌂𑌶𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ।
𑌕𑌾𑌲𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍀 𑌕𑌾𑌲𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌦𑌃 𑌕𑌵𑌿𑌃 ॥ 53

---

உலகங்களில் எல்லாரையும் விட அழகானவர். உலகங்களிலுள்ள சத்ருக்களை நாசம் செய்பவர், பக்தப்பிரியர், மிகவும் புராணர், மேகம்போல் கறுப்பானவர், இராக்ஷஸகாலன். (49)

திவ்ய ஆயுதத்தைத் தரிப்பவர், பூமி, தேவர் இவர்களால் வணங்கக் கூடியவர், பிர்மாவுக்குப் பிரியத்தைச் செய்கிறவர், பிர்மாவுக்கு மேலானவர். (50)

உத்தமமானவர், ஸத்வகுணமுடையவர், ஸத்யசொரூபி, உண்மையான பிரதிக்ஞையுடையவர், த்ரிவிக்ரமர், நல்ல நடத்தையுடையவர், நன்றாய் அடையக்கூடியவர், சூக்ஷ்மமானவர், நல்ல சப்தமுடையவர், சுகத்தைக் கொடுக்கிறவர், ஸ்நேகிதர். (51)

தாமோதரர், அச்சுதர், சார்ங்கி, வாமனர், மதுரைக்கு அதிபதி, தேவகி குமாரர், சௌரி, சூரர், மதுகைடபர்களை நாசம் செய்தவர். (52)

ஏழு ஆல்மரங்களைப் பிளந்தவர், ஸ்நேகிதரின் வம்சத்தை விருத்தி செய்பவர், காலஸ்வரூபி, காலத்தை ஆத்மாவாக யுடையவர், காலம், கல்யாணங்களைக் கொடுப்பவர், கவிரூபி, [400] (53)

[illegible] ।
[illegible] ॥ 54
[illegible] ।
[illegible] ॥ 55
[illegible] ।
[illegible] ॥ 56
[illegible] ।
[illegible] ॥ 57
[illegible] ।
[illegible] ॥ 58

---

வருஷம், ருது, பக்ஷம், அயனம், பகல், யுகம், ஸ்தோத்திரம் செல்லத் தகுந்தவர், பரிசுத்தமானவர், ஸம்பந்தமற்றவர், எங்கும் வ்யாபித்தவர், ஆகுலமற்றவர். (54)

ஆதியந்தமற்றவர், எல்லா ஜனங்களாலும் பூஜிக்கத் தகுந்தவர், வ்யாதியற்றவர், ரஸரூபி, ரஸத்தை யறிந்தவர், ஸாரத்தை யறிந்தவர், உலகங்களின் ஸாரம், ரஸத்தை ஆத்மாவாகவுடையவர். (55)

எல்லாத் துக்கத்தையும் தாண்டினவர், வித்தைகளின் ராசி, மிகவும் விஷயமானவர், சேஷரூபி, விசேஷமானவர், கல்மஷமற்றவர், ரகுச்ரேஷ்டர். (56)

வர்ணங்களுக்கு ஸ்ரேஷ்டர், வர்ணங்களுக்கு மங்களகரமானவர், வர்ணரூபி, வர்ணங்களின் குணங்களால் ப்ரகாசிப்பவர், கர்மங்களுக்கு ஸாக்ஷி, குணங்களால் ஸ்ரேஷ்டமானவர், தேவர், தேவர்களுக்கு வரங்களைக் கொடுப்பவர். (57)

தேவருக்கெல்லாம் மேலான தேவர், தேவஸ்ரேஷ்டர், தேவர் அசுரர் இவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவர், ஸர்வ தேவஸ்வரூபி, சக்ரத்தை யுடையவர், வில்லைக் கையிலுடையவர், ரகுஸ்ரேஷ்டர். (58)

𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌵𑍍𑌯𑌯𑌃 ।
𑌨𑍍𑌯𑌾𑌯𑍋 𑌨𑍍𑌯𑌾𑌯𑍀 𑌨𑌯𑍀 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌨𑌯𑍋 𑌨𑌗𑌧𑌰𑍋 𑌧𑍍𑌰𑍁𑌵𑌃 ॥ ௫௯

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌵𑌿𑌶𑍍𑌵𑌂𑌭𑌰𑍋 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌦𑍇𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌬𑌲𑌿𑌮𑌰𑍍𑌦𑌨𑌃 ।
𑌬𑌾𑌣𑌾𑌰𑌿𑌮𑌰𑍍𑌦𑌨𑍋 𑌯𑌜𑍍𑌵𑌾𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑍋 𑌮𑍁𑌨𑌿𑌸𑍇𑌵𑌿𑌤𑌃 ॥ ௬௰

𑌦𑍇𑌵𑌾𑌗𑍍𑌰𑌣𑍀𑌃 𑌶𑌿𑌵𑌧𑍍𑌯𑌾𑌨𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌪𑌰𑌮𑌃 𑌪𑌰𑌃 ।
𑌸𑌾𑌮𑌗𑍇𑌯𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌶𑍂𑌰𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌃 𑌸𑍁𑌲𑍋𑌚𑌨𑌃 ॥ ௬௧

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑍋 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋 𑌦𑌶𑌾𑌸𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌪𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌕𑌲𑌾𑌨𑌿𑌧𑌿𑌃 𑌕𑌲𑌾𑌨𑌾𑌥𑌃 𑌕𑌮𑌲𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ॥ ௬௨

𑌪𑍁𑌣𑍍𑌯𑌃𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌧𑌿𑌕𑌃𑌪𑍂𑌰𑍍𑌣𑌃𑌪𑍂𑌰𑍍𑌵𑌃𑌪𑍂𑌰𑌯𑌿𑌤𑌾𑌰𑌵𑌿𑌃 ।
𑌜𑌟𑌿𑌲𑌃 𑌕𑌲𑍍𑌮𑌷𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌪𑍍𑌰𑌭𑌂𑌜𑌨𑌵𑌿𑌭𑌾𑌵𑌸𑍁𑌃 ॥ ௬௩

---

மனோபுத்தி ரூபி, அகங்காரம், ப்ரக்ருதிரூபி, நாசமற்ற புருஷர், நியாயம், நியாயரூபத்தை யுடையவர், நயமுடையவர், ஸ்ரீமான், நயம், நகத்தைத் தரிப்பவர், நிச்சயமானவர். 59

லக்ஷ்மியையும் உலகத்தையுந் தரிப்பவர், போஷிக்கிறவர், தேவ ச்ரேஷ்டர், பலியை நாசம் செய்தவர், பாணனது சத்ருவை ஸம்ஹாரம் செய்தவர், யாகம் செய்தவர், ச்ரேஷ்டமானவர், முனிவர்களால் சேவிக்கப்பட்டவர். 60

தேவச்ரேஷ்டர், எப்போதும் சிவனை த்யானம் செய்கிறவர், பரமமானவர், ச்ரேஷ்டர், ஸாமவேதத்தால் கானம் பண்ணக்கூடியவர், ப்ரியர், சூரர், புண்ய கீர்த்தி யுடையவர், நல்ல கண்களை யுடையவர். 61

வ்யக்தமில்லாத லக்ஷணங்களையுடையவர், வ்யக்தர், ராவணனாகிய யானைக்கு ஸிம்மம்போன்றவர், கலாநிதி, கலாநாதர், லக்ஷ்மியின் ஆனந்தத்தை விருத்திசெய்பவர். 62

புண்யர், புண்யாதிகர், பூரணர், பூர்வர், நிரம்புகிறவர், ஸூர்யரூபி, ஜடையுள்ளவர், பாபமாகிய இருட்டைப் போக்கும் ஸூரியன். 63

𑌜𑌯𑍀 𑌜𑌿𑌤𑌾𑌰𑌿𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌦𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌰𑍂𑌪𑍋 𑌭𑌵𑌭𑌞𑍍𑌜𑌨𑌃 ।
𑌅𑌲𑌙𑍍𑌕𑌰𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌚𑌲𑍋 𑌰𑍋𑌚𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ॥ ௬௪

𑌆𑌶𑍁𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌪𑌤𑌿𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌗𑍋𑌚𑌰𑍋𑌰𑌞𑍍𑌜𑌨𑍋𑌲𑌘𑍁𑌃 ।
𑌨𑌿𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌮𑌾𑌯𑍀𑌸𑍍𑌥𑍂𑌲𑌸𑍍𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑍋𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 ॥ ௬௫

𑌆𑌤𑍍𑌮𑌯𑍋 𑌨𑌿𑌰𑌯𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌸𑌪𑍍𑌤𑌜𑌿𑌹𑍍𑌵𑌸𑍍𑌸𑌹𑌸𑍍𑌰 𑌪𑌾𑌤𑍍 ।
𑌸𑌨𑌾𑌤𑌨𑌤𑌮𑌸𑍍𑌸𑍍𑌰𑌗𑍍𑌵𑍀 𑌪𑍇𑌶𑌲𑍋 𑌜𑌯𑌿𑌨𑌾𑌂 𑌵𑌰𑌃 ॥ ௬௬

𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 𑌶𑌙𑍍𑌖𑌭𑍃𑌨𑍍𑌨𑌾𑌥𑌃 𑌗𑌦𑌾𑌪𑌦𑍍𑌮𑌰𑌥𑌾𑌙𑍍𑌗𑌭𑍃𑌤𑍍 ।
𑌨𑌿𑌰𑍀𑌹𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌶𑍍𑌚 𑌚𑌿𑌦𑍍𑌰𑍂𑌪𑍋 𑌵𑍀𑌤𑌸𑌾𑌧𑍍𑌵𑌸𑌃 ॥ ௬௭

𑌶𑌤𑌾𑌨𑌨𑌸𑍍𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌶𑍍𑌶𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌘𑌨𑌪𑍍𑌰𑌭𑌃 ।
𑌹𑍃𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌶𑌯𑌨𑍋 𑌕𑌠𑌿𑌨𑍋 𑌦𑍍𑌰𑌵 𑌏𑌵𑌚 ॥ ௬௮

---

ஜயசீலர், சத்துருக்களை ஜயித்தவர், எல்லாவற்றிற்கும் ஆதி, அக்நிரூபி, ஸம்ஸாரபந்தத்தைத் தொலைப்பவர், அலங்காரம் செய்பவர், ஸ்திரமானவர், ப்ரகாசமுள்ளவர், மேலானபராக்ரமமுடையவர். 64

சீக்ரரூபி, சப்தங்களுக்குப்பதி, சப்தங்களுக்கு விஷயமானவர், திருப்திசெய்பவர், லகுரூபி, சப்தமற்றவர், புருஷர், மாயையுடையவர், ஸ்தூலரூபி, ஸூக்ஷ்மரூபி, ஸமர்த்தர். 65

தன்னைக்காரணமாகவுடையவர், காரணமற்றவர், ஏழுநாக்குகளை யுடையவர், ஆயிரம் கால்களையுடையவர், மிகவும் புராதனர், மாலையை யுடையவர், அழகுடையவர், ஜயிப்பவருள் ச்ரேஷ்டமானவர். 66

சக்தியுடையவர், சங்கத்தையுடையவர், லோகநாதர் கதையையும் சக்ரத்தையும் தரிப்பர், ஆசையற்றவர், விகற்பமற்றவர், சித்ரூபி, பயமற்றவர். 67

நூறு முகங்களையுடையவர், ஆயிரம் கண்களை யுடையவர், நூறு மூர்த்திகளையுடையவர், மேகத்தின் காந்திபோன்ற காந்தியை யுடையவர், ஹ்ருதய கமலத்தில் வசிப்பவர், கடினமானவர், த்ரவரூபி. 68

ஸூர்யரூபோ திசாம் பதி: ஸ்ரீமாந் ஸமர்தோநர்தநாசந: ।
அதர்மசத்ருரக்ஷோக்ந: புருஹூத: புருஷ்டுத: ॥
ப்ரஹ்மகர்போ ப்ருஹத்கர்போ தர்மதேநுர்தநாகம: ।
ஹிரண்யகர்போ ஜ்யோதிஷ்மாந் ஸுலலாட: ஸுவிக்ரம: ॥ ௭௰
சிவபூஜாரத: ஸ்ரீமாந் பவாநீப்ரியக்ருத் வசீ ।
நரோ நாராயண: ச்யாம: கபர்தீ நீலலோஹித: ॥ ௭௧
ருத்ர: பசுபதி: ஸ்தாணுர் விச்வாமித்ரோ த்விஜேச்வர: ।
மாதாமஹோ மாதரிச்வா விரிஞ்சிர் விஷ்டரச்ரவா: ॥ ௭௨
அக்ஷோப்ய: ஸர்வபூதாநாம் சண்ட: ஸத்யபராக்ரம: ।
வாலகில்யோ மஹாகல்ப: கல்பவ்ருக்ஷ: கலாதர: ॥ ௭௩
நிதாகஸ்தபநோ மேக: சுக்ர: பரபலாபஹ்ருத் ।
வஸுச்ரவா: கவ்யவாஹோ ப்ரதப்தோ விச்வபோஜந: ॥ ௭௪

---

ஸூர்யரூபி, திசைகளுக்குப்பதி, ஸ்ரீமான், சமர்த்தர் அனர்த்தங்களை நாசஞ்செய்பவர், அதர்மத்திற்குச் சத்துரு, ராக்ஷஸர்களை நாசஞ்செய்பவர், புருஹூதர், புருஷ்டுதர். 69

பிர்மத்தைக் கர்ப்பத்திலுடையவர், பெரிய கர்ப்ப முடையவர், தர்மரூபமானதேனு, தனத்தின் வரவு, ஹிரண்ய கர்ப்பர், காந்தியையுடையவர், நல்ல நெற்றியையுடையவர், நல்ல பராக்ரம முடையவர். 70

சிவபூஜையில் ஆசையுள்ளவர், ஸ்ரீமான், பார்வதிக்குப் பிரியத்தையுண்டாக்குகிறவர், ஜிதேந்திரியர், நரரூபி, நாராயணர், கரிய திருமேனியுடையவர், கபர்தீ, நீலலோஹிதர். 71

ருத்ரர், பசுபதி, ஸ்தாணு, விச்வாமித்ரர், பிராம்மண ச்ரேஷ்டர், மாதாமஹர், மாதரிச்வா, விரிஞ்சி, விஷ்டாச்ரவஸ். 72

எல்லாப் பிராணிகளாலும் அசைக்கக் கூடாதவர், குரூரர், ஸத்தியமான பராக்ரமமுடையவர், வாலகில்யர், மஹாகல்பர், கற்பக விருக்ஷம், கலைகளைத்தரிப்பவர். 73

கோடைகாலம், உக்ரமானவர், மேகம், சுக்ரர், அன்னியர் பலத்தை அபஹரிக்கிறவர், வஸுச்ரவஸ், கவ்யத்தை வாஹனமாக வுடையவர்; மிகவும் உஷ்ணமானவர், உலகத்தைப் பூஜிப்பவர். 74

ராமோ நீலோத்பலஶ்யாமோ ஜ்ஞாநஸ்கந்தோ மஹாத்யுதி: ।
கபந்தமதநோ திவ்ய: கம்புக்ரீவ: ஶிவப்ரிய: ॥ ௭௫

ஸுகோ நீல: ஸுநிஷ்பந்ந: ஸுலப: ஶிஶிராத்மக: ।
அஸம்ஸ்ருஷ்டோ திதி: ஶூர: ப்ரமாதீ பாபநாஶக்ருத் ॥ ௭௬

பவித்ரபாத: பாபாரிர்மணிபூரோ நபோகதி: ।
உத்தாரணோ துஷ்க்ருதிஹா துர்தர்ஷோ து:ஸஹோ பல: ॥
அம்ருதேஶோ ம்ருதவபுர்தர்மீ தர்ம: க்ருபாகர: ।
பகோ விவஸ்வாநாதித்யோ யோகாசார்யோ திவஸ்பதி: ॥ ௭௮

உதாரகீர்த்திருத்யோகீ வாங்மய: ஸதஸந்மய: ।
நக்ஷத்ரமாலீ நாகேஶ: ஸ்வாதிஷ்டாந: ஷடாஶ்ரய: ॥ ௭௯

---

ராமர், கருநெய்தல் போல் கறுப்பானவர், ஞானத்தைக் கொடுப்பவர், பெரிய காந்தியையுடையவர், கபந்தனைக் கொன்றவர், திவ்யரூபி, சங்குபோன்ற கழுத்தையுடையவர், சிவப்பிரியர். 75

ஸுகரூபி, நீலரூபி, மிகவும் நன்றாய் உண்டானவர், எல்லாராலும் அடையக்கூடியவர், குளிர்ந்த ஆத்மாவையுடையவர், ஸம்பந்தமற்றவர், அதிதி, சூரர், நன்றாய் நாசஞ்செய்பவர், பாபத்தை நாசஞ்செய்பவர். 76

பரிசுத்தமான பாதங்களையுடையவர், பாபத்தின் சத்ரு, மணிபூரர், ஆகாய கமனமுடையவர், தாண்டும்படி செய்பவர், பாபத்தை நாசஞ்செய்பவர், அசைக்கமுடியாதவர், சகித்தற்கரிய பலமுள்ளவர், பலரூபி. 77

அமிர்தேசுவரர், அமிர்த சரீரமுடையவர், தர்மமுடையவர், தர்மரூபி, கிருபாநிதி, வீர்யரூபி, ஆதித்யர், தேவலோகத்து அதிபர். 78

உதாரமான கீர்த்தியையுடையவர், முயற்சியுடையவர், வாக்ரூபி, ஸத் அஸத் ரூபமுள்ளவர், நக்ஷத்திரங்களின் தேவதை, தேவலோகாதிபர், தன்னிடமுள்ளவர், எல்லாருக்கும் ஆச்ரயமாக விருப்பவர். 79

𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌗𑌫𑌲𑌂 𑌵𑌰𑍍𑌣𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍍𑌰𑌯𑌫𑌲𑌂 𑌨𑌿𑌧𑌿𑌃 ।
𑌨𑌿𑌧𑌾𑌨𑌗𑌰𑍍𑌭𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌜𑍋 𑌨𑌿𑌰𑍀𑌶𑍋 𑌵𑍍𑌯𑌾𑌲𑌮𑌰𑍍𑌦𑌨𑌃 ॥ ௮௰

𑌶𑍍𑌰𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌶𑍍𑌶𑌿𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌶𑍍𑌶𑌾𑌨𑍍𑌤𑍋𑌭𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌮𑌂𑌜𑌸𑌃 ।
𑌭𑍂𑌶𑌯𑍀 𑌭𑍂𑌤𑌿𑌕𑍃𑌦𑍍𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌷𑌣𑍋𑌭𑍂𑌤𑌵𑌾𑌹𑌨𑌃 ॥

𑌅𑌕𑌾𑌯𑍋 𑌭𑌕𑍍𑌤𑌕𑌾𑌯𑌸𑍍𑌥𑌃 𑌕𑌾𑌲𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌮𑌹𑌾𑌵𑌟𑍁𑌃 ।
𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌚𑌲𑍋 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌶𑍍𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑌾𑌗𑌰𑌃 ॥ ௮௨

𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌭𑌦𑍍𑌰𑍋 𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌭𑌯𑌨𑌾𑌶𑌨𑌃 ।
𑌵𑍇𑌦𑍍𑌯𑍋 𑌵𑍈𑌦𑍍𑌯𑍋 𑌵𑌿𑌯𑌦𑍍𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌮𑌰𑌮𑍁𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ॥ ௮௩

𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮𑌕𑌰𑌃 𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌧𑍋𑌕𑍍𑌷𑌜𑌃 ।
𑌧𑍈𑌰𑍍𑌯𑍋𑌽𑌗𑍍𑌰𑌣𑍀𑌰𑍍𑌧𑌰𑌾𑌧𑍀𑌶𑌸𑍍𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌶𑍍𑌶𑌰𑍍𑌵𑌰𑍀𑌪𑌤𑌿𑌃 ॥ ௮௪

---

நான்குவர்க்கங்களின் பலரூபி, வர்ணம் சத்தி இந்த மூன்றின் பலரூபி, நிதி, புதையலைக் கர்ப்பத்திலுடையவர், காரணமற்றவர், ஈசனற்றவர், ஸர்பத்தை நாசம் செய்கிறவர். 80

ஸ்ரீவல்லபர், மங்களகரமான ஆரம்பமுடையவர், சாந்தர், மங்களரூபி, சரியானவர் பூமியில் படுப்பவர், பூதங்களைச் செய்கிறவர், ஐச்வரியரூபி, அலங்காரமானவர், பூதத்தை வாஹனமாயுடையவர். 81

சரீரமற்றவர், பக்தரின் சரீரமுள்ளவர், காலத்தையறிந்தவர், மிகவும் சமர்த்தர், பரார்த்தத்திலுள்ளவர், சஞ்சலமில்லாதவர், பரிசுத்தர், வேதசமுத்திரர். 82

ஸ்வபாவமாய் மங்களகரமானவர், மத்தியிலுள்ளவர், ஸம்ஸார பயத்தை நாசம் செய்பவர், அறியக்கூடியவர், வைத்தியர், ஆகாயத்தைக் காப்பாற்றுகிறவர், முனிவர், தேவர் இவர்களுக்கு ஈச்வரர். 83

தேவச்ரேஷ்டர், காரண காரியம் செய்கிறவர், கர்மத்தையுடையவர், விஷ்ணுரூபி, தைர்யமுள்ளவர், முன் செல்கிறவர், பூபதி, மனதின் கர்மம், இரவின் பதி. 84

பரமார்த்தகுருர் நேத்ரம் சிராச்ரிதவத்ஸல: ।
விஷ்ணுர் ஜிஷ்ணுர் விபுர் யஜ்ஞோ யஜ்ஞேசோ யஜ்ஞபாலக: ॥
ப்ரபவிஷ்ணுர் க்ரஸிஷ்ணுஸ்ச லோகாத்மா லோகபாவன: ।
கேசவ: கேசிஹா காவ்ய: கவி: காரணகாரணம் ॥ ௮௬
காலகர்த்தா காலசேஷோ வாஸுதேவ: புருஷ்டுத: ।
ஆதிகர்த்தா வராஹஸ்ச மாதவோ மதுஸூதன: ॥ ௮௭
நாராயணோ நரோ ஹம்ஸோ விஷ்வக்ஸேனோ ஜனார்த்தன: ।
விஸ்வகர்த்தா மஹாயஜ்ஞோ ஜ்யோதிஷ்மான் புருஷோத்தம: ॥
வைகுண்ட: புண்டரீகாக்ஷ: க்ருஷ்ண: ஸூர்ய: ஸுரார்சித: ।
நாரஸிம்ஹோ மஹாபீமோ வஜ்ரதம்ஷ்ட்ரோ நகாயுத: ॥ ௮௯
ஆதிதேவோ ஜகத்கர்த்தா யோகீசோ கருடத்வஜ: ।
கோவிந்தோ கோபதிர் கோப்தா பூபதிர் புவனேஸ்வர: ॥

---

பரமார்த்தகுரு, நேத்திரம், வெகுகாலம் ஆச்ரயித்தவரிடம் ஆசையுள்ளவர், எங்கும் வியாபித்தவர், ஜயசீலர், ஸமர்த்தர், யக்ஞரூபி, யக்ஞாதிபதி, யக்ஞத்தைக் காப்பாற்றுகிறவர். 85

ஸமர்த்தர், க்ரஹிப்பவர், லோகரூபி, லோகங்களைப் பரிசுத்தப்படுத்துகிறவர், கேசியைக் கொன்றவர்: ஆதியானவர், கவி, காரணங்களுக்குக் காரணர். 86

காலங்களைச் செய்பவர், காலங்களைச் சேஷமாக உடையவர், வாஸுதேவர், புருவினல் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவர். ஆதிகர்த்தா, வராஹ மூர்த்தி, மாமனர், மதுசூதனர். 87

நாராயணர், நரரூபி, ஹம்ஸர், விஷ்வக்ஸேனர், ஜநார்த்தனர், உலகத்தைச் செய்பவர், மஹாயக்ஞர், காந்தியுடையவர், புருஷச்ரேஷ்டர். 88

வைகுண்டவாசி, புண்டரீகாக்ஷர், கிருஷ்ணர், ஸூரியர், தேவரால் பூஜிக்கப்பட்டவர், நரஸிம்மரூபி, மிகவும் பயங்கரர், வஜ்ரம் போன்ற பற்களையுடையவர், நகங்களை ஆயுதமாக உடையவர். 89

ஆதிதேவர், உலகத்தை ஸிருஷ்டிப்பவர், யோகீந்த்ரர் கருடத்வஜர், கோவிந்தர், பூபதிர், காப்பாற்றுகிறவர், லோகபதி, லோகச்ரேஷ்டர். 90

பத்மநாபோ ஹ்ருஷீகேசோ லோகநாதோ விஷ்ணுரூப: ப்ரபு: ।
த்ரிவிக்ரமஸ் த்ரிலோகேச: ப்ரஹ்மேச: ப்ரீதிவர்த்தந: ॥ ௯௧

தாந்த: சாஸ்த்ரார்த்ததத்வஜ்ஞோ மந்தராத்ரிர் நகோத்தம: ।
வாமநோ துஷ்டதமநோ கோவிந்தோ கோபவல்லப: ॥ ௯௨

பக்திப்ரியோ(அ)ச்யுத: ஸத்ய: ஸத்யகீர்த்திர் த்ருதி: ஸ்ம்ருதி: ।
காருண்ய: கருணோ வ்யாஸ: பாபஹா சாந்திவர்த்தந: ॥ ௯௩

பதரீநிலய: சாந்தஸ் தபஸ்வீ வைத்யுத: ப்ரபு: ।
பூதாவாஸோ மஹாவாஸ: ஸ்ரீநிவாஸ: ச்ரிய: பதி: ॥ ௯௪

தபோவாஸோ முதாவாஸ: ஸத்யவாஸ: ஸநாதந: ।
புருஷ: புஷ்கல: புண்ய: புஷ்கராக்ஷோ மஹேச்வர: ॥

---

*தாமரையை நாபியிலுடையவர், ஹிருஷீகேசர், உலகப்ரபு, விஷ்ணுரூபி, ப்ரபு, த்ரிவிக்ரமர், மூன்றுலோகங்களுக்கும் ஈச்வரர், பிர்ம்மனுக்கு ஈசன், ப்ரீதியை விருத்திசெய்கிறவர்.* 91

*மனதடக்கமுள்ளவர் சாஸ்திரங்களின் உண்மையை யறிந்தவர், மந்தரபர்வதரூபி, பர்வதச்ரேஷ்டர், வாமனரூபி, துஷ்டர்களை நாசம் செய்கிறவர், கோவிந்தர், கோபரின் ச்ரேஷ்டர்.* 92

*பக்தியை ப்ரியமாயுடையவர், அச்சுதர், ஸத்யர், உண்மையான கீர்த்தியுடையவர், தைர்யரூபி, ஸ்மரணரூபி, வ்யாஸர் பாபத்தை நாசம் செய்கிறவர், காந்தியை விருத்தி செய்கிறவர்.* 93

*பதரிகாசிரமத்தில் வசிப்பவர், சாந்தசீலர், தவமுடையவர், மின்னல் ஸம்பந்தமானவர், ப்ரபு, பூதங்களின் வாஸஸ்தலம், பெரியஇடம், லக்ஷ்மியின்வாஸஸ்தலம், லக்ஷ்மீபதி.* 94

*தபஸின் வாஸஸ்தலம், சந்தோஷத்திற்கு இருப்பிடம், ஸத்தியத்தின் வாஸஸ்தலம், மிகவும் புராதனர், புருஷர், புண்யமுடையவர் புண்யரூபி, தாமரைபோன்ற கண்களையுடையவர், மஹேச்வரர்.* 95

𑌪𑍂𑌰𑍍𑌣𑌰𑍂𑌪𑌃 𑌪𑍁𑌰𑌾𑌣𑌜𑍍𑌞𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌦𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ।
𑌪𑍂𑌰𑍍𑌣𑌪𑍂𑌰𑍍𑌵𑌃 𑌕𑌾𑌲𑌚𑌕𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ॥ ௯௬

𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑌂𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌃 ।
𑌶𑌂𑌖𑍀 𑌚𑌕𑍍𑌰𑍀 𑌗𑌦𑍀 𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑍀 𑌲𑌾𑌂𑌗𑌲𑍀 𑌮𑍁𑌸𑌲𑍀 𑌹𑌲𑍀 ॥ ௯௭

𑌕𑌿𑌰𑍀𑌟𑍀 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀 𑌹𑌾𑌰𑍀 𑌮𑍇𑌖𑌲𑍀 𑌕𑌵𑌚𑍀 𑌧𑍍𑌵𑌜𑍀 ।
𑌯𑍋𑌦𑍍𑌧𑌾 𑌜𑍇𑌤𑌾 𑌮𑌹𑌾𑌵𑍀𑌰𑍍𑌯𑌶𑍍𑌶𑌤𑍍𑌰𑍁𑌜𑌿𑌚𑍍𑌛𑌤𑍍𑌰𑍁𑌤𑌾𑌪𑌨𑌃 ॥ ௯௮

𑌶𑌾𑌸𑍍𑌤𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌕𑌰𑌶𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂𑌶𑌂𑌕𑌰𑌶𑍍𑌶𑌂𑌕𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑌃 ।
𑌸𑌾𑌰𑌥𑍀𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌸𑍍𑌵𑌾𑌮𑍀 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑌪𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌸𑌮𑌃 ॥ ௯௯

𑌪𑌵𑌨𑌸𑍍𑌸𑌂𑌹𑌤𑌶𑍍𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌂𑌗𑌸𑍍𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍 ।
𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌦𑌃 𑌕𑌾𑌮𑌦𑌃 𑌶𑍍𑌰𑍀𑌦𑌃 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌦𑌃 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌦𑌾𑌯𑌕𑌃 ॥ ௧௦௦

---

பூர்ணரூபமுடையவர், புராணத்தை யறிந்தவர், புண்யத்தைக் கொடுப்பவர், ப்ரீதியை வ்ருத்தி செய்கிறவர், காலசக்ரத்தை ஓட்டுகிறவர், ஸமாதான முடையவர். 96

நாராயணர், மேலானகார்திரூபி, பரமாத்மஸ்வரூபி, ஸதாசிவ ரூபி, சங்கத்தையுடையவர், சக்ரத்தையுடையவர், கதையையுடை யவர் சார்ங்கமென்ற தனுஸை யுடையவர், கலப்பையையுடைய வர், உலக்கையையுடையவர், கோடாரியையுடையவர். 97

க்ரீடத்தை யுடையவர், குண்டலங்களை யுடையவர், ஹாரத் தையுடையவர், அரைஞாணுடையவர், கவசத்தையுடையவர், த்வஜத்தையுடையவர், யுத்தவீரர், ஜயசீலர், மகா வீரியமுடை யவர், சத்துருக்களைக் கொல்லுகிறவர், சத்துருக்களை தவிக்கும்படி செய்தவர். 98

ஆளுகிறவர், சாஸ்திரங்களைச் செய்கிறவர், சாஸ்திரரூபி, க்ஷேமத்தையுண்டாக்குகிறவர், சிவனால் ஸ்தோத்திரம் பண்ணப் பட்டவர், ஸாரதி ஸத்வகுணமுள்ளவர், எஜமானன், ஸாமவேதத் தில் ப்ரியமுள்ளவர், ஸமமானவர். 99

வாயுரூபி, கூட்டமானவர், சக்திரூபி, நிறைந்த அங்கமுடை யவர், ஸமர்த்தியுடையவர், சுவர்க்கத்தைக்கொடுப்பவர், காமங் களைக்கொடுப்பவர், ஸம்பத்தைக் கொடுப்பவர், கீர்த்தியைக் கொடுப் பவர், கீர்த்தியைக் கொடுக்கும்படி செய்கிறவர். 100

𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌃 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌃 𑌕𑍍𑌷𑍀𑌰𑌾𑌬𑍍𑌧𑌿𑌕𑍃𑌤𑌕𑍇𑌤𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑍇𑌶𑌃 𑌪𑍍𑌰𑍇𑌰𑌕𑌃 𑌪𑌾𑌪𑌨𑌾𑌶𑌨𑌃 ॥
𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑌃 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌵𑌨𑌮𑌸𑍍𑌕𑍃𑌤𑌃 ।
𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌕𑍃𑌦𑍍𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ॥
𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌕𑍃𑌦𑍍𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌸𑍁𑌖𑌾𑌵𑌹𑌃 ।
𑌅𑌕𑍍𑌷𑌯𑍍𑌯𑌶𑍍𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍋𑌽𑌨𑌨𑍍𑌤𑍋 𑌕𑍍𑌷𑌯𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ॥
𑌨𑌿𑌰𑍍𑌲𑍇𑌪𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌸𑍍𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑍋 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥
𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑍀 𑌵𑌿𑌭𑍁𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌅𑌚𑌲𑍋 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑍋 𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ॥
𑌶𑍍𑌯𑌾𑌮𑍋 𑌯𑍁𑌵𑌾 𑌲𑍋𑌹𑌿𑌤𑌾𑌕𑍍𑌷𑍋 𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌸𑍍𑌯𑍋 𑌮𑌿𑌤𑌭𑌾𑌷𑌣𑌃 ।

---

மோக்ஷத்தைக் கொடுப்பவர், தாமரைமலர்போன்ற கண்களையுடையவர், க்ஷீரஸாகரத்தை வீடாகவுடையவர், ஸர்வரூபி, உலகங்களுக்கெல்லாம் ஈச்வரர், ஏவுகிறவர், பாபங்களை நாசஞ் செய்கிறவர். 101

வைகுண்டவாஸி, புண்டரீகாக்ஷர், சகலதேவராலும் நமஸ்கரிக்கப்படுபவர், எங்கும் வ்யாபித்தவர், உலகங்களுக்கு நாதர் உலகங்களுக்கெல்லாம் மஹேச்வரர். 102

ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கிறவர், தேவர், எல்லா உலகங்களுக்கும் சுகத்தை யுண்டாக்குகிறவர், நாசமற்றவர், சாச்வதர், முடிவற்றவர், க்ஷயம் விருத்தி இரண்டு மற்றவர். 103

பற்றற்றவர், குணமற்றவர், ஸூக்ஷ்மரூபி, விகாரமற்றவர், அக்ஞானமற்றவர், உபாதிகளற்றவர், ஸத்தா மாத்திரத்தால் இருப்பவர். 104

விகாரமற்றவர், ப்ரபு, நித்யர், பரமாத்மரூபி, புராதனர், சஞ்சலமற்றவர், ஸ்திரமானவர், உலகெங்கும் வியாபித்தவர், எப்போதும் திருப்தி யடைந்தவர், ஆச்ரயமற்றவர். 105

ஸியாமர், நித்யயுவர், சிவந்த கண்களை யுடையவர், காந்தியால் ப்ரகாசிக்கிற வார்த்தைகளையுடையவர், முழங்கால் வரையில்

𑌆𑌜𑌾𑌨𑍁𑌬𑌾𑌹𑍁𑌸𑍍𑌸𑍁𑌮𑍁𑌖𑌸𑍍𑌸𑌿𑌂𑌹𑌸𑍍𑌕𑌨𑍍𑌧𑍋𑌮𑌹𑌾𑌭𑍁𑌜𑌃 ॥
𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑍋𑌦𑍀𑌪𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾 ।
𑌕𑌾𑌲𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌾𑌲𑌚𑌕𑍍𑌰 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌃 ॥
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑌂𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑍃𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌚 𑌵𑌿𑌶𑍍𑌵𑌗𑍋𑌪𑍍𑌤𑌾𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌃 ॥
𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌿𑌶𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍁𑌹𑍃𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌨𑌃 ॥
𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌶𑌿𑌵𑌸𑍍 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾𑌶𑍍𑌰𑌿𑌤 𑌵𑌤𑍍𑌸𑌲𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌗𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌶𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌶𑌯𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥
𑌅𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌸𑍍𑌥𑌸𑍍𑌤𑌮𑌸𑌶𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑌃 ।
𑌅𑌨𑌾𑌦𑌿𑌨𑌿𑌧𑌨𑌃 𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌪𑌤𑌿𑌰𑍍𑌹𑌰𑌿𑌃 ॥

---

நீண்டகைகளையுடையவர், நல்ல முகமுடையவர், ஸிம்மத்தின் தோள்போன்ற தோள்களையுடையவர், பெரிய கைகளையுடையவர்.

ஸத்வத்தையுடையவர், குணங்களோடு கூடியவர், தனது காந்தியால் ப்ரகாசிக்கிறவர், காலரூபி, பகவத்ஸ்வரூபி, காலன், காலசக்ரத்தை நடத்துகிறவர். 107

நாராயணர், பரஞ்சோதி, பரமாத்மரூபி, புராதனர், உலகங்களை ஸிருஷ்டிக்கிறவர், உலகங்களை அனுபவிப்பவர், உலகங்களைக் காப்பாற்றுகிறவர், ஸ்திரமானவர். 108

உலகங்களுக்கு ஈசுவரர். உலகமூர்த்தி, விச்வரூபி, உலகங்களைப் பாவனை செய்கிறவர், சகல பிராணிகளுக்கும் ஸ்நேகிதர், சாந்தர், பிராணிகளுக்கெல்லாம் அருள்புரிகிறவர். 109

எல்லாவற்றிற்கும் ஈச்வரர், எல்லாவற்றிற்கும் மங்களத்தை யுண்டாக்குகிறவர், எப்போதும் ஆச்ரயித்தவரிடம் ஆசையுள்ளவர், எங்கும் போகிறவர், எல்லாப் பிராணிகளுக்கும் ஈச்வரர், எல்லாப் பிராணிகளினுடைய மனத்திலும் இருப்பவர். 110

நாரஸிம்ஹோ ஹ்ருஷீகேஶஸ்ஸர்வாத்மா ஸர்வத்ருக்வஶீ ।
நேதா ஸநாதந: கர்தா ஜகதஸ்தஸ்துஷ: ப்ரபு: ॥

ஸ்ரீமாந் தாதா விதாதா ச ஸர்வேஷாம் பதிரீஶ்வர: ॥
ஸஹஸ்ரமூர்தா விஶ்வாத்மா விஷ்ணுர்விஶ்வத்ருகவ்யய: ।

புராணபுருஷஶ்ரேஷ்ட: ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ரபாத் ।
தத்வம் நாராயணோ விஷ்ணுர்வாஸுதேவஸ்ஸநாதந: ॥

பரமாத்மா பரம் ப்ரஹ்ம ஸச்சிதாநந்தவிக்ரஹ: ।
பரஞ்ஜ்யோதி: பரந்தாம பராகாஶ: பராத்பர: ॥

அச்யுத: புருஷ: க்ருஷ்ண: ஶாஶ்வதஶ்ஶிவ ஈஶ்வர: ।
நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுர்ருத்ரஸ்ஸாக்ஷீ ப்ரஜாபதி: ॥

---

மனத்திலுள்ளவர், அக்ஞானத்தை நாசம்செய்கிறவர், நாராயணன், மேலானவர், ஆதியந்தமற்றவர், ஸிருஷ்டிக்கிறவர், ப்ரம்மாவுக்கும் அதிபர், விஷ்ணு. 111

நாஸிம்மர், இந்திரியங்களுக்கு ஈசன், எங்கும் பார்ப்பவர். ஜிதேந்திரியர், உலகங்களுக்கு ஆச்ரயமானவர், ப்ரபு, ஆளுகிறவர், புராதனர். 112

செய்கிறவர், அழிப்பவர், ஸ்ரீமான், எல்லாருக்கும் எஜமானன், ஈச்வரர், ஆயிரம் சிரங்களுடையவர், லோகரூபி, உலகமெங்கும் வ்யாபித்தவர், உலகங்களைப் பார்ப்பவர், நாசமற்றவர். 113

புராணபுருஷ ச்ரேஷ்டர் ஆயிரங் கண்களை யுடையவர், ஆயிரம் கால்களை யுடையவர், தத்வரூபி, நாராயணன், உலகவ்யாபி வாசுதேவர், புராணர். 114

பரமாத்மா, பரப்ரம்மம், ஸச்சிதானந்தரூபி, பரஞ்சோதி, மேலான இடம், மேலான ஆகாசம், ச்ரேஷ்டத்தைக் காட்டிலும் ச்ரேஷ்டமானவர். 115

அச்சுதன், புருஷன், கிருஷ்ணன், சாச்வதன், சிவன், ஈச்வரர், நித்யர், எங்குமுள்ளவர், ஸ்தாணு, ருத்திரர், ஸாக்ஷீ, ப்ரஜாபதி.

ஹிரண்யகர்ப: ஸவிதா லோகக்ருல்லோகப்ருத்விபு: ।
ஓங்காரவாச்யோ பகவாந் ஸ்ரீபூலீலாபதி: ப்ரபு: ॥

ஸர்வலோகேச்வர: ஸ்ரீமாந் ஸர்வஜ்ஞஸ்ஸர்வதோமுக: ।
ஸ்வாமீ ஸுசீல: ஸுலப: ஸர்வக: ஸர்வசக்திமாந் ॥

நித்ய: ஸம்பூர்ணகாமஶ்ச நைஸர்கிகஸுஹ்ருத்ஸுகீ ।
க்ருபாபீயூஷஜலதிஶ்ஶரண்ய: ஸர்வதேஹிநாம் ॥

ஸ்ரீமாந்நாராயணஸ்ஸ்வாமீ ஜகதாம் ப்ரபுரீச்வர: ।
மத்ஸ்ய: கூர்மோ வராஹஶ்ச நாரஸிம்ஹோऽத வாமந: ॥

ராமோ ராமஶ்ச க்ருஷ்ணஶ்ச பௌத்த: கல்கி: பராத்பர: ।
அயோத்யேசோ ந்ருபஶ்ரேஷ்ட: குசதாத: பராக்ரம: ॥

---

ஹிரண்யகர்ப்பன், ஸூரியர், உலகங்களைப் படைப்பவர், உலகங்களை அனுபவிப்பவர், சமர்த்தர், ஓங்காரத்தின் பொருளாயிருப்பவர், லக்ஷ்மி, பூமி லீலை இவைகளுக்குப் பதி, ப்ரபு. 117

உலகங்களுக்கெல்லாம் ஈச்வரர், ஸ்ரீமான், எல்லாவற்றையும் படைப்பவர், எங்கும் ப்ரவ்ருத்திப்பவர், எஜமான், நல்ல நடத்தையை யுடையவர், எல்லாரும் அடையக்கூடியவர், எங்கும் போகிறவர், சகல சக்தியு முடையவர் 118

நித்யர், நிறைந்தவர், இஷ்ட முடையவர், ஸ்வபாவஸிநேஹிதர் சுகி, கருணாநிதி, ஜீவரக்ஷகர். 119

ஸ்ரீமான், நாராயணன், எஜமானன், உலகங்களுக்கு ப்ரபு, ஈச்வரர், மத்ஸ்யரூபி, கூர்மரூபி, கூர்மரூபமுள்ளவர், வராஹரூபமுள்ளவர், நரஸிம்மன் வாமனன். 120

தசரதகுமாரன், இராமன், பரசுராமன், கிருஷ்ணன், புத்தர், கல்கி, மிகவும் ச்ரேஷ்டமானவர், அயோத்திக்கு ஈசர், ராஜ ச்ரேஷ்டர், குசனுக்குத்தந்தை, மிகவும் பராக்ரமசாலி. 121

லவதாத: கஞ்ஜநேத்ர: கஞ்ஜாங்க்ரி: பங்கஜாநந: ।
ஸீதாகாந்தவிலாஸாட்ய: ஶிஶுஜீவநதத்பர: ॥
ஸேதுக்ருச்சித்ரகூடஸ்த: ஶபரீஸம்ஸ்துத: ப்ரபு: ।
யோகித்யேய: ஶிவத்யேய: ஶாஸ்தா ராவணதர்பஹா ॥
ஶ்ரீஶ: ஶரண்யோ பூதாநாம் ஸம்ஶ்ரிதாபீஷ்டதாயக: ।
அநந்த: ஶ்ரீபதீ ராமோ குணப்ருந்நிர்குணோ மஹாந் ॥

இதி ஶ்ரீராமஸஹஸ்ரநாமஸ்தோத்ரம்
ஸம்பூர்ணம்.

---

லவனுக்குத் தந்தை, தாமரைப் பூப்போன்ற கண்களை யுடையவர், தாமரை இதழ்போன்ற சரணங்களை யுடையவர், தாமரைப் பூப்போன்ற முகத்தை யுடையவர், ஸீதாபதி, சாந்தரூபி சிசுக்களைக் காப்பாற்றுவதில் ஆசையுள்ளவர். 122

அணைபோட்டவர், சித்திரகூடத்தி லிருந்தவர், சபரியால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவர், ப்ரபு, யோகிகளால் த்யானம் செய்யப்பட்டவர், சிவனால் த்யானஞ் செய்யப்பட்டவர், புருஷர், இராவணனது கொழுப்பை யடக்கியவர். 123

லக்ஷ்மீபதி, ஜீவ ரக்ஷகர், ஆச்ரயித்தவர்களின் இஷ்டங்களைக் கொடுப்பவர், அந்தமற்றவர், லக்ஷ்மீபதி, ராமர், குணங்களையுடையவர், குணமற்றவர், மஹான். 124

ராமஸஹஸ்ரநாமம் முற்றிற்று.

---

இவைபோன்ற வேறு கணக்கற்ற அநேக நாமங்கள் உண்டு. இவைகளில் ஒவ்வொன்றும் மஹா பாதகங்களைப் போக்குமாதாலால் இவ்வாயிரம் நாமங்களின் மகிமையைக் கூற யாரால் முடியும்? இவைகளில் மந்த்ர சாஸ்திரம் முதலிய எல்லா சாஸ்த்ரங்களின் தத்வங்களும் அடங்கியிருக்கின்றன. முன் ஸநத்குமாருக்கு விநாயகரால் கூறப்பட்ட இந்த திவ்ய நாமங்களை நான் உனக்குக் கூறினேன். எவன் இவைகளைப் படிக்கிறானோ அல்லது கேட்கிறானோ அவன் பிரம்ம பதத்தை யடைவான். நாராயணனான ராமனது திவ்யநாமங்களாகிற ஸிம்மத்தின்தொனியைக் கேட்கும் வரை

யிலேதான் மஹாபாதகங்களுக்கு வலிமையுண்டு. பிராம்ஹணனைக் கொல்கிறவன், மது பானஞ் செய்கிறவன், திருடுகிறவன், குரு பத்தினியைப் புணருகிறவன், சரணமென்றடைந்தவனைக் காப்பாற்றாதவன், சிநேகிதனுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தவன், மாதாவைக் கொன்றவன், பிதாவைக் கொன்றவன், கர்ப்பத்தை நாசஞ்செய்தவன், வீரனைக்கொன்றவன், கோடிக்கணக்கான பாபங்களைச் செய்தவன் ஆகிய இத்தகைய மகாபாதகர்களும் தினந்தோறும் ராமர் ஸந்நிதியில் இதைக் கிரமமாக ஒரு வருஷம் ஜபம் செய்தால், தங்கள் பாபங்களினின்று விடுபடுவார்கள்; இகத்தில் சுகம்பெற்றுக் கடைசியில் முக்தியும் பெறுவார்கள். 127

சூதர் கூறுகிறார்.

சௌனகரே! பார்வதிக்குச்சிவன் எவ்வாறு ராம நாம ஸஹஸ்ரத்தை உபதேசித்தாரோ அவ்வாறே நான் உனக்கு இப்போது உபதேசித்தேன் என்றார்.

ராமதாஸர் கூறுகிறார்.

ஏ சிஷ்ய! நீ கேட்டபடி ஸ்ரீராம ஸஹஸ்ரத்தை சூத முனிவர் சொன்னவிதமே உனக்கு உபதேசித்தேன்.

முனிவரான நாரதர் புக்தி முக்திகளைக் கொடுக்கும்படியான ஸ்ரீ ராம நாம ஸஹஸ்ரத்தால் ஸபையில் ஸ்ரீராமரை ஸ்தோத்ரம் செய்தார்.

## 1 - வது சருக்கம்

முற்றிற்று.

## 2-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

பரமகுருவே! தாங்கள் ராம ஸஹஸ்ரநாமத்தையும் ராமர் கற்பகவிருக்ஷத்தின் அடியிலிருப்பதாக எண்ணித் தியானிப்பதை யும் கருணையுடன் எனக்குபதேசித்தீர்களல்லவா? ஸ்வர்க்க லோகத்திலிருந்த கற்பக விருக்ஷம் அயோத்தியா பட்டினத்திற்கு எவ்வாறு வந்ததென்றும் அதனடியில் ராமரை எவ்வாறு த்யானஞ் செய்வதென்பதையும் எனக்குக் கூறவேண்டும் என்றார்.

### ராமதாஸர் கூறுகிறார்.

ஏ விஷ்ணுதாஸ! நன்றாய்க் கேட்டாய். நான் சொல்வதைக் கவனமாகக் கேள். ராமபிரான் மஹாவிஷ்ணுவேயாயினும் பூவுல கில் மனிதனாய் அவதரித்தாராதலால் அவரது மகிமையை உலகத் தவர்க்குக் காட்டத் திருவுளங்கொண்ட துருவாச முனிவர் தமது சிஷ்யர்கள் அறுபதினாயிரவரோடு ஒருநாள் அயோத்திக்கு வந்து ராமரது க்ருகத்தைத் தாண்டிச்சென்று ஸீதாதேவியின் வீட்டு வாசலுக்குப் போய்த் தமது சிஷ்யர்களுடன் நின்றார். சிஷ்யர்களுடன் வாசலில் நின்று கொண்டிருக்கும் முனிவரைப் பார்த்த வேலைக்காரர்கள் உடனே வீட்டிற்குள் சென்று முனிவர் வந்திருப்பதை ஸீதைக்குத் தெரிவித்தார்கள். அங்கே அச்சம யம் ஏகாந்தமாயிருந்த ராமரும் இச்செய்தி கேட்டு வேகமாக வெளியே வந்து முனிவரை வணங்கி வீட்டிற்குள் அழைத்துச் சென்று ஆசன முதலியவைகளை யளித்து உபசரித்தார். முனி வர் அன்புடன் ராமபிரானிட்ட ஆசனத்தில் அமர்ந்து "ராம! நான் ஆயிரவருஷ காலம் உபவாசமிருந்து வந்தேன். அந்த வ்ர தம் இன்றைக்கு முடிவு பெறுகிறபடியால் யான் எனது சிஷ்யர் களுடன் இன்று தங்கள் வீட்டில் போஜனம் செய்ய விரும்பியுள் ளேன். ஆகையால் எனக்கு ருசிகரமான போஜனம் அளிக்க வேண்டும். அது சிந்தாமணி, காமதேனு அக்கினி இவைகளால்

தயார் செய்யப்படாததாக இருக்கவேண்டும். இதுவன்றிச் சிவாராதனை புரிவதற்கு மனிதர் பார்த்திராத மலர்களையும் ஸ்வர்க்கத்திலிருந்து வரவழைக்கவேண்டும். தங்களுக்கு கார்ஹஸ்த்யம் வேண்டுமென்ற ஆவலிருந்தால் இவ்வளவையும் எனக்குச்சம்பாதித்துக் கொடுங்கள். இல்லாவிடில் என்னால் முடியாது என்று சொல்லி என்னை அனுப்பிவிடுங்கள்'' என்றார். முனிவர் கூறியதைக் கேட்டு ராமர் புன்னகை கொண்டு ''எல்லாவற்றையும் நடத்தி வைக்கிறேன்'' என்று வணக்கத்துடன் சொன்னார். இதைக் கேட்டதும் முனிவர் பரமானந்தமடைந்து ''நான் சரயூ நதியில் ஸ்நானம் செய்துவிட்டு வருகிறேன்; சீக்கிரம் எனது விருப்பப்படி போஜனம் தயாரிக்கப்படட்டும் யான் கூறிய விஷயம் ஜானகிக்கும் சகோதரர்களுக்கும் தெரிந்திருக்கட்டும்'' என்று சொல்லி விட்டு ஸ்நானத்திற்குப் போய்விட்டார். இதனை யறிந்த லக்ஷ்மணன் ஸீதை குசன் முதலிய பாலர்கள் யாவரும் மிகவும் பயமடைந்து ''முனிவர் கேட்டபடி ராமர் எவ்விதம் நிறைவேற்றப் போகிறார்; சிந்தாமணி காமதேனு அக்னி இவைகளினால் தயாரிக்கப் படாத அன்னம் எங்கிருக்கிறது'' என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள்.

முனிவர் ஸ்நானத்திற்குச் சென்றதும் ராமபிரான் லட்சுமணரைப் பார்த்து, அவரைக்கொண்டு ஒரு கடிதம் எழுதச் சொல்லி அதைத்தமது பாணத்தில் கட்டி அந்தப் பாணத்தை வில்லிற் பூட்டி விடுத்தார். அப்பாணமானது வில்லிலிருந்து விடுபட்ட அக்கணமே அமராவதி சென்று தேவசபையில் தேவரோடு வீற்றிருக்கும் இந்த்ரனது முன்னிலையில் விழுந்தது. இந்த்ரன் தன்முன்னிலையில் விழுந்தபாணத்தைக்கண்டு பயந்து இது யாருடையது? எங்கிருந்து வந்தது' எனச் சொல்லிக்கொண்டே அதனை உற்று நோக்கினான். அதில் ராமபிரானது திருப்பெயர் வரைந்திருக்கக் கண்டு ஆச்சரியமடைந்து இந்தபாணம் இங்கு வருவதற்குக் காரணம் யாதென யோசித்துப் பின் அதன் நுனியில் ஒரு கடிதம் கட்டியிருக்கக்கண்டு அதை யவிழ்த்து எடுத்து வெகு வணக்கமாய்ப் படித்தான்.

அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:—

"ஏ இந்த்ர! நினக்குச் சுகமுண்டாகுக. நான் எப்பொழுதும் நீ ஸ்வர்க்க லோகத்திலிருப்பதை நினைத்துக்கொண்டிருக்கிறேன். தபோநிதியாகிய துருவாச முனிவர் ஆயிரம் வருஷம் உபவாச மிருந்து அவ்விரத முடிவாகிய இன்றைத்தினம் தமது மாணவர்கள் அறுபதினாயிரவருடன் என்னிடம் வந்து சிந்தாமணி காமதேனு அக்நி இவைகளால் தயார் செய்யப்படாத திவ்யபோஜனம் தமக்கும் தமது சிஷ்யர்களுக்கும் செய்விக்க வேண்டுமெனக் கேட்கிறார். இஃதன்றிச் சிவாராதனைக்கு மனிதர்கள் பார்த்திராத மலர்கள் வேண்டுமென்றுங் கேட்டிருக்கிறார். இப்பொழுது சரயூநதிக்கு ஸ்நானத்திற்குப் போயிருக்கிறார். அவர் ஸ்நானம் செய்து திரும்புவதற்குள் கடலிலுண்டான கற்பக விருக்ஷம், பாரிஜாதம் இவைகளிரண்டையும் விரைவில் என்னிடம் அனுப்புக" என வரைந்திருந்தது. இதைப் படித்ததும் இந்த்ரன் கற்பக விருக்ஷம் பாரிஜாதம் இவ்விரண்டையும் விமானத்தின் மீதேற்றிக்கொண்டு தேவர்கள் புடைசூழ அயோத்திக்கு வந்தான். இந்த்ரன் வந்திருப்பதை யறிந்த லட்சுமணர் அவனுக்கு நல் வரவு கூறி, அவனை ராமரிடம் அழைத்துச்சென்றார். இந்த்ரன் ராமரிடம் சென்றதும் அவரை வணங்கித் தான் கொண்டுவந்த கற்பகவிருக்ஷத்தையும் பாரிஜாதத்தையும் அவரிடங் கொடுத்துவணக்கமாக அவரெதிரில் நின்றுகொண்டிருந்தான். இச்சமயம் துருவாச முனிவர் தமது மாணவன் ஒருவனை யழைத்து "இப்போது ராமர் வீட்டில் என்ன நடக்கிறது? நமக்கு வேண்டியவைகள் ஏதாவது சேகரிக்கப்படுகின்றனவா? இல்லையா? என்பதை நீ போய்த் தெரிந்துகொண்டு வா; ராமர் நமக்கு வேண்டியவைகளைச் சேகரிப்பதில் கவலையுள்ளவரா யிருக்கிறாரா? இல்லையா? என்பதும் எனக்குத் தெரியவேண்டும். சீக்கிரம் செல்" என்று ஆக்ஞை செய்து அனுப்பினார். மாணாக்கன் உடனே அதிவேகமாக ராமரது க்ருகத்திற்கு வந்து, இங்கே கற்பக வ்ருக்ஷமும் பாரிஜாதமும் தேவர்களுடன் இந்த்ரனும் இருப்பதை நோக்கிக் களிப்படைந்துமீண்டு

முனிவரிடமும் சென்று தான் கண்டவைகளை அவருக்குக் கூறினன்.

முனிவர் இதைக்கேட்டதும் ஆச்சரிய மடைந்து நதியிலிருந்து உடனே புறப்பட்டுத் தமது மாணாக்கர்களுடன் ராமபிரானுடைய க்ருகத்திற்கு வந்தார். ராமர் முனிவரைக் கண்டதும் வணங்கி அவருக்கும் அவருடைய மாணாக்கர்கள் அறுபதினாயிரவருக்கும் ஆசனங்களளித்து வீற்றிருக்கும்படி வேண்டினர். பிறகு ஸீதை லட்சுமணர் இவர்களுடன் ராமபிரான் முனிவருக்குப் பூஜை செய்து மனிதர்கள் பார்த்திராதபாரிஜாத புஷ்பங்களைச் சிவாராதனை செய்யும்பொருட்டு மனமுவந்து அளித்தார். முனிவர் அதைப் பெற்றுக்கொண்டு ஒன்றும் பேசாமல் சிவாராதனம் செய்தார். பிறகு ராமர் அங்கு வந்திருந்த தேவர்களுக்கும் தேவேந்த்ரனுக்கும் ஆசனமளித்து உபசரித்து யாவருக்கும் பரிமாறும்படி ஸீதைக்கும் லட்சுமணருக்கும் உத்தரவிட்டார். உடனே ஸீதை ஆடையாபரண மணிந்துகொண்டு கற்பகவிருக்ஷம் பாரிஜாதம் இவைகளைப் பக்தியுடன் பூசித்து அவைகளின் கீழ் கோடிக்கணக்கான பாத்திரங்களை வைத்து "க்ஷீரஸாகரத்தி லிருந்துண்டாகித் தேவர்களுடைய விருப்பங்களை யளித்துவரும் கற்பக விருக்ஷமே! சிஷ்யர்களுடன் வந்திருக்கும் துருவாச முனிவருக்குத் திருப்தி யுண்டாகும்படி இன்று க்ருபை செய்ய வேண்டும்" என ப்ரார்த்தித்தாள். இவ்விதம் ப்ரார்த்தித்த அந்தக்ஷணத்திலேயே கற்பகத் தருவானது தன் கீழ் வைக்கப்பட் டிருக்கும் கோடிக்கணக்கான ஸ்வர்ண பாத்திரங்களிலும் திவ்யான்னங்களை நிரப்பி விட்டது.

ஸ்வர்ண பாத்திரங்களில் நிறைந்திருக்கும் அந்தத்திவ்யான்னங்களை யெடுத்து ஊர்மிளை சம்பிகை முதலியவர்களுடன் ஸீதாதேவி பரிமாறினள். முனிவர் தேவர்களுடனும் தமது மாணவர்களுடனும் மனமுவந்து போஜனம் செய்தார். ரகுவீரரால் அடிக்கடி ப்ரார்த்திக்கப்பட்டார். பிறகு போஜனம் செய்து கைகளைச் சுத்தி செய்து கொண்டு ராமபிரானிடம் தாம்பூலம் தக்ஷிணைகளைப் பெற்றுக்கொண்டு தேவர்கள் முன்னிலையில் ஸ்ரீராமரை

வேத வாக்கியங்களால் ஸ்தோத்ரம் செய்து ஆனந்தமடைந்து அவரை நோக்கிக் கூறுகிறார்—

தாமரைமலர் போன்ற கண்களை யுடைய ஏ ராம! நீர் உலகங்களுக்கு எஜமானன். ப்ரத்தியக்ஷமாக இந்தப் பூமியின்கண் ராவணவதத்திற்காக அவதாரம் செய்தவர் என்பதை நான் அறிவேன். உலகங்களிலுள்ள ஜனங்களுக்கு உமது பெருமையைத் தெரிவிக்கும்பொருட்டு இவ்விதம் யாசித்தேன். இந்தப் பூமியின்கண் மானிடர்களால் பார்க்கக்கூடாத புஷ்பங்களும் திவ்யான்னங்களும் காமதேனு அக்ஷி ரத்னம் இவைகளின்றி எவ்விதம் அடைய முடியும்? ஏ ராமா! உமது புருவநெறிப்பால் பிர்ம்மாதி தேவர்களுக்கு நாசமும் மறுபடி உற்பத்தியும் ஏற்படுகின்றன. அவ்வளவு க்ஷீரசாகரத்தில் முழுகிப்போன மந்த்ர பருவதத்தை உயரக் கிளப்புவதற்குக் கூர்மாவதாரம் செய்தவர். அப்பொழுது தேவர்கள் அச்சமுத்திரத்தில் ச்ரேஷ்டமான பதினைன்கு வஸ்துக்களை அடைந்தார்கள். அவைகள் யாவும் தங்களுடைய உதவியால் என்பதையும் நான் அறிவேன். பதினைன்கு ரத்தினங்களாவன--இலட்சுமி, சந்திரன், காமதேனு, கௌஸ்துபம், அமிர்தம், விஷம், ஐராவதம், அப்ஸரஸ்திரீகள், கற்பகவ்ருக்ஷம், தந் வந்தரி, உச்சைசிரவஸ், பாரிஜாதம், ஸுராதேவி, ஜ்யேஷ்டாதேவி முதலியனவாம். இந்தப் பதினைன்கு ரத்நங்களையும் விபாகம் செய்தவர்கள் தாங்கள் என்று நான் அறிவேன். தேவர்களும் தங்கள் க்ருபையினால் சுகம் அடைகின்றார்கள். சிவன் முதலிய சகல தேவர்களும் தங்களுடைய உத்ரவைப் பாலிப்பவர்களே யாவார்கள். எல்லோருக்கும் ஜீவனம் செய்யும் உபாயத்தைத் தனித்தனியாகக் கற்பித்துக் காக்கும் தங்களுக்கு எதுதான் அடையக் கூடாதது. எனக்குப் போஜனம் கொடுக்கும் விஷயத்தில் ஏற்பட்ட தங்களுடைய மகிழ்ச்சியையும் சக்தியையும் நான் பார்க்கும் பொருட்டும் ஜனங்களுக்குக் காண்பிக்கும் பொருட்டும் இவ்விதம் யாசித்தேன். நானும் பார்த்தேன்; ஜனங்களுக்கும் காண்பித்தேன். நீர் சகல உலகங்களையும் காக்கின்றவர்; உண்டுபண்ணுகிறவர்; ஸம்மாரம் செய்கின்றவர். எங்களுக்கு நற்கதியைக் கொடுக்கின்றவர்; நான் செய்த குற்

றத்தை மன்னித்தல் வேண்டும்—என்று. இவ்விதம் அனேக விதமாக ஸ்தோத்ரம் செய்து ஸ்ரீ ராமருக்குப் பன்முறை வந்தனம் புரிந்து அவரிடம் விடைபெற்றுக்கொண்டு துருவாச முனிவர் தமதாச்ரமம் சென்றார்.

பிறகு ஸ்ரீராமர், தேவர்களை நோக்கி, "நீங்கள் கற்பக வ்ருக்ஷம் பாரிஜாதம் இவைகளை எடுத்துக்கொண்டு ஸ்வர்க்கலோகம் செல்லலா"மென்று கூறினர். இவ்விதம் கூறிய ஸ்ரீராமருடைய வசனத்தை ப்ருகஸ்பதி பகவான் கேட்டு, "ராம! நீர் பூமியில் இருக்கும்வரையில் இந்த அயோத்தியா புரியில் இந்தக் கற்பக வ்ருக்ஷம், பாரிஜாதம் இவைகள் இருக்கட்டும். நீர் வைகுண்டம் வந்தபின் பூமியிலிருந்து இவைகள் சொர்க்க லோகம் போகட்டும்" என்று கூறினர்.

ப்ரபுவாகிய ஸ்ரீராமர் அந்த ப்ருகஸ்பதியின் வசனத்தைக் கேட்டு மகிழ்ந்து அவ்விதமே ஆகுக எனக் கற்பக வ்ருக்ஷத்தையும், பாரிஜாத வ்ருக்ஷத்தையும், புஷ்பக விமானத்தில் வைத்தார்.

பிறகு இந்த்ரன் முதலான சகல தேவர்களும் ஸ்ரீராமரால் உபசரிக்கப்பட்டு மிகவும் ஸந்தோஷமடைந்து ராமரை நமஸ்கரித்து ஸ்வர்க்கலோகம் சென்றார்கள்.

ஏ சிஷ்ய! இரண்டு வ்ருக்ஷங்களும், ஸ்வர்க்கலோகத்திலிருந்து பூலோகத்திற்கு வந்த காரணத்தைக் கூறினேன். அதுமுதல், இரண்டு தருக்களும் புஷ்பக விமானத்தில் ப்ரகாசித்துக் கொண்டிருந்தன. ஸ்ரீராமசந்த்ரர் அவ்விரண்டு விருக்ஷங்களால் கிடைக்கும் சுகத்தை அடைந்து மகிழ்ந்தார். இரகுச்ரேஷ்டர், ஸீதாதேவியுடன் கற்பக வ்ருக்ஷத்தின் கண் திவ்ய பரியங்கத்தில் வீற்றிருந்து அனேகவித ஸுகங்களை அனுபவித்தார். சிஷ்ய! அதனாலே தான் ஸஹஸ்ர நாமங்களைக் கூறும் இடத்தில் கற்பகத் தருவின் அடியில், ஸ்ரீராமரைத் தியானம் செய்யவேண்டு மென்று முன் உனக்குக் கூறினேன்.

அதுமுதல் பூமியில் பாரிஜாத விருக்ஷங்களின் அம்சங்களுள்ள பாரிஜாதம் என்ற பெயருடன் வெகு விருக்ஷங்கள் உண்டா

யிருக்கின்றன. இந்தப் பாரிஜாத புஷ்பத்திற்குச் சமமாக ராமருக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடிய புஷ்பம் எதுவுமில்லை. கற்பகவிருக்ஷத்தின் அம்சமாக விளங்கும் அரசமரத்தைச் சேவிப்பவர்களுக்குச் சகல கோரிக்கைகளும் நிறைவேறும் என்று சொல்லப்படுகிறது.

க்ருதம், த்ரேதை, த்வாபரம் ஆகிய இம் மூன்று யுகங்களிலும் புண்யத்தின் பெருந்தன்மையினால், எல்லோரும் பூஜித்தனர். கலியுகத்தில், பாபத்தின் மிகுதியால் எல்லோரும், மிகுதியாகப் பூஜிப்பதில்லை.

கற்பகவிருக்ஷம், பாரிஜாதவிருக்ஷம்
இவைகள், பூமிக்கு வந்ததின்
காரணத்தைக் கூறும்
2-வது சருக்கம்
முற்றிற்று.

## 3 - வது சருக்கம்.

பரமகுருவே! பூமியில் விஷ்ணு எடுத்த பத்து அவதாரங்களிலும் ராமன் க்ருஷ்ணன் என்னும் இரண்டு அவதாரங்களே மேன்மையானவை யென்று சொல்லப்படுகின்றன. அவைகளிரண்டிலும் மேன்மையானதெது? இது தெரிந்தால் நான் எப்போதும் அவரது சரித்ரத்தைக் கேட்டு க்ருதார்த்தனுவேன்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்:—நீ நன்றாய்க் கேட்டாய்; இவ்வுலகில் ராமாவதாரமே மேலானதென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். இவ்விஷயமாய் இரண்டு ப்ராம்மணர்களுக்குள் விவாதமுண்டாய் அதன் மூலமாக ஏற்பட்ட ஒரு அழகிய கதையைக் கூறுகிறேன் கேட்பாயாக.

அயோத்யா நகரத்தில் ராமனென்று பெயருள்ள ஒரு ப்ராமணனும் த்வாரகையில் க்ருஷ்ணனென்று பெயருள்ள ஒரு ப்ராம்மணனும் இருந்தார்கள். இருவரும் முறையே ராமக்ருஷ்ணர்களை வெகு பக்தியுடன் ஸேவித்து வந்தார்கள். இவ்விருவரும் ஒரு காலத்தில் ப்ரயாகையில் மாக மாதத்தில் சந்தித்துக்கொண்டார்கள். பிறகு திருவேணியில் ஸ்நானம் செய்துவிட்டு மாதவரைப் பூசித்து புராண ப்ரசங்கம் நடக்கு மிடத்திற்குச் சென்று வெகுபக்தியோடு அநேக கதைகளை கேட்டுக்கொண்டிருந்தார்கள். ராமனென்று பெயருள்ள ராமபக்தன் ஸ்ரீராமரது கதையைக் கேட்டு அதிக சந்தோஷ மடைந்து அந்தப் பௌராணிகரை நன்றாய்ப் பூஜித்தான். க்ருஷ்ணனென்னும் பெயருள்ள க்ருஷ்ணபக்தன் அப்போது மிகுந்த கோபத்தையடைந்து கூறுகிறான்—

எல்லாரையும் கஷ்டப்படுத்துகிற ராமருடைய கதையைக் கேட்டு நீர் மிகவும் மகிழ்ந்தது மன்றி, மேன்மேலும் அதையே விரிவாகக்கூறுகிறீரே; இதனால் உம்மை நான் மூடனென்றெண்ணுகிறேன். அநேக லீலைகளோடு கூடிய க்ருஷ்ணனது சரித்திரம் போல ஒன்றாவது அழகுள்ளதாய் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை என்றான்.

இவ்விதம் கூறிய க்ருஷ்ணோபாஸகனுடைய வார்த்தையைக் கேட்டு ராமோபாஸகன் ஆச்சரியத்தோடு கூறுகிறான்:—

ராமோபாஸகன் கூறுகிறான்,—ராமர் கஷ்டத்தை யுண்டாக்குவதும் க்ருஷ்ணன் சுகத்தைக் கொடுப்பதும் எப்படி? க்ருஷ்ணனது சரித்திரம் எவ்விதம் அழகிய தென்பதும் ராமரது சரித்திரம் அழகுடைய தல்ல வென்பதும் எவ்விதமென நன்றாய் விஸ்தரித்துத் தெரிவியும். இச்சபையிலுள்ளவர்கள் கேட்கட்டும்

க்ருஷ்ணோபாஸகன்:—நீர் நன்றாய்க் கேட்டீர். கவனமாய்க் கேளும். ராம சரிதம் எவ்விதம் கஷ்டத்தைக் கொடுக்கக் கூடிய தென்றும் க்ருஷ்ண சரிதம் எப்படிச் சுகத்தையுண்டாக்கக்கூடிய தென்றும் விவரித்துச் சொல்லுகிறேன். இந்த ஸபையிலுள்ளவர்களும் கேட்கட்டும்; நீர் கூறும் ராமர் பிறப்பதற்கு முன் அவரது தந்தைக்குச் சாபமுண்டாயிற்று. அதற்கு முன் ராவணன் அவரது மாதா பிதாக்களை லங்கையில் கொண்டு போய் வைத்திருந்தான். ஆரம்பத்திலேயே இவ்வளவு துக்கமுண்டாயிருந்தது. எனது க்ருஷ்ணன் பிறக்கும்போது அவரது தாய்தந்தையரைக் கம்ஸன் மங்களகரமான விவாக உற்சவங்களால் ஆதரவுடன் பூஜித்தான்.

ராமோபாஸகன்:—ஓய்! ஓய்!! கேளும் நீர் புத்தியில்லாதவர்; நீர் சாபமென்றது சாபமல்ல. அது வரம்; அதனுடைய அனுக்ரகத்தாலே தான் பிள்ளையில்லாத அரசனுக்குப் பிள்ளையுண்டாயிற்று; இவ்விதமே ராமரிடம் பயங்கொண்டு தான் அவரது தாய் தந்தையரை ராவணன் லங்கையில் வைத்திருந்து பிறகு விட்டுவிட்டதுமென்க. ஆகையால் அவர் பிறக்கும்போது நடந்த இவ்விஷயம் அவருக்கு மகிமையே யாம் உமது க்ருஷ்ணன் பிறக்கும்போது தாய் தந்தையர் சிறைச்சாலையி லிருந்தார்கள். ராஜ சுகங்களையனுபவிக்காமற் போகக் கடவதென்ற சாபம் யதுகுலத்திற் கேற்பட்டது. அவர் பிறந்ததும் சிறைச்சாலையிலிருந்த தாய் தந்தையர்க்கும் பிரிவினை யுண்டாயிற்று. இவர் காரணமாக இவருடைய ஸகோதரர்கள் இவருடைய மாமனால் வதம் செய்யப்பட்டார்கள்; தவிர இவர் மாடுமேய்ப்பவருடைய பிள்ளையானார். பாலியத்திலேயே வேறிடத்தில் வாஸஞ் செய்தார்; பிறரால் போஷிக்கப்பட்டார். இவ்வாறு உமது க்ருஷ்ணனுக்கு அநேகவித துக்கங்களேற்பட்டனவே ஒழிய சுகமேயில்லை,

கிருஷ்ணோபாஸகன்:—உமது ராமர் தமக்காகத் தாடகையென்ற அசுரமாதைக்கொன்றார். அவர் தாய் தந்தையரை விட்டுப் பிரியநேரிட்டமையால் அவர்களுக்கு துக்கமுண்டாயிற்று.

ராமோபாஸகன்:—தவச்ரேஷ்டர்களுக்குத்தாடகை இடுக்கண் விளைத்துக்கொண்டிருந்தாள். அதனாலே தான், துஷ்டையான தாடகையை ராமர்கொன்றார். ரிஷியினுடைய யாகத்தைக் காப்பாற்றுவதற்காகவே அரசன் தனது குமாரர்களைவிச்வாமித்திரரோடு அனுப்பினான். உமது கிருஷ்ணன் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காக பூதனையைக்கொன்றார். அப்படியே இடைச்சேரியில்தன் நிமித்தம் அநேகரைக் கொன்றார். இவருக்கு இடையரோடேயே சகவாசம்; இடையரைக் காப்பாற்றுவதே இவர் தொழில்; பசு ஸர்ப்பம் பக்ஷி குதிரைகழுதை காளை இவைகளைக்கொன்றார். திருடுவதும், சூதாடுவதும், காட்டில் அலைவதும், கம்பளியைப் போற்றிக் கொள்வதும் மழை குளிர் உஷ்ணம் இவைகளைப் பொறுத்துக்கொண்டு நாள்தோறும் பசிதாகங்களால் வருந்தப்படுவதும், இடையர் எச்சிலை சாப்பிடுவதும், காட்டில் பிராம்மண ஸ்திரீகளிடத்தில் அடிக்கடி தனக்காக அன்னத்தை யாசிப்பதும் இந்த்ரத்வஜத்தைப் பூஜிப்பதுமாக இருந்து வந்தார். இவைகளன்றி வ்ருத்தரின் ஆசாரத்தைக் குறைப்பதும், தனக்குமேல் வயது சென்ற ஸ்திரீகளுடன் சுகிப்பதும் ஆடையில்லாத ஸ்திரீகளை யெப்போதும் பார்த்துக்கொண்டிருப்பதும் நெருப்பைச் சாப்பிடுவதும் மண் பழையது இவைகளைப் புசிப்பதும், வெண்ணெய்க்காக அடிக்கடி அழுவதும் தாயிடம் அடிபடுவதும் பசுக்களிடத்திலும் இடையர்களிடத்திலும் ஸ்நேகஞ் செய்வதும், தானிருந்த இடத்தை விட்டுச் செல்வதுமாக விருந்தார்.

வண்ணானைக் கொன்றார்; க்ஷத்திரியன் போல யுத்தம் செய்தார்; யானை மல்லர் தமது மாமன் இவர்களைக் கொன்றார். ஸ்நேகிதரின் வர்க்கங்களில் தயையில்லாம விருந்தார்; ராஜ்யத்தை அடையாமலே யிருந்தார். அரசனுத்தரவை அனுசாரித்தார்; விகாரமான ரூபமுள்ள தாஸியோடு லீலைசெய்தார், யுத்தத்தில் தோல்வியடைந்து

சத்ருவுக்குப் பயந்து புறங்காட்டி ஓடினார். பிறருக்குத் தெரியும்படி மலையில் தீயிட்டுத் தாமிருந்த இடத்தை விட்டார். சமுத்ரக் கரையில் வசித்தார். பலாத்காரமாய் ஸ்திரீயைக்கொண்டு போனார். பிறர் த்ரவியத்தை அபகரித்துக்கொண்டார். தன்னைச் சேர்ந்தவர்களைக் கொல்வதற்காகப் பாண்டவர்களுக்கு உபதேசித்தார். இவ்விதமான அநேக கெட்ட நடத்தைகள் உமது கிருஷ்ணரிடம் இருக்கின்றன.

கிருஷ்ணோபாஸகன்:—நீர் ஏன் உளறுகிறீர்; நான் சொல்லுவதைக்கேளும். உமது ராமரிடத்தும் இப்படிப்பட்ட கெட்ட நடத்தைகள் இருக்கின்றன. ஸகோதர ஸம்பந்தம் உண்டாயிருக்கிறது. சிவபிரானது வில்லை யொடித்ததால் சிவபராதிபாயினர். பரசுராமரை மானபங்கஞ்செய்தார். முத்கலருடைய உத்தர வில்லாமல் லக்ஷ்மணர் அவரது அழகிய ஆச்ரமத்தி லிருந்த கொடிகளை யெல்லாம் அறுத்து விட்டார். எப்போதும் காட்டில் திரிந்து தமக்காகப் பிராணிகளை ஹிம்சித்தார். வானப்ரஸ்தாச்ரமம் கொண்டிருந்தார். காட்டில் உள்ளவைகளைக்கொண்டு ஜீவனம் செய்தார்; மாம்சத்தையும் புசித்தார்; வில்லை எப்போதும் எடுத்துக் கொண்டு வேடன்போலலைந்து திரிந்து மழை, சீதோஷ்ணங்களைப் பொறுத்துக்கொண்டு, வேட்டை யாடுவதிலேயே ஆசையுள்ளவரா யிருந்தார். ஜடாவத்கல தாரியாயிருந்துகாலால் நடந்து கஷ்டப்பட்டார். தாடிவளர்த்துக் கொண்டு மரத்தடியிலேயே வசித்தார். மேலும் உமது ராமரின் மனைவியை ராக்ஷஸன் தூக்கிக் கொண்டு சென்றான். அதற்காக அவர் பெரியதுக்கத்தை யடைந்தார்; தாஸியால் மரியாதை செய்யப்பட்டார்.

ராமோபாஸகன்:—ராக்ஷஸன் எடுத்துச் சென்றது எங்கள் ராமபிரானுடைய மனைவியின் நிழலேயாம். ஸபரீ என்பவள் தாஸியல்ல; வெகு நாளாய் முனிவர்களை ஸேவித்துக் கொண்டிருந்து கடைசியில் இவரைத் தரிசனம் செய்து இவரது கிருபையால் மோக்ஷத்தை யடையக் காத்திருந்தவள்.

உமது கிருஷ்ணனின் பத்னிகளை இப்போதும் சத்ருக்களனுபவிக்கிறார்கள். பலத்தால் அர்ஜுனனை ஜெயித்து ஆயிரக்கணக்

கான ஸ்திரீகளை அபகரித்துக்கொண்டு போனார். ஸ்திரீகளுடைய மனோரதங்களை நிறைவேற்றுவதன் பொருட்டு ராத்ரியில் தூக்கமில்லாமல் அலைந்தார். தாய்க்குச் சமானமாயும் வயதில் பெரியவர்களாயும் இருந்த கோபிகா ஸ்திரீகளை அநுபவித்தார்.

கிருஷ்ணோபாஸகன்:—உமது ராமரும் ஸ்நேஹிதரின் யாகத்தைக் காப்பாற்றுவதற்காக நித்ரையில்லாமலிருந்தார். சிநேகிதனின் மனைவியான தாரையை சுக்ரீவனுக்குக் கொடுத்தார். குரங்குகளோடு ஸ்நேகஞ் செய்தார். துந்துபியின் பிணத்தைக் கையால் தொட்டார். பயனின்றி வாலியைக் கொன்றார். குரங்குகளின் ஸகாயத்தைப் பெற்றார். குரங்கை வாகனமாகக் கொண்டார். பனைமரங்களை வீணாய்ப் பிளந்தார்; கடலில் அணைகட்டித் தடுத்து அதன் வழியாய் அக்கரை சென்று ச்ரேஷ்டமான லங்கையைக் கொளுத்தி நாசம் செய்தார்.

ராமோபாஸகன்:—உமது கிருஷ்ணன் தரித்ரரான குசேலரிடம் ஸ்நேகம்செய்தார். நீர் சொன்னபடி அவைகள் குரங்கல்ல; எல்லாம் தேவாம்சமுள்ளவைகள். உமது கிருஷ்ணன் கபடமாய் ஜராஸந்தனைக் கொன்றார். காட்டிலும் இடைச்சேரியிலும் இடையர்களுடைய சகாயம் பெற்றிருந்தார். எப்போதும் வனத்திலேயே விளையாடிக் கொண்டிருந்தார். காசி பட்டினத்தைக் கொளுத்தினார். ஸ்நேகிதனான ருக்மியை விருபப்படுத்தினார். சிவபக்தனான பாணனோடு போர்செய்தார். சிவனோடும் சண்டை செய்தார். சிசுபாலனிடம் திட்டுக் கேட்டார். பாரிஜாதம் முதலியவைகளை யளிப்பதில் மாதர்களுக்குள் ஒருவருக்கொருவர் கலகத்தை யுண்டாக்கினார்.

கிருஷ்ணோபாஸகன்:—உமது ராமரின் புத்திரனும் ஸ்நேஹிதனைக் கட்டி சண்டையில் ஜெயித்தான். சிவபக்தனான ராவணனோடு ராமர் சண்டை செய்தார். இவரும் த்விஜயனைக் கொன்றார். முனிவரால் ராமர் நிந்திக்கப்பட்டார். விபீஷணனுடைய உதவியால் ராவணனை ஜெயித்து, அந்த ராஜ்யத்தை விபீஷணனுக்கே கொடுத்தார். சத்ருவின் வீட்டிலிருந்த தமது மனைவியை மீண்டும் சேர்த்துக் கொண்டார். மனைவியினிடம் முரட்டுத்

தனத்தைக் காட்டினர். வாகனத்தின் மீதேறிக்கொண்டு யாத்ரை செய்தார். மேலும் பதிவிரதையான ஸீதையினிடம் குற்றங்களை ஏற்படுத்தினர். புத்திரனைக் கொல்லக் கட்டளையிட்டார். சூத்ரன் ஸிம்மம் இவைகளைக் கொன்றார்.

ஸ்ரீராமோபாஸகன்:—க்ருஷ்ணன் வம்சம் கடைசிகாலத்தில்சாபத்தால் குறைவை யடைந்தது. அவருடைய அழகானத்வாரகாபட்டினம் கடலில் மூழ்கிவிட்டது. கடைசியில் அவரது வம்சமே நசித்தது. கள்ளருந்தல் முதலிய மகாபாதகங்களும் அவரிடத்தில் இருந்தன. முடிவில் ஸ்நேகிதனை அர்ஜுனனுக்குத் தரிசனங் கொடுக்கவில்லை. அவ்வாறே தமது இருப்பிடத்திற்கும் ஒருவராகவே சென்றார். முடிவில் அவரை வேடனொருவன் தன் பாணத்தால் நன்றாய்க் காயப்படுத்தினன்.

கிருஷ்ணோபாஸகன்:—ராமரும் பிள்ளையோடு பெரும்போர் புரிந்தார். ஸீதையைத் தாம் தள்ளிவிட்டதாகக் கூறி ஜனங்களை ஏமாற்றி வான்மீகியின் ஆச்ரமத்திற்குச் சென்று பிள்ளைகளை ரகஸ்யமாய்ப் பார்த்தார். மேலும் அவர் தண்டகாரண்யத்தில் அலைந்துகொண் டிருக்கும்போது இங்கு தீபிலத்தின் சக்கையால் தமது தகப்பனருக்குப் பிண்டம் போட்டார். அரசமரத்தை வெட்டுவதற்காக அடிக்கடி பெரும் யாகம்செய்தார். தமது மந்திரிக்கு ஆயுளைக் கொடுப்பதற்காக யமராஜனோடு சண்டை செய்யச் சொன்னர். எனது கிருஷ்ணன் பால்யத்தில் வேடிக்கையாகப் பூனையைக் கொன்றார். திருணாஸுரன் முதலியவர்களும் கொல்லப்பட்டார்கள். கிருஷ்ணன் தமது விரலால் மலையைத் தூக்கினர்.

ராமோபாஸகன்:—எனது ராமர் பால்யத்தில் வேடிக்கையாகத் தாடகையைக் கொன்றார். மாரீசன் முதலானவர்களும் கொல்லப்பட்டார்கள். மலைகளை ஜலத்தில் மிதக்கச் செய்தார்.

கிருஷ்ணோபாஸகன்.—எனது கிருஷ்ணன் சுந்தர ரூபத்தைக்கண்டு இடைச்சேரியில் இடைச்சிகள் மோகித்தார்கள். மன்மதனை மோகிக்கச் செய்பவளான ராதை என்பவளும் இவரிடம் மோகங் கொண்டாள்.

ராமோபாஸகன்:—ராமரின் ரூபத்தால் தேவர்களே மோக மடைந்தார்கள். தேவபத்தினிகளும் எப்போதும் இவரையே நினைத்துக்கொண் டிருந்தார்கள்; அதனாலேதான் கோபிகா ஸ்தி ரீகளானார்கள். ஒரு வேலைக்காரி பக்தியோடு ராமரது தாம்பூல எச்சில் ரஸத்தைத் தினந்தோறும் பானம் செய்து வந்ததால் அவள் இடைச்சேரியில் ராதிகையானாள். இவைகளன்றி எனது ராமர் ஏகபத்னி வ்ரத முடையவராதலால், அவரே எல்லாருக்கும் மேலானவர்.

கிருஷ்ணோபாஸகன்:—எனது க்ருஷ்ணன் 16108 பத்னி களை விதிப்படி மணஞ்செய்து கொண்டார்.

ராமோபாசகன்:—ராமர் வீரராகையால் எல்லாத் தேவ ஸ்திரீ களையும் தாயைக் குழந்தை மயக்குவதுபோல மயக்கிவிட்டார். கிருஷ்ணன் விடரானதால், கோபிகா ஸ்திரீகளை மயக்கினார்.

கிருஷ்ணோபாசகன்:—க்ருஷ்ணன் விளையாட்டாய்க் கஜேந்தி ரத்தைக் கொன்றார்.

ராமோபாசகன்;—ராமரும் அஷ்டாபத மென்னும் நாகேந்த் ரத்தைக் கொன்றார்.

க்ருஷ்ணோபாசகன்:—க்ருஷ்ணன் தமதுபராக்ரமத்தால் யமு னையைத் தடுத்தார்; ஸ்வர்க்கத்திலிருந்து பாரிஜாத வ்ருக்ஷத்தை வரவழைத்தார்.

ராமோபாசகன்:—ராமர் ஸ்வர்க்கத்திலிருந்து கற்பகம், பாரி ஜாதம் ஆகிய இரண்டு வ்ருக்ஷங்களையும் வரவழைத்தார்.

கிருஷ்ணோபாசகன்:—க்ருஷ்ணன் இறந்துபோன தம் குருவி னுடைய ஏழு பிள்ளைகளையும் மறுபடி உயிர்பெற்றெழும்படி செய் தார்.

ராமோபாசகன்:—ராமர் அயோத்தியில் ஏழு மனிதர்களை உயிர் பிழைக்கும்படி செய்தார்.

கிரு - ன்:—கிருஷ்ணரின் உதவியைக் கொண்டு த்ரௌபதி மாத்தில் பழத்தை ஒட்டவைத்தாள்.

ராமோ - கன்:—ராமரின் உதவியைக் கொண்டு ஸீதை துளஸீ தளத்தை ஒட்டவைத்தாள்.

கிரு - ன்.—க்ருஷ்ணனுடைய பராக்ரமம் இடைச் சேரியில் ஜனங்களுக்கு நன்ருய்த் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இடைச்சேரியில் துர்வாஸமுனிவர்வந்து கோபிகாஸ்திரீகளிடம் அன்னத்தை யாசித்தார்.

ராமோ - ன்:—ராமருடைய பராக்ரமம் ஜனங்களுக்குத் தெரியும். ராமர் பட்டினமாகிய அயோத்திலும் துர்வாசர் வந்து அன்னத்தை யாசித்தார்.

கிரு - ன்:—கிருஷ்ணன் இவ்வுலகில் அநேகம் ரூபமெடுத்திருக்கிருர்.

ராமோ - ன்:—அநேக ரூபங்களை ராகவரும் எடுத்திருக்கிருர்.

கிரு - ன்:—கிருஷ்ணன் ஸ்னேகிதனுக்குத் தங்கமயமான பட்டினத்தைக் கொடுத்தார்.

ராமோ-ன்:—ராமரும் ஸ்னேகிதனுக்குத் தங்கமயமான பட்டினத்தைக் கொடுத்தார்.

கிரு - ன்:—கிருஷ்ணன் ஸூர்ய க்ரஹணத்தில் குருக்ஷேத்ரத்தில் ஸ்நானம் செய்தார்.

ராமோ - ன்:—ராமரும் ஸூர்யக்ரஹணத்தில் குருக்ஷேத்ரத்தில் ஸ்நானம் செய்தார். ராமர் சொல்லும் வார்த்தை யெல்லாம் ஸத்தியமாகும். உமது கிருஷ்ணன்சொல்வதெல்லாம் பொய்யாம். ராமரின் ஒருபாணமே சகல சத்ருக்களையும் கொன்றுவிடும். உமது கிருஷ்ணன் சத்ருக்களிடம் ப்ரயோகம் செய்யும் பாணங்களெல்லாம் பயனற்றுப்போகின்றன. ராமருக்கு ஒரே மனைவி; கிருஷ்ணருக்கோ அநேக மனைவிகள், ராமர் மத்யதேசத்தில்

ஸாயூநதிக்கரையிலுள்ள அயோத்யாபட்டினத்தில் வசிப்பவர். கிருஷ்ணனே மேற்கு ஸமுத்ரக் கரையிலுள்ளவர். ராமருக்கு மூன்று சகோதரர்கள். கிருஷ்ணருக்கு உடன் பிறந்தவர் ஒருவரே. ராமருக்கு, பசு, இரண்டுமணிகள், புஷ்பகம், இரண்டு தேவ வ்ருக்ஷங்கள், முனிவரால் கொடுக்கப்பட்ட இரண்டு காப்புகள், ஐராவதத்தின் குலத்தில் உண்டான நான்கு கொம்புகளையுடைய கஜச்ரேஷ்டம் ஆகிய ஒன்பது ரத்னங்களுண்டு. கிருஷ்ணனுக்கு இரண்டு ரத்னங்களும் பாரிஜாதமென்ற ஒரு ரத்னமும் ஆக மூன்று ரத்னங்களேயாம். ஆகையால் நீர் கிருஷ்ணரை எவ்வாறு புகழுகிறீர்? எனது ராமர் ஏழுதீவுகளுக்கும் ஈச்வரர்; ராஜச்ரேஷ்டர்களால் வந்திக்கப்பட்டவர். அவரது வில் கோதண்டம் பாணம் இவைகள் பலத்துடன் கூடியவை. ப்ராம்மணரின் இஷ்டங்களை நிறைவேற்ற வேண்டுமென்பதே எப்போதும் அவருடைய எண்ணம். அவருக்கு ஸிங்காதனம், குடை, இரண்டு சாமரங்கள் இவைகளிருக்கின்றன. அவருக்கு புஷ்பகம் வாஹனம் அவரது பிள்ளைகள் தகப்பனுருக்குச் சமானமானவர்கள். ப்ராம்மணர்கள் அவர் கொடுத்த தானத்தை இன்றைக்கும் நன்றாய்ப் பரிபாலனம் செய்கிறார்கள். உமது கிருஷ்ணன் ப்ராம்மணருக்கு என்ன கொடுத்தார்? பரமசிவனும் ராமரை த்யானம் செய்கிறார். மேலும் விச்வேச்வரர் காசியில் மரணத்திற்குத் தயாராயிருக்கும் ஜனங்களிடத்தில் ப்ராம்மணவேஷத்தோடு சென்று, ஸ்ரீராமநாமத்தையே தாரகமந்த்ரமாக உபதேசித்து அவர்களைக் கரையேற்றுகிறார். அதனாலே தான் ஒருவனுடைய மரணத்தறுவாயில், அவனது பந்துக்கள் அவனை ராம ராமவென்று சொல்லும்படி சொல்லுகிறார்கள். அவரது நாமத்துக்கே இவ்வளவு மகிமையிருக்கும்போது அவரைப்பற்றி நான் எவ்விதம் வர்ணிக்கப் போகிறேன். வான்மீகி முனிவரும் இவரது சரித்ரத்தை வெவ்வேறு விதமாய் நூறு கோடி கிரந்தங்களால் விஸ்தாரமாகக் கூறியிருக்கிறார்.

ஆகையால் உமது கிருஷ்ணனை இவருக்குச் சமமாய் எப்படிச் சொல்லலாம்?

ராமதாஸர்.—இவ்விதம இவர்கள் விவாதம் செய்துகொண் டிருக்கும்போது, "ராமருக் கெதிரில் ஒருவரையும் தோத்ரம் செய்ய முடியாது" என்று ஆகாயத்திலிருந்து ஒரு வாக்கு உண் டாயிற்று. அதை எல்லோரும் கேட்டு மிகுந்த ஸந்தோஷத்தோடு ஜயகோஷம் செய்தார்கள். தேவர்களும் ஆகாயத்தில் விமானங் களிலேறி வந்து அந்த ராமோபாஸகர் மேல் புஷ்பவருஷம் வரு ஷித்தார்கள். அப்போது அந்தக் கிருஷ்ணோபாஸகர் வெட்கத் தால் தலைகுனிந்துகொண்டு அந்த ராமோபாஸகரை வணங்கி ப்ரார்த்தித்தார். அப்போது ராமோபாஸகரும் அவரை வணங் கித் தழுவிக்கொண்டு ஏ கிருஷ்ணோபாஸகரே! கேளும் கிருஷ் ணனே ராமர்; வேறல்ல. ராமரே க்ருஷ்ணன்; வேறல்ல. ஆயினும் அயோத்தியில் விளங்குகிற பரமாத்மாவினிடத்தில் என்மனம் பற்றுத லடைகிறது; ஆகையால் நான் ராமரை ஸ்தோத்ரம் செய்தேன். உம்மிடத்திற்கொண்ட அஸூயையால் கிருஷ்ணனை நிந்தித்தேன். ராமரே கிருஷ்ணன், கிருஷ்ணனே தான் ராமர். இருவருக்கும் பேதமேயில்லை. எந்த மனிதன் இவ்விருவருக்கும் பேதத்தை யுண்டாக்குகிறானோ அவன் பயங் கரமான நரகத்தில் எப்போதும் கிடந்துழலுவான். இதிற் சந் தேகமே யில்லை. ஆகாசவாணி ராகவரை ஸ்தோத்ரம் செய்தது உமது கர்வத்தை யடைக்குவதற்கேயாம். இவ்விதம் ராமரென்ற அந்த ப்ராம்மணர் கிருஷ்ணனிடம் சொல்லி ஸமாதானப் படுத்தி விட்டு ஸபையோர்புகழ அங்கு விளங்கினார். பிறகு அவர்கள் மாக மாதத்தின் முடிவில் தத்தம் தேசம் சென்றார்கள். ஆகையால் சிஷ்யனே! அவதாரங்களில் ராமாவதாரத்திற்குச் சமமானதில்லை. பக்தியோடு அவரது சரித்ரத்தைக்கேட்டு அவரைப் பஜனை செய் தால் ஸகல மங்களத்தையும் நிச்சயமாய் அடைவாய்.

## 3 - வது சருக்கம்

முற்றிற்று.

---

## 4 - வது சருக்கம்.

ராமதாஸர் கூறுகிறார்:—சிஷ்ய ! ஒரு நாள் ராமர் தமது பரிவாரங்களோடு போய்க்கொண்டிருக்கையில் த்ராக்ஷைக்கொடி நிறைந்த ஒரு பந்தலில் ஒரு காக்கையைப் பார்த்தார். அது மிகவும் தைன்ய நிலைமையிலிருந்தது. அது இரண்டு கண்களுக்கும் ஓரே பார்வையுடையதாகையால், இவரையே இவருக்குத் தயையுண்டாகும்படி சாய்ந்தவாறு பார்த்துக்கொண்டிருந்தது. அதைப் பார்த்து ராமர் தமது உள்ளத்தில் தயைகொண்டு காகத்தைத் தம்மிடம் வரும்படி கூறினர். ராமர் தம்மிடம் வரும்படி கூறியதும் அந்தக் காகம் த்ராக்ஷைப் பந்தலிலிருந்து பறந்து ராமரது சமீபம் வந்து, அவரைப் பார்த்து இரைந்து கூவிற்று. உடனே ராமர் "காகமே! உனது நேத்ரத்தைத் தவிர வேறுவரன் ஏதாவது கேள்" என்றார். காகமானது, "ராமச்சந்த்ர ப்ரபுவே! தங்கள் க்ருபா கடாக்ஷம் என்னிடம் எப்போதும் இருக்க வேண்டும். இவ்வுலகில் பயனையளிக்கும் வேறு வரங்களை நான் விரும்பவில்லை" என்றது. இதைக் கேட்டவுடன் ராமர் மகிழ்வுற்று, "தீவாந்திரத்திலோ அல்லது வேறெங்கேயோ, நடப்பதும், நடந்ததும், நடக்கப்போவதுமான சமாசாரங்கள் யாவும் உனது கண்களுக்குத் தோன்றக் கடவன: வரும் காரியங்கள் உனக்கு நன்றாய்த் தெரியட்டும். ஜனங்கள் உனது நடையைக்கொண்டு சகுனங்கள் பார்க்கட்டும்; நீ ஸ்திரமா யிருந்தால் ஜனங்களின் காரியம் ஸ்திரமென்றும் நீ போக ஆரம்பித்தால் காரியம் சஞ்சலமென்றும் ஜனங்கள் அறியட்டும் பூமியில் எல்லாஜனங்களும் கிருஹப்ரவேசம் செய்யும்போது நீ இடது புறமாய்ச்சென்றால், நல்ல சகுனமென்றும் யாத்திரை போகும்போது நீ வலது புறமாய்ச் சென்றால் மஹா மங்கள முண்டாகு மென்றும் நினைக்கட்டும். சவத்திற்குப் பத்தாவது நாள் முதலில்போடும் பிண்டத்தை நீ தொடாவிட்டால், இறந்தவருக்கு நற்கதியுண்டாகாமற் போகும்; இஃதன்றி நீ பிண்டத்தைத் தொடாவிட்டால் இறக்கும்போது இறந்தவரது ஆசைகள் அவனது உறவினர்களால் பூர்த்தி செய்யப்பட வில்லையென்றேற்படும். இவற்

றோடு உனக்கு வேறு வரமும் கொடுக்கிறேன். அதாவது புஸ்த கம் எழுதும்போது ஏதாவது மறந்துவிட்டால், அவ்விடத்தில் உனது பாதம்போல் அடையாளம்போட்டு மறந்ததை எழுதட் டும் அந்த அடையாளத்தைப் பார்க்கும்போது ஜனங்கள் இது முதலில் எழுதப்படாமல் மறந்துபோய்ப் பிறகு எழுதப்பட்ட தென்று தெரிந்து கொள்ளட்டும்'' என்ற இவ்வரங்களைக் கொடுத் தார். உடனே காகமும் ராகவரை வணங்கிச் சென்றது. இவ் வாறு ராமர் அநேக லோகோபகாரங்களைச் செய்திருக்கிறார்.

இன்னொருநாள் ராத்ரி ராமர் பாரிஜாத மரத்தின்கீழ் ஸீதை யைவிட்டு விலகிப் படுத்துக்கொண்டிருந்தார். இச்சமயம் காவற் காரர்களும் பணிவிடைக் காரிகளும் இன்னும் மற்றுமுள்ளவர்க ளும் ராமாது கீர்த்தனத்தை பக்தியோடுகேட்க எங்கேயோ சென்றிருந்தார்கள். இதையறிந்த பட்டினத்திலுள்ள அநேகம் அழகிய பருவமங்கையர்கள் மன்மத விகாரமடைந்து ஆடையா பரணம் பூண்டு ராமரிருக்குமிடம் வந்தார்கள். வந்தவர்களுள் ஒருத்தி அவருக்கு விசிறவும் ஒருத்தி அன்புடன் கால்பிடிக்க வும் ஒருத்தி சந்தனம் பூசவும் மற்றொருத்தி தாம்பூலம் கொடுக் கவும் வேறொருத்தி நல்ல கனிகளைக் கொடுக்கவும் மற்றவர்கள் சித்ரான்னம் முதலியவைகளைக் கொடுக்கவும் தயாராயிருந்தார் கள். இச்சமயம் ராகவர் துயில்நீங்கி விழித்துக் கொண்டு தமக்கு எதிரில் அழகிய நூற்றுக்கணக்கான ஸ்திரீகள் நிற்பதைப் பார்த் தார். ராமர் எழுந்ததும் அவர்கள் வெகு அன்புடன் வணங் கினார்கள். உடனே ராமர் "இந்த ராத்ரியில் நீங்கள் யாவரும் ஏன் இந்தப் புஷ்பக விமானத்தருகில் வந்தீர்கள்? எனக்கு உண்மையைச் சொல்லுங்கள்'' என்றார். ராமர் இவ்விதம் கேட்டதும் அம்மாதர்கள் யாவரும் நாணமுற்றுத் தலைகுனிந்து கொண்டு, பேசாமலிருந்தார்கள். அப்போது அவர்களுள் ஒருத்தி சற்று நாணத்தைத்துறந்து "நாங்கள் வந்திருப்பதன் காரணம் ப்ரபுக்களான தங்களுக்குத் தெரிந்திருக்கும்; ஆகையால், அதை வெளிப்படையாகச் சொல்ல எங்களுக்கு வெட்கமாயிருக்கிறது; இளம் பருவத்தினரான எங்கள் மனோரதத்தைப் பூர்த்திசெய்ய

வேண்டும்" என்று சொன்னாள். உடனே ராமர் "மங்கையீர்! நான் சொல்வதைக் கேளுங்கள், நான் ஏக பத்னீ வ்ரதமனுஷ்டிப் பவன். அவளைத்தவிர மற்ற மாதவர்கள்யாவரும் எனக்குத் தாய்க் குச் சமமானவர்கள்; நீங்கள் உங்கள் வீட்டுக்குப் போங்கள்; நான் அரசனாயிருக்கும்போது அதர்மம் நடப்பது கூடாது. நீங்கள் செய்த குற்றத்தை மன்னித்துவிட்டேன்" என்றார். அவர்கள் ஏற் கனவே மன்மதபாணத்தினால் அடிப்பட்டவர்களாதலால், இப் போது ராமருடைய பாணம்போன்ற சொற்களால் அடிபட்ட தும் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தனர். இதைக்கண்ட தும் ராமர் தயைகூர்ந்து "மாதர்காள்! நீங்கள் ஒருமுறை என்னு டன் கூடியதால் மட்டும் உங்களுக்குத் திருப்தியுண்டாகாது; என் வ்ரதத்துக்கு மட்டும் பங்கமுண்டாகும்; ஆகையால், நான் சொல்வதைக் கேளுங்கள். நான் குருவுக்கு யாகத்தில் அநேகம் ஸ்வர்ண ஸீதைகளைக் கொடுத்திருக்கிறேன். அதன் பலனாக வரும் த்வாபர யுகத்தில் கிருஷ்ணாவதார மெடுத்து உங்களனைவ ரோடும் வெகுகாலம் க்ரீடை செய்கிறேன். அப்போது நீங்கள் சுகமுறலாம். நீங்கள், அநேக அரசருக்குப் பெண்ணாகப் பிறந்து வளர்வீர்கள். உங்களை அப்போது பௌமாஸுரான் ஸம்ஹாரஞ் செய்யவருவான். அவனைக்கொன்று உங்களைவிடுவித்துப் பிறகு உங்களையெல்லாம் விவாகம் செய்துகொள்கிறேன். நீங்கள் இவ் வார்த்தையை நம்பி உங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள்" என்றார். மாதர்கள் அவரை வணங்கிவிட்டுத், தத்தம் வீட்டுக் குச் சென்றார்கள். அவர்கள் சென்றதும் ராமர், தமது பணி விடைப் பெண்களைக் கூப்பிட்டார், அவர்களங்கில்லாததால் வேலைக்காரர்களைக் கூப்பிட்டார்; அவர்களும் வாராததால், வாசல் காவற்காரர்களைக் கூப்பிட்டார்; அவர்களும் இல்லை; பிறகு அங்கரக்ஷகர்களைக் கூப்பிட்டார்; அவர்களும் இல்லை யென்று தெரிந்துகொண்டு ராமர் வெகு ஆச்சரியத்தோடு விமா னத்தின் மெத்தைமேலேறி லக்ஷ்மணரைக் கூப்பிட்டார். அக்குர லைக்கேட்ட ஊர்மிளை தன் பதியாகிய லக்ஷ்மணரைத் தட்டி எழுப் பினாள். அவர் எழுந்து வெகுவேகமாய்ப் படுக்கையறையிலிருந்து வெளியேவந்து, ராமரிடம்போய் அவரைப்பார்த்தார். அவர்

நடந்தவைகளை யெல்லாம் ஆதியோடந்தமாய்ச் சொன்னர். இதைக் கேட்டதும் லக்ஷ்மணர் தமது வேலைக்காரர்கள் யனுப்பி ராமருடைய வேலைக்காரர்களை யழைத்து வரும்படி உத்தர விட்டார். அவர்கள் ராமருடைய வேலைக்காரர்க ளிருக்குமிடத்தைக் கண்டு பிடித்து அவர்களை யழைத்தார்கள். அவ்வேலைக்காரரில் சிலர் ஸ்ரீ ராமரது கீர்த்தனத்தைப் பாதியில் எவ்விதம் விட்டுச் செல்வதென்றும், சிலர் போகாவிடில், எஜமானருடைய கட்டளையை மீறிய தோஷம் வருமென்றும் பயந்தாராயினும் நாம் இங்கிருக்கிறோமென்று கூறினல் அவர் த்ருப்தி யடைந்துவிடுவாரென்று எண்ணித் தங்களுக்குத் தாங்களே சமாதானப் படுத்திக்கொண்டு செய்தி தெரிவித்து அவர்களை யனுப்பி விட்டார்கள். வேலைக்காரர்கள் உடனே அவ்விடமிருந்து திரும்பி ராமரிடம் வந்து அவர்கள் கூறிய செய்தியைத் தெரிவித்தார்கள். கேட்டதும் ராமர் சிறிது கோபமடைந்தார். பின் என் கீர்த்தனத்தில் மனதைச் செலுத்தியவர்களை நானே தண்டிப்பது நியாய மல்லவாயினும் சிறிதேனும் இவர்களுக்குத் தண்டனை விதிக்க வேண்டும் என்று நினைத்தார்.

இச்சமயம் ஒரு அழுகைக் குரல் கேட்க, அது எங்கிருந்துண்டாகிறதென்று கூடியவரையில் பார்த்தும் தெரிந்து கொள்ள முடியாமல், விமானத்தைப் பார்த்து "விமானமே! இக்குரல் உண்டாகும் இடத்தை நோக்கிச் செல்" என்று ராமர் கட்டளையிட்டார். அந்தவிமானம் அப்படியேசென்று பட்டினத்திற்கு வெளியே வந்து அழுகைக் குரல் கேட்குமிடமாகிய ஸரயூ நதிக்கரைக்குச் சென்றது. அங்கே போய்ப் பார்க்கும்போது அஞ்சனபர்வதம் போன்ற, ஒரு ஸ்திரீ அங்கு நின்று, அழுதுகொண்டிருக்கக் கண்டார். ராமர் 'நீயார் எதற்காக அழுகிறாய்' என்று அவளை வினவ, அவள் "நான் இங்கே வெகு நாளாய் அழுதுகொண்டிருக்கிறேன்: தெய்வாதீனமாய் இப்போது தான் என் அழுகைக் குரல் தமது செவிக்கெட்டியிருக்கிறது. நான் நித்ராதேவி. நான் பிறந்தது முதல் கும்பகர்ணன் எனக்கு நல்ல ஆச்ரயமாயிருந்தான். அவனைத் தாங்கள் கொன்று விட்டமையால், எனக்கு வேறு இடமில்

லாமல் நான் ப்ரம்மாவிடம் போனேன். அவர் தங்களிடமே செல்லும்படி ஆக்ஞை செய்தார். ஆகையால் அவ்வாக்ஞைப்படியே நான் இப்பட்டணத்திற்கு வந்தேன். ஆயினும் எல்லை தாண்டி வரக்கூடாதென்று இந்நதிக்கரையிலேயே யிருந்து அழுதுகொண் டிருக்கிறேன். ஆகையால் நான் சுகமாயிருக்கத் தக்க இடத்தைத் தாங்கள் தயையோடு தெரிவித்து என்னை அனுப்பவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டாள். இதைக் கேட்டதும் ராமர் முன் தமது வேலையாட்கள் செய்ததை நினைத்து மிகவும் கோபங் கொண்டு ''ஏ நித்ராதேவி! நான் உனக்கு இடம் குறிப்பிடுகிறேன் கேள்! உலகத்தில் கீர்த்தனம், புராணச்ரவணம், வேதபாடம், பூஜை, ஜபம், தவம், த்யானம், ஹோமம் முதலிய நல்ல காரியங் களைப் பாபாத்மாக்கள் செய்யும்போது நீ போய் அவர்களிடத் தில் வ்யாபித்துவிடு. உன்னால் அவர்களுக்கு அவைகளில் ச்ரத் தைக் குறைவுண்டாகட்டும். மேலும் மூடன், பாலன், கர்ப்பிணி, பட்டினியிருந்து சாப்பிட்டவன், வித்யார்த்தி, ச்ரமப்பட்டவன், வாந்திசெய்தவன், விழித்துக்கொண் டிருப்பவன் இவர்களும் உனக்குத் தங்குமிடமாவார்கள். என் வரத்தால் இவர்களையும் நீ மயக்கக் கடவாய்'' என்று ராமர் வரங்கொடுத்தார். இதைக்கேட்டு நித்ராதேவி ஸந்தோஷமடைந்து அவரை வணங்கிச் சென்றனள். ராமரும் தமது பட்டினம் வந்தார். அதுமுதல் புராணச்ரவணம் முதலியவைகளைச் செய்யும் பாபாத்மாக்களுக்கும் மேற்குறிப் பிட்ட மூடன் முதலானவர்களுக்கும் நித்ரை சுகமாய் வருவது வழக்கம். சேவகர்களுக்கும் இதேமாதிரி நித்ரை வருவது வழக்கம்.

ராமதாஸர் கூறுகிறார்:—இப்போது ஸீதைக்கு மகிமையளித்த மற்றொரு கதையைக் கூறுகிறேன் கேள்—கும்பகர்ணனுடைய பிள்ளையான நிகும்பனுடைய மனைவி கர்ப்பமாயிருந்து ப்ரஸவிக் கத் தீவாந்தரத்திலுள்ள தன் தகப்பனார் வீட்டிற்குச் சென்றாள். ராவணாதிகளின் வதம் நடந்த பிறகு அவளுக்குப் பௌண்டிரகன் என்னும் ஓர் ஆண்பிள்ளை உண்டானான். அவன் நூறு தலைகளும் இருநூறு கைகளுமுடையவனா யிருந்தான். மாயாபுரியில் அவன் பிறந்தான். க்ஷீரஸாகரத்தில் ச்ரோணாநதிதீரத்தில் நூறு தலை ராவணனிருந்தான். இவனைச் சகாயமாகக் கொண்டு அவன்

விபீஷணரை மிரட்டி விலக்கிவிட்டு லங்கையை ஆண்டுவந்தான். பிறகு விபீஷணர் ராமரிடம் சென்று எல்லாவற்றையுந்தெரிவிக்க, ஸீதையோடும் விபீஷணரோடும் ராமர் லங்கைசென்று ஸீதையைக் கொண்டு அவனை ஜயித்து, அந்தப்பௌண்ட்ரனைக் கொன்று விபீஷணருக்கு ராஜ்யத்தைக்கொடுத்தார். பிறகு ஒரு சமயம் ராமர் ஸபையிலிருக்கும் போது விபீஷணர் நான்கு மந்திரிகளோடும் தமது பிள்ளை பெண்களோடும் ராமரிடம் வந்து அவர் காலில் விழுந்து, நேத்ரத்தில் நீர்பெருக நின்று பெருமூச்சுடன் லங்கையில் நடக்கும் வ்ருத்தாந்தங்களைக் கூறினர். "ஸ்ராம! ஜகத்ப்ரபுவே! சரணமென்றடைந்த என்னைத் தயையோடு காப்பாற்றவேண்டும். முன் கும்பகர்ணனுக்கு மூலநக்ஷத்ரத்தில் காட்டில் ஒரு பிள்ளை பிறந்தான். அவன் தூதர்களால் மரத்தடியில் விடப்பட்டான். ஈக்கள் தங்கள் வாயிலுள்ள நீர்த்திவலைகளை யனித்து, அவனைக் காப்பாற்றின. அவன் இப்போது யௌவனத்தையடைந்து எங்கள் குலத்தை நாசம் செய்தவர் நீரெனவறிந்து சினங்கொண்டு கடுந்தவம் புரிந்து பிர்ம்மாவை ஸந்தோஷப்படுத்தி வரம் பெற்று அந்த கர்வத்தினால், பாதாளத்திலுள்ள அரக்கர்களுடன் லங்காபட்டினத்திற்கு வந்து என்னோடு ஆறுமாதம் பெரும்போர் புரிந்து என்னைச் சிறையிலடைத்து விட்டுத் தன் நகரத்திற்குப்போய் விட்டான். நானும் ரகஸ்யமாய் பூமிக்குள்ளேயே ஓடி லங்கைக்கு ஒரு யோசனை தூரத்திற் கப்பால் நடுராத்திரியில் வெளிக்கிளம்பி வந்து இப்போது உம்மை அடைந்திருக்கிறேன். அவன் மூலநக்ஷத்திரத்தில் ஜனித்து விருக்ஷத்தினடியில் வளர்க்கப்பட்டபடியால் அவன் மூலகாஸுரன் என்னும் பெயர்பெற்றான். அவன் என்னுடன் யுத்தஞ்செய்து திரும்பும்போது முதலில் என்னைக் கொன்றுவிட்டுத் தன் தகப்பன் முதலிய எல்லாரையும் கொன்ற தங்களுடன் சண்டைசெய்ய வருவதாய்ச் சொல்லிப் போயிருக்கிறான். ஆகையால் இச் சமயம் எதைச் செய்வது நலமோ அதைச் செய்து என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்றார். இவைகளைக் கேட்ட ராமர் மிகவும் வியப்படைந்து, இவ்வுலகிலுள்ள எல்லாத்தேசத்து அரசர்களையும் இப்போது வரவழைக்க வேண்டுமென்று லக்ஷ்மணனுக்கு உத்

ரவளித்தார். பின்னர் லக்ஷ்மணர் உத்தரவின்படி தூதர்கள் தேசங் கள்தோறும் சென்று மீண்டுவந்து சபையில் ராமரிடம் "ஐயா! சில அரசர்கள் தங்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்தார்கள். சம்பிகை ஸுமதி இவர்களது சுயம்வரத்திலுண்டான அவமானத்தையும் யூபகேதுவின் பாணத்தால் அடிபட்ட வருத்தத்தையும், மதனசுந்தரியை யிழந்தோமே யென்னும் துக்கத்தையும் நினைத்துக்கொண்டு சிலர் தங்களுத்தரவுக்குக் கீழ்ப்படியவில்லை. தங்கள் ஆக்ஞைப்படி நடந்த சுக்ரீவன் முதலானவர்கள் தங்கள் தங்கள் சேனைகளோடு கோடிக்கணக்காய் இங்கே வந்திருக்கிறார்கள்" என்று சொன்னார்கள். இதைக் கேட்டு ராமர் மிகுந்த கோபமடைந்து, "அதமர்களான இவர்கள் என் பாணத்தில் அடிபட விரும்புகிறார்கள் போலும்! நல்லது, முதலில் இவர்களைக் கொன்று விட்டுப் பிறகு அவ்வரக்கனைக் கொல்கிறேன்" என்று சொல்லி நல்லதினத்தில் சேனையோடு புறப்பட்டார். சிறிது சேனையுடன் யூபகேதுவைப் பட்டினத்திலேயே வைத்துவிட்டுக் குசன் முதலிய எழு பிள்ளைகளையும் தம்மோடு அழைத்துக்கொண்டு விமானத்தின்மீ தேறினர். அதற்குள் அவ்வரச ரெல்லாரும் தங்கள் தங்கள் சேனைகளோடு வந்து ராமரைக்கண்டு அவரை வணங்கி எதிரில் நின்றார்கள். அவர்களைக் கண்டதும் கோபந் தணிந்து எச்சரிக்கை செய்துவிட்டு நன்றாய் ஒழுங்குப் படுத்திக் கொண்டு ஸீதையில்லாமல் புஷ்பக விமானத்தின் மீது தாம் தனித்து ஏறிக்கொண்டு அநேக தேசங்களைப் பார்த்துக்கொண்டே ஆகாயமார்க்கமாய் லங்கை சென்றார்.

ராமர் வந்திருப்பதைக் கேட்ட மூலகாசுரன் அவரோடு போர்புரிய லங்கைக்கு வெளியே வந்தான். பிறகு இருவருக்கும் அமர்நேர்ந்தது. ராக்ஷஸர்கள் கால்களால் குரங்குகளைக் கொன்றார்கள். வானரங்களும் தங்கள் கால்களாலும் நகங்களாலும் பல அரக்கர்களைக் கொன்றன. இவ்வாறு எழுநாள் குரூரமான யுத்தம் நடந்தது. இந்த யுத்தத்தில் மடிந்த குரங்குகளை அனுமார் முன்போல் சஞ்சீவி மலையைக்கொணர்ந்து ஜீவிக்கும்படி செய்தனர். அப்போது அரக்கர் சேனையில் நாலில் ஒரு பங்குதான் மீந்திருந்தது. இதைக்கண்ட மூலகாசுரன் மிகவுஞ் சினமடைந்து தனது

மந்திரிகளையும் சேனாபதிகளையும் போருக்கனுப்பினான். அவர்கள் வந்ததும் ராமரைச்சேர்ந்த வீரர்கள் அநேக பாணங்களாலும் அஸ்த்ரங்களாலும் அடித்து அவர்களைக் கொன்றார்கள். அவர்களும் வானரங்களையடித்தார்கள். இவ்வாறுபெருஞ் சண்டையுண்ட சிறிது நேரத்திற் கெல்லாம் ராம வீரர்கள் அவர்களனைவரையும் யமலோகத்திற்கு அனுப்பி ஒழித்தனர். அவர்கள் மடிந்ததை யறிந்த மூலகாசுரன் அச்சமயம் மீந்திருந்த சிறிது சேனையோடு தானே ரதத்திலேறி யுத்தத்துக்கு வந்தான். அவன் வந்ததும் ஆயிரக்கணக்கான அரசர்கள் அவனோடு சண்டை செய்யச்சென்றார்கள். மூலகாசுரன் அவர்களனைவரையும் பாணங்களால் மூர்ச்சை யடையும்படி செய்தான். அவர்கள் மூர்ச்சையடைந்ததும் சுமந்த்ரர் முதலான மந்திரிமார்கள் சண்டைக்குச் சென்றார்கள். அவர்களையும் பாணத்தினு லடித்துக் கீழே தள்ளினான்.

மந்த்ரிகள் மூர்ச்சையடைந்ததும் குசன் முதலிய பாலர்கள் எதிர்த்தார்கள். இப்போது பயங்கரமான யுத்தமுண்டாயிற்று. குசன் ஏககாலத்தில் அநேக பாணங்களை எய்து மூலகாசுரனை யடித்துக் கீழே தள்ளினான். பிறகு அவ்வசுரன் எழுந்திருந்து ரதம் பாணம் இவைகளை மீண்டும் அடைய ஒரு ரகஸ்யமான இடத்துக்குச் சென்று ஆபிசாரஹோமம் செய்தான். விபீஷணர் ஹோமதூமத்தைப் பார்த்து கற்பக வ்ருக்ஷத்தினடியில் உட்கார்ந்திருக்கும் ராமரிடம்வந்து "இந்தத்துஷ்ட அசுரன் இவ்வாறு ஆபிசாரஹோமம் செய்கிறான்; அதையழிக்க முன்போல் குரங்குகளை யனுப்புங்கள். இந்த ஹோமம் சரியாகச் செய்யப்படுமாயின் அவனை ஜெயிக்க ஒருவராலும் முடியாது" என்றார். இச்சமயம் ப்ரம்மதேவர் ராமரிடம் வந்து, அவரை வணங்கி, அவன் தனக்கு மரணமுண்டாகக் கூடாதெனக் கேட்டுக்கொண்டபடியால், நான் அவ்விதம் வரமளித் திருக்கிறேன். ஆகையால், தாங்கள் அவனைக் கொல்லமுடியாது. அவனுக்கு ஸ்திரீகளாலேதான் மரணமுண்டாகும். தவிர அவனுடைய மரண சம்பந்தமாய் வேறொரு காரணமுமுண்டு, கூறுகிறேன்—

ஒருசமயம் அவன் துக்கத்தோடு முனிவர்களின் முன்னிலையில், "இந்தச்சண்டியான சீதையாலல்லவா எனது வம்சம் நாசமடைந்தது" என்று கூறிச் சினந்தான். இதைக் கேட்டதும் முனிவரில் ஒருவர் கோபமடைந்து நீ யாரைச் சண்டி என்கிறாயோ அவளே உன்னைக் கொல்லட்டும்" என்று சபித்தார். அவர் சபித்ததும் அரக்கன் அவரைக் கொன்று விட்டான். பிறகு முனிவர்களெல்லோரும் அவனுக்குப் பயந்து பேசாமலிருந்து விட்டார்கள். ஆதலால் அந்த முனிவரின் சாபப்படிக்கும் எனது வரத்தாலும் அவனை ஸீதையாகிய மாது தான் கொல்லவேண்டும். இதில் ஸந்தேகமில்லை. ஆகையால் ஸீதையை அழைத்துக் கொண்டு வந்து இந்த அரக்கனைக் கொல்லும்" என்று சொல்லிவிட்டுத் தமது இருப்பிடம் சென்றார். ராமரும் இதைக் கேட்டு மகிழ்ந்து விபீஷணரிடம் "மூலகாசுரனுடைய ஹோமத்திற்கு நாம் இப்போது விக்னம் செய்ய வேண்டியதில்லை; ஸீதை இங்கு வந்தபிறகு வேண்டுமானால், குரங்குகள் அதைக்கெடுக்கட்டும்" என்று கூறிப் பிறகு புஷ்பகத்தி லிருந்தபடியே, கருடனைக் கூப்பிட அவர் அக்கணமே அருகில் வந்தார். ராமர் "பக்ஷிராஜ! நீ அனுமாருடன் அயோத்திக்கு வேகமாகச் சென்று ஸீதையை முதுகில் ஏற்றிக்கொண்டு, அவளை இங்கே துரிதமாய்க்கொண்டு வரவேண்டும். வழியில் நான்குபக்கங்களிலும் துஷ்டர்களின் இம்சையுண்டாகாமல் அனுமந்தன் பாதுகாத்துவருவான்" என்றார். உடனே கருடனும் அநுமாரும் அவரது ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு ஸீதையை அழைத்துவர அயோத்திக்குச் சென்றார்கள்.

## 4 - வது சருக்கம்

முற்றிற்று.

## 5 - வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

இனி, ராமரைவிட்டுப் பிரிந்து அயோத்தியில் இருந்து வரும் ஸீதாதேவியைப் பற்றிக் கூறுவாம். அவ்வம்மை தனதுநாய கனைவிட்டுப் பிரிந்தது முதல், சிறிதும் சுகமென்பதில்லாமல், சிலவேளை மேன்மாடியின்மீ துலாவுவதும், சிலசமயம் திராட்சைப் பந்தரின் கீழமர்ந்திருப்பதும், சிலவேளை ஆபரணங்களை யணிந்து கொள்ளாமலிருப்பதும், சிலவேளை தாஸர்களின் கீர்த்தனங் களைப் பார்ப்பதுமாக விருந்து வந்தாள். இஃதன்றிச் சிலசமயம் இராமபிரானது ஜயத்தை விரும்பிக் கார்த்தவீரியார்ச்சுனனைப் பூஜிப்பாள். சிலசமயம் துளஸி, அரசமரம் இவைகளைப் பக்தியுடன் வலம்வருவாள். அந்தணர்களைக்கொண்டு மன்யு ஸூக்தங்களைப் பாராயணம் செய்யும்படி செய்வாள். சாணத்தினுல் அனுமாரை லக்ஷணத்தோடு சுவரில் வரைந்து சிலசமயம் பூஜித்து, அவ ருடைய வால், நாள்தோறும் தன் விரலில் ஒரு விரலளவு வள ரும்படி செய்து வந்தாள். ராகவருக்கு ஜயமுண்டாகும்படி சத ருத்ரீய சூக்தத்தைப் படிக்கும்படி செய்து துர்க்காதேவியையும் பூஜித்தாள். இராகவருடைய மஞ்சத்தில் கார்த்தவீரியருடைய மந்திரத்தை எழுதிவைத்துப் பூஜிப்பாள். ராமர் யாத்திரை சென்ற பிறகு ஸீதை ஒருநாளாவது சுகமாய் ஸ்நானஞ்செய்து தன்னை அலங்கரித்துக் கொள்வதில்லை. சந்தனம் புஷ்பமாலை புஷ்பப்படுக் கை இவைகளை ஒருபொழுதும் உபயோகிப்பதில்லை. ஒருவரோ டும் சிரித்துப் பேசுவதுமில்லை ஒருவேளையும் ஸந்தோஷமடைந் தவரைக்காண்பதுமில்லை. கண்ணுடியில் முகத்தைப் பார்ப்பதில்லை. ஸந்தோஷமடைந்தவர்களைக் காண்பதேயில்லை. அழகிய வஸ்தி ரம் ரவிக்கை இவைகளை யணிந்து கொள்வதில்லை. சரயூநதிக்கு ஸ்நானம் செய்யப் போவதில்லை. உபவனம் முதலிய விநோத ஸ்தலங்களுக்குச் செல்வதில்லை.

ஜானகி இவ்வாறு ராகவரது வியோகத்தை யடைந்திருக் கும்போது ஒருநாள் தன் அரண்மனை மேன்மாடியின்மீது ஒரு காகத்தைப் பார்த்து, "ஏ காகமே! எனக்கு ராமபிரானது தரி

சனம் சீக்கிரத்தில் கிடைக்கக்கூடுமாயின், நீ இப்பொழுது இந்த இடத்தைவிட்டுப் பறந்துபோய்விடு; இல்லையாயின் இருந்த இடம் விட்டு அசையாதே" என்று கூறினள். ஸீதை இவ்வாறு சொல்லி வாயைமூடியதும் காகம் அந்த இடத்தைவிட்டுப் பறந்துபோய் விட்டது. இதனால் ஸீதாதேவி சற்றுத் தேறுதலடைந்து பின் காற்றைநோக்கி "நீ முதலில் ராமரது தேகத்தை ஸ்பரிசித்து விட்டுப் பிறகு என்னிடம் வா" என்றாள். பிறகு சந்திரனைநோக்கி "ஏசந்திர! நீ உனது பூர்ணமான சீதள கிரணங்களால் ராகவருக்குச் சுகமளித்து விட்டுப் பிறகு என்னைத்தொடு" என்றாள். ஸீதை இவ்வாறு சகுனங்களைப்பார்த்து ராமர் சீக்கிரம் வரக்கூடுமெனவறிந்து மனமகிழ்ச்சி யடைந்தாள். பிராம்மணர்களையும் ஸுமங்கலிகளையும் ஆராதித்துவந்தாள். அநேக விதமான விரதங்களை யனுஷ்டித்துவந்தாள். அனுமாருக்கு வடைமாலைசாற்றுவதாக வேண்டிக்கொண்டாள். பூரணத்துடன் நல்ல மோதகங்கள்செய்து அர்ப்பணம் செய்கிறேன் என்று விநாயகரைப்பிரார்த்தித்துக்கொண்டாள். துர்க்காதேவிக்குப் பலிதானம் செய்வதாக வேண்டிக் கொண்டாள். சண்டிகைக்குத் தன் நாக்கின் ரத்தத்தை கொடுப்பதாக வேண்டிக்கொண்டாள். இவைகளன்றி, சனிக்கிழமை தோறும், புசியாம லிருப்பதாகவும், நெய்யையும் மதுரமான பதார்த்தங்களையுஞ் சேர்த்துக்கொள்வதில்லை யென்றும் பிரதிக்ஞை செய்து கொண்டாள். ராமபிரான் வரும் வரையில் எள்ளும் வெல்லமுமாய்க்கலந்து பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பதாகத் தீர்மானித்தாள். ஞாயிற்றுக்கிழமைதோறும் சூரியனை ஆராதிப்பதாகவும் வேண்டிக்கொண்டாள். ஸீதை இவ்வாறு அநேக நியமங்களை நடத்தினள்.

ஊர்மிளை சம்பிகை முதலான ஸ்திரீகளும் தங்கள் தங்கள் புருஷருடைய வியோகத்தால் வருத்தமுற்று, சில சமயம் மணிமயமான பூமியிற்கிடந்து புரளுவதும், சிலசமயம் சந்திரகாந்தக் கல்லிழைத்த தரையில் தண்ணீர்க் குழாய்க்கருகிலும் சில சமயம் தாமரையிலைகளின்மேலும் படுத்துக்கொள்வதுமாகவிருந்தார்கள். மயில்களை ஆடும்படிசெய்து வேடிக்கை பார்ப்பதையும், கிளிக

ளோடு பேசுவதையும் ஸாகஸபக்ஷிகளுடன் விளையாடுவதையும் வீட்டில் ஒருவரோடொருவர் கூடி விளையாடுவதையும் ஒழித்து விட்டார்கள். இவைகளன்றி வீணைமுதலான வாத்தியங்கள் வாசிப்பதையும் கற்பகவிருக்ஷத்தின் புஷ்பங்களைச் சூடுவதையும் மதுரமான மதுவைப் பானஞ் செய்வதையும் ஒழித்துவிட்டு, யோகிகள் ஒரேமனதாயிருந்து ஈசுவரனைத் தியானம் செய்வதுபோலத் தங்தள் நாயகனையே தியானம் செய்துகொண்டிருந்தார்கள்.

இப்படி யிருக்கையில் ஸீதாதேவியின் உபவாசம், விரதம் இவைகளுக்கு ஈடுபட்டவர்கள்போலக் கருடபகவானும் அனுமாரும் அப்பட்டினத்திற்கு வந்தார்கள். அச்சமயம் சீதை தன் இடது புஜமும் நேத்திரமும் துடிக்கக்கண்டு, இது நல்ல சகுனம்; இன்று நற்செய்தி வரவேண்டுமென எதிர்பார்த்திருந்தாள். அனுமாரும் கருடபகவானும் ராமருடைய அரண்மனைக்குள் பிரவேசித்து, அங்கிருந்த யூபகேதுவினிடம், லங்கையில் நடந்த சமாசாரங்களைத் தெரிவித்தார்கள். யூபகேது சங்கதிகளைக்கேட்டு மனமுவந்து, உடனே ஸீதையிடம் சென்று தெரிவிக்க, ஸீதை மிகவும் மகிழ்ச்சியடைந்து, அன்றையதினமே அக்கி ஹோத்திரத்தை முன்னிட்டுக்கொண்டு ரித்விக்குகளோடும் புரோகிதர்களோடும் கருடன் மீதேறிப் புறப்பட்டாள். ஒரு ஸ்திரீயானவள் தனது புருஷன் அருகிலில்லாத காலத்தில், அக்கி ஹோத்திராதிகளுடன் எல்லை தாண்டிச் செல்வது தோஷமாயினும், அது சீதையின் விஷயத்தில் சம்பந்தப்படாது. ஏனெனில் சீதை ஆகாய மார்க்கமாகச் செல்லுகிறாள்; இஃதன்றித் தான் மனத்திற்கொண்ட அச்சத்தாலும் தேசாந்திரம் போகும்படி நேர்ந்தமையாலும் இக்குற்றம் ஸீதையைப் பாதிக்காது. வழியில் அனுமார் நாற்புறமும் காவல் புரிந்துகொண்டு கூடவே ஆகாயமார்க்கமாகச் சென்றனர். பிறகு ஸீதை அநேக தேசங்களைப் பார்த்துக்கொண்டு இலங்கைக்குச் சென்றனள்.

அங்கே கற்பகவிருக்ஷத்தின் கீழ் புஷ்பகவிமானத்திலிருக்கும் ராகவரைப் பார்த்து, பக்தியோடு வணங்கி, கருடன் மீதிருந்து கீழே இறங்கினாள். அவளைப் பார்த்ததும் "ராமர் ஏ ஸீதே!

உனது முகம் ஏன் வெளுத்திருக்கிறது? சரீரம் ஏன் இளைத்திருக்கிறது?" என்று கேட்டார். இதைக்கேட்டு ஜானகி புன்னகைக்கொண்டு "நாதா! தங்களின் பிரிவாற்றாமையால், நான் சாப்பிடாமலும், நித்திரை செய்யாமலும் பானம் பண்ணாமலும் யோகிகள் போன்று தங்களையே நினைத்துக்கொண்டும், சொப்பனத்திலும் தங்கள் முகத்தைப் பார்த்துக்கொண்டும் கவலை கொண்டிருந்தேனாகையால் இக்கோலம் அடைந்திருக்கிறேன். தாபத்தையொழிக்க வேண்டுமெனக் கூறித் தங்கள் முகத்திற்குப் பிரதிநிதியான சந்திரனையும் பார்க்கிறதில்லை. தங்கள் குரலுக்குச் சமமான கோகிலத்தின் குரலையும் கேட்பதில்லை; மந்தமாருதத்தையும் சேவிப்பதில்லை. ஆனால் தங்களுடைய வெற்றியை விரும்பி அநேக விரதம் உபவாஸம் நியமம் இவைகளையே செய்து கொண்டிருந்தேன்" என்று சொன்னாள். இதைக்கேட்டதும் ராமர் நகைத்து ஆலிங்கனம் செய்துகொண்டு மகிழ்ந்தார்.

அடுத்தநாள் காலையில் ராமர் ஸ்நானம் செய்துவிட்டு ஜானகியையும் ஸ்நானம் செய்யச்சொல்லி அஸ்திரவித்தை சஸ்திரவித்தை பாணங்கள் எய்வது முதலிய தனுர்வித்தை இவையெல்லாம் அவளுக்குச் சொல்லிக்கொடுத்தார். ராமரது ஆக்ஞையால் லக்ஷ்மணரும் ரதத்தைத் தயார் செய்தார். அதற்குத் தாருகன் ஸாரதியானான். அநேக அஸ்திரங்களும் சஸ்திரங்களும் அவ்விரதத்திலேயே வைக்கப்பட்டன. அதன் கொடியில் கருடன் உட்கார்ந்துகொண்டான். அதில் வாயுவேகமுடைய சைப்ய, ஸுக்ரீவ, மேகபுஷ்ப, வலாஹக என்னும் பெயருள்ள நான்கு குதிரைகள் பூட்டப்பட்டன. அதில் ச்ரேஷ்டமான குடையும் தங்கத்தடியும் வைக்கப்பட்டன. ராமர் அந்த ரதத்தைப் பார்த்ததும், ஜானகியையழைத்து "ஏ ஸீதே! நீ இதில் உட்கார்ந்து சென்று, மூலகாசுரனைக் கொல்லவேண்டும்" என்றார். ஸீதை ராமர் வாக்கியத்தை ஒப்புக்கொண்டு, தனது நிழலை ஏவினாள். அந்தத் தாமச ஸீதையும் அவரைப் பன்முறை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து மிகவும் பயங்கரமான ரூபத்தோடு ரதத்தின் மீதேறிற்று. இப்பொழுது ராமரால் ஏவப்பட்ட வானரச்ரேஷ்டர்கள், இலங்கை

சென்று முன்போல அவனை ஹோமத்திலிருந்து கலைத்து விட்டுக் களிப்புடன் ராமரிடம் திரும்பி வந்தார்கள். மூலகாசுரன் உடனே கோபங்கொண்டு ரதத்தின் மீதேறிச் சண்டை செய்யப் புறப்பட்டான். வழியில் அவனது மகுடம் தவறிக் கீழே விழுந்தது. அதைக் கவனித்துத்திரும்பாமல் அவன் கர்வத்தோடு யுத்தபூமிக்கே வந்தான். அந்தஸீதையின் நிழலும் சேனையோடும் லக்ஷ்மணர் முதலியவர்களோடும் சண்டைக்குச் சென்றது.

## 5 - வது சருக்கம்

முற்றிற்று.

## 6-வது சருக்கம்.

ஸீதாதேவியின் சாயையானது சார்ங்கமென்கிற பெரியவில்லின் நாணையிழுத்து ஸப்தஞ்செய்துகொண்டு அதிவேகமாகயுத்தகளஞ்சென்று பயங்கரமான பற்கள், கண்கள், செவிகள், குகைபோல் அகன்ற வாய், கருத்த மயிரடர்ந்த சரீரம் இவைகளோடு அரசன் வரவை எதிர்பார்த்து நின்றது. அசுரனும் அக்கணமே வந்து அந்தப் பயங்கரமான ரூபத்தைப் பார்த்து மனத்தில் அச்சங்கொண்டு "நீயார்? நீ ஏன் இங்குவந்தாய்? போர்புரியவா வந்தாய்? நீ உயிர் தப்பவேண்டுமாயின், என்னெதிரில் நில்லாதே" என்று தழுதழுத்த குரலுடன்கூறினன். இதைக்கேட்டதும் அந்தச் சாயையானது மலைகளும் நடுக்குங்கொள்ளத்தக்க குரலுடன், "அடே மூலகாசுர! நான் ஸீதாதேவியின் உக்ரமான அம்சமாகிய சாயை; எனதுபெயர் சண்டிகை. என்னலே தான் உங்கள் வம்சம் அழிந்தது. இலங்கையும் நாசமடைந்தது. என்னிடம் அன்பினையுடைய அந்தணர்களை நீ முன்பு கொன்றாய்; ஆதலால், இப்போது யுத்தத்தில் உன்னைக்கொன்று அந்தக்கடனைத் தீர்க்கப்போகிறேன்" என்று சொல்லி உடனே வில்லைவளைத்து அவ் வசுரன் மேல் ஐந்து பாணங்களை யெய்தது. அசுரனும் அதன்மேல் பாணங்களை எய்து யுத்தம் செய்தான்.

இவ்வாறு இருவரும் யுத்தம்செய்வதை முன் அனுமாரால் பிழைப்பிக்கப்பட்ட அரசர்களும் வானரர்களும் பார்த்து ஆச்சரியமடைந்தார்கள். கற்பகத்தருவினடியில் ஸீதையோடு சுகமாய்வீற்றிருக்கும் ராமபிரானும் இப்பெருஞ் சண்டையைப் பார்த்து வியப்படைந்தார். அந்தச்சாயை மூலகாசுரனல் விடப்பட்ட பாணங்களையெல்லாம் தனது பாணங்களால் தடுத்து, அவன்மேல் அநேகபாணங்களை யெய்து, அவனுடைய ரதத்தில் பூட்டப்பட்ட குதிரைகள், அவன் கிரீடம் கவசகுண்டலங்கள் வில் இவைகளையொடித்து, அவனை அலங்கோலப்படுத்திற்று. ரதமொழிந்ததும் அவ்வசுரன் காலால் நடந்து, வேறொரு ரதத்திலேறிக்கொண்டு, மறுபடியும் யுத்தத்திற்குவந்து, சாயையின்மேல் அக்நி

யாஸ்திரத்தை விடுத்தான். சாயை மேகாஸ்த்ரம் விடுத்து அதைத்தடுத்தது. பின் மூலகாசுரன் பர்வதாஸ்திரம் விடுக்க, அதையும் தடுத்தது சாயை. மறுபடியும் அவ்வசுரன் வேகமாய் நாகாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தான்; அதைச் சாயை கருடாஸ்திரத்தால் தடுத்தது. இவ்வாறு ஏழுநாள் வரையில் கொடூரமான யுத்தம் இருவருக்கும் நடந்தது. பிறகு சண்டிகை வெகு கோபத்தோடு அவ்வரக்கன்மேல் மேகாஸ்திரப் பிரயோகம் செய்தது. அப்போது பூமி நடுங்கிற்று. சமுத்திரங்கள் எல்லைகடந்து பெருகின. திக்குகள் புழுதிகளால் நிறைந்திருந்தன. இவ்வஸ்திரமானது வில்லிலிருந்து விடுபட்டும் அதிவேகமாகச் சென்று, அவனது தலையையறுக்க, அது இலங்கையின் அரண்மனை வாசலில் விழுந்தது. இதைக்கண்ட ராக்ஷஸர்கள் ஹா! ஹா!! வென்று கூறி அலறினார்கள். தேவவாத்தியங்கள் முழங்கின. தேவதைகளும் ஆகாசத்திலிருந்து புஷ்பங்களை வருஷித்தார்கள். பிறகு அந்தச் சாயை ராமர் அருகில் வந்து அவரையும் ஸீதாதேவியையும் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து உடனே ஸீதையின் சரீரத்தில் முன்போலவே சேர்ந்துவிட்டது. உடனே வாத்தியங்கள் முழங்கின. வந்திமாகதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் செய்தார்கள். பிறகு பிரம்மதேவன் தேவர்கள் சூழ அங்குவந்து ராமபிரானையும் ஸீதையையும் வணங்கி, பின்வருமாறு தோத்திரஞ் செய்தார்.

### பிரம்மதேவர் துதிசெய்கிறார்.

ஜனகமஹாராஜரின் பெண்ணே! ராகவரது பிரியையே! தங்கம்போலப் பிரகாசிக்கிறவளே! பக்தர்களைக் காப்பாற்றிவருகிறவளே! தசரதகுமாரரது பிராணநாயகியே! எனது சிரஸு உன்னுடைய பாதங்களாகிற தாமரைப்பூக்களுக்கு வண்டாயிருக்கட்டும்.

மூலகாஸுரனது பிராணனைப் போக்கினவளே! ராமரால் காப்பாற்றப்பட்டவளே! ராமரை ஸேவிப்பவளே! ராமரை மோகிக்கச்செய்பவளே! ரதத்திலுள்ளவளே! எனது சிரஸு தாமரைப்பூப்போன்ற உனது பாதங்களுக்கு வண்டாயிருக்கட்டும்.

ராமமாகிற கட்டிலி லேறினவளே! லக்ஷ்மியே! ராமரால் விசிறப்பட்டவளே! ராமரால் ஆதரிக்கப்பட்டவளே! ராமரால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவளே! ராமரால் மோகிக்கப்பட்டவளே! எனது சிரஸு உன்னுடைய பாதங்களுக்கு வந்தனமாயிருக்கட்டும்.

உலகத்தைப் பரிசுத்தப் படுத்துகிறவளே! லக்ஷ்மியே! பிறப்பற்றவளே! சிரேஷ்டமானவளே! பூபுத்திரியே! லோகாக்ஷிணி! தாமரைப்பூப்போன்ற கண்களை யுடையவளே! உன்னுடைய பாதங்களுக்கு எனது சிரஸு வந்தனமாயிருக்கட்டும்.

தாமரைப்போன்ற கண்களையுடையவளே! பெண் யானைபோல் நடப்பவளே! ஆத்மானந்த சுகமுடையவளே! அழகியரூபத்தையுடையவளே! தங்கத்தினால் அலங்கரிக்கப்பட்டவளே! முத்தாரம் பூண்டவளே! உன்னுடைய பாதகமலங்களுக்கு என் சிரஸு வந்தனமாயிருக்கட்டும்.

தாமரைபோன்ற முக முடையவளே! நீ எப்போதும் உனது சேவகர்களைக் காப்பாற்றுகிறாய்! முனிவர்களின் சத்துருக்களுக்கு எப்போதும் துக்கத்தைக்கொடுப்பவளே! உன்னுடைய பாதகமலங்களில் என் சிரஸு வந்தனமாயிருக்கட்டும்.

ராமப்ரியே! உனது முகத்தைப் பார்த்தால் ராக்ஷஸ ச்ரேஷ்டன் நாசத்தை யடைந்தான். உன் கண்ணைப் பார்ப்பதால், பெண்மானும் வெட்கத்தை யடைகிறது. உன்னுடைய பாதகமலங்களில் என் சிரஸு வந்தனமாயிருக்கட்டும்.

குசலவர்களுடைய தாயே! தாமரை போன்ற முகமுடையவளே! தாமரை போன்ற நேத்திரமுடையவளே! பாபங்களை நாசம் செய்பவளே! மதுரமான நல்ல குரலுடையவளே! ஒலிக்கும் தண்டையணிந்தவளே! உனது பாதகமலங்களில் என் சிரஸு வந்தனமாயிருக்கட்டும்.

புன்சிரிப்புள்ள முகத்தை யுடையவளே! உனது மூக்கு மிகவும் மேலானது. உனது உதடு கோவைப்பழத்திற்குச் சமமானது. உன்னால் யுத்தகளத்தில் மூலகாசுரன் இப்போதே கொல்லப்பட்டான். நாங்களும் கரையேற்றப்பட்டோம்.

ராமதாஸர் கூறுகிறார்.

இவ்விதம் பிர்ம்மாவினால் ஸ்தோத்தரிக்கப்பட்ட ஸீதையின் ஸ்தோத்திரமான இந்த ஒன்பது சுலோகங்களையும் சூரியோதயத்தில் எவன் படிக்கிறானோ அவன் இவ்வுலகத்தில் எல்லாச் சுகங்களையும் அடைந்து, ஸ்ரீராமரது ஸந்நிதியையும் அடைவான். இவ்வாறு பிர்ம்மா ஸீதையை ஸ்தோத்திரம் செய்து ஸீதாராமர்களுக்கு வஸ்திரம் முதலியவைகளை யளித்துப் பூஜித்து ராமரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு தமது லோகம் சென்றார். பிறகு விபீஷணர் "ஏ பிரபுவே! நீர் இதுவரையில் இலங்கைக்கு வாவில்லையாதலால், இப்போது ஸீதையோடுவந்து என்னைக் கிருதார்த்தனாக்க வேண்டும்" என்று சொல்ல, ராமர் அப்படியே ஆகட்டுமென்று வெகு ஸந்தோஷத்தோடு ஸீதை முதலியவருடன் விமானத்தின் மீதேறி இலங்கைக்குச் சென்று அங்கே விபீஷணனுக்குப் பட்டங்கட்டினார். அப்போது இலங்கையானது பரமானந்தத்தில் மூழ்கியிருந்தது. பிறகு விபீஷணர் ஸீதை ராமர் லக்ஷ்மணர் குசன் முதலிய குழந்தைகள் இவர்க ளெல்லோருக்கும் வஸ்திரம் ஆபரண முதலியனவளித்து அன்புடன் நன்றாய்ப் பூஜித்து உபசரித்தார்.

பிறகு விபீஷணர் தமது ஐசுவரியங்களை யெல்லாம் ராமருக்கு ஆதரவோடு கொடுத்தார். ராமர் அவைகளையெல்லாம் அவருக்கே திருப்பிக்கொடுத்துவிட்டு, அவர் வெகு காலமாய் ஆராதித்து வந்த, கபிலவராகமூர்த்தியைக் கேட்டார். விபீஷணர் உடனே மனமுவந்து அவர் விருப்பப்படியே அம்மூர்த்தியை அவருக்குக் கொடுத்துவிட்டார். அந்த மூர்த்தியை முன் மனத்தால் கபிலர் நிர்மாணம் செய்தார். அவர் அதை வெகு காலம் பூஜித்துவிட்டுப் பிறகு இந்திரனிடம் கொடுத்தார். ராவணன் இந்திரனை ஜெயித்து அந்த மூர்த்தியை இலங்காபுரிக்குக் கொண்டுவந்து ஸ்தாபனம் செய்து, ஆராதித்துவந்தான். சிலா ரூபமான அந்த மூர்த்தியை விபீஷணர் இப்போது ராமருக்குக் கொடுத்தார்.

பிறகு ஸீதை ராமரோடும் மைத்துனர்களோடும் குழந்தைகளோடும் உல்லாசமாய் விமானத்தின் மீதேறி அசோகவனம்

சென்று அங்கே தானிருந்து அநேக கஷ்டங்களை யனுபவித்த சிம்சுபா விருக்ஷத்தை ராமருக்குக் காட்டினாள். இஃதன்றிச் சிற்சில வேளைகளில் தான் சஞ்சரித்த இடங்களையும் ராமருக்குக் காண்பித்து, வரும்போது திரிசடை என்பவளுக்கு வஸ்திராபரணங்களைக் கொடுத்து உபசரித்துப் பிறகு ஸரமை என்பவளை ராமருக்குக் காட்டி அவரிடம் ஒரு வார்த்தை கூறினாள்.

பிரபுவே! ராக்ஷஸ ஸ்திரீகள் என்னைப் பிடித்துக்கொல்வதாய்ப் பயமுறுத்தியபோது இவள்தான் என்னைக் காப்பாற்றினாள். ஆகையால் இவளை உபசரிக்க வேண்டுமென்று கூற, ராமர் அவளுக்கு வஸ்திராபரணாதிகளளித்து உபசரித்தார். பிறகு யாவரும் தங்கள் இருப்பிடம் வந்து சேர்ந்தார்கள். அதன் பின் ராமர் மாத்ரம் விபீஷணருடன் புஷ்பக விமானத்தின் மீதேறி நிகும்பிலை முதலிய அநேக இடங்களைப் பார்த்துக்கொண்டு ஆகாய மார்க்கமாய்ச் சென்று, தமது விருப்பப்படி கையில் வில்லையும் பாணத்தையும் எடுத்துக்கொண்டு ஆதரவோடு பிரதக்ஷிணமாகச் சுற்றினார். இதைக் கண்ட விபீஷணர் ஏன் இவ்விதம் சுற்ற வேண்டுமென்று கேட்க "ஏ விபீஷண! உனது ரக்ஷணை நிமித்தம் நான் இதைச் சுற்றினேன். இதை மற்றவர்கள் தாண்டமுடியாது. எனது பெயருள்ள இந்த வில்லையும் பாணத்தையும் நீ வாங்கிக்கொள். இது உனது கையில் இருக்கும்போது ஒருவரும் உன்னை எதிர்க்கமுடியாது" என்று சொல்லி அந்தப்பாணத்தையும் வில்லையும் அவரிடம் கொடுத்தார். விபீஷணர் அதை வாங்கிக்கொண்டு அவரை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து பூஜித்தார். பிறகு ராமர் அவ்விடமிருந்து யாவருடனும் புறப்பட்டு அநேக தேசங்களைப் பார்த்துக் கொண்டு, எல்லோராலும் பூஜிக்கப் பட்டுத் தமது பட்டினம் வந்து சேர்ந்தார். அப்பொழுது வாத்தியங்கள் கோஷித்தன. அப்ஸர ஸ்திரீகள் நர்த்தனம் செய்தார்கள். உடனே யூபகேது பட்டினத்து ஜனங்களுடன் ராமரை எதிர்கொண்டழைத்தான். பட்டினத்து ஸ்திரீகளும் கோடிக் கணக்காக மெத்தையின் மீதேறிக்கொண்டு ஸீதை ராமர் முதலானவர்கள் மீது புஷ்பங்களை வருஷித்தார்கள். பிறகு ராமர் அரசர்களோடு ஸபையில் பிரவேசித்தார். ஸீதையும் தனது அந்தப்புரம் சென்றாள்.

இதன் பிறகு ராமர் கபிலவமாக மூர்த்தியைத் தமது திருநகத்தில் நல்வேளையில் ப்ரதிஷ்டை செய்தார். பிறகு ஒரு நாள் யமுனா நதிக்கரையில் வாசஞ் செய்கிற முனிவர்களெல்லோரும் லவணாசுரன் என்னும் ஓர் அசுரனால் தொந்தரவடைந்து, அவனுக்குப் பயந்து ராமரிடம் வந்து முறையிட்டார்கள். அம்முனிவர் கூட்டத்துக்குப் பிறகு ரிஷியின் புத்திரரான சியவனரிஷி தலைவராக இருந்தார். ராமர் அன்புடன் அவர்களைப் பூஜித்துச் சந்தோஷப்படுத்தி, "முனிவர்களே! நீங்களாகவே என்னைப் பார்க்க வந்தமையால், நான் கிருதார்த்தனானேன். எனக்கு எதைச் செய்பக் கட்டளையிடினும் அதனை அவசியம் செய்து முடிக்கிறேன். தாங்கள் தயைசெய்து எனக்கு உத்தரவளிக்க வேண்டும்" என்றார். இதைக் கேட்டதும் முனிவர்களின் தலைவரான சியவனர் மகிழ்ச்சியடைந்து "ஏ ராமா முன் கிருதயுகத்தில் மதுவென்ற ஒரு மகாசுரன் மிகுந்த தர்மிஷ்டனாயும், தேவர்கள், அந்தணர்கள் இவர்களிடம் பக்தியுள்ளவனாகவும் இருந்தான். மகாதேவர் அவனிடம் கருணை கூர்ந்து அவனுக்கு ஒரு சூலாயுதத்தை அளித்து "இதனால் நீ யாரைக் குத்துகிறாயோ அவன் சாம்பலாய்ப் போய்விடுவான்" என்று ஒரு வரமும் தந்தார். ராவணனுடைய தம்பியின் மனைவியாகிய கும்பீனஸீ என்பவளுக்கு லவணனென்றொருவன் பிறந்தான். இவன் அதிபராக்கிரமசாலியான அரக்கன். இவன் பிராமணர்கள் தேவர்கள் முனிவர்கள் ஆகிய எல்லோரையும் மிகவும் வருத்துகிறான். மதுவைக் கொன்று மதுசூதன னென்னுந் திருப்பெயர் பெற்ற பிரபுவே! எங்களையும் பீடிக்கிறான். தாங்களே எங்களைக் காத்தருளவேண்டும்" என்றார்கள். இதைக் கேட்டதும் ராமசந்திர பிரபு அவர்கள்மீது இரக்கங்கொண்டு "முனிவர்களே! நீங்கள் சிறிதும் இனி அஞ்சவேண்டாம், நான் அவ்வசுரனைக் கொன்று உங்களைக் காப்பாற்றுகிறேன்" என்று கூறி உடனே அருகே இருந்த சத்ருக்னனையழைத்து, "ஏ சத்ருக்கன்! உன்னை மதுரா பட்டினத்திற்கு அதிபதியாகக் கருதி இன்று உனக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கப்போகிறேன்" என்றார். இதைச் செவியிற் கொண்டதும் சத்ருக்னன் "பிரபுவே! தாங்கள் என்னை எப்பொழுதும் தங்கள் சந்நிதியிலேயே வைத்துக்கொண் டிருக்கவேண்டும். என்னைத் தங்களை விட்டுப்

பிரித்துத் தூரதேசத்திற்கு அனுப்புவதுகூடாது. எனக்கு ராஜ்யம் வேண்டாம்'' என்று மிகவும் வேண்டிக்கொண்டான. பிறகு ராமர் பரதனை யழைத்து, இவ்வாறே கூறி உன் விருப்பம் யாது என விசாரித்தனர். பரதன் மறுக்க, பிறகு ராமர் சுபாகுவையும் யூபகேதுவையும் வரவழைத்து அவர்களுக்குத் தமது விருப்பத்தைத் தெரிவித்து பிராமணர்களோடும் முனிவர்களோடும் அவர்களுக்கு அபிஷேகஞ் செய்வித்தார். பிறகு சத்ருக்னனுக்குத் தமது பெயர் வரைந்துள்ள ஒரு பாணத்தைக் கொடுத்து "ஏ சத்ருக்ன! லவணாசுரன், தான் மகாதேவனிடம் பெற்ற சூலாயுதத்தை வீட்டில் வைத்துப் பூஜித்துவிட்டு வேட்டையாடக் காட்டிற்குச் சென்று பிறகு வீட்டிற்குத் திரும்பிவருவான். இச்சமயம் பார்த்து அவன் வீட்டு வாயிலண்டை நின்றுகொண்டிருந்து அவனை இந்தப் பாணத்தால் கொல்லவேண்டும். சூரனான அந்த லவணாசுரனைக் கொன்றுவிட்டு அவ்வனத்தின்கண் யமுனாநதிக் கரையில் மதுரை என்னும் ஒரு நகரம் ஏற்படுத்தி, அதில் சுபாகுவை வசிக்கும்படிசெய். விதிசாநகரத்தில் யூபகேதுவை இருந்துவரும்படி செய். இவ்வாறு அதிவிரைவில் செய்து முடித்து, பிறகு என்னிடம் வந்துசேர். உன்னோடு இரண்டாயிரம் குதிரைகளையும் இரண்டாயிரத்தைந்நூறு ரதங்களையும் அறுநூறு யானைகளையும் முப்பதாயிரம் காலாட்களையும் கொண்டுபோ; நீ வந்ததும் நான் ராஜாக்களனைவரையும் ஜயிக்க யாத்திரை போகவேண்டும்'' என்று கூறிச் சத்ருக்னரை வாழ்த்திப் பிராமணர்களுடைய ஆசிர்வாதத்தையும் செய்வித்து அனுப்பினர். சத்ருக்னர் ராமபிரானது ஆக்ஞையைச் சிரமேல் வகித்து மனமகிழ்ச்சியுடன் அவரை வலம் வந்து நமஸ்கரித்து, சேனாஸமுத்திரங்களுடன் வனத்திற்குச் சென்றார்.

ராமபிரான் இவ்விதம் சத்ருக்னரை அனுப்பிவிட்டுப் பிறகு யூபகேது, சுபாகு இவ்விருவரையும் அவரவர் குழந்தைகள் மனைவிகள், தாய்மார்கள், சைந்யங்கள் இவர்களோடு அனுப்பினர். சத்ருக்னர் ராமபிரானது ஆக்ஞைப்படியே லவணாசுரனைக் கொன்று யமுனாநதிக் கரையில் மதுராபட்டினத்தை ஏற்படுத்தி அதில் சுபாகுவையும் விதிசா நகரத்தில் யூபகேதுவையும் இருந்து

வரும்படி செய்தார். பிறகு அங்குச் சிலநாள் இருந்து விட்டு ராமரிடம் வந்து யாவையும் தெரிவித்துப் பணிந்து நின்றார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் கைகேயியின் புத்திரனாகிய பரதரை அவர் மாமன் யுதாஜித்துத் தமது தேசத்துக்கு அழைத்தார். பரதர் ராமபிரானது உத்தரவு பெற்று, அத்தேசத்துக்குச் சென்று, இரண்டு மூன்றுகோடி கந்தர்வநாயகரைக் கொன்று, புஷ்கராவதி யென்னும் பட்டினத்திலிருந்து புஷ்கரன் பரிபாலித்துவரச் செய்துவிட்டு ராமரிடம் வந்து சேவை செய்தார். ராமபிரான் மனமகிழ்ந்து பரதரை வாழ்த்தினார், பிறகு லக்ஷ்மணரை யழைத்து "லக்ஷ்மணா நீ மேற்குத்திக்குக்குச் சென்று அங்குள்ள துஷ்ட அரசர்களைக்கொன்று அத்திக்கில் இரண்டு பட்டினங்களை யுண்டாக்கி, அவ்விரண்டு பட்டினத்தையும் சித்ரகேது அங்கதன் இவர்களுக் குரிமையாக்கு. அவர்களுக்கு ஆயிரக்கணக்கான சேனைகள் அளவற்ற ரத்தினம் தனம் இவைகளையும் கொடுத்து அங்கேயே வசித்து வரும்படி செய்" எனக் கட்டளையிட்டார். அவர் ராமபிரானது ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு அவ்விதமே செய்துமுடித்து கஜாச்வம் என்னுமிடத்தில் அங்கதனையும் தனரத்னம் என்னுமிடத்தில் சித்ரகேதுவையும் இருந்தரசாட்சிசெய்ய உத்தரவிட்டார்.

பிறகு லக்ஷ்மணர் ராமரிடம் திரும்பிவந்து ராமரையே சேவித்துக்கொண் டிருந்தார். இதன் பின் ராமர் சோதிடர்களை அழைத்து அவர்களைப் பூஜித்து பூமியை ஜெயிப்பதற்குப் புறப்பட ஒரு நல்ல முகூர்த்தம் பார்க்கச்சொன்னார். உடனே அவர்கள் நல்ல முகூர்த்தம் பார்த்து சொல்லக் கேட்டு மகிழ்ந்து மறுபடியும் அவர்களைப் பூஜித்து அனுப்பிவிட்டார். அப்போது ராமர் லக்ஷ்மணரிடம் "நான் பூமியிலுள்ள அரசர்களை ஜெயிப்பதன்பொருட்டுப் புறப்படப்போகிற படியால், சீக்கிரம் சேனையைத் தயார்செய்யவேண்டும். விமானத்தில் அநேகம் சஸ்திரங்களையும் அஸ்திரங்களையும் சிலாக்யமான குண்டுகளையும் வேண்டிய தன தான்யங்களையும் வைக்கவேண்டும். பட்டினத்தைக் காப்பாற்ற சுமந்திரர் ஸைந்யத்தோடு தயாராயிருக்கட்டும்" என்று உத்தரவு செய்துவிட்டு ஸீதையின் அந்தப்புரம் சென்றார். லக்ஷ்மணரும் ராமர் கட்டளையிட்டபடி எல்லாவற்றையும் செவ்வனே செய்து முடித்தார்.

### 6 - வது சருக்கம்
### முற்றிற்று.

## 7-வது சருக்கம்

ராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாஸ! இதன்பிறகு ராமபிரான் தாம் தமது பிள்ளைகளோடும் அரசர்களோடும் பந்துக்களோடும் சென்று உலகத்திலுள்ள அரசர்களை ஜயிக்க நிச்சயித்திருப்பதாக ஸீதையிடம் தெரிவித்தார். இதைக்கேட்டதும் ஸீதாதேவி, "பிரபுவே! நான் தங்களை விட்டுப் பிரிந்திருக்கச் சகியேன், ஆகையால், என்னையும் தங்களோடு அழைத்துப்போக வேண்டும்; இதுதான் உசிதமெனத் தோற்றுகிறது" என்று பிரார்த்தித்தனள். ராமரும் இதைக் கேட்டு ஸந்தோஷமடைந்து "ஸீதே! நல்லது அவ்விதமேசெய்வோம்" என்று ஸீதைக்கு மறுமொழிதந்தார். ராமர் இவ்விதம் ஜைத்ர யாத்திரை போக நிச்சயித்திருப்பதைக் கேள்விப்பட்ட, ஊர்மிளை முதலானவர்களும் குசன்முதலானவர்களுடைய மனைவிமார்களும் ஸீதையிடம் சென்று, "அம்மா! தங்களோடு நாங்களும் வருகிறோம்; எங்களையும் அழைத்துச் செல்லவேண்டு" மெனப் பிரார்த்தித்தார்கள். இதைக்கேட்டதும் ஸீதைதன்பதியிடம் தெரிவித்து, அவருடைய அனுமதிபெற்று, "நீங்களெல்லாரும் புறப்படவேண்டியது தான்; ஆகையால் நீங்கள் பயணத்துக்குச் சித்தமாயிருங்கள்" என்று கூறியனுப்பினாள். அவர்கள் யாவரும் மிகுந்த ஸந்தோஷத்துடன தத்தம் கிருகத்திற்குச் சென்று பிரயாணத்துக்கு வேண்டியவைகளைத் தயார்செய்து கொண்டிருந்தார்கள். ராமபிரான் அன்றிரவு ஸீதாதேவியின் அரண்மனையிலேயே யிருந்து விட்டார்.

மறுநாள் அதிகாலையில், வந்திமாகதர்களின் ஸ்தோத்திரங்களைக் கேட்டு, பிராம்ம முகூர்த்தத்தி லெழுந்து, காலைக்கடனை முடித்துக் கொண்டு பரமேசுவரனை பக்தியோடு ஆராதித்து அநேகதானங்களை யளித்தார். பிறகு யாத்திரைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, கணபதியை ஆராதித்து, மங்களசிராத்தம், கிருதசிராத்தம் முதலானவைகளைச் செய்துமுடித்துக் காமதேனு, கற்பகவிருக்ஷம், பாரிஜாதம் முதலியவற்றை நன்றாய்ப்

பூஜித்தார். இதன்பிறகு திவ்ய போஜனம் செய்து நல்ல வஸ்திரங்களை யுடுத்து ஆயுதங்களைத் தரித்துக்கொண்டார். தமது பந்துக்கள், புத்திரர்கள், அரசர்கள், மந்திரிகள், சேனைகள் சேவகர்கள் இவர்கள் சூழப் பல்லக்கிலேறிக்கொண்டு புஷ்பக விமானத்திற்குச் சென்றார். அங்குச் சென்றதும் ஸ்திரீகள் குழந்தைகள் மந்திரிமார்கள் முதலியவர்களைப் புஷ்பக விமானத்திலேறிக்கொள்ளும்படி செய்து பிறகு தாமும் ஏறிக்கொண்டார். அப்பொழுது வாத்தியங்கள் முழங்கின. வந்திமாகதர்கள் ஸ்தோத்ரம் செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். மற்றவர்கள் ஜயகோஷஞ் செய்தார்கள். ஏ சிஷ்ய! அந்த விமானமானது அப்பொழுது, எப்படியிருந்ததெனில், நான் யாத்திரா காண்டத்தில் வர்ணித்தது போலவே விளங்கியது.

பிறகு ராமபிரான் விமானத்தை நோக்கி, கிழக்குமுகமாகச் செல்லும்படி ஆக்ஞாபித்தார். விமானமும் அப்படியே சென்றது. சுமந்திரர் ராமரை வணங்கி, அனுப்பிவிட்டு அயோத்தியிலேயே சுகமாக இருந்தார். கிழக்குதிக்கிலுள்ள அரசர்கள் ராமரது வரவைக்கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்து அவரது தரிசனத்திற்குரிய சாமான்களை யெடுத்துக்கொண்டு எதிர்கொண்டு சென்று அவரைப்பூஜித்து, தங்கள் தங்கள் பட்டினத்துக்கு அழைத்துச்சென்று அவரிடம் தங்கள் பொக்கிஷம் முதலிய யாவற்றையும் ஒப்புவித்து வணங்கி நின்றார்கள். ராமர் அவைகளைப் பார்த்து மகிழ்ந்து மீண்டும் அவர்களிடமே கொடுத்துவிட்டு, அவ்விடமிருந்து புறப்பட்டு மகதேசத்தைத் தாண்டிச் சென்று அநேக தேசங்களைப் பார்த்துக்கொண்டு காந்திபுரியை யடைந்தார். அங்குள்ள கம்புகண்டன் ராமரை மிகவும் வணக்கமாய்ப் பூஜித்து, உபசரித்தான். பிறகு ராமர் அவ்விடமிருந்து புறப்பட்டு ஆரவாரமென்னும் மகாதேசத்தையும் சோழமண்டலத்தையுந்தாண்டி, கேரளம், ஆந்திரம், கர்நாடகம் இவைகளுக்குச் சென்றார். அங்கு விஜயபுரவாசியான விஜயனால் நன்குபசரிக்கப்பட்டுக் கொங்கணதேசத்திலுள்ள அரசர்களை ஜயித்து, மகாராஷ்டிரதேசம் சென்று தேவகியென்று பெயருள்ள கோட்டையையும் இன்னும் அநேககோட்டைகளையும் தம்வச

மாகச் செய்துகொண்டு பிறகு விராடதேசம் சென்று விந்தியபர்வதத்திற்குச் சமீபத்திலுள்ள தேசங்களைப் பார்த்துக்கொண்டே சரயூநதிக்கரையின் ஓரமாகச்சென்று ஓங்காரரூபியான ஈச்வரனைத் தரிசனம் செய்து வணங்கிவிட்டு மாளவதேசம் சென்றார். அங்குள்ள அரசர்களையும் ஜயித்துவிட்டு உஜ்ஜயினி பட்டினம் சென்று அத்தேச மன்னனாகிய உக்ரபாகுவை ஜயித்து, அஸ்தினாபுரம் சென்றார். அப்பொழுது சந்திரவம்சத்தைச் சார்ந்த மூன்று அரசர்கள் சிறிது சைன்னியங்களோடு சண்டை செய்ய வந்தார்கள். அவர்களோடு ராமர் மூன்று நாள் கொடூரமான யுத்தம் புரிந்தார். அப்போது சர்வபாவங்களையும் நாசஞ்செய்கிற கங்கை இரத்தத்தால் நிறைந்திருந்தது. நான்காவது நாள் ராமர் அவர்களை ஜயித்து அந்தப் பட்டினத்திற்குச் சென்று அங்கே வானர வைத்தியனான சுஷேணனை ஸேனையோடு ராஜனாக ஏற்படுத்தி, அம்மூன்று பேர்களையும் சிறைச்சாலையிலடைத்து சுக்ரீவன் முதலானவர்களோடு மதுரா நகரத்தைப் பார்க்கச்சென்றார். அந்த ராஜ்யத்திலுள்ள ஸுபாகுவைப் பார்த்துவிட்டு: அங்கிருந்து விதிசாநகரம் சென்று அங்குள்ள யூபகேதுவைப் பார்த்து அவனுடைய வந்த வழிபாடுகளை ஏற்றுக்கொண்டார். பிறகு குருக்ஷேத்திரம் புஷ்காரம் இவைகளைப் பார்த்துக்கொண்டு, மருதேசத்தைத் தாண்டி கூர்ஜா தேசம் ப்ரபாஸம் இவைகளுக்குச் சென்றார். பிறகு அங்கிருந்து மல்லதேசம் போய் அங்கே கஜாச்வநகரத்தில் அங்கதனைப்பார்த்துப் பிறகு தனரத்னத்திலுள்ள சித்திரகேதுவையும் பார்த்துவிட்டு, பிறகு ஆநந்ததேசம் போய்ச்சேர்ந்து அங்குள்ளவர்களால் பூஜிக்கப்பட்டு, பிறகு புஷ்காராவதிக்குச் சென்றார். அங்கு அரசனாக இருந்துவரும் புஷ்கரனைப் பார்த்துவிட்டு, அப்புறம் தக்ஷசிலைசென்று, அங்குள்ள தக்ஷனைப்பார்த்துவிட்டு உடனே அங்கிருந்து பாதனது மாமனான யுதாஜியத்தைப் பார்க்கப்போய் அங்கே அவனால் பூஜிக்கப்பட்டு ஆகாயமார்க்கமாய்ச் சகதேசம் சென்றார். அங்குள்ள யவனதேசத் தரசர்களையெல்லாம் ஜெயித்துப் பிறகு அநேகதேசங்களைப் பார்த்துக்கொண்டு, தாம்ரதேசம்சென்று அங்கிருந்து மாயாபுரிக்குப்போனார். பிறகு கலாபக்

கூடத்திற்குச் சென்று அங்கே நாராயண மூர்த்திகளையும் நாரத ரையும் வந்தனஞ்செய்து மகிழ்ந்தார். பிறகு அங்குள்ளவர்க ளால் பூஜிக்கப்பட்டுப் பாரததேசம் போய், அவ்வாசனை யுத்தத் தில் முறியடித்து இந்த ஸ்தானத்தில் தம்மோடு வந்த பாதனை ராஜ னாக ஏற்படுத்தி மிகவும் அழகிய தேசமாகிய புண்ய தேசத்தை யடைந்து, அதற்கு எதிரில் 2000 யோஜனை அகல முள்ளதும் 73000 யோஜனை நீளமுள்ளதும் மிகவும் அழகியதுமான ஹிமா சலத்தைப்பார்த்து அங்கே சென்று எல்லாரோடும் அநேகவித ஆச்சரியங்களைக்கண்டு ஸீதைக்குக் காண்பித்து மிகவும் ஸந்தோ ஷத்தையடைந்தார்.

## 7 - வது சருக்கம்

முற்றிற்று.

## 8 - வது சருக்கம்.

பிறகு ராமர் 9000 யோஜனை விஸ்தாரமுள்ளதும் அநாதியாய் ராமமூர்த்தியையும் அனுமாரையும் ஸ்தாபிக்கப்பெற்று விளங்குவதுமாகிய கிம்புருவென்னும் பெயர்கொண்ட வர்ஷத்திற்குச் சென்றார். அங்குள்ள அரசன் ராமரை வெகு மரியாதையுடனும் அநேக வாத்திய கோஷங்களோடும் எதிர்கொண்டழைத்து உபசரித்தான். புஷ்பகவிமானத்திலிருந்துகொண்டே அப்பட்டினமெங்கும் சஞ்சரித்தார். அப்புறம் மிகவும் அழகியதும் 2000 யோஜனை அகலமுள்ளதும் 8100 யோஜனை நீளமுள்ளதும் அநேக தாது நிறைந்ததும் உயர்ந்த சிகரங்களால் பிரகாசிப்பதுமான ஹேமகூட மென்னும் பர்வதத்தை யடைந்தார். பிறகு அநேக யோஜனை தூரம் அளவுள்ளதும் நரஸிம்ஹ மூர்த்தியை உபாஸித்துக்கொண்டிருக்கிற ப்ரஹ்லாதர் மூர்த்தீகரித்திருக்கப் பெற்றதும் மிகவும் அழகியதும் மூன்றாவதுமான ஹரிவர்ஷமென்னும் வர்ஷத்தைத் தசரத குமாரர் அடைந்தார். அந்த வர்ஷத்தில் வசிக்கும் அரசக்கூட்டத்தோடு பெரும்போர் புரிந்து, அதில் ஜயத்தை யடைந்து சத்துரு ஸ்திரீகள் ஆலத்தி சுற்ற சத்துருக்களின் பொக்கிஷங்களை யெடுத்துக்கொண்டும் ஸீதைக்குப் பல விநோதங்களைக் காட்டிக்கொண்டும் கோடி தோரணம் மணி சதங்கைகள் இவைகளுடன் அழகிய விமானத்தின்மீ தேறிக்கொண்டே நாலாபக்கங்களிலும் சென்றார். பிறகு 2000 யோஜனை அகலமுள்ளதும் 90000 யோஜனை நீளமுள்ளதும் அழகியதுமான நிஷதமென்னும் பர்வதத்தைப் பார்த்தார். பின்னர், மேருபர்வதத்திற்கு நான்குபக்கங்களிலும் நான்கு திக்குகளிலும் சமானமாயும் 34000 யோஜனை பரிமாணமுள்ளதாயும் இருக்கிற இளாவிருதமென்றும் நான்காவது வர்ஷத்திற்கு மேற்கில் மேருவுக்கு ஆச்ரயமான ஸுபார்ச்வ பர்வதத்தில் விளங்குவதும் மிகவும் உயர்ந்ததும் விஸ்தாரமானதும் புஷ்பங்களால் அழகியதுமானஒரு கதம்ப (அடம்பை) மாத்தை ராமர் பார்த்தார். அப்பால் மேருவுக்கு அடுத்த வடக்கே அதற்கு ஆச்ரயமான குமுதமென்னும்பர்வதத்தில் விளங்

குவதும் மிகவும் உயர்ந்ததும் அதிகமாய்ப் பெருத்துப் படர்ந்தது மான ஓர் ஆலமரத்தைக்கண்டு மகிழ்ந்து ஸீதைக்கும் காட்டி ஞர். ரகுவம்சத்திற்கு அலங்காரமாயும் ஜானகியின் பிராணநாயக ராயுமுள்ள அந்த ராமர் மேருபர்வதத்தை ஆச்ரயித்துக் கொண் டிருக்கிற நந்தபர்வதத்தில் விளங்குகிறதும் மிகவும் உயர்ந்து படர்ந்து விசாலமாயிருப்பதும் குடம்போன்ற பழங்களின் பாரத்தால் விளங்குவதுமான ஓர் ஒட்டுமாமரத்தைப்பார்த் தார். அந்த இளாவிருதகண்டத்தில் ஸங்கர்ஷணரை உபாஸித் துக்கொண் டிருக்கிற ருத்ரமூர்த்தியைக்கண்டு இராமர் பத்னி யோடு நமஸ்காரம் செய்தார். அந்த வர்ஷத்தில் வசிக்கிற அர சர்கள் கைகூப்பிக்கொண்டு சிரங்குனிந்து ராமரை வணங்கினர் கள். பிறகு அங்கிருந்து கிழக்குமுகமாய்ச்சென்றார். பிறகு 2000 யோஜனை அகல முள்ளதும் 34000 யோஜனை நீளமுள்ளதுமான கந்தமாதன பர்வதத்தைப் பார்த்தார். பிறகு 31000 யோஜனை நீளமுள்ளதும் ஹயக்ரீவ மூர்த்தியை உபாஸிக்கிற பத்ராச்வனால் அலங்கரிக்கப்பட்டதுமான பாத்ராச்வமென்னும் ஐந்தாவது வர் ஷத்திற்குச் சென்றார். அங்கே சில விடங்களில் சில அரசர்க ளோடு சண்டை செய்து அவர்களை ஜெயித்துக்கொண்டும் சில இடங்களில் சரணமென்றடைந்து கைகூப்பிக்கொண்டு வணங் கும் அரசர்களிடமிருந்து கப்பம் வாங்கிக்கொண்டும் மேற்கு முக மாய்ச் சென்றார். பிறகு மேருவுக்கு மேற்குதிக்கிலுள்ள 2000 யோஜனை அகலமுள்ளதும் 34000 யோஜனை நீளமுள்ளதும் அதி ரமணீயமானதுமான மால்யவானென்னும் பர்வதத்தைப் பார்த் தார். அதற்குமேற்கே 31000 யோஜனை நீளமுள்ளதும் வாமதே வரையுபாஸித்துக்கொண்டிருக்கும் லக்ஷ்மீயால் விளங்குவதுமான கேதுமாலமென்னும் ஆறுவது வர்ஷத்திற்குச் சென்றார். அந்த வர்ஷத்திலுள்ள அரசர்கள் தமது சிரங்குனிந்து வணங்கி மகுடங் களால் ராமபிரானது பாதகமலங்களைச் சிங்காரித்தார்கள். அங்கு ராமரும் ஸீதையும் அதிகஸந்தோஷத்தை யடைந்தார்கள். பிறகு மேருவுக்கு வடக்கே 2000 யோஜனை விஸ்தார முள்ளதாயும் 9000 யோஜனை நீளமுள்ளதாயும் இருக்கிற நீலபர்வதத்தைப் பார்த்து ராமர் ஸந்தோஷித்தார். பின்னர், 9000 யோஜனை பரி

மாணமுள்ளதாயும் மத்ஸமூர்த்தியை உபாஸித்துக் கொண்டிருக்கிற மநுவினுல் அலங்கரிக்கப்பட்டதாயும் இருக்கிற ரம்யகமென்னும் ஏழாவது வர்ஷத்திற்குச் சென்றூர். அங்குள்ள அரசரால் நன்றுய் மரியாதை செய்யப்பட்டு அதற்கப்பால் சென்றூர். அதற்கு வடக்கே 2000 யோஜனை விஸ்தாரமுள்ளதும் மிகவும் அழகுள்ளதுமான சுவேதபர்வதத்தைப் பார்த்தார். பிறகு 9000 யோஜனை பரிமாணமுள்ளதும் கூர்மமூர்த்தியை உபாஸித்துக் கொண்டிருப்பதும் ஆரியனுல் ஆச்ரயிக்கப்பட்டதுமான மிகவும் அழகிய ஹிரண்மயம் என்று பெயருள்ள எட்டாவது வர்ஷத்திற்குச் சென்றூர். அவ்வர்ஷத்தில் வசிக்கும் ராஜஸ்திரீகளெல்லோரும் ஸீதையை எதிர்கொண்டழைத்து நன்றுய்ப் பூஜித்து அவளை வணங்கினுர்கள். இப்போது எல்லோருடைய வணக்கத்தையும்பெற்றுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஸீதையை ராமர்பார்த்து மிகவும் ஸந்தோஷித்தார். பிறகு 9000 யோஜனை பரிமாணமுள்ளதும் வராஹமூர்த்தியை உபாசித்துக்கொண்டிருப்பதும் பூதேவதையால் மிகவும் அழகியதுமான உத்தரகுருவர்ஷமென்னும் ஒன்பதாவது வர்ஷத்தை இராமர் அடைந்தார். அவ்வர்ஷத்திலுள்ள அரசர் இவரோடு போர்புரிய வந்து பராஜயமடைந்து, இவரைவணங்கி நிற்கும்போது, இவர் மிகவும் ஆனந்தமடைந்தார். பிறகு ராமர் ஜம்பூத்வீபத்தின் பதியும் உத்தரகுருவர்ஷத்தி லிருப்பவனுமான ஸுபாஹு என்பவனை யுத்தத்திற்கொன்று "அயோத்திற்குச் சென்று லவனை ஜம்பூத்வீபத்தின் பதியாக்குகிறேன்" என்று அங்குள்ளார் முன்னிலையில் நிச்சயித்துக் கொஞ்ச நாள் அந்த அதிகாரத்தில் விஜயனென்னும் தமது மந்திரியை ஏற்படுத்திவைத்திருந்தார். இந்த ஜம்பூத்வீபங்களுக்குள்ளடங்கிய வர்ஷங்களுக்கும் அவ்வாறே மற்ற த்வீபங்களுக்குள்ளடங்கிய வர்ஷங்களுக்கும் ஏற்பட்ட பெயர்களே பிரியவிருதனென்னும் அரசனது பேரர்களுடைய பெயர்களாக விளங்கின. அவைகளில் ஏற்படும் அரசரெல்லோரும் அந்தந்த வர்ஷத்தில் பெயருள்ளவர்களாகவே யிருக்கிறூர்கள். ஆகையால் எல்லாவற்றிற்கும் தனித்தனிப் பெயர்களை நான் சொல்லவில்லை. இவ்விதம் ஜம்பூத்வீபமென்பது

நீளம் அகலம் இவைகளில் லக்ஷம் யோசனை பரிமாண முள்ள தாயும் மிகவும் அழகியதாயும் ஒன்பது வர்ஷங்களால் அலங்கரிக்கப் பட்டதாயும் இருக்கிறது. அதை ஸ்ரீராமர் வசப்படுத்திக்கொண் டார். மேருபர்வதத்தின் உச்சியில் எட்டுத் திக்குப் பாலகர்களும் எட்டுப் பட்டினங்க ளிருக்கின்றன. அந்தப் பாலகர்கள், இந்திரன் அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் இவர் களே. இவர்க ளெல்லாரும் "எனது ஆக்ஞையைப் பாலனம் செய் வார்களாக" என்று ராமர் அவர்களைக் குறித்துச் சொன்னார். அந்த எட்டுப் பட்டினங்களும் தனித்தனியாய் நீளம் அகலம் இவைகளால் 2500 யோஜனை பரிமாண முள்ளவைக ளென் றறிந்து கொள்க.

மேருபர்வதம் லக்ஷம் யோஜனை உயரமுள்ளது. மேலே முப் பத்திரண்டாயிரம் யோஜனை விஸ்தாரமுள்ளது. பதினாறாயிரம் யோஜனை பூமியின்கீழே சென்றுள்ளது. எண்பத்தீது நான்காயிரம் யோஜனை பூமிக்கு மேலிருப்பது. ஊமத்தம் பூப்போலக் காணப் படுவது. அந்த மேருபருவதத்தின் உச்சியில் எட்டுத் திக்குப் பாலகர்களின் பட்டினங்களுண்டு. அவைகளுக்குள் பிரமபுரி என்பது அகலம் நீளம் இவ்விரண்டிலும் பத்தாயிரம் யோஜனை யுள்ளதென்று தெரிகின்றது. வர்ஷத்திற்கெல்லையாகிய அஷ்டகுல பர்வதங்களும் பத்தாயிரம் யோஜனை உயரமுள்ளவைகளேயாம். வர்ஷமும் பர்வதமும் போல நீளமுள்ளதும், சிலர் ஜம்பூத்வீபத் தில் எட்டு உபத்வீபங்களுண்டு என்கிறார்கள். அவைகள் குதிரை யைத் தேடிக்கொண்டு பூமியின்கீழ்ச் சென்ற ஸகரகுமாரர்களால் கண்டுபிடிக்கப்பட்டவையாம். அவை, ஸ்வர்ணப்ரஸ்தம், சந் திரசுக்லம், ஆவர்த்தனம், ரமணகம், மந்தஹரிணம், பாஞ்ச ஜன் யம், ஸிம்ஹலம், லங்கை என்பவையாம். அவைகளில் லங்கை யைத் தவிர மற்றத் தீவுகளுக்குச் சென்று அவ்வதிபதிகளை ராமர் தமக்கு வசப்படுத்திக்கொண்டார். பாரத வர்ஷம் இளாவ்ருத வர்ஷம் இவைகளைத் தவிர மற்ற ஏழு வர்ஷங்களிலும் கணக்கற்ற மலைகளும் ஆறுகளு மிருக்கின்றன. இவைகளை விஸ்தாரமாய்ச் சொல்ல யாரால் முடியும்? ஆனால் இளாவிருதத்திலுள்ள முக்கிய மான நதிகளை இங்குக் கூறுகின்றேன்.

அருணோதை, ஜம்புநதி, பயோததி, க்ருதமது, குடான்னு, அம்பரசய்யா, ஆஸநா, ஆபரணஸம்க்ஞா இவைகள் நதங்கள். அவ்வாறே பஞ்சமது, தாரை, ஸீதை, அலகநந்தை, சக்ஷுர்பத்திரை என்னும் நான்கு நதிகளும் மேருவுக்குக்கீழே நான்கு திக்குகளிலும் விழுகின்றன. இவைகள் கங்கையின் பேதங்களாம். இவைகளில் ஸீதை என்பது கிழக்கு ஸமுத்திரத்திலும், சக்ஷுஸ் என்பது மேற்கு ஸமுத்திரத்திலும், பத்திரை என்பது வட ஸமுத்திரத்திலும், அலகநந்தை என்பது தெற்குத்திக்கில் பாரத்வர்ஷத்திலும் ஸமுத்திரத்திலும் சங்கமமாகின்றன. இந்தப் பாரதவர்ஷத்தில் அநேகம் மலைகளும் நதிகளுமிருக்கின்றன. அதாவது மலயம், மங்களப்ரஸ்தம், மைனுகம், திரிகூடம், ரிஷபம், குடகம் லஹ்யம், தேவகிரி, ரிச்யமூகம், ஸ்ரீசைலம், வேங்கடம், மஹேந்த்ரயம், வாரிதாரம், த்ரோணம், சித்ரகூடம், கோவர்த்தனம், ரைவதகம், சகுபம், நீலம், கோகாமுகம், இந்திரநீலம், காமகி இவைகளும் இன்னும் அநேக அளவற்ற மலைகளும் நூற்றுக்கணக்காயும் ஆயிரக் கணக்காயும் இருக்கின்றன. சந்திரவசை, தாம்ரபர்ணீ, அவடோதை, க்ருதமாலை, வைஹாயஸீ, காவேரி, பயஸ்விநீ, சர்க்கராவர்த்தை, துங்கபத்திரை, கிருஷ்ணு, வேணீ, பீமரதி, கோதாவரி, நிர்விந்தியா, பசோஜதி என்னும் நதிகளும், ஆந்திரம் சோணம் என்னும் நதங்களும், மஹநதி, வேதஸ்மிருதி, ரிஷிகுல்யாதி, ரிஸாமா, கௌசிகி, மந்தாகினி, யமுனு, ஸரஸ்வதீ, திருஷத்வதீ, கோமதீ, ஸரயூ, ரோதஸ்வதி, ஸப்தவதி, ஸுஷோமா, சதத்ரு, சந்திரபாகா, மருதங்வை, விதஸ்தை, அஸக்னீ, விஸ்வை, என்னும் மஹாநதிகளும் இருக்கின்றன. ஏ சிஷ்ய! இவ்வாறு லோகநாயகரான ரகுநாயகர் உபத்வீபங்களுடன் கூடிய ஜம்பூத்வீபத்தையும் வசப்படுத்திக்கொண்டு, லக்ஷயோசனை விஸ்தாரமுள்ள லவண ஸமுத்திரத்தைப் புஷ்பக விமானத்தின்மே லிருந்தவாறே ஜம்பூத்வீபத்தின் அகழைக் கடந்ததுபோலக் கடந்து ப்லக்ஷம் என்னும் இரண்டாவது த்வீபத்தைப் பார்த்தார்.

8 - வது சருக்கம்

முற்றிற்று.

---

## 9 - வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமர் பிறகு இரண்டு லக்ஷயோசனை அளவுள்ளதும் ஏழு வர்ஷங்களோடு கூடியதுமான அழகிய ப்லக்ஷத்வீபத்திற்குச் சென்றார். அவ்விடத்தில் பிராமணர் முதல் யாவரும் ஸூரியனை உபாஸிக்கக்கூடிய தெய்வமாகக் கொண்டிருந்தார்கள். அங்கே தங்கவர்ணமான ஒரு ப்லக்ஷ விருக்ஷமிருக்கிறது. அதினாலே தான் இந்தத்வீபத்திற்கு இப்பெயர் வந்தது. மேருவுக்குக் கிழக்கில் சிவமென்ற வர்ஷமிருக்கிறது. முதலில் ராமர் ஆகாய மார்க்கமாய் அங்கே சென்றார். அங்கே பாவங்களை யெல்லாம் போக்கக்கூடிய அருணை யென்றொரு நதியுண்டு. இவர் அதில் ஸ்நானம் செய்து விட்டு விரைவாக அதன் அதிபனிடம் சென்று, அவனை ஜெயித்து விட்டு அவனும் மற்ற அரசர்களும் செய்த உபசரணையைப் பெற்று ஐந்து மாதம் அங்கேயே வசித்து, பிறகு வஜ்ராகூட மலைக்குச் சென்றார். அம்மலை இரண்டு வர்ஷங்களுக்கும் எல்லை போன்றது. அதைச் சுற்றிக்கொண்டு யவபஸமென்னும் வர்ஷத்திற்குச் சென்றார். அங்குள்ள நிரும்ணாநதியில் ஸ்நானம் செய்து விட்டு, அவ்வரசனைப் பார்க்கச் சென்று அவனாலும் மற்ற அரசர்களாலும் நன்குபசரிக்கப்பட்டு, புஷ்பக விமானத்திலேறிக் கொண்டு, உபேந்திரஸேன பர்வதத்திற்குச் சென்று, அதைச் சுற்றிக்கொண்டு ஸுபத்திரவர்ஷத்திற்குச் சென்றார். அங்கே ஆங்கிரஸி யென்னும் நதியில் ஸ்நாநம் செய்து, அவ்வரசனாலும் நன்குபசரிக்கப்பட்டு அங்குள்ள எல்லோரோடும் ஜ்யோதிஷ்மான் என்னும் மலையையடைந்து அதைச் சுற்றிக்கொண்டு சாந்வர்ஷம் சென்று அங்கே ஸாவித்ரி நதியில் ஸ்நானம் செய்து, அவ்வதிபனான அரசனை ஜெயித்து இன்னும் அங்கிருந்த மற்றுமுள்ளவர்களையும் தமது வசமாக்கிக்கொண்டு அதிவிரைவில் ஸ்வர்ணபர்வதம் சென்றார். பிறகு அங்கேயிருந்து க்ஷேமவர்ஷம் போய் அங்கே ஸுப்ரபாதா நதியில் ஸ்நானம் செய்து, அவ்வரசனால் நன்கு உபசரிக்கப்பட்டு அங்கிருந்து அழகியஹிரண்யஷ்டீவமென்

னும் மலையைக் கடந்து சென்று அங்குள்ள அரசரால் மரியாதை செய்யப்பட்டு, ஸத்யம்பரை என்னும் நதியில் ஸ்நானம் செய்து அங்குள்ள அரசனோடு போர்புரிந்து அவனைத் தமது வசமாக்கிக் கொண்டு அவனோடும் மற்ற அரசர்களோடும் க்ஷணத்திற்குள் மணிகூட மென்னும் மலையைத் தாண்டினர். பிறகு இரண்டு லக்ஷயோஜனை விஸ்தீரணமுள்ள அழகிய இக்ஷுரஸோதமென்னும் பெருங்கடலைக் கடந்து நான்கு லக்ஷயோஜனை அளவுள்ள சால்மலீத்வீபம் சென்றார். அங்கே ஒரு பெரிய சால்மலீ (கொங்கிலவை) விருக்ஷமுண்டு. அதனாலே தான் அந்தத்வீபத்திற்கு இப்பெயர் வந்தது. அங்கே சந்திரன் தான் உபாஸிக்கக் கூடிய தெய்வம். அங்குள்ள வர்ஷங்களையும் முன்போல மேருபர்வதத்திற்குக் கிழக்கிலிருந்து வரிசையாய்க் கூறுகிறேன் கேட்பாயாக.

ஸுரோசனம், ஸௌமனஸ்யம், ரமணகம், தேவவர்ஷம், பாரிபத்ரம், ஆப்பாயனம், அவிக்ஞாதம் என்ற ஏழுவர்ஷங்களுண்டு. அனுமதி, ஸினீ, வாலீ, ஸரஸ்வதி, குஹூ, ரஜனீ, நந்தாராகா என்னும் ஏழுநதிகளுண்டு. சதச்ருங்கம், வாமதேவம், குந்தம், முகுதம், புஷ்பவர்ஷம், ஸஹஸ்ரச்ருதி, ஸவாசம் என ஏழுபர்வதங்களுண்டு. இந்த ஏழுவர்ஷங்களிலுமுள்ள பாலகர்களை ராமர் ஜயித்து மிக மகிழ்ச்சியுடன் நான்குலக்ஷம் அளவுள்ள ஸுரோதமென்ற ஸமுத்திரத்தையும் தாண்டி எட்டு லக்ஷம் யோஜனையளவுள்ள குசத்வீபத்திற்குச் சென்றார். அந்த த்வீபத்தில் வசிக்கு மெல்லோருக்கும் அக்கினிதான் உபாசிக்கிற தெய்வம். அங்கே தேவர்களால் செய்யப்பட்ட ஒரு தர்ப்பை ஸ்தம்பமிருக்கிறது. அதனாலேதான் இந்த த்வீபத்திற்கு இப்பெயர் வந்தது. அங்குள்ள ஏழுவர்ஷங்களையும் நான் வரிசையாகச் சொல்லுகிறேன். வஸு, வஸுதானம், தருடருசி, நாபிகுப்தம், ஸத்யவிரதம், விவிக்தம், வாமதேவம் என ஏழுவருஷங்களுண்டு. இவ்வேழு வர்ஷங்களிலும் வரிசையாய் ரஸகுல்யா, மதுகுல்யா, மித்ரவிந்தா, சுருதவிந்தா, தேவகர்ப்பா, க்ருதச்யுதா, மந்திரமால ஆகிய ஏழுநதிகளுண்டு. சதுச்சிருங்கம், கபிலம், சித்ரகூடம், தேவாநீகம், ஊர்த்வரோமா, த்ரவாணம், சக்ரம் ஆகிய இவ்வேழும் இவற்றிற்கு எல்லையாயுள்ளமலைகள். ராமர் இவ்வேழுவர்ஷங்

களிலுமுள்ள அரசர்களை யுத்தத்தில் ஜெயித்து மேலான கீர்த்தியை யடைந்து பிறகு குசத்வீப அரசனையும் வென்று அங்குள்ள மஹாஸேனரென்னும் ஈஸ்வரரை ஸந்தோஷப்படுத்திப் பிறகு க்ருதோத மென்னும் உத்தமமான சமுத்திரத்தைத் தாண்டி புஷ்பக விமானத்தின் மீதேறிக்கொண்டு கிரௌஞ்ச த்வீபத்திற்குச் சென்றார். இந்த த்வீபம் குசத்வீபத்தைக் காட்டிலும் இருமடங்கு பெரிது. ஆங்கே யுள்ள கிரௌஞ்சமென்னும் மலையால் இதற்கு இப்பெயர் வந்தது. இங்குள்ளவர்களுக்கு ஜலமயமான தெய்வந்தான் உபாசிக்கக் கூடியது. அங்கேயும் ஆமம், மதுருஹம், மேகப்ருஷ்டம், ஸுதாமானம், மாராஜிஷ்டம், லோஹிதாரணம், வனஸபதி என்று ஏழுவர்ஷங்களிருக்கின்றன. வர்த்தமானம், போஜனம் உபபர்ஹணம், நந்தம், நந்தனச்ரேஷ்டம், ஸர்வதோபத்ரம், சுக்லமென்ற ஏழுமலைகள் எல்லைகளாயிருக்கின்றன. ஏழு வர்ஷங்களிலும் சிரமமாயி, அபபா, அமிர்தௌகா, ஆர்யகா, தீர்த்தவதி, விருத்திரூபவதீ, பவித்ரவதீ, சுக்லா எனச் சிரேஷ்டமான ஏழுநதிகள் இருக்கின்றன. இந்த ஏழுவர்ஷங்களிலுமுள்ள அரசர்களிடமிருந்து கப்பம் வாங்கிக்கொண்டு அவர்களால் பூஜிக்கப்பட்டு அந்தத்வீபத்தின் பதியை யுத்தத்தில் ஜெயித்து, யானை குதிரை பொக்கிஷம் முதலிய கப்பணங்களோடு செய்த அவரது உபசாணையைப் பெற்று மனமகிழ்ந்தார். பிறகு ராமர் அங்கிருந்து க்ஷீரோதமென்னும் கடலைகடந்து க்ரௌஞ்ச பர்வதத்திற்குச் சமமாய் முப்பத்திரண்டு லக்ஷம் அளவுள்ள சாகத்வீபம் சென்றார். அங்கே சாகவிருக்ஷமொன் றிருப்பதால், அந்த த்வீபத்திற்கு இப்பெயர் வந்தது. இங்கு வசிப்பவர்கள் வாயுரூபியான ஈச்வரனை உபாஸிப்பவர்கள். இங்கேயும் புரோஜவம், மனோஜவம், பவமானம், தூம்ரானீகம், சித்ரரூபம், கஹுரூபம், விச்வாதாரமென்று ஏழுவர்ஷங்க ளிருக்கின்றன.

இவைகளில் வரிசையாய் அனகா, ஆயுர்தா, உபயஸ்ருஷ்டி, அபராஜிதா, பஞ்சபதீ, ஸஹஸ்ரச்ருதி, நிஜக்ருதி என ஏழு நதிகள் இருக்கின்றன. உருச்ருங்கம், பலதாம், சதகேஸரம், ஸஹஸ்ரஸ்ரோதஸ், தேவபாலம், மஹானஸம், ஈசானம் என ஏழு மலைகளிருக்கின்றன. இவ்விதம் இந்த ஏழுவர்ஷங்களிலும் ஆங்காங்

குள்ள அரசரால் ராமர் பூஜிக்கப்பட்டு சுந்திரனென்று பெயர் கொண்ட அந்த த்வீபாதிபதியை யுத்தத்தில் ஜெயித்து அவனால் பூஜிக்கப்பட்டு, பிறகு முப்பத்திரண்டு லக்ஷம் அளவுள்ள ததி மண்டோதமென்னும் ஸமுத்திரத்தைத் தாண்டி அறுபத்தினான்கு லக்ஷம் அளவுள்ள புஷ்கரத்வீபம் சென்றார். அதற்கு மத்தியில் மேகலைபோன்ற மானஸோத்ராசல மென்பதைப் பார்த்தார். இங்கே ரமணகமென்றும் ஹாதகீ என்றும் இரண்டு வர்ஷங்களுண்டு. அவ்விடத்திலுள்ள அரசர்களையும் அந்தத்வீபங்களிலுள்ள அரசர்களையும் ஜெயித்துவிட்டுப் பரமானந்த மடைந்தார். அங்கேயிருந்த புஷ்கர (தாமரை) மென்பதைப் பார்த்தார். அதனாலே தான் இந்த த்வீபத்திற்கு இப்பெயர் வந்தது. இது பிர்ம்மாவுக்கு மேலான ஆசனம். அங்கே கர்மமயமான லிங்கமொன்றுண்டு. அதற்குக் கர்மலிங்கமென்று பெயர். அதையே அங்குள்ளவர்கள் உபாஸிக்கிறார்கள். இவ்விரண்டு வர்ஷங்களிலும் பாபங்களைப்போக்கக் கூடிய வெகு நதிகளிருக்கின்றன. பதினாயிரம் யோஜனை அளவுள்ள மலையுண்டு. அந்த மலையின் கீழ்ப்பாகத்தில் தேவதானீ யென்ற பெயருள்ள அழகான இந்திரனுடைய நகரமிருக்கிறது. அந்த மலையின் தெற்குப் பாகத்தில் ஸம்யமினீ என்னும் யமனுடைய ராஜதானி இருக்கிறது. மேல்பாகத்தில் நிம்லோசனீ என்னும் வருணனுடைய ராஜதானி இருக்கிறது. வடபாகத்தில் விபாவரீ என்னும் குபேரனுடைய ராஜதானி இருக்கிறது. இவை மேருபர்வதத்திலுள்ளவைகளைக் காட்டிலும் வேறானவையாம். ஒரு அரசனுக்கு அநேகம் இடம் இருப்பதுபோல, இவைகள் ஏற்பட்டிருக்கின்றன. எல்லா எல்லைப்பர்வதங்களும் தனித்தனியே இரண்டாயிரம் யோஜனை விஸ்தாரமுள்ளவைகளாகும். பிறகு ராமர் சுத்தோதகமென்னும் கடலைக்கடந்து புஷ்கரத்வீபத்திற்குச்சமானமான பூமியை ஸீதைக்குக் காட்டித் தாமும் ஸந்தோஷப்படுவதற்காக அங்கே சென்றார். அங்கே அதற்கு எதிரில் 15750000 யோசனை அகலமுள்ள ஓரிடத்தைக் கண்டார். அங்கு சிற்சில இடங்களில் பிராணிகள் வசிப்பதையும் பார்த்தார். ராமர் அங்கே வசிப்பவர்களுடைய பூஜையைப்பெற்று ஸீதையைத் திருப்திசெய்விப்பதற்காக, இன்னும் மேலேசென்றார். மேருபர்வதம் மானஸோத்

தராசலம். இவ்விரண்டுக்கும் மத்தியிலுள்ள பூமியின் அளவு 15741000 யோஜனையாம். அப்புறம் கண்ணாடிக்குச் சமமாயும் தங்கமயமானதாயும் தேவர்கள் வசிப்பதாயும் 839000 யோஜனை அளவுள்ளதாயும் இருக்கும் பூமியைப்பார்த்து ஸந்தோஷமடைந்தார். அதற்குப்பிறகு 125000000 யோஜனை விஸ்தீரணமுள்ளதாயும் மிகவும் உயரமாயிருப்பதால் பூமிக்குப் பிராகாரம்போன்று ஒருவராலும் தாண்டமுடியாததாயும் இருக்கிற லோகாசலத்தைப் பார்த்தார். அதன் எட்டுத்திக்குகளிலும் கஜச்ரேஷ்டமான ரிஷபம், புண்டரீகம், புஷ்காசூடம், குமுதம், வாமனம், புஷ்பதந்தம், அபராஜிதம், ஸுப்ரதீகம் என்னுந் திக்கஜங்களிருக்கின்றன. அவைகளாலேயே இவ்வுலகம் நிலைநிற்கின்றது. அந்த சிரேஷ்டமான மலையிலேயே எல்லா ஐச்வரியங்களுக்கும் பதியான மஹாபுருஷரான ஸ்ரீமத் ஸர்வேச்வரர் உலகங்களை யெல்லாம் காப்பாற்றுவதற்காக வாசம் செய்கிறார். அதற்குமேலே பரிசுத்தமான யோகேச்வரநதி யிருக்கிறதென்று கூறுகிறார்கள். இவ்விதம் 50 கோடிபங்கு விஸ்தாரமுள்ள இந்தப் பூமியைத் தம்வசமாக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சுற்றிக்கொண்டு முன்போலத்வீபங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே ஜம்பூத்வீபத்தில் பாரதவர்ஷத்தின் நடுவிலுள்ள தமது ராஜதானியான அயோத்யா பட்டினத்திற்கு சப்தத்வீப அரசர்களோடுவந்து சேர்ந்து, தமது வரவைத் தூதர்கள் மூலமாய் ஸுமந்திரருக்குத் தெரிவித்தார்.

அவர் ராமர் வந்துவிட்டா ரெனக் கேள்விப் பட்டதும் கொடி த்வஜம் தோரணம் இவைகளால் அயோத்தியை அலங்கரிக்கச்செய்து, சிரேஷ்டமான யானைகளுடன் அநேக பட்டினத்து ஜனங்கள் சூழ எதிர்கொண்டுசென்று அவரை வணங்கி வெகு மரியாதையுடன் அயோத்திக்குள் அழைத்துவந்தார். அப்போது மங்களவாத்தியங்கள் கோஷித்தன. அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் செய்தார்கள். வந்தி மாகதர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். நடர்கள் நடித்தார்கள். பட்டினத்து ஸ்திரீகளெல்லாரும் நன்றாய் அலங்காரம் செய்துகொண்டு மேன்மாடிகளில் ஏறிப் புஷ்பங்களை இரைத்தார்கள். உடனே இராமர் ஊர்வலம்வந்து விமானத்திலிருந்திறங்கிப் பட்டினத்து ஜனங்களின் காணிக்கைகளை

வாங்கிக்கொண்டு, ஸ்திரீகள் ஹாரத்தி சுற்றத் தமது கிருகத்தின் கண்ணுள்ள சபைக்குச் சென்று தம் ஆஸனத்தில் உட்கார்ந்தார். அப்புறம் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த அரசருக்குத் தகுந்த ஜாகைகள் ஏற்படுத்தும்படி லக்ஷ்மணருக்கு ஆக்ஞைசெய்தார். பிறகு தகிச்ராத்தம் முதலியவைகளைச்செய்து தம்மைக் கிருத கிருத்யராக நினைத்தார். இன்னும் மற்றுமுள்ள அரசரால் உபச ரிக்கப்பட்ட லக்ஷ்மணரின் இஷ்டத்தின் பேரில் பரதரைப் பரத தேசத் ததிபராக்கினர். ஆதியில் இவர்களுக்கு நாமகரணம் பண்ணும்போதே பகவான் வஸிஷ்டர் இவர் பரததேசத்திற்கதி பதியாவரென்று நினைத்தே பரதனென்று பெயரிட்டாராகையால் அது இப்போது சரியாய் நிறைவேறிற்று. ராமர் தமது பிள்ளை யான லவனை ஜம்பூத்வீபத்திற்குப்பதியாகச் செய்தார். அவனும் ஸந்தோஷமாய் அதனை யேற்றுக்கொண்டு விஜய னென்பவனைத் தன் மந்திரியாக்கிக்கொண்டான். மறுபடியும் அடிக்கடி ஒன்பது வர்ஷங்களுக்கும் போக்குவரவு வைத்துக்கொண்டிருந்தார். பரதர் தமது யுவராஜ்ய பதத்தில் சத்ருக்னரையும், ராமர் தமது யுவ ராஜ்ய பதத்தில் குசனையும் அபிஷேகம் செய்து ஏற்படுத்திக் கொண்டனர். இவ்விதம் ராமர் ஏழுதீவுகளுக்கும் பதியானர். அவரவர்கள் தங்கள் தங்கள் காரியங்களில் கவனமுள்ளவர்களா யிருந்து நீதியாய் ராஜ்யபரிபாலனம் செய்து வந்தார்கள். பிறகு ராமர் எல்லா அரசர்களையும் நன்ருய் உபசரித்து அவரவர்பதிக்குச் செல்ல விடைகொடுத்தனுப்பினர். அவர்களும் ராமரை வணங்கி தங்கள் தங்கள் இருப்பிடம் சென்ருர்கள். பாரதவர்ஷத்திற் கதிபதியான ஸ்ரீமான்பரதர் அந்தத் தேசத்தை நன்ருய்ச் சீர் திருத்திக்கொண்டு ஆண்டுவந்தார். லவன் ஜம்பூத்வீபத்தை நன்ருய்ச் சீர்திருத்தி ஆண்டுவந்தான். ஸ்ரீராமப்பிரபு லவனேடும் லக்ஷ்மணரோடும் சப்தத்வீபங்களையும் நன்ருய்ச் சீர்திருத்தி மிகவும் அழகாய் ஆண்டுவந்தார்.

9 - வது சருக்கம்

முற்றிற்று.

## 10 - வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

ஒரு காலத்தில் ராமர் சபையிலிருக்கும்போது வெளியில் ஒரு நாய் பெருத்த சப்தம் செய்ததைக்கேட்டு, அதைத் தெரிந்து கொண்டு வரும்படி தூதனையனுப்பினார். அவன் உடனே சப்தம் வருமிடத்தை நோக்கிச் சென்று, அங்கொரு "நாய் ஊளையிடக் கண்டு அதைத் துரத்திவிட்டு ராமரிடம் வந்து, நாய் காரணமில்லாமல் குலைத்தது. ஆகையால் நான் அதைத் துரத்திவிட்டேன்" என்று தெரிவித்தான். மறுபடியும் இரண்டாவதுநாளும் நாய்குலைத்தது. தூதனும் முன்போல அதைத் துரத்திவிட்டான். மறுபடியும் மூன்றுவது நாள் அப்படியே நாய் குலைத்தது. அதைக்கேட்டுச் சற்றுப் பயந்து லக்ஷ்மணனை அழைத்து "நாய் இம்மாதிரிமூன்று நாளாய்க் குலைப்பதால், அதன் காரணத்தை நீ நன்றாய்த் தெரிந்து கொண்டுவரவேண்டு"மென்று கட்டளையிட்டார். அவர் அவ்விதமே செய்கிறேனென்று சொல்லிப் பிறகு, தூதர்களையழைத்து நாயைச் சபைக்கு அழைத்துக்கொண்டு வரும்படி உத்தரவிட்டார். தூதர்கள் வேகமாய்ச் சென்று நாயைச் சபைக்கு வரவேண்டுமென்றழைத்தார்கள். அப்போது நாய் "பாபயோநியில் பிறந்த நாங்கள் தேவாலயத்திலும், யாகஞ்செய்யுமிடத்திலும், ஹோமம் செய்யுமிடத்திலும், பிருந்தாவனத்திலும், ஸபையிலும், மடத்திலும், அரசன் வீட்டிலும், புண்யஸ்தலத்திலும், புண்யதீர்த்தத்திலும், சமையல் செய்யும் இடத்திலும், ஏகாந்த ஸ்தலத்திலும், ஸ்நானம் ஸந்தியாவந்தனம் செய்யுமிடத்திலும், போகக்கூடாது" என்றது. உடனே தூதர்கள் ஆச்சரியப்பட்டு ராமரிடம் அதைத் தெரிவிக்க, அவர் பரபரப்போடு தமது பாதரக்ஷைகளை எடுத்துவரச் சொல்லி, அவைகளைக் காலில் போட்டுக்கொண்டு கையில் ரத்னதண்டம் பிடித்துக்கொண்டு மெள்ளமெள்ள வெளியே சென்று, நாயின் சமீபம் போய்ப் புன்முறுவலுடன், நாயைப் பார்த்து "நீ துக்கிப்பதற்குக் காரணமென்ன? என்னிடம் உண்மையைச் சொல்; என் ராஜ்யத்தில் காரணமில்லாமல் ஒருவருக்கும் துக்கமுண்டாவது கூடாது" என்றார். இதைக்கேட்டு நாய்

அவரை வணங்கி, ஒடிந்த தனது காலை அவருக்குக் காட்டிக் கொண்டு "நான் ஒரு அபராதமும் செய்யாமலிருக்கும்போது ஒரு ஸந்நியாசி என்னைக் கல்லாலடித்து என் காலை ஒடித்துவிட்டான். அதற்காக நான் தங்களைச் சரணமடைந்திருக்கிறேன்" என்றது. உடனே ராமர் அந்த ஸந்நியாஸியை வரவழைத்து, அவரை வணங்கி "ஸ்வாமி! நீர் எதற்காகக் காரணமில்லாமல் இந்த நாயை யடித்து இதன் காலை ஒடித்துவிட்டீர்" என்று கேட்டார். அப் போது ஸந்யாஸீ "நான் பிக்ஷைக்காகத் தெருவில் சென்று வரும் போது அது என் பிக்ஷான்னத்தைத் தொட்டது. அப்போது நான் பசியுள்ளவனாயிருந்தமையால் கோபங்கொண்டு தூரத்த எண் ணிக் கல்லை யெறிந்தேன், அதனால் இதன் கால் ஒடிந்துவிட்டது. நான் வேண்டுமென்று இதையடிக்கவில்லை" என்றார். அப்போது ராமர் இது விவேகமற்ற பிராணியாகையால், உமது அன்னத் தைத்தொட்டது இதன் குற்றமாகாது. ஆகையால் நீர் இதைஅடித் திருக்கக்கூடாது; அப்படி அடித்தது உமது குற்றந்தான்; அதற் குரிய தண்டனையை நீர் அனுபவிக்கவேண்டும்" எனச் சொல்லி நாயினிடம் "உன் விஷயமாய் இந்த ஸந்நியாஸி குற்றவாளியா யிருப்பதால், அவரை நான் உன்வசம் ஒப்புவித்திருக்கிறேன். நீ எந்தத் தண்டனை சொன்னாலும் செய்யத் தயாராயிருக்கிறேன்" என்றார். அப்போது நாய் "சிவாலயத்தின் அதிகார வேலையில் இவரை ஏற்படுத்தி விடுங்கள்" என்றது. அப்படியே ஆகட்டு மென்று ராமர் அவரைப் பல்லக்கில் ஏற்றிவைத்து, வஸ்திரம் சந்த னம் புஷ்பம் இவைகளால் நன்றாய்ப் பூஜித்து, அநேக வாத்திய கோஷங்களோடு சிவாலயத்திற்கு அழைத்துக்கொண்டு போய், ஸர்வாதிகார வேலையில் அவரை ஏற்படுத்தினர். அப்போது அந்த ஸந்நியாஸி நல்ல அதிர்ஷ்டத்தால், தனக்கு இந்த வேலை கிடைத்ததென்று புத்தியில்லாமல் ஸந்தோஷப்பட்டான்.

பிறகு ராமர் ஜனங்களோடு தமது ஸபைக்கு வந்து சேர்ந்த னர். இந்த ஆச்சரியத்தை எல்லாம் பார்த்த பட்டினத்து ஜனங்கள் ராமரிடம் போய் "பிரபுவே! நாய் ஏன் இவ்வாறு தண்டனைவிதித் தது? அன்னத்திற்கு அலைந்து கொண்டிருந்த ஸந்யாஸிக்கு

நல்ல அதிர்ஷ்டத்தால் இந்த ஸ்தானம் கிடைத்தது. அவர் இனி மேல் மேலான சுகத்தையடையப்போகிறார்'' என்று சொல்ல, இராமர் "நாயைக்கேட்டால் இதற்குக் காரணம் அது நன்றாய்ச்சொல் லும்'' என்றுசொன்னார். அவர்கள் அவ்வாறேசென்றுநாயைக்கேட் டார்கள். அப்போது நாய் துஷ்டர்களை ஸம்மானம் செய்கிறவர் களும், சிவாலயம் மடம் கிராமம் தானம் இவைகளுக்கு அதிகாரி களும், அநாதர் பாலர் இவர்களின் திரவியத்தை அபகரிக்கிறவர் களும், பசு, பிராம்மணர், சிவன் இவர்களுடைய பணத்தை அப கரிக்கிறவர்களும், அநியாயம் செய்கிறவர்களும், அரசன் வீட்டி லிருந்துகொண்டு, வரும் யாசகர்களைத் தடுப்பவர்களும், பிறர் திரவியத்தை அபகரிக்கிறவர்களும், பிராமண போஜனத்திற் கேற் பட்ட திரவியத்தை அபகரிக்கிறவர்களும், மறுஜன்மத்தில் நாயின் யோநியை உண்மையில் அடைவார்கள். நான் மடாதிபதியாயிருந் தமையால் இந்த ஜன்மத்தில் நாயாகப்பிறந்திருக்கிறேன். ஆகை யால் நான் அந்த ஸந்நியாஸியைச் சிக்ஷிப்பதற்காக இவ்வுத்தியோ கத்தைக்கொடுத்தேன்'' என்றது. இவ்வாறு அது கூறக் கேட்ட ஜனங்கள் சந்தேகம் நீங்கித், தங்கள் தங்கள் வீட்டிற் குச் சென்றார்கள். நாயும் போய்விட்டது. பிறகு அந்த ஸந்யாஸி மறுஜன்மத்தில் தனது பாபத்தால் நாயாய்ப் பிறந்தான். நாயும் முதலில் தனது பாபங்களை அநுபவித்து விட்டுக் கடைசியில் நல்ல ஜன்மத்தை யடைந்தது. அந்த ஸந்யாஸி காரிய வசமாய் வேறி டம் சென்று அங்கே யிறந்தானே யொழிய அயோத்தியில் இறக்க வில்லை. ஏனென்றால், அயோத்தியில் இறந்திருந்தால் அவனுக்கு மோக்ஷமே தவிர வேறு ஜன்மம் ஏற்பட்டிராது.

பிறகு ஒரு காலத்தில் அயோத்தியில் வசித்த ஒரு பிராம் மணனுடைய ஐந்து வயதுள்ள குழந்தை மரித்துவிட்டது. அப் போது அந்தப் பிராம்மணர் பத்நியோடு அந்தக் குழைந்தையை காலை வேளையில் தூக்கிக்கொண்டு வந்து, அரண்மனைவாயிலிற் போட்டு, இரைந்து அழுதார். பிள்ளையிறந்ததால் மிகவும் துக் கத்தோடுகூடிய அந்தப் பிராம்மணர் வெகு கோபத்தோடு "ஏ ராம! நீர் சுகமாய்த் தூங்குகிறீரே; உமது ராஜ்யத்தில் அதர் மம் மிகுந்திருக்கிறது. அதனால் என் குழந்தை அகாரணமாய்

இறந்துவிட்டது. இதைத்தாங்கள் கவனிக்கவேண்டாமா? கவனியாமலிருப்பது தங்களுக்குத் தர்மமா? அரசன் பாபியாயிருந்தால் ஜனங்களுக்கு அற்பாயுள் என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். தர்மவானான அரசனுடைய ராஜ்யத்தில் ஒருவன் அதர்மம் செய்தாலும் அது அரசனையே சேரும் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். இப்போது தர்மசீலரான உமது ராஜ்யத்தில் இந்தக் குழந்தை செத்துப்போயிருப்பதால், இது பிழைப்பதற்கு வேண்டிய உபாயத்தை நீர் தேடவேண்டும். இல்லாவிட்டால் நாங்களிருவரும் இக்குழந்தையோடு மரித்து விடுகிறோம்'' என்று சொன்னார். பிறகு பிராம்மணரது பத்னீ இரைந்து ஸீதையைக் கூப்பிட்டு "ஏ ஸீதே! நீ சுகமாய்ப் புருஷனோடு தூங்குகிறாயே! நீயும் பிள்ளைகளைப்பெற்றவள் தானே? உனது புருஷனிடம்சொல்லி இக்குழந்தை பிழைக்கும் உபாயத்தைச் செய்யச்சொல்லலாகாதா? உனக்கு இவ்வளவு தயையில்லையா?'' என்று அலறினாள். அங்கேயுள்ளவர்களெல்லோரும் இந்தத் தம்பதி இவ்வாறு அலறுவதைக்கேட்டு மிகவும்வருத்தத்துடன் அப்பிணத்தைச் சூழ நின்றார்கள். பிறகு ஸீதையும் ராமரும் வந்திமாகதர் ஸ்தோத்திரம் செய்ய நித்திரையி லிருந்து விழித்துக் கொண்டு இவர்கள் அழுங் குரலைக்கேட்டு மிகவும் பரிதாபத்தோடு படுக்கையறையிலிருந்து வெளியே வந்து, இவர்களிருக்குமிடம் தேடி வந்தார்கள். அவர்கள் ஸீதாராமர்களைப் பார்த்தவுடன் அதிகமாய் அழ ஆரம்பித்தார்கள். ராமர் தழ தழத்த குரலோடு அவர்களைச் சமாதானப்படுத்தி "நீங்கள் துக்கப்படாதேயுங்கள்; உங்கள் குழந்தை பிழைக்கும்படி உபாயம் செய்கிறேன். அப்படிப் பிழைக்காமற் போனால் என் குழந்தை குசனை ஸத்தியமாய் உங்களுக்குக்கொடுத்து விடுகிறேன்'' என்றார். பிறகு ஸீதை அந்தப் பிராம்மணரின் பத்னியை ஸமாதானப்படுத்தி "என் புருஷனான ராமர் தமது குழந்தை குசனைக்கொடுத்து விடுகிறேன் என்று சொல்லியிருப்பதால் தாங்கள் வருத்தப்படவேண்டாம்; நானும் இப்போது அதனையே ஸத்தியமாகச் சொல்லுகிறேன். இந்தக் குழந்தை பிழைக்காவிட்டால், என் குழந்தை லவனையும் நான் ஸத்தியமாகக் கொடுக்கிறேன். எங்கள் இரண்டு குழந்தைகளையும் நீங்கள் வாங்கிக்கொண்டாவது இந்த புத்திரசோகத்தைமறந்து எங்களை ஆசீர்வதிக்கவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டாள்,

பிறகு ராமர் பிராம்மணரிடம் "நீர் உமது பத்னியோடு இங்கே ஸ்திரமாக இரும். இவ் விஷயத்தில் வருத்தப்படவேண்டாம். உமது குழந்தையைப் பிழைக்கும்படிசெய்கிறேன்" என்று சொல்லிவிட்டு லக்ஷ்மணரையழைத்து "லக்ஷ்மண! இந்தச் சவத்தினிடம் புழு துர்க்கந்தம் ஒன்றும் உண்டாகாமலிருக்கும்படி இதை எண்ணெய்க்கொப்பரையில் போட்டு வைக்கும்படி உத்தரவுசெய்" என்றுசொல்லித் தாம் ஸ்நானம் முதலிய நித்திய காரியங்களை முடித்துக்கொண்டு சபைக்குவந்தார். அங்கு வஸிஷ்டரிடம் "நான் தர்மமாய் ராஜ்ய பரிபாலனம் செய்யும் போது பிராம்மணரின் இந்தக் குழந்தை எப்படி இறந்து போயிருக்கும்? அது பிழைப்பதற்குத் தாங்கள் உபாயம் கூறவேண்டும்" என்று தெரிவித்தார். இப்படி இவர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே நாரதர் வீணாகானம் செய்துகொண்டு வேகமாய் ஆகாயத்திலிருந்து சபையில் இறங்கினர். ராமர் அவரை எதிர்கொண்டழைத்து விதிப்பிரகாரம் பூஜித்து நடந்ததைச்சொல்லி அவரையும் உபாயம் கேட்டார். அப்போது நாரதர் "ராம! உமது ராஜ்யத்தில் ஒருவரும் அதர்மம் செய்யவில்லை. ஆனல் பூமி முழுவதும் சென்று பார்க்கவேண்டும். எனக்கு நன்ருய்த் தெரிந்திருந்தாலும் ஜனங்களைச் சிக்ஷிப்பதற்கு உம்மையே அனுப்புகிறேன். அதர்மத்தைச் செய்கிற அவனைக் கண்டுபிடித்து, நீர் நன்ருய்த் தண்டிக்கவேண்டும். இவ்வாறு அதர்மத்தை ஒழித்தால் இந்தச் சிசு பிழைத்து விடும்" என்ருர். ராமரும் அப்படியே ஆகட்டுமென்று அவரை மரியாதை செய்தனுப்பிவிட்டு ஸீதையோடும் பட்டணத்து ஜனங்களோடும் மந்திரிகளோடும் பிள்ளைகளோடுங் கூட புஷ்பக விமானத்தின்மீதேறிக் கொண்டு புறப்பட்டார். இப்பொழுது அவருக்கு எதிரில் பெருத்த அழுகைச் சப்தங்கேட்டது. அதைக் கேட்டதும் ராமர் இதென்னவென்று அங்கிருந்தவர்களை விசாரித்துக்கொண்டே சப்தமுண்டாகுமிடஞ்சென்று ஆங்கு ஒரு ஸ்திரீ ஒரு சவத்தைத்தன்னருகில் போட்டுக்கொண்டு அழுவதையும் அவளைச்சுற்றி ஜனங்கள் நிற்பதையும் கண்டு அந்த ஸ்திரீயின் புருஷன் அகாலத்தில் இறந்து விட்டமையால்

அவள் விதவையானதுபற்றி அழுகிருள் என்றுந்தெரிந்து கொண்டார். அந்த ஸ்திரீ வந்திருப்பவர் ராமரென்றறிந்து "ஏ தர்ம ப்ரபுவே! ராம! உமது ராஜ்யத்தில் நான் விதவையாய் விட்டேன். எனது புருஷன் பிழைக்கவேண்டும். இல்லாவிட்டால், உங்களைச் சபித்து விடுவேன்" என்று அலற, ராமர் மிகுந்த வருத்தத்தோடு "நான் அவசியம் உனதுபுருஷனைப் பிழைக்கும்படி செய்கிறேன். நீ கவலைப்பட வேண்டாம். சுகமாய் என் வீட்டில் இரு" என்று அவளைச் சமாதானப்படுத்திவிட்டு முன்போல் அந்தச் சவத்தை எண்ணெய்க்கொப்பரையில் போட்டு ஜாக்ரதையாய்க் காப்பாற்றிவைக்கும்படிக்கும் இனி இப்படி மரணமடைகிறவர்களையும் இவ்வாறே தாம் வரும் வரையில் ரக்ஷிக்கும்படிக்கும் ஸுமந்திரருக்கு ஆக்ஞை செய்துவிட்டு மேற்கு வடக்கு கிழக்கு இந்தத் திக்குகளைப்பார்த்துக்கொண்டு, தெற்குத் திக்கை நோக்கிச்சென்ருர். இதன்நடுவில் அயோத்யாபட்டணத்தில் ஐந்து பேர் மரண மடைந்துவிட்டனர். அப்பிணங்களைச் சுமந்திரர் ராமரின் உத்தரவுப்படியே எண்ணெய்க் கொப்பரையிற் போட்டு ஜாக்ரதையாக ரக்ஷித்துக்கொண் டிருந்தார். அந்த ஐந்து பிணங்களில் ஒன்று மதுராபுரியிலுள்ள ஒரு க்ஷத்திரியினுடையது. இரண்டாவது பிரயாகையிலுள்ள ஒரு வைசியனுடையது. மூன்ருவது அஸ்தினபுரியிலுள்ள ஒருவாணியனுடையது. நான்காவது அரித்வாரத்திலுள்ள ஒரு தட்டானுடையது. ஐந்தாவது உச்சயினியிலுள்ள ஒரு சக்கிலியினுடையது. இவ்வைந்து பேரும் யௌவனபருவ முள்ளவர்க ளானதால், இவர்களுடைய மரணம் அகால மரணமாம்.

ராமரும் தண்டகா ரண்யத்தைப் பார்த்துக்கொண்டு நர்மதா நதியால் அலங்கரிக்கரிப்பட்ட விந்தியமலைசென்ருர். அங்கே ஒரு மரத்தில் தொங்கிக்கொண்டு தவஞ்செய்து கொண்டிருக்கும் ஒரு சூத்திரனைப்பார்த்து, "ஏ சூத்திர! பிராம்மணர் தான் தவம் செய்யவேண்டியது. சூத்திரர் மற்ற வருணத்தாருக்குப் பணிவிடை செய்யவேண்டியது. இவ்விதமிருக்க, நீ பிராம்மணரின் தர்மமான தவத்தைச் செய்ததால், அந்த அதர்மத்தினல் என் ராஜ்யத்தில் சிலர் அகாலத்தில் இறந்து விட்டார்கள். அவர்

களைப் பிழைப்பிக்க நான் இப்போது உன்னைக் கொல்லப்போகி றேன்" என்று கோபத்தோடு சொன்னவுடன் அவன் பயந்து, ராமரைப் பன்முறை வணங்கி "நான் தெரியாமல் செய்துவிட் டமையால் என்னைக் கொல்லாது எனக்கு நற்கதியைக் கொடுத் துக் காப்பாற்ற வேண்டும்" என்று மிகவும் வேண்டிக்கொள்ள ராமர் அவனிடம் தயைகூர்ந்து "சூத்திரர் எப்போதும் என் நாமத்தை ஜபிக்கவேண்டும்; கூட்டமாய்க்கூடிச் சொல்லவேண்டும். அப்போது அவர்களுக்கு நல்ல கதியுண்டாகும். நீயும் என்பெய ரையே ஜபம் செய்து நல்லகதியை யடையக்கடவாய். உன்னால் சூத்திரர் கரையேறும்படியான ஒரு மார்க்கம் கண்டுபிடிக்கப்பட்ட படியால், அவர்களுக்குள் உனக்கு எப்போதும் மேலான கீர்த்தி யுண்டாகட்டும்" என்று வரங்களைக் கொடுத்தார்.

இதைக்கேட்ட சூத்திரன் மறுபடியும் "ஏ சுவாமி! கலியுகத் தில் சூத்திரர் மந்த புத்தியுடையவர்களாயும் எப்போதும் பயிர் வேலையில் ஜாக்ரதையுள்ளவர்களாயும் இருக்கப்போகிறார்களாத லால், அவர்கள் உங்கள் திவ்ய நாமத்தை எவ்வாறு ஜபம் செய்யப் போகிறார்கள். ஆதலால், இதற்கு அநுகூலமான வரத்தைத் தாங் கள், கொடுத்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொள்ள ராமர் "சூத்திரர் இதரரை வந்தனம்செய்யும்போது எப்போதும் ராம! ராம!! என்று சொல்லட்டும். அதனால் அவர்களுக்கு நல்லகதி கிடைக்கும்; இந்தத் தேகத்தின் முடிவில் நீயும் வைகுண்டத்தை யடைவாய்" என்று வரங்கொடுக்க, மறுபடியும் அந்தச் சூத்திரன் "தாங்கள் தங்கள் அம்சத்தோடு ஸீதை லக்ஷ்மணர் இவர்க ளுடன் இந்த மலையில் எப்போதும் இருக்கவேண்டும். நானும் தங்களைத் தரிசனம் செய்துகொண் டிருக்கவேண்டும். இங்கு வரும் மனிதரும் முதலில் என்னைத் தரிசித்து விட்டுப் பிறகு தங் களைத் தரிசித்து மேலான பதவியை யடையவேண்டும். இவைக ளுக்குத் தாங்கள் தயைசெய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொள்ள, அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டு, அவனுக் குப் பக்தியைக் கொடுத்துச் சந்தோஷப்படுத்திப் பிறகு அவனைக் கொன்று அயோத்தியிலுள்ள ஏழுபிணங்களையும் பிழைப்பித்தார்.

விஷ்ணுதாஸ! அதுமுதல் பூமியில் சூத்திரர் பிறரை வந்தனம் செய்யும்போது ராம ராம! வென்று சொல்வது வழக்கம். பிறகு ராமர் ஸீதைக்கு அநேகம் வேடிக்கைகளைக் காட்டிக்கொண்டு தமது பட்டணம்வந்து கொண்டிருந்தார். இப்படி வந்துகொண் டிருக்கையில் வழியில் ஒரு கழுகும் கோட்டானும் சண்டையிட்டுக்கொண்டு ராமரைக்கண்டு வணங்கிநின்றன. ராமர் அவைகளைப் பார்த்து நீங்கள் எதற்காகச் சண்டையிடுகின்றீர்களென்று கேட்டார்.

அப்போது, கோட்டான் "நான் இந்த மரத்தின்பேரில் கூடு கட்டிக்கொண்டிருக்கிறேன். நான் அங்கே யில்லாதபோது இந்தக் கழுகு வந்து அதில் உட்கார்ந்துகொண்டு அந்தக் கூடு தன்னுடையதென்றும் எனக்கு இடங்கொடுக்க மாட்டேன் என்றும் சண்டை போடுகிறது" என்றது. இதைக்கேட்டு ராமர் "நீ ஏன் அவ்விதம் செய்கிறாய்?" என்று கழுகைக்கேட்க, அது "நான் அதில் இல்லாதவேளையில் இந்தக் கோட்டான் அதைப்பிடித்துக் கொண்டு இப்போது எனக்கு விடமாட்டேன் என்று சண்டையிடுகிறது" என்றது. இதைக்கேட்டு ராமர் "நீங்கள் கூடுகட்டியது யாருக்குத்தெரியும்?" என்று கேட்டார். அவை "ஒருவருக்குந் தெரியாது" என்றன. இப்போது ராமர் "இந்தச்சங்கடத்திற்கு நாம் என்னசெய்வது; கூட்டை யாருக்குக் கொடுப்பது" என்று எண்ணிப் புன்னகைசெய்துகொண்டு விமானத்தி லுள்ளவரிடம் தெரிவித்தார். ராமர் வார்த்தையைக்கேட்டு எல்லோரும் ஆச்சரியமடைந்து மௌனமாயிருந்தார்கள். அப்போது சர்வலோக சரண்யரான ராமர் கோட்டானைநோக்கி, "நீ எப்போது விடுகட்டினாய்" என்று கேட்க "இந்தபூமி எப்போது உண்டாயிற்றோ அப்போது நான் கட்டினேன்" என்றது. இதைக்கேட்டு ராமர்? "பிரளயகாலத்தில் ஆச்ரயமில்லாமல் மரம் எப்படியிருந்தது ஆலமரத்திற் கல்லவா நாசமில்லை; நீ மாமரமென்றாயே. அது எப்படி" என்று கழுகைக்கேட்க அது ஒன்றும் பேசாமலிருந்தபோது, "ஏ கழுகே! நீ வீணாய் இந்தக்கோட்டானோடு சண்டையிடுகிறாய்; இப்போது கூறிய உன்வார்த்தையாலேயே இக்

கூடு உன்னுடைய நல்லவென்று தெரியவருகிறது. நீ துஷ்டபக்ஷி; உன்னைத் தண்டிக்கவேண்டும்'' என்று சொல்லிவிட்டுத் தூதர் களைக்கொண்டு அதை மலையின்மேலேற்றி அதன் ஸ்தானம் அனுப்பினர். அது ராமரது ஸந்நிதியில் பிராணனை விட்டமை யால், நல்ல பதவி யடைந்தது. ராமரும் அந்தக் கூட்டைக் கோட் டானுக்குக் கொடுத்துவிட்டுத் தமது பட்டணம்வந்து சேர்ந்தார். இங்குச் செத்துப் பிழைத்தவர்கள் ஆதரவோடு தம்மை வணங்க வருவதைப் பார்த்து, மிகவும் ஸந்தோஷமடைந்து அவர்களுக்கு வேண்டும் வரங்களைக் கொடுத்து அனுப்பிவிட்டார். இதனால் உலகமெங்கும் நல்ல கீர்த்தியுண்டாயிற்று. இவ்வாறு ஸ்ரீராமர் அநேக லீலைகளைச் செய்தார்.

## 10 - வது சருக்கம்

முற்றிற்று.

## 11 - வது சருக்கம்.

ராமதாஸர் கூறுகிறார்.

ஒரு சமயம் ராமபிரான் ஸீதாதேவியோடு காட்டிற்கு வேட்டை யாடுவதற்குச் செல்லக்கருதி, பாதங்களில் திவ்ய பாத ரக்ஷைகளையும் கைகளில் கறுத்த உடும்புத்தோலாற் செய்யப்பட்ட கைரக்ஷைகளையும் தரித்துக்கொண்டார்; தலையில் கறுத்த தலைப் பாகை யணிந்துகொண்டார்; நல்லவிற்களை யெடுத்துக்கொண் டார்; கத்தி கேடயம் முதலிய ஆயுதங்களைத் தரித்துக்கொண் டார். இவ்விதம் தம்மை யலங்கரித்துக் கொண்டு குதிரைகள் காலாட்படைகள் அரசர்கள் முதலியோர் சூழப் புறப்பட்டுமிகவும் அடர்ந்த காட்டிற்குள் பிரவேசித்தார். அங்கே சென்றதும் தமது ஆட்களைச் சரியாய்ப் பிரித்துவிட்டார். சிலரை ஆங்காங்கு அமைக்கப்பட்ட கூடாரங்களி லிருந்து காவல்புரிந்து வரும்படி திட்டப்படுத்தினார். இவ்வாறு திட்டப்படுத்திய பின் தாம் வேட் டைக்குரிய உடைகளைத் தரித்துக்கொண்டு வேட்டையாடப்புறப் பட்டார். இவ்விதம் வேட்டையாடப் புறப்பட்டு வேட்டையாடி வருகையில் மான்கள் அங்கு மிங்கும் ஓடுவதைப்பார்த்து அதோ! மான் ஓடுகிறது அடியுங்கள்! அடியுங்கள்!! பிடியுங்கள்! பிடியுங் கள்!! என்று கூவிக்கொண்டும் மிருகங்களைத் தேடிக்கொண்டும் ஆங்காங்கு காணும் ஆறு மலை வனம் இவைகளைக் கடந்து சென் றும் ஓடித்திரிந்தார். அப்போது அந்த வனத்தில் சிற்சில விடங் களில் மான்கள் பயந்தோடின. முள்ளம்பன்றிகள் புதருக்குள் ளிருந்து வெளிப்பட்டன. யானைகள் இங்குமங்கும் வேகமாய்த் திரிந்தன. கரடி, புலி, சிங்கம், இவைகள் பயங்கரமாகக் கர்ச்சித் தன. காட்டெருமைகள் கத்திக்கொண்டேஓடின. கவயமிருகங்கள் கூட்டங் கூட்டமாக வெளிப்பட்டன.

இவ்விதக் கோலாகாலத்துடன் கூடிய அவ்வனத்தில் ராம பிரான் வெகுநேரம் வேட்டையாடிப் பிறகு நடுப்பகலில் தமது கூடாரத்துக்கு வந்து சற்று இளைப்பாறிப் போஜனம் செய்தார்.

பிறகு சற்றுநேரம்பொறுத்து மீண்டும் வேட்டைக்குச் சென்றார்; பிறகு அஸ்தமனமானதும் கூடாரம் வந்து சேர்ந்தார்.

இப்படிச் சிலநாள் அந்த வனத்தில் வசித்து வேட்டையாடி வந்தார். இப்போது ஒருநாள் ராமர் அதிகாலையில் வேட்டைக்குச்சென்று, மிருகங்களைத் துரத்திக்கொண் டோடிச் சிலவற்றைப் பாணங்களால் அடித்துத் தள்ளினார். ராமபிரான் வேட்டையாடுகிறதைக்கண்டு பயந்த ஒரு சிங்கம் தன் குகையிலிருந்து வெளிப்பட்டு வெகு வேகமாய் ஓடிற்று. அதைத் துரத்திக்கொண்டு அநேக மனிதர்களும் ராமரும் ஓடினார்கள். அது மறைந்து மறைந்தோடிக் கடைசியில் ஒரு பயங்கரமான காட்டிற்குள் புகுந்து விட்டது. எல்லாரும் பின்னாலேயே தங்கிவிட்டனர், ராமர்மாத்திரம் அதைத் துரத்திக்கொண்டோடினார். அங்கிருந்து நிர்ஜனமான அநேக வனங்களைத் தாண்டிக்கொண்டு அத்துடன் ஒரு மலையின் குகையில் பிரவேசித்து விட்டார்.

ராமரது பந்துக்கள், வேலையாட்கள், லக்ஷ்மணர் இவர்கள் யாவரும் ராமரைக் காணாமல் இங்குமங்கும் தேட ஆரம்பித்தனர்.

ராமர் அங்குச் சென்றதும் கூரான பாணத்தால், அந்தச் சிங்கத்தை யடித்தார். உடனே அது கீழே விழுந்து ஒரு திவ்ய ரூபத்தை யெடுத்துக் கொண்டு ராமரைப் பார்த்து, ராமச்சந்திர பிரபுவே! நான் ஒரு வித்தியாதரன். நான் பலாத்காரமாக ஒரு முனிபத்னியை அனுபவிக்க யத்தனித்தேன். அப்போது அவள் மிகுந்த கோபத்தோடு "நீ சிங்கம்போல் அதிக ஆவேசத்தோடு என்னிடம் பிரவேசிக்க வந்தமையால், இன்று முதல் நீ இவ்வனத்தில் சிங்கரூபத்தோடு திரியக்கடவாய்" என்று என்னைச் சபித்தாள். பிறகு நான் அதிக வணக்கத்துடன் அவ்வுத்தமியைப் பிரார்த்தித்துக் கொண்டேன். அவ்வுத்தமி என்மேல் கிருபை கூர்ந்து, "ஸ்ரீராமரது பாணம்பட்ட மாத்திரத்தில் உனக்கு இச்சாபம் நீங்கிவிடும்" என்று அநுக்கிரகம் செய்தாள். அப்படியே இப்போது தங்களுடைய பாணத்தின் அடியினால் சாபமொழிந்து எனது ஸ்தானம் செல்லுகிறேன்"

என்று சொல்லி அந்த வித்யாதரன் ராமரை வணங்கிவிட்டு ஸ்வர்க்கலோகம் சென்றான். இதனால் ராமர் பரமாச்சரிய மடைந்து, சற்று அந்தக் குகையில் ஸஞ்சரித்தார். அப்போது அங்கே ஒரு யோஜனை நீளமுள்ள ஒரு பெரும் கற்பாறையிருக்கக் கண்டு அதிசயித்து தமது வில்லின் நுனியால் அதைத் தூக்கினார். அது வெகு தூரத்தில் போய் விழுந்தது. அப்புறம் இவர் இங்குக் காணப்பட்ட குகையில் பிரவேசித்தார். அங்கே சிறிது தூரத்திலிருந்து தவம் புரிந்துகொண்டிருக்கும் நான்கு பெண்களைப் பார்த்தார். அவர்கள் எலும்பும் தோலும் உள்ளவர்களாய் இருக்கக்கண்டார். உடனே அருகிற்சென்று அவர்கள் மூச்சு விடுவதைப்பார்த்து, அதனால் அவர்கள் உயிருட னிருக்கிறார்களெனத் தெரிந்துகொண்டார். உடனே நான்கு ரூபமெடுத்துக்கொண்டு அவர்கள், ஒவ்வொருவர் முன்பும் நின்று தனித் தனியே அவர்களைக் கூப்பிட்டு, "நான் ராமன்; உங்களுக்குப் பிரஸன்னமாயிருக்கிறேன்; வேண்டிய வரங்களைக் கேட்டுக் கொள்ளுங்கள்" என்றார். இப்படி இவர் சொன்னதும் அவர்கள் ஒவ்வொருவருடைய சரீரமும் மாம்ஸம் ரத்தம் இவைகளால் நிறைந்து திவ்ய அழகுடன் விளங்கியது. பிறகு அந்த ஸ்திரீகள், தங்கள் ஒவ்வொருவருடைய முன்னிலையிலும், கோடி ஸூர்யப் பிரகாசத்தோடு கையில் கத்தி கேடயம் முதலிய ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு அழகிய குதிரையின்மீது வீற்றிருக்கும் ராமச் சந்திர பிரபுவைப் பார்த்து, ஆச்சரியமடைந்தார்கள்; பிறகு அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே குதிரையின் மீதேறிக் கொண்டு "இங்கு வந்திருக்கும் தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள், தேவர்களா? அசுரர்களா? எங்கள் சரீரம் ஏன் இவ்வாறாயிற்று? பெரிய அசுரனான துந்துபி என்பவன் இப்போது உயிரோடிருக்கிறானா? அல்லது இறந்துவிட்டானா?' என்று கேட்டார்கள். இம்மாதிரி அந்த ஸ்திரீகள் கேட்டதும் ராமர் "நான் ஸூரிய வம்சத்திற் பிறந்தவன். ஸப்தத்வீபாதிபதியான ராமன். நான் ஒருவனே இப்போது இங்கே நான்கு தேகத்தோடு உங்களுக்குக் காட்சிதந்திருக்கிறேன். நான் இந்தக்காட்டில் வேட்டைக்கு வந்து ஒரு சிங்கத்தை யடித்தேன். பிறகு இங்கிருந்த சிலையைக் கண்டு என் வில்லின் நுனியால் அதைப் புரட்டித் தள்ளிவிட்டு



ஸீதையின் பாதிவ்ராத்ய பரீக்ஷை ஸீதை துளசிபூஜை செய்தல்.

உங்கள் சமீபத்திற்கு வந்து என்கையினால் உங்களைத்தொட்டேன் தொட்டமாத்திரத்தில் உங்கள் சரீரங்கள் இவ்வாறு அழகுபெற்றன. வாலியென்பவன் துந்துபியைக் கொன்றுவிட்டான். அந்த வாலியை நான்கொன்றுவிட்டேன். அவனைக் காட்டிலும் பராக்கிரமசாலியான இராவணனையும் நான் கொன்றுவிட்டேன். வேண்டும் வரங்களைக் கொடுப்பதற்காகவே இப்போது பேசினேன்; இங்கு வேறு காரியமில்லை; சீக்கிரம் எனது ஜனங்களிடம் போகவேண்டும். நீங்கள் யார் என்பதை விஸ்தாரமாய்ச் சொல்லுங்கள்'' என்றார். இராமர் துந்துபிமாண்டானென்றும் கற்பாறையைப் புரட்டிவிட்டேனென்றும் சொன்னதும், அவர்கள் மிகவும் ஸந்தோஷத்தையடைந்து "பிரபுவே! நாங்கள் நால்வரும் பிராமணப் பெண்கள்; இன்னும் க்ஷத்திரியர் வைசியர் இவர்களது பெண்கள் பதினாயிரம் பேர்கள் இந்தக் குகையிலேயே சற்றுத் தூரத்தில் அடைப்பட்டுக் காற்றையுட்கொண்டு மிகவும் வருத்தப் பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்த மகா பாவியான துந்துபி என்னும் அசுரன் லக்ஷம் ஸ்திரிகளை விவாகம் செய்துகொள்ளவேண்டுமென் றெண்ணி, ஆங்காங்குச் சென்று அழகிய ஸ்திரிகளைப்பலாத்காரமாய் அபகரித்துக்கொண்டுவந்து, இக்குகைக்குள் அடைத்து மேலே கற்பாறையை மூடிவிட்டு வெளியே சென்று இன்னும் அநேகரைக் கொண்டு வரப்போனான். நாங்கள் வெகுநாளாய் இங்கேயே வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறோம். இன்னும் மற்றக்ஷத்திரிய வைசிய ஸ்திரிகளும் இவ்வாறே வருத்தப்பட்டுக்கொண்டு ஸ்ரீவிஷ்ணுவிடம் தங்கள் மனதைச் செலுத்திக்கொண்டு மிகவும் கஷ்டப்படுகிறார்கள்'' என்று சொன்னார்கள். இராமர் இதைக் கேட்டதும் அவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே நான்தான் விஷ்ணுவென்று சொன்னார். அவர்கள் உண்மையான ரூபத்தைக் காட்டவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். உடனே ராமர் ஸ்ரீ விஷ்ணுவினதுரூபத்தைத் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் காட்டினார் அவர்கள் விஷ்ணுவின் ரூபத்தை தரிசித்து மிகுந்த பக்தியோடு தனித்தனியே நமஸ்கரித்தார்கள். அப்போது "உங்கள் சந்தேகம் தெளிந்ததா? என்று ராமர் அவர்களைக் கேட்டார். அவர்கள், "பிர

புவே! சந்தேகம் நிவர்த்தியாயிற்று இப்போது உங்களைப் பார்த்தநிலை
லேயே நாங்கள் எல்லாக்கிலேசமும் நீங்கியவர்களானோம்'' என்று
சொன்னார்கள்: பிறகு அவர் தமது இராமரூபத்தை எடுத்துக்கொண்டு
" இஷ்டமானவரங்களைக் கேளுங்கள்'' என, அவர்கள் 'ப்ரபுவே! இவ்
வனத்தில் நீங்களே யெங்களைக்காந்தர்வ விதிப்படி விவாகம் செய்து
கொள்ளவேண்டும்'' என்றுவேண்டிக் கொண்டார்கள் இராமர் நான்
ஏகபத்னிவிரதமுடையவன்; ஆகையால் இப்போது விவாகம்செய்து
கொள்ளமுடியாது. நான் துவாபரயுகத்தில் கிருஷ்ணவதாரம் செய்
யப்போகிறேன்; அப்போது அவசியம் விவாகஞ்செய்துகொள்ளுகி
றேன்; இவ்விஷயத்தில் ஸந்தேகம் வேண்டாம்'' என்று சொன்னார்
இவ்வரங்களைக்கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்து. "தாங்கள் சற்று
மேலே செல்லவேண்டும்'' என்று இராமரை வேண்டிக் கொண்டார்
கள். அவரும் அப்படியே அவர்களோடு சென்று கண்டகீ தீரத்தில்
மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் பதினாயிரம் ஸ்திரீகளையும்
பார்த்தார்.

## 11-வது சருக்கம்

முற்றிற்று.

## 12 - வ து ச ரு க் க ம்.

---

### இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ராமர் அவர்களெல்லோரையும் தமது கையினால் தடவிக் கொடுத்து அவர்கள் யாவருக்கும் யௌவனபருவமளித்து, துந்துபி மாண்டது முதலான விருத்தாந்தங்களையுமெடுத்து உரைத்து, அவர்களை மகிழ்வித்த உடனே, தாமும் பதினாறாயிரம் விஷ்ணு ரூபங் கொண்டு அந்தப் பதினாறாயிரம் மாதர்களுக் கெதிரில் நின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் பார்த்து ஆச்சரியமடைந்து தாங்களே எங்களுக்குப் பர்த்தாவாக வேண்டும்" என்னும் வரனைக்கேட்டார்கள். அதற்குப் பகவான், "நான் ஏகபத்னீ விரதமுடையவன், ஆதலால் உங்களை விவாகம் செய்துகொள்ள முடியாது" என்றார். உடனே அவர்கள் "நாமே இவரை வரித்து விடுவோம்" என்று ஒருவருக் கொருவர் சொல்லிக்கொண்டார்கள். இதைக் கேட்ட இராமர் தமது மனத்தில் ஆலோசித்து "நான்விரதமுடையவனென்று சொன்னாலும் இவர்கள் பலாத்காரமாய் என்னை அநுபவிக்க ஏன் ஆலோசிக்கிறார்கள்? முற்காலத்தில் பிர்ம்மா, ருத்திரர், இந்திரன் முதலான தேவர்களும் யோக பலமுடைய முனிச்ரேஷ்டர்களும் இந்த ஸ்திரீகளினாலேயே விளையாட்டாய் மோகத்தை யடைந்திருக்கிறார்கள். இது மிகவும் ஆச்சரியம். கொடிபோன்ற ஸ்திரீயின் புருவமாகிய கெட்டியான வில்லிலிருந்துவெளிப்படுகிற, நேத்திரமாகிற கூரான பாணங்களால் வில்லாளியான மன்மதன் ஸ்திரீகளின் லீலைகளாகிற உயர்ந்த மதுவினால் புருஷரின் சித்தத்தைமயக்காத வரையிலேதான், மனிதர் நிச்சய மனதையுடையவராயிருப்பதும், குலம் ஆசாரம் இவைகளைக்கவனிப்பதும், தவத்தை விசேஷமாகச் செய்வதும், நியமம் விரதம் முதலானவைகளைஸ்திரமாய் அநுஷ்டிப்பதுமாம். இந்த ஸ்திரீகள் எந்தக் குணங்களால் என்னை இப்போது போகிக்கவும் மதத்தை யடையவும் செய்கிறார்கள்? காமிகளான புருஷரோ வென்றால், மாம்ஸம், ரத்தம் மலம், மூத்திரம் இவைகள் நிறைந்து அசுத்தமாயும் குணமற்ற

தாயுமுள்ள ஸ்திரீகளின் சரீரத்தை அழகெனக்கற்பித்துக்கொண்டு மிகவும் மோகத்தை யடைந்து மூடராய் விடுகிறார்கள். நிர்மலபுத்தி யுடையவர்கள் ஸ்திரீகள் சமீபத்தில் இருப்பதையும்வெறுப்பார்கள். இவர்கள் சமீபத்தில் வருவதற்குள் நான் மறைந்துவிட்டாலன்றி எனது விரதம் பூர்த்தியாகாது'' என நினைத்தார் பிறகு ''ஏகபத்னீ விரதமுடைய என்னை இவர்கள் என்னசெய்ய முடியும் ?'' என்று கருதி ராமர் அங்கேயே ஸ்திரமாய் இருந்துவிட்டார். அவர்களெல்லோரும் ''நாங்கள் உங்களை வரித்துவிட்டபடியால், உங்களுக்கு ஏகபத்னீ விரதமிருந்தாலும் அது இன்று ஸபலமாய்விடும்'' என்று சொல்லிக்கொண்டே அவரது சமீபத்திற் சென்று அவரைத் தழுவுவதற்குப் பலவிதமாக யத்தனித்தார்கள். ராமர் ''மாதர்களே! உங்களுடைய அனுகூலமும் பிரியமுமான வார்த்தைகள் ஏகபத்னீவிரதமுள்ள எனக்குச் சிறிதும் பயன்படா ; ஆகையால் நீங்கள் வருத்தப்படாதீர்கள்'' என்றார்.

இதைக்கேட்டவுடன் அந்தப் பதினாறாயிரம் ஸ்திரீகளும் ''பிரபுவே! தர்மத்திலிருந்து அர்த்தமும், அர்த்தத்திலிருந்து காமமும், காமத்திலிருந்து இஷ்டமான பலமும் முறையே உண்டாகுமென்று சாஸ்திரங்களில் பண்டிதர் கூறியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட காமம் இப்போது உங்களுக்கு வந்திருப்பதால், நீங்கள் இதை அவசியம் ஸேவிக்கவேண்டும்''என்றார்கள்.

ராமர்:—''வேண்டுமானால் நான் உங்களுக்கு வரங்களைக் கொடுக்கிறேன். நீங்கள் சொல்வதற்கு நான் செவிகொடேன்'' என்று புன்சிரிப்புடன் கூறினார்.

ஸ்திரீகள் :—''நல்லகுலத்தி லுண்டான ஸ்திரீ, திவ்ய ஔஷதமாயும் மனத்தைச் சந்தோஷப்படுத்துகிற ரஸாயனமாயும் நல்ல மந்திரமாயும் அன்னமாயும் ஜலமாயும் இருப்பதால், அவள் தானே வரும்போது புத்திசாலியானவன் அவளை மறுக்கக்கூடாது. நீதியறிந்தவர்கள் காரிய சித்தியாகும்போது உபேக்ஷியார். காலதாமதம் செய்யார். பூர்ண அன்புடையவர்

களாயும் நல்ல குலத்திலுண்டானவர்களாயும் அன்பு நிறைந்த மன முடையவர்களாயும், நன்றாய்ப் பேசுகிற வர்களாயும் தாமே வரிப் பவர்களாயும் நல்ல யௌவன ரூபத்தோடு கூடியவர்களாயும் இருக் கும் கன்னிகைகளை அதிர்ஷ்டமுள்ளவர்கள் அடைகிறார்களே யொ ழிய மற்றவர்கள் அடைவதில்லை. தேவஸ்திரீகளான நாங்கள் எங் கே? உமது ஏகபத்னீ விரதம் எங்கே? ஆகையால் எங்களை நீங்கள் இப்போது நிராகரணம் செய்வது கூடாது. காந்தர்வ விவாகமுறைப் படி எங்களை இப்போது ஸ்வீகாரம் செய்துகொள்ளவேண்டும்; இல் லாவிடில் எங்கள் உயிர் இப்போதே போய்விடும்" என்றார்கள்.

ராமர் "ஏ வநிதாரமணிகளே! தர்மத்தை முக்கியமாகக் கொண் டவர்கள் அதை எவ்வாறு விட்டு விடுவார்கள்? தர்மம் அர்த்தம் கா மம் மோக்ஷம் இந்நான்கும் ஒழுங்குப்படி நடத்தப்படும் போது தான் பலனைக்கொடுக்கும். மாறுபடின் பலனைக்கொடா. ஆகையால் என் ஏகபத்னீ விரதமென்னும் தர்மத்தை நான் இந்த ஜன்மத்தில் விடவே மாட்டேன்" என்றார். அவர் இவ்வாறு கூறவே, அவர்கள், ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு அவர் கரத்தைவிட்டுக் கா லைப்பிடித்துக்கொண்டார்கள். இப்படி அவர்கள் செய்வதைப்பார் த்து, ராமர் அக்கணமே அந்தர்மறைந்துவிட்டார்; தாம் மறைந்த வுடன் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று பார்க்க நினைத்து அங்கு ஓரிடத்தில் மறைந்து ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டி ருந்தார். ஒரு க்ஷணத்திற்குள் ராகவர் அங்கே காணாமற் போகவே, அந்த ஸ்திரீகள் இஃதென்ன ஆச்சரியமென்று நினைத்து மனச் சஞ் சலமுற்றுக் கூறுகிறார்கள்— "ஏ பிரபுவே! இந்திரஜாலமாயையை விட்டு விடும்; பிரியத்தோடு கூடிய தங்களுடைய தரிசனங்கொடுக்க வேண்டும். எங்களுக்கு அதிக தாபத்தை யுண்டாக்குவதற்கே தாங் கள் வந்திருக்கிறீர்கள். தங்களுடையமனத்தில் சிறிதும் தயையில் லையா? அல்லது எங்களைப் பரீக்ஷிக்கிறீரா? எங்களைக்கஷ்டப்படுத்த வேண்டுமென்கிற எண்ணமா உங்களுக்கு? எங்கள் மனதை அபகரிக்கிறீரா? எங்களிடத்தில் நம்பிக்கையும் விசுவாசமும் இல்லை

யா ? நீர்மாயையில் சமர்த்தராதலால், எங்களோடு விளையாடுகிறீரா? மனத்தில் பிரவேசிக்கச் சமயம் பார்க்கிறீரா ? நிரபராதிகளாகிய எங்களிடம் கோபமா ? பிறரை ஏமாற்றுவதால் துக்கம் விளையுமென்று தங்களுக்குத் தெரியாதா ? ஏ பிராணநாதா ! இப்போது தங்களைக் காணாவிடில் நாங்கள் ஜீவிக்கவே மாட்டோம். இருந்தாலும் தங்களைப் பார்க்கலாமென்னும் ஆசையால் இப்போது ஜீவிக்கிறோம். தாங்கள் போயிருக்குமிடத்திற்கு எங்களையும் அழைத்துப் போகவேண்டும். தயைசெய்து எங்களுக்குத் தரிசனங்கொடுக்கவேண்டும். ஸாதுக்கள் ஒன்றிற்கும் காலத்தை எதிர்பார்க்க மாட்டார்களல்லவா ?'' என்று இவ்வாறு அந்த ஸ்திரீகளெல்லாரும் வெகு நேரம் அலறிவிட்டு இராமரைப் பார்க்கக் காட்டில் இங்கு மங்கும் அலைந்து திரிந்தார்கள். அப்போது அங்குள்ள மரங்களையும் கோகிலம் மயில் முதலிய பறவைகளையும் பார்த்து "ஸ்ரீராமரைப் பார்த்தீர்களா" என்று பல முறை விசாரித்தார்கள். அப்படியும் அவர்களுக்கு ராமர் சென்ற இடத்தைத் தெரிந்துகொள்ளமுடியவில்லை. ஆகவே அவர்கள் அவரது பிரிவாற்றாமையால் காட்டின்கண் வெகுநேரம் துக்கத்தோடிருந்து விட்டுக் கடைசியாகக் கண்டகீதீரத்திற்கு வந்து கானம் செய்ய ஆரம்பித்தார்கள்.

ஸ்திரீகள் கூறுகிறார்கள்.

(1) ஏ பிரபுவே ! ஜாநகி தேவியை ராக்ஷஸன் நடுக்காட்டில் அபகரித்துக்கொண்டு போனபோது அவள் விஷயமாய் நீங்கள் துக்கப்படவில்லையா ?

(2) ஏ பிரபுவே ! உமது விரஹத்தால் மனஸ்தாபத்தையடைந்து காடு முழுவதும் அலைந்து துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறோம். ஒரு முறை எங்களுக்குத் தரிசனம் கொடுக்கவேண்டும். அதுவே எங்களுக்கு வரன். ஸம்போகம் வேண்டுவதில்லை.

(3) ஏராகவ ! உம்மிடமிருந்து ஸம்போகத்தை நாங்கள் விரும்பவில்லை. பிராம்மணக் கன்னிகைகளுக்கு எவ்வாறு வரங்கொடுத்தீர்களோ அவ்வாறு எங்களுக்கும் வரங்கொடுத்தருள வேண்

டும். அடுத்த ஜன்மங்களிலும் உங்களைச் சேவிப்பதையே நாங்கள் இச்சிக்கிறோம்.

(4) சஞ்சல சுபாவத்தால் நாங்கள் செய்வதையெல்லாம் தயையோடு மறந்து விடுங்கள். உங்களைப் பார்ப்பதற்காகவே எங்கள் பிராணன் சரீரத்திலிருக்கின்றது. தங்களை யாசிக்கிறோம்.

(5) ஏ ராகவ! தாஸி ஜனங்களான எங்களிடத்தில் தாங்கள் கோபங்கொள்வது கூடாது. உம்மிடமிருந்து எங்களுக்கு வேறு வரம்வேண்டுவதில்லை.

(6) தங்கள் தரிசனமாகிய லாபத்தை ஜன்மாந்தரத்திலும் கொடுக்கவேண்டும். இது தான் எங்களுக்கு வேண்டும் வரம். சரணமடைந்த எங்களெல்லாரையும் காப்பாற்றிக் கரையேற்றவேண்டும். மிகவும் வணங்கிக்கேட்டுக்கொள்ளுகிறோம்.

(7) ராம! நீர் தயைபற்ற இருதயமுள்ளவரா? உமது இருதயத்தில் ஸ்திரீ ஜனங்களின் பொருட்டுக் கருணையுண்டாகாதா? விஷ்ணுவான நீர் உமது பாதங்களில் சரணமடைந்தவர்களிடம் இவ்வாறு கோபத்தை யடைதல் தகுமா? இப்போது எங்களுக்கு வரனைக் கொடுக்கவேண்டும்.

(8) அதிவிமலமான மதியுடையவர்கள் பாலனிடத்திலும் ஏழையினிடத்திலும் ஸ்திரீ ஜனங்களிடத்திலும் தங்கள் பிள்ளையினிடத்திலும் இவ்வாறு குரூரமான கோபத்தையடைவதில்லை. இப்போது நீர் எங்களுக்கு வரங்களைக் கொடுக்கவேண்டும். அஞ்சலி பந்தம் செய்து தங்களை இப்போது வணங்குகின்றோம்.

(9) ஏ நாத, ராகவ! லக்ஷ்மீபதே! ராவண சத்துருவே! ஸீதாபதே! சத்ருசங்கார! தாமரைப்பூப்போன்ற கண்களையுடையவரே! ஏராம! நீர் இப்போது உமது தரிசனத்தைக் கொடுக்கவேண்டும். ஸ்திரீகளான எங்களைத் துக்கசாகரத்திலிருந்துகரையேற்றவேண்டும்.

(10) ஏ கருணாநிதே! ஜந்மாந்தரத்திலும் உமது திவ்யபாத பத்மஸேவையை விரும்புகிறோம். தயை செய்யவேண்டும். இல்லாவிட்டால், இப்போது உமது விரகத்தால் நிச்சயமாய் எங்கள்

பிராணனை விட்டு விடுவோம். ஆகையால் எங்கள் மீது கிருபை செய்யவேண்டும்.

ராமதாஸர் கூறுகிறார்.

இவ்விதம் ஸ்திரீகள் பாடியதை ராமர் கேட்டு மனமிரங்கிஸ்திரீகளுக்கெதிரில் தோன்றினர். அவர்கள் ராமரைப் பார்த்ததும், முக மலர்ச்சி யடைந்து வணங்கினர்கள். உலகத்திலிந்த நாரிகீதத்தைக் கேட்கும் மனிதர்கள் தங்களுடைய சகல விருப்பங்களையும் அடைவார்கள். ஆகையால், இது எல்லாராலும் எப்போதும் பாடத்தகுந்தது. பிறகு ராமர் தமது தரிசனத்தால் அவர்களை மகிழ்வித்துப் பின்வரும் வரங்களைக் கொடுத்தார்—

ஏ ஸ்திரீகளே! நான் கூறுவதைக் கேளுங்கள். முன்னொரு காலத்தில் நான் வியாசருக்கெதிரில் அநேக ஸ்திரீகளை யடைய வேண்டுமென்று தங்கத்தினல் பதினறு ஸ்திரீ மூர்த்திகளைச்செய்து தானங்கொடுத்தேன். அந்தத்தானத்தினல் ஸந்தோஷமடைந்த அந்தப் பிராம்ஹணர்கள் "இதற்கு ஆயிரம் மடங்கு பலம் உமக்கு உண்டாக வேண்டும்" என்று ஆசிர்வதித்தார்கள். ஆசையால் நான் அந்தப் பலனை அனுபவிப்பதற்காக துவாபரயுகத்தில் கிருஷ்ணவதாரஞ் செய்து உங்களைக் கல்யாணம் செய்துகொள்கிறேன். நீங்கள் அந்த யுகத்தில் அரசர்களுக்குப் பெண்களாகப் பிறப்பீர்கள். அப்போது இந்தத்துந்துபி பௌமாசுரனகப் பிறந்து உங்களை முன்போல் அபகரித்துப் போவான். அப்போது நான் அவனைக் கொன்று விட்டு உங்களை இஷ்டப்படி சந்தோஷப்படுத்துகிறேன்" என்றார். அவர்கள் இவ்விதம் ராமர்கூறிய வசனங்களைக்கேட்டு மிகவும் சந்தோஷித்தார்.

இப்பொழுது தங்களை விட்டுப் பிரிந்த இராமரைத் தேடியலைந்த இலட்சுமணர் முதலானவர்கள், குதிரையின் காலடி படிந்திருந்த வழியே தேடிச்சென்று கடைசியில் அங்குவந்து பதினறுயிரம் ஸ்திரீகளின் நடுவே ராமரைப் பார்த்து, அதிக ஆச்சரியமடைந்து அவரை வணங்கினர்கள். அங்கே நடந்த சமாசாரத்தை ராமர் முகமாகவே கேட்டுச் சந்தோஷத்தை யடைந்து, அவருடைய ஸந்நிதியில் நின்றார்கள். பிறகு தூதர்கள் இராமரது ஆக்ஞைப்படி

ஸோநாநிவேசத்திலிருந்து நூற்றுக்கணக்காயும் ஆயிரக்கணக்காயும் வாகனங்களைக் கொண்டுவந்தார்கள்.

ராமர் அந்த வாகனங்களில் அந்த ஸ்திரீகளை யேற்றி வைத்துக் கொண்டு சேனையிருக்குமிடம் வந்து, ஸீதையைப் பார்த்தார். அந்த ஸ்திரீகளனைவரும் ஸீதையை வணங்கி மகிழ்ந்தார்கள். பிறகு ராமர் எல்லாவற்றையும் ஸீதைக்குச் சொன்னார். ஸீதை கேட்டு மகிழ்ந்து அம்மாதர்களெல்லோருக்கும் வஸ்திராபரணங்க ளளித்து உபசரித்தாள். பிறகு ராமர் அவ்விடத்திற்கு அருகே இருந்த ஒரு பெரும் குளத்தைக் கண்டு, அதில் ஸீதையுடன் தா மும் ஸ்நான அனுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொண்டு, உறவினரோடும் வேட்டைக்கு வந்திருக்கும் மற்றவர்களோடும் சுகமாகப் போஜனம் செய்துவிட்டு அழகிய கதைகளைச்சொல்லிக் கொண்டிருந்தார்.

பிறகு ராத்திரியில் வேடர்கள் வில்லில் பாணத்தைப் பூட்டிக் கொண்டு திக்குகளைத் தடுத்து வலைகளைப்பரப்பி வேட்டைக்கு ஆரம் பஞ் செய்தார்கள். அந்த நடுராத்திரியில் குளக்கரையில் பல பன்றி கள் கூட்டமாகச் சேர்ந்து கிழங்குகளைப் பிடுங்கித்தின்றுகொண்டே வந்து வலைகளிற் சிக்கிக்கொண்டன. அப்பொழுது அரசனும் வேடர்களும் அவைகளில் பலவற்றைக் கொன்றார்கள். இது அவர் களுக்குப் பெரும் வேடிக்கையாயிருந்தது. பிறகு எல்லோரும் அவரவர் கூடாரத்திற்குச் சென்றனர்.

இவ்விதம் ராமர் ஸீதையோடு காட்டில் ஏழுநாள் சுகமாய் இருந்து அநேக போகங்களை யனுபவித்துவிட்டுப் பிறகு தமது நக ரத்திற்குச் சென்றார். பிராம்மணர்கள் க்ஷத்திரியர்கள் வைசியர்கள் எல்லாரையும் கூப்பிட்டு எந்த ஸ்திரீ எவரது பெண்ணோ, எந்த ஸ்திரீ எவரது மனைவியோ அந்தந்த ஸ்திரீயை அவரவர்களிடம் வஸ்திராபரண அலங்காரத்துடன் ஒப்புவித்து அவரவரிருப்பிட மனுப்பினர்.

அவர்கள் எல்லோரும் மனமகிழ்ச்சி யடைந்து, அப்பெண் களைத் தங்கள் தங்கள் தேசத்திற்கு அழைத்துச்சென்று விதிப்படி விவாகமாகாத கன்னிகைக்கு விவாகம் செய்வித்தார்கள். ராமரது அநுக்ரகத்தால் அப்பெண்கள் கல்யாணம் செய்துகொண்டு தத்தம் புருஷரோடு சுகமாயிருந்தார்கள். முதலில் ராமபிரான் பார்த்த நான்கு பிராமணப் பெண்களும் தங்கள் தகப்பன் வீட்டிலேயே யிருந்து கொண்டு நியமம் விரதம் முதலியவைகளை யனுஷ்டித்துக் காலங்கழித்தார்கள். அவர்களுக்கு விவாக காலம் தாண்டிவிட்டபடி யால், அவர்கள் விவாகம் செய்துகொள்ளாமலேயிருந்துவிட்டார் கள். ஜன்மாந்தரத்தில் கிருஷ்ணன் அவர்களைத் தமக்கு மனைவிகளாக மணந்துகொள்வார்.

பிறகு இராமர் சுபாகுவென்னும் தமது குழந்தைக்குக் கல்யா ணம் செய்ய ஸீதையோடும் பந்துக்களோடும் பட்டினத்து ஜனங்க ளோடும் மதுராபுரிக்குச்சென்று அங்கே கல்யாணத்தை நடத்தி விட்டு, சிலகாலம் அங்கேயே சுகமாய் வசித்தார். அப்பொழுது ஒருநாள் ஸீதை அங்குள்ள யமுனாநதியின் மணலில் படுத்து நித் திரை செய்யப் பிரியப்பட்டாள். பிராட்டியார் கருத்துக்கிசைந்து ஒருநாள் இரவுஇராமபிரான் ஸீதையுடனும் பணிவிடைக்காரிகளு டனும் யமுனைக்குச்சென்று அங்கு நித்திரை செய்தார். அப்பொ ழுது அவருடன்வந்த வேலைக்காரர்களும் படுத்து நித்திரை செய்து விட்டார்கள். இச்சமயம் பார்த்து யமுனையானது ஒரு பெண்ணுருக் கொண்டு இராமரிடம் வந்து அவர் கால்விரலைத்தொட் டது. இராமர் விழித்துக்கொண்டு தமக்கெதிரில், திவ்ய அலங்கா ரஞ்செய்துகொண்டு ஒரு பெண் புன்சிரிப்புடன் நிற்கக்கண்டு, இவள் யாரென க்ஷணநேரம்சிந்தித்துப் பின் யமுனையெனத்தெரி ந்து அவளழகைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்து பிறகு "ஏ பெண்ணே ! நீ யிங்கே வந்த தன் காரணம் யாது ?" என்று கேட்டார். யமுனையானது வெட்கத்தோடு "தங்களுக்கே எல்லாம் தெரியும்" என்றாள். இராமர் "இந்தஜன்மத்தில் நான் ஏகபத்னீவிரத முடையவனாதலால், நீ ஸீதை விழித்துக் கொள்வதற்குள் வேக மாய் உனது ஸ்தானத்திற்குப்போ" என்று சொன்னார். யமுனை

அதைக்கேட்டு மிகவும் பயந்து மூர்ச்சையடைந்தது. பிறகு இராமர் "ஏ யமுனே! நான் சொல்வதைக்கேள்; துவாபரயுகத்தில் நான் கிருஷ்ணாவதாரம் செய்து உன்னை மனைவியாக ஏற்றுக்கொள்கிறேன். பிறகு என்னோடு சுகத்தை யனுபவிக்கலாம்" என்றார். யமுனை இவ்வாறு இராமர் சொன்னதைக் கேட்டு அவரைத்யானம் செய்துகொண்டே போய்விட்டது. பிறகு அன்று பொழுது விடிந்ததும் இராமர் ஸீதையோடும் சேனைகளோடும் தமது பட்டினம் சென்றார். இவ்விதம் இராமர் அயோத்யாபுரியில் ஸீதையோடும் உறவினரோடும் கூடிச் சுகமாய் வாழ்ந்து கொண்டிருந்தார்.

## 12-வது சருக்கம்

இராஜ்யகாண்டத்தின் பூர்வபாகம்

முற்றிற்று.

# உத்தரார்த்தம்.

## 13-வதுசருக்கம்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஒரு சமயம் ஸ்ரீராமர் சுகமாய் உட்கார்ந்திருந்தார். அப்போது லக்ஷ்மணர் அருகினின்று சாமரம் வீசினர். மற்றுமுள்ள நண்பர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். இச்சமயத்தில் தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். அச்சபை யின்கண் வந்திருந்த இந்நகரத்தாருள்ஒருவன் தாஸிகளுடைய நர்த் தனம்முதலியவைகளைப் பார்த்து நகைத்தான். அவன் நகைத்ததை ராமபிரான் கேட்டதும், முன் லங்கையில் இராவணனுடன் போர் புரியும் சமயத்தில் தமது பாணங்களால் அறுபட்ட அவனுடைய சிரங்கள் நற்புத்தியை யடைந்து, நகைத்துக்கொண்டே தம்மை நம ஸ்கரிக்க வருதுபோலத்தோன்றியதும், அச்சிரங்களின் பற்கள் முத லிய கோரங்களைப் பார்த்து பயமடைந்து, தம்மை விழுங்க வருவ தாக நினைத்து நூற்றொரு தடவை பாணங்களை யெய்து அவைகளை யறுத்து ஆகாயத்தில் எறிந்த விஷயமும் ஞாபகத்துக்கு வந்தன. இவ் வாறு ஞாபகமுண்டானதும் அந்த இராவணன் தலைதான் அப் பொழுது வந்து மந்தஹாஸம் செய்கிறதோ வெனக்கருதி, அச்ச மயம் ஒருவரும் சிரிக்கவேண்டாம் என உத்தரவுசெய்தார். பிறகு வேறு சில சமயங்களில்யார் நகைத்தபோதிலும் இவ்வாறே ராமருக்கு ஞாபகம் வந்தமையால், "நான் பிறர் நகைப்பதைக் கேட்கும்போ தெல்லாம் இராவணனது தலையின் விகாரமான சிரிப்பு, என் நினை வுக்கு வருகிறது. மாயாவியான ராக்ஷஸர்கள் எனக்கு இவ்வாறு நினைவுண்டாக்கி என்னைச் சாப்பிடுவதற்கு இங்கே வருவதுபோலவுந் தோன்றுகிறது. நீதி சாஸ்திரங்கள் சிரிப்பை விலக்கியிருக்கின்றன. ஆகையால் இனிப் பூமியிலுள்ளவர்கள் நகைப்பதே கூடாதென்று செய்து விடுகிறேன்" என்று தீர்மானம் செய்துகொண்டு, இலக்ஷ்ம ணரையழைத்து "இவ்வுலகில் ஆடவர், மாதர், அல்லது நமது

குழந்தைகள், ஆப்தபந்து மித்ரர்கள். ஆகிய ஒருவரும் இனிச் சிரிக்கவே கூடாது. அப்படி மீறிச் சிரித்தவர்களை நாம் தண்டித்து விடுவோம். இந்த ஆக்ஞையை எங்கும் பிரசித்தப்படுத்திவிடு ' என்றார். லக்ஷ்மணர் அவர் உத்தரவின்படியே பிரசித்தப்படுத்தினர். பட்டினத்து ஜனங்கள் இதை யறிந்து, தண்டனைக்குப் பயந்து, நர்த்தனம் கீதம் விகடம் முதலிய ஹாஸ்யகரமானவைகளொன்றையும் நடத்தவேயில்லை; மங்களகரமான உற்சவங்கள் அநேக விதமான கதைகள் இவைகளையும் கொண்டாடாமலிருந்து விட்டார்கள். அவசியமில்லாமல் பிரபுவைப் பார்க்க ஒருவனுவது சபைக்குப் போவதேயில்லை. புராணம் இதிகாசம் ஒன்றையும் படிப்பதில்லை. வீடுகளில் ஜாதகரணம் நாமகரணம் முதலான ஒன்றையும் செய்வதில்லை.

பூமியில் ஒரு வருஷம் இவ்வாறு இருந்தது. பின் சிரிப்புள்ளவருடைய முகத்தைக் காண்பது மரிதாய்விட்டது. ஒருவரும் அலங்காரம் செய்து கொள்வதில்லை. இவைகளை உற்சாக தேவதைகளறிந்து இந்திரனுக்குத் தெரிவித்தன. இந்திரன் முதலான தேவர்கள் கர்மங்களுக்கு அங்கமாகத் தங்களை உலகத்தார் பூஜியாமல் இருப்பதைப் பிரமனுக்குத் தெரிவித்தார்கள். பிரமன், "ராமரைவிட நாம் பலசாலிகளல்ல, அவர் எனக்குத் தந்தையாயிருப்பதால், அவருக்கு உபதேசம் பண்ண என்னல் முடியாது; ஆகையால் ஒரு யுக்தியால் எல்லாருக்கும் இதமுண்டாகும்படி இந்தக் காரியத்தைச் சாதிக்கிறேன்" என்று தேவர்களுக்குக்கூறிச் சமாதானம் பண்ணிவிட்டுப் பூலோகத்திற்கு வந்தார். அவர் அயோத்திக்கு அருகே ஒரு அரசமரத்தைக்கண்டு அதற்குள் புகுந்துகொண்டு வழிப்போக்கர்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டேவந்தார். இவ்வாறிருக்கையில் அவ்வழியே போய்க்கொண்டிருந்த ஒரு விறகு கட்டுக்காரன் அரசமரம் சிரிப்பதைப் பார்த்துத் தானும் சிரித்தான். பிறகு அவன் விறகு விற்கக் கடைக்குச்சென்று அங்கும் அரசமரம் சிரித்ததைப் பார்த்துப் பின்னும் அதிகமாகச் சிரித்தான். இதைப்பார்த்த ராஜ

தூதனும் தனக்குண்டாகிய சிரிப்பை அடக்க முடியாமல் அதிகமாகச் சிரித்தான். இங்கே சிரித்ததுமன்றிப் பிறகு அவனே சபைக்குச்சென்று விறகு வெட்டியின் சிரிப்பை மனதில் நினைத்துப் பின்னும் அதிகமாய்ச் சிரித்தான். அதைக்கேட்டுச் சபையிலுள்ளவர்கள் சிரித்தார்கள். பிறகு ராமரும் அதிகமாய்ச் சிரித்துவிட்டார். உடனே ராமர் தாம் சிரித்தது எதற்காகவென்று ஆலோசித்து, சிரித்தவர்களுக்குத் தண்டனை விதிக்கப்படுமென்று கட்டளையிட்ட நாமே இப்போது சிரித்தோமே, நம்மை இப்போது யார் தண்டிப்பது? நம்மை ஜனங்கள் என்ன சொல்வார்கள்? ராகவர் குற்றத்தைத் தாமே செய்துவிட்டார். இவரைதண்டிப்பது யார் என்றல்லவோ நமது ஆக்ஞையை லக்ஷியஞ் செய்ய மாட்டார்கள். இவ்வாறு நாம் செய்தது யோசனையின்றியதாம்'' என்று நினைத்தார். அப்போதும் மறுபடியும் அடக்க முடியாமல் சிரித்தார். பிறகு ராமர் சபையோரை நோக்கி "நீங்கள் எதற்காகச் சிரித்தீர்கள். உங்களால் எனக்குப் சிரிப்புண்டாயிற்று. காரணங் கூறுங்கள்'' என்று கேட்டார். அவர்கள் சபையில் இப்போதுவந்த தூதன் சிரித்தான். அதனால் நாங்களும் சிரித்தோம்'' என்று சொன்னார்கள். ராமர் தூதனை யழைத்து "நீ எதற்காகச் சிரித்தாய்?'' என்று அவனைக்கேட்டார். அவன் "விறகுவெட்டி சிரித்ததைக்கண்டு நான் சிரித்தேன்'' என்றான். உடனே இராமர் வேலைக்காரரைக்கொண்டு அந்தவிறகுவெட்டியைச் சபைக்கு அழைத்துவரச்சொன்னார்.

அந்த விறகுவெட்டி பயந்து நடுநடுங்கிக்கொண்டு இராமரிடம் வந்தான். இராமர் அவனைப் பார்த்து "நீயேன் சிரித்தாய்?'' என்று கேட்டார். அவன் பிரபுவே! நான் இந்தநகரத்திற்குச் சமீபத்தில் வந்துகொண்டிருக்கும் போது ஓர் அரசமரம் சிரித்தது. அதைப் பார்த்து நான் சிறித்தேன். பிறகுகடையில் விறகு விற்கச்சென்ற போதும் அதை நினைத்துச் சிரித்தேன்'' என்று வணக்கத்தோடு சொன்னன் .அபூர்வமான இச்சொல்லைக்கேட்டு இராமர் மிகவும் ஆச்சரியமடைந்து, தமது வேலைக்காரர்களை யழைத்து "நீங்கள் வேகமாகச் சென்று இது உண்மையா, அல்லது பொய்யாவென்று

தெரிந்து கொண்டு விரைவில் வாருங்கள்" என்றனுப்பினர். வேலைக்காரர்கள் அவ்வாறே சென்று அரசமரம் சிரிப்பதைப் பார்த்து, மிகவும் ஆச்சரியப்பட்டு, ராமரிடம் ஓடிவந்து தெரிவித்தார்கள். இராமர் அதைக்கேட்டதும் ஆச்சரியமும் கோபமுமடைந்து வேலைக்காரரைப் பார்த்து, "இது நமது கட்டளையை மீறுகிற அடையாளமாயிருப்பதால், அந்த அரசமரத்தை நீங்கள் வெட்டி விடுங்கள்" என்று உத்தரவு செய்தார். அவர்கள் ஆயிரக்கணக்கான ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு அதி சீக்கிரத்தில் அம்மரத்தி னருகே சென்றுவெட்ட ஆரம்பித்தார்கள். அதிலிருந்த பிர்ம்மா அம்மரத்திலிருந்து அநேக கற்களை வருஷித்து வேலைக்காரர்களை யடித்துத் துரத்தி விட்டார் வேலைக்காரர்கள் அந்த அடி பொறுக்க மாட்டாமல் இராமரிடம் ஓடிவந்து நடந்ததைத் தெரிவித்தார்கள். இராமர் ஆச்சரியப்பட்டு, இன்னும் ஆயிரக்கணக்கான தூதர்களை, யனுப்ப, அவர்களும் கல்லடிபட்டு இராமரிடம் வேகமாய் ஓடிவந்து அலறினர்கள். இராமர் அதனால் பெருங்கோப மடைந்து, அந்தமரத்தை வெட்டச் சேனைகளோடு சுமந்திரரை யனுப்பினர். அவரும் ராமரை வணங்கிவிட்டு அம்மரத்தின் சமீபஞ் சென்று அதைவெட்ட யத்தனித்தார். அப்போது அம்மரத்திலிருந்து வெளிப்பட்ட பெரும் கற்களால் அவரும் நன்றாய் அடிபட்டுக் கீழேவிழுந்தார். அதைக்கண்ட மற்றவர்கள் பயந்து அலறினர்கள். இது அயோத்தி யெங்கும் ஆச்சரியத்தை விளைவித்தது. அப்படிச் சுமந்திரர் விழுந்ததைக் கேட்டு இராமர் சத்ருக்னரைத்தமது பிள்ளைகளோடு அதை வெட்டுவதற்காக அனுப்பினர். அப்போது பட்டிணத்து ஸ்திரீகளெல்லோரும் மிகுந்த ஆச்சரியமடைந்து மேன்மாடிகளின் மீதேறி வேடிக்கை பார்த்தார்கள். மற்றவரெல்லோரும் அவரைத் தொடர்ந்து அம்மரம் இருக்குமிடத்துக்குச் சென்றார்கள். சத்ருக்னர் பட்டினத்திற்கு வெளியே வந்ததும், அவரது குதிரை யானை முதலியவைகள் அப்படியே வழியில் நின்றுவிட்டன. அடித்தும் நின்ற இடம் விட்டு அவை அசையவில்லை. அவ்வாறே குசன் லவன் இவர்களுடையகுதிரை யானை முதலியனவும் அங்கேயே நின்றுவிட்டன ; அடித்தும்

அவை இடம்விட்டுப் பெயரவில்லை. இந்த ஆச்சரியத்தை தூதர்கள் ராமரிடம் தெரிவித்தார்கள். ராமர் அதைக்கேட்டு மிகவும் பயந்து "இவ்விஷயத்தை நன்றாய் விசாரிக்கவேண்டும். இதில் ஏதோ விசேஷ மிருக்கிறது. புரோகிதரைக் கேட்க வேண்டும்" என்று நிச்சயித்துத் தாம் எல்லாவற்றையும் அறிந்தவரா யிருந்தாலும், புரோகிதரை அழைத்தார். அவர் அதி சீக்கிரத்தில் இராமரது சபைக்கு வந்தார். இராமர் அவரை எதிர்கொண்டழைத்து, ஆசனம் அளித்து நன்றாய் உபசரித்து, அவரிடம் சமாசாரத்தைத் தெரிவித்தார். வசிஷ்ட முனிவர் "தங்களது சரித்திரத்தை யியற்றின வான்மீகி முனிவரைக் கேட்கவேண்டும்" என்று சொல்ல, ராமர் அவ்வாறே வான்மீகியை வரவழைத்து, அவரைப் பூஜித்து அவரிடம் சமாசாரத்தைத் தெரிவித்தார். வான்மீகி முனிவர் அதைக்கேட்டு புன்சிரிப்படைந்து "நீர் எல்லாம் அறிந்தவிஷயம்; என்னை எதற்குக் கேட்கிறீர். மானுட அவதாரத்திற் கேற்ப நீர் என்னைக் கேட்கின்றமையால், இப்பொழுது தெரிவிக்கிறேன். நீர் வேடிக்கையை விட்டால் வேடிக்கையைத் தரும்படியான உற்சவம் முதலிய காரியங்களெல்லாம் ஒரு வருஷமாய்ப் பூமியில் நின்றுபோய் விட்டன. ஆதலால் உற்சாக தேவதைகளும் கர்மாங்க தேவதைகளும் பூமியில் தங்களது பூஜை குறைந்து போனதைக் கண்டு பிர்ம்மாவினிடம் முறையிட்டார்கள். பிர்ம்மா உம்மை வணங்கி உம்மிடத்தில் அதைச்சொல்லி நிவர்த்தி செய்து கொள்ளச் சக்தியற்றவராய்த் தேவதைகளுக்கு நன்மையைச் செய்யக்கருதி அந்த அரசமரத்திற் புகுந்து கொண்டு இவ்வாறு செய்கிறார்" என்றார். இவ்விதம் முனிவர் கூறியதைக்கேட்டு இராமர் கோபமடைந்து "நானே இப்போது சென்று பிர்ம்மாவின் பலத்தைப் பார்க்கிறேன். இரகுசிரேஷ்டன் எவ்விதம் நமது சிக்ஷையை மாற்றுவான்" என்று சொல்லிவிட்டுத் தமது சேனைக்குக் கட்டளையிட்டார். அப்போது முனிசிரேஷ்டரான வான்மீகி "ஏ இரகுசிரேஷ்ட! கோபங் கொள்ளாமல் நான் கூறுவதைக் கேளும். நீர் சச்சிதாநந்த ரூபமுள்ளவர். உமது சரிதம் ஆனந்த

மயமானது. நான் அதை வர்ணித்து முற்காலத்தில் கங்காதீரத்தில் யக்ஞஸமயத்தில் உமது பிள்ளைகளின் முகமாய் அதைக் கேட்கும் படி செய்தேன். அந்தச் சரிதத்தைக் கேட்டால், மனிதன் ஆன ந்தரூப மடைந்து விடுவான். நீர் ஹாஸ்யத்தை விலக்கிவிட்டால், உமது சரிதமும் ஹால்பரஸம் அற்றதாய்விடும். ஜனங்கள் கேட்க மாட்டார்கள். உமது சரிதத்தைப்பற்றி வேறுசில சொல்லுகிறேன் கேளும்; உமது சரிதத்தை நான் நூறுகோடி கிரந்தங்களாய் ஆதி யில் செய்தேன். பிறகு அதில் பிரித்து ஸாரமுள்ளதாய் எடுத்து வியாஸமுனிவர் பதினெட்டுப் புராணங்களையும் உபபுராணங்களையும் இயற்றினர். இவ்வாறே முனிவர்கள் ஸாரம் ஸாரமாய் எடுத்து ஆறு சாஸ்திரம் முதலியவைகளையும் அநேக விதமாய்ச் செய்யப்போகிறார் கள். இந்தச் சரிதத்தில் கைகேயினுடைய துஷ்டத்தனத்தால், நீர் பதினான்கு வருஷம் காட்டில் ஸஞ்சரித்து எல்லாருக்கும் துக்கம் வரும்படியாகச் செய்த இருபத்திநாலாயிரம் சுலோகப்ரமாணமுள்ள பாகம் மாத்திரம் வான்மீகி செய்ததென்கிறார்கள். இதையெல்லாம் அறிந்து இதற்கு மேற்பட்ட பாகத்தையும் நான் செய்திருக்கிறேன். யுத்தபாகத்தைக் காலை வேளையிலும் துக்கபாகத்தை மத்தியானத்தி லும், ராத்திரியில் ஸௌரதபாகத்தையும் எப்போதும் ஆனந்த ராமா யணத்தையும் கேட்க வேண்டும். யுத்தம் பாரதமென்றும், ஸௌர தம் பாகவதமென்றும், மீதியுள்ள இருபத்திநாலாயிரம் கிரந்தம் சோகமென்றும் சொல்லப்படுகின்றன. இந்த ஆனந்தராமாயணம் முன் என்னால் செய்யப்பட்ட நூறுகோடியில் 12000 பிரமாண மடங்கிய ஒன்பது காண்டங்களுள்ளது. இது இவ்வுலகில் மிகவும் பிரசாரமுள்ளதாயிருக்கும். இதுஉமதுகீர்த்தி மாலையைவர்ணிப்பதா யிருப்பதால், இதை ஒருவரும் கண்டனம் செய்யாது, சந்திர சூரி யர் உள்ளவரையில், காப்பாற்றுவார்கள்; நான் நூறுகோடி கிரந்தங் களாகச் செய்த உமது சரிதம் வியாஸ முனிவரால் பிரிக்கப் பட் டது. இதை நான் நன்மையாகவே நினைத்தேன். ஏனென்றால், இந்தக் கலியுகத்தில் ஜனங்களெல்லாரும், அற்பாயுளை யுடையவர் களாயும் மந்தபுத்தி யுடையவர்களாயும் இருப்பதால், அதை முழுவ தும்படிக்க ஒருவராலும் ஆகாது. அதைப் பதினெண் புராணங்களாக

வும் உபபுராணங்க ளாகவும் அவர் பிரித்து எழுதியது லோகோப காரமே. ஆதலால், நான் ஒன்பதுகாண்டமாய் எழுதிய இந்த ஆன ந்த ராமாயணத்தைக் கெடுக்கக்கூடாது. நீர் ஹாஸ்யத்தை நிறுத்தி விடின், எல்லாம் சோகமயமாகும். அந்த ஆனந்தசரிதம் உலகில் பரவாது. ஆகையால், ஹாஸ்யத்தை நிறுத்தக்கூடாது. நான் வர் ணித்த உமது சரிதத்தைக் கேட்டால், ஜனங்கள் அவசியம் சிரிப் பார்கள். அப்படிச் சிரிக்கும்போது பற்களைக் காட்டாமல், துணி யால் முகத்தை மூடிக்கொண்டு சிரிப்பதே எப்போதும் மங்களகரமா னது. இதுவே மிகவும் சிரேஷ்டமானது! சிரிப்புள்ள முகத்துடன் கூடிய ஸ்திரீ எந்த வீட்டில் இருக்கிறாளோ அந்த வீடு மிகவும் மங் களமுள்ளது. எவனது முகம் சிரிப்புள்ளதோ அவன் சிரேஷ்டன். கோபத்தோடு கூடின முகமுடையவர்களை ஜனங்கள் நிந்திப்பார்கள். அதிகமான ஹாஸ்யத்தைநிந்திப்பவர்கள் முனிசிரேஷ்டர்களேயாவர். ஆகையால் பிர்ம்மா கர்வங்கொண்டு இங்குவரவில்லை; உம்மைத் தந்தையென்று அறிகிறார். ஆகலால் உம்மைச் சரணமடையும்படி செய்கிறேன்" என்று வணக்கமாகச் சொன்னார். இவ் வார்த்தையை இராமர் கேட்டு நல்லதென ஒப்புக்கொண்டு, தாம் அவர் இஷ்டப் படியே செய்வதாகத் தீர்மானித்தார். உடனே வான்மீகியும் மன மகிழ்ச்சியுடன் ஒரு சிஷ்யனை யனுப்பிப் பிர்ம்மாவை அரசமரத்தி லிருந்து, இறக்கி அழைத்துவரும்படி செய்தார். எல்லாக்குதிரை களும் எழுந்திருந்து பட்டணத்திற்குச் சென்றன. சத்ருக்னரும் சேனையோடு சென்று ராமருக்கருகில் நின்றார். ராமரது குழந்தை களும் வந்து அவருக்கெதிரில் உட்கார்ந்தார்கள். ராமரது உத்தர வால் விறகுவெட்டியும் தூதர்களும் விடப்பட்டார்கள். இந்திரன் அமுதத்தை வருஷிக்க ஸுமந்தரரும் தூதர்களும் சுகமாய் எழுந் திருந்தார்கள். அவர்கள் ராமர் சமீபத்தில் வந்து ஆனந்தமாய் நின்றார்கள்.

பிறகு இந்திரன் தேவர்களோடு ராமரிடஞ்சென்று அவரை வணங்கினன். பிர்ம்மாவும் ராமரை வணங்கி, நான்' ஏதாவது

அபராதம் செய்திருந்தால், அதை மன்னித்தல்வேண்டு மென்றும், நாங்கள் எப்போதும் தங்களையே ஆச்ரயித்தவர்களாதலால் எங்களை எப்போதும் காப்பாற்றவேண்டும் என்றும் பிரார்த்தித்து மேலேகூறுகிறார்.

முற்காலத்தில் எங்கள் நன்மைக்காகவே நீங்கள் அநேகம் அவதாரங்களைச்செய்து பகைவர்களைக் கொன்றீர்கள். வேதத்தை அபகரித்த சங்காஸுரன் மத்ஸ்யரூபத்தால் கொல்லப்பட்டான். அவ்வாறே எங்களுக்காக அமுதத்தைக் கடையும்போது கீழே மூழ்கின மந்தர பர்வதத்தைக் கூர்மரூபத்தால் தூக்கினீர்கள். பூமி என்னுடையதென்று அதைப்பாதாளத்திற்குக் கொண்டுபோன ஹிரண்யாக்ஷனை வராஹ ரூபத்தால் கொன்றீர். ப்ரஹ்லாதருடைய வார்த்தையால், தூணிலிருந்து வெளிப்பட்டு, ஹிரண்யகசிபுவைக்கொன்றீர். முற்காலத்தில் இந்திரனது ராஜ்யம் திருவிழந்து போகக்கண்டு வாமனரூபமெடுத்து பலியைப் பாதாளத்தில் அழுத்தினீர். அரசரெல்லோரும் அதர்மத்தில் பிரவிருத்தியுடையவர்களென்று பரசுராமாவதாரம் செய்து அவர்களை நாசம்செய்தீர். ராமாவதாரத்தில் பத்னிக்குத் துரோஹஞ்செய்த இராவணன் கும்பகர்ணனென்னும் ராக்ஷஸர்களை நாசம் செய்தீர். அவர்கள் தேவசாபத்தால் இரண்டுதடவை கரையேற்றப் பட்டார்கள். இதற்குப் பிறகு இன்னுமொருதடவை அவர்களைக் கரையேற்றப்போகிறீர். இவ்வாறு பிர்ம்மா கூறியதைக்கேட்டு முனிசிரேஷ்டரான வஸிஷ்டர் எல்லாவற்றையும் அறிந்திருந்தாலும், ஜனங்களுக்குத் தெரியப்படுத்துவதற்காகப்பிர்ம்மாவைக் கேட்கிறார்.

## 13-வது சருக்கம்.

முற்றிற்று.

## 14-வது சருக்கம்

### வஸிஸ்டர் கூறுகிறார்.

முற்காலதில் எந்த இரண்டு கணங்கள் தேவரால் சபிக்கப்பட்டு, இரண்டுதடவை இராமரால் கரையேற்றப் பட்டார்கள். இதற்குப் பிறகும் அவர்களே இராமர் எவ்விதம் கரையேற்றப்போகிறார் என்று கேட்டார். இதைக்கேட்ட பிர்ம்மா சிரித்து இவைகளைத் தங்கள் சித்தம் அறியுமாயினும் ஜனங்களுக்குத் தெரியும்படி செய்வதற்காக, என்னைக் கேட்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். ஆகையால் நான் எல்லாவற்றையும் விஸ்தாரமாய்ச் சொல்லுகிறேன் கவனித்துக் கேட்கவேண்டும்.

ஒருகாலத்தில் மஹாவிஷ்ணு வைகுண்டத்தில் மஹாலக்ஷிமீ யோடுரகஸ்யமாய் வீற்றிருந்தார் அப்போது அவரைப் பார்ப்பதற்கு, தேவவைத்தியர்களான அசுவனி குமாரர்கள் வந்தார்கள். அவர்களைப் பார்த்து துவாரபாலகர்களான ஜயன் விஜயன் என்பவர்கள் "பிரபுவான மஹாவிஷ்ணு இப்போது ரகஸ்யமாய் வீற்றிருப்பதால், அவரைப்பார்ப்பதற்கு இதுசமயமல்ல" என்றார்கள். அசுவனி குமாரர்கள் "நாங்கள் இப்போதுதான் பார்க்கவேண்டும்; ஆதலால் நாங்கள் வந்திருப்பதைப் பகவானிடம் தெரிவிக்க வேண்டும்" என்று சொன்னார்கள். துவாரபாலகர்கள் "மஹாலக்ஷ்மீயோடு ரகஸ்யமாயிருக்கும் மஹாவிஷ்ணுவினிடம் நாங்கள் இப்போது போகமாட்டோம்" என்று மறுத்து விட்டார்கள்.

இவ்வாறு இரண்டு மூன்று தடவை துவாபரபாலகர்கள் மறுத்துவிட, அசுவனி குமாரர்கள் மிகுந்த கோபத்தோடு "எங்கள் வார்த்தையை நீங்கள் கேளாததால் நீங்கள் மூன்று தடவை பூமியில் பிறவியை யடையக் கடவீர்கள்; இதற்கையமில்லை" என்று சபித்தார்கள். பிறகு தேவகணங்களான துவாரபாலகர்களும் "குற்றமில்லாமல் எங்களைச் சபித்ததால் நீங்களும் பூமியில் ஒரு ஜன்மத்தை யடையக்கடவீர்கள்" என்று தேவவைத்தியர்களைச் சபித்தார்கள். இவ்வாறு அவர்கள் ஒருவரை

யொருவர் சபித்துக்கொண்டு ; ஹா ! ஹா ! வென்று கத்தினர்கள். இதைச் செவியுற்ற மகாவிஷ்ணு அவர்களைக் கூப்பிட்டுவிசாரித்து, விஷயங்களைத் தெரிந்து கொண்டார். பிறகு அந்த நான்குபேரும் "சீக்கிரம் எங்களுக்கு முக்திகிடைக்கும்படி அநுக்ரகம் செய்ய வேண்டும்" என்று விஷ்ணுவைவேண்ட, அதற்கு அவர் "என்னைப் பகைத்துக் கொண்டால், விரைவில் முத்தியை அடையலாம் ; என்னிடத்தில் பக்தியாய் இருந்தால் ஏழுஜன்மங்களுக்குப் பிறகு என்னை யடைதல் கூடும். இவைகளில் எது வேண்டுமானாலும் நீங்கள் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று சொன்னார். அவர்கள் "உங்களை விரோதித்துக் கொண்டாவது உங்கள் தரிசனத்தைச் சீக்கிரம் அடைய வேண்டும்" என்று கூறி அவ்விதமே பூமியில் ஜன்மத்தை யடைந்தார்கள்.

ஜயன் ஹிரண்யாக்ஷனாகவும், விஜயன் ஹிரண்ய கசிபுவாகவும் பிறந்தார்கள். மஹா விஷ்ணு வராஹ ரூபமெடுத்து ஹிரண்யாக்ஷனையும், நரஸிம்ம ரூபங்கொண்டு ஹிரண்ய கசிபுவையும் நாசம் செய்தார். மறுபடியும் அவர்கள் ஜன்மமெடுக்க விரும்பி, ஜயன் ராவணனாகவும், விஜயன் கும்பகர்ணனாகவும் பூமியில் பிறந்தார்கள். அப்போது மகாவிஷ்ணு ராமாவதாரமெடுத்து அவர்களைக் கொன்றார். அந்த அசுவனி குமாரர்களில் ஒருவன் ஐராவணனென்றும், மற்றொருவன் மைராவண னென்றும் பாதாளலோகத்தில் பிறந்தது ராமரது கையால் மரணமடைந்தார்கள். பின்னர், ஜயன் சிசுபாலனாகவும் விஜயன் தந்தவக்தரனாகவும் பூமியில் பிறக்கப் போகிறார்கள். அப்போது மஹாவிஷ்ணு துவாபரயுகத்தில் கிருஷ்ணவதாரமெடுத்து அவ்விருவரையும் நாசஞ் செய்யப்போகிறார். தேவகணமான ஜயன் விஜயன் இருவரும் இவ்வாறு பூலோகத்தில் மூன்று ஜன்மங்களை யனுபவித்து விட்டு மஹா விஷ்ணுவினது திவ்யகிருக துவார பாலகர்களாகப் போய்ச்சேர்வார்கள். தேவ வைத்தியர்களான அசுவனி தேவர்களும் முன்போல் தேவலோகத்திற்குப் போய்ச் சேர்ந்து விட்டார்கள். ஏ ரிஷியே ! தேவகணங்களுக்குச் சாபம் வந்ததற்குக் காரணம் என்னவென்று தாங்கள் கேட்டதற்கு நான் விஸ்தாரமாய்க் கூறிவிட்டேன்.

ஏ ராகவ! நீரும் இதற்குப் பிறகு ஜராஸந்தன் கம்ஸன் முதலியவர்களால் இந்தப் பூமி மிகவும் வருத்தப்படுவதைப் பார்த்து, கிருஷ்ணாவதாரமெடுத்து விளையாட்டாய் எல்லாரையும் கொன்று, பூமிக்குச் சுகத்தை யுண்டாக்கப் போகிறீர். அதற்குப்பிறகு உலகில் அதிகமாகும் பௌத்தர்களையும் புத்தாவதாரம் செய்து ஜெயிக்கப்போகிறீர். கலியுகத்தின் கடைசியில் ஜாதிகளெல்லாம் ஒன்றாய் இருப்பதைப் பார்த்து கல்கி ரூபமெடுத்து எல்லாரையும் விளையாட்டாய் ஸம்ஹாரம் செய்யப்போகிறீர். இவ்விதம் நீங்கள் பத்து அவதாரங்களையும் உலகநன்மைக்காகவே செய்வீர்கள் என்று துதித்தார்.

ராமதாஸர் கூறுகிறார்.

இப்படித் தோத்திரம் செய்த பிர்ம்மாவை ராமர் ஆலிங்கனம் செய்து ஆசனத்தில் உட்காரவைத்து "உமக்காக முனிவரின் உத்தரவுப்படி ஜனங்களை நகைக்கும்படி ஆஜ்ஞாபித்தேன். எல்லாம் வான்மீகி முனிவர் சொன்னபடியே யிருக்கட்டும்" என்றார்; இதைக்கேட்டு தேவர் முதலானவர்களும் சந்தோஷித்தார்கள். பிறகு ராமர் சபையில் வான்மீகியை நோக்கி "நீங்கள் நான் அவதாரம் செய்வதற்கு முன் என் சரித்திரத்தைச் செய்திருப்பதால் அது தங்களுக்கு எவ்வாறு தெரிந்தது? யார் உபதேசித்தார்கள்? முன் ஜன்மத்தில் நீர் யாராகவிருந்து என்ன புண்யத்தைச் செய்தீர்? இவைகளை யெல்லாம் எனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்"? என்றார். இதைக் கேட்டு வான்மீகி முனிவர் சபையில் கூறுகிறார்.

வான்மீகி முனிவர் கூறுகிறார்:—ராம! நீர் நன்றாய்க்கேட்டீர். சொல்லுவதைக் கவனமாகக் கேளும். உமது திவ்ய நாம மகிமையை யாராலே தான் வர்ணிக்க முடியும்? ஆயினும் நான் அதை என் புத்திக்கு எட்டியவாறு வர்ணித்தமையால் பிரும்ம ரிஷியாயானேன். என் பூர்வ ஜன்ம சரிதத்தைச் சொல்லுகிறேன் கேளும். பம்பா தீரத்தில் சங்கனென்று ஒரு கீர்த்திபெற்ற பிராமணர் இருந்தார். அவர் ஒருநாள் கோதாவரி நதியில் ஸ்நானத்

திற்குச் சென்று அங்கே விதிப்பிரகாரம் ஸ்நானம் செய்துவிட்டு வைகாசி மாதத்தில் மத்தியான வேளையில் ஜனசஞ்சார மற்றதா யும் மிகவும் பயங்கரமாயுமுள்ள ஒரு காட்டிற்குள் பிரவேசித்தார். அப்போது ஒரு வில்லை யெடுத்துக்கொண்டு பிரயாணிகளுக் கெல் லாம் யமன்போன்ற ஒரு வேடன் அங்கே வந்து, குண்டலம் தரித் தவராயும் சூரியன்போல் பிரகாசிக்கிறவராயும் இருக்கிற அந்தப் பிராம்மணனைக் கத்தியால் பயமுறுத்திக் குண்டலம், பாதரக்ஷை, குடை, வஸ்திரம், கமண்டலம் முதலிய எல்லாவற்றையும் பிடுங் கிக்கொண்டு அவரைத் துரத்தி விட்டுப் போய்விட்டான். அப்ப டியே கற்கள் நிறைந்த காட்டுவழியே சென்று மத்தியான வேளை யில் மிகவும் கொடூரமான வெயிலில் நடக்கமுடியாமல் தவித்துக் கொண்டு புல்நிறைந்த ஓரிடத்திற்போய் அங்கு ஒதுங்கி நின்றார். அதைக்கண்ட அவ்வேடனுக்கு ஒருநல்லபுத்தியுண்டாயிற்று. அதா வது "நாம் காட்டில் திருட்டுத்தனத்தால் வெகு பதார்த்தங்களைச் சம்பாதிக்கிறோம். இந்த அந்தணனுடைய இந்தப் பாதரக்ஷை களை அவனுக்கே கொடுத்துவிடுவோம். அவைகளைக் கொண்டு இந்தப் பிராம்மணன் வெகு சுகமாய்த் தனது இருப்பிடம் போய்ச் சேரட்டும்; இந்த வெயில் வேளையில் பாதரக்ஷைகளைக் கொடுப் பது மிகவும் புண்யமாகும்" என்று தனக்குள் சிந்தித்து, உடனே அந்தப் பிராம்மணன் இருக்கும் இடத்திற்கு வேகமாய்ச் சென்று அவ்வேடன் பாதரக்ஷைகளை அவருக்குக் கொடுத்தான். அவர் அதைப் பெற்றுக்கொண்டு அதிக சந்தோஷமடைந்து, "உனக் குச் சுகமுண்டாகுக" என்று அவனை வாழ்த்திவிட்டு மறுபடியும் அவனிடம் கூறுகிறார்.

"வேடா! நீ இந்த வைகாசி மாதத்தில் பாதரக்ஷைதானம் செய்ததால், உனக்கு முன் ஜன்மத்திய புண்யம் கொஞ்சம் இருக் கிறது." என்றார். இதைக்கேட்டு வேடன் "நான் பூர்வஜன்மத் தில் என்ன புண்யம் செய்திருக்கிறேன்? அதை விஸ்தாரமாகச் சொல்ல வேண்டும்" என்றான்.

"இங்கு வெயில் அதிகமா யிருப்பதோடு ஜலமும் நிழலும் இல்லாமலிருப்பதால், நாம் சுகமான இடத்திற்குப் போய் அங்கே

சிரமபரிகாரம் செய்துகொண்டு பேசத்தொடங்குவோம்'' என்று பிராம்மணர் சொன்னர். வேடன் அதைக் கேட்டுச் சந்தோஷித்துக் கைகூப்பிக்கொண்டு, இங்கே சமீபத்தில் மிகவும் சுகமான இடமிருக்கிறது. அங்கே அனேகபல விருக்ஷங்களும் இருக்கின்றன. அங்குச் சென்ருல் சௌக்கியமா யிருக்கும்'' என்ருன். உடனே பிராம்மணர் அவனேடு சிறிது தூரம்சென்று, அங்கே எதிரில் ஒரு சிரேஷ்டமான குளத்தைக்கண்டு, அதில் ஸ்நானஞ் செய்து வஸ்திரங்களை உடுத்துக்கொண்டு, அப்போது செய்ய வேண்டிய கிரியைகளை யெல்லாம் செய்து முடித்து, தேவபூஜை செய்து நல்ல பழங்களைப் பறித்து ஆகாரமாக உட்கொண்டு ஜலத்தைக குடித்து நல்ல நிழலில் சுகமாய் உட்கார்ந்துகொண்டு இளைப்பாறிப் பின் ''உனது பூர்வ புண்யங்களைச் சொல்லுகிறேன்''என்று அவனிடம் கூறுவாராயினர்:—

முன் ஜன்மத்தில் நீ சாகலமென்னும் தேசத்தில் ஸ்ரீவத்ஸ கோத்திரத்தில் பிறந்து வேதாத்தியயனம் செய்த ஒரு பிராம்மணை யிருந்தாய். உனக்கு ஸ்தம்பன் என்று பெயர். உனக்கு ஒருதாஸி பிரியமாயிருந்தாள். அவளைப் புணரும் தோஷத்தில் நீ நித்தியக்கிரியைகளை யெல்லாம் விட்டு, சூத்திரன்போல் மூர்க்க குணமடைந்து மிகவும் கெட்டுப்போய் விட்டாய். அப்படிப்பட்ட உன்னுடைய பத்தினியான காந்திமதி என்பவள் அந்தக்காலத்திலும் உன்னிடத்தில் அதிக பயபக்தியோடு உன்னை உபசரித்து வந்தாள். உன்னிடத்திலுள்ள பயத்தால் அந்தத் தாசிக்கும் அவள் அதிகமான பணிவிடைகளைச் செய்து வந்தாள்.

இப்படி யிருக்கையில், ஒருநாள் அவளது பர்த்தாவாகிய நீ மிகவும் அபத்யமான பதார்த்தங்களைச் சாப்பிட்டுவிட்டு வாந்தி செய்து கொண்டும், பேதியால் வருந்திக்கொண்டும் இருந்தாய். அதனுல் உனக்குப் பெரும் வியாதி யுண்டாயிற்று. உன்னிடத்தில் அதிகப்பிரியமுள்ள அந்தத்தாசியும் அந்தக்காலத்தில் உன்னிடம் பணம் ஒன்றுமில்லை யென்று தெரிந்து வேறொருவனேடு சேர்ந்து கொண்டு உன்னை லட்சியம் செய்யவில்லை.

அப்போது நீ மிகவும் வாடியமுகத்தோடு வியாதியால் பீடிக்கப்பட்டு மிகவும் அழுதுகொண்டு பத்தினியிடம் "ஏ தேவி! நீதான் இச் சமயதில் என்னைக் கைவிடாது காப்பாற்ற வேண்டும் நான் பதிவிரதையான உன்னை அவமானப்படுத்தி விட்டு, இப்போது இவ்வாறு அனுபவிக்கிறேன். இரவும் பகலும் சாதுக்களால் நிந்திக்கப்படுகிறேன்." வணங்கிய பதிவிரதையான மனைவியை எவன் அஞ்ஞானத்தால் அவமானப் படுத்துகிறானோ அவன் நபும்ஸகனாய்ப் பிறப்பான் என்றுகூறும் சாஸ்திரம் எனக்குத் தெரிந்திருந்தாலும், நான் கோபத்தால் இப்படிப்பட்ட கெட்ட நிலைமையை அடைந்துவிட்டேன். இச்சமயத்தில் நீதான் என்னை ரக்ஷிக்கவேண்டும்" என்று மிகவும் வேண்டிக்கொள்ள, அவள் கைகூப்பிக்கொண்டு "நீங்கள் என்னிடம் இவ்வாறு தீனமான வார்த்தைகளைச் சொல்லவேண்டாம். தங்களிடம் எனக்குக் கோபமே கிடையாது. நான் பூர்வஜன்மத்தில் செய்த கர்மங்களின் பலன்களை அனுபவித்துத் தீரவேண்டும். ஆகையால். இப்போதும் வெகு அன்போடு நான் உங்களை ஆராதிப்பதில் சிறிதும் ஆக்ஷேபணையில்லை" என்று வெகு வணக்கத்துடன் சொன்னாள். அப்படியே தன் தகப்பனார் வீட்டிலிருந்து, பணத்தைக் கொண்டுவந்து ஈச்வராராதனம் செய்வதோடு இரவும் பகலும் தன் நாயகனது சரீரத்தை வெகு ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொண்டு, ஒரு நிமிஷங்கூடத் தூங்காமல் காத்துக்கொண்டிருந்தாள். "கணபதி எனது நாயகனுடைய வியாதிகளை நிவர்த்தி செய்து அவருக்குச் சுகத்தை யுண்டாக்கட்டும். அப்போது அவருக்கு மோதகம் செய்து நிவேதனம் செய்கிறேன்! சண்டிகை எனது பர்த்தாவை ரக்ஷிக்கட்டும். அவளுக்கு நல்லருசியுள்ள போஜனம் செய்விக்கிறேன். எல்லாத் தேவர்களும் அவரை ரக்ஷித்து அவருக்குச் சுகத்தை யுண்டாக்கட்டும்" என்று இவ்விதம் ஒவ்வொரு நாளும் வேண்டிக்கொண்டு தான் ஆகாரம் உண்பதையும் ஆடை ஆபரணம் முதலானவைகளணிவதையும் ஒழித்து, விரதங்களை அநுஷ்டித்துக் கொண்டிருந்தாள். அப்போது மஹாத்மாவான தேவலரென்னும் ஒரு முனிவர்

வைகாசி மாதத்தில் வெயிலால் வருத்தமடைந்து அவ்வுத்தமியின் வீட்டிற்கு வந்தார்.

அப்போது உனது பத்தினியாகிய அந்த மாது "மஹாத்மா வான வைத்தியர் வீட்டிற்கு வந்திருக்கிறார். அவருக்கு நான் பூஜை செய்கிறேன். அதனால் தங்களது விபாதிதொலைபு" மென்று உன்னிடம் சொல்லிவிட்டு, அவருக்கு அர்க்கியம் பாத்யம் முதலியவை களைக் கொடுத்து அவரது சரணாரவிந்தங்களைச் சுத்திசெய்து அந் தத்தீர்த்தத்தை உனதுசிரவில்புரோக்ஷித்தாள். பிறகு அதையே உட்கொள்ளும்படி உனக்குக் கொடுத்தாள். மஹாத்மாவான அவருக் குப் பானகத்தைக் கொடுத்து நல்ல பக்ஷணங்களோடு அவருக்குப் போஜனம் செய்வித்தாள். பிறகு அவர் அங்கேயே அன்று இளைப் பாறிவிட்டு அடுத்த நாள் காலையில் வேறு ஊருக்குச் சென்றார்.பிறகு கொஞ்சக்காலத்திற்கெல்லாம் உனக்கு ஜுரமும் ஜன்னியும் உண் டாகி, அதனால் நீ மிகவும் வருந்திக் கடைசியில் அந்தத் தாசியையே நினைத்துக்கொண்டு, காலதர்மத்தை யடைந்துவிட்டாய். அப்போது உனது பத்தினியான காந்திமதியும் தனது தங்கக்காப்புகளை விற்று விதிப்பிரகாரம் சிதையடுக்கித் தானும் பரிசுத்தமாக ஸஹகமனம் செய்து விட்டாள். பிறகு மஹா பதிவிரதையான அவ்வுத்தமி மஹாவிஷ்ணு லோகத்தை யடைந்தாள்.

நீ அந்திபகாலத்தில் தாசியை நினைத்துக்கொண்டே தேகத்தை விட்டதால், நல்ல ஆசாரங்களை யனுசரியாத, துராத்மாவானவேட னாகப் பிறந்தாய். அதிலேயும் கடுங்கோடையில் எல்லாரையும் பயமு றுத்தித் தொந்தரை செய்துகொண் டிருக்கிறாய். முற்பிறப்பில் வை காசி மாதத்தில் நல்ல பிராமணனுக்கு உன்மனைவி பானகத்தைக்கொ டுத்த புண்ணியத்தால், இப்போது இந்தக்காலத்தில் நீஎனக்குப் பாத ரக்ஷைகளைக் கொடுத்தாய். சிரேஷ்டமான முனியினுடைய ஸ்ரீபாத பத்ம தீர்த்தத்தை சிரவில் பக்தியோடு தரித்துக் கொண்டமையால் இப்போது இந்த வனத்தில்என்னோடு கூடி உனது புண்ணியங்களைக் கேட்பதற்கு உனக்கு எண்ண முண்டாயிற்று. முற்பிறப்பில் வாயில்

விரலைவைத்துக் கொண்டே இறந்ததினால் இப்போது இவ்வனத்தில் உனக்கு மாமிசத்தைத்தின்ன நேர்ந்தது. அந்தத் தாசியும் இப்போது உனக்கு பத்தினியா யிருக்கிறாள். நீ படுக்கையில் படுத்துக்கொண்டே இறந்ததால் இப்போது நீ எக்காலத்திலும் தரையில் படுக்கும் படியாக விருக்கிறது. நீ போனஜன்மத்தில் செய்தபாவம் புண்ணியங்களை ஞானதிருஷ்டியா லறிந்து உனக்கு நன்றாய்ச் சொன்னேன். இதற்குப் பிறகு வரும் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேள். ஒரு குளக்கரையில் க்ருணுவென்னும் ரிஷியொருவர் குரூரமாய்த் தவம் செய்யப் போகிறார். தவத்தின் முடிவில் அவரது கண்களி லிருந்து வெளியில் பெருகும் வீரியத்தை ஒரு பாம்பு பார்த்து, ருதுகாலத்தில் அதைக்கிரகிக்கப் போகிறது. நீ அதற்குப் பிறக்கப் போகிறாய். வேடர்கள் உன்னை வளர்ப்பார்கள். ஆதலால் நீ வேடனாகப்போகிறாய். நீ இப்போது பாதரக்ஷைகளைத் தானம் செய்த தர்மத்தால், ஏழு முனிசிரேஷ்டர்களோடு உனக்குச் சேர்க்கையுண்டாகப்போகிறது. அவர்களது அநுக்கிரகத்தால் நீ வான்மீகி முனிவராகப்போகிறாய்; நீ இராமகதையை வெகு நன்றாய்ச் செய்யப் போகிறாய்.

வான்மீகி கூறுகிறார்:—சங்கனென்ற அந்த அந்தணர் இவ்வாறு வேடனுக்குச் சொல்லிவிட்டு, வைகாசிமாதத்தில் செய்யும் தர்மங்களின் பலன்களையும் புகழ்ந்துவிட்டு, அவ்வேடன்கொடுத்த தமது குண்டலம் முதலியவைகளை யடைந்து சந்தோஷத்துடன் கௌதமீதீரத்திற்குப் போய்விட்டார். அந்தச் சங்கருடைய வசனப்படி வேடன் அந்தக் காட்டில் வைகாசிமாதத்திய தர்மங்களைக் கிடைக்கும் பதார்த்தங்களால் பிரியமாய்ச்செய்து வந்தான். இவ்வாறு வேடஜன்மம் தொலைந்ததும், நான் காட்டில் க்ருணுவின் புத்திரனாகப் பாம்பின் வயிற்றில் பிறந்தேன். பிறகுவேடர்களால் வளர்க்கப்பட்டேன். நான் ஜன்மாந்திரத்தில் பிராம்மணனாலும் எப்போதும் சூத்திராசாரத்தில் ஆசையுள்ளவனா யிருந்தேன். ஆதலால் இந்திரியக் கட்டில்லாத எனக்குச் சூத்திர ஸ்திரீயினிடம் வெகு பிள்ளைகள் பிறந்தார்கள். பிறகுநான் திருடர்களோடு சேர்ந்து திருடனானேன்.

எப்போதும் வில்லு அம்புகளைத் தரித்துக்கொண்டு பிராணிகளுக்கு யமன்போன்றவனாயிருந்தேன். ஒருகாலத்தில் அப்பெரியகாட்டில் சூரியன்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கிற ஏழு முனிசிரேஷ்டர்களை நான் பிரத்தியக்ஷமாகக் கண்டேன். உடனே அவர்களது சாமான்களைப் பிடுங்கிக்கொள்ள வெகுஆசையோடு அவர்களைத்துரத்திக்கொண்டு ஓடினேன். அப்போது அவர்கள் "ஏ பிராம்மண! நீ எதற்காக ஓடிவருகிறாய் நில் நில்'' என்றார்கள். அதற்கு, நான் "ஏ முனி சிரேஷ்டர்களே! நான் மனைவி மக்களுட னிருக்கிறேன். அவர்கள் எப்போதும் பசியால் வருந்திக்கொண்டிருப்பதால், அவர்களைக் காப்பாற்றுவதற்காக நான் இவ்வாறு செய்யவேண்டியதா யிருக்கிறது'' என்றேன். பிறகு அவர்கள் வெகு அன்போடு என்னிடம் "நீ வீட்டிற்குச்சென்று பிரதிதினம் நான் உங்களைக் காப்பாற்றுவதற்காகச் செய்யும் பாபத்தை நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா வென்று உன்மனைவி குழந்தை முதலாயவர்களைக் கேட்டு அதற்கு அவர்கள் சொல்லும் மறுமொழியை எங்களிடம் வந்துசொல்லு. நாங்கள் நிச்சயமாய் இங்கேயே யிருக்கிறோம். இதைவிட்டு அப்புறம் போகவில்லை; இது நிச்சயம். அப்படிப்போனா லெங்களுக்கு பிரம்மஹத்தியி லுண்டாகும் பாபமும், சுராபானஞ் செய்வதனா லுண்டாகும் பாபமும், சொர்ணத்தைத் திருடுவதினா லுண்டாகும் பாபமும், குருபத்னியைப் புணர்ந்த பாபமும், பிராம்மணரின்பொருளை அபகரித்த பாபமும் அவசிய முண்டாகட்டும்'' என்று பிரதிக்ஞை செய்துகொடுத்து என்னை வீட்டிற்கு அனுப்பினார்கள். நானும் அவ்வாறே சென்று முனிவர்கள் சொன்னபடி குடும்பத்தாரைக் கேட்டதற்கு அவர்கள் "பாபம் உன்னைச் சேர்ந்தது. எங்களுக்கு பாகந்தான் உண்டு'' என்றார்கள். உடனே நான் ஸம்ஸாரத்தில் வெறுப்பையடைந்து, தயையோடு முனிவர் காத்துக்கொண்டிருக்கு மிடத்திற்கு மறுபடியும் திரும்பிவந்து, அவர்களைப் பார்த்தேன். உடனே என்மனம் சுத்தமாய் விட்டது. அக்கணமே பாணமுதலானவைகளைப் பூமியிலெறிந்து விட்டுத் தண்டம்போல் கீழேவிழுந்து "ஏ முனி சிரேஷ்டர்களே! தயையோடு என்னைக் காத்தருள வேண்டும்'' என்று அவர்களை வேண்டிக்

கொண்டேன். அவர்கள் வெகு தயையோடு என்னை யெழுந்திருக்கச் சொல்லி 'உனக்கு ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறோம் அதனால் நீ மோக்ஷத்தை யடைவாய்' என்று 'நல்ல நடத்தை யுடையவனா யிருந்தால், நல்ல மந்திரத்தை யுபதேசிக்கலாம் கெட்ட ஆசாரமுள்ள இவனுக் கென்ன செய்வது' என ஒருவரோ டொருவர் ஆலோசித்துக் கொண்டு ஏராம! அவர்கள் உமது திவ்யநாம மந்திரத்தை மாற்றி எனக்கு உபதேசஞ் செய்து இங்கிருந்து மனோதைரியமாய் "மரா" வென்னும் இந்த மந்திரத்தை யெப்போதும் ஜபித்துக்கொண்டிரு; நாங்கள் மறுபடியும் திரும்பிவருகிறோம்' என்று சொல்லிவிட்டு அவர்கள் தமது திவ்யலோகஞ் சென்றார்கள். நான் அவர்கள் உபதேசித்தபடியே வெளி விஷயங்களை மறந்து ஒரே மனதோடு ஜபித்துக்கொண்டிருந்தேன்; அங்கே தவத்திற்குச் சாக்ஷியாக ஒரு தண்டத்தை நிறுத்தி யிருந்தேன், இவ்வாறு வெகுகால மானவுடன் அசைவற்றிருந்த யென்மேல் ஒரு புற்று கிளம்பிற்று. எனது தவத்தின் பலத்தால்அந்தத் தண்டமும் அழகிய ஒரு மரமாயிற்று. இந்தப்படி ஆயிரம்யுக மானதற்குப் பிறகு அந்த ரிஷிகள் மறுபடியும் திரும்பிவந்து தயவுடன் "வெளியில்வா" என்று யென்னை யழைக்க நான் வெகு சீக்கிரம் பனியிலிருந்து சூரியன் வெளிப்படுவதுபோல், வெளியே வந்துவிட்டேன். அப்போது முனிவரெல்லாம் 'நீர் வான்மீகத்தி (கரையான்புற்றி) லிருந்து வெளியே வந்ததால் உமக்கு வான்மீகி என்று பெயராகுக' எனச் சொல்லிவிட்டு, அவர்களது திவ்யலோகஞ் சென்றார்கள். ஏராமா! நான் உமது திவ்ய நாமத்தின் மகிமையால் இவ்விதமானேன்.

ஒருகாலத்தில் பரமசிவனிடம் பிர்ம்மா உமது சரித்திரத்தைக்கேட்டு மிகவும் ஆனந்தமடைந்து நாரதருக்கு உபதேசித்தார். நாரதர் வேதவாக்கியங்களால், எனக்கு உபதேசித்தார். பிறகு தமஸா நதிக்கரையில் ஆணும் பெண்ணுமான கிரௌஞ்ச பக்ஷிகள் வெகு உல்லாசமாக விளையாடிக்கொண் டிருக்கும்போது அவைகளில் ஆண் பக்ஷியை வேடனொருவன் பாணத்தால் அடித்தான். அதனால் மிகவும் வருத்தத்தோடு அலறிக்கொண்டிருந்த பெண் பக்ஷியை உத்தேசித்து என் மனத்திலிருந்த துக்கத்தை வெளியிடும்போது அது 32 அக்ஷரமுள்ள சுலோகமாக வந்தது.

உடனே இந்தப் பிர்ம்மாவும் என்னிடம் வந்து, உமது சரிதத்தைச் சுருக்கமாகச் சொல்லி, அதை வெகு விஸ்தாரமாய் நான் தெரிந்துகொள்ளும்படி எனக்கு வரங்களேயும் கொடுத்தார். உடனே இவரது வாக்கியத்தால், ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய உமது அழகிய சரிதத்தை நூறுகோடி விஸ்தாரமுள்ளதாகச் செய்தேன். ஸ்ரீராம! தாங்கள் கேட்டபடி நான் எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொன்னேன்.'' என்று வால்மீகி மஹரிஷி தமது விருத்தாந்தத்தை முடித்தார்.

இவைகளையெல்லாம் ராமர் அறிந்தவராயினும் ஜனங்களுக்கு அறிவிப்பதற்காகவே இவ்விதம்கேட்டார். பிறகு பிர்ம்மா மிகவும் ஆதரவோடு ''ஸ்ரீராம! ஆனந்தரூபியான உமது சரிதத்தைக் கானஞ் செய்யமுடியுமா? உலகத்தில் வழங்கிவரும் அகாரம் முதலான பதினாறு உயிரெழுத்துக்களும் ககாரம்முதல் க்ஷகாரம் வரையிலுமான முப்பத்துநான்கு மெய்யெழுத்துக்களுமே உமது திவ்யநாம மந்திரத்தைக்கூறுகின்றன. ஆதலால், சராசரமான இவ்வுலக முழுதும் உமது திவ்யநாம மந்திரம் வியாபித்திருக்கிறது. இவ்விஷயத்தை நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன். எல்லா ஜனங்களும் கேட்கட்டும். இதைச் சொல்லப் பரமசிவனும் ஆயிரம் நாவுகளையுடைய ஆதிசேடனும் சமர்த்தர்களல்லர். ஆதலால், என்னால் முழுவதும் எவ்வாறு வர்ணிக்கமுடியும்? ஆயினும் உமது கிருபையால், உமது சரிதத்தை, இந்த வால்மீகி மகரிஷி வர்ணித்தபடியால், இவரே உலகத்தில் மிகவும் சிரேஷ்டமானவர்'' என்றுகூறித் தோத்திரஞ் செய்தார்.

ராமதாஸர் கூறுகிறார்.

இவ்வாறு பிர்ம்மா எல்லாராலும் பூஜிக்கப்பட்டுத் தமதுலோகம் சென்றார். வான்மீகி மகரிஷியும் சித்திரகூட பர்வதத்திலுள்ள தமது ஆச்சிரமத்திற்குச் சென்றார். அது முதல் ஜனங்களும் விகடம் முதலிய ஹாஸ்ய காரியங்களைச் செய்துகொண்டு சுகமாய் இருந்தார்கள்.

## 14-வது சருக்கம்.

(முற்றிற்று.)

# 15 - வது சருக்கம்.

## இராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமர் இராஜ்யபரிபாலனம் செய்யுங்காலத்தில் சகல ஜனங்களும் ஆனந்தமா யிருந்தார்கள். ஓரிடத்திலாவது கலகம் திருடர் பயம் முதலியவைகிடையா. ரிஷிகளும் சந்தோஷமுள்ளவர்களாகவும் குறைவற்றவர்களாகவு மிருந்தார்கள். யாகம்செய்வது கிணறு குளம் முதலியவை வெட்டுவது முதலான தர்மங்கள் ஆங்காங்கு விருத்தியடைந்து கொண்டிருந்தன. எங்கும் தேவாலயங்களும், யூபஸ்தம்பங்களும் நல்ல புஷ்பங்களுடன் கூடிய உத்தியானவனங்களும் தீங்கனியையளிக்கும் விருக்ஷங்களும் மிகுந்திருந்தன. அந்த ராஜ்யத்தில் நதிகளே ஸ்தம்பங்கள் - கொழுப்புடன் கூடியவைகள். (நல்ல ஜலத்துடன் கூடியவைகள்) மனிதர் ஸ்தம்பர்களல்லர் (கொழுப்புடன் கூடியவர்களல்லர்.) குடிலமாக (கோணலாகப்) போவது நதிகளேயொழிய ஜனங்களல்ல. கிருஷ்ணபக்ஷத்து இரவுகள்தாம் தமஸோடு கூடியவை (இருட்டோடு கூடியவை)- மனிதர் தமஸோடு (அஞ்ஞானத்தோடு) கூடியவர்களல்லர். கோடாலி உலக்கை சாமரம் குடை முதலியவைகளுக்குத்தான் தண்டம் (பிடி) மற்றவர்களுக்குத் தண்டமே (தண்டனையே) இல்லை. ஜாட்ய (சீதள)த்தன்மை யென்பது ஜலத்திலேதான். ஸ்திரீகளின் இடைதான் பலமற்றவை. மூர்த்திகளின் கைகளிலேயே சூலம். யானைகள்தான் மதம்பிடித்தவைகள். குளங்களில் அலைகளுக்குத்தான் யுத்தம். கண்டகம் (முள்ளு) மரங்களிலே தான். அநேகமாய் வண்டுகளே சஞ்சல சுபாவ முள்ளவைகள். இப்படிப்பட்ட தேசத்தில் ராமர் வெகு தர்மமாய் ஆண்டு வந்தார், சத்ருக்களின் மனத்தில் சூரியன் போலவும், ஆப்தமித்திரர்களின் மனத்தில் சந்திரன்போலவும் பிரகாசித்தார். அவர் தர்மராஜர் போலவும் தண்டிக்கக் கூடாதவர்களைத் தண்டிக்காமலும், தண்டிக்க வேண்டியவர்களை தண்டித்துக்கொண்டும், நீதியாய்ப் பரிபாலனம் செய்துவந்தார். தேவலோகத்தில் கலாவான் (சந்திரன்) ஒருவன், இவரது ராஜ்யத்தில் எல்லாரும் கலாவான்களே (வித்வான்களே)

சொர்க்கலோகத்தில் காமன் ஒருவனே. அவனும் சரீரமற்றவன்-இந்த ராம ராஜ்யத்தில் எல்லாரும் காமன் (அழகுள்ளவர்கள்) ஆகவும் அழகிய அங்கங்களோடு கூடியவர்களாகவும் இருந்தார்கள். இந்த ராஜ்யத்தில் கோத்ரபித் (குலத்தைக் கெடுப்பவர்) ஒருவருமில்லை. தேவலோகத்தில், தேவர்களின் அதிபதியான, இந்திரனே கோத்ரபித் (மலைகளைப் பிளந்தவன்) இங்கே க்ஷயத்தையடைகிறவன் ஒருவனுமில்லை. சொர்க்கத்தில் சந்திரன்தான் க்ஷயத்தை யடைகிறவன் (குறைவை யடைகிறவன்) ஸ்வர்க்கத்தில் நவக்கிரகங்கள் உண்டு. இங்குத் தேசங்கள் நவக்ரஹங்கள்-நவக்ரஹ மற்றவை (மழையில்லாதவைகளில்லை) சொர்க்கத்தில் ஹிரண்ய கர்ப்பர் ஒருவர்தான். இங்கு எல்லாரும் ஹிரண்யகர்ப்பர்தான் (தங்கத்தை அதிகமாய் உடையவர்கள்). ஸ்வர்க்கத்தில் அர்சுமான் (சூரியன்)ஒருவனே ஸப்தாச்வன்-(ஏழு குதிரைகளை யுடையவன்). இங்கே எல்லாரும் அனேக குதிரைகளையுடையவர்கள். ஸ்வர்க்கலோகத்தில் விஷ்ணுவிடம் பிரியமுள்ள ஒரு பத்மைதான் (லக்ஷ்மிதான்) இருக்கிறாள். இந்த தேசத்திலுள்ள ஜனங்களின் வீடுகளில் அனேகம் பத்மைகள் (தாமரைப் புஷ்பங்கள்) இருக்கின்றன. இவ்விதம் ஸ்ரீராமர் சௌரியம் ஔதாரியம் முதலிய சகல நல்லகுணங்களுடன் கூடியவராயும் அநேக யுத்தங்களில் ஜயத்தை யடைந்தவராயும் இரப்பவர்களுக்கு மிகுந்த தானம் செய்கிறவராயும் சத்துரு ஜயசீலராயும் பூரண சந்திரனுக்குச் சமமான காந்தியை யுடையவராயும் எப்போதும் யாகம்செய்து அவப்ருத ஸ்நானத்தால் பரிசுத்தமான சிரசை யுடையவராயும் அரச ச்ரேஷ்டராயும், பிரஜைகளைக் காப்பாற்றுவதில் ஆசையுள்ளவராயும் பிராமணருக்கு அதிகமாய்த் தானம் செய்கிறவராயும் பார்வதீகாந்தரான பரமேச்வரரது சரணாரவிந்தங்களைத் தியானம்செய்தவராயும் விசுவேச்வரரது கதையைக் கேட்டுக்கொண்டு இரவும் பகலும் கழிப்பவராயும் ஸீதையினுடைய லீலையில் ஸந்தோஷத்தை யடைந்தவராயும் பந்துக்கள் புத்திரர் மித்திரர் இவர்களோடு கூடினவராயும் இருந்துகொண்டு ராஜ்யத்தை வெகு நீதியாய் ஆண்டுவந்தார். அயோத்தியை ராஜதானியாகக்கொண்டு ராமர் அரசாளும்போது ஜனங்களெல்லாரும்

பரமானந்த பரிதர்களாக விருந்தார்கள். விருக்ஷங்கள் காலங்களில் நல்ல புஷ்பங்களையும் நல்லபலன்களையு மளித்து வாசனையுள்ள காற்றால் சிரமப்பட்டு வரும் ஜனங்களது ஆயாஸத்தைத் தீர்த்து ஆனந்தத்தை யுண்டாக்கி வந்தன. ஜனங்கள் ஏகபத்னி விரத முடையவர்களா யிருந்தார்கள். மாதர்கள் பதிவிரதைகளாக விருந்தார்கள். பிராம்மணர் க்ஷத்திரியர் வைசியர் இவர்கள் வேதாத்தியயனம்செய்து கொண்டு வந்தார்கள். வைசியர் பொருளீட்டுவதில் மிகச் சமர்த்தர்களா யிருந்தார்கள். சூத்திரர்கள் எப்போதும் துவிஜர்களுக்குப் பணிவிடைசெய்துகொண்டு வந்தார்கள். பிரும்மசாரிகள் தங்களது விரதத்திலிருந்து கொஞ்சமேனும் தவறுதவர்களா யிருந்து எப்போதும் குருசிசுருஷைசெய்துவேதசாஸ்திரங்களை அப்பியாஸிக்கிறவர்களா யிருந்தார்கள். எங்கும் வர்ணாசிரம தர்மம் விருத்தி யடைந்து வந்தது. எல்லாரும் சுகமாயிருந்தார்கள். ராமர் அரசாட்சி செய்யுங்காலத்தில் குழந்தையில்லாதவன், தன.மில்லாதவன், விருத்தமான ஆசாரமுடையவன், போக்கிரி, உளறுகிறவன், இம்சை செய்கிறவன், நாஸ்திகன் முதலியவர்காணக் கிடைக்க மாட்டார்கள்; அகாலமரணத்தை யடைந்தவனுமில்லை. எங்கேபார்த்தாலும் வேத கோஷமும் அடிக்கடி சாஸ்திரப் பிரசங்கமும் நடந்து கொண்டே யிருக்கும். எப்போதும் மங்கள வாத்தியமும் வீணை வேணு மிருதங்கம் முதலான வாத்தியங்களின் திவ்யசப்தங்களும் முழங்கிக் கொண் டிருக்கும். எல்லாவிடங்களிலும் யாகம்செய்வதும் அதற்காக சாது ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வந்துகொண்டு மிருப்பார்கள். புத்திரர்கள் எப்போதும் மாதாபிதாக்களின்பாத பூஜைசெய்துவருவார்கள். உபவாஸம் விரதம் தீர்த்தஸேவைதேவதாராதனம் முதலியவைகள் தவறாமல் நடந்துவந்தன. ஸ்திரீகள் தங்கள் பர்த்தாக்களுடைய பாதங்களில் பூஜை செய்து அவர்கள் உபதேசங்களைக் கேட்டு அதன்படிநடந்து அவர்களையே தெய்வமாகப் பாவித்து வந்தார்கள். சிறியோர்பெரியோரை வணங்கி அவர்சொற்படி நடப்பதும் வேலைக்காரர்கள் பயபக்தியோடு தங்கள் எஜமானனது சொற்படி நடப்பதும் கீழ்வர்ணத்தார் மேல்வர்ணத்தாரைக் கௌரவத்தோடு

மூன்று காலங்களிலும் நமஸ்கரித்து அவர்களுக்குப் பணிவிடை செய்வதும், வித்வான்களை ஆராதிப்பதும் தபஸ்விகளை வந்தனம் செய்வதும், ஜிதேந்திரியர்களை உபாஸிப்பதும், காலையிலும் மாலையிலும் மந்திரத்தால் பரிசுத்தமான ஹவிஸ்ஸை அக்னியில் ஹோமம் செய்வதும் பரிசுத்தமான திரவியங்களைச் சேர்த்து அடிக்கடி வாவி கிணறு குளம் முதலியவைகள் வெட்டுவது முதலியவைகளிலும் இன்னுமுள்ள எல்லாவித நற்காரியங்களிலும் ஜனங்களது மனது சென்று எல்லாரும் சுகமாகவே யிருந்தார்கள். இவ்வாறு ஸ்ரீராமர் ராஜ்யபரிபாலனம் செய்யும்போது எல்லாரும் சகலசுகங்களையும் அடைந்து தீர்க்காயுளோடு வாழ்ந்து வந்தார்கள்.

## 15-வது சருக்கம்

முற்றிற்று.

## 16 - வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமர் ஒருகாலத்தில் குசன் லவன் லட்சுமணன் பரதன் சத்ருக்னன் இவர்களைக் கூப்பிட்டு இராஜநீதியை அவர்களுக்கு விஸ்தாரமாய்க் கற்பித்தார். குழந்தைகளே! நான் இப்போது இராஜநீதியை விஸ்தாரமாய்ச் சொல்லுகிறேன். எல்லாரும் கேளுங்கள். குசனைப் பார்த்து, "நான் வைகுண்டம் சென்ற பிறகு நீயே அரசனாகப் போகிறபடியால் இராஜநீதியை மிகவும் ஆதரவோடு கேட்டு அவ்வாறே நடக்கவேண்டும். நன்மையை விரும்புகிற அரசன் ஒருபோதும் பொய் சொல்வது கூடாது. எப்போதும் நீதியுள்ளவனா யிருக்கவேண்டும். கோபத்தை யடையக்கூடாது. பரஸ்திரீகளை இச்சிப்பதுகூடாது. உண்மை பேசுதல், நல்ல ஆசாரம், தயை, பொறுமை, ருஜுஸ்வபாவம், மதுரமான வார்த்தை, பிராம்மணரையும் யதிகளையும் ஆராதிப்பது முதலியவைகளே அரசருக்குற்ற நல்லகுணங்கள். நித்திரை சோம்பல் மதுபானம் சூதாடுதல் தாசிகளைப் புணர்தல் அதிகமாய்க் கிரீடிப்பது அதிகமான வேட்டை ஆகிய இவை அரசருக்குத் தகாத குணங்கள். அரசர் பிரஜைகளைப் புத்திரரைப்போல் காப்பாற்றவேண்டும் ஆறிலொன்று வரிவாங்கவேண்டும். வேவுகாரரைக்கொண்டு தேசத்தின் சமாச்சாரங்களை அறியவேண்டும் சத்துரு இராஜ்யத்தில் தமது தூதர்களை மாறவேஷத்தோடு அனுப்பவேண்டும். வேற்றரசருடைய தூதர்களை ஒருபோதும் நம்புவதுகூடாது. காலம் வரும்போது தமது காரியத்தை யுக்தியாய் முடித்துக்கொள்ள வேண்டும்.

மனத்தில் எண்ணியதை ஒருவரோடும் சொல்லாமலும் காரியத்தை முடித்து ஜனங்களுக்கும் மந்திரிகளுக்கும் காட்டவேண்டும். ஒவ்வொரு மாதமும் பொக்கிஷத்தைச் சோதனை செய்ய வேண்டும். அங்குள்ள வேலைக்காரர்களை நம்பவேகூடாது. ஒவ்வொருவருஷமும் மந்திரிகளோடு பட்டணம் கோட்டை மதில் இன்னும் மற்ற கூடங்கள் இவைகளைப் பழுது பார்க்க வேண்டும். நான்கு மாதங்களுக்கொருமுறை ஆயுதம், மார்க்கம் முதலியவைகளைப் பழுது பார்க்க

வேண்டும். ஒவ்வொரு பக்ஷத்திலும் யானை குதிரை இவைகளைக் கவனிக்கவேண்டும். ஒவ்வொரு மாதமும் வாவி கிணறு குளம் முதலிய ஜனங்களுக்கு சௌகரிய மானவைகளைப்பற்றிக் கவனிக்கவேண்டும். எப்போதும் சேனையைப்பற்றிக் கவனிக்கவேண்டும். தேவர், பிராம்மணர், குருக்கள் யதிகள். இவர்களுக்கு ஒருகாலும் வருத்தத்தை யுண்டாக்கக்கூடாது. வரும்படியைப் பார்த்து அதற்குத் தக்கபடி செலவு செய்யவேண்டும். வரவில் நாலில் ஒரு பங்குதான் செலவழிக்கவேண்டும். சிலவேளை மூன்றிலொன்று செலவழிக்கலாம். எப்போதாவது தான் வரும்படியிற் பாதி செலவழிக்கலாம். இஷ்டர்களை மந்திரிகளாய் வைத்துக்கொள்ள வேண்டும். ஒருபோதும் கோபத்தை யடைவதுகூடாது. மந்திரிகளை அதிகமாயும் உபசரிக்கக்கூடாது. அவர்களோடு விரோதத்தையும் அடையக் கூடாது. ஒவ்வொரு பக்ஷத்திலும் பட்டணம் கோட்டை மலை நாடு தீவு நதி தீரம் ஸமுத்திர தீரம் அநேக தேசம் வர்ஷம் இவைகளில் வசிப்பவர்களைத் தூதர்களைக் கொண்டு கவனிக்கச் செய்யவேண்டும். காஷாயம் முதலியவை தரித்த ஸந்யாசிகள் போலவும் இன்னும் வேறு வேஷதாரிகள் போலவும் சாரர்களை யனுப்பவேண்டும். வருஷந்தோறும் ஆங்காங்கு உத்யோகஸ்தர்களை யேற்படுததவேண்டும். அவர்களை அடிக்கடி மாற்றிக்கொண்டே யிருக்கவேண்டும். வேறு தேசத்துத் தூதன் தனது தேசத்தில் வந்திருக்கிறானவென்று பார்க்கவேண்டும். அப்படி வந்திருந்தால், அவனைத் தண்டிக்கக்கூடாது. அவனுக்கு மரியாதை செய்தனுப்பவேண்டும். முன்போகிறவனையும் பக்கத்தில் சஞ்சாரம் செய்கிறவர்களையும் பின்னால் வருகிறவனையும் சேனாபதியையும் மந்திரியையும் தமது பிரதிநிதியையும் ஸாரதியையும் சாமரம்போடுகிறவனையும் ஸமீபத்திலுள்ள தூதனையும் எப்போதும் வெகுமதியால் ஸந்தோஷப்படுத்திக்கொண்டே யிருக்கவேண்டும். தேசத்தையும் காலத்தையும் பலத்தையும் பொக்கிஷத்தையும் தமது உத்ஸாகத்தையும் முதலில் பரீக்ஷித்துக்கொண்டு பிறகு சத்ருவிஷயமாய் உத்தேசிக்க வேண்டும். தமது நண்பர் அவரது நண்பர் பொதுவாய் நல்லவர் இவர்களது பலாபலத்தை முதலில்

பரியாலோசனை செய்து பிறகு சத்ருவினுடைய பலாபலத்தை ஆராய்ச்சி செய்யவேண்டும். தமது சத்ருவையும் அவனது சத்ருவையும் அவனது மித்திரரையும் பற்றி நன்றாய் ஆலோசிக்கவேண்டும். பிறகு தமது சத்துருவின் சத்துருவோடு சிநேகம் செய்துகொள்ளவேண்டும்.

சத்துருவின் ராஜ்யத்திலிருக்கும் நதிகள்கோட்டைகள் மலைகள் காடுகள் குறுக்கு வழிகள் ஜலாசயங்கள் இவைகளைச்சாரர்களை கொண்டு பரிசீலனம் செய்யச்செய்து அவைகளுக்குத் தக்கவாறு தமது இராஜ்யத்திலும் ஏற்பாடுசெய்யவேண்டும். தான் எங்கேசென்றாலும் ஒருவரோடும் சொல்லக்கூடாது. கிழக்கில் போக இச்சையிருந்தால் வடக்கே கொடியை நாட்டவேண்டும். முன் செல்பவனை வடக்கிலேயே போகச்செய்து அவன் இரண்டு மைல் சென்ற பிறகு தான் கிழக்கேசெல்லவேண்டும். யாத்திரைக்குப் போகும்போது யந்திரம் ஆயுதம் வாகனம் பலம்தானியம் முதலியவைகளைப்போதுமான அளவு எடுத்துக்கொண்டு புறப்படவேண்டும். தமது பட்டணத்திலும் கோட்டையிலும் தேசத்திலும் ஜனசஞ்சாரமில்லாத வனத்திலும் பணத்தைச் செலவழித்து அநேக ஜலாசயம் ஏற்படுத்தவேண்டும். இவைகளில் செலவழிப்பதைச் செலவாக நினைக்காமல் தமது ரக்ஷணமாக நினைக்க வேண்டும். தர்மத்திற்காகச் செலவழிப்பது சேர்த்துவைக்கும் முதலுக்குச் சமானமாம். ஆபத்திற்காகத் தனத்தையும், தனத்தால் பத்னியையும், தனம் பத்தினிகளால் தன்னையும் எப்போதும் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். சேனையில்லாமல் பட்டணத்திற்கு வெளியே போவதுகூடாது.

தனியே கிராமத்தில் சஞ்சரிக்கக்கூடாது. ஒருவனாக எங்கேயும் படுக்கக்கூடாது. கால்நடையாய் எங்கும்போகக்கூடாது. அடிக்கடி பிறர் வீட்டிற்குப் போகக்கூடாது. வாசற்காவற்காரன், ஜலம் கொடுப்பவன், வண்ணான் இவர்களை நம்பக்கூடாது. பிறர் கொடுக்கும் தண்ணீரைவாங்கிப் பரீக்ஷித்துச் சாப்பிடவேண்டும். சபையில் அரைசாமம் இருக்கவேண்டும். அதற்கு மேல் இருக்கக்கூடாது. தமக்குத் துவேஷியானவனைப் பட்டணத்திற்கு வெளியே துரத்தி

விடவேண்டும். சபையில் கால்நீட்டிக்கொண்டாவது கை முழங்கால் இவைகளைக்கட்டிக்கொண்டாவது இருக்கக்கூடாது. சபையில் எப்போதும் அதிகமாய்ச் சிரிக்கக்கூடாது. அழுக்கு வஸ்திரங்களோடு போகக்கூடாது. தாஸி, சோதிடர், வைத்தியர், பாடகர், வந்திகள், நடர், பண்டிதர், தர்மசாஸ்திர மறிந்தவர், தர்க்க பண்டிதர், வைதிகர், பிராம்மணர் இவர்களுக்குத் தினந்தோறும் ஸம்மானஞ் செய்து பூஜிக்கவேண்டும். நாவிதரை அதிகமாய் நம்பக்கூடாது. ஜனங்களுக்குக் கௌரவமுண்டாகும்படி ஆள வேண்டுமே யல்லது வீணாய் ஜனங்களை தண்டிக்கக்கூடாது. வருகிறவர்கள் அரண்மனை வாசலிலுள்ள காவற்காரரிடம் தெரிவித்து இராஜனது ஆக்ஞையைப்பெற்று உள்ளே சென்று அவனது சம்மதத்தின் பேரில் அங்கே உட்காரவேண்டும். மண்டலாதிபதிகள் அரசனது எதிரில் நிற்கவேண்டும். அவர்கள் கையைக் கட்டிக்கொண்டு காலை ஒதுக்கிவைத்துக்கொண்டு அரசனையே பார்த்துக்கொண்டு நிற்கவேண்டும்.

அரசனுக்கெதிரில் சிரிக்கக்கூடாது; கோட்டாவி விடக்கூடாது; இரும்பக்கூடாது; எச்சில் உமிழக்கூடாது. எல்லாரும் சபையில் போகும்போதும் வரும்போதும் அரசனுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும். மற்ற அரசரும் கூட இராஜ ஸந்நிதியில் இரைந்து பேசக்கூடாது. சட்டையில்லாமல் சபையில் உட்காரக்கூடாது. அரசர் வேட்டையாடும்போது யானையை அடிக்கக்கூடாது. சூல்கொண்ட மானையும் அடிக்கக்கூடாது. மிருகம் தண்ணீர் குடிக்கும்போதும் தூங்கும்போதும் அதை அடிக்கக்கூடாது. தம்மிடம் நம்பி ஓடி வந்த மிருகத்தையும் கொல்லக்கூடாது. கிரீடித்துக்கொண்டிருக்கிற மிருகத்தையும் கொல்லக்கூடாது. எட்டுத்திக்குகளிலும் காவற்காரரை யேற்படுத்திவிட்டு வேட்டைக்கு ஆரம்பஞ்செய்ய வேண்டும். இராத்திரியில் சிநேகிதனோடு வேறுவேடம் பூண்டு பட்டணத்தில் ஆங்காங்கு சஞ்சரிக்கவேண்டும். ஜனங்கள் பேசும் வார்த்தைகளைச் சுபமானாலும் அசுபமானாலும் கேட்கவேண்டும். இவ்வாறு தாம் இராத்திரியில் போகமுடியா விட்டால், தமது ஆப்த

மித்திரரை அனுப்பலாம். தமது வீட்டுச்சமாசாரத்தை சபையில் சிறிதும் வெளியிடக் கூடாது. சத்துருக்களின் பலத்தைக்கேட்டுத் தமது தைரியத்தை விட்டுவிடக் கூடாது. யுத்தகளத்திலிருந்து ஒருகாலும் ஓடக்கூடாது. ஒருகாலும் சத்துருவுக்குத் தமது முதுகைக் காட்டக் கூடாது. சிற்றுறையும் ஓடத்தால் தாண்டக்கூடாது. ஒவ்வொரு ஆறுக்கும் அணை போடவேண்டும். ஓடத்திலிருந்து பெண்டுகளோடு ஜலக்ரீடை செய்வதுகூடாது. கடைத்தெருவின் மத்தியிலும் நான்கு சந்துகள் கூடுமிடத்திலும் நிற்கக்கூடாது. தமது மனைவி புத்திரர் இவர்களை யடிக்கக்கூடாது. தமது பெயர்போட்ட வாகனத்தைத் தவிர வேறுவாகனத்தின் மீதேறி வெளியே செல்லக் கூடாது. சிற்சிலவேளை தவிர மற்றவேளைகளில் மொட்டையடித்துக் கொள்ளக் கூடாது. பர்வகாலங்களில் வீட்டில் ஸ்நானஞ்செய்யக் கூடாது. காலால்வில்லையும் பாணத்தையும் ஆயுதங்களையும் தொடக் கூடாது. பக்ஷிகளுடன் அதிகமாய் விளையாடக் கூடாது. அரண்மனை வாசற்படியில் நிற்கக்கூடாது. ஸ்திரீகள் ஜலங்கொண்டு வரும் வழியில் போகக்கூடாது. தானியத்தை எப்போதும் எங்கேயும் ஓரேவிலையாய் விற்கும்படி நேரிட்டால், அக்காலத்தில் வரியைக் குறைக்கவேண்டும். எப்போதும் ஜனங்களிடத்தில் அதிகக்கடுமை காட்டாமல் மிகவும் உதாரமாய் இருக்கவேண்டும். திருடரிடமிருந்து சாமான் மீட்கப்பட்டாலும், அவர்களைவிட்டுவிடக்கூடாது. ஒருவருக்கும் முகத்தைப்பார்த்துத் தீர்மானம் சொல்லக்கூடாது. நியாயவிஷயத்தில் தாமேசென்று விசாரிக்கவேண்டும், வருத்தமடைந்தவரின் விருத்தாந்தத்தைத் தாமே முழுமையுங்கேட்கவேண்டும். தம்மையே எப்போதும் புகழ்ந்துகொள்ளக் கூடாது. எப்போதும் ஸபையில் பண்டிதரை வைத்துக்கொண்டே இராஜகாரியங்களை முடிக்கவேண்டும். யாகம் தானம் ஜபம் ஹோமம் ஸந்தியாவந்தனம் தியானம் சிவபூஜை ஸ்நானம் புராண சிரவணம் இவைகளைத் தினந்தோறும் பக்தியோடு செய்யவேண்டும். மயக்கமுண்டாகும் பதார்த்தங்களை உபயோகிக்கக்கூடாது. தமது காலால் நடந்து யாத்திரை செய்யக்கூடாது. ஏகாதசியன்று பலகாரம் அவசியம் செய்யவேண்டுமேயல்லாது, நாள் முழுவதும் பட்டினியாக இருக்கக்

கூடாது. எந்தப்பிராம்மணன் எதை யாசித்தாலும் அவனுக்கு அதைக் கொடுக்கவேண்டும். எப்போதும் பிராம்மணரையேமிகவும் ஆராதிக்கவேண்டும். உற்சாகம் வருங் காலங்களில் ஜெயிலில் அடைக்கப்பட்டவர்களை விட்டுவிடவேண்டும். தமது உத்தரவை மீறின வர்களைத் தலைவாங்குவதற்குச் சமானமாய்த் தண்டிக்கவேண்டும். தமது தூதரை அவமதித்தால் தம்மை அவமதித்ததாக எண்ணவேண்டும். தமது தூதரைப் பூஜித்தால், தம்மைப் பூஜித்ததற்குச்சமானமாகக் கருதவேண்டும். ஏ குச! நான் இவ்வாறு இராஜநீதியை வெகு விஸ்தாரமாய் உனக்குச் சொல்லிவிட்டேன். நான் தினந்தோறும் எவ்வாறு காரியங்களை நடத்துகிறேனோ அந்த மாதிரியே நீயும் நடத்திவர வேண்டும்.

## 16-வது சருக்கம்.

முற்றிற்று.

## 17 - வது சருக்கம்.

### இராமதாஸர் கூறுகிறார்.

ராமபிரான் பிறகு ஒரு சுபதினத்தில் குசனது புத்திரியான ஹேமை என்பவளுக்குச் சுயம்வரம் ஏற்படுத்தினர். அந்தச் சுயம் வரத்திற்கு சகல தேசத்தரசர்களும் வந்தார்கள். தேவர்கள், கந்தர் வர்கள், நாகர்கள், வித்யாதரர், முதலியவர்களும் வந்து சபை யில் நிறைந்திருந்தார்கள். இப்படி எல்லாரும் சபையில் வந்து நிறைந்தபிரகு ஹேமை என்பவள் மங்களஸ்நானம் செய்துவிட்டு, சகல ஆபரணங்களையும் அணிந்துகொண்டு மங்களவாத்தியங்கள் முழங்க சபையில் பிரவேசித்தாள்; அங்கு வந்து வீற்றிருக்கும் அநேகமான அரசர்களைப் பார்த்தாள். அவளது கடாக்ஷத்திற்கு இலக்கான அரசர்கள் யாவரும் தங்களை மறந்து இருந்தபடி இருந்து விட்டார்கள்.

இச்சமயம் அச்சபையில் வந்திருந்த அவந்தி நாதனுன சித்தரா ங்கதன் என்பவன் சபையிலுள்ளவர்களை மோகனுஸ்திரத்தினுல் மய க்கி விட்டு, ஹேமை என்பவளை யெடுத்துத் தன் இரதத்தின் மீது வைத்துக்கொண்டு இரண்டுமைல் தூரத்திற்கப்பாற்போய், "தங்கப் பதுமைக் கொப்பான இந்தக் கன்னிகையைத் திருடன்போல் அப கரித்துப்போவது நமது வீரத்தன்மைக்கு அழகாகுமோ?" வென்று நினைத்து அங்கேயே நின்றுவிட்டான். இச்சமயம் ராமர் முதலிய வர்கள் வேறு வேலையில் பிரவேசித் திருந்தார்கள். உக்ரபாகுவின் குமாரன் சித்திராங்கதன் ஹேமையைப் பலாத்காரமாகக் கொண்டு போய் விட்டானென்ற சங்கதி பட்டணமெங்கும்பரவி எங்குக்கண் டாலும் ஆ! ஆ!! வென்னும் சத்தமுண்டாய்விட்டது. இச் சமயம் சித்திராங்கதன் தான் விடுத்த மோகனுஸ்திரத்தை உபசம்ஹாரம் செய்துகொண்டான். உடனே மயங்கிக் கிடந்த அரசர்கள் யாவ ரும் எழுந்து விஷயந் தெரிந்துகொண்டு சேனைகளோடு அவனிடம் சண்டைக்குப்போய் அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். சித்தராங் கதன் தந்தை தன் புத்திரனுடைய செய்கையைப் பார்த்துப் பேசாம

விருந்தான். இருதரத்தாருக்கும் சண்டை பலத்துவிட்டது. அர சர்கள் சித்திராங்கதன்மேல் கோடிக்கணக்கான பாணங்களைப் பிரயோ கித்தார்கள்.

சித்திராங்கதன் உடனே ஒரு வாயுவாஸ்திரம் எடுத்து அரசர்க ளனைவருடைய ரதங்களையும் ஆகாயத்தில் கர கர வென்று சுழலும் படி செய்தான். இது பார்ப்பவர்களுக்கு மிகவும் வேடிக்கையா யிருந்தது.

உற்சவத்திற்காக அங்கு வந்திருக்கும் லவன் முதலியவர்கள் ராமபிரானது ஆக்ஞையால் தங்கள் சேனைகளோடு யுத்தத்திற்கு வந் தார்கள். பயங்கரமான யுத்தம் உண்டாயிற்று. அவர்கள் அநேக சஸ்திரங்களால் சித்திராங்கதனை யடித்தார்கள். சித்திராங்கதன் தனது பாணங்களால் அவைகளைத் தடுத்துவிட்டு, யூபகேதுவை எதி ர்த்தான். சித்ரகேது அங்கதன் இவர்களையு மெதிர்த்துச் சண்டை செய்தான். ஆச்சரியகரமான அவனது வேலைத்திறமையைப் பார் த்த லவன் உடனே பாணங்களை எய்து திவ்யமான அவன்கைவில்லை முறித்து அவனை மிகவும் ஆகுலப்படுத்தினன். அதைக்கண்ட உக்ர பாகுவும் உடனே மிகக் கோபமடைந்து வெகுவேகமாய் அவனுடன் சண்டைசெய்யப் போனன். அப்போது லவன் பாணங்களைப் பிர யோகித்து அவனது இரதம் முதலியவைகளை முறித்துவிட்டான். உடனே உக்ரபாகு வேறு இரதத்தி லேறிக்கொண்டு பாணங்களைப் பிரயோகித்து லவனை மூர்ச்சை யடையும்படி செய்தான். அச்சம யம், ஹா! ஹா! வென்னும் கூக்குரலுண்டாயிற்று. உடனே குசன் அவனேடு சண்டைக்குச் சென்ருன். அங்கதன் முதலியவர்களும் இரதத்தி லேறிக்கொண்டு உக்ரபாகுவை எதிர்த்தார்கள்.

உக்ரபாகு பாணங்களால் இவர்களை மிகவும் உபத்திரவிக்கக் குசன் தனது பாணங்களால் அவனுடைய ரதத்தையும் பாணங் களையும் ஒடித்துவிட்டான். பிறகு உக்ரபாகு மிகவும் பயந்து திகைத்து நின்ருன். குசன் அவனையும் அவனது குமாரனையும் வாத்திய கோஷத்தோடு ஸ்ரீராமரது ஸந்நிதிக்கு அழைத்துச் சென்ருன். ராமர் தமது சிநேகிதனுன அவனை மிகவும் உபசரித்

தார். பிறகு ராமர் குசனுக்கு, அகஸ்தியரால் கொடுக்கப்பட்ட திவ்ய மான கங்கணத்தைப் பிரியத்தோடு கொடுத்தார். அதைக் குசன் வா ங்கி யணிந்துகொண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். பிறகு குசன் அகஸ்தியரை வணங்கி "இந்தக் கங்கணம் தங்களுக்கு எவ்வாறு கிடைத்தது?'' என்றுகேட்டான். அவர் அதன் வரலாற்றைச் சொல் லுகிறார்—முற்காலத்தில் இந்திரனுடைய சத்துருக்களான அநேகர் சமுத்திரத்தில் மூழ்கி யொளிந்துகொண்டார்கள். அப்போது இந் திரன் என்னைமிகவும் பிரார்த்தித்துக் கொள்ள, நான் சமுத்திரத்தை விளையாட்டாகவே குடித்துவிட்டேன். அப்போது தீவுகளுக்குப் போக்குவரவு முழுவதும் நின்று போனபடியால், மறுபடியும் இந் திரன் என்னை வேண்டிக்கொள்ள பயங்கரமான சமுத்திரஜலத்தை மூத்திரம்போல் மறுபடியும் வெளியேவிட்டுவிட்டேன். அந்த வேளை யில் சமுத்திரம் ஸந்தோஷத்தோடு இந்தக் கங்கணத்தை எனக்குக் கொடுத்தது. நான் முன் அதை இராமரிடம் கொடுத்திருந்தேன். அவர் அதை இப்போது உனக்குக் கொடுத்தார்'' என்றார். இவ்வாறு முனிவர் கூறியதும் குசன் மகிழ்ந்து "முனிவர் பிரானே! இப்பொ ழுது ரணகளத்தில் லவன் அடிபட்டு மூர்ச்சித்து விழுந்திருப்பதால், அவனை யெழுப்பத் தாங்கள் ஓர்உபாயங் கூறவேண்டும்''என்று கேட் டான். முனிவர் குசனைப்பார்த்து „அப்பா! முன் பரதன் மிதிலைக் குப் போகும் வழியில் அரசரால் அடிக்கப்பட்டு மூர்ச்சையடைந்து விழுந்தபோது முத்கலாச்ரமத்திலிருந்து லக்ஷ்மணர் ஔஷதிகளைக் கொண்டுவந்து அவனைக் காப்பாற்றினர். இப்போது நீயும் அதே கொடிகளைக் கொண்டுவந்து லவனை எழுப்பு; அல்லது ஹநுமாரை யாவது அந்த ஆச்சிரமத்திற்கு அனுப்பு'' என்று சொன்னர். இவ் வார்த்தை செவியிற்படுமுன் ஹனுமார் வெகுவேகமாய் அந்த ஆச்சிர மத்திற்குச்சென்று, ஔஷதிகளைக் கொண்டுவந்து, லவனை யெழுப்பி னர். அவனது சேனைகளும் உடனே உயிர் பெற்றன.

### விஷ்ணுதாசர் வினவுகிறார்.

பரமகுருவே! அந்த முத்கல முனிவரது ஆச்சிரமத்தில், இறந்த வரைப் பிழைப்பிக்கும் படியான திவ்ய ஔஷதிகள் இருக்கக் காரண

பென்ன? இவை இருக்கும்போது முன் ஜாம்பவான் ஹநுமாரைத் துரோண பருவதத்திற்குப்போகும்படி ஏன் அனுப்பினர்? இந்தச்சந்தேகத்தைத் தாங்கள் தயவுசெய்து தீர்க்கவேண்டும்.

**ஸ்ரீ ராமதாசர் கூறுகிறார்.**

கருடன் தனது தாயை விடுவிப்பதற்காக அமுதகலசத்தைத் தனது மூக்கினல் கொண்டுவந்தபோது, அந்தக் குடத்திலிருந்து திவலைகள் முத்கலமஹரிஷியின் ஆச்சிரமத்தில் விழுந்ததாலும், அவரது தபோபலத்தினலும் அங்கே திவ்ய ஔஷதிகள் உண்டாயின. இது ஜாம்பவனுக்குத் தெரியாமலிருந்ததால், அவர் ஹநுமாரை துரோண கிரிக்கு அனுப்பினர். இது நிற்க; இனி மேலே சொல்லப்போகும் கதையையும் கவனமாகக்கேள்.

பிறகு லவன் முதலியவர்களும் சந்தோஷமாய்த் தங்கள் பட்டணத்திற்கு வந்து, முனிவரையும் ராமர் முதலியவர்களையும் வணங்கி ராமபிரான் ஸந்நிதியில் நின்றார்கள். அப்பொழுது பட்டணமெங்கும் பெரும் உற்சவம் கொண்டாடப்பட்டது. லவன் ஹநுமாரால் மூர்ச்சை தெளிவிக்கப்பட்டான் என்பதை ராமர் தெரிந்துகொண்டு அவனை ஆலிங்கனஞ்செய்து மிகவும் மகிழ்ந்தார்! பிறகு ராமர் ரத்னமயமான வேறு இரண்டு கங்கணங்களைப் பிரியத்தோடு ஹநுமாருக்குக் கொடுத்தார். அவர் அவைகளை அணிந்துகொண்டு மிகவும் மகிழ்ந்தார்.

பிறகு ராமர் அகஸ்தியரால் கொடுக்கப்பட்ட மற்றொரு திவ்ய கங்கணத்தை லவனுக்குக் கொடுக்க, அவன் அதை அணிந்துகொண்டு மிகவும் மகிழ்ந்தான். அப்போது லவன் முனிவரைவணங்கி "தங்களுக்கு இந்தக் கங்கணம் கிடைத்த வரலாற்றைக் கூறவேண்டும்" என்றுவேண்ட, அகஸ்தியர் கூறுகிறார். ஒருகாலத்தில் தண்டகாரண்யத்தி லுள்ள ஒரு குளத்திற்கு நான் ஸ்நானஞ்செய்யப் போனேன். அங்கே ஸ்நானஞ்செய்துவிட்டு நித்தியவிதிகளை முடித்துக்கொண்டு அங்கு ஒரு க்ஷணகாலமிருந்தேன். அப்போது ஒருதேவன் ஆகாயத்திலிருந்திறங்கி, அங்கேவந்து சேர்ந்தான். அவனோடு திவ்யாலங்கார பூஷிதைகளான அநேக ஸ்திரீகள் வந்திருந்தார்கள். அவனும் திவ்யாபரண

பூஷிதனாக விளங்கினான். அவன் ஆகாயத்திலிருந் திறங்கியதும் உடனே அக்குளத்திலிருந்து துர்க்கந்தத்தோடு கூடின ஒருபிணம் கிளம்பிக் கரையோரமாய் மிதந்துவந்தது. அந்தத் தேவன் விமானத்திலிருந்து இறங்கி, அப்பிணத்தினருகே சென்று அதன் மாமிசம் முதலியவைகளை வெட்டி அதை ஆதரவோடு தின்றான். பிறகு ஜலத்தைக் குடித்துவிட்டு விமானத்தின்மீ தேறிவிட்டான். அப்பிணமும் குளத்திலேயே மூழ்கிவிட்டது. அந்தத்தேவன் புறப்படுவதற்குத் தயாராயிருக்கும்போது, நான் "ஐயா சற்று நில்லும்; எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. ஸ்வர்க்கலோகத்திலுள்ள உமக்கு இவ்விதம் பிணத்தைத் தின்னும்படி ஏன் நேரிட்டது? க்ஷணம் நின்று பதில் சொல்லவேண்டும்'' என்று கேட்டேன். உடனே அந்தத் தேவன் என்னைப்பார்த்து "ஐயா! முற்காலத்தில் விதர்ப்பதேசத்தில் சுதேவனென்று ஓர் அரசனிருந்தான். அவனுக்கு சுவேதனென்றும் சுரதனென்றும் இரண்டு பிள்ளைகளிருந்தார்கள். அவர்களில் நான்தான் சுவேதனென்பவன். அந்தஜன்மத்தில் ஒரு தர்மமும் நான் செய்யவில்லை. ஆனால் ராஜ்யமதத்தால் நான் பாவங்களையே செய்துகொண்டு இருந்தேன். எனக்குப் பிள்ளையில்லை. ஆகையால் நான் வயோதிகப் பருவமுற்றதும் சுரதனென்கிற எனது சகோதரனை ராஜ்யத்தில் ஏற்படுத்திவிட்டு, காட்டிற்குச்சென்று கொரேமான தவஞ்செய்தேன். ஒரு சமயத்தில் ஸ்நானஞ் செய்ய ஒருகுளத்தில் இறங்கினவுடன், தவறி விழுந்து இறந்துவிட்டேன். பிறகு தபோபலத்தால் ஸ்வர்க்கத்தையடைந்து எல்லாச் சுகங்களையும் அனுபவித்தேன். அங்கே எனக்குத் தகுந்தபடி புசிப்பதற்கு ஒன்றுமில்லாமையால், நான் இந்திரனை "இங்கே சுகங்களெல்லாம் இருக்கின்றன. ஆனால் எனக்குத்தகுந்தபடி புசிப்பதற்கு ஒன்றுமில்லையே'' என்று கேட்க, இந்திரன் "நீ பூமியில் ராஜ்ய மதத்தால் ஒரு தர்மத்தையும் செய்யாததால் இங்கு உனக்கு ஒன்றும் கிடைக்காது. ஆகையால் நீ தினந்தோறும் விமானத்திலேறிக்கொண்டு குளக்கரைசென்று. அங்கே மிதக்கும் உனது பிரேத சரீரத்தைத்தின்று விட்டுவா. அது வெகு காலமானாலும் குறைவையடையாது.'' என்றான். இதைக் கேட்டு நான் "திவ்யான்னங்களை எப்போது அடைவேன்'' என்று

கேட்க, இந்திரன் "இப்போது தண்டகாரண்யம் நிர்மானுஷ்யமாயிருக்கிறது. விந்திய மலையின் விருத்தியை யடக்க, தேவர்கள் வேண்டுகோளின் பேரில் அகஸ்தியர் தமது மனைவியோடு காசியைவிட்டுத் தண்டகாரண்யத்திற்கு வந்து, ஒரு நாள் அக்குளத்தில் ஸ்நானஞ் செய்து விட்டுக் கரையில் நின்று கொண்டிருக்கும்போது அவரை நீ பார்த்து உனது கங்கணத்தை அவருக்குத் தானம் கொடுக்கப்போகிறாய். அப்போது உனக்கு திவ்யான்னம் கிடைக்கும்" என்றான். நான் அதுமுதல் வெகு காலமாய் இங்கு வந்து எனது சவத்தைப் பக்ஷித்துக்கொண் டிருக்கிறேன். இது வரையில் நான் இங்கே ஒருவரையும் கண்டதில்லை. இப்போது நான் தங்களைக் கண்டபடியினால், தாங்கள் தான் அகஸ்தியராயிருக்கவேண்டுமென்று எண்ணுகிறேன். இன்று உங்களால் நான் கிருதார்த்தனானேன். ஆகையால் நான் கொடுக்கும் இந்தத்தானத்தைத் தாங்கள் பெற்றுக்கொள்ள வேண்டும்." என்று சொல்லித் தன் கங்கணத்தை எனக்குத் தானங் கொடுத்து விட்டு, ஸ்வர்க்கலோகம் சென்றான். அது முதல் அந்தச் சவமும் ஒரு காலும் ஜலத்திலிருந்து மேலே வரவில்லை. ஸ்வர்க்கலோகத்தில் அவன் திவ்யான்னத்தையும் அடைந்தான். இவ்வாறு நான் காட்டில் அடைந்த கங்கணத்தை ராமரிடம் கொடுத்தேன். அவர் இப்போது அதை உனக்குக் கொடுத்தார்" என்றான். இவ்விதம் அகஸ்தியர் சொன்னதைக்கேட்ட "லவன் தண்டகம் ஏன் காடாகவிருந்தது அதைச் சொல்லவேண்டும்" என்றுகேட்டான்.

அகஸ்தியர் கூறுகிறார்.

இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த தண்டகனென்னு மோரரசன் பாபகர்மங்களையே செய்துகொண் டிருந்தான். அவன் ஒரு காலத்தில் தனது சேனையோடு வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அங்கே ஒருமானைக்கண்டு குதிரையின்மீதேறிக்கொண்டு ஒருவனாக அதைத் துரத்திச் சென்றான். கடைசியாக அந்தமான் மறைந்து விட்டது. பிறகு அவன் அதிக தாகத்தோடு ஒரு குளத்தருகிற்குச் சென்று அங்கே ஜலத்தைக்குடித்து விட்டுத் தனது குருவினுடையதென்று தெரிந்துகொள்ளாமல்

பிருகுவின் ஆச்சிரமத்திற்குச் சென்றான். அங்கே பிருகு மஹரிஷி யில்லாதபோது ருதுவாகாத அவரது அழகிய பெண்ணைப் பார்த்து மிகவும் காமவிகாரமடைந்து, அவளைப்புணர இச்சித்து ; பிரார்த்தித்தான். அவள் "நான் சுவதந்தரையல்ல ; என் பிதா பிருகு மஹரிஷி. அவரது உத்தரவில்லாமல் நான் ஒன்றும் செய்ய மாட்டேன். அப்படி என்னை யடையவேண்டுமானால், வெளியிற் சென்றிருக்கும் அவர் வந்தவுடன் அவரிடம் சொல்லி என்னை மனைவியாய் அடையலாம்" என்று பலவாறாகச் சொல்லியும் அவ்வரசன்கேளாமல் பலாத்காரமாக அவளை அனுபவித்து விட்டுத் தன் பட்டணத்திற்குச்சென்றான். பிறகு அப்பெண் தன்தந்தை வந்ததும் வெகு துக்கத்தோடு சகல விருத்தாந்தங்களையும் கூறினள். அதைக் கேட்டதும் மஹரிஷி தமது பெண்ணைச் சமாதானப்படுத்தி விட்டு வெகு கோபத்தோடு கையால் ஜலத்தை யெடுத்துக்கொண்டு. "தண்டனோடு கூட நூறுயோஜனை நீளமுள்ள அவனது இராஜ்யமும் இப்போது ஒரு க்ஷணத்திற்குள் எரிந்து விடக்கடவது ! அங்கே நீர் நிலை யெங்கும் இல்லா தொழியக்கடவது ! அங்குள்ள சராசர முழுவதும் தொலைந்து விடவேண்டும்! " என்று சபித்து விட்டார். இவ்விதம் முனிவர் சபித்ததும் அவர் பெண் விநயத்தோடு அந்தச் சாபத்தின் முடிவையும் கேட்டாள். முனிவர் "பெண்ணே அகஸ்திய முனிவர் தமது மனைவியோடு காசியிலிருந்து இந்தப் பிரதேசத்திற்கு எப்போதுவரப் போகிறாரோ அப்போது இங்கேஜலம் முதலியன உண்டாகும். முனி சிரேஷ்டர்களும் அங்கு வசிப்பார்கள். தண்டனென்னும் அரசனுக்காக அது அரண்யமான படியால், இதைத் தண்டகாரண்யமென்று ஜனங்கள் சொல்லுவார்கள். அப்புறம் இராமர் இங்கே வருங்காலத்தில் அவரது அநுக்கிரகத்தால் அநேக க்ஷேத்திரங்கள் உண்டாகப் போகின்றன. ஆனதால் ஜனங்கள் இதை இராம க்ஷேத்திரமென்றும் சொல்லப்போகிறார்கள். முனிவருடையவும் இராமருடையவும் அநுக்ரஹத்தால் இது முன் போல் ஆய்விடும் ; தேசங்களுக்குள் சிறந்ததாயும் ஆய்விடும். தண்டகத்திற்குச் சமமான தேசம் வேறு ஒன்றும் கிடையாது." என்று சொல்லிவிட்டு அப்பெண்ணை

ஒரு ரிஷி குமாரனுக்கு விவாகம் செய்து கொடுத்து இமாசலத்திற்குத் தவம் செய்யப் போய்விட்டார். அந்த இராஜ்யம் பிருகுவின் சாபத்தால் நூறுயோஜனை தூரமும்எரிந்துபோய்விட்டது. அங்கே நானும் இராமனும்போன பிறகு ஸ்தாவர ஜங்கமங்களுண்டாகிச்சகல வளங்களும் நிறைந்து விட்டன.

ஏ லவ! நீ கேட்டபடி கங்கணம் தண்டகாரண்யம் இவைகளைப் பற்றி உனக்குச் சொன்னேன் என்றார்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

இவ்விதம் முனிவர் சொன்னதைக்கேட்டு லவன் சந்தோஷமடைந்து அவரை மிகவும் வணங்கி, ஸ்ரீராமரைச் சேவித்தான். பிறகு இராமரும் மங்களவாத்திய முழங்க வெகு உற்சாகத்தோடு அந்த ஹேமையைத் சித்ராங்கதனுக்கு விவாகம் செய்துகொடுத்தார். கோடிக்கணக்கான திரவியத்தையும் யானைமுதலியவைகளையும் ஸ்திரீதனமாகக் கொடுத்தார். அன்று அயோத்தியில் பெரும் உற்சவமாயிருந்தது. பிறகு உக்ரபாகுவுக்கு மிகவும் மரியாதைசெய்து அனுப்பினர். 'முனிவர்களும் அரசர்களும் வெகு சந்தோஷமாய்த் தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றார்கள்.

## 17-வது சருக்கம்.

(முற்றிற்று.)

## 18-வது சருக்கம்

---

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமர் அயோத்தியாபுரிபட்டணத்தில் சீதாதேவிக்குப் பரமானந்த மளித்துக்கொண்டு இராஜ்ய பரிபாலனம் செய்து வருகையில், ஆயுதபாணியாகிய எவனும் இராமமுத்திரையில்லாமல் வெளிக்கிளம்பக் கூடாது. சிற்றரசர்களும் இராமமுத்திரை தரித்துக்கொண்டே வெளிக்கிளம்ப வேண்டும். விஷ்ணுதாஸ! அந்த இராமமுத்திரையின் விவரத்தைக் கூறுகிறேன்கேள்.

### ஸ்ரீராமமுத்திரையின் விவரம்.

நீளத்தில் பதினைந்தும் அகலத்தில் பதினைந்துமாகசிவப்புரேகைகளை ஏற்படுத்தவேண்டும். நான்கு பக்கங்களிலும் முதல் வரிசை மஞ்சள் நிறமாக இருக்க வேண்டும். இரண்டு, எட்டு, இவ்விரண்டு வரிசைகளும் வெண்மையாக இருக்க வேண்டும். பிறகு கர்த்தா கிழக்கு முகமாக வீற்றிருந்து முத்திரையை மேற்குமுகமாக வைக்க வேண்டும். அதன்பின் வடக்குத்திக்கிலிருந்து மூன்றுவதில் வரிசையாக அடியிற் கூறுகிறபடி கறுப்புக் கோடுகளிழுக்க வேண்டும் வடக்கில் ஆரம்பித்துத் தெற்கில் முடிக்கவேண்டும். 2, 4, 6, 7, 8, 9, 11 இவைகளையும் அவ்வாறே செய்யவேண்டும். நான்காவது வரிசையில் 4, 6, 7, 11, இவ்வரிசைகளையும் அவ்வாறே செய்தல்வேண்டும் ஐந்தாவதுவரிசையில் 1, 2, 4, 6, இவைகளையும் அவ்விதமே செய்ய வேண்டும் ஆறுவது வரிசையிலும் ஐந்தாவது வரிசைக்குச் செய்தது போலவே செய்யவேண்டும். ஏழாவது வரிசையில், 9, 11 இவ்விரு வரிசைகளையும் கறுப்பாக்க வேண்டும். 8 வது முழுதும் கறுப்பாகவிருக்கவேண்டும். ஒன்பதாவது வரிசையில் 2, 4, 6. 7, 9, 10, 12, இவைகள் கறுப்பாக விருக்கவேண்டும் இவ்வாறே பத்தாவது வரிசையில் 4, 6, 7, 12 இவைகளைக் கறுப்பாக்கவேண்டும். பதினொன்றுவதில், 1, 2, 4, 6, 8, 9, 10, 12, இவைகளைக் கறுப்பாக்க வேண்டும். பன்னிரண்டாவதில் 1, 2, 4, 6, 8, 9, 10, 12 இவை முழுதும் கறுப்பாய் இருக்கவேண்டும். பதின் மூன்றுவது முழுதும்

கறுப்பாக இருக்கவேண்டும். இவ்வாறு புத்தியைச் செலவழித்து வரையும் முத்திரையின் நடுவில் ஏற்படும் வெண்மைநிறம் ராஜாராம் என்று காணும். இதுதான் இராமமுத்திரை. ஏ விஷ்ணுதாஸ்! இதை உனக்குக் கூறினேன், இனிமேலே கூறுவாம்.

இராமபிரான் ஒருசமயம் இவ்விதமான இராமமுத்திரையை ஒரு கல்லில் செதுக்கி அதைப் பிராமணர்களுக்குத் தானமாகக்கொடுத்தார். அந்தக்கல்லை இப்பொழுதும் இராமநாதபுரத்திற் காணலாம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

இராமபிரான் இராமமுத்திரை யிடப்பட்ட சிலையைப் பிராமணருக்குத் தானஞ்செய்ததின் காரணமென்ன ? இதை எனக்குத் தெரிவிக்க வேண்டும் என்றான்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஒருசமயம் ஸ்ரீராமபிரான் அநேக தானங்களைச் செய்யப்போவதாகக் கேள்விப்பட்டுப் பிரம்மபுரத்திலிருந்த பிராமணர்களெல்லாரும் மனமகிழ்ச்சியுடன் அயோத்திக்கு வந்தார்கள். அப்பொழுது இராமர் கந்தர்வராஜன் வீட்டிற்குப் போஜனஞ் செய்யப் போயிருந்தார். வந்த பிராமணர்கள் இராமர் விருந்துக்குச் சென்றிருப்பதாகக் கேள்விப்பட்டு, தாங்களும் அங்குச் சென்றார்கள். அங்கிருந்த தூதர்கள் பிராமணர்கள் வந்திருப்பதை இராமபிரானுக்குத் தெரிவித்தார்கள். இராமர் உடனே பரபரப்புடன் வெளியே வந்து, அவர்களை நமஸ்கரித்து உள்ளே அழைத்துச் சென்று ஆசனமளித்து உபசரித்துச் சற்றுப்பேசி யிருந்துவிட்டு ஸ்நானஞ் செய்து போஜனத்திற்குத் தயாராகும்படி சொன்னார். இப்பொழுது அந்தணர்களிற் சிலர் மற்றவரைப்பார்த்து, "ஸ்நானஞ் செய்வதற்கு முன்பல்லவா யாசிக்கவேண்டும்" என்றார்கள். சிலர், "இராமரிடம் நிர்ப்பந்தம் கிடையாது; எப்போது வேண்டுமானாலும் யாசிக்கலாம்' என்றார்கள். சிலர், இராமர் எப்போதும் பிராமணர்களுடைய எண்ணத்தைப் பூர்த்தி செய்கிறவர்" என்று சொன்னார்கள். இவ்விதம் பிராமணர்கள் கூறி ஆலோசிப்பதை யறிந்த இராமர் "அந்தணர்களே! தங்களுடைய கருத்தை

யறியலானேன். நீங்கள் இராஜ்யத்தை யடையவேண்டுமென்று எண்ணிச் சிரமப்படுகிறீர்கள். உங்கள் சிஷ்யரில் எவனையேனும் அனுப்பி உங்களுடைய அபிராயத்தைத் தெரிவித்திருந்தால், அதை உடனே நிறைவேற்றியிருப்பேன்'' என்று கூறி விட்டு, ''உடனே இலட்சுஷ்மணா! நான் பிரம்ம புரத்திலிருந்து வந்திருக்கும் இந்த அந்தணர்களுக்கு இராஜ்யதானம் செய்ய உத்தேசித்திருக்கிறேன். ஆகையால் ஒரு சிலையில் என் முத்திரையையும் இராஜ்யம் தானமாகக் கொடுக்கப்பட்டதென்பதையும் வரையும்படி செய் என்றார். உடனே இலக்ஷ்மணர் கல்தச்சர்களை அழைத்துவரும்படி வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டார். பிறகு பிராமணர்கள் இராகவரைப்பார்த்து எங்களுக்கு மிகவும் பசியாயிருக்கிறது; ஆகையால் போஜனத்துக்கு உத்தரவளிக்கவேண்டும்'' என்றார்கள். உடனே, இராகவர் அவர்களுக்குத் திவ்ய போஜனம் செய்விக்கும்படி உத்தரவிட்டார். பிறகு இராமசந்திரபிரபு அவ்விடத்திலேயே யிருந்து, ''சிலையிலெழுதி எப்பொழுது முத்திரையிடுகிறேனோ அதற்குப்பிறகுதான் நான்புசிப்பேன். செல்வம் நிலையற்றது. மனம் ஒரு கணமும் ஒரு நிலையில் நில்லாது. பிராணனிருப்பது நிச்சயமல்ல. காலனோகருணையற்றவன். ஆகையால் அறத்தை அதிசீக்கிரத்தில் செய்யவேண்டும். நூறு வேலைகளை விட்டாவது புசித்தல்வேண்டும். ஆயிரம் வேலைகளை விட்டாவது நீராடவேண்டும். இலக்ஷம் வேலைகளை விட்டாவது தானம் செய்யவேண்டும். கோடி வேலைகளைவிட்டாவது ஈசுவர பஜனம் செய்யவேண்டும். கீதையைக் கேட்பதற்கு கோடி விக்கினங்கள் நேரிடும். கங்கையில் நீராடுவதற்குப் பத்துக் கோடி விக்கினங்கள் நேரிடும். ஆகையால் அந்தணசிரேஷ்டர்களுக்குத் தான மளிப்பதில் பரபரப்புள்ளவர்களாயிருக்கவேண்டும். நித்திரைசெய்வதற்கும் புசிப்பதற்கும் சற்று முன்னும் சற்றுப் பின்னும் மனிதர்களுக்கு அனேகமாய்ப் புத்தி மாறுவதுண்டு; ஒருசமயம்போல் இருப்பதில்லை. ஆகையால் தானஞ் செய்ய மனம் நினைக்கும்போதே சிறிதும் தாமதியாமல் தானஞ் செய்யவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டிருந்தார். அப்பொழுது கல்தச்சர்கள் கண்டகி நதியிலிருந்து ஒன்பது முழ நீளமுள்ள ஒரு

கல்லைத் தூக்கிக்கொண்டு அவிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்களைப் பார்த்து இராமர், பின்வருமாறு அச்சிலையில்வரையும்படி சொன்னர்

சிலாஸாஸனம்.

சூரியவம்சத்திற்பிறந்து ஏழுதீவுகளுக்கும் பதியாகவிருக்கும்தசரத புத்திரராகிய இராமர், திரேதாயுகத்தில் பிர்மபுரத்து அந்தணர்களுக்கு மனமகிழ்ச்சியுடன் செய்த இராஜ்யதான சாஸனம். இச்சாஸனமானது சூரியனுள்ளளவும் இவ்வுலகத்தில் இராமசரித்திரம் விளங்கும் காலம்வரையிலும், காற்றுலாவும் வரையிலும் நிலைத்திருக்கட்டும். அந்தணர்களுக்கு மனமகிழ்ச்சியுடன் தானம் செய்த இந்தத் தர்ம சேதுவை ஒவ்வோரு காலத்திலும் பாலனஞ் செய்து வரவேண்டுமேன்று அரசர்களை இராமர்மிகவும் பிரார்த்திக்கிறர்.

ராஜாராம்.

இவ்விதம் சிலையில் வெட்டும்படி செய்து, இதில் ராமநாமமுத்திரையைப் போடும்படி அனுமாருக்கு உத்தர விட்டார். அனுமார் இராமபிரானது முத்திரையைச்சிலையில் அழுத்தினர். சிலையில் அம்முத்திரை ''ராஜாராம்'' என விழுந்தது. இதற்குள் அந்தணர்களும் போஜனம் செய்து விட்டு, இராமருடைய சந்நிதானத்துக்குவந்தார்கள். இராமர் அவர்களை ஆசனத்தில் வீற்றிருக்கும்படி உபசரித்தார். பிறகு சீதையையும் அருகில் வைத்துக்கொண்டு அந்தச்சிலாஸாசனத்தை அது எவ்வளவு நிறையிருந்ததோ அவ்வளவு நிறை திரவியத்தோடு பிராமணர்களுக்குக்கொடுத்தார். பிறகு கம்புகண்டனைப்பார்த்து ஏ கம்பு கண்ட! 'நான் எப்பொழுதும் பிராமணர்களுக்குச் சகாயம் செய்கிறேன் '' என ஒரு உறுதிமொழிச் சீட்டு உன்கைப்பட எழுதிக்கொடுவெனக்கேட்டு அதைப்பெற்றுக் கொண்டு போஜனத்துக்குச் சென்று பந்து மித்திரர்களோடு போஜனஞ்செய்தார். இராமர் போஜனம் செய்துசபைக்குவந்ததும் பிராமணர்கள் அநந்தமான ஆசீர்வாதங்களை இராமபிரானுக்கு மனமுவந்து அளித்தார்கள். இராமரும் அவர்களை வந்தனித்துமிகவும் உபசரித்தார். பிறகு அங்கேபோஜனம் செய்துவிட்டு நின்றுகொண்டிருந்த அனுமந்தரைப்பார்த்து ''ஏ அனுமந்த! நீ நமது

விமானத்தில் இந்தப் பிராமணர்களேயும் சிலாசாஸனத்தையும் ஏற்றிவைத்துக் கொண்டு பிரமபுரம் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டுப் பிறகு வந்து சேர்'' என்று ஆக்ஞைசெய்தார். அனுமார் அந்த ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு அவ்விதமே பிரயாணப்பட்டு பிரமபுரம் போய்ச்சேர்ந்தார். சர்வலோகநாதராகிய இராமபிரான் இராஜ்யதானம் செய்த பிறகு பிரமபுரத்திற்கு இராமநாதபுரமெனப் பெயருண்டாயிற்று. இவ்வாறு இராமர் செய்த தானங்களுக்குக்கணக்கில்லே. வெகு காலத்திற்குப் பின்னர் இராமநாத புரத்திலிருந்த அந்தணர்கள் துஷ்ட அரசர்களுக்குப் பயந்து அந்தச் சிலேயைக் குளத்தில் எறிந்துவிட்டார்கள். அதனல் அவர்களுக்குக் கஷ்டமுண்டாயிற்று. அந்தக் கஷ்டத்தைச் சகிக்கமுடியாமல் அவர்கள் தங்களுயிரை மாய்த்துக்கொள்ள நிச்சயித்தார்கள். அத்தருணம் அனுமார் அவர்களுக்குப் பிரஸன்னமாகி, சிலேயைக் குளத்திலிருந்து எடுத்து அவர்களேக் காப்பாற்றினர்.

### விஷ்ணுதாஸர் வினவுகிருர்.

பிராமணர்களுக் குண்டான கஷ்டம் என்ன ? அவர்கள் உயிரை மாய்த்துக்கொள்ள யத்தனிப்பானேன் ? அனுமார் அவர்களே எவ்விதம் காப்பாற்றினர் ? இவைகளே எனக்கு விஸ்தாரமாகக்கூற வேண்டும் என்ருர்.

### இராமதாஸர் கூறுகிருர்.

இராமபிரான் இந்த இராஜ்பதானஞ் செய்த வெகுகாலத்திற்குப் பின்னர், இந்தப் பூலோகத்தில் ஒரு துஷ்ட அரசன் ஏற்பட்டான். அவன் இந்தப் பிராமணர்களுக்குக் கொடுத்த இராஜ்யத்தைப் பிடுங்கிக்கொள்வதற்காக, அவர்களே நிர்ப்பந்தப்படுத்தி, “ இராமர் உங்களுக்கு இராஜ்யதானம் செய்திருந்தால், அந்தத் தானஸாஸனத்தை எனக்குக் காண்பியுங்கள்; இன்றேல் உங்களனைவரையும் என் கைக்கத்திக்கிரையாக்கி இந்த இராஜ்யத்தைப் பிடுங்கிக்கொள்வேன்'' என்று பயமுறுத்தினன். பிராமணர்கள், தங்களுடைய தானசாஸனத்தை ஏற்கனவே, துஷ்ட அரசர்களுக்

குப் பயந்து குளத்தில் எறிந்துவிட்டமையால், "ஒரு மாதத்திற்குள் தருகிறோம்" எனக் கூறினார்கள். அதைக்கேட்டு அவ்வரசன் அவ் விதமே தவறாமல் கொணர்ந்து காண்பியுங்களெனக் கூறி, அவர்களை அச்சமயம் தொந்தரவு செய்யாமல் விட்டுவிட்டான். பின் சிலநா ளைக்கெல்லாம் ஒரு பெருமழை பெய்தது. அந்த மழையால் குளத் தில் வெள்ளம் கரைபுரண்டு ஓட ஆரம்பித்து விட்டது. இதைக் கண்டு அவ்வந்தணர்கள் பயந்து, இன்னதுசெய்வதென்று தோன்றா மல், மிக்க விசனத்தில் மூழ்கிப் பரமாத்மாவான இராமசந்திர பிரபு வைத் தியானித்துக்கொண்டு அங்கேயே உட்கார்ந்துவிட்டனர்.

இதற்குள் அரசனிடம் கெடுக்கேட்டுவந்த ஒரு மாதமும்சென் றுவிட்டது. இவர்களுக்கு அப்போது அரசன் நம்மைக் கொன்று விடுவான் என்கிற பயமுண்டாய்விட்டது. என்னசெய்வார்கள். கஷ் டம்பொறுக்கமாட்டாமல் உயிரைவிட யத்தனித்தார்கள். இதை யறிந்த அவர்கள் மக்கள் மனைவி முதலியவர்கள் மிகவும் துக்கமடை ந்து கோவென்று கதறினார்கள். பிராமணர்கள் "ஏ ராமா ஏ ஜான கிகாந்தா! நீர் எங்களுக்குத் தானஞ்செய்ததால் நாங்கள் இக்கதியை யடையலானோம். தங்களுக்குத் தயையில்லையா?" என்று கூறிக் கத றித் தங்களை மறந்துநின்றார்கள். இச்சமயம் அங்கிருந்த ஓர் ஆலய த்திலிருந்து "ஏ அந்தணர்களே! நீங்கள் அஞ்சவேண்டாம்; நீங்கள் பிராணனைவிடவேண்டாம்; இராகவரது தாஸனும் அஞ்சனாதேவியின் புத்திரனுமான நான் வந்துவிட்டேன்" என்று கூறினார் அனுமார். இவ்வார்த்தைகள் அவர்கள் செவியிற்பட்டதும், வெகு ஆச்சரியத் தோடு கண்களைத் திறந்துபார்த்தார்கள். எதிரில், ஆஜானுபாகுவுட னும்தேகமெல்லாம் செம்பட்டைமயிருடனும் கூடிய ஒருகிழவுருவ ந்தாங்கி நிற்கும் ஆஞ்சநேய மூர்த்தியைப் பார்த்து, அஞ்சலிசெய்து வணங்கி, தங்கள் குறைகளைக்கூறி முறையிட்டார்கள். உடனே ஆஞ்சநேயர் அக்குளத்திலிருந்து இச்சிலையை வெளிக்கிளப்பி அதை எடுத்துக்கொண்டு பிராமணர்களோடு அந்த அரசனிடம் சென்று அவனுக்கு அதைக் காண்பித்தார். அரசன் இராமபிரானது முத்திரை யைப்பார்த்துஆச்சரியப்பட்டான். அவன் ஆச்சரியப்பட்டானாயினும்

அவன் செய்த பிழைக்காக அநுமார் அவன்மேல் கோபங்கொண்டு அவனைக் கழுவிலேற்றக் கட்டளையிட்டார். அச்சமயம் அவனைவிடு விக்க வந்த இராஜதூதர்களையும் ஒரு நொடியில் எமலோகபட்ட ணத்திற்கனுப்பினர். அக்குளம் பிராமணரது தாபத்தைப்போக்கிய தால், அதற்கு ஹிருத்தாமசமனம் என்னும் பெயருண்டாயிற்று. இராமர் இராஜ்பதானம் செய்த உதார குணத்தை உலகமறிவதன் பொருட்டு அங்கு உதாரராகவரென்கிற பெயருடன் ஒருமூர்த்தி அக் காலத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. அந்தக்குளத்தில் ஸ்நானம் செய் தவர்கள் தாபத்திரயந் தொலைந்து சுகம்பெறுவார்கள்.

அநுமார், இவ்விதம் சந்தோஷமடைந்த அந்தணர்களைப் பார் த்து, இந்த இடத்தில்ஒரு குகை ஏற்படுத்தி அங்கு அந்தச்சிலாசாஸ னத்தை வைத்து விடுங்கள். இனி நீங்கள் சிறிதும் அஞ்சவேண் டாம். இராமபிரானையும் என்னையும் நீங்கள் எப்பொழுது நினைக் கிறீர்களோ அப்பொழுது அவசியம் பிரத்தியக்ஷமாகிறேன் என்று கூறி மறைந்துவிட்டார். அந்தணர் அநுமார் கூறியவாறே ஒருகுகை ஏற்படுத்தி அதில் அச்சிலையைவைத்துவிட்டு மனமகிழ்ச்சியுடன்இரா மஸ்மரணை செய்துகொண்டு தத்தம் மனைக்கேகினர். அது முதல் அவர்கள் இராஜ்பத்தை ஒருவரும் அபகரித்துக் கொள்ளவில்லை; ஏ விஷ்ணுதாஸ! இன்னும் பிராமணர்கள்அங்கு அந்த இராஜ்பத்தை அநுபவிக்கிறார்கள். பிறகு பூமியிலுண்டான அரசர்கள் யாவரும் இராமரது ஆக்ஞையை மதித்து வந்தார்கள். இவ்விதம் இராமர் அயோத்தியில் சமது பந்துமித்திரர்களோடிருந்து வெகு லீலைகளைச் செய்து வந்தார்.

**18-வது சருக்கம்**

முற்றிற்று.

## 19-வது சருக்கம்.

——(-)——

### ஸ்ரீவிஷ்ணுதாசர் வினவுகிறார்.

தாங்கள் கூறிய விஷயத்தைக்கேட்டு மிகவும் நான் ஆனந்தமடைந்தேன். மேலே நடந்தவைகளைக் கூறியருள வேண்டும்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஏ சிஷ்ய! உலகங்களை ஒழுங்குப்படுத்த இராமராஜா அனுசரித்துவந்த மங்களகரமான தினசரி அநுஷ்டானங்களைச்சொல்லுகிறேன் கேள். விடியற்காலத்தில் ஸீதையோடு சயனித்துச் சுகமாக நித்திரைசெய்து கொண்டிருக்கும்போது பாடகர்கள் பாடும் நல்ல பாட்டுகளைக்கேட்டு எழுந்திருப்பார். பிறகு சிரேஷ்டமான வாத்திய கோஷங்களைக் கேட்பார். பிறகு பரமசிவன் உமா தேவி தந்தையாகிய தசரதர் தேவர்கள் புண்ய தீர்த்தங்கள் தாய்மார்கள் திவ்ய க்ஷேத்திரங்கள் காடுகள் பருவதங்கள் சமுத்திரங்கள் புண்ய நதிகள் நதங்கள் இவர்களெல்லோரையும் தியானம்செய்து பின் ஸீதையைப் பார்ப்பார். அப்போது சீதைவணங்குவாள். அவ்வம்மையின்கரத்தைப்பற்றி மஞ்சத்திலிருந்திறக்கிவிடுவார், வேலைக்காரர்கள்சூழ வெளிக்கட்டிற்குப் போய் காரியங்களைப் பார்த்துக்கொண்டு பிறகு கிரீடா சாலைக்குச் சென்று அங்கு சௌசம் முதலானவைகளை முடித்துக்கொண்டு தந்தசுத்தி செய்துகொள்வார். பிறகு வீட்டிலோ அல்லது ஸரயூநதியிலோ ஸ்நானம் செய்வார். சரயூநதியில் ஸ்நானம் செய்வதா யிருந்தால், பல்லக்கிலேறிக்கொண்டு புறப்படுவார். பிராமணர்களையும் வாகனங்களிலேற்றி அழைத்துக் கொண்டுபோவார். நதிக்கரைக்குச்சென்றதும் எல்லாரோடும் வாகனங்களிலிருந்து இறங்கிக் கால் நடையாகச்சென்று புண்யதீர்த்தத்தை வணங்குவார். இங்கு தக்ஷிணையோடு தேங்காய் தாம்பூலங்களை வைத்து, மறுபடியும் ஒருமுறைவந்தனம் செய்து பிராமணர்கள் வேதகோஷஞ்செய்ய விதிப்பிரகாரம் ஸ்நானஞ்செய்வார். பிறகு காலசந்தியையும் பிர்ம்மயக்ஞத்தையும்செய்துமுடிப்பார் அப்பால் பிராமணர்களோடுகால் நடையாக

கரைக்குவந்து, ஏற்கனவே இங்குக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கும் இரதத்தில் ஏற்றிக்கொண்டு எல்லாரோடும் வீடு வந்து சேர்வார். வீட்டிற்குவந்ததும் விதிப்பிரகாரம், ஹோமம் செய்து பக்தியுடன் பரமசிவனைப் பூஜித்துப் பின் கௌஸல்யை, சுமித்திரை, கைகேயி இவர்களைப் பூஜிப்பார். இதன்பின் காமதேனு, கற்பகத்தரு, பாரிஜாதம், புஷ்பகம், சிந்தாமணி, கௌஸ்துபம் இவைகளையும் ஆலமரம், வில்வமரம் அரசு, துளசி, பாலாசு, வன்னி முதலியவைகளையும்அறுகம் புல்லையும் ஆராதிப்பார். அப்புறம் சீதையும் தாமுமாக விருந்து சூரியனைப்பூஜித்து அவரைவணங்குவார். பிறகு துவார தேவதைகள், பசு, காளை, யானை இரதம், ஆயுதம், பிராமணர், பொக்கிஷம், சமையல் செய்யுமிடம், சிங்காதனம் இவைகளையும் பூஜிப்பார். குடை, சாமரம், விசிறி கட்டில், தீபம், கண்ணாடி, புத்தகம் இவைகளை ஆராதித்துப்பிறகு பிராமணசிரேஷ்டர்கள் வணங்கும் தமது குருவைப் பூஜிப்பார். பிறகு குருவை உயர்ந்த ஆசனத்தில் உட்காரவைத்து, புத்திரர் மித்திரர்களத்திரர் இவர்களோடு அவரெதிரில் வீற்றிருந்து புண்யங்களைக் கேட்பார். பிறகு குருவுக்கு சிரேஷ்டமான வஸ்துக்களைச் சன்மானம்செய்வார். அதன்பின் போஜனம் செய்து தாம்பூலம் தரித்து நல்லவஸ்திரங்களை உடுத்திக்கொண்டு கச்சை புனைந்த இடுப்பில் ஆயுதங்களை அணிந்துகொள்வார். இதன் நடுவில் வைத்தியனும் சோதிடனும் அங்கு வருவார்கள். இராமர் அவர்களை உபசரித்து நல்ல ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்வார். வைத்தியன் இராமர் உத்தரவின்பேரில், அவர் வலது கையிலுள்ள ஜீவநாடியைப் பார்ப்பான். அப்படிப்பார்த்தால்தான் தேகத்தின் சுகாசுகங்களை வைத்தியர்கள் அறிவார்கள். சோதிடன் பஞ்சாங்கத்தை விரித்துப்பார்த்து, "விநாயகர், பிரம்மா, விஷ்ணு, தேவர்கள், சூரியன், சந்திரன், அங்காரகன் புதன், பிருகஸ்பதி, சுக்ரன், சனி, இராகு, கேது ஆகிய இவர்கள் எல்லாரும் எப்போதும் தங்களுக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்"என்றும், திதியைக் கேட்பதால், ஸ்திரமான சம்பத்தும், வாரத்தினால் நீண்ட ஆயுளும், நக்ஷத்திரத்தால் பாவநாசமும் யோகத்தால் பிரிவினை யின்மையும், கரணத்தால் எல்லா மனோபீஷ்டமும் உண்டாகு மாதலால், ஒவ்வொரு தினமும்

பக்தியுடன் பிராமணர்முகமாக பஞ்சாங்கத்தைக் கேட்கவேண்டும்" என்றும், ஸ்ரீ இராகவ! இன்று சுக்லபக்ஷம் தசமிதிதி-ஞாயிற்றுக் கிழமை பூசநக்ஷத்திரம், ஐந்திரயோகம், பவகரணம்; சந்திரன் கடக ராசியிலிருக்கிறான்; இது வஸந்தருது, சைத்ரமாதம் என்று விவரித்துப் பிறகு "தாங்கள் வெகுகாலம் பூமியிலிருந்து சுகமாய் ராஜ்யத்தை ஆளவேண்டும், பிரஜைகள் சுகமாயிருக்கவேண்டும்; ஒருவருக்காவது துக்கமென்பதே வரக்கூடாது' என்று வாழ்த்துரையும் கூறுவான். இவைகளைக் கேட்டு இராமர் மிகவும் சந்தோஷமடைந்து வைத்தியனுக்கும் சோதிடனுக்கும் தாம்பூலதக்ஷிணைகளைக்கொடுத்து அனுப்புவார். இதன்பின் மாலைகட்டி, அழகிய புஷ்ப ஆரங்களையெடுத்துக்கொண்டு, அவரெதிரில் சென்று அவரை வணங்கி, அவரது சமீபத்தில் மாலைகளைவைத்துவிட்டுத் திரும்பிவிடுவான். இராமர் அவைகளைத் தாம் எடுத்துக்கொண்டு பந்து புத்ரமித்ர களத்ராதிகளுக்கும்கொடுத்து ஆனந்தப்படுவார். அப்புறம் நாவிதன் இராமரது அருகேசென்று அழகிய கண்ணாடியை அவருக்குக்காட்டுவான். இராமர் அதில் தாமரை இதழ்போன்ற கண்கள், நீண்டநாசி, சிலாக்யமான குண்டலங்கள் அணியப்பெற்ற செவிகள் இவைகளோடு கூடிய சந்திரபிம்பம்போன்ற தமது முகத்தைப்பார்த்து மிகவும் ஆனந்த மடைவார். அப்புறம் தூபக்காரன்வந்து அவரைப் பணிந்து அவர் அருகில்தூபத்தைக் கைலேந்திக்கொண்டு நிற்பான் பிறகு இராமர் பல்லக்கிலேறிக்கொண்டு வீட்டிற்குவெளியேசென்று மாகதர் முதலானவர்களையும் வெளிக்கட்டிலுள்ளவர்களையும் பார்ப்பார். இவர்கள் இராமரைவணங்கி சூரியவம்சத் தரசர்களையும் இவரையும் ஸ்தோத்ரம் செய்வார்கள். பிறகுசாரணர்கள் ஆனந்தத்துடன் பாடுவார்கள். நடர்கள் வேசிகள் இவர்கள் அநேக வாத்தியங்களை முழக்கிக்கொண்டுநர்த்தனம் செய்வார்கள். மற்றவர்களும் வேடிக்கை செய்வார்கள். அப்பால் இராமர் மூன்றாவதுகட்டிற்குச் சென்று அங்குள்ள யானைகளையும், குதிரைகளையும், ரதங்களையும், வாகனங்களையும் பார்ப்பார். அப்புறம் அங்கே தம்மைப்பார்க்க வந்திருக்கும் அரசர்களையும் பட்டணத்து ஜனங்களையும்பார்ப்பார். அதன்பின் ஐந்

தாவதுகட்டியுள்ள புஷ்பக விமானத்தையும் புஷ்பத்தோட்டங்களையும் ஆயிரக்கணக்கான ஆயுத தாரிகளையும் பார்ப்பார். பின்ஆறாவது கட்டியுள்ள குதிரைகளின்மே லேறிக்கொண்டு கைகூப்பிக்கொண்டு வெகு விநயமாய்நிற்கும் வீரர்களைப்பார்ப்பார். பிறகு ஏழாவதுகட்டியுள்ள சபைக்குச்சென்று அங்கு பல்லக்கிலிருந்திறங்கி மெள்ள மெள்ள சிங்காதனத்தின் மேலேறுவார். அப்போது இலட்சுமணர் குடையையும், பரதர் சாமரத்தையும், சத்துருக்கனர் அழகிய விசிறியையும், அநுமார் பாதரட்சைகளையும், ஸுக்ரீவர் ஜலபாத்திரத்தையும், நல்ல கண்ணாடியை விபீஷணரும் பிடிப்பார்கள்; வாலியின் புத்திரனான அங்கதன்கையில் தாம்பூல பாத்திரத்தைத் தரித்திருப்பான். ஜாம்பவான் வஸ்திரப்பையை வைத்துக்கொண்டிருப்பான்.

இவ்வாறிருக்க, ராமர் சிங்காதனத்திலேறியதும் பின்னால் லக்ஷ்மணரும், வலது புறத்தில் பரதனும், இடதுபுறத்தில் சத்ருக்னனும், எதிரில்ஹனுமாரும், வடமேற்குமூலையில் விபீஷணரும், தென்கிழக்கில் அங்கதனும், தென்மேற்கில் ஜாம்பவானும் வீற்றிருப்பார்கள். அவருக்கு எதிரில் எல்லாஅரசரும் கைகட்டி நின்றுகொண்டிருப்பார்கள். அவருக்கு எதிரில் இருபக்கங்களிலும் முனிசிரேஷ்டர்கள் உயர்ந்த ஆஸனங்களில் உட்கார்ந்திருப்பார்கள். அதற்கு எதிரில் தாசிகள் ஆயிரக்கணக்காய் நர்த்தனம் செய்வார்கள். பிறகு வீரர்களும் தூதர்களும் நின்றுகொண்டிருப்பார்கள்: அப்புறம் இராமருடைய இரண்டு புத்திரர்களும் அவரது மித்திரர்களும் வந்து நிற்பார்கள். அவர்கள் இராமரது ஆக்ஞையின்படி உட்காருவார்கள். அவர்களுடைய மத்தியில் இராமன் மிகவும் சிலாக்கியமாய் விளங்குவார். இவ்வாறு ஸபையில்வீற்றிருந்து அநேககாரியங்களைச்செய்து பந்துக்களையும் புத்திரர்களையும் அநேக காரியங்களைச்செய்யும்படி ஏவிவிட்டு, அநேக ஆச்சரியங்களைப் பார்த்துக்கொண்டு முன்போல் வீட்டிற்கு வருவார். அப்பொழுது கோமுகம்முதலிய வாத்தியங்கள் முழங்கும். இந்த வாத்தியகோஷத்தைக்கேட்டு ஜானகி பரபரப்புடன் கையில் ஜலத்தை வைத்துக்கொண்டு அவரை எதிர்கொண்டழைக்கக் காத்துக்கொண்டிருப்பாள். அப்போதுவெண்பட்டு உடுத்

துக்கொண்டிருக்கிற ஸீதையை இராமர் பார்ப்பார். அதைக்கண்ட தேவி வெட்கமுற்றுத் தலைகுனிந்த வண்ணத்தில் கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டு இராகவருக்குத் தன் கையிலிருக்கும் தண்ணீரைக் கொடுப்பார். நீரை அவர் வாங்கிக் கைகால்களைச் சுத்திசெய்துகொண்டு கூடவந்தவர்களுக்குச்செலவு கொடுத் தனுப்பிவிட்டு ஸீதையின் வீட்டிற்குச்செல்வார். தாம் வழியில்பார்த்த ஆச்சரியமான விஷயங்களை ஸீதைக்குச் சொல்லுவார். பிறகு மத்தியானஸ்நானம் செய்து விட்டு பிதிர்க்களுக்குத் தர்ப்பணம் செய்வார். உடனே பரமசிவனுக்கு நிவேதனம் செய்வார். பின்னர் வைச்வ தேவம் பலிதானம் இவைகளை விதிப்பிரகாரம் முடித்துவிட்டு, பூதபலி பிதிர்பலி இவைகளைக் கொடுத்து விட்டு வெளியில் காகபலியைச்செய்வார். பிறகு அதிதிகளை ஆதரவோடு பூஜித்து யதிகளையும் பிராமணரையும் ஆராதித்துத் தங்கப்பாத்திரங்களில் ஜானகியம்மாள் ஆதரவுடன்பரிமாற பந்துமித்ர புத்திரர்களோடு கூடச்சேர்ந்து போஜனம் செய்வார். பிறகு கரசுத்திசெய்து கொண்டு பிராமணருக்குத் தாம்பூல தக்ஷிணைகளைக் கொடுப்பார். தாமும் தாம்பூலம் தரித்துக்கொள்வார். நூறடி நடந்து மெள்ள மெள்ள சயனசாலைக்குச் செல்வர். இதன்நடுவில் ஸீதைபோஜனம் செய்து விட்டு இராமரிடம் சென்று கட்டிலின் மேல் படுத்திருக்கும் அவருக்கு அருகில் நின்றுகொண்டு விசிறிக் கொண்டிருப்பாள். இராமர் அதில் நித்திரை செய்வார். பின் ஸீதையும் அதில் படுத்து நித்திரைசெய்வாள். தாஸிஜனங்கள் அவர்களை விசிறிக்கொண்டிருப்பார்கள். பிறகு சற்றுநேரத்தில் ஸீதை இராமர் இருவரும் விழித்துக்கொள்வார்கள். உடனே இராமர் இருவரும் திராக்ஷ மண்டபத்திற்குச்சென்று அதன்கீழுள்ள தண்ணீர்க் குழாய் முதலிய வேடிக்கைகளைப் பார்த்துவருவார். பிறகு கூட்டிலுள்ள பக்ஷிகளையெல்லாம் பார்த்த ஸீதைசந்தோஷமடைந்து தாஸிஜனங்களோடு தனது வீட்டிற்குச் செல்வாள். பிறகு ராமர்,லக்ஷ்மணர் முதலிய தமது சகோதரர்கள் இருக்குமிடம்செல்வார். அவர்கள் ராமரைக்கண்டதும் வணங்கி மகிழ்வார்கள். அவர்களோடு கூட ராமர் குதிரை, யானை, ஒட்டகம் ஆயுதம் இவைகளிருக்கும் சாலைகளுக்குச்சென்று அவைகளைக் கவனிப்பார். அப்பால் மெள்ளச்

சென்று பல்லக்குச்சாலையையும் இரதசாலையையும் பார்ப்பார். அப்புறம் இரதத்திலேறிக்கொண்டு வெளியேசென்று முன்போல் ஏழுகட்டுகளையும் தாண்டி எட்டாவதுகட்டில் வண்டிகளின்மே லுள்ளதுண்டு, துப்பாக்கி முதலியவைகளைப் பார்த்துக்கொண்டு அங்கே அனேகவேடிக்கைகளைப் பார்ப்பார். பிறகு ஒன்பதாவது கட்டிலிருந்து வீட்டைப் பாதுகாத்துவரும் வேலைக்காரர்களைப்பார்ப்பார். இவ்வாறு அவர் ஒன்பது கட்டுகளையும் தாண்டிச்சென்று அரண்மனைக்குவெளியேஜலத்துடன் கூடிய ஒன்பது அகழிகளையும் பார்ப்பார். பட்டணத்து வாயிற்படியிலுள்ள ஒன்பது காவற்காரர்களையும் பார்த்துக்கொண்டு பிறகு அநேகம் உத்தியான வனங்களின் அழகை ஆனந்தத்தோடு பார்ப்பார். பந்து புத்திரரோடு ஸரயூ நதிக்கரைக்குப்போவார். அங்கே ஓடங்களிலேறிக் கொஞ்சநேரம் விளையாடிவிட்டு நதிக்கரையில் சிறு ஸைனியத்தோடு வீற்றிருந்து வேசிகளின் நர்த்தனத்தைப் பார்ப்பார். இவ்வாறு சற்றுநேரம் பொக்கிவிட்டு, மறுபடியும் சீக்கிரமாகப் பட்டணத்திற்குத் திரும்பிவருவார்.

பிறகு முன் கூறியபடி மெள்ள மெள்ள ஸபைக்குச்சென்று லக்ஷ்மணர் முதலானவர்களால் சேவிக்கப்பட்டு சிங்காதனமேறுவார். அங்கிருந்து அநேககாரியங்களைச் செய்துவிட்டு, பந்து புத்திரருக்கும் காரியங்களைச்செய்யும்படி ஆஞ்ஞாபித்து, முன்போல வீட்டிற்கு வருவார். சாயுங்காலத்தில் ஸந்தியாவந்தனம் செய்து விதிப் பிரகாரம் அக்னிஹோத்திரம் செய்வார். மறுபடியும் பல்லக்கிலேறித் தேவாலயம் சென்று சிவன் முதலிய தேவதைகளை வணங்கிப் பூஜித்து ஆங்காங்கு அநேக ஆச்சர்யங்களைப்பார்த்துக்கொண்டு மேலான ஆனந்தமடைவார். பிறகு வாகனத்திலேறிக் கடைவீதிவழியாய்வீட்டிற்குவருவார். அப்பால் பின் தமது பந்துபுத்திரரோடு அநேக கதைகளையும் பேசிக்கொகொண்டிருந்து இரவில் ஒன்றரை சாமத்திற்குப் பிறகு பள்ளியறைக்குப் போவார். இதன் நடுவில் அவ்வறையில் ஸீதை புஷ்பப் படுக்கை முதலிய வைகளைத் தயார்செய்துவைத்துக்கொண்டு அவரை எதிர்பார்த்துக்கொண்டிருப்பாள். அதற்குள் அவர் வருவதைப்பார்த்ததும் ஸீதை பரபரப்போடு எழுந்திருந்து

அவரைக்கைகொடுத்துப் பள்ளியறைக்கு அழைத்துக்கொண்டு போவாள். அப்போது அங்குள்ள தாஸிகள் எல்லாரும் வெளியே வந்து விடுவார்கள். பிறகு ராமரும் ஸீதையும் வெகு உல்லாசமாயும் ஆனந்தமாயும் இருப்பார்கள்.

இவ்விதம் நடந்து வரும் நாளில் ஒருநாள் ராமர் ஸந்தோஷமா யிருக்கையில் ஸீதை அவரைப்பார்த்து, மிகவும் வெட்கத்தோடு "பிராணநாதா! நான் கேட்பதற்குத் தயைசெய்து பதில் கூற வேண்டுகிறேன். நான் குசனைப் பெற்றபிறகு எனக்கு கர்ப்பம் உண்டாகாதற்குக்காரணம் என்ன" என்றாள். ராமர் "ஏ ஸீதே! நீ நன்றாய்க்கேட்டாய்; அதற்குப் பதில் கூறுகிறேன் கேள். நீ எதற்காக வெகு புத்திரர்களை விரும்புகிறாய், நல்ல வம்சத்தில் அநேக புத்திரர் உண்டாவது கூடாது. ஏனெனில் ஒரு காலத்தில் ஒருவனுடைய துராசாரத்தால் குலத்திற்குக் கேடு விளைந்துவிடும். அதனாலே தான் நான் வெகுபுத்திரரை விரும்ப வில்லை. குலத்தைத் தனது குணங்களால் அலங்கரிக்கிற ஒரு புத்திரனை அவசியம் விரும்பவேண்டும். துஷ்டர்களான அநேகம் பிள்ளைகள் பிறப்பதில் பயனென்ன? எப்போதும் இரண்டு பிள்ளைகளே நேத்ரங்கள் போலவும் கைகள்போலவும் சந்திர சூரியர்கள்போலவும் என்னையும் லக்ஷ்மணனைப்போலவும் இருக்கவேண்டும். இம்மாதிரி உனக்கு இரண்டு புத்திரர்க ளிருக்கிறார்கள். இதற்குமேல் வம்சவிருத்தி வேண்டியதில்லை" என்றார் மறுபடியும் ஸீதை "எனக்குப் பெண்கள் உண்டாகாததற்குக் காரணம் யாது? என்ன கேட்டாள். அதற்கு ராமர் எனக்குப் பெண்பிறந்தால், அதை நான் யாருக்குக் கொடுக்கிறது? எனக்குச் சமான்மான அரசன்இந்தப்பூமண்டலத்திற் கிடையாது? நீ ஓர் அரசனுடைய மனைவியையும் நமஸ்காரம்செய்ய வேண்டிய தில்லாமற் போயிற்றல்லவா? எந்த அரசனது புத்திரனாவது நமக்கு வரனானவர நான் விவாகத்தில் அவனது சரணத்தை ஏன் அலம்பவேண்டும்? இதுவு மொழிந்ததல்லவா? அதன்பொருட்டே நான் புத்திரியை அடைய விரும்பவில்லை. குசன் முதலியவர்களின் குழந்தைகளான பெண்களில்லையா? ஹே! ஸீதே! யௌவன மதத்தால் மோகத்தையடைந்து விட்டாயா? இப்போது ஸ்திரீரூபத்தை யடைந்திருக்கிற நீ மூன்று லோகங்களுக்

கும் மாதாவல்லவா? அதை மறந்துவிட்டாய் போலும்? ஏனெனில் இவ்வுலகத்திலுள்ள ஸ்திரீரூபம் முழுவதும் உன்னுடைய அம்சத்திலிருந்து உண்டாகிறது. புருஷரூபம் முழுவதும் என்னுடைய அம்சத்திலிருந்து உண்டாகிறது. இவ்வுலகிலுள்ள ஸ்திரீ புருஷரெல்லாம் உனது பிள்ளைகளும் பெண்களுமாம் "ஒருவனாவது கயைக்குப்போனால் வெகுபுத்திரரை விரும்பலாம்" என்னும் வாக்கியம் ஸாமான்யமான தென்று எண்ணவேண்டாம். 'ஏஸீதே! ஒருபிள்ளையாயிருந்தாலும் குலத்தைக் கரையேற்றுகிறவனே மேலானவன் அநேகமாய்த் துஷ்டமார்க்கத்தை அநுசரிக்கும் பிள்ளைகள் புழுவுக்குச் சமமானவர்கள்" என்று சொல்லப்படுகின்றது. அநேகபுத்திரர் நமக்கு உண்டாகாததற்கு வேறுகாரணம் சொல்லுகிறேன்கேள்—நான் இப்போது வேடிக்கையாகச் சொல்லுகிறேன்; இதை வேறு விதமாய் எண்ணாதே. பல குழந்தைகளைப் பெறுவதால், ஸ்திரீகளின் யௌவனம் குறைந்து போய் விடும் என்று எண்ணியே நான் உனக்கு வெகுகுழந்தைகளைக் கொடுக்கவில்லை. உனக்குப் பலகுழந்தைகளை யடையவேண்டுமென்று எண்ணமிருந்தால், துவாபரயுகத்தில் துவாரகா பட்டணத்தில் நான் கிருஷ்ணாவதாரம் செய்து உனக்குப் பத்துப்பிள்ளைகளைக் கொடுக்கிறேன். அவைகளால் திருப்தியடைவாய்; அப்போது உனக்கு ஒரு பெண்ணையும் கொடுக்கிறேன். நீ வெகு புத்திரரைப்பெற்றால், உனது யௌவனம் அழிந்து விடுமென்று உன்னோடு கூட 16000 ஸ்திரீகளையும் அவ்விதமே முக்கியமான எட்டு ஸ்திரீகளையும் ஏற்படுத்தி விடுகிறேன். அப்போது நீ வெகு பிள்ளைகளையும் மருமக்களையும் அடைந்து ஆனந்தத்தையடைவாய். நானும் அநேக ஸ்திரீகளையடைந்து சுகத்தை யடைவேன்." என்று ராமர்சொல்ல ஸீதையும் "பிராண நாதா! இவ்விதம் பேசும் சக்தி உங்களுக்கு எப்படியுண்டாயிற்று? நீங்கள் சொல்வது மிக மகிழ்ச்சியைத்தருகிறது" என்றுசொல்ல, பிறகு ஒருவரையொருவர் புகழ்ந்து கொண்டு, வெகுசுகமாய் நித்திரைசெய்தார்கள். ஏசிஷ்ய! ஸ்ரீராமரது தினசரியையை உனக்கு விஸ்தாரமாகச் சொன்னேன்.

## 19 - வது சருக்கம்

முற்றிற்று.

# 20-வது சருக்கம்.

## ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஒருகாலத்தில் லவன் ஒருநாள் காலையில் வசிஷ்டரிடம் "நான் தங்களை ஒரு விஷயம் கேட்கிறேன்; அதன் உண்மையைத்தயை செய்து கூறவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். முனிவர் "சரி கூறுகிறேன். விஷயத்தைத்தெரிவி" என லவன் முனிவரைப் பார்த்துப் "பரமகுருவே! இரவில் நாம் நித்திரைசெய்யும் போது நமது காதில் துருத்திபோல் ஊதும் ஒருவனுடைய சப்தம் கேட்கிறதே. அதென்ன? இதைத் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற ஆவல் எனக்கு அதிகமாய் இருக்கிறது. தயை செய்து திருவாய் மலர்ந்தருளவேண்டும்" என்றான். வசிஷ்டர், 'அப்பா! நீ நல்ல கேள்விகேட்டாய்; முன்காலத்தில் ராவணன் அநேகம் பிர்ம்மஹத்திகளைச்செய்தான். அதனால் அவன் இன்னும் தேஹத்தோடு இலங்கையில் பிரகாசிக்கிறான். பாபியேனும், இராமர் கையினால் அடிபட்டதாலும் துவேஷபுத்தியாலாவது, ராமரை ஸ்மரித்தமையாலும் அவன் பாபங்களெல்லாம் தொலைந்து விட்டன. ஆனால் அவன் தேகத்தால் தேவதைகளை வணங்கவில்லை. தேவாலயங்களைச் சுத்தி செய்வது முதலிய ஒரு புண்யகாரியத்தையும் செய்யவில்லை. பக்தியோடு தீர்த்தயாத்திரையும் செய்யவில்லை. தேகம் சீதோஷ்ணங்களைச் சகிக்கும்படியான விரதம் ஒன்றையேனும் செய்யவில்லை. இப்படிப்பட்ட அவனது தேகம் பிராம்மணரையும் ரிஷிகளையும் ஸ்திரீகளையும் மிகவும் இம்சித்தது. ஆகையால் அது இப்போது இலங்கையில் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. இராத்திரியில் கேட்பது அந்தத் தேகம் செய்யும் சப்தமே; பகலில் ஜனங்களது சப்தம் அதிகமாயிருப்பதால், அப்போது இச்சப்தங்கேட்பதில்லை. தவிரவொவ்வொரு நாளும் ஹநுமார் இலங்கையில் அந்தத் தேகத்தைச் சிதையிலேற்றிக்கொளுத்தி வருகிறார். அத்தேகத்தின் பாபம்நிவிர்த்தியாகவில்லையாதலால், அது தகிக்கப்படுவதில்லை. அவ்விதம் தகிக்கப்படாததற்கு வேறு காரணமும் கூறுகிறேன் கேள் ராவணன் பிரா

ணனை விடும்போது இராமரிடம் "எல்லாரும் என்னைஸ்மரிக்கும்படி யான வரத்தைத் தாங்கள் கிருபைசெய்து கொடுத்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். அதற்கு ராமர் "உனது தேகம் எரிகின்ற ஜ்வாலையின் சப்தத்தை ஏழுதீவிலுள்ள ஜனங்களும் கேட்பார்கள். அதனால் உன்னுடைய ஞாபகம் எல்லாருக்கும் வரும்" என்றார். இதைக்கேட்டு ராவணன் வெகு பரபரப்போடு பரமானந்தங்கொண்டு ராமரிடத்தில் ஐக்கியத்தையடைந்துவிட்டான் என்று சொல்ல, இதைக்கேட்டு ஸந்தோஷமடைந்த லவன் அவரைவணங்கி அவரிடம் உத்தரவுபெற்றுப் பின் பல்லக்கிலேறிக்கொண்டு தனது வீடுபோய்சேர்ந்தான்.

ஒரு காலத்தில் ராமர் தமது கிருகத்தில் பந்துக்கள் புத்திரர்கள், ஸீதை, முனிவர்கள், குரு இவர்களோடு வீற்றிருக்கும்போது மிகவும் சந்தோஷமடைந்து கூறுகிறார்—"முனிவர்கள், பந்துக்கள், புத்திரர்கள், ஸீதை, மந்திரிகள், தாய்மார்கள் முதலியயாவரும்கேட்கட்டும் இந்த அவதாரத்தில் ஸீதையோடு சுகத்தையனுபவித்ததைப் போல் வேறு அவதாரங்களில் நான் அனுபவிக்கவேயில்லை. அநேக காரியங்களைச் செய்வதற்காக நான் பல அவதாரங்களைச் செய்திருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரிந்தது தான். ஆயினும் இப்படிப்பட்ட சுகம் நான் அனுபவித்ததேயில்லை. முன்பு கிருதயுகத்தில், சங்காசுரன் என்னும் ஒருவன்கடலிலிருந்து உண்டாகி ஸத்தியலோகத்திலிருந்த வேதங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டான். அதற்காக நான் மச்சாவதாரம் செய்தேன். பிறகு அவனை ஒரு க்ஷணத்திற்குள் கொன்று விஷ்ணுரூபத்தையடைந்தேன். அந்த அவதாரத்தில் மத்ஸ்யஜாதியில் பிறந்த எனக்கு என்ன ஸுகமுண்டாயிருக்கும். ஆகையால் நான் அந்த அவதாரத்தில் வெகு காலமிருக்கவில்லை. பிறகு கடலைக்கடையும்போது ஜலத்தில் ஆழ்ந்த மந்தர பருவதத்தைத் தாங்குவதன்பொருட்டு கூர்ம (ஆமை) ரூபத்தையெடுத்தேன். அது இழிவுபடுத்தக் கூடியதென்றும் மிருகஜாதியில் சுகமொன்று மில்லையென்றும் எண்ணி, அவ்வவதாரத்தில் வெகு காலம் நிலைத்திருக்கவில்லை. பிறகு பூமி சமுத்திரத்தில் மூழ்கு

வதைப் பார்த்து, நான் வாராக (பன்றி) அவதாரமெடுத்துப் பல்லில் பூமியைத்தரித்தேன். அப்போது எனது பூமியென்று கூறின ஹிரண்யாக்ஷனையும் சங்கரித்தேன். அந்த அவதாரத்தில் என்னசுக முண்டாகும்? ஆகையால் அந்த அவதாரத்திலும் நான் சுகமடைய வில்லை. அப்புறம் ப்ரஹ்லாதனுடைய வார்த்தையால் ஸ்தம்பத்தி லிருந்து நரஸிம்மரூபத்தோடு பூமியில் அவதரித்து க்ஷணகாலத்தில் ஹிரண்யகசிபுவையும் கொன்றேன். அந்தச்சமயத்தில் என்னிடத் திலுள்ள பயத்தால், ப்ரஹ்லாதனைத்தவிர ஒருவனும் என்னிடம் வரவில்லை. அப்போதுதான் சுகம் ஏது? மிகவும் கோபமுள்ள சிம் கத்தைக்கண்டு யார்தான் ஸந்தோஷிப்பார்கள்? பிறகு பலிச்சக்ரவர் த்தியை மோகிப்பதற்காக வாமன (குள்ள) ரூபத்தையெடுத்துக் காலால் மூன்றடியாசித்து அவனையும் பாதாளத்தில் அழுத்தினேன். அந்த வாமனரூபத்துடன் கூடின எனக்குச் சுகமேது? எந்த அவ தாரத்தில் சுகத்திற்கு யோக்யமான அழகிய சரீரமில்லையோ, அந்த அவதாரமுள்ள பிரம்மசாரிக்குச் சுகம் எவ்வாறுண்டாகும்? ஆகை யினாலேதான் உடனே எனது லோகம் சென்றேன். மறுபடியும் பிராம்மணரூபத்தையுடைய பரசுராமனாய் அவதரித்தேன். அதிலும் இருபத்தொருதடவை க்ஷத்திரியர்களை யெல்லாங்கொன்று பூமியில் க்ஷத்திரியப்பூண்டேயில்லாமற் போகச்செய்தேன். மேலும் ஸஹ ஸ்ரார்ஜுனனென்னும் வீரனைக் கொன்றேன். அப்போதும் கோப த்துடன் கூடினமுனிவர் ரூபத்தைத்தான் நான் எடுத்துக்கொண் டேன். வனத்தில் ஸஞ்சரிக்கும் முனிகளுக்குச் சுகம் ஏது? இதை யறிந்துதான் நான் அந்த ஜன்மத்தில் தவம்புரிந்தேன். வனத்தில் தவம் செய்யும்போது தான் சுகம் ஏது? இவ்விதம் நான் பூலோகத் தில் ஆறு அவதாரங்களை யெடுத்தும் எனக்குச் சுகமென்பதே யில்லாமற் போயிற்று. இதற்குப்பிறகு துவாபரயுகத்தில் கோகுலத் தில் ஸ்ரீ கிருஷ்ணவதாரம் செய்யப்போகிறேன்! அப்போதும் இப்படிப்பட்ட சுகம் கிடையாது என்பதை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன் கேளுங்கள். நான் பிறக்கும்போதே எனது தாய் தந்தையருக்குக் காராகிருகப் பிரவேசம் உண்டாகும்.

பிறகு நான் அவர்களை விட்டுப்பிரிந்து குழந்தைப் பருவத்தில் கோகுலத்தில் பிறருடைய வீட்டில் வளரப்போகிறேன். இடையனுக இருந்துகொண்டு இடைச்சேரியில் வளர்ந்துவரும் எனக்கு என்ன சுகம் உண்டாகும்? அவ்விடத்தில் ஸ்திரீ, ஸர்ப்பம், குதிரை, பக்ஷி முதலிய அநேக பிராணிகளைக் கொல்லப்போகிறேன். தேவபத்னீகளின் வரத்தால் பிறரது ஸ்திரீகளை யனுபவிக்கப்போகிறேன். அவ்விடத்தில் பலதிருட்டுக் காரியங்களைச்செய்துவிட்டு மதுரை நகரம் வந்து அங்கே கஜாஸுரன் கம்ஸன் முதலியவர்களைக் கொல்லப்போகிறேன். தாவலி கோபிகாஸ்திரீகள் இவர்களை அதிகமாய் அநுபவிக்கப்போகிறேன். காலயவனர்களிடமிருந்து எனக்குப் பயம் அவமானம் உண்டாவது போலிருக்கும். ஆகையால், நான் அந்த ஸ்தலத்தை விட்டுச் சமுத்திரத்தில நெடுஞ்சகாலம் இருக்கப்போகிறேன். எனக்கு மத்ஸியதேசத்தில் இராஜ்யம் ஏற்படாது. இராஜ்யபோகமில்லாத ஜன்மம் உபயோகமற்றதேயாம் அநேகம் ஸ்திரீகளை எப்படி சுகப்படுத்துவதென்று எப்போதும்கவலைப்பட்டுக்கொண்டிருப்பேன். இதற்காக இராத்திரியில் சில வீடுகளுக்குப் போகமுடியாமல் நின்றுவிடுவேன். இப்படி இரவில் அலைகிற எனக்குச் சுகம் ஏது? இவ்வாறு எனக்குத் துவாபரயுகத்தில் கிருஷ்ணாவதாரத்திலும் சுகமே கிடையாது பிறகு பிராமணனுடையசாபத்தினல் அவதாரம்முடிந்துவிடும். பிறகு அசுரர்கள் யக்ஞத்தைக் கெடுப்பார்கள். அதற்காக மறுபடியும் நான் வரும் கலியுகத்தில் மிகவும் மோகிக்கக்கூடிய புத்தாவதாரம் செய்யப்போகிறேன். எனது வாக்கியத்தால் அவர்களுக்கு நல்லபுத்தியை யுண்டாக்கி விட்டுக் கொஞ்சகாலம் பூலோகத்தில் வசிப்பேன். அப்போது நான் மௌனத்தையடைந்து எல்லாருக்கும் உபதேசிக்கிற மாதிரியாக விருந்து 'ஒருவருக்கும் இம்சை செய்யாமலிருப்பதே மேலான தர்மம்'' என்று போதிப்பேன். இந்த ஜன்மத்திலும் எனக்கு அதிக துக்கமேயொழிய சுகமில்லை. அதற்கப்புறம் நான் கலியுகத்தில் எல்லா ஜாதிகளும் ஒன்றுயிருப்பதைப் பார்த்து, பிராமண தேகத்தோடு கத்தியைத் தரித்துக்கொண்டு குதிரை

யின் மீதேறிச் செல்லுகிற கல்கிரூபத்தை யடையப் போகிறேன். அப்போது வெகுதுஷ்டர்களைச் சம்ஹாரம்செய்வேன். அந்த அவதாரத்தில் நான் பூமியில் வெகுகாலம் இருக்கமாட்டேன். ஏனெனில் அப்போதும் எனக்குச் சுகங்கிடையாது. மறுபடியும் கிருதயுகம் வந்தாலும் இந்த அவதாரங்கள் வரிசையாக உண்டாகும். இவ்வாறு ஒன்பது அவதாரங்களிலும் எனக்குச்சுகமேகிடையாது. ஆகையால் இந்த அவதாரத்திலே பூர்ணமான சுகத்தையடைந்தேன். ஆதலால் இதற்குச் சமமான அவதாரம் இல்லவே இல்லை; இந்த அவதாரத்திலே தான் நான் எழுதீவுகளுக்கும் அதிபதியாக விளங்குகிறேன். மிகவும் அன்புள்ள மனைவி, வில்லாளிகளும் மகா வீரருமான இரண்டு பிள்ளைகள், மூன்றுலோகங்கள், பந்துக்கள், இவைகளை யடைந்தேன். காமதேனு முதலான ஏழு இரத்தினங்கள் என்னிடமிருக்கின்றன. பிரத்யக்ஷ வேதசொரூபமான ஆரியாவர்த்தத்தில் அயோத்தியா நகரத்தில் பிறப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. இராஜ்யம் முதலான அனேக போகங்களை அனுபவிக்கிறேன். இப்போதுதான் நான் ஸத்யவிரத சீலனாக இருக்கிறேன். ஒரேபத்னியை அனுபவிப்பதென்ற விரதமும் கொண்டுள்ளேன். ஒரேபாணத்தினாலே வாலி முதலியவர்களைக் கொன்றேன். ஸீதையே என்தர்மபத்தினி: புஷ்பகமே விமானம்; அநுமார் எனக்குத்தூதன்; சுக்ரீவன் விபீஷணன் இவர்கள் எப்பொழுதும் ஸமீபத்திலுள்ள ஆப்த சினேகிதர்களானார்கள். சத்ருக்களை நாசம் செய்யக்கூடிய கோதண்ட மென்கிற மேலான வில்லையடைந்துள்ளேன். சூரியவம்சத்தில் பிறக்கும் பாக்கியம் கிடைத்தது. தசரதமஹாராஜன் எனக்குத் தந்தையானார். கௌஸல்யா தேவி எனக்கு அன்னையானாள். நான் எப்போதும் ஒருவருக்கும் அடங்காதவன். நல்ல புத்திக்குச் சமமான எனது மாமியார் என்னிடம் மிகவும் பிரியமுள்ளவள். மேலான விதேஹ தேசாதிபன் எனக்கு மாமனாரானார். விசுவாமித்ரர் எனக்கு வித்யாப்யாஸம் செய்துவைத்தார். லக்ஷ்மணன் எனக்கு முக்கிய மந்திரியானான். சிரேஷ்டமான சரயூநதி என்னாட்டில் ஓடுகிறது, அங்கதன் முதலியவர்கள் எனது அருகிலிருந்துவருகிறார்கள். நான்குதந்தங்களையுடைய ஒரு பெரியயானை யிருக்கிறது. பிராமணரின் இஷ்டத்தைப்

பூர்த்தி செய்வதென்ற விரதம் எப்போதும் குறையாமல் என்னிட மிருக்கிறது. வைகுண்டத்திற்குச் சமானமானமிகவும் அழகிய வீடு இருக்கிறது. பதினோராயிரம் வருஷம் எனக்கு ஆயுள் காலம் ஏற் பட்டிருக்கிறது. எந்த அரசர்களையும் வணங்காதசிரேஷ்டமான இந்த அவதாரத்திலே தான் குறைவற்ற சுகங்களை யனுபவித்தேன். ஆகையால் இதற்குச் சமமான அவதாரம் வேறில்லை. ஆதலால் நான் இதைப் பூர்ண ரூபத்தோடு தரித்துக்கொண்டேன். இதற்கு முந்திய அவதாரங்களும் வரும் அவதாரங்களும் அம்ச ரூபமானவைகளே. முன் நான் ஸீதையோடும் தம்பியோடும் காட்டிற்குச் சென்றது உல கத்திற்கு உபதேசம் செய்வதற்காகவும், பூபாரத்தைத் தொலைப்பதற் காகவுமே. அந்தச் சமயத்தில் ஜனங்களுக்கு எவ்வளவு உபதேசம் செய்யப்பட்டிருக்கிற தென்பதைச் சொல்லுகிறேன்.

தகப்பனாரின் வாக்கியத்தைப் பூஜிக்க வேண்டும் அது எவ்வளவு சிரமமாயிருந்தாலும் அதை ஒருநாளும் பொய்யாக்கக் கூடாது. என்தகப்பனாரின் வாக்கியத்தை வீணாக்குவதற்கு என க்குப் பலமில்லையா? ஆயினும் உலகத்தின் பொருட்டே நான் அதைப் பாலனம் செய்தேன். மஹா துஷ்டர்களாயும் இராஜ்யத் திற்கு விக்கினம் செய்கிறவர்களாயு மிருந்த கைகேயியையும் கூனி யையும் நான் கொல்லவில்லை. அவர்களைக்கொல்ல எனக்குப் பல மில்லையா? இருந்தாலும் ஸ்திரீவதம் செய்யக்கூடாதென்று அவர் களை மன்னித்து விட்டேன். என்தகப்பனார் இறந்துபோன பிற கும் அந்த இராஜ்யத்தை நான் பலாத்காரமாகக் கைக்கொள்ள வில் லையல்லவா? ஏனென்றால், எப்போதும் பூமியில் ராஜ்யத்தில் ஆசையுள்ளவர்களாய் இருப்பது கூடாது என்பதுதான் காரணம். தாய்தந்தை, சினேகிதன், புத்திரர் இவர்களிடம் அதிக சிநேகத் தை வைக்கக்கூடாது என்று உபதேசிப்பதற்காக, அவர்களிடம் சினேகத்தை விட்டுவிட்டேன். சுகம் துக்கம் இவைகளைச் சமமாக எண்ணவேண்டும்; சுகத்தில் ஸந்தோஷப்படக் கூடாது, துக்கத்தில் வருத்தப்படக்கூடாது என்று ஜனங்களுக்குக் காட்டுவதற்காக நான் இராஜ்ய சுகங்களைத் தள்ளிவிட்டுக் காட்டில் மிகவும் கிலே

சங்களை யடைந்தேன். ஜனங்கள் எப்போதும் காமம் முதலான துஷ்ட சத்துருக்களை பூமியில் நாசம் செய்ய வேண்டுமென்று உபதேசிப்பதற்காக வனத்தில் முனிவர்களை இம்சித்த அநேக இராக்ஷசர்களைக் கொன்றேன். எப்போதும் ஸ்திரீகளின் ஸம்பந்தத்தை விலக்கவேண்டும்; ஒருவனாகத் தவஞ் செய்ய வேண்டும்; மனதை எப்போதும் ஸ்திரீகளிடம் ஸம்பந்தப்படுத்தக் கூடாதென உபதேசிப்பதற்காகக் காட்டில் ஸீதையின் வியோகத்தைச் சகித்திருந்து மறுபடியும் அவளையே அடைந்தேன். விபத்தடைந்தவர்களைக் காப்பாற்ற வேண்டும்; சத்ருவைக் கொல்ல வேண்டும் என்று ஜனங்களுக்குக் காட்டுவதற்காகவே, விபீஷணன் சுக்ரீவன் இவர்களைக் காப்பாற்றி, இராவணன் வாலி இவர்களைக் கொன்றேன். ஜனங்களிடம் கீர்த்தியைக் காட்டவேண்டும் என்றே சமுத்திரத்தில் பருவதங்களை மிதக்கச்செய்தேன். எனக்கு ஆகாய மார்க்கமாய்ச் செல்ல முடியாதா என்ன? தனது மனதிற்கு எவ்வளவு சுத்தமாய் இருந்தாலும் ஜனங்களுக்கு விரோதமாய் இருந்தால், அதைவிட்டுவிடவேண்டும் என்பதற்காகவே இலங்கையில் அக்கினிப்பிரவேசம் செய்து பரிசுத்தமடைந்த சீதையைப் பழையபடி காட்டிற் கனுப்பிவிட்டேன். ஏகபத்னி விரதம், அநேக இராஜ்ய காரியங்கள், அசுவமேதம் முதலான யாகங்கள், நல்ல ஆசாரங்கள், ஜபம் தவம் ஸ்நானம் ஸந்தியாவந்தனம் முதலியவைகளை நான் ஜனங்களை ஒழுங்குப்படுத்துவதற்காகச் செய்கிறேனே யொழிய ஆனந்த ஸ்வரூபியாயும் கர்மங்களைக் கடந்தவனுமாயிருக்கிற எனக்கு அவைகளாலாம் பயன்யாது? அளவற்ற சுகஸ்வரூபி நான். ஜனங்களுக்கெல்லாம் சுகத்தைக் கொடுக்கிறவன் ஆயினும் அவதாரங்களை யடைந்ததால் எனக்குச் சுகம் துக்கம் உண்டென்று சொன்னேன். உபாசிக்கிறவர்களின் ஸந்தோஷத்திற்காக இவ்வாறு நான் வருணித்தேன். இரண்டு அவதாரங்கள். ஜலத்தில் சஞ்சரிப்பவை. இரண்டு காட்டில் சஞ்சரிப்பவை. ஒன்று வைசியன். ஒன்று இடையன். ஒன்று மலினம். மற்றொன்று க்ஷணகாலமிருப்பது. இவ்விதம் சென்றதும் வரப்போகிறதுமான அவதாரங்கள் எனக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியவை

யல்லவாம். இந்த அவதாரமே எல்லாவற்றிலும் மேலானது; உபாசிக்கிற ஜனங்களுக்குப் பிரியங் தரத்தக்கது; சேவிப்பவர்களுக்கு மங்களங்களைக் கொடுக்கக்கூடியது இந்த அவதாரத்தில் அநேக நல்ல காரியங்களைச் செய்திருக்கிறேன். அவைகளைக் கேட்டாலும் பாபம் நீங்கிப் புண்யம் வரும். இந்த அவதாரத்தை ஜனங்களெல்லாரும் பஜனைசெய்து க்ஷேமத்தையடையலாம். இதில் யார் பக்தி வைக்கிறார்களோ அவர்களிடம் எனக்கு அதிகமான பிரியமுண்டு. ஏ துவிஜர்களே! இவ்வாறு வருணித்தது எனக் குண்டான ஸந்தோஷத்தாலேயே யாம். இந்த அவதாரத்திலும் யார் தோஷம் கூறுகிறார்களோ அவர்கள் எனது பகைவர்களாகி நரகத்தில் விழுந்து வருந்துவார்கள்—என்றார்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்

இவ்வாறு கூறியபின் ராமர் முனிவர்களைப் பூஜித்து அனுப்பிவிட்டு ஸீதையோடு சுகமாய் இருந்தார். ஏ சிஷ்ய! இராமருடைய அவதார வர்ணனையை விவரித்தாயிற்று. இனி வேறு கேட்பாயாக.

## 20-வது சருக்கம்.

முற்றிற்று.

## 21 - வது சருக்கம்.

ஸ்ரீ ராமதாசர் கூறுகிறார்.

ஒருகாலத்தில் ஜானகியைப் பார்க்க உத்தேசித்து முனிவர்கள், அரசர்கள், சிநேகிதர்கள், மற்றுமுள்ள க்ஷத்திரியர்கள் வைசியர்கள் இவர்களுடைய மனைவிமார்களெல்லாம் சைத்ர ஸ்நானம் செய்து வருவதாகப் புறப்பட்டு வாகனங்கள் மீதேறிக்கொண்டு வந்தார்கள். இவர்களைப்பார்த்து சீதை வெகு பரபரப்போடுசென்று எதிர்கொண் டழைத்து வந்து விதிப்ரகாரம் பூஜித்தாள். அந்த ஸ்திரீகளும் சிங்காதனத்தின் மீதிருந்த சீதையை வஸ்திரம் ஆபரணம் முதலியவைகளால் நன்கு உபசரித்தார்கள். பிறகு அவர்கள் சீதையைச்சூழ்ந்திருந்து அவள்முகமாய் ராமசரித்திரங்களைக்கேட்டு ஸந்தோஷமடைந்து, சுபகரமான அவளது பாணிக்ரஹண மஹோற்சவத்தைக் கேட்க, ஆவலுள்ளவர்களாக அவளிடம் தெரிவித்தார்கள். ஸீதை அவர்கள் வார்த்தையைக்கேட்டுத் தான் அதைச்சொல்ல வெட்கத்தையடைந்து தன் ஸகியான துளஸியைச் சொல்லும்படி ஏவினள்.

துளசி கூறுகிறார்.

மஹா மங்களத்தை யுண்டாக்குகிற ஜானகிதேவியின் பாணிக்ரஹண மங்களத்தைக் கூறுகிறேன். எல்லாஸ்திரீகளும் கேட்டு ஆனந்த மடையுங்கள்.

விசுவாமித்ர முனிவர் அயோத்தியிலிருந்து ராமரோடும் லக்ஷ்மணரோடும் தம் ஆச்ரமம்சென்று அங்கே ராம லக்ஷ்மணரைக் கொண்டு ராக்ஷஸ சேனைகளை நாசஞ்செய்து யாகத்தைச் சரியாக முடித்துக்கொண்டு, மிதிலைக்குச் சென்றார். மார்க்கத்தில் ராமரது பாதரேணுவால் கௌதமர் மனைவியான அகலிகை திவ்ய சரீரம் அடைந்தாள். பிறகு ராமர் விசுவாமித்ரரோடு மிதிலைக்குச் சென்று அங்குள்ள ராஜசபையை யடைந்து, சிவதனுசை பொடித்து, ஸீதையிட்ட மாலையைத் தமது புயத்திலேற்றுக் கொண்டார். பிறகு தமது தம்பிகளுக்கும் அங்கேயே விவாகத்தை முடித்துக்கொண்டு, ஜனகரால் பூஜிக்கப்பட்டுத் தமது

தாய் தந்தையரோடு அயோத்திக்கு வரும்போது வழியில்வந்தெதிர்த்த பரசுராமரது கர்வத்தையும் பங்கப்படுத்தினர். ஏ ! ஸ்திரீகளே ! நீங்கள் கேட்டவாறு ஸீதையின் பாணிக்ரஹண மங்களத்தை வர்ணித்துவிட்டேன் என்று கூறி முடித்தாள்.

### ராமதாஸர் கூறுகிறார்.

அந்த ஸ்திரீகள் ராமரது விவாக மங்களத்தைக் கேட்டுமிகுந்த ஆனந்தமடைந்து ஸீதையைப் பக்தியுடன் பூஜித்து சைத்ரஸ்நானத்தை முடித்துக்கொண்டு, தங்கள் தங்களிருப்பிடம் சென்றார்கள்.

பிறகு ஒருகாலத்தில், லவன் குருவின் முகமாய் அநேக புராணங்களைக்கேட்டுக் கொண்டிருக்கும்போது, எல்லாஜனங்களுக்கும் தெரிவிப்பதற்காக, அடியில்வருமாறு அவரைக்கேட்டான். “பரம குருவே! புத்தகங்களில் எங்கும் ஒவ்வொரு பக்கத்திலும் தனித் தனியாய் ஒரு பக்கத்தில் ஸ்ரீ யென்றும் மற்றொருபக்கத்தில் ராமா வென்றும் எதற்காக மனிதர் எழுதுகிறார்கள். இதையெனக்குத் தயைசெய்து கூறவேண்டும்”என்றான். இதைக்கேட்டு அடியில் வருமாறு குருவான வஸிஷ்டர் கூறுகிறார்.

நீ நல்லகேள்விகேட்டாய். முற்காலத்தில் வியாசமுனிவர் ஸ்ரீ ராமசரித்திரத்தையும் பதினெண்புராணங்களையும் செய்தார். அவ்வாறே முனிவர்களும் ஆறுசாஸ்திரம் முதலியவைகளை வகுத்தருளினார்கள். ஸ்ரீராமசரித்திரத்திலுள்ள ஒருசுலோகத்திற்குத் தான் இவையெல்லாம் சமமானவைகளென்று ஜனங்களுக்குப் போதிப்பதற்காகவே முதலில் ஸ்ரீ என்றும் பிறகு ராமா வென்றும் எழுதப்படுகிறது. இதற்கு வேறு காரணத்தையும் சொல்லுகிறேன்; எழுதும்போது அக்ஞானத்தாலோ அல்லது ஸந்தேகத் தாலோ தவறாய் எழுதிவிட்டால், அந்தப் பக்கம் பரிசுத்தப்படட்டும் என்ற எண்ணத்தால், எங்கும் ஒவ்வொரு பக்கத்திலும் ஸ்ரீ என்றும் ராமா வென்றும் எழுதப் படுகின்றன. இம்மாதிரி குருசெய்த வியாக்கியானத்தைக் கேட்டு லவன் ஸந்தேகம் நீங்கி, மிகவும் ஸந்தோஷமுள்ளவனாயிருந்தான்.

ஒருகாலத்தில் ராமர் ஆசனத்தின் மீதிருந்து தாம்பூலம்போட்டுக்கொண்டபோது, தோஷத்தை யுண்டு பண்ணக்கூடிய முதல் இரஸத்தைத் துப்பவிரும்பி, எச்சில்வட்டிலை அங்குக்காணுது யோசிக்கும்போது, அருகேயிருந்த சுகுணையென்னு மொருதாசி தன் கைகளைச் சேர்த்து எந்தினள். அதில் ராமர் துப்பினர். உடனே அதை அவள் ஆதரவோடு குடித்துவிட்டாள். அதைக்கண்டு வியப்புற்ற "ராமர் பெண்ணே! உனக்கு வேண்டிய வரத்தைகேள்; தருகிறேன் என்றார். அந்தத்தாசி "ஏ ரகுநாயக! இந்த ஜன்மத்தில் தாங்கள் ஏகபத்னீ விரதங்கொண்டிருப்பதால், வேறு ஜன்மத்தில் தங்களுடைய சம்பந்தத்தை அடைய நான் விரும்புகிறேன்" என்றாள். இதற்கு ராமர் மிகவும் மகிழ்ந்து, "மாதே! நான் கோகுலத்தில் கிருஷ்ணனாக அவதாரம் செய்யப் போகிறேன். அப்போது நீ ராதையென்ற பெயருடன் எனக்கு மனைவியாவாய்; அக்காலத்தில் நீ கோரியபடி வெகுகாலம் என்னோடு சுகங்களை அனுபவிக்கலாம். கோபஸ்திரீகளுள் மிகுந்த பிரியம் உன்னிடமே எனக்கு உண்டாகப்போகிறது'' என்று கூறினர். சுகுணை அதைக்கேட்டு மிகவும் ஆனந்த மடைந்தாள்.

விஷ்ணுதாஸ! ராமரது வேறொரு சரித்திரத்தைக்கேள். அதனால் எல்லாருக்கும் அதிக ஆச்சரிய முண்டாகும்.

ஒரு காலத்தில் ஸ்ரீ ராமர் ஸபையில் ஆஸனத்தில் பந்து புத்திர மித்திர மந்திரிகள் சூழ வீற்றிருக்கும்போது யுவாவான ஒரு பிர்ம்மசாரி தண்ட கமண்டலம் பூண்டு கிருஷ்ணஜினத்தைப் போர்த்துக்கொண்டு காஷாய வஸ்திரத்தை உடுத்திக்கொண்டு ஒரு நல்ல பரிசுத்தனாகவந்தான். ராமர் அவனைப்பார்த்ததும் அதி சீக்கிரமாக ஆசனத்திலிருந்திறங்கி, அந்தப் பிர்மசாரியை எதிர்கொண்டழைத்து வணங்கி, ஆசனமிட்டு அதில் உட்காரவைத்து விதிவழி மதுபர்க்கம் முதலியவை கொடுத்துபசரித்து மிகவும்வணக்கத்தோடு "சுவாமி! தங்களைத் தரிசித்ததால் நான் இன்று கிருதகிருத்தியனாய்விட்டேன். தாங்கள் வந்தகாரியமிது வெனத்தயையோடு கூறவேண்டும்" என்றார். பிர்மசாரி 'பிரபுவே! வான்மீகிமஹரிஷி

யாகம் செய்யப்போகிறார், அதற்காகப் புத்திர மித்ரகளத்ராதிகளோடு கூடத் தங்களை அழைத்துவரச் சொன்னார். அதன்பொருட்டு இவிடம் வந்தேன்; அந்த யாகதினம் சமீபித்து விட்டபடியால் தாங்கள் விரைவில் வரவேண்டும்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே வேறொரு பிர்ம்மசாரி விச்வாமித்திரருடைய ஆச்ரமத்திலிருந்து வந்தார். ராமர் அவரைப் பார்த்தவுடன் முன்போல் உபசரித்து வேறொரு ஆசனமிட்டு அதில் வீற்றிருக்கச் செய்து பூஜித்தார்; பிறகு அவரையும் விநயத்தோடு விசாரித்தார்; அதற்கு அவர் "விசுவாமித்திரர் பெரியயாகம் செய்ய உத்தேசித்திருப்பதால், தங்களைப் பந்துமித்ரகளத்ரர்களோடு அழைத்துவர என்னையனுப்பினர். ஆகையால் தாங்கள் விரைவில் புறப்படவேண்டும்" என்றார். இவ்விரண்டு பிர்ம்மசாரிகளின் வார்த்தையைக் கேட்டு ராமர் தாம் அவ்வாறே வருவதாய் ஒப்புக்கொண்டார். இவ்விஷயத்தைச் சபையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தவர்கள் ஆச்சரியமடைந்து ஒரேகாலத்தில் நடக்கும் இவ்விரண்டு யாகங்களுக்கும் ராமர் எப்படிப்போவாரென்று சிலரும், ராமருக்கு எதுதான் முடியாதென்று சிலரும், சிலர் வனத்தில் ஸ்திரீகளுக்குத் தரிசனம் கொடுத்ததுபோலச் செய்வர் என்றும், முன் பரதருக்குத் தரிசனம் கொடுத்தகாலத்தில் லங்கையிலிருந்து வந்ததுபோல் செய்வார் என்றும், இவ்விதம் அநேக காலங்களில் வெவ்வேறாய்க் காக்ஷிதந் திருப்பதுபோல் இப்போதும் இரண்டுரூபங்களோடு இரண்டு யாகங்களுக்குப் போவாரென்று சிலரும், இவ்விஷயத்தில் என்ன ஆச்சரியம் என்று சிலரும் பேசிக்கொண்டார்கள். இதை யறிந்த பட்டணத்து ஜனங்களும் இவ்வாறே பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு ராமர் லட்சுமணரைப் பார்த்து "லட்சுமணா! நான் இன்று போஜனத்திற்குப் பிறகு வெளியே செல்லப் போகிறேன். கூடாரங்களுடன் சேனைகள் முன்னேசெல்லட்டும். வாத்தியங்களை வாசிக்கும்படி வேலைக்காரர்களுக்குக் கட்டளையிடு என்று சொன்னார். உடனே இலட்சுமணர்வாத்தியங்களை" முழக்கும்படிஉத்தர விட்டர். வெளியே சேனையையும் கூடாரத்தையும் அனுப்பி விட்டார்.

பிறகு இராமர்தமது அரண்மனைச் சென்று ஸீதையிடம் சகலசமாசாரங்களையும் தெரிவித்து பிராம்மணரோடு போஜனம்

செய்து அவர்களையும் அழைத்துக்கொண்டு பரிவாரங்களோடு ஸீதையை ஒரு பெண்யானையின்மீது ஏற்றிவைத்தபின் லக்ஷ்மணர்முதலியோரையும் யானைகள் மீதேறிவர உத்தரவிட்டுத் தாமும் ஒரு யானையின்மீதேறிக்கொண்டு வாத்தியங்கள் சப்திக்க தாஸிகள் நர்த்தனம் செய்ய வந்திமாகதர் ஸ்தோத்திரம் செய்ய நடர்கள் நல்ல ராகத்தோடு கானம்செய்யப் பட்டணத்திலிருந்து புறப்பட்டு, கூடாரங்களுக்கு வந்து சேர்ந்தார். அங்கே அன்றிரவைக் கழித்துவிட்டு மறுநாட் காலையில் எழுந்திருந்து, நித்யவிதிகளை முடித்துக்கொண்டு மறுபடியும் யானையின்மீதேறிப் பிரயாணப்பட்டு நான்குமைல் தூரம் சென்றதும் எதிரில் வழி இரண்டாகப்பிரிந்து செல்வதைப் பார்த்து, தமதுசேனை முதலியவைகளை இரண்டாகப்பிரித்தார். தாமும் இரண்டு ரூபங்கொண்டார். சகோதரர் சீதை இவர்களையும் இரண்டு ரூபம் கொள்ளும்படி செய்தார். பிறகு இரண்டு வழிகளிலும் ஸீதையுடனும் சேனைகளோடும் சென்றார். அப்போது எல்லாஜனங்களும் இவ்வாறு ராமர் இரண்டு பிரிவாக இரண்டுவழிகளிலும் செல்வதைக்கண்டார்கள். விமானம் முதலிய எல்லாம் இரண்டாய்விட்டன. வான்மீகி முனிவரின் சிஷ்யரான ஒரு பிர்ம்மசாரி ராமரைத் தமது ஆச்ரமத்திற்கு அழைத்துச் சென்றார். மற்றொரு பிர்மசாரி தன் குருவான விசுவாமித்திர மஹரிஷியின் ஆச்ரமத்திற்கு ராமரை அழைத்துச் சென்றார். இவ்வாறு ராமர் இரண்டுருக்கொண்டு ஒரேகாலத்தில் பந்துபுத்திர மித்திரகளத்ராதிகளோடு இரண்டு மஹரிஷிகளின் ஆச்ரமங்களில் நடக்கும் இரண்டு யாகங்களுக்கும் சென்று அங்குள்ள முனிவரால் எதிர்கொண்டழைத்துப் பூஜிக்கப்பட்டு அவர்களுடைய யாகங்களைப் பரிபூரணமாய் நடத்திவிட்டுத் தமதுபட்டணத்திற்குத்திரும்பிவந்தார். எங்கே ராமர் இரண்டு தேகத்தையெடுத்துக் கொண்டாரோ அங்குவந்ததும் தாம் எப்போதும் போல் ஏகரூபமடைந்தார். அவ்வாறே யாவருமாயினர். பிறகு ஸ்ரீராமர் தமது பட்டணம்வந்துசேர்ந்தார். அப்போது பட்டணம் மிகவும் கோலாகலமா யிருந்தது. ராமர் இவ்விதம் அமாநுஷியமான அநேக காரியங்களைச் செய்திருக்கிறார்.

## 21-வது சருக்கம்

முற்றிற்று.

## 22-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

இப்போது ஸ்ரீராமச்சந்திரருடைய அழகிய வேறு லீலாவினோதங்களைச் சொல்லுகிறேன். ஒருகாலத்தில் ராமர் பந்து மித்திரபுத்திரர்கள்சூழ, வெகு உல்லாசமாகச் சபையில் வீற்றிருந்தார். அப்பொழுது சினேகிதனான பூரிகீர்த்தி தன் வேலைக்காரர்கள் மூலமாக திராக்ஷைப்பழம் நல்ல புஷ்பம் இவைகள் நிறைந்த அழகிய கூடைகளை ராமருக்குப் பிரியத்தோடு அனுப்பினான். அவைகளையெல்லாம் பார்த்து ராமர் மகிழ்ந்தார். பிறகு அவைகளைச் சகிகளோடு உல்லாசமாயிருந்த ஸீதையிடம் அனுப்பிவிட்டார். ஜானகி கூடைகளிலிருந்த புஷ்பங்களையெடுத்து ராமருக்கு அர்ப்பணம் செய்யாமல் அவைகளின் வாசனையை அடிக்கடி முகர்ந்து பார்த்து விட்டுஅந்தக்கூடைகளை முன்போலவே மூடிச் சரியாக வைத்துவிட்டாள். சபையிலுள்ள ராமர் இந்த விருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டு, "இவ்வாறு ஸீதைசெய்திருந்தால், இதுசரியான செய்கை யல்லவே. பதியான என்னை யன்றி ஸீதை அந்தப்புஷ்பங்களின் வாசனையை முகர்ந்ததை உலகத்தவர் கேட்கின், அவர்களுமல்லவா அவ்விதம் செய்வார்கள். ஆகையால், நான்அவளைத் தண்டிக்கிறேன்" என்று தீர்மானம் செய்து கொண்டு மௌனமாய் வீட்டிற்குச் சென்று ஸீதையுடனிருந்து பல விதமான கிரீடைகளைச்செய்து அவ்வம்மையை ஸந்தோஷப்படுத்தினார்; ஸீதை அப்பொழுது மிகவும் மகிழ்ந்து பழம் புஷ்பம் இவைகள் நிறைந்த ஆயிரக் கணக்கான கூடைகளைக்கொண்டு வந்து ராமரது ஸந்நிதியில் வைத்தாள். ராமர் அவைகளைப்பார்த்து மகிழ்வுற்று, அவைகளைப் பகிர்ந்து தமது பந்துக்களுக்கு அனுப்பினார். அவ்வாறே தாய்மார்கள் வீட்டிற்கும் மந்திரிகள் குரு இவர்கள் வீட்டிற்கும் பட்டணத்து ஜனங்கள் சேவகர்கள் தாசிகள் இவர்கள் வீட்டிற்கும் அனுப்பினார். கடைசியாக ஸீதைக்கும் கொடுத்தார். பிறகு தாமும் சில புஷ்பங்களையும் பழங்களையும் உபயோகப் படுத்திக்கொண்டார். முன் நடந்த சமாசாரத்தைப்பற்றி அறியாதவர்போல் நடந்துவந்தார்.

பிறகு ஒரு காலத்தில் ஜானகி ஏகாதசியில் உபவாஸமிருந்து விட்டு, அடுத்த நாள் ஸ்நானம் செய்து, பிருந்தாவனத்தின் ஸமீபம் சென்று அங்கு துளஸியைப்பூஜித்துப் பிரதக்ஷிணம் செய்தாள். அப்பொழுது, ஸீதை பசிக்களைப்பால் வருந்தி பிரதக்ஷிணவழியை விட்டுச்சற்று விலகினாள். அப்படி விலகும்போது, ஸீதையின் வஸ்திரத்தின் நுனியானது துளஸிச்செடியில் பட்டு அதிலிருந்த ஒரு இலை கீழே விழுந்தது; ஜானகி அதைப்பார்த்து, துவாதசியில் துளஸீ இலை சேதிக்கப்பட்டது அதர்மமென்றறிந்து மிகவும் பயத்தையடைந்தாள். பிறகு அவள் தன் கையினால் அந்த இலையை எடுத்துப் பிருந்தாவனத்தைப் பக்தியுடன் வணங்கி எறிந்து விட்டாள் மறுபடி பிரதக்ஷிணம் செய்து அடிக்கடி துளஸியைப் பிரார்த்தித்துக் கொண்டே வீட்டிற்குப்போய் ,எப்போதும் போலிருந்து விட்டாள். இச்சமயம் நாரதர் வீணாகானஞ்செய்து கொண்டு "ஏ! ராகவா! தீனனான என்னைக் காத்தருளும்" எனப்பாடிக்கொண்டு ராமர் ஸந்நிதிக்கு வந்தார். அந்த முனிவர் மிகவும் இனிய குரலோடு பாபங்களைப் போக்குகிற இந்த மந்திரத்தை (ஶ்ரீராம ராம ராம ... அடிக்கடி பாடிக்கொண்டிருந்தார். பிறகு ராமர் முனிவரைப்பார்த்து எதிர் கொண்டழைத்துப் பக்தியுடன் வணங்கி ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து ஆதரவோடு பூஜித்து அவர் பாதங்களை ஸீதையைக்கொண்டு அலம்பச்செய்து, மதுபர்க்கம் சந்தனம் முதலியவைகளளித்து உபசரித்து, போஜனஞ்செய்ய வேண்டுமெனப் பிரார்த்தித்து, போஜனத்திற்காகத் தங்க பாத்திரங்களை அவர் எதிரில் வைத்துப் பரிமாறும்படி ஸீதைக்குத் தெரிவித்தார். ஸீதை காமதேனுவினிட மிருந்துண்டான திவ்ய அன்னத்தையெடுத்துக்கொண்டு பரிமாறுவதற்காக வந்தாள். அவ்வம்மையைப் பார்த்ததும் நாரதர், ராமரிடம் "ஹேராம! கமல நேத்ர! நான் ஸீதை பரிமாறின திவ்யான்னங்களைப் புசிக்கமாட்டேன்" என்று சொன்னார். முனிவர் இவ்வாறு சொன்னதைக்கேட்டு ஸீதை மிகவும் பயந்தாள். ராமரு மறியாதவர்போல் பரபரப்புடன் அந்தமுனிவரைவணங்கித் தாங்கள் அவ்விதம்சொல்வதற்கு ஸீதை செய்த பிழையாதெனக் கேட்க நாரதர் விடைசொல்லுகிறார்.—

## நாரதர் கூறுகிறார்.

ஸீதை இன்று ஒருபாவம் செய்திருக்கிறாள். அது உமக்குத் தெரியாவிட்டால், நான் சொல்லுகிறேன் கேளும். துவாதசியான இன்றைக்கு இவள் துளஸியிலையைக் கிள்ளிவிட்டாள். இது பொய்யாகவிருந்தால் பிருந்தாவனத்திற்குச் சென்றுபாரும். மாதப்பிறப்புகளிலும் சதுர்த்தசியிலும் துவாதசியிலும் வியதீபாதத்திலும் பருவத்திலும் ஸந்திவேளைகளிலும் செய்வாய் வெள்ளி இவைகளின் பிற்பகலிலும்சூரியன் அஸ்தமனமான பிறகும்சந்திரக்ரஹணத்திலும்ஜனனம் மரணம் இவைகளிலும் துளஸியைப்பறிப்பவர்கள் விஷ்ணுவின் சிரஸைஅறுத்ததற்குச்சமானமாவார்கள். துவாதசியில் துளஸிஇலையைக் கிள்ளுகிறவன் ஸ்திரீகளாயினும் சரிஅல்லது புருஷர்களாயினும் சரி அவர்களுக்கு ஓர் இலைக்கு ஒரு பிரும்மஹத்தி வீதமாக ஏற்படும். இந்த வசனங்களை முனிவரெல்லாரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஏராம! இதற்காகவே சீதை பரிமாறினவைகளை நான்புசிக்க இஷ்டமில்லாதவனாயிருக்கிறேன்'' என்றார்.

இவ்விதம் முனிவர் கூறிய அந்த வார்த்தையைக்கேட்டு ராமர் "முனிவர் பெருமானே!தாங்கள் தான் ஸீதையைப்பரிசுத்தப்படுத்த வேண்டும். தாங்கள் வரங்கொடுத்தாலும் சரி; விரதம் ஏற்படுத்தினாலும் சரி; அவள் பரிசுத்தமடையவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். நாரதர் பிரம்மஹத்தி முதலிய பாவங்களைத் தொலைப்பதற்காக அநேக பிராயச்சித்தங்களை மஹா முனிவர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் துவாதசியில் துளசி இலையைக் கிள்ளின தோஷத்தின் சாந்திக்காக ஒரு பிராயச்சித்தமும் நான் பார்த்ததில்லை. ஆனால் ஓர் உபாயம் இருக்கிறது. அதாவது ஸீதை என் எதிரில் தன் பாதிவிரத்தியத்தால் அத்துளசி இலையை மறுபடியும் செடியில் ஒட்டிக் கொள்ளும்படி செய்தால், அவள் ஒரு க்ஷணத்திற்குள் பரிசுத்தமாய்விடுவாள். நான் சொல்வது உண்மை'' என்றார்; இதைக் கேட்டு ராமர் ஸீதையைப் பார்த்தார். ஸீதை முனிவரைப்பார்த்து பிரும்மபுத்திரரான நாரதரே! நான் தங்களெதிரில் என் பாதிவ்ரத்ய

பலத்தால், துளசி இலையைச், செடியில் ஒட்டிக்கொள்ளும்படிசெய்கிறேன்" என்று சொல்லிக் கையிலிருந்த பாத்திரத்தைக் கொண்டு போய்ச் சமையலறையில் வைத்துவிட்டு வேகமாக பிருந்தாவனத்திற்குச் சென்றாள். நாரதர் ராமர் முதலியவரும் அங்கே போனார்கள். ஊர்மிளை சம்பிகை முதலான ஸ்திரீகளும் இலட்சுமணர் முதலானவர்களும் குசன் லவன் முதலிய வரும் அங்கே சென்றார்கள். அப்போது இவர்கள் மத்தியிலிருந்த ஸீதை அந்தத் துளசி இலையை எடுத்துக்கொண்டு வெகு பக்தியுடன் செடியினருகேபோய் மிகவும் வணக்கத்தோடு "ஏ மங்களகரமான துளஸியே! இன்றுநான் சொல்வதைக் கேள்; என்னிடம் பரிசுத்தமான பாதிவ்ரத்யம் பூர்ணமாயிருக்கும் பக்ஷத்தில் இந்த இலைக்கும் உனக்கும் சேர்க்கையுண்டாக வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டு கையிலிருந்த இலையை அதில் பொருத்தினாள். அந்த இலை அதில் ஒட்டிக் கொள்ளவில்லை. அப்போது ஸீதை அதிக துக்கத்தையும் பயத்தையும் அடைந்தாள். தேவர்கள்கந்தர்வர்கள் யக்ஷர்கள் நாகர்கள் கின்னரர்கள் குஹ்யகர்கள் மற்றுமுள்ள ரிஷிகள் முதலான எல்லோரும் இந்த ஆச்சரியத்தைப்பார்க்க வந்தார்கள். இவ்வாறு ஸீதை துக்கத்தையடைந்திருப்பதைக்கண்டு நாரதர் அவளை இரகசியமாயழைத்து "ஏஸீதே! இதன்காரணத்தைச் சொல்லுகிறேன் கேள். பதிவிரதையாஸ்திரீகள்தங்கள் பதிகளில்லாமல் புஷ்பம் முதலியவைகளை முகர்வது முதலியவற்றைச் செய்யக் கூடாது; நீ முந்தி இவ்வாறு செய்தாய்; அதைராமர் தெரிந்துகொண்டு இப்படி மாயைசெய்திருக்கிறார். அவரது இச்சைப்படி உன் வஸ்திரத்தின் நுனியால் அடிபட்டுத் துளஸியின் இலை கீழே விழுந்துவிட்டது. அவரது எண்ணத்தை அறிந்தே நானும் உன்னிடம் தோஷம் ஏற்றினேன். நான் இப்படிச் செய்ததைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் கோபத்தை யடையாதே. ஸ்திரீகளுக்கு உபதேசிப்பதற்காக உன்னிடம் இந்தமாதிரி செய்தேன். இல்லாவிட்டால் உலகத்தில் எல்லா ஸ்திரீகளும் பதியைவிட்டே எல்லா சகலபோகங்களையும் அனுபவிப்பார்கள். இப்போதுநான்சொல்லு வதுபோல்செய்தால் ராமரது எதிரில் அந்த இலை ஒட்டிக் கொள்ளும், பிருந்தா

வனத்திற்கு மறுபடியுஞ்சென்று நான் சொல்லுகிறபடி சொல்ல வேண்டும். அதாவது பத்மத்தின் நல்லவாசனையை முகர்ந்து பார்த்ததைத்தவிர கற்பை நான் செவ்வையாய் இரக்ஷித்திருக்கும் பக்ஷத்தில் இந்தத் துளசி இலை அதன் செடியோடு ஒட்டிக்கொள்ளட்டும், இல்லாவிட்டால் இது கீழே விழட்டும் என்று சொல்; இப்போது இந்த இலை ஒட்டிக்கொள்ளும். ஆகையால் நீ துக்கத்தை யடையாமல் துளசிவனம் செல்லு" என்று போதித்தார். இவ்வாறு கூறி நாரதரும் பிராட்டியின் கூடவே சென்றார். ஸீதையும் துளசியை வணங்கி முனிவர்களும் தேவர்களும் கேட்டுக்கொண்டிருக்கும் போதே, அடியில் வருமாறு கூறினாள்—

தாமரைப்பூவின் வாசனையை முகர்ந்ததைத் தவிர, கற்பை நான் நன்றாய் இரக்ஷித்திருக்கும் பக்ஷத்தில் இந்தத் துளசி இலை செடியோடு சேர்ந்துவிடட்டும். இல்லாவிட்டால் பூமியில் விழுந்துவிடட்டும்— என்றாள். இம்மாதிரி ஸீதை சொன்னவுடன் அந்தத்துளசி இலை எல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும் போதே செடியுடன் சேர்ந்துவிட்டது. அப்போது தேவவாத்தியங்கள் சப்தித்தன. தேவஸ்திரீகள் விமானங்களி லிருந்து கொண்டு இராமர் மீதும் ஸீதை மீதும் புஷ்பங்களை வாரி இறைத்தார்கள். பிராமணர்கள் ஜபகோஷம் செய்தார்கள். இந்தத் தருணத்தில் இராமர், ஆனந்தமடைந்திருக்கும் ஸீதையைப் பார்த்து, "ஏ ஸீதே! நான் இவ்விதம் செய்தது உலகத்திலுள்ள ஸ்திரீகள் எப்போதும் பதிவிரதா தர்மத்தைத் தைரியமாய்ப் பாலனம் செய்யவேண்டு மென்பதன் பொருட்டேயாம். உலகத்தில் தர்மத்தை நிலை நாட்டுவதற்காகவும், ஸாதுக்களைப் பரிபாலனம் செய்வதற்காகவும், துஷ்டர்களை நாசம் செய்வதற்காகவுமே நான் இந்த அவதாரம் செய்திருக்கிறேன். ஆதலால் நீ வருத்தப்படாதே" என்று அவளைப் பன்முறை சமாதானப்படுத்திவிட்டுத் தேவர் முதலான எல்லாரையும் நன்றாய்ப் பூஜித்தார். பிறகு நாரதர் முதல் யாவருக்

கும் ஸீதையைக்கொண்டு பரிமாறச்சொல்லி நல்ல போஜனஞ் செய்துவைத்தார். பிறகு நாரதர் இராமரை ஸ்தோத்திரம் செய்து போய்விட்டார். தேவர்களும் முனிவர்களும் தங்கள் தங்களிருப்பிடம் சென்றார்கள். மனித ரூபத்தை யடைந்த இராமர் இவ்வாறு வெகு லீலைகளைச் செய்தார். அவைகளை வருணிக்க யாரால் முடியும்? ஏ சிஷ்ய! அவைகளில் ஞாபகத்திலிருந்த சிலவற்றை நான் உனக்குச் சொன்னேன்.

## 22-வது சருக்கம்.

முற்றிற்று.

## 23-வது சருக்கம்.

### ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

ஸ்ரீராமர் ஜானகியோடும் பந்துமித்ர புத்ராதிகளோடும் கூடி வெகு சுகமாய் இராஜ்ய பரிபாலனஞ் செய்துவருங் காலத்தில் ஒரு சேவகன் இராமரிடம் வந்து அவரை வணங்கி "பிரபுவே! நான் தங்களிடம் சேவைசெய்ய விரும்பவில்லை; தவம் செய்யப் போகிறேன். எனக்கு உத்தரவு கொடுங்கள்" என்று கூறி உத்தரவு வாங்கிக்கொண்டு தனது வீடு சென்று பரிசுத்த மனதுடனிருந்து சுபகரமான ஆனந்த ராமாயணத்தை ஒன்பது தினம் நியமமாய்ப் படித்துவிட்டுப் பிறகு காட்டிற்குச் செல்லத் தயாராயிருந்தான். அப்பொழுது அயோத்தியை அடுத்த ஒரு தேசத்தில் மந்திரி ஸ்தானத்திற்கு ஒருவனைத் தெரிந்தெடுக்க வேண்டிய அவசிய மேற்பட்டு, யாரைத் தெரிந்தெடுப்பதென்கிற விவாத முண்டாகிக் கடைசியில், பட்டத்து யானையின் துதிக்கையில் ஒரு மாலையைக் கொடுத்து "இந்த யானை தனது தும்பிக்கையிலுள்ள மாலையை யிட்டு எவனை வரிக்கிறதோ, அவன்தான் மந்திரியாகலாம்" என்று நிச்சயப்படுத்திக்கொண்டு யானையை அநேக அழகிய வஸ்திரங்களால் அலங்கரித்து, அதற்குத் திவ்யாபரணங்களைப் பூட்டி, அதன் தும்பிக்கையில் இரத்தின மாலை ஒன்றைக் கொடுத்து, வாத்தியகோஷம் முழங்க, அதை அவிழ்த்துவிட்டார்கள். அது வேகமாய்ப் பட்டணத்திற்கு வெளியே சென்று அயோத்தியை நோக்கிச் சென்றது. அந்தப் பட்டணத்து ஜனங்களெல்லோரும், அநேக வாகனங்கள் மீதேறிக்கொண்டு இந்த வேடிக்கையைப் பார்க்க அதைத்தொடர்ந்து சென்றார்கள். அந்த யானை நேரே அயோத்திக்குப்போய், அங்கே கடைத்தெருவிலிருந்த ஒரு தூதனை வரித்துவிட்டது. அவன்தான் ஆநந்த ராமாயண பாராயணம் செய்தவன். பிறகு அந்த ஜனங்கள் அவனையே மந்திரியாகச்செய்து, வெகு மரியாதையோடு அவனைத் தங்கள் பட்டணத்திற் கழைத்துச் சென்றார்கள். இது மிகவும் ஆச்சரியமாக விருந்தது. பிறகு ஆங்காங்குள்ள இராஜ தூதர்கள் இந்தச் சமாசாரத்தைக் கேட்டு இராஜ சேவையை விட்டுவிட்டுத் தங்கள்

தங்கள் வீடுகளுக்குச் சென்று சிலர் ஆனந்த ராமாயணத்தைப் பாராயணம் செய்வதும், சிலர் ஸந்தோஷத்தோடு கேட்பதும், சிலர் படிப்பதும், சிலர் கீர்த்தனம் செய்வதும், சிலர் பிரசங்கம் செய்வதுமா யிருந்தார்கள். இப்படிப் பாராயணம் செய்தவர்களில் அவரவ ரிஷ்டப்படி சிலருக்குத் தனமும், சிலருக்கு அழகிய வீடும், சிலருக்கு இராஜ்யமும் கிடைத்தன. சிலர் சூரிய பதத்தை யடைந்தார்கள். சிலருக்கு இந்திர பதமும், சிலருக்கு அக்னி ஸ்தானமும் கிடைத்தன. சிலர் வருணலோகத்தையும் சிலர் குபேர லோகத்தையும், சிலர் இந்திர லோகத்தையும் சிலர் துருவலோகத்தையும், சிலர் வைகுண்டத்தையும் அடைந்தார்கள். இப்படி எங்கும் நடந்துவந்து, சிலகாலஞ் சென்றபின் ஒருவனை ஒருவன் தூதனுக அடைவதே நின்றுவிட்டது. இராமரது வேலைக்காரர்களும் வேலையை விட்டுச் சிலர் உத்தரவு பெற்றும் சிலர் உத்தரவில்லாமலும் போய்விட்டார்கள். இப்படி எல்லாத் தேசங்களிலும் வேலைக்காரர்கள் இல்லாமலே போன பிறகு ஒரு காலத்தில் எல்லா அரசர்களும் இராமனைப் பார்ப்பதற்குத் தங்கள் சேனையை அழைக்க அப்போது சேனையில் ஒருவருமேயில்லை ஆ! இதென்னவென்று அவர்கள் ஆச்சரியத்தை யடைந்து, தங்கள் புத்ர மித்ராதிகளையே சேனைகளாகக்கொண்டு இராமரிடம் வந்தார்கள். அவர்கள் வந்ததை யறிந்த இலட்சுமணர் அவர்களை எதிர்கொண்டழைக்கத் தமது சேனையை அழைத்தார். ஸேனாநிவேசத்தில் ஒருவரும் அகப்படவில்லை. உடனே இலட்சுமணர் இந்தச் சமாசாரத்தை இராமரிடம் தெரிவிக்க, இராமரும் இதைக்கேட்டு ஆச்சரியமடைந்தார். பிறகு மித்திரரோடு இலட்சுமணரை யனுப்பி, அரசர்களைத் தமது நகரத்திற்கு அழைத்து வந்தார். அவர்கள் வணக்கமாய் இராகவரை நமஸ்கரித்து, சபையில் சேனையின் விருத்தாந்தத்தைத் தெரிவித்தார்கள். இராமரும் தமது சேனையின் விருத்தாந்தத்தை அவர்களிடம் சொல்லி ஆச்சரியத்தை யடைந்து தமது குருவை அழைத்து வணக்கமாய் "ஐயா! எனது சேனையும் அரசரின் சேனையும் என்னவாயின? எங்கே யிருக்கின்றன? அதை விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். இதைக்கேட்டு

குரு ஒரு க்ஷணம் தியானத்திலிருந்து பிறகு ஆச்சரியத்தை யடைந்து, "ஸ்ரீராம! சகலமும் தங்கள் சித்தம் அறிந்ததே. நான் கூறுகிறேன் கேளுங்கள்— முன் காலத்தில் வான்மீகி உமது சரித்திரத்தை ஆயிரம் கோடி கிரந்தமாகச் செய்தார். அதன் மத்தியில் ஒன்பது காண்டங்களடங்கிய ஆனந்த ராமாயண மிருக்கிறது. அதை இந்த அயோத்தியிலும் மற்றவிடங்களிலும் உள்ள சேவகர்கள் ஒருவரைப்பார்த்து ஒருவர் படிக்கத்தொடங்கி, சிலர் வைகுண்டத்தையும் சிலர் சொர்க்க முதலிய மற்ற பதவிகளையும் அடைந்திருக்கிறார்கள். ஆகையால் பூமியில் சேனையில்லை. சிலர் லோகாந்தரத்தையும் அடைந்திருக்கிறார்கள். அவ்விதமே தங்கள் சேனையிலிருந்தவர்களும் படித்துப் பதவிகளை அடைந்திருக்கிறார்கள். ஸார காண்டத்தைக்கேட்டால் ஸம்ஸார பந்தமொழியும். யாத்திராகாண்டத்தைக் கேட்டால் யாகங்களின் பலன் உண்டாகும். விலாஸகாண்டத்தைக் கேட்டால் அப்ஸரஸ்திரிகளோடு சுகத்தை யடையலாம். ஜன்ம காண்டத்தைக்கேட்டால் புத்ராதி ஸந்ததி யுண்டாகும். விவாக காண்டத்தைக் கேட்டால் அழகிய ஸ்திரீயை யடையலாம். இராஜ்ய காண்டத்தைக் கேட்டால் பூமியில் இராஜ்யத்தை யடையலாம். மனோகர காண்டத்தினால் மனோரத சித்தியை யடையலாம். பூரணகாண்டத்தைக் கேட்டால் பூரணபலம் உண்டாகும். ஆனந்த ராமாயணம் முழுவதையும் பக்தியுடன் கேட்டால், சச்சிதானந்த ரூபியான உம்மிடம் லயத்தை யடைந்து விடுவான். ஸ்ரீராம! நீர் கேட்ட எல்லாவற்றிற்கும் இவ்வாறு விஸ்தாரமாய்ப் பதில் கூறி விட்டேன்" என்று வஸிஷ்டர் அரசர்களுக்கெதிரில் தெரிவித்தார்.

இது நிற்க, இவ்வாறு தூதர்கள் ஆனந்த ராமாயணத்தைப் படித்தும் கேட்டும் சொர்க்காதிபதவிகளை யடைந்ததைக் கேட்ட தேசாந்திரங்களில் உள்ள மற்றவர்களும் அவ்விதமே படித்தும் கேட்டும், சொர்க்காதி பதவிகளுக்கு ஒவ்வொருவராகச் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது யமன் தனதுலோகத்திற்கு ஒருவரும் வராததுகண்டு பிர்ம்மாவோடு கூட கைலாயத்திற்குச் சென்று, அங்கே பரமசிவனிடம் சகல சமாசாரங்களையும் தெரி

வித்தான். சிவன் இதைக்கேட்டு நகைத்து, பார்வதியோடு விருஷபத்தி லேறிக்கொண்டு பிர்ம்மா, யமன் தேவர்கள் சூழ, அயோத்திக்கு வந்தார். இராமர் இதைத் தெரிந்துகொண்டு அவரை எதிர்கொண்டழைத்துத் திவ்ய சிங்காதனத்தில் வீற்றிருக்கச் செய்து, பரமசிவன் முதல் யாவருக்கும் விதிப்பிரகாரம் ஸீதையோடு பூஜை செய்தார். இப்பொழுது பிர்ம்மா "ஏ ராமா! இப்போது யமனுக்கு வேலையில்லை. யமபட்டணமும் சூன்யமாய் விட்டது. பூலோகமும் சூன்யமாய் விட்டது. ஸ்வர்க்கத்தில் இடங் கிடையாது. எல்லா ஜனங்களும் ஆனந்த ராமாயணத்தைப் படித்தல் கேட்டல் முதலியவைகளால் ஸ்வர்க்கலோகத்தையே அடைந்து விட்டார்கள். ஆகையால் இந்த விஷயத்தில் நீ நன்றாய் ஆலோசித்து ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும்" என்றார். இதைக்கேட்டு இராமர் சத்ருக்னனை யழைத்து வான்மீகியினிடம் இதைத் தெரிவிக்கும்படி சொன்னார்.

சத்ருக்னன் இராமர் கூறியதை வான்மீகரிடம் தெரிவித்ததும் வான்மீகர் புன்முறுவல் பூத்து "ஏ சத்ருக்ன! நீ இராமரிடம் சென்று எனது கவிதையானது உலகத்தில் நாசமடையாம லிருக்கவும், ஜனங்களுக்குச் சுகமுண்டாகவும் தக்கபடி ஏதாவது ஏற்பாடு செய்யும்படி அவருக்குத்தெரிவி" என்றார். சத்ருக்னன் அதை இராகவரிடம் தெரிவிக்க, இராகவரும் அப்படியே செய்ய நிச்சயித்து, "ஏழு ஜன்மங்களில் என்னைப் பூஜைசெய்த புண்யம் எவனுக்கு இருக்கிறதோ அவனுக்கு ஆனந்தராமாயணக் கதையில் ருசியுண்டாகட்டும். எப்போதும் எல்லோருக்கும் உண்டாக வேண்டாம்" என்று வரங்கொடுத்தார். இதைக்கேட்டு எல்லோரும் சந்தோஷமடைந்து தங்கள் தங்களிருப்பிடம் சென்றார்கள். ஏ விஷ்ணுதாஸ! அதுமுதல் பூமியில் எல்லாருக்கும் ஆநந்தராமாயணத்தில் ருசியுண்டாகாமல் ஏழு ஜன்மங்களில் இராமரை ஆராதித்த புண்யத்தை யுடையவர்களுக்கே ருசியுண்டாயிற்று. ஆகையால் இராமரைப் பூஜிப்பவர்களையல்லாமல் மற்றவன் ஆனந்த ராமாயணத்தைத் தெரிந்துகொள்ள முடியாது.

23-வது சருக்கம்.

முற்றிற்று.

## 24-வது சருக்கம்.

ஒருகாலத்தில் இராமர் சபையில் வீற்றிருக்கும்போது ஒரு சேவகன் ஓடிவந்து "எ பிரபுவே! ராம! தங்களது வெகுகால மந்திரியான ஸுமந்திரர் ஸ்வர்க்கலோகத்தை யடைந்துவிட்டார். அவரது மனைவியும் புத்திரர்களும் அநுமரணம் செய்யத் தங்களது உத்தரவை எதிர்பார்க்கிறார்கள்'' என்றான். இதைக்கேட்டு இராமர் பயந்து மிக விசனமடைந்து வாகனத்தின் மீதேறிக் கொண்டு ஸுமந்திரரது வீட்டிற்குச் சென்று, அங்கே அவர் ஜாதகத்தையெடுத்து அவர் ஆயுளைப்பார்த்தார். ஸுமந்திரர் பிறந்த காலம் முதல் 9999-வருஷம் 11-மாதம் 21-நாட்கள்தாம் சென்றிருந்தன. இன்னும் 9-நாள் பாக்கியிருந்தன. இராமர் இதைத் தெரிந்துகொண்டு குருவினிடம் வந்து "பரமகுருவே! கிருதயுகத்தில் லக்ஷவருஷமும் துவாபரயுகத்தில் ஆயிரம் வருஷமும் கலியுகத்தில் நூறுவருஷமும் திரேதாயுகத்தில் பதினாயிரம் வருஷமும் ஜனங்களுக்கு ஆயுள் ஏற்படுத்தப் பட்டிருப்பதால், அது இப்போது என் இராஜ்யத்தில் பொய்யாய்விட்டது. யமனுக்கு என்னிடமிருந்து சிக்ஷைவேண்டும்போலும்! ஏனெனில், அவன் என்னை அலக்ஷியம் செய்துவிட்டு இன்னும் ஒன்பதுநாள் இருக்கும்போதே என் மந்திரியை எவ்வாறு அழைத்துச் சென்றான். ஆகையால் யமனைக் கட்டி இழுத்துக் கொண்டு வந்து ஸுமந்திரரை ஜீவிக்கும்படி செய்கிறேன். எனது பராக்கிரமத்தைப் பாருங்கள்'' என்று சொல்லிவிட்டுக் கருடன் மீதேறிக் கொண்டு கையில் கோதண்ட மென்னும் வில்லுடன் வெகு வேகமாய் ஸம்யமினீ பட்டணத்திற்குச் சென்றார். வழியில் யமதூதர்கள் ஸுமந்திரரைக் கட்டி இழுத்துக்கொண்டு போவதைப் பார்த்து அவர்களெல்லோரையும் அடித்து லிங்கரூபத்தைத் தரித்துக் கொண்டிருக்கிற ஸுமந்திரரை விடுவித்தார். அப்போது யமதூதர்கள் "எ ராகவா! தாங்கள் எங்களை இவ்வளவு உக்ரமாய்த் தண்டித்தீர்களே நாங்கள் தங்களுக்கொன்றும் அபராதம் செய்யவில்லையே" என்று சொல்ல, இராமர் "இன்னும் இவரது ஆயுளில் ஒன்பதுநாள் மீத்திருக்கின்றதே. இதற்குள் என் அழைத்

துச் செல்லுகிறீர்கள்? அந்த ஒன்பதுநாள் முடிந்ததும் இவரை அழைத்துக்கொண்டு போகலாம்; அப்போது நான் தடுக்கமாட்டேன்" என்று சொன்னார். இதைக்கேட்டு யமதூதர்கள் "ராகவ! ஸுமந்திரரது ஜன்மம் மிகவும் அபூர்வமானது. ஏனென்றால், இவரது முகமும் இரண்டு கைகளும் கர்ப்பத்திலிருந்து முதலில் வெளிப்பட்டன. பிறகு பத்தாவது தினத்தில் தைவயோகத்தால் இவரது வயிறு முதலான அவயவங்கள் மெள்ள மெள்ள வெளிப்பட்டன. அப்போது பெரியோர்கள் நல்ல மந்திரங்களால் இவருக்கு ரக்ஷணை செய்ததால், இவருக்கு ஸுமந்திரரென்னும் பெயருண்டாயிற்று. ஆகையால் முதல்நாள் முதற்கொண்டு இவரது ஆயுள்முடிந்துவிட்டது. தாங்கள் சரீரம் முழுமையும் வெளிவந்த நாள்முதல் கணக்கிடுவதால், ஒன்பது நாள் மீதியிருக்கின்றன. ஆகையால் நாங்கள் செய்தது குற்றமல்ல; இவரது பிறந்த சமயமே சந்தேகமாயிருக்கிறது. இவரை நாங்கள் வீணாக அழைத்துவந்து தங்களால் தண்டிக்கப்பட்டோம்" என்றார்கள். உடனே இராமர், "யமதூதர்களே! எந்தநினத்தில் கர்ப்பத்திலிருந்து முழுவதும் வெளிப்பட்டுப் பிறந்தாரோ, அதுதான் இவரது ஜந்மகாலம். அதுதான் மிக உற்சாகதினம். அந்த தினத்தில்தான் அவரது பிதா முதலானவர்கள் ஜாதகத்தை நன்றாய் எழுதிவைத்தார்கள். ஆகையால் ஒன்பதுநாள் மீதியிருப்பதால் நீங்கள் மறுபடியும் பத்தாவது தினத்தில் திரும்பிவந்து இவரை அழைத்துச் செல்லவேண்டும். அப்போது நான் உங்களைத்தடுக்கமாட்டேன்" என்று சொன்னார். அதைக்கேட்டு யமதூதர்கள் வாய்பேசாமல் கண்ணீர் விட்டுக்கொண்டு யமனிடம் சென்றார்கள். இராமரும் திரும்பித் தமது நகரத்திற்கு வந்து மந்திரியின் வீட்டிற்குச் சென்று பார்த்தார். அங்கே எல்லோரும் ஸுமந்திரரோடு கூடி ஸந்தோஷமாயிருப்பதைக் கண்டார். அவர்கள் யாவரும் இராமரை வணங்கிப் பூஜித்தார்கள். பிறகு இராமர் தமது வீடு சென்றார். ஸுமந்திரரும் தமது ஆயுளில் ஒன்பது நாள் மீதி யிருப்பதைக் கண்டு இராகவரது உத்தரவின்படி செவ்வையாய்த் தானதர்மங்களைச் செய்தார்.

ஸுமந்திரரை நடுவழியில் விட்டுச்சென்ற யமதூதர்கள் அழுதுகொண்டே யமதர்ம ராஜனிடம் சென்று "எ பிரபுவே! உமது அதிகாரம் இனி எவ்வாறு உலகத்தில் நடக்கும்? உமது கட்டளைப்படி நடக்கிற எங்கள் அவஸ்தையைப் பார்த்தும், இன்னும் உமக்கு வெட்க முண்டாகவில்லை. நாங்கள் ஸுமந்திரரை அழைத்துவரும்போது வழியில் இராமர் வந்து எங்களையடித்து அவருக்கு ஆயுளில் ஒன்பதுநாள் பாக்கி யிருப்பதாகச் சொல்லி, அவரை விடுவித்துக்கொண்டு போய்விட்டார். ஆகையால் நாங்கள் ஜலத்தில் விழுந்து பிராணனை விடுவோமேயொழிய, இனிப் பிழைத்திருக்க மாட்டோம்" என்று முறையிட்டார்கள். யமன் இவ்வாறு தூதர்கள் கதறுவதைக்கேட்டு மிகவும் கோபத்தையடைந்து அவர்களைப்பார்த்து, "நான் இப்போதே சென்று இராமரைக் கட்டிப்பிடித்து அவரைத் தண்டிக்கிறேன்; ஸைன்யங்களைத் தயாரா யிருக்கச் சொல்லுங்கள்" என்று உத்தரவு செய்துவிட்டு வேகமாய் இந்திரனிடம் சென்று தனக்கு அவனைச் சகாயம் செய்யும்படி வேண்டிக்கொண்டான். இந்திரன் "எனது சகாயத்தை வைத்துக்கொண்டு விஷ்ணுவுடன் சண்டைசெய்ய விரும்புவதைப்பார்த்தால், உனக்குச் சித்தம் சுவாதீனமில்லைபோற் காண்கிறது. பேசாமல் உன் நகரம் செல். அவரை நீ ஒன்றும் செய்யமுடியாது. அவருக்குப் பயந்துதான் நான் என்னிடமிருந்த இரண்டு கற்பகவிருக்ஷங்களையும் அவருக்குக் கொடுத்துவிட்டேன்" என்று சொன்னான். உடனே யமன் இதைக் கேளாது அக்நி, நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், சூரியன், சந்திரன், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது, அங்காரகன், துருவன் இவர்களெல்லோரையும் தனக்குதவி செய்யவேண்டுமென்று தனித்தனியே வேண்டிக்கொண்டான். அவர்களும் இந்திரன் சொன்னமாதிரியே அவனுக்கு நல்ல புத்திகூற, அதையும் கவனியாது, பிரம்மாவையும் எழு தீவுகளிலுள்ள அரசர்களையும் வெகுவாய் வேண்டிக்கொண்டான். அவர்களும் "இராமருக்கெதிரில் உனக்குச் சகாயஞ்செய்ய எங்களால் முடியாது" என்று மறுத்துவிட்டார்கள். பிறகு யமன் கோபமடைந்து தனது சேனைகளோடு இராமரிடம் சண்டைசெய்ய அயோத்திக்கு வந்து ஒன்

பதுகோட்டை வாயில்கள் அழகிய ஒன்பது பிராகாரங்கள் ஆயுத சாலைகள் ஒன்பது அகழிகள் இவைகளால் விளங்கும் அயோத்தியை முற்றுகைபோட்டான். இதையறிந்த இராமர் லவனை யமனோடு யுத்தத்திற்கனுப்ப, லவன் இரதத்திலேறிக்கொண்டு அநேக சேனைகளோடு அயோத்திக்கு வெளியே சென்று, வெகு பாணங்களைவிட அவைகளால் அடிபட்டு அநேக யமதூதர்கள் கீழே விழுந்தார்கள். இதைப்பார்த்த யமன் மஹிஷத்தின் மீதேறிக்கொண்டு லவனோடு கோரயுத்தம் செய்து அநேக பாணங்களால் லவனது இரதம் சாரதி சேனை வில் கவசம் மகுடம் இவைகளையெல்லாம் வெட்டி நாசம் செய்தான். அப்போது லவனும் மிகுந்த கோபத்தையடைந்து, வேறு இரதத்திலேறிக்கொண்டு யமனோடு கோரயுத்தஞ் செய்தான். தேவர்கள் விமானத்தின் மீதிருந்து வேடிக்கைப் பார்த்தார்கள்.

உடனே லவன் தனது பாணங்களால் மஹிஷத்தை அடித்துப் பூமியில் தள்ளிவிட்டு யமனையும் பாணங்களால் அடிக்க, அவன் அதிக கோபத்துடன் தனது காலதண்டத்தை லவன்மீதெறிந்தான். அப்போது லவன் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தான். பிரம்மாஸ்திரம் வருவதைக்கண்டு யமதண்டம் திரும்பிவிட்டது. அப்போது யமன் மிகவும் பயந்து ஓட ஆரம்பித்தான். பிரம்மாஸ்திரமும் காலாக்நிபோல் அவனைத் துரத்திக்கொண்டு ஓடிற்று. அப்போது சூரியன் திவ்ய தேகத்துடன் லவனிடம் வந்து "ஏ பால! லவ! இப்போது யமனை நீ காப்பாற்ற வேண்டும். உன்னால் விடப்பட்ட பிரம்மாஸ்திரத்தை உபஸம்ஹாரம் செய்துகொள். நீ அஸ்திரங்களை யெல்லாம் அறிந்தவன். எனது வம்சத்தில் உண்டானவன். இந்த யமன் எனது பிள்ளை. உனது தமையனை நீ கொல்ல விரும்புவது கூடாது; ஒருவன் மூடனாகவிருந்தால், எல்லாரும் மூடராயிருப்பதில்லை. சண்டைக்களத்திலிருந்து ஓடின சத்துருவை வீரர்கள் கொல்வதில்லை. ஆகலால் நீ இவனைக் காப்பாற்றவேண்டும்" என்று வேண்டிக்கொள்ள லவன் பிரம்மாஸ்திரத்தை உபஸம்ஹாரம் செய்தான். பிறகு சூரியன் லவனை முன்னிட்டுக்கொண்டு யமனோடு இராகவரைப் பார்க்கச் சென்றார். அப்

போது ஆகாசத்தில் தேவதுந்துபிகள் முழங்கின. பட்டணத்து ஜனங்களும் வந்திமாகதர்களும் ஸ்தோத்திரம் செய்தார்கள். லவன் ஜயலக்ஷ்மியுடன் இராமரிடம் சென்று அவரை வணங்கினன். இராமர் சூரியன் வந்திருப்பதை யறிந்து, அவரை வணங்கி எதிர் கொண்டு சென்று கையைப்பிடித் தழைத்துக்கொண்டு ஸபைக்கு வந்து, சிங்காதனத்தில் அவரை உட்காரவைத்து ஷோடசோப சாரங்களால் அவரைப் பூஜித்தார். அப்போது இராமர் ஸபையி லுள்ள சூரியனிடம் "தாங்கள் பெரியோராதலால் லவன் எதா வது குற்றம் செய்திருந்தாலும் அதைப் பொறுத்தருளவேண்டும்" என்று தெரிவிக்க, சூரியன் "ஏ இராகவ! விஷ்ணுவான உமது நாபி கமலத்திலிருந்து பிர்ம்மா உண்டானர். அவரிடமிருந்து மரீசி முதலிய புத்திரர்கள் உண்டானர்கள். மரீசியினிடமிருந்து கசியபர் உண்டானர். கசியபரிடமிருந்து நான் உண்டானேன். ஆகையால் நான் உனக்குப் பௌத்திரனுக்குப் பௌத்திரன். எனது புத்திர னை யமன் ஏதாவது அபராதம் செய்திருந்தாலும் அதைப் பொறுத்துக் கொள்ளவேண்டும்" என்று பிரார்த்தித்து இராமரை வணங்கும்படி யமனுக்குச் சொன்னர். இச்சமயம் தேவரெல்லாரும் வந்து இராமரை நமஸ்கரித்தார்கள். இராமரும் எல்லாத்தேவதை களையும் ஆதரவோடு பூஜித்தார். பிறகு இராமரது ஆக்ஞையால், இந்திரன் அமிர்தத்தை வருஷித்துச் சண்டையில் இறந்தவீரர்களை யும் வாகனங்களையும் பிழைப்பித்தான். பிறகு இராமர் யமனுக்கு நான் இராஜ்யம் ஆளும்வரையில் நீ பூர்ணமான ஆயுளடைந்த வனைத்தான் கொண்டுபோக வேண்டுமே யல்லாது, மற்றவர்களைக் கொண்டுபோவது கூடாது" என்று உத்தரவு செய்ய, அவனும் அப்படியே ஒப்புக் கொண்டான். பிறகு பத்தாவது தினம் வந்த தும் ஸுமந்திரர் இராகவரை வணங்கி, அவரெதிரில் பிராணனை விட்டார். அவரது மனைவிகளும் அப்போதே பிராணனை விட்டார் கள். பிறகு ஸுமந்திரர் திவ்ய தேகங்களையுடைய தனது மனைவி களோடு தாமும் திவ்ய தேகத்தை யடைந்து திவ்ய விமானத்தின் மீதேறி எல்லாராலும் பூஜிக்கப்பட்டு, மிகவும் பிரகாசித்தார். இராமரது எதிரில் இவர் மரணத்தை யடைந்ததால் இவருக்கு இவ்வளவு பாக்கியம் கிடைத்தது.

பிறகு சூரியன் இராமரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு யமனோடு தமது இருப்பிடம் சென்றார். ஸுமந்திரரும் தமது ஸ்திரீகளோடு வைகுண்டம் சென்றார். இராமரும் ஸுமந்திரரது புத்திரனை ஸுமந்துவை மந்திரி ஸ்தானத்தில் ஏற்படுத்திக்கொண்டார். பிறகு இராமர் ஓர் ஆக்ஞைசெய்து அந்த ஆக்ஞையை உலகமெங்கும் பிரசித்தப்படுத்தும்படி இலட்சுமணரிடம் சொல்ல, அவரும் அவ்வாறே தூதர்களுக்கு ஆக்ஞாபிக்க, அவர்கள் துந்துபி வாத்திய கோஷங்களோடு எல்லா ஜனங்களுக்கும் பிரசித்தப் படுத்தினார்கள்.

## இராமரது ஆக்ஞை.

உலகத்தில் எவனாவது அற்பாயுளாக இருந்தால், அவனை இராமரிடம் கொண்டுவரவேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் பௌராணிகர்களை ஏற்படுத்தவேண்டும். எப்போதும் நித்யநைமித்திக கர்மங்களை விடுவதுகூடாது. பிராம்மணரை அவமானம் செய்வது கூடாது. ஒருவரையும் விரோதித்துக் கொள்வதுகூடாது. திருடர்களைத் தண்டிக்கவேண்டும். லோகத்தில் கெட்ட ஆசாரமுள்ளவர்களை அடக்கவேண்டும். எப்போதும் தர்மம் செய்யவேண்டும். அயோத்தி முதலான திவ்ய க்ஷேத்திரங்களில் புண்யகாலங்களில் ஸ்நானம் செய்யவேண்டும். வருஷந்தோறும் பிரயாகைக்குச் சென்று மாகஸ்நானம் செய்யவேண்டும். சாதுர்மாஸவிரதம் முதலியவைகளை அநுஷ்டிக்கவேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் துளஸீ பூஜை அதிதி பூஜை இவைகளைச் செய்யவேண்டும். பிராம்மணர் யாசித்தால், அதைப் பூர்த்தி செய்யவேண்டும். வீடு கிராமம் இவைகளில் ஒருகாலும் கலகம்செய்வதுகூடாது. குருவை எப்போதும் வந்தனம் செய்யவேண்டும். காலையில் எப்போதும் ஸ்நானம் செய்துவிட்டு விதிப்பிரகாரம் அக்நிகளைப் பூஜிக்கவேண்டும். ஒருவனாகவிருந்து தவஞ்செய்யவேண்டும். பிறர் பத்னியைப் பார்க்கவே கூடாது. புண்ய காலங்களில் வீட்டில் ஸ்நானம் செய்வது கூடாது. கணக்கர், வைத்தியர் இவர்களை விரோதித்துக் கொள்வதுகூடாது. தாஸியோடு புணருவதுகூடாது. எப்போதும் சரியான காலங்களில் நித்யகர்மங்களைச் செய்யவேண்டும். பிறரை நிந்திப்பது கூடாது.

காடுகளில் குளம் குட்டை இவைகளை வெட்டவேண்டும். மார்க்கங்களில் மரங்களைப் பயிராக்க வேண்டும். தனித்தனியாக தர்மசாலைகள் ஏற்படுத்த வேண்டும். ஸ்திரியை வஸ்திர மில்லாதபோது பார்ப்பதுகூடாது. பட்டணம் கிராமம் வனம் இவைகளில் அன்ன சத்திரங்கள் ஏற்படுத்த வேண்டும். காட்டில் வந்தவர்களை வேடர்கள் காப்பாற்ற வேண்டும். இரவில் ஜனங்கள் எங்கே சஞ்சரித்தாலும் அவர்களுக்குப் பயம் ஏற்படுவதுகூடாது. காலில் பாதரக்ஷைகளைப் போட்டுக்கொண்டு திவ்யதீர்த்தம், தேவன், குரு, கொட்டில், பிருந்தாவனம், ஹோமசாலை இவைகளுக்குப் போவதுகூடாது. எப்போதும் வேதம் முதலியவைகளைப் பாராயணம் செய்யவேண்டும். யதிகளுக்கு வந்தனஞ்செய்து போஜனம் செய்துவைக்க வேண்டும். அவர்களுக்குக் கமண்டலம் கௌபீனம் பாதுகை தண்டம் இவைகளைப் பக்தியோடு கொடுக்கவேண்டும். தனது மனைவியை இம்சிப்பதுகூடாது. பகலில் தூங்குவதுகூடாது. ஏகாதசியில் சாப்பிடுவதுகூடாது. தேவாலயங்களில் நன்றாய்ப் பூஜை நடக்கவேண்டும். பிராம்மணருக்கு எப்போதும் பானகம்பக்ஷணம் இவைகளைத் தானம் செய்யவேண்டும். எப்போதும் சாந்திசூக்தம் புருஷசூக்தம் இவைகளைப் பாராயணம் செய்யவேண்டும். எப்போதும் தர்மத்தைச் சம்பாதிக்க வேண்டும். ஆயுளைச் சஞ்சலமானதாக நினைக்கவேண்டும். துஷ்டபுத்தியை விட்டுவிட வேண்டும். எப்போதும் நரக துன்பத்தை நினைத்து நடக்கவேண்டும். நமக்கு வாலிபம் போகிறமாதிரி அழகும் போகிறது. கிழத்தனம் வரும்போது பற்கள் விழுகின்றன, கருப்புமயிர் வெளுக்கிறது. இவைகளெல்லாம் மரணம் சமீபத்துவிட்ட தென்பதைக் காட்டுங்குறிகள் என்றறியவேண்டும். ஆகையால் தாமதமின்றித் தானம்செய்யவேண்டும். எப்போதும் மனதைச் சுத்தமாய் வைத்திருந்து ஈசுவரனைத் தியானம் செய்து பரமானந்தத்தை யடையவேண்டும்--

ஸ்ரீராமருடைய இந்தக் கட்டளையை அந்த இராமதூதர்கள் எழு தீவுகளிலுமுள்ள ஜனங்களுக்குப் பிரசித்தப் படுத்திவிட்டு அயோத்திக்குத் திரும்பிவந்து, இராமரிடம் "தங்களது ஆக்ஞையை எழுதீவுகளிலுமுள்ள ஜனங்களுக்கும் துந்துபி வாத்தியங்க

ளோடு பிரசித்தம் செய்து விட்டோம்" என்று சொன்னார்கள். இராமர் கேட்டு ஸந்தோஷமடைந்தார். இவ்வாறு இராமர் பூமியில் வெகு சரித்திரங்களைச் செய்தார். ஏ சிஷ்ய! நான் இராமராஜ்ய காண்டத்தைக் கூறினேன். இந்த இருபத்துநான்கு சருக்கங்களும் மகாமங்களங்களைக் கொடுக்கக்கூடியன. பக்தியோடு இராஜ்யகாண்டத்தைப் படிக்கும் அரசர்கள் தங்கள் இராஜ்யத்தைவிட்டு எந்தக் காலத்திலும் நீங்கமாட்டார்கள். இந்த இராஜ்யகாண்டத்தைக் கேட்பவர்களுக்கு மஹாமங்களமுண்டாகும். உத்தியோகத்திலுள்ளவர்கள் இராஜ்யகாண்டத்தைப் படித்தால், அவர்களுக்கு உத்தியோகம் விருத்தியாகும். ஆனந்த ராமாயணத்தின் மத்தியிலுள்ள இராஜ்ய காண்டத்தைப் பக்தியோடு படித்தாலும் கேட்டாலும் ஜனங்களுக்கு மஹாமங்களமும் சித்தசுத்தியும் நிரதிசயானந்தமும் உண்டாகுமென்பதி லையமில்லை.

உத்தரார்த்தம்

இராஜ்ய காண்டம்

24-வது சருக்கம்

முற்றிற்று.

# மனோகர காண்டம்.

## 1-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

பரமகுருவே! நான் தங்களை ஒரு விஷயம் கேட்க விரும்புகின்றேன். அதன் உண்மையைக் கூறவேண்டும். முன் மகா புத்திமானாகிய நாரதமகாமுனிவர் இராமபிரான் சரித்திரத்தைச் சுருக்கமான வேதமொழிகளால் வான்மீகருக்கு உபதேசஞ்செய்ததாகக் கூறினீர்கள். அதை அதன் பொருள்களமைந்த சுலோகரூபமாக எனக்குக் கூறவேண்டும்-என்றார்.

### ஸ்ரீ இராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாச! நீ நன்றாகக் கேட்டாய்; நான் உன் கேள்விக்குப் பதிலுரைக்கின்றேன்; கவனமாகக் கேள் :—

வான்மீக முனிவர் தாம் நாரத முனிவரிட மிருந்து வேத மொழிகளால் உபதேசிக்கப்பெற்ற இராம சரித்திரத்தை நூறு சுலோகங்களாகக் கவனஞ் செய்து, அதைத் தாம் நூறு கோடி சுலோகங்களாகச் செய்த இராமாயணத்தின் முற்பகுதியில் சேர்த்திருக்கிறார். அதற்கு லகு ராமாயண மென்று பெயர் சொல்லப்படுகிறது. அதை உனக்குக் கூறுகிறேன்.

### மங்களாசரணம்.

கவனம் செய்யும் சக்தியாகிய கிளையின் மீதெறி, ராம ராம என்ற இனிமையான அக்ஷரங்களை, இனிமையாகக் கூவும் வான்மீகியாகிய குயிலை நான் நமஸ்கரிக்கின்றேன்.

கவனம் செய்யும் சக்தியாகிய காட்டில் சஞ்சாரம் செய்கின்ற வான்மீகி முனிவராகிய ஸிம்ஹத்தின் இராமாயண கதையாகிற சப்தத்தைக் கேட்ட, எவன் தான் (பாகதியை) நல்ல கதியை - அடையமாட்டான்.

எப்போதும் ராம சரித்திரமாகிய - அமிருத சமுத்திரத்தைப் பானம் செய்தவராயினும் அதில் திருப்தி யடையாதவரும், தோஷமற்றவரும், பிராசேதஸர் என்ற பெயருள்ளவருமான வான்மீகி முனிவரை நமஸ்கரிக்கின்றேன்.

சமுத்திரத்தைப் பசுவின் காலடிக்கும் அரக்கர்களை மசகத்துக்கும் சமானமாக நினைத்தவரும், இராமாயணமாகிய உயர்ந்த மாலைக்கு இரத்தினம் போன்றவருமான வாயுகுமாரனை நான் நமஸ்கரிக்கின்றேன்.

அஞ்சனாதேவியின் குமாரரும், வீரியமுள்ளவரும், ஸீதாதேவியின் துக்கத்தைப் போக்கினவரும், வானரர்களுக்குள் சிரேஷ்டரும், அக்ஷயனைக் கொன்றவரும், இலங்கைக்கு அச்சத்தை உண்டாக்கினவருமாகிய அநுமாரை நான் நமஸ்கரிக்கின்றேன்.

விளையாட்டாகக் கடலைக் கடந்து, ஜனகன் குமாரியாகிய ஸீதையின் துக்கமான நெருப்பை எடுத்து, அந்த நெருப்பினாலேயே இலங்கையை எரித்த அஞ்சனையின் குமாரனாகிய ஆஞ்சநேயரை நான் கைகூப்பிக்கொண்டு நமஸ்கரிக்கின்றேன்.

மனதுக்கும் வாயுவுக்கும் சமமான வேகமுள்ளவரும், இந்திரியங்களை ஜயித்தவரும் புத்திசாலிகளுக்குள் உயர்ந்தவரும், வாயுவுக்குக் குமாரரும் வானரக் கூட்டங்களுக்குள் சிரேஷ்டரும். ஸ்ரீராமருக்குத் தூதருமான அநுமாரைத் தலையால் வணங்குகின்றேன்.

பிரம்ம சொரூபியும் இரகுவம்சத்திற்கு நாதரும், இராமபத்திர ரென்றும், இராமச்சந்திர ரென்றும் பெயர் பெற்றவரும், ஸீதைக்குப் பதியுமாகிய ஸ்ரீராமரின் பொருட்டு நமஸ்காரம் செய்கிறேன். உலகங்களைத் தரிப்பவரும், பிறப்பற்றவரும், உலக சொரூபியும், குணமற்றவரும், குணரூபமுள்ளவரும், பகவானுமாகிய ஹரியை நமஸ்கரிக்கின்றேன்.

மங்களாசரணம்.

முற்றிற்று.

---

தவசிரேஷ்டராகிய வான்மீகி முனிவர், தவம் வேதம் இவை களில் ஆசையுள்ளவரும், வேதத்தின் அர்த்தத்தை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டரும், முனிவர்களுக்குள் உயர்ந்தவருமான நாரத முனிவரை வினவுகிறார்:—

இந்தப் பூலோகத்திலிப்போது எவன் நற்குணங்களுள்ளவன், எவன் வீரியமமைந்தவன், எவன் தருமங்களை யறிந்தவன், எவன் செய்த உபகாரத்தை மறக்காதவன், ஸத்தியமான வசனமுள்ளவன் எவன், திடமான விரதமுள்ளவன் எவன், நல்ல நடத்தையுள்ளவன் எவன், சகல பிராணிகளிடத்திலும் இதமான எண்ணமுள்ளவன் எவன், எவன் அறிந்தவன், எவன் சாமர்த்தியமுள்ளவன், எவன் எப்போதும் பிரியத்துடன் பார்க்கத் தகுந்த ரூபமுள்ளவன், தைரியம் உள்ளவன் எவன், கோபத்தை ஜயித்தவன் எவன், காந்தியுள்ளவன் எவன், அசூயை யில்லாதவன் எவன், யுத்தத்தில் எவனுக்குத் தேவர்களாலும் பயமடைவார்கள்-இவைகளை எனக்குக் கூறவேண்டும், நான் கேட்க விரும்புகிறேன்—என்றார். மூவுலக விஷயங்களையும் அறிந்த நாரதமுனிவர் வான்மீகி முனிவரின் வாக்கியத்தைக் கேட்டு, சந்தோஷித்து, அவரைப்பார்த்துக் கூறுகிறார்.

வான்மீகி முனிவரே! தங்களால் கூறப்பட்ட அனேககுணங்கள் ஒரு மானிடனிடம் இருப்பது துர்லபம். ஆயினும் தாங்கள் கூறிய குணங்களையுடைய ஓர் மானிடனை நான் தெரிந்து கூறுகிறேன் கேளுங்கள். இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்து, சகல ஜனங்களும் புகழ விளங்குகிறான் இராமன் என்ற பெயருள்ள மானுடன் ஒருவன். அவன் கட்டுப்பட்ட மனமுள்ளவன், மிகுந்த வீரியமுள்ளவன், காந்தியுள்ளவன், தைரியமுள்ளவன், இந்திரியங்களை ஜயித்தவன், புத்தியுள்ளவன், நியாயமுள்ளவன், நல்ல வாக்குள்ளவன், அழகுள்ளவன், சத்ருக்களைச் சங்காரம் செய்யும் சக்தியுள்ளவன், பரந்த புயமும், நீண்ட கைகளும், சங்கம்போன்ற கழுத்தும், பெருத்த கன்னத்தின் மேற்பாகமும், சிலாக்கியமான மார்பும் உடையவன். பெரிய, வில்லையுடையவன், மறைந்திருக்கும் தோள்களின் ஸந்தியுடையவன், காமம் முதலிய சத்ருக்களை நாசம் செய்தவன், முழங்கால் வரையில் நீண்ட கைகளுள்ள

வன், அழகான நெற்றியும் நல்ல நடையும் உடையவன், சம மான உயரம், உயரத்திற்குத் தக்க பருமன், சமமாகப் பிரிந் திருக்கும் கை கால் முதலான அவயவங்கள், பராக்ரமம் இவைகளுடையவன்; பெருத்த மார்புடையவன்; நீண்ட கண் கள் படைத்தவன், மங்களத்தை விளைவிக்கும் அடையாளங்க ளமைந்தவன், தருமங்களை யறிந்தவன், சத்தியபிரதிஞ்ஞையோடு கூடினவன், பிரஜைகளுக்கு நன்மையைக் கோருகிறவன், நல்ல கீர்த்தி யமைந்தவன், ஞானத்துடன் கூடியவன், பரிசுத்தன், இந்திரியங்களை ஜயித்தவன், மனதை ஒருமைப்படுத்தும் சக்தி யுள்ளவன், பிர்ம்மதேவருக்குச் சமானமானவன், ஸ்ரீ யோடு கூடினவன், ஸகல ஜனங்களையும் இரக்ஷிக்கிறவன், சத்ருக்களைச் சங்கரிப்பவன், தரும பரிபாலனம் செய்பவன், தன்னைச் சேர்ந்த ஜனங்களைக் காப்பாற்றுகிறவன், வேதங்கள் வேதத்தின் ஆறு அங்கங்கள் இவைகளின் உண்மையை அறிந்தவன், தநுர்வேதத் திலும் சமர்த்தன், ஸகல சாஸ்திரப் பொருள்களின் உண்மையை அறிந்தவன், ஞாபகசக்தி யுள்ளவன், புதிது புதிதாகத் தோன் றும் பிரக்ஞையுள்ளவன், ஸகல ஜனங்களுக்கும் வேண்டியவன், ஸாது, துக்கப்படாத மனமுள்ளவன், சாமர்த்தியமுள்ளவன், சாதுசங்கப் பிரியன், பூஜ்யன், எல்லோரிடத்திலும் சமமான எண்ணமுள்ளவன்-இவ்விதம் சகல குணங்களு மமைந்தவனும் கௌஸல்யைக்கு ஆனந்தத்தை விருத்தி பண்ணுகிறவனுமாகிய அந்த இராமன் கம்பீரத்தில் சமுத்திரத்தையும், தைரியத்தில் இமவானையும்,வீரியத்தில் விஷ்ணுவையும் ஒத்திருப்பான். கோபத் தில் பிரளய காலாக்கினிக்கும், பொறுமையில் பூமிதேவிக்கும், கொடுப்பதில் குபேரனுக்கும், ஸத்தியவசனத்தில் தருமதேவதைக் கும் நிகராவான்.

இவ்வித குணங்களுடன் கூடியவனும் ஸத்தியமான பராக்ரம முள்ளவனும் பிரியனும் ஜனங்களுக்கு நன்மையைச் செய்வதில் ஆசையுள்ளவனும் மூத்தவனுமாகிய ஸ்ரீராமனென்ற குமாரனுக்கு ஜனங்களுடைய பிரீதியை விரும்பி யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவைக்க, பூபதியாகிய தசரத மகாராஜன் யத்தனித்தான்.

இராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் செய்யப் போவதை யறிந்த தசரதரின் பத்தினியாகிய கைகேயி, தான் முன்பு அவரிடம் பெற்றிருந்த இரண்டு வரங்களின்படி, ஒன்றால் இராமரை வனத்துக்கு அனுப்ப வேண்டுமென்றும், ஒன்றால் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும் என்றும் அவரிடம் வேண்டிக் கொண்டாள். தசரதர், தருமமாகிய கயிற்றால் கட்டுண்டு ஸத்தியமான சொல்லைக்காப்பாற்றும் பொருட்டுக் கைகேயியின் கருத்துக் கிணங்கி, இராமரை வனத்துக்குச் செல்ல உத்தரவு கொடுத்தார். மகா வீரனாகிய இராமன் கைகேயிக்குத் தமது தந்தை செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்றுவதற்கும், தந்தை வாக்கியப் பரிபாலன நிமித்தமும், கைகேயியின் திருப்திக்காகவும் வனம் செல்லப் புறப்பட்டார். இராமபிரான் வனஞ்செல்லப் புறப்படுவதைப் பார்த்ததும், சுமித்திரைக்கு ஆனந்தத்தை விருத்திபண்ணுகிறவரும், வணக்கத்துடன் கூடினவரும், தமையனாகிய இராமரிடம் அன்புடையவருமான இலட்சுமணர், ஒரு தம்பி தன் தமையனிடம் இம்மாதிரி இருக்கவேண்டுமென்பதை உலகத்தாருக்கு உணர்த்துவதன் பொருட்டு, அவரோடு தாமும் வனத்திற்குச் செல்லப் புறப்பட்டார். இதையறிந்தபின், இராமபிரானின் ஆருயிர்போ லுள்ளவளும், ஜனக புத்திரியும் அவதாரமாகிய மோகினிபோல் சகல இலட்சணங்களுமமைந்தவளும் ஸ்திரீகளுக்குள் உத்தமியுமான ஸீதாபிராட்டி, உரோகிணி சந்திரனை யநுசரிப்பதுபோல், இராமரை அநுசரித்து அவருடன் வனஞ்செல்லச் சித்தமானாள்.

பிறகு இராமர், ஸீதை, தம்பி இலட்சுமணர் இவர்களையும் அழைத்துக் கொண்டு வனமேகினர். பட்டணத்தாரும், சுமந்திரர் முதலிய மந்திரிமார்களும், தந்தையாகிய தசரதரும் பந்துக்களும் அவரைப் பின்றொடர்ந்து வெகுதூரம் சென்றார்கள். கங்காநதிக்கரையிலுள்ள சிருங்கபேர பட்டணத்திற்குச் சென்றதும் தருமசீலராகிய இராமபிரான் வேடர்களுக்கு வேந்தனாகிய குகனை யடைந்து, சுமந்திரர் முதலானவர்களை விட்டுப் பிரிந்தார். இராமபிரான் ஸீதா இலட்சுமணர்களுடன் குகனைக்கொண்டு கங்காநதியைக்கடந்து, பரத்வாஜாசிரமத்திற்குச் சென்றார். பிறகு அவர்

உத்தரவிஞல் சித்ரகூட பருவதம் சென்று, ஓர் அழகான பர்ன சாலே கட்டி அதில் வசித்துக் கொண்டிருந்தார்.

இராமபிரான் இங்கு வசித்துக் கொண்டிருக்கையில் அவரை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தசரத மகாராஜன் சொர்க்கலோகஞ் சென்ருர். பிறகு வசிஷ்டர் முதலியவர்கள் இராஜ்யாபிஷேகத்தை எற்றுக்கொள்ளும்படி பரதனுக்குப் பன்முறையுங் கூறினர்கள். மகாபலமுள்ள பரதன் அதற்குச் சம்மதிக்காமல், இராமபிரானிடம் அநுக்ரகம் பெறுவதன் பொருட்டுச் சித்ரகூட பருவதம் சென்று அவரைக்கண்டு, " அண்ணு! தருமங்களையறிந்த நீர்தான் ராஜா ; நான் ராஜாவாவதெப்படி ? ஆகையால் தாங்களே இராஜ்யத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் " எனக் கேட்டான். இராமசந்திரர் ஔதாரியம், மகிமை, தம்மை யாசிரயித்தவர்களை ஆதரிக்கும் உத்தமகுணம் இவைகளை யுடையவராயினும் தந்தை வாக்கிய பரிபாலன நிமித்தம் இராஜ்யத்தை எற்றுக்கொள்ளச் சம்மதிக்காமல், இராஜ்ய பரிபாலனம் செய்யத் தமது பாதுகைகளை அடைக்கலமாகக் கொடுத்துப் பரதனை அயோத்திக்கு அனுப்பினர். பரதன் பாதுகைகளைப் பெற்றுத் திரும்பி அயோத்தியின் எல்லேக்குள் நுழையாமல் அதற்கப்புறமுள்ள நந்திக்கிராமம் என்னுமிடத்தில் தங்கி அயோத்தியை ஆண்டுவந்தான்.

பிறகு ஸத்தியசந்தரும் இந்திரியங்களை ஜயித்த வருமான இராமபிரான், நாம் இங்கிருந்தால் பட்டணத்து ஜனங்கள் அடிக்கடி நம்மிடம் வருவார்களென்றெண்ணி, சித்திரகூடத்தைவிட்டுப் புறப்பட்டுத் தண்டகாரண்யத்தில் பிரவேசித்தார். தாமரைமலர் போன்ற கண்களுள்ள இராமபிரான் தண்டகாரண்யத்தில் தம்மை யெதிர்த்த விராதனென்னும் அரக்கனை வதம் செய்துவிட்டுச் சரபங்க மகா முனிவரைக் கண்டார்.

பிறகுஅவர்,சுதிக்ஷ்னர்,அகஸ்தியர்அவர்சகோதரராகிய சுதர்சனர் இவர்களைக்கண்டுசேவித்தார், அகஸ்திய முனிவர் கூறியபடி இந்திரனுல் கொடுக்கப்பட்ட வில், கத்தி, குறையாத பாணங்களைக் கொடுக்கும் அம்பறுத்தூணி இவைகளைப் பெற்றுக் கொண்டார். அசுரர்கள் இராக்ஷத ஸ்திரீகள் இவர்களின் வதத்தை யுத்தே

சித்திரக் காட்டில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் இராமரிடம் அநேக முனிவர்கள் வந்தார்கள். தண்டகாரண்ய வாசிகளும் அக்கினிக் கொப்பானவர்களுமான முனிவர்களுக்கு ஸ்ரீ இராமபிரான் தாம் அரக்கர்களை வதஞ்செய்வதாகப் பிரதிக்ஞை செய்து கொடுத்து அவர்களுக்குச் சந்தோஷ முண்டாக்கினர்.

பிறகு ஜனஸ்தானத்திலிருந்து தாமிருந்த பஞ்சவடி தீரத்திற்கு வந்த சூர்ப்பணகை என்ற அரக்கியின் மூக்கு முலைகளை இலட்சுமணரைக்கொண்டு அறுத்து அவளை விரூபப்படுத்தினர் பிறகு அந்தச் சூர்ப்பணகையின் சொல்லைக்கேட்டு அமருக்குவந்த கரன், திரிசிரஸ், தூஷணன் முதலியவர்களையும் அவர்களுடன் வந்தவர்களையும் சங்கரித்தார். அந்தவனத்தில் வாசஞ்செய்யும் இராக்ஷஸர்களிற் பதினாயிரம் பேர்கள் இராமரால் அடிபட்டு உயிர் துறந்தார்கள். இப்படித் தன் பந்துக்களும் தம்பிமார்களும் இராமரால் வதஞ் செய்யப்பட்டதை அறிந்த இராவணன், மாரீசன் என்ற அசுரனைத் தனக்கு உதவி செய்யும்படி கேட்டுக்கொண்டான். மாரீசன் இராவணனைப் பார்த்து, "ஏ இராவணா! அதி பராக்ரமசாலியாகிய அந்த இராமருடன் விரோதஞ் செய்துகொள்வது உனக்கு அழகல்ல" என்று கூறி இராவணனைத் தடுத்தான்.

காலபாசத்தினால் கட்டுண்ட இராவணன் அவன் வாக்கியத்தை அநாதரவு செய்து, மாரீசனுடன் இராமருடைய ஆசிரமத்திற்கு வந்தான். மாயாவியான மாரீசன் தன் மாயையால் இராம இலட்சுமணர்களை வெகு தூரம் அழைத்துக்கொண்டு சென்றான். இராவணன் ஜடாயுவை வதஞ்செய்து இராமபிரானுடைய பத்தினியாகிய ஸீதாபிராட்டியை யபகரித்தான். ஸீதையை இராவணன் அபகரித்துப் போனானென்பதை அடிபட்டுக்கிடந்த ஜடாயுவினா லறிந்த இராமர் சோகத்தையும் வியாகூலத்தையு மடைந்து பிரலாபித்தார். பிறகு ஜடாயுவைத் தகனஞ்செய்து ஸீதையைத் தேடச்சென்றார். வழியில் விகாரரூபியான கபந்தன் என்னும் ஓர் அரக்கனைப்பார்த்தார். மகாபராக்கிரமசாலியான இராமர் அவனை வதஞ்செய்து தகனமுஞ் செய்தார். கபந்தன் சொர்க்கஞ்சென்றான். சொர்க்கத்திற்குச் செல்லும் கபந்

தன் இராகவனைநோக்கி, "ஏ இராகவ! தருமமறிந்தவளும் தருமம் செய்பவளும் ஸன்னியாசாசிரமத்தி லிருப்பவளுமான சபரியிடம் செல்" என்று கூறினன். இராமர் அவ்விதமே சபரியிடம் சென்றார். சபரி இராமனை நன்ருகப் பூஜித்தாள். பிறகு பம்பாநதிக் கரையில் அநுமாரோடு சேர்ந்து மகிழ்ச்சியடைந்தார். அவர் மூலமாகச் சுக்ரீவனிடம் சென்றார். மகாபராக்கிரமசாலியாகிய இராமர் சுக்ரீவனிடம் தமது விருத்தாந்தத்தையும் ஸீதையின் விருத்தாந்தத்தையுங் கூறினர். அவைகளைக் கேட்டதும் சுக்ரீவன் அக்நிசாக்ஷியாக இராமரிடம் சிநேகம் செய்துகொண்டான். பிறகு வானர ராஜனை சுக்ரீவன் தனக்கும் வாலிக்குமுள்ள விரோதத்தைக் கூறினன். இராமர் அதைக்கேட்டதும் தாம் வாலியை வதம் செய்வதாக வாக்களித்தார். அப்பொழுது சுக்ரீவன் வாலியின் பராக்ரமத்தை இராமருக்குத் தெரிவித்து, இராமருடைய பலத்தில் சந்தேகங்கொண்டான். உடனே அங்குப் பருவதத்திற்குச் சமானமாயிருந்த துந்துபியின் எலும்புக் கூட்டைக் காண்பித்தான். இராமர் அதைப்பார்த்து அலக்ஷியமாக நினைத்துத் தமது காற்பெருவிரலால் அதையெற்றிவிட்டார். அது பத்துயோசனை தூரத்திற்கப்பால் சிதறி விழுந்தது. பிறகு சுக்ரீவன் எழு சாலவிருக்ஷங்களைக் காண்பித்தான். அவைகளனைத்தையும் இராமர் ஒரே பாணத்தால் துளைத்தார். அதைப் பார்த்த சுக்ரீவன் வியப்புற்று இராமருடன் கிஷ்கிந்தைக்குச் சென்று கம்பீரமாகக் கர்ச்சித்தான், அந்த கர்ச்சனையைக்கேட்ட வாலி யுத்தத்திற்கு வெளிக்கிளம்பினன். அப்பொழுது தன்னைத் தடுத்த தாரைக்குச் சமாதானஞ் செய்துவிட்டுச் சுக்ரீவனிடம் யுத்தஞ் செய்தான். இராமர் அவனை ஒரே பாணத்தால் அடித்துவிட்டுச் சுக்ரீவனைக் கிஷ்கிந்தாபதியாக்கினர்.

பிறகு சுக்ரீவன் சகல வானரர்களையும் வரவழைத்து ஸீதையைத் தேடும்பொருட்டுத் திக்குகள்தோறும் அனுப்பினன். அநுமார் சம்பாதியின் வார்த்தையைக்கேட்டு நூறுயோசனை விஸ்தீரணமுள்ள லவண சமுத்திரத்தைத் தாண்டி இலங்கைசென்றார்.

இராவணனல் பரிபாலிக்கப்படும் அந்த இலங்கையில் அசோகவனத்தில் சோகத்தையடைந்து தியானம் செய்துகொண்டிருந்த

ஸீதையைப் பார்த்தார். ஸீதையினிடம் அடையாளத்தைக் காண்பித்து இராமபிரானுடைய முயற்சியையும் அறிவித்து ஸீதையைச் சமாதானப் படுத்திவிட்டு,கோபுரவாயிலையும் அசோக வனத்தையும் அழித்தார். இதைக்கண்டு யுத்தத்திற்கு வந்த பஞ்ச சேனாதிபதிகளையும் ஏழு மந்திரி குமாரர்களையும் வதஞ் செய்து மிகுந்த பராக்கிரமமுள்ள அக்ஷய குமாரனைக் கசக்கிப் பிழிந்தார். இந்திரஜித்தினால் விடப்பட்ட பிர்ம்மாஸ்திரத்தினால் கட்டுண்டார். பிறகு பிர்ம்மாவின் வரமகிமையால் அவ்வஸ்தி ரத்தினின்றும் விடுபட்டு இராக்கதர்களை நாசஞ் செய்து, ஸீதை யிருக்குமிடந்தவிர இலங்கையில் மற்ற இடங்களை எரித்துவிட்டு நற்செய்திகூற இராமரிடம் வந்தார். இராமரைக் கண்டதும் "கண்டேன் ஸீதையை" என்றுகூறி அவரை வலம்வந்து வணங்கி மகிழ்ந்தார். பிறகு சுக்ரீவனுடன் இராமர் சமுத்திரக்கரைக்குச் சென்று சூரியனுக்குச் சமமான பாணங்களைப் பிரயோகித்துச் சமுத்திரத்தைக் கலக்கினார். சமுத்திரராஜன் இராமருக்கு முன் தோன்றி நளனைக்கொண்டு தன்மேல் அணைகட்டிச் செல்லும்படி மிகவும் வணக்கமாய்க் கேட்டுக்கொண்டான். அவ்விதமே இரா மர் அணைகட்டி அவ்வழியாக இலங்கைசென்று அங்கு இராவண னுடன் போர்புரிந்து ஸீதையை அடைந்தார். ஸீதைமிகவும் வெட் கத்துடன் அவர்முன் வந்தாள். இராமர் ஸீதையை உதாசீனம் செய்தமையால், ஸீதை உடனே அக்நிப்பிரவேசஞ் செய்தாள். பிறகு அக்நிபகவான் வாய்மொழியால் ஸீதை குற்றமற்றவளென்று கேட்டு இராமர் மனமுவந்து ஸீதையை ஏற்றுக்கொண்டார். சகல தேவதைகளும் அவரைப் பூஜித்து மலர்மாரி பொழிந்தார்கள்.

* * * *

பிறகு விபீஷணனை இலங்காதிபதியாகச்செய்வித்துத் தம்மை கிருதகிர்த்தியராக நினைத்து மனக்கவலையற்றுச் சந்தோஷமடைந் தார். பின்தேவதைகளினுடைய வரப்பிரசாதத்தினால் யுத்தத்தில் மடிந்தவானரர்களை யெழுப்பி யழைத்துக்கொண்டு புஷ்பகவிமான த்தி லேறி அயோத்திக்குப் புறப்பட்டார். மார்க்கத்தில் இராமர்

பரத்வாஜாசிரமத்தை யடைந்து அநுமாரைப் பரதனிடம் அனுப்பினர்.

உடனே சுக்ரீவனுடன் புஷ்பக விமானத்தின் மீதேறிக் கொண்டு நந்திக் கிராமத்தை யடைந்தார்; நந்திக் கிராமத்தில் தமது சகோதரர்களுடன் ஜடாவிசர்ஜனம் செய்தார்.

பிறகு இராமபிரானை ஸீதையுடன் சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்து பட்டாபிஷேகம் செய்வித்தார்கள். சகலஜனங்களும் சந்தோஷத்தை யடைந்தார்கள்; தர்மத்தைச் செய்தார்கள்; பிறகு அந்த அயோத்தியா பட்டணத்தில் வியாதி, துர்ப்பிக்ஷம், பயம் இவைகள் கிடையா. தந்தை கண்முன்பு புத்திரனிறப்பதில்லை. விதவைகளேற்படுவதில்லை. காற்றினாலாவது, அக்நியினாலாவது, ஜலத்தினாலாவது, பசியினாலாவது திருடர்களாலாவது ஒருவருக்கும் பயமேகிடையாது. பட்டணங்களும் இராஜ்யங்களும் தனதான்ய சம்பத்துடன் நிறைந்திருந்தன. எல்லோரும் கிருதயுகத்தில் எப்போதும் ஸந்தோஷித்திருந்ததுபோ லிருந்தார்கள். ஸ்ரீராமர் நூறு அசுவமேதங்கள், பகுசுவர்ணகம் என்னும் யாகங்கள் இவைகளைச் செய்து பதினாயிரங்கோடி கோக்களைப் பிராமணர்களுக்குத் தானங் கொடுத்தார். இராஜ பரம்பரைகளை இன்னும் நூறுமடங்கதிகமாக எற்படுத்தி இவ்வுலகத்தில் நான்கு வருணத்தார்களையும் அவரவர்களுக்குரிய தருமங்களைச் செய்து வரும்படி எற்படுத்தினர். இராமர் பதினோராயிரவருஷம் வரையில் இராஜ்ய பரிபாலனம் செய்து பிர்ம்மலோகம் சென்றார். பாபத்தைப் போக்கிப் பரிசுத்தத்தைக் கொடுக்கும் வேதங்களுக்கு ஒப்பான இந்த இராம சரித்திரத்தைப் படிப்பவன், சகல பாபங்களிலிருந்தும் விடுபட்டுப் புத்திர பௌத்திராதிகளுடன் பரலோகஞ்சென்று சொர்க்கத்தில் விளங்குவான். பிராமணன் படிப்பானாயின் வாக் சுத்த முண்டாகும்; க்ஷத்திரியன் படிப்பானாயின் இராஜாவாக ஆவான்; வைசியன் படிப்பானாயின் லாபம் அடைவான்;சூத்திரன் படிப்பானாயின் தன் ஜாதிக்குள் உயர்ந்தவனாவான்.

ஏ விஷ்ணுதாஸ! இவ்விதம் நாரதமகாமுனிவர் வான்மீகி முனிவருக்கு வேதவாக்கியங்களாற்கூறிய அர்த்தத்தைக் கிரகித்து

சுலோக ரூபமாக இலகு ராமாயணம் என்னும் பெயருள்ளதாக அவ்வான்மீக முனிவராலேயே அமைக்கப்பட்டிருக்கிறது. நூறு சுலோகங்களா லாக்கப்பட்ட இச்சரித்திரத்தை உனக்கு முன்னமேயே கூறியிருக்கின்றேன், அந்த வான்மீகி முனிவர் பிரம்மா கொடுத்த வரத்தால் எல்லாவற்றையும் அறிந்து நூறுகோடி கிரந்தங்களால் வர்ணித்திருக்கிறார்; இராம க்ரீடையைச் சுலோக ரூபமாகச் செய்தார்.

இலகு ராமாயணத்தைக் கூறும்

## 1-வது சருக்கம்

முற்றிற்று.

## 2-வது சருக்கம்.

---

### ஸ்ரீ இராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ஒரு சமயம் சபையின் மத்தியில் பட்டணம், தேசம் இவைகளில் வசிப்பவர்கள் இராமரைப் பரமாத்மாவென்றே கருதி அவரிடம் வந்து வணக்கத்துடன்:—

ஏ மகாராஜனாகிய இராமச்சந்திர பிரபுவே! விஷயங்களில் பற்றுதலுள்ள மனமுடையவர்களாகிய எங்களுக்கு நல்ல ஞான முண்டாகும்படி உபதேசம் செய்யவேண்டும்—என்றார்கள். இவ் வார்த்தையைக்கேட்ட இராமர் புன்னகைகொண்டு "எப்போ தும் நீங்கள் உபதேசிக்கப்படுகிறீர்கள். அதை இராத்திரியில் ஒவ்வொரு யாமத்திலும் என் தூதர்கள் அறிவிக்கின்றார்களே! அஃதிருக்கட்டும்; இப்பொழுது நீங்களெல்லோரும் இன்றிரவு ஞாபகத்துடன் என் தூதர்கள் சொல்லும் வசனத்தைக் கேட்டுப் பிறகு உங்கள் மனதில் தோன்றுவதைத் தெரிவியுங்கள்" என் றார். ஜனங்கள் "அவ்விதமே செய்கிறோம்" என்று கூறி அவரை வணங்கித் தங்கள் தங்கள் வீட்டுக்குச்சென்று சயனித்துக்கொண் டிருக்கும்போது தூதர்களின் வாக்கியங்களைக் கவனித்துக்கொண் டிருந்தார்கள். அச்சமயம், இரவு பதினொன்றேகால் நாழிகைக் குத் தூதர்கள் தீவட்டிகள் ஆயுதங்கள் தடிகளைத் தாங்கியவர்க ளாய் வாகனங்களின் மீதேறிக்கொண்டு யானைகளின்மீது துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்க, வீதிகளெங்குஞ் சென்று—

ஏ ஜனங்களே! நீங்களெல்லோரும் மோகத்தால் என் தூங் குகிறீர்கள்? இந்தத் தூக்கம் சரியல்ல. எப்போது அனர்த்தம் விளையுமோ தெரியவில்லை. நீங்கள் எல்லோரும் மனதைத்திடப் படுத்திக் கொள்ளுங்கள். எங்கள் சொல்லைக் கேளுங்கள். இந்த அயோத்தியா பட்டணத்திற்கு ஒன்பது வாயில்கள். அவைகளில் ஒன்று இலகுவா யிருக்கின்றது. இந்த இராம இராஜ்யத்தில் பய மில்லை. ஆதலால் அவ்வாயில்களுக்குக் காவலாளிகளில்லை. தவிர கதவுகளுக்குத் தாழ்ப்பாளுமில்லை. கறுத்த வர்ணமுள்ள திரு

டன் தென் திக்கிலிருக்கிருன் என்று கேள்வி. அவனை ஒருவரும் பார்த்ததில்லை. அவனுடைய தூதர்கள் ஜனங்களைப்போல் வேடம் பூண்டு இந்நகரத்தின்கண் வந்து உலாவுகிருர்கள். அவனை நாங் கள் பார்த்ததில்லை. வேறு தூதனைக்கண்டால் அந்த நிமிஷத்தில் எங்கும் பேதத்தைச் செய்து கலகஞ்செய்கிறதாகக் கேள்விப்படு கிருேம். இவ்விதம் அநேகதூதர்கள் இங்குச் சஞ்சரிக்கிருர்கள்,

இந்த அயோத்தியாபதியாகிய இரகுவீரர் வெகுகாலம் வாழ்ந்திருக்கட்டும். அப்பொழுது நமக்குப் பயமில்லை. இராம பிரானுடைய பலத்தையறிந்தவன் யாவன்? ஆத்மாராமரும் சச்சி தானந்த சொரூபியும் பிரபுவுமாகிய இராமபிரானை இத்தூதர் களால் என்னசெய்ய முடியும்? பலமற்றவர்களாகிய உங்களுக்கு அந்தத் தூதர்களிடமிருந்து எப்போதும் பயமுண்டு. பலமில்லா தவர்கள் அஜாபுத்திரனை (மாயையாலான ஜீவனை) பலிகொடுத்து வருகிருர்கள். இங்குச் சிங்கத்திற்குப் பலிகொடுத்ததாகத் தெரிய வில்லை. ஆகையால் பலம்குறைந்த நீங்கள் இரவில் என் தூங்கி விடுகிறீர்கள். அந்தத் தூதர்கள் உங்களைத் துன்மார்க்கர்களாக்கி, அந்தத் திருடனை இங்கு வரவழைக்கிருர்கள். அந்தச் சமயம் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. ஆகையால் தூங்குவது யரியல்ல; தூக்கத்தைவிட்டு இந்நகரத்தில் இரவிலும் பகலிலும் சாவதான மாயிருந்து அருகே எப்போதும் கூர்மையான கத்தியை வைத்திருக்கவேண்டும். சரீரத்தில் கவசங்களை அணியவேண் டும். ஜனங்களே! தைரியத்துடன் பயமில்லாமலிருக்கவேண்டும். இந்த அயோத்தியாபுரியில் எவன் எப்போதும் விழித்துக்கொண் டிருக்கின்றுனே அவனுக்குத் திருடனிடம் எப்போதும் பய மில்லை. எங்களுடைய வாய்மொழிகளை எப்போதும் மறவாதிரு ங்கள். ஜனங்களே! எப்போதும் சாவதானம்! சாவதானம்!! சாவதானம்!!! அயோத்தியாபுரியிலுள்ள நீங்களெப்போதும் துறையாயிருங்கள்.—

இவ்விதம் அந்த இராஜதூதர்கள் கூறித் துந்துபிவாத்தியங்க ளையும் இன்னும் மற்றுமுள்ள மனேரம்யமான வாத்தியங்களையும் முழக்கினர்கள். அவர்கள் இரவில், கொஞ்சகாலத்திற்கு ஒரு தடவையாக, மூன்றுதடவை இந்த விஷயங்களைக் கூறிக்கொண்டு

பட்டணத்தில் சஞ்சாரம் செய்தார்கள். இவ்விதம் போதனை செய்யப்பட்ட ஜனங்கள் யாவரும் அந்த விஷயங்களின் அர்த்தத்தை விசாரித்து, ஞானத்தை அடைந்தார்கள். பிறகு காலையில் பட்டணத்திலுள்ளவர்கள் தேசத்திலுள்ளவர்கள் எல்லோரும் சந்தோஷத்துடன் சபைக்கு வந்து ஸ்ரீராமரை நமஸ்காரம் செய்து அவர் ஸந்நிதியில் நின்று, "கமலமலர்போன்ற அழகான கண்களையுடைய ஏ இராம! தம்முடைய தூதர்களின் சொற்களை எப்போதும் நாங்கள் கேட்கின்றோம். ஆனால் அர்த்தங்களை விசாரிக்காமலிருந்தோம். இன்றையதினம் இரவில் தங்களுடைய தூதர்கள் கூறியவைகளைத் தங்கள் உத்தரவின்படி புத்தியைச்செலுத்தி மனதிற்கொண்டு விசாரித்தோம். அஞ்ஞானம் நீங்கிற்று. ஞானம் உண்டாயிற்று. ஏ இராம! இப்போது தாங்கள் உபதேசிக்க வேண்டுமென்பதில்லை" என்று கூறினார்கள்.

இவ்விதம் அவர்கள் கூறியதைக் கேட்ட இராமர் மந்தஹாஸத்துடன் அவர்களைப்பார்த்து, "எப்படி உங்களுக்கு ஞானம் உண்டாயிற்று? நீங்கள் ஆசையோடு கேட்ட விஷயங்கள் யாவை? எவ்விதம் ஆலோசனை செய்தீர்கள்? அந்த விவரத்தைக் கிரமமாகவும் விஸ்தாரமாகவும் என்முன்னால் கூறுங்கள்" என்று வினவினர். இவ்விதம் ஸ்ரீராமர் கூறியதைக் கேட்டு ஜனங்கள் ஸந்தோஷத்துடன் சொல்லுகிறார்கள்.—

மகா பலம்பொருந்திய ஏ இராம! நாங்களடைந்த ஞானத்தைக் கூறுகிறோம் கேளுங்கள்! மோகம் என்பதே இரவு; தூக்கம் என்பது ப்ரமம். இந்த ப்ரமம் என்பது சரியல்ல. அனர்த்தம் என்பது மிருத்யு; இந்த அயோத்தியா பட்டணமே சரீரம். இதன் ஒன்பது வாயில்களே சரீரத்தின் ஒன்பது துவாரங்கள். டம்பம் முதலியவைகள் துவாரங்களைக் காக்கின்றவைகள். அந்தத் துவாரங்களுக்கு இமைகளும் உதடுகளுமே கதவுகள். பிராணன்களென்ற இராஜதூதர்கள் ஸஞ்சாரம் செய்கின்றவர்கள். ஆத்மாவே ராஜா. ஜீவனும் இந்திரிய தேவதைகளும் தேகமாகிற பட்டணத்தில் வசிக்கும் ஜனங்கள். காலம் என்பது பெரிய திருடன். அத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் முதலான மூன்று

தோஷங்களும் வியாதிகள். இவைகள் காலனுக்குச் சேவகர்களா கிப் பட்டணத்தி லுள்ளவர்களைப் போல் இருக்கின்றார்கள். இவ் விடத்தில் பலமற்ற ஜீவன்களுக்கு அந்த வியாதிகளால் பயமேற் படும். மோகத்தில் விழுந்து ப்ரமத்தை அடைந்தால், அந்தக் கால னுடைய சேவகர்கள் ராஜனுகியகாலனை வரவழைப்பார்கள். மாண மடையும் காலம் எப்போதென்று தெரிந்துகொள்ள முடியவில்லை; ஆகையால் ப்ரமத்தை அடைவது சரியல்ல. ஞானமாகிற கத்தி வைராக்கியமாகிற முனையோடு கூடியது. நல்ல ஸ்வ பாவம் என்பது கவசம். உம்மிடத்தில் ஸ்திரமான பக்தி செலுத்துவதே தைரியம். ஆத்ம சொரூபததை அறிந்தவன் விழித்துக்கொண்டிருக்கிறான். இவைகளுள்ளவனுக்கு, எப்போ தும் பயமில்லை. ஞானத்தை அடைவதுதான் ஸாவதானம் என் பது. வாத்யகோஷங்கள், அறிவை விளைவிக்கும் சாதுக்களு டைய வசனங்களாகின்றன. அந்த வசனங்களை எப்போதும் மனதில் நிலைநிறுத்தி, புத்தியைக்கொண்டு அறியவேண்டும். தங் கள் ஸந்நிதியில் வசிப்பதுதான், மோகமொழிந்த விடியற்கால வேளை. நீர்தான் ஆத்மா. இந்த சபைதான் வாசம் செய்யவேண் டிய இடம். உமக்கு முன்னால் நிற்கும் நாங்களெல்லோரும் மோக்ஷபதவிக்கு வந்தவர்கள். இப்போது நாங்கள் தங்களைக் கேட்கவேண்டியது யாது? தாங்கள் உபதேசம் செய்யவேண்டி யதுதான் யாது? தங்களுடைய நாமத்தைச் சொன்னமாத்திரத் தில் மானிடர்கள் மோக்ஷத்தை அடைகின்றார்கள்; உங்கள் சமீ பத்திலுள்ள நாங்களெல்லோரும் முக்தர்களே; இதில் ஐயமில்லை.

இவ்விதம் கூறியதைக் கேட்டு பிரபுவாகிய ஸ்ரீராமர் புன்ன கையுடன், அவர்களைப் பார்த்துக் கூறுகிறார்--

ஹே ஜனங்களே! நீங்கள் புத்தியைச் செலுத்தி நன்றாக அறிந்துகொண்டீர்கள். எப்போதும் சுகத்திலேயே இருக்க வேண்டும். உங்களைத்தவிர இராமர் வேறாக இருக்கின்றார் என்று உங்கள் மனதில் எண்ணவேண்டாம்—என்று கூறிச் சந்தோஷத் துடன் ஸீதையின் அரண்மனைக்குச் சென்றார். இராமரிடம் உத்தரவுபெற்ற பட்டணத்திலுள்ள சகல ஜனங்களும் சந்தேகம் தெளிந்து ஒவ்வொருவரும் தங்களையே பரமாத்மாவாக நினைத் தார்கள்.

ஏ விஷ்ணுதாஸ! இவ்விதம் ஸ்ரீராமருடைய தூதர்களின் வசனங்களால் அறிவுபெற்ற பட்டணத்திலுள்ள ஜனங்களின் மகிமையை நான் உனக்குத் தெரிவித்தேன்.

ஒருசமயம் கைகேயி ஸ்ரீராமரிடம் வந்து நமஸ்காரஞ்செய்து வணக்கத்துடன் முன்னால் நின்று, இனிமையாக ஒரு வசனம் கூறுகிறாள்:—

தாமரை மலரிதழ்போன்ற கண்ணழகுள்ள ஏ இராமா! நான் முன்பு அறியாமையால் என்ன அபராதங்கள் செய்தேனோ அவைகளைத் தயையுள்ள நீ மன்னிக்கவேண்டும். நான் உன்னைச் சரணமாக அடைந்தேன். உலகங்களுக்குப் பதியாகிய ஏ இராம! நீயே என்னைக் கரையேற்றவேண்டும். அஞ்ஞானம் எவ்விதம் விலகுமோ, அவ்விதம் உபதேசம்செய்யவேண்டும்—என்று வேண்டினாள். இராமர் கைகேயி கூறியதைக் கேட்டு புன்னகை கொண்டு "ஏ கைகேயி! முன் நீ எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை; என் அபிப்பிராயத்தை அநுசரித்து ஸரஸ்வதியானவள் உன் முகத்திலிருந்து வரம் யாசித்தது முதலியவைகளைக் கேட்டாள். கைகேயி! நீ சுத்தமடைவாய், உன்னிடம் எனக்குக் கோபம் இல்லை. இலட்சுமணன் நாளையதினம் உன்னை அழைத்து உபதேசம் செய்வான்" என்று கூறி, கைகேயியை அனுப்பிவிட்டு உடனே இலட்சுமணரை அழைத்து "இலக்ஷ்மண! என் சொற்படி நாளையதினம் காலையில் கைகேயியைப் பல்லக்கில் ஏற்றிப் பட்டணத்துக்கு வெளியில் சரயூ நதிக்கரையில் ஆட்டுக்கூட்டங்கள் இருக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்று பல்லக்கிலிருக்கும் கைகேயியை ஒரு முகூர்த்தம்வரையில் அவ்வாடுகள் கூறும் வாக்கியங்களைக் கேட்கும்படி செய்து பிறகு என் சமீபத்திற்கு அழைத்துவரவேண்டும்" என்று ஆக்ஞை செய்தார். இவ்விதம் இராமர் கூறிய வசனத்தைக் கேட்டு, இலட்சுமணர், "அவ்விதமே செய்கிறேன்" என்று சொல்லி விடைபெற்றுச் சென்றார்.

பிறகு இலட்சுமணர் காலையில் பாதனுடையமாளிகைசென்று, சந்தோஷத்துடனிருக்கும்கைகேயியைப்பல்லக்கிலேற்றிக்கொண்டு

தாஸிகளும், பிரம்பைக் கையிற்பிடித்த சேவகர்களும் சூழப் பட்டணத்திற்கு வெளியேவந்து சரயூநதிக் கரைக்குச் சென்று ஆட்டுக் கூட்டங்களுக்கு மத்தியில் பல்லக்கை நிறுத்தி அங்குக் கைகேயியைப் பல்லக்கினின்றும் இறக்கினர். அப்போது பிராம் மணர்களும் முடவர்களும் கைகேயி ஸ்நானம் செய்யவந்திருக்கிறா ளென்றெண்ணி, தக்ஷிணையில் ஆசைகொண்டு பல்லக்கிற் கருகே வந்தார்கள். அவர்கள் வருவதைப்பார்த்த இலட்சுமணர், "இந்த பிராமணர்களும் இந்த முடவர்களும் வெகு மூர்க்கர்கள், வித்வான் களுமல்லர்; சுரோத்திரியர்களுமல்லர்; தானத்திற்குத்தகுதியில்லாத வர்கள்" என்று கூறித்தடுத்தார். பிறகுதூதர்களை விலகிப்போகும் படி ஆக்கினைசெய்து தமது கைகளில் முத்துக்களை யெடுத்து உயரத்தில் இறைத்துக் கைகேயியைப்பார்த்து, "அம்மா! நீங்கள் உங்கள் முன்னால் இருக்கும் ஆட்டுக்கூட்டத்தைப் பாருங் கள்; ஸ்ரீராமர் தங்களை இங்கு அனுப்பியது உபதேசம் பெறும் பொருட்டல்லவா?" என்றார். இலட்சுமணர் இவ்விதங்கூறியதும் கை கேயி ஆச்சரியமடைந்து, "ஸ்ரீராமர் என்னை விரைவாக இங்கு எத ற்காக அனுப்பினர்; நான் ஏமாந்து போனேன்" என்று நினைத்து ஒரு க்ஷணம் பேசாமலிருந்தாள். அப்பொழுது ஆடுகள் கூவும் மே! மே! என்ற சப்தத்தைக்கேட்டாள். அந்த சப்தங்களைக் கேட்டு எதற்காக இவ்வாடுகள் மே மே என்று கூவுகிறது எனக் கொஞ்ச காலம் மனதில் யோசனை செய்தாள். பிறகு மறுபடியும் கண்களை மூடி மனதில் ஒரு க்ஷணகாலம் வரையில் ஆலோசனை செய்து சகல விஷயங்களையும் அறிந்து அஞ்ஞானம் நீங்கி, மிகுந்த ஸந் தோஷமடைந்து புன்னகையுடன், முன்னால் நிற்கும் இலட்சு மணரை நோக்கி, "குழந்தாய்! நான் ஞானத்தை யடைந்தேன்; ஸ்ரீராமரிடம் என்னை அழைத்துக்கொண்டு போகலாம்" என்று கூறினாள். உடனே இலட்சுமணர் கைகேயியைப் பல்லக்கிலேற்றிக் கொண்டு வெகு தூரத்தில் நிற்கும் தூதர்களை அழைத்து அவர் கள் சூழ விரைவாக அரண்மனைக்கு வந்தார். பிறகு கைகேயி ஸீதையின் அரண்மனை சென்று, தமது கையினால் அழகான தலைப்பாகையை எடுத்துத் தமது சிரசில் தரித்துக்கொண்டும்,

ஸீதையினுல் காட்டப்பட்ட கண்ணுடியில் தமது முகத்தைப் பார்த்துக்கொண்டு மிருக்கிற ஸ்ரீராமரைப்பார்த்து நமஸ்கரித்து மிருந்த பக்தியுடன்—

இராம! உன் கிருபையால் ஆடுகளின் சப்தத்தைக்கேட்டு ஆராய்ந்து பார்த்தேன். அப்பொழுது நல்லஞானம் உண்டாயிற்று. மோகம் நீங்கிற்று. இனி உனது உபதேசத்தை நான் அபே க்ஷிக்கவில்லை. இராகவா! நான் இப்போது முக்தையானேன்— என்றுள். இவ்விதம் கூறிய கைகேயியின் வசனத்தைக் கேட்ட பிரபுவாகிய ஸ்ரீராமர் புன்னகைகொண்டு, "ஏ கைகேயி! எவ், வாறு நீ அறிந்தாய்? எவ்வாறு மனதில் விசாரித்தாய்? அந்த விஷ யங்கள் எல்லாவற்றையும் விஸ்தாரமாக எனக்குச் சொல்" என்றுர். கைகேயி, "ஏ இராமா! நான் ஞானத்தை யடைந்த விவரத்தைக் கூறுகின்றேன் கேள். ஆட்டுக்கூட்டத்தில் சென்று அந்த ஆடுக ளின் மே! மே! என்ற சொற்களைக்கேட்டேன். அப்பொழுது ஒரு க்ஷணம் மனதில் ஆலோசித்தேன். மே! மே! என்ற சப்தங்களை அந்த ஆடுகள் எனக்காகவே கூறின. உலகத்தில் எல்லோரும் பசுக்கள், புத்திரர்கள், கிருகங்கள் முதலியவைகளை என்னுடை யது என்னுடையது என்று சொல்லுகின்றுர்கள்; அப்படிச்சொல் லுவதை இந்த ஆடுகள் நிஷேதம் செய்தன. ஆகையினுல் இனி எதையும் என்னுடையது என்று சொல்லமாட்டேன். என் தாய், என்பிள்ளை, என்வீடு, என் இராஜ்யம், என் சககளத்தி, என் சகக ளத்தியின் பிள்ளை, என் அழகுள்ள சரீரம், என் சிலாக்கியமான ஆபரணம், எனக்குப் பிரீதியுள்ள வேலைக்காரியாகிய கூனி, என் குமாரன் என்பது முதலான கெட்ட எண்ணங்கள் இருந்தனவல் லவா? அவைகளை விட்டுவிடவேண்டுமென்று அந்த ஆடுகள் தங் கள் வசனங்களால், எனக்கு அறிவை உண்டாக்கின. ஏ இராம! அந் தப் பெண் ஆடுகள் அனேக மனிதர்களைக் குறித்துக் கூறியவை களைக்கேள்?" நாங்கள் முன் ஜன்மத்தில் எனது எனது என்று சொல்லிக்கொண்டிருந்தோம். அதனுல் இந்த ஜன்மத்தில் ஆடுகளா கப் பிறந்தோம். ஏ ஜனங்களே! எப்போதும் எனது எனது என்ற எண்ணத்தை விட்டு விடுங்கள்! விடாமற் போனுல் நீங்கள்

எனது நிலைமையை யடைவீர்கள்'' என்று இவைகளை எப்போதும் ஜனங்களுக்குத் தெரியப்படுத்துகின்றன. அந்தச் சப்தத்தை ஜனங்கள் புத்தியினால் ஊகிப்பதில்லை. அவைகளின் வாக்கியங்களாலும் உம்முடைய அநுக்கிரகத்தினாலும் மே! மே! எனது எனது என்ற புத்தியானது என்னைவிட்டு விலகிற்று. ஆகையினால், நான் இப்போது முக்தையானேன். நான் என்னுடைய தேகம் என்று எண்ணியிருந்ததைத் தொலைத்தேன். ஸம்ஸாரதுக்கத்தைக் கொடுக்கும் இந்தத் தேகத்தில் என்ன இருக்கிறது? இந்தத் தேகம் இருக்கட்டும் அல்லது நாசத்தை அடையட்டும். இது எப்போதும் தண்ணீரில் காணப்படும் அலைகள்போல நசிக்கத்தக்கது. யாருக்கு யார் பிள்ளை? யாருக்கு யார் தாய்? எல்லாம் பிரம்மசொரூபந்தான். நான்தான் பரபிரம்மம். என்னைத்தவிர வேறு பிரம்மம் இல்லை. இப்போது காணப்படும் இந்தப் பிரபஞ்சம் முதலியவைகளெல்லாம் உன்னுடைய மாயாகாரியம். இவைகளெல்லாம் நசிக்கக்கூடியன; நீர்க்குமிழிக்கு நிகரானவைகள்-என்று கூறினாள்.

இந்த வசனத்தைக்கேட்டு இராமர் புன்னகைகொண்டு, "கைகேயி! நீ நன்றாக உன் புத்தியைச் செலுத்தி விசாரித்திருக்கின்றாய். உன்னிருப்பிடம் செல்லலாம்; சுகமாக இருக்கலாம், நீ ஜீவன் முக்தையாய் விட்டாய்" என்றார்.

இதைக்கேட்ட கைகேயி ஸந்தோஷத்துடன் தேகத்தில் அபிமானத்தைவிட்டு ஸீதையையும் இராமரையும் நமஸ்காரம் செய்து, பரதனுடைய அரண்மனை சென்று, எந்த வஸ்துக்களிலும் பற்றுதலில்லாமலிருந்தாள்.

சீடனே! ஆடுகளின் உபதேசத்தினால், கைகேயிக்கு ஞானம் உண்டான விஷயத்தைப்பற்றி நான் உனக்குக்கூறினேன். இப்போது ஸந்தோஷப்படக்கூடிய வேறு விஷயம் சொல்லுகிறேன் கேள்.—

ஒரு சமயம் சுமித்திரை ஸீதையுடன் தனியாக இருக்கும் ஸ்ரீராமரை நமஸ்காரம் செய்து—

தாமரைபுஷ்பம்போன்ற கண்களுள்ள எ இராம! நான் இப்போது ஒரு விஷயம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எனக்கு எதா

வது உபதேசம் செய்யவேண்டும்,—என்றாள். இந்த வசனத்தைக் கேட்ட இரகு வீரர், அந்தச் சுமித்திரையை நோக்கி, "ஏ சுமித்திரே! நீ யார்? முதலாவது அந்த விஷயத்தைச் சொல்லு. பிறகு உனக்கு உபதேசிக்கிறேன். அரண்மனை சென்று மனதில் ஸ்திரமான புத்தியுடனிருந்து விசாரித்து நாளையதினம் என்னிடம் வந்து என் கேள்விக்கு மறுமொழி கூறு. அம்மா! பிறகு நான் நீ ஸந்தோஷிக்கும்படியாக உபதேசம் செய்கின்றேன்," என்று கூறினார்.

சுமித்திரை அந்த இராமர் வாக்கியத்தைக்கேட்டு ஆச்சரியமடைந்து முகமலர்ச்சியுடன் வேறு பேசாமல், அரண்மனை சென்று, அவர் சொன்னதைப்பற்றி ஆலோசனை செய்தாள். "நான் யார், என்று ஸ்ரீ ராமரால் கேட்கப்பட்டேனே! ஸ்ரீ ராமருக்கு நான் என்ன பதில் சொல்லுவது. நான் தேவஸ்திரீயா? தனுவம்சத்தில் பிறந்த அசுரஸ்திரீயா? இராக்ஷஸ ஸ்திரீயா? நான் மானிட ஸ்திரீயா?" என்றெண்ணி மறுபடியும் "ஸ்ரீராமரிடம் பதில் சொல்வோமென்றால், நடனைப்போல் நான் அனேக சரீரங்களை எடுத்திருக்கின்றேனே. வேறு சரீரங்களை அடைந்த முன் ஜன்மங்களில் இப்போது அடைந்திருக்கும் மானிடத்தன்மை எவ்விதம் எற்பட்டிருக்கும்? ஆகையால், நான் மானிட ஸ்திரீயுமல்ல; வேறு ஜாதி ஸ்திரீயுமல்ல; மானிடஸ்திரீ இராக்ஷஸ ஸ்திரீ என்ற பெயர்கள் தேகத்திற்கு எற்பட்டவைகள். தேகமோ அழிவுள்ளது என்று நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. தேகத்தைக் காட்டிலும் நான் வேறாக இருப்பவள். நான் அனேக தேகங்களை அப்போதைக்கப்போது அடைகின்றேன். இவ்விதமிருக்கும் நான் இன்னாரென்று எனக்குத்தெரியவில்லை. இப்போது நான் அறிந்தேன். மகாவிஷ்ணு எப்படியோ அப்படியே நானும்; அந்த விஷ்ணுவும் மத்ஸியம் (மீன்) முதலிய அநேக ரூபங்களை அடைகிறார். அதுபோல் நானும் அநேக சொரூபங்களை அடைகின்றேன். இவ்விதந் தான் சொல்ல வேண்டியது. ஆனால் விஷ்ணுவுக்கும் எனக்கும் தாரதம்யமாவது, மகாவிஷ்ணு சுவதந்திரர்; நான் அவருக்குச் சுவாதீனை. ஆகையால் நான் விஷ்ணுவின் அம்சம்

தான் சந்தேகமில்லை. விஷ்ணுவுக்கும் எனக்கும் பேதமே இல்லை. கங்காஜலம் பூமியில் ஓடினாலும் குடத்திலெடுக்கப்பட்டாலும் எப்படி கங்கை நீரன்றிவேறல்லவோ, அப்படியே நான் விஷ்ணுவைச் சேர்ந்தவள் தான். நான் விஷ்ணுவாகவே இருந்தால், ஸ்ரீராமரிடம் உபதேசம் பெற்றுக்கொள்வது யாது? நான் ஜீவன் முக்தையே." என்று இவ்விதம் ஆலோசனை செய்து அஞ்ஞானம் நீங்கி ஸந்தோஷமடைந்து அன்றிரவுகழிந்ததும் காலையில் ஸ்ரீராமரிடம் வந்து, அவரை நமஸ்கரித்து "இராம! நீ யார் என்று என்னைக்கேட்டாயே, அதைப்பற்றி இராத்திரியில் ஆலோசித்தேன்; பரபிர்ம்மம் தான்; நான் உன்னிடம் கேட்கவேண்டியது ஒன்றுமில்லை. எப்போதும் நான் உனக்கு வேறாக இருப்பவளல்ல" என்று இவ்விதம் சொல்லி அரண்மனையில் இராத்திரியில் தன்மனதில் எந்த விஷயம் ஆலோசிக்கப்பட்டதோ அவைகளையும் ஸ்ரீராமரிடம் கூறி, அது முதல் ஜீவன்முக்தையானாள்.

ஸ்ரீராகவரும் "சுமித்திரே! நன்றாகத் தெரிந்துகொண்டாய். அம்மா நீ ஜீவன் முக்தையாய்விட்டாய். அரண்மனை சென்று சுகமாக இரு" என்று கூறினார்.

பிறகு ஸந்தோஷத்துடன் கூடின ஸுமித்திரை மோகம் நீங்கியவளாகி, ஸ்ரீராகவரையும் ஸீதையையும் தனித்தனியாக நமஸ்காரம் செய்துவிட்டு இலட்சும்மணர் அரண்மனைக்குச் சென்றாள். சிடனே! இவ்விதம் சுமித்திரை—"நான் யார்" என்று விசாரித்ததினால் ஜீவன் முக்தையாகி பிர்ம்மானந்த மடைந்தாள் என்பதை நான் உனக்குக் கூறினேன். பிராம்மண சிரேஷ்டனாகிய எ விஷ்ணுதாஸ! மற்றொரு வரலாற்றைக் கூறுகிறேன், அதைக்கேள்—

ஒரு சமயம் தாயாகிய கௌஸல்யை, ஆச்சரியப்படக் கூடிய சபையில் ஆசனத்தில் ஸீதையுடன் வீற்றிருக்கும் ஸ்ரீராமச்சந்திரரைப் பரம்பொருளாகிய மஹாவிஷ்ணுவென்று தெரிந்து நமஸ்கரித்து வினவுகிறாள். "மகா பலம் பொருந்திய எ இராம! எதனால் உன் விஷயமாகிய நல்ல அறிவு மிகுதியாகவும்

நன்மையுள்ளதாகவும் எற்படுமோ அவ்விதம் ஓர் உபதேசம் செய்யவேண்டும்" என்று கேட்டாள்.

ஸ்ரீராமன் அந்தத்தாயின் மொழியைக்கேட்டு புன்னகைகொண்டு "அம்மா! நாளையதினம் காலையில் எழுந்திருந்து பசுமாடுகள் கட்டியிருக்கும் இடஞ் சென்று, கொஞ்சகாலம் வரையில் பசுவின் கன்றுகளின் வசனங்களைக்கேட்டு, அந்த வசனங்களை மனதில் நன்ருக விசாரித்துப் பிறகு என் அருகில்வா; பிறகு நான் உனக்கு உபதேசம்செய்கின்றேன்; சந்தேகம் இல்லை" என்று கூறினர். அப்பொழுது கௌஸல்யை ஆச்சரியத்துடன், அந்த இராமர் வசனத்தைக்கேட்டு ஸீதையுடன் கூடின இராமரை நமஸ்காரம் செய்து விட்டுத் தன் அரண்மனை சென்ருள்.

பிறகு அந்தக் கௌஸல்யை மறுநாள் அருணோதயகாலத்தில் கோசாலைசென்று ஒரு க்ஷணகாலம் நின்று அகம்மா (ஸஹம்ஸா) என்று கூவும் பசுவின் கன்றுகளினுடைய வசனங்களை அடிக்கடி கேட்டு மிகுந்த பக்தியுடன் மனதில் விசாரிக்கலானுள். இந்தக் கன்றுகள் அகம்மா என்று ஏன் அடிக்கடி கூறுகின்றன. இந்தக் கன்றுகள் இந்த வசனங்களைக்கூறி எனக்கு எந்த விஷயத்தை அறிவிக்கின்றன என்று வினவி, மனதிலேயே நன்ருக ஆலோசனை செய்து அஞ்ஞானம் நீங்கினுள். பிறகு மறுநாள் சந்தோஷத்துடன் ஸ்ரீராமரிடம்வந்து, நமஸ்கரித்து, "ஏ இராம! விஷ்ணுவே! ஏ இலக்ஷ்மீநாத! கன்றுகளின் வசனங்களை நான் சோதித்து அஞ்ஞானம் நீங்கினேன். இதைத்தவிர உன்னிடத்தில் வேறு உபதேசத்தை விரும்பவில்லை. ஞானத்தை அடைந்தேன், உன்னைத் தவிர நான் வேருக ஏற்பட்டவளல்ல" என்று கூறினுள். தாயாகிய கௌஸல்யையின் வாக்கியத்தைக்கேட்டு இரகுவீரர், "ஏ அம்மா! கன்றுகளின் வசனங்களால் உனக்கு எவ்விதமான ஞானம் உண்டாயிற்று? அதைச்சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

கௌஸல்யை கூறுகிருள்.—ஏ இரகு சிரேஷ்ட! அகம்மா என்ற சப்தங்களைக் கன்றுகள் கூவக்கேட்டு, இந்தச் சப்தங்கள் எனக்கு எந்த விஷயத்தைக்கூறுகின்றன என்று மனதில் கொஞ்ச

காலம் யோசித்தேன். அந்த வசனத்திற்குப்பொருளையும் தெரிந்து கொண்டேன். ஏ ஜனங்களே! அகம்மா (ஸஹம்ஸா) நான் இல்லை என்று சொல்லுங்கள் என்று கன்றுகள் தெரிவிக்கின்றன. இந்த விஷயத்தை ஜனங்கள் அறியவில்லை. அகம் என்ற சப்தமானது தேகத்தைக்குறிக்கின்றது. அதை நான் விட்டபடியால் "நான் தேகமுள்ளவள்; நான் தாய்" என்ற புத்தியானது விலகிற்று. தேகத்தில் நானென்னும் புத்தியானது நீங்கின போது பிறகு வேண்டுவது என்ன? சுகமும் துக்கமும் தேகத்திற்கே யொழிய எனக்கு ஒன்றுமில்லை. ஏ பிரபுவே; இந்தத் தேகமானது சுகதுக்கங்களை அநுபவிப்பதற்கு ஏற்பட்டது. நான் உன்னுடைய அம்சந்தான்; இப்போது உபாதிபேதத்தினால் வேறாகக் காணப்படுகின்றேன். சூரியன் எப்படி கடத்தில் தனிமையாக உபாதியினால் காணப்படுகிறானோ அப்படியே நானும் காணப்படுகிறேன். எப்போதும் உன்னைத்தவிர நான் வேறல்ல. நான் பிர்ம்மசொரூபமாகவே ஆகின்றேன்" என்றாள். இராமர் இவ்வசனத்தைக்கேட்டு, புன்னகைகொண்டவராகி "அம்மா! நீ முக்தையாய் விட்டாய்? சந்தேகம் இல்லை; நீ கன்றுகளின் சொற்களை நன்றாக மனத்தில் விசாரித்திருக்கிறாய்; அரண்மனைசென்று நீ சுகமாக இரு. இந்தப் புத்தியைத் திடமாகச் செய்துகொள். நான் உங்களுக்கு என்வாக்கினால் உபதேசம் செய்யாமல் இருந்ததற்குக்காரணம் கூறுகிறேன். உபதேசம் செய்கிறவன் குருவாகின்றான். நான் உங்கள் மூவருக்கும் குமாரன். ஏ அம்மா! நான் எப்படி உங்களுக்கு உபதேசம் செய்வேன். ஸ்திரீகளுக்குக் கணவன் குருவாகிறான். எப்போதும் கணவனைத்தவிர அவர்களுக்கு வேறு கதியில்லை. ஆகையினால் நான் உங்களுக்கு உபதேசம் செய்யவில்லை. பட்டணத்தி லுள்ளவர்களுக்கு என் தகப்பனாராகிய தசரதமகாராஜாவும் அவரவர்கள் புரோகிதரும் குருவாக ஆகின்றார்கள். ஆகையினால் பட்டணத்தில் உள்ளவர்களுக்குத் தூதர்களைக்கொண்டு உபதேசம் செய்வித்தேன். அதனாலே தான் உங்கள் மூவருக்கும் வேறுவிதமாக உபதேசம் செய்வித்தேன். அரண்மனை சென்று சந்தோஷத்துடன் என்னைத்தியானம் செய்யுங்கள்" என்று கூறினார்.

இராமருடைய வசனத்தைக் கேட்டுக் கௌஸல்யை மனமகிழ்ச்சி யடைந்து, ஸ்ரீராமரை நமஸ்காரம் செய்து விட்டுச் சுகமாக இருந்தாள். இவ்விதம் இராமச்சந்திரனால் அறிவை யடைந்த நல்லகுணங்களுடைய கௌஸல்யை முதலிய தாய்மார்கள் தங்கள் தங்கள் ஆயுள்முடிவுகாலத்தில் தேகங்களைச் சுகமாக விட்டார்கள். அவர்கள் ஸ்ரீராமருடைய ஸந்நிதானமகிமையால் சிலாக்கியமான விமானத்தின் மீதேறி ஸ்ரீராமரால் பூஜிக்கப்பட்டு வைகுண்டத்தை அடைந்தார்கள். ஸ்ரீராமர் முதலிய நால்வர் கைகளினால் பரலோககாரியத்தைச் செய்யப்பெற்ற கௌஸல்யை முதலிய ஸ்திரீகளின் பாக்கியமே பெரிதானபாக்கியம்!

எ சிடனே! நான்! உனக்குக் கௌஸல்யை முதலானவர்கள் உபதேசமடைந்ததையும் அவர்கள் பரலோகம் சென்றதையும் கூறினேன்.

கௌஸல்யை முதலியவர்கள் வைகுண்டம்
சென்ற கதையைக் கூறும்
2 - வது சருக்கம்
முற்றிற்று.

## 3-வது சருக்கம்.

---

### விஷ்ணுதாசர் வினவுகிறார்.

ஆசாரியரே! ஸ்ரீராமரை உபாசிக்கும் மானிடர்கள் ஸ்ரீராமருடைய மானஸிக பூஜையை எப்படிச் செய்வது? பாஹ்ய பூஜையை எப்படிச் செய்வது? ஸ்ரீராகவருடைய உபாசனையை குருவிடமிருந்து எவ்விதம் கிரகித்துக்கொள்வது? ஸ்ரீராமருடைய உபாசனைகளுக்குள் எவ்விதமான உபாசனை உயர்ந்தது? குருவாக ஏற்படுத்திக்கொள்ளக் கூடியவர்களுக்குள் எந்த லக்ஷணங்கள் அமைந்தவர் உயர்ந்தவர்? பக்தர்களுக்குக் காரியசித்தியைக் கொடுக்கும் மந்திரங்கள் எவை? அந்த இராமருக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் திதி எது? இன்னும் இராமருக்குப் பிரீதியை விருத்தி செய்பவை எவை? எந்தத் தேவன் சிரேஷ்டன்? யாருடைய உபாசனையை அடையலாம். இவை யாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்.

### ஸ்ரீ இராமதாஸர் கூறுகிறார்.

சிடனே! நீ நன்றாக வினவினாய்! சாவதானமான மனதுடன் கேள்; எல்லாவற்றையும் இப்போது விஸ்தாரமாகவே உனக்குக் கூறுகிறேன். ஏ பிராம்மண சிரேஷ்ட! முதலாவது இலக்ஷணங்களைப் பார்த்து பரீக்ஷித்து அந்தக் குருவிடமிருந்து பரிசுத்தமான ஸ்தலத்தில் விதிப்படி உபதேசத்தைப் பெறவேண்டும்.

குருவின் லக்ஷணங்களை முதலாவது நான் உனக்குக் கூறுகிறேன்.

கோபமுள்ளவன், குஷ்டரோகமுள்ளவன், மகாரோகமுள்ளவன், அழுக்கடைந்தவன், தயவில்லாதவன், மூடன், ஞானமில்லாதவன், நிந்திக்கிறவன், ஆசையுள்ளவன், விஷயங்களில் கட்டுப்பட்டவன், டம்பமுள்ளவன், கருவமுள்ளவன், பாபபுத்தியுள்ளவன், தோஷமுள்ள வம்சத்தில் பிறந்தவன், இம்சிக்கிறவன், பிறனுக்குத் துரோகஞ்செய்கிறவன், பிறருடைய பணத்தை அபகரிக்கிறவன், மனதை அடக்காதவன், வேதத்தை விட்டவன், பரஸ்திரீ

களிடம் பற்றுதலுள்ளவன், பிறருக்குத் தோஷத்தை எற்பாடு செய்கிறவன், கிருபணன், இந்திரியங்களை ஜயிக்காதவன், வேதம் தேவர்கள் பிராம்மணர்கள் ஸன்னியாசிகள் புண்ய தீர்த்தங்கள் கோக்கள், துளஸி, அக்நி, சூரியன் இவர்களைத் தூஷிக்கிறவன் ஆகிய இவர்களைக் குருவாக வரிக்கக்கூடாது.

சகல தருமங்களை அறிந்தவர், சாஸ்திரங்களை அறிந்தவர், ஸத்யஸந்தர், சொற்பமான ஆகாரம் கொள்பவர், அறிவுள்ளவர், வித்தையை நன்ருகக் கற்றவர், நல்ல கருமங்களைச் செய்பவர், தருமங்களை உபதேசம்செய்பவர், நல்ல புத்தியை உபதேசிப்பவர், யோகங்களில் மனதைச் செலுத்தினவர், உபாயங்களை யறிந்தவர், எல்லாரையும் சமமாகப் பார்ப்பவர், கருமங்கள் செய்தவர், புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானம் செய்தவர், தருமம் அதருமம் இவைகளைப் பகுத்தறியும் தன்மையுள்ளவர், (பிர்ம்மசாரியானுலும் கிருகஸ்தனுனுலும், வானப்பிரஸ்தனுனுலும், ஸன்னியாஸி யானுலும்) தங்களாசிரமத்துக்கு ஏற்பட்டவிதிப்படி அநுஷ்டானம் செய்கிறவர், புத்தியுள்ளவர், இந்திரியங்களை ஜயித்தவர், பொறுமையுள்ளவர், கிருபையுள்ளவர், மெதுவாகப் பேசுகிறவர், நல்ல முகம் உள்ளவர், கோபமில்லாத பார்வையுள்ளவர், தூக்கமில்லாதவர், முயற்சியுள்ளவர், அடங்கின மனமுள்ளவர், பிறருக்குச் சந்தோஷத்தைச் செய்பவர், கொடுக்குந் தன்மையுள்ளவர், ஞானமுள்ளவர், பரிசுத்தமுள்ளவர், கெட்ட பிரதிகிரகத்தை விட்டவர், இன்னும் அநேக நல்ல குணங்களுடையவர் ஆகிய இவரைப் பரமகுருவாக வரிக்கவேண்டும். அந்தக் குருவுக்கு வெகுநாள் பணிவிடை செய்து அவரைச் சந்தோஷப்படுத்தி அநுக்கிரகம் பெறவேண்டும். அந்தக் குருவிடமிருந்து நல்ல பிரதேசத்தில் விதிப்படி, உபாசனையைக் கிரகிக்கவேண்டும்.

உபாசனைகள் ஸாத்விகம் இராஜஸம் தாமஸம் என்று மூன்று விதம் உண்டு. இவைகளில் தாமஸமாகிய உபாஸனையைச் சிலாக்கியமல்லவென்று பெரியோர்கள் கூறுகிருர்கள். அந்தத் தாமஸ உபாஸனையைச் செய்பவர்கள், பூதம் பேதாளம் பிசாசு இவர்களைப் பூஜிப்பவர்களாக ஆகின்ருர்கள். தேவர்களைப் பூஜிப்பது ஸாத்விக

உபாஸனை. யக்ஷர்கள், இராக்ஷஸர்கள் இவர்களைப் பூஜிப்பது இராஜஸ உபாஸனை. சிவன் சூரியன் கணேசன் சக்தி விஷ்ணு இவர்களுடைய அவதாரங்கள் கணக்கற்றனவுண்டு.

பிராமணர்கள் முதலானவர்கள் அந்த அவதார மூர்த்திகளை உபாஸிக்கும் மார்க்கத்தைக் குருமுகமாகப் பெற்றுக்கொள்ள வேண்டும். அந்த ஐந்து தேவதைகளின் அவதாரங்களில் பெருமை பொருந்தியவைகளான விஷ்ணுவின் நாற்பத்தைந்து அவதாரங்களைக் கூறுகிறேன்—புருஷோத்தமர், பிர்ம்மா, ருத்திரன், நாராயணர், ஹம்ஸர், தத்தாத்திரேயர், குமாரர், ரிஷபர், ஹயக்ரீவர், மத்ஸியர், வாரகர், நாரஸிம்மர், வாமனர், பரசுராமர், ஸ்ரீராமர், கிருஷ்ணர், பௌத்தர், கல்கி, யக்ஞர், ஹவிசு, (என்பவர்) வாலகில்லியர், உத்தாரகர், பிருது, தன்வந்தரி, மோஹினீ, நாரதர், வியாஸர், கபிலர், கேசவர், மாதவர், கோவிந்தர், திரிவிக்ரமர், ஸ்ரீதரர், பத்மநாபர், தாமோதரர், ஸங்கர்ஷணர், பிரத்யும்னர், அனிருத்தர், அதோக்ஷஜர், அச்சுதர், ஜநார்த்தனர், உபேந்திரர், ஹிருஷீகேசர் ஆகிய இந்த அவதாரமூர்த்திகளை உயர்ந்தவைகளென்று தெரிந்துகொள்ளவேண்டும். இந்த நாற்பத்தைந்து அவதாரங்களுக்குள் மத்ஸியாவதாரம் முதலிய பத்து அவதாரங்கள் உயர்ந்தவைகள். இந்தப்பத்து அவதாரங்களுக்குள் இராமர், கிருஷ்ணர் இந்த இரண்டு அவதாரங்களும் மிகச்சிரேஷ்டமானவைகள்.

ஸ்ரீராமர் ஸத்யத்தைப் பிரதிக்ஞையாகக் கொண்டவர்; இரகுகுலவம்சத்தரசர்களுக்குள் உயர்ந்தவர்; ஏகபத்தினி விரதமுள்ளவர்; ஒரே பாணமுள்ளவர்; அரசர்களுக்குள் சிரேஷ்டர்; ஏழுதீவுகளுக்கும் அரசர்; இலக்ஷ்மியோடுகூடினவர். கொடை சாமரம் இவைகளுள்ளவர். இவ்விதம் தெரிந்து குரு உபதேசித்தபடி, நல்ல வேளையில் நல்ல ஸ்தலத்தில் ஸ்ரீராமருடைய உபாஸனையை அடையவேண்டும்.

இவ்விதம் உபாஸனையைப் பெற்றுக்கொள்ளவேண்டும். அல்லது அந்தந்தத் தேவதைகள் அவதாரம் செய்த தினத்தில்

அந்தந்தத்தேவதையின் உபாஸனையைக் கிரகிக்கலாம். சைத்திர மாதத்தில் சுக்லபக்ஷத்தில் நவமீதிதியில் ஸ்ரீராமர் ஜனனமான தினத்தில் உபாஸனையைப்பெற்றுப் பின் ஸ்ரீராமரைப் பக்தியுடன் பூஜிக்கவேண்டும். இம்மாதிரி, எந்த மானிடர்கள் எந்த அவதாரத்தைப் பூஜிக்கின்றார்களோ, உபாஸனையையும் செய்கின்றார்களோ அந்தத் தேவதை அவதாரதினத்தில் மஹோற்சவங்களுடன் பூஜை செய்யவேண்டும்.

சிடனே! பத்து அவதாரங்கள் செய்த தினங்களைக் கூறுகிறேன் நீ கவனித்துக்கொள்.

பகவான் சைத்திரமாதத்தில் சுக்லபக்ஷம் பஞ்சமியில் மத்ஸியாவதாரம் செய்தார். ஜியேஷ்டமாதத்தில் சுக்லபக்ஷம் துவாதசியில் கூர்மாவதாரம் செய்தார். சைத்திரமாதம் கிருஷ்ண பக்ஷம் நவமியில் வராகவதாரம் செய்தார். வைசாகமாஸம் சுக்ல பக்ஷம் சதுர்த்தசியில் நரஸிம்மாவதாரம் செய்தார். பாத்ரபத மாஸம் சுக்லபக்ஷம் துவாதசியில் வாமனாவதாரம் செய்தார். வைசாகமாஸம் சுக்லபக்ஷம் திருதீயையில் பரசுராம அவதாரம் செய்தார். சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் நவமியில் பகல்வேளையில் ஸ்ரீராமாவதாரம் செய்தார். சிராவணமாஸம் கிருஷ்ணபக்ஷம் அஷ்டமியில் ஸ்ரீகிருஷ்ணாவதாரம் மதுராபட்டணத்திற் செய்தார்.

தைமாஸம் சுக்லபக்ஷம் சப்தமியில் பௌத்தாவதாரம் செய்தார். மாசிமாஸம் சுக்லபக்ஷம் திருதியையில் கல்கி அவதாரம் செய்தார். அகலினுடைய மத்தியில் வாமனர் பரசுராமர் ஸ்ரீராமர் இவர்களும், இராத்திரியில் ஸ்ரீகிருஷ்ணரும் அவதாரம் செய்தார்கள். அந்தத்தேவதையை உபாஸிப்பவர்கள் இந்த அவதாரங்களைத் தெரிந்துகொண்டு அத்தினத்தில் உற்சவம் செய்யவேண்டும்.

தேவதைகளை உபாஸ்தி செய்பவர் தினந்தோறும் பூஜை செய்யவேண்டும். அவதார தினத்தில் விசேஷ பூஜையைச் செய்யவேண்டும். குருவிடம் உபதேசம்பெற்ற மந்திரத்தைத் தினந்தோறும் மனதில் ஜபம்செய்யவேண்டும். ஸ்ரீராமருடைய மந்திரங்கள்

அனேக மிருக்கின்றன. நூறு அக்ஷரங்கள் சேர்ந்த மந்திரம் உண்டு. ஐம்பது அக்ஷரங்கள், நாற்பத்திரண்டு அக்ஷரங்கள், முப்பத்திரண்டு அக்ஷரங்கள், இருப்பத்தேழு அக்ஷரங்கள், இருபத்தைந்து அக்ஷரங்கள், இருபத்திநான்கு அக்ஷரங்கள், இருபத்தோரு அக்ஷரங்கள், இருபது அக்ஷரங்கள், பதினோரு அக்ஷரங்கள், பதினைந்து அக்ஷரங்கள், பதினான்கு அக்ஷரங்கள், பதின்மூன்று அக்ஷரங்கள், பன்னிரண்டு அக்ஷரங்கள் இவைகளிலும் மந்திரங்களுண்டு. பதினொன்று பத்து ஒன்பது எட்டு ஏழு ஆறு ஐந்து நான்கு மூன்று இரண்டு ஒன்று முதலிய அக்ஷரங்களிலும் மந்திரங்க ளிருக்கின்றன. இவ்விதம் ஸ்ரீராம மந்திரங்கள் அனேகமிருக்கின்றன. குருவினிடம் ஒருமந்திரஉபதேசம் பெற்று ஸ்ரீராமருடைய ஸந்நிதியில் ஜபம் செய்யவேண்டும். ஸ்ரீராமரைப் பூஜிக்கும் மானிடர்கள் பூஜை செய்யும் விதியை குருவிடமிருந்து மந்திரத்தின் சொரூபந் தெரிந்துகொள்வதுபோல சாஸ்திரப்படி தெரிந்துகொள்ள வேண்டும்.

தண்டகாரண்யத்தில் அகஸ்திய மகாமுனிவர் ஸுதீக்ஷ்ண முனிவருக்குக் கூறியவண்ணம் நான் உனக்கு ஸ்ரீராமருடைய மானஸிக பூஜையின் விதியைக் கூறுகிறேன்:—

ஒருசமயம் ஸுதீக்ஷ்ண முனிவர் தனிமையாக இருக்கும் அகஸ்திய மகாமுனிவரைக் கண்டு மிகுதியான பக்தியுடன் நமஸ்கரித்து வணக்கத்துடன் வினவுகிறார்.

ஸுதீக்ஷ்ணர் வினவுகிறார்.

பிரபுவாகிய அகஸ்திய முனிவரே! ஸ்ரீராமச் சந்திரரை மனதினால் பூஜை செய்வதற்கு உபசாரங்கள் என்ன? மானஸிக பூஜையை எவ்விதம் செய்வது?

அகஸ்திய முனிவர் கூறுகிறார்.

காலையில் எழுந்து தேகத்தைச் சுத்திசெய்துகொண்டு சோம்பலின்றிச் சுத்தமான இடத்துக்குச் சென்று தியானத்தையும் பூஜையையும் செய்வதற்கு யத்தனஞ்செய்து தாமரை மலர்போல்

நீண்ட கண்களுள்ளவரும், கறுத்த மேகம் போன்ற காந்தியுள்ள வரும், புன்னகைகொண்ட முகமுள்ளவரும், சுகமாக விற்றிருப்ப வருமான ஸ்ரீராமரைத் தாமரைபோன்ற மனதில் தியானம்செய்ய வேண்டும். இராஜத்துவேஷம் முதலியவைகளினால் கலங்கின மனதை வைராக்கியத்தினால் சுத்தமாகச் செய்துகொண்டு ஸம்ஸாரபந்தம் நீங்குவதற்கு எப்போதும் ஸ்ரீராமரைத் தியானஞ் செய்யவேண்டும். தொப்புளாகிற ஸ்தானத்திலிருந்து உண்டான தும், வாழைப்பூவிற்குச் சமமானதும், எட்டு இதழ்கள் உள்ள தும், நல்ல வர்ணமுள்ளதுமான மனமாகிற தாமரைப் புஷ்பத்தில் தியானம் செய்யவேண்டும்.

ஸ்ரீராம நாமத்தினால் மலர்ந்த அந்த மனமாகிற தாமரைப் புஷ்பத்தின் மத்தியில் சூரியன் சந்திரன் அக்நி இந்தத்தேவதை களைத் தியானம் செய்யவேண்டும். அதற்குமேல் இரத்தின மய மானதும் பிரகாசமுள்ளதுமான பீடத்தைப் பாவிக்கவேண்டும். அந்தப் பீடத்தின் மத்தியில் கோடி சூரியனுக்குச் சமமான காந்தி யுள்ளவரும், கருநெய்தல் புஷ்பத்திற்குச் சமமான வர்ணமுள்ள வரும் சாந்தரும், விஸ்தாரமாகிய கண்களுள்ளவரும் அழகிய மார்புள்ளவரும், உதயகாலத்துச் சூரியனைப் போன்ற காந்தியுள்ள குண்டலங்களை யணிந்தவரும், சோபனமான மூக்குள்ளவரும், நல்ல கிரீட மணிந்தவரும், அழகிய கன்னங்களுள்ளவரும், சுத்த மாகிய சிரிப்புள்ளவரும், இரண்டு கைகள் உடையவரும், சங்கம் போன்ற கழுத்துள்ளவரும், நல்ல கேசங்களமைந்தவரும், அநேக இரத்தினங்களால் செய்யப்பட்ட திவ்ய ஹாரங்களினால் அலங்கா ரம் செய்துகொண்டவரும், அழிவற்றவரும், மின்னற் கூட்டம் போன்ற ஒளியை யுடையவரும், இரண்டு வஸ்திரங்களை யணிந்த வரும், ஹரி என்ற பெயரமைந்தவரும், வீராஸனத்தில் வீற் றிருப்பவரும், கற்பக விருக்ஷத்தின் அடியில் வாசம் செய்பவரும், விலை உயர்ந்த வாசனைத்திரவியங்கள் கலந்த சந்தனமணிந்தவரும், வனமாலையைப் பூண்டவரும், அழகான சிரிப்பு,மங்களமானமுகம், அன்போடுகூடிய பார்வைஇவைகளுடனும் சொர்ணத்திற்குச்சமா னமான காந்தியுடனும் கூடிய ஸீதாபிராட்டியை இடதுபாகத்தில்

உடையவரும், கொடை, சாமரங்களால் உபசாரம் செய்யும் இலட்சுமணரோடு கூடியவரும், அனுமார் முதலிய வானரர்கள் சூழ வீற்றிருப்பவரும், முனிவர்களால் ஸ்தோத்திரம் செய்யப்படுகிறவரும், பாதன் முதலியவர்களால் உபசரிக்கப்படுகிறவரும் ஸனந்தனர் முதலிய யோகிகளால் எப்போதும் சேவிக்கக்கூடியவரும், ஸகல சாஸ்திரங்களின் அர்த்தங்களை அறிந்தவரும், யோகம் தெரிந்தவரும், யோகஸித்தியைக் கொடுப்பவரும் இரண்டு மணிகளால் அலங்கரித்துக் கொண்டவருமான ஸ்ரீராமரை இவ்விதம் தியானஞ் செய்து சுத்தமான மனதுடனிருந்து மானச பூஜை செய்யவேண்டும்.

உலகங்களுக்கு ஈசரும், ஸீதைக்குப் பதியும், பிரபுவும், கௌஸல்யைக்குக் குமாரரும், விஷ்ணுவும், மாயைக்கு மேலானவருமான ஸ்ரீராமரை ஆவாகனம் செய்கிறேன். இராஜாதிராஜரும், இராஜ சிரேஷ்டரும் இராமச்சந்திரரும் பூமிக்குப் பதியும், பிரபுவுமான ஏ இராம! உமக்கு இரத்தின சிங்காதனம் கொடுக்கிறேன். தாங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். பகவானுகிய இரகுவீரரும், இரகு சிரேஷ்டரும், இராஜேந்திரருமான ஏ இராம! தாங்கள் ஸீதாதேவியுடன் வந்து, இந்த ஆசனத்தில் ஸ்திரமாக அமர்ந்திருக்கவேண்டும்.

ஜானகிதேவியின் பதியும் மகா மகிமை யுள்ளவரும் தேவர்களுக்கு அரசரும், உலகநாயகரும், மதுவென்ற அசுரனைச் சங்கரித்தவருமான ஏ இராம! எனக்கு அநுக்கிரகம் செய்யக் கிருபை செய்யவேண்டும். வில்லாளிகளுக்குள் உயர்ந்தவரும் இராவணுந்தகரும், இரகுவம்சத்தில் அவதாரம் செய்தவருமான ஏ இராமச்சந்திரா! நான் பூஜையை முடிக்கும் வரையில் ஸந்நிதியிலிருக்க வேண்டும்.

ஏ இரகுநந்தனு! ஏ இராஜசிரேஷ்டா! தாமரை மலர்போலழகிய நேத்திரங்களுள்ள ஏ இராமா! இரகுவம்சத்தில் அவதரித்த தேவராகிய இராமா! எனக்கு அபிமுகராக இருக்கவேண்டும்.

ஹே ஜகன்னத! நீரே எனக்கு கதி! ஹே பக்தவத்ஸலா! சரணம்! ஹே இரகுசிரேஷ்டா! சரணம். எனக்குவரங்களைக் கொடுக்கக் கிருபை செய்யவேண்டும்.

மூன்று உலகங்களையும் பரிசுத்தம் செய்யும் தன்மையுள்ளவரும், முடிவற்றவரும், இரகுகுல நாயகரும், இராஜ சிரேஷ்டருமான ஏ இராம! உமக்கு நமஸ்காரம். தாங்கள் பாத்தியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

எங்கும் நிறைந்தவரும், பரமானந்த சொரூபியும் பிர்ம்ம சொரூபியுமான ஏ இராம! நமஸ்காரம். ஏ விஷ்ணுவே! பாபங்களைப் போக்குகிற கிருஷ்ணு! ஏ! ஜநார்த்தன! நான் கொடுக்கும் அர்க்கியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ஓங்காரரூபியும் வாசுதேவரும் தத்துவஞான சொரூபியும் இராஜராஜருமான தங்களுக்கு நமஸ்காரம். மதுவர்க்க ஸ்நானத்தை அடையவேண்டும். சத்திய சொரூபியும், சுத்த சொரூபியும், நமஸ்கரிக்கத் தக்கவரும், சகல லோகங்களுக்கும் ஏகநாயகராக விளங்குகிறவருமான ஆசமனத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஹே ஜநார்த்தனு! ஹே இரகுநந்தனு! பிரம்மாண்டத்தின் மத்தியில் உள்ள புண்ய தீர்த்தங்களால், தங்களைப் பக்தியுடன் ஸ்நானம் செய்து வைக்கிறேன். தாங்கள் அடையவேண்டும். லோகநாதரும் இராமச்சந்திரருமான பிரபுவே! உருக்கின தங்கத்திற்குச் சமமான காந்தியுள்ள இந்தப் பீதாம்பரத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். உமக்கு நமஸ்காரம்.

யாகங்களுக்குப் பிரபுவும், இலக்ஷ்மியைத் தரித்தவரும், ஆனந்த சொரூபியும் இரகுவம்சத்தில் ஜனித்தவருமான ஏ இராம! யக்ஞோபவீதம் உத்தரீயம் இவைகளை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

இரகுசிரேஷ்டா! ஜநார்த்தனு! கிரீடம் ஹாரம் தோள்வளை இரத்தின குண்டலம் அரைஞாண், கண்டத்தில் போட்டுக்கொள்ளும் கௌஸ்துபம், ஹாரம், இரத்தினகங்கணம், தண்டை முதலிய பூஷணங்களை நான் பக்தியுடன் கொடுக்கிறேன். தாங்கள் கிருபையுடன் அவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

பிரபுவாகிய இராமா! குங்குமம், அகில், கஸ்தூரி, பச்சைக் கர்ப்பூரம் இவைகள் கலந்த சந்தனத்தை நான் தங்களுக்குக்

கொடுக்கிறேன். தயவுடன் ஏற்றுக்கொள்ளவேண்டும். துளஸி, தும்பை, மந்தாரம், ஜாதி, புன்னாகம், சண்பகம், அரளி, கதம்பம், தாமரை, கருநெய்தல், வில்வதளம் மற்றுமுள்ள புஷ்பம் முதலிய வைகளால் நான் பக்தியுடன் பூஜிக்கிறேன். தாங்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். தங்களுக்கு நமஸ்காரம்.

புவனகர்த்தாவாகிய ஏ இராமச்சந்திரா! திவ்யவாஸனையுள்ள மனோகரமாகிய இந்தத் தூபத்தைத் தாங்கள் தயைசெய்து ஏற் றுக்கொள்ளவேண்டும். ஏ இராஜனே! ஒளியுள்ளவைகளுக்குப் பதியும் பிர்ம்மமுமாகிய உமக்கு நமஸ்காரம். மூவுலகங்களிலுமுள்ள இருளைப் போக்கும் இந்தத் தீபத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இராஜேந்திரா! ஹே ஸ்ரீராம! ஆறுவித இரசங்களுடன் கூடிய திவ்ய அமிருதமான அன்னத்தை நைவேத்தியம் செய்கி றேன். தயையுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இராம! பாக்கு நாகவல்லி கர்ப்பூரம் இவைகளுடன் கூடிய இந்தத் தாம்பூலத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

பூமிக்குப் பதியும் லோகநாதரும் ஹரியுமான ஹே இராமசந் திரா! இந்த நீராஞ்சனத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். உமக்கு நமஸ்காரம்.

### எட்டு நமஸ்காரங்கள்.

பகவானும், பரமாத்மாவும், ஸகல பூதங்களுக்கும் உள்ளிருப் பவரும், ஸீதையுடன் கூடினவருமான ஸ்ரீராமருக்கு நமஸ்காரம். 1

பகவானும், ஸ்ரீராமச்சந்திரரும், பிர்ம்மசொரூபரும் ஸகல வேதாந்தங்களால் அறியத்தகுந்தவரும் ஸீதையுடன் கூடினவரு மான உமக்கு நமஸ்காரம். 2

பகவானும், விஷ்ணுவும், பரமாத்மாவும், பராத்பரரும் ஸீதை யுடன் கூடினவருமான ஸ்ரீராமருக்கு நமஸ்காரம். 3

பகவானும், இரகுநாதரும், சார்ங்கம் என்றவில்லைக்கொண்ட வரும், சின்மயரும், ஆனந்த சொரூபரும் ஸீதையுடன் கூடினவரு மான உமக்கு நமஸ்காரம். 4

பகவானும், ஸ்ரீராமரும், கிருஷ்ணரும், சக்ராயுதமுடைய வரும், நிர்மல ஞான சரீர முடையவரும், ஸீதையுடன் கூடினவரு மான உமக்கு நமஸ்காரம். 5

பகவானும், ஸ்ரீவாசுதேவரும், விஷ்ணுவும், பூர்ணாநந்த சொரூபரும், ஏகமானவரும், ஸீதையுடன்கூடினவருமான உமக்கு நகஸ்காரம். 6

பிர்ம்மசொரூபரும், பகவானும், ஸகல உலகரக்ஷகரும்,ஸீதை யுடன் கூடினவரும் ஸ்ரீராமபத்ரருமான உமக்கு நமஸ்காரம். 7

பகவானும், உத்தமமான தேஜஸ் உள்ளவரும், பிர்ம்மா னந்த சொரூபரும், ஸீதையுடன் கூடினவருமான ஸ்ரீராமருக்கு நமஸ்காரம். 8

எட்டு நமஸ்காரங்களுக்கும் மந்திரங்கள்.

நர்த்தனம், கானம், வாத்தியம், புராணபடனம் இன்னும் மற்றுமுள்ள இராஜோபசாரங்கள் முதலியவைகளில் ஏ இராகவா! சந்தோஷ மடையவேண்டும்.

பரிசுத்த ஞான சொரூபரும், இரகுநாதரும், விஷ்ணுவும், இரகுநந்தருமான உமக்கு நமஸ்காரம்; எனக்கு மனச்சுத்தியை அளிக்கவேண்டும்.

நாராயணா! அனந்தா! கருணைக்கு இருப்பிடமாகிய ஹே ஸ்ரீராம! ஹே ஜகன்னாதா! பயங்காரமாகிய ஸம்ஸார சாகரத்தி னின்று என்னைக் கரையேற்ற வேண்டும்.

வில்லாளிகளுக்குள் உயர்ந்தவரும், சரணம் என்று வந்தவர் களைக் காப்பதில் துறையுள்ளவரும், ஸகல உலகங்களுக்கு அரசரு மான ஹே இராமச்சந்திரா! அத்யாத்மிகம் ஆதிபௌதிசம் ஆதி தைவிகம் என்ற மூன்று தாபமாகிய பெரும் நெருப்பிலிருந்து என்னை இரக்ஷிக்கவேண்டும்.

ஏ ஸ்ரீ கிருஷ்ணா! ஏ ஸ்ரீகரா! ஏ ஸ்ரீசா, ஏ ஸ்ரீராமா, ஸ்ரீநிதி யே, ஹரியே! ஸ்ரீநாதா! ஸ்ரீமஹாவிஷ்ணுவே! ஸ்ரீ நரஸிம்ஹா! கிருபைக்கு இருப்பிடமாகிப ஏ ஜகன்னாதா! ஏ கிருஷ்ணா!

ஏ ஜநார்த்தனா! கர்ப்பவாசம் பிறப்பு வியாதி மூப்பு பயங்கரமான ஸம்ஸாரபந்தம் இவைகளிலிருந்து என்னை விடுவிக்க வேண்டும்.

ஏ ஸ்ரீராமா! கோவிந்தா! முகுந்தா! கிருஷ்ணா! ஸ்ரீநாதா! ஏ விஷ்ணுவே! உமக்கு நமஸ்காரம். ஏ நாராயணா! பிரபஞ்சத்தைச் சரீரமாகக்கொண்ட பிரபுவே! சத்ருக்களாகிய காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியமென்னும் ஆறு பேர்களாலுண்டாகும் பெரும்பயத்திலிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டும்.

ஏ இராமா! அச்சுதா! யக்ஞேசா! ஸ்ரீதரா! ஆனந்த சொரூபா! இராகவா! கோவிந்தா! விஷ்ணுவே! ஜானகீபதி! உமக்கு நமஸ்காரம்.

ஏ இரகுசிரேஷ்டா! மானிடர்களுக்கு உம்முடைய நாமஸ்மரணம் பிர்ம்மானந்தத்தை விளைவிக்கின்றது. உம்முடைய தாமரை மலர்போன்ற பாதங்களில் நல்ல பக்தியைக் கொடுக்க வேண்டும். ஏ நாராயணா! விசுவமூர்த்தியே! உமக்கு நமஸ்காரம்

நித்தியரும் விசுவமூர்த்தியும் பிரபுவுமாகிய ஏ இராமா! உமக்கு நமஸ்காரம். நீர்தான் அசையும்பொருள், அசையாப் பொருள்களுடன் கூடின சகல பிரபஞ்சங்களும்; ஸாதுக்கள் உம்மையே ஸர்வசொரூபமென்று சொல்லுகிறார்கள்.

காரணங்களுக்கும் காரணமாகிய உமக்கு நமஸ்காரம். மோக்ஷபலத்தைக் கொடுக்கும் உமக்கு நமஸ்காரம். ஸகல ஜகத் சொரூபரும் வேதாந்தங்களால் அறியத்தகுந்தவருமாகிய உமக்கு நமஸ்காரம்.

பாதனுக்குத் தமையனாகிய உமக்கு நமஸ்காரம். யாகத்தை இரக்ஷித்த உமக்கு நமஸ்காரம். அனந்தரும் யாகங்களுக்கு அரசருமான ஹரியே! முகுந்தா! கோவிந்தா! விஷ்ணுவே! ஆறு குணங்களுள்ளவரே! முரானுக்கு சத்ருவானவரே! இலட்சுமிகாந்தா! முடிவற்றவரும், உலகங்களுக்கு வசிக்கும் இடமாயுள்ளவரும், இராஜ சிரேஷ்டருமான ஏ ஸ்ரீராமா! உமக்கு நமஸ்காரம்,

ஜானகிக்குப்பதியும், நீண்ட கண்ணுள்ளவரும், ராஜாதிராஜனுமான ஏ இராம! உம்மிடத்தில் எனக்குப் பக்தி ஏற்படட்டும்.

ஏ இரகுசிரேஷ்டா! உருக்கின தங்கத்தினுல் செய்ததும், இரத்தினங்களால் அமைக்கப்பட்டதுமான சொர்ணபுஷ்பத்தைக் கொடுக்கிறேன். பிரபுவே! ஏற்றுக்கொள்ள வேண்டும்.

என்னுடைய இருதயமாகிற தாமரைக்குளத்தின் மத்தியில் ஏ இராம! நீர் ஸீதையுடன் அனேகம் ஆபரணங்களை அணிந்து கொண்டு வாசஞ் செய்யவேண்டும். மனோவாக்குக் காயங்களினுல் நான் செய்யும் காரியங்கள் சுபமானுலும் அசுபமானுலும் உம்முடைய பிரீதியின்பொருட்டே இருக்கவேண்டும். சார்ங்கம் என்ற வில்லையுடைய இராம! நமஸ்காரம். நான் பகலிலும் இரவிலும் அனேகம் அபராதங்களைச் செய்கின்றேன். என்னைத் தாஸனென்று எண்ணி இரக்ஷிக்க வேண்டும்.

ஏ ஜானகிபதியே! பூபதியே! இராமச்சந்திரா! உமக்கு நமஸ்காரம். பூர்ணுநந்த சொரூபராகிய நீர் அர்க்கியத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும், நமஸ்காரம் செய்கிறேன்.

எந்த மானிடன் இவ்விதம் மனதிலாவது வெளியிலாவது ஒருதடவை பூஜைசெய்கிறுனே அந்த மானிடன் இராமனுகவே ஆகின்றுன். எப்போதும் பூஜைசெய்பவன் இந்தலோகத்திலும் பரலோகத்திலும் ஸகல மனோரதங்களை அடைகிறுன் என்பதில் ஐயமில்லை. ஸுதீக்ஷ்ண முனிவரே! நீர் கேட்டபடி நான் ஸ்ரீராமருடைய மானஸிக பூஜையின் விதியைக் கூறினேன்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறுர்:—விஷ்ணுதாஸ! முன் அகஸ்திய முனிவர் ஸுதீக்ஷ்ண முனிவருக்குக் கூறியபடி, நான் விஸ்தாரமாகக் கூறினேன். இப்போது பாஹ்ய பூஜைசெய்யும் விதத்தைக் கூறுகிறேன் கேள்:—

மானிடன் காலையில் எழுந்து, சௌசம் முதலியவைகளை முடித்து ஸ்நானம் செய்தபின், ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு பூஜைக்கு யத்தனம் செய்யவேண்டும். புண்ய தீர்த்தங்களுக்கு அருகாமையிலாவது தேவாலயத்திலாவது கோக்கள் இருக்கும்

இடத்திலாவது புண்ய தேசங்களிலாவது நதிக்கரையிலாவது துளஸி வனத்திலாவது கோமயத்தினல் மெழுகியபின் வெளுப்பு சிவப்பு பச்சை மஞ்சள் நீலம் கறுப்பு இவைகள் முதலிய அனேக வர்ணங்களுள்ள பத்மங்களை ஏற்படுத்தி அதில் பூஜை செய்ய வேண்டும்.

ஆயிரத்தெட்டு ஸ்ரீராமலிங்க ஆசனத்திலாவது, நூற்றெட்டு ஸ்ரீராமலிங்க ஆசனத்திலாவது, ஆயிரத்தெட்டு ஸ்ரீராம பத்ராஸனத்திலாவது, நூற்றெட்டு ஸ்ரீராம பத்ராஸனத்திலாவது, இன்னும் மற்றுமுள்ள ஆசனங்களில் ஏதாவது ஓர் ஆசனத்தில் வஸ்திரத்தினல் அலங்காரம் செய்து ஸர்வதோபத்ரம் என்ற இலட்சணமுள்ள அமைப்பை அமைத்து, அதன்மீது பத்மம் எழுதி அதன் மத்தியில் ஸீதையுடன் இராமரையும், இராமருக்குப் பின் பக்கத்தில் இலட்சுமணரையும், வலது பக்கத்தில் பாதரையும் இடது பக்கத்தில் சத்ருக்னரையும், முன்பக்கத்தில் வாயுகுமாரனாகிய ஆஞ்சனேயரையும், வாயுமூலையில் சுக்ரீவனையும், ஈசான மூலையில் விபீஷணரையும், அக்நி மூலையில் அங்கதனையும், நிருதி மூலையில் ஜாம்பவானையும் ஸ்தாபனம் செய்யவேண்டும்.

இவ்விதமே வித்வான்கள் ஸகல சாஸ்திரங்களிலும் நிர்ணயம் செய்திருக்கிறார்கள். இலட்சுமணர் கையில் முத்துக்களால் அலங்கரித்த குடையையும், பாதன் கையில் விசித்திரமான விசிறியையும், அநுமாருடைய கையில் இரண்டு பாதுகைகளையும், சுக்ரீவன் கையில் மனோகரமான ஜலபாத்திரத்தையும், விபீஷணன் கையில் சிரேஷ்டமான கண்ணாடியையும், அங்கதன் கையில் வெற்றிலைத் தட்டையும், ஜாம்பவான் கையில் வஸ்திரம் வைக்கும் பெட்டியையும் கொடுத்து இராமருக்கு நவாயதனம் ஏற்படுத்த வேண்டும். அல்லது ஆசனத்தின்மீது பஞ்சாயதனத்தை ஏற்படுத்தவேண்டும். மத்தியில் ஸீதையுடன் இராமச்சந்திரரையும் பின்பக்கத்தில் இலட்சுமணரையும் வலதுபக்கத்தில் பாதரையும் இடதுபக்கத்தில் சத்ருக்னரையும், முன்பக்கத்தில் அநுமாரையும் முற்கூறிய உபசாரங்களோடு ஏற்படுத்திவைக்க

வேண்டும். இவ்விதம் இராமரை பத்திராஸனத்தின்மீது பக்தியுடன் ஸ்தாபிக்கவேண்டும். அல்லது மத்தியில் ஸீதையுடன் இராமரை ஸ்தாபித்து, இராமருக்குப் பின்பக்கத்தில் இலட்சுமணரையும் முன்பக்கத்தில் அநுமாரையும் ஸ்தாபித்து வில்லைக் கையிலேந்திய இராமரைப் பக்தியுடன் பூஜைசெய்ய வேண்டும். அல்லது ஸீதையுடன் இராமரையும் இலட்சுமணரையும் பூஜிக்கலாம். ஸீதையையும் இலட்சுமணரையும் நீக்கி இராமருக்கு மட்டும் பூஜைசெய்வதுகூடாது. அப்படிச்செய்தால் ஏதாவது இடையூறு உண்டாகும். நவாயதனபூஜை சிரேஷ்டமானது; சுபத்தைக் கொடுக்கக்கூடியது. பஞ்சாயதனபூஜை என்பது மத்யமம். மூன்று தேவதைகளைப் பூஜிப்பது அதமம். இரண்டு தேவதைகளைப் பூஜிப்பது மிகவும் அதமம். இடதுகையில் வில்லும் இடது பக்கத்தில் அம்புறையையும் பகவானுடைய பெயரினால் அடையாளஞ் செய்யப்பட்ட பாணத்தை வலதுகையிலும் தரித்துக்கொண்ட ஸ்ரீராமரை ஸ்தாபனஞ்செய்து பூஜைசெய்ய ஆரம்பம் செய்யவேண்டும். பூஜைசெய்ய ஆரம்பிக்கும்போது தனக்கு இடதுபக்கத்தில் ஜலம் நிறைந்த கும்பத்தையும், வலதுபக்கத்தில் பூஜைக்குரிய பாத்திரங்களையும் தனக்கு முன்சிரேஷ்டமும் விசாலமுமான பாத்திரத்தையும் வைத்துக்கொள்ளவேண்டும். கிழக்கு முகமாக பத்மாஸனத்தில் சுகமாக உட்காரவேண்டும். பரிசுத்தமுள்ள இருதயத்துடன் மௌனமாயிருந்து துளஸிமாலை ருத்திராக்ஷமாலை இவைகளை அணிந்துகொள்ள வேண்டும். மனம் சலிக்காதவனாயிருக்க வேண்டும். சிகையை நன்றாகக் கட்டிக்கொள்ள வேண்டும். பரிசுத்தமான வஸ்திரம் தரித்திருக்கவேண்டும். பவித்திரம் தரித்துக் கொள்ளவேண்டும். பிறகு பூஜாரம்பம் செய்து ஆதியில் விக்னேச்வரரை வணங்கித் திதி வாரம் முதலியவைகளைக் கூறவேண்டும். கிரமப்படி பூமியையும் பூதங்களையும் சுத்திசெய்து அங்கநியாஸம் கரநியாஸம் இவைகளைச்செய்து ஜலம் நிறைந்த புரோக்ஷணீ பாத்திரத்தையும்தயார்செய்து அந்தப்புரோக்ஷணீபாத்திரத்தை ஆறுகு அக்ஷதை சந்தனம் புஷ்பம் இவைகளினால் பூஜித்து அந்தஜலத்தால் பூஜைசாமான்களைப் புரோக்ஷணம் செய்யவேண்டும். பாத்யம் ஆசமனம் அர்க்கியம் இவைகளுக்காக மூன்றுபாத்திரங்களை வைத்துக்

கொண்டுவிக்நேசுவரரையும் வருணனையும் சங்கத்தையும் பூஜித்து அந்தச் சங்கத்திலிருக்கும் ஜலத்தினுல் புரோக்ஷணம் செய்யவேண்டும். தேனுமுத்திரை சங்கமுத்திரை சக்ரமுத்திரை கருடமுத்திரை இவைகளைக் காட்டவேண்டும். சிலை தரு லோகம் சந்தனம் சித்ரம் மணல் இரத்தினம் இவைகளால் விக்ரகங்களை யுண்டுபண்ணிப் பூஜிக்கலாம். மனதிலும் உருவமைத்துக்கொண்டு பூஜிக்கலாம். பிறகு ஸீதாபிராட்டியை யணைந்துகொண்டு முன்பக்கம் விளங்கும் இரண்டு கைகளுடன், அம்புறை, வில், பாணம், ஆயுதங்கள் பீதாம்பரம் இவைகளைத் தரித்துக்கொண் டிருப்பவரும், இலட்சுமணர், பரதர், சத்துருக்னர் இவர்களுடன் கூடினவரும், அநுமாரால் சேவிக்கப் பட்டவரும் சிங்காதனத்தில் வீற்றிருக்கிறவரும் குடைபிடிக்கப் பெற்றவரும், சாமரங்களால் உபசரிக்கப் பெற்றவரும், விபீஷணருடன் கூடினவரும் சுக்ரீவனுல் நமஸ்கரிக்கப்பட்டவரும் ஜாம்பவானுடன் கூடினவரும் அங்கதனுல் தோத்திரஞ் செய்யப் படுகிறவரும், அயோத்நியா பட்டணத்தில் வாசம் செய்பவருமான ஸ்ரீராமச் சந்திரரைத் தியானம் செய்யவேண்டும். ஏ ஸீதாராமா! தாங்கள் வரவேண்டும். என்முன்னுல் ஸ்திரமாக இருக்கவேண்டும். நான் செய்யும் பூஜையை ஏற்றுக் கொள்ள வேண்டும். நான் தங்களை ஆவாகனம் செய்கிறேன்.

தங்கம் இரத்தினம் இவைகலால் செய்யப்பட்டதும், அநேக சித்திரங்க ளமைந்ததும், வஸ்திரத்துடன் கூடினதுமான சிங்காதனத்தைத் தங்களுக்கு ஆசனமாக அளிக்கிறேன். கால் அலம்புவதற்காகப் பாத்யம் கொடுக்கிறேன். எனக்கு அநுக்ரகம் செய்யவேண்டும். புஷ்கரம் முதலிய தீர்த்தங்களினின்றும் கங்கை முதலிய நதிகளினின்றும் நான் கொண்டுவந்த ஜலத்தை அர்க்கியமாகக் கொடுக்கிறேன்; ஏற்றுக்கொள்ள வேண்டும். அநேக தீர்த்தங்களுடன் கூடினதும் நல்ல வாசனையுள்ளதுமான ஜலத்தை ஆசமனத்திற்குக் கொடுக்கிறேன். தேவர்களுக்கு அரசனுகிய ஏ இராம! ஏற்றுக் கொள்ள வேண்டும்.

காமதேநுவின் பால், நந்தியின் ஸுந்தரமான தயிர், கபிலையின் சிரேஷ்டமான நெய், விந்தியமலையில் உண்டான தேன்,

சர்க்கரை இவைகள் சேர்ந்த வெண்ணெய்தனுக்குச் சமமான பஞ்சாமிருதத்தை நான் கொடுக்கிறேன். ஸ்நானத்திற்காகத் தாங்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். கங்கை, யமுனை, கோதாவரி, ஸரஸ்வதி, நர்மதை, ஸிந்து, காவேரி, ஸரயூ, கண்டகி, தாம்பிரபரணீ, கிருஷ்ணவேணி, பீமநதி, கோமதி, பால்நதி, (பயோஷணீ), எழுகடல், பூர்ணை, துங்கபத்ரை, க்ஷிப்ரை, வேகவதி, பிநாகி, நதங்கள், திருதமாலை, கிருதமாலை, மஹீ, நிக்ஷேபிகை, சர்மண்வதி இன்னும் மற்றுமுள்ள நதிகள் இவைகளிலிருந்து கொண்டு வந்த ஜலங்களை ஸ்நானத்திற்குக் கொடுக்கிறேன்; ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இரகு வம்சத்திற்கு நாதராகிய ஏ இராம! ஸகல தீர்த்தங்களி லிருந்தும் கொண்டு வந்த ஜலத்தை மறுபடி ஆசமனம் செய்யக் கொடுக்கிறேன்; ஏற்றுக் கொள்ள வேண்டும். இரகுநாயக! சொர்ண நூற்களால் நெய்த மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு பட்டு வஸ்திரங்களைத் தருகிறேன்; ஏற்றுக் கொள்ளவேண்டும். சொர்ணமயமானதும் புதிதான நூற்களாற் செய்யப்பட்டதும் பிரம்மமுடிச்சுடன் கூடியதும், பரிசுத்தமுமான இந்த உபவீதத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

கிரீடகுண்டலங்கள், மோதிரங்கள், கங்கணங்கள், தண்டைகள், அரைஞாண், மாலைகள், தோள்வளைகள் இவைகளையும் சொர்ணம் இரத்தினம் முதலியவைகளால் செய்யப்பட்ட மற்றுமுள்ள ஆபரணங்களையும் தாங்கள் அலங்காரத்திற்காக ஏற்றுக் கொள்ளவேண்டும். சத்ருக்களைச் சங்கரிக்கும் சக்தியுள்ள இராம! குடை விசிறி, இரண்டு சாமரங்கள் இவைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஏ இராம! கறுத்த அகில்கட்டையின் வாசனை கலந்ததும், தேவர்களுக்குரியதும் செஞ்சந்தனம் கலந்ததுமான வாசனைச் சந்தனத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

பரமேசுவரா! சிரேஷ்டமானதும், தேவர்களுக்குரியதும், முத்துக்களா லமைக்கப்பட்டதும் கஸ்தூரி குங்குமம் இவைகள் கலந்ததுமான அக்ஷதைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மாலதிபுஷ்பம் முதலிய வாசனையுள்ள புஷ்பங்களைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஏ இராம! மெழுகுடன் கூடினதும், வாசனைபால் நிறைந்ததும், ஸகல தேவர்களையும் ஆக்ராணம் செய்யத்தக்கதும், உத்தமுமான தூபத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மூவுலகங்களிலுள்ள இருளைப் போக்கும் சாமர்த்தியம் வாய்ந்த பிரபுவாகிய ஏ இராம! மூன்று வர்த்திகள் போட்டதும். நெய்யுடன் கூடினதும், அக்நியினால் பிரகாசிக்கிறதுமான தீபத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

பக்ஷியங்கள், அன்னங்கள், பாயஸம், நெய், சர்க்கரை, தேன் இவைகளுடன் கூடிய நைவேத்தியத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

ஏ இரகுநந்தனா! நல்ல பக்குவமான கட்டி மாம்பழம் முதலிய அநேகபழங்களைக்கொடுக்கிறேன், ஏற்றுக்கொள்ளவேண்டும்.

பாக்கு, வெற்றிலை, ஜாதிக்காய் முதலிய நான்கு திரவியங்களுடன் கூடிய தாம்பூலத்தைக் கிரகிக்கவேண்டும்.

பிர்ம்மதேஜஸிலிருந்து உண்டானதும், அக்நி தேஜஸிலிருந்து உண்டானதுமான சொர்ணத்தைத் தக்ஷிணையாகக் கொடுக்கிறேன்; ஏற்றுக்கொள்ள வேண்டும்.

விஷ்ணுதாஸ! ஆவாகனம் முதல் தக்ஷிணை வரையிலுமுள்ள பதினாறு உபசாரங்களை விஸ்தாரமாக உனக்குக் கூறினேன். மீதியுள்ள பூஜைசெய்யும் விதியையும் கூறுகிறேன் கேள்:—

ஏ இராம! ஐந்து வர்த்திகளுடன் கூடினதும் கபிலையின் நெய்கலந்ததும், அக்நியினால் ஜ்வலிப்பதுமான நீராஞ்சனத்தைக் கிரகிக்க வேண்டும்.

ஏ இராகவ! ஜாதி, சண்பகம், மந்தாரம், தாழம்பூ, துளஸீ, தமனம், முனிபுஷ்பம், குந்தபுஷ்பம், ஆனந்தபுஷ்பம் இந்த ஒன்பதுவித புஷ்பங்களையும் மந்திர புஷ்பங்களாகக் கொடுக்கிறேன். பரமேசுவர! கிரகித்துக்கொண்டு எனக்கு அநுக்ரகம் செய்ய வேண்டும்.

வலம் வருகையில்—ஒவ்வொரு அடிக்கு ஜன்மாந்தரத்தில் செய்த பாபங்களெல்லாம் நாசமடைய வேண்டும். மார் தலை கண் மனம் வாக்கு பாதம் கைகள் முழங்கால்கள் முதலிய எட்டு அங்கங்களாலும் உமக்கு நமஸ்காரம் செய்கிறேன். நான் ஆவாஹனம் செய்யும் விதியையும் விஸர்ஜனம் செய்யும் விதியையும் பூஜைசெய்யும் விதியையும் அறியேன். பரமேசுவரா! க்ஷமிக்க வேண்டும்.—

இருஷிகேஷ—! மந்திரம் கிரியை பக்தி இவைகளில் குறையிருந்தாலும் நான் பூஜித்ததைப் பரிபூர்ணமாகப் பாவிக்கவேண்டும்—என்று சொல்லவேண்டும்.

இவ்விதம் பக்தியுடன் இடைவிடாமல் ஸ்ரீராமசந்திரரைப் பூஜை செய்ய வேண்டும். நவமியில் விசேஷமாகப் பூஜிக்கவேண்டும்

விஷ்ணுதாஸர் வினவுகிறார்:—இந்தப் பூஜையில் ஒன்பது புஷ்பங்களால் புஷ்பாஞ்சலி செய்யவேண்டுமென்று தாங்கள் கூறினீர்கள். அதைப் பற்றி விஸ்தாரமாக எனக்குக் கூறவேண்டும். தங்களிடம் அநேக தேவர்களுடைய பூஜையின் விதியைக் கேட்டிருக்கிறேன். அவைகளில் இம்மாதிரி புஷ்பாஞ்சலி செய்யும் கிரமத்தைக் கேட்டதில்லை. ஆகையால் எனக்குக் கூறவேண்டும்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்:—சீடனே நன்றாகக் கேட்டாய் ஸாவதானமாகக் கேள்:—

முன் காவேரி நதியின் வடகரையில் இராமநாதபுரம் என்ற பட்டணத்தில் சுந்தரன் என்ற ஒரு பிராம்மணன் வெகு பக்தியுள்ளவனாக இருந்தான். அந்தப் பிராம்மணனுக்கு ஸ்ரீ ராமனைத் தியானம் செய்யும் விஷயத்தில் மிகவும் விருப்பமுள்ள ஒன்பது குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் சந்திரன், அதிசந்திரன், சந்திராபன், சந்திராஸியன், சந்திரசேகரன், சந்திராம்சு, ஜிதசந்திரன், சந்திரசூடன், இராமசந்திரன் எனப் பெயரிடப்பட்டிருந்தார்கள். ஒன்பது பேரும் ஒன்பது கிரகங்கள்போல் விளங்கினார்கள். ஒரு சமயம் ஒன்பது பேரும், சித்திர மாதத்தில் பக்தர்களிடம் கிருபையுள்ள ஸ்ரீராமரைத் தரிசனம் செய்வதற்கு அயோத்தியா பட்டணத்தில் ஸரயூ நதிக்கரைக்கு வந்திருந்தார்கள்.

அந்தச்சமயம் அநேகதேசங்களிலிருந்து வெகு ஜனங்கள் கூடினார்கள். ஸரயூநதிக்குச் சைத்திய ஸ்நானத்திற்காக வாகனங்களிலேறி வந்த ஜனங்களின் நெருக்கத்தினால் இந்த ஒன்பது பேருக்கும் ஸ்ரீராமருடைய தரிசனம் கிடைக்கவில்லை. அப்பொழுது அவர்கள் ஒருவருக்கொருவர் ஆலோசிக்கலானார்கள்.

இந்தக் கூட்டத்தில் ஸ்ரீராமருடைய தரிசனம் எவ்விதம் கிடைக்கும். ஒருகால் ஸ்ரீராமதரிசன மாத்திரம் ஏற்பட்டால் என்ன பிரயோஜனம்? எது வரையில் நாம் இராமரை சஞ்சலமற்ற மனதுடன் பார்க்கவில்லையோ அது வரையில் மனம் சந்தோஷத்தை அடையப்போகிறதில்லை. ஆகையால் நாம் கடுமையான தவஞ் செய்து ஸ்ரீராமதரிசனத்தை இங்குத் தானே யடையலாம் என்று ஆலோசித்துத் தவம்புரியத் தீர்மானித்தார்கள். பிறகு ஒரே காலத்தில் எல்லோரும் தவம்புரிந்தால் யாருக்கு முன்னால் இராமர் தரிசனம் கொடுக்கிறார், பின்னால்யாருக்குந் தரிசனம்கொடுக்கிறார் பார்ப்போம்; யாருக்கு ஸ்ரீராம பக்தி திடமாக இருக்கின்றது என்பதும் தெரிந்து கொள்ளலாம் என்று சொல்லி எல்லோரும் அந்தக் கூட்டத்திற்கு வெகுதூரத்திற்கப்பால் சென்று ஆகாரத்தை ஒழித்து விட்டு வாயுவை ஆகாரமாகக் கொண்டு மனதை ஸ்ரீராமரிடம் செலுத்தித் தவம் புரிந்தார்கள். இந்தவிஷயங்கள் எல்லாவற்றையும் ஸர்வஸாக்ஷியாக விளங்குகிற உலகநாயகராகிய ஸ்ரீராகவர் அறிந்து, ஸந்தோஷத்துடன் ஒன்பதாவது நாளில் ஒன்பதுபேருக்கும் தரிசனம் கொடுக்கவிரும்பி, ஒன்பது ரூபங்களை எடுத்துக்கொள்வதாக நிச்சயம் செய்துகொண்டு இலக்ஷ்மணரை நோக்கி "இலட்சுமணா! பல்லக்குக்கொண்டுவா; ஸந்தோஷமாக வெளியிலேபோய் வருகிறேன்" என்று கட்டளையிட்டார். இலட்சுமணர் உடனே தூதர்களைக்கொண்டு பல்லக்கைத் தருவித்து ஸ்ரீராமரிடம் தெரிவித்தார். உடனே இராமர் சிங்காதனத்திலிருந்து எழுந்து பல்லக்கி லேறிக்கொண்டார். அப் பல்லக்கைச்சூழ பந்துக்களும் சிநேகிதர்களும் நின்றார்கள். இச்சமயம் திடீரென்று இராமபிரான், ஒன்பது ரூபமெடுத்துக்கொண்டு ஒன்பது பல்லக்குகளில் பந்துங்களும் சிநேகிதர்களும் சூழ விளங்கினார்.

பிறகு இரகுசிரேஷ்டர், பந்துக்கள், மித்ரர்கள், தூதர்கள், மற்றுமுள்ள ஜனங்கள் இவர்களுடன் தவம் புரிந்துவரும் ஒன்பது பிராம்மணர்களுக்கு முன்னால் சென்று நின்றார். அந்த ஒன்பது பிராம்மணர்களும் தங்களுக்கு முன் நிற்கும் பிரபுவாகிய இராமரைத் தனியாகப் பார்த்துப் பரமானந்த மடைந்து அவரை வணங்கினார்கள். அப்பொழுது ஒன்பது இராமரும் தனித் தனியே பல்லக்கிலிருந்து இறங்கி ஒன்பது பிராம்மணர்களையும் ஆலிங்கனம் செய்துகொண்டு நிர்மலமான முக மலர்ச்சியுடன் கூறுகிறார்கள்.

ஒன்பது இராமரும் தனித்தனியே கூறுகிறார்கள்.

ஏ பிராம்மணர்களே! நீங்கள் சிரமத்தை அடைந்தீர்கள்; உங்கள் மனநிச்சயத்தை அறிந்து நான் ஒன்பதுரூப மெடுத்துக் கொண்டேன். தவம் புரியும் உங்களுக்குள் என் தரிசனத்தை யாருக்கு முன்பும் யாருக்குப் பின்பும் கொடுப்பதென்று ஆலோசித்து இவ்விதம் தரிசனங் கொடுத்தேன். வேண்டியவரன்களைக் கேளுங்கள்—என்றார்கள்.

இவ்வசனத்தைக் கேட்ட ஒன்பது பிராமணர்களும் "பிரபுவே! எங்களுக்கு உலகத்தில் கீர்த்தி உண்டாகும்படி வரம் கொடுக்கவேண்டும்'' என்று கேட்டார்கள். அவர்கள் இவ்விதம் கூறியதைக் கேட்ட ஒன்பது இராமரும் ''பிராம்மணர்களே! உங்களுக்குத் தரிசனம் கொடுக்கும் பொருட்டு இவ்விதம் ஒன்பது இராமாக ஆனோம். ஆகையினால் இதுமுதல் உங்கள் பெயரை அடைந்து, பூமியில் ஒன்பது இராமாக விளங்குகிறோம்; எங்களுக்கு ஒன்பது என்ற கணக்கில் அகப்பட்டவைகளெல்லாம் பிரீதியுள்ளவைகளாக ஆகட்டும்'' என்று கூறினார்கள். இவ்விதம் இராமர்கள் சொல்லியதைக் கேட்ட ஒன்பது பிராம்மணர்களும் வெகு ஸந்தோஷமடைந்து தங்கள் தங்கள் இராமரை வணங்கினார்கள். அப்போது சகல ஜனங்களும் இராமரில் ஒன்பது பேரையும் இலட்சுமணரில் ஒன்பதுபேரையும் பரதரில் ஒன்பதுபேரையும் பார்த்து ஆச்சரிய மடைந்தார்கள். பிறகு ஒன்பது இராமரும் பல்லக்கில் ஏறிக்கொண்டு ஒன்பது பிராம்மணர்களிடமும் விடைபெற்றுக்கொண்டு அவ்விடமிருந்து

திரும்பினார்கள். வரும் மார்க்கத்தில் இராமபிரான் எப்போதும் போல் ஏகரூபமாகவே ஆய்விட்டார். மற்றவர்களும் எப்போதும் போல் ஏகரூபமானார்கள். இதைக்கண்ட எல்லோரும் பரமாச்சரியம் அடைந்தார்கள்.

பிறகு இராமர், பந்துக்கள் முதலியவர்களுடன் பட்டணம் சென்று அந்தப்புரத்தில் ஸீதைக்கு ஸகல ஸமாசாரங்களையும் கூறினார். பிறகு இராமர் அந்த ஒன்பது பிராம்மணர்களின் பெயர்களைக்கொண்டு பூமியில் பிரஸித்தி அடைந்தார். அன்று முதல் ஒன்பது என்ற எண்ணிக்கையுள்ளவைகள் எதுவும் இராமருக்கு வெகுபிரியம். எப்படி பன்னிரண்டு சூரியர், இருபத்தொரு கணாதிபர்கள், பதினொரு உருத்திரர்கள், எட்டுப் பைரவர்கள் ஒன்பது துர்க்கைகள் ஏற்பட்டார்களோ அப்படியே ஒன்பது இராமரும் ஏற்பட்டார்கள். சூரியனுக்குப் பிரியம் பன்னிரண்டு; சிவனுக்குப் பிரியம் பதினொன்கு; பைரவருக்குப் பிரியம் எட்டு; துர்க்கைக்குப் பிரியம் ஒன்பது; இப்படியே இராமருக்குப் பிரியமானது ஒன்பது. ஏ சிடனே! ஆகையினால் ஒன்பது புஷ்பங்களினால் அர்ச்சித்து அஞ்சலிசெய்வது இராமருக்கு மிகுந்த திருப்தியைக் கொடுக்கும்.

இராமருக்குரிய இரண்டு வகையான பூஜையை விளக்கும்

3-வது சருக்கம்

முற்றிற்று.

## 4 - வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

சுவாமி! தாங்கள் ஸ்ரீராமருடைய ஆயிரத்தெட்டு நாமங்களுக்கும் நூற்றெட்டு நாமங்களுக்கும் பத்ரங்கள் கூறினீர்கள். ஸ்ரீராமரைப்பூஜிப்பதற்குக்கூறிய இரண்டுவித பத்ரங்கள் எப்படிப்பட்டவைகள்? அவைகளை எவ்விதம் எழுதுவது? அவைகளின் விசேஷங்கள் எவ்வளவு? இவ்விரண்டு பத்ரங்களையும் உள்ளபடி தெரிந்துகொள்ள வேண்டுகிறேன். அவைகளை விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்.

### ஸ்ரீ இராமதாஸர் கூறுகிறார்.

ஏ விஷ்ணுதாஸ! ஸ்ரீராமநாம அடையாளமுள்ளவைகளும் மனதுக்கு ஆனந்தத்தை விளைக்கக் கூடியவைகளும் மங்களகாம் பொருந்தியவைகளுமாகிய பத்ரங்களின் விவகாரங்களைக் கூறுகின்றேன். ஸ்ரீராமநாம அடையாளமுள்ள நூற்றெட்டுப் பத்ரங்கள் மிகவும் சிலாக்கியமானவை.இதில் இராம முத்திரையை உபாஸிக்க வேண்டும். உபாஸிக்கிறவர் உருத்திரரென்று கூறப்படுவர். இது ஸ்ரீராமருடைய சின்னங்களடங்கிய பத்ரமாகையால் பெரியோர்கள் இதைச்சிலாக்கியமென்று கூறுகிறார்கள். இதற்கு அகலத்திலும் நீளத்திலும் இருநூறுரேகைகள் உண்டு. அவைகளில் முதலில் கறுப்பு வர்ணமுள்ள மண்டலமும், பிறகு சிவப்பு வர்ணமுள்ள மண்டலமும், அதன் பின் வெளுப்பு வர்ணமுள்ளமண்டலமும், பின் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமுமிருக்கும். மூலைகளில் சந்திரன்போல் மூன்று ஸ்தானங்களுண்டு, சந்திரன்போன்ற மண்டலத்திற்கு முன்னால் கறுப்புவர்ணமுள்ள சங்கிலிபோன்ற கோடுகளைப் பன்னிரண்டு பாதங்களுடன் அமைக்கவேண்டும். பிறகு மஞ்சள் வர்ணமுள்ள இருபத்துமூன்று பாதங்களடங்கிய கொடிபோன்ற கோடுகளை அமைக்கவேண்டும். பிறகு மஞ்சள்வர்ணமுள்ள பன்னிரண்டு பாதங்களுள்ள சங்கிலியை அமைக்கவேண்டும். இருபதாவது பாதத்தில் அமைத்திருக்கும் பத்திரம் சிவப்பாகவாவது வெளுப்பாகவாவது இருக்கலாம். பதின்மூன்று இருபத்தாறு

இவ்விரண்டு ஸ்தானங்களும் வெண்மையா யிருக்க வேண்டும். சிரஸானது நான்கு ஸ்தானங்களுடனும், கறுப்பு வர்ணமுள்ள தாயு மிருக்கவேண்டும். நாபியானது இரண்டு ஸ்தானங்களையுடையதா யிருக்கவேண்டும். மூலபாகமும் ஸ்கந்தபாகமும் ஆறு ஸ்தானங்களுடனிருக்க வேண்டும். இருபக்கங்களும் நான்கு ஸ்தானங்களுடனிருக்க வேண்டும். பிறகு சிவப்பு வர்ணமுள்ள மரியாதை என்று பெயரமைந்த பன்னிரண்டு ஸ்தானங்களுள்ள மண்டல மிருக்கவேண்டும் மரியாதை என்ற மண்டலத்தைச் சுற்றி லிங்கமுத்திரைகளு மிருக்கவேண்டும். இவ்விதம் ஒன்பது ஹார்களும் எட்டு முத்திரைகளும் கூறப்பட் டிருக்கின்றன. கடைசி அடையாளங்களுக்கு மேற்பாகம், நான்கு பக்கங்கள். இவ்விடங்களில் பதினாறு மண்டலங்கள், ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின பத்ரம், இவைகள் வெண்மை அல்லது மஞ்சள் வர்ணமாயிருக்க வேண்டும். சிவப்பு வர்ணமுள்ள பத்ரத்திற்குரிய ஸ்தானங்களுக்கு இஷ்டப்படி வர்ணங்களை ஏற்படுத்திக்கொள்ளலாம். மத்தியில் உள்ள லிங்கம் ஸ்கந்தம் நேத்திரங்கள் இவைகள் வெண்மை வர்ணமுள்ளவைகளா யிருக்கவேண்டும். லிங்கத்திலும் ஸ்கந்தத்திலும் உள்ள சங்கிலிகள் வெண்மையான வர்ணமுள்ளவைகளா யிருக்கவேண்டும். கீழ் முகமுள்ளதும் ஹாரை மேலே கொண்டதுமான பத்ரம் சிவப்புவர்ணமுள்ளதாயிருக்க வேண்டும். குறுக்காக இருக்கும் பத்ரங்கள் வெண்மை வர்ணமுள்ளதாயும் பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடியதாயுமிருக்க வேண்டும். பிறகுவரிசைச்கு மேற்பக்கத்தில் வெண்மையான வர்ணமுள்ள மண்டலமும், அதற்குமேல் மஞ்சள்வர்ண முள்ளமண்டலமும் இருக்கவேண்டும். இவ்விதம் முதல் வரிசையைச் செய்துகொள்ள வேண்டும். இரண்டாவது வரிசையின் விசேஷத்தை இதற்குமுன் ஒருவருக்கும் கூறினதில்லை. ஆயினும் உனக்குக் கூறுகின்றேன். இதில் முத்திரைகள் ஏழு; மண்டலங்கள் பதினான்கு; பத்திரங்கள் சிவப்பு வர்ணமுள்ளவைகள்; ஸ்தானங்கள் ஆறு; மற்றவைகள் யாவும், முன் கூறியது போலவே யிருக்கவேண்டும்.

பிறகு மூன்றாவது வரிசையில் ஐந்து முத்திரைகளும் ஆறு ஹார்களும் பத்து மண்டலங்களும் முப்பது பத்ரங்களும் முப்

பது ஸ்தானங்களுமிருக்க வேண்டும். பிறகு நான்காவது வரிசையில் மூன்று ஹாரர்களும் நான்கு முத்திரைகளும் நான்கு மண்டலங்களும், எட்டுப் பத்ரங்களும் ஒன்பது ஸ்தானங்களும் இருக்க வேண்டும். வெண்மை மஞ்சள் இவ்வர்ணங்களுக்கு மத்தியில் சிவப்பு வர்ணமுள்ள மண்டலமிருக்க வேண்டும். ஐந்தாவது வரிசையில் முத்திரையும், இரண்டு ஹாரர்களும் நான்கு மண்டலமும் நான்கு பத்ரங்களும், தொண்ணூறு ஸ்தானங்களுமிருக் வேண்டும். வெண்மை சிவப்பு மஞ்சள் இவ்வர்ண முள்ள மண்டலங்கள் முன்போலிருக்க வேண்டும். ஆறுவது வரிசையில் ஒரு முத்திரையும் இரண்டு மண்டலமும் ஒன்பது ஸ்தானங்களும் மூன்று பத்ரங்களும் மூன்று மண்டலங்களு மிருக்கவேண்டும். மத்தியிலும் நான்கு பக்கங்களிலும் ஒன்பது ஸ்தானங்களுள்ள பத்ரங்களிருக்க வேண்டும். சந்திரன் போன்ற மூன்று ஸ்தானங்களையும் கறுப்பு வர்ணமுள்ள ஐந்து ஸ்தானங்களையு முடைய சங்கிலிகள், பதினொரு ஸ்தானங்களையுடைய கொடி, ஒன்பது ஸதானங்களையுடைய பத்ரங்கள், அல்லது இருபத்து நான்கு ஸ்தானங்களுள்ள பத்ரங்கள் வெண்மை வர்ணமுள்ள மண்டலம் இவைகளிருக்க வேண்டும். அன்றியும் பதினறு ஸ்தானங்களில் மத்தியில் இஷ்டமான வர்ணமுள்ள பத்திரத்தை அமைக்கலாம். பத்மத்தின் நுனியை வெண்மை வர்ணமாக அமைக்க வேண்டும். பாக்கியுள்ளவைகளைத் தன் புத்தியினல் அமைத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் நூற்றெட்டு நாமங்களையுடைய இராம லிங்க சொரூபங்கள் கூறப்பட்டன. இந்தப் பத்ரத்தில் வேதமறிந்த பெரியோர்கள், முன் இராஜ்யகாண்டத்தில் உத்தரார்த்தத்தில் பதினெட்டாவது சருக்கத்தில் சொல்லப் பட்ட முத்திரையின் சொரூபம்போல் அமைத்துக் கொள்ளவேண்டும். அங்கு பன்னிரண்டுஸ்தானங்களையுடையபன்னிரண்டுவரிசைகளும் அந்த வரிசைகளில் கிழக்குத்திக்கு முதல் கிரமமாக வர்ணங்களும் அமைக்கவேண்டும். முதல் ஏழு வரிசைகள் கறுப்பு வர்ணமுள்ளவைகளாயிருக்க வேண்டும். உயரத்திலும் கீழ்ப்பக்கத்திலும் ஐந்து ஐந்து வரிசைகள் உண்டு. அதன் கிரமத்தைக் கூறுகிறேன். முதல்வரிசைக்கு உயரத்திலுள்ள ஐந்து வரிசைகளில் முதல் வரி

சையையும் வடகிழக்கு வரிசையையும் கறுப்புவர்ணமுள்ளவைக ளாக அமைக்கவேண்டும். அதற்குக் கீழ் இரண்டாவது வரிசை யில், ஒன்று, இரண்டு, நான்கு, ஆறு, எழு, எட்டு, ஒன்பது, பதி னொன்று இந்த ஸ்தானங்களை கறுப்பு வர்ணமுள்ளவைகளாக அமைக்கவேண்டும். அதற்குக்கீழ் மூன்றாவது வரிசையில், நான்கு எழு, பதினொன்று, இவைகளைக் கறுப்பு வர்ணமுள்ளவைக ளாக அமைக்கவேண்டும். அதற்குக்கீழ் நான்காவது வரிசையில் ஒன்று இரண்டு நான்கு ஆறு எழு ஒன்பது பதினொன்று இந்த ஸ்தானங்களையும் அதற்குக்கீழ் ஐந்தாவது வரிசையில், ஒன்று இரண்டு நான்கு ஆறு ஒன்பது பதினொன்று இந்த ஸ்தானங் களையும் கறுப்பு வர்ணமுள்ளவைகளாக அமைக்கவேண்டும்.

ஐந்து வரிசைகளிலும் ராஜா என்ற இரண்டு அக்ஷரங்களை வெண்மை வர்ணமுள்ள வைகளாக அமைக்கவேண்டும். அதற்குக் கீழ் ஐந்து வரிசைகளுக்குள் முதல் வரிசைகளில் முற்கூறியது போல் வர்ணங்களையும் அதற்குக்கீழ் இரண்டாவது வரிசையில், ஒன்றுஇரண்டுநான்கு ஆறு எழு ஒன்பதுபத்து பன்னிரண்டு இந்த ஸ்தானங்களில் கறுப்பு வர்ணங்களையும் அமைக்கவேண்டும். மூன்றா வது வரிசையில் நான்கு ஆறு எழு பன்னிரண்டு இந்த ஸ்தானங் களையும் நான்காவது வரிசையில் ஒன்று இரண்டு நான்கு ஆறு எட்டு ஒன்பது பத்து பன்னிரண்டு இந்த ஸ்தானங்களையும், ஐந்தா வது வரிசையில் ஒன்று இரண்டு நான்கு ஆறு எழு எட்டு ஒன் பது பத்து பன்னிரண்டு இந்த ஸ்தானங்களையும் கறுப்பு வர்ண முள்ளவைகளாக அமைக்கவேண்டும். ராமா என்ற இரண்டு அக்ஷ ரங்களையும் ராஜா ராமா என்ற நான்கு அக்ஷரங்களையும் மாறுத லான ராம ராஜா என்ற அக்ஷரங்களையும் எழுதவேண்டும். அல் லது ராம ராம என்று மூன்றாவதாகவும் எழுதலாம். கீழ் ஐந்து வரிசைகளிலுள்ள விசேஷங்களாவன--நான்காவது வரிசையின் முதல் ஸ்தானத்தைக் கறுப்புவர்ணமாகச் செய்தல்வேண்டும். ஆகிருதியைக் கவனியாமல் ராமநாமத்தைப் பார்க்கவேண்டும்.

மேல் வரிசைகளில் ராம ராம என்றாவது இருக்கலாம். முதல் வரிசை முன்போல் இருக்கலாம். அதன்பிறகு இரண்டாவது

வரிசையில் ஒன்று இரண்டு மூன்று ஐந்து ஆறு எட்டு ஒன்பது பதினொன்று இந்த ஸ்தானங்களையும் மூன்றாவது வரிசையில் ஒன்று ஐந்து ஆறு பன்னிரண்டு இந்த ஸ்தானங்களையும் நான்காவது வரிசையில் ஒன்று இரண்டு மூன்று ஐந்து எழு எட்டு ஒன்பது பதினொன்று இந்த ஸ்தானங்களையும் கறுப்பு வர்ணமுள்ள வைகளாகச் செய்தல்வேண்டும். ஐந்தாவது வரிசையில் ஒன்று இரண்டு மூன்று ஆறு எழு எட்டு ஒன்பது பதினொன்று இந்த ஸ்தானங்கள் கறுப்பு வர்ணமுள்ளவைகளாக இருக்கவேண்டும். ராமா, என்ற இரண்டு அக்ஷரங்கள் வெளுப்பு வர்ணமுள்ளவைகளாக விருக்கவேண்டும். இந்த நான்கு நாமங்களையும் நான்கு பக்கங்களிலும் ஏற்படுத்த வேண்டும்.

இலகு முத்திரையுடன் கூடின இராமலிங்கமென்னும் பெபருள்ள பத்ரத்தைக் கூறுகிறேன். அதை நீ சாவதானமாகக்கேள். இதற்கு நீளத்திலும் அகலத்திலும் ஐம்பத்தொரு ரேகைகளுண்டு ஒவ்வொரு ரேகையும் எழு எழு ஸ்தானங்களை உடையது.

மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு மண்டலங்களையும் மூலைகளில் மூன்று ஸ்தானங்களுடன் வெண்மை வர்ணமுள்ள சந்திரனையும் அமைக்கவேண்டும். ஆறு ஸ்தானங்களுடன் கூடின கறுப்பு வர்ணமுள்ள சங்கிலியையும் பதின்மூன்று ஸ்தானங்களுடன் கூடின கொடியையும் அமைக்கவேண்டும். இதில் எட்டு ஸ்தானங்கள். பச்சை கறுப்பு இவ்வர்ணங்களுட னிருக்கவேண்டும். கொடிக்குச் சமீபத்திலுள்ள பத்ரத்தை மூன்று ஸ்தானமுள்ளதென்றும், சிவப்பு வர்ணமுள்ளதென்றும் அறியவேண்டும். அறுபது ஸ்தானங்களுடன் கூடியது இம்முத்திரை. அவைகளில் கிழக்கு, தெற்கு வரிசைகளை நீக்கி, ஓரங்களிலுள்ள ஸ்தானங்களையும் நான்கு, பிறகு நான்கு அதன்பின் நான்கு ஆறு, இந்த ஸ்தானங்களையும் இரண்டு வரிசைகளையும் எழாவது வரிசைக்குக் கீழுள்ள ஸ்தானத்தையும் மையினால் பூரணம் செய்தல் வேண்டும். அந்த இடங்களில் பாதியில் ராம என்ற பத்ரத்தையும் எழுதவேண்டும்.

முதலாவது மூன்று முத்திரைகளும் அவற்றிற்கு எல்லைகளாக மண்டலங்களு மிருக்கவேண்டும். சிவப்பு வர்ணமுள்ள பத்ராம் இரண்டும் அவற்றிற்குமேல் மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு ஸ்தானங்களும், வீதிபோல் கொடியுமிருக்க வேண்டும். இரண்டாவது வரிசையில் ஒரு முத்திரை, இரண்டு மண்டலங்கள் இரண்டு சுவர்கள், ஒன்பது ஸ்தானங்கள் இவைகளுடன் கூடின பத்ரம், லிங்கம், கொடி, இவைகளையும், இவைகளுக்கு மத்தியில் ஆறு ஸ்தானங்களுடன் கூடின மஞ்சள் வர்ணமுள்ள பத்ரம் என்பதையும், லிங்கத்திற்கு மேல் நான்கு ஸ்தானங்களுள்ள சிவப்பு வர்ணமுள்ள பத்ரத்தையும் பச்சை வர்ணமுள்ள லிங்கம் ஸ்கந்தம் இரண்டு ஸ்தானங்களுள்ள வீதி மஞ்சள் வர்ணமுள்ள பத்ரம் ஒன்று, சிவப்பு வர்ணமுள்ளவைகள் இரண்டு ஆகிய மூன்று பத்ரங்கள் இவைகளையும் ஏற்படுத்த வேண்டும். பிறகு நான்கு பக்கத்திலும் பத்ரங்கள், இருபத்து நான்கு ஸ்தானங்களுடன் கூடின வாபி, மடிஸ்தானத்தில் உள் வீடு இவைகளை ஏற்படுத்த வேண்டும். பிறகு கொடி மூன்று ஸ்தானமுள்ள பத்மம் ஐந்து ஸ்தானங்களுடன் கூடின சங்கிலி இவைகளை ஏற்படுத்த வேண்டும். பிறகு மண்டலமமைத்து பத்மத்திற்கு மத்தியில் சிவப்பு வர்ணமாவது விசித்திர வர்ணமாவது கொடுக்க வேண்டும். கடைசியில் வெண்மை சிவப்பு மஞ்சள் கறுப்பு இந்த வர்ணங்களுள்ள மண்டலங்கள் ஏற்படுத்த வேண்டும். இந்தப் பதினாறு முத்திரைகளுடன் கூடிய இராமலிங்கமென்னும் பெயருள்ள பத்ரத்தை உடையவரும் ஸதானந்த சொரூபரும் சித்சொரூபரும் துர்கமற்றவரும், எங்கும் பிரகாசிக்கிறவரும், நித்யருமாகிய ஸ்ரீராமரை உபாசிக்கிறோம்.

இராமலிங்கத்துடன் கூடின மானி இராஜாவாக ஏற்படுகிறான். எல்லோரையும் ஸந்தோஷப் படுத்தி வைப்பதால் இராமரென்றும், யோகிகளால் அடையத்தக்கவரென்றும் பரஞ்சோதி என்றும் சொல்லப் படுகிறார். எந்தப் பரம்பொருளிடத்தில் பூதங்கள் லயத்தை அடைகின்றனவோ எவரிடமிருந்து பூதங்கள் உண்டாகின்றனவோ அந்த சொரூபத்தைப் பிரம்ம ஞானிகள் பரா

காசமென்று கூறுகிறார்கள். மங்கள சொரூபியான பகவான் இராமர் என்றும் லிங்கமென்றும் இரண்டு பெயரை உடையவரா கிறார். மஹாத்மாவாகிய ஸ்ரீராமருக்கு அநேகம் பெயர்களுண்டு. பூமியிலுள்ள தூளிகளை ஒருவன் எண்ணினாலும் எண்ணுவான். ஸர்வேசுவரனாகிய ஸ்ரீ ராமருடைய பெயர்களை எண்ணமாட்டான். அவர் விஷயத்தில் ஸர்வதோபத்ரம் என்பது இருதயஸ்தானமா கக் கூறப்பட்டிருக்கிறது. அந்த ஸர்வதோ பத்ரத்தில் எட்டு இதழோடு கூடினதும் தூளிகள் உள்ளதும் மொட்டுடன் கூடியது மான பத்மம் இருப்பதால், அந்தஸ்தானம் ஸ்ரீராமரைத் தியானம் செய்யத்தக்கதாகிறது. அப்படிக் கில்லாவிடில், எங்கும் நிறைந்த பரமாத்மாவுக்கு தேசம், காலம் முதலிய அவஸ்தைகள் ஏது? சித் சொரூபராகிய இந்தப் பரமாத்மா தன் மாயைக்கு ஸ்வாதீனமாக விருக்கும் தன்மையை அடைந்து தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம். இவைகளுக்காகச் சிருஷ்டியை விரும்பினர். அந்தச் சைதன்னியமாகிற சந்திரனுக்கு, பதினாறு கலைகளாகிய இவைகள் சிதம்சத்துடன் கலந்து கடம் முதலியவைகளை அடைந்து, ஸ்வ பாவகுணத்தினால் பிரகாசிக்கின்றன. கிரகிக்கிறதும் விடுகிறது மானபுத்தி என்பது சத்துவகுணமுள்ளது. மங்கள சொரூபராகிய பரமாத்மாவுக்குச் சமீபமாயுள்ளது. ஆகையினால் அந்தப் புத்தி ஞானத்தை முக்கியமாக உடையது. அந்த ஞானம் கண் முதலிய வைகளில் பரவி ரூபம் சப்தம் முதலியவைகளை விசேஷமாக அறி கிறது. அந்தப் புத்தியானது விருத்தியின் பேதத்தினால் நான்கு விதமாக ஆகின்றது. அந்த விஷயத்தினால் பிரயோஜனம் ஒன்று மில்லை. ஆகையால் விஸ்தரிக்கவில்லை.

பிராணன் கிரியைகளை முக்கியமாக உடையது. தன் விருத் தியினால் பிராணன், அபானன், வியானன்: ஸமானன்: உதானன், என ஐந்து விதமாகிறது. வாக்கு முதலிய கர்மேந்திரயங்களில் உள்ள கிரியை பிராணனை ஆசிரயித்திருக்கிறது. காது, கண், மூக்கு, தோல், நாக்கு இந்த ஐந்து இந்திரியங்களும் ஞான த்தை ஆசிரயத் திருக்கின்றன. வாக்கு பாணி, பாதம், பாயு, உபத்தம் இந்த ஐந்தும் கர்மேந்திரியங்கள். இவ்விதம் கலைகள்

பதினாறு என்று பெரியோர்கள் கூறுகிறார்கள். அந்தப்பதினாறு கலைகளில் சைதன்யமென்று பிரசித்தி உள்ள இராம நாமம் பிரவேசித்து எப்போதும் பிரகாசிக்கின்றது. அதனால் உலகமெல்லாம் அசைகின்றது.

கருமமாகிய வேர் பழம் இவைகளுள்ள அநாதியான ஸம்ஸாரமே விருக்ஷம். தேகத்தில் அபிமானம் உள்ள ஜீவர்கள் பழங்களைப் புசிக்கிற பக்ஷிகள் இவர்கள் ஈசுவரனால் கொடுக்கப்பட்ட சுக துக்கங்களை அநுபவிக்கிறார்கள். ஒருவன் அநேக ஜன்மங்களுக்குள் எந்தஜன்மத்தில் ஞானமடைகிறானோ அப்பொழுது இராம சொரூபத்தைத் தன்னிடத்தில் இருப்பதாக அறிந்து மோக்ஷத்தை அடைகிறான். இந்திரியங்களை உயர்ந்தவைகளென்றும் அவைகளைக் காட்டிலும் புத்தி உயர்ந்ததென்றும் அதைக்காட்டிலும் பரமாத்மா உயர்ந்தவரென்றும் ஸர்வஸாக்ஷி என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இரண்டுபக்ஷிகள் ஒருவிருக்ஷத்தை ஆசிரயித்திருக்கின்றன. அவ்விரண்டு பக்ஷிகளுக்குள் ஒருபக்ஷி ருசியான பழத்தைப் புசிக்கிறது. மற்றொருபக்ஷி பார்த்துக்கொண் டிருக்கிறது. மூன்று ஸ்தானங்களுக்குள் எது புசிக்கத்தகுந்ததோ எவன் புசிக்கிறவனோ எவன் புசிக்க யோக்யனோ இவர்களைக் காட்டிலும் விலக்ஷணனாகவும் ஸாக்ஷியாகவும் இருப்பவன் ஆத்மாவென்று அதர்வணவேதம் கூறுகிறது. இங்கு எது இருக்கிறதோ எது பிரகாசிக்கிறதோ எது ஆனந்தத்தை அடைகிறதோ அந்த தேஜோரூபத்தில் சகல ரூபங்களும் சேர்ந்திருக்கின்றன. விஷயம் முதல் புத்திவரையில் உள்ள ஆத்ம சொரூபமற்ற ஜடமாகிய சகலமும் எவருக்குப் பிரியமாகிறதோ அவர் மஹாத்மாவென்றும் மஹானென்றும் பிரியரென்றும் ஏற்படுகிறார். அவர் ஆத்ம சொரூபி. எல்லோருக்கும் வேண்டியவர். அவர் எங்கும் ஒருவராக விளங்குகிறார். எவன் குருவினால் கொடுக்கப்பட்ட (சோஹம்) என்ற உபதேசத்தினால் உபாஸனை செய்து சித்சொரூபியான இராமரை மனதிற்கண்டு ஞானத்தை அடைகிறானோ அவனுக்குச் சம்ஸாரத்தில் ஒரு செய்கையுமில்லை. சாஸ்திரங்களில் கூறியுள்ள எல்லா உபாயங்களும் எதைத் தெரிந்துகொள்ள ஏற்பட் டிருக்கின்

றனவோ, அது குருவின் உபதேசத்தினல் மனதில் உண்டானல் அதன்பிறகு வேண்டுவது என்ன? இவ்விதம் அமைக்கப்பட்ட இந்தப் பத்ரத்தைப்பார்த்து விசாரித்து விஷயம் தெரிந்துகொண்டால், அப்பொழுது வித்வான்களாகிய ஸாதுக்களுக்கு மிகுதியான பிரீதி உண்டாகும். சாந்த ரூபரும் லிங்கரூபங்கொண்டவரும் சுகத்தை உண்டு பண்ணுகிறவரும் விஷ்ணு சொரூபரும் சிவசொரூபருமான ஸ்ரீராமருக்கு நமஸ்காரம்.

அல்லது முதலாவது ஸ்தலத்தில் ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின பத்ரத்தை ஏற்படுத்தி குறுக்காக ஒரு பத்ரத்தையும் ஏற்படுத்தவேண்டும்- ஆறு ஸ்தானங்களுடன் கூடியதாக இருக்க வேண்டும். ஒருபத்ரம் சிவப்பாகவும் மற்றொன்று மஞ்சள் வர்ணமுள்ளதாகவும் இரண்டாவது ஸ்தலத்தில் உள்ளதாகவும் பத்ரம் சிவப்பு வர்ணமுள்ள இருபது ஸ்தானங்களுடன் கூடினதாகவும் இருக்கவேண்டும். குறுக்காக விருக்கும் பத்ரம் ஒன்பது ஸ்தானங்களுடன் மஞ்சள் வர்ணமுள்ளதாகவும் சங்கிலிகள் சித்திரவர்ணமுள்ளதாகவும் சங்கிலிகள் இரண்டு ஸ்தானங்களுடன் கூடினவைகளாகவும் அமைக்கவேண்டும். பாக்கியுள்ளவைகளை முன்போல் அமைத்துக்கொள்ளவும். இது ராமதோபத்ரம் என்பது; ஸ்ரீராமருக்கு ஸந்தோஷத்தை உண்டாக்கக் கூடியது.

ஆனந்த கனரும் மாயையை அதிக்கிரமித்தவரும் விகாரங்களற்றவரும் பற்றுத லில்லாதவரும் வித்தைக்குப் பிரபுவும் ஆறு குணங்களுக்கும் ஆசிரயமா யிருப்பவரும் பிரபுவுமான ஸ்ரீராமரை நமஸ்காரஞ்செய்து இராமர் என்ற பெயருள்ள பத்ரத்தைக் கூறுகிறேன்.

வடகிழக்கில் இருநூற்றுத் தொண்ணூற் றொன்பது ரேகைகளைச் சமமாக ஏற்படுத்தி, அந்தஸ்தானங்களில் மூலைகளுக்கு மத்தியில் மேற்பக்கத்திலும் மஞ்சள் வர்ணமுள்ள இருபத்தொரு மண்டலங்கள் ஏற்படுத்த வேண்டும். மூலைகளில் பத்மத்தை வெண்மை வர்ணமுள்ளதும் சங்கிலிகள் கறுப்புவர்ண முள்ளதும் கொடிகள் வெளுப்புவர்ண முள்ளதுமாக இருக்கவேண்டும். அனேகவித அமைப்புகளையுடைய சிவப்பு வர்ணமுள்ள பத்ரங்கள் வெண்மை

வர்ணமுள்ள முத்திரைகளுடனும் சிவப்பு வர்ணமுள்ள மண்டலங்களுடனு மிருக்கவேண்டும். இவ்விதம் பூர்த்திசெய்தால் முனிவர்களுக்கு மிகுதியான பிரீதியை உண்டுபண்ணும்.

முத்திரை அறுபது ஸ்தானங்களுள்ளதாக இருக்கவேண்டும். அங்கு தெற்கு, கிழக்கு, இந்த வரிசைகளில் நீங்கிய மற்ற வரிசைகளில் தனித்தனியாக மூலைகளிலுள்ள நான்கு ஸ்தானங்களையும் ஆறு நான்கு இந்த ஸ்தானங்களையும் கறுப்பு வர்ணமுள்ளதாகச் செய்ய வேண்டும். ஏழாவது வரிசை வரையில் ஒரு ஸ்தானத்தை ஏற்படுத்தினால், அழகுள்ள ராம என்ற ஸாரமான இரண்டு அக்ஷரங்கள் விளங்கும். அது பரமசிவன் ஜபம்செய்யக்கூடியது. பிராணனை விடுங்காலத்தில் ஜபம் செய்கிறவர்களுக்கு மஹாலோகத்தைக் கொடுக்கக்கூடியது. இந்த ராமா என்ற இரண்டு அக்ஷரங்களையும் ஒன்றாவது வரிசை முதல் இருபதாவது வரிசை வரையில் நன்றாக அமைக்கவேண்டும்.

இராம முத்திரைகள் எல்லாவற்றிலும் மத்தியில் இரண்டு மண்டலங்களும் முதலாவது இருபத்தைந்து முத்திரைகளும் இருபத்து மூன்று முத்திரைகளும், பிறகு இருபத்திரண்டும், அதன்பின் இருபத்தொன்றும், பிறகு, இருபது, பதினேழு, பதினாறு, பதினான்கு, பதின்மூன்று, பன்னிரண்டு, ஒன்பது, எட்டு, ஏழு, ஆறு, நான்கு, மூன்று இரண்டு, ஒன்றுமாக முத்திரைகளை ஏற்படுத்தவேண்டும்.

பத்ரங்கள் பதினாறு ஸ்தானங்களுடனிருக்கலாம். இருபது, முப்பது, முப்பத்தாறு, பதினாறு, இருபத்தைந்து, முப்பது, நாற்பத்திரண்டு, இருபது, இருபத்தைந்து, முப்பத்தாறு, நாற்பத்திரண்டு, இருபது, முப்பது, முப்பத்தாறு, பதினாறு, முப்பது, நாற்பத்திரண்டு, இருபது இந்த ஸ்தானங்களுடனும் கூடின பத்ரங்களை நான்கு பக்கங்களிலும் அமைக்கவேண்டும். இருபத்தோராவது ஸ்தானத்தினால் வாபியையும் மண்டலத்திற்குக் கடைசியில்சிவந்த தாமரைப்பூவையும் பத்ரங்களுக்குமேலுள்ள ஸ்தானங்களைப் பெரிதாகவும் அமைத்துக் குறுக்காக உள்ள பத்ரங்களுக்கும் சங்கிலிகளுக்கும் தன் புத்திக்குத் தக்கபடி ஸ்தானங்களைப் பூர்த்தி

செய்துக்கொள்ள வேண்டும். எல்லா ஸ்தானங்களிலும் சங்கிலி களும் ஐந்து ஸ்தானங்களுடன் கூடின பதினேரு கொடிகளும் மூன்று ஸ்தானங்களுடன் கூடின சந்திரன் வெளிப்பக்கத்தில் வரிசையாக மண்டலங்கள் அந்த மண்டலங்கள் கிரமமாக கறுப்பு சிவப்பு வெளுப்பு மஞ்சள் இந்த வர்ணங்களுடன் கூடியவைக ளாகவும் நான்கு திசைகளிலும் இருக்கவேண்டும். இது ஆயிரத் தெட்டு நாமங்களுக்குரிய பத்ரம். அன்றியும் பதினன்கு ரேகை களை விருத்திசெய்து அங்கு மண்டலம் கற்பித்து, நூற்று இருபத் தொரு லிங்கங்களையும் ஏற்படுத்தி வாபிகள் பத்ரங்கள் சந்திரன் இவைகள் முதலியவைகளை நான்கு பக்கங்களிலும் இருபத்து நான்கு ஸ்தானங்களுடன் கூடின லிங்கத்தையும் பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின வாபியையும் ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்களையும் பதினறு ஸ்தானங்களுடன் கூடின ஆறு பத்ரங்களையும் முப்பது லிங்கங்களையும் இருபத்தேழு வாபி களையும் அமைக்கவேண்டும். இருபக்கத்திலும் பதினறு ஸ்தானங் களுடன் கூடின லிங்கங்களை அதிகமாகக்கொண்ட இரண்டு பத் ரங்களை அமைக்கவேண்டும். பாக்கியுள்ள ஸ்தானங்களில் மடிப்பிர தேசமுள்ள ஸ்தானத்தையும் கிருகங்களையும் அமைக்கவேண்டும். லிங்கங்கள் கறுப்பு வர்ணமுள்ளவைகளாகவும் வாபிகள் வெளுப்பு வர்ணமுள்ளவைகளாகவும் இருக்கவேண்டும். பாக்கியுள்ளவைக ளில் முன் சொன்னதுபோல் எந்த எந்த இடங்களில் பத்ரங்கள் சங்கிலிகள் இவைகள் ஏற்படுத்தவேண்டுமோ அந்த அந்த விடங்க ளில் பத்ரங்களையும் சங்கிலிகளையும் போடவேண்டும்.

கடைசியில் கறுப்பு, சிவப்பு, வெண்மை, மஞ்சள், இந்தவர்ணங் களுள்ள மண்டலங்கள் போடவேண்டும். இவ்விதம் இராம ருடைய லிங்கத்துடன் கூடின பத்ரத்தைக் கூறினேன். இதனல் இராமரும் சிவனும் பிரீதியை அடைகிருர்கள். இராமரைப் பூஜிப் பதற்கு இந்தப் பத்ரத்தை ஆஸனமாகச் சொன்னேன்.

ஆசாரியர்கள், ஞானத்தினல் உயர்ந்த பெரியோர்கள் இவர் களை நமஸ்காரஞ்செய்து அவர்கள் அநுக்கிரகத்தினல் சிவனுடன் கூடின இராமருடைய பத்ரத்தின் கிருதியையும் இராமருடைய

பத்ரத்தின் பிரகிருதியையும் லிங்கத்துடன் கூடின விகிருதியையும் சொல்லுகிறேன்.

அகலத்திலும் நீலத்திலும் நூற்றுமூன்று ரேகைகளும் அந்த ஸ்தானங்களில் ஆறு மண்டலங்களும் அவ்வாறு மண்டலங்களுக்குக் கடைசியில் மஞ்சள் வர்ணமுள்ள ஆறுமண்டலங்களும் மூலைகளில் மூன்று ஸ்தானத்துடன் கூடின வெளுப்புவர்ணமுள்ள சந்திரனும் கறுப்புவர்ணமுள்ள சங்கிலியும் ஐந்துஸ்தானங்களுடன் கூடின பதினொரு கொடிகளும் நான்கு பன்னிரண்டு, பதினாறு, ஆறு இவ் விடங்களில் வீடுகளும் ஏற்படுத்த வேண்டும். எட்டு வீடுகளிலும் முன்போல் இராமமுத்திரையைக் கற்பிக்கவேண்டும். எட்டு ஆறு ஐந்து நான்கு மூன்று ஒன்று இந்த இடங்களில் மரியாதை என்று பெயருள்ள சிவப்பு வர்ணமுள்ள மண்டலங்கள் ஒன்று அதிகமாகப்போடவேண்டும். ஒன்று இரண்டுநான்கு இந்த இடங்களில் மரியாதை என்ற பெயருள்ள ஆறு மண்டலங்களைப் போடவேண்டும். கடைசியான மண்டலத்திற்குச் சமீபத்தில் ஸர்வதோ பத்ரத்தை எழுதவேண்டும். இதற்குப் பிறகு இருபத்து நான்கு ஸ்தானங்களுடன் கூடின வாபி, ஒன்பது ஸ்தானங்களுடன்கூடின பத்ரம், மண்டலத்திற்கு மத்தியில் சிவப்புவர்ணமுள்ள பத்மம், மஞ்சள்வர்ணமுள்ள மொட்டு, கடைசியில் மஞ்சள் வெளுப்பு சிவப்பு கருப்பு இந்த வர்ணமுள்ள மண்டலங்கள் இவைகளையும் பத்ரங்களுக்குமேல் பாக்கியுள்ள ஸ்தானங்களையும் புத்தியால் பூர்த்திசெய்துகொள்ள வேண்டும். குறுக்காக இருக்கும் பத்ரம் சங்கிலி இவைகள் மஞ்சள் கலந்த சித்திரவர்ண முள்ளவைகளாயிருக்கவேண்டும்.

இது இராமருடைய நூற்றெட்டு நாமங்களுக்குரிய பத்ரம் ஒன்றும் பிறப்பற்றதும் ஸகல உலகங்களுக்கு ஸ்தானமும் ஸத் சித் ஆனந்தம் இவைகளோடு கூடியதும் பிரபஞ்ச சொரூபமும் மாயையின் சேர்க்கையில் பிரம்மா விஷ்ணு சிவன் என்று பெயரமைந்ததும் பலமற்றதும் சிருஷ்டி பரிபாலனம் நாசம் இவைகளுக்குக் காரணமும் வேதமறிந்தவர்களால் ஸ்தோத்திரம் செய்யப்படுவதும் ஸகல பூதங்களும் ஆத்மாவும் எல்லாம் அறிந்ததும்

ஸகல சக்தியுள்ளதும் சங்கடங்களைப் போக்கக் கூடியதும் அமிருதசொரூப முள்ளதுமான தேஜஸை நான் தியானம் செய்கிறேன்.

தேவபதத்தைக் கொடுக்க வல்லமையுள்ள குருவினுடைய பாதகமலத்தை நான் நமஸ்கரித்து ஸாதுக்கள் மனசுக்கு சமத்காரத்தை உண்டுபண்ணும் அத்பாத்ம விஷயமான வாலாற்றைக் கூறுகிறேன் கேள்.

பசுக்களின் நகங்கள் ரோமங்கள் முதலியவைகளெல்லாம் பிரயோஜனப்படக் கூடியவைகளே. உயிரை இழந்த மனித சரீரத்தை வேறு விதமாக உபயோகப்படுத்துவது தோஷத்திற்குக் காரணமாக ஆகிறது. இந்த மனிதனால் ஆத்மசொரூபத்தை அடையும் ஞானம் ஒன்றுதான் சாதிக்கத்தக்கது. அந்த ஞானமில்லாவிடில், பசுக்களைக்காட்டிலும் குறைவுள்ளவனாக ஆகிறான். கோடி மனிதர்களுக்குள் ஒருவன் புதிதுபுதிதாகத் தோன்றும் அறிவை அடைந்தவனாகவும் பரிசுத்தனாகவும் குருவிடத்திலும் விஷ்ணுவினிடத்திலும் சிரத்தை உள்ளவனாகவும் ஏற்படுகிறான். அவன் முடிவில் நாராயணனாகவே ஆய்விடுகிறான்.

ஒருவன் இராமதோ பத்ரத்தையும் அறுபது ஸ்தானங்களுடன் கூடிய இராம முத்திரையையும் கவனத்துடன் விசாரிப்பானாகில், இந்தப் பிர்ம்மாண்டத்திலிருக்கும் ஏழு உலகங்களையும் காண்பான்.

பிரம்மாண்டம் இராமதோ பத்ரமென்றும் இராமமுத்திரை பூதங்களென்றும் இராமர் என்னும் சைதன்னியத்துடன் கூடியதென்றும் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

எவ்விடத்தில் வஸ்துவானது அமைக்கப்படுகிறதோ அதை முத்திரை என்று கூறுகிறது. அர்த்தத்தினால் முத்திரையை உடையது சின்னத்தை உடையதென்றும் மறைக்கப்பட்டதென்றும் சொல்லப்படும். அத்தன்மைபோல் ஸகல முத்திரைகளும் பிர்ம்ம சொரூப முடையவைகள். அவ்விதம் இந்த முத்திரைக்குள்ளும் புறமும் சைதன்யம் விளங்குகின்றது. ஸ்படிக

மயமான கலசத்தில் வைத்திருக்கும் தீபம் மூடப்பட்டிருந்தா லும் உள்ளும் புறமும் பிரகாசிப்பது போல் விளங்குகின்றது. பொன் முதலியவைகளை உருக்கும் குகைக்குள்ளிருக்கும் தாம்பிரம் எவ்விதம் மாறுதலை அடைந்து குகைபோலவே ஆகின்றதோ அவ்விதம் விகாரமில்லாத பிர்ம்மம் முத்திரைக்குள் அமைக்கப் பட்டால், முத்திரை போலவே பிரகாசிக்கிறது. ஈசுவரன் முதலில் ஜீவன்களை உண்டுபண்ணி அந்த ஜீவன்களிடம் தாம் பிரவேசிக்கிறார். இவ்விதம் கண்வசாகையிலும் மற்ற இடங்களிலும் பிரசித்தமாகச் சொல்லியிருக்கின்றது. ஈசுவரன் ஏகன் என்றும் அவர் ஸ்வாதீனத்தில் எல்லாம் உள்ளனவென்றும் ஸகல பூதங்களினுள் இருப்பவர் என்றும் வேதங்கள் கூறுகின்றன. ஈசுவரன் ஜீவன்களைச் சிருஷ்டித்து ஸந்தோஷத்தை அடையாமல் மானிடர்களுக்குரிய இந்த இராமமூர்த்தியைச் சிருஷ்டி செய்து ஸந்தோஷத்தை அடைந்தார். தேவதைகள் இந்த முத்திரையைப் பார்த்துப் புண்யமென்று கூறினார்கள் என்று நிச்சயமாகத் தெரியவருகின்றது. ஸர்வ பூதங்களைச் சிருஷ்டிப்பதற்கு முன் ஸந்தோஷங் கொள்ளாத பரமபுருஷன், பரப்பிர்ம்மசொரூபத்தை அறிந்து கொள்வதில் தீக்ஷண்யமாகிய புத்தியுள்ள மானிடனைப் பார்த்து, ஸந்தோஷமடைந்தார் என்று ஏ விஷ்ணுதாஸ, நாங்கள் கேள்விப்படுகின்றோம்.

தேவருக்கு (முத்) என்பது ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதாலும் துக்கத்தையும் பாபங்களையும் உருகும்படி செய்வதாலும் முத்திரை என்பது மந்திர சாஸ்திரத்தில் பிரஸித்தமாக இருக்கின்றது. ஆகையினால் எல்லாத் தேகங்களிலும் ஸத்சொரூபம் இருக்கின்றன. இந்த முத்திரை உள்ளவன் சொர்க்கத்திற்கும் மோக்ஷத்திற்கும் அதிகாரியாவான். உலகத்தில் பிரஸித்தியுள்ள ஒரு மானிடன் இராஜமுத்திரையினால் அடையாளஞ்செய்து கொண்டானாகில் அந்த மானிடனை அதிகாரி என்றெண்ணுகிறார்கள்; வெகு ஆதாவுடன் பூஜிக்கிறார்கள். அவ்விதம் இந்த இராமமுத்திரையில் அடையாளங் கொண்டவன் சாஸ்திரங்களை அப்பியாஸஞ் செய்ய அதிகாரியாகிறான். மற்ற ஜன்மங்கள்

ஆத்ம சொரூபத்தின் ஸ்தானத்தை அறிந்துகொள்ளச் சக்தியில்லாதவைகள்.

மானிட சரீரத்தில் அறுபது ஸ்தானங்க ளிருக்கின்றன. அவைகளைச் சுருக்கமாகவும் நன்றாகவும் கூறுகிறேன் கேள்.

காரண சரீரத்தில் அவித்தை, காமம், கர்மம், போக்தா, போகம், சுஷுப்தி இவ்வாறு ஸ்தானங்க ளிருக்கின்றன.

ஏ விஷ்ணுதாஸ! தமஸ், அஞ்ஞானம், அவித்தை இந்தச் சப்தங்கள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன. ஆகையினால் இந்த ஆறு ஸ்தானங்களில் குணங்களைக் கிரகிக்கும் தன்மையில்லை. லிங்க சக்ரத்தில் அவித்தை, காமம், தமம் இவைகள் மூன்றும் உண்டு. ஆனாலும், மூன்று எதுக்கள் இருக்கின்றன. காரியமில்லாமற்போனாலும் காரணத்தில் காரணரூபத்துட னிருக்கின்றது. காமியமான கர்மத்திற்கும் ஸூக்ஷ்மரூபமிருக்கின்றது. காரண சரீரத்தில் அவித்தை முக்கியமாக இருக்கின்றது. உண்மையில் காமமில்லை என்பது வேதத்தின் தீர்மானம். ஸூக்ஷ்ம சரீரத்தில் முப்பத்தெட்டு ஸ்தானங்கள் இருக்கின்றன. பத்து இந்திரியங்கள் ஐந்து பிராணன்கள் புத்தி மனசு இந்தப் பதினேழும் லிங்க சரீரத்தைச் சேர்ந்தவைகள். இது சாஸ்திர சம்மதம். விஷயங்களைக் கிரகிக்கும் குணங்கள் ஐந்து, கர்மங்களின் செய்கைகள் ஐந்து, பிராணகாரியங்கள் ஐந்து, சங்கற்பம், நிச்சயம் இவ்விதம் பதினேழு தருமங்கள் சாஸ்திரத்தில் பிரசித்தி யுள்ளவைகளாக விருக்கின்றன. சொப்பனத்திற்கு அபிமானிகளாகிய போகங்கள் ரஜஸ்ஸு ஸ்தூலதேகத்தில் பதினாறு ஸ்தானங்கள் அபானம் வியானம் இவைகளுடைய ஸ்தானத்தில் பாயு, தோல், வாக்கு, மார்பு, பிராணன், மனசு, புத்தி இந்த ஸ்தானங்களிலும் போக்தா, போகம், ஜாக்ரதை இந்த அவஸ்தைகள் இந்த குணங்கள் உண்டென்று புத்திமான்கள் கூறுகிறார்கள். வேதம், சித்து, இந்த சொரூபங்கள் அடங்கின இந்த முத்திரை இவைகளைத் தெரிந்துகொண்டவனுடைய ஜன்மம் கடைத்தேறும். இல்லாவிடில் பெரிய தவறுதல் ஏற்படும்.

எந்த இராமருடைய பெயரால் இந்த முத்திரை அமைக்கப் பட்டதோ அந்த இராமருடைய மகிமையைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். யோகிகள் களங்கமற்ற பரானந்த சொரூபத்தில் ரமிக்கிறார்கள் என்றும் உலகங்களை ரமிக்கும்படி செய்கிறதனால் இராமரென்றும் கூறுகிறார்கள்.

ஜீவன்கள் இந்த ரஸத்தினால் ஜீவிக்கிறார்கள். ரஸசொரூபராகிய இந்தப் பரம்பொருளை அடைந்து, எல்லோரும் ஆனந்தத்தை அடைகிறார்கள். உலகங்களில் பிரவேசம் செய்த பரம புருஷனால் உலகம் யாவும் அசைகிறது. அந்தப் பரம புருஷனை அசையச்செய்ய சக்தியுள்ளவன் யாருமில்லை. அந்தப் பரமபுருஷன் இராமரென்று சொல்லப் படுகிறார். எல்லா உலகங்களும் எவரால் நிலைநிற்கின்றனவோ அவர் ஸத் எனப்படுவர். அசத்தாக இருக்கும் வஸ்துவுக்கு ஸத் என்ற தன்மையைக் கொடுப்பவர் இராமர் என்று சொல்லப்படுகிறார். பரப்பிர்ம்ம சொரூபத்தைக் கூறுவது இராமநாமமென எப்படிப் பிரஸித்தியாயிருக்கிறதோ அவ்விதமே லிங்கத்தின் பெயரும் பரமாத்மாவுக்கு ரூபமாகிறது. பரமாத்மாவிடம் பூதங்கள் லயத்தை அடைகின்றன; அவரிடம் உண்டாகின்றன. ஆகையினால் அவரை லிங்கமென்றும் பரமாகாசமென்றும், நிஷ்களரென்றும், பரமசிவரென்றும், தத்துவத்தை அறிந்தவர்களும், சாஸ்திரங்களைக் கற்றவர்களுமான பெரியோர்கள் கூறுகிறார்கள். அந்தர்யாமியாகிய ஈசுவரனுடைய நாமங்கள் ரூபங்கள் சப்தத்தாலும் ரூபத்தாலும் வேறுபோல் காணப்படுகின்றன. உண்மையில் பேதமில்லை. அவர்தான் பிர்ம்மா, சிவன், விஷ்ணு, இந்திரன், அக்ஷரம், பரமன், ஸ்வராட் என்று வேதம் சொல்லுகிறது. ஸகல வஸ்துக்களிலும் ஈசுவரனுடைய ஸச்சிதானந்தங்கள் வியாபித்திருக்கின்றன. எல்லா வேதங்களின் ஆதியிலும் மத்தியிலும் முடிவிலும் குருவின் உபதேசப்படி இராமப் பிர்ம்மத்தைக் கூறவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஐதரேயமென்னும் உபநிஷத்தில், "ஆதியில் ஆத்மா ஒன்றாகவே இருந்தது; அவர் தன்னிச்சையால் உலகங்களையும் உலகத்

தைப் பாலனம் செய்பவர்களையும் சிருஷ்டிசெய்து, தேவர்களுக்குரிய ஆகாரத்தையும் இருப்பிடத்தையும் ஸிருஷ்டிசெய்து, பிறகு அவைகளில்தான் பிரவேசித்து, தானே இந்திரனாகவிளங்குகிறது" என்றும் கூறுகிறது. அன்றியும், "ஆத்மாயார்" என்ற கேள்வியில் எதனால் பார்க்கிறானோ எதனால் ஆக்ராணம் செய்கின்றானோ என்பது முதலியவைகளாலும் இருதயம் முதலியவைகளாலும் ஆத்மாவென்பதை நிச்சயஞ் செய்யப்பட்டிருக்கிறது. பிரக்ஞானரூபமாகிய இதன் நாமங்களைச்சொல்லி, அந்தப் பிரக்ஞானம் எங்கு மிருப்பது என்பதை இவர்தான் பிரம்மம் என்ற சப்தங்களால் ஸகல ஜகத்துக்கும் காட்டப்பட்டிருக்கிறது. பிரக்ஞானம் என்பது கண்; பிரக்ஞானத்தில் ஸகலமும் அமைக்கப்பட்டிருக்கின்றன வென்ற விஷயங்கள் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தப் பிரக்ஞானம் என்பது இராம ஸச்சிதானந்தகனம். இதிற் சந்தேகமில்லை. தைத்திரீயக சாகையில் பிர்மத்திற்கு இலக்ஷணம், ஸத்தியம் ஞானம் அனந்தம் என்றுசொல்லி, வேதம் முதலியவைகளின் இலக்ஷணத்தையும் சொல்லி, எவன் இவைகளை அறிகிறானோ அவன் ஒரே சமயத்தில் ஸகல கர்மங்களையும் அடைகிறான் என்று கூறியிருக்கிறது.

ஞானத்திற்குப் பலத்தைச்சொல்லி ஞானமே பிரம்மசொரூபமென்று கூறி பூதங்களின் உற்பத்தியையும் பஞ்சகோசங்களை அறிவிக்கும் வழியையும், அதன் பலத்தையும் அவைகள் ஆத்மா இல்லாமலிருக்க முடியாதென்ற தன்மையையும் காட்டி (புச்சம் பிர்ம்மம்) என்று நிச்சயித்து, தோற்றத்தால், அது அஸத்ஸத் என்றும் அஸத் ஸத்தாக ஆகிறதென்றும் சொல்லி, பிறகு தான் பல உருவத்தை அடையவேண்டுமென்று ஆசைகொண்டு இவ்வுலகத்தைச் சிருஷ்டித்துப் பஞ்சபூதங்களாக ஆயிற்றென்றும் கூறியிருக்கிறது. ஈசுவராம்சம் இருக்கும்போது பிராணன் அபானன் இவைகளின் சேஷ்டை உண்டாகிறது. அவரே ஆத்மா; ரஸரூபர் என்றபெயருடன் எல்லோரையும் ஸந்தோஷப்படுத்துகிறார். அந்தப் பிர்ம்மமே காற்றுமுதலியவை சஞ்சரிப்பதற்குக் காரணம். மானிடர் முதல் பிர்மதேவர் வரையில் தேவர்கள் ஒவ்வொரு வகைக்கு நூறுமடங்கு ஆனந்தம் அதிகமாக உடையவர்கள். அந்த

ஆனந்தங்கள் பரப்பிர்ம்மத்தின் ஆனந்தத்தின் பிந்துக்கள் என்று நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. தேசங்களில் இருப்பவனும் சூரியனிடத்திலிருப்பவனும் ஒருவன் என்று எண்ணங் கொண்டவனை அவன் செய்த புண்ய பாபங்கள் துன்பப்படுத்தா என்பதுநன்றாக நிச்சயிக்கப்பட்ட டிருக்கின்றது. அந்தப் பரபிர்ம்மம் இராமரே யென்றுநிச்சயித்திருப்பதில் சந்தேகமில்லை. சாந்தோக்கிய உபநிஷத்தில் ஸ்வேதகேதுவுக்கு உபதேசம் செய்த விஷயங்களும் ஸ்ரீராமரைப்பற்றியவைகளே. வேறு வேதசாகையைக்கொண்டும் பிர்ம்ம வித்தையை மானிடஜன்மத்தை அடைந்தவன் அறியவேண்டும். இல்லாவிடில் பெரிய கெடுதியாகும் என்று சொல்லியிருக்கிறது. வேதம் பிர்ம்மத்தின் மகிமையைவிளக்கியிருக்கிறது. அந்த மகிமையைக் குருமுகமாக இராமரென்று தெரிந்துகொள்ளவேண்டும். முண்டகோபநிஷத்தில், பிர்ம்மவித்தை உயர்ந்ததென்றும், பிர்ம்மத்தை அறிவதற்கு வேதமேகாரணமென்றும், அநேக திருஷ்டாந்தக்களால் சிருஷ்டி பரிபாலனம் பிரளயம் இவைகளுண்டென்றும் சொல்லியிருக்கிறது. பிரபஞ்சம் யாவும் இராமசொரூபம். அவருடைய ஒளியால் ஸகலமும் பிரகாசிக்கின்றன. எவன் எல்லோருக்கும் விஷயமில்லாததும் தன் இருதய குகையில் இருப்பவருமாகிய ஈசுவரனைத் தியானம் செய்கிறானோ அவன் அவித்தையினின்றும், விடுபடுகிறான். பிர்ம்ம சொரூபத்தை அடையவேண்டுமானால் ஈசுவரனுடைய கிருபையினால் தான் அடையவேண்டும். எந்தச் சாதனத்தினால் பரமபிரபுவை அடைய விரும்புகிறானோ, அந்தச் சாதனத்தினாலேயே தான் ஈசுவரனை அடையவேண்டும்; வேறு சாதனங்களால் அடையமுடியாது. பலமற்றவர்களால் இந்தச் சொரூபத்தை அடையமுடியாது. எவர்கள் சாஸ்திரங்களை விசாரித்து ஸன்னியாஸிகளாகி அந்தக்கரணம் சுத்தமானபின் சொரூபத்தைப் பார்க்கிறார்களோ அவர்கள் வெகு காலஞ்சென்றபின் ஸம்ஸாரத்தினின்று விடுபடுகிறார்கள்; நதிகள் எவ்விதம் ஸமுத்திரத்தில் மறைகின்றனவோ அவ்விதம் எல்லோரும் பிர்ம்மசொரூபத்தில் அடங்குகிறார்கள், பிராரப்தகருமம் நீங்கியபின் மோக்ஷத்தை அடைகிறான். எவன் சிரேஷ்டமான பிர்ம்மத்தை அறிகிறானோ அவன் பிர்ம்மமாகவே ஆகிறான். உபனிஷத்தின் ஒரு பிரிவில்

பிர்ம்மம் பரிபூர்ணமான வஸ்து வென்றும் ஆதி நடு முடிவு இவை கள் அற்றதென்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

பரோக்ஷ ரூபத்தினால் பூர்ணமா யிருக்கும் பிர்ம்மம் தத் என்னும் பதத்தினால் அடையாளமுள்ளதாக ஆனதும், பிரத்தி யக்ஷரூபத்தினாலும் த்வம் என்னும் பதத்தினாலும் ஸகல பூதங்க ளில் இருப்பதும், பூர்ணம் என்று வேதம் நிருபணம் செய்வதற்கு முன்னமே பூர்ணமாக இருப்பதும் சாஸ்திரம் முதலியவைகளா லும் உபநிஷத்து வசனங்களினாலும் அகண்டமென்றும் ஏகால மென்றும் உபாதியற்றது என்றும், பூர்ணமென்றும் சேஷமாக இருக்கக் கூடியது என்றும் சொல்லப்படுவதாகிய பிர்ம்மந்தான் யோகிகளால் தியானம் செய்யத்தக்க நித்தியமாகிய இராம மென்று சொல்லப்படுகிறது. ஸகல தருமங்களையும் நிஷேதம் செய்து வேதத்தில் வர்ணிக்கப்பட்டதும் கீதையில் கிருஷ்ண பக வான் 'ஏ அர்ஜுனா, நான் ஸகல ஜகத்துக்கும் உற்பத்தி, நாசம் இவைகளுக்குக்காரணம்; என்னிடம் நூலில் மணிகள் கோக்கப் பட்டிருப்பதுபோல், ஸகல உலகங்களும் சேர்ந்திருக்கின்றன' என்று சொல்லப்பட்டதும், மற்ற சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் வர்ணிக்கப்பட்டதுமான பிர்ம்மசொரூபத்தை அறியும் பொருட்டு முக்கியமான ஏதுவேண்டும். எல்லாமானிடர்களும் வெளியில்சஞ் சாரம் செய்யும் இந்திரியங்களை உடையவர்கள். ஆகையாலேதான் பிர்ம்மசொரூபம் நன்றாகப் பிரகாசிப்பதில்லை. பிரபுவினால் சிருஷ்டி செய்யப்பட்ட, அந்த இந்திரியங்களைக் கொண்டு, மனதிலிருக்கும் ஆத்மாவைப் பார்ப்பதில்லை. மானிடர்களெல்லாம் பணம் ஸ்திரீகள் சரீரம் காமம் இவர்களுக்குத் தாஸர்களா யிருக்கிறார்கள். ஆகையி னால் சித்சொரூபம் பிரகாசிக்கவில்லை. ஆத்மசொரூபமும் ஆனந்த சொரூபமும் குணாதீதமும் ஸாக்ஷிசொரூபமுமாகி பிர்ம்மம் பிர காசித்தால், அவனுக்கு மற்ற எந்தவஸ்துவும் ருசிக்காது. பிருஹ தாரண்யகோபநிஷத்தில், தன்னிடத்தில் புருஷன் இருக்கிறான் என்று அறிந்தானே யாகில், அவன் யாருடைய இஷ்டத்திற்கும், எதையும் செய்யவிரும்பான். அவன் சரீரம் எதற்காகத் தாபத்தை அடையும் என்றும் சொல்லியிருக்கின்றது. ஸ்ரீகிருஷ்ணன் அர்ச்

சனனுக்கு 'எவன் ஆத்மாவிடம் மிகுதியான பிரீதியுள்ளவனும் தான் திருப்தியுள்ளவனும் தன்னிடம் சந்தோஷத்தை உடைய வனுமாக இருக்கிறானோ அவனுக்குச் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை' என்று கூறியிருக்கிறார். அநத்தில் விருப்பமுள்ள மானிடன் தனிமையான இன்பத்தை அடையமாட்டான். பெண் ணாசை மக்களாசை இவைகளில் விருப்பமுள்ளவனாகி எப்போ தும் பொருள் சம்பாதிக்க முயற்சிக்கிறான். மூடனாகிய மானிடன் புத்திரனில்லாதவனுக்குப் பரலோகமில்லை என்பதைக்கேட்டு புத் திரனை அடைவதற்காக முதலாவது வெகுபிரயாசத்துடன் விவா கத்தில் மனமுடையவனாகி ஸ்திரீயை அடைகிறான். தேவர்கள் புண்ணியதீர்த்தங்கள் இவைகளை ஸேவிப்பதனால் புத்திரர்களை அடைந்து, குடும்பத்தைக்காப்பாற்றுவதற்கும் யாகங்களைச்செய் வதற்கும் தனங்களில் விருப்பத்தினால் எப்போதும் மனதில் தகிக் கப்பட்டுத் தன்னிஷ்டப்படி பொருளை அடைவதில்லை.

நல்ல செய்கையுடையவனும், சாஸ்திரங்கள் கற்றவனும், பொருளுக்குத் தாசனாகிப் பணமுள்ளவர்கள் வீடுதோறும் சென்று அவமதிக்கப்பட்டு, நாய்போல் சஞ்சாரம் செய்கிறான். அநேக ஜன்மங்களில் செய்த புண்ணியங்களால் நல்ல வம்சத்தில் ஜன்மத்தை அடைந்திருந்தாலும் துஷ்டர்களின் சேர்க்கையுடை யவனாகில், ஆத்ம சொரூபத்தைப் பார்க்கமுடியாது. அப்படி யிருக்க புத்தியில்லாதவர்களுக்கு ஆத்ம சொரூபத்தைப் பார்க்கும் பேச்சு எது? சாதுக்கள் கூடியிருக்கும் முறைப்படி ஸ்ரீராமப் பிர்ம்மத்தைத் தரிசனம் செய்ய விரும்பினால், இராமமுத்திரை யைப் பூரணம் செய்யவேண்டும்.

விஷ்ணுதாஸ! பூரணம் செய்யும்விதத்தைச் சுருக்கமாகக் கூறுகிறேன். உலகத்தில் மையைச் சம்பாதித்துக் கண்களில் பூர ணம் செய்துகொண்டால், நிதியைப் பிரத்தியக்ஷமாகப் பார்க் கிறான். அத்தன்மைபோல் நான்கு ஸாதனங்களைச் சம்பாதித்த பின், இராம என்னும் சுத்தமான சொரூபத்தைப் பார்க்கிறான். தத்துவத்தை அறிந்த பெரியோர்களால், பிர்ம்மமும் அதன் சாத னமும் மாயையுடன் சேர்ந்தனவென்றும் அவித்தையுடன் சேர்ந்

தது சுத்தம் என்றும் சொல்லப்படுகின்றன. நான்கு பிரிவுகளுடன் கூடிய சாதனம் பூரணசாதனமென்று சொல்லப்படும்: தனித் தனியாக உள்ள சாதனத்திற்கு நான்கு சாதனமென்று பெய ரிருக்கிறது. ஸ்மிருதிகளில் விவேகம் வைராக்கியம் சமம் முத லானவைகளும், மோக்ஷமடையவேண்டிய விருப்பமும், நான்கு சிலாக்கியமான அடையாளங்களும் தனித்தனியாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. பெண்ணாசை, பொன்னாசை, பிள்ளையாசை என்னும் மூன்று ஆசைகளையு மொழித்து, ஸன்னியாஸம் செய்து கொள்ளுதல், குரு சிச்ருஷை, சிரவணம், மனனம், நிதித்தியாஸ னம் முதலியவைகளை அநுஷ்டித்தலே சாதனங்களாம். மோக்ஷம் அடையவேண்டுமென்ற ஒருசாதனத்தினுல்நியாசம்முதலியஆறும் ஒன்றேயாம். விவேகம் வைராக்கியம், சமம் முதலியவைகளால்மட் டிலும் மோக்ஷமடைய விருப்பம் உண்டாகாது. ஆறு சாதனங்களி னுல் ஆதரவு எற்படும். இந்தச் சாதனங்களால் பதங்களைப் பூர ணம் செய்யவேண்டும். அவைகளைக் கேட்பவர்கள் தெரிந்து கொள்ளச் சொல்லுகிறேன்.

பத்து இந்திரியங்கள், ஒன்பது துவாரங்கள், பிராணன் அபானன், மனம், புத்தி தருமங்கள் நான்கு இந்த இருபத்தேழு ஸ்தானங்களைச் சாதனங்களால் பூரணம் செய்யவேண்டும். அப் பொழுது இராமப் பிர்ம்மம் பிரத்தியக்ஷமாக விளங்கும். இதனுல் கிருத கிருத்தியனுக ஆகிருன். இவ்விதம் வர்ணித்ததனுல் இராம தோபத்ரம் முத்திரை இவைகள் சொல்லப்பட்டன. பிறகு இரா மரைப்பற்றியும் விளக்கப்பட்டிருக்கிறது. இப்போது ஸர்வதோ பத்ரம் சொல்லப்படுகிறது, ஸ்தானத்தாலும் பெயராலும் பிர்ம் மத்தைத் தியானஞ்செய்தால் மானிடர்களுக்கு எங்கும் கலியாணம் உண்டாகும். பத்ரத்திற்கு வாசகமும், முக்கியமானதும், மங்களங் களுக்கும் மங்களத்தைக் கொடுக்கக்கூடியதும், எங்கும் பிரகாசிக் கும் வஸ்துவானதும் சொல்லப்படுகின்றன. அதிதைவம், அத் யாத்மம் இந்த இரண்டும் ஸர்வதோபத்ரம் என்னும் பெயரை யுடையன. விவரமாக வஸ்துவை அறியும் பொருட்டு உனக்குச் சொல்லுகிறேன்.

முதலாவது அதிதைவத்தில் இருக்கும் பத்ரத்தைக் கூறுகிறேன். அண்டத்திற்கு இருதய ஸ்தானமாகிய பிரஹ்மலோகம் ஸர்வதோபத்ரம். இதனாலே தான் எல்லாவுலகங்களுக்கும் மங்களமுண்டாகிறது. உலகஸ்திதியின் பொருட்டு அங்கு சொர்ணமயமான கிருகம் பிரபுவினால் ஸிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தானத்தைப் பத்மமென்று தெரிந்துகொள்ள வேண்டும். அவ்விடம் ஸன்னியாஸத்தினால் சென்ற பிராணனை உபாஸிப்பதிற் பிரியமுள்ள ஸகல யோகிகளுமாகிய ஸகல பிராணிகளுக்கும் பிர்ம்மத்துடன் பிரகாசிப்பதற் குரியஸ்தானம். அவர்கள் பிர்ம்மத்துடன் இருப்பவர்கள் என்பது ஸ்மிருதிவசனம். சுருதியிலும் ஸ்மிருதியிலும் தீர்மானஞ்செய்யப்பட்ட நிர்மலமாகிய இராமமுத்திரையின் வழி இது. அத்யாத்மத்தில் இருதயம் ஸர்வதோபத்ரம் என்று சொல்லப்படுகிறது. அந்தப் பத்ரத்தால் எல்லா அவயவங்களிலும் கலியாணமுண்டாகும். அந்த இருதயத்தி லிருக்கும் தாமரைப்பூ பிரஹ்மத்திற்கு ஸ்தானம். இவ்வாறு வேதத்தில் கூறியிருக்கிறது. பிரஹ்மத்தினிடம் ஸ்திரமான எண்ணமுள்ள பெரியோர்களுக்குக் குருவின் உபதேசத்தினா லுண்டான ஞானத்தினால் பிரஹ்மம் பிரகாசிக்கிறது. அந்தப் பரமபுருஷன் பூமியிலும் இருக்கிறார் என்று சுருதி கூறுகிறது. பரோக்ஷமாக ஆகாது. பாதாளத்திலும் இருப்பவர் ஈசுவரன். அவர் சுருதிகளில் வியாபித்திருக்கும் தன்மையை உடையவர். எல்லா மூடர்களுக்கும் தேகத்தில் நான் என்று காணப்படுகிறார். பிரமம் உண்டாகாம லிருப்பதற்கு ஆத்மாதான் என்று மறுபடி சொல்லுகிறது. எல்லா உபநிஷத்துகளிலும் பிர்மம் ஒன்று என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. பிர்மம் ஒன்று தான் அமிருத சொரூபம் உள்ளது என்று அதர்வணவேதம் கூறுகிறது. அது நீ தான், நீ தான் அது என்று கைவல்லியங் கூறுகிறது.

அது நீ என்று சாந்தோக்கிய உபநிஷத்து பிர்மத்துக்கும் ஆத்மாவுக்குமுள்ள ஏகபாவத்தைக் காட்டியிருக்கிறது. வேதத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஜீவனும் ஈசுவரனும் ஒன்று என்பது ஸ்பஷ்டமான விஷயம். காணப்படுவனவும், கேட்கப்படுவனவுமான இந்த சகல பிரபஞ்சமும், பிரபஞ்சத்திற் குள்ளும் புறம்

யும் நாராயணமூர்த்தி வியாபித்திருக்கிறார். ஆத்மசொரூபமொன்றே, இரண்டில்லை என்று சுருதிகள் பிர்மத்தைப் பற்றிக் கூறுகின்றன. அந்தப் பிர்மத்தைப் பூதங்களிலும் பூதங்களைப் பிர்மத்திலும் பார்க்கிறவன் ஆத்மஞானியாகிறான். மநுவின் வசனப்படி ஞானத்தினால் பிர்மசொரூபனாகி கிருத கிருத்தியனாகவும் ஆகிறான். ஸம்ஸாரத்தைக் கடந்து சீடர்களையும் கடைத்தேறச் செய்கிறார்கள். இங்கு சொன்ன சுருதியின் அபிப்பிராயத்தை வித்வான்கள் எல்லோரும் அறிவார்கள். அதிகமாகச் சொல்வதில் பயனில்லை என்று சுருக்கமாகக் கூறினேன்.

நாராயணா! அச்சுதா! ஜநார்த்தனா! வாசுதேவா! கோவிந்தா! மாதவா! முகுந்தா! இலக்ஷ்மீநாதா! விஷ்ணுவே! ஸங்கர்ஷணா! ஜன்மமில்லாதவரே! நரஸிம்மா! ஸகலலோகசொரூபா! இராம! பெரியோர்களால் கொண்டாடக் கூடியவரே! சிவவாமனா! சீடனாகியவனைக் காப்பாற்றும். எவரால் இந்தப் பிரபஞ்சம் விகாரத்தை அடைகிறதோ, எவருடைய பிரபஞ்சத்திலுள்ளவர்கள் அறிவுடையோர்களாகின்றார்களோ, எவரிடம் இந்தப் பிரபஞ்சம் இருக்கிறதோ அந்த ஸர்வசொரூபியாகிய பரமாத்மாவுக்கு நமஸ்காரம்.

நூற்றெட்டு நாமங்களடங்கியதும், இலகு முத்திரையுடன் கூடியதுமான இராமதோபத்ரத்தின் அநேக பேதங்களைக் கூறுகிறேன். முற்கூறிய ரேகைகளைக் காட்டிலும் இருபது ரேகைகளை அதிகமாகப் போடவேண்டும். மண்டலங்களும் இரண்டு அதிகம். அவ்விரண்டு வரிசைகளில் லிங்கங்களும், முதலாவது வரிசையில் இருபத்துநான்கு ஸ்தானங்களுடன் கூடின வெளுப்பு வர்ணமுள்ள பதினைந்து ருத்திரர்கள் பதின்மூன்று ஸ்தானங்களுடன் கூடின பதினாறு வாபிகள், இருபத்தாறு பத்ரங்கள் இவைகளும் இருக்கவேண்டும்.

பிறகு இரண்டாவது வரிசையில் பன்னிரண்டு ருத்திரர்கள் பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின பதின்மூன்றுவாபிகள் பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடிய பத்ரம் இவைகளையும் மற்றவை

களையும் முன்போல ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். இது நாற்றெட்டு நாமங்களடங்கின இராமலிங்கதோபத்ரம். அல்லதுமுதல் வரிசையில் ஆறு முத்திரைகள், ஆறு ருத்திரர்கள், ஆறுவாபிகள், பதின்மூன்று ஸ்தானங்கள், பதினாறு பத்ரங்களிருக்கலாம். இரண்டாவது வரிசையில் ஐந்து முத்திரைகள், ஆறு லிங்கங்கள், ஆறு வாபிகள், பன்னிரண்டுஸ்தானங்களுடன்கூடின பத்ரங்கள் இருக்க வேண்டும். மூன்றாவது வரிசையில் நான்கு முத்திரைக ளிருக்க வேண்டும். நான்காவது வரிசையில் ஐந்து முத்திரைகளும், ஐந்தாவது வரிசையில் நான்கு முத்திரைகளும், ஆறாவது வரிசையில் இரண்டு முத்திரைகளும், ஏழாவது வரிசையில் ஒரு முத்திரையும் இருக்கவேண்டும். மூன்றாவது வரிசை முதல் எட்டாவது வரிசை வரையில் கிரமமாக ஆறு இரண்டு இரண்டு இரண்டு இரண்டும் ஒரு ருத்திரரும் ஆறு பன்னிரண்டு ஆறு இருபது பதினாறு இரண்டு பத்ரங்களும் இருக்கவேண்டும் என்று ஞானமுள்ளவர்கள் தெரிந்து கொள்ளவேண்டியது. அல்லது எட்டாவது ஸ்தானத்தில் முத்திரை ஏற்படுத்தி அங்குள்ள லிங்கத்தை நான்காவது வரிசையில் ஏற்படுத்தி இருபது ஸ்தானங்களுடன் கூடின பத்ரத்தை ஏற்படுத்தவேண்டும். முத்திரைகள் எல்லாவற்றிலும் மத்தியில் இரண்டு மண்டலங்களையும் லிங்கம்வரையில் முத்திரை போடுவதற்கு ஸ்தானத்தையும் தனக்குத் தோன்றிய வர்ணங்களால் ஏற்படுத்திக்கொள்ளலாம். கொடிக்கும் வாபிக்கு மத்தியில் பத்ரமு மிருக்கவேண்டும். அன்றியும் சங்கிலிபோடக் கூடியஸ்தானங்களில் அவைகளைப்போட்டுப் பூர்த்திசெய்யவேண்டும். அல்லது முதலாவது வரிசையில் பத்து முத்திரைகள் எல்லைகள் மண்டலங்கள் பன்னிரண்டு ஸ்தானங்களுடன்கூடின பத்ரம் இவைகளிருக்கவேண்டும். மத்தியில் இரண்டு மண்டல மிருக்க வேண்டும்; இவ்விதம் முன்வரிசைகளிலும் மண்டலங்களிருக்க வேண்டும். மூன்றாவது வரிசையில் எட்டு முத்திரைகள் நான்கு ஸ்தானங்களுடன் கூடின பத்ரம் ஐந்து முத்திரைகள் பன்னிரண்டு ஸ்தானங்களுடன்கூடினபத்ரம் இவைகள் இருக்கவேண்டும். இங்கு இரண்டு மண்டலங்கள் கிடையா. ஏழாவது வரிசையில் மூன்று

முத்திரைகள் நான்கு ஸ்தானங்களுடன் கூடின பத்ரமும் இருக்கவேண்டும். இரண்டாவது வரிசையில் பதின்மூன்று ருத்திரர்கள் பதினன்கு வாபிகள் இருபத்தாறு பத்ரம் இவைக ளிருக்கவேண்டும். நான்காவது வரிசையில் ஒன்பது ருத்திரர் கள் பத்து வாபிகள் இருபத்தாறு பத்ரம் இவைகளிருக்க வேண் டும். ஆருவது வரிசையில் ஐந்து ருத்திரர்கள் ஆறு வாபிகள் இருபத்தாறு பத்ரம் இவைகளிருக்கவேண்டும். பாக்கி வரிசை களை முன்போல் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்; அல்லது முதல்வரிசையில் பதினைந்து ருத்திரர்களும் இரண்டாவது வரிசை யில் எட்டு முத்திரைகளும் பதினெட்டு ஸ்தானங்களு மிருக்க வேண்டும். ஆறு நான்கு இவ்வரிசைகளில் ஐந்து முத்திரைகளும் ஐந்தாவது வரிசையில் நான்கு முத்திரைகளும் ஏழாவது வரிசை யில் ஒரு முத்திரையும், எட்டாவது வரிசையில் ஒரு முத்திரையு மிருக்கவேண்டும். ஏழாவது வரிசை வரையிலும் இரண்டு ருத்தி ரர்களும் இரண்டு வாபிகளும் இருபத்தாறு ஆறு பதினறுபன்னி ரண்டு ஆறு இருபது பதினறு பத்ரங்களும் கிரமமாக இருக்க வேண்டும். அல்லது முதல் வரிசையில் ஒரு முத்திரை மத்தியில் லிங்கம் பதினறு, ஸ்தானங்களுடன் கூடின பத்ரம் இவைகளை ஏற்படுத்தவேண்டும். எட்டாவது ஸ்தானத்தில் லிங்கத்தையும் இருபத்தாறு பத்ரங்களையும் ஏற்படுத்த வேண்டும். பாக்கியுள்ள ஸ்தானங்களை முன்போல் ஏற்படுத்தவேண்டும். முதல் இரண்டு மூன்று வரிசைகளில் ஐந்து, ஏழு, மூன்றுருத்திரர்கள் இருக்க வேண்டும். முத்திரைகளின் மத்தியில் எல்லையையும் மண்டலத் தையும் ஏற்படுத்தவேண்டும். முதலாவது ஆறு ஸ்தானங்க ளுடன் கூடின பத்ரம், இரண்டாவது பன்னிரண்டு ஸ்தானங்க ளுடன் கூடின பத்ரம், இரண்டிரண்டு வாபிகள் லிங்கங்கள் இவை களை ஏற்படுத்தவேண்டும். பாக்கியுள்ளவைகள் முன் கூறியது போல் அல்லது முதலாவது வரிசைமுதல் ஏழு, ஆறு ஐந்து, நான்கு, மூன்று ஒன்று இக்கணக்குள்ள முத்திரைகள் எல்லை மண்டலங்கள், ஆறு ஸ்தானங்களிலும் நான்கு நான்கு ருத்திரர் கள் இரண்டுலிங்கம் பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின வாபி

கள் இலைவகளிருக்க வேண்டும். இனிக் கூறப்படும் பத்ரங்கள் இருபத்தாறு, பதினாறு நான்கு கோஷ்டங்கள் இவைகளுடன் கூடியன. பாக்கியுள்ளவை யாவும் முற்கூறியதுபோல் அல்லது முதல்வரிசை முதல் ஐந்தாவது வரிசைவரையில் ஆறு, ஐந்து, நான்கு, மூன்று முதலிய கணக்குள்ள முத்திரைகளும் மத்திய யில் ருத்திரர்களும் நான்கு இரண்டு இரண்டு இரண்டு இரண்டு எல்லைகள் மண்டலங்களும் இரண்டு லிங்கமும் பதினாறு பதினாறு பன்னிரண்டு ஆறு ஆறு பத்ரங்களும் இருக்கவேண்டும். மற்ற வைகள் முன்கூறியது போலவே யாம். விஷ்ணுதாஸ! இவ்வாறு பல பேதங்களுட னிருக்கின்றன.

இலகுராமதோ பத்ரத்தின் விஸ்தாரத்தைக் கூறும்

## 4 - வது சருக்கம்

முற்றிற்று.

## 5-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாஸ! முற்கூறிய சிலாக்கியமான முத்திரைகளு ளொன்றாகிய இராமதோபத்ரத்தின் விவரங்களைக் கூறுகிறேன், கேள். அகலத்திலும் நீளத்திலும் சிவந்தவர்ணமுள்ள அறுபத்தொரு இரேகைகளும் கடைசியில் கருப்பு சிவப்பு வெளுப்பு மஞ்சள் இவ்வர்ணமுள்ள மண்டலங்களையு மமைக்கவேண்டும். பன்னிரண்டாவது ரேகைக்குக் கடைசியில் மஞ்சள் கருப்பு சிவப்பு வெளுப்பு வர்ணமுள்ள மண்டலங்களிருக்கவேண்டும். ஐந்தாவது ரேகை மஞ்சள் வர்ணமுள்ளதா யிருக்கவேண்டும். அந்த ஸர்வதோபத்ரத்தைஎழுதவேண்டும். பன்னிரண்டாவதுரேகைக்கு வெளிவரிசையில் எல்லைகளும் மண்டலங்களும் சிவந்த வர்ணமுள்ளவைகளாக இருக்கவேண்டும். மத்தியில் மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு மண்டலங்களும், கிருகமுள்ள இடத்தில் இரண்டு முத்திரைகளுமிருக்கவேண்டும். நான்கு பக்கங்களிலும் முன் போல் நாமங்களையும் எழுதவேண்டும். மூலைகளில் சந்திரனை மூன்று ஸ்தானங்களுடனும் வெளுப்பு வர்ணமுள்ள தாகவும் அமைக்கவேண்டும். பதினொரு ஸ்தானங்களுடன் கூடின கருப்பு வர்ணமுள்ள சங்கிலி மஞ்சள் வர்ணமுள்ள சங்கிலி பத்து ஸ்தானங்களுடன் கூடின சங்கிலி பத்தொன்பது ஸ்தானங்களுடன் கூடிய பச்சை வர்ணமுள்ள கொடி, ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின சிவப்பு வர்ணமுள்ளபத்ரம், வெண்மைவர்ணமுள்ள பதின்மூன்று ஸ்தானங்களுள்ள வாபி, மூன்று ஸ்தானங்களுடன் கூடின சிவப்புவர்ணமுள்ள பத்ரம், சுற்றிலும் மஞ்சள் வர்ணமுள்ள பத்ரம், இரண்டு பத்ரங்களுக்கு நான்கு பக்கங்களிலும் இரண்டு ஸ்தானங்களுடன் கூடின சங்கிலி எட்டு முத்திரைகள் இவைகளுடன் கூடின இராமதோபத்ரத்தை நான் உனக்குக்கூறினேன்.

மஞ்சள் வர்ணமுள்ள சங்கிலியில்லாமல் பதினெட்டு ஸ்தானமுள்ள கருப்புவர்ணமுள்ள லிங்கத்தையும் நான்கு ஸ்தானங்களுடன் கூடின வாபிகளையும் ஆறுஸ்தானங்களுள்ள சிவப்புவர்ண

முள்ள பத்ரத்தையும் அமைக்கவேண்டும். குறுக்கேயிருக்கிற மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு பத்ரங்கள் ஒன்பது, ஸ்தானங்களுடனும் நான்கு ஸ்தானங்களுடனும் கூடியவைகளாயிருக்க வேண்டும். லிங்கத்திற்கு மேல் சிவப்பு வர்ணமுள்ளதும் மூன்று ஸ்தானங்களுடன் கூடின மாலிகை, மூன்று ஸ்தானங்களுடன் கூடின ருத்திரர்கள், எட்டு முத்திரைகளுடன் கூடினதும் லிங்கங்களுடனும் கூடினதுமான இராமபத்ரம் இவைகளிருக்கவேண்டும். இது அகலத்திலும் நீளத்திலும் ஐம்பத்து மூன்று ரேகைகளுள்ளது. மற்றவைகளையெல்லாம், முன்போலவே அமைக்க வேண்டும். முத்திரைகள் மண்டலங்கள் இவைகளை ஆறு வரையில் இஷ்டப்படி பூரணம் செய்துகொள்ள வேண்டும்.

இது நான்கு முத்திரைகளுடனும் லிங்கங்களுடனும் கூடின பத்ரம் அகலத்திலும் நீளத்திலும் எழுபத்து மூன்று ரேகைகள் நல்ல சிவப்புவர்ண முள்ளவைகளாக ஏற்படுத்த வேண்டும். அவைகளில் நான்கு பக்கங்களிலும் கிரமமாக மண்டலங்களை ஏற்படுத்த வேண்டும். அந்த மண்டலங்கள் கறுப்பு சிவப்பு வெளுப்பு மஞ்சள் வர்ணமுள்ளவைகளாக இருக்கவேண்டும். பன்னிரண்டாவது ஸ்தானத்தின் கடைசியில் நான்கு பக்கங்களிலும் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமும் அதற்குமுன்னால் நான்கு பக்கங்களிலும் சிவப்பு வர்ணமுள்ள மண்டலமும் பிறகு எட்டாவது ஸ்தானத்திற்கு மேல் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமும் அதன்பின் ஆறாவது ஸ்தானத்திற்கு மேல் மறுபடியும் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமும் முதலாவது ஸ்தானத்தில் மரியாதை என்ற பெயருடைய ஸ்தானமும் அல்லது மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமும் பன்னிரண்டாவது ரேகைக்குக் கடைசியில் உள்ள ஸ்தானங்களில் சிவப்பு வர்ணமுள்ள நான்குமண்டலங்களும் மூலைகளில் உள்ள ஸ்தானங்களில் முன்போலவே மத்தியில் மூன்று முத்திரைகளும் இருக்கவேண்டும். பிறகு இரண்டாவது ஸ்தானத்தில் சந்திரனும் கறுப்புவர்ணமுள்ள சங்கிலியும் ஏழு ஸ்தானங்களுடன் கூடின கொடியொன்றும் பதினொன்கு ஸ்தானங்களுடன் கூடின கொடிகளுக்குநடுவே ஆறுஸ்தானங்களுடன்கூடின சிவப்புவர்ணமுள்ள

பத்ரத்தையும் அமைக்கவேண்டும். பதின்மூன்று ஸ்தானங்களுடன் கூடின வெளுப்பு வர்ணமுள்ள நான்கு வாபிகள். இருபத்தாறு ஸ்தானங்களுடன் கூடினதும் கறுப்பு வர்ணமுள்ளதுமான மூன்று ருத்திரர்களும் பதின்மூன்று வாபிகளும் லிங்கத்தின் மத்தியிலும் ஸ்தானங்களிலும் மையினால் இராம என்னும் நாமங்களும் இருத்தல்வேண்டும். சிரஸு நான்கு ஸ்தானங்களுடன் கூடியதாயிருத்தல்வேண்டும். கழுத்து இரண்டு ஸ்தானங்களுடன் கூடியதாயிருத்தல்வேண்டும். லிங்கமும் பக்கங்களும் நான்கு ஸ்தானங்களுடன் கூடியவைகள். பாதங்களும் தோள்களும் ருத்திருடைய நேத்திரங்கள். ஸ்தானங்களை வெண்மை வர்ணமுள்ளவைகளாக அமைத்தல்வேண்டும். வாபிகளுக்குமேல் பாக்கியுள்ள எட்டுஸ்தானங்களில் மூன்று ஸ்தானங்களைச் சிவப்புவர்ண முள்ளவைகளாகவும், ஐந்து ஸ்தானங்களை மஞ்சள் வர்ணமுள்ளவைகளாகவும் அமைத்தல்வேண்டும். பிறகு மத்தியில் ஸர்வதோபத்ரத்தை முன்போலவமைக்கவேண்டும். எல்லா லிங்கங்களுடன் கூடின மூன்று இராம பத்ரத்தை நான் உனக்குக் கூறினேன். பன்னிரண்டு முத்திரைகளுடனும் இராமலிங்கங்களுடனும் கூடிய பத்ரம் மிக அழகுள்ளது வெகு விசித்ரமானது; சுபங்களைக் கொடுக்கக் கூடியது. இதை ஸ்ரீராமருடைய திருப்திக்குக் கூறினேன்.

அகலத்திலும் நீளத்திலும் எழுபத்தொன்பதுரேகைகளுடன் மற்றயாவும் முன்போலமைத்துக் கொள்ளவேண்டும். நான்கு முத்திரைகளுடன் கூடின பத்ரத்தைப்போல் மத்தியிலும் முதலாவது வரிசையிலும் மூன்று முத்திரைகள் மூன்று எல்லைகள் மண்டலங்கள் மத்தியில் மும்மூன்று முத்திரைகள் எல்லைகள் மண்டலங்கள் கடைசியில் இரண்டிரண்டு முத்திரைகள் எல்லைகள் மண்டலங்கள் இவைகளை அமைக்கவேண்டும். இது பதினாறு முத்திரைகளுடன் கூடின இராமதோபத்ரம் என்பது.

கிருகத்தின் மத்தியில் உள்ள அடையாளத்திலேபதினாறு ஸ்தானங்களுடன் கூடின லிங்கமும் அகலத்திலும் நீளத்திலும் சிவப்பு வர்ணமுள்ள நானூற்று ஐம்பத்தொரு ரேகைகளும் மத்தியில் எட்டுமுத்திரைகளுள்ள இராமதோ பத்ரமும் வரைதல்வேண்டும்.

அகலத்திலும் நீளத்திலும் நான்கு பக்கங்களிலும் மஞ்சள் வர்ண முள்ள மண்டலங்களுண்டு. பன்னிரண்டாவது ஸ்தானத்திற்குக் கடைசியில் வெளிப்பக்கத்தில் மண்டலங்களும் உண்டு. மூலைகளில் உள்ள வீடுகளையும் முத்திரைகளையும் முன்போல ஏற்படுத்த வேண்டும். முன் இரண்டு முத்திரைகள் சொல்லப்பட்டிருக்கின் றன. அவற்றிற்குக் கீழ்பாகத்தில் நான்கு, முத்திரைகளும், மத்தியிலும் நான்கு பக்கங்களிலும் இரண்டு மண்டலங்களும், பிறகு ஆறு முத்திரைகளும, அதன்பின் எட்டு முத்திரைகளும், ஐந்தாவது ஸ்தலத்தில் ஆறு முத்திரைகளும், நான்கு வாபிகளும், எண் பத்துநான்கு ஸ்தானங்களுடன் கூடின வாபிக்குள் பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடின குண்டமும் அமைக்கவேண்டும். அவை கறுப்பு வர்ணமுள்ளவைகளாக இருக்கவேண்டும். வாபிக்குப் பக்கங்களில் சிவப்பு வர்ணமுள்ள நான்கு பத்ரங்களுண்டு. அந்தப் பத்ரங்கள் தனித்தனியாகப் பதினைந்து ஸ்தானங்களுடன் கூடினவைகள் என்று அறிபவும். ஆறாவது ஸ்தானத்தில், பன்னிரண்டு முத்திரைகளும், முன்னால் பதினான்கு, பதினாறு, பதினெட்டு, இருபது, இருபத்திரண்டு முத்திரைகளும், இருபத்தினான்கு, இருபத்தாறு, இருபத்தெட்டு, முப்பது முப்பத்திரண்டு முத்திரைகளும் அவைகளால் ஸ்தானங்களில் பதினாறு முத்திரைகளும், பதினாறு வாபிகளும், மத்தியில் இரண்டு வாபிகளுமிருக்க வேண்டும்.

ஆயிரத்தெட்டு நாமங்களடங்கிய இராமதோபத்ரம் சொல்லப்பட்டது. அதாவது, அகலத்திலும் நீளத்திலும் சிவப்பு வர்ணமுள்ள ஐந்நூற்றுத் தொண்ணூற்றெட்டு ரேகைகளமைக்க வேண்டும். முற்கூறிய மூன்று சர்வலிங்க ராமபத்ரங்களை அவைகளுக்கு மத்தியில் எழுதி, மத்தியில் உள்ள முத்திரை ஸ்தலத்தில் ருத்திரனைக் கறுப்பு வர்ணமுள்ளதாக எழுபத்திரண்டு ஸ்தானங்களுடன் அமைக்கவேண்டும். கையினால் முப்பத்தாறு ராம நாமங்களை எழுதினாலும் எழுதலாம். அதன் நுனிப்பாகத்தை கறுப்பு வர்ணமுள்ளதாகவும், நான்கு ஸ்தானங்களுடன் சிரசையும் அமைக்கவேண்டும். நான்கு ஸ்தானங்களால் இடையையும்

பன்னிரண்டு ஸ்தானங்களால் பக்கங்களையும், இருபது ஸ்தானங்களால் தோள் மூலஸ்தானம் இவைகளையும், இருபத்தாறு ஸ்தானங்களால் வெண்மை வர்ணமுள்ள இரண்டு வாபிகளையும், இரண்டு ஸ்தானங்களால் ருத்திருடைய கண்களை வெண்மை வர்ணமுள்ளவைகளாக அமைக்கவேண்டும். பாக்கியுள்ள ஸ்தானங்களில் ருத்திருடைய செவிகளை யமைக்கவேண்டும். இவைகளில் ஐந்து ஸ்தானங்கள் சிவப்பு வர்ணங்களாகவும் மூன்றாவது ஸ்தானங்களில் மூன்று முத்திரைகளோடும் அமைத்து இரண்டு ருத்திரர்களை ஏற்படுத்தவேண்டும். நான்காவது ஸ்தானத்தில் நான்கு முத்திரைகளையும் மூன்று ருத்திரர்களையும் ஏற்படுத்த வேண்டும்.

பதினொன்காவது ஸ்தானத்தில் பதினொன்கு முத்திரைகளையும் பதினொன்கு ருத்திரர்களையும் அமைக்க வேண்டும். பதினைந்தாவது ஸ்தானத்தில் உள்ள முத்திரைகளையும் ருத்திரர்களையும் முன்போல் எழுதவேண்டும். மூலைகளிலுள்ள ஸ்தானங்களில் ஆச்சரியப் படக்கூடிய ஆறு ஸ்தானங்களுள்ள இரண்டு ருத்திரர்களை அமைக்கவேண்டும். எட்டு முத்திரைகளுடன் கூடின லிங்கங்களுள்ள பத்ரத்தில் இரண்டு முத்திரைகளுக்கு ஒரு லிங்கமாக விருத்தி செய்துகொள்ள வேண்டும். பன்னிரண்டாவது ஸ்தானத்தில் பன்னிரண்டு முத்திரைகள் இருபத்துமூன்று லிங்கங்கள் வெளிப்பக்கத்தில் மண்டபங்கள் இவைகளுண்டு. இவ்விதம் யுக்தியினால் ஏற்படுத்தவேண்டும். பாக்கியுள்ள யாவும் முன்போலமைத்துக்கொள்க.

இப்பொழுது ஆயிரத்தெட்டு இராம நாமங்களடங்கிய பத்ரம் கூறுகிறேன். இது சிலாக்கியமானது. ஸ்ரீராமருக்குப் பரம ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. அகலத்திலும் நீளத்திலும் நூற்றறுபத்தைந்து இரேகைகளை முன்போல் அமைக்க வேண்டும். எட்டு முத்திரைகளுடன் கூடின பத்ரம் மத்தியிலும் இதைச் சுற்றிலும் மண்டலங்களுமிருக்கவேண்டும். அகலத்திலும் நீளத்திலும்பன்னிரண்டாவது ஸ்தானத்தின்கடைசியிலும்வெளிப் பக்கத்திலும் மண்டலங்க ளிருக்கவேண்டும். மத்தியில் எல்லை மண்டலமும், இரண்டாவது ஸ்தானத்தில் நான்குமுத்திரைகளும்

மூன்றுவது ஸ்தானத்தில் விசேஷமும் உண்டு. எட்டாவது ஸ்தானத்திலும் மூன்று முத்திரைகளும் மூன்று வாபிகளுமிருக்க வேண்டும். ஐந்தாவது ஸ்தானத்தில் பத்து பத்ரங்களும் பாக்கியுள்ளவை முன்போலவுமிருக்க அமைக்கவேண்டும். நான் உனக்கு இந்த நூற்றெட்டு நாமங்களுள்ள இராமதோபத்ரத்தைக் கூறினேன்.

அகலத்திலும் நீளத்திலும் இருநூற்றுப் பதின்மூன்று ரேகைகள் முன்போலிருக்கவேண்டும். ஒரு பத்ரத்தில் எல்லா லிங்கங்களுடன் கூடின இராமபத்ரம் மூன்றையும் கூறியிருக்கிறேன். இந்த இராமதோபத்ரத்தை இந்தவிடத்தில் எழுத வேண்டும். பன்னிரண்டாவது ஸ்தானத்திற்கு மேல் வெண்மை வர்ணமுள்ள வாபியை எழுதவேண்டும். முன்போல் மண்டலங்களை எழுதவேண்டும். அகலத்திலும் நீளத்திலும் மண்டலங்களையும், மூன்றுவது ஸ்தானத்தில் மூன்று முத்திரைகளையும் இரண்டு ருத்திரர்களையும், நான்காவது ஸ்தானத்தில் நான்கு முத்திரைகளையும் மூன்று ருத்திரர்களையும், ஐந்தாவது ஸ்தானத்தில் ஐந்து முத்திரைகளையும் நான்கு ருத்திரர்களையும், ஆறுவது ஸ்தானத்தில் ஆறு முத்திரைகளையும் ஏழு ருத்திரர்களையும், மூலைகளில் உள்ள இரண்டு ஸ்தானங்களில் பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு ருத்திரர்களையும், ஏழாவது ஸ்தானத்தில் ஏழு முத்திரைகளையும் எட்டு லிங்கங்களையும் அங்குள்ள மூலை ஸ்தானங்கள் இரண்டிலும் இரண்டு ருத்திரர்களையும் பதினெட்டு ஸ்தானங்களையும் அமைக்கவேண்டும். இது நூற்றெட்டு இராமலிங்க ரூபமானது என்று நிச்சயிக்கப் பட்டிருக்கிறது.

ஆறுவது ஸ்தானத்தில் அல்லது மூலைகளில் உள்ள ஸ்தானத்தில் ருத்திரரை அமைப்பதுகூடாது. மூன்றுவது ஸ்தானத்தில் ஒரு முத்திரை இரண்டு வாபிகள் இரண்டுருத்திரர்கள் இவைகளை யமைக்கவேண்டும். இது இராமநாமங்களில் நூறு அடங்கிய பத்ரமென்று சொல்லப்படுகிறது. நூற்றெட்டு இராமநாமங்களுள்ள பத்ரத்தில் மூன்றுவது ஸ்தானத்தில் ஆறு முத்திரைகளையும், ஐந்தாவது ஸ்தானத்தில் ஐந்து முத்திரைகளையும் ஐந்துவாபி

களையும் அமைக்கவேண்டும். இது நாறு முத்திரைகளுள்ள பத்ரம். ஆயிரத்தெட்டு நாமங்களுள்ள பத்ரத்தில் ஐந்தாவது ஸ்தானத்தில் ஆறு வாபிகளையும் நான்கு முத்திரைகளையும் அமைக்கவேண்டும். ஆயினும், இராம முத்திரைகளுள்ள இராமலிங்கபத்ரம் என்று சொல்லப்படும்.

ஆயிரத்தெட்டு லிங்கங்களுடன் கூடின ஆஸனத்தில் பதினான்காவது ஸ்தானத்தில் மூலையிலுள்ள ஸ்தானத்தில் முத்திரை ஏற்படுத்தக்கூடாது. முத்திரைகளுள்ள ஸ்தானத்தில் மத்தியில் இரண்டு வாபிகளை உண்டாக்குவதுகூடாது. ஆயிரம் இராம முத்திரைகளுடனும் லிங்கங்களுடனும் கூடியது இது. பதினாறு நாமங்களிலுள்ள இராமதோ பத்ரத்தில் முதல் ஸ்தானத்திலும் மூன்று திசைகளிலும் வாபிகளிருக்கவேண்டும். மூன்று மத்தியிலும் உள்ள முத்திரையோடும் இடத்திலும் இவ்விதமே யிருக்கவேண்டும். இது பதின்மூன்று நாமங்களடங்கிய இராமதோ பத்ரமென்று கூறப்படும். அல்லது முதலாவது ஸ்தானத்தில் மத்தியிலுள்ள முத்திரைகளில் நான்கு திசைகளில் நான்கு வாபிகளு மிருக்கவேண்டும். இது ஒன்பது முத்திரைகளுடன் கூடியதும் ஸ்ரீராமருக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியதுமான இராமதோபத்ரம்.

அகலத்திலும் நீளத்திலும் நூற்றுப்பதினைந்து ரேகைகள் முன் கூறியதுபோல் மத்தியில் பதின்மூன்று ஸ்நானங்களுடன் கூடின பத்ரம் மூன்று முத்திரைகளும் முத்திரையின் மத்தியில் இரண்டு வாபிகளும் பன்னிரண்டு மண்டலங்களும் எங்கும் இரண்டிரண்டு மண்டலங்களு மிருக்கவேண்டும். இது இருபத்தைந்து முத்திரைகளின் சொரூபமுள்ளது; தத்வமறிந்தவர்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும் இராமதோ பத்ரம் என்றறியவேண்டும். மூலைகளில் உள்ள ஸ்தானங்களில் நேத்திரங்கள் உள்ளவிடத்திலும் மேற்பக்கத்திலும் லிங்கங்களையும் வாபியுள்ள விடத்தில் லிங்கத்தையும் இருபத்தைந்து ஸ்தானங்களுடன் கூடியவைகளாக அமைக்கவேண்டும். இது இருபத்

னைந்து முத்திரைகளுடன் கூடின இராமலிங்க சொரூபமாகிய பத்ரம். பிறகு ஸ்ரீராமருடைய ஆஸனத்திலிருக்கும் தேவதைகளைக் கூறுகிறேன். மத்தியிலும் ஸர்வதோ பத்ரத்திலும் தேவர்களை ஆவாஹனம் செய்து அதற்கு வெளிப்பக்கத்திலுள்ள லிங்கங்களில் ருத்திரரையும் வாபிகளில் நளனையும் பத்ரங்களில் சுக்ரீவனையும் குறுக்கேயுள்ள பத்ரங்களில் கவயனையும் மஞ்சள் வர்ணமுள்ள சங்கிலிகளில் அங்கதனையும் ஆவாகனம் செய்யவேண்டும். மஞ்சள் வர்ணமுள்ள சங்கிலியில்லாவிடில் நான்கு ஸ்தானங்களுடன் கூடின குறுக்கேயுள்ள பத்ரத்தில் அங்கதனை ஆவாகனம் செய்ய வேண்டும். கறுப்பு வர்ணமுள்ள சங்கிலிகளில் விபீஷணனையும் கொடிகளில் ஜாம்பவானையும் சந்திரன் உள்ள இடங்களில் த்விவிதனையும் முத்திரையில் ஸீதையுடன் இராமரையும் முத்திரைக்கு மேற்கு தெற்கு வடக்கு கிழக்கு இவ்விடங்களில் இலட்சுமணன் பரதன் சத்ருக்னன் ஹநுமான் இவர்களைக் கிரமமாக ஆவாகனம் செய்யவேண்டும். பூஜிக்கத்தக்கவன் பூஜிக்கிறவன் இவர்களுக்கு மத்தியில் கிழக்குத்திசை என்றறியவேண்டும். வெண்மை வர்ணமுள்ள மண்டலங்களில் சுஷேணனையும் எல்லா ஸ்தானங்களிலும் சகல வானரங்களையும் வெளிப்பக்கத்திலுள்ள மூன்று மண்டலங்களில் த்ரிவேணியையும் ருத்திரரை நோக்கி அமைக்க வேண்டும். அல்லது தனக்கு அபிமுகமாகவாவது பத்மத்திற்கு அபிமுகமாகவாவது செய்யவேண்டும். இவ்விதம் பத்ரங்களிலுள்ள விசேஷங்களைக் கூறினேன். மூன்று பக்ஷத்திலும் சிலாக்கியமென்று முனிவர்கள் கூறுகிறார்கள். முற்கூறிய பத்ரத்தில் தேவர்களைப் பூஜித்துப் பிறகு ஸ்ரீராமருக்குச் சிறந்த பூஜைசெய்ய விஸ்தாரமாகத் தொடங்க வேண்டும். பத்மத்தின் உச்சியில் ஸீதையுடன் இராமரை ஆவாகனஞ்செய்து பத்மத்தின் எட்டுத் தளங்களிலும் ஆவரணதேவதைகளை ஆவாகனம் செய்யவேண்டும். இவ்விதம் பூஜைசெய்ய வேண்டுமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

பத்மம் சுருக்கமாக விருக்கும் தன்மையை யோசித்து வேறு விதமாகக் கூறுகிறேன். ஸர்வதோ பத்ரத்தின் மத்தியிலுள்ள

கமலத்தில் தானியங்களைப் பரப்பி அதன்மீது ஜலம் நிறைந்த குடத்தை வைத்து அதைத் தாழை மடல்களால் அலங்கரித்து அதன் முன்பாகத்தில் அரிசி நிறைந்த பெரிய பாத்திரத்தையும் வைத்து அதன்மீது உள்ள வஸ்திரத்தில் ஆவரண தேவதைகளுடன் கூடின ஸ்ரீராமசந்திரரைப் பூஜிக்க வேண்டும். லோகம் மரம் கல் மணல் மணல்மணிகள் இவை முதலிய எட்டுவித பிரதிமைகள் சாஸ்திரங்களில் நிச்சயம் செய்யப் பட்டிருக்கின்றன. இராமர் பத்திரங்கள் எல்லாவற்றிலும் பூஜிக்கத் தகுந்தவர். இது சிரேஷ்டர்; பூஜிக்கிறவர், ருத்திரர்; பத்ரம் முதலியவைகள் பார்ஷதர்கள். ஆகையினால் ஸ்ரீராமதோ பத்ரமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். இவ்விதம் அனேகவித பேதங்களிருக்கின்றன. விஷ்ணுதாஸ! ஸ்ரீராமதோ பத்ரங்களைக் கணக்கிட முடியாது. உன் முன்னிலையில் சில பத்ரங்களைக் கூறினேன். இலக்ஷ்மீபதியைப் பூஜிப்பதற்கு மானிடர்கள் தங்கள் புத்திக்குத் தக்கபடி செய்து கொள்ளவேண்டும். ஸ்ரீராமரைப் பூஜிப்பதற்கு சில்லாக்கியமான சொர்ண நூற்களாலாவது வெள்ளி நூற்களாலாவது ஆஸனத்தை அமைக்க வேண்டும். அல்லது பட்டு வஸ்திரத்தினால் சிரேஷ்டமான ஆஸனத்தை அமைக்கலாம். அல்லது ஒன்றுமகப் படாவிடில் பிராம்மணர்களைக் கொண்டு நூல்களால் அமைத்துக் கொள்ளலாம். பூர்ஜமரத்தில் எழுதினால் விசேஷமாகக் காரியஸித்தியைக் கொடுக்கும். வஸ்திரத்திற்குமேல் சித்திர வர்ணமுள்ள நூற்களால் அமைக்கலாம். ஆஸனமில்லாத பூஜை பிரயோஜனமில்லை. இராம பத்ரமென்னும் ஆஸனத்தில் செய்யும் பூஜை மிகுதியான பலத்தைக் கொடுக்கக் கூடியது. இராமர் விஷயமாகச் செய்யும் காரியங்களில் பிராமணர்களுடன் இராமாஸனத்திலிருக்கும் இராமரை முன்னிட்டு ஆரம்பம் செய்ய வேண்டும். இராம பத்ரமென்னும் ஆஸனமில்லாத காரியங்களும் பயனற்றவைகளாம். ஆகையால் இராமரைப் பூஜிப்பதற்கு இவ்விதஞ் செய்ய வேண்டும். இது ஸ்ரீராமருக்கு மிகுதியான ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது. அதற்குக் கீழ் ஆயிரத்தெட்டு இராமதோ பத்ரம்; அதற்குக் கீழ் நூற்றெட்டு இராமலிங்கம், அதற்குக்கீழ் நூற்றெட்டு இராமதோ பத்ரம், அதற்குக் கீழ் இருபத்தைந்து

ஸ்ரீராம பத்ராஸனம்; அதற்குக்கீழ் பதினாறு இராமதோபத்ரம்; அதற்குக்கீழ் பதின்மூன்று இராமதோபத்ரம்; அதற்குக்கீழ் பன்னிரண்டு. ஒன்பது, எட்டு, நான்கு, இந்த முத்திரைகளுள்ள ஆஸனங்கள் இவைகளைக் கிரமமாக அமைக்க வேண்டும். இவ்விதம் கிரமமாக ஆஸனங்களை அறியவேண்டும். சிரேஷ்டமான பலனைக் கொடுக்கும் சாமானியமான ஆஸனங்களில் பூஜை செய்தால், சாமானிய பலனைக் கொடுக்கும். இவ்விதம் பலன்றரும் வாலாற்றைத் தெரிந்து சிரேஷ்டமான ஆஸனத்தைக் கற்பித்து இராமரை உபாஸனை செய்யவேண்டும். ஒவ்வொரு வருஷத்திலும் புதிதான ஆஸனத்தை ஆதாவுடன் ஏற்படுத்த வேண்டும். ஒரு வருஷத்துக்குமேல் ஒரே ஆஸனத்தில் பூஜை செய்வது சுபமாகாது. சீடனே! நீ முன் வினவிய ஆஸனத்தின் பேதங்களை நான் உனக்குக் கூறினேன். நீ கேட்ட இராமதோபத்ரத்தை வர்ணிக்கும் பிரஸக்தியில் ஸ்ரீ ராமருடைய ஒரு லீலை நினைவுக்கு வந்தது. அதைக் கூறுகிறேன் கேள்.

இராமச்சந்திரர் வருஷந்தோறும் சிராவண மாதத்தில் குருவின் வசனப்படி நாற்பது தங்கம் எடையுள்ள சொர்ணத்தினால் இலக்ஷம் லிங்கங்களைச் செய்து தினந்தோறும் ஸீதையுடன் பூஜித்து வந்தார். ஆயிரத்தெட்டு லிங்கங்களுடன் கூடின சிலாக்கியமான பத்ரமானது சிவனுக்கு மிகுதியான பிரீதியை விருத்திசெய்யும் ஆஸனம். அந்த ஆஸனத்தின் மத்தியிலுள்ள கமலத்தில் ஸ்ரீராமர் ஒரு லிங்கத்தை ஸ்தாபித்துப் பதினாறு வித உபசாரங்களுடன் பூஜித்து தக்ஷிணைக்காகச்சொர்ணமுத்திரையைக்கொடுத்து பிராம்மணரைப் பூஜித்து ஆஸனத்துடன் கூடின அந்த ஸ்தானத்தை ஆதாவுடன் தனித்தனியாகக் கொடுத்தார். இவ்விதம் முப்பத்து மூன்று நாட்களில் கோடி லிங்கங்களைத் தானஞ்செய்து இந்த விதமாகவே வருஷந்தோறும் சிராவண மாதத்தில் நடத்தினார். பிராம்மணர்கள் இரகுவீரர் கொடுத்த வஸ்திரம் ஆபரணம் இவைகளால் பரமானந்தமடைந்தார்கள். ஸீதாபதியானவர் சொர்ண நூற்களாலே செய்த ஆஸனங்களில் பூஜையைச்செய்து உத்யாபனத்தையும் ஹவனத்தையும் செய்தார்.

## விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! ஆயிரத்தெட்டு நாமங்களடங்கிய லிங்கதோபத்ரத்தின் பேதங்களை விஸ்தாரமாக உபதேசஞ்செய்ய வேண்டும். ஸ்ரீராமர் சொர்ண நூற்களால் கற்பித்த ஆஸனத்தைச் செய்து சொர்ணமய லிங்கங்களையும் செய்து திவ்யவஸ்திரங்கள் ஆபரணங்கள் இவைகளை இவ்விதம் செய்யச் சக்தியில்லாவிடில், எவ்விதம் விரதம் சித்திபெறும்? இந்த விஷயத்தைத் தெரிவிக்கவேண்டும்.

## ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

சக்தியிருந்தால் பட்டு வஸ்திரத்திலும் இல்லையாயின்கம்பளத்திலாவது அல்லது வஸ்திரத்திலாவது நூற்களாலாவது அமைக்க வேண்டும். அல்லது வெள்ளி தாம்பிரம் சொர்ணம் ஸ்படிகம் இந்திரநீலம் மரம் சந்தனம் கோமயம் மண் இவைகளால் லிங்கங்களைச் செய்து தன் சக்திக்குத் தக்கபடி பிராம்மணர்களைப் பூஜிக்க வேண்டும். இப்போது லிங்கதோ பத்ரத்தின் அமைப்பைச் சொல்லுகிறேன்.

அகலத்திலும் நீளத்திலும் இருநூற்றுப் பதினெட்டு ரேகைகள் சிவக்தவர்ண முள்ளவைகளாக அமைக்க வேண்டும். அவைகளுடைய ஸ்தானங்களுக்கு ஒன்றுடன் முன் சொன்ன கணக்கு ஏற்படும். ஆறுவது ஸ்தானத்திற்கு மேல் எல்லா விடங்களிலும் மஞ்சள் வர்ணமுள்ள பதினான்கு மண்டலங்கள். அவைகளில் லிங்கம் முதலியவைகளைப் புத்தியினாலே செய்து கொள்ளவேண்டும். நான்கு மூலைகளில் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரர்களையும் அதற்கு முன்னால் நான்கு பக்கங்களிலும் ஐந்து ஸ்தானங்களுடன் சங்கிலியையும் பதினொரு ஸ்தானங்களுடன் கூடின கொடியையும் முப்பது ஸ்தானங்களுடன் கூடின வாபியையும் பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின ருத்திரரையும் கிரமமாக எழுத வேண்டும். அதில் முதலாவது மண்டலத்திற்குக்கீழ் முப்பத்து மூன்று லிங்கங்களையும், முப்பத்து நான்கு வாபிகளையும், இருபத்து நான்கு ஸ்தானங்களுடன் கூடின பத்ரங்கள் இரண்டையும் அமைக்க வேண்டும்.

அவைகளுக்குமேல் இரண்டு ஸ்தானங்களுள்ள சங்கிலி, மஞ்சள் வர்ணமுள்ள சங்கிலி, பச்சை வர்ணமும், மூன்று ஸ்தானங்களுள்ளதுமான மற்றுமொரு சங்கிலி இவைகளிருக்க வேண்டும். வாபிகளுக்குமேல் சிவப்பு வர்ணமுள்ள ஸ்தானமென்றறியவேண்டும். அறுபத்தொரு ஸ்தானங்களுள்ளதும், மஞ்சள் வர்ணமுடையதுமான மண்டல மிருக்கவேண்டும். மற்றவைகளை முன்போலமைத்துக்கொள்க. இது இரண்டாவது வரிசை மூன்றாவது வரிசையை ஐம்பத்தொன்பது ஸ்தானங்கள், ஆறு ஸ்தானங்களுடன் கூடிய பத்ரம், எழு லிங்கங்கள், எட்டு வாபிகள் இவைகளுடனும் பாக்கியுள்ளவைகளை முன்போல் நாற்பத்தேழு ஸ்தானங்களுடனும் அமைக்கவேண்டும். நான்காவது வரிசை நாற்பத்தைந்து ஸ்தானங்களுடையது. பன்னிரண்டு ஸ்தானங்களுள்ள பத்ரம், ஐந்து வாபிகள், பத்ரத்திற்குமேல் நான்கு லிங்கங்கள், ஆறு ஸ்தானங்களுடன் சிவப்பு வர்ணமுள்ள கொடி, மும்மூன்று ஸ்தானங்களுடன்கூடிய மண்டலங்கள் இவைகளு முண்டு.

ஐந்தாவது வரிசை முப்பத்தொருஸ்தானங்களுடன் கூடியது. ஒன்பது ஸ்தானங்களுடன் பத்ரம், மூன்று வாபிகள், இரண்டு ருத்திரர்கள் பத்ரத்திற்குமேல் மூன்று ஸ்தானங்களுடன் சிவப்பு வர்ணமுள்ள சங்கிலி, பத்தொன்பது ஸ்தானங்களுடன் கூடிய மண்டபம் இவைகளையும் அமைக்கவேண்டும். முன்னுலிருக்கும் வரிசைகள் பதினேழு ஸ்தானங்களுடன் கூடியவைகள். நான்கு மூலைகளுக்குச் சமமாக ஸர்வதோ பத்ரத்தை அமைக்க வேண்டும். அதன் கிரமத்தைக் கூறுகிறேன். மூன்று ஸ்தானங்களுடன் வெண்மை வர்ணமுள்ள சந்திரன், கறுப்பு வர்ணமுள்ள ஐந்து ஸ்தானங்களுடன் கூடின சங்கிலிகள், அதற்குமேல் புறத்திலும் பக்கங்களிலும் பதினெட்டு ஸ்தானங்களுடன்கூடின லிங்கம் பதின்மூன்று ஸ்தானங்களுடன் வாபிகள், நான்கு ஸ்தானங்களுடன் இரண்டு பத்ரங்கள் தெற்கு, கிழக்கு, வடக்கு, மத்தி இவைகளில் மூன்று வாபிகள் ஒன்பது ஸ்தானங்களுடன் கூடிய பத்ரம் பத்து ஸ்தானங்களுடன் கூடிய கொடிகள், கொடிகளுக்கு மேற்பக்கத்தில் ஆதியிலும் அந்தத்திலும் பச்சை வர்ணமுள்ள இரண்டு

ஸ்தானங்கள் மத்தியில் ஒரு கொடி, ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின பத்ரம், அதற்குமேல் இரண்டு ஸ்தானங்களுடன் கூடிய சிவப்பு வர்ணமுள்ள சங்கிலி, வாபிகளுக்குமேல் சிவப்பு வர்ண முள்ள ஸ்தானம் பக்கங்களில் வெண்மை வர்ணமுள்ள இரண் டிரண்டு ஸ்தானங்கள் ஐந்து ஸ்தானங்களுடன் கூடிய மண்டலம் இவைகளை அமைக்கவேண்டும். ஒன்பது ஸ்தானங்களுடன் கூடி யதும் சிவப்பு வர்ணமுள்ளதும், எட்டுத் தளமுள்ளதுமான பத் ரத்தை மஞ்சள் வர்ணமுள்ள மொட்டுடன் அமைக்கவேண் டும். அந்தப் பத்மத்திற்கு வெளிப்பக்கத்தில் உள்ள மண்டலங் கள் மஞ்சள், வெண்மை, சிவப்பு, கறுப்பு, இவ்வர்ணங்களுள்ள வைகளா யிருக்கவேண்டும். கிரீடம் போன்ற நூற்றிருபத் தொரு நாமங்களடங்கிய லிங்கதோபத்ரமானது எல்லாப் பத்ரங் களுக்கும் கிரீடம்போன்றது. மாணவனே! வேறுவிதங் கூறுகி றேன் கேள். அகலத்திலும் நீளத்திலும் நூற்று மூன்று ரேகை களும் மத்தியிலுள்ள இடங்களில் நூற்றிரண்டு லிங்கங்களும் நான்கு திசைகளிலும் ஒன்பது, எட்டு, ஆறு, நான்கு, இரண்டு, ஒன்று லிங்கங்களும், லிங்கங்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் அதிகமான வாபிகளும் இருக்கவேண்டும். ஆறு வரிசைகளில் மண் டலங்கள் அதற்குமேல் வாபிகள், மூலைகளில் சந்திரன், சங்கிலி கொடி இவைகளைக் கிரமமாக அமைக்கவேண்டும். பத்தொன் பது ஸ்தானங்களுடன் இருபத்துநான்கு லிங்கங்களும், பதி னெட்டு வாபிகளும் கிரமமாக முப்பத்தாறு இருபது, இருபத் தைந்து, முப்பது, முப்பத்தாறு, இருபது இந்தப் பத்ரங்களைக் கடைசி வரிசைக்கு அருகிலும் ஏற்படுத்தவேண்டும். ஒரு வரிசை யில் ஆறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு இரண்டு பத்ரங்க ளிருக்கவேண்டும். அதற்குமேல் ஸர்வதோபத்ரம் அதில் வாபி இருபத்துநான்கு ஸ்தானங்களுட னிருக்கவேண்டும். அதன் பிறகு மண்டலத்தின் கடைசியில் சிவப்பு வர்ணமுள்ள பதினாறு ஸ்தானங்களுடன் கூடின பத்மத்தை ஏற்படுத்த வேண்டும். கறுப்பு வர்ணமுள்ள லிங்கம், சங்கிலி பச்சைவர்ணமுள்ள கொடி, சிவப்பு வர்ணமுள்ள பத்ரம், சுத்த வர்ணமுள்ள பத்மம் வாபி இவைகளை யமைக்கவேண்டும்.

நூற்றிருபத்தொரு நாமங்களடங்கிய லிங்கதோபத்ரம் கூறுகிறேன் கேள்—இது வேறுவிதம். அகலத்திலும் நீளத்திலும் எண்பத்தாறு ரேகைகளும், எண்பத்தைந்து ஸ்தானங்களும், எங்கும் வரிசைகளும் உண்டு. அவைகளில் ஆறு ஆறு ஸ்தானங்களுக்குக் கடைசியில் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமும் நான்கு பக்கங்களிலும் இந்தக் கிரமமாகவே நான்கு மண்டலமும் மிருக்கவேண்டும். அந்த வரிசைகளுக்குள்ளிருக்கும் ஸ்தானங்களில் தன் புத்திக்குத் தக்கபடி லிங்கம் முதலியவைகளை அமைத்துக்கொள்ளவேண்டும். மூலைகளில் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரன் அதுமுதல் சங்கிலி பிறகு கொடி பிறகு பத்ராம் வாபி லிங்கம் இவைகள் கிரமமாக ஏற்படும். அவைகளில் முதல் வரிசையில் ஐந்து ஸ்தானங்களுள்ள சங்கிலி பதினொரு ஸ்தானங்களுடன் கொடி ஆறு ஸ்தானங்களுடன் சங்கிலி, ஒரு ஸ்தானத்துடன் பத்ராம், பதினெட்டு உள்வீடுகளுடன் வாபி, இவைகளைக் கிரமமாக அமைக்கவேண்டும். ஒன்பது ஸ்தானங்களுடன் இரண்டு ருத்திரர்கள், பத்து வாபிகள், இரண்டு பத்ராம் இவைகளிருக்கவேண்டும். இரண்டாவது வரிசையில் பதின்மூன்று ஸ்தானங்களுடன் வாபி,பதினாறு ஸ்தானங்களுடன் பத்ராம்,எட்டுலிங்கங்கள், ஒன்பது ஸ்தானங்களுடன் வாபிகள் இவைகளையும் பாக்கியுள்ளவைகளையும் அமைக்கவேண்டும்.

மூன்றாவது வரிசையில் நான்கு ஸ்தானங்களுடன் பத்ரமும் பாக்கியுள்ளவைகள் முன்போலவு மிருக்கவேண்டும். எட்டு வாபிகள், எழு ருத்திரர்கள் கிரமமாக ஏற்படும்.

நான்காவது வரிசையில் நான்கு வாபிகளும், இரண்டு ருத்திரர்களும், இருபது பத்திரங்களு மிருக்கவேண்டும். பாக்கியுள்ளயாவும் முன்போலிருக்கவேண்டும். நான்காவது மண்டலத்திற்கு மேல் ஐந்தாவது மண்டலத்தின் கடைசியில் ஒரு மண்டலமு மிருக்கவேண்டும்.அந்த வரிசையில் இரண்டு சங்கிலிகளுடன் ஒரு ஸ்தானமுள்ள கொடி, இரண்டு ஸ்தானங்களுடன் கூடிய சந்திரன் இவைகளை முன்போல் அமைக்கவேண்டும். அவ்வாறு ஸ்தானங்களுடன் கூடிய இரண்டு பத்ரங்களிருக்கவேண்டும். மற்ற

இரண்டு பத்ரங்கள் ஒன்பது ஸ்தானங்களுள்ளவைகள்; அங்கங்கு பதின்மூன்று ஸ்தானங்களுடன் வாபியை ஏற்படுத்தவேண்டும். இரண்டு பத்ரங்களுக்குமேல் ஆறு ஆறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்கள் சங்கிலிக்காக சிலாக்கியமான ஸ்தானங்கள் இவைகளை அமைக்கவேண்டும். அதற்குமேல் ஐந்தாவது வரிசைக்குமேல் ஒருமண்டலத்தை அமைக்கவேண்டும். இரண்டுக்கும் மத்தியில் பதின்மூன்று ஸ்தானங்களுடன் வாபியையும் அவ்வாறு ஸ்தானங்களுடன் இரண்டு பத்ரங்களையும் அமைக்கவேண்டும். பாக்கியுள்ளவைகளை முன் போலவே அமைக்கவேண்டும். கடைசியில் பத்து ஸ்தானங்களுடன் சித்ரவர்ண முள்ள அல்லது சிவப்பு வர்ணமுள்ள பத்மத்தை அமைக்கவேண்டும். வெண்மை வர்ணமுள்ள சங்கிலி, பச்சை வர்ணமுள்ள கொடி, மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு சங்கிலி, சிவப்பு வர்ணமுள்ள பத்ரம், வெண்மை வர்ணமுள்ள வாபி, கறுப்பு வர்ணமுள்ள லிங்கம் இவைகளையும், லிங்கத்திற்கு மத்தியிலுள்ள ஸ்தானங்களையும் அழகுள்ளவைகளாக அமைக்க வேண்டும். பாக்கியுள்ள இரண்டாவதில் முப்பத்தொரு ஸ்தானங்களுடன் கூடின லிங்கங்களையும், பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்களையும் அமைக்கவேண்டும். மூன்றாவதில் இருபத்தொன்பது ருத்திரர்கள் அவ்வாறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்கள் இவைகளை அமைக்கவேண்டும். நான்காவதில் இருபத்தாறு லிங்கங்கள் பன்னிரண்டு பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்கள் இவைகளை அமைக்கவேண்டும். ஐந்தாவதில் இருபத்துநான்கு ருத்திரர்கள் ஒன்பது ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்கள் இவைகளை அமைக்கவேண்டும். ஆறாவதில் பன்னிரண்டு லிங்கங்களும் அவ்வாறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்களும் ஏழாவதில் பத்தொன்பது லிங்கங்களும் பன்னிரண்டு பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடின பத்ரங்களும், இருக்கவேண்டும். எட்டாவதில் பதினேழு ருத்திரர்கள் ஒன்பது ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின இரண்டுபத்ரங்கள் இவைகளை அமைக்கவேண்டும். ஒன்பதாவதில் பதினான்கு ருத்திரர்கள் பதினாறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்

கள் இவைகளை அமைக்கவேண்டும். பத்தாவதில் பன்னிரண்டுஸ்தானங்களுள்ள ருத்திரர்கள், பன்னிரண்டு பன்னிரண்டு ஸ்தானங்களுள்ள இரண்டு பத்ரங்க ளிருக்கவேண்டும். பதினொன்றாவதில் பத்து ருத்திரர்கள் ஒன்பது ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்கள் இவைகளை அமைக்கவேண்டும். பன்னிரண்டாவதில் ஏழு லிங்கங்கள் பதினாறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்களிருக்கவேண்டும். பதின்மூன்றாவதில் ஐந்து ருத்திரர்கள் பன்னிரண்டு பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்களிருக்கவேண்டும். பதினான்காவதில் மூன்று லிங்கங்கள் ஒன்பது ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்களிருக்க வேண்டும். கடைசியில் நடு ஸ்தானத்தில் சிலாக்கியமான ஸர்வதோ பத்ரத்தை எழுதவேண்டும். மூன்று ஸ்தானங்களுடன் கூடின சந்திரனும் உண்டு. ஆறு ஸ்தானங்களுடன் கூடின சங்கிலி பதின்மூன்று ஸ்தானங்களுடன் கூடின கொடி, இருபத்தைந்து ஸ்தானங்களுடன் கூடின வாபி, மண்டலத்திற்கு மத்தியில் பதினாறு பதினாறு ஸ்தானங்களுடன் கூடின இரண்டு பத்ரங்கள், அதற்கு மத்தியில் ஐந்து ஐந்து ஸ்தானங்களுடன் கூடின பத்மம் இவைகளை அமைக்கவேண்டும். அந்தப் பத்மம் பலவித வர்ணமுள்ள சந்திரன் கறுப்பு வர்ணமுள்ள சங்கிலி வெண்மை வர்ணமுள்ள வாபி கறுப்பு வர்ணமுள்ள ருத்திரன் சிவப்பு வர்ணமுள்ள பத்மம் இவைகளை எழுதவேண்டும். கறுப்பு வர்ணமுள்ள கொடியும் ருத்திரரும் தோள்பக்க மிருக்கவேண்டும். மத்தியில் உள்ள ஸ்தானங்களைத் தன்னிஷ்டப்படி சித்திர வர்ண முள்ளவைகளாக அமைத்துக்கொள்ள வேண்டும். பாக்கியுள்ள ஸ்தானங்களில் புத்திக்குத் தக்கபடி சங்கிலிகளை அமைக்க வேண்டும். வெண்மை சிவப்பு, கறுப்பு இந்த வர்ணமுள்ள மூன்று மண்டலங்களைக் கடைசியில் அமைக்கவேண்டும். முன் பக்கத்தில் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலங்களை அமைத்துப் பின்பு முற்கூறிய மூன்று மண்டலங்களை அமைக்கலாம். இம் மாதிரி தெரிந்துகொண்டு விருத்தி செய்துகொள்ளவேண்டும். நான்கு மண்டலத்திலும் இவ்விதமே தெரிந்து கொள்ளவேண்

டும். இது ஆயிரத்தெட்டு லிங்கங்களிலுண்டானது என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இது ஒருவிதம்; வேறுவிதம் கூறுகின்றேன் கேள்—

கிழக்கிலும் வடக்கிலும் இருநூற்று ஐம்பத்தேழு ரேகைகளும் ஆறுவது ஸ்தானத்தின் கடைசியில் மஞ்சள் வர்ணமுள்ள பதினேழு மண்டலங்களும் பதினேழு லிங்கங்களு மிருக்கவேண்டும் ஒன்றுவது இரண்டாவது ரேகைகளில் இருபத்தொன்பது மண்டலங்களும் மூன்றுவதில் இருபத்தேழு மண்டலங்களுமிருக்கவேண்டும். இனிச் சொல்லுவதைக் கவனித்துக்கேள். இருபத்தைந்து இருபத்துமூன்று ; இருபத்திரண்டு, இருபது, பதினெட்டு, பதினேழு, பதினைந்து, பதின்மூன்று, பதினொன்று, பத்து, எட்டு, ஆறு, நான்கு, மூன்று, ஒன்று இம்மண்டலங்களை நான்காவது முதல் கிரமமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொரு வரிசையிலும் லிங்கங்களைக்காட்டிலும் ஒரு வாபி அதிகமாக இருக்கவேண்டும். இருபத்துநான்கு ஸ்தானங்களுடன் கூடினது லிங்கம், பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடினது வாபி. பத்ரங்களின் எண்ணிக்கைகளின் கிரமத்தை அநுசரித்தே சொல்லப்போகிற விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஒன்று, ஐந்து ஒன்பது, பதின்மூன்று, பதினேழு இந்தப் பங்திகளில் நான்கு ஸ்தானங்களுடன் கூடின பத்ரமிருக்கவேண்டும். இரண்டாவது ஆறுவது பத்தாவது பதினொன்றுவது இவைகளில் இருபத்தைந்து ஸ்தானங்களுடன் கூடின பத்ர மிருக்க வேண்டும்.

மூன்று, ஏழு, பதினொன்று பதினைந்து இந்த வரிசைகளில் முப்பது ஸ்தானங்களுடன் கூடின பத்ரமிருக்கவேண்டும்; பிறகு நான்காவது வரிசையில் இருபத்தாறு ஸ்தானங்களுடன் கூடின பத்ரமும், எட்டு, பன்னிரண்டு, பதினாறு இவ்வரிசைகளில் பதினாறு ஸ்தானங்களுடன் கூடின பத்ரமும், எல்லா மூலைகளிலும் சங்கிலிகளுடன் ஸ்தானங்களு மிருக்கவேண்டும். இவைகளுடன் கூடினசங்கிரமை அமைக்கவேண்டும். ஐந்து ஸ்தானங்களுடனும் பதினொரு ஸ்தானங்களுடனும் கூடின கொடியை மத்தியில்

அமைக்கவேண்டும். ஸர்வதோபத்ரம் இருபத்துநான்கு ஸ்தானங்களையுடைய வாபி, ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின வாபி, ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின பத்ரம் இவைகளை நான்கு பக்கங்களிலும் அமைக்கவேண்டும். மண்டலத்திற்கு மத்தியில் தன்னிஷ்டப்படி சித்திர வர்ணமுள்ளது, சிவந்த வர்ணமுள்ளதுமான பத்மத்தையும், கறுப்பு வர்ணமுள்ள லிங்கத்தையும், சங்கிலியையும், சிவப்பு வர்ணமுள்ள பத்ரம் வெண்மை வர்ணமுள்ள வாபி, வெண்மை வர்ணமுள்ள சந்திரன் கறுப்பு வர்ணமுள்ள கொடி இவைகளையும் அமைக்கவேண்டும். பாக்கியுள்ள ஸ்தானங்களை, பத்ரம் முதலியவைகளை அமைப்பதற்கு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். கடைசியில் மஞ்சள், வெண்மை, கறுப்பு, சிவப்பு இவ்வர்ணங்களுள்ள மண்டலங்களை ஏற்படுத்தவேண்டும். இது ஆயிரத்தெட்டு நாமங்களடங்கிய லிங்கதோபத்ரம். இவ்விதம்விகற்பத்தினால் இந்தராசனையை இரண்டுவிதமாகக் கூறினேன். பிறகு உனக்கு வேறு விதமாக மற்றொரு விஷயம் சொல்லுகிறேன்—

நாற்றிருபத்தொரு லிங்கங்களுடன் கூடின லிங்கதோபத்ரம் என்பது கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு இத்திசைகளில் பதினாறு ரேகைகளையுடையது. லிங்கங்களுடைய எண்பத்தேழு ஸ்தானங்களும் ஐந்து வரிசைகளுமுண்டு. இவ்வரிசைகளில் முதலாவது ரேகையின் விஸ்தாரத்தை நானுனக்குக் கூறுகிறேன்—

மூலைகளில் தனித்தனியாக மூன்று ஸ்தானங்களுடன் வெண்மை வர்ணமுள்ள சந்திரனும், அதற்கு முன்னால் கறுப்பு வர்ணமுள்ள ஐந்து ஸ்தானங்களுள்ள சங்கிலியும் அதற்கு இருபக்கங்களிலும் பதினொரு பதினொரு ஸ்தானங்களுள்ள பச்சை வர்ணமுள்ள கொடிகளும், பிறகு ஆறு ஸ்தானங்களுடன் மஞ்சள் வர்ணமுள்ள இரண்டு சங்கிலிகளும், பதினாறு ஸ்தானங்களுள்ள சிவப்பு வர்ணமுள்ள பத்ரமுமிருக்கவேண்டும். இருபக்கங்களிலும் பதினெட்டு ஸ்தானங்களுடன் வெண்மை வர்ணமுள்ள பத்து வாபிகளும், பதினெட்டு ஸ்தானங்களுடன் கறுப்பு வர்ணமுள்ள ஒன்பது லிங்கங்களு மிருக்கவேண்டும். பத்ரத்திற்குமேல் இரண்டு

ஸ்தானங்களுடன் கூடிய சிவப்பு வர்ணமுள்ள இரண்டு சங்கிலிக ளிருக்கவேண்டும். மத்தியில் பச்சை வர்ணமுள்ள சங்கிலி மூன்று ஸ்தானங்களுள்ளதா யிருக்கவேண்டும். வாபிகளுக்கு மேல் சிவப்பு வர்ணமுள்ள இரண்டு ஸ்தானங்களும் பச்சைவர்ண முள்ள ஏழு ஸ்தானமுமிருக்கவேண்டும். லிங்கத்தின்மேல் இரு பக்கங்களிலும் வெண்மை வர்ணமுள்ள ஸ்தானங்கள் இரண் டிருக்கவேண்டும். இவ்விதம் எங்கும் மஞ்சள் வர்ணமுள்ள மண் டலமென்றறியவேண்டும். அந்த முதல்வரிசை எண்பத்தேழு ஸ்தானங்களுடன் கூடியது. இரண்டாவது பங்தியானது எழு பத்து மூன்று ஸ்தானங்களுடன் கூடியது. அதைக் கூறுகிறேன்.

சந்திரன் சங்கிலி கொடி இரண்டு சங்கிலிகள் இவைகளை முன்போலமைத்துக்கொள்க. இருபது ஸ்தானங்களுடன் கூடின பத்ரம் பதின்மூன்று ஸ்தானங்களுடன் கூடின ஒன்பது வாபி கள் பதின்மூன்று ஸ்தானங்களுடன் கூடின எட்டு லிங்கங்கள் பத்ரங்களுக்குமேல் இரண்டு ஸ்தானங்களுள்ள இரண்டு சங் கிலிகள் இவைகள் சிவப்பு வர்ணமுள்ளவைகளாக இருக்க வேண்டும். மற்ற ஸ்தானங்களை உசிதம்போல் புத்திக்குத்தகுந்த படி அமைக்கவேண்டும். அல்லது நான்காவது மண்டலத்திற்கு மேல் பதினோராவது ஸ்தானத்திற்குப் பின் மத்தியில் மண்ட லத்தை அமைக்கவேண்டும். மூலையில் முற் கூறியதுபோல் சந் திரனை அமைக்க வேண்டும். சங்கிலி பத்து ஸ்தானங்களுள்ள தாகவும் கொடி இருபத்தொரு ஸ்தானங்க ளுள்ளதாகவும் இருக்கவேண்டும். பன்னிரண்டு ஸ்தானங்களுடன் மற்றொரு சங் கிலி, முப்பது ஸ்தானங்களுடன் கூடின மற்றொரு பத்ரம் அறுபத்தொரு ஸ்தானங்களுடன் கூடின வாபி இவைகளை நன்றாக ஏற்படுத்தவேண்டும். அல்லது ஏழு எட்டு இந்த ஸ்தா னங்களில் இரண்டு பத்ரங்களை அமைத்து அந்த ஸ்தானங்களில் லிங்கங்களின் வரிசைகளைக் கிரமமாக ஏற்படுத்த வேண்டும். ஒன் பது, எட்டு, ஆறு, மூன்று இந்தப் பங்திகளில் முற்கூறியவை களை அமைக்க வேண்டும். பாக்கியுள்ளவைகளை முற்கூறிய படியே அமைத்துக்கொள்க. அவைகளிலுள்ள விசேஷங்களாவன.

அந்த பத்ரங்களில் பதினாறு ஸ்தானங்களுடன் ஆறு பத்ரங்களும் ஸர்வதோ பத்ரமு மிருக்கவேண்டும் முன்போல் மஞ்சள் வெண்மை சிவப்பு கறுப்பு இந்தவர்ணமுள்ள மண்டலங்கள் வெளிப்பக்கத்தி லிருக்கவேண்டும். இது நூற்றெட்டு நாமங்க ளடங்கிய லிங்கதோபத்ரம். வேறு விதமாகவும் கூறுகிறேன், கேள்.—

அகலத்திலும் நீளத்திலும் எழு, பத்து, இரண்டு இந்த ரேகைகள் சிவப்புவர்ண முள்ளவைகளாகவிருக்கவேண்டும். அந்த ரேகைகளுக்குள் இருக்கும் ஸ்தானங்களில் நான்கு இரண்டு மூன்று இந்த ஸ்தானங்களைப் புத்தியால் அறிந்து அமைக்கவேண்டும். நான்கு பக்கத்தில் மண்டலமும் இருக்கவேண்டும்.

பிறகு ஆறுவதின் கடைசியில் நான்கு மண்டலங்கள், அங்கு நான்கு பக்கங்களிலும் மூலையிலும் மூன்று ஸ்தானங்களுடன் கூடிய சங்கிலி, பதினொரு ஸ்தானங்களுடன் கூடிய கொடி, இரு பத்து நான்கு ஸ்தானங்களுள்ள லிங்கம், பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடிய வாபி, ஒன்பது, எழு, ஐந்து, இரண்டு இரண்டு இக்கணக்குள்ள ருத்திரர்கள் இவைகளை யமைக்கவேண்டும். பிறகு ஐந்து பங்திகளும் அவைகளில் ஒருவாபி அதிகமாகவும் நான்கு லிங்கங்கள் பதின்மூன்று ஸ்தானங்களுடன் இரண்டு வாபிகளு மிருக்கவேண்டும். ஆறு ஒன்பது பன்னிரண்டு ஆறு ஆறு இந்த எண்ணிக்கையுள்ள பத்ரங்கள் கிரமமாக உண்டாகும். ஸர்வதோ பத்ரத்தில் நான்கு ஸ்தானங்களுடன் வாபியும் ஒன்பது ஸ்தானங்களுடன் கூடின பத்ரமும் பாக்கியுள்ளவைகளை முன்போலவும் அமைக்கவேண்டும். பிறகு மத்தியில் மண்டலமும் அம்மண்டலத்தில் பத்மமும் வெண்மைவர்ணமுள்ள சந்திரனும் கறுப்புவர்ணமுள்ள சங்கிலியும் கறுப்புவர்ணமுள்ள கொடியும் சிவப்பு வர்ணமுள்ள பத்ரமும் வெண்மை வர்ணமுள்ள வாபியும் கறுப்பு வர்ணமுள்ள லிங்கமும் கடைசியில் மஞ்சள் வெண்மை, சிவப்பு கறுப்புவர்ணங்களுள்ள மண்டலங்களு மிருக்கவேண்டும். மத்தியிலுள்ள மண்டலங்கள் மஞ்சள் வர்ணமுள்ளவைகளா யிருக்கவேண்டும்.

நாற்றெட்டு லிங்கதோ பத்ரம் கூறுகிறேன்கேள்---அகலத்திலும் நீளத்திலும் சிவப்பு வர்ணமுள்ள ரேகைகளை அமைக்க வேண்டும். அவைகளுக்குள்ளே ஆறு மண்டலங்களும் அதற்கு மேல் மூன்று மண்டலங்களும் மூன்று இரண்டு ஒன்று லிங்கங்களின் அமைப்பும் நான்கு ஸ்தானங்களும் பதினெட்டு ஸ்தானங்களுடன் வாபியுமிருக்கவேண்டும். முப்பத்தாறு இருபது ஒன்று இந்த ஸ்தானங்களுடன் கூடிய பத்ரமும் அந்தப்பத்ரத்தின் பக்கத்தில் மஞ்சள் வர்ணமுள்ள மற்றொரு பத்திரமும் உண்டு. முதலாவது பத்ரம் ஒன்பது ஸ்தானமுள்ளது. இரண்டாவது பத்ரம் ஆறு ஸ்தானங்களுடையது. வாபிக்குப் பக்கத்தில் ஆச்சரியமான ஸ்தானத்துடன் சங்கிலியும் உண்டு. ஒவ்வொரு பக்கத்திலும் ஐந்து ஸ்தானமுள்ள சங்கிலியுண்டு. பதினொரு ஸ்தானங்களுடன் கொடியும் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரனும் இருபத்து நான்கு ஸ்தானங்களுடன் வெகு அழகான லிங்கமும் மத்தியில் சந்திரனும் விசித்திரமாகிய ஸ்தானத்துடன் சங்கிலியும் ஆறு ஸ்தானத்துடன் கொடியும் பன்னிரண்டு ஸ்தானத்துடன் பத்ரமும் இருபத்தெட்டு ஸ்தானத்துடன் லிங்கமும் லிங்கத்தின்மேல் இருபக்கங்களிலும் மஞ்சள் வர்ணமுள்ள ஸ்தானங்களும் கறுப்பு வர்ணமுள்ள லிங்கமும் வெண்மை வர்ணமுள்ள வாபியும் சிவப்புவர்ணமுள்ள பத்ரமும் வெண்மை வர்ணமுள்ள சந்திரனும் கறுப்புவர்ணமுள்ள சங்கிலியும் பச்சைவர்ணமுள்ள கொடியும் இருக்கவேண்டும். மண்டலம் மஞ்சள் வர்ணமுள்ளது. ஸ்தானங்கள் சிலாக்கிய மானவைகள். இருபத்தைந்து லிங்கங்களுக்குத் தன்னிஷ்டப்படி வர்ணங்களை அமைத்துக் கொள்ளலாம். வெளியில் உள்ள மண்டலங்கள் மஞ்சள் வெண்மை சிவப்பு கறுப்பு இவ்வர்ணங்களுள்ளவைகளாக இருக்கவேண்டும்.

மாணவனே! வேறுவிதமுண்டு கூறுகிறேன்கேள்---நாற்பத்தொரு ஸ்தானங்களில் இருபத்தைந்து லிங்கங்களின் ஆஸனங்களையும் ஆறுவரிசைகளுக்குமேல் இரண்டு மண்டலங்களையும் அவைகளுக்குக்கீழ் லிங்கங்களின் இரண்டுவரிசைகளையும் ஏற்படுத்தவேண்டும். பதினெட்டு ஸ்தானங்களுடன் லிங்கம்,பதின்மூன்று

ஸ்தானங்களுடன் வாபி மூன்று ஸ்தானங்களுடன் பத்மம், ஐந்து ஸ்தானங்களுடன் சங்கிலி, பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கொடி, இரண்டு லிங்கங்கள் உள்ள முதல்வரிசை இவைகளை ஏற்படுத்த வேண்டும். முதலாவது ஒன்பது ஸ்தானங்களுடன் ஒரு பத்ரத்தையும் ஆறு ஸ்தானங்களுடன் மற்றொரு பத்ரத்தையும் மண்டலங்களுக்குக் கடைசியில் முப்பத்துமூன்று உள்ள ஸ்தானங்களோடு லிங்கத்தையும் அமைக்கவேண்டும். அடியில் உள்ள ஸ்தானமும் தோள்பக்கத்திலுள்ள ஸ்தானமும் ஏழு ஏழு ஸ்தானங்களையுடையன. ஆறு ஸ்தானங்களுடன் கூடிய சிரசும், ஐந்து ஐந்து ஸ்தானங்களுடன் கூடிய இரண்டு பக்கங்களும், மூன்று ஸ்தானங்களை உடைய இடையுமிருக்கவேண்டும். ருத்திரனுடைய நான்கு திசைகளிலும் ஒன்பது ஸ்தானங்களுடன் நான்கு பத்ரம், மூன்று ஸ்தானங்களுடன் சந்திரன், இரண்டு ஸ்தானங்களுடன் சங்கிலி, ஐந்து ஸ்தானங்களுடன் கொடி மூன்று ஸ்தானங்களுடன் மற்றொரு சங்கிலி இவைகளிருக்கவேண்டும். லிங்கத்தின் தோள்பக்கத்தில் உள்ள ஸ்தானங்கள் மஞ்சள் வர்ணமுள்ளவைகளாக இருக்கவேண்டும். மற்றுமுள்ள ஸ்தானங்களை இஷ்டப்படி பூர்த்தி செய்துகொள்ளலாம் வெளிப்பக்கத்தில் இருபத்தைந்து ருத்திரர்களுடன் நான்கு மண்டலங்களிருக்கவேண்டும். இவ்விரண்டும் பரமசிவனுக்கு மிகுந்த விருப்பத்தைக் கொடுக்கக் கூடியவைகள்.

மாணவனே, ஸம்ஸாரத்தை நிவிர்த்திசெய்ய வல்லமையுள்ள பிர்ம சொரூபத்தைக் குருவின் பாதகமலங்களை வணங்கி அதிபாத்ம சொரூபத்தை உண்டாக்குகிற கதையைக் கூறுகிறேன். இருபத்தைந்து எண்ணிக்கையுள்ள லிங்கதோபத்ரம் யாராலாவது கற்பிதமா அல்லது அநாதியா என்று சந்தேகமுண்டாயின் அதன் உண்மையைக் கூறுகிறேன். லிங்கதோபத்ரம் என்பது சப்தத்தின் அர்த்தத்தையுடையதாகவே ஆகும். லிங்கம் கமகம் என்றும் ஞானம் ஞாபகம் என்றும், அமிருதத்தை அளிப்பதால் வாபி என்றும், பத்ரங்களை அடைவதால் பத்ரமென்றும் சொல்லப்படுகிறது, வர்ணங்களும் பரமபுருஷனை உபாசிப்பதற்காகவே

எற்பட்டவைகள். அந்த லிங்கம் பரபிர்ம்மமென்றும், பத்ரம் மங்களம் என்றும் மங்களங்களுக்கு மங்களம் சிவம், சாந்தம் என்றும் வியக்தமாகத் தெரியவருகிறது. எவ்விடத்தில் சகல பூதங்களும் லயத்தை அடைகின்றனவோ எந்த இடத்திலிருந்து சகல பூதங்களும் உண்டாகின்றனவோ அந்தக் காரணத்தினல் பரமாகாச மென்றும் நிஷ்கள பரமசிவமென்றும் எற்படுகிறது. ஸத்துவம், இராஜஸம், தாமஸம் என்ற மூன்று குணங்களும் மாயையினல் சூழப்பட் டிருக்கின்றன. மனதாகிற சந்திரன் மகா மோகமாகிற தடை, சினேகமாகிற கொடி இவைகளால் இந்த பத்ரம் எங்கும் கடத்திலிருக்கும் ஆகாயம்போல் வியாபித்திருக் கின்றது. அங்கங்களும் வஸ்திரத்திலிருக்கும் நூல்போல் எங்கும் பரவியிருக்கிறது. அதனல் பன்னிரண்டு லக்ஷம் ஸ்தானங்கள் உண்டாயின. அந்த ஸ்தானங்களில் சித்தரிக்கப்பட்ட வஸ்தி ரம்போல் குணங்களைப் பூர்த்தி செய்யவேண்டும். முன் தத்து வம் ஒன்றுதான் இருந்தது. அதற்கு நான் பலவிதமாக ஆக வேண்டுமென்கிற விருப்பம் உண்டாகிறது "ஆத்மா ஒன்ருக இருந்தது" "தன்னைத்தான் செய்தார்" "பரமாத்மா மாயை களுடன் சேர்ந்தது" "ஒருவிதமாசப் பலவிதமாக" என்றும் வேதம் முறையிடுகிறது. இன்னும் மற்றுமுள்ள சுருதியின் பலத்தினல் பிர்ம்மத்தைத் தவிர வேறில்லை.

இவ்விதமிருந்தாலும் இவ்வுலகத்தில் உண்மை என்ற நினைவு மோகத்தினல் எற்படுகிறது. எதுவரையில் அகங்காரமுடையவனுக இருக்கிருனே, அதுவரையில் ஸம்ஸாரம் என்பதுண்டு. அகங்காரம் என்ற இருதயத்திலிருக்கும் முடிச்சு பேதத்தை அடைந்தால் ஸம் ஸாரபந்தம் இல்லையாம். இதற்காக வைராக்கியத்துடன் கடைத் தேறும் வழியைத் தேடிக்கொண்டு பிர்ம்ம சொரூபம் போன்ற சற்குருவை அடைந்து அந்தக் குருவினல் அறிவை அடைந்தவ னுகித் தன்னிடத்தில் பரமாத்மாவைத் தரிசித்து இந்த உலகத் தையும் மனதையும் எப்போதும் பிர்மம் என்ற பாவனையுடன் பார்க்கவேண்டும். ஈசுவரன் ஸகல பூதங்களுடைய மனதிலும் இருக்கிருர். அவர் மலமற்றவர், ஒருவராக இருப்பவர், இரண்

டாவதில்லாதவர், மேலானவர், முடிவில்லாதவர், பிரக்ஞை முதலிய இலக்ஷணங்களை உடையவர், நாசமில்லாதவர், ஸச்சிதானந்தர், அமரர், அஜரர். சுந்தர விக்ரகமுள்ளவர், விகாரமற்றவர், ஆகாரமில்லாதவர், வியாதி முதலியவைகளற்றவர், லிங்கம், ரூபம் இவைகளில்லாதவர், ஒன்று என்பதற்கும் வேறானவர், மாயையினால் லிங்கரூபம் உள்ளவர்போலிருக்கிறார். புருஷன் பிரகிருதி, அவ்யக்தம், அகங்காரம் என்ற நான்கு லிங்கங்களும் சிவனுக்கு இலக்ஷணங்களாகவே கூறப்படுகின்றன. காரியம் காரணம்பூதங்கள் இவைகள் ஒன்றாகின்றன; ஐந்தாகவும் ஆகின்றன. இவ்வைந்தும் ஸத்துவம், ராஜஸம் தாமஸம் ஆகிய எட்டு லிங்கங்களும் ஈசுவரனைச் சேர்ந்தவைகள். இந்திரியங்கள், மனம் புத்தி ஆகிய பன்னிரண்டு, இவைகளில் பரமேசுவரருடைய லிங்கங்களைத் தெரிந்துகொள்ள மார்க்கம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் காரணலிங்கங்கள் காரியலிங்கங்கள் நூறு, ஆயிரம், பதினாயிரம், கோடி இவ்விதக் கணக்காக இருக்கின்றன. எல்லா விஷயங்களும் பரமாத்மாவாகிய சிவனுக்கு ஞாபகமாகின்றன. உண்மையில் ஜாதி முதலியவைகளால் சூன்யமாயிற்று பரதத்துவம் விசாரிக்குமளவில், வஸ்திரத்தில் நூலிருப்பதுபோல், சிவனிடம் எல்லாம் நிறைந்திருக்கிறதென்று விளங்கும். பிந்துநாதம், அகாரம் முதலிய இந்த மூன்றும் பிர்ம்மா, சிவன், அரியெனப்படும். எல்லாம் பரமாத்மாதான். பிர்ம்மா, ருத்திரர் இவர்கள் தனித்தனியாக ஸத்யோஜாதர் முதலிய ஐந்து பேர்களுடன் கூடியவர்கள். சுத்தன், ஸாக்ஷீ, பிராக்ஞன், தைஜஸன், விசுவன், ஸத், சித், ஆனந்தம், நாமம், ரூபம், இவைகள் பிர்ம்மத்தைத் தவிர வேறில்லை என்று வேதங்கூறுகிறது. பிரதானம், மகத்து, அகங்காரம், ஐந்து தன் மாத்திரைகள் ஆகிய இவ்வெட்டுப் பிரகிருதியும் சாஸ்திரங்களில் காணப்படுகின்றன. இந்த எட்டு மூர்த்திகளை யுடைய சொரூபம் பவன், சர்வன் முதலான பெயர்களை அடைந்தது. இவைகள் எட்டு வசுக்களாக மாயையினால் எங்கும் விளங்குகின்றன. ஜோதி லிங்கத்தின் பன்னிரண்டும் பன்னிரண்டு சூரியர்களுடைய பெயரையுடையன. பத்து இந்திரி

யங்கள் மனம், புத்தி, நாமங்களிவைகளால் சத்சொரூபம் வியக்தமாகத் தெரியவருகின்றது. இந்திரியங்கள் பத்து, பிராணன் ஐந்து, போக்கியங்கள் ஐந்து, மனம் நான்கு, ஆத்மா இந்த இருபத்தைந்தும் தத்துவம் என்று பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. போகத்தை அநுபவிப்பதற்குரிய பிராணிகள் எண்பத்து நான்கு லக்ஷமெனக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. குணங்களின் பேதத்தினாலும் மயக்கத்தினாலும் பிராணிகளுடைய கருமங்களாலும் ஜாக்ரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி முதலிய அவஸ்தைகளில் போகத்திற்கு ஸ்தானங்கள் ஏற்படுகின்றன. போகம் அநுபவிக்கிறவன் அநுபவிக்கும்படி செய்கிறவன் எல்லாம்பிர்ம்ம சொரூபமேதவிர வேறில்லை. அத்தியாத்மம், அதிதைவம், அதிபூதம் இம்மூன்றும் ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணம் என்ற பெயருடன் கூடியவைகள். எல்லாம் பிர்ம்மசொரூபமே தவிர வேறில்லை. இந்த ஞானம், தியானம், விவேகம், வைராக்கியம், ஜீவன் ஈசுவரன் ஜகத்து இவைகளுடைய தோற்றம் சகலமும் ஆத்மசொருபமே தவிர வேறில்லை. "இது எல்லாம்" "எல்லாம் இது" "இந்த ஆத்மா" "இது எல்லாம் பிர்ம்மம்" என்று அனேகம் சுருதிகள் முறையிடுகின்றன. எங்கும் ஆத்ம சொரூபமெனக் காண்பது மேலான பதவியை அடையவேண்டுமென்ற எண்ணங்கொண்டவன், மனதின் ஒழிவுள்ளவன்: இந்திரிய நிக்ரகம் உள்ளவன், ஸகலத்தையும்விட, விருப்பமுள்ளவனா யிருக்கவேண்டும். விஷயங்கள் மானிடர்களைச் சுவாதீனப் படுத்திக்கொள்கின்றன. மோக்ஷமடைய வேண்டுமென்ற எண்ண முள்ளவன் இவைகளைத் தியாகம் செய்யவேண்டும். ஏகாந்தமான இடத்திலிருப்பவனாகவும், மிதமான ஆகாரமுடையவனாகவும் இருக்கவேண்டுமென்று பகவான் கூறியிருப்பது போதுமானது. நிரம்பவும் சொல்லவேண்டியதில்லை. சாஸ்திரத்தின் கருத்தை எடுத்துரைத்த விஷயமிது. வர்ணிக்கமுடியாததும், ஜடமாகாததும், இரண்டற்றதுமான ஒரு வஸ்துவானது எனக்குக் குருவினால் கொடுக்கப்பட்டது. அந்த வஸ்துவைச் சேவித்ததினால் எனக்கு நான் நீ மற்றவை எல்லாம் அந்த வஸ்துவாகவே காணப்படுகின்றன. சீக்கிரத்தில் அஞ்ஞானம் நீங்கிற்று. எங்கும் நிறைந்ததும், ஸத்

தியமும், கம்பீரமும், அவியாகிருதமும், சந்திரன், சூரியன், வாயு இவர்களுடன் கூடியதும் இப்பிரபஞ்சத்தை மூடிக்கொண்டிருப்பதுமான தேஜஸ் தோன்றியது.

அகலத்திலும் நீளத்திலும் நாற்பது ரேகைகள் சமமாகவும் அமைக்கவேண்டும். அவைகளுள் முப்பத்தொன்பதாவது ஸ்தானங்களில் இரண்டு மண்டலங்களைக் கற்பிக்கவேண்டும். ஏழாவது ரேகைக்குமேல் இரண்டு மண்டலமும் முதல்ரேகையைத் தவிர மற்ற ரேகைகளில் மண்டலங்களை இஷ்டப்படி செய்துகொள்ளவேண்டும். அவைகளுக்கு மத்தியில் நூற்றிருபத்தொரு ஸ்தானங்களில் பதினெட்டு ஸ்தானங்களுடன் ஒரு லிங்கமிருக்கவேண்டும். நான்கு நான்கு ஸ்தானங்களுடன் கூடின அண்டம் வாபி இவைகளையும் நான்கு பக்கங்களிலும் எட்டு ஸ்தானங்களுடன் பத்ரத்தையும் இரண்டு ஸ்தானங்களுடன் கூடிய சங்கிலியையும், மூன்று ஸ்தானமுள்ள சந்திரனையும், மூன்று ஸ்தானங்களுடன் கூடிய கொடியையும் மூன்று பக்கங்களிலும் ஐந்து ஸ்தானங்களுடன் கூடிய கொடிகளையும் அமைக்கவேண்டும். இரண்டாவது ரேகையில் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரன்,நான்குஸ்தானங்களுடன்சங்கிலி, ஒன்பது ஸ்தானங்களுடன் கொடி ஒன்பதுஸ்தானங்களுடன் மூன்றுபத்ரம்,பதின்மூன்றுஸ்தானங்களுடன் இரண்டு வாபிகள்,பக்கத்தில் இரண்டுஸ்தானங்களுடன் சிவப்புவர்ணமுள்ள இரண்டு சங்கிலிகள், நான்கு ஸ்தானங்களுடன் பச்சை வர்ணமுள்ள பத்ரம் இவைகளை ஒவ்வொரு பக்கத்திலும் முதலாவது ரேகைமுதல் சேர்க்கவேண்டும். ஒவ்வொரு பக்கத்திலும் நான்கு லிங்கங்கள், ஐந்து வாபிகள், பதினெட்டு ஸ்தானங்களுடன் கூடின லிங்கம் பதின்மூன்று ஸ்தானங்களுடன் வாபி, ஆறு ஸ்தானங்களுடன் பத்ரம், பதினொரு ஸ்தானத்துடன் கொடி, ஐந்து ஸ்தானத்துடன் சங்கிலி, மூன்று ஸ்தானங்களுடன் சந்திரன், லிங்கத்திற்குமேல் கறுப்பு வர்ணமுள்ள வீதி இவைகளைக் கொடிகளுடன் சேர்க்கவேண்டும். அல்லது ஆறு ஸ்தானங்களுக்கு மேல் மண்டலத்தை வரைந்து பிறகு, இரண்டு வரிசைகளில் மூன்று லிங்கங்கள் ஒரு லிங்கம் இவைகளை அமைக்கவேண்டும்.

முதலாவது பதினாறு ஸ்தானங்களுடன் பத்ரமொன்றும், பன்னிரண்டு ஸ்தானங்களுடன் பத்ரம் ஒன்றும் ஐந்து ஸ்தானங்களுடன் சங்கிலியும், பதினேரு ஸ்தானங்களுடன் கொடியும் அமைக்கவேண்டும். பிறகு நான்கு வாபிகளும் பிறகு இரண்டு வாபிகளும், அமைக்கவேண்டும். மற்றவைகள் யாவும் முன்போலவேயாம். வெளிப்பக்கத்தில் உள்ள மண்டலங்கள் மஞ்சள் வெண்மை சிவப்பு கறுப்பு இவ்வர்ண முள்ளவைகளென்றும், ஒவ்வொரு பங்திக்கு ஒவ்வொரு மண்டலமும் அதிகமென்றும் தெரிந்து கொள்ளவேண்டும். இது எழு சந்திரனுள்ள லிங்கமென்று பெயர் பெற்ற ஆஸனம். நான் இதை உனக்குக் கூறினேன். அல்லது இந்த ஆஸனத்தில் கிரமமாக மூன்று ஸ்தானங்களை ஏற்படுத்தி, ஆருவது ஸ்தானத்தின் கடைசியில் இரண்டு மண்டலங்களையும் லிங்கங்களையும் சேர்க்க வேண்டும். முதலாவது மூன்று லிங்கங்களும் இரண்டாவதிலுள்ள ஒரு லிங்கமும், இருபத்துநான்கு ஸ்தானங்களுடன் கூடியவைகள். லிங்கம் பதினெட்டு ஸ்தானங்களுள்ளது. முதலாவது நான்கு வாபிகளும், இரண்டாவது இரண்டு வாபிகளு மிருக்கவேண்டும். முதலாவது ஒன்பது ஸ்தானத்துடன் பத்ரமும், இரண்டாவது பன்னிரண்டு ஸ்தானத்துடன் கூடின பத்ரமும் சந்திரன் கொடி இவைகள் முற் கூறியவைகள்போலு மிருக்கவேண்டும். மத்தியில் லிங்கத்தை ஏற் படுத்தவேண்டும். இருபத்தெட்டு ஸ்தானங்களுடன் கூடினது அந்த லிங்கம். சிரசும் இடையும் நான்கு ஸ்தானங்களுள்ளன. இரண்டு வாபிகளும் பன்னிரண்டு பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடியவைகள். இரண்டு ஸ்தானங்களுடன் சங்கிலி ஐந்து ஸ்தானங்களுடன் கொடி மூன்று ஸ்தானங்களுடன் மஞ்சள் வர்ண முள்ள சங்கிலி, நான்கு திசைகளிலும் மத்தியிலும் பன்னிரண்டு ஸ்தானங்களுடன் கூடிய நான்கு பத்ரம், மூலையில் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரன், ருத்திருடைய சிரசுக்கு இருபக்கங்களிலும் நேத்திரங்கள், வெண்மை வர்ணமுள்ள இரண்டு ஸ்தானங்கள் இவைக ளிருக்கவேண்டும். பாக்கியுள்ள ஸ்தானங்களை இஷ்டப்படி லிங்கத்திற்குப் பக்கத்தில் பூர்த்தி செய்து

கொள்ளவேண்டும். வெளிப்பக்கத்தில் மஞ்சள், வெண்மை, சிவப்பு, கறுப்பு இவ்வர்ணங்களிருக்கவேண்டும். இது பதினேழு லிங்கங்களுடன் கூடிய லிங்கதோபத்ரம் என்று சொல்லப்படும். பத்து இந்திரியங்கள் ஐந்து பிராணன்கள் மனம் இந்தப் பதினாறும் கலைகள். பதினேழாவது ஸாக்ஷியாகிய ஆத்மா.

பன்னிரண்டு லிங்கங்களுடன் கூடின பத்ரத்தைச் சொல்லுகிறேன்கேள்—கிழக்கும் வடக்குமாக முப்பத்தாறுரேகைகளை ஏற்படுத்தவேண்டும். நூற்றுமுப்பத்தேழு ஸ்தானங்கள் மூன்றுஸ்தானங்களுடன் சந்திரன், மூலையில் ஆறுஸ்தானமுள்ள சங்கிலி, பதின்மூன்றுஸ்தானங்களுடன் கொடி, ஒன்பது ஸ்தானங்களுடன் பத்ரம், பத்ரத்திற்குமேல் மூன்று ஸ்தானங்களுடன் மஞ்சள் வர்ணமுள்ளசங்கிலி, பதின்மூன்றுஸ்தானங்களுடன் வாபி, பதினெட்டு ஸ்தானங்களுடன் லிங்கம் இவைகளை ஏற்படுத்தி, லிங்கங்களமைத்திருக்கும் பங்தியில் அழகுள்ள ஸ்தானங்களைப் பதினொன்காக ஏற்படுத்தவேண்டும். அவைகளுக்கு மேல்வரிசையில் பதினேழு ஸ்தானங்களுடன் நான்கு பக்கங்களில் பூஜை செய்யவேண்டிய பங்தியை வெண்மையாக அமைக்கவேண்டும். பூஜை செய்யும் வரிசைக்கு மத்தியில் உள்ள வரிசையில் எண்பது ஸ்தானங்களும் இரண்டு ஸ்தானங்களுக்கு மத்தியில் ஒரு மண்டலத்திற்குள்ளிருக்கும் ஸ்தானங்களின் ஸர்வதோபத்ரத்தையும் எழுதவேண்டும். இங்கு விஷயமாவது, ஆறு ஸ்தானமுள்ள சங்கிலி, பதின்மூன்று ஸ்தானமுள்ள கொடி, பன்னிரண்டு ஸ்தானத்துடன் பத்ரம், இருபத்தைந்து ஸ்தானங்களுடன் வாபி, பதினாறு ஸ்தானங்களுடன் மண்டலம் இவைகளை அமைக்கவேண்டும். மத்தியில் மொட்டு முதலியவைகளுடன் பத்ரம் ஒன்பது ஸ்தானங்களுள்ளதா யிருக்கவேண்டும்.

ஸத்துவம், இராஜஸம், தாமஸம் இந்தமூன்று குணங்களின்வர்ணம்போன்ற மூன்று மண்டலங்களை நான்குபக்கங்களிலும் அமைத்தல்வேண்டும். அங்கு துவாரங்களு மிருக்கவேண்டும். வெண்மை வர்ணமான சந்திரன் கறுப்பான சங்கிலி, நீலவர்ணமுள்ள கொடி, சிவப்புவர்ணமான பத்ரம், மஞ்சள் வர்ணமுள்ள மற்றொரு சங்

கிலி வெண்மை வர்ணமுள்ள வாபி, பக்கங்களில் கறுப்பு வர்ண முள்ள பன்னிரண்டு லிங்கங்கள், மஞ்சள் வர்ணமுள்ள மணடலம், ஐந்துவர்ணமுள்ள கமலம் மஞ்சள் வர்ணமுள்ள மொட்டு முதலிய வைகளுட னிருக்கவேண்டும்.

சீடனே வேறுவிதமாகக் கூறுகிறேன். வடகிழக்குப் பாக மாக இருபத்தேழு ரேகைகள், முப்பத்தாறு ஸ்தானங்களில் ஸர் வதோ பத்ரம் முன்னூற்று இருபத்து நான்கு ஸ்தானங்க ளுடன் முன்போல் இருக்கவேண்டும். அதற்கு நான்கு பக்கங்களி லும் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலங்க ளிருக்கவேண்டும். நூற் றெட்டு லிங்கங்களுடன் கூடிய லிங்கதோபத்ரமென்பது இது. இதற்கு நான்கு பக்கங்களிலும் பன்னிரண்டு லிங்கங்களையும் ஒவ் வொரு மூலையிலும் மூன்று ஸ்தானங்களுடன் பத்மத்தையும் ஏழு ஸ்தானங்களுடன் சங்கிலியையும் பதினான்கு ஸ்தானங்களுடன் கொடியையும் ஆறு ஸ்தானங்களுடன் பத்ரத்தையும் மூன்று சந்திரனையும் வாபியையும் வாபிக்குமேல் இருபத்தாறு ஸ்தானங்க ளுட ன் லிங்கத்தையும் பத்ரத்தையும் லிங்கத்திற்குப் பக்கத்தில் மஞ்சள் வர்ணமுள்ள ஆறு ஸ்தானங்களையும் லிங்கத்திற்கு மேல் கொடிகளில் கறுப்புவர்ணமுள்ள வீதியையும், நான்கு ஸ்தானங்க ளுடன் லிங்கத்தின் சிரசையும் அவ்விதமே வெளிப்பக்கத்தில் மண்டலங்களையும் அமைக்கவேண்டும். இவ்விதம் எல்லாவற்றை யும் முன்சொன்ன வர்ணங்களால் அமைக்கவேண்டும்.

கிழக்கும் தெற்குமாக இருபத்து நான்கு ரேகைகள், மூலை களில் ஐந்து ஸ்தானங்களுடன் சங்கிலி, பக்கத்தில் ஒன்பது ஸ்தா னங்களுடன் கொடிகள் நான்கு ஸ்தானங்களுடன் இலகு சங் கிலிகள் ஆறு ஸ்தானங்களுடன் கொடிகள் பிறகு பதினெட்டு ஸ்தானங்களுடன் லிங்கங்கள் பதின்மூன்று ஸ்தானகளுடன் மத்தியில் வாபிகள் பிறகு இரண்டு வீதியுடன் பீடம் இவைகளை ஏற்படுத்தவேண்டும். அந்தப் பீடத்தின் பாதங்கள் நான்காகும். அதற்கு துவாரங்களும் நான்காம்.

எண்பத்தொரு ஸ்தானங்களுடன் ஸ்வஸ்திகம் என்ற பத்ம மானது மூலைகளில் மூன்று ஸ்தானங்களுடன் கூடிய சங்கிலிக

ளுடன் இருக்கவேண்டும். இவைகளுக்கு நான்கு பக்கங்களிலும் நான்கு திசைகளிலும் பத்ரங்களிருக்கவேண்டும். பதினொரு ஸ்தானங்களுடன் இரண்டு கொடிகளும் மத்தியில் எட்டு ஸ்தானங்களுடனுவது ஒன்பது ஸ்தானங்களுடனுவது பத்மத்தையும் எழுதவேண்டும். இது லிங்கதோபத்ரம். கறுப்புவர்ணத்தினல் சங்கிலியையும் நீலவர்ணத்தினல் கொடியையும் சிவப்புவர்ணத்தினல் இலகுவான கொடியையும் அமைக்கவேண்டும். கறுப்புவர்ணமுள்ள லிங்கங்கள், வெண்மை வர்ணமுள்ள ஆஸனம், வெண்மை வர்ணமுள்ள பாதங்கள், மஞ்சள் வர்ண றுவாரங்கள் மத்தியில் சிவப்பு வர்ணமுள்ள சங்கிலிகளு மமைக்கவேண்டும். கொடி நீலவர்ணமுடையதாயும் பத்ரங்கள் மஞ்சள் வர்ணமுள்ளதாயும் தளங்கள் வெண்மை அல்லது சித்ரவர்ண முள்ளவைகளாயும் மூன்று ரேகைகள் வெண்மை சிவப்பு கறுப்பு இவ்வர்ணங்க ளுள்ளவைகளாயும் இருக்கவேண்டும்.

உயரமான ஸ்தானத்திலிருக்கும் லிங்கங்களுடன்கூடிய எட்டு லிங்கதோ பத்ரம் வெகு அழகுள்ளவை. அவைகளைக் கூறுகிறேன். ஸந்தோஷத்துடன் கேள்.

அகலத்திலும் நீளத்திலும் நான்கு பக்கங்களிலும் இருபத்தெட்டு ரேகைகளும் இருபத்தேழு ஸ்தானங்களில் ஆறுவது வரிசைக்குமேல் ஆறுமண்டலங்களும் மூலைகளில் மூன்று ஸ்தானங்களில் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரனும் ஐந்து ஸ்தானங்களுடன் சங்கிலியும் பன்னிரண்டு ஸ்தானங்களுடன் வாபியும் ஆறு ஸ்தானங்களுடன் ஆறுபத்ரமும் பன்னிரண்டு ஸ்தானங்களுடன் உபாத்தில் இரண்டு பத்ரங்களும் பதினெட்டு ஸ்தானங்களுடன் ருத்திரர்களும் தனக்குநேராக எட்டு ருத்திரர்களும் பதின்மூன்று ஸ்தானங்களுடன் வாபிகளும் மேற்பக்கத்தில் இருக்கவேண்டும். முதலாவது ஒரு வாபியையும் இரண்டு கண்டங்களையும் பாக்கியுள்ளவைகளை முன்போலவு மமைத்துக்கொள்க. குறுக்காக உள்ள நான்கு ஸ்தானங்களுடன் மூன்று ஸ்தானங்களுள்ள கொடியைச் சேர்க்கவும். தெற்கு வடக்காக வாபிகள் எட்டும் இரண்டு லிங்கங்களின் ஐந்து ஸ்தானங்களுடன் ஒருமாலையும் எங்கும் தெற்கு

வடக்குகளில் மூன்றுஸ்தானங்களுடன் இரண்டு நேத்திரங்களும் தனித்தனியாக நான்கு பத்ரங்களும் கீழ்ப்பக்கத்தில் நான்கு ஸ்தானங்களுடன் இரண்டு பத்ரங்களும் தெற்குவடக்கு இந்தப் பிரதேசங்களில் முன்வரைந்த கொடிகளையும் சேர்க்கவேண்டும். மூன்றாவது ஸ்தானத்திற்குமேல் மத்தியில் மண்டலம் இருபத்தைந்து ஸ்தானங்களுடன் சங்கிலி, ஆறுஸ்தானங்களுடன் கொடி, ஐந்து ஸ்தானங்களுடன் வாபிகள், நான்கு ஸ்தானங்களுடன் பத்ரம் இவைகளை அமைக்கவேண்டும். வாபி வெண்மை வர்ணம்; பத்மமும் பத்ரமும் சிவப்பு வர்ணமுள்ளவைகள். குறுக்காக இருக்கும் இரண்டு பத்ரங்களும் லிங்கமாலைகளும் இரண்டு மண்டலங்களும் மஞ்சள் வர்ணமுள்ளவைகள்; நேத்திரம் சந்திரன் இவைகளிரண்டும் வெண்மை வர்ணமுள்ளவைகள்; சங்கிலி கறுப்பு வர்ணமுள்ளது; வாபிகளுக்குமேல் மூன்று ஸ்தானங்களைத் தன்னிஷ்டப்படி பூர்த்திசெய்து கொள்ளவேண்டும். வெளிப்பக்கத்திலிருக்கும் மண்டலங்கள் மஞ்சள் வெண்மை சிவப்பு கறுப்பு இந்த வர்ணமுள்ளவைகள். எட்டு லிங்கங்களுடன் கூடியது லிங்கதோபத்ரம். வேறுவிதமான இரண்டு மார்க்கங்களுண்டு. அவைகளையும் கூறுகிறேன். முப்பத்திரண்டு ஸ்தானங்களிலும் நான்கு லிங்கங்கள் பிறகு எட்டு லிங்கங்கள் இவைகளை யுக்தியினால் ஏற்படுத்தவேண்டும். பிறகு விசேஷத்தைக் கூறுகிறேன். முதலாவது இருபத்துநான்கு ஸ்தானங்களுடன் லிங்கம், பதினெட்டு வாபிகள், இருபதுஸ்தானங்களுள்ள மற்றொருபத்ரம், பதினெட்டு ஸ்தானங்களுள்ள லிங்கம், ஒன்பது ஸ்தானங்களுடன் கூடிய பத்ரம் இவைகளை யமைக்கவேண்டும். பாக்கியுள்ளவைகளை ஸ்தானங்களுள்ளவாயில் சேர்க்கவேண்டும். நான்காவது லிங்கத்தின்ஸ்தானத்தில் பதினெட்டு ரேகைகளிருக்கவேண்டும். மூலைகளில் உள்ள சந்திரனும் மூன்று ஸ்தானங்களுடன் கூடியவைகள். அவைகள் வெண்மை வர்ணமுள்ளவைகள். மூன்று ஸ்தானங்களுடன் கூடிய கறுப்பு வர்ணமுள்ளது சங்கிலி. ஏழு ஸ்தானங்களுடன் கொடி, நீலவர்ணமுள்ள பத்ரம் நான்கு ஸ்தானங்களுள்ளது. பத்ரத்தின் பக்கத்தில் பதினெட்டு ஸ்தானங்களுடன் கருப்புவர்ணமுள்ள பெரியலிங்கத்தையும் ருத்திருக்குப் பக்கத்தில் ஐந்து

ஸ்தானங்களுடன் வெண்மைவர்ணமுள்ள வாபியையும் அமைக்க வேண்டும். அவ்விதம் மஞ்சள்வர்ணமுள்ள ஒரு ஸ்தானமும் மத்தியில் பத்ரமும் வாபியும் உண்டு. சிரசில் சங்கிலிக்குப்பக்கத்தில் மஞ்சள் வர்ணமுள்ள மூன்று ஸ்தானங்களையும் அமைக்க வேண்டும். லிங்கங்களுக்குத் தோள் பக்கத்தில் சிவப்புவர்ணமுள்ள இருபது ஸ்தானங்களும் பதினறு ஸ்தானங்களுடன் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலமும் பிறகு சித்ரவர்ணமுள்ள மொட்டுடன்கூடிய ஒன்பது ஸ்தானங்களு மிருக்கவேண்டும்.

அகலத்திலும் நீளத்திலும் பதின்மூன்று ஸ்தானங்களுடன் சந்திரனும் மூன்று ஸ்தானங்களுடன் சங்கிலியும் ஆறுஸ்தானங்களுடன் நீலவர்ணமுள்ள கொடியும் கிழக்கும் தெற்குமாகப்பன்னிரண்டு ஸ்தானங்களுடன் சிவப்புவர்ணமுள்ளபத்ரமும் மேற்குப் பக்கத்தில் இருபத்தெட்டாவது ஸ்தானத்தில் பெரிதாக ஒருருத்திரரும் லிங்கத்தின் பக்கத்தில் சிரசில் மஞ்சள்வர்ணமுள்ள எட்டு எட்டு ஸ்தானங்களும் இப்போது கூறின மண்டலத்தில் ஒருலிங்கமும் பார்வதிதேவியின் திலகமும் உண்டு. இந்த மண்டலத்தைப் பூஜிப்பவனுக்கு கௌரீதேவி அநுக்கிரகம் செய்கிறாள். வடகிழக்காகப்பத்தொன்பது ரேகைகளைப்போடவேண்டும். மூலையில் மூன்று ஸ்தானங்களுடன் சந்திரன், ஐந்து ஸ்தானங்களுடன் சங்கிலி, பதினொரு ஸ்தானங்களுடன் கொடி, ஒன்பது ஸ்தானங்களுடன் பத்ரம், இருபத்துநான்கு ஸ்தானங்களுடன் வாபி, இருபது ஸ்தானங்களுடன் மண்டலம், மத்தியில் பதினறு ஸ்தானங்களுடன் எட்டு தளமுள்ள பத்மம் இவைகளை அமைக்கவேண்டும். வெண்மை வர்ணமுள்ள சந்திரன், கறுப்பு வர்ணமுள்ள சங்கிலி, நீலவர்ணமுள்ள கொடி, சிவப்பு வர்ணமுள்ள பத்ராம், வெண்மை வர்ணமுள்ள வாபி, மஞ்சள் வர்ணமுள்ள மண்டலம், சிவப்பு வர்ணமுள்ள அல்லது சித்திரவர்ணமுள்ள மொட்டுடன் கூடிய பத்மம் இவைகளை ஏற்படுத்தவேண்டும். வெளிப்பக்கத்தில் உள்ள மண்டலங்கள் யாவும் ஸாத்விகம், இராஜஸம், தாமஸம் இந்த குணங்களின் வர்ணங்கள்போலுள்ள வர்ணமுடையவைகளா யிருக்கவேண்டும். சகல காரியங்களிலும் இந்த

ஸர்வதோபத்ரத்தைச் செய்யவேண்டும். இவ்விதம் லிங்கதோபத்ரங்களின் அமைப்புகளைக் கூறினேன். இவைகள் சிவனைச் சேர்ந்த விஷயங்கள். விஷ்ணுவைப் பூஜிப்பதற்கு ஏற்றவைகளல்ல. நாராயணனைப் பூஜிப்பதற்கு இராமலிங்க பத்ரம் ஏற்பட்டது. பூஜிப்பதில் ஒன்றுதான் முக்கியமாகும். அதை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். சிவனைப் பூஜிப்பதற்கு உபாஸிக்கவேண்டியது லிங்கம். இராம முத்திரையும் உபாஸிக்கத்தக்கது என்று நீ தெரிந்துகொள். லிங்கதோபத்ரம் போல் இராமதோ பத்ரத்தையும் புத்தியினால் அமைக்கவேண்டும். செய்த பத்ரத்தை இராம இராம என்னும் அடையாளம் செய்து அதைத் தேவியின் விஷயமென்று அறியவேண்டும். இந்தப் பத்ரத்தை ஸகல புண்ய காரியங்களிலும் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

இராமலிங்கதோபத்ரங்களின் அமைப்பைக் கூறும்

5-வது சருக்கம்

முற்றிற்று.

# 6 - வது சருக்கம்.

ஸர்வதோ பத்ரத்தையும் அதன் தேவதைகளையும் இங்கே கூறுகிறேன்—

பிராணுயாமம் செய்து தேசங்களையும் காலங்களையும் ஸ்மரித்து இராமதோபத்ர தேவதைகளின் ஸ்தாபனத்தை அல்லது இராமலிங்கதோ பத்ரத்தின் தேவதைகளின் ஸ்தாபனத்தை அல்லது இராமநாமதோ பத்ரங்களின் தேவதைகளின் ஸ்தாபனத்தைச் செய்கிறேன் என்று சங்கற்பம் செய்துகொள்ள வேண்டும். பிர்ம்மக்ஞானம் என்ற மந்திரத்திற்கு வாமதேவர் ரிஷி, திருஷ்டுப் சந்தஸ், பிரம்மதேவர் தேவதை, பிர்ம்ம சொருபத்தை ஸ்தாபிக்கும் விஷயத்தில் வினியோகம் பிர்ம்மஞானம் என்ற மந்திரத்தினுல் ஸர்வதோ பத்ரத்தின் மத்தியில் பிர்ம்ம தேவரை ஆவாகனம் செய்யவேண்டும். வடபுறத்தில் வாபியின் ஓரங்களிலுள்ள பாகத்தில் ஆப்யா யஸ்வ என்ற மந்திரத்தினுல் ஸோமனை ஆவாகனம் செய்யவேண்டும். ஸோமதேவதைக்கு நமஸ்காரம்.

வடகிழக்குப் பாகத்தில் தமீசானம் என்ற மந்திரத்தினுல் சந்திரன் உள்ள ஸ்தானத்தில் ஈசானனை ஆவாகனம் செய்யவேண்டும். ஈசான தேவதைக்கு நமஸ்காரம்.

கிழக்குப்பாகத்தில் வாபியில் த்ருதாரம் என்ற மந்திரத்தினுல் இந்திரனை ஆவாகனம் செய்யவேண்டும். இந்திர தேவதைக்கு நமஸ்காரம்.

தென்கிழக்கு பாகத்தில் சந்திரன் உள்ள விடத்தில் அக்னிந்தாதம் என்ற மந்திரத்தினுல் அக்நியை ஆவாகனம் செய்யவேண்டும். அக்நி தேவதைக்கு நமஸ்காரம்.

தென்பக்கத்தில் வாபியில் யுமாயத்வா என்ற மந்திரத்தினுல் யமனை ஆவாகனஞ்செய்யவேண்டும். யமதேவதைக்கு நமஸ்காரம்.

தென்மேற்கில் சந்திரன் உள்ள இடத்தில் அமும்த்வம்தம் என்ற மந்திரத்தினுல் நிருருதியை ஆவாகனம் செய்யவேண்டும், நிருருதிக்கு நமஸ்காரம்.

மேற்பாகத்தில் வாபியில் தத்வாயாமி என்ற மந்திரத்தினுல் வருணனை ஆவாகனம் செய்யவேண்டும். வருணதேவதைக்கு நமஸ்காரம்.

வடமேற்கில் சந்திரன் உள்ள இடத்தில் ஆனோநியுத்பி: என்ற மந்திரத்தினுல் வாயுவை ஆவாகனம் செய்யவேண்டும்; வாயுதேவதைக்கு நமஸ்காரம்.

வாயு, ஸோமன், இவர்களுக்கு மத்தியில் பத்திரத்தில் நிவே சனீ சங்கமனீவசூநாம் என்ற மந்திரத்தினுல் துருவன் அத்வரம் ஸோமன், ஜலம், அக்னி, வாயு, பிரத்தியூஷம், பிரபாஸம் என்ற எட்டு வசுக்களை ஆவாகனம் செய்யவேண்டும்.

ஸோமன் ஈசானன் இவர்களுக்கு மத்தியில் பத்ரத்தில் நமஸ் தேருத்ர என்ற மந்திரத்தினுல் வீரபத்ரர், சம்பு, கிரீசர், அஜைக பாதர், அகிர்புத்தினியர், பிநாகி, புவனுதீசுவரர், கபாலி, திக்பதி, ஸ்தாணு, ருத்திரர் இந்தப் பதினொரு ருத்திரர்களை ஆவாகனம் செய்ய வேண்டும்.

ஈசானன் இந்திரன் இவர்களுக்கு மத்தியில் உள்ள பத்ரத் தில் ஆசிருஷ்ணேந என்ற மந்திரத்தினுல் பகவன், வருணன் சூரி யன், வேதாங்கன், பானு, ரவி, கபஸ்தி, ஹிரணியரேதஸ், திவா கரன், மித்ரன், ஆதித்தன், விஷ்ணு இந்தப் பன்னிரண்டு சூரியர் களை ஆவாகனம் செய்யவேண்டும்.

இந்திரன் அக்நி இவர்களுக்கு மத்தியிலுள்ள பத்ரத்தில் அசுவிநாதேஜஸாசட்சும் என்ற மந்திரத்தினுல் அசுவினீ தேவர் களை ஆவாகனம் செய்யவேண்டும். அசுவினீ தேவர்கள் இரு வருக்கும் நமஸ்காரம்.

அக்நி யமன் இவர்களுக்கு மத்தியில் ஸமார்ச்சர்ஷணீதிரு தோ என்ற மந்திரத்தினுல் பிதிருக்களுடன் விசுவதேவர்களை ஆவாகனம் செய்யவேண்டும்.

யமன் நிருருதி இவர்களுக்கு மத்தியில் உள்ள பத்ரத்தில் அபித்யம் தேவம் என்ற மந்திரத்தினுல் யக்ஷர்களை ஆவாகனம் செய்யவேண்டும். யக்ஷர்களுக்கு நமஸ்காரம்.

நிருருதி வருணன் இவர்களுக்குமத்தியில் உள்ள பக்ஷத்தில் ஆயம்கோ: என்ற மந்திரத்தினால் பூதங்கள் நாகங்கள் இவர்களை ஆவாகனம் செய்யவேண்டும். பூதங்கள் நாகங்கள் இவர்களுக்கு நமஸ்காரம்.

வருணன் வாயு இவர்களுக்கு மத்தியில் உள்ள பக்ஷத்தில் ஈதீப்பிய: பௌஜிஷ்டம் என்ற மந்திரத்தினால் கந்தர்வர்கள் அப்ஸ ரஸ்தீரீகள் இவர்களை ஆவாகனம் செய்யவேண்டும். கந்தர்வர் களுக்கும் அப்ஸர ஸ்திரீகளுக்கும் நமஸ்காரம்.

பிர்ம்மதேவர் ஸோமன் இவர்களுக்கு மத்தியில் வாபியில் யதக்ரந்த: பிரதமம் என்ற மந்திரத்தினால் ஸ்கந்தரை ஆவாகனம் செய்யவேண்டும். ஸ்கந்தருக்கு நமஸ்காரம்.

நமச்சம்பவே என்ற மந்திரத்தினால் நந்தீசுவரரை ஆவாகனம் செய்யவேண்டும். நந்தீசுவரருக்கு நமஸ்காரம்.

பத்ரம் கர்ணேபி: என்ற மந்திரத்தினால் சூலத்தை ஆவாக னம் செய்யவேண்டும். சூலத்திற்கு நமஸ்காரம்.

விசுவகர்மாஹியஜ என்ற மந்திரத்தினால் மகாகாலரை ஆவா கனம் செய்யவேண்டும். மகா காலருக்கு நமஸ்காரம்.

பிர்மா ஈசானர் இவர்களுக்கு மத்தியில் கொடிகளில் அதி திர்தியேன: என்ற மந்திரத்தினால் ருக்ஷம் முதலியவைகளை ஆவா கனஞ் செய்யவேண்டும். பிர்ம்மதேவர் இந்திரன் இவர்களுக்கு மத்தியில் வாபியில் ஸ்ரீச்சதே என்ற மந்திரத்தினால் துர்க்கையை ஆவாகனம் செய்யவேண்டும். துர்க்கைக்கு நமஸ்காரம்.

இதம்விஷ்ணு என்ற மந்திரத்தினால் விஷ்ணுவை ஆவாக னம் செய்யவேண்டும். விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.

பிர்ம்மா அக்நி இவர்களுக்கு மத்தியில் கொடிகளில் உதீர தாம் என்ற மந்திரத்தினால் ஸ்வதையை ஆவாகனம்செய்யவேண் டும், ஸ்வதைக்கு நமஸ்காரம்.

பிர்ம்மா யமன் இவர்களுக்கு மத்தியில் வாபியில் பரம்மிருத் யோ என்ற மந்திரத்தினால் மிருத்யுவை ஆவாகனம் செய்யவேண்

டும். மிருத்யுவுக்கு நமஸ்காரம். பிர்ம்மா நிருருதி இவர்களுக்கு மத்தியில் கொடிகளில் கணாநாம்த்வா என்ற மந்திரத்தினல் கண பதியை ஆவாகனம் செய்யவேண்டும். கணபதி தேவதைக்கு நமஸ்காரம்.

பிர்ம்மா வருணன் இவர்களுக்கு மத்தியில் வாபியில் ஸந் நோதேவீ என்ற மந்திரத்தினல் ஜலதேவதைகளை ஆவாகனம் செய்யவேண்டும். ஜலதேவதைகளுக்கு நமஸ்காரம்.

பிர்ம்மா வாயு இவர்களின் மத்தியில் கொடிகளில் மாருதோ யஸ்ய என்ற மந்திரத்தினல் மருத் என்ற தேவதையை ஆவா கனம் செய்யவேண்டும். மருத்துக்கு நமஸ்காரம்.

பிர்ம்மாவின் பாதத்தின் மூலத்தில் ஸியோனபிருதிவீ என்ற மந்திரத்தினல் பிருதிவீ தேவதையை ஆவாகனம் செய்யவேண் டும். பிருதிவி தேவதைக்கு நமஸ்காரம்.

அந்த இடத்திலேயே பஞ்சநதியஸ் ஸரஸ்வதி என்ற மந்தி ரத்தினல் கங்கை முதலிய நதிகளை ஆவாகனம் செய்யவேண்டும். அவைகளுக்கு நமஸ்காரம்.

அவ் விடத்திலேயே தாம்னே தாம்னே ராஜம்ஸ்ததோருண என்ற மந்திரத்தினல் எழு ஸமுத்திரங்களை ஆவாகனம் செய்ய வேண்டும். இவைகளுக்கு நமஸ்காரம். பிறகு மொட்டுக்கு மேல் நாமமந்திரத்தினல் மேருவை ஆவாகனம் செய்யவேண்டும். மேருவுக்கு நமஸ்காரம்.

பிறகு மஞ்சள் வர்ணமுள்ள மண்டலத்தில் ஸோமன் முத லான தேவதைகளுக்குச் சமீபத்தில் கிரமமாக ஆயுதங்களை ஸ்தா பிக்கவேண்டும். ஸோம தேவதைக்குச் சமீபத்தில் கதையை ஆவாகனம் செய்யவேண்டும். கதைக்கு நமஸ்காரம்.

ஈசான தேவதைக்குச் சமீபத்தில் சூலத்தை ஆவாஹனம் செய்யவேண்டும். சூலத்திற்கு நமஸ்காரம்.

இந்திரனுக்குச் சமீபத்தில் வஜ்ராயுதத்தை ஆவாஹனம் செய்யவேண்டும். வஜ்ராயுதத்திற்கு நமஸ்காரம்.

அக்நிக்குச் சமீபத்தில் சக்தியை ஆவாகனம் செய்ய வேண்டும். சக்திச்கு நமஸ்காரம்.

யமனுக்குச் சமீபத்தில் தண்டத்தை ஆவாகனம் செய்ய வேண்டும். தண்டத்திற்கு நமஸ்காரம்.

நிருதிதிக்குச் சமீபத்தில் கத்தியை ஆவாகனம் செய்ய வேண்டும். கத்திக்கு நமஸ்காரம்.

வருணனுக்குச் சமீபத்தில் பாசத்தை ஆவாகனம் செய்ய வேண்டும்; பாசத்திற்கு நமஸ்காரம்.

வாயுவுக்குச் சமீபத்தில் அங்குசம் என்ற ஆயுதத்தை ஆவாகனம் செய்யவேண்டும். அங்குசத்திற்கு நமஸ்காரம்.

மறுபடி ஸோமதேவதைக்கு வடபாகத்தில் கதைக்குச் சமீபத்தில் கௌதமரை ஆவாகனம் செய்ப வேண்டும். கௌதமருக்கு நமஸ்காரம்.

வடகிழக்கில் பரத்வாஜரை ஆவாகனம் செய்ய வேண்டும். பரத்வாஜருக்கு நமஸ்காரம்.

கிழக்குத்திசையில் விசுவாமித்திரரை ஆவாகனம் செய்ய வேண்டும். விசுவாமித்திருக்கு நமஸ்காரம்.

தென்கிழக்கில் கசிபப முனிவரை ஆவாகனம் செய்யவேண்டும். கசிபப முனிவருக்கு நமஸ்காரம்.

தென்றிசையில் ஜமதக்நியை ஆவாகனம் செய்யவேண்டும். ஜமதக்நிக்கு நமஸ்காரம்.

தென்மேற்கில் வசிஷ்டரை ஆவாகனம் செய்ப வேண்டும். வசிஷ்டருக்கு நமஸ்காரம்.

மேற்றிசையில் அத்ரியை ஆவாகனம் செய்பவேண்டும். அத்ரிக்கு நமஸ்காரம்.

வடமேற்கில் அருந்ததியை ஆவாகனம் செய்ய வேண்டும். அருந்ததிக்கு நமஸ்காரம்.

மறுபடி கிழக்குத்திசை முதல் கிரமமாக விசுவாமித்திருக்குச் சமீபத்தில் இந்திர சக்தியையும் தென்கிழக்கில் குமாரசக்தி

யையும், தென்றிசையில் பிர்ம்ம சக்தியையும் தென்மேற்கில் வாராக சக்தியையும் மேற்றிசையில், சாமுண்டியையும் வடமேற்கில் வைஷ்ணவ சக்தியையும் வடதிசையில் மஹேசுவர சக்தியையும் வடகிழக்கில் விநாயக சக்தியையுமாக ஆவாகனம் செய்யவேண்டும். இந்த எட்டு சக்திகளுக்கும் நமஸ்காரம்.

எட்டுத் தளங்களுக்கு மத்தியில் சூரியனை ஆவாகனம் செய்ய வேண்டும். சூரியனுக்கு நமஸ்காரம்.

வெளிப் பாகத்திலுள்ள எட்டுத் திசைகளிலும் கிழக்குத் திசையில் ஸோமனையும் தென்கிழக்கில் அங்காரகனையும் தென்றிசையில் புதனையும், தென்மேற்கில் பிரகஸ்பதியையும், மேற்றிசையில் சுக்ரனையும், வடமேற்குத் திசையில் சனீசுவரனையும், வடதிசையில் இராகுவையும் வடகிழக்குத்திசையில் கேதுவையும் ஆவாகனம் செய்யவேண்டும். இந்தத் தேவதைகளுக்கு நமஸ்காரம்.

இந்தத் தேவதைகளை ஸர்வதோபத்ரத்தில் ஸ்தாபித்துப் பிறகு மண்டலம் ஏற்பட்டவரிசையில் சுஷேணனை ஆவாகனம் செய்ய வேண்டும். சுஷேணனுக்கு நமஸ்காரம்.

லிங்கங்கள் எல்லாவற்றிலும் ருத்திரரை ஆவாகனம் செய்ய வேண்டும். ருத்திரருக்கு நமஸ்காரம்.

வாபிகள் எல்லாவற்றிலும் நளனை ஆவாகனம் செய்யவேண்டும். நளனுக்கு நமஸ்காரம்.

பத்ரங்கள் எல்லாவற்றிலும் சுக்ரீவனை ஆவாகனம் செய்ய வேண்டும். சுக்ரீவனுக்கு நமஸ்காரம்.

குறுக்காகவுள்ள பத்ரங்கள் எல்லாவற்றிலும் கவயனை ஆவாகனம் செய்யவேண்டும். கவயனுக்கு நமஸ்காரம்.

மஞ்சள் வர்ணமுள்ள சங்கிலிகள் எல்லாவற்றிலும் அங்கதனை ஆவாகனம் செய்யவேண்டும். அங்கதனுக்கு நமஸ்காரம்.

கறுப்புவர்ணமுள்ள சங்கிலிகள் எல்லாவற்றிலும் விபீஷணனை ஆவாகனம் செய்யவேண்டும். விபீஷணனுக்கு நமஸ்காரம்.

கொடிகள் எல்லாவற்றிலும் ஜாம்பவானை ஆவாகனஞ்செய்ய வேண்டும். ஜாம்பவானுக்கு நமஸ்காரம்.

கண்டங்கள் எல்லாவற்றிலும் மைந்தனை ஆவாகனம் செய்ய வேண்டும். மைந்தனுக்கு நமஸ்காரம்.

மண்டலங்கள் எல்லாவற்றிலும் திவிவிதனை ஆவாகனம் செய்யவேண்டும். திவிவிதனுக்கு நமஸ்காரம்.

முத்திரையில் இராமரையும் ஜானகியையும் ஆவாகனம் செய்யவேண்டும். இராமர் ஜானகி இவர்களுக்கு நமஸ்காரம்.

முத்திரைக்கு மேற்பக்கத்தில் மஞ்சள் வர்ணமுள்ள மண்டலித்தில் இலக்ஷ்மணரை ஆவாகனம் செய்யவேண்டும். இலக்ஷ்மணருக்கு நமஸ்காரம்.

முத்திரைக்கு வடபுறத்தில் பரதனை ஆவாகனம் செய்ய வேண்டும். பரதனுக்கு நமஸ்காரம்.

முத்திரைக்குத் தென்பாகத்தில் சத்ருக்னனை ஆவாகனம் செய்யவேண்டும். சத்ருக்னனுக்கு நமஸ்காரம்.

முத்திரைக்குக் கிழக்குப்பக்கத்தில் அநுமாரை ஆவாகனம் செய்யவேண்டும். அநுமாருக்கு நமஸ்காரம்.

வெளிப்பக்கத்திலிருக்கும் மூன்றுமண்டலங்களுக்குள் வெண்மையான மண்டலத்தில் கங்கையை ஆவாகனம் செய்யவேண்டும். கங்கைக்கு நமஸ்காரம்.

சிவப்பான மண்டலத்தில் ஸரஸ்வதிநதியை ஆவாகனம் செய்யவேண்டும். ஸாஸ்வதிக்கு நகஸ்காரம்.

கறுப்பு மண்டலத்தில் யமுநாநதியை ஆவாகனம் செய்யவேண்டும். பிறகு இலக்ஷ்மியை ஆவாகனம் செய்யவேண்டும்.

இவ்விதம் ஆவாகனத்தைச்செய்து பதினாறு உபசாரங்களால் பூஜையையுஞ் செய்யவேண்டும். மிஞ்சின அன்னத்தினால் திக்குகளில் பலிபோட வேண்டும்.

இராமதோபத்திரத்தின் தேவதைகளின்
ஸ்தானத்தைக்கூறும் பிரகரணம்
முற்றிற்று.

## இராமதாஸர் கூறுகிறார்.

மாணவனே! ஸ்ரீராமருக்கு எது பிரியமானதோ அதைக் கூறுகிறேன்:—

மாதங்களுக்குள் சைத்ரமாசம் இராமருக்கு வெகு பிரியமானது. இரண்டு பக்ஷங்களில் சுக்லபக்ஷம் இராகவருக்கு வெகு பிரியமானது. திதிகள் எல்லாவற்றிலும் நவமி திதி ஸீதாபதிக்கு சந்தோஷங் கொடுக்கத்தக்கது

கௌஸல்யா குமாரன் சூரியவம்சத்தில் அவதாரம் செய்தமையால் சூரியனுடைய வாரமாகிய ஞாயிற்றுக்கிழமை அவருக்குப் பிரியமானது. நக்ஷத்திரங்களில் புனர்வசு நக்ஷத்திரம் தாசரதிக்குப் பிரியமுள்ளது. புஷ்பவகையில் சண்பகபுஷ்பமும் துளஸியும் அல்லது ஜாதிசண்பகம் மந்தாரம், முனி, மாலதி, தமனன், கேதகி, ஸிம்மீ முதலிய ஒன்பது புஷ்பங்களும் ஜானகி ரமணனுக்குப் பிரியமானவைகள். அவ்விதமே மோதகம் லட்டுகள் (இட்டிலி), மண்டம் (ஆடை), பூர்ணகர்ப்பை (பூரி), பேணிகை (பேணி), வடகம் (வடை), பர்படம் (அப்பளாம்), காத்தியம் (பற்களால் கடிக்கக்கூடியவை), இருதபக்வம் (நெய்யில் பாகமானது) முதலிய ஒன்பதுவகை பக்ஷியங்களும் தசரதகுமாரனுக்குப் பிரியமானவை. இவ்வொன்பது பக்ஷியங்களும் அயோத்தியா பாலனுக்கு அதிகப் பிரீதியுள்ளவைகள். அல்லது வேறுவிதமாக திவ்யான்னங்களில் ஒன்பது வகையைக்கூறுகிறேன்—மோதகம் லட்டுகம், மண்டம், வடகம், பேணி, வரான்னம், ஓதனம், சாகம், பாயஸம் இந்த ஒன்பதும் ஸீதாபதிக்குப்பிரியமானவை. வேறுவிதமான ஒன்பதுவகையைக்கேள்-எண்பத்தொரு (குடவம்) பசும்பால், அரிசி (இரண்டேகால்குடவம்) பாசிப்பயறு உமியில்லாத தானியங்கள் இவைகள் வகைக்கு ஒரு குடவம், குடவம் சர்க்கரை இவை பத்தும் ஸ்ரீராமசந்திரருக்கு பிரீதியானவை. குடவத்தில் எட்டில் ஓரம்சமாகிய பாக மிளகு நாரீபலம் (பழவகை) ஒரு குடவம்; ஜாதிபத்ரி இவைகளால் பக்குவப் படுத்திய ஒன்பது பக்ஷியங்களென்றறியவும். இவைகள் ஸ்ரீராமபிரபுவுக்கு மிகுதியான ஸந்தோஷத்தை எப்போதும் கொடுக்கக் கூடியவைகள்.

மாணவனே! எப்போதும் நைவேத்யம் செய்வதற்கு இலகு நவான்னம் கூறுகிறேன்—புதிதான பசும்பால் அரிசி தோல் இல்லாத பாசிப்பயறு, சீனி, நெய், தேன், வில்வப்பழம், மிளகு ஜாதிபத்திரி இவைகள் இலகுவான்னமாம். குடவம் என்பது பன்னிரண்டு டங்கம் எடையுள்ளது. டங்கம் என்பது நான்கு உளுந்து எடைகொண்டது. மா, எலுமிச்சை, விளா, சொய்யா, மாதுளை, பேரீஞ்சு, தேங்காய், வாழை, பலா இந்த ஒன்பது பழங்களும் இராமருக்கு மிகவும் இஷ்டமானவைகள். ஸீதாபலம், எலுமிச்சை, நாரத்தம்பழம், ஸ்னித்த மஜ்ஜகம் (பழவிசேஷம்), ஜாதீபலம், மாதுலிங்கம், திராக்ஷைப்பழம், வெள்ளரிப்பழம், நெல்லிக்கனி இவைகள் ஒன்பதும் தசரத குமாரனைப் பூஜிப்பதில் நைவேத்தியம் செய்யச் சிலாக்கியமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

ஒன்பது விதமான உபசாரங்கள் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு, ஜாதிபத்திரி, லவங்கம், ஜாதிபலம், ஜாதிக்காய், ஏலக்காய் இவைகள் ஒன்பதும் தாம்பூலத்தைச் சேர்ந்தன வென்பது பெரியோர்களின் கொள்கை. ஒன்பது விதமான இராஜோபசாரங்களை இராகவருக்கு அறிவிக்க வேண்டும். கொடை, ஸிம்மாஸனம், யானம், சாமரம், விசிறி, பானம் பண்ணுவதற்குத் தாம்பூலம், உபயோகப் படுத்துவதற்குரிய பாத்திரங்கள், அதை உமிழும் பாத்திரம், வஸ்திரம் வைக்கும் பெட்டி இவைகள் ஒன்பதும் இராஜோபசாரங்களாம்.

பிறகு அநுபவிப்பதற்குரியவைகளை இராஜாதி ராஜனுக்குக் கொடுக்க வேண்டும். சந்தனம், புஷ்பமாலை, பரிமள திரவியம், சிரோபூஷணம், பலம், சுகந்ததைலம், தாம்பூலம், கஸ்தூரி, சிவப்பு அக்ஷதைகள் இந்த ஒன்பது வஸ்துக்களை நிவேதனம் செய்யவேண்டும். படுக்கைக்குரிய ஒன்பது உபசாரங்களை உத்தமனுக்கு அளிக்க வேண்டும். அவைகளாவன:—பரியங்க தூலிகை, விரிப்பு உபயர்கணம், கண்ணாடி, தீபம், ஜலபாத்திரம், திரை, விசிறி ஆகிய இவைகளை அர்ப்பணம் செய்யவேண்டும். பீதாம்பரம், உத்தரீயம் தலைப்பாகை, கஞ்சுகம், தலைப்பாகைக்குமேல் ஒரு திவ்ய வஸ்திரம், இடையில் தரிக்கும் வஸ்திரம், முகந்துடைக்கும் வஸ்திரம், மடியில்

தரிக்க யோக்கியமான மூன்று முழமுள்ள ஒரு வஸ்திரம் போர்த்துக்கொள்ளத்தக்க திவ்யவஸ்திரம் இவ்விதம் வெகுசிலாக்கியமான ஒன்பது வஸ்திரங்களை இராமார்ப்பணம் செய்யவேண்டும் குண்டலங்கள், கங்கணங்கள், மாலை, தோள்வளைகள், தண்டைகள் பதக்கம், அரைஞாண் சங்கிலி முத்திரை முதலிய இந்த ஒன்பது அலங்காரங்களையும் பக்தியுடன் இராமார்ப்பணம் செய்யவேண்டும். இவ்விதம் ஒன்பது வகையான இராமபிரீதியுள்ள பதார்த்தங்களைக் கூறினேன். மற்றுமுள்ள பதார்த்தங்களுள் சிலாக்கியமானவைகளை ஸ்ரீராமசந்திரரைப் பூஜிக்கும்போது நைவேத்தியம் செய்யவேண்டும். தினந்தோறும் மூன்று காலங்களிலும் ஸ்ரீராமரைப் பூஜிக்கவேண்டும். தன்னிடமிருக்கும் திரவியங்களுக்கு அநுகுணமாகச் செய்யலாம். கையிலுள்ள பொருளைச் செலவு செய்வதில் லோபகுணத்தினல் வஞ்சனை செய்வதுகூடாது. பிரதமை திதி முதல் நவமி திதி வரையில் தினந்தோறும் விசேஷமாகவே ஸ்ரீராமரைப் பூஜைசெய்ய வேண்டும். விசித்திரமான மண்டபம் முதலியவைகளை ஏற்படுத்தி இரகுகுல திலகனைப் பூஜை செய்து அவர் முன்னிலையில் ஒன்பது நாட்களிலும் ஆனந்தராமாயணம் முழுவதையும் பாராயணம் செய்யவேண்டும்.

நவமி திதியில் ஸ்ரீராமரை வாகனத்திலேற்றி மங்கள தூரியம் துந்துபிமுதலிய வாத்தியங்களுடன் இராமதீர்த்தம் கொண்டு வந்து, அங்கு ருத்திரசூக்தம் முதலிய மந்திரங்களால் அபிஷேகம் செய்யவேண்டும். அவ்விதமே புருஷசூக்தம் ஸ்ரீசூக்தம் விஷ்ணுசூக்தம் இவைகளால் அபிஷேகஞ் செய்து பின்பு விஸ்தாரமாக பூஜையையுஞ் செய்து கிருகத்திற்கு அழைத்துவர வேண்டும். பிறகு ஹரி நாமங்களைத் தான் கீர்த்தனம் செய்யவேண்டும். அல்லது மற்றவர்களைக்கொண்டாவது கீர்த்தனம் செய்யும்படி செய்து கேட்கவேண்டும். பாட்டுக்காரர்களைப் பாடச்சொல்ல வேண்டும். வேசிகளை நர்த்தனம் செய்யும்படி செய்ய வேண்டும். பிறகு தான் உபவாஸமிருந்து பக்தியுடன் பிராமணர்களைப் பூஜித்து விசேஷமாகப் பாடுகிறவர்களுக்கு ஸன்மானம் செய்யவேண்டும். இராத்திரியில் பாட்டுகளைக் கேட்டுக்கொண்டும் நிருத்தங்களைப் பார்த்துக் கொண்டுமிருந்து விழித்துக்கொண் டிருக்கவேண்டும்.

தசமியில் காலையில் எழுந்து ஸ்நானஞ்செய்து ஸ்ரீரகுவீரரைப் பூஜித்து, மத்தியானத்தில் பிராம்மணர்களிடம் ஸ்ரீராம பூஜையைச் செய்யவேண்டும். அதன் விதானத்தைக் கூறுகிறேன்கேள்.

ஒரு பிராம்மணனையாவது அல்லது இரண்டு பிராம்மணரையாவது அல்லது எட்டுப் பிராம்மணரையாவது வரிக்கவேண்டும். பிறகு கோமயத்தினால் கிருகத்தில் ஓரிடத்தில் வெகு விஸ்தாரமான பூமியை ஏற்படுத்தவேண்டும். பிறகு கோலமிட்டுக் கறுப்பு மஞ்சள் முதலான வர்ணங்களால் நான்கு பக்கங்களிலும் பத்மங்களை அமைத்து மத்தியில் ஸிம்மாஸனத்தை அமைத்து அதில், பெரிய வஸ்திரத்தினாலாவது ஆஸனத்தை ஏற்படுத்தி ஆயிரத்தெட்டு இராம லிங்கத்தையாவது அல்லது நூற்றெட்டு இராம லிங்கத்தையாவது அல்லது ஆயிரத்தெட்டு இராமதோபத்ரத்தையாவது அமைத்து, அந்தப்பத்ரத்திற்குமேல் பத்தினியுடன் கூடின பிராம்மணனை உட்காரவைக்கவேண்டும். மேற்குமுகமாக இடது பாகத்தில் அந்தப் பிராம்மணனுடைய மனைவியை உட்காரவைத்து அந்தத்தம்பதியினிடம் ஸீதாராமர்களை ஆவாகனஞ்செய்து பின்பு அவர்களுக்குப் பின்பக்கத்தில் ஒருபிராம்மணனை உட்காரவைத்து இலக்ஷ்மணரையும் இடதுபக்கத்தில் பிராம்மணனை உட்காரவைத்துப்பாதனையும் வலதுபக்கத்தில் பிராம்மணனை உட்காரவைத்துச்சத்ருக்னனையும்முற்பக்கத்தில் பிராம்மணனைஉட்காரவைத்து அநுமாரையும் வாயுமூலைமுதலிய நான்கு மூலைகளிலும் கிரமமாகச் சுக்ரீவன்விபீஷணன் அங்கதன் ஜாம்பவான் இவர்களையும் அங்கங்கு பிராம்மணர்களையும் உட்காரவைத்து ஆவாகனம் செய்து பிறகு பூஜைசெய்யத் தொடங்கவேண்டும்.

இது ஸ்ரீராமருடைய நவாயதன பூஜை என்றுபெயர். அல்லது பஞ்சாயதன பூஜையாம். இதற்கு ஐந்து பிராமணர்களிடம் சக்திக்குறைவுள்ள மானிடன், சீதாராமரைப் பூஜிக்கவேண்டும். அல்லது ஒருஸன்னியாஸியை இராமருடைய ஸ்தானத்தில் உட்காரவைத்துப் பூஜிக்கவேண்டும். பாக்கைக்கொண்டு ஸீதையை ஏற்படுத்தி ஸன்னிபாஸிக்குப் பக்கத்தில் அதைவைத்து நன்றாகப் பூஜை செய்யவேண்டும். பிறகு ஒரு சுமங்கலியை ஸீதை

யாகப் பாவித்து போஜனம் செய்வித்து நமஸ்காரம் செய்து விஸ்தாரமாகப் பூஜை செய்யவேண்டும்.

முதலாவது ஸீதாராமர்களுக்குச் சிலாக்கியமான பூஜையைச் செய்து பிறகு எல்லோருக்கும் அநேகம் உபசாரங்களால் பூஜை செய்யவேண்டும். கிரமமாக இலக்ஷ்மணர் முதலியவர்களுக்கும் பதினாறு உபசாரங்களுடன் பூஜை செய்யவேண்டும். அல்லது தந்திரத்துடன் இராமபூஜையைச் செய்யலாம். முதலாவது பிராம்மணர்களிடம் ஆவாகனம் செய்து ஆஸனம் கொடுக்கவேண்டும். பிறகு எல்லோருக்கும் தனித்தனியாக, பாத பிரக்ஷாளனங்களைச் செய்யவேண்டும். உத்தம புருஷர்கள் ஸன்னியாஸியின் காலலம்பினஜலத்தை நமட்டிலும் தனியே வைத்திருக்கவேண்டும். பிறகு தனித்தனியாக சந்தனம் முதலியவைகளையும் அர்க்கியங்களையும் ஆசமனத்தையும் ஸ்நானத்திற்கு ஜலத்தையும் கொடுத்து வஸ்திரங்கள் ஆபரணங்கள் உபவீதங்கள் சிலாக்கியமான அக்ஷதை சந்தனம் சிவப்பு வர்ணமுள்ள அக்ஷதை, சிறந்த புஷ்பமாலைகள், மங்கலவஸ்துக்கள், குடை, சாமரம், விசிறி, அம்புறை, பாணங்கள், விற்கள், வாசனை வஸ்துக்கள் போக்ய வஸ்துக்கள் தூபம் தீபம் நைவேத்தியம் அல்லது வேறு சர்க்கரைமுதலிய நைவேத்யம் அனேகவிதமான பழங்கள், தாம்பூலம், தக்ஷிணை, கண்ணாடிநீராஞ்சனம் மந்திரபுஷ்பங்கள், ஒன்பது பிரதக்ஷிணங்கள், ஒன்பது நமஸ்காரங்கள், நிருத்தம், கீதம் இவற்றைத் தனித்தனியே பிரதக்ஷிணங்கள் சமர்ப்பித்து ஸ்ரீரகுநாதனைப் பிரார்த்தனை செய்து கொள்ளவேண்டும். கைகளைக்கூப்பி ஸ்ரீராமருக்கு முன்னின்று இடது பக்கத்தில் ஸீதை, முன்னால் ஹநுமார், பின் பக்கத்தில் இலக்ஷ்மணர் இருமருங்கிலும் பாத சத்ருக்னர்கள் வாயுமூலை முதலியவைகளில் சுக்ரீவன் விபீஷணன் யுவராஜனாகிய அங்கதன் ஜாம்பவான் இவர்கள், மத்தியில் கருநெய்தல் மலர் போன்ற அழகான காந்தியை யுடைய சியாமள வர்ணமுள்ள ஸ்ரீராமர் இவர்களை ஏற்படுத்தி ஸேவிக்கவேண்டும்.

ஸ்ரீராமர் இராவணனைக் கொன்று பிராமணர்கள் வார்த்தையை மதித்து யாத்திரைகளையும் யாகங்களையும் செய்து

அநேக போகங்களை அநுபவித்துப் பூமிக்குள் சென்றவளான ஸீதையைக் கிரகித்துப் பிறகு அநேக மருமக்களை அடைந்து, பூமியிலுள்ள அரசர்களை ஜயித்து, அநேக உபதேசங்களைச் செய்து கஜபுரத்திற்குச் சமீபத்தில் தம்முலகம் சென்றார்.

இந்தச் சுலோகத்தில் ஒன்பது காண்டங்களின் அர்த்தம் அடங்கியுள்ளது. இந்தச்சுலோகத்தை ஸ்ரீராமருடையஸந்நிதியில் படித்து ஸ்ரீராமரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு செய்த பூஜையை ஸ்ரீராமருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

ஏ ராமா! நான் மாதவிரதத்திலும் நவமியிலும் செய்த பூஜை பாராயணத்தையும் நவராத்திரியிலும் செய்த பூஜை பாரா யணத்தையும் தங்களுக்கு அர்ப்பணம் செய்தேன். பிரபுவே! அநுக்ரகம் செய்யவேண்டும்.

நவமீ தினத்தில் செய்த நவாயதன பூஜையையும் தங்களுக்கு அர்ப்பணம் செய்தேன். தாங்கள் ஒப்புக்கொண்டு எனக்கு அநு க்ரகம் செய்யவேண்டும். இவ்விதம் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்து போஜனம் செய்யும் கிரமமாக உட்காரவைத்துப் போஜ னம் செய்விக்கவேண்டும். மறுபடி தாம்பூலம் தக்ஷிணைகளைக் கொடுக்கவேண்டும்.

பிறகு பிராம்மணர்கள் பாதங்களை அலம்பின ஜலத்தைக் கிர கித்து ஸன்னியாஸியின் பாதங்களை அலம்பின ஜலத்தைப் பானம் செய்து பிறகு தேவதீர்த்தத்தைப் பானம் செய்து சுகிருத்துக் களுடனும் மித்திரர்களுடனும் போஜனம் செய்யவேண்டும்.

ஸன்னியாஸிக்கும் பிறகு பிராமணனுக்கும் கொடுத்து உப வீதம் முதலியவைகளைத் தன்னுசிரியருக்குக் கொடுக்கவேண்டும். இவ்விதம் விரதத்தை ஒவ்வொரு பக்ஷத்திலும் செய்யவேண்டும். அல்லது சுக்லபக்ஷத்தில் இந்த விரத்ததைச் செய்யவேண்டும். ஸ்ரீராமனை உபாஸிக்கும் மானிடர்கள் எல்லோரும் மாதந்தோ றும் விரதம் செய்யவேண்டும்.

இவ்விதம் மாஸவிரதத்தைக் கூறினேன். பூமியில் புண் ணியத்தைக் கொடுக்கும் வெகு விரதங்கள் உண்டு. ஆனாலும்

அவைகள் இதற்குச் சமமான விரதமல்ல. இந்த விரதம் சிறந்தது; புக்தி, முக்தி இவைகளைக் கொடுக்கக்கூடியது. இராமனை உபாஸிக்கும் மானிடர்கள் அவசியம் செய்யவேண்டிய விரதம் இது. இவ்விதம் ஸ்ரீராமருக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியதும் விரதங்களுக்குள் சிறந்ததுமான இந்த விரதத்தை விஸ்தாரமாக உனக்குக் கூறினேன்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஓ குருவே! ஸ்ரீராமநவமிவிரதம் மாஸவிரதம் இவைகளுடைய உத்தியாபனத்தின் கிரமத்தை என்பேரில் கிருபைகூர்ந்து எப்போதும் எப்படிச் செய்வது என்பதைச் சொல்லவேண்டும்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஏ பாலகா! நன்றாய்க் கேட்டாய்; ஸாவதானமான மனதுடன் கேள்:—

ஒவ்வொரு மாதத்திலும் நவமி விரதம் ஒன்பது வருஷம் வரையிலே செய்து சைத்ரமாதத்தில் ஸ்ரீராமஜனனமான நவமிதிதியில் உபவாஸமாக விருந்து உத்தியாபனம் செய்யவேண்டும். கிருகத்திலாவது கோக்கள் கட்டுமிடத்திலாவது தேவகிருகம் முதலியவைகளிலாவது கோமயத்தினாலேனும் அல்லது சந்தனம் முதலியவைகளாலேனும் மெழுகிப் பிறகு மணல்களால் பூமியில் கறுப்பு மஞ்சள் முதலிய வர்ணங்களோடு அநேகவித பத்மம் முதலியவைகளை எழுதவேண்டும்.

முற்கூறிய இராம பத்ரங்களுக்கு மத்தியில் சித்திர வர்ணத்துடன் சிரேஷ்டமான ஆஸனத்தை எழுதி அதையும் அழகுள்ளதாகச் செய்யவேண்டும். அதற்குமேல் பெரிதானதும் மனோக்ஞமானதும் சித்திர வர்ணமுள்ளதுமான மண்டலத்வதை எழுதவேண்டும். நான்கு துவாரங்களிலும் தோரணங்கள் வாழை கரும்புகள் அநேகவிதமான மணிகள் சலங்கைகள் அழகான கண்ணுடிகள், சித்திரமெழுதியுள்ள விரிப்புகள், முத்தாரங்கள் இவைகளை ஏற்படுத்தவேண்டும். பிறகு ஜலம் நிறைந்த

இராமபத்ரத்தில் வைக்கப்பட்டிருக்கும் தாம்பரக்கலசத்தில் நவாயதனத்தின் அமைப்புடன் ஸீதாராமச்சந்திரரை மிகுந்த உற்சாகத்துடன் இராத்திரியில் பூஜை செய்ய வேண்டும்.

ஒன்பது பலம் தங்கத்தால் இராமருடைய மூர்த்தியையும் எட்டுப்பலம் தங்கத்தினால் ஸீதாதேவியையும் ஒவ்வொருவருக்கும் ஐந்து பலம் வெள்ளி வீதம் இலக்ஷ்மணர் முதலியவர்களையும் சக்தியில்லாவிடில் இப்போது கூறியவைகளில் பாதி அல்லது கால் அல்லது அரைக்கால் அல்லது வீசம் அல்லது அரைவீசம் கணக்காகவாவது பிரதிமைகளைச் செய்து பூஜிக்கவேண்டும். பொருள் செலவிட வஞ்சனை செய்வதுகூடாது. பதினாறு உபசாரங்களுடன் பூஜை செய்யவேண்டும். இராத்திரியில் கண்விழிக்க வேண்டும். தசமியில் காலையில் எழுந்து ஸ்நானஞ் செய்து இராமரைப் பூஜித்து இராம மந்திரத்தினால் எள்ளு, பாயஸம், ஒன்பது விதமான அன்னம் இவைகளைக் கொண்டு ஒன்பதினாயிரம் ஹோமம் செய்யவேண்டும். அவைகளில் பத்துமடங்கு அதிகமாகப் பாலினால் தர்ப்பணத்தைச் செய்யவேண்டும். அதற்குப் பத்துமடங்கு அதிகமாக ஸ்நானம் பிராம்மண போஜனம் இவைகளைச் செய்ய வேண்டும்.

கர்மமுத்திரை, கைமுத்திரை, இரண்டு வஸ்திரங்கள், உபவீதம், சித்ரான்னம், உத்தரீயம், கிரீடம், சர்சரீ, ஒன்பது அன்னங்கள் நிறைந்த வெங்கலப் பாத்திரம் அவ்வொன்பது அன்னம் வைக்கும் பாத்திரத்திற்குமேல் வெங்கலமயமான நெய்ப்பாத்திரம் பாதுகைகள், திவ்யமான புத்தகம் இவைகளையும் தாம்பூல தக்ஷிணையையும் ஸ்ரீராமப்பிரீதியின் பொருட்டுத் தனித்தனியாக பிராம்மணனுக்குக் கொடுத்து எல்லாவற்றையும் ஸ்ரீராமார்ப்பணம் செய்யவேண்டும்.

பிறகு குருவைப் பூஜித்து அவருக்குக் கோவைத் தானம் செய்து தக்ஷிணையுடன் எல்லாவற்றையும் கொடுக்க வேண்டும். குருவை அடிக்கடி நமஸ்காரஞ்செய்து, பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும். "நான் ஒன்பது வருஷங்களாக மாதந்தோறும் நவமியில் உத்தியாபனத்துடன் விரதத்தைச் செய்ததினால்

ஸ்ரீராகவர் ஸந்தோஷமடையவேண்டும். இனிமேலும் எதுவரையில்நான் உயிரோடுஇருக்கிறேனே அதுவரையிலும் ஸ்ரீராமச்சந்திரனுடைய ஸந்தோஷத்திற்காக விரதங்களுக்குள் சிறந்ததான இந்த விரதத்தைச் செய்கிறேன். ஏகுருவே, அதனால் ஸீதையுடன் ஸ்ரீராமபிரபு எனக்குப்பிரஸன்னமாகித்தமது கிருபையினல் அநுக்கிரகஞ் செய்யவேண்டும்'' என குருவை நோக்கிப் பிரார்த்தனை செய்து நமஸ்கரித்துப் பிறகு அவரையனுப்பிவிட்டு மித்திரர்கள் பந்துக்கள் இவர்களுடன் போஜனம் செய்யவேண்டும்.

இவ்விதம் உத்தியாபனத்தைச் செய்த பின்பும் மாதந்தோறும் விரதத்தை அநுஷ்டிக்க வேண்டும். மானிடர்கள் எவ்விதத்திலும் இந்த விரதத்தை விடுவதுகூடாது. ஏகாதசி விரதம் எப்படி நித்தியமோ அவ்விதம் இந்தமாத விரதமும் நித்தியமென்று வித்வான்கள் கூறுகிறார்கள்.

சக்தியில்லாதவன் தன்சக்திக்குத் தக்கபடி இந்த விரதத்தை உத்தியாபனம்செய்யவேண்டும். பூமியில்மானிடர்கள் சுக்லபக்ஷம் நவமியில் உபவாஸமிருக்க வேண்டும். சுக்லபக்ஷம் நவமியில் மூடபுத்தியுள்ள ஒருவன் போஜனம் செய்தால், அவன் ஒரு கற்பம் வரையில் ரௌரவ நரகத்தில் வாசஞ்செய்யவேண்டிவரும்.

சிடனே! நீகேட்ட விஷயத்தைக் கூறினேன். வேறு நீ விரும்புவது யாது? அதைக்கேள்—நான் உனக்குக் கூறுகிறேன்.

## விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஆசாரியரே! நீர் மாதந்தோறும் ஸ்ரீராமப்பிரீதிக்கு நவமீ விரதம் செய்யவேண்டுமென்று எனக்குச் சொன்னீர். அந்த விரதத்தைச் செய்தவர் யார்? அதனல் அவர்கள் அடைந்திருக்கும் பலன்கள் யாவை? அவைகள் யாவற்றையும் கிருபைகூர்ந்து விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்.

மற்றொரு விஷயம் கேட்க வேண்டுமென் றிருக்கிறேன். அதன் உண்மையையும் எனக்குச் சொல்ல வேண்டும். இந்தப் பெரிய விரதத்தைச் சக்தியில்லாதவன் எவ்விதம் செய்வது?

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஏ மாணவனே! நன்றாகக் கேட்டாய், ஸாவதானமான மனதுடன் கேள்:—

முன் கோஸலதேசத்தில் ஸ்ரீராமரிடம் பக்தியுள்ள பிராம்மணன் ஒருவனிருந்தான். வறிஞனாகிய அந்தப் பிராம்மணனுக்குக் கலியாணமாகவில்லை. வீடு தாய் தந்தை ஒருவருமில்லை. அந்தத்தரித்திர பிராம்மணனுக்கு ஒரு நியமம் உண்டு. அதைக்கேள். தினந்தோறும் காலையில் எழுந்து கிருதமாலை என்ற நதியில் ஸ்நானம் செய்து நதியின் மணலில் மணல்களால் ஒன்பது வேதிகைகளைக் கற்பித்து, இலைகளால் கற்பித்த ஸ்ரீராமஸிங்காஸனத்தில் மத்தியில் உள்ள வேதிகையில் சாதுக்களால் நிர்மாணம் செய்யப்பட்ட இராமசந்திரரை ஸீதையுடன் ஸ்தாபனம் செய்து, எட்டுத்திசைகளிலும் உள்ள வேதிகைகளில் மரத்தின் இலைகளால் ஏற்பட்ட ஆஸனத்தில் ஸ்ரீராமருக்கு நான்கு பக்கங்களிலும் இலட்சுமணர் முதலியவர்களை ஸ்தாபனம் செய்வான்.

பிறகு அவன் தாமரைப்பூவைப்போன்ற நேத்திரங்களை உடைய இரகுகுலதிலகனை நோக்கிச் சொல்லுவான்-" ஏ இராம! அவசியம் செய்யக்கூடியகாரியத்திற்காகவிரைவாகச்செல்லவேண்டும் " என்று அவரைத்தன் முதுகில் வைத்துக்கொண்டு கொஞ்சதூரம் சென்று தனிமையாக ஒரு மரத்துக்கு அருகாமையில் புல்லுள்ளவிடத்தில் ஸ்தாபித்து, அவருக்கு முன்னால் ஜலம் நிறைந்த பாத்திரத்தையும் மிருத்திகையையும் ஸ்தாபித்து, பின்பு தான் மட்டும் கொஞ்சதூரம் சென்று கொஞ்சகால மிருந்து மறுபடி இராமர் சமீபம் வந்து அவரது கால்களை அலம்பி மண்ணால் சுத்தி செய்து மற்றொரு பாத்திரத்தி லிருக்கும் ஜலத்தினால் ஸ்ரீராமருக்கு ஆசமனம் கொடுத்து பக்தியுடன் பல்லுக்குச்சியினாற் பற்களைத் தேய்த்து,வாய்கொப்பளிப்பதற்குக்கொஞ்சம் உஷ்ணமான ஜலத்தையும் குளிர்ந்த ஜலத்தைப் பிறகு ஆசமனத்திற்குக் கொடுத்து வஸ்திரத்தினால் முகத்தையும் கைகளையும் பாதங்களையும் துடைத்துப் பிறகு அவரை முதுகில் எடுத்துக்கொண்டு மெள்ள மெள்ள வணக்கத்துடன் முற்கூறிய மணல் வேதிகையின் கிழக்குப் பக்கத்திற் கொண்டு போய் வைப்பான்.

இவ்விதம் ஸீதை இலட்சுமணர் ஸுக்ரீவன் முதலியவர்க ளெல்லோரையும் அழைத்துக் கொண்டுபோய் உபசாரங்களைச் செய்வான். பிறகு பெரும் தானியங்களைப் பாகம் செய்வான். பின்பு ஸ்நானஞ்செய்து, மத்தியானத்தில் செய்யவேண்டியதைச் செய்துமுடித்து மறுபடி ஸ்ரீராகவரைப் பூஜித்து நைவேத்தியம் செய்வான். பிறகு வைசுவதேவம் செய்து அதிதிக்குப் பிக்ஷை கொடுத்து மீன்கள் பசு பக்ஷிகளுக்கும் பிக்ஷைகொடுத்து ஸ்ரீராம ருடைய உத்தரவின்பேரில் போஜனம் செய்வான். பிறகு இரா மரை ஆதரவுடன் முதுகிலேற்றிக் கொள்வான். அப்பால் கிரம மாக ஸீதை இலட்சுமணர் முதலிய எல்லோரையும் முதுகிலேற் றிக் கொள்வான். பூஜா திரவியங்க ளெல்லாவற்றையும் பெட்டி யில் வைத்துக் கொண்டு அந்தப் பெட்டியைக் கரத்தில் இடுக்கிக் கொண்டு மெள்ளச் செல்வான்.

காட்டுக்கு அருகிலுள்ள தோட்டத்திற்குச் சென்று இரா மரை நோக்கி, "இராமா! தாமரைக்கண்ணா! காட்டிலும் தோட் டத்திலும் உள்ள அநேகவித பக்ஷிகளையும் மிருகங்களையும் ஸீதை யுடன் பாருங்கள்" என்று காட்டிப் பிறகு கிராமத்தில் உள்ள வீதிக்குச் சென்று, அங்குள்ள வைபவங்களையும் காட்டுவான், அப்போது அந்த வேடிக்கை பார்க்க வந்து, கூட்டமாக விருக் கும் ஜனங்களைக் கையிலிருக்கும் தடியினால் இந்தப் பிராம்மணன் அடிப்பான். அடிபட்டாலும் அந்த ஜனங்கள் கோபங் கொள் ளார்கள். இவ்வாறு வெகுவிநோதங்களை ஸ்ரீராமருக்குக் காட் டிப் பிறகு ஒருவருமில்லாத சூனிய கிருகத்திற்குச் சென்று அங்கு இராமரையும் மற்றவர்களையும் படுக்கையில் படுக்கவைத்து நித்திரை புரியும்படி செய்வான்.

பிறகு அந்தப் பிராம்மணன் விரைவாகத் தெருக்களிலே சென் று அரிசி எண்ணெய் கீரை பழங்கள் வெற்றிலைபாக்கு குங்குமம் முத லிய வஸ்துக்களையும் தாம்பரக் காசுகளையும் யாசித்துக் கொண்டு ஸ்ரீ இராமர் சமீபம் வருவான்.

அந்த ஊரிலிருப்பவர்களும் வீதியிலிருப்பவர்களும் அந்தப் பிராம்மணனை இராமபக்தி நிறைந்தவ னென்றறிந்து தங்க

ளுடைய வியாபாரத்திற்குரிய வஸ்துக்களை அவர் கேட்டவுடன் கொடுப்பார்கள்.

பிராம்மணன் இராமர் முதலியவர்களிருக்கும் சூன்ய கிருகத்தில் வந்து இராமருக்கு முன்னே தீபமேற்றி ஆலத்தி சுற்றிச் சந்தனம் முதலியவைகளால் பூஜித்து ஸந்தோஷத்துடன் துளசி மாலை புனைந்து விசிறுதல் முதலிய உபசாரங்களைச் செய்வான்.

பிறகு அந்தப் பிராம்மணன் ஸ்தோத்திரம் செய்து அடிக்கடி ஜபித்து பிரதக்ஷிணம் செய்து விசேஷ மந்திரங்களால் இராமரைத் துதிப்பான். பிறகு தான் யாசித்த வஸ்துக்களையெல்லாம் கலந்து அவைகளை மூன்று பாகமாகச் செய்து இரண்டு பாகத்தைத் தன் பக்கத்தில் வைத்துக்கொண்டு மற்றொரு பாகத்தைச் சிநேகிதன் கிருகத்தில் நவமிதினத்திற்காக வைத்துப் பிறகு வாயிற்படிக்குப் பக்கத்திலே சயனம் செய்துகொள்வான்.

மறுபடி விடியற்காலத்தில் எழுந்து, ஆசமனஞ்செய்து கீதம் தாளம் வாத்தியங்கள் இவைகளால் ஸ்ரீராமர் முதலியவர்களை எழுப்பி, முன்போல் முதுகில் வைத்துக்கொண்டு நதிக்கரை சென்று முன்போலவே பூஜைசெய்வான்.

இவ்விதம் தினந்தோறும் நல்ல மனதுடன் பூஜை செய்து நவமியில் விசேஷமாகவே பூஜித்து உபவாஸமிருந்து ஸ்ரீராமனுடைய குணங்களைக் கீர்த்தனம் செய்வான். இராத்திரி தூக்கமில்லாமல் இராகவனைப் பூஜித்துக் கீர்த்தனங்களாலும் நர்த்தனங்களாலும் இராத்திரியைக் கழித்து, மறுநாள் காலையில் தசமியில் தாசரதியைப் பூஜித்து, பிரதமை முதல் நவமிவரையில் ஒன்பது நாளாகத் தான் செய்துவந்த ஆனந்த ராமாயண பாராயணத்தை முடித்துப் புஸ்தகத்தைப்பூஜித்துத் தன்னால் ஏற்கனவே பிரார்த்திக்கப்பட்ட ஒன்பது பிராம்மணர்களை அழைத்து, அவர்களுக்குள் ஒருவரை அவர் பத்தினியுடன் மணலால் ஏற்படுத்தப்பட்ட வேதிகையில் உட்காரவைத்து, பிறகு எட்டு மூலைகளிலும் எட்டுத் தம்பதிகளையும் உட்காரவைத்து, பதினாறு உபசாரங்களால் அவர்களைப் பூஜித்துப் பின்பு முன் சிநேகிதன் வீட்டில் நவமி

தினத்திற்காக வேண்டுமென்று வைத்திருந்த ஒரு பாகத்தைச் சமையல்செய்து அகலமான வாழையிலைகளில் அந்த அன்னங்களைப் பரிமாறுவான்.

அந்தப் பிராம்மணர்கள் தங்கள் தங்கள் பத்தினிகளுடன் இவனுடைய பக்தியில் ஸந்தோஷங் கொண்டவர்களாகிப் போஜனம் செய்வார்கள். பிறகு அந்தப் பிராம்மணன் அந்தத் தம்பதிகளுக்குத் தாம்பூலதக்ஷிணைகளைக் கொடுத்து உபசரித்துப் பின் போஜனம் செய்வான்.

இவ்வாறு அந்தப் பிராம்மணன் மாதந்தோறும் நவாயதன பூஜையைச் செய்து விரதத்திற்கும் தசமியில் பாரணைக்கும் யாசித்தாவது ஒன்பது பிராம்மணர்களைப் பூஜிப்பான். இவ்வாறாக ஒன்பது வருஷங்கள் சென்றன.

ஒரு சமயத்தில் சிராவணமாதத்தில் அந்தக் கிராமத்தின் வழியாக ஓரரசன் சேனைகள் சூழச் சென்றான். அப்போது இந்தப் பிராம்மணன் இரவில் தரையிலே படுத்து நித்திரை புரிந்தான். இந்த ஸமயம் மழையினால் சிரமமடைந்த இராஜசேவகர்கள் கிராமத்தில் உள்ள வீடுகளில் நுழையும்போது இந்த அந்தணனுடைய சூனிய கிருகத்திலும் பத்துப் பேர்கள் நுழைந்தார்கள். குதிரையின் மீது ஆயுதபாணிகளாகவந்திருக்கும் அந்தச் சேவகர்கள் வாயிற்படியின் மத்தியில் தரையில் தூங்கும் இந்த அந்தணனை நோக்கி "ஏ பிராம்மணா! விரைவாக எழுந்திரும்; நாங்கள் வெளியில் வெகுநேரமாக மழையினால் துன்பமடைந்தவர்கள். சூனிய கிருகமானாலும் இங்குச் சென்று குதிரைகளுடனும் சேவகர்களுடனும் சுகமாக இருக்கின்றோம். வழியை விடும்" என்றார்கள்.

சேவகர்கள் சொல்லைக்கேட்ட அந்தணன் "இங்கு ஸீதையுடன் இராமச்சந்திரரும் அவருடைய பந்துக்களும் நித்திரையிலிருக்கிறார்கள். இங்கு உங்களுக்கிருக்க இடமில்லை; இந்தக் கிராமத்தில் எவ்வளவோ இடங்களிருக்கின்றன. அங்கே செல்லலாம்" என்று கூறினன். இந்த அந்தணன் சொல்லைக்கேட்ட சேவகர்கள் "ஏ அந்தணரே! இங்கு ஸீதையுடன் இராமரும் அவருடைய பந்துக்களும் இருந்தால் அவர்களை வெளியில் போகச்சொல்லும், எங்களுக்கிருக்க ஸ்தலந்தாரும்" என்றார்கள்.

அந்த விப்ரன் "இராஜ சேவகர்களே! இரவில் தூங்கும் இராமர் முதலியவர்களை நான் எவ்வாறு எழுப்புவேன்? நான் உங்களை நிரம்பவும்கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் இராமர் முதலியவர்களுக்கு நமஸ்காரஞ்செய்து வேறு ஸ்தலம் செல்லுங்கள்" என்றான்.

அப்பொழுது மழையினால் துன்பமடைந்த அந்தச் சேவகர்கள் இந்த அந்தணன் தடுத்தவுடன் கோபங்கொண்டு அவனை அடித்தார்கள். அப்போது விப்ரன் "என்னை அடிக்காதேயுங்கள்; இருங்கள்; இராமரை எழுப்பி வெளிப்படுத்துகிறேன்" என்று சொல்லி, ஆசமனம் செய்து ஸீதாபதியிடம் சென்று "ஏ தசரத குமாரா! எழுந்திரும்; வெளியில் குதிரையின்மேல் சேவகர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கிருக்க இந்த இடத்தைக் கொடுத்துவிட்டு நாம்வெளியிலே போவோம்" என்று சொல்லி முன்போல் இராமர் முதலியவைகளை முதுகிலேற்றிக்கொண்டு பெருங் கூச்சவிட்டு வஸ்திரம் முதலியவைகளைக் கக்ஷத்திலும் இடது கையில் தடியையும் வைத்துக்கொண்டு வெளியில் புறப்பட்டான். அந்தச் சேவகர்கள் இந்த விப்ரனைப்பார்த்து பைத்தியங் கொண்டவன் என்றெண்ணினார்கள். பிறகு அந்தணன் தன் வீட்டுவாயிலுக்கு வந்துமழையைப்பார்த்துத்தலைகுனிந்தவனாகநின்றான். அச்சமயம் துஷ்டர்கள் உட்புகுந்தார்கள். அந்தணன் மிகுந்த வருத்தங்கொண்டு மனதில் "வாயு குமாரனாகிய ஹநுமானுடைய பலத்தைக் கேட்டிருக்கிறேன்; அவையாவும் பொய்யாய்விட்டன இந்த ஸமயம்" என்றெண்ணிவெகுகோபத்துடன் விரைவாக ஜலபாத்திரத்தைப் பூமியில்வைத்து இடதுகையினால் ஆஞ்சனேயருடைய வாலைப்பிடித்து ஆகாயமார்க்கத்தில் உதறினான். அப்பொழுதுவாயு புத்திருடைய தாதுக்கள் அழகான மூர்த்தியாகி ஆகாயமார்க்கம் சென்று மிகுந்த பயத்துடன் கர்ஜனைசெய்தன. அந்தக் கர்ஜனையைக்கேட்டு மகாவீரர்களும் கிராமத்திலிருப்பவர்களும் பயந்து ஒருக்ஷணத்தில் மரணமடைந்தார்கள். குதிரைகள், யானைகள், காளைகள் முதலியனவும் அந்தக்கிராமத்திலுள்ள புருஷர்கள் யாவரும் இறந்தார்கள். அப்போது அந்தப் பிராம்மணோத்

தமன்மாத்திரம் ஸ்ரீராமருடைய கிருபையால் உயிரோடிருந்தான். ஆஞ்சனேயனுடைய கர்ச்சனையினால் இறந்துபோன புருஷர்களுடைய மனைவிகள் காலையில் எழுந்து தங்கள் தங்கள் புருஷர்கள் மரணமடைந் திருப்பதைப் பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தார்கள். அந்த ஸ்திரீகளுக்கு அந்தச் சப்தம் செவியிற் படவில்லை.

அப்பொழுது அவர்கள் உயிரோடிருக்கும் அந்தணனையும் சேற்றில் விழுந்திருந்த மாருதியையும் நோக்கி வினவினர். பிராம்மணன் அந்தஸ்திரீகளுக்கு ஸகலவரலாற்றையும் தெரிவித்தான். பிறகு அந்தஸ்திரீகள் அந்தப் பிராம்மணனைப் பிரார்த்தனை செய்து அவனைத் தங்களுடைய பட்டணத்திற்கு அரசனாகக் கொண்டார்கள். பிராம்மணனும் ஸ்ரீராமருடைய ஆக்ஞையினால் அரசாட்சி செய்தான். நகரத்திலிருக்கும் ஸ்திரீகளுக்கும் கணவனாகவே இருந்தான்.

மாருதியின் அந்தக்கர்ஜனை ஒவ்வொரு ஸமயத்தில் அந்த நகரத்தில் மேகசப்தம்போல் இப்போதும் கேட்கிறது. அந்தச் சப்தத்தைக்கேட்ட புருஷர்கள் சாகின்றனர். ஸ்திரீகள் மட்டிலும் விருத்தியடைந்து வருகிறார்கள். ஸகல ஸ்திரீகளுக்கும் இந்த அந்தணன் ஒருவனே கணவன். அதுமுதல் அந்த இராஜ்யத்தை ஸ்திரீ ராஜ்யம் என்று மானிடர்களில் சிறந்தவர்கள் கூறுகிறார்கள்.

பிறகு அந்த அந்தணன் வெகுகாலம் சென்றபின்பு மரணமடைந்து, முன்செய்த புண்ணியத்தினால் விஷ்ணு ஸாயுஜ்யத்தை அடைந்தான்.

அப்பால் அந்த ஸ்திரீகள் வந்த வழிப்போக்கர்களைக் கணவனாகக்கொண்டு அவர்களுடன் வாழ்ந்துவந்தார்கள். அப்போது ஹநுமான் கர்ஜனை உண்டாகுங் காலத்தை யறிந்து அப்புருஷர்களை இரகசியமான இடங்களில் இருக்கச்செய்து துந்துபி வாத்தியம் சங்கநாத முதலியவைகளை முழக்கிக் கர்ஜனை சப்தம் ஓய்ந்த பின்பு அவர்களைத் தங்களிருப்பிடத்திற்கு அழைத்து வருவார்கள். அப்பொழுது அவர்களை மறுபிறவி யடைந்ததாகவே கருதி அநேக உற்சவங்கள் செய்வார்கள். இவ்வாறு

அவர்களுடன் அந்த இராஜ்பத்தை எப்போதும் அரசாட்சி செய்து வந்தார்கள்.

ஏ விஷ்ணுதாஸ! அந்தத் தேசத்திலும் அதற்குச் சமீபத்திலுள்ள தேசங்களிலும் ஸ்திரீபிரஜைகளே உற்பத்தியாகின்றன. மாருதியின் கர்ஜனை கலந்த காற்றின் ஸ்பரிசத்தை அடைந்தவர்கள் சக்தியை இழக்கிறார்கள். அவர்களுக்குப் புருஷத்தன்மை குறைந்து போகிறது. அதனாலேதான் பெண்கள் உண்டாகின்றனர். அபூர்வமாகப் புருஷப் பிரஜை உண்டாகும். ஸ்திரீகளுடைய இரஜஸ் அதிகமானால் பெண்ணும் புருஷனுடைய சுக்லம் அதிகமானால் பிள்ளையும் இரஜஸ் சுக்லம் இரண்டும் ஸமமானால் நபும்ஸகனும் பரமேசுவரருடைய இச்சைப்படி ஏற்படுகின்றார்கள்.

ஏ விஷ்ணுதாஸ! பிள்ளை பிறக்காமலிருப்பதற்கு மற்றொரு காரணம் கூறுகிறேன் கேள்:—

அந்தத் தேசங்களில் ஸ்திரீகள் தங்களுக்கு இராஜ்பம் கிடைத்த மதத்தினால் சம்போக காலத்தில் ஸ்திரீ புருஷர்கள் மாறிக் கிரீடித்தார்கள். அச்சமயத்தில் ஸ்திரீகளுடைய முதுகு பூஸ்பரிசம் அடைவதில்லை. அதனால் புருஷனுடைய சுக்லம் வெளிப்பட்டு சூக்ஷ்மமான துவாரமுள்ள கர்ப்பஸ்தானத்தில் பிரவேசிப்பதில்லை. மூக்கு கண் காது இவைகளுக்கு இரண்டு துவாரங்களுண்டு. ஆண்குறி குதஸ்தானம் இவைகளுக்கு ஒவ்வொரு துவாரம் ஏற்பட்டது. சிரசில் பத்தாவது துவாரம் ஏற்பட்டது. சிரசில் பத்தாவது துவாரம் புருஷர்களுக் குண்டென்று பெரியோர் கூறுகிறார்கள்.

ஸ்திரீகளுக்கு மூன்று துவாரங்கள் அதிகம். அவைகளாவன இரண்டு ஸ்தனங்கள், கர்ப்பஸ்தானம் ஆக மூன்றும். இம்மூன்று துவாரங்களும் ஊசிமுனைக்குச் சமமானவைகள். புருஷன் கிரீடிக்கும்போது கர்ப்பத் துவாரமானது கொஞ்சம் மலர்ந்து புருஷனுடைய சுக்லத்திற்கு வழிகொடுக்கிறது. அந்த வழியாகப் புருஷனுடைய வீரியம் உள்ளே சென்றால் பிள்ளை உண்டாகும் என்பதில் சந்தேகமில்லை. சுக்லம் கொஞ்சம் பிரவேசித்தால் அப்போது பெண் பிறக்கிறது. அதாவது ஸ்திரீகளுடைய இரஜஸ் அதிகப் படுவதினால் என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஆகை

யினுல் எப்போது புருஷன் கீழே இரதிகாலத்தில் சயனம் பண்ணுகிறானே அப்போது அவனுடைய வீரியம் வீரத்திலிருக்கும் ஸ்திரீயின் கர்ப்பஸ்தானம் செல்கிறதில்லை. ஒருகால் தெய்வ வசத்தினுல் ஊசி முனைபோன்ற கர்ப்பத் துவாரத்தில் கொஞ்ச மதிகமாகச் சென்றால், அப்போது பிள்ளையுண்டாகும். உண்டானுலும் நபும்ஸகன்போலத் தோன்றுவான். ஆகையினுலே தான் அந்தத் தேசங்களில் பெண்கள் அதிகமாக உண்டாகின்றனர். அந்தணர்களுக்குள் உயர்ந்தவனுகிய விஷ்ணுதாஸ! பெண் பிறப்பதற்குக் காரணங் கூறினேன்.

இவ்விதம் எல்லாத் தேசங்களிலும் ஸ்திரீயின் பலம் அதிகமானுல் பெண் என்றும் புருஷன் பலம் அதிகமானுல் பிள்ளையென்றும் எற்படும். ஆகையினுல் பிள்ளையை அடையவேண்டுமென்ற ஆவலுடையவன் எப்போதும் ஸ்திரீயை மிகவும் போஷிப்பது கூடாது. எப்போதும் அநேகவித ரஸபதார்த்தங்களால் தன்னையே போஷித்துக் கொள்ள வேண்டும்.

ஆகையினுல் வைத்தியர்களை எப்போதும் காப்பாற்றவேண்டும். அவர்கள் புருஷனுடைய பலமும் பலமில்லாத தன்மையும் அறிவார்கள். ஒருவனுக்குத் தேகம் பருமனுக விருந்தால் அதைக்கொண்டு பல முடையவனென்று நினைப்பது கூடாது; வாதத்தினுலும் பெருத்திருக்கும். அந்த விஷயத்தை வைத்தியர்களைக் கொண்டுதான் தெரிந்துகொள்ள வேண்டும். எப்போதும் வைத்தியர்களை நம்பிக்கையுடன் கேட்கவேண்டும்.

மந்திரம், தீர்த்தம், பிராம்மணன், தேவர்கள், வைத்தியன், சோதிடன், குரு இவர்களிடம் எவ்வளவுக்கெவ்வளவு நம்பிக்கை ஏற்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு காரியசித்தி உண்டாகும். உத்தமனுகிய மானிடன் வைத்தியன் சொன்ன வழிப்படி நடப்பான். பத்துப்பெண்கள் பிறப்பதைக்காட்டிலும் ஒரு பிள்ளை பிறந்தால் அப்பிள்ளை (புத்) என்ற நரகத்திலிருந்து குலத்தைக் கரையேற்றுகிறான். பெண்ணுயிருந்தால் தன்னுடைய கெட்ட நடவடிக்கையால் தன் கணவன் குலத்தையும் தன் தகப்பன் குலத்தையும் நரகத்தில் தள்ளிவிடுகிறாள்.

ஆகையால் மானிடர்கள் பிள்ளையை உண்டுபண்ண முயற்சிக்க வேண்டும். மானிடர்கள் அநேகம் புத்திரர்களை அடைய

வேண்டும். ஒருவனானாலும் கயை செல்வான். அசுவமேதத்தி லாவது யாகம் செய்யவேண்டும். கறுப்பு வர்ணமான காளையை விடவேண்டும். உயிரோடிருக்கும் தாய்தந்தையரின் வாக்கியத் தைக் கேட்பதினாலும், வருஷந்தோறும் பூரிபோஜனம் செய்வ தாலும், கயையில் பிண்டம் கொடுப்பதாலும் ஆக இம்மூன்று காரணங்களாலும் புத்திரர்களுக்குரிய தருமம் நிலைநிற்கும்.

ஏ மாணவனே! சக்தியில்லாதவன் எவ்விதம் அந்த விரதத் தைச் செய்கிறது என்று கேட்டதற்கு அந்தணன் கதையை உனக்குச் சந்தோஷமுண்டாகும்படி கூறினேன்.

தரித்திரனாகிய அந்தப் பிராம்மணன் அந்த விரதத்தின் மகி மையால் பெரிய இராஜ்யத்தை அடைந்து மிகுந்த சுகத்தை அநுபவித்து ஆயுள் முடியும் சமயத்தில் விஷ்ணு ஸாயுஜ்யமு மடைந்தான்.

இவ்வுலகத்தில் அநேக சுகங்களைக் கொடுப்பதும் பரலோ கத்தில் மோக்ஷத்தைக் கொடுப்பதுமாகிய இந்த விரதத்தை எவர் கள் தாம் அநுஷ்டிக்கமாட்டார்கள்?

இந்த விரதத்தைத் தேவர்கள், முனிவர்கள், நாகர்கள், கந்தர் வர்கள், கின்னரர்கள், அரசர்கள் எல்லோரும் செய்திருக்கிறார்கள். இவ்வுலகத்தில் ஸ்திரீகள், புத்திரர்கள், தனம் முதலிய சகல பாக்கியங்களையும் கொடுக்கக்கூடிய விரதமிது. பரலோகத்திலும் விஷ்ணு சாயுஜ்யத்தைக் கொடுக்கும்.

பூமி, அந்தரிக்ஷம், சொர்க்கம் இவ்வுலகங்களில் அநேக விரதங்கள் அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. ஸ்ரீராமநவமி விர தத்திற்குச் சமானமாகிய விரதம் ஏற்பட்டதுமில்லை; ஏற்படப் போகிறதுமில்லை.

அந்தணர்களுக்குள் சிறந்தவனாகிய விஷ்ணுதாஸ! மிக சிலாக்கியமான இந்த விரதத்தை மானிடர்கள் எப்போதும் செய்யவேண்டும். நீ கேட்ட விஷயத்தைக் கூறினேன்.

இன்னமும் கேட்க விருப்பமுள்ள விஷயத்தைக் கேள்—

நவமி விரதத்தின் மகிமையைக்கூறும்

6 - வது சருக்கம்

முற்றிற்று.

## 7-வது சருக்கம்.

### ஸ்ரீ விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

பரமகுருவே! ஸ்ரீராகவருக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியவைகளைத் தயைசெய்து கூற வேண்டுகிறேன்:--

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாஸ! நான் கூறுவதைக் கேள்—ஸ்ரீராமச் சந்திருடைய ஸந்தோஷத்திற்கு எப்போதும் மானிடர்கள்பத்ரங்களில் (ஓலைகள்) ஸ்ரீராம நாமத்தை எழுதவேண்டும். தினந்தோறும் தொளாயிரம் நாமங்களை எழுதவேண்டும். இவ்வாறு கோடி நாமங்கள் அல்லது இலக்ஷம் நாமங்களை எழுதலாம்.

பத்து பாகங்களில் ஒரு பாகத்தினால் விதிப்படி ஹோமம் செய்யவேண்டும். இது விஷ்ணு என்ற மந்திரத்தினால் எள் முதலியவைகளால், அல்லது பாயஸத்தினால், அல்லது ஒன்பதுவித அன்னத்தினால் ஸ்ரீராகவரைப் பூஜித்து ஹோமம் நிறைவேற்றப்படவேண்டும். அப்படி ஹோமம் செய்வதற்கு அங்கமாகக் கொண்டு இராமர் முதலியவர்களைப் பூஜைசெய்வதற்குப் பிரயத்தினத்துடன் பத்ரத்தை ஸ்தாபிக்கவேண்டும். ஆயிரத்தெட்டு இராமலிங்கமாவது நூற்றெட்டு இராமலிங்கமாவது ஆயிரத்தெட்டு இராமதோ பத்ரமாவது நூற்றெட்டு இராமதோ பத்ரமாவது ஆஸனமாக அமைக்கப்படவேண்டும். இவ்விதம் ஹோமத்தையும் எழுதினதையும் பூஜையையும் மிகுந்தபக்தியுடன் ஸ்ரீராமார்ப்பணம் செய்யவேண்டும்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! இராம நாமங்கள் எழுதும் கிரமத்தைக் கூறினீர்கள். அதன் உத்தியாபனத்தின் கிரமத்தைச் சொல்லவில்லை அதையும் அறியவேண்டுகிறேன்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஏ மாணவனே! இராமநாமங்களை உத்தியாபனம் செய்வதற்கு நடக்கப்போகிற கதையை நடந்ததுபோல விஸ்தாரமாக சொல்லுகிறேன் கேள்—

துவாபரயுகத்தில் மகாவீரனும் பாண்டுகுமாரனுமாகிய தரும புத்திர மகாராஜன் இராஜ்யத்தை இழந்து பந்துக்களுடனும் திரௌபதியுடனும் வனத்தில் வாசம் செய்யப்போகிறார்.

அப்போது ஸ்ரீகிருஷ்ணன் தருமபுத்திரரைப் பார்ப்பதற்கு வனம் செல்லப்போகிறார்.

தருமபுத்திரர் வினவுகிறார்.

தேவர்களுக்குத் தேவரும், உலகங்களுக்கு நாதரும், பக்தர் களுக்கு வரமளிப்பவருமான உம்மை ஒருவிஷயம் கேட்கிறேன். நீர் என் விஷயத்தில் ஸந்தோஷித்திருப்பது உண்மையானால் இராஜ்யலக்ஷ்மியை அடையக்கூடியதும் புத்திர பௌத்திரர் களை விருத்திசெய்யக் கூடியதுமான ஒரு விரதத்தை இராஜ்ய மிழந்த எனக்குக் கூறவேண்டும்.

ஸ்ரீகிருஷ்ண பகவான் உபதேசிக்கிறார்.

இரகசியங்களுக்குள் இரகசியமான விஷயத்தைக் கேட்க விருப்பமிருந்தால் ஆதரவுடன் நான் கூறுவதைக்கேளும். இராம நாமத்தைத் தவிர வேறு உபாயம் மோக்ஷலட்சுமியைக் கொடுக் கக்கூடியதல்ல. தேஜோரூபம் என்றும் அவியகீதம் என்றும் இராமநாமத்தைத்தான் சொல்லுகிறது. அந்த இராமநாமத்தை மானிடன் ஜபம் செய்தால் இராமராகவே ஆகிறான். இந்த உபா யம் தான் ஹநுமாருக்கு இராமச்சந்திரபிரபு சொன்னார்.

தருமபுத்திரர் கூறுகிறார்.

நல்லபுத்தியுள்ளவரும் ருக்மிணிக்குப் பதியுமாகிய கிருஷ்ணா; எந்த ஸமயத்தில் இராமர் ஆஞ்சனேயருக்கு உபதேசம் செய் தார். அந்த விஷயத்தை விஸ்தாரமாக எனக்குச் சொல்லவேண் டும்.

ஸ்ரீகிருஷ்ணன் கூறுகிறார்.

முன் இராமாவதாரத்தில் இராவணன் ஸீதையை அபகரித் தான். அப்போது இராமன் ஹநுமாரை அழைத்துக்கூறுகிறார்—

ஸ்ரீராமபிரான் கூறுகிறார்.

வாயு குமாரனாகிய ஏ ஆஞ்சநேய! ஸீதையைத்தேடுவதற்குத் தென்றிசைமுழுதும் சென்று பார்த்துவா.

ஹநுமான் கூறுகிறார்.

உலகங்களுக்குப் பிரபுவாகிய ஏ இரகுநாத! தென்றிசையில் ஸமுத்திரமிருப்பதோடு அரக்கர்களும் இருக்கிறார்கள். அங்கு செல்ல எனக்குச் சக்தி எப்படி ஏற்படும்?

ஸ்ரீராமச்சந்திரர் கூறுகிறார்.

ஏ மாருதியே! இராவணன் முதலிய அரக்கர்களை நிவாரணம் செய்யும் சக்தியுள்ள மந்திரமிருக்கிறது. அதை உனக்கு உபதேசம் செய்கிறேன். அதனால் உனக்கு எல்லா விஷயங்களிலும் ஜயம் உண்டாகும்.

ஹநுமான் கூறுகிறார்.

மகாராஜனும் கிருபைக்குக் கடலும் தீனர்களைக் கரையேற்றுகிறவனுமாகிய மகாநுபாவா! அந்த மந்திரத்தின் தத்துவத்தை இப்போது உபதேசம் செய்யவேண்டும்.

ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

இவ்விதம் மாருதியின் மொழிகேட்ட இராமர் அவரைத் தனியாக அழைத்து வலதுசெவியில் ஸ்ரீராம என்று உபதேசம் செய்தார்.

ஆஞ்சநேயர் உபதேசம் பெற்று இலக்ஷம் தடவை புரச்சரணைசெய்து தென்றிசையை நோக்கிப்புறப்பட்டார். அந்த மந்திரத்தின் மகிமையினால் அநேகவித ஜந்துக்களால் நிறைந்தும் கடக்கமுடியாததுமான சமுத்ரத்தைக்கடந்து இலங்கைக்கு வந்து ஸீதையைக்காணாமல் அசோகவனஞ்சென்று அங்கு விருக்ஷத்தின் அடியில் இருக்கும் ஸீதையைக்கண்டார்.

அங்கு ஸீதையைக் கண்டவுடன் அவள் சமீபம் சென்று வெகு சந்தோஷத்துடன் ஸீதையின் பாதங்களில் நமஸ்காரம்

செய்தார். மிகவும் சூக்ஷ்மமான சரீரம் உள்ளவரும் பாலசரீரி போன்றவரும் பூமியில் விழுந்து நமஸ்காரம் செய்தவருமாகிய ஹநுமாரை ஸீதாதேவிபார்த்து "ஏபாலக! நீயார்?எங்கிருப்பவன்? உன் தந்தை பேரென்ன? எங்கு வந்தவன்?" என்று கேட்டாள்.

ஹநுமார் கூறுகிறார்.

எனக்குத் தாய் ஸீதை, தகப்பன் இராமர்; நான் இராமச் சந்திருடைய சமீபத்திலிருந்து வந்தவன்; ஹநுமான் என்னும் பெயருள்ளவன்; இதோ மோதிரத்தை வாங்கிக் கொள்ளவேண்டும்—என்றார்.

ஸீதை சுத்தமான சொர்ணத்தினல் செய்யப்பட்ட இராம நாம அடையாளமுள்ள இராமருடைய மோதிரத்தை அடைந்து மிகுந்த ஸந்தோஷங் கொண்டாள். ஸீதாதேவியின் ஸந்தோஷத்தைப் பார்த்த ஹநுமான் "தாயே! எனக்குப் பசி உண்டாய் மிகவும் களைப்புண்டாக்குகிறது. இந்த அசோக வனத்திலிருக்கும் பழங்கள் கிடைப்பது அரிதாகும். தங்களுடைய உத்தரவினல் பழங்களைச் சாப்பிடுகிறேன். நிச்சயம்" என்றார்.

ஸீதாதேவி கூறுகிறாள்.

சூரனுகிய பாலகா! இந்த அசோக வனத்திற்கு யஜமானனுகிய இராவணனிருக்கிறன். அவனை வெல்லும் சக்தியாருக்குமிராது. உனக்கும் முடியாது. எவ்விதம் நீ பழங்களைப் புசிக்கப் போகிறுய்?

ஹநுமார் கூறுகிறார்.

அம்மா! என் மனதில் ஸ்ரீராம என்ற மந்திரமாகிய ஆயுதம் இருக்கிறது. அதனல் ஸகல ராக்ஷசர்களும் இப்பொழுதெனக்குத் துரும்புபோலாவார்கள்—என்று சொல்லி ஸீதையின் உத்தரவைப் பெற்று அசோகவனத்திலுள்ள விருக்ஷங்களை முறித்தார்.

அந்த அரவங்கேட்டு அரக்கர்கள் வந்தார்கள். யுத்தமும் உண்டாயிற்று. ஹநுமார் மந்திரத்தின் மகிமையினல் அரக்கர்களை நாசஞ்செய்தார். இலங்காபுரியைக் கொளுத்தினர். மறுபடி அசோக வனஞ்சென்று ஸீதையை நமஸ்காரம் செய்து ஸீதையினிடம் சூடாமணியைப் பெற்று ஸ்ரீராமச்சந்திரரிடம் வந்து மணி

யைக் கொடுத்து அவருடைய பாதாரவிந்தத்திற்கு அருகே நின்ருர். ஸீதாபதியும் சூடாமணியைப்பெற்று அந்த வரலாற்றைக் கேட்டு ஸந்தோஷ மடைந்தார்.

ஏ தருமபுத்திரா! இராமநாமத்தின் மகிமையைக்கூறினேன். ஆகையால் நீயும் இராமநாமத்தை ஜபம் செய்.

தருமபுத்திரர் கூறுகிருர்.

எவ்விதம் ஜபம் செய்வது? எவ்விதம் புரச்சரணை செய்வது? அதன் பலன் என்ன? உத்தியாபனம் செய்வது எப்படி? எல்லாவற்றையும் கூறவேண்டும்.

கிருஷ்ணன் கூறுகிருர்.

ஸ்நானம் செய்து பரிசுத்தமான ஸ்தலத்தில் துளஸிமாலையால் ஜபம் செய்யவேண்டும்; அல்லது புஸ்தகத்தில் எழுதவேண்டும்; அல்லது மனதில் ஸ்மரணம் செய்யலாம். கோடியாவது இலக்ஷமாவது கணக்காக வேண்டும். ஸ்ரீராமமந்திரங்கள் அநேகமுண்டு. அவைகளுக்குள் ஒரு மந்திரத்தை உமக்கு உபதேசம் செய்கிறேன். ஸ்ரீஎன்ற சப்தத்தை முதலாவதும் ஜய என்ற சப்தத்தை மத்தியிலும் மறுபடி ஜய என்று இரண்டு தடவை சொல்லும் சப்தத்தையும் கூறி இரகுநாதனுடைய நாமங்களை இருபத்தொரு தடவை ஜபம் செய்வதால் கோடி பிரம்மஹத்தி பாவங்களும் நீங்கும்.

நல்ல புத்தியுடையவன் இந்த மந்திரத்தை லக்ஷமுறை ஜபம் செய்து பிறகு உத்தியாபனம் செய்யவேண்டும். ஜபம் செய்வதைக் காட்டிலும் இராமநாமத்தை எழுதுவதில் நூறுமடங்கு அதிகமான புண்ணிய மேற்படும், லக்ஷம் தடவை தனித்தனியே சிறப்பாக உத்தியாபனம் செய்யவேண்டும். உத்தியாபனம் செய்யும் விதியைக் கூறுகிறேன் கேள் - முதல் நாள் உபவாஸ மிருந்து இரவில் மண்டபத்தின் மத்தியில் இராமலிங்க பத்திரத்திலாவது ஆயிரத்தெட்டு அல்லது நூற்றெட்டு பத்திரத்திலாவது தானியங்களைப் பரப்பி அதன்மத்தியில் கலசத்தை வைத்து அதற்கு மேல் நல்ல வஸ்திரத்தினுல் விளங்கும் சொர்ண பாத்திரத்தில் உளுந்

தளவு எடைமுதல் ஒரு பலம் எடைவரையில் சொர்ணத்தினல் ஸீதை இலக்ஷ்மணர் ஸ்ரீ ராமர் இவர்களுடைய பிரதிமையை வைத்து மிகவும் ஜாக்கிரதையாகவிருந்து பதினறு உபசாரங்களால் பூஜிக்கவேண்டும். அந்தப்பிரதிமை தன் சக்திக்குத்தக்கபடி வெள்ளியினலோ தாம்பிரத்தினலோ இருக்கலாம்.

இராம நாமம் எழுதப்பட்ட பத்ரத்தை அதற்குமுன் வைத்து பூஜைசெய்யவேண்டும். பிறகு அவருடைய கதையைச் சிரவணம் செய்து தேவதைகளுக்கும்தேவராகிய இரகுகுலதிலகரையும் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

தீநர்களுக்கு நாதரும் கருணைக்குக் கடலுமாகிய இராமா! உம்முடைய பக்தியில் ஈடுபட்டவனுயினும் அபராதியாகிய என்னை ஸம்ஸாரமாகிய கடலிலிருந்து கரையேற்றிக் காக்கவேண்டும்—என்று மன்னிப்பு கேட்டுக்கொண்டு இராத்திரியில் கீதவாத்தியங்களுடன் விழித்துக்கொண்டிருந்து காலையில் ஸ்நானம் செய்து ஹோமத்தை ஆரம்பம் செய்யவேண்டும். பத்தில் ஓரம்சம் ஹோமம்; அதில் பத்தில் ஓரம்சம் தர்ப்பணம் பசுவின் பாலினல் செய்யவேண்டும். அதிலும் பத்தில் ஓரம்சம் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்விக்கவேண்டும்.

விரதம் ஸம்பூர்த்தி யடைவதற்குக் கன்றுடன் கூடியதும் அலங்கரிக்கப் பெற்றதும் வஸ்திரம் சொர்ணம் இவைகளுடன் கூடியதுமான கோவை குருவுக்குத் தானம் செய்யவேண்டும்.

இன்னும் மற்றுமுள்ள பொருளால் அந்தணர்களைச் சந்தோஷப்படுத்தினல் இராஜ்யத்தையும் இலக்ஷ்மியையும் அடையலாம். புத்திரனை விரும்புகிறவன் புத்திரனை அடைவான். பொருளை விரும்புகிறவன் பொருளை அடைவான்.

அநேகவித தானங்கள் தீர்த்தங்கள் பிரதக்ஷிணங்கள் தமஸ் இவைகள் இந்த விரதத்தின் இலக்ஷணத்தில் ஓரம்சத்துக்குச் சமமாகும். பலத்தை அபேக்ஷித்தோ அல்லது பலத்தை அபேக்ஷியாமலோ பக்தியுடன் இந்த விரதத்தைச் செய்வானுயின் அவனுக்கு ஸகல காரியங்களும் சித்திக்கின்றன.

இராமாயண புஸ்தகத்தை எழுதச்செய்தாலும் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் சுகமுண்டாகும். அதற்கும் இவ்விதமே உத்தியாபனமும் சுலோகங்களின் கணக்குப் பத்தில் ஓம்சம் ஹோமமும் அதில் பத்தில் ஓம்சம் தர்ப்பணமும் அதில் பத்தில் ஓம்சம் பிராம்மண போஜனமும் செய்யவேண்டும். முற்கூறிய சுலோகத்தினாலாவது ஹோமம் முதலியவைகளைச் செய்யவேண்டும்.

அல்லது கிரந்தங்களில் உள்ள சுலோகங்களைக் கொண்டு கணக்கிட்டுப் பத்தில் ஓம்சத்தினால் ஹோமம் செய்யலாம். அல்லது இனிக்கூறப்போகிறபடி சகுணசுலோகத்தை மட்டிலும் எடுத்து அதன் கிரமப்படி ஹோமம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். அல்லது இராமகாயத்ரியினாலாவது இராமமந்திரத்தினாலாவது செய்யலாம். சொர்ணமயமான பத்ரத்தில் ஒரே சுலோகத்தை எழுதவேண்டும். கமனஞ்செய்யும் சக்தியை அடையவேண்டுமென்று எண்ணமுள்ளவர்கள் இந்த சுலோகமுள்ள பத்ரத்தை ஸ்ரீராம மூர்த்திக்கு முன்னாலே வைத்து இவ்விதம் உத்தியாபனம் செய்யவேண்டும்.

தேவாலயம், யானை, குதிரை, விருக்ஷங்கள், வாபி, கிணறு, கடைத்தெருக்கள், கிரயவஸ்துக்கள், ஸ்திரீகள், புருஷர்கள், காவியங்கள், கவிகள், பசுக்கள், அரசர்கள், உப்பரிகைகள் வஸ்துக்கள் இவைகளை ஸ்தாபனம் செய்யும்போது அவைகளுக்குப் பெயரைவைத்து இன்னமும் இலக்ஷம் புஷ்பங்களால் ஸ்ரீராமரைப் பூஜித்து உத்யாபனமும் செய்யவேண்டும்.

ஏ அரசனே! இவ்விதம் உனக்கு எல்லாவற்றையும் கூறினேன். ஸ்ரீராமருடைய நாமத்தை ஜபம் உத்யாபனம் ஹோமம் தர்ப்பணம் பிராம்மண போஜனம் இவைகளால் பூஜிக்கின் நீ உன்னுடைய இராஜ்யத்தை அடைவாய்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

தருமபுத்திரர் அந்தவசனத்தைக்கேட்டு விதிப்படி செய்யப் போகிறார். பிறகு மூன்றுமாதத்தில் அவருக்கு இராஜ்யங்கிடைக்

கப் போகிறது. கடைசியில் அவர் நல்ல ஸ்தானத்தையும் அடையப்போகிறார். இவ்விதம் வரப்போகிற கதையை உனக்குக் கூறினேன்.

மானிடன் இந்த ஸ்ரீராமநாம மகிமையைக்கேட்டால், இராம பக்தியுடன் புத்திர பௌத்ரர்களையும் சுகத்தையும் அடைந்து பூமியில் அநேக போகங்களை யநுபவித்து உத்தமமான மோக்ஷம் அடைவான்.

ஸ்ரீராமருக்கு முன்னால் வெகு பக்தியுடன் இந்த ஆனந்த ராமாயணத்திற்கு அல்லது மற்ற புண்ணிய கிரந்தத்திற்கு விஸ்தாரமாக வியாக்கியானம் செய்யவேண்டும். இந்த ஆனந்தராமாயணத்தில் ஒரு சருக்கத்திற்காவது பாதி சருக்கத்திற்காவது கால் சருக்கத்திற்காவது ஒன்பது சுலோகத்திற்காவது ஒரு சுலோகத்திற்காவது பாதி சுலோகத்திற்காவது கால் சுலோகத்திற்காவது வியாக்கியானஞ்செய்து படிப்பவன், மோக்ஷத்துக்குரியவனாவான். எவர்கள் அரசு பொரசு இவைகளினடியிலும், துளஸிக்குச் சமீபத்திலும், புண்ணியஸ்தலத்திலும் சூரியனுக்கு முன்பும் பிராம்மணர்களுக்கெதிரிலும் ஸ்ரீராமருக்கு முன்னாலும் சபையில் பிராம்மண கூட்டத்தின் மத்தியிலும் நதிக்கரையிலும் ஆதரவுடன் ஆனந்தராமாயணத்தைப் படிப்பார்களோ அந்த மானிடர்கள் கிருதார்த்தர்களாவார்கள்.

இராமாயணம் முழுவதும் அல்லது ஒரு காண்டம் அல்லது சருக்கம் எழுதி அந்தணனுக்குத் தானம் செய்யவேண்டும். ஆனந்தராமாயணத்தில் தினந்தோறும் ஒரு சருக்கம் எழுதிப் பூஜைசெய்து விப்பிரனுக்குத் தானம் செய்யலாம்.

சக்தியில்லாதவன் ஒன்பது சுலோகங்களை எழுதிப் பூஜை செய்து இராமருடைய பிரீதிக்காகத் தானஞ்செய்யலாம். இந்தத் தானத்தைத் தினந்தோறும் மானிடர்கள் செய்யவேண்டும்.

தினந்தோறும் ஒரு சருக்கத்தை எழுதித் தானம் செய்தால் சொர்ணதானம் செய்த பலனை அடைவான்.

இதற்குச் சமமாய் ஸ்ரீ ராமச்சந்திரனுக்குப் பிரீதியுள்ள தானம் வேறொன்றுமில்லை. ஆகையினால் எப்போதும் இந்தத்

தானத்தைச் செய்யவேண்டும். இரண்டுபாக்குடன் ஒன்பது வெற்றிலையை ஒன்பது நாளைக்கு ஒன்பது அந்தணர்களுக்குத் தானம் செய்யவேண்டும். தக்ஷிணைகளுடன் தானம் செய்வது ஸ்ரீராமருக்குப் பரமபிரீதியைக் கொடுக்கும். சக்தியில்லாதவன் ஒரு தாம்பூலத்தையாவது தானம் செய்யவேண்டும். தாம்பூலதானத்திற்குச் சமமான தானம் மூவுலகத்திலும் வேறில்லை. தாம்பூலம் சுத்தியைக் கொடுக்கும்; மங்களத்தைக் கொடுக்கும். ஸ்ரீயை விருத்தி செய்யும். அது ஸீதாகாந்தனுக்குப் பிரீதியுள்ளது. ஆதலால் அவசியமாக முயற்சியுடன் தாம்பூலதானம் செய்யவேண்டும். எப்போதும் இராமரைப் பூஜை செய்வதும் தியானம் செய்வதும் ஸ்மரணம் செய்வதுமாக இருக்கவேண்டும். எவனுடைய வாக்கியத்தில் இராமனுடைய நாமம் பிரகாசிக்கின்றதோ எவன் கைகள் பிரபுவைப் பூஜிக்கின்றனவோ, எவன்காதுகள் ஸ்ரீராமர் சரித்திரத்தைக் கேட்கின்றனவோ, எவன் பாதங்கள் இராமதீர்த்தம், இராமேசுவரம், இராமக்ஷேத்திரம் இவைகளுக்குச் செல்லக்கூடியவைகளோ எவன் கண்கள் ஸ்ரீராமச்சந்திரன் பூஜையைப் பார்ப்பதற்குரியவைகளோ 'அந்தப் புருஷனைத் தன்னியன் என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

இராம இராம இராம என்று சொல்லும் ஜனங்கள் மஹாபாதகம் செய்தவர்களானாலும் மோக்ஷமடைகிறார்கள். சந்தேகமில்லை.

ஸ்ரீராமச்சந்திரனுடைய மந்திரமும் தனக்குச் சுவாதீனமான வாக்கும் இருக்கும்போது ஜனங்கள் நரகத்திற்குப் பாத்திரர்களாவது பெரிதான ஆச்சரியம்! ஸ்ரீராம நாமாமிருத மந்திரமாகிய ஸஞ்சீவினி மூலிகையானது மனதில் பிரவேசித்திருந்தால் ஆலாலவிஷம் பிரளயகாலாக்நி யமன்ஸந்நிதி இவ்விடங்களில் பிரவேசிப்பினும் பயம் ஏற்படாது.

உட்காரும்போதும் நித்திரை புரியும்போதும் போஜனம் செய்யும்போதும் விளையாடும்போதும் நடக்கும்போதும் எப்போதும் ஸ்ரீராமனைத் தியானம் செய்யவேண்டும். எப்போதும் இராமனுடைய குணங்களைச் சிரவணம் செய்வதோடு கீர்த்தனம் தியா

னம் கானம் உபதேசங்களையும் செய்யவேண்டும். தேவர்களுக்குத் தேவலோகத்தில் அமிருதம் எப்படிப்பட்டதோ அப்படியே மானிடர்களுக்குப் பூமியில் இராமநாமாமிருதமென்றறிக; அது ஒருகாலும் குறைவடைவதில்லை.

எந்த மானிடன் கோபீசந்தனம் தரித்து இராமமுத்திரையை அடைந்து இராமநாமத்தை உச்சாரணம் செய்து துளஸிமணியையும், சங்கம், சக்ரம், கதை, பத்மம் இவைகளையும் தரித்து இராமனை மனதில் நினைத்துக்கொண்டிருக்கிறானோ அவனே தன்னியன், மற்றவன் தன்னியனாகமாட்டான்.

எவன் இராமநாமத்தை எப்போதும் சொல்லுகிறானோ அவன்றான் புருஷர்களுக்குள் உயர்ந்தவன். எவன் இராமநாமத்தை நினைக்கவில்லையோ அவன்றான் நிந்தைக்குரியவன். சிவனிடம் பக்திசெய்து ஸ்ரீராகவனை நிந்தனை செய்கிறவர்களைக் கழுதைகளென்றறியவேண்டும். இராமர் தான் சிவன், சிவன் தான் இரகுபுங்கவன்; இவர்களுள் பேதத்தைக் காண்கிறவன் நரகத்தை அடைவான். ராம என்ற இரண்டு அக்ஷரத்தை எவர்கள் கூறுகிறார்களோ அவர்களுக்கு எங்கும் பயமில்லை. அவர்கள் ஜீவன்முக்தர்களாவார்கள்:

இராமருக்கும் சிவனுக்கும் எவன் பேதத்தைக் காண்கிறானோ அவன் ஜன்மம் ஆட்டின் கழுத்தில் தொங்கும் ஸ்தனம் போன்ற சதைபோல் பிரயோஜனப்படாது. இராமர் பரமசிவனுடைய இருதயஸ்தானம். சிவன் இராமருடைய இருதயஸ்தானம். மனுஷியர்கள் வெகுவித குதர்க்கங்களால் பேதத்தை எண்ணக்கூடாது. இராமமுத்திரை அடையாளமுள்ள புருஷனைக் கண்ட யமபடர்கள் ஸிம்மத்தைக்கண்ட யானைகள் போலப் பத்துத் திசைகளிலும் ஓடுகின்றார்கள். நெற்றியிலும் முதுகிலும் இரண்டு விலாப்புறங்களிலும் வயிற்றிலும் இருதயத்திலும் இரு கைகளிலும் தலையிலும் ஆக ஒன்பது ஸ்தானங்களிலும் கோபீசந்தனத்தினால் இராம முத்திரைகளைத் தரிக்கவேண்டும். இராம முத்திரை என்பது மிகவும் சிறந்தது. ஸகல தோஷங்களையும் போக்கக்கூடியது. கோபீசந்தனத்தை மானிடர்கள் எப்போதும்

தரிக்கவேண்டும். எவன் தேகத்தில் இராமமுத்திரை இருக்கிற தோ அவனிடம் பாபம் அணுகாது. எப்போதும் ஸ்தோத்திரங் களால் இராமரை ஸ்தோத்திரம் செய்யவேண்டும். முற்காலத் தில் செய்தவை இந்தக்காலத்தில் செய்தவை தன் புத்திபலத்தி னால் செய்தவை ஆகிய இத்துதிகளை ஓதவேண்டும்.

எந்த சுலோகங்கள் அபத்தமுள்ளவைகளானாலும் ஸ்ரீராம னுடைய கீர்த்தியென்னும் அடையாளமுள்ள நாமங்களாகை யாலும் ஸாதுக்கள் கேட்பதும் சொல்வதும் கானம்செய்வதுமாக இருப்பதாலும் அந்த சுலோகங்களே கௌரவமுடையவைகளாம்.

கவிகள் செய்திருக்கும் பதங்கள் மிகுந்த தோஷமுள்ளவை யானாலும், இராமநாமத்தால் அலங்கரிக்கப்பட்டால் அவைகளை வெகுசுத்தம் என்று அறியவேண்டும். சிரவணம் செய்யினும், பாபங்களைப் போக்கக்கூடியது.

எந்தக் கவிதையில் ஸ்ரீராம கிருஷ்ணர்களுடைய சரித்திரங்க ளிருக்கின்றனவோ அந்தக்கவிதை மிகவும் புண்ணியமானது. பெரியோர்கள் எப்போதும் கானம் செய்யக்கூடியது.

மாணவனே! கவிதை விஷயத்தில் ஸகல சந்தேகங்களையும் போக்கக்கூடிய இரகசியமான மற்றொரு விஷயம் கூறுகிறேன். அசுவத்தாமா, மகாபலி, வியாஸர், அநுமார், விபீஷணர், கிருபர், பரசுராமர் இவ்வேழு பேரும் சிரஞ்சீவிகள். இந்த வசனம் எப்போதும் கலியுகத்திலும் ஸத்தியமான தென்றறியவேண்டும். பூமியில் எந்த மானிடர்களிடம் மந்திரபல மிருக்கிறதோ அவர் களை அசுவத்தாமாவின் அம்சம் என்றறியவேண்டும்.

எந்த அரசர்கள் பூமியில் நியாயவழியில் ஸம்பாதித்த பொருளால் இராஜ்யபரிபாலனம் செய்கிறார்களோ அவ்வரசர் கள் மகாபலியின் அம்சமுள்ளவர்களாவர். பூமண்டலத்தில் எந்த மானிடர்கள் கவித்வத்தில் இராமரை ஸ்துதிசெய்து வர்ணிக்கி றார்களோ அவர்கள் வியாஸருடைய அம்சமுள்ளவர்களாவர். இந்த அவனிதனில் எவர்கள் வீரர்களாக இருக்கிறார்களோ அவர் கள் சிரஞ்சீவி என்ற தன்மையை அடைந்திருக்கும் மாருதியின் அம்சமுள்ளவர்களாவார்கள்..

எவர்கள் சாந்தர்களாகவும் இராம பக்தர்களாகவுமிருக்கிறார்களோ அவர்கள் விபீஷணனுடைய அம்சமுள்ளவர்கள். பூமியிலே எந்த மானிடர்கள் தைரியத்துடன் யுத்தம் செய்கிறார்களோ அவர்கள் கிருபாசாரியின் அம்சமுள்ளவர்கள். பூமியில் எந்த வீரர்கள் கோபத்துடன் கூடியவர்களோ அவர்கள் பரசுராமரின் அம்சமுள்ளவர்களாவர்.

வியாஸர் சிரஞ்சீவி என்று ஜனங்கள் எவ்விதம் தெரிந்து கொள்வதெனில், சொரூபம் கூறுகிறேன், ஸாவதான மனதுடன் கேள்—

எவர்கள் தேவபாஷையில் கவனம் செய்கிறார்களோ அவர்கள் வியாஸரின் அம்சமுள்ள பண்டிதர்களென்றறியவேண்டும். எவர்கள் இராமச்சந்திரர், சிவன், கிருஷ்ணன் இவர்களை ஸ்தோத்திரம் செய்கிறார்களோ அவர்கள் வியாஸரின் அம்சமுள்ளவர்களாவர்.

எவர்கள் அரசனையும் தாஸியையும் ஸ்திரீயையும் அரசர்களின் சபையையும் மானிடனையும் ஸ்தோத்திரம் செய்கிறார்களோ அவர்கள் வியாஸரின் அம்சமுள்ளவர்களாகார். எதுவரையில் இராமசரித்திர மிருக்கிறதோ அதுவரையில் வியாஸர் இருக்கிறார்; பிறகு மோக்ஷத்தை அடையப்போகிறார். இந்த விஷயத்தைப் படிப்பதால் இன்ன பலனுண்டென்பதைச் சொல்லுகிறேன். மாணவனே! நான் விஸ்தாரமாகக் கூறும் விஷயத்தைச் சாவதானமான மனதுடன் கேள்—

இராமநாமங்களின் இலக்ஷணத்தை உத்தியாபனம் செய்யும் கிரமம் முதலியவைகளைக் கூறும்

7 - வது சருக்கம்

முற்றிற்று.

## 8-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்:

காயத்ரி என்பது சிரசு வியாகிருதியுடன் கூடியது. நூறு வேதாக்ஷரங்களுக்குச் சமமானது. பவமானம் என்னும் மிகச் சிறப்புள்ள சூக்தம், அறுநூறு ருக்குகள் சேர்ந்தது; நானூறு காயத்ரிக்குச் சமமானது. அதிக புண்ணியத்தைக் கொடுக்கக் கூடியது. அவ்விதமே இருபத்து நான்கு உபநிஷத்துக்களும் மற்றுமுள்ள புண்ணிய சூக்தங்களும் புண்ணியத்தைக் கொடுக்கக் கூடியவைகள்.

ஸம்ஹிதையைப் பாராயணம் செய்யும் பயனைக் காட்டிலும் பதத்தைப் பாராயணம் செய்வதில் இரண்டு மடங்குபலம் ஏற்படும், கிரமத்தைப் பாராயணம் செய்வதில் மூன்று மடங்கு புண்ணியமென்றும் ஜடையைப் பாராயணம் செய்வதில் ஆறு மடங்கு புண்ணியமென்றும் பெரியோர்கள் சொல்கிறார்கள்.

மகா பாரதத்தைப் பாராயணம் செய்வது வேதத்திற்குச் சமமாகும். புராணங்களையும் ஸ்மிருதிகளையும் பாராயணம் செய்வதில் அதிற் பாதி புண்ணியமென்றும், பாரதத்தில் கீதையையும் ஸஹஸ்ரநாமத்தையும் பாராயணம் செய்வது புண்ணியத்தை உண்டாக்குவதிலும் பாபங்களைப் போக்குவதிலும் காயத்ரிக்குச் சமமானதென்றும் இவ்விரண்டையும் பாராயணஞ் செய்வதில் எந்த பலம் கூறப்படுகிறதோ அதைக்காட்டிலும் அர்த்தம் தெரிந்து கொள்வதில் நான்கு மடங்கு அதிகமாகப் புண்ணியம் ஏற்படுமென்றும் சொல்லப்படுகிறது. இவைகளை நல்ல பக்தர்களுக்குச் சிரவணம் செய்விப்பதில் பத்துமடங்கு அதிகமாகப் புண்ணியம் ஏற்படும். பூமி தானம் செய்வது உலகத்தில் மஹா தானமென்று ஏற்பட்டதுபோல, வித்தியாதானம் செய்வது மிகுதியான பலன் தரும் என்று பெரியோர்கள் நிச்சயம் செய்திருக்கிறார்கள்.

### விஸ்ணுதாஸர் வினவுகிறார்.

சொர்ணத்தையோ அல்லது மற்றவைகளையோ யாருக்கு எவ்விதம் தானம் செய்வது? அந்தணன் பாத்திரனவனா? அல்லது மற்றவர்களா, இதை விளக்க வேண்டுகிறேன்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

குருகுலவாஸஞ் செய்து பிக்ஷை எடுத்து அந்த அன்னத்தைப் புசித்து வேதாத்தியயனம் செய்து ஒரு சாகையைப் பூர்ணமாக முடிப்பவனே உசிதமான பலனை அடைவான்.

ஸம்ஹிதையை அத்தியயனம் செய்யும் மாணவனுக்கு ஒவ்வொரு அக்ஷரத்திற்கு காயத்ரீஜபம் செய்த பலன் ஏற்படும். பதத்தைப் பாராயணம் செய்தால் அதில் பாதிபலனென்றும் கிரமத்தைப் பாராயணம் செய்தால் அதில் பாதிபலனென்றும் ஸம்கிதையைப் பாராயணம் செய்வதைக் காட்டிலும் ருக்குகளாகப் பாராயணம் செய்வதில் பலன் அதிகமென்றும், அதைக்காட்டிலும் உபநிஷத்துக்களைப் பாராயணம் செய்வதில் இரண்டு மடங்கு பலனென்றும், பாராயணம் செய்வதிலும் செய்விப்பதிலும் குரு சிஷியர்களுக்குச் சமமான பலனென்றும், மனதினாலேயே பாராயணம் செய்வதில் மூன்று மடங்கு பலனுண்டென்றும் புஸ்தகத்தில் எழுதியபடி பாராயணம் செய்தால் அதில் பாதி பலனென்றும் ஏற்பட்டிருக்கிறது. ஒருவன் அத்தியயனம் செய்து பிறகு நினைத்தாலும், பாராயணம் செய்யத் தெய்வ சங்கற்பத்தினால் தடையேற்படுமானாலும், அவன் பாராயணம் செய்யப் பாத்திரமாகிறான். தனக்கு அறிவிருந்தும் ஆசையில்லாமலோ அஜாக்ரதையாலோ அத்தியயனம் செய்த வேதத்தை மறந்தால் அவன் கழுதையாகப் பிறப்பான்; தான் அத்தியயனம் செய்த வேதத்தின் அக்ஷரங்கள் எவ்வளவோ அவ்வளவு வருஷங்கள் கழுதையாகப் பிறந்து பிறகு அத்தியயனம் செய்ததற்குப் புண்ணிய லோகங்களை அடைகிறான். தனக்குரிய வேதசாகையை முதலாவது அத்தியயனம் செய்து பின்பு மற்ற வேத சாகைகளை அத்தியயனம் செய்வானாயின், ஒவ்வொரு அக்ஷரத்திற்குங் காயத்ரி ஜபஞ் செய்த பலனில் இரண்டு மடங்கு ஏற்படும். வேத சாகையை அத்தியயனம் செய்து ஸ்ரீராமருடைய மகிமை தெரிந்து கொள்ளாமல் இராம பூஜையைமட்டும் அநுசரிப்பவனாயினும் பாதி பலனை அடைகிறான். எவன் இராமரிடம் பக்தியில்லாமல் வேதத்தைமட்டும் அத்தியயனம் செய்கிறானோ அவனுக்கு நான்கில்

ஒரு மடங்கு புண்ணிய முண்டாகும். இராமனைத் துவேஷித்துக்கொண்டால் அத்தியயனம் செய்தது பலனில்லாமற்போகும். நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள் மீமாம்ஸை தர்க்கசாஸ்திரம் புராணம் தருமசாஸ்திரம் ஆக இப்பதினான்கும் வித்தைகளென்று பெயருள்ளவைகள். ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்த சாஸ்திரம் இவை நான்கும் உபதேசங்கள் எனப்படும். இவைகளையும் சேர்த்துப் பதினெட்டு வித்தைகளென்று தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தஸ், சோதிடம் இவையாறும் அங்கங்கள். இவைகளை எவன் படிக்கிறானோ அவனுக்கு ஏற்பட்ட பலன்கள் யாவையெனில், ஸம்கிதையைப் பாராயணம் செய்வதில் உண்டாகும் பலனில் பாதி பலனை அடைவான். வேதத்திற்குச் சிக்ஷை என்பது மூக்குப்போலாகிறது. கற்பம் என்பது கைகளாகிறது. வியாகரணம் முகமாகிறது. நிருத்தம் காதுகளாகிறது. சோதிடம் கண்களாகிறது. சந்தஸ் பாதங்களாகிறது. சிக்ஷை கற்பம் நிருத்தம் சந்தஸ் இவைகளின் அர்த்தம் தெரிந்து கொள்ள ஒரு தடவை யோகம் செய்பவனுக்கு நான்கு மடங்கு பலம் ஏற்படும். சோதிட சாஸ்திரத்தின் அர்த்தம் தெரிந்துகொண்டவனுக்கு ஸம்கிதையைப் பாராயணம் செய்த பலன் ஏற்படும். ஒளியுள்ள கிரகங்களின் சேர்க்கையைத் தெரிந்து கொண்டால், பாதிபலனை அடைகிறான். ஜாதகம் பிரசனம் இவைகளை அறிந்ததினால் கொஞ்சமேனும் புண்ணிய முண்டாகாது. ஒருவன் வேதத்தை அத்தியயனம் செய்யாமல் ஜாதகம் பிரசனம் இவைகளை மட்டிலும் தெரிந்து கொண்டு கணித மறியாமற்போனால் அவனை நக்ஷத்திரம் பார்த்து ஆலோசனை செய்கிறவனென்று அறியவேண்டும். அவனுக்குத் தானம் செய்வதுகூடாது. எந்தக் காரியங்களுக்கும் முதலான தன்னுடைய வேதத்தில் ஒரு பிரிவையும் அத்தியயனம் செய்யாமல், வேதத்திற்கு அங்கங்களான சாஸ்திரங்களைப் படித்தால், அவனும் நீக்கப்பட்டவனாவன். தன் வேதத்தைக் கொஞ்சமேனும் அத்தியயனம் செய்து பிறகு உபநிஷத்துக்களைப் பாராயணஞ்செய்து அவற்றின் பொருளைத் தெரிந்துகொள்ளவோ வேதங்களின் அர்த்தங்களைத் தெரிந்து

கொள்ளவோ சாஸ்திரங்களைப் படிப்பவன் ஞானத்திற்குரியவனாக வும் மிகுந்த புண்ணியத்திற் குரியவனாகவும் ஆகிறான். அந்தணர் களுக்குள் ஞானமுள்ளவன் பெரியவன் பூஜ்பன் என்று ஸ்மிருதி களில் கூறியிருக்கிறது. ஞானம் உயர்ந்தால் நல்ல பாத்திர மென்றும் குறைந்தால் நல்லபாத்திர மல்லவென்றும் ஏற்படு கிறது.

பாராயணம் செய்பவர்களில் புண்ணிய மிகுந்தவன் நல்லபாத் திரமாவான். குறைந்தவன் நல்லபாத்திரனாகான் என்றும் ஏற்படு கிறது. ஞானமுள்ளவன் பாராயணம் செய்கிறவன் இவர்களுக் குள் ஞானமுள்ளவன் அதிகப் புண்ணியம் செய்தவனாகையால் ஞானமுள்ளவன் முதலாவது பூஜைக்குரியவனென்பது எனதபிப் ராயம். ஞானத்திற்குச் சமமான பரிசுத்தமுள்ளது வேறொன்று மில்லை. ஸ்ரீராமசந்திரர் ஞானமுள்ளவனிடத்தில் வெகு பிரீ தியுள்ளவர். ஞானமுள்ளவனும் ஸ்ரீராமரிடம் பிரீதியுள்ளவன்.

எந்த மானிடனுக்கு வாதிகளை ஜயிக்கச் சக்தியேற்பட்டு அவன் வழியை அநுசரித்தே சமாதானம் செய்வானாயின் நூறு பாடகர்களைக் காட்டிலும் அவன் சிறந்தவனாகிறான். வேதம் முத லியவைகளின் பொருள் தெரிந்துகொள்ள எவன் வியாகரணம் படிக்கிறானோ அவன் வேதத்தை அத்யயனம் செய்த பலனை அடைகிறான். அந்த ஞானம் அதிகமானால் வேதத்தின் அர்த் தம் தெரிந்துகொண்ட பலனை அடைவான். கருமத்தையும் பிரம் மத்தையும்கூறும் மீமாம்ஸை இரண்டுவிதமாகும். அவை பூர்வமீ மாம்ஸை உத்தர மீமாம்ஸை என்று பெயருள்ளவை. முதலாவது மீமாம்ஸை வேதத்தின் அர்த்தம்; ஞானத்திற் கொப்பானது. இரண்டாவது மீமாம்ஸையின் பலனைக்கேள் - ஒவ்வொரு அக்ஷ ரந்தோறும் நூறு காயத்ரிக்குச் சமமான பலன் ஏற்படும். எந்த கிரந்தங்கள் உபயோக முள்ளனவோ அவைகளைப் படித்தால் அர்த்தந் தெரிந்துகொண்ட பலன் ஏற்படும். உபயோகமில்லாத வைகளைப் படித்தால் நான்கில் ஒருமடங்கு பலன் ஏற்படும்.

வேதம் உபநிஷத்து இவைகளின் அர்த்தங்களையும் தருக்க நியாயங்களையும் ஞானம் அதிகமாவதன் நிமித்தம் படித்தால்

வேதத்தின் பொருளை முற்றும் தெரிந்து கொண்ட பலனை உண்டாக்கும். பிர்ம்ம சொரூபம் தெரிந்துகொள்ளத் தருக்க சாஸ்திரத்தைப் படிக்காமல் பிழைப்பிற்காகப் படித்து ஹேதுவாதங்கள் செய்பவன் தான் படித்த அக்ஷரங்களின் கணக்குப்படி அவ்வளவு வருஷங்கள் நரியாகப் பிறப்பான்.

வைஷ்ணவம், மத்ஸியம், கூர்மம், பாகவதம், ஆதித்தியம், காருடம், ஸ்காந்தம், மார்க்கண்டேயம், பிராம்மம், பிர்ம்மாண்டம், லிங்கம், பிர்ம்மகைவர்த்தம், பவிஷியோத்தரம், ஆக்நேயம், பாத்மம், வாமனம், வாராகம், வாயவியம் இப்பதினெண் புராணங்களையும் முன் ஏற்பட்ட இராமாயணத்திலிருந்து வியாஸ முனிவர் பிரித்தபடியால் அவை புராணங்களென்ற பெயருடன் பூமியில் விளங்குகின்றன. முதன் முதலில் செய்த புராணங்கள் சிறந்தவைகள் என்பதற்கு மகாபுராணம் என்று சொல்லப் படுகின்றன. ஸகல புராணங்களுக்கும் பலனைக் கூறுகிறேன் கேள்.—

புராணங்களைப் படித்தால் வேதத்தைப் பாராயணம் செய்த பலன் உண்டாகும். கேட்டால் அதிலே பாதிபலன் ஏற்படும். பொருளைச் சிரவணம் செய்தால் பத்துமடங்கு புண்ணியம் அதிகமாகும். வாசிப்பவனுக்கு இரண்டுமடங்கு புண்ணியமும் வியாக்கியானம் செய்கிறவனுக்கு நூறுமடங்கு அதிகமான புண்ணியமும் ஏற்படும். இவைகளைத் தவிர உபபுராணங்கள் உண்டு. அவைகளின்பலனைக் கேள்.

விஷ்ணுதருமோத்தரம், சைவம், பிருகந்நாரதம், பகவதீ புராணம், இலகுநாரதம், பவிஷியத்பருவம், தந்திரபாகவதம் நாரஸிம்மம், ரேணுகம், தத்துவஸாரம், வாயுகூறின தத்துவஸாரம், நந்திகேசுவரர் கூறின தத்துவரஸாம் பாசுபதம், யமனுக்கும் நாரதருக்கும் ஸம்வாதம் நடந்த வரலாற்றைக் கூறும் ஹம்ஸபுராணம், விநாயகபுராணம், பிருகத், பிர்ம்மாண்டம், விஷ்ணுரகஸியம் இவைகள் உபபுராணங்கள். இவைகள் புராணங்களின் பாதி பலனைக்கொடுக்கக் கூடியவைகள். பாரதம் வேதத்திற்குச் சமமானது. பொருளுடன் அதிகப்பலன் கொடுக்கக் கூடியது. அதிலும் பகவத்கீதையும் விஷ்ணு ஸஹஸ்ரநாமமும்

பாரதத்திற்குள்ள பலனைக்காட்டிலும் பத்துமடங்கு அதிகப் பலனைக் கொடுக்கும்

எவன் பக்தியுடன் சிரவணம் செய்கிறானோ அவன் பாதி பலனை அடைவான். பாரதம் இதிகாஸம் இவ்விரண்டும் இராமாயணத்திலிருந்துண்டாயின. 'வேதத்தைப் பாராயணம் செய்வதால் உண்டாகும் பலன் இராமாயணத்தைப் பாராயணம் செய்வதால் ஏற்படும். சிரவணம் செய்தால் அதில் பாதிபலனுண்டாகும். வியாக்கியானம் செய்பவனுக்குப் பத்துமடங்கு அதிகமான பலன் ஏற்படும். வான்மீகிமகாமுனிவர் செய்த நூறுகோடி கிரந்தமுள்ள இராமாயணம் ஸகல இராமாயணங்களுக்கும் ஆதிபாக ஏற்பட்டது; மிகுந்த மங்களத்தைக் கொடுக்கக்கூடியது. அதிலிருந்து அநேக இராமாயணங்கள் ஏற்பட்டன. இருபத்து நாலாயிரம் கிரந்தங்களுள்ள இராமாயணம் முதலாவதாகக் கூறப்படுகிறது. அவ்விதமே யோகவாஸிஷ்டம், அத்யாத்மம், ஹநுமத் ராமாயணம், நாரதராமாயணம், இலகுராமாயணம், பிருகத் ராமாயணம், அகஸ்திய ராமாயணம், ஸாரராமாயணம், தேகராமாயணம், விருத்த ராமாயணம், பிரும்ம ராமாயணம், பரத்வாஜ ராமாயணம், சிவராமாயணம், கிரௌஞ்ச ராமாயணம், பரதராமாயணம், ஜைமினி ராமாயணம், ஜடாயுராமாயணம், புலஸ்திய ராமாயணம், விசுவாமித்ர ராமாயணம், சுதீக்ஷண ராமாயணம், ஆனந்த ராமாயணம் இவ்விதம் அநேக இராமாயணங்களிருக்கின்றன. இவைகளின் எண்ணிக்கையைச் சொல்ல எவன் சமர்த்தனாவான்? இவைகள் நூறுகோடி கிரந்தங்களடங்கிய இராமாயணத்திலிருந்துண்டானவைகள். இராமாயணங்கள் எல்லாவற்றுள்ளும் ஆனந்த ராமாயணம் சிறந்தது. இதைப்பாராயணம் செய்வதால் உண்டாகும் பலனைக்கேள்— நூறுகோடி கிரந்தமுள்ள இராமாயணத்தைச் சிரவணம் செய்வதாலுண்டாகும் பலனில் பாதிபலன் உண்டென்றறிய வேண்டும். இந்த ஆனந்த ராமாயணத்தைச் சிரவணம் செய்வதால் இரண்டு மடங்கு பலனும் பாராயணம் செய்வதால் பத்துமடங்கு பலனும் ஏற்படும். அதனால் இது ஆனந்தமென்று சொல்லப்படுகிறது. எப்போதும் இதை மானிடர்கள் சிரவணம்

செய்யவேண்டும். இதற்குச்சமமாக ஒரு கிரந்தமும் எற்பட்ட தில்லை, எற்படப்போகிறதுமில்லை. சாஸ்திரங்கள் எல்லாவற்றுள் ளும் பாஞ்சராத்திர மென்னும் ஆகமசாஸ்திரம் அதிகம். அந்த ஆகமம் பகவத்கீதைக்குச் சமமானது. பாரதக் கதை நல்ல பக்தி உண்டாவதற்கு ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பாரதக் கதையை முன்னோர்கள் காவியமாகச் செய்திருக்கிறார்கள். அதைப்படிப் பவன் பத்தில் ஒரு பங்கு பலனை அடைவான். நல்ல பக்தர்கள் செய்திருப்பதைப் பாராயணம் செய்தால், நூறில் ஒருபங்கு பலனை அடைவான்.

எவன் கதையைக் கற்பித்துக் காவியம் செய்கிறானோ அவ னுடைய சிரமம் வீணாகிறது. அதைப்படிக்கிறவன் தோஷத்துக் குரியவனாகின்றான். புராணம் பாகவதம் இராமாயணம் உப புராணங்கள் இவைகளிலிருக்கும் கதையைக் கவனம் செய்து கிரந்தம் எழுதுகிற இராமபக்தன் இந்திரலோக வாசத்தை அடைந்து அங்கு ஒவ்வொரு அக்ஷரத்திற்கு ஒவ்வொரு வருஷம் சுகத்தை அநுபவிப்பான். புராணங்களிலிருந்து கதையை மட்டும் எழுதும் இராமபக்தன் வியாஸருடைய சொரூபமுள்ள வன். அவன் பிருகஸ்பதிலோகத்தில் வசிப்பான். பெண்ணு டைய பிள்ளை, தன்னால் போஷிக்கப்பட்டவன், சீடன், புத்திரன் இவர்கள் சத்புத்ரர்களாவார்கள். உத்திபானம், தடாகம் இவை களை ஏற்படுத்தல், நல்ல கிரந்தங்களைச் செய்தல் இவைகளும் ஸத் புத்திரர்களுக்குச்சமானமாம். இவ்விதம் பூமியில் அசுவத்தாமா முதலிய எழு சிரஞ்சீவிகள் அம்சத்துடன் சஞ்சாரம் செய்கிறார் கள், ஸ்ரீராம பக்தர்கள் கவனம் செய்து ஸ்தோத்திரஞ் செய்த கிரந்தமும் பூஜை செய்யத்தக்கது; பாராயணம் செய்யத்தக்கது. பாரதத்திற்குள்ள பலனில் நூற்றில் ஒருபங்கு பலனுள்ளது. பக்தர்கள் செய்த கவிதையை நிந்தனை செய்பவர்கள் கழுதைக ளென்று சொல்லப்படுவார்கள்.

அந்தந்தப் பாஷைகளில் இராமவர்ணனையுடன் கூடின கவன மானது பாரதத்தில் சொன்ன பலனில் ஆயிரத்தில் ஒருபங்கு பலனைக்கொடுக்கும். ஸம்ஸ்கிருதத்தில் கவனம் செய்பவன் வியாஸ

முனிவரின் அம்ச முள்ளவன். தங்கள் தங்கள் பாஷைகளில் கவனம் செய்பவர்கள் கவீசுவரர்கள் எனப்படுவார்கள். பதம் அந்வயம் அர்த்தம் பிரமாணம் இவைகளுடன்கூடின ஸம்ஸ்கிருத பாஷைதான் சிறந்தது.

எவன் பிழைப்புக்காக மானிடனைப் புகழ்ந்து கவனம் செய்கிறானோ அவன் சிரமம் பிரயோஜன மற்றதாம். அதைப் படிப்பவன் தோஷத்தை அடைவான். எவன் பைத்தியத்தினால் ஸ்திரீகளை வர்ணிக்கிறானோ அவன் ஒவ்வொரு அக்ஷரத்திற்கு ஒவ்வொரு வருஷமாக நாய் யோனியை அடைவான். மனுமுதலான பெரியோர்கள் வேதத்தில் இருக்கும் அர்த்தத்தை அநுசரித்து எழுதிய கிரந்தங்களுக்குத் தருமசாஸ்திரமென்றும் ஸ்மிருதிகளென்றும் பெயர்கள் கூறப்படுகின்றன.

அவைகளில் வேதங்களில் சொன்ன காரியங்களைச் செய்பவர்கள் சிலர். வேதங்களில் சொன்ன விஷயத்தைச் செய்யாமல் மற்ற மந்திரங்களை ஜபம் செய்து காரியங்களைச் செய்கிறவர்கள் சிலர். இவர்கள் பசுவுக்குச் சமமாவார்கள். அவைகளில் மானிடர்களுக்கு அதிகாரமில்லை.

பிர்ம்மசாரி, கிருகஸ்தன், வானப்ரஸ்தன் ஸந்நியாஸி ஆக இந்நான்கு ஆசிரம நெறியுந் தவறாதிருப்பவர்கள் உலகத்திற்கு நண்பராவார்கள்; எப்போது எவ்விடத்தில் எதனால் எந்தக் காரியத்தை எப்படிச் செய்வது என்பதைத் தரும சாஸ்திரத்தில் நிர்ணயஞ் செய்தபடி நடத்தல் வேண்டும். மற்றப்படியாயின் தோஷத்திற்குரியவனாவான்.

தேசகாலத்தை அநுசரியாமலும் அதிகாரியாகாமலும் செய்யும் காரியம் வியர்த்தமாகும். கெடுதியும் அதிகமாகும். ஆகையால் அந்தணர்களுக்கு இவைகளைக் கவனிக்க வேண்டிய அவசியமுண்டு.

ஸ்மிருதியின் பொருளானது, ஞானம், வேதத்தின் அர்த்தம் தெரிந்துகொண்ட ஞானம் இவைகளைக் காட்டிலும் அதிகமாகும். ருக்வேதத்திற்கு உபவேதம் ஆயுர்வேதமாகும்.

பிறருக்கு உபகாரம் செய்வதற்கும் தம் ஆரோக்கியத்தின் பொருட்டும் பிழைப்புக்காகவும் அந்தணர்கள் இந்த ஆயுர்வேதத்தை அத்தியயனம் செய்யவேண்டும்.

பிராம்மணன், ரோகிஷ்டன், க்ஷீணதசையை அடைந்தவன் இவர்களை உபசரிப்பவன் பிரம்மஹத்தி முதலான பாபங்களி லிருந்து விடுபடுவான். இது நிச்சயம்.

அவன், நான்கு கிருச்சிரங்களுக்குண்டான பலனையும் அந்தந்த வர்ணாசிரமத்துக்குத் தக்கபடி அடைவான். எந்த ரோகிஷ்டன் ஆயுளின் முடிவால், வைத்தியன் முயற்சிசெய்தும் உயிரை இழக்கிறானோ அவனும் வைத்தியனுக்கு ஏற்பட்ட முற்கூறிய பலனில் பாதியை அடைகிறான். இதில் ஐயமில்லை.

எவன் உபவேதம் நான்கையும் பிழைப்புக்காகப் படிக்கிறானோ அவன் இந்த லோகத்தில் புகழ்ச்சியை அடைவானே யொழிய பரலோகத்தில் பலனை அடைய மாட்டான்,

ரோகமாகிற சமுத்திரத்தில் முழுகிய மானிடனை எவன் கரையேற்றுகிறானோ அவன் எந்த தருமத்தை அநுஷ்டித்தவனாகான்? எந்தப் பூஜையைத்தான் செய்தவனாகான்?

பணமிழந்தவன் கணக்கப் பிள்ளையைத் துவேஷிப்பான். ஆயுளை இழந்தவன் வைத்தியனைத் துவேஷிப்பான். பணம் ஆயுள் இவ்விரண்டையும் இழந்தவன் பிராம்மணனைத் துவேஷிப்பான். எவன் காந்தர்வ வேதத்தை அத்தியயனம் செய்து ஸ்ரீராமருக்கு முன்னால் கானம் செய்கிறானோ, அவன் உத்தமமான கந்தர்வ லோகமடைவான். தநுர்வேதம் தண்டநீதி இவ்விரண்டும் பிராம்மணர்களுக்கு ஜீவனோபாயமாக ஏற்பட்டவை. க்ஷத்திரியர்கள் இவ்விரண்டையும் படித்தால் பாதி பலனைப் பெறுவார்கள்.

அன்னத்தைத் தானஞ்செய்யப் பசியுள்ளவன் பாத்திரமாவான். நீரைத் தானம் செய்யத் தாகமுள்ளவன் பாத்திரமாவான். திரவியத்தைத் தானஞ்செய்ய விசேஷமாகப் பாத்திரந் தெரிந்து கொள்ளவேண்டும்.

பசுகெட்டதாலுைம் பால்கொடுக்கிறது. பாலானுலும் பாம்பிடம் விஷமாகிறது. இவ்விதம் பாத்ரம் அபாத்ரம் இவைகளை விசாரித்து நல்லபாத்திரத்தில் தானம் செய்வது உத்தமம். பாத்திரத்தின் புண்ணியத்துக்குத் தக்கபடி தானம் செய்த பலனும் அதிகமாகும். ஞானம் அதிகமானுலும் புண்ணியம் அதிகமானுலும் நல்ல பாத்ரமா வென்பதைக் கவனிக்க வேண்டும். இராமரிடம் பக்தியுள்ளவன் பாத்ரமாவான். பக்தியில்லாதவன் பாத்ரனல்லன்; இராமத்துவேஷியுடன் பேசுவதுகூடாது; அவனைப் பார்க்கவும் கூடாது. இராமத் துவேஷியாக இருப்பவன் இராம பக்தர்களுடைய சேர்க்கையால் பரிசுத்தனுவான். தன் சக்திக்கு அதிகமாகவே கொடுப்பது தானமென்று சொல்லப்படும். சக்தியிருந்தும் பொருளைச் செலவழியாமல், வஞ்சனையால் செய்யும் தானம் தானமாகாது. தேசம் காலம் பாத்திரம் இவைகளுடைய விசேஷத்தை அநுசரித்துத் தானத்திற்குப் பலன் அதிகமென்றும் குறைவென்றும் ஏற்படுகிறது.

எவன் தன்சக்திக்குத் தக்கபடி பிராம்மணர்களுக்கு வருஷ வெகுமானம் கொடுக்கவில்லையோ அவன் ஒவ்வொரு சொர்ணத்திற்கு ஒவ்வொரு தேவவருஷம் புழுவாகப் பிறப்பான். இதில் சந்தேகம் இல்லை.

ஞானத்துடன் செய்யும் காரியத்திற்கு ஞானமில்லாதவன் செய்யும் காரியத்தைக்காட்டிலும் மிகுதியான பலன் உண்டாகும். ஞானம் ஏற்படுவதற்குத் தக்கபடி பாபமும் பரிகாரமாகும். ஞானமுள்ளவன் பாபகாரியத்தைச் செய்வானுயின், ஞானமில்லாதவன் செய்த பாபத்திலும் கொடிதாகும். எவ்வளவுக்கெவ்வளவு ஞானம் அதிகமாகிறதோ அவ்வளவுக் கவ்வளவு பாபம் குறைகின்றது. பிரகாசமுள்ள அக்நி விறகுகளை எவ்விதம் சாம்பலாகச் செய்கிறதோ அவ்விதம் ஞானமாகிற அக்நி ஸகல கருமங்களையும் சாம்பலாகச் செய்கிறது. தங்கத்திற்கு அக்நியின் சம்பந்தத்தால் வர்ணம் அதிகப்படுவதுபோல் ஞானியின் சேர்க்கையால் புண்ணியம் அதிகமாகிறது.

பிறருக்கு உபகாரம் செய்வதற்கும் தம் ஆரோக்கியத்தின் பொருட்டும் பிழைப்புக்காகவும் அந்தணர்கள் இந்த ஆயுர்வேதத்தை அத்தியயனம் செய்யவேண்டும்.

பிராம்மணன், ரோகிஷ்டன், க்ஷீணதசையை அடைந்தவன் இவர்களை உபசரிப்பவன் பிரம்மஹத்தி முதலான பாபங்களிலிருந்து விடுபடுவான். இது நிச்சயம்.

அவன், நான்கு கிருச்சிரங்களுக்குண்டான பலனையும் அந்தந்த வர்ணாசிரமத்துக்குத் தக்கபடி அடைவான். எந்த ரோகிஷ்டன் ஆயுளின் முடிவால், வைத்தியன் முயற்சிசெய்தும் உயிரை இழக்கிறானோ அவனும் வைத்தியனுக்கு ஏற்பட்ட முற்கூறிய பலனில் பாதியை அடைகிறான். இதில் ஐயமில்லை.

எவன் உபவேதம் நான்கையும் பிழைப்புக்காகப் படிக்கிறானோ அவன் இந்த லோகத்தில் புகழ்ச்சியை அடைவானேயொழிய பரலோகத்தில் பலனை அடைய மாட்டான்,

ரோகமாகிற சமுத்திரத்தில் முழுகிய மானிடனை எவன் கரையேற்றுகிறானோ அவன் எந்த தருமத்தை அநுஷ்டித்தவனல்லன்? எந்தப் பூஜையைத்தான் செய்தவனல்லன்?

பணமிழந்தவன் கணக்கப் பிள்ளையைத் துவேஷிப்பான். ஆயுளை இழந்தவன் வைத்தியனைத் துவேஷிப்பான். பணம் ஆயுள் இவ்விரண்டையும் இழந்தவன் பிராம்மணனைத் துவேஷிப்பான். எவன் காந்தர்வ வேதத்தை அத்தியயனம் செய்து ஸ்ரீராமருக்கு முன்னால் கானம் செய்கிறானோ, அவன் உத்தமமான கந்தர்வ லோகமடைவான். தநுர்வேதம் தண்டநீதி இவ்விரண்டும் பிராம்மணர்களுக்கு ஜீவனோபாயமாக ஏற்பட்டவை. க்ஷத்திரியர்கள் இவ்விரண்டையும் படித்தால் பாதி பலனைப் பெறுவார்கள்.

அன்னத்தைத் தானஞ்செய்யப் பசியுள்ளவன் பாத்திரமாவான். நீரைத் தானம் செய்யத் தாகமுள்ளவன் பாத்திரமாவான். திரவியத்தைத் தானஞ்செய்ய விசேஷமாகப் பாத்திரந் தெரிந்து கொள்ளவேண்டும்.

பசுகெட்டதானாலும் பால்கொடுக்கிறது. பாலானாலும் பாம்பிடம் விஷமாகிறது. இவ்விதம் பாத்ரம் அபாத்ரம் இவைகளை விசாரித்து நல்லபாத்திரத்தில் தானம் செய்வது உத்தமம். பாத்திரத்தின் புண்ணியத்துக்குத் தக்கபடி தானம் செய்த பலனும் அதிகமாகும். ஞானம் அதிகமானாலும் புண்ணியம் அதிகமானாலும் நல்ல பாத்ரமா வென்பதைக் கவனிக்க வேண்டும். இராமரிடம் பக்தியுள்ளவன் பாத்ரமாவான். பக்தியில்லாதவன் பாத்ரனல்லன்; இராமத்துவேஷியுடன் பேசுவதுகூடாது; அவனைப் பார்க்கவும் கூடாது. இராமத் துவேஷியாக இருப்பவன் இராம பக்தர்களுடைய சேர்க்கையால் பரிசுத்தனாவான். தன் சக்திக்கு அதிகமாகவே கொடுப்பது தானமென்று சொல்லப்படும். சக்தியிருந்தும் பொருளைச் செலவழியாமல், வஞ்சனையால் செய்யும் தானம் தானமாகாது. தேசம் காலம் பாத்திரம் இவைகளுடைய விசேஷத்தை அநுசரித்துத் தானத்திற்குப் பலன் அதிகமென்றும் குறைவென்றும் ஏற்படுகிறது.

எவன் தன்சக்திக்குத் தக்கபடி பிராம்மணர்களுக்கு வருஷ வெகுமானம் கொடுக்கவில்லையோ அவன் ஒவ்வொரு சொர்ணத்திற்கு ஒவ்வொரு தேவவருஷம் புழுவாகப் பிறப்பான். இதில் சந்தேகம் இல்லை.

ஞானத்துடன் செய்யும் காரியத்திற்கு ஞானமில்லாதவன் செய்யும் காரியத்தைக்காட்டிலும் மிகுதியான பலன் உண்டாகும். ஞானம் ஏற்படுவதற்குத் தக்கபடி பாபமும் பரிகாரமாகும். ஞானமுள்ளவன் பாபகாரியத்தைச் செய்வானாயின், ஞானமில்லாதவன் செய்த பாபத்திலும் கொடிதாகும். எவ்வளவுக்கெவ்வளவு ஞானம் அதிகமாகிறதோ அவ்வளவுக் கவ்வளவு பாபம் குறைகின்றது. பிரகாசமுள்ள அக்நி விறகுகளை எவ்விதம் சாம்பலாகச் செய்கிறதோ அவ்விதம் ஞானமாகிற அக்நி ஸகல கருமங்களையும் சாம்பலாகச் செய்கிறது. தங்கத்திற்கு அக்நியின் சம்பந்தத்தால் வர்ணம் அதிகப்படுவதுபோல் ஞானியின் சேர்க்கையால் புண்ணியம் அதிகமாகிறது.

புண்ணியம் செய்வதால் புண்ணியம் விருத்தியாகிறது. பாபம் செய்வதால் பாபம் விருத்தியாகிப் புண்ணியம் குறைகிறது. இந்த விசாரணை மிகவும் சூக்ஷ்மமானது. ஸ்தூலமாகப் பார்க்கிறவர்களுக்குப் பிரயாசத்தாலும் தெரிந்துகொள்ளமுடியாதது. அவ்விதமானாலும் தத்துவஞானத்தை அநுசரித்து இவ்விதம் விசாரிக்க வேண்டும். எந்த மானிடன் பாராயணம் செய்வதற்கு அதிகாரமிருக்கும்போது பிரயத்தினமில்லாதிருக்கிறானோ அவன் பசுவாகிறான். ஞானத்தாலும் அத்தியயனத்தாலும் அந்தணனுக்குப் புண்ணியம் விருத்தி அடைகிறது. இவ்விஷயத்தைச் சுருக்கமாக உனக்குக் கூறினேன். இதனால் புண்ணியத்தையும் பாவத்தையும் ஊகித்துக்கொள்ளலாம். தருமங்களும் அநேகம். பாபங்களும் அநேகம். அங்கங்கு பெரியோர்கள் சொல்லியிருக்கும் பிராயச் சித்தங்களை நன்றாக ஆராய்ந்து செய்யவேண்டும். உனக்கு எல்லாவற்றுள்ளும் ஸாரமானதையும் இரகசியமானதையும் கூறினேன். யத்தனத்துடன் கிரகித்துக்கொள். பக்தியில்லாதவனுக்கு உபதேசியாதே.

வேதம் முதலியவைகளின் பலசுருதியைக் கூறும்

## 8 - வது சருக்கம்

முற்றிற்று.

## 9-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! ஸ்ரீ ராமச்சந்திரரைப் பூஜைசெய்யும் கிரமத்தை மற்றொரு விதமாகக் கூறவேண்டும்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

மாணவனே! ஸ்ரீ ரகுவீரனைப் பூஜிப்பதற்கு விசேஷமான புண்ணிய காலத்தைக் கூறுகிறேன். மாகமாஸம் சுக்லபக்ஷப் பஞ்சமீ திதி புண்யமான திதியென்றும் ஸ்ரீ பஞ்சமீ யென்றும் மூவுலகத்திலும் பிரஸித்தியாயிருக்கிறது. அது முதல் வைசாக மாஸம் கிருஷ்ணபக்ஷம் பஞ்சமீவரையில் இரண்டரை மாஸமாகிறபடியால், அக்காலத்தில் மஹோற்சவங்களுடன் ஸ்ரீ ராமரைப் பூஜிக்கவேண்டும். மாக மாஸம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தி திதி முதல் மறுமாஸம், சுக்லபக்ஷம், நவமீதிதிவரையில் எண்பத்தொரு நாள் பழங்களை ஆகாரஞ் செய்துகொண்டு பூஜைசெய்ய வேண்டும். சிலர் ஸீதாதேவியுடன் கூடின இராமரை எப்போதும் பூஜைசெய்கிறார்கள். பெரியோர்கள் பூர்ணிமை முடிய மாசம் என்று கருதியிருக்கிறார்கள். தினந்தோறும் இராமரை வாகனத்தின் மீதேற்றி பேரீ, துந்துபி முதலிய வாத்தியங்களுடனும் குடை, சாமரம், தோரணங்கள் முதலியவைகளுடனும் அநேக வித ஸ்தோத்திரங்கள் அநேகவித வாஸனைத் திரவியங்கள், அநேகவித மங்கலவஸ்துக்கள் அநேகவித புஷ்பஹாரங்கள் இவைகளுடனும் வேதபாராயணத்துடனும் நீராஞ்ஜனத்துடனும் தூபத்துடனும் மாந்தோட்டத்தின் நடுவே கொண்டுவந்து மாமரத்தில் கட்டியிருக்கும் ஊஞ்சலில் வைக்கவேண்டும்.

யானை, புஷ்பகம், ஆதிசேஷன், குதிரை, இரதம், கருடன், ஸிம்மாசனம், பல்லக்கு ஹநுமான் இந்த ஒன்பது வாகனங்களுக்குள் ஒரு வாகனத்தின் மீது ஸ்ரீராமரை ஏற்றிவைத்து அழைத்து வரவேண்டும். கொடிகள் புஷ்பம் வனம் இவைகளுடன் கூடின மாந்தோட்டத்தின் மத்தியில் ஓரிடத்தில் சந்தனத்

நால் மெழுகி அங்கே புஷ்பங்களைத் தூவி அநேக வஸ்திரங்களால் அலங்கரித்துச் சொர்ண சிம்மாஸனத்தில் ஊஞ்சலைக்கட்டி அதை மாமரத்தின் கிளையில் சங்கிலிகளைக்கொண்டு பிணைத்து அதில் ஸ்ரீராமதோ பத்ரத்தை ஏற்படுத்தி அதன்மேல் ஸ்ரீ ரகுகுல பூஷணனை வைத்துப் பூஜிக்கவேண்டும்.

ஒன்பதுவகையான புஷ்பங்களாலும், பதினாறுவித உபசாரங்களாலும், ஸீதாதேவி பந்துக்கள் சுக்ரீவன் முதலான வானரர்கள் இவர்களுடன் பிரபுவைப் பூஜைசெய்து அந்த ஊஞ்சலை ஆட்ட வேண்டும். அந்த ஊஞ்சலுக்கு முன் தாசிகள் நடர்கள் நர்த்தனம் செய்யவேண்டும். ஸங்கீத வித்வான்கள் கானஞ்செய்ய வேண்டும். வாத்தியம் தூபம் சாமரம், முதலிய உபசாரங்கள் நடக்க வேண்டும். அப்பொழுது இராமபக்தர்கள் இராமநாம கீர்த்தனம் செய்யவேண்டும்.

மறுபடியும் முன்போல ஸீதாராமர்களைப் பூஜித்து வாகனத்தின் மீதேற்றி, பூர்ணகும்பம் தீபம் மற்ற உபசாரங்கள் இவைகளுடன் வீட்டுக்கு அழைத்து வரவேண்டும்.

இவ்விதம் இரண்டரை மாதம் வரையில் இராமச்சந்திரரைப் பூஜிக்கவேண்டும். ஸீதாராமர்களை அழைத்து வரும்போது திருஷ்டிதோஷம் உண்டாகாமலிருப்பதற்கு கஸ்தூரியால் அவர்களுடைய கண்களுக்குக் கீழிமையில் பிந்துக்களை யெழுதி அழைத்துவரவேண்டும். ஊஞ்சலில் வைத்து ஸ்ரீராமரைப் பூஜிக்கும் கிரமத்தைக் கூறினேன். வேறு விசேஷம் கூறுகிறேன்.

வசந்த மாஸத்தில் பூஜைசெய்வதற்குமுன் மாகமாஸம் சுக்லபக்ஷம் சதுர்த்தியில் விக்நேசுவரரைப் பூஜிக்கவேண்டும். எவர் மாகமாஸம் சுக்லபக்ஷம் சதுர்த்தியில் இரவில் விரதத்துடனிருந்துகொண்டு டுண்டி விக்நேசுவரரைப் பூஜைசெய்கிறார்களோ அவர்கள் தேவர்களாலும் பூஜிக்கத்தக்கவர்களாவார்கள். அன்றையதினம் உபவாஸமிருந்து இரவில் விழித்துக்கொண்டிருக்கவேண்டும். இந்த சதுர்த்திக்குக் குந்த சதுர்த்தி என்றுபெயர். ஆதலால் முல்லைப் புஷ்பங்களால் பூஜைசெய்யவேண்டும். மாகமாஸம் சுக்லபக்ஷம் பஞ்சமி. ஸ்ரீபஞ்சமி என்ற பெயரையுடையது. அதில்நாரா

யணனை இலக்ஷ்மியுடன் பூஜிக்கவேண்டும். மாகமாஸம் சுக்ல பக்ஷம் சதுர்த்தியில் பூஜைசெய்து பஞ்சமியில் முல்லைப்புஷ்பங்களினால் பூஜைசெய்தால் பொருள் உண்டாகும். ஸ்ரீராமச்சந்திரரை ஸீதையுடன் மாந்தோட்டத்தின் மத்தியில் மாமரத்தின் கிளையில் ஊஞ்சலில் பூஜிக்கவேண்டும். இல்லாவிடில் வீட்டிலாவது பூஜிக்க வேண்டும். வஸந்தமாஸம் பிரதமை திதி சூரியோதயத்தில் அவசியம் செய்யவேண்டிய காரியங்களைச் செய்து பிதிர்க்களைத் திருப்தி செய்வித்து ஸகல துக்கங்களும் நீங்குவதற்கு ஊஞ்சல் போட்டிருந்த பூமியை நமஸ்காரம் செய்யவேண்டும். "ஏ தேவி! நீ இந்திரன் பிர்மதேவர் ருத்திரன் இவர்களால் வணங்கப்படுகிறவள்; ஆகையால் என்னைக் காக்கவேண்டும்; எனக்கு ஸம்பத்தையும் கொடுக்கவேண்டும்" என்று கூறிப் பிரார்த்திக்கவேண்டும். நாய் மாம்ஸம் தின்பவனைத் தொட்டவனாயினும் சைத்திரமாஸம் பிரதமையில் ஸ்நானம் செய்தால் பாபம் வியாதி முதலியவைகளிலிருந்து விடுபடுவான்.

மாகமாஸம் பூர்ணிமையிலும் வஸந்தமாஸம் பூர்ணிமையிலும் காலையில் சந்தனத்துடன் மாம்பூவைத் தின்றால் அநேக வருஷம் வரையில் சுகமாயிருப்பான். "ஏ கட்டு மாமரமே! வஸந்த மாஸத்தில் உன்னுடைய துளிரையும் பூவையும் சந்தனத்துடன் ஸகலமனோரதங்களும் நிறைவேறப் பக்ஷிக்கிறேன்" என்று கூறவேண்டும். மாகமாஸம் பஞ்சமியில் சந்தனத்துடன் மாம்பூவைத் தின்றால் நல்ல குரலுள்ள கண்டமுடையவனாவான். குயில் நல்ல குரலுடன் கூவுவது மாம்பூவைத் தின்பதாலேயாம். மானிடர்கள் மாம்பூவைத் தின்றாலும் குயில் போன்ற குரலுடையவர்களாவார்கள். தினந்தோறும் ஸீதாராமர்களை மாம்பூக்களாலும் மனோக்ஞமான துளிர்களாலும் பக்தியுடன் ஊஞ்சலிலிருக்கும் சமயத்தில் மஹோத்ஸவங்களுடன் பூஜை செய்யவேண்டும்.

சைத்திரமாஸம் கிருஷ்ணபக்ஷம் பிரதமையில் சந்தனத்துடன் மாம்பூவைப் புசித்து மஹோற்சவங்களுடன் ஸீதாராமர்களைப் பூஜிக்கவேண்டும். இவ்விதம் பிறகு மூன்று தினமுஞ்செய்து அநேக உத்ஸவங்களுடன் கானம் முதலியவைகளைச் செய்து

சைத்திரமாஸம் கிருஷ்ணபக்ஷம் பஞ்சமியில் ஸௌபாக்கிய திரவியங்களால் ஸ்நானம் செய்து பொரசம் பூவின் நிறம்போன்ற சிவப்பு வர்ணமுள்ள வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு அநேக வித சுகந்த தைலம் முதலியவைகளால் வாத்திய கோஷங்களுடன் ஸீதா ராமர்களுக்கு உபசாரஞ் செய்து, பரிசுத்தமான ஜலத்தால் ஸ்நானம் செய்வித்து, அநேக தானங்களைச் செய்ய வேண்டும், எல்லோரும் அநேகவித வாசனைத் திரவியங்களை ஒருவருக்கொருவர் இறைத்துக் கொள்ளவேண்டும். அந்தணர்களுக்குத் திவ்ய அன்னமிட்டுப் பந்துக்களுடன் போஜனம் செய்யவேண்டும்.

இந்தப்பஞ்சமி வஸந்த பஞ்சமீ என்று பெயர் பெறும்; பெரும்புண்ணியம் உருக்கொண்டதற் கொப்பானது. மாகமாஸம் பஞ்சமிமுதல் பக்ஷந்தோறும் வைசாகமாசம் பஞ்சமிவரையில் இவ்விதமே பூஜை செய்யவேண்டும். பக்ஷந்தோறும் நவமியில் ஜானகீரமணனுக்கு விசேஷமாகப் பூஜையைச் செய்யவேண்டும். அல்லது மாகமாஸம் சுக்லபக்ஷம் பஞ்சமி கிருஷ்ணபக்ஷம் பஞ்சமி சைத்திரமாஸம் கிருஷ்ணபக்ஷம் பஞ்சமி வைசாகமாஸம் பஞ்சமி இந்த நாட்களில் ஸ்ரீரகுவீரனை ஊஞ்சலில் வைத்து மிகுந்த உற்சாகத்துடன் பூஜை செய்யவேண்டும் அல்லது சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் பிரதமையில் பூஜைசெய்பவன் தைலமிட்டு மூழ்கி ஸ்ரீராமருக்கும் தைல ஸ்நானம் செய்விக்கவேண்டும். வருஷத்தின் ஆரம்பத்திலும் வஸந்தருதுவின் ஆரம்பத்திலும் கார்த்திகையிலும் தைல ஸ்நானம் செய்யாதவன் நரகமடைவான். பாற்குனமாஸம் சென்ற பின் சைத்திரமாஸம் வந்தவுடன் அந்தணர்கள் சொன்ன நல்லநாளில் காட்டிலாவது ஜலமில்லாத பிரதேசத்திலாவது கிராமத்திலாவது தண்ணீர்ப் பந்தல் ஏற்படுத்தவேண்டும். இந்தத் தண்ணீர்ப் பந்தல் ஸகலஜன ஸாமானியமாக பூதங்களெல்லாவற்றிற்கும் ஏற்பட்டது. இதில் ஜலம் கொடுப்பதினல் பிதிர்க்களும் பிதாமஹர்களும் திருப்தியை

அடைகிறார்கள். நான்கு மாதம்வரையில் தடையின்றி ஜலம் கொடுக்கவேண்டும். தேவாலயங்களில் லிங்கங்களுக்கு அபிஷேக பாத்திரங்கள் கொடுக்கவேண்டும். தண்ணீர்ப்பந்தலை வைத்து ஜலம் கொடுக்கச் சக்தியற்றவனாயிருந்து விசேஷமாகத் தருமத்தில் விருப்பமுள்ளவனாயின் அவன் தினந்தோறும் பிராம்மணன் வீட்டிலிருந்து தருமகடத்தினால் ஜலத்தைக் கொடுக்கவேண்டும். தாம்பூலம் பழம் தானியம் தக்ஷிணைகளுடன் கொடுக்கவேண்டும். இது தருமகடம் என்று பெயர்பெறும். இது பிரமதேவர் விஷ்ணு சிவன் என்னும் மும்மூர்த்தி சொரூபமுமுடையது. இதைக் கொடுப்பதால் ஸகலமனோரதங்களும் நிறைவேறுகின்றன. சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் திருதியையில் ஸீதையுடன் இராமச்சந்திரரைக் குங்குமம், அகில், கர்ப்பூரம், இரத்தினம், வஸ்திரம், கந்தத்திரவியங்கள், தூபம், தீபம் இந்த உபசாரங்களால் பூஜைசெய்யவேண்டும். பிறகு ஊஞ்சலில் இருவரையும் எழுந்தருளப்பண்ணி ஊஞ்சலை அசைக்கவேண்டும்.

அந்தணர்களுக்குச் சிறந்த விஷ்ணுதாஸ! புத்திரஸம்பத்தையும் சுகத்தையும் விரும்புகிறவர்கள், ஸௌபாக்கியத்தைவிரும்புகிற ஸ்திரீகள் இவர்கள் வஸந்தமாஸம் திருதீயையில் ஸௌபாக்கிய சயன விரதத்தைச் சுகமாக எப்போதும் செய்யவேண்டும். ஏ விஷ்ணுதாஸ! இந்தத் திருதீயையில் உள்ள விசேஷத்தைக் கூறுகிறேன் கேள். புண்ணியத்தைக் கொடுக்கும் வஸந்தமாஸம் சுக்லபக்ஷம் திருதீயையில் ஸ்திரீகள் ஸ்நானஞ்செய்து அனேக சித்திரங்களுடன் மண்ணால் கோட்டையை ஏற்படுத்தி அதில் பதினெட்டு தானியங்களை விதைக்கவேண்டும். அதற்கு நான்கு பக்கங்களிலும் அழகான புண்ணிய விருக்ஷங்களை வைத்து அதற்கருகாமையில் ஜலயந்திரங்களையும் அமைத்துச் சித்திரங்களையும் எழுதவேண்டும். முன்போல் நான்கு துவாரங்களையும் மண்டபம் முதலியவைகளையும் முற்கூறிய ஸ்ரீராம பூஜையில் சொன்னது போலச் செய்யவேண்டும்.

ஜலம் நிறைந்த குடத்தைப் புஷ்பத்தால் அலங்கரித்து அதைக் கோட்டைக்குமேல் வைத்து, அதற்குமேல் பெரிய

ஊஞ்சலில் வைத்துச் சொர்ணத்தால் ஸீதாராமர்களுடைய மூர்த்தியைக் கற்பித்து பூஜைசெய்ய வேண்டும். ஊஞ்சலில் வைத்து ஒருமாஸம் வரையில் பூஜிக்கவேண்டும்.

சிலர் இந்த ஸ்தானத்தில் பார்வதியுடன் பரமசிவனை அமைத்துப் பூஜைசெய்கிறார்கள். இவ்விஷயத்தில் முனிவர்கள் கூறும் நிர்ணயத்தைக் கூறுகிறேன் கேள்.—

ஸ்ரீராமருக்குச் சிவன் இருதயமானவர். சிவனுக்கு இராமர் இருதயமானவர். அவ்விதமே ஸீதாதேவிக்குப் பார்வதீதேவி இருதயமானவள். பார்வதீதேவிக்கு ஸீதாதேவி இருதயமானவள். ஆகையால், இராமர் சிவன் ஸீதை பார்வதி இவர்களுக்குள் எப்போதும் பேதமில்லை. எவர்கள் பேதம் எண்ணுகிறார்களோ அவர்களுக்கு ரௌரவ நரகத்தில் வாசம் ஏற்படும். ஆகையால் சைத்திரமாஸம் திருதீயையில் ஸீதாராமர்களைப் பூஜிக்க வேண்டும். சக்தியில்லாவிடில் தாம்பரம் முதலியவைகளால் செய்த மூர்த்தியிலும் செய்யலாம். ஸ்திரீகள் தினந்தோறும் மங்கள திரவியங்களால் பூஜை செய்யவேண்டும். ஸ்திரீகள் ஒருமாஸம் வரையில் ஸீதளம் என்று பெயருள்ள ஸீதாதீர்த்தத்தில் விசேஷமாக ஸ்நானம் செய்ய வேண்டும். பூமியில் எவ்விடத்தில் இராம தீர்த்தம் இருக்கிறதோ அதற்கு இடது பாகம் ஸீதையால் உண்டாக்கப்பட்ட ஸீதாதீர்த்தம் எனப்படும். இதை அறிந்து கொள்க.

சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் திருதீயை முதல் வைசாக மாஸம் சுக்லபக்ஷம் திருதியை வரையில் அக்ஷயை என்று பெயர். அதுவரையில் ஸ்திரீகள் எப்போதும் ஸீதாதேவியின் அநுக்கிரகத்தை அடைவதற்காக ஸீதள்ஸ்நானம் செய்யவேண்டும். சைத்திரமாஸம் சுக்ல திருதீயையிலும் அக்ஷயதிருதீயையிலும் ஸ்திரீகள் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யவேண்டும், மற்ற நாட்களில் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்வதுகூடாது. தினந்தோறும் ஸீதாதேவிக்கு முன் உற்சவங்கள் செய்யவேண்டும். தினந்தோறும் சுமங்கலிகளையும் பூஜை செய்யவேண்டும். சுமங்கலிகளுக்கு வாயனங்களையும் கொடுக்கவேண்டும். எப்போ

தும் இம்மாதிரி பூஜை செய்ய முடியாவிடில், ஒருநாளாவது சுமங் கலிகளைப் பூஜிக்கவேண்டும். சுமங்கலிகளுக்குத் தினந்தோறும் சிலாக்கியமான போஜனம் செய்விக்கவேண்டும். அநேகவித அன்னங்கள் நெய் பாயஸம் இவைகளுடன் போஜனமளித்து, அலங்காரம் வஸ்திரம் இரவிக்கை முதலியவைகளைத் தன் கணவ னுடைய ஆயுள் விருத்திக்காகக் கொடுக்கவேண்டும். இவ்விதம் ஒரு மாஸம்வரையில் ஸீதளஸ்நானம் செய்து அக்ஷய திருதீயை யில் விசேஷமாகப் பூஜைசெய்து முப்பது சுமங்கலிகளுக்கு போஜனம் முதலியவைகளைச் செய்விக்கவேண்டும். குருவின் பத்தினியையும் பூஜித்து அவளிடம் ஸகல மங்கள வஸ்துக் களையும் கொடுக்கவேண்டும். இவ்விதம் ஒரு மாஸம் வரையில் ஸ்திரீகளுக்கு விரதம் ஏற்பட்டிருக்கிறது.

மற்றொரு விசேஷத்தையும் கூறுகிறேன் கேள்—சைத்திர மாஸம் சுக்லபக்ஷம் அஷ்டமியில் அசோகப் பூவின் மொட்டுக ளால், மிகுந்த மங்கள காரியங்களுடன் ஸீதையையும் இராமரை யும் பூஜிக்கவேண்டும். அவ்விதம் பூஜைசெய்து புனர்வசு நக்ஷத் திரத்தில் எட்டு அசோகமலரின் மொட்டுகளை எவர்கள் புசிக் கிறார்களோ அவர்கள் துக்கத்தை அடையமாட்டார்கள். "துக் கத்தை உண்டாக்காமல் அபீஷ்டங்களை உண்டுபண்ணக் கூடி யதும் சித்திரைமாஸத்தி லுண்டானதுமான உன்னைச் சோகத் தால் தாபமடைந்த நான் புசிக்கிறேன். என்னைச் சோகமுறாமல் காக்க வேண்டும்" என்று கூறவேண்டும்.

சைத்திரமாஸம் புனர்வசு நக்ஷத்திரம் புதவாரம் சுக்லபக்ஷம் அஷ்டமி சேர்ந்த புண்ணியகால அதிகாலையில் ஸ்நானம் செய் தவன், வாஜபேயயாகம் செய்த பலனை அடைவான். சைத்தி ரமாஸம் சுக்லபக்ஷம் நவமிதிதி புனர்வசு நக்ஷத்திரம் பகலில் குரு சந்திரயோகம், ஐந்து கிருக உச்சம் இவைகளோடு சூரி யன் மேஷராசியி லிருக்கும்போது கடகலக்னத்தில் பகலில் பரமபுருஷனாகிய மஹாவிஷ்ணு கௌஸல்யா தேவியிடம் ஆவிர்ப் பாவமடைந்தார். அந்தத் தினத்தில் மானிடர்கள் உபவாஸத் துடன் விரதத்தை அனுஷ்டானம் செய்யவேண்டும். இரவில்

விழித்திருக்கவேண்டும். சைத்திரமாஸம் சுத்த நவமி புனர் வசு நக்ஷத்திரத்துடன் கூடிய மத்தியான காலந்தான் புண்ணிய காலமென்று சொல்லப்படும். நவமி மட்டிலும் இருந்தாலும் உபவாஸமிருக்கவேண்டும். ஆகையால் எல்லோரும் நவமிவிரதத்தைச் செய்யவேண்டும். ஸ்ரீராமநவமி என்பது கோடிசூரிய கிரகண பலனைவிட அதிகமானது. பிரம சொரூபமடைய விருப்பமுள்ளவர்கள் அந்தத்தினத்தில் உபவாஸம் கண்விழிப்பு பிதிர்க்களை உத்தேசித்துத் தர்ப்பணம் செய்தல் இவைகளைச் செய்ய வேண்டும். இந்தத் தருமம் எல்லோருக்கும் புக்திக்கும் முக்திக்கும் முக்கியமான சாதனமாக ஏற்பட்டது. அபரிசுத்தனுனாலும் பாபியானாலும் இந்த விரதத்தைச் செய்பவன் எல்லோருக்கும் மேற்பட்டவனாக ஆகிறான். எவன் ஸ்ரீராம நவமியில் மோகத்தால் போஜனம் செய்கிறானோ, அவன் கும்பீபாக நரகத்தில் வீழ்ந்து துன்பமடைவான். இதில் சந்தேகமில்லை. விரதங்களெல்லாவற்றிலும் சிறந்த இந்த இராமநவமீவிரதத்தைச் செய்யாமல் மற்ற விரதங்களைச் செய்பவர்கள் பலனை அடையமாட்டார்கள். ஆசாரியரைப் பூஜித்து அவரைநோக்கி "நான் இரவில் ஸ்ரீராமப் பிரதிமையைத் தானம் செய்கிறேன். நீர் ஸந்தோஷப்படவேண்டும். நீர் இராமருக்குச் சமமானவர்" என்று பிரார்த்தனை செய்யவேண்டும். தன் கிருகத்தில் உத்தமமான பிரதேசத்தில் ஒரு மண்டபத்தை அமைத்து அதன் கிழக்குப்பாகத்தில் ஹநுமாரையும் தெற்கில் சங்கு சக்ரத்தையும் மேற்கில் கருடனையும் சார்ங்கத்தையும் வடக்கில் கதை, கத்தி, அங்கதனையும் மத்தியில் பத்மம் ஸ்வஸ்திகம் நீலனையும் நான்கு கைப்பிரமாணமுள்ள வேதிகையையும் அதில் ஆயிரத்தெட்டு இராமலிங்க பத்ரத்தையும் இராமதோ பத்ரத்தையும் அடைத்து ஸ்ரீராமரை மனதில் நினைத்துப் பின்வருமாறு சங்கற்பம் செய்தல் வேண்டும்.

"இந்த இராமநவமியில் எட்டுயாமங்களிலும் உபவாஸமிருந்து ஸ்ரீராமரை விதிப்படி பூஜைசெய்து சொர்ணத்தால் செய்த இராமப் பிரதிமையைப் புத்திசாலியும் இராமரிடம் பக்தியுள்ளவரு

மாகிய அந்தணருக்குக் கொடுக்கிறேன். அநேக ஜன்மங்களில் நான் செய்த அநேகவித பாபங்களை ஸ்ரீராமப் பிரபுவானவர் நிவிர்த்தி செய்யவேண்டும்" என்று சங்கற்பத்தைச் செய்து கொள்ளவேண்டும்.

பிறகு ஒருபலம் சொர்ணத்தால் இரண்டு கைகளையும் இடது பக்கத்தில் ஸீதையையும் வலதுகையில் அழகான ஞானமுத்திரை யையும் இடதுகை ஸீதையை ஆலிங்கனம் செய்துகொண்டிருப் பதுபோதும் அமைத்து அந்தப் பிரதிமையை இரண்டு பலம் வெள்ளியால் செய்யப்பட்ட சிம்மாஸனத்தில் வைத்துப் பூஜை செய்ய வேண்டும்; இப்படிச்செய்யச் சக்தியில்லாதவன் தன் சக் திக்குத் தக்கபடி ஒருபலம் அல்லது பாதி அல்லது காற்பலம் தங் கம், அதற்கும் சக்தியில்லாவிடில் வெள்ளியாலேனும் இரகுநந்த னரை அமைத்து அவருக்குப் பக்கத்தில்குடையுடன் பாதசத்ருக் னர்களையும் இரண்டுவில்லுடன் இலக்ஷ்மணரையும் தாயின்மடியில் இருக்கும் இந்திர நீலவர்ணம்போன்ற இராமரையும் அமைத்து இவர்களுக்குப் பஞ்சாமிருத ஸ்நானம் முதலிய பூஜைகளைச் செய் வித்து அசோக புஷ்பங்களுடன் அருக்கியம் கொடுக்கவேண்டும். இராவணனை வதம் செய்வதற்கும் தருமத்தை நிலைநிறுத்துவ தற்கும் அரக்கர்களையும் கொடிய அசுரர்களையும் நாசம் செய்வதற் கும் ஸாதுக்களைக் காப்பதற்கும் ஸ்ரீமந்நாராயணன்றான் இராமராக உண்டானவர். "உடன் பிறந்தவர்களுடன் இராம! நான்கொடுக் கும் அருக்கியத்தைக் கிரகிக்கவேண்டும்" என்று பிரார்த்தனை செய்து கொள்ளவேண்டும். இவ்விதம் பகலிற்செய்து இரவில் விழித்திருக்க வேண்டும். பிறகு விடியற்கால மெழுந்து ஸ்நானம் ஸந்தியா வந்தனம் முதலியவைகளைச் செய்து விதிப்படி இராம ரைப் பூஜிக்கவேண்டும். பிறகு முற்கூறிய மண்டபத்தில் குண்டம் ஏற்படுத்தி அதிலாவது பூமியிலாவது லௌகிகமான அக்கினியை ஸ்தாபித்து மந்திரம் தெரிந்தவர் நெய்யுடன்கூடின பாயஸத்தால் இராமரை ஸ்மரணஞ்செய்து வேறொன்றிலும் புத்தியைச் செலுத் தாமல் மூலமந்திரத்தால் நூற்றெட்டுத் தடவை ஹோமஞ்செய்ய வேண்டும்; பிறகு குருவைச் சந்தோஷப்படுத்தி, அவரைப் பூஜித்து

இராமராகவே பாவனைசெய்து "ஏ இராம! சித்திரமான இரண்டு வஸ்திரங்களுடனும் அற்புத அலங்காரத்துடனும் இந்தச் சொர்ணப் பிரதிமையை ஸ்ரீராமச்சந்திரருடைய பிரீதிக்குக் கொடுக்கிறேன். ஸ்ரீரகுவீரர் ஸந்தோஷத்தை அடையவேண்டும்" எனக் கூறும் இந்த மந்திரத்தைச் சொல்லி, விதிப்படி தானம் செய்து பூமியைத் தக்ஷிணையாகவும் கொடுத்தால் பிரம்மஹத்தி முதலிய பாபங்களிலிருந்து விடுபடுகிறான். இதில் சந்தேகமில்லை. சீடனே! சைத்திரமாஸம் நவமியில் இராகவருடைய சந்தோஷத்திற்காக பிராம்மணனுக்கு இவ்விதம் தானஞ்செய்ய வேண்டும்.

சைத்திரமாஸத்தில் செய்யவேண்டிய மற்றொரு விசேஷம் சொல்லுகிறேன்.

மானிடன் சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் ஏகாதசியில் மாந்தோட்டத்திலிருக்கும் மாமரத்தின் கிளையில் ஊஞ்சலைக் கட்டி அதில் ஸ்ரீராமரைப் பக்தியுடன் பூஜைசெய்ய வேண்டும். அந்தப் புண்ணியகாலத்தில் வைஷ்ணவர்கள் மஹோத்ஸவங்களுடன் லக்ஷ்மீ நாராயணர்களைப் பூஜிக்கவேண்டும்.

சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் துவாதசியில் ஒவ்வொரு வருஷத்திலும் மகோற்சவஞ் செய்ய வேண்டுமென்று போதாயனர் முதலிய பெரியோர்கள் நிச்சயம் செய்திருக்கிறார்கள்.

வஸந்தமாஸத்தில் ஊர்ஜ விரதத்தையும் தோளக விரதத்தையும் சிராவண மாஸத்தில் தேவவிரதத்தையும் சைத்திரமாஸத்தில் தமனோத்ஸவத்தையும் செய்யாதவன் நரகமடைவான்.

அக்னி, பிர்ம்மதேவர், பார்வதி, விக்னேசுவரர், ஆதிசேஷன், சுப்ரமண்யர், சூரியன், மஹேசுவரர், துர்க்கை, யமன், விசுவநாதர், விஷ்ணு, மன்மதன், சர்வர், சந்திரன் இவர்களைப் பிரதமை முதலிய திதிகளில் பூஜிக்கவேண்டும்.

பிறகு சைத்திரமாஸம் பூர்ணிமையில் ஸீதாராமர்களைப் பக்தியுடன் ஊஞ்சலில் வைத்து மஹோத்ஸவங்களுடன் பூஜை செய்ய வேண்டும். • சைத்திரமாஸம் சித்திரை நக்ஷத்திரம் கூடிய பூர்ணிமை திதி புண்ணியத்தைக் கொடுக்கும் மஹா திதியாகும். ஸ்நா

னம் தானம் ஜபம் முதலியவைகளுக்கு உயர்ந்ததினம் என்றறிய வேண்டும். அன்றையதினம் ஸ்திரீகள் சௌபாக்கியத்தைக் கொடுக்கும் வஸ்திரதானம் செய்தல்வேண்டும். மஹோத்ஸவங்களுடன் ஸீதாராமர்களைச் சித்திர வஸ்திரங்களால் பூஜிக்க வேண்டும். இந்தச் சித்திராபூர்ணிமையானது சனி, ஆதி, குரு இந்த வாரங்களில் நேர்ந்து அப்போது ஸ்நானம் சிராத்தம் முதலியவைகளைச் செய்தால் அசுவமேதயாகம் செய்த பலனைக் காட்டிலும் அதிகமான பலன் ஏற்படும். சித்திரா பூர்ணிமையில் ஒரு வருஷம் வரையிற்செய்த பூஜையின் பிரயோஜனம் ஸித்திப்பதற்காக ஸகல தேவர்களையும் ஸ்ரீராமரையும் விசேஷமாக தமனோத்ஸவங் கொண்டாடிப் பூஜை செய்யவேண்டும்.

பிறகு சைத்திரமாஸம் ஸ்நானம் செய்து விரதத்தை அந்தத் திதியில் உத்திபாபனம் செய்பவேண்டும். மிகுந்த பலனை விரும்புகிறவர்கள் வைசாகமாஸம் கிருஷ்ணபக்ஷம் பஞ்சமியில் பந்துக்களுடன் ஸீதாராமர்களை ஊஞ்சலில் வைத்து நன்றாகப் பூஜை செய்து உத்தியாபனம் செய்யவேண்டும். வைசாகமாஸம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தியில் உபவாஸமிருந்து இராத்திரியில் பரிசுத்தமான பிரதேசத்தில் முன்போல் மங்களமான மண்டபத்தைக் கற்பித்து அதில் இராமலிங்க பத்திரத்தில் தான்னியங்களைக் குவித்து, ஜலத்துடன் பெரிதான தாம்பர பாத்திரத்தை வைத்து அதன்மேல் வஸ்திரம் அணிந்து அதில் ஸ்ரீராமச் சந்திரரைப் பூஜைசெய்ய வேண்டும்.

மூன்று பலம் தங்கத்தாலாவது வெள்ளியாலாவது ஊஞ்சலைச் செய்தல்வேண்டும். ஒரு பலம் சொர்ணத்தால் இராமருடைய மூர்த்தியையும் செய்து அநேகவித உபசாரங்களால் பூஜித்து இரவில் தூங்காமல் நிருத்தம் கீதம் மங்கள வாத்தியங்கள் புராண சிரவணம் முதலியவைகளால் காலங்கழித்து விடியற் காலையில் ஸீதாராமர்களை மறுபடி பூஜைசெய்து எள் நெய் பாயஸம் முதலியவைகளைக் கொண்டு இராம மந்திரத்தை உச்சரித்து ஆயிரந் தடவை ஹோமஞ்செய்து பாலினால் தர்ப்பணஞ் செய்யவேண்டும். பிறகு பக்தியுடன் குருவுக்கு வஸ்திரம் முதலியவைகளை

ஸம்மானஞ் செய்து ஸ்ரீராமரை உத்தேசித்துப் பிரார்த்தனை செய்துகொள்ளவேண்டும். "ஏ! இராமா! வஸந்த காலத்தில் இரண்டரை மாஸம் வரையில் ஸீதையுடன் விளங்கும் உம்மை ஊஞ்சலில் வைத்துச் சக்திக்குத் தக்கபடி பூஜை செய்தேன். இதனால் நீர் பிரஸன்னராகி என்னை ஸம்ஸாரக் கடலிலிருந்து கரையேற்ற வேண்டும்" என இவ்விதம் பிரார்த்தனை செய்து அந்தப் பிரதிமையை குருவிடம் தானம் செய்து அடிக்கடி அவரை நமஸ்காரம் செய்ய வேண்டும். எழுபத்தைந்து தம்பதிகள் அல்லது முப்பத்தெட்டு அல்லது பத்தொன்பது தம்பதிகளுக்குச் சக்திக்குத் தக்கபடி குருவுடன் போஜனம் செய்விக்க வேண்டும். பிறகு உறவினர்களுடன் போஜனம் செய்யவேண்டும்.

சக்தியற்றவனானாலும் வஸந்த காலத்திலே செய்யவேண்டிய இந்தப் பூஜையைத் தன் சக்திக்குத் தக்கபடி எப்போதும் செய்ய வேண்டும்.

சிடனே! ஊஞ்சலில் ஸீதாராமர்களை வைத்துப் பூஜைசெய்யும் விசேஷத்தை உனக்குக் கூறினேன்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்

ஏ குருவே! எந்த எந்த தேவதையைப் பூஜித்தால், என்ன என்ன பலன் ஏற்படும் என்பதை என்மீது கருணை வைத்து, கேட்க விருப்பமுள்ள எனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும் என்றார்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

அப்பா! நன்றாய்க் கேட்டாய்! ஸாவதானமான மனதுடன் கேள்—பிர்மதேஜஸ்ஸை விரும்புகிறவன் பிர்மதேவரைப் பூஜிக்க வேண்டும். இந்திரியங்களின் புஷ்டியை விரும்புகிறவன் இந்திரனைப் பூஜிக்கவேண்டும். பிரஜைகளை விரும்புகிறவன் பிரஜாபதியையும், ஸ்ரீயைவிரும்புகிறவன் பராசக்தியையும், தேஜஸ்ஸை அபேக்ஷிக்கிறவன் அக்நியையும், திரவியங்களில் அன்புள்ளவன் வசுக்களையும், வீரியத்தில் விருப்பமுள்ளவன் ருத்திரனையும், அன்னம் முதலியவைகளில் அபிப்பிராயம் உள்ளவன் அதிதி

தேவியையும், சொர்க்க லோகத்தை அபேக்ஷிக்கிறவன் தேவர் களையும், இராஜ்யத்தை இச்சித்தவன் விசுவே தேவர்களையும், பிராணிகளை வசப்படுத்தப் பற்றுதலுடையவன் சாத்தியர்களையும், ஆயுளை அபேக்ஷித்தவன் அசுவினீ தேவர்களையும், புஷ்டியை விரும்பியவன் இளையையும், *பிரதிஷ்டையை அபேக்ஷிக்கிறவன் உலகத்திற்குத் தாய்தந்தையராகிய ஆகாயபூமிகளையும், இலக்ஷ ணத்தை உத்தேசிக்கிறவன் கந்தர்வர்களையும் ஸ்திரீகளை அநுப விக்க ஆசையுள்ளவன் ஊர்வசி என்ற அப்ஸரஸ் ஸ்திரீயையும், எல்லோருக்கு மேற்பட்ட தன்மையை எக்காலத்திலும் விரும்பு கிறவன் பரமேஷ்டியையும், பெருமையை உத்தேசித்தவன் யாகத்தையும், பொக்கிஷத்தை விரும்புகிறவன் வருணனையும், வித்தையை விரும்புகிறவன் பரமசிவனையும், தாம்பத்தியம் நிலை பெற ஸதி என்ற பெயர்கொண்ட உமையையும், தருமத்தை அபே க்ஷித்தவன் நாராயணனையும், புத்திர ஸந்தானத்தை விரும்பியவன் பிதிர்க்களையும், இரக்ஷையை இச்சித்தவன் இராக்ஷஸர்களையும், *ஓஜஸ்யை விரும்பியவன் தேவகணங்களையும், இராஜ்யத்தை இச்சித்தவன் மக்களையும், ஆபிசாரத்தை அபேக்ஷித்தவன் நிரு ருதியையும், காமத்தை விரும்பியவன் ஸோம தேவதையையும், விருப்பமில்லாதவன் பரமபுருஷனையும், ஆசைகொண்டோ ஆசை யில்லாமலோ மோக்ஷத்தை விரும்புகிறவன் தீவிரமான பக்தி யோகத்தால் இரகுநந்தனராகிய ஸ்ரீராமச் சந்திரப் பிரபுவையும் பூஜை செய்யவேண்டும்.

இராமருக்குச் சமமான தெய்வம் உண்டானதுமில்லை, உண் டாகப்போகிறதுமில்லை. ஆகையால், மிகவும் பிரயத்தனம் செய்து தசரதகுமாரனான இராமச்சந்திரரைப் பூஜிக்கவேண்டும். ஸ்ரீரா மச்சந்திரருடைய பெயரில் முதல் வர்ணத்தின் பெருமையால் ர என்ற அக்ஷரத்தை முதற்கொண்ட வஸ்துயாவும் மிகவும் சிறந் தவைகள். நான் அதை விஸ்தாரமாகக் கூறுகிறேன். ருக்குமம், ரத்தினம், ரதம், ராமா, ராக்ஷஸன், ரஜதம், ரஜஸ்ஸு, ரக்ஷை, ரணம் ரமா, ரக்தம், ரஜகன், ராகம், ராமடம், ராஜன், ரோகம், ரவி, ராத்

* ஒருவித சக்தி.

திரி, ராஜ்யம், ரஜஸ்வலை இவைமுதலான சப்தங்கள் சிறந்தவை கள்.

ருக்மம் என்பது தங்கம், மஞ்சள் வர்ணமுள்ளது. விலையுயர்ந்தது. ரத்தினம் எங்கும் கிடைக்காதது; அழகுள்ளது. ரதம் வாகனமாக ஏற்பட்டது; அதனால் சிறந்தது. ரமா ஸ்திரீ என்று பொருள்பெறும். அவளுக்கு இந்த உலகமெல்லாம் சுவாதீனமாக ஏற்படும். ராக்ஷஸன் தேவர்களுக்குப் பயத்தைக் கொடுக்கிறவன். ரஜதம் வெள்ளி; இதுவும் கிடைத்தற்கரியது. ரஜஸ்ஸு என்பது தூளி; அதுதான் பரமாணுவாக ஏற்பட்டது; அது தான் நித்தியமென்று சொல்லப்படுகிறது. ரக்ஷை என்பது எல்லோரையும் காப்பாற்றுகிறது. ரணம் ஜயத்தைக்கொடுக்கிறது. ரமை என்பவள் இலக்ஷ்மீதேவி. அவளநுக்கிரகம் எல்லோருக்குமரிது. ரக்தம் என்பதில் சிறந்த சிவப்பு வர்ணமிருக்கிறது.

ரஜகன் என்பவன் வண்ணான். அவன் அழுக்கற்றவைகளை உடையவன். ராகம் என்பது அன்பு; அது சுகத்தைக் கொடுக்கும். ராமடம் என்பது பெருங்காயம். அன்னத்திற்குச் சுத்தியையும் ருசியையும் கொடுக்கக்கூடியது. ராஜ்யம் சௌக்கியத்தைக் கொடுக்கும். ரஜஸ்வலை, இவளிடம் புத்திரனுண்டாவதால் சிறந்தவள்.

இவ்விதம் ர என்ற வர்ணத்தை ஆதியில் கொண்டசப்தம் யாவும் பூமியில் பிரசித்தி பெற்றவைகள். ஏ விஷ்ணுதாஸ ர என்பது ராம என்னும் சப்தத்தில் உள்ள முதல் அக்ஷரமாதலால் பெருமையுள்ளது.

சிடனே! மற்றொரு விஷயம் கூறுகிறேன்கேள். நான் கூறின இராமமுத்திரைபோல் வேறு தேவதைகளுக்கு நாமமுத்திரை ஏற்படவில்லை. நாம முத்திரையில் இராமநாமமில்லாவிடில், வியக்தமான அக்ஷரம் தெரியவராது. இதுதான் வெகு ஆச்சரியம். விஷ்ணுதாஸ! இவ்விஷயத்தில் இராமருடைய மகிமையை நீ தெரிந்துகொள். ஆகையால் விசுவேசுவரர் காசியில் எப்போதும் இராம நாமத்தை ஜபம் செய்து பிராணிகள் மோக்ஷமடைய அந்த இராம நாமத்தை உபதேசம் செய்கிறார்.

எந்தமந்திரம் ஸம்ஸாரமாகிய கடலில்முழுகினவனைக்கரை பேற்றுகிறதோ அதுதான் தாரகமந்திரம். ஸ்ரீராம மந்திரமே தாரக மந்திரமாகையால், விசுவநாதர் இதை உபதேசிக்கிறார். அந்தக்காலத்தில்ஸ்ரீராமருடைய ஸ்மரணம் வருவதன் பொருட்டு ஏற்கனவே இராமநாம ஜபம் செய்ய உபதேசம் செய்கிறார்கள்.

மற்றொரு விஷயங்கேள். சவம் தூக்குகிறவர்கள் அது முக்தி யடைவதன் பொருட்டு வழியில் இராமநாமத்தைச் சொல்லுகிறா ர்கள். இராம நாமத்தைத் தவிர வேறுமந்திரமுண்டானதுமில்லை உண்டாகப்போகிறதுமில்லை. பரமசிவன் எப்போதும் இராமநாம ஜபம் செய்து கொண்டே இருக்கிறார். பார்வதி, நாரதர், ஹநு மான் இவர்களும் எப்போதும் ஜபம் செய்கிறார்கள்.

இராமர் ஜனங்களை இரமிக்கச்செய்கிறார். அவர்களிடம் இரா மர் இரமிக்கிறார். அரக்கர்களை ஸம்ஹாரம் செய்கிறார். ஆகை யால் இராமநாமம் மிகவும் உயர்ந்தது, பாதாளலோகத்திலிருந்து ர என்ற அக்ஷரமும் பூமியிலிருந்து ஆ என்ற அக்ஷரங்கள் மஹ லோகத்தி லிருந்து மகாரமுமாக மூன்று அக்ஷரங்கள் அடங் கியது ராமநாமம். ராமநாமம் ர என்பதால் தன்பக்தனை ஸம்ஸாரக் கடலினின்றும் கரையேற்றுகிறது. ஆ என்பதால் சௌக்கியத் தைக் கொடுக்கிறது; ம என்பதால் மனோரதங்களை நிறைவேற்று கிறது; மரணம் முதலிய துன்பத்தை நீக்குகிறது. அதனால் இராம நாமம் உயர்ந்தது. இந்த ராம நாமத்தை எப்போதும் ஜபம்செய்ய வேண்டும்.

ஸ்ரீராம பூஜையின் விஸ்தாரத்தைக் கூறும்

9 - வது சருக்கம்

முற்றிற்று.

## 10 - வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

சிடனே! நீ முன்கேட்ட கேள்விகளுக்கு இராமவிஷயமாக சகலத்தையும் மிகுந்த ஆதரவுடன் கூறினேன். இப்பொழுது நீ எதைக்கேட்க விரும்புகிறாயோ அதைத் தெரிவித்தால் நான் கூறுகிறேன்.

### பரமசிவன் கூறுகிறார்.

இவ்விதம் குருவாகிய இராமதாஸர் சொல்லக்கேட்டு விஷ்ணுதாஸர் மறுபடியும் கூறுகிறார்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஏ குருவே! அயோத்திமா நகரத்தையும் சைத்திரமாதத்தையும் பற்றிய பலனைக் கூறினீர். எதை தானம் செய்வது? தானம் செய்தால் பலன் என்ன? யாரை உத்தேசித்து விரதத்தைச்செய்வது? அதற்கு என்ன விதி? எப்போது ஆரம்பம் செய்வது? இவைகளை விஸ்தாரமாய் எனக்குக் கூறவேண்டும். சரயூநதியிலும் இராமதீர்த்தத்திலும் ஸ்நானம் செய்யும் கிரமத்தையும் கூறவேண்டும்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

புத்தியிற் சிறந்த மாணவனே! நிரம்பவும் நல்ல கேள்வி கேட்டாய்; இப்போது சைத்திர மாதத்தின் மகிமையைக் கூறுகிறேன். மாதங்களெல்லாவற்றுள்ளும் சைத்திரமாஸம் ஆதியானமாதம்; ஸகல ஜீவனுக்கும் தாய்போல் வேண்டிய பலனைக்கொடுக்கும் தன்மையுள்ளது. தானம், யாகம், விரதம் இவைகளுக்குச் சமமானது; ஸகல பாதகங்களையும் போக்கக்கூடியது; தருமம், கிரியை, தவம் இவைகளின் ஸாரமாக ஏற்பட்டது. எப்போதும் பூஜிக்கக் கூடியது. வித்தைகளுக்குள் வேதம்போலவும், மந்திரங்களுக்குள் பிரவணம் போலவும் விருக்ஷங்களுக்குள் கற்பக விருக்ஷம் போலவும், கோக்களுக்குள் காமதேனுபோலவும் ஸர்ப்பங்களுக்குள் ஆதிசேடன் போலவும் பக்ஷிகளுக்குள் கருடன் போலவும், தேவர்களுக்குள் விஷ்ணுபோலவும், வர்ணங்களுக்குள் பிராம்மண வர்ணம்போலவும், பிரியமுள்ள வஸ்துக்களுக்குள் பிராணன்போல

வும், சுகிருத்துக்களுக்குள் பாரியை போலவும் நதிகளுக்குள் கங்கா நதிபோலவும் தேஜஸஸ்ஸுகளுக்குள் சூரியன்போலவும் ஆயுதங்களுக்குள் வஜ்ரம்போலவும், தாதுகளுக்குள் சொர்ணம் போலவும், விஷ்ணுபக்தர்களுக்குள் ருத்திரன்போலவும், இரத்தினங்களுக்குள் கௌஸ்துபம் போலவும், புஷ்பங்களுக்குள் தாமரைபோலவும், ஸரஸ்ஸுகளுக்குள் மானஸஸரஸ்ஸுபோலவும், தருமங்கள்செய்யக் காரணமான மாதங்களுக்குள் சைத்திரமாஸம் சிறந்தது. இதற்குச் சமமாக விஷ்ணுவின் பிரீதியை உண்டுபண்ணும் மாதம் வேறில்லை.

சைத்திர ஸ்நானம் செய்யச் சமயம்வரும் முன்னமே பங்குனி மாஸம் கடைசியில் சைத்திரமாஸம் ஆதியில் அருணோதயத்திற்கு முன் ஸ்நானம் செய்பவனிடம் இலக்ஷ்மியுடன் நாராயணமூர்த்தி வெகுபிரீதியை அடைகிறார்: பிராணிகளுக்கு அன்னத்தால் பிரீதி ஏற்படுவதுபோல விஷ்ணுவுக்குச் சைத்திரமாஸத்தில் ஸ்நானம் செய்வதால்தான் பிரீதி உண்டாகிறது. இதில் ஐயமில்லை. எந்த மானிடன் சைத்திரமாஸத்தில் ஸ்நானம் செய்பவர்களைக்கண்டு சந்தோஷிக்கிறானோ அவனும் பாபங்களெல்லாவற்றிலுமிருந்து விடுபட்டு விஷ்ணுவின் உலகத்தில் விளங்குவான்.

சூரியன் மீனராசியி லிருக்கும்போது ஒரு தடவை ஸ்நானம் செய்து ஆன்ஹிகத்தைச் செய்பவன் மஹாபாபங்களி லிருந்தும் விடுபட்டு விஷ்ணுவின் ஸாயுஜ்ய முத்தியை அடைவான். சைத்திரமாஸத்தில் ஸ்நானஞ் செய்ய வேண்டுமென்று எந்தமானிடன் ஓரடி எடுத்து வைக்கிறானோ அவன் அசுவமேத யாகம் செய்த பலனை அடைவான். கெட்ட எண்ணங் கொண்டவனானாலும் சைத்திரமாஸத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டுமென்ற எண்ணம் கொண்டால் அவன் நூறுயாகஞ் செய்தபலனை அடைகிறான் என்பதில் சந்தேகமில்லை. எந்த மானிடன் சூரியன்மீனராசியி லிருக்கும் போதே ஸ்நானத்திற்குப் போவதாக ஒரு வில்லளவு தூரம் செல்லுகிறானோ அவன் விஷ்ணுவின் சாயுஜ்ய மடைவான்.

மூவுலகத்திலும் பிர்ம்மாண்டத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்கள் யாவும் அற்பமான ஸாமான்னிய ஜலத்தில் ஸான்னித்திய

மடைகின்றன. சைத்திரஸ்நானம் செய்கிறவரையில் யமலோகத்தில் சகல பாபங்களும் கர்ஜிக்கின்றன. சைத்திரமாஸத்தில் தீர்த்தம் முதலிய தேவதைகள் எல்லாம் ஜலத்தை ஆசிரயித்திருக்கின்றன.

மானிடர்கள் நன்மையின் பொருட்டு மஹாவிஷ்ணுவால் சூரியோதயம் முதல் ஆறுநாழிகைவரையில் ஸகல தீர்த்தங்களும் ஸான்னித்திய முள்ளவைகளாகின்றன.

அந்த ஸமயம் ஸ்நானம் செய்யாதவர்களுக்கும் புண்ணிய தீர்த்தங்கள் சாபம் கொடுத்துத் தம்மிருப்பிடம் செல்கின்றன. ஆதலால் உதயத்திலேயே ஸ்நானஞ் செய்யவேண்டும்.

சைத்திரமாஸத்திற்குச் சமமான மாஸமும் கிருதயுகத்திற்குச் சமமான யுகமும் வேதத்திற்குச் சமமான சாஸ்திரமும், கங்கைக்குச் சமமான தீர்த்தமும் இல்லை. ஜலதானத்திற்குச் சமமான தானமும் பத்தினியின் சுகத்திற்குச் சமமான சுகமும் சைத்திர மாஸத்திற்குச் சமமான மாஸமும் இல்லை. ஆகையால் கவிகள் இவைகளைப்பற்றிச் சிறப்பாகப் பேசுகிறார்கள். இந்த மாஸம் சேஷசயனராகிய விஷ்ணுவுக்குப் பிரியமுள்ளது.

எந்த மானிடன் இந்த விரதத்தைச் செய்யவில்லையோ அவன் சண்டாளனாவான். தன் வீடு அநேக வஸ்துக்களால் நிறைந்திருந்தாலும் அலங்காரம் செய்யாவிடில் எவ்விதம் சோபிக்காதோ, கன்னிகையானவள் சகல இலக்ஷணமும் நிறைந்தவளாயிருந்து உயிருடனிருக்கும் பதியில்லாவிடில் எவ்விதம் விளங்க மாட்டாளோ, கீரை முதலிய சாகம் குணமுள்ளதாயினும் உப்பில்லாவிடில் எவ்விதம் ருசிபைக்காதோ, அலங்காரமில்லாவிடில் சபை எப்படிச் சோபியாதோ, வஸ்திரமில்லாவிடில் ஸ்திரீ எவ்விதமோ அவ்விதமே சைத்திர மாதத்தைவிட்டு மற்ற மாதங்களில் செய்யும் தருமம் சோபியாது ஆகையினால் எந்த மானிடனும் பெரும் பிரயத்தனத்துடன் இந்தச் சைத்திரமாதவிரதத்தைச் செய்யவேண்டும்.

நந்தன் குமாரனாகிய கிருஷ்ணனை யன்றி இராமர் வேறல்லர்; இராமரை யன்றி கிருஷ்ணன் வேறில்லை. ஆகையால் அயோத்

திமா நகரில் வாசம் செய்யும் பிரபுவுக்குச் சைத்திர மாஸத்தில் விதிப்படி பூஜை செய்ய வேண்டும்.

சூரியன் மீனராசியிலிருக்கும்போது இராமரை ஜானகியுடன் தியானித்துக் காலையில் ஸ்நானம் செய்து ஜபம் செய்ய வேண்டும். இல்லாவிடில் நரகமடைவான். அந்த மாஸத்தில் செய்யும் விரதங்கள் யாவும் ஸ்ரீராமரை உத்தேசித்தே இருக்க வேண்டும். "ஜனக குமாரிக்குப்பதியும் இரகு குலத்தில் ஜனித்தவருமாகிய இராம! சூரியன் மீனராசியி லிருக்கும்போது சைத்திரமாஸபுண்ணியகால ஸ்நானம் செய்கிறேன். அந்தக் காரியத்திற்கு இடையூறுண்டாகாமல் காக்கவேண்டும். சைத்திரமாசத்தில் ஸ்நானம் செய்வதில் சிரத்தையுள்ள நான் உமக்கு அருக்கியம் கொடுக்கிறேன். ஏ இரகு நாயக! கிரகிக்க வேண்டும். ஏ கங்கை முதலிய நதிகளே! புண்ணிய தீர்த்தங்களே! மேகங்களே! நதங்களே! நான் கொடுக்கும் அருக்கியத்தை நீங்கள் கிரகித்து எனக்கு நன்ருக அநுக்கிரகம் செய்யவேண்டும். பிரம்ம தேவர் முதலிய தேவர்களே! நதிகளே! விஷ்ணு பக்தர்களே! முனிவர்களே! நான் கொடுக்கும் அருக்கியத்தைப் பெற்று அநுக்கிரகம் செய்யவேண்டும். யம தருமராஜனே! நீர் சிறந்தவர்; பாபிகளைச் சிக்ஷிக்கிறவர். எல்லோரையும் சமமாகப் பார்ப்பவர். நீர் நான் கொடுக்கும் அருக்கியத்தைப் பெற்று சாஸ்திரத்தில் கூறியபலனைக் கொடுக்கவேண்டும்" என்று கூறி அருக்கியம் கொடுத்து பிறகு ஸ்நானம் செய்ய வேண்டும். அதன் பின் வஸ்திரமுடுத்து, வஸந்தகாலத்தி லுண்டான புஷ்பங்களால் ஜானகிரமணனைப் பூஜித்து இந்தச் சைத்திர மாஸத்தின் மகிமையைக் கொண்டாடும் இராம கதையைச் சிரவணம் செய்யவேண்டும். அப்பொழுது முன் கோடி ஜன்மத்தில் செய்த பாபங்களி லிருந்து விடுபடுகிருன்; கடைசியில் மோக்ஷத்தையு மடைகிருன். சைத்திர மாஸத்தில் வெங்கலப் பாத்திரத்தில் போஜனம் செய்பவனும் நல்ல கதைகளைக் கேட்காமலும் ஸ்நானம் செய்யாமலும் தானமும் செய்யாமலு மிருப்பவன் நரகங்களையே அடைவான்.

மகர மாஸத்தில் பிரயாகை க்ஷேத்திரத்திலும் கார்த்திகை மாஸத்தில் காசி, பஞ்சகயை முதலிய க்ஷேத்திரங்களிலும் வைசாகமாஸத்தில் துவாரகையிலும் சைத்திரமாஸத்தில் அயோத்தியிலும் இராம தீர்த்தம் சிறந்தது. பிரயாகை க்ஷேத்திரத்தில் ஒரு மாதம் வரையில் ஸ்நானஞ் செய்தால் என்ன பலன் கிடைக்குமோ அந்தப் பலன் அயோத்தியில் இராம தீர்த்தத்தில் ஒரு தடவை ஸ்நானஞ் செய்தால் உண்டாகும். கோமதி நதியில் வைசாக மாஸத்தில் பன்னிரண்டு நாள் ஸ்நானம் செய்கிறவன் அடையும் பலனை அயோத்தியில் சரயூநதியில் சைத்திர மாஸத்தில் மூன்று நாள் ஸ்நானம் செய்வதா லடையலாம். பஞ்ச கங்கையில் பன்னிரண்டு வருஷம் கார்த்திகை மாஸத்தில் ஸ்நானஞ் செய்பவன் அடையும் பலனை அயோத்தியில் இராம தீர்த்தத்தில் சைத்திரமாஸத்தில் பதினைந்து நாள் ஸ்நானம் செய்பவன் அடைகிறான். பாபம் செய்தவர்கட்கு அயோத்தியாபுரி அரிதாகும். அயோத்தியைப் பார்க்கிற வரையில் பாபங்கள் சூழ்ந்து நிற்கும்.

பூமியில் ஸ்ரீ ராமரா லுண்டாக்கப்பட்ட புண்ணிய தீர்த்தங்களை அயோத்தியா புரியி லிருக்கும் தீர்த்தமாகவே கொண்டு அந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவேண்டும். அயோத்தியா புரியும் சரயூநதியும் இராம தீர்த்தமும் கிட்டாதபோது, தானிருக்குமிடத்துள்ள புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்ய வேண்டும்.

சைத்திர மாதத்தில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளல், பகலில் நித்திரை புரிதல், வெங்கலப் பாத்திரத்தில் போஜனம் செய்தல், படுக்கையில் சயனம் செய்து நித்திரை புரிதல், வீட்டிலேயே ஸ்நானம் செய்தல், தருமசாஸ்திரத்தில் நிஷேதம் செய்தவைகளைப் பக்ஷணம் செய்தல், இரண்டுவேளை போஜனம் செய்தல், இரவில் போஜனம் செய்தல் இவ்வெட்டுக் காரியங்களையும் விட்டுவிடவேண்டும். சைத்திரமாதத்தில் பகற்பொழுதில் சிரமத்தை அடைந்த அந்தணர்களுடைய பாதங்களை ஜலத்தாலலம்புகிற விரதம் விரதங்களுக்குள் சிறந்தது. சைத்திர மாதத்தில் வழி நடப்பவர்களுக்குத் தண்ணீர்ப் பந்தல் வைத்து, தாகத்துக்கு

நீர் கொடுத்து இருக்க நிழலையும் கொடுக்கிறவன் சொர்க்க லோகத்தில் சுகமடைவான். ஜலத்தில் விருப்பமுள்ளவன் ஜலத்தையும் நிழலை விரும்பியவன் நிழலையும் விசிறியை விரும்பியவன் விசிறியையும் சைத்திர மாதத்தில் தானம் செய்யவேண்டும். பங்குனி மாதத்தில் ஜலம் குடை விசிறி இவைகளைத் தானம் செய்வது விசேஷமாகும். சைத்திர மாதத்தில் குடும்பியான அந்தணனுக்கு ஜலம் நிறைந்த பாத்திரத்தைத் தானம் செய்யாவிட்டால், சாதகப்பக்ஷியாகப் பிறப்பான். சைத்திர மாதத்தில் ஜலம் அன்னம் படுக்கை கண்ணாடி தாம்பூலம் வெல்லம் கோதுமை துவரை, தயிரன்னம், நெய்யுடன் வெங்கலப் பாத்திரம் கருப்பஞ்சார், வில்வப்பழம், மாம்பழம், மெலிந்த வஸ்திரம், மஞ்சம் பான பாத்திரம், கமண்டலம், தண்டம் இவைகளை ஸன்னியாசிகளுக்குத் தானம் செய்யவேண்டும். மடங்களுக்கு எண்ணெய் கொடுப்பது மடங்களை ஜீர்ணோத்தாரணம் செய்வது மணிகள் செய்துகொடுப்பது, தேவர்களுக்கு ஆலயம் கட்டுவது வாபீ கூபங்களைத் தாபிப்பது, வழி நடப்பவர்களுக்குக் குடை கொடுப்பது மத்தியானத்தில் அதிதிகளைப் பூஜிப்பது ஸன்னியாசிகளுக்குக் கமண்டலம் கொடுப்பது கோக்களுக்கு ஆகாரம் கொடுப்பது இந்தத் தானங்கள் சைத்திர மாஸத்திற் குரியனவாம். பழம், சாகம், கிழங்கு, காய், புஷ்பம், சந்தனம், விலாமிச்சை, சீதள திரவியம் கர்ப்பூரம், நல்ல கஸ்தூரி தீபம், பசு, கிருகம் கோரஸம் (பால் தயிர் நெய்) இவைகளைத் தானஞ் செய்யலாம். ஸன்னியாசிகளுக்கும் அந்தணர்களுக்கும் போஜனம் செய்விப்பது, சுமங்கலிகளைப் பூஜிப்பது, இராமநாமங்க ளெழுதுவது, புத்தகங்களைத் தானம் செய்வது இவைகளும் விசேஷம். குங்குமம், கிஞ்சல்கம் ஜாதிக்காய், லவங்கம், ஜாதிபத்திரி, வால்மிளகு, நெல்லிக்கனி, மாதலம் பழம், எலிமிச்சம் பழம், பலாப்பழம், விளாம்பழம், பூசினிக்காய் மற்றுமுள்ள பழங்கள் இவைகளைத் தானம் செய்யவேண்டும்.

உத்தியானவனம் கற்பிப்பது, வழிகளைச் சீர்திருத்துவது, பாதுகை, குதிரை, யானை இவைகளைத் தானம் செய்வது முதலியவைகளைச் சைத்திரமாதத்தில் அநுஷ்டிக்க வேண்டும். சைத்திர

மாதத்தில் நீக்கிவிடவேண்டிய மூலவஸ்துக்களை நான் உனக்குக் கூறுகிறேன்.—

சைத்திர மாதத்தில் ஸ்நானம் செய்பவன் மாம்ஸங்களெல்லாவற்றையும் மதுகர வஸ்துக்களையும் மொச்சைக் கொட்டை முதலிய வைகளையும் தள்ளவேண்டும்.

சைத்திர மாஸத்தில் ஸ்நானம் செய்பவன், பரிசுத்தத்தைக் கெடுக்கும் பிறர் வீட்டுப் போஜனம், பிறர் துரோகம் செய்வது, பரஸ்திரீகளிடம் புணர்ச்சி செய்வது முதலியவற்றைத் தள்ள வேண்டும். தேவர்கள் அந்தணர்கள் வேதங்கள் குருக்கள் கோக்கள் விரத முள்ளவர்கள் ஸ்திரீகள் அரசர்கள் பெரியோர்கள் இவர்களை நிந்திக்கவும் கூடாது.

பிராணிகளின் அங்கம் ஒரு வஸ்துவின் பொடி இவையும் பழவகையில் எலுமிச்சம்பழமும், தான்னிய வகையில் சிறுகடலையும், அன்னவகையில் பழையதும், மாம்ஸம் என்று சொல்லப்படும். விரத நியமமுள்ளவன் பிரம்மசாரி நியமத்துடன் பூமியில் சயனம் செய்தல் தைத்த இலையில் நான்காவது காலத்தில் போஜனம் செய்தல் முதலியவைகளை அநுஷ்டிக்க வேண்டும். பிரதமை திதியில் எண்ணெய் தேய்த்துக்கொள்ள வேண்டுமே யொழிய மற்றக் காலங்களில் அப்பியங்க ஸ்நானம் செய்வது கூடாது. சுரைக்காய், கத்திரிக்காய், பூசினிக்காய், கண்டங்கத்திரிப்பழம், நறுவிலிப்பழம், வெண்பாலை யரிசி, விளாம்பழம் இவைகளைத் தள்ளவேண்டும்.

இரஜஸ்வலை சண்டாளன் மிலேச்சன் பதிதன் விராத்தியன் பிராம்மணத் துரோகம் செய்கிறவன் வேதங் கெட்டவன் இவர்களுடன் விரதநியமமுள்ளவன் பேசுவதுகூடாது. நீருள்ளி, வெள்ளைப் பூண்டு, சர்ப்பாட்சி, முருங்கைக்காய் இவைகளைத் தள்ளவேண்டும. இவைகள் சேர்ந்ததும் நாய் காக்கைகள் தீண்டியதுமான அன்னத்தையும் தீண்ட லாகாதவர்களன்னத்தையும், இரண்டு தடவை பாகமான அன்னத்தையும், பொசுங்கிய அன்னத்தையும் தள்ளவேண்டும். தன் சக்திக்குத் தக்கபடி ஸ்ரீராமபிரானின் சந்தோஷத்திற்காக இருச்சிரம்

முதலியவைகளைச் செய்யவேண்டும். பிரதிமை முதலிய திதிகளில் கிரமமாகப் பூசினிக்காய், கண்டங்கத்திரிப் பழம், சர்ப்பாட்சி, முள்ளங்கி, வில்வப்பழம், வெண்பாலை யரிசி, நெல்லிக்கனி, தேங்காய், சுரைக்காய், இலந்தைப்பழம், சர்மவிருந்தாகம் கொடி, கீரை, துளசி இவைகளை நீக்கவேண்டும். ஆதிவாரத்தில் கிரகஸ்தன் எப்போதும் நெல்லிக்கனியை நீக்க வேண்டும்.

இவைகளைக் காட்டிலும் மற்ற வஸ்துக்களிலும் ஏதாவது நீக்கினால் அந்த மானிடர்களிடம் ஸ்ரீராமர் பரம பிரீதியை அடைகிறார். அந்த வஸ்துவை விரதத்தின் முடிவில் பிராம்மணனுக்குத் தானம் செய்து தான் பிறகு புசிக்கவேண்டும்.

பங்குனி மாதம் பூர்ணிமை முதல் சித்திரை மாதம் பூர்ணிமை வரையில் சைத்திர ஸ்நானம் செய்யவேண்டும். அல்லது மீனராசியில் சூரியனிருக்கிற வரையில் செய்ய வேண்டும். பங்குனி மாதம் சுத்த தசமி முதல் சித்திரை மாதம் சுத்த தசமி வரையில் ஸ்நானம் செய்யவேண்டும். இவ்விதம் ஸ்நானத்திற்கு மூன்று பேதங்கள் சொல்லப்பட்டன.

சைத்திரமாதம் சுக்லபக்ஷம் திருதியைமுதல் வைகாசி மாதம் சுக்கிலபக்ஷம் திருதியை வரையில் அக்ஷய திருதீயை என்று பெயர். அது வரையில் சீதள கௌரீ ஸ்நானம் செய்யவேண்டியது. ஸ்திரீகள் ஸீதா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸீதா தேவியைப் பூஜிக்கவேண்டும். சீதள கௌரீ விரதத்தையும் ஸ்நானத்தையும் செய்யக்கூடிய ஸ்திரீகள் சைத்திரமாதம் சுக்லபக்ஷம் திருதீயை வைகாசி மாதம் சுக்லபக்ஷம் திருதீயையாகிய அக்ஷய திருதீயை தினத்தில் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யவேண்டுமே ஒழிய மற்றத் தினங்களில் கூடாது. சைத்திர மாதத்தில் முப்பது திதிகளும் சிறந்தவைகளேயாம். ஆனாலும் சில திதிகளுக்கு விசேஷம் கூறுகிறேன். சைத்திரமாதம் கிருஷ்ண பக்ஷம் பஞ்சமீ, ஏகாதசி, துவாதசி, சிவராத்திரி அமாவாஸை இந்தத்திதிகள் மஹா பாபங்களைப் போக்கக் கூடியவைகள்.

மானிடர்கள் நன்மையைக் குறித்து சைத்திர மாதத்தில் சுக்கில பக்ஷத்திலுள்ள சிறந்த திதிகளைச் சொல்லுகிறேன் கேள்.

யுகாதிப் பிரதமை திதிமுதல் தசமி திதிவரையில் ஸ்நான தானங்களைச் செய்யலாம். பிரதமையில் செய்த ஸ்நானம் தானம் விரதம் முதலியவைகளைவிடத் துவிதீயையில் இரண்டு பங்கதிகமாகவும் திருதீயையில் துவிதீயையில் செய்ததைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமாகவும் இவ்விதம் நாளுக்குநாள் அதிகப்படுத்திக்கொண்டே நவமிவரையில் செய்யவேண்டும். கருப்பங்குச்சியின் நுனியைவிட அடிக்கணுக்கள் சிறந்தவைகளாம். பாலைக்காட்டிலும் தயிர் சிறந்தது. தயிரைவிட வெண்ணெய் சிறந்தது, வெண்ணையைக் காட்டிலும் நெய் சிறந்தது—இவைகளைப் போல் திதிகளில் மேலே போகப்போக விசேஷ மென்றறிய வேண்டும். மாதங்களுக்குள் சைத்திரமாதம் சிறந்தது. அதில் சுக்லபக்ஷம் சிறந்தது. அதில் பிரதமை முதல் நவமி வரையிலும் உயர்ந்தது. எல்லாவற்றைக் காட்டிலும் நவமி திதி மிகவும் உயர்ந்தது.

தருமத்தை ஸ்தாபனம் செய்வதற்காக ஏற்பட்டபடியால் ராமாவதார நவமிதிதி மிகவும் சிறந்தது; ஸகல கருமங்களையும் போக்கக்கூடியது. அன்றையதினம் செய்த தானம் ஹோமம் ஜபம் இவைகள் கொஞ்சமாயினும் அழிவற்றனவாகுமென்பதில் சந்தேகமில்லை. பிரதமை முதல் நவமீவரையில் உபவாஸமிருந்து ஸ்ரீராமரைப் பூஜிக்கவேண்டும். யுகாதிப் பிரதமையில் வீடு தோறும் உப்பரிகைகளின் மேல் துவஜங்களைக் கட்டி ஸ்ரீராமர் அவதாரம் செய்த காலத்தைச் சூசனை செய்யவேண்டும். அவைகளை வஸ்திரங்களாலும் புஷ்பங்களாலும் அலங்காரம் செய்து பூஜிக்கவேண்டும். கிருகத்திலும் தேவாலயத்திலும் பசுக்கொட்டடியிலும் பிருந்தாவனத்திலும் சந்தனம் கலந்த நீரால் மெழுகிக் கோலமிட்டு அநேகவித பத்மம் முதலியவைகளைக் கறுப்பு மஞ்சள் முதலிய வர்ணங்களால் அலங்காரம் செய்து ஆயிரத்தெட்டு இராமதோ பத்ரத்தையாவது நூற்றெட்டு இராமதோ பத்ரத்தையாவது அழகாக எழுதவேண்டும்.

அதற்கு மேல் சித்திர வர்ணத்துடன் அழகாகவும் பெரிதாகவும் மண்டபத்தையும் ஏற்படுத்தவேண்டும். தோரணங்கள் வாழை மரங்கள் கரும்புத்தடிகள் அநேக மணிகள் அழகான கண்ணுடிகள் சித்ர வர்ணமுள்ள விரிப்புகள் முத்தாரங்கள் இவைகளால் அலங்கரிக்க வேண்டும்.

அந்த மண்டலத்திற்கு மேல் சொர்ணம் இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு மஞ்சத்தையும் அதற்கு மேல் சிலாக்கியமான வஸ்திரங்களை விரித்து அதில் பதினறு உளுந்து எடை தங்கத்தால் இரண்டு கைகளுடன் இலக்ஷணங்கள் பொருந்திய ஸ்ரீராமச் சந்திரப் பிரதிமையையும் இருபத்து நான்கு உளுந்து எடை வெள்ளியால் கௌஸல்லியையின் அழகான பிரதிமையையும் வைத்துத் தினந்தோறும் தன்சக்திக்குத்தக்கபடி பூஜைசெய்ய வேண்டும். பேரிகை முதலிய வாத்தியங்களை முழக்கவேண்டும். மிருதங்கம், தூரியம், கீதம் நிருத்தம் இவைகளைச் செய்விக்க வேணடும். அநேக விதமாகப் பக்குவம் செய்த அன்னங்களையும் நைவேத்தியஞ் செய்து பூஜிக்கவேண்டும்.

பிரதமை முதல் நவமீவரையில் இந்த இராமாயணத்தைப் பாராயணம் செய்யவேண்டும். வான்மீகி முனிவர் இயற்றியதும் சிரவணம் செய்தவுடன் மங்களத்தைக் கொடுக்கக் கூடியதுமான இந்த ஆநந்த ராமாயணத்தைத் தினம் ஒரு காண்டமாக ஒன்பது நாளில், பாராயணம் செய்யவேண்டும். அல்லது தினந்தோறும் பன்னிரண்டு சருக்கங்களைப் பாராயணம் செய்யவேண்டும். பாக்கியுள்ள சருக்கம் ஒன்ருகவிருந்தாலும் அதையும் மத்தியில் பாராயணம் செய்ய வேண்டும். நூற்றெட்டுச் சருக்கங்களால் மேருவுடன் இராம கீர்த்தன மாலையை ஒன்பது தினம் வரையில் ஸ்ரீராமருக்கு முன்னிருந்து பாராயணம் செய்யவேண்டும். இவ்வொன்பது நாட்களில் பாராயணம் செய்பவனுக்குத் தீர்த்தஸ்நானம் தானம் இவைகளெல்லாவற்றிலும் உண்டாகும் பலன் ஏற்படும். சைத்திர மாஸத்தில் நவராத்திரியில் இராமாயணத்தில் ஒரு சுலோகமாவது பாதிசுலோகமாவது பாராயணம் செய்பவர்கள் மோட்ச மடைவார்கள்.

இவ்வாறு பெண்களுடன் கூடின ஸ்திரீகள் தினந்தோறும் கௌசல்யா தேவியையும் இராமரையும் பூஜிக்கவேண்டும். பிள்ளைகளுடன் கூடின அந்தணர்கள் இன்னும் விசேஷமாகப் பூஜை செய்யவேண்டும். வஸ்திரம் முதலிய அலங்காரத்துடனும் விசித்திரமான போஜனத்துடன் அஷ்டமீவரையில் நவமியில் விசேஷமாக இந்த விதிப்படி பூஜித்து வாகனத்தின்மீதுள்ள ஸ்ரீராமசந்திரருக்கு உபசாரம் செய்ய வேண்டும்.

பேரீ, மிருதங்கம், தூரியம், துந்துபி, காஸி முதலிய வாத்திய கோஷங்களையும் நர்த்தனம் கானம் முதலிய அநேக உற்சாகங்களையும் குடை சாமரங்களையும் உபயோகப்படுத்த வேண்டும்.

புஷ்பக விமானமென்ற வாஹனத்தில் ஏற்கனவே ஏற்பட்டிருக்கும் இராமரை இராம தீர்த்தத்தின் கருகாமையில் அழைத்து வந்து பஞ்சாமிருதங்களால் ஸ்நானம் செய்வித்துப் பிறகு பரிசுத்த ஜலத்தாலும் மங்கள திரவியம் கலந்த ஜலத்தாலும் ருத்திரசூக்தம் விஷ்ணுசூக்தம் ஸஹஸ்ரநாமம் இவைகளை ஜபம் செய்து இரகு வீரருக்கு ஸ்நானம் செய்விக்கவேண்டும். அதற்கு மங்கள ஸ்நானமென்று பெயர். இது சைத்திர மாஸத்தில் மானிடர்களுக்குக் கிடைப்பதரிது. அந்தப் பஞ்சாமிருத தீர்த்தத்தை இராம தீர்த்தத்தின் மத்தியில் விட்டுப் பிறகு அவ்விடத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். அதனால் ஆயிரம் அவபிருத ஸ்நானம் செய்த பலனுண்டாகும். அங்கு மங்கள ஸ்நானத்தைச் செய்தவன் புஷ்கரம் முதலிய தீர்த்தங்களில் கங்கை முதலிய நதிகளில் ஸ்நானம் செய்த பலனை அடைகிறான்.

இவ்விதம் இராமருக்கு ஸீதையுடன் ஸ்நானத்தையும் பூஜையையும் செய்வித்து மறுபடியும் முற்கூறியபடி மங்கள வாத்தியத்துடன் கிருகத்திற் கழைத்துவந்து மறுபடியும் பூஜை செய்து பிறகு, இராமாயணம் இயற்றிய கவியையும், இராமாயண புத்தகத்தையும் பூஜித்து அநேக உற்சவங்களுடன் பகலைக் கழித்து இரவில் கண் விழிக்கவேண்டும். தசமியில் காலையில் எழுந்து அநேக அந்தணர்களுக்குப் போஜனமளித்து மறுபடியும் பூஜை செய்து எல்லாவற்றையும் குருவிடம் தானம் செய்ய வேண்டும்.

பிறகு உறவினர்களுடனும் மித்திரர்களுடனும் தான் போஜனம் செய்ய வேண்டும்.

இவ்விதம் சைத்திர மாதத்தில் நவராத்திரி விரதத்தைக் கூறினேன். ஆகையால் சைத்திர மாதத்தில் நவராத்திரி விரதம் மிகவும் சிறந்தது. அந்த ஒன்பது திதிகளிலும் நவமி திதி மிகுதியான பிரயோஜனத்தைக் கொடுக்கக்கூடியது. சைத்திர மாதத்தில் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது இதைத்தவிர வேறு ஒன்றுமில்லை. இதற்குமேல் சைத்திர விரதத்தை உத்தியாபனம் செய்யும் விதியைக் கூறுகிறேன். அதைச் செய்தால் சைத்திர மாதத்திற் செய்த ஸ்நானம் பிரயோஜனப்படும். சைத்திர மாதம் சுக்ல பக்ஷத்தில் ஏகாதசி திதி, திதிகள் எல்லாவற்றிலும் சிலாக்கியமானது. அதில் விரதத்தை அநுஷ்டானம் செய்பவர்கள் உபவாச மிருக்கவேண்டும்.

அடுத்த திதியாகிய துவாதசியும் சிலாக்கியமானது. அதில் யமனைப் பூஜிக்க வேண்டும். தயிரன்னத்தையும் ஜலம் நிறைந்த பாத்திரத்தையும் தானம் செய்யவேண்டும். சைத்திர மாதத்தில் மூன்று திதிகளும் சிறந்தவைகள். திரயோதசியும் பூர்ணிமையும் சிறந்தன. அந்தத் திதிகளில் ஸ்நானம் செய்து, தானம் செய்வதெல்லாம் இஷ்டமெல்லாவற்றையும் கொடுக்கும். சைத்திர மாதத்திலும் நவராத்தியிலும் ஸ்நானம் செய்யாதவர்கள் கடைசியில் ஒருநாள் ஸ்நானம் செய்தால் சைத்திர மாஸம் முழுவதும் ஸ்நானம் செய்தபலனை அடைவார்கள். அந்தத் திதிகளுக்குள் பூர்ணிமை மிகவும் சிலாக்கியமானது. சைத்திரஸ்நான பலனை அடைய அதில் உத்யாபனம் செய்யவேண்டும்.

சதுர்த்தசியில் உபவாஸமிருந்து முன்போல் மண்டலமுதலியவைகளை ஏற்படுத்தி அதில் தானியங்களைக் குவித்து அதன் மேல் ஜலம் நிறைந்த கும்பத்தை ஸ்தாபித்து அதன்மேல் ஐந்து இரத்தினங்களுடன் கூடிய சுவர்ண பாத்திரத்தை வைத்து அதற்கு வஸ்திரம் புனைந்து சொர்ணத்தால் சீதா ராமர்களைச் செய்து அதில் வைத்துப் பூஜை செய்ய வேண்டும். அதில் பரதன் இலக்ஷ்மணன் சத்ருக்னன் அநுமான் சுக்ரீவன் விபீஷணன்

அங்கதன் ஜாம்பவான் இவர்களையும் ஸ்தாபித்துக் குருவின் உத்த ரவின்படி எல்லோரையும் பூஜிக்கவேண்டும். பதினாறு உபசாரங் களுடன் அநேகவித பக்ஷியங்களைக் கொடுக்க வேண்டும். இர வில் கீதம் வாத்தியம் முதலிய மங்கள காரியங்களைச் செய்து கொண்டு விழித்திருக்க வேண்டும்.

பிறகு பூர்ணிமையில் பக்தியுடன் கூடின முப்பது பிராம் மணர்களையாவது ஒரு பிராம்மணனையாவது சக்திக்குத் தக்க படி வரணம் செய்து அவர்களுக்குப் பாயசம் அன்னம் முதலிய வைகளால் போஜனங் கொடுத்து (அதோ தேவா:) என்ற இர ண்டு மந்திரங்களை உச்சரித்து எண்ணெய் நெய்களினால் ஹோ மத்தையும் செய்து, தேவர்களுக்குத் தேவாகிய தசரத நந்தன னுடையவும் தேவர்களுடையவும் பிரீதிக்காக சக்திக்குத் தக்க படி தக்ஷிணையைக் கொடுத்துப் பின் நமஸ்காரம் செய்யவேண்டும்.

மறுபடி தாசரதியையும் தேவர்களையும் துளஸியையும் பூஜித்துப் பிறகு விதிப்படி காராம் பசுவையும் பூஜிக்கவேண்டும்.
விரதத்தைச் செய்து வைதீக குருவையும் அவர் மனைவியை யும் வஸ்திரம் அலங்காரம் முதலியவைகளால் பூஜித்து அந்தணர் களை மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

"உங்கள் அநுக்கிரகத்தால் தேவாதி தேவனாகிய இராம பிரான் அநுக்கிரகம் கிடைக்கவேண்டும். இந்த விரதத்தால் நான் எழு ஜன்மங்களிற் செய்த பாபங்கள் எல்லாம் நாசமடைந்து என் சந்ததியும் ஸ்திரமாக இருக்கவேண்டும். நான் பூஜிப்பதால் என் மனோரதம் யாவும் நிறைவேறவேண்டும். தேகாந்தத்தில் விஷ்ணு வின் ஸ்தானமும் கிடைக்கவேண்டும்." என்று இவ்வாறு அந்தணர் களை மன்னிப்புக்கேட்டு அவர்களை ஸ்தோத்திரம் செய்தனுப்பவே ண்டும். விரத நியமமுள்ளவள் தன் குருவிடம் இந்தப் பூஜையைக் கொடுக்கவேண்டும். பிறகு உறவினர்களுடனும் மித்திரர்களுட னும் பக்தியுடன் போஜனம் செய்யவேண்டும்.

சைத்திர ஸ்நானம் செய்த பலனை அடைய இந்த விரதத் தின் உத்தியாபனத்தை விஸ்தாரமாகச் செய்யவேண்டும்.

இவ்விதம் எவன் சைத்திர ஸ்நான விரதத்தை நன்றாக அநுஷ்டானம் செய்கிறானோ அவன் பாபங்கள் எல்லாவற்றிலு மிருந்து விடுபட்டு விஷ்ணுவின் சாயுச்சியத்தை அடைவான்.

இந்த விரதத்தை நன்றாக அநுஷ்டானம் செய்தால், விரதங்கள், தானங்கள், தீர்த்த ஸ்நானங்கள் எல்லாவற்றிலும் ஏற்படும் பலனைவிடக் கோடி மடங்கு அதிகமாகப் பலன் ஏற்படும்.

சைத்திர விரதத்தைச் செய்த மானிடனைப் பீடிக்கும் பாபங்கள் யாவும் அவனிடம் பயந்து நாம் எங்குச் செல்லுவோமெனக் கதறுகின்றன. ஆகையால் மானிடர்கள் அவசியம் இந்த விரதத்தைச் செய்யவேண்டும்.

ஸ்ரீ சைத்திர விரதத்தைப் பற்றிக் கூறும் பாகத்தைப் பாராயணம் செய்யும் அந்தணர்கள் ஸன்னியாசிகள் வைஷ்ணவர்கள் எல்லோரும் பாபங்க ளெல்லாவற்றிலு மிருந்து விடுபட்டு விரதம் செய்த பலனையு மடைகிறார்கள்.

சைத்திர விரதம் ஸ்நானம் முதலியவற்றின் மஹிமையைக் கூறும்

10 - வது சருக்கம்

முற்றிற்று.

# 11-வது சருக்கம்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்:

குருவே! மாதங்களெல்லாவற்றிலும் சைத்திர மாதம் சிறந்தது என்று பெரியோர்கள் எதனால் கூறுகிறார்கள்? அதன் காரணத்தை எனக்குச் சந்தோஷமுண்டாகச் சொல்லவேண்டும்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

மாணவனே! புத்தியில் சிறந்தவனே! நீ நன்றாகக் கேட்டாய்!

அந்தணர்களுக்குள் சிறந்த விஷ்ணுதாஸ! மஹா விஷ்ணு பிரம்ம தேவரின் பிரார்த்தனைபால் பூமியில் அயோத்தியா புரியை அரசாளும் தசரத மகாராஜாவினுடைய பட்ட மஹிஷியாகிய கௌஸல்யா தேவியிடம் சைத்திர மாதம் சுக்ல பக்ஷம் நவமி திதி புனர்வசு நக்ஷத்திரத்தில் ஐந்து கிரகங்கள் உச்சமாயிருக்கும்போது பகற்பொழுதில் ஜனனமாயினர். பூமியில் எங்கும் ஆனந்தம் உண்டாயிற்று. தேவ துந்துபி முழங்கிற்று. ஆகாய மார்க்கத்தி லிருந்து புஷ்ப வருஷம் வருஷித்தது. தசரத மஹா ராஜன் அரண்மனையில் தனித்தனியாக வாத்தியங்கள் கோஷித்தன. தாஸிகள் ந்ர்த்தனம் செய்தார்கள்; இனிமையான கானத்தையும் செய்தார்கள். அப்பொழுது பூமண்டலத்திலிருக்கும் ஜனங்களெல்லோரும் குழந்தையைப் பார்க்க வந்து தசரத பாலனைப் பார்த்துச் சந்தோஷ மடைந்தார்கள்.

அநேக இந்திராதி தேவர்கள் அநேகவித விமானமேறிக் கௌஸல்லியையின் கர்ப்பத்தி லிருந்துண்டான ஸ்ரீராமனைப் பார்க்க ஆகாய மார்க்கமாக வந்து கூடினார்கள். பிரம்மதேவர், ருத்திரர், சூரியன், இந்திரன் முதலான தேவர்கள் ஸ்ரீராமர் அவதாரம் செய்த சமயத்தில் அநேகவித உற்சவங்களைச் செய்தார்கள். இவ்விதம் உற்சாகத்துட னிருக்கும் சமயத்தில் ஆகாயத்தி லிருக்கும் தேவர்கள் சந்தோஷத்தால் ஸ்ரீராம சந்திரரை நமஸ்காரம் செய்து அநேகவிதமாக ஸ்தோத்திரம் செய்தார்கள்,

அப்பொழுது தேவர்களெல்லோரும் சந்தோஷத்தால் இரகு சிரேஷ்டராகிய இராமரை நோக்கி "இராமச்சந்திரா! இப்போது

நாங்கள் எல்லோரும் கிருதார்த்தர்களானோம். அசுரர்கள் அரக்கர்கள் இவர்களால் ஏற்பட்ட துன்பத்திலிருந்து விடுபட்டோம். தாங்கள் அவதாரம் செய்த இந்தக் காலம் எங்களுக்கு மகிழ்ச்சியளிக்கக்கூடியது. கருணாநிதியும் தேவ தேவருமாகிய தாங்கள் அவதாரம் செய்த இந்தக்காலம் சிரேஷ்டமாகவும் புண்ணிய தினமாகவும் ஏற்பட வேண்டும். தாங்களும் இவ்விஷயத்தை ஒப்புக்கொண்டு இந்தக் காலத்திற்கு வெகு வரங்களைக் கொடுக்க வேண்டும்" என்றார்கள்.

இவ்விஷயத்தைக் கேட்டு மகா மகிமைபெற்ற விஷ்ணுவின் அவதாரமாகிய இராகவர் அந்தத் தேவர்களிடம் மிகுந்த சந்தோஷமடைந்து கூறுகிறார்கள்:—

தேவர்களே! நீங்கள் நன்றாகக் கூறினீர்கள். நல்லவேளையில் மூவுலகத்திற்கும் உபகாரமளிக்கக்கூடிய விஷயத்தை நீங்கள் கேட்டீர்கள். நான் சந்தோஷத்துடன் கூறுவதைக் கேளுங்கள்.

மாதங்களெல்லாவற்றிலும் சைத்திர மாதம் உயர்ந்ததாகும். வைசாகமாதத்தைவிடக் கார்த்திகை மாதம் உயர்ந்தது; கார்த்திகைமாதத்தைவிட மாசி மாதம் சிறந்தது. மாசி மாதத்தைக்காட்டிலும் சைத்திர மாதம் உயர்ந்ததாக ஆகப்போகிறது. சைத்திர மாதத்தில் செய்யும் தானத்தையும் ஜபத்தையும் ஸ்நானத்தையும் ஹோமத்தையும் அயோத்தியில் செய்தால், ஒன்றுக்குக் கோடி மடங்கு அதிகமான புண்ணியம் ஏற்படும். அசுவமேத யாகத்தாலும் கோமேத யாகத்தாலும் சோமயாகத்தாலும் ஏற்படும் பலனைச் சைத்திர மாதத்தில் ஸ்நானம் செய்வதாலடைவான்.

தேவர்களிற் சிறந்தவர்கள் சூரியகிரகண புண்ணிய காலத்தில் குருக்ஷேத்திரத்தில் ஸ்நானம் தானம் செய்வதாலுண்டாகும் பலனைச் சைத்திர மாஸத்தில் ஸ்நானம் செய்தாலடைவான். இந்தச் சரயூ நதிக்கரையில் இனி இராவணனைக் கொன்றதாலுண்டாகும் பாபத்தைப்போக்கிக்கொள்வதற்கு நான் யாகம் செய்யப்போகிறேன். எந்த இடத்தில் யாகம் முடியப்போகிறதோ அந்த இடம் என் பெயரால் பெரிய பிரசித்தியை அடையப்போகிறது.

அயோத்தியில் சரயூ நதியின் மத்தியிலுள்ள இராமதீர்த்தத்தில் சைத்திர மாசத்தில் ஸ்நானம் செய்பவர்கள் மோக்ஷத்திற்குரிய ராவார்கள்.

சுகத்தை விரும்பியவனுக்குப் பிரயாகைக்ஷேத்திரத்தில் மாக மாச ஸ்நானமும் கார்த்திகை மாசத்தில் காசியில் பஞ்ச கங்கா ஜலத்திலும் வைகாசி மாதத்தில் துவாரகையிலும் எவ்வளவு விசேஷமோ அப்படியே சைத்திர மாஸத்தில் அயோத்தியில் இராம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வது விசேஷ முள்ளதாகும். மாதங்க ளெல்லாவற்றிலும் முதலாவதாகிய சைத்திர மாதம் சிரேஷ்டமாகப் போகிறது.

இந்திராதி தேவர்களே! சைத்திரமாசம் வந்தவுடன் நீங்க ளெல்லோரும் எங்கெங்கு தீர்த்த மிருக்கிறதோ அங்கங்கு ஸான்னித்தியத்தை அடைந்திருக்கவேண்டும்'' என்றார்.

இவ்விதம் இந்திரன் முதலான தேவர்களுக்குக் கட்டளை யிட்டு அவர்கள் வணங்கித் தொழும் மகிமையுடன் இராமச்சந்திரர் விளங்கினர். பரமசிவன் விருஷபவாகனத்துடன் தம்மிருப்பிடம் சென்றார்; தேவர்களும் தங்கள் தங்களிருப்பிடம் சென்றார்கள்.

ஆகையால் மாதங்களுக்குள் சைத்திர மாசம் சிறந்தது; இது விஷ்ணுவின் வரத்தால் சிறந்ததாக ஏற்பட்டது. மாணவனே! நீ கேட்டதற்கு ஸ்ரீராமச்சந்திரன் வரமளித்தது முதலான காரணத்தைக் கூறினேன்.

### விஷ்ணு தாசர் வினவுகிறார்.

குருவே! தாங்கள் சைத்திர ஸ்நானம் மிகவும் சிறந்த தெனக் கூறவில்லை. அந்த ஸ்நானத்தைச் செய்தவர் யாவர்? செய்தால் எந்தக் காரிய சித்தி ஏற்படும்? இதைத் தெரிவிக்கவேண்டும்.

### ஸ்ரீராமதாசர் கூறுகிறார்.

மாணவனே! நன்றாகக்கேட்டாய்; நான் சொல்வதைநீ கேட்க வேண்டும். அப்ஜகம் என்னும் க்ஷேத்திரத்தில் அந்தணர்களுக்குள் சிறந்த என் தந்தை இருந்தார். அவர் பெயர் நரசிம்மர்.

அவர் அந்த அப்ஜக க்ஷேத்திரத்திலிருந்த ஒருவனுக்கு அவன் மருமகள், மனைவி, பிள்ளை, பேரன், வேலைக்காரர்கள் வேலைக்காரிகள் இவர்களோடு (அதாவது குடும்பத்திற்கு) அன்ன மிட்டு ஆதரித்துவந்தார். இலக்ஷ்மி என்னும் என் தாயுடன் நரசிம்மர் என்ற என் தந்தை இராமபக்தியிற் சிறந்து இவ்வாறு செய்து வந்தார்.

விருத்தாப்பியத்தை அடைந்த இருவரும் புத்திரோத்பத்தி யில்லாமையால், தங்கள் தோஷத்தைப் போக்கிக்கொள்ள உபாயந் தேடி, நிவாசம் என்ற நகரத்தில் பிரதரை என்ற நதிக்கரையில் ஸான்னித்தியமாக விருக்கும் தங்களிஷ்டதேவதையாகியமோஹி னியைத் தரிசனம் செய்து தினந்தோறும் சேவைசெய்து வந் தனர். வெகு காலம் சென்ற பின்பு அந்தத் தேவதை பிரஸன்ன மாகி அந்தத் தோஷம் விலகக் காரணம் கூறிற்று.

"புத்தியிற் சிறந்த நரசிம்ம! நீ அயோத்தியாபுரி சென்று அங்குச் சரயூநதி ஜலத்தில் வசந்த காலத்தில் சைத்திர மாஸத் தில் இராம தீர்த்தத்தில் ஒரு மாதம் வரையில் ஸ்நானஞ்செய்யின், பாபங்களொழிந்து சிலாக்கியமான புத்திரனை அடைவாய்" என்று கூறிற்று.

அந்தத் தேவதையின் வசனத்தைக் கேட்டு அந்தணர் கவலை யுடன் அயோத்தியை மனதில் தியானித்துப் புறப்பட்டனர்.

இங்கிருந்து அயோத்தியா பட்டணம் வெகு தூரத்தி லிருக்கிறது. எவ்விதம் அங்குப் போகமுடியும் என்ற விசாரத் துடன் சில விடத்தில் நின்றும் சில விடத்தில் உட்கார்ந்தும் பத் தினியாகிய இலக்ஷ்மியின் கையைப் பிடித்துக் கொண்டும் நடந்து கோதாவரிக்கு வந்து ஸ்நானம் செய்து ஸ்ரீராம மூர்த்தியை முன்னால் வைத்துப் பக்தியுடன் பூஜித்தார்.

அப்போதே தேவியின் அநுக்கிரகத்தால் ஸ்ரீராமர் பிரசன்ன மாகி "எ பிராம்மணோத்தமனாகிய நரசிம்ம! நீ அயோத்திக்குப் போகவேண்டும், இந்தக் கோதாவரியின் வடகரையில் மூன்று யோசனை தூரத்தில் பிரதஷ்டானம் என்னும் பெபருள்ள க்ஷேத் திரம் இருக்கிறது. அங்கு என் பெயருள்ள இராம தீர்த்தம்

இருக்கிறது. அங்கு நீ சென்று பத்தினியுடன் ஸ்நானம் செய்து கொண்டிரு; வசந்த காலத்தில் சைத்திர மாதத்தில் சூரியன் மீன ராசியிலிருக்கும்போது ஸ்நானத்தைச் செய்யும் நீ, செய்த பாபங் களிலிருந்து விடப்பட்டுப் புத்திரனை அடைவாய், சந்தேகமில்லை'' என்று வாக்களித்து அந்தர்த்தான மடைந்தார்.

எந்த இடத்தில் இராமர் பிரஸன்னராஞரோ அந்தவிடத் தை இராம ஹிருதயம் என்று பெரியோர்கள் இன்னமும் கூறுகி ருர்கள். பிறகு நரசிம்மர் ஸ்ரீராம வசனத்தைக் கேட்டு பிரதிஷ் டானம் என்ற நகரத்திற்குப் பிரயாணமானூர். அங்குச் சென்று ஒரு மாதம் வரையில் சைத்திர மாதத்தில் தினந்தோறும் சூரி யோதயத்தில் எழுந்து சௌசம் முதலிய கிரிபைகளை முடித்துக் கொண்டு அந்த இராம தீர்த்தத்தில் சரயூ சங்கம மாகுமிடத்தில் ஸ்நானம் செய்து சொர்ணகிரியில் பக்தியுடன் ஸ்ரீராமச்சந்திா ரைப் பூஜித்துத் தினந்தோறும் சொர்ணகிரியை ஒன்பது முறை வலம் வந்து ஒன்பது வகைப் புஷ்பங்களாலும் நைவேத்தியங்க ளாலும் ஸ்ரீராமரைப் பூஜித்து வந்தார். சைத்திர மாசம் சுக்கில பக்ஷம் திருதியை முதல் வைசாக மாஸம் திருதியை வரையில் பத்தினியுடன் சீதளா கௌரீ ஸ்நானம் செய்தார்.

இவ்விதம் ஒரு மாசம் வரையிற் செய்து சந்தோஷமடைந்து பத்தினியான இலக்ஷ்மியுடன் அப்ஜகம் என்ற க்ஷேத்திரத்தை உத்தேசித்துப் புறப்பட்டார்.

மார்க்கமத்தியில் பசித்தாகத்துடன் கூடின மூன்று பிசாசு களைக் கண்டு அவைகளைக் கரையேற்றித் தமது நகரம் வந்து சேர்ந்தார்.

மாணவனே! சைத்திர ஸ்நானம் செய்த மஹிமையால் நான் அவருக்குப் புத்திரனுகப் பிறந்தேன். ஆகையால் வசந்த காலத்தில் அயோத்தியில் சரயூநதியிலுள்ள இராம தீர்த்தத்தில் சைத்திர மாஸத்தில் ஸ்நானம் செய்வது மிகவும் சிலாக்கியம். இகலோக போகத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கக்கூடியது. இதை நான் உனக்குக் கூறினேன்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஆசாரியரே! மூன்று பிசாசுகளும் உம்முடைய தந்தையாகிய நரசிம்மரால் பிசாசு ஜன்மத்திலிருந்து எவ்விதம் விடுவிக்கப்பட்டன? என்ன பாபத்தால் பிசாசு ஜன்மமேற்பட்டது. இந்த விஷயம் யாவற்றையும் உம்முடைய முகமாகக் கேட்க விரும்புகிறேன்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

மாணவனே! அரம்பை என்னும் அப்ஸரஸ்திரீ சைத்திர மாஸத்தில் அயோத்தியில் சரயூநதியில் நிர்மலமான இராம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, ஈரவஸ்திரத்துடனும் மனோக்யமான மந்தகாசத்துடனும் அலங்காரத்துடனும் இரத்தினம் சொர்ணம் இவைகளால் செய்த பாத்திரத்தில் சரயூ தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு சேதுவில் இராமேசுவரரைப் பார்க்க ஆகாய மார்க்கமாகச் சென்றாள். அப்போது அவளுடைய ஈர வஸ்திரத்திலிருந்து ஒரு துளி ஜலம் அந்தப் பிசாசுகளின் மீது விழுந்தது. உடனே பிசாசுகள் மூன்றும் தங்கள் கடுமையான சுபாவத்தை விட்டு, மிகுந்த ஆச்சரியமடைந்து, பூர்வ ஜன்மத்தின் ஞாபகம் பெற்று ஆகாய மார்க்கத்திற் செல்லும் அப்ஸர ஸ்திரீயைக் கண்டு பலபடி பிரார்த்தனை செய்தன.

அந்த மூன்று பிசாசுகளையும் கண்ட அரம்பை "நீங்கள் என்ன காரணத்தால் பிசாசுகளானீர்கள். அதன் காரணத்தைச் சொல்லுங்கள்" என்று கைஜாடையாகக் கேட்டாள். அவைகளுக்குள் இரண்டு பிசாசுகள் சொல்ல ஆரம்பித்தன.

ஏ ஸ்திரீயே! நாங்களிருவரும் பூர்வ ஜன்மத்தில் விரஜை என்ற ஸ்திரீயிடம் ஹரசர்மா வென்ற பிராம்மணனுக் குண்டான வர்கள். நாங்களிருவரும் அத்தியயனம் செய்ய நாராயணர் என்ற பெயர்கொண்ட குருவை யடைந்து, பணிவிடை செய்துகொண்டு அங்கு இருந்தோம். எங்கள் குருவாகிய நாராயணருக்கு ஒரு புத்திரி யிருந்தாள். அவள் அழகான சிரிப்புடன் சந்திரன் போன்ற முகமுள்ளவள். அக்கன்னிகையை நாங்க ளொருவருக்

கொருவர் சினேகத்துடன் பிரார்த்தித்து இருவரும் அப்பெண்ணை அநுபவித்து வந்தோம்.

வெகுநாட் சென்றபின் இச்சமாசாரம் குருவுக்குத் தெரிந்தது. பிறகு அவர் சினமடைந்து "நீங்களும் இந்தப் பெண்ணும் பிசாசு ஜன்மத்தை அடையக் கடவீர்கள்" என்று சபித்தார். உடனே நாங்கள் மூவரும் அந்தக் குருவைப் பலமுறை வணங்கி வேண்டிக் கொண்டோம். அவர் மனமிரங்கிச் சாப முடிவு காலத்தைத் தெரிவித்தார். அதாவது, சைத்திர மாதத்தில் நரஸிம்மர் என்ற அந்தணன் காட்டில் வரும்போது அவர் தமது சைத்திர மாத ஸ்நான பலனை உங்களுக்குக் கொடுக்கப் போகிறார். அப்பொழுது நீங்கள் சாப விமோசன மடைவீர்கள்" என்றார். அவ்விதமே நாங்கள் பிசாசுகளாகப் பிறந்தோம். இப்பொழுது உன் வஸ்திர ஜலம்பட்டு அதனால் ஜென்மாந்திர ஞானத்தை அடைந்தோம்—என்று தெரிவித்தார்கள்.

இந்த வசனத்தைக் கேட்ட அம்பை அந்தப் பிசாசுகளின் சாபவிமோசன வரலாற்றைத் தெரிந்து தன் கையால் அந்தப் பிசாசுகளைத் தொட்டு "நாசிம்மர் என்ற அந்தணன் தமது மனைவியுடன் வரப்போகிறார். கவலைப்பட வேண்டாம்" என்று கூறி, இராமேசுவரம் சென்று அங்கு ஸ்நானம் செய்து பூஜை முதலியவைகளை முடித்துக் கொண்டு சொர்க்கலோகம் சென்றாள்.

பிறகு சைத்திர மாதத்தில் என் தந்தை நரஸிம்மர் தமது மனைவியுடன் வரும்போது, வெகு தூரத்திலிருந்த பிசாசுகள் கண்டு "நரஸிம்மரென்ற பிராமணோத்தமரே!" என்று கூப்பிட்டுத் தங்களுடைய வரலாற்றையும் சாபவிமோசன ஏதுவையும் தெரிவித்தன.

அதைக்கேட்ட நரஸிம்மர் சந்தோஷத்துடன், "பிசாசுகளே நீங்கள் பயப்படவேண்டாம். சம்பு என்ற அந்தணனால் அரக்கன் விமோசன மடைந்ததுபோல நான் உங்களை விடுவிக்கிறேன்" என்றார்.

## பிசாசுகள் கேட்கின்றன.

சம்பு வென்பவன் யாவன்? இராக்ஷஸன் என்பவன் யாவன்? அந்தண சிரேஷ்டரே! இதை விஸ்தாரமாக எங்களிடம் கருணை கூர்ந்து சொல்லவேண்டும்.

## நரஸிம்மர் கூறுகிறார்.

சிவ காஞ்சி என்னும் பட்டணத்தின் மத்தியில் பரிசுத்த மான விரத நியமமுடைய சம்பு வென்ற ஓர் அந்தணனிருந் தான்.

அவன் ஒரு சமயம் ஏகாம்பரேசுவர சுவாமிக்கு அருகாமை யிலுள்ள வனத்தில் ஒரு பௌராணிகரிடம் சைத்திர மாதத்தின் மகிமையை விளக்கும் கதையைக்கேட்டு அதில் மிகுந்த பலன் உண்டென்றறிந்து அதிலும் அயோத்தியில் சைத்திரமாச ஸ்நா னம் மிகவும் விசேஷ மென்று கேட்டு வீட்டுக்குச் சென்றான்.

பிறகு வெகு காலம் சென்ற பின்பு அக்கதையை நினைத்துக் கொண்டு சைத்திர மாசத்தில் தன் மனைவியுடன் கிருகத்தை விட் டுப் புறப்பட்டு மார்க்கத்தில் கங்கையைத் தாண்டிச் சென்றான்.

அந்த வழியில் சஞ்சரித்துக்கொண்டிருந்த கர்க்கசன் என்ற வேடன் ஒருவன் வில் பாணம் இவைகளோடு சம்புவென்ற அந் தப் பிராம்மணனை வளைத்துக்கொண்டு இடுப்பு வஸ்திரம் நீங்க லாக அவன் கொண்டுவந்த சாமான்கள் யாவற்றையும் கிரகித்துக் கொண்டான். அப்பொழுது அந்தணன் கர்க்கசனை நோக்கி, "வஸ் திரம் முதலியவைகளை நீ எடுத்துக்கொண்டு அதில் இருக்கும் தின் பண்டங்களை மட்டும் கொடு" என்றான். இச்சொல்லைக் கேட்ட வேடன் அந்தணன் வஸ்திரத்தில் முடித்திருந்ததை அவிழ்த்து அதில் பலவித பக்ஷியங்களிருக்கக் கண்டான். இன்னொரு முடிச் சை அவிழ்க்க அதில் காயாக இருக்கும் தன்மையிலேயே காய்ந்து போன பத்து வாழைப்பழங்க ளிருக்கக்கண்டு "இந்தப் பழங்க ளால் எனக்கு ஒன்றும் பிரயோஜனமில்லை; இவைகள் பசி தாகத் துடனிருக்கும் பிராம்மண சிரேஷ்டனுக்கிருக்கட்டும்' என்று நிச் சயித்து, அந்தப் பழங்களை அந்தணனிடம் கொடுத்தான். பத்தினி

யுடன் பிராம்மணன் வேடன் கொடுத்த பழங்களை அந்த வசந்த காலத்தில் புசித்தான். வனசாரனாகிய வேடன் வாழைப்பழங்களைச் சைத்திர மாதம் முதல் தினத்தில் பிராம்மணனுக்குத் தானம் செய்தமையால் தன் கெட்ட எண்ணம் நீங்கி நல்ல சுவபாவத்தை யடைந்தான்.

ஏ பிசாசுகளே! அந்த கர்க்கசனிடம் சம்பு வென்ற அந்தணன் பின் வருமாறு கூறுகிறான்.

சம்பு கூறுகிறான்.

ஏ வேடா! நான் காஞ்சிமா நகரிலிருந்து புறப்பட்டு அயோத்தியா புரிக்குப் போகிறேன். சரயூநதியின் நிர்மலமான ஜலத்தில் சைத்திரமாதத்தில் ஸ்நானஞ் செய்ய உத்தேசித்துச் செல்லுகிறேன் என்றான்.

இப்படி அந்தணன் கூறியதும் கர்க்கசன் அங்கு ஸ்நானம் செய்வதால் என்னபலன் கிடைக்கு மென்றும் அதை எனக்கு விஸ்தாரமாகத் தெரிவிக்க வேண்டுமென்றும் வேண்டினான்.

சம்புவானவன் மறுபடி கர்க்கசனை நோக்கி "பக்தியுடன் வசந்த மாசத்தில் சரயூ நதியில் ஸ்நானம் செய்தால், ஸ்ரீரகுநாதன் பிரசன்னமாவார்; அப்படி அவர் பிரஸன்னரான பின்பு மானிடர்கள் சகல போகங்களையும் பூமியில் அடைந்து கடைசியில் மோக்ஷத்தையும் அடைகிறார்கள்" என்று கூறினான்.

கர்க்கசன்:—ஏ பிராம்மணரே! என்னிடம் தயை செய்து மோட்ச சொரூபத்தைத் தெரிவிக்கவேண்டும் என்றான்.

இவ்வசனங் கேட்டதும் சம்புவானவன் தன் மனைவியை அழைத்து "ஏ பிரியே! என்ன ஆச்சரியமிது பார்த்தாயா! சைத்திர மாதத்தில் வாழைப் பழங்களைத் தானம் செய்ததால் இந்த நல்ல எண்ணம் உண்டாயிருக்கிறது. வேடனெங்கே இவன் கேட்கும் கேள்வி எங்கே! தானம் செய்தால் மோட்ச சொரூபத்தை யறியலாம் என்று இப்பொழுது ஏற்பட்டது. ஆகையால் தானம், எல்லாவற்றிலும் சிறந்தது" என்று சொல்லி அந்த வேடனைப் பார்த்து, ஆதரவுடன் கூறுகிறான்.

ஏ வேடனே! நல்ல கேள்வி கேட்டாய், மோக்ஷ சொரூபத்தை உனக்குக் கூறுகிறேன் கேள். மறுபடி ஜன்ம மில்லாமலிருப்பது தான் மோக்ஷம் என்றான்.

வேடன்:—அந்த மோக்ஷம் எனக்கு எவ்விதம் கிட்டும்? அதைக் சொல்லும் என்றான்.

சம்பு கூறுகிறான்.

மோக்ஷமடையும் மார்க்கத்தைக் கூறுகிறேன் கேள். மக்கள் மனைவீடு முதலியவைகளை வெறுத்துச் சரீரம் யாவற்றையும் சலனம் செய்விக்கிற ஜனார்த்தனரைப் பகலிலும் இரவிலும் தியானம் செய்து வெகு புண்ணியம் பெற்று மனதைச் சுத்தப்படுத்திக்கொண்டு அந்த ஜனார்த்தன சொரூபத்தில் எப்போது மிருப்பவன் மோக்ஷமடைவான். மற்றவன் மோக்ஷமடைய மாட்டான்.

இவ்விதம் சம்பு சொன்னவுடன் வேடன் வில்லையும் பாணத்தையும் எறிந்துவிட்டு சம்புவின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு என் "ஐயனே! காக்கவேண்டும், என்னைக் கடைத்தேறச் செய்யவேண்டும்" என்றும் கேட்டுக்கொண்டான். இந்தச் சமயத்தில் இவர்களிருக்கு மிடத்திற் பெரிய சப்தஞ்செய்துகொணடு பயங்கரமான ரூபமுள்ள ஓரரக்கன் வந்தான். அப்பொழுது சம்புவும் அவன் மனைவி வேடன் மூவரும் அவ்வரக்கனைக்கண்டு ஓடினார்கள். அரக்கனும் அவர்களைப் பிடிக்கச் சமீபத்தில் ஓடித் தொடர்ந்தான். அதைக்கண்ட சம்பு தன் பாத்திரத்திலிருக்கும் ஜலத்தை எடுத்து ஸ்ரீராமசந்திரரை ஸ்மரித்து அவ்வரக்கன் முகத்தில் இரைத்தான். சைத்திர மாசத்தில் இராமநாம மந்திரத்தால் ஜபம் செய்யப்பட்ட தீர்த்தம் முகத்தில் விழுநதவுடன், ஜன்மாந்திரத்தின் நினைவு அவ்வரக்கனுக்கு உண்டாயிற்று. பிறகு அவ்வரக்கன் எட்டி நின்று சம்புவைப்பார்த்துத் தெரிவிக்கிறான். "ஏ முனிசிரேஷ்டரே! அகோரமாகிய இராக்ஷச சரீரத்திலிருந்து விடுபட்டேன். எனக்குச் சென்ற ஜன்ம நினைவுண்டாயிருக்கிறது. உம்மைச் சரணமடைநதேன்" என்றான். இவ்வாச்சரியத்தைக்

கண்ட பிராம்மணன் உனக்கு எதனால் இராட்சஸ ஜன்மம் ஏற்பட்டது? அதன் உண்மையை இப்போது எனக்குக் கூறவேண்டும் என்றான். இராக்ஷஸன் கூறுகிறான். "நான் முன் ஜன்மத்தில் ஜனஸ்தானத்தில் பிராம்மணனாகவிருந்தேன். பிராம்மணனுக்குரிய கருமத்தைச் செய்யாமல் எப்போதும் பிரதிக்கிரகத்தைச் செய்து கொண்டு பாபியாகவும் தௌர்ப்பாக்கியனாகவும் துக்க முள்ளவனாகவு மிருந்தேன். இந்தச்சமயத்தில் சைத்திரமாஸத்தில் பதிவிரதையாகிய என் பத்தினி என்னிடம் சொல்லாமல் இராம தீர்த்தம் சென்றாள். அவ்விதம் அவள் செல்கையில் வழி நடுவிற்கண்டு, அவளைப்பிடித்து "ஏ பாபிஷ்டி! என்னிடம் சொல்லாமல் எங்கே போகிறாய்" என்று கேட்டேன். அப்போது அவள் "சைத்திர ஸ்நானத்திற்குப் போகிறேன், வேறு கெட்டகாரியம் ஒன்றுமில்லை" என்று மிகவும் பயத்துடன் தெரிவித்தாள். இந்த வார்த்தையைக் கேட்டதும் நான் அவளை அடித்து வீட்டிற்கு அனுப்பினேன். பிறகு கொஞ்சகாலம் சென்றபின்பு நான் மரணமடைந்து யமதூதர்களால் யமலோகம் கொண்டுபோகப்பட்டு, யமசபைக்குச் சென்றேன். அங்கு சித்திரகுப்தன் என்னைப்பார்த்து அடிக்கடி திக்காரம் செய்து பயமுறுத்தியதுமன்றி யமதருமராஜனை நோக்கி "தருமராஜா! இவன் பாபி; சைத்திர மாஸம் ஸ்நானம் செய்வதைத் தடை செய்தவன்; முதலாவது இராக்ஷஸ ஜன்மத்தை அடைந்து பிறகு நரகங்களை அனுபவிக்க வேண்டியவன்" என்று சொன்னான். இதைக் கேட்ட தருமராஜன் தன் படர்களைப் பார்த்து "ஏ படர்களே! இவனுக்கு ஜனசஞ்சாரமில்லாத வனத்தில் இராக்ஷஸ ஜன்மத்தைக் கொடுங்கள்" என்று ஆக்ஞாபித்தான். அவன் ஆக்கினைப்படி தூதர்கள் எனக்கு இந்த ஜன்மத்தைக் கொடுத்து இங்குவிட்டு யமனிடம் சென்றார்கள். அது முதல் பசிதாகத்துடன் முப்பத்தையாயிரம் வருஷமாக இங்கு இருக்கிறேன். நான் என்ன புண்ணியம் செய்தேனோ இந்த வனத்தில் தங்களுடைய தரிசனம் இன்று கிடைத்தது. சாதுக்களின் சேர்க்கை நல்ல கதியைக் கொடுக்குமல்லவா? என்று அரக்கன் சொன்னான். சம்பு ஒரு க்ஷணநேரம் மனதில் யோசித்து அவன் முன் செய்த புண்ணியத்தைச் சொல்லுகிறான்:—

ஏ அரக்கனே! நீ முன் செய்த புண்ணியத்தைக் கேள். மனுஷிய சஞ்சாரமில்லாத காட்டில் என் சேர்க்கை ஏற்பட்டதல்லவா? சைத்திர மாஸம் சுக்கிலபக்ஷம் ஏகாதசியில் பிறனுடைய வீட்டில் நிமிந்திரணம் புசித்து, அங்குப் பெற்ற தாம்பூல தக்ஷிணைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு, மறுநாள் துவாதசியன்று காலையில் கௌதமீநதியில் ஸ்நானம் செய்தாய்; அப்பொழுது இடுப்பிலிருந்த தாம்பூல தக்ஷிணையை மறந்து நதிக்கரையில் வைத்துவிட்டுச் சென்றாய். அந்தத் தாம்பூலத்தையும் தக்ஷிணையையும் மற்றொரு பிராம்மணன் எடுத்துக் கொண்டான். அந்த விஷயம் நியாயமாம்.

சிரேஷ்டமான சைத்திர மாஸத்தில் தாம்பூலதானம் செய்ததால், இந்த வனத்தில் என்னுடைய சேர்க்கை உனக்குண்டாயிற்று. ஆகையால், சைத்திர மாசத்தில் இராக்ஷசர்களும் மானிடர்களும் தாம்பூல தானம் செய்யவேண்டும் என்றுகூறி அவ்வாக்கனுக்கும் கர்க்கசன் என்ற வேடனுக்கும் சைத்திர ஸ்நானத்தின் மஹிமையை உபதேசித்தான்.

பிறகு கர்க்கசனை நோக்கி "ஏ கர்க்கச! நீ என்னுடன் அயோத்தியாபுரிக்கு வந்து, சைத்திர மாசத்தில் சரயூநதியில் ஸ்நானம் செய்த உடனே இப்பாபத்திலிருந்து விடுபடுவாய்" என்று சொல்லி, பிறகு இராக்ஷசனைப் பார்த்து, "ஏ இராக்ஷச! ஒரு மாசம் வரையில் நீ இங்குதானே இரு; அரக்கர்கள் அயோத்தியில் பிரவேசிக்கக்கூடாது, ஆகையால் நான் சைத்திர மாசத்தில் ஸ்நானம் செய்து காஞ்சிமா நகரம் போக இவ்வழி வருவேன். அப்பொழுது உன்னைக் கடத்தேறச் செய்கிறேன். நீ சந்தேகப்படவேண்டாம்; உண்மையாகச் சொல்கிறேன். "நான் உன்னை உத்தாரணம் செய்யாமற் போவேனேயாயின், பிரும்மஹத்தி கோநிந்தை சந்நியாசி நிந்தை இவைகளால் ஏற்படும் தோஷத்திற்குப் பாத்திரவானாகிறேன். அன்றியும் மதுபானம் செய்தல் சொர்ணம் திருடுதல் முதலியவைகளால் உண்டாகும் பாபம் எனக்குண்டாகட்டும். பிராம்மண ஹத்தி, சைத்திர ஸ்நானம் செய்யாதிருத்தல் முதலியவற்றாலுண்டாகும் தோஷம் எனக்கு உண்டாகட்டும்"—இம்மாதிரி சபதங்கள் செய்யும்போது, இராக்ஷசனுக்கு

சந்தோஷம் உண்டாயிற்று. வேடனுக்குச் சைத்திரஸ்நான மகிமையைக் கூறியதால் அவ்வனத்தில் நான்கு பக்கத்திலும் பத்து யோசனை தூரத்திற்கு எங்கு கண்டாலும் இலை புஷ்பம் பழம் இவைகளுடன் மரங்கள் வளர்ந்து செழித்தன. சுகந்தமான காற்று வீசிற்று. நதிகளின் ஜலம் தெளிவாயிருந்தது. மயில் கூட்டங்கள் கூத்தாடிக்கொண்டிருந்தன. இப்படி ரமணீயமாக விளங்கும் வனத்தைக் கண்ட கர்க்கசன் சம்புவால் கூறப்பட்ட சைத்திர ஸ்நான மகிமையால் இவ்வனம் செழிப்படைந்த தென்பதைப் பற்றிச் சைத்திரமாசம் சிறந்ததென் றெண்ணினன். பிறகு சம்பு, அவன் பத்தினி, கர்க்கசன் மூவரும் அவ்வனத்தினின்றும் வெளிப் புறப்பட்டு மெள்ள மெள்ள அயோத்திக்குச் சமீபம் வந்து அங்குள்ள வனத்தைக் கண்டார்கள்.

இப்பொழுது பெரும் சப்தம் உண்டாயிற்று. முன் பக்கத்தில் யானையும் பின் பக்கத்தில் சிம்மமும் சப்தம் செய்துகொண்டு ஒன்றுக்கொன்று சண்டையிட்டபடியே சம்புவுக்குச் சமீபம் வந்தன. மார்க்கத்தைத் தடுத்து நிற்கும் யானையையும் சிங்கத்தையும் பார்த்து சம்பு கர்க்கசனை நோக்கிச் சொல்லுகிறான்:—

ஏ கர்க்கச! சைத்திர ஸ்நானத்திற்குச் செல்லும்போது அடிக்கடி உண்டாகும் இடையூறுகளைப்பார். ஆனால் விக்கினங்கள் உண்டாகின்றனவென்று சைத்திர ஸ்நானத்தை நிறுத்தக்கூடாது. காசி யாத்திரை, விவாகம், கீதை, கயையாத்திரை, இராமத்தியானம், சைத்திர ஸ்நானம், மஹாதானம் இவைகளுக்கு விக்கினங்கள் ஏற்படும்—என்றான்.

இவ்விதம் சம்பு சொன்னவுடன் துஷ்ட மிருகங்களாகிய யானை சிங்கம் இவ்விரண்டும் சைத்திர மாசத்தில் இராமநாமத்தைக் கேட்டபடியால் ஜன்மாந்திர ஞாபகத்தைப் பெற்று மிகுந்த ஆச்சரியமடைந்து "காக்கவேண்டும்! காக்கவேண்டும்!!" என்ற பெருத்த சப்தத்துடன் சம்புவைச் சரணம் புகுந்தன. தன்னைச் சரணமடையாநின்ற யானையையும் சிங்கத்தையும் சம்புவானவன் பார்த்து "உங்களுக்கு எதனால் இந்தத் துஷ்ட ஜன்மமுண்டாயிற்று?" என்று வினவினன்.

### சிங்கம் கூறுகிறது.

முன் ஜன்மத்திற் சேதுவில் இராமேசுவர க்ஷேத்திரத்தில் நான் பிராம்மண தருமங்கள் எல்லாவற்றையும் நிந்தனை செய்து கொண்டும் பாஷாண்டர்கள்போலப்பேசிக்கொண்டும் இருந்தேன்.

இப்படி யிருக்கையில் ஒரு சமயம் சைத்திர மாதத்தில் ஸ்ரீராம தீர்த்தத்தில் வெகு ஜனங்கள் கூடி யிருக்கும் போது புராணம் சொல்லுகிற ஓர் அந்தணனிடம் சைத்திர ஸ்நான மகிமையைக் கூறும் கதையைக் கேட்டு அடிக்கடி அந்த விஷயத்தைப் பற்றி நிந்தனை செய்தேன்.

அப்பொழுது அங்குத் தவம் செய்துகொண்டிருந்த ஒரு பிராமணர் நான் நிந்தனை செய்வதைக் கேட்டு "இப்பொழுதே நீ சிங்கமாகப் பிறந்து பெரிய ஆரண்யத்தில் திரியக் கடவாய்" என்று சபித்தார். பிறகு உடனே "எப்போது சைத்திர மாதத்தில் ஸ்ரீராமருடைய நாமம் உன்னால் கேட்கப் படுகிறதோ அப்பொழுது சாபவிமோசனம் ஏற்படும்" என்று விமோசனத்தையும் கூறினார். அந்தச் சாபத்தால் எல்லோருக்கும் பயமுண்டு பண்ணுகிற சிங்கமானேன். இந்தச் சைத்திர மாதத்தில் ஸ்ரீராம சப்தத்தைக் கேட்டேன். அந்தத் தபசி கூறியபடி எனக்கு முன் ஜென்மத்தின் ஞானம் உண்டாயிற்று. இச்சென்மத்தினின்று என்னைக் கரையேற்ற வேண்டும்" என்றது.

இப்படிக் கூறிய சிங்கத்தின் சொல்லைக் கேட்டுச் சம்புவானவன் யானையைப் பார்த்து, "ஏ யானையே! நீ என்ன பாபங்களைச் செய்து இப்படியானாய்" என்று வினவினான்.

### யானை கூறுகிறது.

ஏ அந்தணரே! நான் இராமநாத புரத்தில், காவேரியின் வடகரையில் வாசம் செய்து கொண்டிருந்த பிராம்மணன். சாஸ்திரங்களில் பிரீதியில்லாமல் நிரம்பவும் கெட்ட நடவடிக்கை உள்ளவனாகவும் தன்மதத்தால் நிறைந்தவனாகவும் தாஸிகளின்கூட்டுறவுள்ளவனாகவும் இருந்தேன். ஒரு சமயம் என் சிநேகிதன் சைத்திரமாசம் சுக்லபக்ஷம் நவமியில் சிராத்தத்திற் கென்னை வரச்

செய்தான். நான் அன்றைபதினம் போஜனம் செய்தேன். அந்தப் பாபத்தினலே தான் யானை ஜன்மமுண்டாயிற்று; இதிற்சந்தேகமில்லை. மாதந்தோறும் நவமியில் எப்போதும் போஜனம் செய்யக் கூடாதென்பதையும் அறிவேன். இப்போது எல்லோருடைய துக்கத்தையும் போக்கும் தங்களுடைய சேர்க்கை எனக்கு எந்தப் புண்ணியத்தால் உண்டாயிற்று என்பதை நானறியேன். தாங்கள் அதைச்சொல்லவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டது.

சம்பு, யானை செய்த புண்ணியத்தைச் சற்றுத் தியானத்திலிருந்து தெரிந்துகொண்டு யானையை நோக்கிச் சொல்லுகிறன்—

ஏ யானையே! என்னுடைய சேர்க்கை ஏற்பட்டதற்குள்ள முன் ஜன்மத்தின் புண்ணியத்தைக் கூறுகிறேன் கேள். உன்னை நான் கரையேற்றுகிறேன். நீ கொஞ்சமேனும் சந்தேகமடைய வேண்டாம். காவேரிக் கரையில் விளங்கும் இரம்மியமான இராமநாத புரத்தில் சைத்திரமாதம் நவமீ திதியில் இராம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து இராமாயண கதையைக் கேட்டாய்; இராமேசுவரரையும் தரிசனம் செய்தாய்; அந்தப் புண்ணியத்தால் இந்த அரண்யத்தில் என்னுடைய சேர்க்கை உண்டாயிற்று. ஏ சிங்கமே! யானையே! நீங்களிருவரும் கேளுங்கள்—

சைத்திர மாஸத்தில் அயோத்தியில் இராம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பிறகு நான் வரும்போது உங்களை உத்தாரணம் செய்கிறேன். இவ்விஷயத்தில் சந்தேகம் வேண்டாம். உங்களுக்கு நம்பிக்கையும் சந்தோஷமும் உண்டாவதற்கு நான் செய்யும் சபதங்களைக் கூறுகிறேன் கேளுங்கள். நான் உங்களை உபேக்ஷித்துச் செல்வேனுயின் ''பரஸ்திரீ கமனம் செய்வதாலும் மித்திரனை வதஞ்செய்வதாலுமுண்டாகும் பாபமும், பிராம்மணன் தனத்தை அபகரிப்பதாலும் தாயை நிந்தனை செய்வதாலு முண்டாகும் தோஷமும் என்னை யடையட்டும்'' என்று இவ்விதம் கூறி அந்தச் சம்புவானவன் தனது பத்தினியுடனும் கர்க்கசன் என்ற வேடனுடனும் புறப்பட்டு மெள்ள மெள்ள வழியில் வரும்போது மற்றொரு மார்க்கமாக வரும் கார்ப்படிகனை (கிழிந்த துணி உடுப்போனைக்) கண்டார். கங்கைசென்று ஸ்நானம் செய்து கங்கா

தீர்த்தம் எடுத்துக்கொண்டு இராமலிங்கத்திற்கு அபிஷேகம் செய்வதற்காகப் போகிற கார்ப்படிகனைச் சம்பு நமஸ்கரித்து வணக்கத்துடன், "ஏ பிராம்மணரே! எங்கிருந்து எங்கே போகிறீர்?" என்றார்.

### கார்ப்படிகன் கூறுகிறான்.

பிராம்மண சிரேஷ்டரே! நான் பிரயாகையிலிருந்து அயோதிக்குச் சைத்திர மாஸ ஸ்நானத்தை உத்தேசித்துச் செல்லுகிறேன். உம்முடைய வரலாறு யாதென்றான்.

சம்பு:—சைத்திர மாஸ ஸ்நானத்திற்காக சிவகாஞ்சியிலிருந்து அயோத்திக்குப் போகிறேன்.

கார்ப்படிகன்:—ஏ பிராம்மணா! சிவகாஞ்சியில் சம்புவென்ற பிராம்மணர் ஒருவருளர்; அவரைத் தெரியுமா?

சம்பு:—ஏ பிராம்மணா! சிவகாஞ்சியில் சம்புவென்று பெயர் கொண்டவர் அநேகருண்டு; நீர் யாரைக் கேட்கிறீர்? அவர் கோத்திரத்தையும் உபநாமத்தையும் சொல்லும் என்றான்.

கார்ப்படிகன்:—பாரத்துவாஜ குலத்திற் பிறந்தவர்; சக்ரகோபி என்று மற்றொரு நாமமுடையவர்; மஹாதேவருக்குக் குமாரர்; சம்புவென்ற பெயர் கொண்டவர்; வேதசாஸ்திரங்களை அறிந்துகொண்டவர்; இவரைத் தெரியுமா சொல்லும்.

சம்பு:—எதற்காக நீர் கேட்கிறீர்? அதை விஸ்தாரமாகச் சொல்லும். சந்தேகப்படவேண்டாம்.

கார்ப்படிகன்:—அந்தணரே! நான் கங்காநதி சமுத்திர சங்கமமாகுமிடத்தில் ஸ்நானம் செய்யப்போகும்போது, ஸீதா குண்டத்திற்குச் சமீபத்தில், கைகட தேசத்தில் வழி நடுவில் பயங்கரமான உருவத்துடன் ஒருபிசாசைக் கண்டேன்.

அப்பிசாசு என்னைக் கொல்வதற்குச் சமீபத்தில் வந்தவுடன் நான் பயத்தால் நடு நடுங்கித் தீர்க்கமாக இராம நாம கீர்த்தனம் செய்தேன். இராம கீர்த்தனம் செய்தவுடன் என்னருகில் வந்த பிசாசு வெகு தூரம் ஓடி நின்று, இராமநாம கீர்த்தனத்தைக்

கேட்டுக்கொண்டிருந்தது. பிறகு அப்பிசாசிற்குச் சென்ற ஜன்ம ஞாபகம் உண்டாகி என்னை நோக்கி, "என்னைக்காக்கவேண்டும்" என்று அடிக்கடி சொல்லிற்று.

பிறகு நான் உனக்கு எதனுல் பிசாசு ஜன்மம் ஏற்பட்டது? அதை விரைவாக எனக்குச் சொல்லென்று கேட்டேன். பிசாசு, மறுபடி என்னை நோக்கி "நான் காஞ்சீபுரியில் துண்டி என்றபெயருள்ள பிராமணன். நான் ஒரு சமயமாவது அன்னதானம் செய்ததில்லை. ஆகையால் எனக்குப் பிசாசு ஜன்மம் வந்திருக்கிறது," என்று சொல்லிற்று. இதைக் கேட்டு "இனி உனக்கு எதனுல் பிசாசு ஜன்மம் ஒழியப்போகிறது" என்று நான் வினவினேன். அதற்கு அப்பிசாசு "என் குமாரன் சைத்திர மாஸம் அமாவாசையில் என்னை உத்தேசித்து அன்னதானம் செய்வானேயாயின் எனக்கு நல்ல கதி உண்டாகும் சந்தேகமில்லை" என்றது. இதைக் கேட்டதும் நான் "உன் குமாரன் எங்கே இருக்கிறுன், அவன் பெயர் என்ன, சொல்" என்று கேட்டேன்.

பிறகு அந்தப் பிசாசு, பாரத்துவாஜ குலம் முதலியவற்றை எனக்கெடுத்துக் கூறிற்று. இவ் விஷயம் உமக்குக் கூறினேன்

நான் அந்தப் பிசாசினிடம் கருணையுடன் தெரிவித்ததை உமக்குச் சொல்லுகிறேன் கேளும்.—

"ஏ பிசாசமே! கங்கையின் ஜலத்தை எடுத்துக்கொண்டு இராமலிங்கத்திற்கு அபிஷேகம் செய்யப்போகிறேன், அப்பொழுது காஞ்சீபுரிக்குப் போவேன். அங்கு உன் புத்திரனுக்கு இந்த வரலாற்றை அறிவிக்கிறேன்" என்றேன்.

இதைக்கேட்ட பிசாசு மிகவும் மகிழ்ந்து என்னை ஸ்தோத்திரம் செய்து நமஸ்கரித்து "என் குமாரனிடம் அவசியம் சொல்லவேண்டும்; மார்க்கமத்தியில் சந்தித்ததையும் நான் சொன்னதையும் விஸ்தாரமாகக் கூறவேண்டும்" என்று பிரார்த்தித்தது; "மற்ருெரு விஷயம் கூறுகிறேன். இதையும் என் குமாரனுக்குச் சொல்லவேண்டும்—

சைத்திர மாஸம் அமாவாசையில் அன்னதானஞ் செய்தல் சிறந்ததென்று சொர்க்கலோகத்தில் கூறப்படுகிறது. ஆகையால் என்னுத்தேசமாக அந்தப் புண்ணிய காலத்தில் அன்னதானம் செய்யவேண்டும் என்று கூறு. இந்த விஷயங்களை என் குமாரனுக்கு ஞாபகமாகச் சொல்லாவிடில் உன்னுடைய யாத்திரையின் பயன்யாவும் வீணாகும்'' என்று சாபமிட்டது.

அந்தப் பிசாசுக்குச் சமாதானம் சொல்லி விட்டுச் சைத்திர ஸ்நானம் செய்ய அயோத்திக்குப் புறப்பட்டேன். நல்ல பலனைக் கொடுக்கும் சைத்திர ஸ்நானத்தைச் செய்து திரும்பி வரும் போது காஞ்சீபுரி சென்று அந்தச் சம்புவென்பவனுக்குச் சொல்லப் போகிறேன். அதனாலே தான் உம்மைச் சம்புவென்ற அந்தணனுடைய கோத்திரம் முதலியவைகளைப் பற்றிக் கேட்டேன். உமக்குத் தெரிந்தால் சொல்லும்-என்று கூறினான்.

இவ்விதம் கார்ப்படிகன் சொன்னதும் சம்புவானவன் ஆ! நம் தந்தையின் வரலாறு இவ்விதமாயிற்றுவென்று எண்ணி மூர்ச்சை யடைந்தான். அருகேயிருந்த கர்க்கசன் அவனைச் சமாதானம் செய்து மூர்ச்சை தெளிவித்தான். பிறகு சம்பு கார்ப்படிகனைப் பார்த்து:—

ஏ கார்ப்படிக சிரேஷ்ட! என்னைவிட அதமனான மானிடன் வேறு ஒருவனுமில்லை. நீர் கேட்ட சம்புவென்பவன் நான்தான். சந்தேகமில்லை. புத்திரனாகப் பிறந்தும் தந்தைக்கு மோட்சமளிக்கும் அன்னதான முதலியவைகளைச் செய்யாத என்னைச் சுடவேண்டும்! சுடவேண்டும்!!

என் ஜன்மம் வீணாயிற்று. உம்முடைய வார்த்தைப்படி சைத்திர மாஸத்தில் பிதாவை உத்தேசித்து அன்னதானம் செய்கிறேன்—எனச் சொல்லிப் புறப்பட்டு இரம்மியமான அயோத்தியைக் கண்டதும் சம்பு அவன் மனைவி, கார்ப்படிகன், கர்க்கசன் என்ற வேடன் இந்நால்வரும் நமஸ்காரம் செய்தார்கள்.

சம்பு கூறுகிறான்.

பிறகு சம்பு ஏ கர்க்கசனென்னும் வேடனே! சிலாக்கியமான அயோத்தியைப்பார். ஸ்நானம் செய்வதற்குக் கோடிக்

கணக்காக ஜனங்கள் கூடியிருக்கின்றார்கள். இந்த ஜனங்களின் சப்தம் மேக சப்தம்போல் காதிலே படுகிறது பார். இன்னும் அநேகவித துவஜங்களும் தோகைகளும் இந்திரன் வில்லைப் போலக் காணப்படுகின்றன. அநேகவித வாத்தியங்கள் சப்திக்கின்றன. அக்னி ஹோத்திரம் செய்வதாலுண்டாகும் புகை ஆகாய மார்க்கத்தை வியாபித்திருப்பதையும் பார். கைலாய மலைக்குச் சமமான உப்பரிகைகளையும் பார். புதிதான வீதிகளைப் பார். மண்டலமாக வமைந்த அகழிகளாகிய அரைநூன் மாலையை உடையதும், உயர்ந்த உப்பரிகைகளுள்ளதும் ஜ்வலிக்கும் பதாகைகள் நிறைந்ததும் ஆகாயத்தை அளாவிய சிலாக்கியமான உப்பரிகைகளிலிருக்கும் சொர்ண கலசங்களால் பிரகாசிக்கப்பெற்றதும் சிறந்ததுமான அயோத்தியைப் பார். பரிசுத்தமான இந்த க்ஷேத்திரத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் இம்மூன்று தேவர்களும் முனிவர்களும் மறைந்து வாசம் செய்கிறார்கள். ஜனங்களெல்லோரும் தங்கள் தருமங்களைத் தவறாமல் நடத்திவருகிறார்கள். குபேரனிடம் பொறாமைகொண்டு தனங்களைச் சம்பாதிக்கின்றார்கள். இவ்வயோத்தியில் வீடு தோறும் ஆனந்தம் பெருகுகின்றது. அயோத்தியிலிருக்கும் அந்தணர்களுடைய பாதங்களை இந்திரன் முதலியவர்கள் அலம்புகிறார்கள். அந்த அந்தணர்களை வணங்காதவர் யாவர்?

உதாரத்தன்மையிற் கற்பம் போன்றவர்களும் காம்பீரியத்தில் சமுத்திரம்போன்றவர்களும் பொறுமையில் பூமிக்குச் சமமானவர்களும் வேதங்கள் உருக்கொண்டதெனச்சஞ்சரிப்பவர்களும் முதலைகளுடன் கூடின பெருஞ் சமுத்திரத்தைப் பானம் செய்த அகஸ்திய முனிவருக்குச் சமானமானவர்களும் விளங்குகிற இந்த அயோத்தியா புரியிலுள்ள பிராம்மணர்கள், அரசர்களெல்லோராலும் நமஸ்கரிக்கத் தகுந்தவர்கள். இங்கு நான்கு வர்ணத்தவர்களு மிருக்கிறார்கள். சிறுகிருமிகள் புழுக்கள் பட்சிகள் இவைகளுக்கும் ஞானம் சமாதி இவைகளின்றி மோட்சமார்க்கம் சுலபமாகக்கிடைக்கும். இகத்தில் போகத்தையும் பரத்தில் மோட்சத்தையும் அடையச் சாதகமான சரயூநதியின் தீர்த்தம் பாபமாகிய

யானைகளை ஒழிப்பதற்கு அங்குசங்கள் போன்ற அலைகளைக் கொண்டிருக்கிறது.

ஸ்படிகமயமான படிக்கட்டில் உட்கார்ந்திருக்கும் முனிவர்களால் கொண்டாடப்படுகிற சாயூநதி உத்தரீயம் தரித்தமாதைப் போல் விளங்குவதைக் காண். இந்திர நீலமயமானதும் உன்னதமான தோரணமுள்ளதுமான இராமருடைய திவ்யகிருகத்தைப் பார். காச்மீர தேசத்துக் கற்களால் ஏற்பட்ட சுவர்களுடன்கூடின ஸீதையின் பெரிய கிருகத்தைப் பார்.

இராம தீர்த்தத்திற்குச் சமீபத்தில் அநேக ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதும் சொர்ணத் தூண்கள் நாட்டப்பட்டதும் ஸ்படிகக் கற்களால் அமைக்கப்பட்டதும் சித்திரவர்ணமுள்ளதுமான இந்தக்கிருகம் ஸீதாராமர்கள் சாயூநதிக்கரையில் வசிப்பதன் பொருட்டு ஏற்பட்டது. உருக்கின தங்கத்தாலும் இரத்தினத்தாலும் அமைந்த கும்பங்கள் பவள வைடூரியங்களிழைக்க சொர்ணமயமான வீதிகள் இவைகளுடன் கூடிய இந்தக் கிருகம் இலக்ஷ்மண னுடையது.

விசுவகருமாவின் வேலைத்திறம் யாவும் அடங்கிய இந்தக்கிருகம் பரதனுடையது. அவ்விதமே இரத்தினச் சுவர்களால் பிரகாசத்துடன் மங்களத்தைக் கொடுக்கக் கூடியபடி அமைக்கப்பட்ட இந்தக் கிருகம் சத்ருக்னனுடையது. ஸ்படிகச்சுவருடன் கூடியதும் மிகவும் உயர்ந்ததும் சொர்ணரேகைகளுடன் கூடியதும் மிகுந்த பிரகாசமுள்ளதுமான இந்தக் கிருகம் அநுமானைச் சேர்ந்தது. முத்துக்க ளிழைக்கப் பெற்றுப் பிரகாசியாநின்ற சக்ர அடையாளமுள்ளதும் கருடனைத் துவஜமாகக் கொண்டதும் அழகுள்ளதுமான பாலசூரியன் போன்ற இந்தக் கும்பம் குசன் கிருகத்தைச் சேர்ந்தது. அநேக ரத்தினங்களால் ஜ்வலிக்கும் இந்தக் கிருகம் லவனுடையது. யோகிகளின் மனதையும் மோகப்படுத்தும் அநேக சித்திரங்களுடன் கூடியதும் இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதும் மிகுந்த காந்தியை யுடையதும் இரத்தினமயமான கிருகங்கள் உள்ளதும் சிறந்ததுமான அயோத்தியைப் பார். விலை மதிக்கத்தகாத இரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்ற

தும் ஆகாயமார்க்கத்தை அளாவியிருப்பதும் சொர்ணகும்பங்களி ருந்து பிரகாசிப்பதும் சரயூநதியின் பாங்கர் விளங்குவதுமாகிய இந்தக் கிருகம் சித்திரகேதுவைச் சேர்ந்தது. திவ்வியமான பவ ளங்களால் அமைந்த கதவுகளுள்ள இந்தக் கிருகம் அங்கத னுடையது. கருடனுடைய வாஸ்து லக்ஷணம் உள்ள விதியுடன் சோபிப்பதும் கண்களுக்கு ஆனந்தத்தை விளைக்கக்கூடியதுமான இந்தக் கிருகம் புஷ்கரனுடையது. சொர்ணாலங்காரம் அமையப் பெற்ற திவ்விய பூமியை யுடையதும் பிரகாசிக்கும் பதாகை களுடன் கூடியதும் தேவர்களாலும் நமஸ்கரிக்கத் தக்கதும் சிரேஷ்டமான தும் மனோக்ஞமானதும் உயர்ந்ததுமான இந்தக் கிருகம் வீரனான தக்ஷனுடையது.

நவரத்தினங்களால் அமைக்கப்பட்ட இந்தச்சிம்மம் மூன்று பாதங்களைக் காட்டுவதால் "நான் மூன்று உலகங்களையும் ஜயித் தேன்; நான்காவது உலகத்தைக் காணேன்" என்பதை விளக்கு வதுபோலக் காணப்படுகின்றது. மேலும் இதோ காணும் இந்த இரத்தின சிம்மம் பாபக்கூட்டமாகிற யானைகளின் மத்தகத்தைப் பிளக்கப் பாதத்தைத் தூக்கிக்கொண் டிருக்கிறதோ என்றாகிக் கும்படி விளங்குகிறது பார். இரத்தினச் சுவர்களுடன் கூடின தும் மிகவும் உயர்ந்ததுமான இந்தக் கிருகம் சுபாகுவுடையது.

இரத்தினம் பவளம் ஸ்படிகம் இந்திரநீலம் காச்மீரம் இவை களால் எற்பட்ட பிரகாசமுள்ள இந்தக் கிருகம் யூபகேதுவைச் சேர்ந்தது.

கல் ஹாரம் கருநெய்தல் செந்தாமரை நூறு இதழ்களுள்ள புஷ்பங்கள் இவைகளால் நிறைந்ததும் பாபத்தைப் போக்குவது மான இராமதீர்த்தத்தைப் பார். இந்தப் பிரதேசம் இராமதீர்த் தத்தால் கிரீஷ்மகாலத்தின் சந்தாபத்தை நிவிருத்தி செய்து இங்கு அதிகமாக அமைத்திருக்கும் குருவிந்தாமணிகளை மாது ளைவிரை யென்று கிளிகள் மோகிக்கும்படி விளங்குகின்றது. வேடனாகிய கர்க்கச! இரம்மியமானதும் பதாகைகளால் விளங் குவதும் அமராவதியைப்போ லுள்ளதும் சுபத்தைக் கொடுக்கக் கூடியதும் முத்திபுரியுமாகிய இந்த அயோத்தியைப் பார்.

ஸ்ரீ ராமரைப்பார்க்க வந்திருக்கும் ஜனங்கள் சூரியனைப்போல் விளங்குகிறார்கள். இந்த ஆச்சரியத்தைப் பார்.

நரசிம்மர் கூறுகிறார்.

இவ்விதம் பேசிக்கொண்டு கர்க்கசன் என்ற வேடனுடனும் தன்பத்தினியுடனும்கார்ப்படிகனுடனும் சம்புவானவன் அயோத்திக்கு வந்தான். பிறகு இராமதீர்த்தம் சென்று க்ஷௌரம் முதலிய விதிகளைமுடித்துக்கொண்டு ஒருநாள் உபவாசமிருந்து இராம தீர்த்தத்தில் சிராத்தம் செய்தான். சைத்திரமாஸம் அமாவாசை வந்தவுடன் தனதுபிதா மோக்ஷமடையத் தன்பொருட்டு விதிப்படி அன்னதானம் செய்தான். சைத்திரமாஸம் அமாவாசையில் வழிப்போக்கன் வாக்கியப்படி அன்னதானம் செய்ததால் சம்புவின் தந்தை பிசாசு ஜன்மத்திலிருந்து விடுபட்டுத் தேவலோகம் சென்றான்.

பிறகு சம்பு அயோத்தியில் சைத்திர மாஸத்தில் ஸ்நானம் செய்து உத்தியா பனத்தையும் கிரமப்படி நடத்தி விரதத்தை முடித்தான். கர்க்கசன் என்ற வேடனும் சைத்திர ஸ்நானம் செய்து மலைபோன்ற பாபக்குவியலைத் தொலைத்து அயோத்தியின் மத்தியில் நல்ல நடத்தையுடன் வெகுகாலம் வாசஞ் செய்தான்; பிறகு சிலகாலஞ் சென்ற பின்பு ஸ்ரீராமரைத் தியானஞ் செய்யும்போதே மரணமடைந்தான்; அயோத்தியில் மரணமடைந்த மகிமையால் அவன் வைகுண்டம் சென்றான்.

சம்புவென்பவனும் சைத்திரஸ்நானம்செய்து ஸ்ரீராம சந்திரரையும் அயோத்தியையும் நமஸ்காரம் செய்து பத்தினியுடனும் கார்ப்படிகனுடனும் காஞ்சீபட்டணம் செல்லப் புறப்பட்டு யானையும் சிம்மமுமிருக்கும் இடத்தை நோக்கி வந்து சைத்திர மாசத்தில் இரண்டு நாள் ஸ்நானம் செய்த புண்ணியத்தை இரண்டுக்கும் கொடுத்து அவைகளின் கைகளில் ஜலம் விட்டார். உடனே அவைகள் மோக்ஷஸ்தான மடைய ஆகாயத்திலிருந்து விமானம் வர அந்த விமானத்தின் மீதேறி இரண்டும் விஷ்ணுலோகம் சென்றன.

பிறகு சம்பு தனது பத்தினியுடன் தான் முந்திச்சபதம்செய்து கொடுத்து, அரண்ணியத்தில் இருக்கும்படி செய்துவந்த அரக்க னிடம் வந்து பத்தினியை நோக்கிச் சொல்லுகிறான்—

காசி யென்னும் பெயர் கொண்டவளே! நீ சரயூநதியில் சீதாள கௌரீ ஸ்நானம் செய்ததில் ஒருநாள் ஸ்நான பலனை என் சொற்படி இவ்வரக்கன் கையில் கொடுத்து இவனைக்கரையேற்று என்றான். இவ்விதம் கூறியதும் தாமரைப்பூப்போன்ற நேத்திர முடைய காசி என்ற அந்தண ஸ்த்ரீ தன்பதி சொன்னபடி தன் புண்ணியத்தை அரக்கனுக்குக் கொடுத்தாள். பிறகு அவ்வரக்கன் அழுக்கடைந்த அந்தச் சரீரமொழிந்து திவ்விய சரீரம் பெற்று விமானமேறிக் காசியுடன் கூடின சம்புவை நமஸ்கரித்துத் திவ்விய வஸ்திரங்களுடன் விஷ்ணுலோகம் சென்றான்.

சம்புவும் காசியுடன் சைத்திர மாசத்தின் மகிமையைக் கொண்டாடி அங்குள்ள ஜனங்களுக்கு யாவற்றையும் தெரிவித்துக்கொண்டு காஞ்சீநகரத்துக்குச் சென்றான்.

ஏ பிசாசமே! நீங்கள் கேட்டபடி நான் கதையை விஸ்தார மாகத் தெரியப்படுத்தினேன்.

ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

இவ்விதம் நரசிம்மர் என்ற அந்தணன் கதையைச் சொல்லி இருவர் கையிலும் ஜலம் விட்டுச் சைத்திர மாஸத்தில் இரண்டு நாள் ஸ்நானம் செய்த பலனைத் தானம் செய்து பிறகு பத்தினி யை நோக்கி "அழகுள்ளவளே! சந்திரனுக்குச் சமமான முக முள்ளவளே! பிரியமுள்ளவளே! நீ ஸீதாதேவியால் செய்யப் பட்ட சீதாள கௌரீ தீர்த்த ஸ்நான பலனில் ஒருநாள் ஸ்நான பலனை இப்பெண்பிசாசு கடைத்தேறுவதன் பொருட்டுக் கொடு. மனதில் வேறு ஒன்றும் ஆலோசனை செய்யாதே" என்று கூறினார். இவ்விதம் சொன்ன பதியின் வசனத்தைக்கேட்டு பங்கஜநேத்திரமுடையவளாகிய இலட்சுமி என்ற என் தாயார் தன் புண்ணியத்தை அப்பெண் பிசாசுக்குக் கொடுத்தாள்.

உடனேமூன்று பிசாசுகளுக்கும் பிசாசு ஜன்மமொழிந்தது. முன் அவைகட் கேற்பட்டிருந்த உருவம் ஏற்பட்டது. அவர்கள், பத்தினியுடன் கூடின நரசிம்மரைப் பன்முறை வணங்கி, ஸ்தோத்திரஞ் செய்து அவரிடம் செலவு பெற்றுக்கொண்டு தங்கள் குருவின் ஆசிரமம் சென்றார்கள்.

குரு இவர்களைக் கண்டு மிகுந்த சந்தோஷமடைந்து சீடர்களுக்குள் மூத்தவனுக்கு அந்தப் பெண்ணையும் மற்றொரு சீடனுக்கு மற்றொரு பெண்ணையும் தானம் செய்தார். பிறகு அவ்விருவரும் பரமசந்தோஷ மடைந்து பத்தினிகளுடன் தங்கள் தங்கள் தந்தையின் இருப்பிடம் சென்றார்கள்.

அவர்களின் தாய்தந்தையரும் புத்திரர்கள் தத்தம் மனைவிமாருடன் வந்ததைப் பார்த்துச் சந்தோஷ மடைந்தார்கள்.

நரசிம்மரும் தம் பத்தினியுடன் அப்ஜக மென்னும் க்ஷேத்திரத்திற்கு வந்தார். அவர்கள் சைத்திர ஸ்நானஞ் செய்த மகிமையால் இராமதாஸனென்ற பெயருள்ள நான் பிறந்தேன்.

என் தாய் தந்தையர் வெகு காலஞ் சென்ற பின்பு விஷ்ணுலோக மடைந்தார். ஏ சீடனே! இவ்விதம் சைத்திரமாஸ ஸ்நானத்தின் மகிமையை முனிவர்கள் தேவர்கள் சித்தர்கள் கந்தர்வர்கள் எலலோரும் விளக்கியிருக்கிறார்கள். ஆகையால் மானிடர்கள் அவசியம் சைத்திர ஸ்நானம் செய்து ஸ்ரீராமசந்திரரைப் பூசிக்க வேண்டும். நீ கேட்ட யாவும் நான் உனக்கு விஸ்தாரமாகக் கூறினேன்.

உனக்கு இன்னும் ஏதாவது கேட்க விருப்பமிருந்தால் சொல் நான் கூறுகிறேன்.

சைத்திர ஸ்நானத்தின் மகிமையை விளக்கும்

## 11-வது சருக்கம்

முற்றிற்று.

## 12-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! ஸ்ரீராமச்சந்திருடைய மற்றொரு சரித்திரத்தைச் சொல்ல வேண்டும். தங்களிடம் ஓயாமல் கதை கேட்டுக்கொண்டிருந்தாலும் எனக்குத் திருப்தி உண்டாகவில்லை. இன்னமும் கேட்க ஆசைமேலிடுகிறது.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்:

வ ஸிடனே! நீ நன்றாக வினவினாய்; சாவதான மனதுடன் கேள்.

ஒரு சமயம் ஸ்ரீராமசந்திரன் குதிரைமீது ஏறிக்கொண்டு புத்திரர்கள் பந்துக்கள் இவர்களுடன் வனம் சென்றார்.

அங்கு இரகுநந்தனர் சிறந்த மிருக மொன்றைக் கண்டு அதைக்கொல்ல பாணத்தை இழுத்தார். அது கண்டு ஓடிய அம் மிருகத்தைத் தொடர்ந்து வேகமாகச் சென்றார்.

ஸ்ரீராமர் அதனைத் தொடர்ந்து ஒவ்வொரு வனமாகச் சென்று பிறகு தனியே குதிரையின் மீதேறி அடர்ந்த காட்டில் பிரவேசித்தார். இலட்சுமணர் முதலியவர்கள் இராமருக்குப் பிறகு வெகு தூரத்திற்கப்பால் சென்றார்கள். இராமசந்திரர் தமது பாணத்தால் மிருகத்தை அடித்து அதை எடுத்துக் கொண்டு ஜல மில்லாத பிரதேசத்தில் பசிதாகத்துடன் ஒரு மரத்தடியில் ஒரு க்ஷணநேரம் நின்றார். அச்சமயத்தில் ஒரு வேடஸ்திரீ சந்தோஷத்துடன் இராமரைப்பார்த்து அவரை அரசனென்றறிந்து வணங்கி அவருக்கு முன்சென்று வணக்கமாக நின்றாள். இராமபிரான் அந்த ஸ்திரீயைப் பார்த்து "நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேள். இலக்ஷ்மணர் முதலியவர்கள் வெகுதூரத்திற் கப்பால் வருகிறார்கள்; நான் பசிதாகத்தால் சிரமமடைந்தவனாக இருக்கிறேன் எனக்குச் சுகமுண்டாகும்படி கொஞ்சம் முயற்சி எடுத்துக்கொள் என்றார். வேடஸ்திரீ இந்த வசனத்தைக்கேட்டு "ஐயா சமீபத்தில் ஒரு தடாகத்தின் கரையில் துர்க்காதேவி சைன்னியத்துடனிருக்கிறாள். இன்று செவ்வாய்க்கிழமை யாதலால் அங்கு பூஜை

செய்ய அநேகம் ஸ்திரீகள் வந்திருக்கிறார்கள். இப்போது என்
னுடன் அங்கு வந்தால், ஒரு க்ஷணத்தில் விசித்திரமான அன்ன
மளித்துத் திருப்தி செய்விக்கிறேன்" என்றாள். இதைக்கேட்ட
இராகவன் "வேடஸ்திரீயே! நான் இங்கேயே இருக்கிறேன்.
குசன் லவன் இலட்சுமணர் முதலியவர்களுடைய வரவை எதிர்
பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீ மட்டிலும் அங்குச் சென்று
துர்க்கையிடத்திலும் ஸ்திரீகளிடத்திலும் தெரிவித்து ஏற்பாடு
செய்" என்று கேட்டுக் கொண்டார். இவ்வசனங் கேட்டதும்
வேடஸ்திரீ விரைவாக அந்த இடம் சென்று அங்கிருந்த ஸ்திரீ
களைப் பார்த்து "ஏ ஸ்திரீகளே! தாமரைப் பூப்போன்ற கண்
ணுள்ள இராமர் வேட்டையாடவந்து பசியுடன் இதோ சமீபத்தி
லுள்ள மரத்தடியில் இருக்கிறார். உங்களிடம் தமது வரவைத்
தெரியப்படுத்துவதற்கு என்னை அனுப்பினார். நான் அவரிடம்
செல்கிறேன்" என்று தெரிவித்து விட்டுத் திரும்பிவிட்டாள்.
வேடஸ்திரீயின் சொல்லைக் கேட்ட அந்த ஸ்திரீகள் சந்தோஷ
மடைந்து பின்வருமாறு யோசித்தார்கள். ஸ்ரீராமச் சந்திருக்
குப் போஜனமளித்துத் திருப்தி செய்விக்கப் போகிறபடியால்
இன்றையதினம் வெகு சிலாக்கியமான நாள். முதலாவது துர்க்
கையைப் பூஜித்து நைவேத்தியம் செய்து பிறகு ஸ்ரீராமருக்குக்
கொடுத்துப் பின்பு நாம் போஜனஞ் செய்வோம்" என்று இவ்வி
தம் ஆலோசனை செய்துகொண்டிருந்தார்கள். சொர்ண மயமான
ஆபரணங்களை யணிந்தவர்களும் மஞ்சள் பட்டுவஸ்திரம் தரித்த
வர்களும் அழகான முகமுள்ளவர்களும் மான்விழிபோன்ற நேத
திர முள்ளவர்களும் அழகுள்ளவர்களுமான பிராம்மண க்ஷத்
திரிய வைசிய சூத்திர ஸ்திரீகள் நைவேத்திய பாத்திரத்தை
எடுத்துக்கொண்டு துர்க்கையின் சமீபம் சென்றார்கள். இச்சமயம்
பார்த்து பருவதராஜ குமாரியாகிய துர்க்கை தன்னாலயத்திற்கு
நான்கு பக்கத்திலுமுள்ள கதவுகளை மூடிக்கொண்டாள். அந்த
ஸ்திரீகள் ஆலயத்திற்கு வந்து கதவுமூடியிருப்பதைப் பார்த்து,
மற்ற மூன்று பக்கத்துக்கும் சென்று பார்த்தார்கள். எப்பக்கத்
துக் கதவும் தாளிட்டிருக்கக் கண்டு தயங்கினார்கள்; ஆச்சரிய
மடைந்து அங்கேயே நின்றார்கள். அப்போது தேவாலயத்திற்
குள்ளிருந்து துர்க்காதேவி பின்வருமாறு கூறுகிறாள்.—

நான்தான் ஸீதை; பரமேசுவரர்தாம் இராமர். எனக்கும் ஸீதைக்கும் இராமருக்கும் பரமேசுவரருக்கும் பேதத்தை எவர்கள் எண்ணுகிறார்களோ, அவர்கள் கோடிகற்பம் வரையில் ரௌரவநாகத்தில் வீழ்ந்து வருந்துவார்கள். ஏ ஸ்திரீகளே! நீங்கள் உலகங்களுக்குப் பிரபுவும் என்னுடைய நாதருமாகிய இராமரிடம் சென்று சிரேஷ்டமான அன்னம் கொடுத்து சந்தோஷப் படுத்துங்கள்; பிறகு அந்த சேஷத்தை நான் புசித்துச் சந்தோஷிக்கிறேன்; பசியுடனிருக்கும் இரகு புங்கவரிடம் சீக்கிரமாகச் செல்லுங்கள்—என்றுரைத்தாள். இவ்விதம் துர்க்கை கூறியதைக் கேட்ட அந்தஸ்திரீகள் ஆச்சரியமடைந்து வேடஸ்திரீயின் அடிச்சுவட்டைப்பின்பற்றி விரைந்துசென்று அவ்வேடஸ்திரீயைக்கண்டார்கள். வேடஸ்திரீ அவர்களுக்கு இராமரைக் காண்பித்தாள். அந்தஸ்திரீகள் தாமரைப் பூப்போன்ற தங்கள் நேத்திரங்களால் இரகுகுல திலகனைக்கண்டு வணங்கித் தாங்கள் கொண்டுவந்த திவ்வியான்னங்களை அவர் முன்னிலே வைத்துச் சொர்ண பாத்திரங்களில் தீர்த்தத்தையும் வைத்து அங்கேயே நின்றுகொண்டு பின் வருமாறு பிரார்த்தனை செய்தார்கள்—ஏ இராமா! நாங்களெல்லோரும் உம்மால் கடைத்தேறினோம். தாங்கள் இந்த வனத்தில் மிகுந்த ஆதரவுடன் வேடஸ்திரீயை எங்களிடம் அனுப்பியதற்கு மிகவும் சந்தோஷமடைந்தோம். துர்க்காதேவியும் தங்களுக்குத் திருப்தி செய்விக்கும் பொருட்டு எங்களை அனுப்பினாள். இவைகளை அங்கீகாரம் செய்துகொண்டு திருப்தியடைய வேண்டும்" என்றார்கள். இவ்விதம் அவர்கள் கூறியதைக் கேட்ட இராமர் புன்னகையுடன் கூறுகிறார்.—

"ஏ ஸ்திரீகளே! துர்க்காதேவி தெரிவித்தது என்ன கூறுங்கள்" என்றார்.

ஸ்திரீகள் கூறுகிறார்கள்—இராம! துர்க்கையின் வசனத்தைக் கேளுங்கள்—நான்தான் சீதை, ஸ்ரீராமர்தான் பரமசிவன். இவ்விஷயத்தில் பேதமில்லை. பேதத்தை நினைப்பவர்கள் ரௌரவநாகத்தில் விழுகிறார்கள். ஆகையால் இராமருக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணி வாருங்கள், பின்பு அவர் புசித்தமீதியை நான் புசிக்

கிறேன்; நீங்கள் பசியுடனிருக்கும் இரகுநந்தனரிடம் செல்லுங்கள்"—என்று தெரிவித்தாள்.

அந்த வசனம் கேட்டு நாங்கள் தங்களிடம் வந்தோம். நாங்கள் முன் செய்த புண்ணியத்தால் தங்களுடைய தரிசனங்கிடைக்கப்பெற்றோம். இரகு சிரேஷ்டரே! முன்தாங்கள் போஜனம் செய்யவேண்டும்—என்று வேண்டிக்கொண்டார்கள். பிறகு இராமர் "ஸ்திரீகளே! தேவியின் வசனம்உண்மையானால், இந்த அடர்ந்த வனத்தில் அந்த தேவி ஸீதை வடிவத்துடன்என்னிடம் வரட்டும். உங்களில் ஒருவர் துர்க்கையிடஞ்சென்று நான் கூறியதைத் தெரிவியுங்கள்" என்றார்.

உடனே அப்பெண் கூட்டத்திலிருந்து ஒரு ஸ்திரீ துர்க்க தேவியிடஞ்சென்று இராமச்சந்திரர் கூறியதைத் தெரியப்படுத்தினாள். துர்க்காதேவி அம்மொழியைக்கேட்டு, அவ்விதமே செய்கிறேனென்று வாக்களித்துக் கொஞ்சம் கதவைத்திறந்துகொண்டு ஸீதை வடிவத்துடன் வந்தாள். பிறகு கதவை நன்றாய் மூடிவிட்டு, ஜலபாத்திரத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஸ்ரீராமச்சந்திரருடைய சமீபம் வந்து நமஸ்காரம் செய்து அவர்பக்கத்தில் யாவரும் ஆச்சரியப்படும்படி நின்றாள். பிறகு இராமர் அந்த ஸ்திரீகள் கொண்டுவந்த அன்னத்தைப்புசிக்க நினைத்து ஸ்நானம் செய்யும் பொருட்டு யோசித்தார்.

அப்பால் உலகங்களையாளும் பிரபு தமதுவில்லில்பாணத்தைச் சேர்த்து பூமியைப்பிளந்துபாதாளத்திலிருந்து ஜலம்வரவழைத்து அதில் ஸ்நானம்செய்து மாத்தியான்ஹிகத்தை முடித்துக்கொண்டு போஜனம் செய்வதற்கு யத்தனம் செய்தார். அச்சமயத்தில் குசன் முதலானவர்கள் சைன்னியத்துடன் ஸ்ரீ ராமருடைய குதிரையின் காலடியைத்தொடர்ந்து அங்கு வந்த ஜனகன் பெண்ணாகிய ஸீதையைப்பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தார்கள்.

பிறகு இராமர் குசன் முதலியவர்கள் சைன்னியங்கள் பந்துஜனங்கள் எல்லோருடனும் சேர்ந்து போஜனம் செய்து தாகசாந்தி செய்துகொண்டு களையாறினர். பிறகு அந்த ஸ்திரீகளைப்

பார்த்து, ஆதாவுடன் "ஸ்திரீகளே! உங்களுக்கு வேண்டிய வரனைக்கேளுங்கள்" என்று கூறினர். உடனே ஸ்திரீகள் "இராம! எங்களுக்கு நல்ல கீர்த்தி உண்டாகும்படியான வரம் கொடுக்க வேண்டும்" என்ருர்கள்.

இராமர் அதைக்கேட்டுச் சந்தோஷமடைந்து "ஸ்திரீகளே! பூமியில் புருஷர்களைக்காட்டிலும் உங்களுக்கு என்னிடம் நல்ல பக்தி ஏற்படட்டும்; உங்களுக்குத் தேவர்களிடத்திலும் தருமத்தி லும் பக்தி உண்டாகட்டும்; கணவனுடன் கூடிய நீங்கள் எப் போதும் பரிசுத்தமுள்ளவர்களாக வேண்டும். என் பாணத் தால் ஏற்பட்ட இந்தத் தீர்த்தம் இராம தீர்த்தமெனப் பெயர் பெறும்" என்று கூறினர்.

இதைக்கேட்ட ஸ்திரீகள் "இராம! மறுஜன்மத்திலும் உங்க ளுடைய தரிசனம் எங்களுக்குக் கிடைக்கவேண்டும்" என்ருர் கள். ஸ்திரீகள் இவ்விதம் சொல்லக்கேட்டு இராமர், "துவாபர யுகத்தில் நான் கிருஷ்ணவதாரம் செய்யப்போகிறேன். அப்பொ ழுது உங்களுக்கு என் தரிசனம் கிடைக்கும்; நீங்கள் அந்தயுகத் தில் பிராம்மணருக்குப் பத்தினிகளாக இருக்கப்போகிறீர்கள். வனத்தில் யாகம் செய்யும் இடத்தில் நான் அன்னம் யாசிக்கும் சமயத்தில் உங்களைப்பார்ப்பேன். இந்த வேடஸ்திரீயும் பிராம் மணனுக்குப்பத்தினியாக இருக்கப்போகிருள். அப்பொழுது என்னைத் தரிசனம் செய்ய முயற்சியுடன் வருவாள். அதைபறிந்த இவளுடைய கணவன் இவளை வீட்டில் தூணில் கட்டி மிகுந்த சிக்ஷைசெய்வான். அப்போது இந்த வேடஸ்திரீ என்னிடம் மனதைச்செலுத்தி வேறு தேகத்துடனும் என்னிடம் வரப் போகிருள். அது மிகவும் வேடிக்கையாக விருக்கும்.

அப்போது நீங்கள் அந்த வேடிக்கையைப்பார்த்து என்னி டம் மனதைச் செலுத்தி எப்போதும் என்னைத் தியானித்துக் கடைசியில் என்னுடைய உலகம் வந்து சிறந்த சுகத்தை அடை வீர்கள். இராம! என்ற என்னுடைய தாரகநாமத்தை நீங்கள் எப்போதும் ஜபம் செய்யவேண்டும். அதனுல் உங்களுக்கு உத்தமகதி கிடைக்கும்" என்று அந்த ஸ்திரீகளுக்கு வரம்

கொடுத்து முன்னால் நிற்கும் ஸீதையைப்பார்த்து "நீசுகமாக உன்னிருப்பிடம் செல்லலாம்" என்றார். உடனே தேவியானவள் ஸ்திரீகளுடன் மறுபடியும் தேவாலயம் வந்து சேர்ந்தாள். அங்கு வந்தவுடன் ஸீதையின் வடிவத்தைவிட்டு துர்க்கைவடிவத்தை அடைந்தாள். அதைக்கண்ட ஸ்திரீகள் மிகவும் ஆச்சரிய மடைந்து கிரமப்படி துர்க்கையைப் பூஜித்துத் தங்களிருப்பிடம் சென்றார்கள்.

இராமரும் தமது பந்துக்களுடனும் பிள்ளைகளுடனும் தமது நகரம் வந்தார். இங்கு கிருகத்தில் குசன் தான் வனத்தில் பார்த்தவைகளைப் பற்றி ஸீதையைக் கேட்க ஸீதை குசனுக்கு விவரம் தெரிவித்தாள். பிறகு இலக்ஷ்மணர் முதலிய எல்லோரும் ஸ்ரீராமரைச் சிவனாகவும் ஸீதையைத் துர்க்கையாகவும் நிச்சயித்துச் சந்தோஷ மடைந்தார்கள்.

ஏசிடனே! பரமாத்மாவாகிய இராமர் இந்தவேடிக்கையைச் செய்து மானிடர்களுக்கு உண்டான துவைதபுத்தியைக் கண்டனம் செய்தார்.

இவ்விதம் இரகுவீரர் ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்திருப்பதால் ஸ்திரீகளை ரமைகளென்று கூறுகிறார்கள். ஸ்திரீகளுக்கு ராம என்ற இரண்டு அக்ஷரமுள்ள மந்திரம் ஜபம் செய்ய ஏற்பட்டது, வேறு மந்திரம் ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் ஏற்படவில்லை. மந்திரங்களெல்லாவற்றிலும் ராம மந்திரம் சிறந்தது. நடுக்கத்திலும் பயத்திலும் பாபத்திலும் உபத்திரவத்திலும் மானிடர்கள் ராம என்று கூறுகிறார்கள். கோரமான பாபத்தைச் செய்த ஒருவன் தாபத்துடன் ஒரு தடவை ராம என்று கூறுவானாயின் அவன் அப்பாபத்திலிருந்து விடுபட்டுப்பரிசுத்தனாகிறான். இந்த ராம மந்திரத்தை நடக்கும் போதும் போஜனம் செய்யும்போதும் சயனத்திலும் கிரீடை செய்யும் போதும் ஜபம் செய்யவேண்டும். நான்கு வர்ணத்தார்களும் ஜபம் செய்யவேண்டும். காலசொரூபமாகிய இராமருடைய மந்தி

ரத்தை ஜபம் செய்யக் காலம் இதுவென்பதில்லை. ஆகையால் மானிடர்கள் எப்போதும் உத்தமமான இந்த மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

எவன் முகத்தில் இராம மந்திரமிருக்கிறதோ எவன் தேகம் இராமமுத்திரையின் அடையாளமுடையதோ எவன் இராமமுத்திரையுள்ள வஸ்திரம் தரித்தவனோ அவனை யமன் பார்க்கமாட்டான். இராமமுத்திரையுள்ள வஸ்திரம் முத்திரையுள்ள வஸ்திரமென்று சொல்லப்படும். வஸ்திரங்களெல்லாவற்றிலும் அந்த வஸ்திரம் சிறந்தது; பரிசுத்தமானது; பாபங்களைப் போக்கக் கூடியது.

மானிடர்களுக்குள் சிறந்தவன் தன் சரீரத்தில் முத்திரையுள்ள வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டால் தாமரை இலைத் தண்ணீர் போல் அவன் செய்த பாபம் அவனை அணுகாது. முத்திரையுள்ள வஸ்திரமுடுப்பவனைப்பார்த்த யமதூதர்கள் சிங்கத்தைக் கண்ட மிருகங்கள் போல் தூரத்தில் ஓடிவிடுவார்கள். முன் ஒரு சமயம் முனிவர்கள் ஆலோசனை செய்துகொண்டு இரகு சிரேஷ்டராகிய இராமரிடம் கூறினார்கள். அதாவது—

ராமா! ராமா! மஹாபலம் பொருந்தியவரே! இனிக் கலியுகத்தில் பூமண்டலத்தில் பிராம்மணர்கள் அற்பபுத்தியுடையயவர்களாகவும் வியாகுல மனதுள்ளவர்களாகவும் ஏற்படுவார்கள். தங்கள் வயிற்றை நிரப்புவதற்காக வீடுதோறும் சென்று திரிவார்கள். அப்போது தங்களை ஸ்மரணம் செய்ய அவர்களுக்கு அவகாசம் எப்படி ஏற்படப்போகிறது; ஆகையால் அவர்களுக்கு நன்மை ஏற்படுவதற்காக இப்பொழுது நாங்கள் யாசிக்கிறோம். அதற்குத் தாங்கள் ஒருபாயம் சொல்லவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்கள்.

இராமர் அதைக்கேட்டுச் சந்தோஷங்கொண்டு சொல்லுகிறார்—

முனிசிரேஷ்டர்களே! நன்றாக வினவினீர்கள்; ஜனங்கள் என் முத்திரையுள்ள வஸ்திரத்தை உடுக்கவேண்டும். கலியுகத்தில்

என் முத்திரையுள்ள வஸ்திரம் உடுத்த மானிடனைப் பாபம் அணுகாது.

சங்கம் சக்ரம் கதை பத்மம் நாமம் முத்திரை இவ்வடையாள முடைய வஸ்திரத்தை உடுக்கவேண்டும். அல்லது முத்திரை மட்டுமுள்ள வஸ்திரத்தையாவது உடுக்கவேண்டும். சங்கம் முதலிய ஐந்து அடையாளங்களுடன் கூடின வஸ்திரம் எனக்கு மிகவும் பிரியமானது. என் முத்திரையுள்ள வஸ்திரமானாலும் அது எனக்குப் பிரீதியுள்ளதேயாம். இவ்வஸ்திரத்தை ஸ்நானம் செய்தானபின்பு ஜெபம் செய்யும் காலத்தில் எப்போதும் விசேஷமாக உடுக்க வேண்டும். மல மூத்திர விசர்சனம் செய்யுங்காலத்திலும் சயனம் செய்யும்போதும் கிரீடிக்கும்போதும் அசுத்தமான இடத்திலும் ஏதேனும் தீட்டு வந்த போதும் வீதியிலும் இராஜ சபையிலும் வழிநடையிலும் துஷ்டர்களின் சேர்க்கையிலும் முத்திரை போட்ட வஸ்திரத்தை உடுக்கக்கூடாது. அவ்விதமே போஜன காலத்திலும் விளையாட்டுச் சமயத்திலும் உடுக்கக் கூடாது. ஸ்நானம் செய்யும் சமயத்திலும் விரதத்தை அநுஷ்டிக்கும் காலத்திலும் புண்ணிய தீர்த்தம் சென்றவிடத்திலும் பூஜை செய்வதிலும் பிதிர்க்காரியத்திலும் ஹோமம் தானம் ஜபம் கிருச்சிரம் சாந்திராயணம் விரதம் நித்திய கருமங்கள் காம்மிய கருமங்கள் நைமித்திய கருமங்கள் தவங்கள் இவைகள் செய்யும்போதும் என் முத்திரையுள்ள இந்த வஸ்திரத்தை உடுக்க வேண்டும். என் முத்திரையுள்ள வஸ்திர முடுப்பவனுக்கு நான் முத்தி கொடுக்கிறேன். முனிவர்களே! இது சத்தியம்—என்ற இராமபிரானது வாக்கியத்தைக் கேட்டு அந்த முனிவர்கள் பரம சந்தோஷமடைந்து இராமரிடம் விடைபெற்றுக் கொண்டு தங்கள் தங்களாசிரமம் சென்றார்கள்.

ஆகையால் பூமியில் மானிடர்கள் இராமமுத்திரை போட்ட வஸ்திரம் உடுக்க வேண்டும். ராம என்ற இரண்டக்ஷரங்களுள்ள மந்திரத்தை ஜபம் செய்யவேண்டும். கோபி சந்தனத்துடன் இராம முத்திரையை எப்போதும் தரிக்கவேண்டும். எப்போதும் இராமருக்குப் பூஜையைச் செய்யவேண்டும். இராம தீர்த்தத்தில்

ஸ்நானமும் செய்யவேண்டும். எப்போதும் இந்த ராமாயணத்தைச் சிரவணம் செய்விக்க வேண்டும். ஜனன மரணங்களை நிவர்த்தி செய்யும் இராமனை எப்போதும் ஸ்தோத்திரம் செய்யவும் இராம கீர்த்தனம் செய்யவும் நமஸ்காரம் செய்யவும் வேண்டும்.

முதலில் அநுமானுடைய கவசத்தைப் படித்துப் பிறகு இராமருடைய கவசத்தைப் படிக்க வேண்டும்.

அநுமானுடைய கவசம் படிக்காமல் ஸ்ரீராம கவசம் படித்தால் அது அரண்ணியத்தில் ரோதனம் செய்தது போலாம். ஸ்தோத்திரங்களுள் சிறந்தது இதுவேயாகும்.

இது பாபங்களெல்லாவற்றையும் நிவிருத்தி செய்யக் கூடியது. ஆகையால் இந்த இராம கவசத்தைப் பூமியில் மானிடர்களனைவரும் படிக்க வேண்டும்.

### விஷ்ணுதாஸன் வினவுகிருன்.

ஏ குருவே! அநுமானுடைய கவசத்தையும் ஸ்ரீராமருடைய கவசத்தையும் நான் கேட்க விரும்புகிறேன், என்னிடம் கிருபை செய்து சொல்லவேண்டும்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிருர்.

மாணவனே! நீ கேட்டது நல்லது. நான் அநுமானுடைய கவசத்தையும் ஸ்ரீராம கவசத்தையும் கூறுகிறேன். நீ சாவதானமான மனதுடன் கேள்.

ஸ்ரீராமபிரான் அத்துவைத விளக்கஞ்செய்த

பன்னிரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

# 13 - வது சருக்கம்

## ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

ஒரு சமயம் பருவதராஜன் புத்திரியாகிய பார்வதி உலகங்களுக்கு க்ஷேமத்தைச் செய்பவரும் கர்ப்பூரம்போல் தவளவர்ணமுள்ளவரும் மங்கள சொரூபரும் தன் கணவனுமாகிய பரமேசுவரரைப் பார்த்துக் கேட்கிறாள்.

## பார்வதி வினவுகிறாள்.

பகவானே! தேவர்களுக்கும் தேவர்களாகிய பிரபுவே! உலகங்களுக்கு நாதரே! துக்கத்தை அடைந்த ஜனங்களுக்கு எதனால் இரக்ஷை ஏற்படும்? யுத்தத்திலும் கோரமான சங்கடத்திலும் பூதப்பிரேதங்களாலுண்டான பயத்திலும் துக்கமாகிற காட்டுத் தீயால் தாபமடைந்தவர்கட்கு எதனால் நன்மை ஏற்படுமென்று வினவினாள்.

## ஸ்ரீ மஹாதேவர் கூறுகிறார்.

ஏ சுந்தரீ! இராமச்சந்திரர் விபீஷணனுக்குப் புத்தியிற் சிறந்த வாயுகுமாரனாகிய அநுமானுடைய இரகசியமான கவசத்தை அன்புடன் உபதேசித்திருக்கிறார். அந்தக் கவசத்தை உலக நன்மையைக் கருதி நான் உனக்கு கூறுகிறேன்.

---

𑌉𑌦𑍍𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯 𑌸𑌂𑌕𑌾𑌶𑌮𑍁𑌦𑌾𑌰𑌭𑍁𑌜𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 ।
𑌕𑌨𑍍𑌦𑌰𑍍𑌪𑌕𑍋𑌟𑌿 𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌮𑍍 ॥ 1
𑌶𑍍𑌰𑍀 𑌰𑌾𑌮𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌭𑌕𑍍𑌤𑌕𑌲𑍍𑌪𑌮𑌹𑍀𑌰𑍁𑌹𑌮𑍍 ।
𑌅𑌭𑌯𑌂 𑌵𑌰𑌦𑌂 𑌦𑍋𑌰𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌕𑌲𑌯𑍇 𑌮𑌾𑌰𑍁𑌤𑌾𑌤𑍍𑌮𑌜𑌮𑍍 ॥ 2

---

உதய சூரியனுக்குச் சமமானவரும் உதாரமான புயபலமுள்ளவரும் கோடி மன்மதனுக்குச் சமமான லாவண்ணியமுள்ளவரும் வித்தைகளெல்லாவற்றிலும் சிறந்தவரும் ஸ்ரீராமருடைய இருதயத்திற்கு ஆனந்தமளிப்பவரும் பக்தர்களுக்குக் கற்பக விருக்ஷம்போல் வேண்டியதைக் கொடுப்பவரும் அபயவரத ஹஸ்தமுள்ளவருமாகிய மாருதாத்மஜனை ஆசிரயிக்கிறேன் (௧—௨)

𑌹𑌨𑍂𑌮𑌾𑌨𑌞𑍍𑌜𑌨𑌾𑌸𑍂𑌨𑍁𑌰𑍍𑌵𑌾𑌯𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌮𑌹𑌾𑌬𑌲𑌃 ।
𑌰𑌾𑌮𑍇𑌷𑍍𑌟𑌃 𑌫𑌾𑌲𑍍𑌗𑍁𑌨𑌸𑌖𑌃 𑌪𑌿𑌙𑍍𑌗𑌾𑌕𑍍𑌷𑍋𑌽𑌮𑌿𑌤𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌃 ॥
𑌉𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌮𑌣𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍀𑌤𑌾𑌶𑍋𑌕𑌵𑌿𑌨𑌾𑌶𑌨𑌃 ।
𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌪𑍍𑌰𑌾𑌣𑌦𑌾𑌤𑌾 𑌚 𑌦𑌶𑌗𑍍𑌰𑍀𑌵𑌸𑍍𑌯 𑌦𑌰𑍍𑌪𑌹𑌾 ॥ 4
𑌏𑌵𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 𑌨𑌾𑌮𑌾𑌨𑌿 𑌕𑌪𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌸𑍍𑌵𑌾𑌪𑌕𑌾𑌲𑍇 𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑍇 𑌚 𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌯𑌃 𑌪𑌠𑍇𑌤𑍍 ॥
𑌤𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌭𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌰𑌣𑍇 𑌚 𑌵𑌿𑌜𑌯𑍀 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌰𑌾𑌜𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌗𑌹𑍍𑌵𑌰𑍇 𑌚 𑌭𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌦𑌾𑌚𑌨 ॥ 6

𑌉𑌲𑍍𑌲𑌙𑍍𑌘𑍍𑌯 𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃 𑌸𑌲𑌿𑌲𑌂 𑌸𑌲𑍀𑌲𑌂
𑌯𑌃 𑌶𑍋𑌕𑌵𑌹𑍍𑌨𑌿𑌂 𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌯𑌾𑌃 ।
𑌆𑌦𑌾𑌯 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌦𑌦𑌾𑌹 𑌲𑌙𑍍𑌕𑌾𑌂
𑌨𑌮𑌾𑌮𑌿 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌰𑌾𑌞𑍍𑌜𑌨𑍇𑌯𑌮𑍍 ॥ 7

---

அநுமான், அஞ்சனைக்குக் குமாரன், வாயு புத்திரன், மஹாபலிஷ்டன், இராமேஷ்டன், அர்ஜுனசகன், பிங்களாக்ஷன், அமிதவிக்ரமன், சமுத்திரத்தைத் தாண்டினவன் ஸீதையின் சோகத்தை நாசஞ்செய்தவன், இலக்ஷ்மணருக்குப் பிராணன் கொடுத்தவன், இராவணன் கொழுப்பைப் பரிஹாரம் செய்தவன், இந்தப் பன்னிரண்டு நாமங்களையும் சயனம் செய்யும்போதும் தூங்கி எழுந்திருக்கும் போதும் யாத்திரை செய்யும்போதும் படிக்கவேண்டும். அவனுக்கு ஒருவித பயமுமில்லை. யுத்தத்திலும் விஜயத்தை அடைவான். இராஜசபையிலும் சங்கடகாலத்திலும் எப்போதும் பயமுண்டாகாது. (௩ - ௪ - ரு - ௬)

சமுத்திரத்தை விளையாட்டாகத் தாண்டி ஜனககுமாரியின் துக்கமாகிய நெருப்பை எடுத்து அதனாலேயே இலங்கா நகரத்தைப் பொசுக்கிய அஞ்சனாநந்தனரை நான் அஞ்சலிசெய்து நமஸ்காரம் செய்கின்றேன். (எ)

அத⁴: பாது மஹாவீரஶ்சோர்த்⁴வம் பாது ந்ருபாத்மஜ:|
மத்⁴யே பாது ராமதா³ஸ: ஸர்வத: ஸத்யபாலக: ||
ஸ்மிதானந: ஶிர: பாது பா⁴லம் பாதூர்மிலாத⁴வ:|
ப்⁴ருவோர்மத்⁴யம் த⁴நுர்தா⁴ரீ ஸுமித்ரானந்த³னோக்ஷிணீ
கபோலௌ ராமமந்த்ரீ ச ஸர்வதா³ பாது வனே மம |
கர்ணௌ மூலே ஸதா³ பாது கப³ந்த⁴பு⁴ஜக²ண்ட³ந: ||
நாஸாக்³ரம் மே ஸதா³ பாது ஸுமித்ரானந்த³வர்த⁴ந:|
ராமந்யஸ்தேக்ஷண: பாது ஸதா³ மே(அ)த்ர முகா²ம்பு³ஜம்
ஸீதாவாக்யகர: பாது மம வாணீம் ஸதா³த்ர ஹி |
ஸௌம்யரூப: பாது ஜிஹ்வாமனந்த: பாது மே த்³விஜான்
சுபு³கம் பாது ரக்ஷோக்⁴ந: கண்ட²ம் பாத்வஸுராந்தக:
ஸ்கந்தௌ⁴ பாது ஜிதாராதிர்பு⁴ஜௌ பங்கஜலோசந: ||

---

மஹாவீரர் கீழ்ப்பக்கத்திலும் ராஜகுமாரன் உயரத்திலும் ராமதாஸர் மத்தியிலும் ஸத்தியபாலகர் எல்லாவிடத்திலும், 7

புன்னகைகொண்ட முகமுள்ளவர் சிரசிலும் ஊர்மிளையின் கணவன் நெற்றியிலும் வில்லைத் தரிப்பவர் புருவத்தின் மத்தியிலுஞ் சுமித்திரானந்தன் கண்களிலும், 8

ராமருக்கு மந்திரியானவர் கன்னங்களிலும் கபந்தன் கையைக் கண்டித்தவர் காதுகளிலும், 9

சுமித்திரானந்த வர்த்தனர் மூக்கு நுனியிலும் ராமரிடம் பார்வையுள்ளவர் முகத்திலும், 10

ஸீதையின் உத்தரவுப்படி நடப்பவர் என் வார்த்தையிலும் சௌம்மிய ரூபமுடையவர் நாக்கிலும் அனந்தர் பற்களிலும், 11

ராக்ஷஸ ஸம்ஹாரம் செய்தவர் மோவாக் கட்டையிலும் அசுரர்களைச் சங்கரிப்பவர் கழுத்திலும் சத்ருக்களை ஜெயிப்பவர் தோள்களிலும் தாமரைக் கண்ணன் கைகளிலும். 12

करौ कङ्कणधारी च नखान् रक्तनखोऽवतु ।
कुक्षिं पातु विनिद्रश्च वक्षः पातु जितेन्द्रियः ॥
पार्श्वे राघवपृष्ठस्थः पृष्ठदेशं मनोरमः ।
नाभिं गम्भीरनाभिस्तु कटिं च रुक्ममेखलः ॥
गुह्यं पातु सहस्रास्यः पातु लिङ्गं हरिप्रियः
ऊरू पातु विष्णुतल्पस्सुमुखोऽवतु जानुनी ॥
नागेन्द्रः पातु मे जङ्घे गुल्फौ नूपुरवान्मम ।
पादावङ्गदतातोऽव्यात् सर्वाङ्गानि सुलोचनः ॥
चित्रकेतुपिता पातु मम पादाङ्गुलीः सदा ।
रोमाणि मे सदा पातु रविवंशसमुद्भवः ॥
दाशरथसुतः पातु निशायां मम सादरम् ।
भूगोलधारी मां पातु दिवसे दिवसे सदा ॥

---

கங்கணந்தரித்தவர் முன்கைகளிலும் சிவந்த நகமுடைய வர் நகங்களிலும் தூக்கமற்றவர் வயிற்றிலும் ஜிதேந்திரியன் மார்பிலும், 13

ராமருக்குப் பின்பக்கமிருப்பவர் பக்கங்களிலும் மனோக்ஞன் பின் பக்கத்திலும் கம்பீர நாபியுடையவர் நாபியிலும் தங்க மேகலையணிந்தவர் இடையிலும், 14

ஆயிரம் முகமுடையவன் ரகசிய ஸ்தானத்திலும் ஹரிப்பிரியர் லிங்கத்திலும் விஷ்ணு சயனர் துடைகளிலும் பிரகாசமான முகமுடையவர் முழங்கால்களிலும், 15

சர்ப்பராஜன் என் கணைக்கால்களிலும் நூபுரம் தரித்தவர் புறங்கால்களிலும் அங்கதன் தந்தை பாதங்களிலும் நல்ல கண் களையுடையவர் அவயவங்களிலும், 16

சித்திரகேதுவின் பிதா பாதவிரல்களிலும் சூரிய வம்சத்தில் பிறந்தவர் ரோமங்களிலும், 17

தசரதகுமாரன் இரவிலும் பூகோளத்தைத் தரிப்பவர் ஒவ் வொரு தினத்திலும், 18

ஸர்வகாலேஷு பாத்விந்த்ரஜிந்நாசக: ஸர்வதா ।
ஏவம் ஸௌமித்ரிகவசம் ஸுதீக்ஷ்ண கதிதம் மயா ॥
இதம் ப்ராதஸ்ஸமுத்தாய யே படந்தி நரா: ।
தே தந்யா மாநவா லோகே தேஷாம் ச ஸபலோ பவ: ॥
ஸௌமித்ரே: கவசஸ்யாஸ்ய ஸமம் நாஸ்தி புவநே ஹி ।
புத்ரார்த்தீ லபதே புத்ராந் தநார்த்தீ லபதே தநம் ।
பத்நீகாமோ லபேத்பத்நீம் கோகாமீ லபதே ச கா: ।
தாந்யார்த்தீ ப்ராப்நுயாத்தாந்யம் ராஜ்யார்த்தீ ராஜ்யமாப்நுயாத் ॥
படித்வா ராமகவசம் ஸௌமித்ரிகவசம் விநா ।
க்ருதேந ஹீநநைவேத்யதுல்யம் நாஸ்த்யத்ர ஸம்சய: ॥

---

இந்திரஜித்தை வதஞ்செய்தவர் எல்லாச் சமையங்களிலும் இருந்து காக்கவேண்டும். சுதீக்ஷண முனிவரே! நான் லக்ஷ்மணர் கவசத்தைத் தெரிவித்தேன். 19

இந்தக் கவசத்தைக் காலையில் பாராயணம் செய்யும் மானிடர்கள் தன்னியர்களாவார்கள். அவர்கள் ஜன்மம் சபலமாய் விடும் 20

இந்தக் கவசத்தைப் பாராயணம் செய்தால் புத்திரனை விரும்புவோர் புத்திரனையும் தனத்தை விரும்புவோர் தனத்தையும் பத்தினியை விரும்புவோர் பத்தினியையும் பசுவின் அபிவிருத்தியை அபேக்ஷிப்பவர் பசுவையும் தான்னியத்தை விரும்பியவர் தான்னியத்தையும் அடைவார்கள். ராஜ்யத்தை விரும்பியவர்கள் ராஜ்யத்தையும் அடைவார்கள். 21--22

லக்ஷ்மண கவசமில்லாமல் ராமகவசத்தைப் பாராயணம் செய்தால் நெய்யில்லாமல் செய்த நைவேத்தியத்திற் கொப்பாகும். இதில் ஐயமில்லை. 23

கேவலம் ராமகவசம் படிதம் மாநவைர்யதி |
ததாஸௌ ந ஸ ஸந்துஷ்டோ ப⁴வேத்³ராமாநுஜோ நர: ||
அத: ப்ரயத்நத: ஸ்துத்யம் ஸௌமித்ரி கவசம் நரை: |
படநீயம் ஸதா சைவ ஸர்வவாஞ்சிததாயகம் ||

இதி லக்ஷ்மண கவசம்.

பரதகவசப்ராரம்ப⁴:.

அத: பரம் பரதஸ்ய கவசம் தே வதாம்யஹம் |
ஸர்வபாபஹரம் புண்யம் ஸதா ஶ்ரீராமப⁴க்திதம் ||

கைகேயீதநயம் ஸதா ரகு⁴வரந்யஸ்தேக்ஷணம் ஶ்யாமலம் | ஸப்தத்³வீபபதிர்விதே³ஹதநயாகாந்தோக்திஸம்லாலஸம் | ஶ்ரீ ஸீதாதவஸவ்யபார்ஶ்வநிகடே ஸ்தி²த்வா வரம் சாமரம் த்⁴ருத்வா த³க்ஷிணஸத்கரேண பரதம் தம் வீஜயந்தம் பஜே ||

---

ராமகவசத்தை மாத்திரம் பாராயணம் செய்தால் ராமச்சந்திரர் சந்தோஷமடையமாட்டார். 24

ஆகையால் மானிடர்கள் மனோரதம் எல்லாவற்றையும் கொடுக்கும் இந்தக் கவசத்தை எப்போதும் பிரயத்தனத்துடன் பாராயணம் செய்யவேண்டும். 25

லக்ஷ்மண கவசம் முற்றிற்று.

---

பாபங்களைப் போக்கி எப்போதும் ஸ்ரீராம பக்தியைக் கொடுக்கக்கூடிய புண்ணிய கவசமாகிய பாதகவசத்தை நான் உமக்குக் கூறுகின்றேன். 26

கைகேயின் குமாரனும் எப்போதும் ராமரிடம் நேத்திரத்தைச் செலுத்துபவனும் சியாமள வர்ணனும் எழு தீவுகளுக்கும் பதியாகிய வைதேஹிபதியின் சொல்லில் அன்புள்ளவனும் ஸ்ரீ ஸீதாகாந்தன் இடதுபுறத்திலிருந்து வலதுகையால் சாமரமெடுத்து உபசரிக்கிறவனுமாகிய பாதனைப் பஜிக்கின்றேன். 27

𑌅𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀𑌭𑌰𑌤𑌕𑌵𑌚𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯| 𑌅𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑌋𑌷𑌿𑌃| 𑌭𑌰𑌤𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾| 𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍𑌛𑌨𑍍𑌦𑌃 𑌶𑌙𑍍𑌖 𑌇𑌤𑌿 𑌬𑍀𑌜𑌂 𑌕𑍈𑌕𑍇𑌯𑍀𑌨𑌨𑍍𑌦𑌨 𑌇𑌤𑌿 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 | 𑌭𑌰𑌤𑌖𑌣𑍍𑌡𑍇𑌶𑍍𑌵𑌰 𑌇𑌤𑌿 𑌕𑍀𑌲𑌕𑌂| 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜 𑌇𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 ‖ 𑌸𑌤𑍍𑌵𑌜𑍀𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌦𑌾𑌸 𑌇𑌤𑌿 𑌕𑌵𑌚𑌂 | 𑌰𑌾𑌮𑌾𑌂𑌶𑌜 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌰𑌤𑌪𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌸𑌕𑌲𑌮𑌨𑍋𑌰𑌥𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌜𑌪𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 | 𑌅𑌥𑌾𑌙𑍍𑌗𑌵𑌿𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 ‖

𑌓𑌂 𑌭𑌰𑌤𑌾𑌯 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 | 𑌓𑌂 𑌕𑍈𑌕𑍇𑌯𑍀𑌨𑌨𑍍𑌦𑌨𑌾𑌯 𑌤𑌰𑍍𑌜𑌨𑍀𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 ‖ 𑌓𑌂 𑌭𑌰𑌤𑌖𑌣𑍍𑌡𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌅𑌨𑌾𑌮𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 ‖ 𑌓𑌂 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 | 𑌓𑌂 𑌸𑌤𑍍𑌵𑌜𑍀𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌦𑌾𑌸𑌾𑌯 𑌕𑌰𑌤𑌲𑌕𑌰𑌪𑍃𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 𑌏𑌵𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌦𑌿𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 ‖ 𑌓𑌂 𑌭𑌰𑌤𑌾𑌯 𑌹𑍃𑌦𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌶𑌙𑍍𑌖𑌾𑌯 𑌶𑌿𑌰𑌸𑍇 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾‖ 𑌓𑌂 𑌕𑍈𑌕𑍇𑌯𑍀𑌨𑌨𑍍𑌦𑌨𑌾𑌯 𑌶𑌿𑌖𑌾𑌯𑍈 𑌵𑌷𑌟𑍍‖ 𑌓𑌂 𑌭𑌰𑌤𑌖𑌣𑍍𑌡𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌕𑌵𑌚𑌾𑌯 𑌹𑍁𑌂 | 𑌓𑌂 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌾𑌯 𑌵𑍌𑌷𑌟𑍍| 𑌓𑌂 𑌸𑌤𑍍𑌵𑌜𑍀𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌦𑌾𑌸𑌾𑌯 𑌅𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌫𑌟𑍍| 𑌓𑌂 𑌰𑌾𑌮𑌾𑌂𑌶𑌜𑌾𑌯𑍇𑌤𑌿 𑌦𑌿𑌗𑍍𑌬𑌨𑍍𑌧𑌃.

𑌅𑌥𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 |

𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌵𑌾𑌮𑌾𑌙𑍍𑌗𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌕𑍈𑌕𑌯𑌜𑌾𑌸𑍁𑌤𑌮𑍍 |
𑌰𑌾𑌮𑌾𑌯 𑌚𑌾𑌮𑌰𑍇𑌣𑍈𑌵 𑌵𑍀𑌜𑌯𑌨𑍍𑌤𑌂 𑌮𑌨𑍋𑌹𑌰𑌮𑍍 ‖
𑌰𑌤𑍍𑌨𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌕𑍇𑌯𑍂𑌰𑌕𑌙𑍍𑌕𑌣𑌾𑌦𑌿𑌵𑌿𑌭𑍂𑌷𑌿𑌤𑌮𑍍 |
𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑌰𑌪𑌰𑍀𑌧𑌾𑌨𑌂 𑌵𑌨𑌮𑌾𑌲𑌾𑌵𑌿𑌰𑌾𑌜𑌿𑌤𑌮𑍍 ‖

---

தியானம்.

ஸ்ரீ ராமச்சந்திருடைய இடது பக்கத்தில் இருப்பவரும் கைகேயிக்குக் குமாரரும் ராமருக்குச் சாமரத்தால் உபசாரம் செய்பவரும் மனோக்ஞரும் 28

இரத்தின குண்டலம் கேயூரம் கங்கணம் முதலியவைகளால் அலங்காரம் செய்துகொண்டவரும் மஞ்சள் பட்டுவஸ்திரம் தரித்தவரும் வனமாலையால் பிரகாசிப்பவரும் 29

மாண்டவீதௌதசரணம் ரஶநாதாமபூஷிதம் |
நீலோத்பலதளஶ்யாமம் த்விஜராஜஸமாநநம் ||
ஆஜாநுபாஹும் பரதகண்டஸ்ய ப்ரதிபாலகம் |
ராமாநுஜம் ஸ்மிதாஸ்யஞ்ச ஶத்ருக்நபரிஸேவிதம் ||
ராமந்யஸ்தேக்ஷணம் ஸௌம்யம் வித்யுத்புஞ்ஜஸமப்ரபம் |
ராமபக்தம் மஹாவீரம் வந்தே தம் பரதம் பரம் ||
ஏவம் த்யாத்வா து பரதம் ராமபாதேக்ஷணம் ஹ்ருதி |
கவசம் படநீயம் ஹி பரதஸ்யேதமுத்தமம் ||
பூர்வதோ பரதః பாது தக்ஷிணே கைகேயீஸுதः |
ந்ருபாத்மஜः ப்ரதீச்யாம் ஹி பாதூதீச்யாம் ரகூத்தமः ||

---

மாண்டவியால் பாதப் பிரக்ஷாளனமடைந்தவரும் அரைஞாண் சங்கிலிகளைத் தரித்தவரும் கருநெய்தல் தளம்போல் சியாமளவர்ணமுள்ளவரும் சந்திரனுக்குச் சமமான முகமுள்ளவரும் 30

முழங்கால்வரையில் நீண்ட கைகளை உடையவரும் பரதகண்டத்தை பரிபாலித்தவரும் ராமருக்கு அநுஜரும் புன்னகையுள்ள முகமுடையவரும் சத்ருக்னனால் நமஸ்கரிக்கப்பட்டவரும் 31

ராமரிடம் பார்வையுள்ளவரும் சௌம்பிய ரூபமுடையவரும் மின்னல் கூட்டத்தைப்போன்ற காந்தியுள்ளவரும் ராமபக்தரும் மஹாவீரரும் சுபரூபருமான அந்தப் பரதரை நான் நமஸ்கரிக்கின்றேன். 32

ராமருடைய பாதகமலங்களில் நேத்திரமுள்ள பரதரை இவ்விதம் தியானஞ் செய்து உத்தமமான இந்தப் பரதகவசத்தைப் பாராயணம் செய்யவேண்டும் 33

பரதன் கீழ்ப்பக்கத்திலும் கைகேயி குமாரன் தென்புறத்திலும் ராஜகுமாரன் மேற்புறத்திலும் ரகூத்தமர் வடபுறத்திலும். 34

அத⁴: பாது ஸ்யாமளாங்கோ ஹ்யூர்த்⁴வம் பாது த³ஸாத்மஜ: |
மத்⁴யே பாது ப⁴ரதவர்ஷப்ரபு⁴: ஸர்வத்ர ஸூர்யவம்ஸஜ: ||
ஸிரோ த³க்ஷபிதா பாது பா⁴லம் பாது ஹரிப்ரிய: |
ப்⁴ருவோர்மத்⁴யே ஜநகவாக்யதத்பரோவது ||
பாது ஜநகஜாமாதா நேத்ரே த்³ருஷ்டிஹி |
கபோலௌ மாண்ட³வீகாந்த: கர்ணமூலே ஸுலோசந: ||
நாஸாக்³ரே பாது கைகயீதோஷவர்த்³த⁴ந: |
உதா³ராங்கோ முகே²வது வாணீம் பாது ஜடாதர: ||
பாது புஷ்கரதாதோ வை ஜிஹ்வாம் த³ந்தாந் ப்⁴ராஜயந் |
சிபு³கம் வல்கலத⁴ர: கண்ட²ம் பாது வராநந: ||
ஸ்கந்தௌ⁴ பாது ஜிதாராதி: பு⁴ஜௌ ஸத்ருக்⁴நவந்தி³த: |
கரௌ கவசதா⁴ரீ ச நகா²ந் க²ட்³க³த⁴ரோவது ||

---

சியமளாங்கன் கீழ்ப்பிரதேசத்திலும் தசாத குமாான்மேலே யும் பரத வருஷத்திற்குப் பிரபுவானவர் மத்தியிலும் சூரியவம்சத் தில் பிறந்தவர் எல்லாவிடத்திலும் 35

தக்ஷனுக்குத் தந்தை சிரசிலும் ஹரிப்பிரியர் நெற்றியிலும் ஜனகமகாராஜன் கட்டளையிற் கருத்துள்ளவர் புருவத்தின் மத்தி யிலும் 36

ஜனகன் மருமகன் கண்களிலும், மாண்டவீகாந்தன் கன் னங்களிலும், நல்ல நேத்திரமுள்ளவன் காது மூலத்திலும் 37

கைகேயிக்குச் சந்தோஷத்தை விருத்தி செய்பவன் மூக்கு நுனியிலும், உதாரகுணமுள்ளவன் முகத்திலும், சபைகளைத் தரித்தவன் வாக்கிலும், புஷ்கரன் தந்தை பற்களிலும், மரவுரி உடுத்தவன் மோவாக்கட்டையிலும், சிரேஷ்டமான முகமுள்ள வன் கழுத்திலும் 38—39

சத்ருக்களை ஜயித்தவர் தோள்களிலும் சத்ருக்னனால் நமஸ் கரிக்கப்படுகிறவன் கைகளிலும் கவசம் தரித்தவன் முன் கைகளி லும் கத்தியை உடையவன் நகங்களிலும் 40

𑌕𑍁𑌕𑍍𑌷𑍀 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌵𑌕𑍍𑌷𑌃 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌪𑍃𑌷𑍍𑌠𑌗𑌃 ।
𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 𑌰𑌾𑌮𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌸𑍍𑌥𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌪𑍃𑌷𑍍𑌠𑌂 𑌸𑍁𑌭𑌾𑌷𑌣𑌃 ॥

𑌜𑌠𑌰𑌂 𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌾𑌰𑍀 𑌨𑌾𑌭𑌿𑌂 𑌶𑌰𑌕𑌰𑍋𑌽𑌵𑌤𑍁 ।
𑌕𑌟𑌿𑌂 𑌪𑌦𑍍𑌮𑍇𑌕𑍍𑌷𑌣𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌰𑌾𑌮𑍈𑌕𑌮𑌾𑌨𑌸𑌃 ॥

𑌰𑌾𑌮𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍂𑌰𑍂 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌸𑍇𑌵𑌕𑌃 ।
𑌨𑌨𑍍𑌦𑌿𑌗𑍍𑌰𑌾𑌮𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌜𑌾𑌨𑍁𑌨𑍀 𑌮𑌮 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ॥

𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌪𑌾𑌦𑍁𑌕𑌾𑌧𑌾𑌰𑍀 𑌪𑌾𑌤𑍁 𑌜𑌙𑍍𑌘𑍇 𑌸𑌦𑌾 𑌮𑌮 ।
𑌗𑍁𑌲𑍍𑌫𑍌 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌬𑌨𑍍𑌧𑍁𑌶𑍍𑌚 𑌪𑌾𑌦𑍌 𑌪𑌾𑌤𑍁 𑌸𑍁𑌰𑌾𑌰𑍍𑌚𑌿𑌤𑌃 ॥

𑌰𑌾𑌮𑌾𑌜𑍍𑌞𑌾𑌪𑌾𑌲𑌕𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌮𑌮𑌾𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ।
𑌮𑌮 𑌪𑌾𑌦𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑍀𑌃 𑌪𑌾𑌤𑍁 𑌰𑌘𑍁𑌵𑌂𑌶𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌃 ॥

---

ராமாநுஜன் வயிற்றிலும், ஸ்ரீராமருக்குப் பின்னுளிருப்பவன் மார்பிலும், ராமருக்குப் பக்கத்திலிருப்பவர் பக்கங்களிலும், நன்ருகப் பேசுகிறவர் பின் பக்கத்திலும் 41

வில்லைத்தரித்தவர் அடிவயிற்றிலும், பாணங்களைக் கையில் தரித்தவர் நாபியிலும், தாமரைக்கண்ணன் இடையிலும். ராமரிடம் மனதுள்ளவர் இரகசியப் பிரதேசத்திலும் 42

ராமமித்திரன் லிங்கத்திலும். ஸ்ரீராமசேவகன் துடைகளிலும், நந்தி கிராமத்திலிருப்பவர் முழங்கால்களிலும், ஸ்ரீராமபாதுகைகளைத் தரித்தவர்கள் கணைக்கால்களிலும், ஸ்ரீராமபந்து புறங்கால்களிலும், தேவர்களுடைய பூஜையை அடைகிறவர் பாதங்களிலும் 43-44

ராமருடைய ஆஞ்ஞையைப் பரிபாலிப்பவர் அவயவமெல்லாவற்றிலும் ரகுவம்சத்திற்கு அலங்காரம் போன்றவர் பாதங்களின் விரல்களிலும் 45

ரோமாணி பாது மே ரம்ய: பாது ராத்ரௌ ஸுமேதஸ: |
தூணீரபாணி: ப்ரதிதினம் பாது மம ஸர்வதா ||

ஸர்வகாலேஷு மாம் பாது பாஞ்சஜந்யஸ்வரூபவான் |
ஏவம் ஸ்ரீ பரதஸ்யேதம் ஸுதீக்ஷ்ணம் கவசம் ஶுபம் ||

ஸர்வஸ்தோத்ரோத்தமம் திவ்யம் மஹாபுண்யப்ரதாயகம் | [ஶுபம்
ஸ்தோத்ராணாமுத்தமம் ஸ்தோத்ரம் ஸந்துஷ்டம் யத்ஸ்வயம் ஸ்வாமி

பவனீயம் ஸதாஹஸ்தாத் ராமசந்த்ரஸ்ய ஹர்ஷதம் |
பரிக்ஷாஹரதஸ்யேதம் கவசம் ரக்ஷணம் ந: ||

யதா யாதி பரம் தோஷம் ததா ஸ்வகவசேன ந |
தஸ்மாத் ஏதத் ஸதா ஜப்யம் கவசானாமனுத்தமம் ||

---

இரம்மிய சொரூபர் ரோமங்களிலும் நல்ல புத்தியையுடைய வர் இரவிலும் அம்புறாத்தூணியைத் தரித்தவர் பிரதி தினமும், 46

சங்கத்தினுடைய அவதார புருஷர் காலமெல்லாவற்றிலும் இருந்து இரக்ஷிக்க வேண்டும். 47

இந்தப்பாரதகவசம் மங்களங்களைக் கொடுக்கக் கூடியது. இந்த ஸ்தோத்திரம் மற்ற ஸ்தோத்திரங்களைக் காட்டிலும் சிறந்தது. மிகுந்த புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியது. 48

ராமச்சந்திரருக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது. ராமர் தமது கவசத்தைப் பாராயணம் செய்பவனிடம் சந்தோஷிப்பதைவிட, பரதனுடைய கவசத்தைப் பாராயணம் செய்பவர்களிடமும் சந்தோஷமடைகிறார். ஆகையால் இந்தப் பரதகவசத்தைப் பாராயணம் செய்ய வேண்டும். 49—50

ஙவஸ்ரா தூவம் நாநு தூஸ்வபுரா நாஊா நவாவ்நுயாஊ ।
விஷ்ராகாமொருஹெஃவிஷ்ராம் வபுத்ரகாமொருஹெதுஸதடி
வதீகாமொருஹெதக்ம் யநாயீயநஊாவ்நுயாஊ ।
யஷ்ஷூநமெநாஹிருஷிதம் ததுக்வஷவாம்தஃ ॥
ருஹ்யெதஊாநவெஎாத்ருவஸதூம் வஷாஊ்ஹடி ।
தவஸாதஷாஜவநீயம் ராமொவாவஸகஊாநவெஃ ॥

ஐதிஹாரதகவவம்.

ஙயஶத்ருஙவு கவவம் வஸு தீக்ஷ்ண ஶ்ரூணு ஸாஊரடி ।
ஸவபுகாஊவூஷம்ரஊம் ராஊவஊக்தியவயநடி ॥

ஶத்ருஙவும் யூதகாஊபுகம் யூதஊஹாதமணீர
ஷாணொதஊம் வாஶ்வு ஸ்ரீரவுநநஙநவஸ் விநயா
அாஜெவூிதம்வஸுஙிரம்। ராஊம் ஷீயகவெணதாருஷஐஜம்
யூகவாதி விக்ரும் வரம் ஸவியபூாஹம் வஜநம் வஊாவூி
தஊஹம்தம் வீஜயஷம் ஹஜெ ॥

---

மானிடன் இந்தக் கவசத்தைப் பாராயணம் செய்வதால் மனோரதமெல்லாவற்றையு மடைகிருன்; வித்தையை விரும்பின வன் வித்தையையும் புத்திரனே அபேக்ஷித்தவன் புத்திரனேயும் பத்தினியைக் கோருகிறவன் பத்தினியையும் பொருளில் விருப்ப முள்ளவன் பொருளேயும் எவன் எந்தக் கோரிக்கையை விரும்பு கிருனே அவன் அந்தக் கோரிக்கையையும் அடைவான். சந்தேக மில்லே. இது சத்தியம்! சத்தியம்! ஆகையால் ராமரை உபாசிப்ப வர்கள் எப்போதும் ஜபம் செய்யவேண்டும், 51-53

பரதகவசம் முற்றிற்று.

ஏ சுதீக்ஷண முனிவரே! சத்ருக்னனுடைய கவசத்தைக் கேளும்; இந்தக் கவசம் மனோரதங்களேக் கொடுக்கக் கூடியது; ராமரிடம் பக்தியை விருத்தி செய்யக் கூடியது,

வில்லேத் தரித்தவரும் பெரிதான அம்புறை பாணம் இவை களேத் தரித்தவரும் ஸ்ரீரகுநந்தனரின் இடது பக்கத்தில் வணக் கத்துடனிருப்பவரும் சுந்தரரும், சித்திரநிறைந்ததும் சூரியனுக் குச் சமமான ஒளியுள்ளதுமான பனேபோலே விசிறிகொண்டு ராம ருக்கு உபசரிப்பவருமாகிய சத்ருக்னனே நான் வணங்குகிறேன்.

அஸ்ய ஶ்ரீ பரதகவசஸ்தோத்ரமந்த்ரஸ்ய அகஸ்த்ய ருஷி:॥ ஶ்ரீ பரதோ தேவதா॥ அனுஷ்டுப் சந்த:॥ [illegible] இதி பீஜம்॥ கைகேயீநந்தன இதி ஶக்தி:॥ ஶ்ரீ ராமானுஜ இதி கீலகம்॥ ராமபக்திரஸ்த்ரம்॥ ஶ்ரீ ராமதாஸ இதி கவசம்॥ [illegible]ணாம்ஶஜ இதி மந்த்ர:॥ ஶ்ரீ பரத ப்ரீத்யர்த்தம் ஸகலமன:காமநாஸித்த்யர்த்தம் ஜபே விநியோக:॥ அதாங்கன்யாஸ:॥

ஓம் பரதாய அங்குஷ்டாப்யாம் நம:॥
ஓம் [illegible]நாய தர்ஜனீப்யாம் நம:॥
ஓம் கைகேயீநந்தனாய மத்யமாப்யாம் நம:॥
ஓம் ராமானுஜாய அனாமிகாப்யாம் நம:॥
ஓம் ராமபக்த்யை கனிஷ்டிகாப்யாம் நம:॥
ஓம் ஶ்ரீ ராமதாஸாய கரதலகரப்ருஷ்டாப்யாம் நம:॥
ஏவம் ஹ்ருதயாதிந்யாஸ:॥
ஓம் [illegible]ணாம்ஶஜாய திக்பந்த:॥

அத த்யானம்.

ராமஸ்ய வாமஸம்ஸ்திதம் வாமேபார்ஶ்வே விநயஸேவகம்।
கைகேயீநந்தனம் ஸௌம்யம் முகுடேனாதிராஜிதம்॥
ரத்னகங்கணகேயூரவனமாலாவிராஜிதம்।
ரஶநாகுண்டலதரம் ரத்னஹாரஸநூபுரம்॥

---

தியானம்.

ராமருடைய இடது புறத்தில் வணக்கத்துட னிருப்பவரும் கைகேயியைச் சந்தோஷப் படுத்துகிறவரும் உக்ரத்தன்மை யில்லாதவரும் கிரீடத்தால் பிரகாசிப்பவரும் 56

இரத்தின கங்கணம் கேயூரம் வஸ்திரம் வனமாலை இவைகளால் பிரகாசிப்பவரும் அரைஞாண் குண்டலம் இரத்தின ஹாரம் சலங்கைகள் இவைகளைத் தரித்தவரும் 57

வ்யஜநேந வீஜயந்தம் ஜாநகீகாந்தமாதராத் |
ராமநேத்ரேக்ஷணம் வீரம் கைகேயீதோஷவர்தநம் ||
த்விபுஜம் கஞ்ஜநயநம் திவ்யபீதாம்பராந்விதம் |
ஸுபாஹும் ஸுந்தரம் ஶ்யாமவர்ணம் ஸுந்தராநநம் ||
ராமவாக்யே க்ருதகர்ணம் ரக்ஷோக்நம் கட்கதாரிணம் |
தநுர்பாணதரம் ஶ்ரேஷ்டம் த்ருததூணீரமுத்தமம் ||
ஸபாயாம் ஸம்ஸ்திதம் ரம்யம் கஸ்தூரீதிலகாங்கிதம் |
கிரீடாட்யாவ்ருதம் பூஷணஶோபிதஸ்மிதாநநம் ||
ஸூர்யவம்ஶோத்பவம் திவ்யரூபம் தஶரதாத்மஜம் |
மதுராவாஸிநம் தேவம் லவணாஸுரஸூதநம் ||

---

ஜானகீ காந்தருக்கு விசிறியால் உபசரிப்பவரும் அவரிடம் நேத்திரமுள்ளவரும் கைகேயிக்குச் சந்தோஷத்தை விருத்தி பண்ணுகிறவரும், 58

இரண்டு கைகளுள்ளவரும் தாமரைப் பூப்போன்ற நேத்திர முள்ளவரும் திவ்விய பீதாம்பர மணிந்தவரும் நல்ல கைகளை யுடையவரும் அழகுள்ளவரும் சியாமளவர்ணமும் சுந்தரமுகமு முள்ளவரும், 59

ஸ்ரீராமருடைய கட்டளைக்குச் செவிகொடுத்து நிற்பவரும் இராக்ஷசர்களைச் சங்காரம் செய்பவரும் கத்தியைத் தரித்தவரும் சிறந்தவரும் அம்புடையவரும். 60

சபையிலிருப்பவரும் இரம்மியரும் கஸ்தூரி திலகமணிந்த வரும் ஆபரணங்கள் நிறைந்த கிரீடங்களால் பிரகாசிப்பவரும் மந்தஹாச முள்ளவரும் 61

சூரிய வம்சத்தில் ஜனித்தவரும் திவ்விய ரூபரும் தசரத குமாரரும் மதுரையில் வாசம் செய்பவரும் தேவரும் லவணாசுரனைச் சங்கரித்தவரும் 62

ஏவம் த்யாத்வா ததா ஸத்ருக்நம் ராமபாதேக்ஷணம் ஹ்ருதி|
படனீயம் வரம் ஹ்யேதத் கவசம் தஸ்ய பாவநம் ||
பூர்வே பாது ஸ ஸத்ருக்ந: பாது யாம்யே ஸுதர்ஸந:|
கைகேயீநந்தந: பாது ப்ரதீச்யாம் ஸர்வதா மம ||
பாதூதீச்யாம் ராமபந்து: பாத்வதோ பரதாநுஜ:|
ரவிவம்ஸோத்பவஸ்சோர்த்வம் மத்யே தஸரதாத்மஜ: ||
ஸர்வத: பாது கைகேயீஸந்தோஷவர்தந:|
ஸ்யாமலாங்க: ஸிர: பாது பாலம் ஸ்ரீலக்ஷ்மணாநுஜ: ||
ப்ருவோர்மத்யே ஸுவக்த்ரோऽவ்யாத் நேத்ரே ஸ்ருத-
கீர்திபதிர்மம கபோலௌ பாது ராகவ:||
கர்ணௌ குண்டலகர்ணோऽவ்யாந் நாஸாக்ரம் ரவிவம்ஸஜ:|
முகம் யுவா பாது வாணீம் ஸ்பஷ்டாக்ஷர:||

---

ராமபாதங்களில் பார்வை யுள்ளவருமாகிய சத்ருக்னனை இவ்விதம் மனதில் தியானம் செய்து அவருடைய சிரேஷ்டமான இந்தக் கவசத்தைப் பாராயணம் செய்ய வேண்டும் 63

சத்ருக்னன் கீழ்ப்புறத்திலும் சுதர்சனன் தென்பாகத்திலும் கைகேயியை மகிழ்விப்பவன் மேற்புறத்திலும் 64

ராமபந்து வடபுறத்திலும் பரதாநுஜன் கீழ்ப்புறத்திலும் சூரிய வம்சத்தில் பிறந்தவன் மேலேயும் தசரதாத்துமஜன் மத்தியிலும் 65

கைகேயின் சந்தோஷத்தை அபிவிருத்தி செய்கிறவர் எல்லாவிடத்திலும் சியாமளாங்கன் சிரசிலும் லக்ஷுமணன் அம்சத்திலுண்டானவன் நெற்றியிலும் 66

நல்ல முகமுடையவன் புருவத்தின் மத்தியிலும் சுருதகீர்த்தியின் நாயகன் கண்களிலும் ராகவர் கன்னங்களிலும் 67

குண்டலந்தரித்த காதுள்ளவர் காதுகளிலும் ரகுவம்சத்தில் பிறந்தவர் மூக்கு நுனியிலும் யௌவன பருவமுள்ளவன் முகத்திலும் வியக்தமாகப் பேசுகிறவர் வார்த்தையிலும் 68

ஜிஹ்வாம் ஸுபாஹுதாதோவ்யாத்யூபகேதோ: பிதா த்விஜாந் | கபோலௌ ரம்யகண்டோவ்யாத் கண்டம் மதுரபாஷண: ||

ஸ்கந்தௌ பாது மஹாதேஜா ஹஸ்தௌ ராகவவாக்யக்ருத் |
கரௌ கங்கணயுத: பாது வஜ்ரநகோ நகாந் ||
குக்ஷிம் ராமப்ரிய: பாது பாது வக்ஷோ ரகூத்தம: |
பார்ச்வௌ ஸுரார்சித: பாது பாது ப்ருஷ்டம் வராநந: ||
ஜடரம் பாது ரக்ஷோக்ந: பாது நாபிம் ஸுலோசந: |
கடீம் பரதமந்த்ரீ மே குஹ்யம் ஸ்ரீராமஸேவக: ||
ராமார்பிதமநா: பாது லிங்கமூரூ ஸ்மிதாநந: |
கோதண்டபாணி: பாத்வஸ்ய ஜாநுநீ [illegible] ||

---

சுபாஹுவின் தந்தை நாக்கிலும் யூபகேதுவின் தந்தை பற்களிலும் இரம்மியமான மோவாக்கட்டை யுள்ளவன் மோவாக்கட்டையிலும் நல்லவார்த்தை பேசுகிறவன் கழுத்திலும் 69

மஹாதேஜஸுள்ளவர் தோள்களிலும் ராகவர் வாக்கியப்படி செல்பவன் கைகளிலும் கங்கணம் தரித்தவன் முன் கைகளிலும் கத்தியுடையவன் நகங்களிலும் 70

ராமப்பிரியன் வயிற்றிலும் ரகூத்தமன் மார்பிலும் தேவர்களால் பூஜிக்கப் படுகிறவன் பக்கங்களிலும் சிறந்த முகமுள்ளவர் பின் புறத்திலும் 71

இராக்ஷஸஸம்ஹாரம் செய்தவன் அடிவயிற்றிலும் நல்ல கண்ணுடையவன் நாபியிலும் பரதமந்திரி இடைகளிலும் ஸ்ரீராம சேவகன் இரகசியப் பிரதேசத்திலும் 72

ராமரிடம் மனதைச் செலுத்துகிறவன் லிங்கத்திலும் மந்தஹாசமுள்ளவன் துடைகளிலும் கோதண்டபாணி முழங்கால்களிலும் 73

ராமமித்ர: பாது ஜங்கே⁴ கு³ல்பௌ² பாது ஸுநூபுர:
பார்ஷ்ணௌ நரபதிர்பாது ஜ்யாஸ்ரீமாந்நாதா²ங்கு³லீரபி ॥
பாத்வங்கா³நி ஸதா³ஸ்தா²நி ஹ்யுதா³ராங்க³ஸ்ஸதா³ ௭௪ । [க:॥
ரோமாணி ரமணீயோऽவ்யாத்³ராத்ரௌ பாது ஸுதா⁴ர்மிக:
தி³வஸே பாது ஸத்யஸந்தோऽவ்யாத்³போ⁴ஜநே ஶரஹஸ்தக: ।
க³மநே கலகண்டோ²ऽவ்யாத்ஸர்வதா³ லவணாந்தக: ॥
ஏதம் ஶத்ருக்⁴நகவசம் மயா தே ஸமுதீ³ரிதம் ।
யே பட²ந்தி நரா: ஸ்வஸ்த்²யே தே நரா: ஸௌக்²யபா⁴கி³ந: ॥
ஶத்ருக்⁴நஸ்ய பரம் ஶ்ரேஷ்ட²ம் கவசம் மங்க³லப்ரத³ம் ।
பட²நீயம் ஸதா³ மர்த்யை: புத்ரபௌத்ரப்ரவர்த⁴நம் ॥
ஸ்தோத்ரஸ்ய பாட²நாத்³யம் யம் காமம் நரோऽப்நுயாத் ।
தம் தம் ப்ராப்ஸ்யதி நிஶ்சயேந ஸத்யமேதத்³வசோ மம ॥

---

ராமமித்திரன் கணைக்கால்களிலும் நல்ல சலங்கையை யுடையவன் புறங்கால்களிலும் அரசர்களால் பூஜிக்கத் தகுந்தவன் பாதங்களிலும் விரல்களிலும் 74

உதாரமான அங்கமுள்ளவன் அவயவ மெல்லாவற்றிலும் இராமணீயன் உரோமங்களிலும் சுதார்மிகன் இரவிலும் 75

சத்தியசந்தன் பகலிலும் பாணங்களைக் கையில் கொண்டவர் போஜனத்திலும் மதுரமான கண்டமுடையவன் நடையிலும் இலவணாசுரனுக்கந்தகன் எப்போதும் இரக்ஷிக்கவேண்டும். 76

சத்ருக்னனுடைய கவசம் கூறினேன். இதைப் பாராயணம் செய்பவர்கள் சௌக்கியமடைவார்கள். 77

மங்களத்தைக் கொடுக்கக் கூடியதும் புத்திர பௌத்திரர்களை விருத்தி செய்யக் கூடியதுமான இந்தக் கவசத்தை மானிடர்கள் பாராயணம் செய்யவேண்டும். 78

இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணஞ் செய்பவனுக்கு அவன் விருப்பம் யாவும் கைகூடும். இந்தச் சொல் சத்தியம். 79

पुत्रार्थी लभते पुत्रं धनार्थी लभते धनम्
इच्छाकामांस्तु कामार्थी लभते [illegible] ॥ [illegible]।
कवचस्यास्य [illegible] शत्रुघ्नस्य विनिश्चयात् ।
तस्मात् [illegible] पठनीयं [illegible] ॥
आदौ नरैर्मारुतेस्तु पठित्वा कवचं शुभम् ।
ततश्शत्रुघ्नकवचं पठनीयमिदं शुभम् ॥
पठनीयं भरतस्य कवचं परं ततः ।
ततस्सौमित्रिकवचं पठनीयं सदा नरैः ॥
पठनीयं ततस्सीताकवचं भाग्यवर्धनम् ।
ततश्श्रीरामचन्द्रस्य कवचं सर्वोत्तमम् ॥
पठनीयं नरैर्भक्त्या सर्ववाञ्छितदायकम् ।
एवं षट्कवचान्यत्र पठनीयानि सर्वदा ॥

---

புத்திரனை அபேக்ஷிப்பவன் புத்திரனையும் பொருளை விரும்பியவன் பொருளையும், காமத்தை விரும்பியவன் காமத்தையும் தன்னிஷ்டப்படி மனோரதங்களையும் அடைவான். 80

இந்தச் சத்ருக்னகவசத்தைப் பாராயணம் செய்வதால் மனோரதங்களை அடைவது நிச்சயம். ஆகையால் பக்தியுடன் பாராயணம் செய்யவேண்டும், 81

மானிடர்கள் பக்தியுடன் ஆதியில் மாருதியின் கவசத்தையும் பிறகு சத்ருக்னன் கவசத்தையும் பாராயணஞ் செய்யவேண்டும், 82

பிறகு பரதகவசத்தையும் பிறகு இலக்குமண கவசத்தையும் பாராயணஞ் செய்யவேண்டும், 83

பிறகு பாக்கியத்தை உண்டுபண்ணும் ஸீதையின் கவசத்தையும் சிலாக்கியமான ராமச்சந்திர கவசத்தையும் பாராயணஞ் செய்யவேண்டும், 84

இவ்விதம் ஆறுகவசங்களையும் எப்போதும் பாராயணஞ் செய்ய வேண்டும் 85

பட²நம் ஷட்கவசாநாம் ஶ்ரேஷ்ட²ம் மோக்ஷைகஸாத⁴நம் |
ஜ்ஞாத்வைதந்மநுஜைர்ப⁴க்த்யா கார்யம் பட²நம் ஸதா³ ||

அஶக்தேநாத்ர சத்வாரி பட²நீயாநி ஸாத³ரம் |
ஹநூமதஸ் ஸௌமித்ரே: ஸீதாயா ராக⁴வஸ்ய ச ||

இமாநி பட²நீயாநி சத்வாரிகவசாநி ஹி |
சதுர்ணாம் கவசாநாஞ் பட²நே மாநவாய ச ||

நயத்³யத்ராவகாஶஸ்ஸ்யாத்ததா² த்ரீணி படே²ந்நர: |
மாருதேஸ்த்வத்ர ஸீதாயா: ததா² ஶ்ரீராக⁴வஸ்ய ச ||

த்ரயாணாம் கவசாநாஞ் ந பட²நாவஸரோ யதா³ |
பட²நாயோக்³யம் மாநவாய ததா² த்³வே கவசே ஸ்ம்ருʼதே ||

மாருதேஸ்த்வத² ராமஸ்ய ஸீதாயா ராக⁴வஸ்ய வா |
நைகமேவ படே²த்த்ர ஶ்ரீராமகவசம் ஶுப⁴ம் ||

---

இவ்வாறு கவசங்களையும் சிறந்த மோக்ஷத்திற்கு முக்கியமான சாதனம் என்று தெரிந்து மானிடர்கள் பக்தியுடன் பாராயணம் செய்யவேண்டும். 86

இவ்வாறு கவசங்களையும் பாராயணம் செய்ய சக்தியில்லையாயின் அநுமான் இலக்குமனன் சீதை இராகவர் இந்நால்வருடைய கவசத்தையும் பாராயணம் செய்யவேண்டும். 87

இந்நான்கு கவசங்களையும் பாராயணம் செய்ய அவகாசமில்லாவிட்டால் அநுமான் சீதை இராமர் இம்மூவரின் கவசத்தைப் பாராயணம் செய்யவேண்டும். 88-89

இம்மூன்று கவசங்களையும் பாராயணம்செய்ய அவகாசமில்லாவிட்டால் அனுமான் இராமர் இவ்விருவருடைய கவசங்களைப் பாராயணம் செய்யவேண்டும். மங்களமான ஸ்ரீராமகவசத்தைத் தனித்து பாராயணம் செய்யக்கூடாது. 90-91

𑌅𑌵𑌕𑌾𑌶𑍇 𑌕𑌵𑌚𑌾𑌨𑌾𑌂 𑌷𑌟𑍍𑌕𑌂 𑌚𑍈𑌵 𑌸𑌦𑌾 𑌨𑌰𑍈𑌃 ।
𑌪𑌠𑌨𑍀𑌯𑌂 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣𑍈𑌵 𑌕𑌦𑌾𑌪𑍍𑌯𑍇𑌕𑌂 𑌨𑌾𑌗𑍍𑌰𑌹𑌃 𑌕𑌦𑌾 ॥
𑌯𑌦𑌾𑌵𑌕𑌾𑌶𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌤𑌦𑌾𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌯𑍇 ।
𑌤𑌯𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌂 𑌨 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌯𑍇𑌷𑌿𑌤𑌃 ॥

(𑌇𑌤𑌿 𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑌕𑌵𑌚𑌂.)

---

ஆறு கவசங்களைப் பாராயணஞ் செய்ய அவகாச மிருந்தால் கிரமமாக எல்லாவற்றையும் பாராயணம் செய்யவேண்டும். சோம்பல் கூடாது. 92

கவச மெல்லாவற்றையும் பாராயணம் செய்ய அவகாசமில்லாவிடில் அவர்களுக்கு மட்டும் விசேஷம் கூறினேன். மற்றவர்கள் கிரமமாகவே செய்யவேண்டும். 93

சத்ருக்ன கவசம்.
முற்றிற்று.

---

## ஸ்ரீ இராமதாஸர் கூறுகிறார்.

சிடனே! கேட்டவிஷயம் யாவற்றிற்கும் நான் கூறினேன். மற்றொரு விஷயம் கூறுகிறேன்.

இராமரைக் கானம் பிரபந்தம் இவைகளால் திருப்திசெய்விக்கவேண்டும். வீணை முதலிய வாத்தியங்களையும் நர்த்தனம் முதலியவற்றையும் செய்விக்கவேண்டும்.

“𑌦𑌶𑌰𑌥𑌨𑌨𑍍𑌦𑌨 𑌮𑍇𑌘𑌶𑍍𑌯𑌾𑌮 𑌰𑌵𑌿𑌕𑍁𑌲𑌮𑌣𑍍𑌡𑌨 𑌰𑌾𑌜𑌾𑌰𑌾𑌮” “தசரதநந்தன மேகச்யாம ரவிகுலமண்ட ராஜாராம” என்னும் இவ்விருபத்திரண்டு அக்ஷரமுள்ள மந்திரத்தை வீணையுடன் இனிய குரலில் கானஞ் செய்யவேண்டும்.

இந்த மந்திரத்தைக் கீர்த்தனம் செய்வதில் அங்கந்நியா சாங்யாசங்கள் கிடையா. இனிக் கூறும் மந்திரங்களிலும் நியாசமில்லை என்றறியவேண்டும்.

**"ராமஜயராமஜய ராமஜயராம"** "ராமஜய ராமஜய ராமஜயராம" என்னும் பதினான்கு அக்ஷரமுள்ள இந்த மந்திரத்தைக் கீர்த்தனம் செய்ய உனக்குக் கூறுகிறேன்.

மந்திர சாஸ்திரங்களில் கூறினபின்பு மந்திரங்கள் யாவும் ஜபம் செய்வதற்கு ஏற்பட்டவைகள். இங்குக் கூறும் இந்த மந்திரங்கள் கீர்த்தனம் செய்வதற் கென்றறியவேண்டும்.

இந்த மந்திரங்களைப் பக்தியுடன் ஜபம்செய்தால் செய்த பாவங்கள் யாவும் அந்த க்ஷணத்திலேயே சாம்பலாகின்றன.

பிராம்மணோத்தமனாகிய விஷ்ணுதாச! மற்றமந்திரங்களையும் கூறுகிறேன்.

**"ராஜீவலோசன மேகஶ்யாம ஸீதாஞ்ஜன ராஜாராம"** இராஜீவலோசன மேகசியாம ஸீதாரஞ்ஜன ராஜாராம், என்ற பத்தொன்பது அக்ஷரங்களுடன் கூடியது இம்மந்திரம். இதை நல்ல குரலோடு வீணையின் நாதத்துடன் உட்கார்ந்திருக்கும்போதும் நடக்கும் போதும் அடிக்கடி கீர்த்தனம் செய்ய வேண்டும்.

ஸ்ரீசப்தத்தை முந்தியும் ஜய சப்தத்தை மத்தியிலும் மறுபடி ஜயவென்ற சப்தத்தை இரண்டு தடவையாகவும் சேர்த்து இந்த இரகுநாதனுடைய நாமத்தை இருபத்தொரு முறை ஜபம் செய்வானாகில், கோடி பிர்மஹத்தி தோஷம் நிவர்த்தியாகும். இந்த மந்திரம் பதின்மூன்று அக்ஷரமுள்ளது. மங்களங்களைக் கொடுக்கக்கூடியது. இந்தமந்திரத்தை எப்போதும் கீர்த்தனம் செய்யவும் ஜபம்செய்யவும் வேண்டும். **"ஸ்ரீ ராமஜய ராமஜய ஜயராம"** இதுதான் மந்திரம்.

இந்த மந்திரத்தை வீணை முதலிய வாத்தியங்களோடு நல்ல குரலுடன் மானிடர்கள் சந்தோஷத்துடன் கீர்த்தனம் செய்ய வேண்டும். மந்திர சாஸ்திரத்திலும் இந்த விஷயம் கூறியிருக்கிறது. இது சித்திகளெல்லாவற்றையும் கொடுக்கக் கூடியது.

விஷ்ணுதாச! பதினெட்டக்ஷரமுள்ள மற்றொரு மந்திரம் கேள்.

''ஸீதாரஜுந ஜேவஸூாஉ கௌஸஞூாவஸூத ராஜாராஉ'' இந்தப் பதினெட்டு அக்ஷரமுள்ள மந்திரத்தை வீணையுடன் நல்ல குரலுடன் கானம் செய்ய வேண்டும்.

சிரேஷ்டமான சூரிய வம்சத்தில் பிறந்து தேவர்களாலும் பிராம்மணர்களாலும் கானம் செய்யப் படுகிறவரை நமஸ்கரிக் கிறேன்.

'ரவிவரகுஜாதம் வஜெஹஸூரஹஜிஸூரகீதம்'

''இரவிவர குலஜாதம் வந்தேபூஸுரகீதம்'' இது பதினேழு அக்ஷரமுள்ள மந்திரம். இதை ஸுஸ்வரத்துடன் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

விஷ்ணுதாச! மங்களத்தைக் கொடுக்கும் மற்ற ராமமந்தி ரங்களையும் கேள். அவைகளைக் கேட்ட மாத்திரத்தில் மஹாபா பங்கள் தொலைந்துவிடும்.

'கௌஸஞூாவஸூதராஉ ஸீதாரஜுந ஜேவஸூாஉ'

''கௌஸல்யா ஸுத ராம ஸீதாரஞ்சன மேகசியாம'' இந்தப்பதி னாறு அக்ஷரமுள்ள மந்திரத்தை வீணையோடு நல்ல குரலுடன் கீர்த்தனம் செய்யவேண்டும். இந்த மந்திரம் பாவங்களைப் போக்க வும் மோக்ஷத்தை யளிக்கவும் கூடியது,

''உமரயநநந ஜேவஸூாஉ ஸீதாரஜுந ராஜா ராஉ'' ''தசரதநந்தந மேகசியாம ஸீதாரஞ்சன ராஜாராம'' இந்த இருபது அக்ஷரமுள்ள மந்திரத்தை வீணையுடன் நல்லகுரலுடன் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

ரகுவீரரும் ஸீதையின் காந்தரும் யுத்தத்தில் தீரருமான வரை நமஸ்கரிக்கிறேன். ''வஜெ ரஹுவீரஂ ஸீதாகாஜஂ ரணயீரஂ'' ''வந்தே ரகுவீரம் ஸீதாகாந்தம் ரணதீரம்'' இந்தப் பதினான்கு அக்ஷரமுள்ளதும் மங்களத்தை உண்டுபண்ணக் கூடி யதுமான மந்திரத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டும்.

ராம! ஜயிக்க வேண்டுமென்று இரண்டுதடவையும் பிறகு ராமாவென்றும் கூறவேண்டும். ''ஜயராஉ ஜயராஉ ஜயஜய

ராஜ" "ஜயராமஜயராம ஜயஜயராம" இது பதினான்கு அக்ஷர முள்ள மந்திரம். இதைக் கீர்த்தனம் செய்ய வேண்டும். 'ஸீதா ராவவ' ஸீதாராகவ" என்ற ஐந்து அக்ஷரமுள்ள இந்த மந்தி ரத்தை வீணையுடன் ஸுஸ்வரமாகக் கானம் செய்யவேண்டும்.

"ஹஜஸீதாராமம் மாநஸஹஜராஜாராமம்" "பஜ ஸீதாராமம் மானஸபஜராஜா ராமம்" இந்த மந்திரம் பதினைந்து அக்ஷரமுள்ளது, இதை வீணையோடு நல்ல குரலுடன் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

"ஸ்ரீ ஸீதாராமம் வந்தே ஸ்ரீ ராஜாராமம்" "ஸ்ரீஸீதா ராமம் வந்தே ஸ்ரீராஜாராமம்" மனோரதங்களெல்லாவற்றையும் கொடுக்கும் புண்ணியமான இந்த மந்திரத்தை வீணை முதலிய வாத்தியத்துடன் கீர்த்தனம் செய்ய வேண்டும். இந்த மந்திரம் பனிரண்டக்ஷரமுள்ளது.

"ராவணமர்த்தநராம ராவவ வாலிமர்த்தநராம" "ராவணமர்த்தன ராகவ வாலிமர்ந்தனராம" இந்த மந்திரம் பதினெட்டக்ஷரமுள்ளது. இதை வீணையுடன் கீர்த்தனம் செய்ய வேண்டும். ராம "ஸ்ரீஸீதாராமம் மாநஸஹஜராஜாராமம்" "ஸ்ரீஸீதாராமம் மானஸபஜராஜாராமம்" இந்த மந்திரம் பதி னான்கு அக்ஷரமுள்ளது. இதை வீணை முதலிய வாத்தியத்தோடு நல்ல குரலுடன் கீர்த்தனம் செய்யவேண்டும்.

'ஸீதாராமஜய ராஜாராம' "ஸீதாராமஜய ராஜாராம" இந்த மந்திரம் பத்தக்ஷரமுள்ளது. பாபங்களைப் போக்கக் கூடி யது. மானிடர்கள் எப்போதும் வீணை முதலிய வாத்திய கோஷத் துடன் கீர்த்தனம் செய்ய வேண்டும். "ஸ்ரீ ஸீதாராமம் வந்தே ராமம் ஜயராமம்" "ஸ்ரீஸீதாராமம் வந்தோராமம் ஜயராமம்" இந்த மந்திரம் பதின்மூன் றக்ஷரமுள்ளது. பாபங்களைப் போக் கக் கூடியது. மானிடர்கள் எப்போதும் வீணை முதலிய வாத்திய கோஷத்துடன் கீர்த்தனம் செய்யவேண்டும்.

"மாம் பாஹி பதிதீநம் ராவவ த்வத்பதயுகலீநம்" "மாம்பாஹியதிதீனம் ராகவதுவத்பத யுகலீனம்;" இந்த மந்திரம்

பதினாறு அக்ஷரமுள்ளது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும்.

**'ஜயஜய ராவவ'** "ஜயஜயராகவ" இந்த மந்திரம் எழு அக்ஷரமுள்ளது. கீர்த்தனம் செய்யவேண்டும்.

**'ஜயஜய ரவுூவர'** "ஜயஜய ரகுவர" இந்த மந்திரம் எட்டு அக்ஷரமுள்ளது. மானிடர்கள் எப்போதும் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

**"ஃவஂஊாஂவாலுயஸீதாராஉ"** "தவம் மாம்பாலய ஸீதாராம" இந்த மந்திரம் ஒன்பது அக்ஷரமுள்ளது மஹாபாபங்களை நாசம் செய்யக்கூடியது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும்

**'ஸீதாராஉஜய'** "ஸீதாராமஜய" இந்த மந்திரம் ஆறு அக்ஷரமுள்ளது. மானிடர்கள் வீணையோடு நல்லகுரலுடன் கீர்த்தனம் செய்யவேண்டும் **'ஶ்ரீஸீதாராஉ'** "ஸ்ரீஸீதாராம்" இந்த மந்திரம் ஐந்து அக்ஷரமுள்ளது. மானிடர்கள் எப்போதும் கீர்த்தனம் செய்யவேண்டும். **'ஸீதாராஉ'** "ஸிதாராம" இந்த மந்திரம் நான்கு அக்ஷரமுள்ளது. **'ஶ்ரீராஉ'** இந்த மந்திரம் மூன்று அக்ஷரமுள்ளது. **'ராஉ'** 'ராம' இந்த மந்திரம் இரண்டு அக்ஷரமுள்ளது. **'ராஂ'** "ராம்" இந்த மந்திரம் பிந்துவுடன் ஓரக்ஷரமுள்ளது இதைக் கீர்த்தனம் செய்ய கூடாது. எப்போதும்ஜபம் செய்யவேண்டும். **'ராஉஜயஸீதாராஉராவவ'** "ராமஜய ஸீதா ராமராகவ" இந்த மந்திரம் பதினோரக்ஷர முள்ளது, **'ஃஶரய்நநநரவுூகுூலுஹஷண கௌஸல்யா விஶ்ராஉ வஂகஜலொவநராஉ"** "தசரதநந்தன ரகுகுலபூஷண கௌஸல்யா விச்ராமபங்கஜ லோசனராம" இந்த மந்திரம் இருபத்தெட்டக்ஷர முள்ளது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும். மஹாபாதகங்களைப் போக்கக்கூடியது மனோத மெல்லாவற்றையும் கொடுக்கக்கூடியது-

**'ஸீதாராஉஜயராவவராஉ'** "ஸீதாராம ஜயராகவ ராம" இந்த மந்திரம் பதினோறு அக்ஷரமுள்ளது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும்.

'[illegible]'

"பஞ்சவடீஸ்தித ராம ஜயஜய தசரத நந்தந ராம" இந்த மந்திரம் இருபத்தொரு அக்ஷரமுள்ளது. மஹா பாபங்களைப்போக்கி மனோபீஷ்ட மெல்லாவற்றையும் கொடுக்கக்கூடியது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும்.

'[illegible]' "தசரதசுத பாலம் வந்தே ராமம் கனநீலம்" இந்த மந்திரம் பதினறு அக்ஷரமுள்ளது. மஹா புண்ணியத்தை யளிக்கக்கூடியது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும். "[illegible]" "கோதண்ட கண்டன தசசிரமர்த்தன கௌஸல்யாஸுத ராம ஸீதாரஞ்சன ராஜாராம" இந்த மந்திரம் இருபத்தொன்பது அக்ஷரமுள்ளது. வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும். "[illegible]" "கோதண்ட பஞ்ஜனராவண மர்த்தன கௌஸல்யா விச்ராம ஸீதாரஞ்சன ராஜாராம" இந்த மந்திரம் இருபத்தேழு அக்ஷரமுள்ளது மங்களத்தைக் கொடுக்கக்கூடியது.

"[illegible]" "கோதண்ட கண்டன வாலிதாடன லங்காதாஹன பாஷாணதாரண ராவணமர்த்தன ரவிகுல பூஷண கௌஸல்யா விச்ராம ஸீதாரஞ்சன ராஜாராம" இந்த மந்திரம் ஐம்பது அக்ஷரமுள்ளது. மஹாபாதகங்களைப் போக்கக்கூடியது. மந்திரங்களுக்குள் சிறந்தது. எப்போதும் வீணை வாத்தியத்துடன் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

சீடனே! இவ்விதம் அனேக மந்திரங்களிருக்கின்றன. ஆயிரம் வருஷம் வரையில் சொன்னாலும் எல்லாவற்றையும் சொல்லிவிட எவன் சக்தியுள்ளவன் இந்த மந்திரங்களை வீணையுடன் கீர்த்தனம் செய்யவேண்டும். ஜபம் செய்யக்கூடியவைக் ளெல்லாவென்

றறிய வேண்டும். மந்திர சாஸ்திரங்களில் கூறியவைகளைத்தான் ஜபம் செய்யவேண்டும். அவைகளைக் கீர்த்தனம் செய்யக்கூடாது.

புத்திமான்கள் இந்த மந்திரங்களை முன்னிட்டு அனேக பாஷைகளில் ஆதரவுடன் கிரந்தங்கள் செய்யவேண்டும்.

நான் சொல்லாத மந்திரங்களை மானிடன் யுக்தியால் கற்பித்துக்கொள்ள வேண்டும். அப்படிக் கற்பிப்பதில் தோஷமில்லை. இதனால் விஷ்ணு சந்தோஷ மடைகிறார்.

மானிடர்கள் எப்போதும் மந்திரம், பிரபந்தம், காவியம், ஸ்தோத்திரம் கீர்த்தனம் முன்னோர்கள் கூறியவைகள் தான் கற்பித்தது. இவைகளுக்குள் எதனாலாவது இராமரை உபாசிக்க வேண்டும். எந்தவிதமாகவாவது ராமத்தியானம் செய்யவேண்டும். செய்தால் ஓர் க்ஷணத்தில் நெருப்பினால் பர்ணசாலை எரிவது போல் பாபக் குவியல் சாம்பலாய்விடும். சந்தேகமில்லை.

டம்பத்தாலாவது, மிகுதியான பக்தியாலாவது, ஆசையாலாவது, ஆசையில்லாமையாலாவது இராமரை ஸ்மரணம் செய்தால் பாபங்கள் பஞ்சுக்கூட்டத்தில் விழுந்த தீப்போல் சாம்பலாய் விடும். சந்தேகமில்லை. மந்திரம் பிரபந்தங்கள், காவியங்கள், இவைகள் அசுத்தமாயினும் ஸ்ரீராமரை ஸ்தோத்திரம் செய்யக்கூடியதானால் ஸ்ரீராமர் சந்தோஷமடைகிறார். சந்தேகமில்லை.

ராமரை ஆசிரயிக்காமல் ஸ்தோத்திரம் முதலியவைகளைச் செய்தாலும் ஸ்ரீராமர் சந்தோஷமடைகிறார். ராமரை ஆசிரயித்தும் நிந்திப்பானாகில் நகரத்தையே அடைகிறான்.

ராமரிடம் பிரீதி உண்டாய் விட்டால், சாஸ்திரங்கள் புராணங்கள் அத்தியயனம் செய்வது செய்வித்தல் முதலியவைகள் அனாவசியம். மூர்க்கனாயினும் அவனிடம் ராமபக்தி யிருந்து அவனுடைய பாஷையில் அவரை ஸ்தோத்திரம் செய்திருப்பானாயின் அதைக் கூறினால் பகவான் பிரசன்னமாகிறார். ஸ்ரீராமசந்திரரை அடைய எந்தக்காரியம் செய்தாலும் ஸ்ரீராமர் சந்தோஷமடைகிறார். இராமர் கானம், தியானம், ஸ்தோத்திரம், சேவை; வந்தனம் இவைகளுக் குரியவர் பூதங்களெல்லாவற்றிலும் இருப்பவரென்றும் அறிந்துகொள்ள வேண்டும்.

இலக்குமணர் முதலியவர்களின் கவசங்களைகூறும்

15-வது சருக்கம்.

முற்றிற்று.

## 16-வது சருக்கம்.

ராமதாஸர் கூறுகிருர்.

மாணவனே! நீ கேட்ட விஷயம் எல்லாவற்றிற்கும் சமாதானம் கூறினேன். மற்றிப்படி எதைக் கேட்க விரும்புகிருய் கேள், கூறுகிறேன்.

விஷ்ணுதாஸர் வினவுகிருர்.

ராமாயணத்தைக் கேட்ட மானிடர்கள் படிப்பவர்களுக்கு என்ன சம்மானம் செய்யவேண்டும். மஹா பாக்கியம் பொருந்திய குருவே! அதன் உண்மையை விஸ்தாரமாகக் கூறவேண்டும் என்ருர்.

ராமதாஸர் கூறுகிருர்.

ராமாயணத்தைச் சிரவணம் செய்தால் பட்டுத் துவஜத்துடன் கூடியதும் நான்கு குதிரைகள் பூட்டியதும் மணி ஓசையுள்ளதும் சொர்ணமாய் விளங்குவதுமாகிய இரதத்தையும் மிகுதியான பாலை உடைய தேநுவையும் கொடுக்க வேண்டும்.

நூற்றெட்டு அந்தணர்களுக்குப் போஜன மளிக்கவேண்டும். இவ்விதம் செய்தால் அந்த மஹா காவியம் மங்களங்களைக்கொடுக்கும்; மிகுந்த பலனைக் கொடுக்கும். எந்தக் கிரந்தத்தில் ராமருடைய சொரூப மிருக்கிறதோ அது ராமாயணமென்று சொல்லப் படும். நீ கேட்ட விஷயத்திற்குச் சமாதானம் கூறினேன்.

விஷ்ணுதாஸர் வினவுகிருர்.

அநுமானுடைய விரதத்தில் ஏதேனும் உபதேசம் செய்ய வேண்டுகிறேன் என்ருர்.

ஸ்ரீராமதாஸர் கூறுகிருர்.

ராமர், திரிகூட பர்வதத்தில் நாகபாசத்தால் துன்பமடைந்த போது, நாரத முனிவரின் உபதேசப்படி வினதையின் குமாரனுகிய கருடனை ஸ்மரித்தார்.

அப்பொழுது காசியபர் குமாரனுகிய கருடன் யுத்த பூமிக்கு வந்து நிகரற்ற தேஜஸுள்ள ஸ்ரீராகவருக்கு நமஸ்காரம் செய்

தார். நாகாஸ்திரத்தை நிவாரணம் செய்து லக்ஷ்மணன் சேனை கள் இவர்களுடன் கூடின ராமரை ஸ்தோத்திரஞ் செய்து அவ ரைப் பார்த்துக் கூறுகிறார்.

கருடன் கூறுகிறார்.

ராமச்சந்திர! பயங்கரரும் கூட்டத்தாருடன் கூடினவரும் வீரனுமான அநுமான் சுக்ரீவன் நளன் நீலன் சுஷேணன் ஜாம்ப வான் தாளன் மஹாவீர்யமுள்ள மைந்தன் இவர்களிருக்கும் போது என்னை எதன் பொருட்டுக் கருதியது.

ஸ்ரீராமர் கூறுகிறார்.

கருடனே! உன்னுடைய குரலைக் கேட்டவுடன் ஸர்ப்பங் கள் ஓடிவிட்டன. இந்தச் சைன்யத்தைப் பீடித்தார்களா? இந்த வீரர்களிருந்து என்ன பிரயோஜனம்?

கருடன் கூறுகிறார்.

ஏ ராம! ஏ தேவ! மஹா பலசாலியே! கபிகளின் சரித்தி ரத்தைக்கேளும். இந்த வானரங்கள் உமக்கு வேண்டியவர்களா யினும் நிந்திப்பது கூடாது. தசரத குமாரரே நீர் பிரத்தியக்ஷ விஷ்ணு. ஸீதை மஹாலக்ஷ்மி லக்ஷ்மணர் ஆதிசேஷன் வானரர் கள் ருத்திரர்கள் சுக்ரீவன் வீரபத்திரன்; நளன் சம்பு; நீலன் கிரிசன்; சுஷேணன் மஹாயசசு; ஜாம்பவான் அஜயேகபாத்; அங்கதன் அஹிர்புத்தினியன்; ததிவக்திரன்; பினாகதிருத்; தாரன் அயுதஜித்; தாளன் ஸ்தாணு; மைந்தன் பர்க்கன்; அநு மான் பிரத்தியக்ஷ பகவானாகிய ருத்திரர். இவர்கள் குரங்கு ரூப மடையக் காரணம் கூறுகிறேன்:—

முந்தி தேவாசுரர்கள் அமிர்தம் பெறுவதன் பொருட்டுக் கடலைக் கடந்தபோது அநேக உபத்திரவங்களை உண்டுபண்ணும் சிரங்கு கொப்பளம் முதலிய வியாதிகள் உண்டாயின. அந்த வியாதிகளால் பூமண்டலம் யாவும் உபத்திரவ மடைந்தன. அப்

பொழுது தேவர்களும் அசுரர்களும் பிரம்மதேவரிடம் சரண மடைந்தார்கள்.

' லோகநாதனாகிய பிரம்மதேவரே! இப்பூமியை வியாதிகளி னின்றுங் காக்கவேண்டும்; இப்பூமி கடுமையான தோஷத்தாலும் ஜ்வரம் முதலியவைகளாலும் அத்தியாத்துமம் அதிபூதம் அதி தைவம் என்ற மூன்று தோஷங்களாலும் மற்ற உபத்திரவங்களா லும் சீர்கெட்டிருக்கிறது. மூலிகைகள் சித்திக்கவில்லை. மந்திரம் யந்திரம் இவைகளும் பலிக்கவில்லை. நாசம் செய்யும் மஹாரோகங் கள் மானிடர்களைப் பீடிக்கின்றன. புத்திசாலியாகிய பிரம்ம தேவரே! இவ்விஷய யாவற்றையும் கூறினோம்.'' என்றார்கள்.

இவ்வசனங்களைக் கேட்ட பிரமன் ருத்திரர்களைப் பிரார்த் தனை செய்தார். பதினொரு ருத்திரர்களும் பிரம்மாவின் வாக்கியத் தைக்கேட்டு பிரம்மதேவரைச் சமாதானப்படுத்தி வீரபத்திரர் முதலிய தேவர்களும் சேர்ந்து வானரர்களாக ஜனனமடைந்தார் கள். அவர்கள் தாம் சுக்ரீவன் முதலியவர்கள். இவர்கள் மலையின் சிகரங்களிலும் பூமண்டலத்திலும் சஞ்சாரஞ் செய்து கொண்டு அடிக்கடி செய்துவந்த கடுமையான பு! பு!! என்ற சப்தங்களா லும் கர்ஜனைகளாலும் விளையாட்டுக்களாலும் வியாதிகளெல்லாம். நாசமடைந்தன. பிறகு பூமி எங்கும் வானரங்கள் சூழ்ந்திருப்ப தைப் பார்த்துச் சந்தோஷ மடைந்து குரங்குகளுக்கு வரங் கொடுக்க யத்தனித்தார்.

பிரம்மதேவர் கூறுகிறார்.

வானரங்களே! உங்களில் முத்திரைகள் ஏற்படட்டும். மிருத சஞ்சீவினி வித்தை, உலகெங்கும் செல்லும் ஆஞ்ஞை, மனசுக்குச் சமமான வேகம் இவை உங்களுக்குண்டாகட்டும். எந்த மானிடர் கள் உங்களை ஸ்மரணம் செய்கிறார்களோ பூஜை செய்கிறார்களோ அவர்கள் தங்கியர்களாவார்கள். விசித்திரத்தோரண துவசங்களை ஏற்படுத்தி, பக்ஷியம் போஜ்ஜியம் காந்தியம் லேஹியம் பேயம் முதலியவைகளை உங்களை உத்தேசித்து அக்நியில் ஹோமஞ்செய்து உபாசிக்கிறவர்களுக்குக் காரியசித்தி உண்டாகு மென்பதில் சந் தேகமில்லை. உங்கள் கூட்டத்தை, பாயசம் நெய் எள்ளு இவை

களால் பூஜிப்பவர்கள் பரமபதமடைவார்கள். இவ்விதம் ஸ்ரீ ருத்திர வைச்வானரருக்கு, மானஸ்தோகே என்ற மந்திரம் மனோஜியோதி: என்ற மந்திரம் காயத்திரி மந்திரம் இவைகளில் எந்த மந்திரத்தினாலாவது பூஜை செய்பவர்கள் வியாதியிலிருந்து விடுபட்டுச் சுகமாகவிருந்து முடிவில் அழிவற்ற ஸ்தானமடைவார்கள்.

கருடன் கூறுகிறார்.

ராம! இவ்விதம் வானரங்களின் வரலாற்றைக் கூறினேன். இந்த ருத்திரர்களுக்குள் அநுமான் பத்ரநாயகன். அநுமான் சரீரமிருக்கு மிடத்தில் பூஜைசெய்யவேண்டும். கோபுரத்தில் கல்லில் அநுமானுடைய மூர்த்தியைப் பிரதிஷ்டைசெய்து அங்குப் பூஜிக்கவேண்டும்.

ஸ்ரீராமர் கேட்கிறார்.

"எந்தப் பிரகாரமாக வானரங்களைப் பூஜிக்கவேண்டும்? துவசங்கள் எந்த மாதிரி இருக்கவேண்டும்; எவ்வளவு, எண்ணிக்கையுள்ள ஹோமம்செய்தல் வேண்டும்? திரவியம் என்ன? ஜபம் எவ்விதம்? தானம் எப்படி? எந்த விதியாகச் செய்கிறது? என்று வினவினார்.

கருடன் கூறுகிறார்.

ஏ ராஜனே! கிராமத்திலாவது பட்டணத்திலாவது ஜனங்களுக்கு மரணம் நேருஞ்சமயத்தில், அந்த வியாதிகளைப் போக்க ஔஷதம் மணிமந்திரம் சக்தியற்ற போது ஏகாதசிதிதியில் பூஜையைச்செய்ய முயற்சிசெய்யவேண்டும்.

காலையில் எழுந்து பிராம்மண சிரேஷ்டனாகவிருப்பவன் சுத்திசெய்து கொண்டு நெல்லிக்காய்தேய்த்து கங்கையில் ஸ்னானஞ்செய்து உபவாசத்துடனிருக்கும் பதினொரு பிராம்மணர்களை வரித்து அநேக உபகரணங்களுடன் ஜாகரணம் (கண்விழித்தல்) செய்யவேண்டும்; முதலாவது நான்குபக்கங்களிலும் பிரகாசமுள்ள மண்டபத்தை ஏற்படுத்தி, புஷ்பப்பந்தலைப்போட்டு, அதில் மண்டல மேற்படுத்தி, அதன் மத்தியில் வானரங்களை ஸ்தாபித்து, பஞ்சாமிருதஸ்னானம் செய்வித்து தாமரை முதலிய புஷ்பங்களாலும் பச்சைக்கர்ப்பூரம் கலந்த சந்தனத்தாலும் தசாங்க தூபத்தா

லும் தீபம் நீராஞ்சனம் அநேகவிதமான நைவேத்தியம் இவைக ளாலும் வஸ்திரங்களாகிய பதினொரு துவஜங்களையும் ஏற்படுத்தி எந்த எந்த தேவதைக்கு எந்த துவஜம் ஏற்பட்டதோ அதை அந்தந்த தேவதையை உத்தேசித்து அர்ப்பணம் செய்து பூஜை செய்யவேண்டும்.

பிறகு காலையில் ஸ்னானம் செய்து நியமத்துடனிருந்து நெய் பாயசத்துடன் பதினாயிரம் ஆவிருத்தி அக்நியில் ஹோமம் செய்யவேண்டும். பிறகு மறுபடி பூஜையைச் செய்து வாசற்படி யில் அநுமான் துவஜத்தையும் ராஜதுவாரத்தில் சுக்ரீவ னுடைய துவஜத்தையும் கடைவீதியில் சுஷேணன் துவஜத்தை யும் சிவத்வாரத்தில் நளன் நீலன் இவர்களின் துவஜத்தையும் தாரன் தரளன் மைந்தன் அங்கதன் இவர்களின் துவஜங்களைக் கிராமத்தின் நான்கு திசைகளிலும் ஜலமுள்ள விடத்தில் ஜாம்ப வான் துவஜத்தையும் நாற்சந்தி கூடுமிடத்தில் ததிவக்திரன் துவ ஜத்தையும் மஹாவாத்தியம் முதலிய மங்கள சப்தங்களுடன் ஸ்தாபிக்கவேண்டும்.

அந்தணர்களுக்குத் தினந்தோறும் திருப்தி செய்துவைக்க வேண்டும். ரித்துவிக்குகளுக்கு வஸ்திரங்களையும் அலங்காரங் களையும் தானம் செய்யவேண்டும். குடை, விசிறி, பாதுகை, மிகுதி யான பால். காமதேநு, தக்ஷிணை, வஸ்திரம், அலங்காரம் இவை களை ஆசாரியருக்குக் கொடுக்கவேண்டும்.

மற்றுமுள்ள அந்தணர்களுக்கு உப்பு, நெய், எண்ணெய், வெல்லம், படுக்கை எழுவகைத் தானியங்களையும் தானம் செய்ய வேண்டும். இந்த விதிப்படி அரசன் செய்தால் க்ஷேமமடை வான். இதன்பொருட்டு ஜபம் செய்வதானால் ருத்திரரைத் தான் தேவனாகக் கொள்ளவேண்டும் அல்லது (மானஸ்தோகே) என்ற மந்திரத்தினால் ஹவனம் (ஹோமம்) செய்வதும் சிறந்ததாகும்.

இது அநுமத்துவஜம் என்ற பெயருள்ள விரதம்.

அநுமத்துவஜத்தின் - ஆரோபண விரதத்தைக் கூறும்

**16-வது சருக்கம்.**

முற்றிற்று.

---

## 17-வது சருக்கம்.

ஸ்ரீராமதாசர் கூறுகிறார்.

ஏ விஷ்ணுதாசா! நீ கேட்ட விஷயம் யாவற்றையும் ஸ்ரீராமருடைய ஆஞ்ஞைப்படி கூறினேன்.

நீ முக்தி மிகுந்ததவம் செய்திருப்பதால், நான் பூஜைசெய்து முடிந்தவுடன் பிரத்தியக்ஷமாக ராமர் தரிசனந்தந்து, "ஏ ராமதாசா! மங்களத்தைக் கொடுக்கும் இந்த ஆனந்தராமாயணத்தை விஷ்ணுதாசனுக்குச் சொல்" என்று அடிக்கடி கட்டளையிட்டார்.

ராமர் உபதேசம் செய்த பிறகு நூற்றொன்பது சுலோகமடங்கிய ஸார ராமாயணத்தின் விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. அவ்விஷயத்தை ராமரும் உபதேசஞ்செய்தார். வான்மீகி முனிவர் முகமாகச் சொல்லப்பட்ட ராமகதையின் விஷயங்களும் நினைவுக்கு வந்தது. விஷ்ணுதாசா! ஸ்ரீராமாஞ்ஞைப்படி நூறுகோடி கிரந்தங்களடங்கிய ராமாயணத்தின் ஸாரமாக இருப்பதை ஆலோசித்து உனக்குரைத்தேன்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! நீர் எனக்கு மனமகிழ்ச்சியுண்டாக, ஆனந்தராமாயணமென்னும் இச்சரித்திரத்தைத் தெரிவித்தீர். சதகோடி ராமாயணத்தினின்று விவேசனம் செய்துசாரமாகவிருப்பதென்று சொன்னீரே, அவ்விஷயமென்ன? அல்லது பாதகண்டத்தில் உள்ளபாகத்தை அநுசரித்தாவது எனக்குரைக்க வேண்டும்.

ராமதாஸர் கூறுகிறார்.

மங்களகரமான சதகோடி ராமாயணம் முழுவதையும் ஞானதிருஷ்டியாலறிந்து இச்சரித்திரத்தை உரைத்தேன் அதில் ராமர் உபதேசம் செய்த ஸாரராமாயணத்தால் அநேக விசேஷங்கள் தெரியவந்தன. ஆதலாற்றான் ஞாபகத்திற்கு வந்ததெனக் கூறினேன்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஆசாரியரே! பாபங்களைப்போக்கும் சதகோடி ராமாயணத்தில் எவ்வளவு காண்டங்கள் எவ்வளவு சருக்கங்கள் உள்ளனவென்று சொல்லவேண்டும்.

ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

சதகோடி ராமாயணத்தில் காண்டங்கள் ஒன்பது லக்ஷம், சருக்கங்கள் தொண்ணூறு லக்ஷம், சுலோகங்கள் நூறுகோடியுள்ளனவாம்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! என் பொருட்டு ஸ்ரீராமன் உமக்கு உபதேசம் செய்த நூற்றெண்பது சுலோகமுள்ள ஸார ராமாயணமென்னும் மங்களகரமான சரித்திரத்தைக்கேட்கச் சந்தோஷமுள்ளவனாகவிருக்கிறேன், தயைபுரியவேண்டும்.

ராமதாஸர் கூறுகிறார்.

சீடனே! நல்லது சாவதான மனதுடன் கேள், நான் பூஜை செய்தபின்பு என்முன் தமது சகோதரர்களுடன் லக்ஷ்மியுடனும் ராமபிரான் பிரஸன்னமாகி இந்த ஸார ராமாயணத்தைக் கூறினர்.

ஸ்ரீ ராமச்சந்திரர் கூறுகிறார்,

ஏ ராமதாச! நான் விஸ்தாரமாகச் சொல்லும் ஸாரமான என் சரித்திரத்தைக்கேள்.

நான் உபதேசம் செய்யும் இச்சரித்திரத்தையும் நீ ஞான திருஷ்டியால் தெரிந்துகொண்ட விஷயத்தையும் என்பக்தியில் சிறந்த விஷ்ணுதாசனென்னும் உன் சீஷனுக் குபதேசஞ்செய்ய பாதகண்டத்திலுள்ள இக்கதையின் பாகங்கள் உனக்கு ஞாபகம் வருவதன் பொருட்டுச் சிறிது கூறுகிறேன்.

## ஸாரகாண்ட விஷய சூசிகை.

பார்வதீ பரமேசுவரசம்வாதம் (1) சூரிய வம்சத்தரசர்களில் பாதிப்பேர்களின் வரலாறு (2) என்தாய் தந்தைகளாகிய கௌஸல்யையைத் தசரதர்களை ராவணன் அபகரித்து இலங்கை சென்று அங்கு விடுதலை செய்தது (3) தசரதருடைய விவாகம் (4) கைகேயிக்குத் தசரதர் இரண்டு வரம்கொடுத்தல் (5) கைகேயிக்கு ஏற்பட்ட பிராம்மணசாப வரலாறு (6) வரங்கொடுத்த அரசனுக்குண்டான சாபம் (7) வைசியஹத்தி (8) ருசியசிருங்க முனிவரை அழைக்க முயற்சி செய்தல் (9) ருசிய சிருங்கமுனிவரின் அனுக்கிரகத்தினால் அக்கினிபகவான் அரசனுக்குப் பாயஸமளித்தல் (10) பாயசத்தைப் பிரிக்கும் போது ஒருபாகத்தைக் கழுகு மலையிற் கொண்டுபோடுதல் (11) அரசன் மனைவிகள் கருப்பந்தரித்தல் (12) அவர்களுக்கு ஆசையுண்டாகுதல் (13) பிறகு பூமி பிரும்மதேவர் இருவரும் என்னைப் பிரார்த்தனை செய்தல் (14) மந்தரையின் உற்பத்தி (15) சைத்திர மாஸத்தில் நான் அவதாரம் செய்தது (16) பந்துக்களுடனும் நான் செய்த பாலக்ரீடை (17) எனக்கு விரதபந்த முண்டாகுதல் (18) வஸிஷ்ட முனிவரிடம் வேதாப்பியாசம் செய்தல் (19) பந்துக்களுடன் தீர்த்தயாத்திரை செய்தல் (20) விசுவாமித்திரரிடம வில்வித்தைபயிலல் (21) வனத்தில் தாடகையைச் சங்காரம் செய்தல் (22) யுத்ததீக்ஷையில் ஆரம்பம் (23) யாகத்தில் சுபாஹுவை வதஞ்செய்தல் (24) மாரீசனைத் துரத்தியது (25) அஹல்யையை உத்தாரணம் செய்தல் (26) முனிபத்தினியின் சுவயம்வரத்தின் வரலாறு, சாபத்தின் வரலாறு (27) கங்காநதியின் ஓடக்காரன் என்பாதப்பிரக்ஷாளனம்செய்தல் (28) ஜமதக்கியர் கொடுத்த சிவன் வில்லைச்சனபயில் முறித்தல் (29) ஸீதையின் உற்பத்தி (30) ஸீதை இலங்கைக்குச் சென்று வெளிப்புறப்படுதல் (31) எனக்கும் பந்துக்களுக்கும் நடந்த விவாஹம் (32) பரசுராமனுடைய பராஜயம் (33) தீபாவளி மகோற்சவ வைபவம் அரசர்களுடன் மார்க்கத்தில் சண்டைசெய்தல் (34) பாதன் உயிர்பெறுதல் (35) முனிவர்கூறிய முன்னறிவிப்பு (36) பிருந்தையின் சாப வரலாறு (37) தந்தையின் புண்ணியகருமம் (38) கைகேயின்

பூர்வகர்மம் பிறகு என்னுடைய தினசரியை (39) கர்ப்பாதான மஹோற்சவம் (40) நாரதர் முன்னிலையில் நான் செய்தபிரதிஞ்ஞை (41) யௌவராஜ்யத்தில் முடிசூட்டச்செய்யும் பிரயத்தினம் (42) கைகேயியிக்கு வரம் கொடுத்ததினால் நான் தண்டகாரண்ணியத்திற்கு யாத்திரைசெய்தது (43) குகனைச் சந்தித்தல் (44) கங்கையை ஸீதை பிரார்த்தித்தல் (45) பாரத்துவாஜ முனிவர் வான்மீகமுனிவர் இருவர்களையும் தரிசனஞ் செய்தது (46) சித்திரகூடத்தில் வாசஞ்செய்தது (47) காக்கையின் கண்ணைப்போக்கியது (48) அயோத்தியில் தசரதர் மரணமடைந்தது (49) பரதனைப்பார்த்தது (50) பரதனை அயோத்திக்கனுப்பியது (51) ஆரண்ணியத்தில் ஸீதைக்குத் திலகமிட்டது (52) அநசூயை ஆபரணம் முதலியவைகளைக் கொடுத்தது (53) மார்க்கத்தில் விராதனை வதைத்தது (54) அனேக ஆச்சிரமங்களைப் பார்த்தது (55) அகஸ்தியமுனிவர் ஜடாயு இருவரையும் பார்த்தது (56) சாம்பனைவதம் செய்தது (57) சூர்ப்பணகியை அவமானப்படுத்தியது (58) கரன் முதலியவர்களைக் கொன்றது (59) ஸீதையின் சரீரத்தைப் பிரித்தது (60) நான் மாரீசனைவதம் செய்தது (61) ஸீதாபஹரணம் (62) ஜடாயுவின்யுத்தம் (63) இந்திரன் ஸீதைக்குப் பாயஸம் கொடுத்தது (64) பார்வதியைப் பார்த்தது (65) மார்க்கத்தில் கபந்தனைக் கொன்றது (66) நான்சபரியிடம் பூஜையை அடைந்தது (67) சுக்ரீவனுடன் ஸ்னேகம் செய்தல் (68) சிரசை எத்தியெறிந்தது (69) ஏழு சால விருக்ஷங்களைப் பேதனம் செய்தது (70) ஸர்ப்பமாலையை அடைதல் (71) வாலிவதம் செய்தல் (72) ஸீதையைத்தேட யத்தினம் செய்தது (73) அநுமான் சமுத்திரத்தைக் தாண்டியது (74) இலங்கையில் ஸீதையைப் பார்த்தது (75) மண்டோதரியின் உற்பத்தியின் வரலாறு (76) அசோகவனத்தின் காவலாளிகள் (77) அக்ஷகுமாரன் முதலியவர்களை வதம் செய்தது (78) இலங்கையைத் தஹனம் செய்தல். (79) அநுமான் சரீரத்தைவிட முடிவுசெய்தது (80) ஜாம்பூனத விருக்ஷ சாகையின் கதை (81) சமுத்திரத்தைத் தாண்டியது (82) அநேக மோதிரங்களைப் பார்த்தது (83) சேதுபந்தனம் செய்தது விபீஷணனுக்கு அபிஷேகம் செய்தது (84) விசுவநாத கதை (85)

கந்தமாதனேசுவாருடைய வாலாறு (86) யுத்தாரம்பம் (87) காலநேமிவதம் (88) ராவணன் வதம் (89) மைராவணமர்த்தனம் (90) நான்கட்டிலே பங்கம் செய்தது (91) கும்பகர்ணவதம் (92) மேகநாதவதம் (93) ஹோமத்தைக் கெடுத்தது (94) ராவணவதம், ஸீதைக்குத் திவ்வியதர்ன்ம் செய்தது (95 நான் அயோத்திக்கு வந்தது (96) யுத்ததீக்ஷையை முடித்தது (97) நான் பட்டாபிஷேகம் செய்துகொண்டது (98) ராவணன் முதலியவர்களின் உற்பத்தி (99) இந்திரஜித்துடைய பராக்கிரமம் (100) ராவணனுடைய அவமான வரலாறு (101) வாலி சுக்ரீவர்களுடைய பிறப்பு (102) அநுமானுடைய பிறப்பு (103) அநுமானுடைய வரதானம் (104) அநுமானுக்கேற்பட்ட சாபம் (105) அகஸ்திய முனிவரின் பிரயாணம். இந்த விஷயங்கள் சார காண்டத்தில் தெரிவிக்கப்பட் டிருக்கின்றன.

யாத்திராகாண்ட விஷய சூசிகை.

கங்கா யாத்திரைக்கு முயற்சிசெய்தல் (1) சரயுவைப் புரித்தல் (2) நான் பாணத்தால் ரேகைசெய்தது (3) ஸீதையின் வாக்கியத்தால் தியாகஞ்செய்தது (4) கும்போத்ரன் வாக்கியப்படி பூமியாத்திரை செய்தது (5) குமாரிகளுக்கு வரங்கொடுத்தது (6) பிரமதேவர் எனக்குக் காமதேநு கொடுத்தது (7) பரமசிவனிடமிருந்து சிந்தாமணியை அடைந்தது (8) அயோத்தியில் மறுபடியும் பிரவேசித்தது. இவைகள் யாத்திரா காண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

யாககாண்ட விஷய சூசிகை.

அசுவமேத யாகத்தின் ஆரம்பம் (1) பூமியில் குதிரையை விடுவித்தல் (2) சைன்னியத்துடன் குதிரைக்குக் கங்காநதி வழி கொடுப்பது (3) குதிரை பூமியை வலம்வந்து யாகசாலையில் பிரவேசம் செய்தல் (4) தமஸாநதிக்கரையில் யாகசாலை அமைப்பது (5) கும்போதாமுனிவர் பிரவேசம் செய்தது (6) முனிவர்கள் என்னுடைய நூற்றெட்டு நாமங்களைச் சொல்லி ஸ்தோத்திரஞ் செய்தல் (7) தினந்தோறும் ராமர் அநுஷ்டித்து வந்த செய்கை

(8) துவஜாரோபணம் (9) என் அவபிருதஸ்னானம் (10) ஸீதையைத் தானஞ்செய்தல் (11) ஸீதையை விடுதல் (12)ராமதீர்த்தம் முதலியவற்றை வர்ணித்தல் (13) யாகத்தின் முடிவு (14) பத்துயாகங்களைச் செய்தது (15) இவைகள் கூறப்பட்டிருக்கின்றன.

விலாசகாண்ட விஷய சூசிகை.

பிறகு என்னுடைய உத்தம ஸ்தோத்திரம் (1) கிரீடாசாலையை வர்ணித்தல் (2) பக்ஷிகளின் ஒன்பது ஸ்தோத்திரம் (3) நான் ஜானகியை வர்ணித்தது (4) நான் என்பத்தினிக்கு தேவராமாயணத்தை வர்ணித்தது (5) என்னுடைய தினசரிச் செய்கை (6) ஸீதையின் அலங்காரத்தை வர்ணித்தல் (7) பக்குவமான அன்னங்களின் விஸ்தாரம் (8) ஸீதையுடன் ஜலக்கிரீடை (9) மத்தியானத்தில் நான் செய்த கருமங்களை வர்ணித்தல் (10) போஜனம் முதலிய காரியங்களைக் கூறுதல் (11) ஸீதை பிராண ஸ்திரீகளுக்கு ஆபரணதானம் செய்தது (12) இரவில் ஸீதையுடன் அனேகவிடங்களில் கிரீடை செய்தது (13) வியாசமுனிவருக்கு முன்னிலையில் பதினாறு சொர்ணமூர்த்திகளைத் தானஞ்செய்தது (14) நான் தேவபத்தினிகளுக்கு வரம் கொடுத்தது (15) குணவதிக்கு வரம்கொடுத்தது (16) பிங்களைக்கு வரங்கொடுத்தது. (17) ஸீதையினுடைய நம்பிக்கைக்காக நான் ஸந்தோஷத்துடன் திவ்விய வஸ்துக்களைத் தானஞ்செய்தது (18)குருக்ஷேத்திரத்தில் அகஸ்திய முனிவரின் பத்தினியுடன் ஸீதை ஸம்வாதம் செய்து ஜயம்பெற்றது. இவைகள் விலாச காண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

ஜன்மகாண்ட விஷய சூசிகை.

ஸீதையின் ஆசைக்காக உத்தியான வனத்தில் செய்த கிரீடை (20) சீமந்தம் முதலியன (21) நான் ஜனக மஹாராஜாவை வான்மீகி முனிவராச்சிரமத்துக் கனுப்பியது (22) என் சொற்படி ஸீதை இரண்டு உருவம் தரித்தல் (23) கைகேயி ராவணன் கட்டைவிரலுக்குச் சரியான ஆகிருதியுடன் அவனை எழுதியது (24) உலகத்திலுள்ள ஜனங்கள் வண்ணான் இவர்கள் சொன்ன

அபவாதத்தைக் கேட்டு நான் ரஜோகுணம் தமோகுணம் கலந்த ஸீதையைக் காட்டிற்கு அனுப்பி ஸீதையின் கையை வரவழைத்தது. (25) நான் உருமாறி வான்மீகியின் ஆச்சிரமம் சென்று குமாரனுக்கு ஜாதகருமம் செய்தது (26) கங்கைக்கரையில் நான் நூறு யாகம் செய்தது (27) வான்மீகி முனிவர் தருப்பைகளின் லவத்தால் (அடியால்) லவன் என்ற மற்றொரு பிள்ளையை உண்டு பண்ணியது (28) அவ்விரு குமாரருக்கும் ராமரக்ஷைபால் முனிவர் அபிமந்திரணம் செய்தது (29) தாமரைப்புஷ்பங்களை லவன் கொண்டுபோய் ஜயமடைந்தது (30) என்யாகத்தில் பிள்ளைகள் முகமாக ராமாயணத்தை சிரவணம் செய்தது (31) லவன் செய்த யுத்தம் (21) ஜலத்தால் லவனுக் கபிஷேகம் செய்தல் (32) நான் குசனுடன் யுத்தம்செய்தது (33) ஸீதையின் சபதம் (34) பூமியில் பிரவேசித்த ஸீதையை யடைந்தது (34) யாகத்தின் முடிவு (35) பந்துக்களின் புத்திரர்கள் உற்பத்தி (36) பாலக்கிரீடை. (37) உபநயனம் (38) வேதாத்தியயனம் செய்தது, (39) பாலர்களின் சுபசூசக சின்னங்கள் (40) ஸீதை புத்திரர்களை லாலனம் செய்தது (41) எல்லோருக்கும் விரதபந்தம் செய்தது. (42) அவர்கள் யாத்திரை செய்தது. இவைகள் ஜன்மகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

## விவாககாண்ட விஷய சூசிகை.

பூரிகீர்த்தியின் பத்திரிகைப்படி அவன் நகரம் சென்றது. (1) என்னைப்பார்க்கப் பட்டணத்து ஸ்திரீகளுக்குண்டான ஆவல் (2) ராஜசபையில் அரசர்கள் யாவரும் என்னை நமஸ்காரம் செய்தது (3) கிரமமாக அரசர்களை வர்ணித்தது (4) சுநந்தை சுமதி இருவரும் இரத்தினமாலையை லவன் கழுத்தில் போட்டது (5) அனேகவித ஸம்மானத்துடன் விவாஹமஹோற்சவத்தின் உற்சாஹம் (6) இரண்டுமருமகள் ஸீதை இவர்களுடன் அயோத்திக்கு வந்தது (7) ஜலதேவிகளை நிக்ரகம் செய்தது (8) பாலர்களை விடுவித்தது (9) எல்லோருக்கும் நடந்த விவாஹ மஹோற்சவத்தின் வரலாறு (10) புத்திரர்களுக்குத் தனித்தனியாக கிருகங்களமைந்த விவரம் (11) காந்திபுரியினின்று மதனசுந்தரியை அப

ஹரித்தது. (12) யூபகேதுவின் விவாஹம் (13) பேரன் பேத்திகளின் கணக்கு (14) நான் எல்லோருடனும் சௌக்கியமாக இருந்தது (15) இவைகள் விவாஹகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

ராஜ்யகாண்ட முதற்பாக விஷய சூசிகை.

(1) என்னுடைய ஸஹஸ்ர நாமஸ்தோத்திரம் (2) கற்பக விருக்ஷம் சுரதரு இவ்விரண்டையும் துர்வாச மஹாமுனிவரின் அநுக்கிரகத்தினால் நான் சொர்க்கத்திலிருந்து வரவழைத்தது (3) என்னை உபாசிக்கிறவன் கிருஷ்ணனை உபாசிக்கிறவன் இருவருக்கும் நடந்த சம்வாதம் (4) காக்கைக்கு வரம் கொடுத்தது (5) நூறு ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்தது (6) நித்திரைக்கு ஸ்தானங்கள் கூறுதல் (7) தன்னை அநுசரிப்பவர்களிடம் கோபம் வரும் விஷயம் (8) நூறு தலைபுள்ள ராவணன் வதம் (9) பௌண்ட்ரகவதம் (10) ஸீதைக்கு விரகம் உண்டானது (11) மூலகாசுரஸம்ஹாரம் (12) பிரமதேவர் ஸீதையை ஸ்துதி செய்தது (13) இலங்கைக்கு நான்கு புறத்திலும் தன் வில்லைச் சுழலும்படி செய்து பட்டணத்துக்குள் சென்றது (15) கபிலவராஹமூர்த்தியையடைந்தது (16) அந்த மூர்த்தியைத் தன் பந்துவுக்குக் கொடுத்தது (17) லவணாசுரசம்ஹாரம் (18) மதுரையில் அரசாக்ஷியமைத்தது. (19) புத்திரர்களுக்கு ராஜ்யத்தைப் பாகித்துக் கொடுத்தது (20) நான் ஏழு தீவுகளுக்குஞ் சென்று ஜயம் அடைந்தது (21) ஸன்னியாசி சூத்திரன் கழுகு இவர்களுக்கு ஏற்பட்ட சிக்ஷை (22) ஏழு பிரதேசங்களைப் பிழைக்கச் செய்தது (23) சூத்திரர்களுக்கு வரம் கொடுத்தது (24) பிராம்மண ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்தது (25) நான் வேட்டையாடிப் பதினாயிரம் ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்தது (26) காளிக்கு வரம் கொடுத்தது (27) அரச விருக்ஷத்தைச் சேதிக்க முயற்சி செய்தது. இவைகள் ராஜ்யகாண்டம் முதற்பாகத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

ராஜ்யகாண்ட உ-வது பாகவிஷய சூசிகை,

(1) வான்மீகி முனிவரின் வசனப்படி ஹாஸிய விஷயமாக ஜனங்களுக்கு ஆஞ்ஞை செய்தது (2) அசுவினீ தேவர்களின் குமாரர்கள் சாபம் கொடுத்தது (3) பிரமதேவர் என்னவதாரங்களைத்

தனித்தனியாக வர்ணித்தது (4) வான்மீகி முனிவரின் மூன்று ஜன்மத்தின் வரலாறு (5) நான் வரம் கொடுத்தது (6) என் ராஜ்யத்தை வர்ணித்தது (7) ஹேமையின் சுயம்வரம் (8) சித்திராங்கதனுடன் யுத்தம் (9) கங்கணங்களுடைய கதை (10) லவனுக்கு ஜீவதானம் செய்தது (11) விஸ்தாரமாக ராமமுத்திரையை வர்ணித்தது (12) ராமநாதபுரத்தைத் தானம் செய்தது (13) அந்தணர்கள் அநுமானைக் கண்டது. (14) என்னுடைய தினசரியை (15) சொற்பசந்திக்கிக் காரணம் கூறல் (16) காதுசப்தத்தின் கதை (17) என்னவதாரங்கள் கொடுத்த வரம் (18) காயிதத்தின் பக்கத்தில் ஸ்ரீராம என்று எழுதுவதற்குக் காரணம் கூறல், (19) சுகுணைக்கு வரம் கொடுத்தது (20) நான் இரண்டு ரூபந்தரித்தது (21) துளசியோடு அதன் இலைசேர்ந்தது (22) ராமாயண சிரவண பலன் (23) சுமந்திரனுக்கு ஜீவதானம் செய்தது (24) யமனுடன் யுத்தம் செய்தது (25) ஏழுதீவுகளெங்கும் நான் தருமசிக்ஷை செய்தது. இவைகள் இராஜ்யகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

(1) நாரதமுனிவர் சொல்லிய பரிசுத்தமான நூறு சுலோக மடங்கிய என் சரித்திரம் (2) பட்டணத்து ஜனங்களுக்கு உபதேசம் செய்தல் (3) நகரிலுள்ளவர்களுக்கும் தன் தாய்மார்களுக்கும் பிறர்முகமாக உபதேசம் செய்தல் (4) மானஸிகபூஜை (5) பாஹ்யபூஜை நான் ஒன்பது உருவம் எடுத்துக்கொண்டது. (6) ராமலிங்க தோபத்ரங்களின் அனேக விதபேதங்கள் (7) மாச நவமியின் விஸ்தாரம் (8) ஸ்திரீ ராஜ்யத்தில் உண்டான கதை (8a) என்னுடைய நாமதேயங்களை எழுதி உத்யாபனம் செய் (9) தானம் செய்வதின் விஸ்தாரம் (10) சிரஞ்சீவிகளின் வரலாறு (11) வேதம் முதலியவைகளைச் சிரவணஞ் செய்யும் பலன் (12) இரண்டரை மாதம் வரையில் செய்யும் என்னுடைய விரதத்தின் மகிமை (13) திதிகளின் விஸ்தாரம் (14) கௌரீ விரதத்தின் விஸ்தாரம் (15) என்னைத் தோளகத்தில் பூஜை செய்வது (16) நவமியில் என் மூர்த்தியைத் தானஞ் செய்தல் (17) தமனோத்ஸவத்தின் விஸ்தாரம் (18) காம்மிய தேவதைகளின் விஸ்தாரம் (19) ரகாரத்தை ஆதியிற்கொண்ட பதம் சிறந்த குண

முள்ளது என்ற விஷயம் (20) என்னுடைய நாமத்தின் மகிமை (21) எந்நாமத்தின் அர்த்தம் (21) சைத்திர விரதத்தின் விஸ்தாரம் (22) ராக்ஷஸர்கள் முதலியவர்களின் நல்லகதி (23) அத்வைத விளக்கம் செய்தல் (24) ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்தல் (25) என் முத்திரையுள்ள வஸ்திரத்தின் மகிமை (26) ஸீதை லக்ஷ்மணர் முதலியவர்களின் கவசத்தைத் தனித்தனியாகக் கூறுதல் (27) ஸீதளா விரதத்தின் மகிமை (28) அதன் உத்தியாபனம் ராம நாமதோ பத்ரம் (28) கீர்த்தனம் செய்ய மந்திரங்கள் (30) அநுமானுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் பதாகாரோபண மென்னும் விரதம் (31) நான் உனக்குபதேசித்த ஸார ராமாயணம் (32) அநுமான் அர்ஜுனன் சரச்சேதுவைக் கண்டித்தது. இவைகள் மனோஹர காண்டத்தில் கூறப்பட் டிருக்கின்றன.

(1) வான்மீகி முனிவர் சந்திர வம்சத் தசரார்களைப் பற்றிய சரித்திரத்தைக் கூறுதல் (2) புத்திரர்களுக்கு அபிஷேகம் செய்வித்தல் (3) ஹஸ்தினபுரத்தை உத்தேசித்துப் பிரயாணமாகுதல் (4) பெரிய யுத்தம் (5) புத்திரர்களுக்கும் எனக்கும் நடந்த யுத்தத்தில் கங்கைவற்றல் (6) பிரமதேவர் வான்மீகி முனிவர் குசன் இவர்களுடைய பிரார்த்தனை (7) சத்ருஸ்திரீகளின் பிரார்த்தனையால் ஸீதையின் குமாரனைத் தடைசெய்தது (8) பிரமதேவருடைய வாக்கியப்படி வைகுண்டம் செல்ல முயற்சி செய்தல் (9) சந்திர வம்சத்திலுண்டானவர்க்கு ஹாஸ்தின ராஜ்யம் கொடுத்தது (10) ஆஜமீடனுக்கு அபிஷேகம் செய்வித்தது (11) எல்லோரையும் விசர்ஜனம் செய்தது (12) குசன் தன்னகருக்குச் சென்று அரசாக்ஷி செய்தது (13) ஸர்ப்பராஜன் தங்கையாகிய குமுதவதிக்கு வீரபரம்பரை உண்டானது (14) நான் வானரர்களுக்கும் லக்ஷ்மணருக்கும் வரம் கொடுத்தது (15) அயோத்தியிலிருப்பவர்கள் தேகத்தியாகம் செய்தது (16) வானரர்கள் தேவர்களாகவும் ஸீதை லக்ஷ்மியாகவும் லக்ஷ்மணன் ஆதிசேஷனாகவும் பரதன் சங்கமாகவும் சத்ருக்னன் சுதர்சனமாகவும் நான் விஷ்ணுவாகவும் ஆனது (17) அப்பொழுது ஊர்மிளை முத

ஷிய ஸகல ஸ்திரீகளும் பிரயாணமானது (18) தேவஸ்திரீகள் நீராஜனம் செய்தது (19) அவர்களுக்கு ஸாந்தானிகபதம் கிடைத்தது (20) என்னைப் பரமசிவன் ஸ்தோத்திரம் செய்தது (21) நான் கருடனை வாகனமாக அடைந்தது (22) புஷ்பவருஷ முண்டானது (23) அப்பொழுது நான் வைகுண்டம் சென்று அங்கு இலட்சுமியுடன் இருந்துகொண்டு தேவர்களை அனுப்பியது (24) சூரிய வம்சத்தின் அநுக்கிரகம் (25) ஆநந்த ராமாயணத்தின் காண்டங்களின் எண்ணிக்கை (26) சருக்கக் கணக்குகள் (27) சுலோகக் கணக்குகள் (28) பல சுருதி (29) ராமாயண சிரவணத்தின் உத்தியாபனம் (30) கிரந்தங்களை தானஞ்செய்தது (31) அநுஷ்டானம் (32) ஐந்துவித பிரகாரங்கள் (33) அநுஷ்டானத்தின் உத்தியாபனம் (33) சகுனத்தின் விஸ்தாரம் (35) குரு சீஷர்களாகிய உங்களுடைய சம்வாதத்தின் முடிவு (26) தேவியின் சந்தேக நிவர்த்தி (37) இதைப் பாராயணம் செய்வதின் பலன் (38) ராமாயண மகிமையை ஒரு சுலோகத்தால் தெரிவித்தல் (39) என் தியானம் (40) சிவனுக்கும் பார்வதிக்கும் உண்டான சம்வாதம் முடிவானது இவைகள் பூர்ண காண்டத்தில் சொல்லப்படுகின்றன.

ஏ! ராமதாச! உனக்கு என் சரித்திரங்களின் நினைவுண்டாகும் பொருட்டு இந்த ஸார ராமாயணத்தை உபதேசஞ் செய்தேன். இது மிகவும் இரகசியமான விஷயம். மிகவும் புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியது. நூறுகோடி கிரந்தம் உள்ள ராமாயணத்திலிருந்து மிகவும் ஸாரமாக இருப்பதை எடுத்து நான் உனக்குக் கூறினேன். இப்பூமியில் எல்லாவற்றையும் வர்ணித்த வான்மீகி முனிவரே கிருதார்த்தர். இந்த ஸாரராமாயணத்தைப் படிப்பவர்களுக்கு நான் சந்தோஷத்துடன் இஹத்தில் போகத்தையும் பரத்தில் மோக்ஷத்தையும் கொடுக்கிறேன். ராமாயணம் முழுவதையும் கேட்க அவகாச மில்லாவிடில், இந்த ஸாரராமாயணத்தைக் கேட்கவேண்டும். நான் செய்த மற்ற எந்தக் காரியங்களும் என்னிச்சைப்படி உன்முகமாக வெளிவரப் போகின்றன. என் சரித்திரமெல்லாம் உன் கண்ணுக்குப்புலப் படப்போகின்றன. அப்பொழுது விஷ்ணுதாசன் என்ற உன் சீஷனுக்கு இதைச்சொல்—என்று கூறினார்.

ராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாச! ராமசந்திரர் எனக்குக் கூறிய ஸாரராமாயணத்தை உனக்குக் கூறினேன். இது ரம்மியமானது; பரிசுத்தமானது; மஹாபாதகங்களை நாசஞ்செய்யக்கூடியது; போகமோக்ஷங்களைக் கொடுக்கக்கூடியது. எப்போதும் மானிடர்கள் இதை ஜபம் செய்தல்வேண்டும். ராமாயணம் முழுவதையும் சிரவணஞ்செய்த பலனை இந்த ஸாரராமாயணத்தைப் பாராயணம் செய்பவர்களடைவார்கள். இது ஸத்தியம்! ஸத்தியம்!! ஆகையால் மானிடர்கள் சகல தோஷங்களையும் நிவிருத்திசெய்து புத்திரர்கள் பௌத்திரர்கள் ஸ்திரீகள் இவர்களைக் கொடுத்து மிகுந்த சுகத்தை விருத்தி செய்யும் இந்த ஸாரராமாயணத்தைப் பாராயணம் செய்ய வேண்டும். சீடனே! ராமாயண மனேகம் பூமியிலிருக்கின்றன. ஆயினும் இதற்குச் சமமாக முன்னேற்பட்டதுமில்லை. இனி ஏற்படப் போகிறதுமில்லை. நிச்சயம்.

ராமச்சந்திரர் உபதேசஞ்செய்த

ஸாரராமாயணத்தைக்கூறும்

**17-வது சருக்கம்**

முற்றிற்று.

## 18 - வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

ஏ குருவே! முன்பு நான் அர்ஜுனன் அனுமத் துவஜமுடையவனென்று கேள்விப்பட்டேன். அதனால் கபித்துவஜன் என்ற பெயரும் அர்ஜுனனுக் குண்டென்று தெரிந்துகொண்டோம். அங்ஙனம் ஏற்பட்டதற்குக் காரணங் கூறவேண்டும்.

### ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

சிட்டனே! நன்றாக வினவுகிறாய்; சாவதான மனதுடன் கேள்; துவாபரயுகத்தின் கடைசியில் நடக்கப்போகிற கதையை நான் கூறுகிறேன்.

ஒரு சமயத்தில் அர்ஜுனன் கிருஷ்ணனின்றித் தேரின்மீதேறிக்கொண்டு தென்றிசையிலுள்ள ஒரு பெரிய ஆரணியத்தில் வேட்டைக்காகச் சென்றான். தான் ஒருவனாகச் சாரதியிருக்குமிடத்தில் உட்கார்ந்து தேரைச் செலுத்திக்கொண்டு பாணங்களால் மிருகங்களை அடித்து வரும்போது அன்று பகலில் ஸ்னானம் செய்ய எண்ணி ராமேசுவரம் சென்று ஸேதுவில் ஸ்னானம் செய்து மாத்தியான்னிகம் முதலிய கருமங்களை முடித்துக் கொண்டு மறுபடி தேரின்மீதேறிச் சமுத்திரக் கரையில் கொஞ்சம் கருவத்துடன் சஞ்சரித்தான். இச்சமயத்தில் அரண்ணியத்தில் பர்வதத்தின்மேல் சாமானியக் கபிபோல் வேடம் பூண்டு ராமராம என்று ஜபம் செய்து பிங்கள வர்ணமுள்ள ரோமங்களுடன் உட்கார்ந்திருக்கும் மங்கள சொரூபராகிய அனுமானைக் கண்டு அர்ஜுனன் ஏ குரங்கே! உன்பெயர் என்ன! என்று வினவினான்.

இவ்விதம் அர்ஜுனன் கேட்டதும் அனுமான் மந்தஹாஸம் செய்து “ ஸ்ரீராமச்சந்திர பிரபு நூறுயோசனை தூரம் சமுத்திரத்தில் கற்களால் அணைகட்டியது எவனுடைய பிரதாபத்தாலோ அவன் நான். என் பெயர் அனுமான்; வாயுவின் குமாரன் ” என்று பதிற் கூறினார்.

இப்படிக் கருவத்துடன் கூறின வார்த்தையைக் கேட்ட அர்ஜுனன் தானும் கருவத்துடன் சிறித்து முன்னால் நிற்கும் அநுமானை நோக்கி, முன் ராமன் கடலில் அணைகட்டியது வீண் சிரமம். இராமன் தன் பாணங்களாலேயே அணைகட்டி என் காரியசித்தி யடைந்திருக்கலாகாது என்றான்.

உடனே? அநுமான், "அர்ச்சுனா! என்னைப்போன்ற கவிக ளின் பாரத்தினால் சரஸேதுவானது சமுத்திரத்தில் அமிழ்ந்து விடுமென் றெண்ணி ரகுநந்தனன் அங்ஙனம் அணைகட்டவில்லை" என்றான்.

அர்ஜுனன் அநுமான் கூறியதைக் கேட்டு "ஆஞ்சனேய! வானசிரேஷ்டனே! கவிகளின் பாரத்தினால் சரஸேது சமுத் திரத்தில் அமிழ்ந்து போவதானால் வில்லாளியின் வில்வித்தைக்கு மகிமை என்ன இருக்கிறது? நான் உனக்கு முன்னால் இப்போது சரஸேதுவைக் கட்டுகிறேன். நீ அதன்மேல் நர்த்தனம் முதலிய வற்றை உன்னிஷ்டம்போல் செய், பிறகு என் வில்வித்தையைப் பார் என்றுரைத்தான். அநுமான் புன்னகைகொண்டு அர்ஜுனா! என்கால் கட்டைவிரல் பட்டவுடன் நீ கட்டும் சரஸேது சமுத் திரத்தில் முழுகிவிட்டால், நீ என்ன செய்கிறாய் சொல்" என்றார்.

அர்ஜுனன்! ஆஞ்சனேய! உன் பாரத்தினால் என் சரஸேது ஜலத்தில் முழுகிவிட்டால், இவ்விடமே அக்கினிப் பிரவேசம் செய்து விடுகிறேன். இது சத்தியம்; முழுகச் செய்யாவிடில் நீ என்ன செய்கிறாய் உன் பந்தயத்தைத் தெரிவி என்றார்.

அநுமான் அர்ஜுனன் செய்த பிரதிஞ்கையைக் கேட்டு; அர்ச்சுனா! உன் சரஸேதுவை நான் என்கால் கட்டைவிரலால் சமுத்திரத்தில் முழுகும்படி செய்யாவிடில் உன்னுடைய ரதத் தின் துவஜத்திலிருந்து உனக்கு வேண்டிய உதவியைச் செய் கிறேன்" என்றார். அர்ஜுனன் "சரி அவ்விதமே யாகட்டும்" என்றுரைத்து, மஹத்தான வில்லை எடுத்து டணா! என்றோசை யிடச் செய்து பாணங்களைப் பிரயோகித்து, நெருக்கமாகவும் கெட்டியாகவும் ஓர் ஸேதுவைக் கட்டினான்.

அநுமான் உடனே சமுத்திரத்திற்கு மேல் நூறு யோசனை தூரம் உள்ள சரஸேதுவைப் பார்த்து அர்ஜுனன் கண்முன் பாகவே ஒரு கணநேரத்தில் தமது கால் கட்டை விரலால் சமுத்திரத்தில் அந்த ஸேதுவை முழுகும்படி செய்தார். அப்பொழுது தேவர்கள் கந்தருவர்கள் கின்னரர்கள் உரகர்கள் அரக்கர்கள் வித்தியாதரர்கள் அப்சரஸ்திரீகள் ஸித்தர்கள் எல்லோரும் ஆகாயமார்க்கத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தார்கள்.

அர்ஜுனன் இதைப் பார்த்துச் சமுத்திரக்கரையில் சிதையை அடுக்கித் தேகத்தைவிட நிச்சயம் செய்தான். அநுமான் வேண்டாமென்று தடுத்தும் கேட்கவில்லை. இந்தச் சமயத்தில் கிருஷ்ணபகவான் அர்ஜுனன் மூலமாக சரஸேதுவின் சம்பந்தமாய் நடந்த பந்தயம் முதலியவற்றைத் தெரிந்துகொண்டு பிரமசாரி வேடத்துடன் எதிர்தோன்றி நீங்களிருவரும் முன்செய்த காரியம் யாவும் வீண்தான். சாக்ஷியின்றிச் செய்யும் காரியம் பொய் யென்றும் உண்மை என்றும் தெரியவராது. நீங்களிருவரும் இப்போது முன்போல் செய்தால் நான் பார்வையிட்டு உண்மை பொய் என்பதைத் தெரிந்து சொல்லுகிறேன் என்றார். அர்ஜுனன் அநுமான் இருவரும் பிரமசாரியின் சொல்லைக்கேட்டு "சரி அவ்விதமே செய்வோம் சம்மதம்" என்று கூறினார்கள்.

பிறகு காண்டீவம் என்ற தநுசால் முன்போல் சரஸேதுவைக் கட்டினான். அந்த ஸேதுவுக்கு மத்தியில் கிருஷ்ணன் சக்கிராயுதத்தை வைத்தார். பிறகு ஆஞ்சநேயர் தமது காற் பெருவிரலால் சரஸேதுவை அழுத்தினார். ஸேது அசையவில்லை அது கண்டு பாதங்கள் முழங்கால்கள் கைகள் இவைகளைக் கொண்டு தமது முழுபலத்தாலும் அழுத்தினார். அப்படியும் அந்த ஸேது அசையவில்லை. அப்பொழுது வானரோத்தமன் பேசாமல் மனதில் ஆலோசனை செய்தார். முன் பெருவிரலால் சமுத்திரத்தில் முழுகின ஸேது, இப்பொழுது கைகால்களால் உதைத்தும் அசையவில்லை. இதற்குக் காரணம்: இந்த பிரம்மசாரியல்ல; ஸ்ரீமந் நாராயணன்தான். நான் கருவமடைந்தமையால், அற்புதமான செய்கையையுடைய ஸ்ரீகிருஷ்ணன் அதைப் பரிகாரம் செய்ய வந்திருக்கிறார்.

கிருஷ்ணனுக்கு முன்னிலையில் குரங்கின் பராக்கிரம மெங்கே?'' என்றெண்ணி அர்ஜுனனை நோக்கிக் கூறுகிறார்.

ஏ அர்ஜுனா! நீ வென்றாய்; அது இந்த பிரமசாரியின் உதவியாலேயேயாம். இவர் பிரம்மசாரியல்ல; ஸேதுவில் சக்கிரத்தைப் பிரவேசிக்கச் செய்த கிருஷ்ணன், உன் உதவிக்காக வந்தவரென்பதை நானறிந்தேன். இது உண்மை. இவர் திரேதாயுகத்தில் ராமராக இருக்கும்போது எனக்கு துவாபரயுகத்தில் கிருஷ்ண வேஷத்துடன் தரிசனம் கொடுப்பதாக வாக்களித்திருந்தார். அந்தச் சொல்லை உண்மையாக்குவதற்கு உன் ஸேதுவைக் காரணமாகக் கொண்டு வந்திருக்கிறார்'' என்று அர்ஜுனனிடம் அநுமான் பேசிக்கொண் டிருக்கும்போதே பகவான் பிரமசாரி வேடத்தை விட்டுக் கிருஷ்ண ரூபத்துடன் தரிசனம் கொடுத்தார். ஆஞ்சனேயர், பீதாம்பரதரனும் நீலமேக வர்ணனுமாகிய கிருஷ்ணனைப் பார்த்தவுடன் புளகாங்கிதமுற்று, வணங்கினார். கிருஷ்ணன் மாருதாத்மஜனை ஆலிங்கனம் செய்துகொண்டார். மாருதாத்மஜா தன்னை கிருதகிருத்தியனாகக் கருதிச் சந்தோஷித்தார். பிறகு ஸ்ரீகிருஷ்ணனுடைய உத்தரவினால் சக்ரம் இருப்பிடம் சென்றது. சமுத்திரத்தின் அலைகளால் சரஸேதுவுங் கலைந்து போய்விட்டது. அப்போது அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணனால் பிழைத்தோமென் றெண்ணிக் கர்வமடங்கினான். கிருஷ்ணபகவான். அப்போது அர்ஜுனனைப் பார்த்து "நீ ராமரைத் தூஷித்தாய்? அதனால் அநுமான் உன் வில்வித்தையைப் பொய்யாக்கினார்'' என்றார்.

"ஏ ஆஞ்சனேய! நீ எவன் பிரதாபத்தால் ராமர் கடலில் அணைகட்டினாரோவென்று ராமரைத் தாழ்த்திப் பேசியதால் அர்ஜுனனால் ஜயிக்கப்பட்டாய். இனி கருவமில்லாமல் எப்போதும் என்னைப் பஜனம் செய்'' என்று மாருதிக்குச் சொல்லி அர்ஜுனனுடன் அவன் பட்டணம் சென்றார். ஆகையால் அர்ஜுனன் கபித்துவஜ முடையவனென்று எல்லோரும் கூறுகிறார்கள்,

விஷ்ணுதாஸ! இவ்விதம் வரப்போகிற வரலாற்றைக் கூறினேன். இன்னமும் என்ன கேட்க விரும்புகிறாய்? கேள்—

### விஷ்ணுதாஸர் வினவுகிறுர்.

ஏ குருவே ! இப்பொழுது ராகவன் வைகுண்ட ரோஹணம் செய்த உற்சவத்தை விஸ்தாரமாகச் சொல்ல வேண்டும். அதனுல் நான் சந்தோஷமடைவேன்.

### ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறுர்.

விஷ்ணுதாஸ! ஸ்ரீராமச்சந்திரன் வைகுண்ட ரோஹணேற்சவம் செய்யும் வரலாற்றைக் கூறும் பூர்ண காண்டத்தைக் கூறுகிறேன்; அதைக்கேள். இந்த மனோஹர காண்டத்தைக் கேட்பவர்களுக்கு ராமரிடம் பக்தியும் புத்திரன் பொருள் மற்றுமுள்ள மனேபீஷ்டங்கள் யாவுமுண்டாகும். சந்தேகமில்லை. இது பரிசுத்தமானது; இரம்மியமானது; சிரவணஞ் செய்தால் மங்களமுண்டாகும். இது ராமபக்தியை விருத்தி செய்யக் கூடியது. ஆனந்த ராமாயணத்தின் மத்தியிலிருக்கக் கூடிய இந்த மனேஹரகாண்டத்தைப் படிப்பவர்களும் சிரவணம் செய்பவர்களும் கீர்த்தனம் செய்பவர்களும் மனேரதமெல்லாவற்றையும் அடைவார்கள். ஆகையால் மானிடர்கள் அவசியம் எப்போதும் ஸந்தோஷத்துடன் அனேக சரித்திர மடங்கிய இந்தக் காண்டத்தைச் சிரவணம் செய்யவேண்டும்.

அநுமான் சரஸேது பங்கம் செய்ததைக் கூறும்
பதினெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## மனேகரகாண்டம்
முற்றிற்று.

# பூர்ண காண்டம்.

ராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ஸீதையுடன் ராஜ சிரேட்டராகிய ராமர் அரசு புரிந்து வந்தார். அப்போது சபையில் அத்தினபுரியிலிருந்து சுஷேண னனுப்பிய தூதனொருவன் இழந்த அவயவங்களுடன் அவரது சபைக்கு வந்து நமஸ்கரித்து "ராஜீவபத்ராக்ஷ! ராம! சந்திரவம்சத் தரசர்கள் அஸ்தினபுரியை முற்றுகை செய்திருக்கின்றனர்" என்று தெரிவித்தான். அந்தத் தூதனுடைய வசனத்தைக் கேட்ட ராகவர் மிகவும் ஆச்சரியமடைந்து, வசிஷ்டமுனிவரைநோக்கி, "குருவே! என் இராஜ்யத்தில் எப்போதும் என்னுடன் போர்புரிய அரசர்கள் வருகிற வழக்க மில்லை. இப்போது வந்தகாரணம் தெரியவில்லை. இவ்விஷயத்தை நன்றாக விசாரிக்க வேண்டும்" என்றார்.

இதைக்கேட்ட வஸிஷ்டமுனிவர் "ராம! "உன் சரித்திரத்தை எழுதிய வான்மீகி முனிவரைக் கேட்டால் தெரியவரும்" என்று கூறினர். உடனே ரகுவீரன் லக்ஷ்மணரை அழைத்து வான்மீகி முனிவரை அழைத்துவரக் கட்டளையிட்டார். அம்முனிவர் வந்தவுடன், ராமர் ஸீதையுடன் அவருக்குப் பூஜை செய்து அவ்விஷயத்தைப்பற்றி விசாரித்தார். வான்மீகிமுனிவர் அதைக் கேட்டதும் புன்முறுவல் செய்து "ராம! தங்களுக்குத் தெரியாத விஷயமில்லை. என்னைக் கேட்பது விநோதமாக இருக்கிறது. ஆயினும் நான் சொல்லுகிறேன். எல்லோரும் கேட்கட்டும்! ராமசந்திர! தாங்கள் அவதாரம் செய்வதற்கு முன்னமேயே நான் செய்த கிரந்த விஸ்தாரமான சதகோடி ராமாயணத்தில் தங்களுடைய ராஜ்யத்தின் காலவரையறையை நிச்சயம் செய்திருப்பது பதினோராயிரம் வருஷம். பிறகு பதினோருவருஷம் பதினோரு மாதம் பதினோருநாள் பதினோருநாழிகை பதினோருநிமிஷம் ஏற்பட்டதுண்டு. வருஷங்கள் யாவுங் கழிந்தன. பாக்கியுள்ளது மாத கணக்குத்தான். அதில் பதினெட்டுநாள் குறைவாக ஒரு வருஷம் பாக்கியுள்ளது. இந்தக் காலமும் யுத்தத்திலேயே செல்லப்போகிறது. ராம! குறிப்பிடப்பட்டகாலம் முடிவாகிவிட்டது.

தங்களுடைய முன்னோர்கள் இந்தப் பூமிக்குக் கொண்டு வந்த கங்காநதி சென்று விதிப்படி ஸ்நானஞ்செய்து பிரம்மாதிகள் ஸ்தோத்திரஞ் செய்யத் தங்கள் ஸ்தானமடைய போகிறீர்கள்'' என்றார். இந்த வாக்கியத்தைக் கேட்ட ராமர் "முனிவரே இப்போது கஜபுரியை முற்றுகைசெய்த நளன் முதலியவர்கள் இதுவரையில் எங்கிருந்தார்கள்? இப்போது எதன் பொருட்டு வந்தார்கள்? இவ்விஷயத்தை விஸ்தாரமாகச் சொல்ல வேண்டும்'' என்று வினவினர்.

### வான்மீகி முனிவர் கூறுகிறார்.

மஹா பாஹுவாகிய ராம! முன் கிருதயுகத்தில் அத்திரி முனிவர் வைசாக பூர்ணிமையில் ஸ்திரீ முகம் போன்ற சந்திரனைக் கண்டு மோஹங்கொண்டார். உடனே அவர் வீரியம் நழுவி பூமியில் விழுந்தது. அதிலிருந்து ஒரு புத்திரனுண்டானான். ஸோமனைப் பார்த்ததன் காரணமாக உண்டான புத்திரனாகையால், அவன் ஸோமன் என்ற பெயரை அடைந்தான். அந்த ஸோமன் கங்கைக் கரையிலுள்ள ஓர் அரண்யத்தில் தவஞ்செய்து கொண்டிருந்தான். இச்சமயத்தில் ஒரு யானை அங்குவந்து பக்ஷிகளால் அடிபட்டிறந்தது. இந்த வேடிக்கையைப் பார்த்த ஸோமன் ஆலோசித்து, "பக்ஷிகளால் யானை நாசமடைவது மிகவும் ஆச்சரியம். இது இந்தப் பூமியின் மகிமை'' என்று நிச்சயம் செய்து கொண்டு அங்கு ஒரு நகரமமைத்தான். யானையின் ஹஸ்திநாசமடைந்தவிடமாகையால் அந்நகரத்திற்கு ஹஸ்திநபுரி என்று பெயர் ஏற்பட்டது. ஏ ரகூத்தம! அங்குள்ளவர்கள் இந்த ஸோமனையே அந்நகருக் கரசனாகச் செய்து கொண்டார்கள். அந்த ஸோமனுக்குப் புதன் என்ற புத்திரன் உண்டானான். அவ்விருவரும் தீவுகளுடன் பூமண்டலத்தைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு பிறகு தேவலோகம் சென்று தேவர்களனைவரையும் ஜயித்து தேவஸ்திரீகளுடன் சுகமாக ரமித்து வசித்தார்கள். இவ்விருவரும் தேவர்களை விடுவித்தபோது பிர்ம்மதேவர் இவர்களுக்கு அநேக வரங்கள் அளித்தார்.

அவை வருமாறு:—ஏ ஸோம! ஏ புத! நீங்களிருவரும் என் வம்சத்தில் பிறந்தவர்கள். உங்களால் நானும் தேவர்களும்

விடுதலையை அடைந்தோம். வரனைக்கேளுங்கள் கொடுக்கிறேன் என்று கூறி உங்கள் வம்சத்தில் மூன்று தலமுறைக்கு மேல் எழு தலமுறை வரையிலுள்ள அரசர்கள் பிறரால் அவமானமடையாம லிருப்பார்கள் என்று வரம் கொடுத்து தமதிருப்பிடம் சென்றார்.

பிறகு தேவேந்திரன் ஸோமனுக்குத் தன் பெண்ணுக்குப் பெண்ணாகிய பத்மாவதியை விவாஹம் செய்துகொடுத்தான். ஸோமன் புதன் இருவரும் இச்சைப்படி சஞ்சாரம் செய்துகொண் டிருந்தார்கள். புதனுக்கு புரூரவசு என்ற குமாரன் உண்டாகி மிகுந்த கீர்த்தியை அடைந்து அஸ்தினபுரியில் அரசுபுரிந்து வந் தான். அவனுடைய புத்திரன் கவ்ஷியன், அவன் குமாரன் அல் பன் என்ற பெயருள்ளவன். அல்பனுடைய குமாரன் நளன் அன் னளன் ஸ்ரீமானாகவிருந்து திக்பாலர்களை ஜயிக்க முயற்சித்து தன் முன்னோர்களாகிய புரூரவசு கவ்ஷியன் அல்பன் இம்மூவரையும் இராஜ்யத்தில் வைத்து ஏழு தீவுகளில் உள்ள அரசர்களுடன் உன்னதமான மேருபர்வதத்தை யுத்தேசித்துச் சென்றான். முத லாவது அக்னி பிறகு யமன் நிருருதி இவர்களை ஜயித்துக்கொண்டு இராவணன் முதலியவர்களுடன் வருணனிடம் சென்றான். இச் சமயத்தில் இராவணன் வெகு விரைவாகச் சேனையுடன் சொர்க்க லோகம் சென்று இந்திரன் முதலிய அமரர்களை வென்று தன் னகரமாகிய இலங்கைக்கு அந்தத் தேவர்களைக்கொண்டு வந்தான். இதைக்கண்ட ஸோமன் கோபங்கொண்டு புத்திரர்களுடன் புறப் பட்டு தன் பந்துக்களாகிய இந்திரன் முதலிய தேவர்களை விடு விக்க இலங்கைக்கு இராவணனிடம் செல்ல முயற்சித்தபோது பிர்ம்மதேவர் பரபரப்புடன் ஸோமனிடம் வந்து, மஹா விஷ்ணு மானிட வடிவத்துடன் அவதரித்து இராவணனைச் சங்கரிக்கப் போகிறார். நீ இப்போது அவனிடம் செல்லாதே. நான் அவனு க்கு வரம் கொடுத்திருக்கிறேன் என்று தடுத்தார். இவ்வசனத் தைக் கேட்ட ஸோமன் தன் பிரயாணத்தை நிறுத்திக்கொண்டு அமராவதிக்குச் சென்றார்.

பிறகு பூமியில் நளன் அரசனாகி வருணன் வாயு குபேரன் ஈசானன் இவர்களை ஜயித்து தன்னைக் கிருத கிருத்யனாக எண் ணிக்கொண்டு கடைசியில் சொர்க்கம் சென்று இந்திரனை ஜயிக்க முயற்சித்தான். அச்சமயம் கிருதயுகம் முடிந்தது.

பிறகு திரேதாயுகம் முடியுங்காலத்தில் சைன்னியத்தைப்பார்த்து இராவணனைக் காணுமல் இராவணன் தேவர்களுடன் இந்திரனையும் ஜயித்து இலங்கைக்குச்சென்ருன் என்பதைத்தூதன்மூலமாகத்தெரிந்துமார்க்கத்தில் வெகுநாள் சஞ்சாரஞ் செய்துகொண்டிருந்தான். பிறகு நளனுக்கு நத்தியுகன் என்ற குமாரனும் நத்தியுகனுக்கு ஜாதிகானும் ஜாதிகானுக்கு வசுதேவனும் வசுதேவனுக்கு லகுசுருதனும் லகுசுருதனுக்கு சுரதனும் சுரதனுக்கு அஜமீடனுமாக வம்சம் விருத்தி யடைந்தது. பிறகு நளன் மந்திரிகளுடன் ஆலோசித்தான். நாம் எதற்காக இந்திரலோகம் செல்லவேண்டும். இராவணன் தேவர்களை ஜயித்து இலங்கைக்கு வந்திருப்பதால் தேவர்கள் பூமியிலிருப்பதாகத் தான் தெரியவருகிறது. இராவணனே நமக்குக் கப்பம் கட்டுகிறவன். நாம் வெகுநாளாகத் திக்குகளில் சஞ்சாரம் செய்தேகாலத்தைக் கழித்தோம். புரூரவசு முதலிய நம்முன்னோர்களின் வரலாறு ஒன்றுந்தெரியவில்லை. ஆகையால் நம்முன்னோர்களாகிய மூவர்களையும் பார்க்கவேண்டும். ஸோமனையும் புதனையும் பார்க்க சொர்க்கம் போகவேண்டுமென்கிற ஆவலிருக்கிறது. இராவணன் அவ்விருவரையும்வென்று பிடித்துக்கொண்டு போனுனே அல்லது அவ்விருவரைத் தவிர மற்ற தேவர்களை மட்டிலுமோ தெரியவில்லை. அதற்கு நாம் ஹஸ்தினபுரிக்குக்சென்றால் வரலாறு தெரியவரும். பிறகு எவ்விதம் செய்யவேண்டுமோ அவ்விதம் செய்வோம் என்று நிச்சயித்துக்கொண்டு நளன் தன்னகரம் வந்தான்.

இராம! இச்சமயத்தில் நீர் பூமியில் அவதாரம் செய்து இராவணனைக்கொன்று உம்மால் விடுவிக்கப்பட்ட தேவர்கள் சொர்க்கஞ் சென்ருர்கள். பிறகு நீர் ஏழு தீவுகளிலுள்ள அரசர்களைத் சுவாதீனப்படுத்திக்கொண்டீர். ஹஸ்தினபுரியிலிருக்கும் புரூரவசு முதலிய அரசர்களைப்பட்டணத்திலிருந்து வெளிப்படுத்திவானரர்களுடன் சுஷேணனை ஸ்தாபித்து வந்தீர். புரூரவசு முதலியவர்கள் சிலகாலஞ் சென்றபின்பு மரணமடைந்தார்கள். இப்பொழுது ஸோமவம்சத்திலுண்டான நளன் முதலிய ஏழுபேர்கள் 'ஏழுதீவுகளிலுள்ள அரசர்களுடன் தன்னகரம் வந்திருக்கிருர்கள். இராம!

அந்த அரசர்கள் உம்மால் ஏற்கனவே ஜயிக்கப்பட்டவர்கள். அவர்கள் தங்கள் தங்கள் சேனைகளுடனும் நளன் முதலானவர்களுடனும் சேர்ந்து கஜபுரிக்குவந்திருக்கிறார்கள். இராமச்சந்திரபிரபுவே! உமக்கும் அவ்வரசர்களுக்கும் யுத்தம் நடக்கப்போகிறது. சண்டை நடக்கும்போது பிரமதேவர் வந்து நளன் முதலியவர்களை உம்முடைய பாதங்களில் விழும்படி செய்யப்போகிறார். பிரமதேவர் உம்மை மிகவும் பிரார்த்தனை செய்து வைகுண்டத்திற்கு அழைத்துக்கொண்டு போகப்போகிறார்.

இராமா! நளன் முதலியவர்களைப் பற்றி நீர் கேட்ட பிரகாரம் விஸ்தாரமாகக் கூறினேன். இராஜசிரேஷ்ட! விவாஹகாண்ட முதல் நான் உம்முடைய குமாரர்களுக்குச் சிரவணம்செய்வித்திருக்கிறேன். நீர் கேளுமென்றுரைத்து குசலவர்களுக்கு வான்மீகி ஆஞ்ஞை செய்ய, விவாஹ காண்டம் முதல் நான்கு காண்டங்களைக் குசலவர்கள் கானம் செய்தார்கள். இராகவன் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்தார். ஜனங்கள் யாவரும் பிரபுவின் வைகுண்டாரோகண வரலாற்றை நன்றாகத் தெரிந்துகொண்டார்கள்.

ஸோமவம்சத்தார்களின்

வரலாற்றை விஸ்தாரமாகக் கூறும்

1-வது சருக்கம்

முற்றிற்று.

## 2-வது சருக்கம்

### இராமதாசர் கூறுகிறார்.

பிறகு இராமசந்திரன் முனிவர்களிற் சிறந்த வான்மீகி முனிவரை நோக்கி "முனிவரே! நீர் முனிவர்களுடன் ஹஸ்தினபுரிக்கு வரவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

வான்மீகி முனிவர் பக்தவத்ஸலனாகிய இராகவரிடம் அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டார். பிறகு இராமபிரான் இலக்ஷ்மணனைப் பார்த்து "இராஜ்யபரிபாலனம் செய்யும் குமாரர்களுக்கு பத்திரிகைகளனுப்பி அவர்களை அவரவர்கள் இராஜ்யத்தில் மந்திரிகளை ஏற்படுத்திவிட்டு தங்கள் தங்கள் சேனையுடன் இங்கு வரும்படி செய். பிறகு இவ்விதமே ஜம்பூத்வீபத்திற்காசர்களாகிய க்ஷத்திரியர்களையும் மற்றத் தீவிலுள்ளவர்களையும் வரவழைக்கத் தூதர்களைச் சீக்கிரமாக அனுப்பு" என்று ஆஞ்ஞைசெய்தார். லக்ஷ்மணர் சபையின் மத்தியில் வான்மீகி முனிவரின் சந்நிதியில் இராமசந்திருடைய ஆஞ்ஞைப்படித் தூதர்களை யனுப்பினார். பிறகு இராமபிரான் லக்ஷ்மணரை நோக்கி மனமகிழ்ச்சியுடன் "கூடாரங்களை முந்தி யனுப்பவேண்டியது. நாளையதினமே நல்ல சுபதினமாக விருக்கிறது. சேனையை விரைவாக அனுப்பவேண்டும். நம்முன்னோர்களால் பரிபாலிக்கப்பட்ட ஆயுதங்கள் யந்திரங்கள் எல்லாவற்றையும் வெளிப்படுத்த வேண்டும். அவைகளுக்கு இது நல்ல சமயம். என் அந்தப்புரத்திலுள்ளவர்கள் யாவரும் புறப்படவேண்டும். ஸீதை அக்னிஹோத்திரத்துடன் புறப்படட்டும், பொக்கிஷங்கூடவே வரட்டும். இரத கஜதுரகபதாதிகளும் வெளிப்புறப்படட்டும்" என்று உத்தரவு செய்தார். பிறகு வணக்கத்துடன் நிற்கும் லக்ஷ்மணன் மந்திரிமார்கள் பிரதான புருஷர்கள் வசிஷ்டர் இவர்களை நோக்கி "ஏழு தீவுகளுக்கும் பிரபுத் தன்மையில் பாதனுக்கு அபிஷேகம் செய்கிறேன். லக்ஷ்மணன் நானில்லாமல் பூமியில் வாசம் செய்யமாட்டான்" என்றுரைத்தார்.

இதைக் கேட்டவுடன் ஜனங்கள் யாவரும் பயந்து வேரற்ற மரம்போல் தளர்ந்தவர்களாகித் துக்கத்துடன் தரையில் விழுந் தார்கள். இராமர் கூறியதைக் கேட்ட பரதனும் மூர்ச்சை அடைந்தான். தனக்கு இராஜ்யங் கிடைப்பதைப்பற்றி நிந்தித் துக்கொண்டு மிகவும் வருத்தமுற்று இரகுவீரரைப் பார்த்துச் சொல்லுகிறான்.

பிரபுவாகிய ராம! உம்மையன்றி இந்தப் புவியிலோ சொர்க்கத்திலோ நான் இராஜ்யத்தைப் பெற விரும்பேன். இது சத்தியம். உம்முடைய பாதாரவிந்தங்களில் சபதஞ் செய்து சொல் லுகிறேன். ஏழு தீவுகளுக்கும் பதியாக இருக்குந் தன்மையில் இந்தக் குசன் வல்லமையுள்ளவன். ஆகையால் அவனுக்கு அயோ த்தியில் அபிஷேகம் செய்யுங்கள். லவனுக்கு ஏற்கனவே ஜம்பூதீ பத்திற்குப் பதியாக விருக்கும் உத்தர க்ஷேத்திரத்தில் அபி ஷேகம் ஆயிருக்கிறது. அவனே அங்கு செல்லட்டும் — எனப் பகர்ந்தான்.

இராம விரஹத்தைச் சகிக்க முடியாத பயத்தால் பூமியில் விழுந்து கிடக்கும் ஜனங்களின் பொருட்டுப் பகவானாகிய வசிஷ்ட முனிவர் தயைகூர்ந்து இராமரிடம் கூறுகிறார். இராம! இந்த பிர ஜைகள் பூமியில் விழுந்திருப்பதை நோக்கி இவர்களின் கருத்தை அனுசரித்து அனுக்கிரகம் செய்ய வேண்டும் என்றார். இந்த வசனத்தைக் கேட்டதும் இராமபிரபு மகிழ்ந்து பிரஜைகளை எழு ப்பி அவர்களைப் புகழ்ந்து அன்புடன் நான் செய்ய வேண்டியது யாதென வினவினார். பிரஜைகள் பக்தியுடன் இரகுசிரேஷ்டரைப் பார்த்து அஞ்சலி செய்துகொண்டு பிரபுவே தாங்கள் வைகுண்டம் செல்வதானால் நாங்களும் வருகிறோம். நீங்கள் எங்கு சென்றாலும் கூட வருவதற்குச் சந்தேகமில்லை. எங்களுடைய எண்ணம் தங்க ளுடன் கூட வருவதிலேயே பற்றுதலை அடைந்திருக்கிறது. இது அழிவற்ற தருமம். உம்மை அனுசரிப்பதில் எங்களுக்கு பரம பிரீதி. நாங்கள் எங்கள் உறவினர் நண்பர்கள் மனைவிமார்கள் எல் லோருடனும் தபோவனமோ சொர்க்கமோ பட்டணமோ அல்லது தாங்கள் எங்கு செல்லுகிறீர்களோ அங்கேவருகிறோம் என்றார்கள்.

இவ்விதம் ஜனங்களுரைத்ததைக் கேட்டு இரகுநாயகன் அவர்களின் மனவுறுதியை அறிந்து அவ்விதமே யாகட்டும் என்று நிச்சயித்தார். பிறகு பிரபுவாகிய இராமர் அதே தினத்திற் குசனுக்கு அபிஷேகம் செய்ய லக்ஷ்மணருக்கு ஆஞ்ஞை செய்தார். லக்ஷ்மணர் குருவாகிய வஸிஷ்ட முனிவர் அந்தணர்கள் நகரத்திலிருப்பவர்கள் இவர்களுடன் எற்கனவே அலங்காரம் செய்யப்பட்டிருந்த அயோத்தியில் குசனுக்கு அபிஷேகம் செய்வித்தார். அப்பொழுது எல்லாரும் உற்சாகம் கொண்டாடினார்கள். இராமருடைய அந்தப்புரத்திலும் பெரிதான கோலாஹலம் ஏற்பட்டது. சிங்காசனத்தில் குடைசாமரம் முதலிய உபசாரங்கள் செய்யப்பெற்று விளங்குகிற குசமஹாராஜனுக்கு நகரிலுள்ளவர்களும் மற்றவர்களும் நமஸ்காரம் செய்தார்கள். குசன் அப்பொழுது அந்தணர்களுக்கு அளவற்ற பொருளைக் கொடுத்தான். பிரஜைகள் குசனுக்கு வஸ்திரம் அலங்காரம் சந்தனம் முதலியவைகளைக் கொடுத்துபசரித்தார்கள். குசனும் அவர்களைப் பெருமைப் படுத்தினான். கோடிக்கணக்கான பிராம்மணர்களுக்கு அன்னமளித்தான்.

பிறகு சுமித்திரையின் புத்திரனாகிய லட்சுமணர் ஸ்ரீராமராஞ்ஞைப்படி இராமருடைய அந்தப்புர ஸ்திரீகளை ஸீதையுடன் அநேகவித வாத்திய கோஷத்துடன் வாகனங்களின் மீதேற்றி நகரத்திலிருந்து புறப்படும்படி செய்தார்.

பிறகு இராமச்சந்திரன் பந்துக்கள் புத்திரர்கள் முனிவர்கள் பௌரர்கள், மாதசர்கள் இவர்கள் சூழ ஜயசப்தத்துடனும் மங்கள வாத்திய முழக்கத்துடனும் பட்டணத்திலுள்ளவர்களையும் அழைத்துக்கொண்டு இரதத்திலேறி இருமருங்கும் சாமரம் வீச மெள்ளச் சந்தோஷத்துடன் கூடாரங்களில் பிரவேசித்தார். ஸ்ரீராமருக்கு முன்னிலையில் தாஸிகள் நர்த்தனம் செய்தார்கள். பிறகு அந்நகரிலிருந்து சண்டாளன் வரையிலுள்ள ஜனங்கள் யாவரும் புறப்பட்டார்கள். அவர்களுடன் அந்நகரத்திலிருந்து நாய் வரையிலுள்ள நான்குகாற் பிரயாணி யாவும் புறப்பட்டன. பக்ஷிகளும் வெளிப்பட்டன. அந்நகரத்தில் இப்பொழுது யாருமில்லை. நகரம் சூனியமாய்விட்டது. அயோத்தியாபுரி யானை புசித்த விளாம்பழம்

போலாய்விட்டது. இச்சமயத்தில் தீபாந்தரங்களில் வசித்த அரசர்களும் ஜம்பூதீவிலுள்ள அரசர்களும் சேனைகளுடன் வந்து இராமரை நமஸ்கரித்து பிறகு குசமஹா ராஜனுக்கும் நமஸ்காரம் செய்து முதலாவது இராமச்சந்திர மஹாராஜாவுக்குக் காணிக்கைகளை கொடுத்தார்கள். அவர்கள் இராமச்சந்திர மூர்த்தியாலும் குசனாலும் சம்மானிக்கப்பட்டார்கள். பிறகு அங்கதன் சித்திரகேது புஷ்கரன் தக்ஷன் சுபாகு யூபகேது இவர்கள் தத்தம் மனைவிகளுடனும் புத்திர பௌத்திரர்களுடனும் மருகிகளுடனும் வந்து இராகவர் முதலியவர்களையும் ஸீதை முதலியவர்களையும் அன்புடன் வணங்கினார்கள். இராமசந்திரன் அவர்கள் எல்லோரையும் ஆலிங்கனம் செய்துகொள்ள ஸீதை போஜனம் செய்விக்கத் தங்கள் தங்கள் பட்டணத்து ஜனங்களுடன் எல்லோரும் சபையில் இருந்தார்கள். அப்பொழுது இரகுபுங்கவன் அந்த அரசர்களை நோக்கி அரசர்களே! ஹஸ்தினாபுரியில் உங்களுடைய முன்னோர்கள் வந்திருக்கிறார்கள். உங்களுக்கு அவர்களுடன் யுத்தம் செய்ய அபிப்பிராயம் இருந்தால் என்னுடன் ஹஸ்தினாபுரிக்கு வாருங்கள். இல்லாவிட்டால் உங்களுடைய இருப்பிடம் செல்லுங்கள். என்கூட வரவேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை என்று கூறினார்.

இதைக்கேட்டதும் பாலர்கள் மஹா பராக்கிரமசாலியாகிய இராம! இராம! நாங்கள் எல்லோரும் தங்களை யனுசரித்தவர்கள் தங்களுடைய வீரர்கள்; க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்தவர்கள்; யுத்தத்தில் சத்ருக்களை சங்கரிப்பவர்கள். தங்களுடைய உத்தரவைப் பெற்று தந்தைகளாயினும் பிள்ளைகளாயினும் சரி; இரக்கமில்லாமல் கொல்லுகிறோம். யஜமான் காரியத்தில் நோக்கமில்லாதவர்களென்று எங்களைக் கருதவேண்டாம் என வணக்கத்துடன் தெரிவித்தார்கள். உடனே ஸீதாகாந்தன் அவர்களை ஆலிங்கனம் செய்துகொண்டு அவர்களுக்கு வஸ்திரா பரணங்களைச் சம்மானம் செய்து அன்று சுகமாக ஸீதையுடன் நித்திரை புரிந்தார்.

பிறகு விடியற்காலையில் ஸீதையுடன் சரயூநதிக்குச் சென்று தீர்த்தமாடி விதிப்படி தானம் செய்து சரயூவை வணங்கித் தாம் யுத்தத்திற்குப் பிரயாணப்படப் பலவிதமாகக் கேட்டார். சரயூ

தாசரதியைப் பார்த்துச் சொல்லுகிறூர்—"ஏ தசரத் குமாரனே! நான் இதுவரையில் தங்களுடைய தரிசனத்தை விரும்பியிருந்தேன். இப்பொழுது தங்களுடன் நானும் வருகிறேன்" என்று சொல்லினள். இராமபிரான் சரயூவைப் பார்த்து கூறுகிறூர்.—

"ஏ நதியே! பாபங்களைப் போக்கும் என் கதை பூமியில் எது வரையில் இருக்கிறதோ அதுவரையில் ஜனங்களின் பாபங்களைப் போக்கும்பொருட்டு ஓரம்சத்துடன் இங்கு நீ வாசம் செய்யவேண்டும் என்றுஞ்ஞாபித்தார்.

சரயூநதி அவ்விதமே ஆகட்டுமென்று சொல்லி ஓரம்சத்தை அயோத்தியில் வைத்துவிட்டு பூர்ணரூபத்துடன் இராமரோடு புறப்பட்டாள்.

பிறகு இராமசந்திரன் சரயூநதியுடன் தன் நகரமாகிய அயோத்தியை பிரதக்ஷிணம் செய்து வணங்கிப் பூசித்து "ஏ அயோத்தியே உனக்கு நமஸ்காரம். ஏ அம்மா! உன்னுல் நான் காக்கப்பட்டேன். நான் இப்போது என் ஸ்தானத்திற்குச் செல்லயத் தனித்திருக்கிறேன். அதற்காக விடை கேட்கிறேன். உத்திரவு கொடுக்கவேண்டும். நான் செய்த குற்றங்களை மன்னிக்க வேண்டும். மறுபடி உன் தரிசனம் எனக்குக் கிடைக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொண்டார்.

இந்த வார்த்தையைக் கேட்ட அயோத்தியாபுரி, இராம! இது வரையில் தரிசனத்தை விரும்பியிருந்தேன். உன் விரதத்தை என்னுல் சகிக்க முடியாது. ஆகையால் உன்னுடன் கூட வருகிறேன் என்றுரைத்தது. இதைக்கேட்ட தசரதநந்தனர் "ஏ புரியே பாபங்களைத் தொலைக்கும் என் கதை உள்ளவரையில் மண்ணுருவத்துடன் ஓரம்சமாக இங்கு வாசம் செய்" என்றூர். அப்புரி அவ்விதமேயென ஒப்புக்கொண்டு மண்ணுருவத்துடன் ஓரம்சமாக அயோத்தியிலிருக்க நிச்சயித்து சுவர்ண உருவத்துடன் இராமரை அனுசரித்தாள்.

இராமசந்திரன் அயோத்தியுடனும் சரயூவுடனும் சேனைகளிருக்குமிடம் வந்தார். அதுமுதல் அவ்விடத்தில் சரயூவுடையவும் அயோத்தியுடையவும் மகிமை தங்கியிருந்தன.

பிறகு ஸீதை தோழிகளுடன் பெண் யானையின் மீதேறிக் கொண்டாள். ஊர்மிளை முதலியவர்கள் தனித்தனியாக யானைகளின் மீதேறிக் கொண்டார்கள். அப்பால், ஸீதாகாந்தன் யானையின் மீதேறிக்கொண்டு சந்தோஷத்துடன் லக்ஷ்மணரை அழைத்துப் பட்டணத்திலுள்ள ஜனங்கள் எல்லோரையும் அவரவர்கள் பந்துக்களுடன் புஷ்பகவிமானத்திலேற்றி வைத்துயானையின்மீது புத்திரர் முதலிய பந்துக்களுடன் நீயும் ஏறிக்கொண்டு எனக்குப் பின்புறத்தில் அனுசரித்துவா'' என்று கட்டளை யிட்டார். லக்ஷ்மணர் அவ்வாறே செய்தார். பிறகு அரசர்கள் யாவரும் பலவாறான வாகனங்களிலேறிக்கொண்டு தங்கள் சேனைகளுடன் ஸ்ரீராமன் பக்கத்தில் சென்றார்கள். முன்னே, குந்தலந்தரித்தவர்கள், கல்லை உடைப்பவர்கள், சச்சரர்கள் முதலியவர்கள் கூடாரமுளைகளைஎடுத்துக்கொண்டு சென்றார்கள். பிறகு யானைகள் சென்றன. அதன் பின் யந்திரங் தரித்தவர்கள் அநேகவித வாகனங்களிலேறிச் சென்றார்கள். பிறகு சதக்னி என்ற ஆயுதம் நிறைந்த வண்டிகள் சென்றன. பின்பு குதிரையின்மீது வாத்தியங்களை முழக்கிக் கொண்டு படர்கள் சென்றனர். பிறகு குதிரை வீரர்கள் பிரம்பு பிடித்துக்கொண்டு சேனையை நடத்தினார்கள். பிறகு வாஹனத்தின்மீதேறி மாகதர்கள் சென்றார்கள். பிறகு அலங்காரஞ்செய்து கொண்டு ஸூதர்களும் சாரணர்களும் சென்றார்கள். பிறகு தாஸிகள் நர்த்தனம் செய்துகொண்டு போனார்கள். அப்பால் ஸ்ரீராமருடைய குதிரைகள் அலங்காரத்துடன் சென்றன. அதன்பின் தருணிகளான ஸ்திரீகள் புருஷவேஷம் பூண்டு அநேகவிதமாக அலங்கரித்துக்கொண்டும் ஆயுதங்களைக் கையிற் பிடித்துக் கஞ்சுகந் தரித்துக் குதிரை முதலிய வாகனங்களின் மீதேறிச் சென்றார்கள். அதற்குப் பிறகு தாஸி புத்திரர்கள் நன்றாக அலங்கரித்துக் கொண்டு சென்றார்கள்.

பிறகு ராமசந்திரனும் அவர்க்குப் பிறகு லக்ஷ்மணனும் பிறகு பரதனும் பின் சத்ருக்னனும் பின் குசன் லவன் அங்கதன் சித்திரகேது புஷ்கரன் தக்ஷன் சுபாஹு யூபகேது இவர்களும் இவர்களுக்குப் பிறகு ஸீதை ஊர்மிளை மாண்டவி சுருதகீர்த்தி இவர்களும் வரிசையாகவும் சென்றார்கள். பிறகு மந்திரிகள்

யாவரும் பல்லக்கில் ஏறிப் பின் சென்றனர். அமைச்சர்களுக்குப் பிறகு பருவதத்திற்குச் சமமான கோடிக்கணக்கான வானரங்களும் பிறகு யானையின் மீதேறிச் செல்லும் அரசர்களும் பிறகு குதிரையின் மீதேறிச் செல்லும் அரசர்களின் சைன்னியங்களும் பிறகு கோடிக்கணக்கான யந்திர வண்டிகளும் சதக்னி கத்தி கேடயம் முதலியவைகள் நிறைந்த வண்டிகளும் பிறகு ஒன்பது வித வாத்தியங்களுடன் கூடின யானைகளும் பிறகு ஒட்டகைகளும் அவைகளுக்குப் பிறகு கோவேறுகழுதைகளும் சென்றன. சாமரம் முதலிய உபசாரங்களுடன் மாகதர்கள் வந்திகள் ஸ்தோத்திரஞ் செய்யவும் அப்ஸரஸ்கள் நர்த்தனம் செய்யவும் காயர்கள் பாடவும் சீதாராமர்கள் சென்றார்கள்.

நான் யாத்திரா காண்டத்தில் முன்கூறிய சேனைகளின் அமைப்பு இங்கும் ஏற்பட்டது.

ராமர் பிரயாணப் படுவதைக் கூறும்

## 2-வது சருக்கம்.

முற்றிற்று.

---

## 3-வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

பிறகு ராமர் மார்க்கத்தில் மெள்ள நடந்து அநேக தேசங்களைக் கடந்து பதினோராவது நாளில் சேனைகளுடன் ஹஸ்தினாபுரி வந்தார். இதை அறிந்த சுஷேணன் மிகவேகமாக இருபது லக்ஷம் வானரர்களுடன் எதிர்கொண்டு ஸீதை ராமர் இருவரையும் நமஸ்கரித்து "ஏ ராம ராம மஹாபாஹுவே! தங்களுடைய ப்ராக்கிரமத்தைக் கொண்டு இவர்களுடன் பதினான்கு நாள் வரையில் கடும்போர் புரிந்தேன். இப்பொழுது தாங்கள் வந்திருக்கிறீர்கள். இனி இவர்கள் எவ்விதம் பூமியிலிருக்கப் போகிறார்கள்?" என்றுகேட்டான். ராமபிரான் சுஷேணனைச் சமாதானம் செய்து கங்கையின் வடகரையில் சேனையை நிறுத்திப் பகைவர்களுடைய சைன்னியத்தைப் பார்த்து அன்றிரவு சென்ற பின்பு மறுநாட் காலையில் யுத்தம் செய்ய வானரர்களுக்கு ஆஞ்ஞை செய்தார்.

பிறகு வானரர்கள் கங்கையில் ஸ்நானஞ் செய்து ராமரையும் ஸீதையையும் நமஸ்காரஞ் செய்துவிட்டு யுத்தஞ் செய்யப் பிரயாணமானார்கள். ஆரம்பத்தில் வானரர்கள் பயங்கரமான சிங்கநாதம் செய்தார்கள்; வாத்திய கோஷஞ் செய்தார்கள். இவைகளன்றி இன்னும் பலவித உற்சாகமுங் கொண்டாடிப் பகைவர்களுடைய சைன்னியத்தை நோக்கிச் சென்றார்கள்.

நளன் முதலியவர்களும் ராமருடைய சேனையைப் பார்த்து, மிகுந்த ஆச்சரியமடைந்து பெரும் பயத்தால் நடுக்கங் கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள்.

பிறகு வானரர்கள் கங்கையைக் கடந்து சென்று கல், மலை, விருக்ஷம் பெரும்பாறை, முஷ்டி பாதங்கள் இவைகளால் ராம நாம கீர்த்தனம் செய்துகொண்டு சத்ருக்களை அடித்தார்கள்; நளனைச் சேர்ந்தசூரர்களும் தீக்ஷ்ண்யமான ஆயுதங்களால் வானர வீரர்களை அடித்தார்கள். இவ்வாறு கூச்சல் பலத்தது. பிறகு வானரர்கள்

மரங்களை எடுத்து அடிக்க நளனுடைய சைன்னியங்கள் உபத்திரவ மடைந்து யுத்தஞ் செய்வதிலிருந்து பின் வாங்கியவர்களாகி வெருண்டோடினார்கள். இதைப் பார்த்த நளன் முதலியவர்கள் அநேக அரசர்களை அனுப்பினார்கள். ஜம்பூத்வீபத்தரசர்களும் மற்றத் தீவுகளிலுள்ள அரசர்களும் யுத்தஞ் செய்ய ஸந்நத்தர்களாகி அநேக வாகனங்களின் மீதேறிக் கொண்டு வந்தார்கள். இவர்களைக் கண்டதும் ஸ்ரீராமருடைய சேனைகளும் கிளம்பின. அநேக வாகனங்களின் மீது ஜம்பூத்வீபத் தரசர்கள் தீவாந்தரத்திலிருப்பவர்கள், சுக்ரீவன், அங்கதன், அநுமான், விபீஷணன், ஜாம்பவான், சுஷேணன், சம்பாதி, மகாத்வஜன், குசன் முதலியவர்களும் யுத்த பூமிக்கு வந்தார்கள். பின்னர் இருபக்கத்துச் சைன்னியங்களுக்குள்ளும் வீரவாதம் உண்டாயிற்று. ஒன்பது விதவாத்தியங்களும் முழங்கின. பிரமன் முதலிய தேவர்களும் பரமசிவன், ஸோமனுடன் புதன், தேவேந்திரன் இவர்களும் பற்பல விதமான வாகனங்களி லேறிக்கொண்டு யுத்தத்தின் வேடிக்கையைப் பார்த்தார்கள். இங்கு இப்படியிருக்கையில் சந்திரன் முதலிய தேவர்கள் ஒருங்கு சேர்ந்து "மகாபயம் ஏற்பட்டிருக்கிறது, இப்பொழுது பிரளயம் உண்டானாலும் உண்டாகும். இந்த ஸோமவம்சத் தரசர்கள் பிர்ம்ம தேவரிடம் வரப் பிரஸாத மடைந்தவர்கள் ராமரோ பிரத்தியக்ஷ விஷ்ணு. இதில் எப்படி ஜயாபஜயம் ஏற்படும். இந்த யுத்தத்தை நடைபெறாமல் நிறுத்துவதெப்படி? என்ன செய்யலாம்" என்று யோசனை செய்தார்கள்.

அப்பொழுது பிரம்மதேவர் "தேவர்களே! இச்சண்டையின் வேடிக்கையைச் சிறிது நேரம் பார்த்த பிறகு ராமருக்கும் சோம வம்சத்தவருக்கும் சிநேகமுண்டாக்கி விடுவோம்" என்று கூறி யுத்தத்தின் வேடிக்கையைப் பார்த்தார். பிறகு இரண்டு சைன்னியங்களிலும் யந்திரங்களின் ஓசையுண்டாயிற்று. அந்த யந்திரங்களி லிருந்துண்டான அக்நிஜ்வாலைகளால் பத்துத் திசைகளும் பிரகாசித்தன. யந்திரங்களி லிருந்துண்டான குளிகைகளால் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டார்கள்; வண்டிகளிலிருக்

கும்சதக்நிகளாலும் அடித்துக்கொண்டார்கள். அவ்விதமேவீரர்கள் பாணங்கள் கத்திகள் கண்ட்ரகோடரிகள் தோமரங்கள் பிண்டி பாலங்கள், முத்கரங்கள், பரிகங்கள், சக்ரங்கள், பாணங்கள், குந்தங்கள், சூலங்கள், பட்டிசங்கள் இவைகளால் அடித்துக் கொண்டார்கள். அச்சண்டையில் தந்தையைத் தநயனும் தநயன் தந்தையும் பிதாமகன் பௌத்திரனையும் பௌத்திரன் பிதா மகனையுமாகக் குலம் ஜாதி முதலியவற்றைக் கூறிக்கொண்டே யுத்தம் செய்தார்கள். அவ்விதமே பிரபிதாமஹன் பௌத்திர னையும், பிரபௌத்திரன் பிரபிதாமஹனையும், தௌஹித்திரன் மாதாமஹனையும், மாதாமஹன் தௌஹித்திரனையும் பாணங் களால் அடித்துக் கொண்டார்கள்.

இவ்வாறு பார்த்தவர் புளகாங்கிதமடையும்படி சண்டை நடந்தது. ராம சேவகர்களாகிய மஹா வீரர்கள் யுத்தத்தில் சிரமமடையும் சமயத்தில் அநுமான் துரோண மலையிலிருந்து ஓஷதிகளைக் கொணர்ந்து அடிக்கடி மூர்ச்சை தெளிவித்து வந்தார். பகைவர்களுடைய சைன்னியத்திலோ மரணமடைந்தவர் எழுந்திருக்கவே யில்லை. ஆகவே ஸோம வம்சத்தைச் சேர்ந்த அரசர்கள் க்ஷீண கதியை அடைந்தார்கள். அந்த யுத்தத்தில் ஆகாய நதி இரத்தப் பிரவாகமாய் விட்டது. நளனுடைய பன்னி ரண்டு பத்மம் சேனைகளும் ராக்வரைச் சேர்ந்த அரசர்களால் நிர்மூலமாக்கப்பட்டன. இவ்விதம் அஸ்திநபுரியில் ஆறுமாதம் வரையில் சண்டை நடந்தது. பிறகு சோம வம்சத்தவர்கள் சிறு சைன்னிய பலத்துடன் மறுபடியும் யுத்தத்திற்குச் சென் றார்கள். இவர்களைப் பார்த்தவுடன் குசன் முதலியவர்கள் ராமர் முதலியவர்களுக்கு முந்தி யுத்த பூமிக்குச் சென்றார்கள். குசன் நளனையும் லவன் நதியுகனையும் அங்கதன் ஜாதிகானையும் சித்திர கேது வசுதனையும் புஷ்கரன் லகு சுருதனையும் தக்ஷகன் சுரதனை யும் சுபாகு அஜமீடனையும் யூபகேது சைன்னியத்தையுமாக எதிர்த்து யுத்தம் செய்தார்கள்.

அப்போது யூபகேது தன் பாணங்களால் சைன்னியம் யாவற்றையும் கண்ணுக்குப் புலப்படாமல் மறைத்தான். லவன்

அந்தச் சைன்னியத்தை சமுத்திரத்தில் வாயுவாஸ்திரத்தினல் தள்ளினன். அச்சமயத்தில் நளன் முதலிய ஏழு வீரர்களும் பருவதங்கள் போல் ரகுவீர குமாரர்களுடன் யுத்தம் செய்தார் கள். ஆயினும் சைன்னியமில்லாமையால் கிளையற்ற மரங்கள் போல் விளங்காமலிருந்தார்கள். அப்பொழுது குசன் பாணங்க ளால் நளனை அடித்து நளனுடைய மார்பைப் பிளந்தான். அப்படி யடிபட்டும் நளன் தன் பாணங்களால் குசனைத் தூரத்தினன். பிறகு குசன் தன் பாணங்களால் நளனுடைய துவஜம் வில் குடை சாரதி இவைகளைச் சேதித்து நளனையும் அடித்தான்.

லவன் பாண வருஷத்தால் நதியுகனை அடிக்க நதியுகன் லவனைப் பாணங்களால் துன்புறுத்தினன். அப்பொழுது லவன் நதியுகனுடைய தேரை உடைத்தான். இவ்விதமே ஜாதீகரனை அங்கதன் அடித்தான். அங்கதனை ஜாதீகரன் பரிகாயுதத்தால் அடித்தான். அங்கதன் தன் பாணங்களால் ஜாதீகரனை அடித்துப் பூமியில் தள்ளினன். சித்திரகேது தன் பாணக் கூட்டங்களால் வசுதனைத் தேரிலிருந்து அதிவிரைவில் கூப்பிடு தூரத்திற்கப்பால் எற்றித் தள்ளினன். இது மிகவும் ஆச்சரியமாயிருந்தது. பிறகு லகுசுருதன் பாணங்களால் புஷ்கரனை மார்பிலடித்தான். புஷ்கரன் கோபங்கொண்டு பாணங்களால் அடித்து லகுசுருதனைத் தேர்த் தட்டில் எழுதிய சித்திரம்போற் செய்து துந்துபிவாத்தியத்தைக் கோஷித்தான். சுரதனும் தக்ஷனிடம் பாணங்களை வருஷித் தான். பிறகு தக்ஷன் தன் பாணக்கூட்டத்தால் சுரதனைத் தேருடன் ஆகாயமார்க்கத்தில் உலர்ந்த காற்றில் சருகுசுற்றுவது போலச் சுற்றும்படி செய்தான்.

அஜமீடன் தன் முன்னோர்கள் ராம புத்திரன் முதலியவர்க ளால் வியாகுலப்படுவதைப் பார்த்து பாணங்களை வருஷித்தான். அப்போது சுபாகு சரவருஷத்தால் தேரை உடைத்தான். அஜ மீடன் மறுபடியும் வேறுரதமேறி குசன் முதலியவர்களை அதஞ் செய்வதற்காக வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தான். இதைக் கண்ட யூபகேது கருடாஸ்திரப் பிரயோகம் செய்தான். அந்த அஸ்திரத்திலிருந்து கோடிக்கணக்கான ஸர்ப்பங்கள் கிளம்பி

வாயுவைப் பானம் செய்தன. தேரிலிருக்கும் நளன் ஸர்ப்பங்களைக் கண்டு உத்தமமான காருடாஸ்திரப் பிரயோகம் செய்தான். உடனே குசன் பயத்தைக் கொடுக்கும் ராக்ஷஸாஸ்திரத்தைப் பிரயோகித்தான். நதியுகன் வேகமாக ஆக்நேயாஸ்திரத்தை விட்டான். பிறகு லவன் கோபங்கொண்டு மேகாஸ்திரத்தைப் பொழிந்தான். அப்பொழுது லகுசுருதனும் வாயுவஸ்திரத்தைப் பிரயோகித்தான் பிறகு ஆஞ்சனேயன் வக்கிரமான வாயைத் திறந்து கொண்டு வாயுவைக் குடித்து மேகம் போல் கர்ஜனை செய்தான். இவ்வாறு அகோர யுத்தம் நடப்பதை ஸீதை ராமர் இருவரும் லக்ஷ்மணர் முதலியவர்களுடன் பார்த்து வியந்தார்கள். இப்படி ஐந்து மாதம் பதினொரு நாள் வரையில் யுத்தம் நடந்தது. மார்க்கத்தில் பதினொரு நாள் சென்றன வென்று முன் கூறப்பட்டிருக்கிறது. திரேதாயுகக் கணக்குப்படி பதினொரு மாதம் பதினொரு நாளில் யுத்தத்திற்கு முடிவாம். இச்சமயத்தில் குசன் விரைவாக பிர்ம்மாஸ்திரத்தை ஸந்தானம் செய்தான்.

ஸோமவம்சத்தவரின் யுத்த வரலாற்றைக் கூறும்

3-வது சருக்கம்

முற்றிற்று.

## 4-வது சருக்கம்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

குசன் பிர்ம்மாஸ்திரத்தை ஸந்தானம் செய்தவுடன் பிர்ம்ம தேவர், தேவர்கள், ஸோமன், புதன் இவர்களுடன் விமானமேறிப் பூமிக்கு வந்து விமானத்தி லிருந்திறங்கிக் குசனிடம் வந்து "ஏ குச! இப்பொழுது பிரம்மாஸ்திரத்தை விடாதே. இந்த ஸோமனுக்குத் துவாபரயுக முடிவு வரையில் சொர்க்க வாசமும் அவன் வம்சத்திற் பிறந்த நளன் முதலியவர்களுக்கு யுத்தத்தில் பிறரால் ஜயிக்க முடியாத வன்மையும் தேவர்கள் முன்னிலையில் ஒரு காரணத்தை முன்னிட்டு என்னால் கொடுக்கப் பட்டிருக்கின் றன. ஆகையால் என்னைச் சேர்ந்த நளன் முதலியவர்களிடம் அஸ் திரத்தைப் பிரயோகம் செய்யாதே" என்றுரைத்தார்.

இவ்விதம் பிர்ம்மதேவர் கூறியதைக் கேட்ட குசன் "பிர்ம்மதேவரே! இப்பொழுது ஒரு க்ஷணத்தில் எல்லோரையும் சாம்பலாகச் செய்கிறேன். இல்லாவிடில் நீர் இந்த வரலாற்றை என் தந்தையாகிய ராமரிடம் சொல்லும். அவர் உத்தரவின்படி நடக்கிறேன். நீர் இந்த நளன் முதலியவர்களுக்கு வரம் கொடுத்த சமயத்தில் ஸ்ரீ ராமசந்திருடைய சாமர்த்தியத்தை அறியாதவரோ? இப்போது வந்து வீணாகக் கெஞ்சுகிறீர். உமக்கு வன்மை இருக்குமாயின் நளன் முதலியவர்களுக்காகத் தேவர்க ளுடன் சேர்ந்து என்னுடன் யுத்தம் செய்யவாரும். நாமிருவரும் யுத்தம் செய்வதை ராமர் பார்க்கட்டும். புஷ்பகத்திலிருக்கும் ஸீதை சாளர வாயில் மூலகமாகப் பார்க்கட்டும்" என்று வீரா வேசத்துடன் பேசினான்.

இவ்விதம் குசன் சொன்னதும் பிர்ம்மதேவர் வெட்கங் கொ ண்டு, உடனே ஸோமனையும் புதனையும் கூட்டிக்கொண்டு நளன் முதலியவர்களின் சமீபஞ்சென்று "ஆயுள் முடிந்த மூடர்களே; நான் சொல்லுவதைக் கேளுங்கள்; சாக்ஷாத் நாராயணானுடைய அவதாரமாகிய ராமரிடம் சண்டை செய்ய முன் வந்தீர்களே!

இந்தப் புத்தியை உபதேசம் செய்தவன் யாவன்? எல்லோருக்கும் தீங்கு உண்டாக்கக் கூடியதாயிற்றே. நீங்கள் எல்லோரும் ராமரைச் சரணமென் றடையுங்கள். இல்லாவிடில் மரணமடைவீர்கள். இந்த ரகுவீரன் எனக்குத் தகப்பன். விஷ்ணுவே இவர்'' என்று கூறிக் குசனிடம் வந்து கூறுகிறார்.—

ஏ பாலகனாகிய குச! நான் ராமரிடஞ்சென்று வருவதற்குள் பாணத்தைப் பிரயோகம் செய்தால், என்னைக் கொன்ற தோஷத்தை அடைவாய்—என்று சொல்லி நளன் முதலியவர்களுடன் தேவர்களோடு விருஷபத்வஜராகிய பரமசிவனை முன்னிட்டுக்கொண்டு ராமரிடம் வந்தார். தசரதாத்மஜன் பரமசிவன் வருவதைப் பார்த்துப் புஷ்பக விமானத்திலிருந்து இறங்கி எதிர் கொண்டு வந்து பரமசிவனை நமஸ்கரித்துப் பின் பிர்ம்மதேவரையும் பணிந்து அவர்களைக் கிரமப்படி பூஜித்தார். பிறகு பிர்ம்ம தேவர் சபையில் நளன் முதலியவர்களை ராமருக்கு வந்தனம் செய்யும்படி செய்தார். நமஸ்கரித்த ஸோமன், புதன், நளன் முதலியவர்களை ஸீதாகாந்தன் தமது கையால் ஸ்பரிசித்தார். பிர்ம்ம தேவர் அவர்களின் பெயரைத் தனித்தனியே ராமருக்குத் தெரிவித்தார். அதைக்கேட்ட ராமச்சந்திரன் முன்னால் நிற்கும் பிர்மதேவரை நோக்கி "எதற்காக ஸோம வம்சத்தவர்களை இங்கு அழைத்து வந்தீர்? அதன் காரணத்தை உண்மையாக என் முன்னிலையில் கூறவேண்டும்'' என்றார்.

பிர்ம்மதேவர், மகா பாகுவே! ராம! ராம! என் சொல்லைக் காப்பாற்ற வேண்டும். இவ்வரசர்களைக் காப்பாற்ற வேண்டும். பிரபுவே! இவர்களுக்குத் துவாபரயுகம் முடியும் வரையில் ஒருவராலும் அபஜயமடையாத தன்மையை முன்பு நான் வரமாகக் கொடுத்துவிட்டேன். இப்பொழுது உம்முடைய குமாரன் குசன் என் அஸ்திரத்தை ஸந்தானம் செய்கிறான். அவனைத் தடுத்து ஆதரிக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

இதைக்கேட்டதும் ரகுநாயகன் சபையில் நகைத்து "நீர் கொடுத்த வரத்தால் அபஜயமடையாத தன்மை இப்போது எங்குப் போயிற்று? ஏன் இங்கு இவர்களைக் கூட்டிக்கொண்டு வரவேண்

டும்'' என்று கேட்டார். இதற்குப் பிரமன் பிரபுவை நோக்கி, ''ஸீதாரமணா! எல்லோரிடத்திலும் என் பலம் செல்லும். உம்மிடத்திற் செல்லாது. நீர் எனக்குத் தந்தை; ஆகையால் உம்மைப் பிரார்த்திக்கின்றேன்'' என்றார். தாசரதி, மந்தஹாஸம் செய்து, நான்முகனைப் பார்த்து, ''வாலிபப் பருவத்தினனாகிய குசன் என் வார்த்தையைக் கேட்கமாட்டான். பெரும்பாலும் சிறுவர்கள் பெரியோர்களின் சொல்லைக் கேட்பதில்லை. சாஸ்திரத்தில் கூறிய மற்றொரு சமாதானத்தையும் கேளும்—ஐந்து வருஷம் வரையில் பிள்ளைகளை லாலனை செய்தல்வேண்டும். பிறகு பத்து வருடம் வரையில் அடிக்கவேண்டும். பதினாறுவது வயசு வந்தது முதல், புத்திரனை மித்திரனைப்போல் பார்க்கவேண்டும்— ஆகையால் குசன் முதலியவர்கள் என் சொல்லைக் கேட்க மாட்டார்கள். அவர்கள் சுவப் பிரயோசனத்திலேயே கண்ணுள்ளவர்கள். ஆகையால் அவர்களிடமே சென்று கேட்டுக்கொள்ளும். என்றார். பிர்மதேவன், ''ராம! அவர்கள் யுத்தத்திலுண்டான கோபத்தால் என்னுடன் அன்போடு பேசமாட்டார்கள்'' என்றார். ராமர், ''பிர்மதேவரே! வான்மீகி முனிவரிடம் சென்று கேட்டால் அவர் உமக்கு புத்தி சொல்வார்'' என்று விநோதமாகச் சொல்ல, பிர்ம்மா உடனே புஷ்பக விமானத்தில் முனிவர்களிருக்கும் சாலையில் முனிவர்களுட னுட்கார்ந்திருக்கும் வான்மீகியிடம் நளன் முதலியவர்களுடன் சென்று வரலாறு யாவற்றையும் தெரிவித்தார்.

அதைக்கேட்டதும் வான்மீகி முனிவர் ராமர் மனதில் நினைத்திருப்பதைத் தெரிந்துகொண்டு, ''சதுர்முகனே! இவர்கள் ஸ்திரீகளால் உயிரை அடையவேண்டும். நளன் முதலியவர்களின் ஸ்திரீகள் யாவரும் ஸீதாதேவியைப் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும். பிறகு குசன் ஸீதையின் சொற்படி சாந்தமடைவான்'' என்றார். இதைக்கேட்ட நளன் முதலியவர்கள் தூதர்களை விரைவாக அனுப்பித் தங்களுடைய மனைவிகளை வரவழைத்து ஸீதையிடம் அனுப்ப அவ்வரச ஸ்திரீகள் காணிக்கைகளை எடுத்துக்கொண்டு ஸ்திரீகள் வாசஞ்செய்யும் சாலைக்குச் சென்று அங்குத் தோழிமார்கள் சூழச் சந்தோஷமாக மஞ்சத்தில் சயனம் செய்து கொண்டிருக்கும் ஸீதையைக்கண்டு நமஸ்கரித்தார்கள்,

அப்பொழுது ஸீதா தேவியின் சிவப்பு வர்ணமுள்ள வஸ்துக்கள் பூசிய இரு பாதங்களும் ராஜ ஸ்திரீகளின் சிரசில் இருக்கும் இரத்தினக் கூட்டத்தின் ஒளியால் மிகவும் பிரகாசித்தன. அந்த ஸ்திரீகள் தாங்கள் கொண்டுவந்த காணிக்கைகளை ஸீதா தேவியிடம் கொடுத்தார்கள். அவைகளை, தேவி அங்கீகாரஞ் செய்துகொண்டு "ஸ்திரீகளே! என்ன காரியத்தை உத்தேசித்து வந்தீர்கள்? நீங்கள் இனிப்பயப்படவேண்டாம். உங்களிஷ்டத்தைச் சொல்லுங்கள். அதை நான் நிறைவேற்றுகிறேன்" என்றாள். ராஜ ஸ்திரீகள் தங்கள் வரலாறு யாவற்றையும் தெரிவித்து "அம்மணி! எங்களுக்குக் கங்கணதானங்களைச் செய்து குசனை யுத்தம் செய்வதிலிருந்து நிறுத்த வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். இதைக் கேட்டதும் ஸீதை "ராமர் நமது மனதில் நினைத்துக்கொண்டிருப்பதைத் தெரிந்து கொண்டு நம் கையால் இவர்களை விடுவிக்கவேண்டுமென்று நிச்சயித்திருப்பதாகத் தெரியவருகிறது. ஆகையால் உடனே செல்லுவோம்" என்று நினைத்துப் பல்லக்கில் ஏறி அந்த ஸ்திரீகளுடன் குசனிடம் வந்து "ஏ குச! பாலக! கோபியாதே! யுத்தத்தை நிறுத்தி விடு! என்சொல்லைக் கேள்" என்று கூறினாள். குசன் அப்படியே ஆகட்டுமென்று சொல்லி, மந்தகாஸம் செய்து தன் தாய் உறவினர், சைன்னியம் இவர்களுடன் திரும்பினான். ஸீதை அந்த ஸ்திரீகளுடன் புஷ்பக விமானத்திலேறித் திரும்பிவந்தாள். குசன் முதலிய குமாரர்கள் சபையிலிருக்கும் ராமரிடம் வந்தார்கள்.

பிறகு வான்மீக முனிவர் பிரம்மதேவர் நளன் முதலியவர்கள் தேவர்கள் எல்லோரும் சபைக்கு வந்து ஸ்ரீராகவரின் முன் வந்தார்கள். குசன் முதலியவர்கள், ஸ்ரீராமரை நமஸ்கரித்தார்கள். ஸ்ரீராகவன் குமாரர்களை ஆலிங்கனம் செய்து கொண்டார். பிறகு அவர்கள் நீராஜனத்திற்காகப் பிதாவின் சமீபத்திலிருந்தார்கள். அப்பொழுது ராமச்சந்திரன் சபையிலிருக்கும் பிர்ம்மாவைப் பார்த்து 'ஏ பிர்ம்மதேவரே! என் குழந்தைகள் யுத்தத்திலிருந்து திரும்பிவிட்டார்கள். இனி உமக்கு என்ன கோரிக்கை;

என் ராஜ்யத்தில் இரண்டாவது சத்ரபதி வேறுயாருமில்லே. நளன் முதலியவர்கள் செய்யப்போவதென்ன ?'' என்று கேட்டார்.

அப்போது பிரமன் ஆசனத்தை விட்டெழுந்து ''ஏ ராம ராம ! மஹாபாஹுவே ! தாங்கள் பூபாரத்தைக் குறைத்து விட்டீர்கள். வெகு நாள் ராஜ்யத்தைப் பரிபாலனம் செய்தாயிற்று. இப்பொழுது வைகுண்டத்தைப் பரிபாலிக்கவேண்டும். என் வாக்குப்பிழைபடாதபடி நளன் முதலியவர்களுக்கு அஸ்தினுபுரியைக் கொடுக்கவேண்டும். குசன் அயோத்தியில் அரசு செய்யட்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

அப்பொழுது ராமர் ''பிர்ம்மதேவரே! எனக்கு இது தான் எண்ணம். ஸீதையுடனும் உறவினர்களுடனும் நான் வைகுண்டம் செல்லுகிறேன். இந்தத் திரேதாயுகத்திற்குப் பதினுபிரம் வருஷம் கணக்கு ஏற்பட்டது. பிர்ம்மனே! என் சாமர்த்தியத்தால் அதைப் பொய்யாக்கினேன்.

பதினோராயிரத்துப் பதினேரு வருஷம் பதினேரு மாதம் பதினேரு நாள் சென்றன. மிச்சமாகவுள்ள காலம் கொஞ்சந் தான். அது நாலேபதினம் பன்னிரண்டு நாழிகைக்கு முடிகிறது. பின் வைகுண்டம் செல்கிறேன்'' என்று சொன்னுர்.

அப்பொழுது குசன் ''பிர்ம்மதேவரே! இந்த நளன் முதலியவர்கள் எனக்குத் திறை செலுத்திவருவார்களாயின் இந்தஹஸ்தினுபுரியிலிருக்கட்டும். என்னுத்தரவை அநுசரித்து நடக்க வேண்டும். குடையில்லாமலு மிருக்கவேண்டும். அப்படியானுல் சுகமாக இங்கு வசிக்கட்டும்'' என்ருன்.

இதைக் கேட்ட பிரமதேவன் ''ஏ குச ! இவர்களுக்கு குடை மட்டும் இருக்கட்டும். உன் ஆஞ்ஞையை அநுசரித்து உனக்கு இவர்கள் கப்பம் கட்டுவார்கள். என் சொல்லே நீ பரிபாலிக்க வேண்டும்'' என்ருர். அதற்குக் குசன் மந்தஹாஸ முகத்துடன் அவ்விதமே ஆகட்டு மென்ருன்.

பிறகு ஸோம வம்சத்தரசர்கள் யாவரும் "ஏ பிர்ம்ம தேவ ரே! நாங்கள் எங்கள் ஸ்திரீகளுடன் சொர்க்கம் செல்லுகிறோம். அஜமீடன் ஹஸ்தினபுரிக்கு அரசனுகட்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். பிர்ம்மா அவ்விதமே என்றுரைத்துச் சபையில் உட்கார்ந்தார.

பிறகு சதுர்முகன் ராமாஞ்ஞைபால் பிராம்மணர்களுட னிருந்து அஜமீடனுக்கு அபிஷேகம் செய்து அவனை ஹஸ்தின புரிக்கு அரசனுக்கினர்.

ஸோம வம்சம் சூரியவம்சத்தவர்களோடு நட்புக்கொண்ட
வரலாற்றைக் கூறும்

4.வது சருக்கம்.

முற்றிற்று.

## 5-வது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

பிறகு சுஷேணன் சுக்ரீவன் விபீஷணன் வானரர்கள் எல்லோரும் "ஏ ராம! நாங்களும் உம்முடன் சொர்க்கம்வருகிறோம். நீங்களில்லாமல் இப்பூமியில் ஜீவித்திருக்க மாட்டோம். ஆகையால் உம்முடன் வர உத்தரவு கொடுக்க வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டார்.

ஸ்ரீ ராமசந்திரன் "விபீஷணா! நீ என் சொற்படி இலங்கை சென்று என் நாமம் எது வரையில் பூமியில் இருக்கிறதோ அது வரையில் அதைப் பரிபாலித்து வரவேண்டும். இப்பொழுதே இலங்கைக்குச் செல்" என்றார். விபீஷணன் அப்படியே ஆகட்டுமென்று ஸ்ரீராமருடைய பாதாரவிந்தங்களில் நமஸ்கரித்து அவரால் ஸம்மானம் செய்யப்பெற்று இலங்காபுரி சென்றான்.

பிறகு ரகுவீரன், "ஏ ஜாம்பவானே பூமண்டலத்தில் என் கதை விளங்குகிற வரையில் நீ இருக்கவேண்டும். துவாபர யுகத்தின் கடைசியில் மறுபடியும் நீ என்னைப் பார்ப்பாய்; நீ சுகமாகவிரு, நீ இலங்கையில் செய்த உதவியும் வனத்தில் செய்த உதவியும் கொண்டாடத் தக்கவைகளாம். ஆகையால் துவாபர யுகத்தில் எனக்கு மாமனாராக வந்து பிரசித்தி அடைவாய்" என்று கூறினர். ஜாம்பவான் ஒப்புக்கொண்டு ஸீதையையும் ராமரையும் நமஸ்கரித்து ராமரால் கொண்டாடப்பட்டு சீக்கிரமாகவே புறப்பட்டார்.

பிறகு ரகுசிரேஷ்டன் "ஏ ஆஞ்சனேய! நீயும் சென்று சுகமாகவிரு. எந்தச் சமயத்தில் சேதுவில் சரங்களால் சேது கட்ட அர்ஜுனனுடன் உனக்குப் பந்தயம் ஏற்படுகிறதோ அந்தச்சமயத்தில் அதாவது துவாபர யுகத்தின் முடிவில் என் தரிசனம் உனக்குக் கிடைக்கும். இப்பொழுது சுகமாகச் சென்று, என்னைப் பஜனம் செய்துகொண்டிரு" என்று கட்டளையிட்டவுடன் அநுமான் ராமரையும் லக்ஷ்மணரையும் ஸீதா தேவியையும் நமஸ்

கரித்துப் புறப்படுவதற்கு யத்தினப்பட்டார். அப்பொழுது தாசரதி தன் கழுத்திலிருந்து நவரத்தினங்களிழைத்த ஹாரத்தைத் தந்தார். ஸீதையும் அதேமாதிரி ஹாரத்தையும் பாஹு பூஷணங்களையும் ஸம்மானம் செய்தாள். மாருதி கண்களிலே நீர்பெருக ஸீதா ராமர்களைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து இமயமலைக்குச் சென்றார்.

பிறகு ராமச்சந்திரன் அங்கதனுக்கு வஸ்திரம் முதலியவைகளை வெகுமானமாகக் கொடுத்து, அவனைக் கிஷ்கிந்தைக்கு அனுப்பினர். மகரத்துவஜனைப் பாதாளலோக மனுப்பினர். சுகிருத்துக்களை வஸ்திரம் முதலியவற்றால் பெருமைப் படுத்தித் தங்கள் தங்கள் இருப்பிடத்திற்கு அனுப்பினர்.

பிறகு ரகுபதி யூபகேதுவை அழைத்து, வஸ்திரம் முதலியவைகளால் சந்தோஷப்படுத்தி விதிசாநகருக்கனுப்ப அவன் சேனையுடன் ஸீதையையும் ராமரையும் நமஸ்கரித்துவிட்டுத் தன் மனைவிகளுடனும் புத்திரர்களுடனும் விதிசை சென்றான். இம்மாதிரியே சுபாகுவை மதுரைக்கும் புஷ்கரன் என்ற பாலனைச் சேனையுடன் புஷ்கராவதிக்கும் தக்ஷனை தக்ஷசிலைக்கும் சித்திரகேதுவை ஸ்திரீ புத்திரர்களுடன் அவனது பட்டணத்திற்கும் அனுப்பினர்.

பிறகு ஸீதை ராமர் இருவரும் லவனை அழைத்து லவனுக்கும் அவன் மனைவிகள் புத்திரர்களுக்கும் வஸ்திரம் அலங்காரம் இவைகளளித்து, சேனையுடன் உத்தர குருக்ஷேத்திரத்திற்கு அனுப்பினர். ஸீதை ஸந்தோஷத்துடன் காமதேநுவையும் கொடுத்தாள். பிறகு ரகுநந்தனன் குசனை அழைத்து அவன் மனைவிகளுக்கும் புத்திரர்களுக்கும் அவனுக்கும் தமது அலங்காரங்களையும் வஸ்திரம் முதலிய ஆபரணங்களையும் கொடுத்து, தமது ஆயுதங்கள் வில் அநேகவித வாகனங்கள் வஸ்திரங்கள் சிந்தாமணி இவைகளையும் கொடுத்து "பாலக! நீ அரசர்களுடனும் உன் மனைவிகள் குமாரர்களுடனும் அயோத்தி சென்று சுகமாகவும் தருமமாகவும் பூமியைப் பரிபாலனம் செய்; ஜம்பூத்தீவி

லும்மற்றத்தீவுகளிலுமுள்ள அரசர்களைப் பிள்ளைபோல எண்ணிப் பாதுகாத்துவா'' என்று சொல்லி அரசர்களை நோக்கி, நீங்களெல்லோரும் குசனை என் ஸ்தானத்தில் எப்போதும் கொண்டாட வேண்டும்'' என்றார். இதைக்கேட்ட அரசர்கள் ''ரகூத்தம! தங்களுடைய தேஜஸ் நிறைந்த இந்தக் குசன் பாலனாயினும் எங்களிடத்தில் தங்களைவிட நூறுமடங்கு விசுவாசமுள்ளவன். இதில் சந்தேகமில்லை' இதைச் சத்திய மென்றறிந்து கொள்ளவேண்டும். நீங்கள் எவ்விதம் பரிபாலனம் செய்தீர்களோ அதுபோல் மிகுதியான பராக்கிரமமுள்ள இந்த குசன் எப்போதும் எங்களைக் காப்பாற்றுவான்'' என்று ராஜசிரேஷ்டர்கள் தெரிவித்து ராமரை நமஸ்கரித்தார்கள். ராமச்சந்திரர் அவ்வரசர்களுக்கு வஸ்திரம் அலங்காரம் வாஹனம் இவைகளளித்து உபசரித்தார். பிறகு ராஜாக்கள் அனைவரும் தங்கள் தங்கள் சேனையுடன் குசனை முன்னிட்டுக்கொண்டு பிரயாணமானார்கள்.

குசன் ராகவரை நமஸ்கரித்தான். ஸீதை குசனின் உச்சி மோந்து மகிழ்ந்தாள். பிறகு குசன், வஸிஷ்டமுனிவருடன் ரதமேறிப் புறப்பட்டான். அப்பொழுது ராமர் வண்ணானையும், மந்தரையையும் குசனுடன் பட்டணத்திற்கனுப்பினார். அவ்விருவரும் ராமருக்கு முன் விரோதம் செய்தவர்களாகையால் சொர்க்கம் செல்லவில்லை. இவ்விருவரே கிருஷ்ணாவதாரத்தில் ரஜனகவும் பூதனையாகவும் அவதரிக்கப் போகிறார்கள்.

பிறகு குசன் கண்ணீருங் கண்ணுமாக ரதத்தில் ஏறிக் கொண்டு செல்லும்போது முகத்தைத் திருப்பிக்கொண்டு அடிக்கடி ராமரையும் ஸீதையையும் பார்த்தான். ஸீதாராமர்களிருவரும் தமது கைகளால் போ! போ!: வென்று சூசனை செய்தார்கள். குசன் சேனைகள்சூழ, ஸ்ரீராமா விரஹத்தால் துயரமுறும் சூனியமான அயோத்தியிற் பிரவேசித்து மஹோற்சாஹத்துடன் தன் சிங்காஸனத்தில் அமர்ந்து, ராஜாக்களெல்லோரையும் பூஜித்து, அவர்களை அவரவர்களுடைய தேசங்களுக்குச் செல்ல உத், தரவு கொடுத்தான். அவ்வரசர்களும் குசனை நமஸ்கரித்துத் தங்கள்தங்கள் தேசங்களுக்குச் சென்று, குகமஹாராஜனுக்குக்

கப்பங் கட்டினார்கள்; குசனுடைய ஆஞ்ஞையை எப்போதும் அநுசரித்து நடந்து வந்தார்கள்.

கூனியும் ரஜகனும் அயோத்திக்கு வெளிப்பிரதேசத்திலேயே தெய்வசங்கற்பத்தால் மரணமடைந்து மறுபடியும் அயோத்தியில் ஜன்மமடைந்தார்கள். அயோத்தியில் மரணமடைந்தவர்கள் மறுபடியும் ஜென்மமடைவதில்லை. அதனாலே தான் கூனியும் வண்ணானும் அயோத்தியில் ஈசுவராஞ்ஞையால் மரணமடையவில்லை.

பிறகு ரகுவீரர் வானரர்களை நோக்கி "ஏகவிகளே! நீங்கள் என் விஷயத்தில் மிகவும் சிரமமடைந்தவர்கள்; துவாபரயுகத்தில் நீங்கள் எல்லோரும் இடைச்சேரியில் கோபாலர்களாகப் பிறக்கப்போகிறீர்கள்; அப்போது நான் கிருஷ்ணாவதாரம் செய்து, உங்களுடன் போஜன முதலியவற்றைச் செய்யப்போகிறேன்" என்றுரைத்தார்.

பிறகு சுமித்திரையின் புத்திரனைப் பார்த்து "லக்ஷ்மணா! நீ எனக்காகத் தண்டகாரண்யத்தில் மிகவும் சிரமமடைந்தாய். துவாபரயுகத்தில் நீ எனக்குத் தமயனாக அவதாரம் செய்; நான் உனக்கு சிசுருஷை செய்கிறேன்" என்றார். பின்பு பட்டணத்திலுள்ளவர்கள் எல்லோரையும் பார்த்து நீங்கள் யாவரும் என்னுடன் வாருங்களென்று தயவுடன் கூறினார். பிறகு கற்பக விருக்ஷம் பாரிஜாதம் இவ்விரண்டையும் தேவேந்திரனிடம் அனுப்பினார். புஷ்பக விமானத்தைப்பார்த்து "நீ குபேரனிடம் இப்போதே விரைவாகச் செல்" என்று உத்தரவு செய்தார். உடனே புஷ்பக விமானம் ராமச்சந்திரப் பிரபுவை நமஸ்கரிக்க, ராகவர் அதனைப் புகழ்ந்து சம்மானமளித்தார். பிறகு விமானம் ஸீதாதேவியிடமும் உத்தரவு பெற்றுக்கொண்டு சென்றது.

ரகு சிரேஷ்டன் ஊர்மிளை மாண்டவி சுருதகீர்த்தி இவர்களைப் பார்த்து வான்மீகி முனிவரின் ஸந்நிதானத்தில் சொல்லுகிறார்—"நீங்கள் நாளையதினம் உங்களுடைய கணவன்மார்களுடன் அக்கினிப்பிரவேசம் செய்து என் வாக்கியப்படி ஸ்வர்க்க

லோகம் செல்லவேண்டும்'' என்றார். அவர்கள் அனைவரும் அதற்கிணங்கி, ராமருக்கு நமஸ்காரம் செய்து தங்களுடைய கூடாரம் சென்றார்கள். பிறகு ராமரும் ஸீதையுடன் தங்கமய மான படுக்கையில் அன்றிரவு முழுதும் கழித்தார். பரமசிவன் முதலிய தேவர்கள் முனீசுவரர்களுடன் அங்கிருந்தார்கள். லக்ஷ்மணர் முதலிய எல்லோரும் தங்களுடைய மனைவிகளுடன் சுகம் தவறாமல் கிரீடை செய்தார்கள்.

எல்லோரையும் அவரவர்களிருப்பிடம் செல்லும்படி
ராமர் உத்தரவு செய்ததைக் கூறும்

## 5-வது சருக்கம்

முற்றிற்று.

## 6-வது சருக்கம்.

### ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

பிறகு விடியற்காலையில் ராமர் ஸீதையுட னெழுந்து, அஜமீடனை அழைத்துக் கூறுகிறார்—அஜமீட! நான் இப்போது ஸீதை பந்துக்கள் வானரர்கள் பட்டணத்து ஜனங்கள் இவர்களுடன் என் ஸ்தானம் போகிறேன். நீ ஸ்தாவர சொத்துக்களாகிய கூடாரம் முதலியவற்றைக் குசனுக்கு அனுப்பிவிடு. பூச்சிவரையிலுள்ள ஜங்கம வஸ்துக்கள் யாவும் ஸ்வர்க்கத்திற்குச் செல்லப் போகின்றன. ஆகையால் நீ குசனிடம் சென்று விஷயங்களைத் தெரிவித்துவிடு. குசன் எங்களுக்கு உத்தரகிரியை செய்வான். எங்களைப்பற்றிக் குசன் விசனப்படாம லிருக்கும்படி செய்'' என்றார். இப்படிக் கூறியதைக்கேட்டு அஜமீடன் கண்ணீர் சொரியக் கைகட்டி நின்று 'அவ்விதமே செய்கிறேன்' என்று சொல்லி ரகுநாதரை நமஸ்கரித்தான். பிறகு ராமர் பட்டணத்தில் வசிப்பவர்களுடன் கங்கையில் ஸ்னானஞ்செய்து, மெள்ள நித்திய கருமானுஷ்டானத்தை முடித்துவிட்டு அக்நியில் ஹோமம் செய்து கங்கையின் மணலில் நின்றுகொண்டு அநேக தானங்கள் செய்தார்.

அதன்பின்பு பயணத்திற்குரிய காரியத்தை விதிப்படி செய்து முடித்து அக்நிபகவானை வைகுண்டம் செல்லும்படி அனுப்பினார். அப்பொழுது மஹாலட்சுமி ராமருடைய வலது பக்கம் வந்து நின்றாள். வேதங்கள் உருவத்துடன் வைகுண்டம் சென்றன. மூன்று பதமுள்ள காயத்திரி பிரணவத்துடன் ஸ்ரீராமருடைய முகத்திலிருந்து வெளிப்பட்டு ராமரை நமஸ்கரித்து முந்திச் சென்றது. சாந்தி, பொறுமை, மேதை, திருதி, தயை, தேஜஸ், பலம், பெருமை இவைகளும் முந்திச் சென்றன. பின்பு பௌரர்களும் வானரர்களும் கங்கையில் ஸ்னானம் செய்து பாபத்தைத் தொலைத்து மூச்சை அடக்கிக்கொண்டு சரீரத்தை விட்டார்கள். அதற்குப் பிறகு ராமர் சந்தோஷமாக ஸீதையுடன் கங்கையில் ஆசமனம் செய்து தருப்பைகளைக் கையில் வைத்துக்கொண்டு

தருப்பாஸனத்தில் வடதிசையை நோக்கி உட்கார்ந்தார். அப்பொழுது தேவர்களெல்லோரும் வீற்றிருக்கும் ராமரை நான்கு புஜமுடையவரும் நீலவர்ணரும் மஞ்சள் பட்டாடை தரித்தவரும், கௌஸ்துபரத்தினத்தின் அடையாளமுள்ள ஹிருதயமுடையவரும் ஸ்ரீவத்ஸம் என்ற அடையாளத்தால் பிரகாசம் அடைந்தவருமாகிய மஹாவிஷ்ணுவாகப் பார்த்தார்கள். அந்த மஹாவிஷ்ணுவின் இடதுபக்கத்தில் ஸீதை மஹாலட்சுமியாகத் தோன்றினாள். சௌமித்திரியாகிய லட்சுமணர் படங்களுடன் கூடிய ஆதிசேஷனாகவும், விஷ்ணுவின் வலதுகையில் பரதன் சங்கமாகவும், இடது கையில் சத்ருக்னன் சுதரிசனமாகவும் தோன்றினார்கள். அப்பொழுது வானரர்கள் யாவரும் தேவர்களிடம் பிரவேசித்தார்கள். அயோத்தியிலிருக்கும் சண்டாளன் முதலிய புழுப்பூச்சிகள் யாவும் திவ்ய சரீரமடைந்து விமானத்தில் விளங்கினார்கள். அப்பொழுது ஆகாய மார்க்கத்தில் தேவவாத்தியங்கள் சப்தித்தன. தேவபத்தினிகள் புஷ்பமாரி பொழிந்தார்கள். கந்தருவ கின்னரர்கள் பாடினார்கள். சூரியன்போன்ற காந்தியுள்ள விஷ்ணுவைக் கருடன் நமஸ்கரித்தான். ஸோமன் முதலிய எல்லோரும் தேகத்தை விட்டார்கள். ஊர்மிளை முதலிய மூவரும் அழகான கங்கைக்கரையில் கணவன்மார்களுடைய சரீரத்தைக்கட்டிக்கொண்டு தங்கள் சரீரத்தை அக்னியில் தியாகம் செய்தார்கள். மஹாலட்சுமியுடன் கூடிய மஹா விஷ்ணுவுக்குத் தேவபத்தினிகள் நீராஜனம் செய்தார்கள்.

பிறகு மஹாவிஷ்ணு அன்போடு பிர்ம்மாவை அழைத்துத் "திரியக்ஜாதியில் சேர்ந்த அயோத்தியா வாசிகளுக்கு வாசம் செய்யும் இடம் எது கூறும்" என்று கேட்டார்.

பிர்ம்மதேவர், "என் லோகத்திற்கு மேற்பட்ட சாந்தானிகமென்னும் உலகத்தில் உங்கள் தரிசனம் செய்துகொண்டு விளங்கக்கடவர்" என்றார். பிறகு விஷ்ணு பிர்ம்மனைப் பார்த்து "இனி அயோத்தியில் மரணமடைபவர்களும் சாந்தானிக லோகத்திலேயே வாசம் செய்யக்கடவர்" என்றார். பிரமன் "அவ்விதமே ஆகுக" என்றார். அயோத்தியில் வாசம் செய்யும் யாவரும் திவ்ய தேகம் பெற்று அநேகவித விமானங்களி லேறிக்கொண்டு

திவ்யாலங்காரங்களுடனும் அப்ஸரஸ்திரீகள் சந்தனம் பூசவும் திவ்யசாமரம் வீசவும் சந்திரமண்டலம் போன்ற முகமுடையவர்களாகிச் சூரியனைப்போல் பிரகாசித்துக்கொண்டு ஆகாயமார்க்கத்தில் விளங்கினார்கள்.

பிறகு பிர்ம்மா முதலான தேவர்கள் விஷ்ணுவை அன்புடன் நமஸ்கரித்து நாநாவிதமாக ஸ்தோத்தரித்தார்கள். முநீசுவரர்கள் வேத கோஷங்களாலும் ஸ்தோத்திரம் செய்தார்கள். அப்பொழுது மூவுலகங்களைப் பரிபாலிப்பவரும் வனமாலையைத் தரித்தவருமாகிய மஹாவிஷ்ணுவைப் பரமசிவன் ஸ்தோத்திரம் செய்தார்.

---

ஶம்பு³ருவாச.

ராக⁴வம் கருணாகரம் ப⁴வநாஶநம் து³ரிதாபஹம்
மாத⁴வம் க²க³கா³மிநம் ஜலரூபிணம் பரமேஶ்வரம்।
பாலகம் ஜநதாரகம் ப⁴வஹாரகம் ரிபுமாரகம்
த்வாம் ப⁴ஜே ஜக³தீ³ஶ்வரம் நரரூபிணம் ரகு⁴நந்த³நம்॥

அகி²லேஶம் வநமாலிநம் க⁴நரூபிணம் த⁴ரணீத⁴ரம்
ஶ்ரீஹரிம் த்ரிகு³ணாத்மகம் துலஸீத⁴ரம் மது⁴ரஸ்வரம்।
ஶ்ரீகரம் ஶரணப்ரத³ம் மது⁴மாரகம் வ்ரஜபாலகம்
த்வாம் ப⁴ஜே ஜக³தீ³ஶ்வரம் நரரூபிணம் ரகு⁴நந்த³நம்॥

சம்பு கூறுகிறார்.

ராகவரும் கருணைக்கடலும் பவபந்தத்தை நாசஞ்செய்பவரும், துக்கத்தைப் போக்குகிறவரும் மாதவரும் கருடவாகனரும் தீர்த்தசொரூபரும் பரமேசுவரரும் பரிபாலனம் செய்கிறவரும், ஜனங்களுக்குத் தாரகரும் ஸம்ஸாரத்தைப் போக்குகிறவரும் சத்ருக்களை நாசஞ்செய்தவரும் ஜகதீசுவரரும் ரகுநந்தனரும் மானிடவேடங் கொண்டவருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன். 1

அகிலநாதரும் வனமாலையுடையவரும் மேகவர்ணரும், பூமியை ஆதரித்தவரும், ஸ்ரீ ஹரியும் முக்குணவடிவமானவரும், துளசிமாலை யணிந்தவரும், மதுரமான குரலுடையவரும் அழகான கரங்களுள்ளவரும் அபயமளிப்பவரும் மதுவென்ற அசுரனைச் சங்கரித்தவரும் இடைச்சேரியைக் காப்பாற்றுகிறவரும் ஜகதீசுவரரும் மானிட வடிவங் கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன். 2

விஹ்வலம் மதுராஶ்ரிதம் ரஜகாந்தகம் கஜமாரகம்
மந்நதம் பகமாரகம் வ்ருதவாதகம் தூரஶாத்ருநந்த।
நந்தஜம் வஸுதேவஜம் ப்ரியயஜ்ஞகம் ஸுரபாலகம்
பஜ ஹே ஜகதீஶ்வரம் நரரூபிணம் ரகுநந்தநம்॥
கேஶவம் கபிவேஷ்டிதம் கபிமாரகம் ம்ருகமர்த்தநம்
ஸாந்த்ரத்விஜபாலகம் திதிஜார்த்தநம் தநுஜார்த்தநம்।
பாலகம் கரமர்த்தநம் ருஷிபூஜிதம் முநிசிந்திதம்
பஜ ஹே ஜகதீஶ்வரம் நரரூபிணம் ரகுநந்தநம்॥
ஶங்கரம் ஜலஶாயிநம் குஶபாலகம் ரதவாஹநம்
ஸரயூநதம் ப்ரியபுஷ்பகம் ப்ரியபூஸுரம் லவபா

---

ஒரு காரண நிமித்தம் தளர்ச்சியடைந்தவரும் மதுராநகரிலிருப்பவரும், ரஜகனுக்கு அந்தகரும் கஜாசுரனைக் கொன்றவரும் என்னால் நமஸ்கரிக்கப்படுகிறவரும் பகாசுரனைக் கொன்றவரும் நந்தனுடைய பாலனத்திலிருந்துவரும் வசுதேவகுமாரரும் தேவ பாலகரும் ஜகதீசுவரரும் மானிட வடிவங் கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மை பஜிக்கிறேன். 3

கேசவரும் கவிகள் சூழ விளங்குகிறவரும் வாலியை வதைத்தவரும், மாரீசனைச் சங்கரித்தவரும் சுந்தரசொரூபரும் அந்தணர்களைக் காத்தவரும் திதியின் குமாரர்களைக் கொன்றவரும் தனுவம்சத்தில் பிறந்தவர்களை நாசம் செய்தவரும் பால சொரூபரும் கரனைக் கொன்றவரும் ரிஷிகளால் சம்மானிக்கப்பட்டவரும் முனிவர்களால் தியானஞ் செய்யப்பட்டவரும் ஜகதீசுவரரும் முனி வடிவங் கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன். 4

சுகத்தை உண்டுபண்ணுகிறவரும் ஜலத்தில் சயனம் செய்பவரும் குசனைப் பாலகனாக உடையவரும் ரதாரூடரும் சரயூவால் வணங்கப்படுகிறவரும் புஷ்பக விமானத்தில் பிரியமுள்ளவரும் பிராம்மணர்களிடம் பிரியமுள்ளவரும், லவனைப் பாலனாக உடையவரும் ஸ்ரீ தரரும் மதுசூதனரும் பரதாக்ரஜரும், கருடத்வஜரும்

ஶ்ரீப்ரஹ்லாதவரதம் பரதாக்ரஜம் கருடத்⁴வஜம் [ருசம்|
த்வாம் பஜே ஜகதீஶ்வரம் நரரூபிணம் ரகுநந்தநம் ||
கோப்ரியம் குருபுத்ரஸம்பத்ப்ரதம் வததாம்வரம் கருணாநிதிம்
பக்தபம் ஜநதோஷதம் ஸுரபூஜிதம் ஶ்ருதிபிஃ ஸ்துதம்
புக்திதம் ஜநமுக்திதம் ஜநரஞ்ஜநம் ந்ருபநந்தநம் [த்வாம்|
த்வாம் பஜே ஜகதீஶ்வரம் நரரூபிணம் ரகுநந்தநம் ||
ஸித்³தி⁴நம் சிரஜீவிநம் மணிமாலிநம் வரதோந்முகம்
ஶ்ரீதரம் த்⁴ருதிதாயகம் பலவர்த⁴நம் கதிதாயகம் |
ஶாந்திதம் ஜநதாரகம் ஶரதாரிணம் கஜகாமிநம்
த்வாம் பஜே ஜகதீஶ்வரம் நரரூபிணம் ரகுநந்தநம் ||
ஶார்ங்கிணம் கமலாநநம் கமலாத்³ருஶம் பதபங்கஜம்
ஶோபநம் ரவிபாஸ்வரம் ஶஶிஸந்நிபம் பதபங்கஜாரு[ணம்

---

ஜகதீசுவரரும் மானிட வடிவங்கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மைப் பஜிக்கிறேன். 5

கோக்களிடம் பிரியமுள்ளவரும் குருவுக்குப் புத்திர சம்பத்தளித்தவரும் பேச்சுக்காரர்களுக்குள் சிறந்தவரும் கருணாநிதியும் பக்தர்களைப் பாலிப்பவரும், ஜனங்களுக்குச் சந்தோஷம் கொடுப்பவரும் தேவர்களால் பூஜிக்கப்பட்டவரும் வேதங்களால் ஸ்தோத்திரம் செய்யப்படுகிறவரும் ஜனங்களுக்குப் புத்தி முக்தியைக் கொடுப்பவரும் ஜனரஞ்சனரும் நிருபநந்தனரும் ஜகதீசுவரரும் மானிட வடிவங்கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன். 6

சித்தனும் சிரஞ்சீவியும் மணிமாலை யணிந்தவரும் வரங்கொடுப்பதில் நோக்கமுள்ளவரும் ஸ்ரீதரரும் தைரியமளிப்பவரும் பலத்தை விருத்தி பண்ணுகிறவரும் நல்ல கதியைக் கொடுப்பவரும் சாந்தியைக் கொடுப்பவரும் ஜனங்களுக்குத் தாரகரும் பாணங்களைத் தரித்தவரும், ஜகதீசுவரரும் மானிட வடிவங்கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன். 7

சார்ங்கமென்ற வில்லைத் தரித்தவரும் தாமரைபோன்ற முகமுள்ளவரும், லக்ஷ்மியிடம் கண்ணுள்ளவரும் பங்கஜம் போன்ற

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

---

பாதமுள்ளவரும், சியாமள வர்ணரும் சூரியன் போன்றவரும், சந்திரனுக்கு சௌக்கியம் கொடுத்தவரும் கருணைக் கடலும் சத்பதியும் நிருபபாலகரும் நிருபவந்திதரும் நிருபதிப்பிரியரும் ஜகதீசுவரரும் மானிட வடிவங் கொண்டவரும் ரகுநந்தனருமாகிய உம்மைப் பஜிக்கிறேன். 8

நிர்க்குணரும் சகுண வடிவங் கொண்டவரும் புத்தியை விருத்தி செய்தவரும் அச்சுதரும் புருஷோத்தமரும் பரமேஷ்டியும் மந்தஹாஸமுள்ள முகமுடையவரும் ஈசுவரரும் அநுமானல் நமஸ்காரம் செய்யப்பட்டவரும் லட்சுமீகாந்தரும் ஜனங்களுக்குச் சாக்ஷியும் ஜகதீசுவரரும் மானிட வடிவங் கொண்டவரும் ரகுநந்தருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன். 9

சூரியோதய காலத்தில் அநேக நாமதேயங்களடங்கிய உத்தமமான இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்யும் மானிடர்கள் தங்கள் உறவினர் மனைவி மக்கள் இவர்களுடன் சீக்கிரத்தில் உம்முடைய சரணாரவிந்த சமீபம் வந்து, உமக்குச் சிசுரூஷை செய்பவராவார்கள். 10

இவ்விதம் பார்வதீபதி மஹாவிஷ்ணுவை ஸ்தோத்திரம் செய்து, "ஏ லக்ஷ்மீநாத! கருடன் மீது சீக்கிரமாக ஏறும். வைகுண்டாரோஹணத்திற்கு இதுவே காலம்; வான்மீகி கூறிய

பதினேராயிரத்துப் பதினேரு வருஷம் பதினேரு மாதம் பதி னேரு நாள் பதினேரு நாழிகை பதினேரு க்ஷணமும் இப்பூமி யில் கழிந்தன. இந்தத்தினம் சைத்திர சுக்ல பஞ்சமீ திதியா கிறது; வஸந்த பஞ்சமி எனப்படுவது. இந்தப் புண்ணிய தினத் தில் உங்களிருப்பிடம் செல்ல வேண்டும்—என்ருர்.

அப்பொழுது மஹாவிஷ்ணு மந்தஹாஸம் செய்துகொண்டு, வான்மீகி முனிவரை ஆலிங்கனம் செய்து மற்ற முனிவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு கருட வாஹனத்தின் மீதேறினர். அப் பொழுது தேவ வாத்தியங்கள் சப்தித்தன. நாரதர் முதலியவர் கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். தேவர்கள் புஷ்பமாரி பொழிந் தார்கள். அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் செய்தார்கள். நான்கு பக்கமும் விமானம் சூழ்ந்திருந்தது.

இப்படியிருக்க விமானக் கூட்டத்துடன் மஹாவிஷ்ணு புறப் பட்டு உலகங்களை மெள்ளப் பார்த்துக்கொண்டு வைகுண்டம் சென்று அங்குத் தன் ஸ்தானத்திலிருந்துகொண்டு பரமசிவன் முதலியவர்களை அவரவர்களிருப்பிடத்திற்கனுப்பினர். ஆதிசேஷ மயமான தல்பத்தில் கருடன் பாதங்களில் சேவிக்கப் பரிபூர்ண மனோரதமுடையவராய் ஆனந்தத்துடன் இலட்சுமியோடு வாசம் செய்தார். அயோத்தியில் வசிப்பவர் யாவரும் சாந்தானிக பதஞ் சென்ருர்கள். பிறகு முனிவர்கள் யாவரும் தங்களிருப்பிடம் சென்ருர்கன். அஜமீடன் ராமருடைய உத்தரவுப்படி குசனிடம் சென்று அவனைச் சமாதானப்படுத்தி ஸ்வர்க்காரோஹண வர லாற்றை விவரமாகக் கூறினன்.

பிறகு குசன் அஜமீடனுக்குச் சம்மானம் செய்ய அஜமீடன் அஸ்தினபுரி சென்ருன்.

குசன் குமுதவதியை அடைந்து அவளிடம் பிள்ளைகளை உண்டு பண்ணினன்.

இவ்விதம் ஸ்ரீராமர் ஸ்வர்க்காரோஹணம் செய்த வரலாற் றைப் பக்தியுடன் கேட்பவர்கள் ஸ்வர்க்கலோக மடைவார்கள்.

வைகுண்டாரோஹணம் செய்த இவ்வரலாற்றைக் கூறும் இவ்வத்தியாயத்தைத் தினந்தோறும் காலையில் பாராயணம் செய்பவனும் செய்வித்துக் கேட்பவனும் பிறர் கேட்கும்படி செய்பவனும் பூலோகத்தில் புத்திர பௌத்திரர்களை யடைந்து சுக போகங்களை யநுபவித்து நீண்ட ஆயுளுட னிருப்பார்கள். பிறகு அவர்கள் ராமச்சந்திரருடைய 'அநுக்கிரகத்தால் வைகுண்ட மடைவார்கள்.

வைகுண்டாரோஹண வரலாற்றைக் கூறும்

6-வது சருக்கம்

முற்றிற்று.

## 7-வது சருக்கம்.

---

### ராமதாஸர் கூறுகிறார்.

சிடனே! நீ கேட்டபடி ராமச்சந்திர மூர்த்தி வைகுண்டா ரோஹணம் செய்த மங்களத்தைக் கூறினேன். இன்னும் உனக்குக் கேட்க விருப்பமுள்ளதைக் கேள். நான் கூறுகிறேன்-என்று சொன்னதைக் கேட்ட விஷ்ணுதாஸர் கேட்கிறார்.

### விஷ்ணுதாஸர் கேட்கிறார்.

குருவே! சூரிய பரம்பரையைப்பற்றிக் குசன் வரையில் நீங்கள் முன் கூறினீர்கள். குசனுக்குப் பின்பும் சூரிய பரம்பரையைப்பற்றிக் கேட்க விரும்புகிறேன் என்றான்.

### ஸ்ரீ ராமதாஸர் கூறுகிறார்.

விஷ்ணுதாஸ! முன் விஷ்ணுமுதல் அறுபத்தொரு தலைமுறை யரசர்களைக் கூறினேன். இன்னும் அறுபத்தொரு அரசர்களைப் பற்றி விஸ்தாரமாகக் கூறுகிறேன். ஸ்ரீராமருக்குக் குசன் புத்திரன், குசனுக்கு அதிதி, அதிதிக்கு நிஷதன் நிஷதனுக்கு நபன், நபனுக்குப் புண்டரீகன், புண்டரீகனுக்கு க்ஷேமதன்வா, க்ஷேமதன்வாவுக்கு தேவானீகன், தேவானீகனுக்கு அஹீனன், அஹீனனுக்குப் பார்யாத்திரன், பார்யாத்திரனுக்குப் பலன், பலனுக்கு ஸ்தலன், ஸ்தலனுக்கு வஜ்ரநாபன், வஜ்ரநாபனுக்குக்ககணன், ககணனுக்கு விதிருதி, விதிருதிக்கு ஹிரண்யநாபன், ஹிரண்யநாபனுக்குப் புஷ்பன், புஷ்பனுக்கு துருவசந்தி, துருவசந்திக்கு சுதருசனன், சுதருசனுக்கு அக்நிவர்ணன், அக்நிவர்ணனுக்கு சீக்ரன், சீக்ரனுக்கு மரு, மருவுக்கு பிரசுருதன், பிரசுருதனுக்கு சந்தி சந்திக்கு மருஷணன், மருஷணனுக்கு நபஸ்வான், நபஸ்வானுக்கு விசுவவாஹன், விசுவவாஹனுக்குப் பிரஸேநஜித், பிரஸேநஜித்துக்குத் தக்ஷகன், தக்ஷகனுக்கு பிருஹத்பலன், பிருஹத்பலனுக்குப் பிருஹத்ரணன், பிருஹத்ரணனுக்கு உருக்கிரியன், உருக்கிரிய

னுக்கு வத்ஸவிருத்தன். வத்ஸவிருத்தனுக்கு வியோமன், வியோம னுக்கு பானு, பானுவுக்கு திவாகன், திவாகனுக்கு ஹைதேவன், ஹைதேவனுக்கு வீரன், வீரனுக்கு பிருஹதசுவன், பிருஹதசுவ னுக்கு பானுமான், பானுமானுக்குப் பிரதீகாசன், பிரதீகாசனுக்கு சுப்பிரதீகன், சுப்பிரதீகனுக்கு மருதேவன், மருதேவனுக்கு சுந க்ஷத்திரன், சுநக்ஷத்திரனுக்கு புஷ்கரன், புஷ்கரனுக்கு அந்தரி க்ஷன், அந்தரிக்ஷனுக்கு சுதபச், சுதபசுக்கு மித்திரன், மித்திர னுக்கு மித்திரஜித், மித்திரஜித்துக்கு பிருஹத்ராஜன், பிருஹத் ராஜனுக்கு பர்ஹி, பர்ஹிக்கு சிருதஞ்சயன், சிருதஞ்சயனுக்கு ரணஞ்ஜயன், ரணஞ்ஜயனுக்கு ஸஞ்ஜயன், ஸஞ்ஜயனுக்கு சாக்கி யன், சாக்கியனுக்கு சுத்தோதன், சுத்தோதனுக்கு லாங்கலன், லாங்கலனுக்குப் பிரஸேனஜித், பிரஸேனஜித்துக்கு க்ஷுத்ரகன், க்ஷுத்ரகனுக்கு ரணகன்; ரணகனுக்கு ஸுரதன், ஸுரதனுக்கு தனயன், தனயனுக்கு சுமித்திரன், சுமித்திரனுக்குப் பரமன், இப்படியாக சூரிய வம்சம் முடிவு பெற்றது.

ஹிமோத்பர்வதத்தின் ஸமீபத்திலுள்ளது வதரிகாசிரமம். அதற்குச் சமீபத்தில் கலாபகிராமம் என்று ஓர் ஊர் உளது. அதில் முன் நான் கூறிய மநு என்னும் அரசன் ஒரே மனதோடு வெகு காலம் தவம்புரிந்து வருகிறான். மறுபடியும் கிருதயுகம் வரும்போது, சூரிய வம்சத்தை யுண்டுபண்ணப்போகிறான். இவ் விதம் மனதிற்கு இன்பமளிக்கும் சூரிய வம்சத்தை யுனக்குக் கூறினேன். ஸ்ரீ மஹாவிஷ்ணு முதல் ஸ்ரீராமன் ஜனனகாலம் வரையில் சூரிய வம்சம் அறுபத்தொரு தலைமுறையாகும். ஸ்ரீ ராமருக்குப் பின் அறுபத்தொரு தலைமுறை ஸ்ரீராமனுள்பட நூற்றிருபத்து மூன்று தலைமுறையாம்.

சிடனே! சூரியவம்சத்தின் விவரத்தை நீ கேட்டபடி உனக் குக் கூறினேன். இதைக் கேட்டதினாலேயே புண்யமுண்டாகும்.

விஷ்ணுதாஸர் வினவுகிறார்.

குருவே! இதற்கு முன் ஒரு ரிஷியினிடத்தில் ஸ்ரீராமாயணத் தை விஸ்தாரமாக நான் கேட்டிருக்கிறேன். அவரால் இவ்விஷயம்

விளக்கப்படவில்லை. தவிரவும் அதற்கும் இப்பொழுது தாங்கள் சொல்லியதற்கும் பலவிடங்களில் பேதமிருக்கிறது. ஆகையால் எனக்குச் சந்தேகமுண்டாயிருக்கிறது. அச்சந்தேக நிவர்த்தி செய்யவேண்டும்.

ராமதர்ஸர் கூறுகிறார்.

கற்பங்கள் தோறும் ஸ்ரீராமருடைய அவதாரங்கள் கோடிக் கணக்காக ஏற்படுகின்றன. அவைகளில் ஸ்ரீராமனே! ஒவ்வொரு அவதாரங்களிலும் பேதத்தைக் காட்டியிருக்கிறார்.

எல்லா அவதாரங்களிலும் ஒரே மாதிரி நடக்கவில்லை. வான்மீகி மஹாரிஷியும் ராமாயணங்களைச் செய்து ஒவ்வொன்றிற்கும் பேதத்தைக் காட்டியிருக்கிறார். மொத்தத்தில் ஸ்ரீமத் ராமாயணத்தின் எண்ணிக்கை நூறுகோடி கிரந்தங்கள். ஏ புத்திசாலியான சீடனே! இவ்விஷயத்தில் நீ ஸந்தேகப்பட வேண்டாம். நான் உனக்குக் கூறியவைகளெல்லாம் உண்மையே யல்லது பொய்யல்ல. இப்பரதகண்டத்திலுள்ள ராமாயணத்தின் ஒரு பாகத்திலிருந்தே முன் வியாசமுனிவர் நகரம் முதலிய புராணங்களைச் செய்தார். அப்புராணங்களில் நான் கூறியவைகளெல்லாம் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கிறன. இக்கதைகளின் பேதத்தால் உனக்குச் சந்தேகம் உண்டானதுபோல் மற்ற ஜனங்களுக்கும் சந்தேகம் உண்டானால் அவர்கள் நாரதீயம் முதலிய புராணங்களால் தெரிந்துகொள்ள வேண்டும். பண்டிதர்கள் நான் சொல்லியவைகளில் ஸந்தேகம் கொண்டால், மற்றப் புராணங்களில் பார்த்து அவர்களுடைய சந்தேகங்களைத் தெளிந்து கொள்ளல் வேண்டும். நான் கூறியது ஸத்தியமாம்.

சூரியவம்சத்தின் வர்ணனையைக் கூறும்

7-வது சருக்கம்.

முற்றிற்று.

## 8-வது சருக்கம்.

### விஷ்ணுதாஸர் கேட்கிறார்.

குருவே! ஒவ்வொரு சருக்கத்திலும் கதையின் வரிசையையும் அந்தப் பாராயணம் முதலியவற்றைச் செய்வதால் ஏற்படும் பலனையும் காண்டங்களின் எண்ணிக்கையையும் சருக்கங்களின் கணக்கையும் சுலோகங்களின் எண்ணிக்கையையும் உத்தியாபனத்தையும் கிரந்தங்களின் தானத்தையும் அவைகளின் பலனேயும் சகுனம் பார்ப்பதையும் அநுஷ்டானத்தின் விதானத்தையும் சிரவணஞ் செய்யக் கால நிர்ணயத்தையும் காண்டங்களின் தனிக் கணக்கையும் சொல்லவேண்டும்.

### ஸ்ரீராமதாஸர் கூறுகிறார்.

சீடனே! சருக்கங்களின் வரிசையைப்பற்றி முந்திக் கூறுகிறேன். அதைக்கேட்ட மாத்திரத்தில் கிரந்தங்களெல்லாவற்றையும் கேட்ட பலனுண்டாகும். முதல் சருக்கத்தில் கௌஸல்யா சுயம்வரம். இரண்டாவது சருக்கத்தில் ராமர் முதலியவர்களின் அவதாரம். மூன்றுவதில் மிதிலாநகரில் நடந்த ஸீதையின் சுயம்வர வரலாறு. நான்காவதில் முத்கலமுனிவர் கூறிய பிருந்தாசாபம் முதலிய கதைகள். ஐந்தாவதில் தசரதருடையவும் கைகேயியினுடையவும் பூர்வஜன்ம சமாசாரம். ஆறுவதில் ராமர் வனத்திற்குப் பிரயாணமான கதை. ஏழாவதில் விராதன், ஜடாயு, மாரீசன் இவர்களுடைய தவமும் வரலாறும் சொல்லப்படுகின்றன. எட்டாவதில் ராமர் வாலியை வதம் செய்தது. ஒன்பதில் அனுமான் ஸீதையைக் கண்டது; லங்காதஹனம். பத்தாவதில் ஸேது மகாத்மியம். காசிவிச்வேசுவரர்களின் வரவு. பதினொன்றில் ராகவன் செய்த ராவணுதி வதம். பன்னிரண்டில் ராமச்சந்திரன் ஸீதையுடன் அயோத்திக்கு வந்து அரசனானது. பதின்மூன்றில் ராமன் அநுமான் இவர்களின் பராக்கிரம வர்ணனே—இவ்விதம் ஸாரகாண்டம் முடிந்திருக்கிறது.

## யாத்திராகாண்டம்.

யாத்திராகாண்டம் முதல் சருக்கத்தில் வான்மீக முனிவரிடம் சுலோகம் உண்டானதைக் கூறுகிறது. இரண்டாவதில் ராமாயணவிபாகம் செய்தது. மூன்றாவதில் ஸீதை யாத்திரை செய்ய ரா்மரைப் பிராத்தித்தது. நான்காவதில் ராகவன் கங்கையை உத்தேசித்து யாத்திரை செய்தது. ஐந்தாவதில் முனியின் வசனப்படி யாத்திரை செய்ய நிச்சயிப்பது. ஆறாவதில் கிழக்குத் தேசங்களிலுள்ள தீர்த்த யாத்திரையை விஸ்தாரமாகக் கூறியது. ஏழாவதில் தென்றிசையிலுள்ள தீர்த்த யாத்திரை விவரம். எட்டாவதில் மேற்றிசையில் தீர்த்த யாத்திரை செய்தது. ஒன்பதாவதில் வடதிசையில் யாத்திரை செய்த வரலாறு. யாத்திரா காண்டம் இவ்விதம் முடிந்திருக்கிறது.

## யாககாண்டம்.

முதற் சருக்கத்தில் வஸிஷ்ட முனிவர் யாகசாமான்களை கூறுவது. இரண்டாவது ராமச்சந்திரன் யாகம்செய்ய ஆரம்பம் செய்தது. மூன்றாவதில் அசுவமேதக்குதிரை பூமியை வலம் வந்தது.

நான்காவதில் அகஸ்தியருக்கும் ராமருக்கும் சம்வாதம். ஐந்தாவதில் ராம நாமங்கள் நூற்றெட்டைக் கூறியது.

ஆறாவதில் அசுவமேதத்தில் எல்லோருடைய ஆர்ஹிகத்தைக் கூறியது. ஏழாவது துவஜாரோகணம். எட்டாவதில் அவபிருதஸ்னனம். ஒன்பதாவதில் அசுவமேதயாகத்தின் முடிவு—இவ்விதம் யாக காண்டத்தில் முடிந்திருக்கிறது.

## விலாஸகாண்டம்.

முதலாவது சருக்கத்தில் ராமஸ்தோத்திரம். இரண்டாவதில் இரதசாலையையும் ஸீதையையும் வர்ணித்தல், மூன்றாவதில் இரகூத்தமன் தேகராமாயணம் கூறியது. நான்காவதில் தினசரியை; ஸீதையின் ஆபரண வரலாறு. ஐந்தாவதில் ஜலயந்திரத்தில் கிரீடை செய்ததும் ஆந்ஹிகம் செய்தவரலாறும். ஆறாவதில் உப்பரிகையிலிருந்த பிராமணன் பத்தினிக்கு அலங்காரம் செய்த வா

லாறு. ஏழாவதில் மூர்த்திகளைத்தானம் செய்ததும் தேவஸ்திரீ களுக்கு வரம் கொடுத்ததும் எட்டாவதில் குணவதிக்கும் பிள் களைக்கும் வரம் கொடுத்தது ஒன்பதாவதில் குரு க்ஷேத்திர யாத்திரையில் ஜானகிக்கு ஜயம் கிடைத்தது. இவ்விதம் விலாஸ காண்டம் முடிந்திருக்கிறது.

## ஜன்மகாண்டம்.

முதலாவது சருக்கத்தில் கர்ப்பிணியாகிய ஸீதை தோட்டத் தில் அன்புடன் கிரீடை செய்தது. இரண்டாவதில் அனேக விளை யாட்டுகளும் ஸீமந்தோந்யன மஹோற்சவமும். மூன்றாவதில் வண் ணான் சொல்லைக் கேட்டு ஸீதையைத் தியாகம் செய்தது. நான்காவ தில் குசலவர்களின் உற்பத்தி. ஐந்தாவதில் ராமரக்ஷை. ஆறாவதில் தாமரைப் பூவைக் கொண்டுவரும் பொழுதும் லவன் ஜயம் பெற் றது. ஏழாவதில் ராமருக்கும் புத்திரர்களாகிய குசலவர்களுக் கும் நடந்த வரலாறு. எட்டாவதில் ஸீதை முதலியவர் களுக்கு மண்டபத்தில் கிடைத்தபெருமை. ஒன்பதாவதில் பாலர் களுக்கு உபனயனம் முதலிய உற்சவங்கள். இவ்விதம் ஜன்ம காண்டம் முடிந்திருக்கிறது.

## விவாககாண்டம்.

முதலாவது சருக்கத்தில் சுயம்வரத்திற்கு ராமரிடம் செல் லுதல். இரண்டாவதில் சம்பிகையின் சுயம்வரம். மூன்றாவதில் சுமதியின் சுயம்வரம். நான்காவதில் குசலவர்களின் விவாஹம். ஐந்தாவதில் கந்தருவகன்னிகளையும் நாக கன்னிகளையும் மோசு னம் செய்தது. ஆறாவதில் அவர்களுடைய விவாஹ நிச்சயம். ஏழாவதில் பன்னிரண்டு விவாஹங்களைக் கூறியது. எட்டாவது யூபகேதுவின் பராக்ரமத்தை வர்ணித்தல். ஒன்பதாவதில் மதனசுந் தரியின் விவாஹ வரலாறு.

## ராஜ்ய காண்டம்.

முதலாவது சருக்கத்தில் ராமஸஹஸ்ரநாமம். இரண்டாவ தில் தேவவிருக்ஷங்களிரண்டையும் பூமியில் வரவழைத்தது. மூன் றாவதில் ராமோபாஸகனுக்கும் கிருஷ்ணோபாஸகனுக்கும் சம்வா

தம். நான்காவதில் நூறு ஸ்திரீகளுக்கும் நித்திரைக்கும் வர மளித்தல், ஐந்தாவதில் ஸீதையின் பிரிவால் உண்டாகும் உபத்திரவம், ஆறுவதில் மூலகாசுரவதமும், ராஜீயக் கணக்குங் கூறியிருக்கின்றது. ஏழாவதில் பாதகண்டத்தை ராமர் ஜயித்தது. எட்டாவதில் ராமச்சந்திரன் ஜம்பூத்வீபத்தை ஜயித்தது. ஒன்பதில் ராகவன் ஆறு தீவுகளையும் ஜயித்தது. பத்தாவதில் சன்னியாசி சூத்திரர்கள் கழுகுகள் இவர்களுக்குச் செய்த சிக்ஷை. பதினொன்றுவதில் ராமர் நான்கு ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்தது பன்னிரண்டாவதில் பதினாயிரம் ஸ்திரீகளுக்கு வரம் கொடுத்தது பதின்மூன்றுவதில் ஹாஸ்யம் கூடாதென்று ஆஞ்ஞை செய்தது. பதினான்காவதில் வான்மீகி முனிவர் தம் ஜன்மத்தின் வரலாற்றைக் கூறியது. பதினைந்தாவதில் விஸ்தாரமாக ராம ராஜ்யத்தைப்பற்றி வர்ணித்தல். பதினாறுவதில் ஸ்ரீராகவன் ராஜநீதி வர்ணித்தல். பதினேழாவதில் குசன் கன்னிகையையின் சுயம்வரம். பதினெட்டாவதில் அந்தணர்களுக்கு ராமநாதபுரத்தைத் தானமாகக் கொடுத்தது. பத்தொன்பதில் ராமச்சந்திரன் தின சரியையின் வர்ணனை. இருபதில் ராஜாக்களுக்கு அவதாரங்களில் இந்த அவதாரம் சிறந்தது என்பதைக் கூறியது. இருபத்தொன்றில் ராமர் தாசிக்கு இரண்டு வரம் கொடுத்தது.

இருபத்திரண்டில் ஸீதை துளசிதளத்தைச் சேர்ந்தது. இருபத்துமூன்றில் ஆனந்த ராமாயணத்தின் பலசுருதி. இருபத்து நான்கில் யமனுடைய சிக்ஷை பூமியில் தருமசிக்ஷை. இவ்விதம் ராஜ்யகாண்டம் முடிந்திருக்கும்.

## மனோகரகாண்டம்.

முதலாவது சருக்கத்தில் இலகு ராமாயணம். இரண்டாவதில் நகரிலுள்ளோருக்கும் தாய்மார்களுக்கும் உபதேசம் செய்தது. மூன்றுவதில் ராமபூஜை உபாஸனை இவைகளின் விஸ்தாரமிருக்கிறது. நான்காவதில் ராமஸ்தோத்திரத்தின் விஸ்தாரம். ஐந்தாவதில் ராமலிங்கங்களின் பேதங்கள். ஆறுவதில் நவமீ விரதத்தின் விரிவும் அதன்கதையும். ஏழாவதில் ராமநாம லக்ஷத்தின் உத்தியாபனம். எட்டாவதில் வேதம் முதலிய எல்லாவற்றின்

பலனைக் கூறியது. ஒன்பதில் இரண்டரைமாதம் வரையில் செய்யும் பூஜையின் விதி. பத்தாவதில் சைத்திரமாஸத்தின் மகிமை; பதினொன்றில் சைத்திரஸ்நானம் செய்பவர்களின் நல்ல கதியைக் கூறியது. பன்னிரண்டில் ஸ்திரீகளின் கூட்டத்திற்கு ராமன் அத்வைதம் காட்டியது ; பதின்மூன்றில் ஹநுமான் ராமர் இவர்களின் இரண்டு கவசங்களும் கூறப்பட்டிருக்கின்றன. பதினான்கில் ஸீதையின் கவசம் முதலியவைகள். பதினைந்தில் லக்ஷ்மணர் முதலியவர்களின் கவசங்கள். பதினாறில் ஹநுமானுடைய பதாகைவிரதம். பதினேழில் ஸாரராமாயணம். பதினெட்டில் ஹநுமான் சரஸேதுவை உடைத்தது. இவ்விதம் மனோகரகாண்ட முடிந்திருக்கிறது.

## பூர்ணகாண்டம்.

முதலாவது சருக்கத்தில் வான்மீகிமுனிவர் ஸோமவம்சத்தாசர்களின் வரலாற்றைக் கூறியது. இரண்டாவதில் ராமச்சந்திரன் ஹஸ்தினாபுரிக்குப் பிரயாணமானது. மூன்றாவதில் சூரியவம்சத்தவர்கள் ஸோமவம்சத்தார்களின் யுத்த சமாசாரம். நான்காவதில் இருவம்சத்தார்களுக்கும் சிநேகமான வரலாறு. ஐந்தாவதில் ஸீதாபதி குசன் முதலியவர்களை அவரவர்களிருப்பிடத்திற்கனுப்பியது. ஆறாவதில் கங்கையில் வைகுண்டாரோஹணம் செய்தது. ஏழாவதில் சூரியவம்சத்தரசர்களைப் பற்றிய வர்ணனை. எட்டாவதில் சருக்கங்களின் வரிசையைக் கூறுதல். ஒன்பதில் கிரந்தங்களின் கணக்கு, சிரவணம் செய்யும்பலன்—ஆக ஒன்பது சருக்கத்துடன் இந்தப் பூர்ணகாண்டம் முடிவாகின்றது. சீடனே! இந்த அனுக்கிரமணியைக் கூறினேன். இதைக் கேட்டமாத்திரத்தில் ராமாயணத்தைச் சிரவணம் செய்த பலன் ஏற்படும். ராமாயண புஸ்தகத்தை எப்போதும் பூஜைசெய்ய வேண்டும். பூஜிப்பதில் உள்ள விசேஷங்களையும் கூறுகிறேன் கேள்—நவாயதனரீதிக்கு பிரபு ராமருடைய ஸ்தானத்தில் ஸாரகாண்டத்தையும் லக்ஷ்மணன் ஸ்தானத்தில் இரண்டாவது காண்டத்தையும் இவ்விதம் கிரமப்படி பாக்கியுள்ளவைகளையும் அமைக்க வேண்டும். பிறகு அவைகளைப் பூஜிக்க வேண்டும்.

அல்லது ராஜ்ய காண்டத்தின் பூர்வார்த்தத்தை இராம லக்ஷ்மணருடைய ஸ்தானத்திலும் ஸாரகாண்டத்தையும் பாக்கியுள்ளவைகளைக் கிரமப்படி ஸ்தாபித்துப் பூஜிக்கவேண்டும். இவ்விதம் பூஜை செய்யின் அளவில்லாத புண்ணிய பலனுண்டாகும். நினைத்த காரியம் அநுகூலமாகும். பூவுலகில் சகல சம்பத்துடன் வாழ்ந்து மகாதவம் செய்ததா லடையக்கூடிய முத்தியின்பமும் கைகூடும்.

அநுக்கிரகமணிகையைக் கூறும்

## எட்டாவது சருக்கம்

முற்றிற்று.

## ஒன்பதாவது சருக்கம்.

### ராமதாஸர் கூறுகிறார்.

ஆனந்த ராமாயணத்தில் ஸாரகாண்டம் யாத்திராகாண்டம் யாக காண்டம் விலாஸ காண்டம் ஜன்ம காண்டம் விவாஹ காண்டம் ராஜ்ய காண்டம் மனோஹர காண்டம் பூர்ண காண்டம் என ஒன்பது காண்டங்கள் அடங்கியிருக்கின்றன. ஸார காண்டத்தில் பதின்மூன்று சருக்கங்களும் யாத்திரா காண்டத்தில் ஒன்பது சருக்கங்களும் யாக காண்டத்தில் ஒன்பது சருக்கங்களும் விலாஸ காண்டத்தில் ஒன்பது சருக்கங்களும் ஜன்ம காண்டத்தில் ஒன்பது சருக்கங்களும் விவாஹகாண்டத்தில் ஒன்பது சருக்கங்களும் ராஜ்ய காண்டத்தில் இருபத்து நான்கு சருக்கங்களும் மனோஹர காண்டத்தில் பதினெட்டுச் சருக்கங்களும் பூர்ண காண்டத்தில் ஒன்பது சருக்கங்களுமாக நூற்றொன்பது சருக்கங்களடங்கியிருக்கின்றன.

ஸார காண்டத்தில் 2550 சுலோகங்களும் யாத்திரா காண்டத்தில் 735 சுலோகங்களும் யாக காண்டத்தில் 625 சுலோகங்களும் விலாஸ காண்டத்தில் 678 சுலோகங்களும் ஜன்ம காண்டத்தில் 802 சுலோகங்களும் விவாஹ காண்டத்தில் 537 சுலோகங்களும் ராஜ்ய காண்டத்தில் 2622 சுலோகங்களும் மனோஹர காண்டத்தில் 3100 சுலோகங்களும் பூர்ண காண்டத்தில் 577 சுலோகங்களுமாக மொத்தம் சுலோகங்கள் 12252 அடங்கியிருக்கின்றன.

சீடனே! சிரவணம் செய்தவுடன் பாபங்களைப் போக்கும் ஸ்ரீராமனுடைய சந்தோஷகரமான சரித்திரத்தை நீ கேட்டபடி கூறினேன்.

இந்தப் பூர்ணகாண்டம் சிரவணம் செய்தவுடன் புண்ணியத்தை விருத்தி செய்யக் கூடியது.

ஸார காண்டம் சிரவணம் செய்வதால் ஸம்ஸார பந்தத்தை நீக்கும். யாத்திரா காண்டத்தைச் சிரவணம் செய்வதால் யாத்திரைசெய்த பலன் ஏற்படும். யாக காண்டத்தைச் சிரவணம் செய்வதால் யாகம் செய்த பலன் உண்டாகும். விலாஸ காண்டத்தைச் சிரவணம் செய்தால் அப்ஸர ஸ்திரீகளுடன் ஸந்தோஷிப்பான். ஜன்ம காண்டத்தைச் சிரவணம் செய்தால் புத்திர பௌத்திர சமிருத்தியை அடைவான். விவாஹ காண்டத்தைச் சிரவணம் செய்தால் அழகுள்ள ஸ்திரீ கிடைப்பாள். ராஜ்ய காண்டத்தைச் சிரவணம் செய்தால் மானிடர்களுக்கு ராஜ்யம் கிடைக்கும். மனோஹர காண்டத்தைச் சிரவணம் செய்தால் மனக்கோரிக்கை யாவற்றையு மடைவான். பூர்ண காண்டத்தைச் சிரவணம் செய்தால் விஷ்ணுவின் ஸ்தானம் அடைவான்.

இவ்விதம் இந்த ஆனந்த ராமாயணம் முழுவதையும் விஸ்தாரமாகச் சிரவணம் செய்தால் சச்சிதானந்த சிவரூபத்தில் லய மடைவான் மானிடர்கள் ராமாயணத்தைச் சிரவணம் செய்து உத்தியாபனம் செய்ய வேண்டும். நல்ல புத்தியுள்ள மானிடன் ராமாயணத்தைச் சிரவணம் செய்தவுடன் ஸ்வர்ணமயமும் நான்கு குதிரைகளுடன் கூடியதும் பட்டுத் துவஜம் கட்டியதும் யந்திரங்களுடன் கூடியதும் மணிகள் கட்டியதுமான இரதத்தையும், பாலுள்ள நல்ல பசுவையும் தானம் செய்யவேண்டும். பிறகு நூற்றெட்டுப் பிராமணர்களுக்குப் போஜனம் செய்விக்க வேண்டும். இவ்விதஞ் செய்தால் மஹாகாவியப் பலனைக் கொடுக்குமென்பது நிச்சயம். இவ்விஷயத்தில் விசாரிக்க வேண்டாம். எந்தக் கிரந்தத்தில் ராமருடைய சுவரூபமிருக்கிறதோ அந்தக் கிரந்தம் ராமாயணமென்று சொல்லப்படும்; காலையில் எழுந்து ஆனந்த ராமாயணத்தைப் பாராயணம் செய்கிற மானுடன் சுவர்க்கத்திலும் கிடைக்காத சுகங்களை அடைவான். சைத்திரமாஸம் சுக்லபக்ஷம் நவமியில் ராமர் அவதாரம் செய்த காலத்தில் நூறு உளுந்து எடை சுவர்ணத்தால் ஹநுமானைச் செய்து அல்லது இருபத்தொரு உளுந்து எடை சுவர்ணத்தாலாவது அல்லது தன் சக்திக்குத் தக்கபடியாவது செய்து, இந்த ஆனந்த ராமாயணத்தை இதரர்களைகொண்டு

கிரயம் கொடுத்து எழுதியோ அல்லது தன் கையால் எழுதியோ புஸ்தகமாக்கி அதைக் கோலம் முதலியவற்றால் அலங்கரித்த இடத்தில் வைத்துப் பூஜைசெய்து, முன் செய்த சுவர்ண ஹநுமான் தோளில் வைத்து மத்தியானத்தில் அனேக சாஸ்திரங்களில் அறிவுள்ள அந்தணனையும் பூஜித்து ஹநுமானுள்பட தக்ஷிணை வைத்துத்தானம் செய்யவேண்டும். இவ்விதம் தானம் செய்பவனடையும் புண்ணியத்தைக் கூறுகிறேன். கேள்—குருக்ஷேத்திரத்தில் சூரியகிரஹண புண்ணிய காலத்தில் கோடிபாரம் ஸ்வர்ணத்தைத் தானம் செய்த பலனை அடைவான். இந்த ஆனந்த ராமாயணத்தில் எவ்வளவு அக்ஷரங்களிருக்கின்றனவோ அவ்வளவு ஆயிரம் யுகம் வரையில் வைகுண்டத்திலிருந்து சுகமுறுவான். பிறகு வேதத்தின் கரைகண்ட பிராம்மண ஜன்ம மடைவான்.

இந்த ஆனந்த ராமாயணம் இரம்மியமானது; பரிசுத்தமளிக்கக் கூடியது; ஆனந்தமளிக்கக் கூடியது. மனோஹரமானது ஆனந்தமென்று பெயருள்ளது; புண்ணியத்தை விருத்தி செய்யக்கூடியது இதைச் சிரவணம் செய்யும் மானிட சிரேஷ்டர்கள் புத்திர பௌத்திரர்களுடனும் சுஹிருத்துக்களுடனும் வியோகத்தை அடையமாட்டார்கள்,

இதைக் கேட்பவர்களுக்கு ஸ்திரீ வியோகம் எப்போதும் ஏற்படாது. ஸ்திரீகள் இதைச் சிரவணம் செய்தால் தங்கள் கணவனைவிட்டுப் பிரியவே மாட்டார்கள். லக்ஷ்மி தேவியைப்போல் விளங்குவார்கள், கிராமம் தேசாந்தரம் புண்ணிய தீர்த்தம் இவைகளுக்குச் சென்று வெகுநாள் வராம விருப்பவர்கள் சீக்கிரத்தில் வரவேண்டுமென்றால், இந்த ஆனந்த ராமாயணத்தைஎப்போதும் பாராயணம் செய்ய வேண்டும், இனிச் செய்யப்போகும் ஒரு செய்கை சீக்கிரத்தில் முடிய வேண்டுமானால் இந்த ஆனந்த ராமாயணத்தைப் பாராயணம்செய்யின்கைகூடும். முதல் இரண்டுகாண்டங்களையுமாக உயர்த்திக்கொண்டேபோய் ஒன்பதாவது நாளில் ஒன்பது காண்டங்களையும் பாராயணம் செய்யவேண்டும் பத்தா

வது தினத்தில் எட்டுக் காண்டங்களையும் பதினோராவது தினத்தில் எழுகாண்டங்களையும் ஒவ்வொன்று குறைத்துக் கிரமப்படி பாராயணம் செய்யவேண்டும். இந்த அநுஷ்டானம் பதினேழு நாளில் முடிவுபெறக் கூடியது. மிகவும் சிறந்தது அல்லது கிரமமாக முதல்நாளில் முதல் சருக்கத்தையும் பின் இரண்டாவது சருக்கத்தையும் ஒன்பதாவது நாளில் ஒன்பதாவது சருக்கத்தையும் பிறகு பத்தாவது நாளில் எட்டாவது சருக்கத்தையும் பதினோராவது நாளில் எழாவது சருக்கத்தையும் இவ்விதம் குறைத்துக்கொண்டே வந்து பதினேழு நாளில் பாராயணம் செய்வது மங்களத்தைக் கொடுக்கும். அல்லது ஒவ்வொரு காண்டத்திலும் தினம் ஒன்றுக்கு ஒரு சருக்கமாகப் பாராயணம் செய்து காண்ட முடிந்தவுடன் கடைசியிலிருந்து ஒவ்வொரு சருக்கம் குறைத்துப் பாராயணம் செய்யலாம். இப்படிப் பாராயணம் செய்யின் இருநூற்று ஒன்பது நாளில்முடிவாகும். அல்லது முதல்நாளில் முதல் சருக்கம் இரண்டாவது நாளில் இரண்டாவது சருக்கம் இப்படி விருத்திசெய்துகொண்டே பாராயணம் செய்துவந்தால் மொத்தம் எழுமாதம் எழுநாளில் அதாவது (218) நாளில் முடிவாகும். இவ்விதம் பாராயணம் செய்வதால், காரியங்கள் யாவும் சாதகமாகும். அல்லது முதல்நாளில் முதல் சருக்கம் இரண்டாவது நாளில் இரண்டாவது சருக்கம் மூன்றுவது நாளில் மூன்றுவது சருக்சம் இப்படிக் கிரமமாக நூற்றொன்பதாவது நாளில் கடைசிச் சருக்கத்தையும் நூற்றுப்பத்தாவது தினத்தில் நூற்றெட்டாவது சருக்கத்தையும் பாராயணம் செய்யவேண்டும். இந்தப் பாராயணம் எழுமாதம் எழுநாளில் ஸாதாரணமாகச் செய்யக்கூடியது. சிட்டின இவ்விதம் ஐந்துவித பேதம் காட்டினேன்.

பாராயணம்சமாப்தியானவுடன் விதிப்படி ஹோமம்செய்தல் வேண்டும். ஒவ்வொரு சுலோகத்தையும் சொல்லி அதன் கடைசியில் (ஸ்வாஹா) என்று சொல்லி பாயஸத்தாலாவது பழங்களாலாவது ஒன்பதுவித அன்னங்களாலாவது பிராமணர்களைக் கொண்டு ஹோமம் செய்விக்க வேண்டும். எவ்வளவு தினம் பாராயணம் செய்கிறோமோ அவ்வளவு கணக்குள்ள அந்தணர்களுக்கு

போஜனம் செய்விக்க வேண்டும். மானிடர்கள் சுபமான இந்த ஆனந்தராமாயணத்தைக் காலையிலெழுந்து பாராயணம்செய்வார்களாயின் சுகமடைவார்கள். துவாதசியில் இதை அவசியம் பாராயணஞ் செய்யவேண்டும். ஒன்பது நாளும் முழுவதையும் பாராயணஞ் செய்யலாம். காண்டத்தையாவது அல்லதுசருக்கத்தையாவது சுலோகத்தையாவது பாராயணஞ் செய்யாத மானிடர்களின் ஜன்மம் வீணாகும். புத்திரனில்லாதவன் இரவில் தன் ஸ்திரீயுடன் சயன ஸ்தலத்திலிருந்து சிரவணஞ் செய்தால், புத்திர சம்பத்தை அடைவான்.

ஒன்பது ராசிகளிலும் தன் காரியத்தை நினைத்துக் கொண்டு தானியங்களை வைத்து நான்கு பாக்குகளை வைத்து முதலாவது காண்டம் இரண்டாவது சருக்கம் மூன்றாவது பத்து சுலோகம் நான்காவது சுலோகம் இவ்விதம் கீழ்ராசி முதல் கணக்குத் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லாவிடங்களிலுங் கடைசியிலுள்ள சுலோகத்தால் விபரீத பலமுண்டாகும் இவ்விதம் சுபசகுனத்தையும் அசுபசகுனத்தையுந் தெரிந்து கொள்ள வேண்டும். ஏ சீடனே! நீ கேட்ட விஷயம் யாவற்றையுங் கூறினேன். ஏ விஷ்ணு தாஸ! நூற்றெண்பது சருக்கங்களும் ஒன்பது காண்டங்களுமடங்கிய பாபஹரமும் மனோஹரமுமான இந்த ஆனந்தராமாயணத்தை உனக்குக் கூறினேன். ஒவ்வொரு தினத்திலுங் கணக்கற்ற பாபத்தைச் செய்பவனும் பக்தியுடன் ஒரு சுலோகத்தையாவது பாராயணஞ்செய்தால், பாபங்களிலிருந்து விடுபட்டு மற்றவர்களடையக் கூடாத ஸ்ரீராமருடைய ஸாலோக்கிய மடைவான். உத்தமமும் ஜனங்களின் பாபங்களைப் போக்கக் கூடியதும் அனேக சரித்திரங்களாலும் நாநாவித வேடிக்கையாலும் நிறைந்ததுமான இந்தக்கிரந்தம் மகிமையுள்ளது. கவீசுவராகிய வான்மீகி முனிவரே தன்னியர். நூறுகோடி கிரந்தமுள்ள ராமசரித்திரத்தை விஸ்தாரமாக அவரன்றோ தெரிவித்தார்? அதிலிருந்து ஸாரமான பாகத்தை எடுத்து உனக்குரைத்தேன். ஜனகமகாராஜன் குமாரியின் கிரீடா விசேஷங்களைக் கூறும் இந்த ஆனந்தராமாயணத்தைச் சிரவணகானம் செய்பவர்களும் பிறருக்குப் படிப்பிப்பவர்களும் பாராய

ணஞ் செய்பவர்களும் பக்திமான்களுக்குள் உயர்ந்த புத்திரர்களை யும் ஸ்திரீகளையும் பௌத்திரர்களையும் தன தான்னியங்களையும் அடைந்து கடைசியில் ஸ்ரீ ராமருடைய பதமடைவார்கள்.

இந்த ஆனந்தராமாயணத்தை எப்போதும் பக்தியுடன் பாராயண சிரவணம் எழுதுதல் இவைகளைச் செய்பவனுக்கு ஸீதாஸமேதரான ஸ்ரீராமசந்திரன் சமீபத்திலிருந்து அநுக்கிரகம் செய்துகொண்டு ஸ்ரீயை விருத்தி செய்வார்.

இந்த ஆனந்தராமாயணமே கங்கை. இதுவே பாபத்தைப் போக்கக்கூடியது. இந்த ஆனந்தராமாயணமே காமதேநு. ஜனங்களுக்கு மனோதங்களை நிறைவேற்றக் கூடியது.

ஜனங்களுக்கு மனோஹரமானது பிர்ம்மன் முதலிய தேவர் களாலும் கொண்டாடத்தகுந்தது. ஆதிகாவியமான இந்தக்கிரந் தத்தைச் சிரத்தையுடன் பாராயணம் சிரவணம்செய்பவன் பரி சுத்தமான சரீரத்துடன் விஷ்ணுவுக்கு இருப்பிடமாகிய வைகுண் டமடைவன்.

சீடனே! நாற்றுநூன்பது சருக்கங்களால் ராமரைப் பற்றிக் கீர்த்தனம் செய்த இந்த மாலையை நீ தரித்துக் கொண்டு சுகமாக வாழ்ந்திருப்பாயாக.

சிவன் கூறுகிறார்.

ஏ பார்வதி! விஷ்ணுதாஸன் தன் குரு முகமாக இக்கதை யைச் சிரவணஞ் செய்து குருவைப் பூஜித்துப் பன்முறை நமஸ் கரித்தான்.

ராமதாஸனும் தன் சிஷ்யனுக்கு இந்தச் சரித்திரத்தைச் சொன்ன பின்பு ஸந்தியாவந்தனம் செய்யக் கோதாவரி செல்லப் போகிறார். சிரவணம் செய்த மாத்திரத்தில் புண்ணியத்தை விரு த்தி செய்யும் இந்த ஆனந்தராமாயண சரித்திரத்தை நானும் உனக்குக் கூறினேன். ராம கீர்த்தனமாகிய மாலைக்கு நடுநாயக மாகிய மேரு இருக்கும் ஸ்தானத்தில் இந்தச் சருக்கத்தைச் சொன்னேன். இதைச்சிரவணம் செய்தவுடன் மங்களங்களைக் கொடுக்கும்.

### ஸ்ரீ பார்வதீ தேவி வினவுகிறார்.

லோக நாத! பரமசிவ! எப்போது வான்மீகி முனிவர் ராமாயணம் செய்தார். அச்சமயம் ராமதாஸர் விஷ்ணு தாஸர் இவ்விருவரும் எங்கிருந்தார்கள்? அவ்விருவருடைய சம்வாதத்தைத் தாங்கள் தெரிவித்தீர்களே! இது விஷயத்தில் சந்தேகம் எனக்குண்டாகிறது.

### பரமசிவன் கூறுகிறார்.

ஏ பர்வத ராஜ புத்திரியே! வான்மீகி முனிவர் முக்காலங்களையும் அறியவல்ல தமது ஞானக்கண்ணால் இந்தக் கதையில் இனி நடக்கப்போகிற ராமதாஸ விஷ்ணுதாஸ ஸம்வாதத்தையும் வர்ணித்தார். ராமர் அவதாரஞ் செய்வதற்கு முந்தியே ராமாயணத்தை வர்ணித்ததுபோல் வர்ணித்தார். இது விஷயத்தில் நீ சிறிதும் சந்தேகமடையவேண்டாம். இச்சரித்திரம் ராம தாஸராலும் ஸ்ரீ ராகவராலும் வர்ணிக்கப்பட்டது.

ஸ்ரீ ராமசந்திரராலும் வான்மீகி முனிவராலும் ராம தாஸராலும் உபந்யாஸம் செய்யப்பட்ட இந்த ஆனந்தராமாயணம் போக மோக்ஷங்களைக் கொடுக்கும். இந்த ஆனந்தராமாயணத்தை புத்திரோத்பத்தி காலத்திலும் விருதபந்த காலத்திலும் பருவ காலத்திலும் சிராத்த காலத்திலும் மங்கள காரியம் நடக்கும் சமயத்திலும் பாராயணம் செய்ய வேண்டும்.

காராகிருகத்திலிருப்பவன் விடுதலையை யடைய வேண்டுமானாலும் உத்பாதங்கள் நீங்க வேண்டுமானாலும் பிரபுவின் தயை வேண்டுமானாலும் இந்தச் சரித்திரத்தை அன்புடன் சிரவணம் செய்யினும் சிரவணம் செய்யும்படி செய்விப்பினும் தன் விருப்பங்களை அடைந்து வைகுண்ட லோகமடைவன்.

தீர்த்தங்கள் விஷ்ணுவின் ஸ்தலங்கள் க்ஷேத்திரங்கள், தானங்கள், புண்ணியத்தைக் கொடுக்கும் புராணங்கள் மற்றெவையும் இந்த ஆனந்தராமாயணத்திற் கீடாகா. ஏ பார்வதி! உத்தமமான இந்த ஆனந்தராமாயணத்தை விஸ்தாரமாக உனக்குக் கூறினேன்.

இது மனோஹரமானது; பாபத்தைப் போக்கக்கூடியது. சரித்திரத்தை இடைவிடாமல் நீ தியானம் செய்துகொண்டிருந்தால் ராமசந்திரரிடம் நன் மதிப்புண்டாகும்.

---

ஹ்ருத்வா ஹத்வா தஶாஸ்யம் த்விஜவசன ஶதா-
    சேவந யாத்ராஶ்ச யஜ்ஞாந்
க்ருத்வா ஸௌக்யாதிபோகா நவநிதநுபவிஶ-
    த்ஸீம் ஶ்ருஹீத்வாயஸீதாம் |
ப்ருத்வீநாநாஸ்ஸந்ஷாஸ்தாஸ்வ நிதநு ஶதாநு
    வாயிவாதீம்ஶ்ச ஜித்வா
க்ருத்வா நாநோபதேஶாந் ஶஜவாரநிகடே
    ஸ்வீயலோகம் ஜஶாம ||
வாமே ஹஸ்திஸீதா வாவாரஸ்த ஹநூமாந்
    வ்ருஷ்டெ ஸௌமித்ரா ஸாத
ஶத்ருக்நோ ஹரதஶ்சவாஶ்வநேயோ
    வாயவ்யகோணாதிஷு |
ஸுக்ரீவஶ்ச விபீஷணஶ்ச யுவராடு
    தாராஸுதோ ஜாம்பவா
நயெ நீலஸரோஜகோமளருசிம்
    ராமம் பஜெஶ்ராமநட ||

ராமர் முதலாவது தசவதனனை வதம் செய்து பிராம்மணர்களுடைய நல்ல மதிப்புடையவ ராகையால் யாத்திரைகளையும் யாகங்களையும் செய்து சுகங்களை யநுபவித்தார். பூமியில் பிரவேசித்த ஸீதையைக் கிரகித்துக்கொண்டார். பிறகு அனேக மருமகள்களை யடைந்து பூமியிலுள்ள அரசர்களை ஜயித்து எல்லோருக்கும் உபதேசம் செய்து ஹஸ்திஞ்புரிக்கு அருகாமையில் தன்னைச் சேர்ந்தவர்களுடன் வைகுண்டமடைந்தார்..

இடது பக்கத்தில் ஸீதை முன்னால் ஹநுமான் பின்புறத்தில் லக்ஷ்மணர் சத்ருக்னன் பரதன் இருவரும் இருபக்கங்களிலும் சுக்ரீவன் விபீஷணன் யுவராஜனாகிய அங்கதன் ஜாம்பவான் இவர்

கள் வாயு முதலிய மூலேகளிலும் இருக்க மத்தியில் வீற்றிருக்கும் நீலவர்ணமுள்ள தாமரை போன்ற காந்தியுள்ள சியாமள வர்ண ராகிய ராமரைப் பஜிக்கிறேன்.

ஆனந்தராமாயணத்திற்கு ஹாரம் போன்ற இந்தப் பூர்ண காண்டத்தைப் பாராயணம் சிரவணம் செய்பவர்கள் உத்தமமான ஸ்தானமடைந்து பூர்ண மனோரதத்தையு மடைவார்கள். இந்த ஆனந்தராமாயணம் உத்தமமானது. ஜபம் செய்யத்தக்கது. பவித் ரமானது. கேட்கத்தக்கது.

மங்களம் கொடுக்கக்கூடியது. இந்த ஆனந்தராமாயணத்தை நான் எப்போதும் ஸ்மரணம் செய்கிறேன். அன்புடன் நமஸ் காரம் செய்கிறேன்.

கிரந்தங்களின் பல சுருதியைக்கூறும்

## 9-வது சருக்கம்.

முற்றிற்று.

## பூர்ணகாண்டம்

முற்றிற்று.

சதகோடி ராமாயணத்தில் ஒன்றும் வான்மீகி முனிவர்
செய்ததும் ஆதிகாவியமானதும் உமாம்ஹேசுவர
சம்வாதமும் அவ்விதமே ராமதாஸ
விஷ்ணுதாஸ சம்வாதமுமாகிய
ஆனந்தராமாயணம்
முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,
நெ. 4-34, நயினியப்ப நாயக்கன் வீதி, பார்க் டவுன், சென்னை.

# ஸ்ரீ ஸ்வாமி இராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம்

[இரண்டாம் பாகம்.]

இதிலடங்கிய விஷயங்கள்:—

1 வெற்றிபெறும் இரஹஸ்யம்
2 இந்தியாவிற்குத் தற்காலம் வேண்டியவை
3 ஆத்மதர்மம்.
4 சாதாரண தர்ம சபையின் கொள்கைகள்.
5 ஸ்ரீஸ்வாமிகள் எழுதியகடிதங்களின் சாரங்கள்.
6 பரிபூர்ண அன்பும், குண சோதனையும.
  1 தீரத்தன்மை.
  2 பரிசுத்தகுணம் என்பதென்ன?
  3 அழகு என்பது என்ன?
  4 விதியென்பது.
  5 தொழில்.
  6 சித்திரம்.
7 அனுபவஞானம், அல்லது சோம்பேறித்தனம் தமோகுணம்.
8 சுயம்சோதி.
9 சமஷ்டி பாவனையும் ஆத்மானுபவமும்.
10 ப்ரஹ்மமும் சிருஷ்டியும்.
11 ஆத்மவிரிவு.
12 சகோதரத்துவமா? ஏகத்துவமா?
13 துக்க நிவிர்த்தியும், சுவானுபோகமும்.
14 கிருகஸ்த தர்மம் பேரானந்தத்தைத்தருவதெப்படி?
15 தன்விதிக்குத் தானே கர்த்தா
16 உன்னதமான ஊக்கம் என்னும் அமைதி
17 அன்பெனபடுவது யாது?
18 சத்சொரூபானுபவம்.
19 சத்பொருளும் பாவரூபமும்.
20 வேதாந்தமும் சமூகஉணர்ச்சியும்.
21 அஞ்ஞானமே பாபமாகிறது
22 ஆத்ம தர்மவிதி.
23 வேததத்துவ பொக்கிஷம்.
24 கிருக தர்மம் கண்ணாடிபோன்றது.
25 சில சிறு கதைகள்:—
  க. 99-என்ற மயக்கம்.
  உ. இவனுக்கும் ஒரு கோடறி தீட்டவேண்டும்போலும்.
  ங. வீண்காலம் என்பது யாது?
  ச. கடவுள்எங்கும் இருக்கிறார் என்பதற்குக் தக்க ருஜு
26 கடவுள் நன்றியறிவுள்ளவர்.
27 ஸ்திரீகளிடம் ஆசை.
28 பிராணுயாமம்.
28 அழகிய சிறு கதைகள்:—
  க. பைரன் என்ற கவி.
  உ. சங்கீதத்தின் ஆதி புருஷன் அல்லது நாதன்.
30 அமெரிக்கர்களுக்கு ஒருவிண்ணப்பம், ஓர்வேண்டுகோள்.
31 வெற்றி பெறுதற்கேற்ற சாதனங்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் யோகாசன படத்துடன் காலிகோ கட்டடம் விலை 3-12-0.